ந்து துக்கத்தை அடைந்திருக்கிறாய்; திரும்பவும் ஸுகத்தை அடையப்போகிறாய். எப்பொழுதும் துக்கத்தையே அடைகிறவனுமில்லை; எப்பொழுதும் ஸுகத்தையே அடைகிறவனுமில்லை. ஸுகத்திற்குச் சரீரமே இருப்பிடமாகிறது. துக்கத்திற்கும் சரீரமே இருப்பிடமாகிறது. ஆகையால், தேஹியானஜீவன் சரீரமெடுத்து எந்தக்கர்மத்தைச்செய்கிறானோ அந்தக்கர்மத்தின்பயனைச் சரீரத்தையெடுத்தே அனுபவிக்கிறான். ஜீவனத்திற்குக்காரணமான ஸூக்ஷ்மசரீரமும் அந்தச்சரீரத்துடன் கூடவே உண்டாகிறது. ஸ்தூலமும் ஸூக்ஷ்மமும்என்கிற இரண்டுசரீரங்களும்சேர்ந்துகொண்டே பலவிதமாயிருக்கின்றன. இரண்டும்சேர்ந்து நாசமடைகின்றன. ஜனங்கள் பலவிதமான ஸ்நேஹமென்னும் கயிறுகளால விஷயங்களை உள்ளத்தில்கட்டிக்கொண்டு விரும்பியதைச்செய்துகொள்ளாமல மணல்களால்போட்டகரைகள் ஜலத்தால் (கரைவது) போல (அவ்விஷயங்களால்) துன்பப்படுகிறார்கள். [1] ஸ்நேஹமுள்ளகாரணத்தால் எள்ளானது செக்கார்களால் ஆக்ரமித்துப் பீடிக்கப்படுவதுபோல, உலகம்யாவும் பிறப்பென்னும்சக்கரத்தில [2] ஸ்நேஹமிருக்குங்காரணத்தால் அஜ்ஞானத்தாலுண்டாகும்துன்பங்களால ஆக்ரமித்துப் பீடிக்கப்படுகிறது. மனிதன், மனைவிமுதலியவர்களைப் போஷிக்கவேண்டி அசுபமான கர்மத்தைச் சேர்க்கிறான். அந்தமனிதன் [3] ஒருவனாக இவ்வுலகிலும் மேலுலகிலும் துன்பங்களை அடைகிறான். புத்திரர்களிடமும் தாரங்களிடமும் மற்றக்குடும்பங்களிடமும் ஆசைபற்றிய மனிதர்கள்யாவரும் வனத்திலுள்ள கிழயானைகளைப்போலச் சோகமென்னும் சேற்றுக்கடலிலமுழ்கினவர்களாகிறார்கள். ப்ரபுவே! புத்ரனுக்கும் பொருளுக்கும் ஞாதிகளுக்கும் ஸம்பந்திகளுக்கும் நாசமுண்டானால காட்டுத்தீக்கொப்பான மிகப்பெரியதுக்கத்தை அடைகிறார்கள். ஸுகமும்துக்கமும் [4] பிறப்பும் இறப்புமாகியயாவும் தெய்வத்தை அடுத்திருக்கின்றன. [5] ஸுஹ்ருத்தில்லாதவனும் ஸுஹ்ருத்துள்ளவனும், சத்துருவுள்ளவனும் மித்திரனுள்ளவனும், அறிவுள்ளவனும் அறிவில்லாதவனும், தெய்வத்தால ஸுகத்தை அடைகிறான். ஸுஹ்ருத்துக்கள் ஸுகத்தைச் செய்கிறதற்குரியவர்களல்லர். சத்துருக்கள் துக்

1 [illegible]. 2 [illegible].

3 [illegible]

4 [illegible]

5 சாந்திபர்வம், ௧௮௦ - வது அத்யாயம் [illegible].

கத்தைச் செய்வதற்கு ஸமர்த்தர்களல்லர். புத்தியானது பொருள்களுக்குக் காரணமாகிறதில்லை. பொருளானது ஸுகங்களுக்குக்காரணமாகிறதில்லை. புத்தியானது தன்த்தை அடைவதற்குக் காரணமன்று. மூடத்தன்மை ஸம்பத்தில்லாமற்செய்கிறதன்று. அறிவிற்சிறந்தவன் உலகஸ்ருஷ்டியினுண்மையை அறிகிறான்; மற்றவன் அறியமாட்டான். புத்தியுள்ளவனோ மூடனோ, சூரனோ பயந்தவனோ, கவியோ அசடனோ, பலமுள்ளவனோ பலவீனனோ, அடையத்தக்கபாக்யமுள்ளவனை ஸுகமானது அடைகிறது. பசுவானது கன்றிற்கும் இடையனுக்கும் யஜமானனுக்கும் திருடனுக்கும் சொந்தமாகும். எவன் ஒருபசுவின்பாலைக்குடிக்கிறானோ அப்பசுவானதுஅவனுடையதென்பது நிச்சயம். உலகில் எவர்கள் மிகவும்மூடர்களோ, எவர்கள் அறிவின்மேலானநிலையை அடைந்தவர்களோ அந்தமனிதர்கள் ஸுகமாகச்செழிக்கிறார்கள். இடையிலுள்ளமனிதன் கஷ்டப்படுகிறான். அறிவுள்ளவர்கள் புருஷார்த்தங்களுள் முந்தினதர்மத்திலும் கடைசியானமோக்ஷத்திலும் ஸந்தோஷமுள்ளவர்களாயிருப்பார்கள். அவர்கள் இடையிலுள்ள பொருள்காமங்களில் ஸந்தோஷப்படமாட்டார்கள். தர்மத்தையும் மோக்ஷத்தையும்அடைவது ஸுகமென்றும் இடையிலுள்ள பொருள்காமங்கள் துக்கமென்றும் (அறிவுள்ளவர்கள்) கூறுகிறார்கள். மூடனாயிருப்பவன் தன்கர்மங்களைச் சிந்தியாமல் கம்பளத்தால் மூடப்படுவதுபோல மிகுந்தஅஜ்ஞானத்தால மூடப்பட்டு ஸுகமாகஉறங்குவான். எவர்கள் மேலான அறிவைஅடைந்தவர்களும் ஸுகதுக்கமுதலிய த்வந்துவங்களிலிருந்து விலகியவர்களும் மத்ஸரமில்லாதவர்களுமாயிருக்கிறார்களோ அவர்களை இன்பங்களும் துன்பங்களும் ஒருபொழுதும் துன்பப்படுத்தமாட்டா. நல்லஅறிவை அடையாமலும் மூடத்தன்மையிலிருந்து விலகியுமிருக்கிறவர்கள் கரைகடந்து ஸந்தோஷப்படுவார்கள்; தாபத்தையுமடைவார்கள். அறிவிலலாதவர்களும் மிக்கஅஹங்காரத்தால திருப்தியடைந்தவர்களுமானமூடர்கள் தேவலோகத்திலுள்ள தேவக்கூட்டங்கள்போல எப்போதும் ஸந்தோஷமுள்ளவர்களாயிருப்பார்கள். (முதலில) ஸுகமாகத்தோற்றும் சோம்பலானது முடிவில் துக்கமாகும்; துக்கமாகத்தோற்றும்முயற்சியானது ஸுகத்தை உண்டுபண்ணுவதற்குக் காரணமாகும். அணிமாமுதலியஸித்தியும் முயற்சியுள்ளவனிடம் லக்ஷ்மியுடன்வஸிக்கும்; சோம்பேறியிடமாகாது. ஸுகமோ துக்கமோ ப்ரியமோ அப்ரியமோ வருவதையெல்லாம் மனத்தோற்சோர்விலலாமல அனுபவிக்கவேண்டும். சோகத

திற்கிடமானபல்லாயிரங்களும் பயத்திற்கிடமான பலநூறுகளும் ஒவ்வொருநாளிலும் மூடனைப் பிடிக்கின்றன; அறிவுள்ளவனைப் பிடிக்கிறதில்லை. புத்தியுள்ளவனும் அறிவையடைந்தவனும் (சாஸ்திரங்களைக்) கேட்கவிருப்பமுள்ளவனும் அஹங்காரமற்றவனும் அடக்கமுள்ளவனும் இந்திரியங்களைவென்றவனுமானமனிதனைச் சோகமானது தொடருகிறதில்லை. அறிவுள்ளவன் இந்தப்புத்தியையடைந்து பரிசுத்தமானமனத்துடன் ஸஞ்சரிக்கவேண்டும். [1]சுக்லம் [2]க்ருஷ்ணம் என்னும்வழிகளையறிந்தவனும் தெய்வம்ஆஸுரம்என்ற ஸ்வபாவங்களிலிருந்து வெளிப்பட்டவனும் பிறப்புஇறப்புக்களை அறிந்தவனுமானமனிதனைச் சோகமானதுதொடத்தக்கதன்று. சோகமும்பயமும் கோபமும் ச்ரமமும் எதைக்காரணமாகக்கொண்டு உண்டாகின்றனவோ அது தன்அங்கங்களில்ஒன்றானாலும் அதை விலக்கவேண்டும். ஆசைப்படத்தக்கவிஷயங்களுள் எதைஎதை மனிதன் விலக்கிக்கொள்ளுகிறானோ அதுஅது பூர்ணஸுகத்திற்குக் காரணமாகும். ஆசையைத் தொடர்ந்துசெல்லுந்தன்மையுள்ளமனிதன் அவ்வாசைகளைஅனுஸரித்தே நாசமடைவான். மானிடஉலகத்திலுள்ளவிஷயஸுகமும் தேவலோகத்திலுள்ளபெரியஸுகமும் ஆசையைவிட்டதனாலுண்டாகும் ஸுகத்தின் பதினாறிலொருபாகத்திற்கும்ஒப்பல்ல. சுபமானதோ அசுபமானதோ முன்பிறப்பிலுள்ள சரீரத்தாலசெய்யப்பட்டகர்மமானது அறிவுள்ளவனானாலும் மூடனானாலும் சூரனானாலும் அந்தக்கர்மத்தைச்செய்தமனிதனை அடையும். இவ்விதமேகாணப்படும் ப்ரியங்களும் அப்ரியங்களும் துக்கங்களும் ஸுகங்களும் ஜீவர்களிடம் சுற்றிக்கொண்டிருக்கின்றன. மனிதன் இந்தப்புத்தியை நன்றாகஅடைந்து நற்குணங்களுடன்கூடியவனாகிச் சோகப்படாமலிருக்கவேண்டும்; ஆசைப்படத்தக்க எல்லாவிஷயங்களையும் வெறுக்கவேண்டும்; கோபத்தைப் புறத்தில் தள்ளவேண்டும். இந்தக்கோபமானது மனத்தில்உண்டாகி வளர்ச்சிஅடைந்தால மனத்திலுண்டானமிருத்யுவாகும். பிராணிகளுக்குச் சரீரத்திலுள்ளகோபமென்பது அறிஞர்களால இவ்விதம்சொல்லப்படுகிறது. மனிதன், ஆமையானது தன்அங்கங்களை அடக்கிக்கொள்வதுபோலக்காமங்களையெல்லாம் உள்ளத்தில எப்பொழுது அடக்கிக்கொள்ளுகிறானோ அப்பொழுது தானேவிளங்கும் ஆத்மஜ்யோதிஸ்ஸானது உள்ளத்திலேயே தெளிவாகவிளங்கும். ஒருவஸ்துவானது கிடைக்காதிருந்தாலும்

1 சுக்லம் = வெண்மை; முக்திக்குக்காரணமானது.

2 க்ருஷ்ணம் = கருமை; ஸம்ஸாரத்திற்குக்காரணமானது.

'என்னுடையது' என்ற அபிமானத்துடன் கருதப்படுமாயின், அதுவே நாசத்தைஅடையுங்காலத்தில் (அவனுக்குத்) தாபத்தையுண்டு பண்ணுவதற்குக் காரணமாகிறது. இந்தமனிதன் எப்பொழுது ஒன்றிலும் பயமில்லாதவனாயிருக்கிறானோ, எப்பொழுது இவனிடமிருந்து ஒருவரும் பயமடையாமலிருக்கிறார்களோ எப்பொழுது இவன் ஒன்றையும் விரும்பாமலும் பகையாமலுமிருக்கிறானோ அப்பொழுது ப்ரம்மமாகிறான். மனிதன், ஸத்யம் பொய், சோகம் ஆனந்தம், பயம் அபயம், ப்ரியம் அப்ரியம் இந்தஇரட்டைகளை விலக்கிக்கொண்டபின் மிகவும்சாந்தமானமனமுள்ளவனாயிருப்பான். மனிதன் எப்பொழுது அறிவுள்ளவனாகிச் செய்கையாலும் மனத்தாலும் வாக்காலும் எல்லாப்ராணிகளிடத்திலும் துன்பத்தைச்செய்யாமலிருக்கிறானோ அப்பொழுது ப்ரம்மமாகிறான். துஷ்டபுத்தியுள்ளவர்களுக்கு விலக்கக்கடினமானதும் கிழத்தன்மையைஅடையும் மனிதனுக்கும் குறைவடையாததும் ஆயுளின்முடிவுவரையிலுமுள்ளரோகமுமான ஆசையை விலக்கிக்கொள்ளுகிறவனுக்கு ஸுகமுண்டு. அரசனே! இந்தவிஷயத்தில் பிங்களையென்னும் வேசியானவள் கஷ்டமுள்ளகாலத்திலும் தான் ஸனாதனமானஸுகத்தை அடைந்ததைக்குறித்துப் பாடிய காதைகளைக் கேள். பிங்களையென்னும்வேசியானவள் ஸங்கேதஸ்தலத்தில் ஆசைநாயகனால் விலக்கப்பட்டவளாயிருந்தாள். உடனே அப்பொழுது கஷ்டத்தை அடைந்த பிங்களையானவள் தன்புத்தியைச் சாந்தமாக (ஆத்மஸ்வரூபத்தில்) நிலைபெறச்செய்துகொண்டாள். அவள் 1 'நான் பித்துக்கொண்டவளாகிப் பித்தனல்லாதநாயகனை (விரும்பிக்கொண்டு) நெடுநேரம்வஸித்துக்கொண்டிருந்தேன். அருகிலுள்ள இந்தநாயகனை முதலில நான் தெரிந்துகொள்ளவில்லை. 2ஒருதூணுள்ளதும் ஒன்பதுத்வாரங்களுள்ளதுமானவீட்டை மூடிக்கொள்ளுகி

1 'விகாரமுடையனான நான் நிர்விகாரமானப்ரமாத்மாவை வெகுகாலம் மறந்து கொண்டிருந்தேன். ஹ்ருதயகோசத்தில் ஆனந்தத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கும் இவரை முந்தி நான் அறியவில்லை' என்பது பழையவுரை.

2 இங்கு வீடென்று சொல்லப்படுவது சரீரம்; வீட்டிற்கு [illegible] தூணானது தாங்குவதுபோல சரீரத்தைத் தாங்கிக்கொண்டிருப்பது பிராணன்; [illegible] நாலாவது அத்தியாயம் இரண்டாவது ப்ராம்மணத்திலும் இது காணப்படும், [illegible] இரண்டாவது ப்ரசனத்திலும் இது தெளிவாயிருக்கும். இந்தவீட்டிற்கு த்வாரங்கள் ஒன்பது; கண்கள், செவிகள், மூக்குகள், [illegible] [illegible] இரண்டுமாம்.... இங்கு [illegible] [illegible] கண், [illegible], [illegible], [illegible], [illegible], புத்தி, காமம், [illegible] த்வாரங்களென்றும் பழையவுரை கூறுகிறது.

றேன். இங்குவரும் விரும்பத்தகாதவனுனமனிதனே நாயகனென்று எவள் அபிமானிப்பாள்? ஆசைவேஷத்துடன்கூடினவர்களும் உண்மையில்ஆசையில்லாதவர்களும்மானிடஉருவங்கொண்டவர்களுமான வஞ்சகர்கள் திரும்பவும் என்னை வஞ்சிக்கமாட்டார்கள். நான் அறிவுள்ளவளாயிருக்கிறேன்; விழித்துக்கொண்டிருக்கிறேன். தெய்வத்தாலும் முன்செய்தவினையாலும் துன்பமாயிருப்பதும் ஸுகமாக முடியும். நான் நல்லஅறிவுள்ளவளும் விஷயங்களிலிருந்து விலகியவளுமாயிருக்கிறேன். நான் இப்பொழுது இந்திரியங்களை வெல்லாதவளாயிருக்கவில்லை. ஆசையில்லாதவன் ஸுகமாகஉறங்குவான். ஆசையில்லாமை மிகவும்ஸுகமாகும்' என்றுசொன்னாள். பிங்களையானவள் விஷயபோகத்தைப்பற்றியஆசையை இல்லாததாகச்செய்துகொண்டு ஸுகமாகஉறங்கினாள்' என்றுசொன்னார். இவ்விதங்களும் மற்றவைகளும்யுக்தியுள்ளவைகளுமானபிராம்மணருடையவசனங்களால் [1]சோகத்தைவிலக்கித் தைரியமுள்ளவனாகச் செய்யப்பட்ட ஸேனஜித்தென்னும் அரசன் ஸுகமாக ஸந்தோஷமடைந்தான்" என்றுசொன்னார்.

---

## நூற்றேழுபத்துநான்காவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், காலம்வேகமாகச்செல்லுவதால் ச்ரேயஸுக்கு ஸாதனமாயிருப்பதைச் சீக்கிரம் செய்துகொள்ளவேண்டுமென்கிற விஷயத்தில் ஒருதகப்பனுக்கும் புத்திரனுக்கும்நடந்த ஸம்பாஷணையைக் கூறியது.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! இந்தக்காலமானது எல்லாப்பிராணிகளுக்கும்நாசத்தைக்கொடுப்பதும் (யாவற்றையும்) மீறிச்செல்லுவதுமாயிருக்கும்பொழுது (மனிதன்) எவ்விதம்ச்ரேயஸை அடையவேண்டும்? அதனை எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"இவ்விஷயத்திலும் ஒருதகப்பனுக்கும் புத்திரனுக்கும்நடந்த ஸம்பாஷணையான பழையஇதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். யுதிஷ்டிர! அதைத் அறிந்துகொள். ஏ! பார்த்த! வேதமோதுவதில் விடாமுயற்சியுள்ள ஒருபிராம்மணருக்கு மேதாவியென்றுபெயருள்ளவனும் நல்லபுத்தியுள்ளவனுமான ஒருபுத்திரன் இருந்தான். மோக்ஷ

1 'ஆத்மதத்வத்தில் நிலைநிறுத்தப்பட்ட' என்பது பழையவுரை.

தர்மங்களைப்பற்றியவிஷயங்களில்ஸாமர்த்தியமுள்ளவனும்உலகநடைக்குரிய தந்திரத்தில்ஸமர்த்தனுமான அந்தப்புத்திரன்வேதாத்யயனஞ் செய்வதில்மிகப்பற்றுதலுள்ளதந்தையைநோக்கி, 'தந்தையே! மனிதர்களின் ஆயுள் சீக்கிரமாக நாசமடைகிறது. ஆகையால், இதை அறிந்தவனானதீரபுருஷன் எதைச்செய்துகொள்ளவேண்டும்? பிதாவே! எவ்விதம் நான் தர்மத்தைச்செய்துகொள்ளுவேனே அவ்விதம் நல்லபயனுள்ளதான அந்தத்தர்மத்தை எனக்கு முறையாக உபதேசிக்கவேண்டும்' என்றுகேட்டான். பிதா, 'மகனே! ப்ரம்மசர்யாச்ரமத்திலிருந்து வேதங்களைக்கற்றபின் (க்ருஹஸ்தாஸ்ரமம் சென்று) பரிசுத்திபெறவேண்டிப் பித்ருக்களுக்காகப் புத்திரர்களை விரும்பவேண்டும்; ஆதானவிதிப்படி மூன்றுஅக்னிகளையும் உண்டுபண்ணிக்கொண்டு விதிப்படி யாகங்களைச்செய்தவனாகி அரண்யஞ் சென்று பிறகு முனியாயிருக்கவேண்டும்' என்றுசொன்னார். புத்திரன், 'உலகமானது நான்குபுறத்திலும் இவ்விதம்சூழப்பட்டும் கொல்லப்பட்டுமிருக்கவும் சில பழுதின்றிச் சென்றுகொண்டிருக்கவும் தீரபுருஷன்போல என்னபேசுகிறீர்?' என்றுகேட்டான். பிதா, 'உலகமானது எவ்விதம் கொல்லப்பட்டிருக்கிறது? எதனால் நான்குபுறத்திலும்சூழப்பட்டிருக்கிறது? எவைகள் பழுதின்றிச்சென்றுகொண்டிருக்கின்றன? என்ன எனக்குப் பயத்தையுண்டுபண்ணுகிறாய்?' என்றுசொன்னார். புத்திரன் சொல்லத்தொடங்கினான். 'உலகமானது ம்ருத்யுவால் கொல்லப்பட்டதும் கிழத்தனத்தால் நான்குபுறத்திலும்சூழப்பட்டதுமாயிருக்கிறது. இரவும்பகலும் இதோ (பிராணிகளின்ஆயுளை அபஹரித்துக்கொண்டு) செல்லுகின்றன. ஐயா! ஏன் இதைத் தெரிந்துகொள்ளவில்லை? இரவுகளும் பழுதற்றவைகளாய் எப்பொழுதும் வந்துகொண்டும் போய்க்கொண்டுமிருக்கின்றனவே. [1] ம்ருத்யுவானவன் (பிராணிகளைப்பிடியாமல்) நிற்கிறானென்பதில்லை. இதை நான் உள்ளபடி அறிகிறேன். வலையால்பிடிக்கப்பட்டவனபோல ஸஞ்சரித்துக்கொண்டிருக்கும் நான் எவ்விதம் பயமடையாமலிருக்கக்கூடும்? ஒவ்வோர்இரவும்சென்றவுடன் ஆயுளானது மிகவும் குறைவுபடுகிறதாதலின், அந்நாள்பயனற்றதாயிற்றென்று ஸமர்த்தனாயிருப்பவன் அறிந்துகொள்ளவேண்டும். இஷ்டங்கள் அடையப்படாமலிருக்கும்பொழுதே ம்ருத்யுவானவன் மனிதனைத் தொடருகிறான். அப்பொழுது ஆழமில்லாத ஜலத்திலிருக்கும்மீன்போல எவன்ஸுகத்

1 இங்கு 'பிதாசொல்லுகிறார்' என்பது பொருத்தமின்மையால் விடப்பட்டது.

கும்பொழுது ஏன் ஒன்றுமில்லாதவர்போல் நிற்கிறீர்? சரீரமடைந்த மனிதனைப் பிறப்படைந்தபொழுதே நாசஞ்செய்யவேண்டி அந்தகன் தொடருகிறான்; கிழத்தனமும் தொடருகிறது. ஸ்தாவரஜங்கமங்களான இப்பொருள்கள், அந்தகன் ஜரைஇவ்விரண்டாலும் தொடரப்பட்டிருகின்றன. கிராமத்தில் வஸிப்பவனுக்கு (பிள்ளை பெண்டிர் முதலியவற்றிலுள்ள) ஆசையென்பதுதான் மிருத்யுவின்முகமாகும். [1] அரண்யமென்பதுதான் இந்திரியமென்னும் பசுக்களைக்கட்டத்தக்க கொட்டிலாகுமென்று வேதம் உபதேசிக்கிறது. (ஆகையால்) கிராமத்திலிருப்பவனுக்கு (சிற்றின்பங்களைப்பற்றிய) ஆசையானது தன்னைக்கட்டத்தக்க கயிறாகும். புண்ணியசாலிகள் இக்கயிற்றை அறுத்துவிட்டுச்செல்லுகிறார்கள். பாபிகளாயிருப்பவர்கள் இக்கயிற்றை அறுக்கிறார்களில்லை. எவன் மனத்தாலும் வாக்காலும் சரீரத்தாலும் மறறக்காரணங்களாலும் பிராணிகளைத் துன்பப்படுத்தாமலிருக்கிறானோ அவன் உயிரையும் பொருள்களையும் அபஹரிக்கத்தக்கபிராணிகளாலும் துன்பப்படுத்தப்படமாட்டான். (கிழத்தனம் வ்யாதிமுதலியஉருவமுள்ளதாக)வரும்மிருத்யுவின்ஸேனையை [2]ஸத்தியமொன்றுஅல்லாமல் ஒருவனும் ஒருபொழுதும் தடுக்கவல்லவனல்லன். ஸத்யமல்லாததை விலக்கவேண்டும். மோக்ஷமானது ஸத்யத்தையேஅடுத்ததாயிருக்கிறது. ஆகையால், ஸத்யத்திறகுத்தக்க வ்ரதங்களைச்செய்கிறவனும் ஸத்யமானயோகத்தை மிகமுக்கியமாகக்கொண்டவனும் ஸத்யமானசாஸ்திரத்தைஅடைந்தவனும்எப்பொழுதும் அடக்கமுள்ளவனுமாயிருந்துகொண்டு ஸத்யத்தாலேயே மிருத்யுவை வெல்லவேண்டும். மோக்ஷமும் மிருத்யுவுமானஇரண்டும் சரீரத்தில் நிலைபெற்றிருகின்றன. மிருத்யுவானது அவிவேகத்தால் வருகிறது. ஸத்யத்தால் மோக்ஷமுண்டாகிறது. நான் ஹிம்ஸைசெய்யாதவனும் ஸத்யத்தைவிரும்புகிறவனும் காமத்தையும் கோபத்தையும் வெளியில்விலக்கியவனும் ஸுகத்தையும்துக்கத்தையும் ஸமமாகக்கொண்டவனும் [3]க்ஷேமமுள்ளவனுமாயிருந்துகொண்டு [4]தேவனைப்போல மிருத்யுவை விலக்கிக்கொள்ளுகிறேன். நிவ்ருத்திமார்க்கத்தில பழக்கமென்னும்யாகத்தில் பற்றுள்ளவனும் இந்திரியநிக்ரஹமுள்ளவனும் ப்ரம்மஜ்ஞானமென்னும்யாகத்தில் நிலைபெற்றவனும் வாக்கு மனம் சரீரங்களுக்குள்ள ஜபம் த்யானம் ஸ்நானமென்ற யாகங்க

---

1 த்யானஞ்செய்யத்தக்க தனிமையான இடம் அரண்யமென்றுசொல்லபபடுகிறது. 2 பிரம்மஜ்ஞானம்.

3 'பிறர்களுக்கு ஸுகத்தைவிரும்புகிறவன்' என்பதும், 4 'ஹிரண்யகர்ப்பன்போல' என்பதும் பழையஉரை.

ஞுள்ளவனுமான முனியாயிருந்துகொண்டு உத்தராயணம்என்னும் பிரம்மலோகவழிக்குத் தக்கவனுயிருக்கப்போகிறேன். அறிவுள்ளவனை என்போன்றவன் ஹிம்ஸையுள்ளவைகளும் அழியத்தக்க பயனுள்ளவைகளும் 1 பசுக்களால்செய்யத்தக்கவைகளுமான யாகங்களைப் பிசாசமானது 2 தன்சரீரத்தின் நாசமென்னும்யாகங்களைச் செய்வதுபோல எவ்விதம் செய்யத்தக்கவனுவான்? எந்தமனிதனுடைய வாக்கும் மனமும் எப்பொழுதும் நன்ருக த்யானத்துக்குத்தக்கவைகளாயிருக்கின்றனவோ எவனுக்குத் தவமும் தயாகமும் ஸத்யமுமிருக்கின்றனவோ அந்தமனிதனே யாவற்றையுமடைவான். ஞானத்திற்கொப்பானகண்ணில்லை. ஸத்யத்திற்கொப்பானதவமில்லை. ஆசைக்கொப்பான துக்கமில்லை. த்யாகத்திறகொப்பானஸுகமில்லை. ஆத்மரூபத்திலிருந்தே ஆத்மரூபத்துடன்ஜனித்த நான் ஆத்மரூபத்தில் நிலைபெற்றவனுயிருக்கிறேன். நான் ஸந்ததியில்லாதவனுயிருந்தாலும் ஆத்மரூபத்திலேயே இருக்கப்போகிறேன். ப்ரஜையானது என்னைத (துக்கத்திலிருந்து) மீட்டுவைக்கத்தக்கதன்று. பிராமணனுக்குத் தனிமை,ஸமநிலை,ஸத்யம்,சீலம்,மர்யாதை,ஹிம்ஸையில்லாமை,ருஜுவாயிருப்பது, அந்தஅந்தக்காமங்களிலிருந்து ஒழிவடைவது இவைகளுக்குச்சரியான பொருளில்லை. ஓ! பிராம்மணரே! மரிக்கப்போகிற உமக்குப் பொருள்களால்என்னபயன்? பந்துக்களாலும் உமக்கு என்னபயன்? தாரங்களால உமக்கு என்னபயன? உம்முடைய பிதாவும் பாட்டனும் எங்கேபோனர்கள்? ஹ்ருதயகுகையில ப்ரவேசித்திருக்கும்ஆத்மரூபத்தைத தேடிக்கொள்ளும்" என்றுசொன்னன். அரசனே! புத்திரனுடைய இந்தவசனத்தைக்கேட்டதும், பிதாவானவர் எவ்விதஞ்செய்துகொண்டாரோ அவ்விதம் நீயும் ஸத்யமென்னும்தர்மத்தை மிகப்பெரிதாகக்கொண்டவனுயிரு" என்றுகூறினர்.

---

## நூற்றெழுபத்தைந்தாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், பிராணிகளுக்கு வறுமை மேன்மைக்கும், செல்வம் துன்பத்திற்கும் காரணமாகுமென்னும்விஷயத்தில் சம்யாகர் சொல்லியதைக் கூறியது.)

யுதிஷ்டிரா, "பொருளுள்ளவர்களும் ஏழைகளும் 3 தத்தமக்குத்தக்க நியமமுள்ளவர்களாயிருந்துகொண்டு ஜீவிக்கிருர்கள். பிதா

1 பசுக்களின் சரீரத்தையும தன்சரீரமாகப் பாவித்து இம்ஸிப்பது.

2 'பிசாசம், விஷம் அகன்ற தலியவற்றால தன் சரீரத்தையிம்ஸிக்கும்' என்பது பழையவுரை.

3 'ஸ்வதந்த்ரிணஃ' என்பது மூலம்; அதற்கு 'தம் சாஸ்த்ரத்தை அனுஸரித்தவர்கள்' என்பது பழையவுரை.

மஹாரே! அவர்களுக்கு ஸுகதுக்கங்கள்வருவது எப்படி? அஃது எத்தன்மையது?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"இவ்விஷயத்திலும் சாந்திமார்க்கத்தைஅடைந்து முக்திபெற்ற [1]சம்யாகரென்னும்பிராம்மணரால் சொல்லப்பட்ட பழையஇவ்விதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். முன்காலத்தில் கெட்டதாரத்தாலும் கெட்டஆடையாலும் பசியாலும்துன்பப்படுகிறவரும் வைராக்யத்தைத் அடைந்தவருமான ஒருபிராம்மணர் என்னைநோக்கிச் சொல்லத் தொடங்கினார். 'இவ்வுலகத்தில் பிறவியடைந்தமனிதனுக்குப் பிறந்ததுமுதல் பலவிதமானஸுகங்களும் துக்கங்களும் வந்துகொண்டிருக்கும். அந்தஸுகதுக்கங்களுள் ஒருவழியானது இந்தமனிதனை அடைந்துகொண்டிருக்கும். (ஆகிலும்) ஸுகத்தைஅடைந்து ஸந்தோஷப்படக்கூடாது. துக்கத்தையடைந்துந் தாபப்படக்கூடாது. நீ ஆசையற்ற மனமுள்ளவனாயிருந்தும் எப்பொழுதும்சுமையையெடுத்துக்கொண்டு ஆத்மாவுக்குரிய ச்ரேயஸைச் செய்துகொள்ளாமலிருக்கிறாய்; ஆத்மஸந்தோஷத்தையும் அடையாமலிருக்கிறாய். நீ ஒருவிதமானபொருளுமில்லாமல் ஸஞ்சாரஞ்செய்துகொண்டு ஸுகத்தை அனுபவிப்பாய். ஒன்றுமில்லாதவனானமனிதன் ஸுகமாகஉறங்குவான்; ஸுகமாகஎழுந்திருப்பான். உலகத்தில் ஒன்றுமில்லாதவனுமையானது, ஸுகமும் நல்வழியும் கேடில்லாததும் க்ஷேமமும் இடையூறில்லாததுமாயிருக்கிறது. இது சத்ருக்களில்லாத வழியும் (ஆசைகொண்டவர்களுக்கு) அடையக்கடினமும் ஸாதுக்களுக்கு எளியதுமாயிருக்கிறது. மூன்றுலகங்களையும் கண்டவனான நான், எல்லாவிஷயங்களிலும் வைராக்யத்தை அடைந்தவனும் பரிசுத்தியுள்ளவனுமான ஏழைக்கு ஒப்பாயிருப்பவனை இவ்வுலகங்களில் காணேன். ஏழைத்தனத்தையும் ராஜ்யத்தையும் துலையில் தூக்கிப் பார்த்தேன். சிறந்தகுணமுள்ள ஏழைத்தனமானது ராஜ்யத்தைவிட மேலானதாயிருந்தது. வறுமைக்கும் ராஜ்யத்துக்கும் மிகப்பெரிதான இந்தவித்தியாஸமிருக்கிறது. செல்வமுள்ளமனிதன் ம்ருத்யுவின் வாயிலிருப்பவன்போல எப்பொழுதும் பயமுள்ளவனாகவேயிருக்க வேண்டும். [2]பொருளைத்தள்ளிவிட்டு அதிலிருந்துவிடுபட்டவனும் ஆசையற்றவனுமான இந்தஏழைமனிதனிடம் தீயும் [illegible] ம்ருத்யுவும் [illegible] எப்பொழுதும் [illegible] படாதவனுமான [illegible]

1 'சம்பாகர்' என்பது வேறுபாடம். 2 வேறுபாடம்.

வனும் அடக்கமுள்ளவனுமான அந்தஏழைமனிதனைத்தான் தேவர்கள் மிகவுங்கொண்டாடுகிறார்கள். பொருளுள்ளவன், கோபத்தாலும் பேராசையாலும்பற்றப்பட்டவனும் அறிவழிந்தவனும் கோணலான பார்வையுள்ளவனும் காய்ந்தமுகமுள்ளவனும் புருவக்கோணலுள்ள முகமுள்ளவனும் பாபியும் கோபங்கொண்டுகீழுதட்டைக்கடிப்பவனும் க்ரூரமாகப்பேசுகிறவனுமாயிருப்பான். அவன் பூமியைத் தானஞ்செய்யவிருப்பங்கொண்டாலும் எவன் அவனைப்பார்க்க விருப்பமடைவான்? எப்பொழுதும், ஸம்பத்துடன்சேர்ந்திருப்பது பண்டிதனல்லாதமனிதனை மோகமுள்ளவனாகச்செய்யும். காற்றானது சரத்காலத்திலுள்ளமேகத்தை அபஹரிப்பதுபோல அந்தஸம்பத்தானது அவனுடையமனத்தை அபஹரிக்கும். மேலும், அழகுள்ளவனென்றும் பொருளுள்ளவனென்றுமுள்ள அபிமானமானது இந்த அவிவேகியை வந்தடையும். 'நான் நற்குலத்திற்பிறந்தவனாயிருக்கிறேன்; ஸித்தியுள்ளவனாயிருக்கிறேன். நான் ஸாதாரணமான மனிதனல்லேன்' என்னும் இந்தமூன்றுகாரணங்களாலும் அந்தஅவிவேகியின்மனமானது (தர்மத்திலிருந்து) தவறுதலடையும். (சிறந்தின்பத்தில்) மிக்கபற்றுதலுள்ளமனமுள்ளவன் தந்தையால்சேர்த்துவைக்கப்பட்ட பொருள்முதலியபோகங்களை அழித்துவிட்டுக் குறைவடைந்து பிறர்பொருள்களை எடுப்பதை நல்லதென்றெண்ணுவான். மரியாதையைமீறிச்சென்றவனும் அங்கங்கிருந்து (பிறர்பொருளை) எடுப்பவனுமான அந்தஅவிவேகியை, மிருகத்தை வேடர்கள் அம்புகளால் அடிப்பதுபோல அரசர்கள் தடுத்துத்தண்டிப்பார்கள். இவ்விதமான இந்தத்துக்கங்களும் சரீரத்தைத்தொடர்ந்துவரும் பலவிதமான அந்த அந்தத்துக்கங்களும் இவ்வுலகில் மனிதனை அடைந்துகொண்டிருக்கின்றன. நிலையற்றபொருள்களுடன்கூடியிருக்கும் உலகவாழ்க்கையை [1] இகழ்ந்துதள்ளிவிட்டு [illegible] அநேகப்பெருந்துன்பங்களுக்குப் புத்தியால் பரிகாரத்தைச்செய்துகொள்ளவேண்டும். (பொருள்களை) விடாமல் (மனிதன்) ஸுகமடையமாட்டான்; (பொருள்களை) விடாமல் உத்தமகதியையடையமாட்டான்; (பொருள்களை) விடாமையால் [illegible]லாதவனாகப்படுக்கமாட்டான்; (மனிதன்) யாவற்றையும்விட்டபின், ஸுகமுள்ளவனாயிருப்பான்' என்று [illegible]மானது முற்காலத்தில் [illegible] சம்பாகனென்னும் பிராம்மணனால் எனக்குக்கூறப்பட்டது. ஆகையால், (பொருள்களைவிடுவதனாலும்) [illegible] சொன்னார்.

1 [illegible].

## நூற்றெழுபத்தாருவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், விரக்தியானது ஸுகத்திற்கு ஸாதனமென்னும் விஷயத்தில் மங்கியின் உபதேசத்தையும் போத்யரின் உபதேசத்தையும் கூறியது.)

யுதிஷ்டிரர், "பொருளிலுள்ள பேராசையால் பீடிக்கப்பட்ட மனிதன் பலதொழில்களைச்செய்தும் பொருளை அடையாமல் போவானாகில் எதைச்செய்து ஸுகமடையக்கூடும்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"ஓ! பாரத! யாவற்றிலும் ஸமமானபுத்தியும் ஆயாஸமில்லாமையும் ஸத்யவசனமும் வைராக்யமும் கார்யத்தில்விருப்பமில்லாமையும் எவனுக்கிருக்கின்றனவோ அந்தமனிதன் ஸுகமுள்ளவனாயிருப்பான். இவ்வைந்துமே மோக்ஷத்திற்காக அடையத்தக்கவைகளென்று பெரியோர்கள் கூறுகிறார்கள். ஸாதுக்களுக்கு இவ்வைந்தும், ஸ்வர்க்கமும் தர்மமும் மிகஉத்தமமான ஸுகமுமாகின்றன. இவ்விஷயத்திலும் மங்கியென்பவரால் வைராக்யத்துடன் சொல்லப்பட்ட பழைய இதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். யுதிஷ்டிர! அதனை அறிந்துகொள். பொருளின்விருப்பமுள்ள மங்கியானவர் பலமுறை தொழில்களைச்செய்து பயனடையாதவரானார். அவர் பழக்கத்தக்க இரண்டுகன்றைச் சிறிதுபொருளைக்கொண்டு வாங்கினார். (ஒருநுகத்தடியில்) நன்றாகக்கட்டப்பட்டவைகளும் பழக்கவேண்டியதற்காக வெளியில்விடப்பட்டவைகளுமான அந்தஇரண்டுகன்றுகளும் படுத்திருக்கும் ஒட்டகத்தை நடுவில்வைத்து இருபுறத்திலும் வேகமாகவே ஓடின. அவ்விரண்டுகன்றுகளும் ஒட்டகத்தின் பக்கத்திற்குச்சரியாகவந்தவுடன் ஒட்டகமானது கோபத்துடன் எழுந்திருந்து அந்தஇரண்டுகன்றுகளையும் தூக்கிக்கொண்டு மிகவேகத்துடன் ஓடத்தொடங்கிற்று. துன்பப்படுத்துகிற அவ்வொட்டகத்தால் கவரப்பட்டவைகளும் மரிக்கக்கூடியவைகளுமான அந்தஇரண்டுகன்றுகளையும் கண்டதும் மங்கியானவர் இவ்வசனத்தைச் சொல்லத்தொடங்கினார்.

"ஸமர்த்தனான மனிதனும் நம்பிக்கைகொண்டு முயற்சியுடன் நன்றாகத் தொழிலைச்செய்தாலும் விதியால்கிடைக்காத பொருளை விரும்புவதற்கு ஒருபொழுதும் முடியாது. முதலில பொருள்களில்

லாதவனும் ஜாக்ரதையுள்ளவனும் (பொருளுக்காக) வேலைசெய்கிறவனுமானஎனக்கு ஒட்டகம் இக்கன்றுகளைத் தூக்கிக்கொண்டதால் தெய்வம்செய்த இத்துன்பத்தைப்பாருங்கள். என்னுடைய கன்றுகள் ஒட்டகத்தால்தூக்கப்பட்டுவிடுதலையடையக் கிளம்பிக்கிளம்பிக் [1]சக்கிதாளம்போலவும் [2]உன்மாதத்திலகப்பட்ட நரிபோலவும் கஷ்டத்துடனே செல்லுகின்றன. என்னுடையபிரியமானகன்றுகள் ஒட்டகத்திற்கு மணிகள்போலத் தொங்குகின்றன. இது கேவலம்தெய்வத்தாலாகிய காரியந்தான். பலாத்காரமாகச்செய்வதில் பௌருஷமானது பயனுள்ளதேயன்று. பௌருஷமென்பது ஒருஸமயத்தில்இருக்கக்கூடுமானாலும் அதுவும் விசாரிக்கப்பட்டால் தெய்வத்தை அடுத்ததாகவே இருக்கும். ஆகையால், ஸுகத்தைஅடைய விருப்பமுள்ளமனிதன் இவ்வுலகில் வைராக்கியத்தையே அடையவேண்டும். பொருள்களைத் தேடுவதில் ஆசையில்லாமல் வைராக்கியம்பெற்றமனிதன் ஸுகமாக உறங்குவான். ஜனகருடையவீட்டிலிருந்து பெரியஅரண்யத்திறகுப் புறப்பட்டவரும் எலலாவற்றிலுமிருந்து விடுபட்டவருமான சுகர், 'காமங்கள் எவறறையும் அடைகிறவனும் இக்காமங்கள் எவறறையும் விடுகிறவனுமாகிய (இவர்களில) எலலாக்காமங்களையும் அடைபவனைவிடஅவைகளைவிடுபவன் சிறந்தவனாவான்' என்று நன்றாகச்சொல்லினர். ஆச்சர்யம்! விரும்பத்தக்க எலலாத்தொழில்களின்எல்லையையும் அடைந்தவன் இதுவரையில ஒருவனுமிலலை. மனிதனுக்குச் சரீரத்திலும் உயிரிலும் ஆசைபெருகிக்கொண்டிருக்கிறது. ஆசைபெற்ற மனமே! தொழிலவிருப்பங்களிலிருந்து விலகு; வைராக்கியம்பெறு; சும்மாயிரு; நீ பலமுறை அவமதிக்கப்பட்டும் வைராக்கியம் அடையவிலலையோ! பொருளில ஆசைகொண்டமனமே! நீ என்னைக்கொலலாமலிருக்கவிரும்பி என்னுடன் இவ்விதம் ஸந்தோஷத்துடனிருப்பாயாகில நீ என்னை வீணாய்ப்போராசையுடன் சேர்க்கவேண்டாம். சேர்த்துச்சேர்த்து வைத்தபொருளானது உனக்குத் திரும்பவும் திரும்பவும் நாசமடைகிறது! மூடமனமே! பொருளாசைகொண்டவனே! ஸந்

[1] 'சாகதுண்டமாத்ரமே [illegible] யகையாக [illegible] ஆதுமாயையல்லோடு [illegible] சாசம் [illegible] [illegible] சொலல [illegible] [illegible] மொழி சாகதா [illegible]

[2] இராமாயணத்திலுள்ள [illegible] சொல்வது; ஸ்லோ, 'மிருககலை பிடிக்குங்காலமான [illegible].

தப்பொருளாசையை எப்பொழுதுவிடப்போகிருய்? அந்தோ! என்னுடைய அவிவேகமன்ருே நான் உன்னுடையவிளையாட்டிற்குத்தக்க மிருகமானேன். நீ தயையில்லாமலெப்பொழுதும் (என்னைப்) பலவிதமான துன்பங்களுடன் சேர்த்துவைக்கிருய். மனிதன்பிறரிடம் இவ்விதமான அடிமைத்தன்மையை ஒருஸமயம் அடையாமலிருக்கமுடியாதோ? முன்னுள்ளவர்களும் பின்னுள்ளவர்களும் ஒருபொழுதும் காமங்களின்முடிவை அடைந்தவர்களல்லர். ஆகையால், எல்லாத்தொழில்களையும் தள்ளிவிட்டு நான் அறிவுள்ளவனுகிறேன்; விழித்துக்கொண்டிருக்கிறேன். என்னுடையமனமானது பலதுன்பங்களால் பீடிக்கப்பட்டும் நூறுவிதமாகச் சிதறிப்போகாமலிருக்கிறதே! இது நிச்சயமாக வஜ்ரத்தின்ஸாரத்தால் செய்யப்பட்டு மிகவும் உறுதியாயிருக்கிறது. காமமே! உன்னையும் உனக்கு ப்ரியமாயிருக்கும்வஸ்துவையும் நான் விலக்குகிறேன். நான்உன்னுடையபிரியத்தைத் தேடிக்கொண்டு ஆத்மாவிற்குரியஸுகத்தை அறியாமற்போனேன். ஏ! காமமே! உனக்குக் காரணத்தைத்தெரிந்துகொண்டேன். ஸங்கல்பத்திலிருந்தன்ருே நீ உண்டாகிருய். நான் உனக்குக்காரணமான ஸங்கல்பத்தைச் செய்கிறதில்லை. நீ வேருடன் நசிக்கப்போகிருய். தனத்தை விரும்புவது ஸுகமன்று. அதை அடைந்தபின்னும் மிகப்பெரியசிந்தையுண்டாகிறது. அடைந்தபொருளின்நாசமானது மிருத்யுவுக்கு ஒப்பாகிறது. அடையப்பட்டபொருளும் இருக்குமோ இராதோ. சரீரத்தைப் பிறருக்கு அடிமையாகத்தள்ளுவதிலும் அதைஅடைகிறதில்லை அவ்விதமான பொருளைக்காட்டிலும் மிக்க துன்பமானது யாது? அடைந்தபொருளாலும் ஸந்தோஷமடைகிறதில்லை. திரும்பவும் அதையேதேடுகிருன். இனிமையானகங்காஜலம்போலப்பொருளானது ஆசையைப் பெருகவேசெய்யும். இவ்வாசையென்பது என்னைச்சொல்லத்தக்கதாயிருக்கிறது. நான் அறிவுள்ளவனுகிறேன். காமமே! என்னைவிடு. என்னுடைய சரீரத்தை அடைந்திருக்கிற (பருதிவி முதலிய) பூதக்கூட்டமானது இஷ்டம்போல இச்சரீரத்திலிருந்துபோகட்டும்; அல்லது, ஸுகம்போல இதில்வஸிக்கட்டும். காமத்தையும் லோபத்தையும் அனுஸரித்தவைகளும் இச்சரீரத்திலுள்ளவைகளுமான உங்களிடம் எனக்கு ப்ரியமில்லை. ஆகையால், நான் எல்லாகாமங்களையும் தள்ளிவிட்டு ஸத்வகுணத்தையே அடையப்போகிறேன். நான் என்னுடைய சரீரத்திலும் மனத்திலும் எல்லாப்பிராணிகளையும் பார்க்கும்படி யோகாப்யாஸத்தில் புத்தியையும்பிரம்மவிசாரத்தில்சித்தத்தையும்ப்ரம்மத்தினிடம் மனத்தை

யும் நிலைநிறுத்திக்கொண்டு திரும்பவும் நீ என்னை இம் துக்கங்களில் சேர்த்துவைக்காமலிருக்கும்படி பற்றுதலில்லாதவனும் துன்பமில்லாதவனும் ஸுகமுள்ளவனுமாகி உலகங்களில் விளையாடுகிறேன். ஏ! காமமே! உன்னால் ஏவப்படும் எனக்கு வேறுகதியில்லை. எப்பொழுதும் பேராசைக்கும் சோகத்திற்கும் சிரமத்திற்கும் நீயே காரணமாகிறாய். பொருள்நசிக்குங்காலத்திலுண்டாகும் பெரிய துக்கமானது எல்லாவற்றையும்விட மிகப்பெரியதென்று நினைக்கிறேன். பொருளிலிருந்துவிலகியமனிதனை ஞாதிகளும் மித்திரர்களும் அவமதிக்கிறார்கள். பொருளில்லாதவனுக்குப் பலவாயிரம் அவமதிப்புக்களாலுண்டாகும் மிகக்கஷ்டமான தோஷங்களுண்டு. பொருளில் சிறிது ஸுகபாகமிருப்பதும் துக்கங்களாலுண்டுபண்ணப்படுகிறது. பொருளானது இவனுடையதென்றகாரணத்தால் மனிதனை முதலில் திருடர்கள் அடிக்கிறார்கள்; பலவிதமான தண்டனைகளாலும் துன்பப்படுத்துகிறார்கள்; எப்பொழுதும் பயத்தை உண்டுபண்ணுகிறார்கள். பொருளில்ஆசைபற்றியிருப்பது துக்கமென்று நெடுங்காலமாக என்னால் அறியப்பட்டது. ஏ! காமமே! நீ எதைஎதைப் பிடிக்கிறாயோ அதைஅதையே விரும்பிக்கொண்டுசெல்லுகிறாய்; உண்மையைஅறியாதவனும் ஸந்தோஷப்படுத்தமுடியாத பாலகனும் தீயைப்போலத் திருப்தியடையாதவனுமாகிறாய். நீ எளிதில் கிடைப்பதையும் அறியவேயில்லை. கிடைக்கஅரிதையும் நீ அறியவேயில்லை. பாதாளம்போலப் பூர்த்தியடையத்தகாத நீ என்னைத் துக்கங்களுடன் சேர்த்துவைக்க விரும்புகிறாய். ஏ! காமமே! திரும்பவும் உன்னால் இப்பொழுது நான் அடையக்கூடியவனல்லன். யதிருச்சையாக நேர்ந்த திரவியநாசத்தால் வெறுப்புற்று நான் பெரிய நிவ்ருத்தியைஅடைந்து இப்பொழுது [1]காமங்களைச் சிந்தியாதவனாயிருக்கிறேன். இவ்வுலகில் மிக்கதுன்பங்களை நான் பொறுத்திருக்கிறேன். புத்தியில்லாதநான் தெரிந்துகொள்ளவில்லை. பொருள்நாசத்தால் அவமதிக்கப்பட்டநான் எல்லா அங்கங்களிலும் தாபமில்லாமல் படுத்திருக்கிறேன். ஏ! காமமே! மனத்திலுள்ளயாவற்றையும் விலக்கிவிட்டு உன்னைத்தள்ளிவிடுகிறேன். ஏ! காமமே! மூக்கில்கயிறுபோட்டு அடக்கிய காளையுடன் விளையாடுவதுபோல என்னுடன்கூட நீ திரும்பவும் விளையாடப்போகிறதில்லை. நிந்திக்கிறவர்களை நான் பொறுத்துக்கொள்ளுவேன். (பிறரால்) ஹிம்ஸிக்கப்பட்ட நான் (அவர்களை) ஹிம்ஸிக்கப்போகிறதில்லை. பகைக்கும்படி பேசப்பட்ட நான்

---

1 போகங்களை.

அந்தஅப்ரியத்தைப் பாராட்டாமல் பிரியமாகப்பேசுவேன். திருப்தியுள்ளவனும் தன்னிலையிலுள்ள இந்திரியங்களுள்ளவனும் எப்பொழுதும் கிடைத்ததுகொண்டு ஜீவிப்பவனுமான நான் எனக்குச்சத்ருவானஉன்னைத் திருப்தியுள்ளவனாகச்செய்யப்போகிறதில்லை. வைராக்யத்தையும் ஸுகத்தையும் திருப்தியையும் இந்திரியங்களின் அடக்கத்தையும் ஸத்யத்தையும் கர்மேந்திரியங்களினடக்கத்தையும் பொறுமையையும்எல்லாப்ராணிகளிடத்திலுமுள்ள தயையையும்சரணமென்றடைந்தவனாக என்னை அறிந்துகொள். ஆகையால், (மோக்ஷத்திற்குச்) செல்லும் என்னைக் காமமும் லோபமும் த்ருஷ்ணையும் கார்ப்பண்யமும் விட்டுவிலகவேண்டும். இப்பொழுது காமத்தையும் லோபத்தையும் கோபத்தையும் க்ரூரத்தனத்தையும் தள்ளிவிட்டு ஸத்வகுணத்திலிருக்கிறேன். இப்பொழுது லோபத்திற்கீடானநிலையை அடைந்து புத்தியில்லாமல் நான் துக்கத்தை அடையமாட்டேன். காமங்களுள் எவன் எதை விடுகிறானோ அவனுக்கு அது ஸுகத்தைப் பெருகச்செய்வதாகும். காமத்திற்கீடுபட்டுச்செல்லுகிறவன் எப்பொழுதும் துக்கத்தையேஅடைவான். காமத்தைச்சேர்ந்தவற்றையும் (அதற்குக்காரணமான) ரஜோகுணத்தையும் மனிதன் விலக்கிக்கொள்ளவேண்டும். துக்கமும் லஜ்ஜையில்லாமையும் ஸந்தோஷமில்லாமையும் காமக்ரோதங்களிலிருந்து உண்டாகின்றனவாகும். முதுவேனிற்காலத்தில் குளிர்ந்தமடுவை அடைவதுபோலப்ரம்மத்தை அடைந்த இந்தநான் கர்மங்களிலிருந்து ஒழிவையடைகிறேன்; துக்கங்களில்லாதவனாகிறேன்; ஒரேஸுகமாயிருக்கிறேன். இவ்வுலகத்திலுள்ள விஷயஸுகம்எதுவோ தேவலோகத்திலுள்ள பேரின்பம் எதுவோ இவ்விரண்டு ஸுகங்களும் ஆசையைவிடுவதால் உண்டாகும்ஸுகத்திற்குப் பதினாறிலொருபாகத்திற்கும் ஒப்பாகா. நான் உத்தமமான சத்ருபோன்றதும் ஸ்தூலதேஹத்திலிருந்து [1] ஏழாவதுமான காமத்தைக்கொன்று கொல்லமுடியாத ப்ரம்மமென்னும்பட்டணத்தையடைந்து அரசன்போலவஸிக்கிறேன்'' என்று சொன்னார். இந்தப்புத்தியை அடைந்து வைராக்யம்பெற்ற மங்கியானவர் எல்லாக் காமங்களையும்தள்ளிவிட்டு ப்ரம்மத்தை அடைந்து பேரானந்தத்தை அடைந்தார். கன்றுக்குட்டிகள் நாசமடைந்தகாரணத்தால் மங்கியானவர் மோக்ஷத்தை அடைந்தார். அவர் காமத்திற்குமூலமான

1 'அன்னமயம், ப்ராணமயம், மனோமயம், விஜ்ஞானமயம், ஆனந்தமயம், லோகந்தம், மஹத்தத்வம்' என்று ஏழு; இந்த மஹத்தத்வமே காமமென்று சொல்லப்படும்.

அஜ்ஞானத்தை அறுத்தார்; அதனால் உத்தமமானகதியை அடைந்தார். இவ்விஷயத்திலும் விதேஹதேசத்துக்குஅரசரும் மிக்கஅடக்கமுள்ளவருமான ஜனகரால்பாடப்பட்டதும் மோக்ஷத்தைப்பற்றியதுமான இந்த ச்லோகத்தையும் உதாஹரிக்கிறார்கள். அதன்பொருளாவது:—'என்னுடைய பொருளானது அளவில்லாததுபோலிருப்பினும் எனக்கு ஒன்றுமில்லை. மிதிலையானது எரிக்கப்பட்டாலும் என்னுடையதொன்றும் எரிக்கப்படுகிறதில்லை' என்பது. இதேவிஷயத்தில் வைராக்யத்தைப்பற்றிப் போத்யரால்சொல்லப்பட்ட இந்த ஸ்லோகத்தையும் உதாஹரிக்கிறார்கள். யுதிஷ்டிர! அதையும் அறிந்துகொள். நஹுஷன்புத்ரனான அரசன் வைராக்யத்தால் சாந்தியை அடைந்தவரும் சாஸ்திரஅறிவால் த்ருப்தியுள்ளவரும் சாந்தருமான போத்யரென்னும் ரிஷியைநோக்கி, 'ப்ராஜ்ஞர்களிற்பெரியவரே! நீர் எந்தஅறிவை அடைந்து சாந்தியுள்ளவரும்ஸுகமுள்ளவருமாய் ஸஞ்சரிக்கிறீர்? சாந்தியைப்பற்றிய உபதேசத்தை எனக்கு அறிவிக்கவேண்டும்' என்றுவினவினான். போத்யர், 'நான்உபதேசம்பெற்றிருக்கிறேன். இவ்வுலகில் ஒருவனுக்கும் நான் உபதேசஞ்செய்கிறதில்லை. அவ்வுபதேசத்திற்குரியலக்ஷணத்தை நான் சொல்லுகிறேன். அதன் கருத்தைத் தானாகத் தெரிந்துகொள்ளவேண்டும். பிங்களையென்னும் வேசி, அணில், ஸர்ப்பம், வனத்திலுள்ள வண்டுகளின்சுழற்சி, லக்ஷயத்தை அடிப்பவன், யுவதி இவ்வாறுபேர்களும் எனக்குக் குருக்களாகிறார்கள்' என்று சொன்னார். அரசனே! ஆசையானது பலமுள்ளதாகும். ஆசையில்லாமை பெரியஸுகமாகும். பிங்களையென்னும் வேசியானவள் ஆசையைஆசையில்லாததாகச்செய்துகொண்டு ஸுகமாகஉறங்கினாள். மாம்ஸத்துடன்கூடிய அணிலைக்கண்டு மாம்ஸமில்லாதவைகள் அடிக்கத்தொடங்கவும் அந்தமாம்ஸத்தைவிட்டதால் அணிலானது ஸுகமாகவளர்ந்தது. வீட்டைஉண்டுபண்ணிக்கொள்வது துக்கத்தின்பொருட்டன்றி ஒருபொழுதும் ஸுகத்தின்பொருட்டன்று. ஸர்ப்பமானது பிறனால் செய்யப்பட்ட வீட்டில்புகுந்துகொண்டு ஸுகமாகவளர்கிறது. முனிகளாயிருப்பவர்கள் வண்டுகளென்னும் பக்ஷிகள்போலப் பிராணிகளுக்கு த்ரோஹமில்லாமலே பிச்சையெடுக்கும்விருத்தியை அடைந்து ஸுகமாகஜீவிக்கிறார்கள். வண்டானது எல்லாப்பூக்களிலிருந்தும் ஸாரத்தைஎடுத்துக்கொள்வதுபோல அறிவுள்ளமனிதன் சிறிதும்பெரிதுமான சாஸ்திரங்களிலிருந்துஸாரத்தைஎடுத்துக்கொள்ளவேண்டும். லக்ஷயத்தை அடிக்கும் ஒருமனிதன் அம்பின்லக்ஷயத்தில் நன்றாய்ப்பற்றுதலுள்ள மன

முள்ளவனுகி அருகிற்செல்லும் அரசனையும் அறிகிறதில்லை. பலபேர்களுக்கு எப்பொழுதும் கலகமுண்டு. இரண்டுபேர்களிருந்தால் பேச்சு நிச்சயமாகவரும். ஆகையால், [1]ஒருபெண்ணின்கையிலுள்ள ஒற்றைவளையல்போல ஒருவனுக ஸஞ்சரிக்கப்போகிறேன்'' என்று சொன்னார்'' என்றார்.

---

### நூற்றேழுபத்தேழாவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், ப்ரபஞ்சம் அநித்யமென்றறிந்துண்டாகும் விரக்தியானது ஸுகத்திற்குக் காரணமென்னும் விஷயத்தில் ப்ரமாணமாக ப்ரஹ்லாதருக்கும் அஜகரவ்ரதமுள்ளமுனிவருக்கும் நடந்தஸம்பாஷணையைக் கூறியது.)

யுதிஷ்டிரர், "ஒழுக்கங்களை அறிந்தவரே! மனிதன் எந்த நடக்கையால் சோகமில்லாமல் பூமியில் ஸஞ்சரிக்கக்கூடும்? மனிதன் எதைச்செய்துகொண்டு உலகத்தில் உத்தமமானகதியைப்பெறுவான்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"இவ்விஷயத்திலும் ப்ரஹ்லாதருக்கும் அஜகரவ்ருத்தியிலுள்ள ஒருமுனிவருக்கும் நடந்தஸம்பாஷணையான பழையஇதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். புத்தியுள்ளவரும் அறிவுள்ளவர்களில் மிகச்சிறந்தவருமான ப்ரஹ்லாதராஜா, உறுதியானமனமுள்ளவரும் (ராகத்வேஷங்களின்) துன்பமில்லாதவருமாய ஸஞ்சரிக்கும் ஒரு பிராம்மணரைநோக்கி ப்ரச்னஞ்செய்யத்தொடங்கினர். 'பிராம்மணரே! தம்நிலையிலிருப்பவரும் சக்தியுள்ளவரும் தயையுள்ளவரும் அடக்கமுள்ளவரும் காரியவிருப்பமில்லாதவரும் அஸூயையில்லாதவரும் ஸத்தியவாக்குள்ளவரும் வெகுமானம்பெற்றவரும்நல்லறிவுள்ளவருமான நீர் உலகத்தில் பாலகன்போல ஸஞ்சரிக்கிறீர். நீர் லாபத்தைவிரும்பவேயில்லை; பொருள் நஷ்டங்களிலும் சோகமடையவில்லை. எப்பொழுதும் திருப்தியுள்ளவர்போல ஒன்றையும் நினையாதவராயிருக்கிறீர்; காமத்தின்வேகத்தால் பிரஜைகள் அபஹரிக்கப்படும்பொழுது மனம்கலங்காதவர்போலவும் அறமும் பொருளும் இன்பமுமா

[1] ஒரு பெண்ணுடைய வீட்டுக்கு வந்தவர்களுக்குத் தெரியாமல் அதிதிகளுக்கு போஜனம்செய்விக்கச் சமயம் பார்த்துக்கொண்டு நெல்லைக்குத்தும்போது கையிலுள்ள வளையல்கள் பரபரப்பாய் ஒலியுண்டாயின. அவள் தான் வளையல்களை உடைத்துவிட்டு ஒவ்வொன்றையே கையில் வைத்துக்கொண்டாளென்று ஸ்ரீ பாகவதத்தில் கூறப்படுகிறது' என்பது பழைய உரை.

கியகாரியங்களில் முயற்சியில்லாதவர்போலவும் காணப்படுகிறீர். தர்மத்தையும் தன்த்தையும் நீர் அடையமுயலவில்லை. காமத்திலும் நீர் இருக்கவில்லை; இந்திரியங்களுக்குரிய விஷயங்களை ப்ரியமாக நினையாமல் அவைகளிலிருந்துவிடுபட்டவராய் ஸாக்ஷிபோல ஸஞ்சரிக்கிறீர். முனிவரே! உம்முடைய அறிவு எது? சாஸ்திரம் எது? வ்ருத்தி எது? பிராம்மணரே! இவ்வுலகில் எதை ஶ்ரேயஸென்று நினைக்கிறீரோ அதை எனக்குச் சொல்லவேண்டும்' என்றுகேட்டார்.

இவ்விதம் கேட்கப்பட்டவரும் அறிவுள்ளவரும் உலகத்திற்குரிய தர்மவிதியைஅறிந்தவருமான அந்தப்ராம்மணர் எளியதும் பொருளுள்ளதுமான வசனத்தால் ப்ரஹ்லாதனைநோக்கிச் சொலலத் தொடங்கினர். 'ஓ! ப்ரஹ்லாத! காரணமின்றிப் பிராணிகளுக்குண்டாகும் பிறப்பையும் குறையையும் வளர்ச்சியையும் விநாசத்தையும் பார். நான் சந்தோஷமடைகிறதுமில்லை; துக்கமடைகிறதுமில்லை. (பிராணிகளிடம்) ப்ரவ்ருத்திகள் ஸ்வபாவத்தாலேயே இருக்கின்றனவென்று தெரிந்துகொள்ளவேண்டும். ஸ்வபாவத்தைப்பற்றி உண்டாகும்ப்ரவருத்திகள்யாவும் ஒருவனாலும் செய்யத்தக்கவைகளல்ல. ப்ரஹ்லாத! சேர்க்கைகள் பிரிவையே முக்கியமாகக்கொண்டவைகளென்றும்கூட்டங்கள்முடிவில்நாசமடைகின்றவைகளென்றும் தெரிந்துகொள். ஒன்றிலும் மனத்தைவைக்கக்கூடாது. குணங்களுடன்கூடியவைகளும் நாசமுள்ளவைகளுமான பிராணிகளைப்பார்க்கிறவனும் பிறப்பு இறப்புக்களை அறிந்தவனுமானமனிதனுக்குச் செய்யவேண்டியது என்னஇருக்கிறது? பெரியகடலிலுள்ள ஜலத்திலுண்டானவைகளான பெரியசரீரங்களுக்கும் சிறியசரீரங்களுக்கும் விநாசத்தை முறையே பார்க்கிறேன். அஸுரர்வேந்தனே! பூமியில் பிறந்தவைகளானஜங்கமங்களும் ஸ்தாவரங்களுமானபிராணிகளைத் திற்கும் நேரில மிருத்யுவைப் பார்க்கிறேன். ஆகாயத்தில்ஸஞ்சரிக்கிறவர்களும் அதிகபலமுள்ளவர்களுமான அஸுரர்களுக்கும் உத்தமமானபறவைகளுக்கும் காலத்தைமீறுமல் மிருத்யு கிளம்புகிறுன். தேவலோகத்தில ஸஞ்சரிப்பவைகளும் சிறியவைகளும் பெரியவைகளுமான ஒளிகளும் காலந்தவறுமல விழுவதைக் காண்கிறேன். இவ்விதம் மிருத்யுவால் தொடரப்பட்டபிராணிகளை நன்ருகப்பார்க்கிறவனும் [1]யாவற்றையும்பொதுவாகஅறிந்தவனுமானநான்செய்யவேண்டியதைச்செய்துகொண்டு ஸுகமாக உறங்குகிறேன்; யதிருச்சையாகக

1 'எல்லாவற்றிற்கும் பொதுவான பரம்ம பதத்தையடைந்தவன்' என்பது மேற்பாடம்.

கிடைத்த மிகப்பெரிதான ஆகாரத்தையும் புஜிக்கிறேன். திரும்பவும், போஜனமில்லாதவனாகவே பலநாள்களும் படுக்கிறேன். திரும்பவும், பலகுணங்களுடன்கூடியதும் பலவகையுமான அன்னத்தை எனக்கும் போஜனம்செய்விக்கிறார்கள். திரும்பவும் சிறிதும், திரும்ப அதிலும்சிறிதும், மறுஸமயம்ஒன்றும்கிடையாமலுமிருக்கும். ஒருஸமயம் நொய்யையும்தின்பேன்; பிண்ணாக்கையுந்தின்பேன்; [1] சாலியன்னத்தையும் மாம்ஸங்களையும் புஜிப்பேன்; திரும்பவும் பலவிதமானபக்ஷியங்களையும் பக்ஷிப்பேன். ஒருஸமயம் கட்டிலில்படுப்பேன்; திரும்பவும் பூமியிலுமுறங்குவேன். ஒருஸமயத்தில் மாடியிலும் எனக்குப் படுக்கை கிடைக்கும். மரவுரிகளையும் சணலால்செய்யப்பட்டவஸ்திரங்களையும் பட்டுக்களையும் தோல்களையும் தரிப்பேன்; ஒருஸமயத்தில் பெரியவிலைபெற்ற ஆடைகளையும் உடுப்பேன்; தெய்விகமாய்வந்ததும் தர்மவழிவிட்டு விலகாததுமான போக்யவஸ்துவை நான் நிராகரிப்பதில்லை; கிடைக்கமிகவரிதான இவ்விதவஸ்துவைவிரும்புகிறதுமில்லை; அசைவற்றதும் அழிவில்லாததும் சுபமும் சோகமில்லாததும் பரிசுத்தமும் ஒப்பில்லாததும் அறிஞர்கள்விரும்பத்தக்கநிலையிலிருப்பதும் மூடர்களால்விரும்பப்படாததும் அனுஷ்டிக்கப்படாததுமான இந்த [2] அஜகரவ்ரதத்தைப் பரிசுத்தனாகிச் செய்துகொண்டிருக்கிறேன். உறுதியானபுத்தியுள்ளவனும் ஸ்வதர்மத்திலிருந்து நழுவாதவனும் மிகக்குறைந்த உலகவாழ்க்கையுள்ளவனும் பராபரமானப்ரம்மத்தை அறிந்தவனும் பயத்தையும் பேராசையையும் அவிவேகத்தையும் மற்றுமுள்ள தோஷங்களையும்போக்கியவனும் பரிசுத்தனுமாகி அந்த அஜகரவ்ரதத்தைச்செய்துகொண்டிருக்கிறேன்; ஒருவகைப்படாதகனிகளும் பக்ஷியங்களும் போஜ்யங்களும் குடிக்கத்தக்கவைகளுமுள்ளதும் விதியின்பரிபாகத்தால் வெவ்வேறான தேசகாலங்களுள்ளதும் மனதிற்குஸௌக்யமும் லோபிகளால் அனுஷ்டிக்கப்படாததுமான இந்தஅஜகரவ்ரதத்தைப் பரிசுத்தனாகிச் செய்துகொண்டிருக்கிறேன்; 'இதுவேண்டும் இதுவேண்டும்' என்ற பேராசையால்பிடிக்கப்பட்டதும் பொருளை அடையாததும் சோகப்படுவதுமான உள்ளத்தை நன்றாகக் கவனித்துப்பார்த்து உண்டான தத்துவஞானத்துடன் இந்தஅஜகரவ்ரதத்தைப் பரிசுத்தனாகிச்செய்துகொண்டிருக்கிறேன்; பொருளை அடையவேண்டியகாரணத்தால் நற்குணமில

1 சம்பாநெல்.

2 அஜகரமென்பது மலைப்பாம்பு. அது தன்அருகில்வந்ததைப் புஜிப்பதல்லாமல் ஆகாரத்திற்காகவேறு ஓரிடத்திற்கும்செல்லுகிறதில்லை. அதுபோலிருப்பது அஜகரவ்ரதமாகும்.

லாதப்ரபுவை அடுத்துப் பலவிதமாகக் கஷ்டப்படும் இந்தஉலகத்தை நன்றாகப்பார்த்து வைராக்யத்தில் விருப்பமுள்ளவனும் மனத்தைஜயித்தவனும் நல்லஅடக்கமுள்ளவனும் பரிசுத்தனுமாய் இந்த அஜகரவ்ரதத்தைச்செய்துகொண்டிருக்கிறேன். ஸுகமும் துக்கமும் பொருள் நஷ்டமும் பொருள்லாபமும் உத்ஸாஹமும் சோர்வும் மரணமும் ஜீவனமும் தெய்வத்தால் நிலைபெற்றனவாயிருக்குமென்று உண்மையாகத் தெரிந்துகொண்டு நான் பரிசுத்தனாகி இந்தஅஜகரவ்ரதத்தைச் செய்துகொண்டிருக்கிறேன். பயமும் ஆசையும் அவிவேகமும் அஹங்காரமும்போனவனும் தைரியத்துடனும் ஆலோசனையுடனும் நிச்சயத்துடனும்கூடியவனும் நல்லஅடக்கமுள்ளவனுமானநான் கிட்டவந்து கிடைத்ததைப் புஜிக்கும் மலைப்பாம்புகளைப்பார்த்து இந்த அஜகரவ்ரதத்தைப் பரிசுத்தனாகிச் செய்துகொண்டிருக்கிறேன். படுப்பதிலும் உட்காருவதிலும் நியமமில்லாதவனும், இயற்கையில் இந்திரியங்களின் அடக்கமும் நியமமும் வ்ரதமும் ஸத்யவசனமும் பரிசுத்தியுமுடையவனும், பயன்களின் சேர்க்கையைவிட்டவனும்,நல்லஸந்தோஷமுள்ளவனும், பரிசுத்தனுமான நான் இந்த அஜகரவ்ருத்தியைச் செய்துகொண்டிருக்கிறேன். [1]ஆசைப்படத்தக்கவஸ்துக்களைவிரும்பி முடிவில்துன்பமடைகிறதும் ஆத்மரூபத்தைவிட்டுவிலகியதும் ஆசைகொண்டதும் வரையறையில்லாததுமானமனத்தைக்கண்டு அறிவடைந்து நான் அந்தமனத்தை ஆத்மரூபத்தில்முடிவுபெற்றிருக்கும்படி அடக்கவேண்டி இந்தஅஜகரவ்ரதத்தைப் பரிசுத்தனாகிச் செய்துகொண்டிருக்கிறேன். புத்தியையும்மனத்தையும் அனுஸரித்துச்செல்லாமல் (இல்லறத்தில்) விரும்பத்தக்கஸுகம் அரிதாயிருப்பதும் அவ்விதஸுகம் நிலையற்றதாயிருப்பதுமாகிய அவ்விரண்டையும் நன்றாகக்கண்டநான் இந்தஅஜகரவ்ரதத்தைப் பரிசுத்தனாகிச்செய்துகொண்டிருக்கிறேன். இந்த அஜகரவ்ரதமானது புத்திசாலிகளும் தம்கீர்த்தியைவெளியிடுகிறவர்களும் தம்மதத்தையும்பிறமதங்களையும்பற்றி ஆங்காங்கு இது இதுவென்று மிகக்கடினமாகத் தர்க்கங்களைச் சொல்லுகிறவர்களுமான கவிகளாலும் பெரும்பாலும் கொண்டாடப்பட்டிருக்கிறது. இவ்வுலகில் அறிவில்லாத மனிதர்களால் வெவ்வேறாக நிச்சயஞ்செய்யப்பட்டதும் முடிவுபெறாததும் நிச்சயத்தையும்தோஷங்களின் கலப்பையும் அடையாததுமான இந்தமதபேதத்தை நாசத்திற்குக்காரணமென்று தெரிந்துகொண்டு நான் தோஷங்களையும்பேராசையையும் விலக்கி

1 'தூரியாசகைகளாலும் பலநுண்டங்களாலும் ...' என்பது பழைய உரை.

விட்டு மனிதர்களிடம் விளையாடிக்கொண்டிருக்கிறேன்' என்று சொன்னார். பெரியபக்தியுள்ளவனந்தமனிதன் ஆசையைவிலக்கிக்கொண்டு இவ்வுலகில்அஜகரத்தால்செய்யப்படும்வ்ரதத்தைச்செய்கிறானோ அவன் பயமும் பேராசையும் அவிவேகமும் கோபமுமில்லாதவனும் ஸுகமுள்ளவனுமாக இவ்விரதத்திற்குரிய ஸந்தோஷத்துடன் ஸஞ்சரிப்பான்'' என்று சொன்னார்.

---

## நூற்றெழுபத்தெட்டாவது அத்தியாயம்.

### மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், அறிவுதான் ஸுகத்திற்குக்காரணம் என்னும் விஷயத்தில் இந்திரனுக்கும் காஶ்யபருக்கும் நடந்த ஸம்பாஷணையைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! மனிதனுக்கு (அஜகரவ்ரதத்திலுள்ளநிலைமைக்கு) பந்துக்களோ கர்மமோ பொருளோ அறிவோ இவ்வுலகில எதுகாரணமாகும்? கேட்கப்பட்டநீர் இதையெனக்கு உபதேசிக்கவேண்டும்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"அறிவானது பிராணிகளின் நிலைமைக்குக் காரணமாகிறது. அறிவே பெரியலாபமென்று கருதப்படுகிறது. அறிவு உலகத்தில மோக்ஷத்திற்குக் காரணமாகும். அறிவானது ஸ்வர்க்கமென்பது ஸாதுக்களின்கருத்து. பலியும் ப்ரஹ்லாதரும் நமுசியும் மங்கியும் ஐஶ்வர்யத்திற்கு அழிவுண்டானபோது அறிவாலன்றோ பயனை அடைந்திருக்கிறார்கள். அவ்விதமறிவைவிடப்பெரிது என்னவிருக்கிறது? இவ்விஷயத்திலும் இந்திரனுக்கும் காஶ்யபருக்கும் நடந்த ஸம்பாஷணையான பழைய இதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். யுதிஷ்டிர! அதனை அறிந்துகொள். தனமுள்ளவனும் கர்வமுள்ளவனுமானஒருவைஶ்யன், தவமுள்ளவனும்ஸம்ஶிதவ்ரதனுமான ளவனும்ரிஷிகுமாரனுமான காஶ்யபனைவைஶ்யன்தன்ரதத்தால்கீழே விழும்படிசெய்தான். கீழேவிழுந்து துன்பப்பட்ட அந்தக்காஶ்யபன் உடனே கோபங்கொண்டு தைரியமில்லாமல், 'நான் மரிக்கப்போகிறேன். இவ்வுலகில் பொருளில்லாதவனுக்கு உயிரோடிருப்பதால் யாதொருபயனுமில்லை' என்று சொன்னான். அவ்விதஞ்சொல்லிமரிக்க விருப்பமுள்ளவனும் படுத்திருப்பவனும் பேச்சில்லாதவனும் அறிவில்லாதவனும் மனஸ்தாபமுள்ளவனுமான காஶ்யபனைநோக்கி, இந்திரன் நரியுருவத்துடன்வந்து சொல்லத்தொடங்கினான்.

ளைப் பிடுங்கித்தின்னுகின்றன. இவைகளையெடுத்தெறியத்தக்கசக்தி எனக்கில்லை. கையில்லாமையால் எனக்குள்ள இந்தஅவஸ்தையைப் பார். செய்யத்தகாதபாவமாகுமென்றும் இதையும்விட மிகவும்பாவமான வேறுபிறப்பில் விழாமலிருக்கவேண்டுமென்றும் எண்ணிமட்டும் நான் இந்தச்சரீரத்தை விடாமலிருக்கிறேன். பாவப்பிறவிகளின் நடுவில் நான் நரிப்பிறவியை அடைந்திருக்கிறேன். இதைக்காட்டிலும் மிகப்பாவமுள்ளவைகளான வேறுபலகெட்டபிறவிகளிருக்கின்றன. சிலர் பிறவியிலேயே மிக்கசுகமுள்ளவர்களாயிருக்கிறார்கள். வேறு சிலர் மிகவும்துக்கமுள்ளவர்களாயிருக்கிறார்கள். இவ்வுலகில் ஓரிடத்திலும் ஒருவனுக்கும் ஸுகமேஉறுதியாயிருப்பதை நான் காணேன். மனிதர்கள் பிரபுத்தன்மையை அடைந்து பின் ராஜ்யத்தைவிரும்புகிறார்கள்; பிறகு, ராஜ்யத்திலிருந்து தேவத்தன்மையைவிரும்புகிறார்கள். தேவத்தன்மையிலிருந்து இந்திரபதத்தையும் விரும்புகிறார்கள். நீ உன்னிஷ்டம்போல் ப்ரபுவாகவேயாகலாம்; ஆகிலும், ராஜாவாக மாட்டாய்; தேவதையுமாகமாட்டாய்; (ஒருஸமயம்) தேவத்தன்மையையுமடைந்து இந்திரபதவியையும்அடைந்தாலும் ஸந்தோஷமடையவே மாட்டாய். விரும்பியவஸ்துவை அடைந்தும் திருப்தியுண்டாகிறதில்லை. [1]தாகமானது தண்ணீரால சாந்தியடைகிறதில்லை. தீயானது ஸமித்துக்களால் மிகவும்ஜ்வலிப்பதுபோல அந்தஆசை திரும்பவும் அதிகமாகஜ்வலிக்கும். உன்னிடத்திலேயே சோகமும் இருக்கிறது. அதுபோல உன்னிடத்தில் ஸந்தோஷமுமிருக்கிறது. ஸுகம் துக்கம்இரண்டுமிருக்கின்றனவே; அவ்விஷயத்தில் அழுகையென்ன? எல்லாவிதமான காமங்களுக்கும் கர்மங்களுக்கும் மூலமானகருவிக்கூட்டத்தையும்புத்தியையும் பறவைகளைக் கூட்டிலடைப்பதுபோலச் சரீரத்தில அடைத்துத்தசைந்துகொண்டிருப்பவனுக்குப் பயமிராது. இரண்டாவதுதலை அறுபடுமென்பது ஓரிடத்திலுமில்லை. மூன்றாவதுகையைஅறுப்பதென்பதுமில்லை. ஆகையால், பயமில்லை. ருசியை அறியாத மனிதனுக்கு ஒருவிஷயத்திலும் ஆசையுண்டாகாது. தொடுவதாலும் பார்ப்பதாலும் கேட்பதாலுமன்றோ ஆசையுண்டாகிறது. கள்ளையும்லட்வாகமென்றபறவைகளின் மாம்ஸத்தையும் நீ நினைக்கிறவனல்லன். அவ்விரண்டையும்விடச் சிறந்ததானபக்ஷியம் ஒன்றும் ஓரிடத்திலுமில்லை. காஸ்யப! முன்னால் புஜிக்கப்படாதவைகளும் மற்றுமுள்ளவைகளுமானபிராணிகளிடமுள்ள பக்ஷியங்களும் போஜ

1 வியாதியாதிகூண்டாகும் வறட்சி; அதை நிவர்த்திக்கும் மருந்திலுள்ளன்றித் தண்ணீரால்தணிவதில்லை.

யங்களும்எவைகளோ அவைகளின்நினைப்பே உனக்கில்லை. உண்ணு மலிருப்பதும் தொடாமலிருப்பதும் பாராமலிருப்பதுமாகிய இவ்வித நியமமானது மனிதனுக்கு ஶ்ரேயஸென்றுநினைக்கிறேன். ஸந்தேஹ மில்லை. கையுள்ளவர்கள், பலமுள்ளவர்களும் தனமுள்ளவர்களுமா கிறார்களென்பதில் ஸந்தேஹமில்லை. மனிதர்கள் மனிதர்களாலேயே தாஸத்தன்மையை அடையும்படிசெய்யப்பட்டு அடித்தல் கட்டுதல் முதலிய துன்பங்களால் திரும்பவும் திரும்பவும் பீடிக்கப்படுகிறார்கள். அவ்விதமானமனிதர்களும், விளையாடுகிறவர்களும் ஸந்தோஷிக்கிறவர் களும் சிரிக்கிறவர்களுமாயிருக்கிறார்கள். மற்றுஞ்சிலர், புஜபலமுள்ள வர்களும் கல்வியில்தேர்ச்சியுள்ளவர்களும் பெரிய மனமுள்ளவர்களு மாயிருந்தும் இகழ்ச்சியுள்ளதும் துன்பமுள்ளதுமான பாவவிருத்தி யைஅடுத்திருக்கிறார்கள். அவர்கள் வேறுஜீவனத்தையும் அடுத்திருப் பதில் உத்ஸாஹமுள்ளவர்களாயிருக்கிறார்கள். அஃது அவர்களின் செய்கையால அவ்விதம்உறுதியாக உண்டாக்கத்தக்கதாகிறது. [1] புல் கஸனும் [2] சண்டாளனுங்கூடத தன்சரீரததை விடவிரும்புகிறதில்லை. அவன்தன்னுடையதான அந்தபிறவியில ஸந்தோஷமுள்ளவனுயிருக் கிறான். மாயை எவ்விதமிருக்கிறதென்பதைப் பார். காஶ்யப! கை யில்லாதவர்களும் ஒருபக்கம்போனவர்களும் நோயுள்ளவர்களுமான மனிதர்களைப் பார்க்கும்பொழுது நீ உன்பிறப்பில ஸம்பூர்ணனும் அடையவேண்டியவைகளை அடைந்தவனுமாயிருக்கிறாய். பயமில்லாத தும் பிணியிலலாததுமான பிராம்மணசரீரமும் பூர்ணமானஅங்கங்க ளும் உனக்குஇருந்தும் உலகங்களில் அவமதிக்கப்படாமலும் உன் ஜாதிக்குக் குறைவைஉண்டுபண்ணுவதான உண்மையான ஓர்அப வாதததாலும் நிந்திக்கப்படாமலுமிருந்தும் நீ சரீரத்தை விடத்துணி வது தகுதியன்று. பிராம்மணரிஷியே!நீ தர்மத்தைச்செய்யவேண்டி எழுந்திரு. ஓ! பிராம்மண! என்னுடையஇவ்வசனத்தை நீ கேட்டு நம்புவாயாகில வேதத்தில்உபதேசிததததர்மத்தின் முக்கியமான பய னையே அடைவாய். நீ அஜாக்கிரதையிலலாதவனாய் வேதமோதுவதை யும் அக்னிஹோத்ரபாலனத்தையும் ஸத்யத்தையும் இந்திரியங்களின் அடக்கத்தையும் தானத்தையும் காப்பாற்றிக்கொள். நீ ஒருவனையும் கேலிசெய்யாமலிருப்பாயாக. நன்றாக அத்யயனஞ்செய்தவர்களும் யாகஞ்செய்வதையும் செய்விப்பதையும் அடைந்தவர்களுமாயிருக்கிற வர்கள் எப்படிச் சோகமடைவார்கள்? அல்லது, அசுபமானகாரியததை

1 [illegible] ஸ்திரீயினிடம் பிறந்தவன்.

2 [illegible] பிராமணஸ்திரீயினிடம் பிறந்தவன்.

யும் சிந்திப்பார்கள்? நல்லதிதியில் நல்லநக்ஷத்திரத்தில் நல்லமுகூர்த்தத்தில் பிறந்தவர்கள் நற்காரியங்களைச்செய்ய விருப்பமுள்ளவர்களாய்ப் பெரியஸுகத்தைப்பெறுவார்கள்; சக்திக்குத்தக்கபடி யாகத்தையும்தானத்தையும்செய்வதிலும் ஸந்ததி உண்டுபண்ணுவதிலும் முயலுவார்கள். ஆஸுரமான நக்ஷத்திரங்களில் கெட்டதிதியில் கெட்டமுகூர்த்தத்தில் பிறந்தவர்களான மற்றுஞ்சிலர் யாகங்களும் பிரஜைகளுமில்லாதவர்களாகி ஆஸுரப்பிறவியில் விழுகிறார்கள். ஓ! பிராம்மண! நான், வேதங்களைநிந்திப்பவனும் யுக்திபேசுகிறவனும் பயனற்றதான [1]ஆன்வீக்ஷிகியென்னும் தர்க்கவித்தையில் பற்றுதலுள்ளவனும் யுக்திவாதங்களையேபேசுகிறவனும் ஸதஸுகளில் (சாஸ்திரத்தைவிட்டு) யுக்தியைப்பேசுகிறவனும் வேதவசனங்களைச் சொல்லும்பொழுது பிராம்மணர்களைக் கடுமையாகவும் அதிகமாகவும் பேசுகிறவனும் நாஸ்திகனும் யாவற்றிலும் ஸந்தேஹமுள்ளவனும் மூர்க்கனும் தன்னைபண்டிதனென்று நினைப்பவனுமான போலிப்பண்டிதனாகியிருந்தேன். ஓ! பிராம்மண! அவ்விதமிருந்ததற்குப்பயனாக எனக்கு இந்தநரிப்பிறவியுண்டாயிற்று. நரியானநான் திரும்பவும் மானிடப்பிறவியைஅடைவேனோ? பல நூறுகளானநாட்களாலும் ஒருஸமயம் அந்தது அவ்விதம்நேருமா? ஸந்தோஷமுள்ளவனும் அஜாக்ரதையில்லாதவனும் யாகத்திலும் தானத்திலும் தவத்திலும் பற்றுதலுள்ளவனும் அறியவேண்டியதை அறிந்துகொண்டவனும் அப்படியே விலக்கத்தக்கதை விலக்கிக்கொள்ளுகிறவனுமாயிருப்பேனோ?" என்றுசொல்லிற்று. உடனே, காஸ்யபனென்னும் அந்தமுனி எழுந்திருந்து வியப்படைந்து அந்தநரியைப்பார்த்து, 'அந்தோ! நீ புத்தியும் ஸாமர்த்தியமுமுள்ளதாயிருக்கிறாய்' என்றுசொன்னான். (பிறகு) அவன் தீர்க்கமான ஞானக்கண்ணால் அந்தநரியைப்பார்த்து, தேவர்களின்தேவனும் சசிதேவியின் பதியுமான இந்திரனென்று கண்டுகொண்டான். உடனே,காஸ்யபன அவனை மிகவும் பூஜித்தான். பிறகு, அந்தஇந்திரனால அனுமதிகொடுக்கப்பெற்றுத் தன்வீடுபோய்ச்சேர்ந்தான்" என்றுசொன்னார்.

---

1 'ஹேதுவைக்கொண்டு ஸாத்யத்தை அநுமிப்பதற்கு ஸாதனமானது' என்பது பழையவுரை.

## நூற்றெழுபத்தொன்பதாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், முன்ஜன்மத்தில்செய்தநல்வினையும் தீவினையும் பின்ஜன்மத்தில் அதனதற்குரியபயன்களைக்கொடுப்பது நிச்சயமாதலால் ஆரம்பம் தர்ம காரியத்தையேசெய்யவேண்டுமென்று சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! தானமும் யாகமும் அப்படியே செய்யப்பட்டதவமும் ஆசிரியர்களுக்குச்செய்யும் பணிவிடையும் (பயனுள்ளவைகளாக) இருக்குமாகில் அவற்றை எனக்கு உபதேசிக்க வேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"அரசர்களில்மிகச்சிறந்தவனே! இவ்வுலகிலுள்ளதைஅறிவது போல மேலுலகிலிருப்பதையும் நானறிவேன். இவ்வுலகில் கெட்ட கர்மங்களைச்செய்கிறவர்கள் எவ்விதம் எதைச் செய்கிறார்களோ அதையும் அவ்விதத்தையுங்கேள். துன்பத்திற்குக்காரணமான நாஸ்திக்யபுத்தியால் மனமானது பாவத்தில்செல்லுகிறது. மனிதன் பாவமானசெய்கையைச்செய்தபின் பெரியதுக்கத்தில் ப்ரவேசிக்கிறான். பாவத்தைச்செய்தமனிதர்கள் துர்ப்பிக்ஷத்திலிருந்து துர்ப்பிக்ஷத்தையும், துன்பத்திலிருந்துதுன்பத்தையும், பயத்திலிருந்துபயத்தையும், மரணத்திலிருந்துமரணத்தையும் அடைந்து வருந்துகிறார்கள். ஆஸ்திகர்களும் அடக்கமுள்ளவர்களும் ஸத்வகுணத்திலிருப்பவர்களும் புண்யத்தைச்செய்தவர்களுமானமனிதர்கள் உத்ஸவத்திலிருந்து உத்ஸவத்தையும், ஸ்வர்க்கத்திலிருந்து ஸ்வர்க்கத்தையும், ஸுகத்திலிருந்து ஸுகத்தையும் அடைகிறார்கள். நாஸ்திகர்கள் கைவிலங்குடன் பாம்புகளாலும்திருடர்களாலும்பயமுள்ளவைகளும் துஷ்டயானைகளுள்ளவைகளுமான அரண்யங்களிற்செல்லுகிறார்கள். இதைவிட வேறுமொன்றாவது வேண்டுமோ? தேவர்களிடம் அன்புள்ளவர்களும் அதிதிகளுக்குதவிகிறவர்களும் வாத்ஸல்யமுள்ளவர்களும் விசிஷ்டமாகத்தானஞ்செய்கிறவர்களுமான மனிதர்கள், மனதை ஜயித்த யோகிகள் அடையத்தக்கதும் க்ஷேமமுள்ளதும் யாகங்கள் செய்யப்படும்காலத்தில் அடையத்தக்கதுமான ஸ்ரேயஸ்ஸென்ற வழியை அடைகிறார்கள். எவன் முற்பிறப்பில் செய்த தர்மம் ஸுகத்திற்குக் காரணமென்றுசொல்லப்படுகிறதோ அவன் தான்யங்களுக்குள் பதர் களும் பறவைகளுள்கொசுக்களும்போல மனிதர்களுள் ஆகிறார்கள். எந்தெந்தமனிதனால் எந்தெந்தக்கர்மம் எந்தெந்தவிதத்தில்செய்

யப்பட்டிருக்கிறதோ அந்தஅந்தமுன்செய்தவினையானது அந்தஅந்த மனிதன்மிகவேகமாகஓடினாலும் அவ்வவனைத்தொடர்ந்தோடும்; படுத்திருந்தால்படுக்கும்; நின்றால் அருகில்நிற்கும்; சென்றால்தொடர்ந்து செல்லும்; வேலைசெய்தால் வேலைசெய்யும். முன்செய்தகாமமானது நிழல்போல மனிதனைத்தொடர்ந்தேநிற்கும். எந்தஎந்தமனிதனால் முன்பிறப்பில எந்தஎந்தக்கர்மம் எவ்விதம்எவ்விதம் செய்யப்பட்டதோ அந்தஅந்தமனிதன் தன்தன்னாலசெய்யப்பட்ட அந்தஅந்தக்கர்மத்தையே எப்பொழுதும் அப்படிஅப்படி அனுபவிக்கிறான். அதிர்ஷ்டத்தாலபாதுகாக்கப்பட்டதும் தம்தம்மிடம்வைக்கப்பட்டதுமான அவரவர்களின் கர்மங்களுக்குரியபயனைக் காலமானது, உலகிலகாணப்படும் பிராணிக்கூட்டத்திற்கு நான்குபுறத்திலுமிருந்தும் இழுத்துச்சேர்த்துவைக்கிறது. பூக்களும் கனிகளும் ஒருவனாலேவப்படாமலிருந்தாலும் தமக்குரியகாலத்தை எவ்விதம்மீறாமலிருக்கின்றனவோ அதுபோல முன்பிறப்பிலசெய்யப்பட்ட கர்மமும் தனக்குரியகாலத்தைமீறிச்செல்லுகிறதில்லை. ஸம்மானமும் அவமானமும் லாபமும் நஷ்டமும் ஆபத்தும் ஸம்பத்தும் கர்மங்களின்முடிவில திரும்பவும் திரும்பவும் செய்யப்பட்டகர்மங்களை அனுஸரித்துஉண்டாகும். முறபிறப்பில்தன்னாலசெய்யப்பட்டஸுகத்தையும் தன்னால்செய்யப்பட்ட துக்கத்தையும் மனிதன் கர்ப்பமென்னும்படுக்கையைஅடைந்து அனுபவிக்கிறான். இளமையிலோயெளவனத்திலோ முதுமையிலோ எந்தச்சுபத்தையும் அசுபத்தையும் செய்கிறானோ அதை ஒவ்வொருபிறப்பிலும் அந்த அந்தப்பருவத்திலஅனுபவிக்கிறான். கன்றானது ஆயிரம்பசுக்களின்நடுவிலிருக்கும் தன்தாயை எவ்விதமடைகிறதோ அதுபோல முன்பிறப்பிலசெய்யப்பட்டகர்மமானது செய்தமனிதனை அடைகிறது. முதலில நன்றாகஅழுக்கடைந்தஆடையானது பிறகு ஜலத்தால சுத்தி அடைவதுபோல முதலில கெட்டகர்மத்தைச்செய்த மனிதனும் பிறகு புண்யகாமத்தால பரிசுத்தியைஅடைவான். சரீரமானது தவத்தாலபரிசுத்திஅடைகிறது. தவத்தாலபெருமைஉண்டாகிறது. உபவாஸங்களால மிகுந்ததாபமடைந்தவர்களுக்கு இடைவிடாத நீண்டஸுகமுண்டாகும். தபோவனத்தில நீண்டகாலமுஞ்செய்யப்பட்ட தவத்தாலஉண்டாகும் புண்ணியத்தால பாபங்களைவிலக்கிக் கொண்டவர்களுக்கு எல்லாஇஷ்டங்களும் நன்றாக ஸித்திபெறும். ஆகாயத்தில பறவைகளின் அடிச்சுவடும் நீரில மீன்களின் அடிச்சுவடும் எவ்விதங்காணப்படுகிறதில்லையோ அதுபோல [1] பிரம்மஜ்ஞானத்தை

---

1 வேறுபாடம்.

அடைந்தவர்களின்வழியானது காணப்படுகிறதில்லை. வேறுள்ள ஆக்ஷேபங்களாலும்குற்றங்களைச்சொல்லுவதாலும்பயனில்லை.(ஆகையால்) ஸாமர்த்தியத்துடன்கூடியதும் தனக்குத்தகுந்ததும் விதமுமான தர்மத்தைச்செய்துகொள்ளவேண்டும்" என்றுசொன்னார்.

---

## நூற்றெண்பதாவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், பிருகுமஹரிஷியானவர் பரத்வாஜருக்கு உலகத்தின் ஸ்ருஷ்டிக்ரமத்தைக் கூறியதைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "ஸ்தாவரஜங்கமங்களுள்ள இவ்வுலகமுழுதும் எதிலிருந்து உற்பத்தியடைகின்றது? ப்ரளயகாலத்தில் எந்தவஸ்துவை அடைகிறது? ஓ! பிதாமஹரே! அதனை எனக்கு உபதேசிக்க வேண்டும். கடல், ஆகாயம், மலை, மேகம், பூமி, அக்னி, காற்று இவைகளுடன்கூடிய இவ்வுலகமானது யாரால் படைக்கப்பட்டது? எவ்விதம் பிராணிகள் ஸ்ருஷ்டிக்கப்பட்டன? ஜாதிகளின்பிரிவுகள் எவ்விதம்ஏற்பட்டன? அந்த ஜாதிகளுக்குரியசுத்தியும் அசுத்தியும் தர்மமும் அதர்மமும் எவ்விதமுண்டாயின? உயிரோடிருப்பவர்களின் ஜீவன் எவ்விதமிருக்கிறது? மரித்தவர்கள் எவ்விடத்திற்குச்செல்லுகிறார்கள்? இவ்வுலகிலிருந்து மேலுலகை எவ்விதமடைகிறார்கள்? இவையாவற்றையும் நீர் எங்களுக்கு உபதேசிக்கவேண்டும்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"இவ்விஷயத்திலும் ப்ரச்னஞ்செய்தபரத்வாஜருக்கு ப்ருகுவால் சொல்லப்பட்டதும் மிகச்சிறந்ததுமான பழையஇவ்விதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். கைலமலையின்சிகரத்தில் ஒளியால்ஜ்வலிப்பவர் போல் உட்கார்ந்திருக்கும் ப்ருகுமஹரிஷியைக்கண்டு பரத்வாஜரானவர், 'கடல், ஆகாயம், மலை, மேகம், பூமி, அக்கி, காற்று இவைகளுடன் கூடியஇவ்வுலகமானது யாரால் படைக்கப்பட்டது? எவ்விதம் பிராணிகள் ஸ்ருஷ்டிக்கப்பட்டன? ஜாதிகளின் பிரிவுகள் எவ்விதம் ஏற்பட்டன? அந்த ஜாதிகளுக்குரியசுத்தியும் அசுத்தியும் தர்மமும் அதர்மமும் எவ்விதமுண்டாயின? உயிரோடிருப்பவர்களின்ஜீவன் எவ்விதமிருக்கிறது? மரித்தவர்கள் எவ்விடத்திற்குச்செல்லுகிறார்கள்? இம்மையையும் இவ்வுலகத்தையும் மேலுலகத்தையும் நீர் சொல்லவேண்டும்' என்றுகேட்டனர். இவ்விதம் ஐயமுற்ற பரத்வாஜரால் வினவப்பட்டவரும் பூஜ்யரும் ப்ரம்மதேவர்போன்றவருமான அந்த

ப்ருகுவென்னும் ப்ரம்மரிஷியானவர் பிறகு, அந்தப்பரத்வாஜர்பொருட்டு யாவற்றையும் சொல்லத்தொடங்கினார். 'உலகத்தை உருவமாகக் கொண்டவரும் உள்ளிருக்கும்ஆத்மரூபியும் ஸநாதனரும் விகாரமில்லாதவரும் அழிவில்லாதவரும் ஸூக்ஷ்மரூபியும் பற்றுதலில்லாதவரும் எங்கும்நிறைந்தவரும் ப்ரபுவுமான ஸ்ரீமந்நாராயணரிருந்தார். ப்ரக்ருதியைக்காட்டிலும் வேறானவரும் எப்பொழுதும் பொறிகளுக்கு புலப்படாதவருமான அந்தப்பிரபுவானவர் ஸ்ருஷ்டிக்கவிருப்பமுள்ளவராகித் தம்முடையஆயிரத்திலொருபாகத்திலிருந்து ஒருபுருஷனையுண்டுபண்ணினார். பிராணிகள் எவரிடத்திலிருந்து பிறப்படைந்தனவோ, எவரிடத்தில்நிலைபெற்றிருக்கின்றனவோ, எவரிடத்தில் லயத்தைஅடைகின்றனவோ அவ்விதக்காரணரும் அவ்யக்தரென்றுப்ரஸித்திபெற்றவரும் எப்பொழுதுமிருப்பவரும் தமதுபிறப்புஇறப்புக்குக்காரணமானஇடமும் வேற்றுமையும் கிழத்தனமும் மரணமும் குறைவும் இல்லாதவரும் பூர்ணருமானதேவரும் மஹரிஷிகளால்அறியப்பட்டவருமாகிய அந்த மானஸரென்றுஒருவர் முதலிலிருந்தார். அந்தமானஸதேவர் முதலில் மஹத்தென்னும்பெயருள்ளவரை ஸ்ருஷ்டித்தார். பிறகு, ப்ரபுவான அந்தமஹானும் அஹங்காரத்தைப்படைத்தார். எல்லாப்பிராணிகளையும் தரிக்கும்திறமையுள்ள அஹங்காரமென்னும்ப்ரபுவானவர் பிரஸித்தமானஆகாயத்தை ஸ்ருஷ்டித்தார். ஆகாயத்திலிருந்துஜலமும் ஜலத்திலிருந்து அக்னியும் வாயுவும் உண்டாயின. பிறகு, அக்னிவாயுக்களின்சேர்க்கையால் பூமியானது உண்டாயிற்று. அந்தப்பூமியிலிருந்து தானாகவெளிவந்த (அஹங்காரமென்ற ப்ரபுவானவர்) ஒளிகள்சூழ்ந்த திவ்யமான தாமரைமலரை உண்டு பண்ணினார். அந்தத்தாமரைமலரிலிருந்து வேதஉருவமுள்ளவரும் அறிவுஐச்வரியமுதலியவற்றின் நிதிபோன்றவருமான பிரம்மதேவர் தோன்றினார். இவ்வைந்துபூதங்களும், அஹங்காரமென்றுப்ரஸித்திபெற்றவரும் [1] எல்லாஉலகங்களையும் தன்உருவமாகக்கொண்டவிராட்புருஷனையடைந்தவரும் பெரியதேஜஸுள்ளவருமான பிரம்மதேவருடைய உருவங்களேயாகும். மலைகள் அவருடையஎலும்புகளும், பூமியானது அவருடையமேதஸும் மாம்ஸமுமாகும். கடல்கள் அவருடையரத்தம், ஆகாயம் வயிறும், காற்றானது மூச்சும், அக்னியானது தேஜஸும், ஆறுகள் அவருடையநரம்புகளுமாகின்றன. ஸூர்யனும் சந்திரனும் அவருடையகண்களென்பது ப்ரஸித்தம். மேலேயுள்ளதேவலோகமானது அவருடையசிரஸும், பூமியானது பாதங்

1 'ஸ்தூலமான ஆகாசமுதலியவைகளைச் சரீரமாகக்கொண்டவரும் நாலு வகையானபிராணிகளைப்படைத்தவரும்' என்பது பழையஉரை.

களும், திக்குக்கள் (அவருக்குக்) கைகளுமாகின்றன. [1]அளவில்லாத உருவமுள்ள அவர், ஸித்திபெற்றவர்களாலும் அறியக்கூடாதவரென்பதில் ஸந்தேஹமில்லை. எல்லாப்பிராணிகளின்பிறப்பிற்கும் வேண்டி அஹங்காரத்தைப்படைத்தவர் எவரோ, எவரிடமிருந்து உலகமுண்டாயிற்றோ அவர் அனந்தரென்றுபிரஸித்திபெற்றவரும் எல்லாஉலகங்களையும் உருவமாகக்கொண்ட அஹங்காரத்திலிருப்பவரும் மனத்தைஜயியாதவர்களால் அறியக்கூடாதவருமான ஸ்ரீவிஷ்ணுபகவானாகிறார். நீ எதைக்கேட்டாயோ அஃது உனக்குச்சொல்லப்பட்டது' என்றுசொன்னார். பரத்வாஜர், 'இவ்வுலகில் ஆகாயத்திற்கும் திக்குக்களுக்கும் பூதலத்திற்கும் வாயுவுக்கும் அளவுகள்எவை? நான் பிரார்த்திக்கிறேன். நீர் என்ஸந்தேஹமறச் சொல்லவேண்டும்' என்று கேட்க, ப்ருகு சொல்லத்தொடங்கினார்.

'ஸித்தர்களாலும் சாரணர்களாலும் அடையப்பட்டதும் அழகுள்ளதும் பலஉலகங்களால் நிறைந்ததுமான இவ்வாகாயமானது அளவில்லாதது. இதன்முடிவானது அறியப்படுகிறதில்லை. ஸூர்யனுடைய ஒளிசெல்லும் இடத்திற்குமேலும் ஸூர்யனும்சந்திரனும் காணப்படாத இடத்திற்குக்கீழும் ஸூர்யனுடைய ஒளிபோன்ற ஒளியுள்ளவர்களும் அக்கினியின் தேஜஸுக்கொப்பான தேஜஸுள்ளவர்களும் தாமாகவேவிளங்குகிறவர்களுமான தேவர்களிருக்கிறார்கள். கௌரவத்தைக் கொடுப்பவனே! ப்ரஸித்தமான தேஜஸுள்ள அந்தத்தேவர்களும் செல்லக்கூடாததும் முடிவில்லாததுமாயிருப்பதால் ஆகாயத்தின்முடிவைக் கண்டவர்களில்லையென்று அறிந்துகொள். அளவிடமுடியாததான இவ்வாகாசமானது தாமேவிளங்குகிறவர்களும் நன்றுஜ்ஜ்வலிக்கிறவர்களுமான அந்தத்தேவர்களால் மேன்மேலும் ஆக்ரமிக்கப்பட்டிருக்கிறது. (அதுபோல்) பூமியின்முடிவில் கடல்களும் கடல்களின்முடிவில இருளும் இருளின்முடிவில்ஜலமும் ஜலத்திற்குப்பிறகு அக்கினியும்இருக்கின்றனவென்று கூறுகிறார்கள். பாதாளத்தின்கடைசியில ஜலமும் ஜலத்திற்குப்பிறகு ஸர்ப்பங்களுக்கதிபர்களும் அவருக்குப்பிறகும்திரும்பவும் ஆகாசமும் ஆகாயத்திற்குப் பிறகு திரும்பவும் ஜலமுமிருக்கின்றன. இவ்விதமாக ஆகாயத்திற்கும் ஜலத்திற்கும் அக்கினிக்கும் வாயுவுக்குமுள்ள அளவானது தேவர்களாலும் அறியமுடியாததாயிருக்கிறது. அக்னி வாயு ஜலம் பூதலம் இவைகளின் ரூபங்களும் ஆகாயம்போன்றவைகள்தாம். இவைகள், உண்மையை அறியாதகாரணத்தால் வேறாகத்தோன்று

[1] 'நிருபிக்கமுடியாதஉருவமுள்ளஅவர்' என்பது வேறுபாடம்.

கின்றன. மூவுலகமென்னும் கடலுக்கும் விதிப்படி அளவிருப்பது போலப் பலவிதமானசாஸ்திரங்களில் முனிவர்களும் கூறுகிறார்கள். காணமுடியாததாலும் அறியமுடியாததாலும் அளவு எவனால் சொல்லக்கூடும்? ஸித்தர்களும் தேவர்களும் செல்லத்தக்க ஆகாயமானது அளவுள்ளதாயிருக்குமாகில் அப்பொழுது (இவ்வாகாயத்திற்குக்காரணரும்) அனந்தரென்று பெயருள்ளவரும் அப்பெயருக்குச்சரியான பெரியஉருவமுள்ளவருமான மானஸபுருஷருக்கு ப்ரஸித்தமானஅனந்தரென்னும் பெயரானது பொருளறறதாகும். எப்பொழுது திவ்யமான அவ்வனந்தருடைய உருவமானது திரும்பவும் க்ஷயத்தையும் வளர்ச்சியையும் அடைகிறதோ அப்பொழுது வேறு எவன் அவ்வுருவத்தை அறியத்தக்கவனாவான்? எவன் அந்த அனந்தபுருஷர் போன்றவனோ அவனும் அதன் அளவை அறியத்தக்கவனல்லன். அந்தத் தாமரைமலரிலிருந்து உண்டானவரும் எல்லாமறிந்தவரும் சரீரமுள்ளவரும் ப்ரபுவும் ப்ரஜைகளுக்குப்பதியும் மிக்கஉத்தமரும் தர்மம்நிறைந்தவருமான பிரம்மாவானவர் முந்தினவராயிருந்தார்' என்று சொன்னார். பரத்வாஜர், 'ப்ரம்மாவானவர் தாமரைமலரிலிருந்துஉண்டானவராயிருப்பாரானால தாமரைமலரானது (அவருக்கும்) முந்தினதாகிறது. நீர் ப்ரம்மாவை முந்தினவராகக்கூறுகிறீர். இதில் எனக்கு ஸந்தேஹந்தான்' என்றுசொன்னார். ப்ருகு, 'இவ்வுலகில் மானஸபுருஷருடைய எந்தஉருவம் ப்ரம்மதேவத்தன்மையை அடைந்ததோ அவ்வுருவமிருக்கும் ஆஸனமுறையைக்கருதிப் பூமியானது தாமரைமலரென்று சொல்லப்படுகிறது. ஆகாயத்திற்கிளம்பி நிற்கும் மேருமலையானது அந்தப் பூமியென்னும் தாமரைமலரின் [1] கர்ணிகையாகும். உலகத்திற்கு ப்ரபுவான ப்ரம்மதேவர் அதன் நடுவிலிருந்துகொண்டு உலகங்களையும் மானஸர்களான தேவர்களையும் பலவிதமானபிராணிகளையும் ஸ்ருஷ்டிக்கிறார்' என்றுசொன்னார்.

---

## நூற்றெண்பத்தோராவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(ப்ருகுவானவர் பரத்வாஜருக்கு மேருமலையிலிருக்கும் பிரம்மதேவர் ஜலமுதலியவற்றைப் படைத்தமுறையைச் சொல்லியது.)

பரதவாஜர், 'மேருமலையின் அடியிலிருக்கும் அந்தப்பிரம்மதேவர் எவ்விதம் ப்ரஜைகளைஸ்ருஷ்டித்தார்? ப்ரச்னஞ்செய்யும் எனக்கு இதையெல்லாம் உள்ளபடி சொல்லவேண்டும்' என்றுகேட்டார்.

---

1 தாமரைப்பூவின் நடுவிலிருக்கும்காய்.

ப்ருகு, 'மானஸபுருஷரான அந்தப்ரம்மதேவர் முதலில் பிராணிகளின் படைப்பை மனத்தால் செய்தார். பிராணிகளைநன்ருகரக்ஷிக்கவேண்டி முதலில் ஜலமானது உண்டுபண்ணப்பட்டது. அந்தஜலமானது எல்லாப்பிராணிகளுக்கும் உயிராயிருக்கிறது. ப்ரஜைகள் அந்தஜலத்தால் வளர்ச்சிஅடைகின்றன. ப்ரஜைகள் அதனுல்விடப்பட்டவைகளாய் நாசமடைகின்றன. இவ்வுலகம்யாவும் அதனுல்சூழப்பட்டிருக்கின்றன. பூமியும் மலைகளும் மேகங்களும் உருவமுள்ளமற்றவைகளுமான யாவும் ஜலத்தாலுண்டானவையென்று தெரிந்துகொள்ளவேண்டும். ஜலமே அந்தஉருவங்களுள்ளதாக அசைவற்றுநிற்கின்றது' என்றுசொன்னுர். பரத்வாஜர், 'ஜலம் எப்படி உண்டாயிற்று? அக்நியும் வாயுவும் எப்படிஉண்டாயின? பூமியானது எவ்விதம் ஸ்ருஷ்டிக்கப்பட்டது? இவ்விஷயத்தில் எனக்கு ஸந்தேஹம் பெரிதாயிருக்கிறது' என்றுசொன்னுர். ப்ருகு சொல்லத்தொடங்கினுர்.

'ஓ! ப்ராம்மணா! முன்காலத்தில ஒருப்ரம்மகல்பத்தில் ப்ரம்மரிஷிகள் சேர்ந்தபொழுது மஹாத்மாக்களான அவர்களுக்கு உலகங்களின் உத்பத்தியைபபற்றி ஸந்தேகமுண்டாயிற்று. அந்த ப்ராம்மணர்கள் மௌனத்தைஅடைந்து அசைவற்றவர்களும் ஆகாரத்தைவிட்டவர்களும் காற்றைஉண்பவர்களுமாக நூறுதேவவருஷம் ஞானநிஷ்டையை அடைந்திருந்தார்கள். வேதரூபமானவாக்கானது அவர்களனைவர்களின்செவியையும் அடைந்தது. அப்பொழுது ஆகாயத்திலிருந்து திவ்யமானஒருவாக்கு உண்டாயிற்று. முன்காலத்தில் ஆகாசமானது அஸ்தமயத்தை அடைந்ததும், சப்தமில்லாததும், (அசைவற்ற) மலைபோன்றதும், சந்திரனும் ஸூர்யனும் வாயுவும் நாசமடைந்ததுமாகித் தூக்கமடைந்ததுபோலிருந்தது. அவ்விதஆகாசத்திலிருந்து இருளிலிருந்து வேறேர்இருளுண்டானதுபோல ஜலமுண்டாயிற்று. அந்தஜலம்விழுந்ததால வாயுஉண்டாயிற்று. இவ்வுலகில் ஓட்டையில்லாதபாத்திரமானது சப்தமில்லாததாய்க்காணப்படும். அப்பாத்திரம் ஜலத்தால நிறைக்கப்படும்பொழுது அதிலுள்ள வாயுவானது (கிளம்பிச்) சப்தத்தை எவ்விதமுண்டுபண்ணுமோ அதுபோல இடைவெளியில்லாமல ஆகாயத்தின்நடுவானது ஜலத்தால தகையப்படும்பொழுது கடலின்இடத்தைப்பிளந்துகொண்டு சப்தத்துடன் வாயுவானது கிளம்பிறது. கடலின்மோதலாலுண்டான அக்காற்றுனது வீசிக்கொண்டிருக்கிறது. அந்துஆகாயமென்னும் இடத்தை அடைந்து ஓய்வடையாமலிருக்கிறது. அந்தக்காற்றும் ஜலமும் ஒன்ருேடொன்றுஉரையும்பொழுது அதிலிருந்து ஜ்வலிக்கும்

தேஜஸுள்ளதும் அதிகபலமுள்ளதும் நீண்டஜ்வாலைகளுள்ளது மான அக்னியானது ஆகாயத்தை இருளில்லாததாகச்செய்துகொண்டு உண்டாயிற்று. அக்னியானது காற்றுடன்சேர்ந்துகொண்டு ஆகாயத்திலிருந்து ஜலத்தைக் [1]கெட்டியாகச்செய்கிறது. அக்னிவாயுக்களின்சேர்க்கையால் அந்தஜலமானது கெட்டியாயிருக்குந்தன்மையைஅடைகிறது. அந்தஆகாயத்திலிருந்துவிழுந்த ஜலத்திலுள்ள ஸ்நேஹமென்னும் குணமானது கெட்டியாயிருக்குந்தன்மையை அடைந்து பூமித்தன்மையைஅடைந்திருக்கிறது. பூமியானது ரஸங்களுக்கும் எல்லாவிதமானமணங்களுக்கும் ஸ்நேஹங்களுக்கும் அட்படியே பிராணிகளுக்கும் காரணமென்றுதெரிந்துகொள்ளவேண்டும். இந்தப்பூமியில் யாவுமுண்டாகின்றன' என்றுசொன்னார்.

---

## நூற்றெண்பத்திரண்டாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(மரமுதலிய ஸ்தாவரங்களும் ஐந்துபூதங்களாலும் நிறைந்தனவென்றும் அவைகளுக்கும் ஜீவன்முதலியவை உண்டென்றும் சொல்லியது.)

பரத்வாஜர், 'இவ்வுலகங்கள் எந்தப்பூதங்களால் வ்யாபிக்கப்பட்டிருக்கின்றனவோ, எவைகள் மஹாபூதங்களென்று பெயருள்ளவைகளோ, எவைகளை முன்காலத்தில் ப்ரம்மதேவர் உண்டுபண்ணினரோ அந்தப்பூதங்கள் ஐந்தென்றுசொல்லப்படுகின்றன. பெரியபுத்தியுள்ள அந்தப்ரம்மதேவர் பல்லாயிரம் பிராணிகளைப்படைத்திருக்கும்பொழுது ஐந்தேபூதங்களென்பது எவ்விதம் பொருத்தமுள்ளதாகும்?' என்றுகேட்டார். ப்ருகு, 'மஹத்தென்னும்பதம் கணக்கில்லாதவைகளைச் சொல்லும். பூதமென்றபதத்திற்குப் பிறப்படைந்தவைகளென்று பொருளாகும். அக்காரணத்தால் மஹாபூதமென்ற இப்பதம் அவைகளுக்குப்பொருத்தமுள்ளதாகும். பிராணிகளின் சரீரம் ஐந்துபூதங்களாலுண்டுபண்ணப்பட்டதாகிறது. இச்சரீரத்திலுள்ள சேஷ்டையானது வாயுவும், இடைவெளியானது ஆகாயமும், சூடானது அக்னியும், த்ரவமானது ஜலமும், கடினமானது பூமியுமாகின்றன. இவ்விதம் ஸ்தாவரஜங்கமங்களெல்லாம் இவ்வைந்துபூதங்களுடன்கூடியவையாயிருக்கின்றன. இந்த்ரியங்களென்னும் பெயர்வாய்ந்தவைகளான செவியும் மூக்கும் நாக்கும் தோலும் கண்ணும் ஐந்து

---

1 'ஸமுத்க்ஷிப்தே' என்பது மூலம்.

பூதங்களைச்சேர்ந்தவைகள்தாம்' என்றுசொன்னார். பரத்வாஜர், 'ஸ்தாவரங்களும் ஜங்கமங்களும் ஐந்துபூதங்களுடன்கூடியவைக ளென்றால் ஸ்தாவரங்களின்சரீரத்தில் ஐந்துபூதங்கள் காணப்படவில் லையே? உண்மையில் சூடும் சேஷ்டையுமில்லாதவைகளும் கடினமு மான மரங்களின்சரீரத்தில் ஐந்துபூதங்களும் காணப்படவில்லையே? அவைகள் கேட்பதில்லை; பார்க்கிறதுமில்லை; மணத்தையும் ரஸத்தை யும் அறிகிறதுமில்லை; ஸ்பர்சத்தையும் அறிகிறதில்லை. ஆகையால, அவைகள் எவ்விதம் ஐந்துபூதங்களுடனும் கூடியவைகளாகும்? த்ர வமும் சூடும் பூமியும் வாயுவுமில்லாததாலும், ஆகாயம் அவைகளில் காணப்படாததாலும் மரங்களுக்குப் பஞ்சபூதங்களின் சேர்க்கையில் லையே?' என்றுகேட்டார்.

ப்ருகு சொல்லத்தொடங்கினார். 'கெட்டியாயிருந்தாலும் மரங் களுக்கும் ஆகாயமிருக்கிறது; ஸந்தேஹமில்லை. (அக்காரணம்பற் றியே) அம்மரங்களுக்கு எப்பொழுதும் பூவுங் கனியும் வெளிப்படு வது பொருத்தமுள்ளதாயிருக்கிறது. உஷ்ணத்தால் நிறமும்வாடு கிறது. பட்டையும் கனியும் பூவும் வாடுகிறதும் உதிர்கிறதுமாயிருக் கின்றன. ஆகையால, இம்மரங்களுக்கு ஸ்பர்சமிருக்கிறது. காற்று, அக்கி, இடி இவைகளின் அதிர்ச்சிகளால் கனியும் பூவும்உதிர்கின்றன. ஒலியானது செவியாலன்றோ க்ரஹிக்கப்படும். ஆகையால மரங்கள் செவியுள்ளவைகளாயிருக்கின்றன. கொடியானது மரத்தைச்சுற்றிக் கொள்ளுகிறது; எல்லாவிடத்திலும் செல்லுகிறது. கண்ணில்லாத வனுக்கு வழிகாணப்படுகிறதில்லையே! ஆகையால, மரங்கள் கண் ணுள்ளவைகளாயிருக்கின்றன. அவ்விதம் சுத்தமும் அசுத்தமுமான பலவிதமணங்களாலும் தூபங்களாலும் மரங்கள் நோயில்லாதவைக ளும் பூக்களுள்ளவைகளுமாகின்றன. ஆகையால, மரங்கள் மூக் குள்ளவைகளாயிருக்கின்றன. வேர்களால தண்ணீரைக்குடிப்பதா லும் வ்யாதிகள்காணப்படுவதாலும் வ்யாதிகளுக்குச் சிகித்சையிரு ப்பதாலும் மரங்களுக்கு நாவிருக்கிறது. மனிதன் தாமரைத்தண்டை வாயில்வைத்து நீரை மேலிழுப்பதுபோல மரமானது காற்றுடன் கூடியதாகி வேர்களால நீரைக்குடிக்கிறது. ஸுகதுக்கங்களை அறிவ தாலும் வெட்டப்பட்டது தளிர்ப்பதாலும் மரங்களுக்குள் ஜீவனை அறிகிறேன். அவைகளுக்கு அறிவில்லையென்பதில்லை. ஆத்மாத் தால் குடிக்கப்படும் அந்தநீரை அக்காற்றும் அக்னியும் ஜீர்ணமாகும்படி செய்கின்றன. ஆகாரம் ஜீர்ணமாகுங்காரணத்தால மரங்களுக்கு ஸ்நேஹமாகும் வளர்ச்சியுமுண்டாகின்றன. ஜங்கமங்கள்யாவற்றிற்கும்

சரீரத்தில் ஐந்துபூதங்களில் ஒவ்வொன்றும் வெவ்வேருயிருக்கின்றன. அவைகளால், சரீரம் நடைபெறுகிறது. இந்தச்சரீரத்திலுள்ள தோல் மாம்ஸம் எலும்புகள் மஜ்ஜை நரம்பு என்றஇவ்வைந்தும் பூமியின்உருவமாகும். தேகமுள்ளவனுக்குள்ளதேஜஸும் கோபமும் கண்ணும் சூடும் ஆஹாரத்தை ஜீர்ணமாகச்செய்யும் அக்நியுமாகிய ஐந்தும் அக்னியின் உருவங்களாகும். செவி, மூக்கின்த்வாரம், வாய், ஹ்ருதயம், குடல் என்ற சரீரத்திலுள்ள இவ்வைந்துபாகங்களும் பிராணிகளுக்கு ஆகாயத்திலிருந்துஉண்டாகின்றன. ஜலங்கள் பிராணிகளின்சரீரத்தில் எப்பொழுதும் ச்லேஷ்மம், பித்தம், வேர்வை, வஸை, உதிரம்என்னும் ஐந்துவிதங்களாயிருக்கின்றன. பிராணியானது ப்ராணனென்னும்வாயுவால், அசைவுள்ளதாகிறது; வ்யானனென்னும்வாயுவால் பலமாகச்செய்யும் வேலையைச் செய்கிறது; அபானனென்னும் வாயுவால் கீழாகச்செல்லுகிறது ; ஸமானனென்னும் வாயுவால் ஸமமாயிருக்கிறது;உதானனென்னும்வாயுவால் மூச்சுவிடுகிறது. மார்புமுதலிய (வாக்கின்) இடங்களின் வேற்றுமையால் பேசுகிறது. இவ்விதம் ஐந்துவிதமான இந்தவாயுக்கள் இவ்வுலகில் பிராணியைச்சேஷ்டையுள்ளனவாகச்செய்கின்றன.சரீரியானது பூமிரூபமான மூக்கினால் மணமென்னுங் குணங்களை அறிகிறது; ஜலரூபமான்நாவால ரஸத்தை அறிகிறது;ஜ்யோதிருபமானகண்ணால் ரூபங்களைப்பார்க்கிறது; வாயுரூபமானத்வக்கால் ஸ்பர்சத்தை அறிகிறது. ப்ராணியானது ஆகாயரூபமானசெவியால் சப்தத்தைக்கேட்கிறது. கந்தம், ஸ்பர்சம், ரஸம், ரூபம், சப்தம் (இவைவைந்தும்) இவ்வைந்து பூதங்களின் குணங்களென்றுசொல்லப்படுகின்றன. மணமென்றஅந்தக்குணத்தின்விரிவாகச்சொல்லப்படும்பேதங்களைச்சொல்லுகிறேன். விரும்பப்படும்மணம், விரும்பத்தகாததுாற்றம்,இனிப்புள்ளது,உறைப்புள்ளது, மற்றவைகளை அடக்குந்திறமையுள்ளது, பலவகைவாஸனைச்சேர்க்கையுள்ளது, ஸ்நேஹகுணத்துடன்கூடியது, காரமுள்ளது, சுத்தமாயிருப்பது என்று இப்படி ஒன்பதுவிதமாகப் பூமியிலுள்ள மணமென்றகுணத்தின் வேற்றுமையைத் தெரிந்துகொள்ளவேண்டும். கண்களால் (பூமியிலுள்ள) ரூபத்தைக்காண்கிருன். வாயுரூபமான 'த்வக்' என்னும்இந்த்ரியத்தால் ஸ்பர்சத்தை அறிகிருன். சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம்என்றகுணங்களும் (பூமியிலுள்ளனவாகக்) கூறப்படுகின்றன. ரஸத்தின்அறிவையும் உபதேசிக்கிறேன். அதைச் சொல்லும்என்னிடமிருந்து கேள். ரஸமானது பிரஸித்தமானபுத்தியுள்ள பண்டிதர்களாலபலவிதமாகக்கூறப்படுகிறது. ஜலத்

தின் உருவமானரஸமானது இனிப்பு, உப்பு, கசப்பு, துவர்ப்பு, புளிப்பு, உறைப்புஎன்று இவ்விதம் ஆறுவிதப்பிரிவுள்ளதாகச் சொல்லப்படுகிறது. அக்னியானது சப்தம், ஸ்பர்சம், ரூபம்என்ற மூன்று குணங்களுள்ளதாகச் சொல்லப்படுகிறது. அக்னிஉருவமான கண்ணானது ரூபங்களைப்பார்க்கிறது. ரூபமும் பலவிதமாகச்சொல்லப்படுகிறது. அக்னியின்குணமான ரூபமானது குட்டை, நீளம், பருமை, சதுரம், சிறிது, உருண்டை வடிவமுள்ளது, வெளுப்பு, கறுப்பு, சிவப்பு, மஞ்சள், [1] நீலச்சிவப்பு, கெட்டியாயிருப்பது, பிசுக்குள்ளது, மெழுக்குள்ளது, சொரசொரப்புள்ளது, மெதுவாயுங் கெட்டியாயுமிருப்பதுஎன்றுஇவ்விதம் [2]பதினறுவிதமானவேற்றுமையுள்ளதாகக்கூறப்படுகிறது. வாயுவானது, சப்தம் ஸ்பர்சம்என்ற இரண்டுகுணமுள்ளதாக அறியத்தக்கது. அவைகளில், ஸ்பர்சகுணமானது வாயுவுக்கு முக்கியமாகும். ஸ்பர்சமும் பலவிதமாகச் சொல்லப்படுகிறது. சீதம், உஷ்ணம், ஸுகம், துக்கம், [3] ஸ்நேஹமுள்ளது, ஸ்நேஹமில்லாதது, [4] கரடுமுரடு, மிருதுவானது, தீக்ஷ்ணமானது, லகுவானது, [5]மிகவுங் கனமானதுஎன்று இவ்விதம் வாயுவின்குணமான ஸ்பர்சமானது பன்னிரண்டுவகையுள்ளதாகச் சொல்லப்படுகிறது. அவ்வைந்துபூதங்களில் ஆகாயமானது ஒரேகுணமுள்ளதாகும். அக்குணமானது சப்தமென்றேசொல்லப்படுகிறது. அந்தச்சப்தத்திற்குள்ள பலவகைப்பட்டவிரிவைச் சொல்லுகிறேன். ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், தைவதம், பஞ்சமம், நிஷாதம் என்றுஆகாசத்திலிருந்துண்டாகும்சப்தமென்றகுணம் ஏழுவகையுள்ளதாகச் சொல்லப்படுகிறது. சப்தமானது [6] எல்லாவிடத்திலுமிருந்தாலும் பேரிமுதலிய வாத்தியங்களில் மூன்றுஸ்வரங்களுடன்கூடியதாக வெளிப்படுகிறது. மிருதங்கம், பேரி, சங்கம், மேகம், ரதம், (மற்ற) ப்ராணி, பிராணியல்லாதது இவைகளினுடையதாகக் கேட்கப்படும் சப்தமும் ஷட்ஜமுதலிய இந்தஸலாஸ்வரங்களையும் சேர்ந்ததென்றே சொல்லப்படுகிறது. ஆகாயத்திலிருந்துண்டான சப்தமானது இவ்விதம் பலவித உருவமுள்ளதாகிறது. ஆகாயத்திலிருந்து உண்டாகும் சப்தத்தை

1 மயில்தோகையின் நிறம்போன்றது. 2 வேறுபாடுகொள்ளப்பட்டது.

3 நெய்ப்புள்ளது. 4 மென்மையற்றது.

5 இங்கு 'குருதர:' என்பதுமூலம். இதற்கு 'மிகவும் குருவானது' என்பதுபொருள். 'குருதர:' என்றதால், குருவானதுஎன்று ஒன்றுஉண்டென்றும், ஆகையால், வாயுவின் குணம் பன்னிரண்டென்றும் பலர்உரைகூறுகிறது.

6 'வியாபகமாய்' என்பது வேறுபாடம்.

வெளியிலுள்ள காற்றின் குணமான ஸ்பர்சமானது தடைசெய்யாமலி ருக்குமாகில் மனிதன் அறிவான்; வாயுவின்ஸ்பர்சங்கள் சப்தம்தடைப் படும்படி விரோதமாயிருக்குமாகில் அதைஅறியமாட்டான். சரீரத் திறகுக்காரணமான அந்த ஐந்துபூதங்களும் எப்பொழுதும் அந்த ஐந்துபூதங்களாலுமே வ்ருத்தியடைகின்றனவாகும். ஜலமும் அக்னி யும் காற்றும் எப்பொழுதும் பிராணிகளிடம் விழித்துக்கொண்டிருக் கின்றன. பிராணன்களே வ்யாபித்துக்கொண்டு இச்சரீரத்திலிருக்கும் இந்தப்பூதங்கள் சரீரத்திறகுமூலமாகின்றன' என்றுசொன்னார்.

---

## நூற்றெண்பத்துமூன்றாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(சரீரத்திலுள்ள ப்ராணன்முதலியவற்றின் காரியவிசேஷங் களைச் சொல்லியது.)

பரத்வாஜர், 'சரீரத்திலுள்ள [1] அக்னியானது பார்த்திவமான சரீரத்தைஅடைந்து எவ்விதமிருக்கிறது? வாயுவானது சரீரத்தில் வெவ்வேறான இடங்களிலிருந்துகொண்டு சரீரத்தை எவ்விதம்நடத் துகிறது?' என்றுகேட்க, ப்ருகு சொல்லத்தொடங்கினார்.

'தோஷமில்லாத ப்ராம்மண! பலமுள்ளவாயுவானது பிராணி களின் சரீரங்களை எவ்விதம்நடைபெறச்செய்கிறதோ அவ்விதம்வாயு வின்கதியையும் நான் உனக்குச் சொல்லுகிறேன். சரீரத்தைரக்ஷித்து வரும் அக்னியானது [2] சிரஸை அடைந்திருக்கிறது. பிராணவாயுவா னது சிரஸிலும் அக்னியிலுமிருந்துகொண்டு தன்வேலையைச்செய் கிறது. அந்தப்ராணனானது பிராணியும் எல்லாப்பிராணிகளின் ஆத் மாவான ஸநாதனபுருஷனுமாயிருக்கிறது. அந்தப்பிராணன் மனமும் புத்தியும் அஹங்காரமும் பூதங்களும் மறறவிஷயங்களுமாயிருக்கி றது. இவ்விதம் இவ்வுலகிலுள்ளபிராணிகளெல்லாம் பிராணவாயுவால் பரிபாலிக்கப்படுகின்றன. அந்தவாயுவானதுஸமானரூபியாய்க் [3]கோஷ் டத்திலிருந்துகொண்டு ஸமானனுக்குரிய வேலையைச்செய்துகொண் டிருக்கிறது. மூத்ராசயத்தின் அடியையும் மலாசயத்தையும் அக் னியையும் அடைந்துகொண்டிருக்கும் அபானவாயுவானது மூத்ர

---

1 இங்கு, அக்னி என்பதற்கு 'ஜீவாத்மா' என்பது பழையஉரை.

2 இங்கு, 'சிரஸ' என்றால 'பரமாத்மா' என்பது பழையஉரை.

3 குடல; அதாவது, இங்கு சரீரத்தின் மத்யபாகம்.

ரத்தையும் மலத்தையும் வெளியிற்செல்லும்படி செய்துகொண்டிருக்கிறது. சரீரசாஸ்திரத்தில் ஸமர்த்தர்களான ஜனங்கள், முயற்சி தொழில் பலமென்றமூன்றுகாரியங்களிலும் ஒன்றாயிருப்பது எதுவோ அது உதானவாயுவென்று உபதேசிக்கிறார்கள். அதுபோல மனிதர்களின்சரீரங்களிலுள்ள எல்லாஸந்திகளிலுமிருக்கும் வாயுவானது வ்யானனென்று சொல்லப்படுகிறது. த்வக்குமுதலிய ஏழுதாதுக்களிலும் பரவியிருக்கும் அக்நியானது [1]ஸமானவாயுவால் ஏவப்பட்டு அன்னரஸங்களையும் [2]ஏழுதாதுக்களையும் [3]தோஷங்களையும் பரிணமிக்கச்செய்துகொண்டிருக்கிறது. பிராணவாயுவுக்கும்அபானவாயுவுக்கும்நடுவிலுள்ள இடத்தைஅடைந்து அவ்விரண்டுவாயுக்களுடனும் கூடிய அக்நியானது ஆகாரத்தை நன்றாகப் பாகஞ்செய்கிறது. முக முதல் குதஸ்தானம் [4]வரையிலுள்ள பிராணன்செல்லும் மார்க்கமானது கடைசியில் குதமென்றுபெயருள்ளதாகிறது. இது (பிராணன்செல்லத்தக்க) பெரியவழியாகும். அதிலிருந்து பிராணிகளுக்குச் சரீரத்திலுள்ளபிராணன் செல்லத்தக்கவழிகளான எல்லா நாடிகளும் உண்டாகின்றன. பிராணவாயுவின்சேர்க்கையிருப்பதால் (எல்லாவிடத்திலும் அக்நியின்) ஸம்பந்தமுண்டாகிறது. சூடென்பது எதுவோ அஃது அக்நியென்று தெரிந்துகொள்ளவேண்டும். அந்த அக்நியானது பிராணிகளின் ஆகாரத்தைப் பாகஞ்செய்கிறது. பிராணனானது அக்நியின்வேகத்தால் செல்லத்தக்கதிறமையுள்ளதாகிறது. அது குதஸ்தானத்தின்கடைசியில் தடைப்பட்டுத் திரும்புகிறது. அந்தப்பிராணனானது உயரவந்து திரும்பவும் அக்நியைப்பரவச்செய்கிறது. நாபியின்கீழ்ப்பாகம் [5]பக்வாசயம் என்றும் அதன் மேல்பாகம் [6] ஆமாசயமென்றும் சொல்லப்படும் சரீரத்திலுள்ளஎல்லாப்பிராணன்

---

1 வேறுபாடம்.

2 ஏழுதாதுக்களாவன:—'த்வக், உதிரம், மாம்ஸம், மேதஸ், எலும்பு, மஜ்ஜை, சுக்லம்' என்பவைகளாகும்.

3 வாதம், பித்தம், கபமென்ற மூன்றுமாம். ஜாடராக்னியானது இவ்வேழுதாதுக்களிலுமிருக்கிறது. அவைகளில் ஒவ்வொன்றையும் பாகஞ்செய்து அதிலதிலுள்ளமலத்தையும் ஸாரபாகத்தையும்பிரித்துச் சரீரத்தைப் பரிபாலிக்கிறது. அவைகளில 'த்வக்' என்னும்முதல்தாதுவில் உதிரமானது ஸாரமாகவும் மலமானது கண்ணிலுள்ளமலமாகவும் வேறுபடுகின்றன. இப்படியே பின்னுள்ளதாதுக்கள் முதலிலுள்ளதாதுக்களின் ஸாரமாகும். உதிரத்தின் மலம்கபமும், மாம்ஸத்தின்மலம்பித்தமும், மேதஸின்மலம்வேர்வையும், எலும்பின்மலம்மயிரும், நகமும், மஜ்ஜையின் மலம் ஸ்லேஷ்மமும் ஆகும். இதன் விவரம் சரகஸம்ஹிதை சிகித்ஸாஸ்தானம், பத்தொன்பதாவது அத்தியாயத்தில் தெளிவாகக் கூறப்படுகிறது.

4 வேறுபாடம்.

5 பாகமான ஆகாரமிருக்கும் இடம். 6 பாகமாகாத ஆகாரமிருக்குமிடம்.

களும் நாபியின்நடுவில் இடமுள்ளவைகளாயிருக்கின்றன. ஹ்ருதயத்திலிருந்து மேலுங் கீழும் குறுக்காகவும் வெளிப்படும்நாடிகள்யாவும் [1]பத்துவிதமான ப்ராணவாயுக்களால் ஏவப்பட்டு ஆகாரத்தின் ஸாரங்களை அந்தஅந்தஇடத்தில் சேர்ப்பிக்கின்றன. [2]இது யோகங்களுக்குரியவழியாகிறது. ச்ரமத்தை ஜயித்தவர்களும் [3]ஸமபுத்தியுள்ளவர்களுமான எந்தத்தீரர்கள் தலையில்செல்லும்ஸுஷும்னைஎன்ற நாடியில் மனத்தைச்செலுத்தினார்களோ அவர்கள் இந்தவழியாக ப்ரம்மபதத்தைஅடைகிறார்கள். இவ்விதம் பிராணிகளுடைய எல்லாவிதமானப்ராணவாயுவிலும் அபானவாயுவிலும் அக்நியானது வைக்கப்பட்டிருக்கிறது. அந்தஅக்நியானது ஸ்தாலியில்வைக்கப்பட்டது போல அந்தப்ராணவாயுவுள்ளவிடத்தில் எப்பொழுதுமிருக்கிறது' என்றுசொன்னார்.



## நாற்றெண்பத்துநான்காவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

('சரீரத்தைக்காட்டிலும் வேறாக ஜீவனேது' என்று பாரத்வாஜர் ஆக்ஷேபித்தது.)

பாரத்வாஜர் கேட்கத்தொடங்கினார். 'ப்ராணவாயுவானது ஜீவிக்கச்செய்வதும் அந்தப்ராணவாயுவே சேஷ்டைகளைச்செய்வதும் மூச்சுவிடுவதும் பேசுவதுமாயிருக்குமாகில் அப்பொழுது ஜீவனென்பது பயனற்றதாகும். உஷ்ணமாயிருப்பதென்பது அக்நியின்உருவமாயும் அவ்வக்நியே பாகஞ்செய்வதாயும் அக்நியானது ஆகாரத்தை ஜீர்ணஞ்செய்வதாயும் இருக்குமாகில் அப்பொழுது ஜீவன் பயனற்றதாகும். மரணத்தைஅடைகிறபிராணியின்ஜீவனானது காணப்படுகிறதேயில்லை. (அச்சமயத்தில்) வாயுமட்டில் இச்சரீரத்தைவிடுகிறது. சூடென்பது நாசமடைகிறது. அன்றியும் ஜீவனானது பிராணவாயுவைவிட வேறாயிருந்துகொண்டு பிராணனை முக்கியமாகக்கொண்டதா? அல்லது வேறுமையில்லாமல் பிராணவாயுவுடன் சேர்க்கைஅடைந்ததா? வேறாயிருக்குமாகில் சுழல்காற்றுங் காணப்படுவதுபோலப் பிராணவாயுக்கூட்டங்களுடன் சேர்ந்துசெல்லுகிறதாகக்காணப்படும்.

1 'ப்ராண, அபான, வ்யான, உதான, ஸமான, நாக, கூர்ம, க்ருகர, தேவதத்த, தனஞ்சய' என்பன.

2 'ஏகம்முதலை (சுஷும்னையிது) ... வழியாகும்' என்பது பழையபாடம்.

3 வேறுபாடம்.

ஜீவன் வேற்றுமையின்றிச் சேர்க்கையடைந்திருக்கின் பிராணவாயு நசிக்கும்பொழுது அதனுடன்கூட ஜீவனும் நாசமடையும். கிணற்று ஜலத்தில் வேறுஜலமும் அக்னியில்தீபமும் சேர்க்கப்படுமாகில் அவ்விரண்டும் அவற்றுடன் நசிப்பதுபோல ஜீவனானது ப்ராணவாயு அக்னி இவைகளினுருவமுள்ளதானால் அவைகளுடன் நசிக்கும். அவைகளை விட வேறாயிருந்தால் கடலில்போட்டதண்ணீர்க்குடம் அப்பெருங் கடல்விலகியபின் வேறாகக்காணப்படுவதுபோலப் பிராணவாயுவை விட வேறாகக்காணப்படும். ஐந்துபூதங்களுக்கும்பொதுவான இச் சரீரத்தில் ஜீவனென்பது எது? அவ்வைந்துபூதங்களுள் ஒன்றில்லா விட்டால் நான்குக்குச் சேர்க்கையிருப்பதில்லை. [1]இருப்பிடமில்லா விட்டால ஜலம்நாசமடைகிறது. மூச்சை அடக்குவதால் வாயுநாச மடைகிறது. [2]குடல்பிளந்துபோவதால் ஆகாசம்நாசமடைகிறது. ஆகாரமில்லாததால் அக்னியானது நாசமடைகிறது. நோய்களாலும் உயிர்போவதாலும் பூமி சிதறிப்போகிறது. (இவ்விதம்) இவ்வைந்து பூதங்களில் ஏதாவதொன்று நாசமடையுமானால் சரீரம் மரணத்தை அடைகிறது. அச்சரீரம் மரணத்தைஅடைந்தால ஜீவனானது எதைத தொடர்ந்துஓடுகிறது? ஜீவன் எதை அறிகிறது? எதைக் கேட் கிறது? எதைப் பேசுகிறது? ஒருமனிதன், 'இந்தப்பசுவானது பர லோகததிலிருக்குமென்னைத் துன்பங்களிலிருந்துமீட்டுவைக்கப்போ கிறது' என்றுகருதிய பசுவைத தானஞ்செய்துவிட்டு மரிக்கிறானே; அந்தப்பசுவானது எவனைமீட்டுவைக்கப்போகிறது? பசுவும் அதைப பெறறுக்கொண்டவனும் கொடுததவனும் இவவுலகிலேயே ஸமமாக நாசமடைகிறார்களே; அப்பொழுது அவர்களுக்கு எங்கிருந்து சேர்க்கையுண்டாகும்? பறவைகளாலபுஜிக்கப்பட்டவனுக்கும் மலையின் உச்சியிலிருந்து விழுந்தவனுக்கும் தீயாலஎரிக்கப்பட்டவனுக்கும் திரும்பவும் எதிலிருந்துஜீவனமுண்டாகும்? வெட்டப்பட்டமரத்தின் வேரானது முளையாமலபோனால அந்தமரததிலுண்டானவிதைகள் முளைக்கின்றன. மரிததவன் எங்கே திரும்பவும் வருகிறான்? (ஆகை யால,) விதைமட்டும் முன்காலததில் உண்டுபண்ணப்பட்டிருக்கிறது. இந்தவிதையானது சரீரமாய்பபரிணமிக்கிறது. மரிததவர்களனைவர் களும் நாசமடைகிறார்கள்; ஒருவிதையிலிருந்துண்டான வேறொரு விதைத முளைத்துக்கொண்டிருக்கிறது' என்றுசொன்னார்.

---

1 'ஆகாரமில்லாவிட்டால்' என்பதுவேறுபாடம்.

2 'வாயுமுதலியவற்றுடன் கூடியிருக்கப்படுவதால்' என்பது பழைய உரை.

## நூற்றெண்பத்தைந்தாவது அத்தியாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



(ப்ருகு, சரீரத்தைக்காட்டிலும் ஜீவன் வேறாக இருக்கிறதென்று விளக்கியது.)

ப்ருகு, 'ஜீவர்களுக்கும் தானத்திற்கும் செய்தகர்மத்திற்கும் நாசமில்லை. ஜீவன் வேறுசரீரத்தை அடைகிறான்; இச்சரீரமட்டும் நாசமடைகிறது. விறகுகள்எரிக்கப்பட்டபின் அக்கியானது நாசமடையாமலிருப்பதுபோலச் சரீரம்நாசமடையும்பொழுது அச்சரீத்தை அடைந்திருக்கும் ஜீவன் நாசமடைகிறதில்லை' என்றுசொன்னார்.

பரத்வாஜர், 'அக்கிக்குநாசமிலலாததுபோல [1]அந்தஜீவனுக்கு நாசமில்லாதிருந்தால் விறகுஉபயோகமடைந்தமுடிவில அந்த அக்கினி காணப்படுகிறதில்லையே; வழியும் ப்ரமாணமும் இருப்பிடமும் காணப்படாததும் விறகில்லாமல் அவிந்துபோனதுமான அந்தஅக்னியை நாசமடைந்ததென்றே நானறிகிறேன்' என்றுசொல்ல, பிருகு சொல்லத்தொடங்கினார்.

'ஜீவனுக்கும் விறகிலிருந்த அக்னிக்கும் எப்பொழுதும் நாசங் கிடையாது. விறகுகள் உபயோகமடைந்த பிறகும் அக்னியானது இருந்துகொண்டே காணப்படாமலிருக்கிறது. வேறுஇடமிலலாத அந்தஅக்னி ஆகாயத்தை அடைந்துகொண்டிருக்குங்காரணத்தால் அறியக்கூடாததாயிருக்கிறது. அதுபோலச் சரீரத்தைவிட்டபின் ஜீவன் ஆகாயத்தை அடைந்ததாயிருக்கிறது. அது ஸூக்ஷ்மமாயிருப்பதால் விறகில்லாதஅக்னிபோல அறியப்படுகிறதில்லை. அக்னிபோல் ப்ரகாசத்தன்மையுள்ளதாக இந்திரியங்களைத் தரிப்பது எதுவோ அது ஜீவனென்று தெரிந்துகொள்ளவேண்டும். ப்ராண வாயுவினால் தரிக்கப்படும் அக்னியானது அந்தவாயு நாசமடைவதால் நாசமடையும். சரீரத்திலுள்ள அந்த அக்னியானது நாசமடைந்தவுடன் அறிவறறஅச்சரீரமானது கீழேவிழுந்து பூமியுருவத்தையடையும். ஜங்கமங்களும் ஸ்தாவரங்களுமான எல்லாப்ராணிகளின் சரீரத்திற்கும் பூமியன்றோ இடமாயிருக்கிறது? காற்றானது ஆகாயத்தைத் தொடர்ந்துசெல்லுகிறது. அக்கினியானது அந்தக்காற்றைத் தொடர்ந்துசெல்லுகிறது. அந்தஆகாயம் காற்று அக்னிமூன்றும் ஒன்றாயிருக்குந்தன்மையுண்டு. ஜலம்பூமியென்ற இரண்டும் பூமியில்

[1] வேறுபாடம்.

நிலைபெற்றிருக்கின்றன. ஆகாயமுள்ளவிடத்தில் காற்றும் காற்றுள்ள விடத்தில் அக்னியுமிருக்கின்றன. அவை வடிவமில்லாதவைக ளென்று தெரிந்துகொள்ளவேண்டும். ஜலமும் பூமியும் மூர்த்தியுள் ளவைகளாகும்' என்றுசொன்னார்.

பரத்வாஜர் சொல்லத்தொடங்கினார். 'பாபமற்றவரே! சரீர மாகப்பரிணமித்த உருவங்களில் பூமியும் ஜலமும் அக்னியும் காற் றும் ஆகாயமும்போல ஜீவனும்இருக்குமாகில அஃது அந்தச்சரீர த்தில் என்னலக்ஷணமுள்ளதாயிருக்கிறது? இதை எனக்கு உபதே சிக்கவேண்டும். ஐந்துபூதங்களின் உருவமுமுள்ளதும் ஐந்துவிஷயங் களிலும் ஆசையுள்ளதும் அவ்விஷயங்களை அறிவிக்கத்தக்க ஐந்து பொறிகளுடன்கூடியதுமான பிராணிகளின்சரீரத்தில ஜீவன் எவ் விதமாயிருக்கிறதென்பதைத் தெரிந்துகொள்ளவிரும்புகிறேன். உதிர மாம்ஸங்களின் சேர்க்கையுள்ளதும் மேதஸ நரம்பு எலும்புகளின் கூட்டமுள்ளதுமான சரீரமானது பிளக்கப்படும்பொழுது ஜீவன் காணப்படுவதேயில்லை. பஞ்சபூதஙகளாலாகிய சரீரமானது ஜீவனில் லாததாயிருக்குமாகில் சரீரத்தைப்பற்றியதும் மனததைப்பற்றியது மான துன்பமுண்டாகும்பொழுது அந்தத்துன்பத்தை எவன்அறி கிறவனென்று கேட்கலாம். மஹரிஷியே! மனம்ஸரியாயிருநதால சொல்லியமொழியை ஜீவன் செவிகளாலகேட்கிறது. மனம் வேறி டம்சென்றிருந்தால் அதைக்கேட்கிறதில்லை. ஆகையால, ஜீவன்பய னற்றதாகிறது; மனத்துடன்கூடிய கண்ணால பார்க்கத்தக்கயாவற் றையும் பார்க்கிறது. அநதமனமானது சிந்தையுள்ளதாயிருக்கும் பொழுது (ஜீவன்) பார்ததுக்கொண்டிருநதாலும் பார்க்கிறதில்லை. நித்திரையின்வசமடைந்தவன் பார்க்கிறதில்லை; மணத்தைஅறிகிற தில்லை; கேட்கிறதில்லை; பேசுகிறதில்லை; ஸ்பர்சததையும் ரஸத்தை யும் அறிகிறதில்லை. (ஆகையால) இச்சரீரத்தில எது ஸந்தோஷத்தை யும் கோபத்தையும் அடைகிறது? எது சோகத்தையும் பயததையும் அடைகிறது? எது விரும்புவதும் தயானம்செய்வதும் பகைப்பதும் வசனத்தைப்பேசுவதுமாயிருக்கிறது?' என்றுகேட்க, ப்ருகு சொல லத்தொடங்கினார்.

'ஐம்புலன்களுக்கும்பொதுவான ஒருமனமானது இசசரீரத் தில் முக்கியமானதன்று. உள்ளதிலுள்ள ஓர்ஆத்மாவானது சரீரத் தை வஹித்துக்கொண்டிருக்கிறது. அந்தஆத்மா மணத்தையும் ரஸத் தையும் சப்தத்தையும் ஸ்பர்சத்தையும் ரூபத்தையும் மற்றக் குணங் களையும் அறிகிறது. ஐந்துபூதங்களாலுமாகிய இச்சரீரத்தில் ஐந்து

பூதங்களின் ஸத்வகுணத்தாலுமுண்டான மனத்தையும் பார்த்துக் கொண்டிருக்கும் அந்தராத்மாவானது மனத்தின்வழியாக எல்லாஅங் கங்களிலும் வ்யாபித்திருக்கிறது. அஃது இச்சரீரத்திலுள்ள துக்கங் களையும் ஸுகங்களையும்அறிகிறது. தேகத்திலுள்ள ஆத்மா அநதமன த்தைவிட்டுப்பிரிந்தால ஒன்றையும் அறிகிறதில்லை. எப்பொழுது ஐந் துபூதங்களின்சேர்க்கையானசரீரத்தில் ரூபமும் ஸ்பர்சமும் சூடும் இல்லாமற்போகுமோ அப்பொழுது சரீரத்திலுள்ளஅக்னியானது அவிந்துபோனதும் ஆத்மாவானது சரீரத்தைத்தள்ளிவிட்டுநாசமடை கிறதில்லை. பிராணிகளுக்குள்ள ஸூக்ஷ்மசரீரமானது ஜலஉருவமா யிருக்கிறது. இந்தச்சரீரமுழுமையுமே ஜலத்தை முக்கியமாகக்கொ ண்டது. உலகத்தைப்படைத்த ப்ரம்மாவானவர் எல்லாப்ராணிகளிட த்திலும் அந்தஸூக்ஷமசரீரத்திலுள்ளமனததில் ஸம்பந்தப்பட்ட ஆத்மாவாயிருக்கிறுர்.ப்ரகிருதியைச்சேர்ந்தஸத்வம் ரஜஸ் தமஸ்என்ற குணங்களுடன்கூடிய ஆதமாவானது க்ஷேத்ரஜ்ஞனென்றுசொல் லப்படுகிறது. அந்தக்குணங்களிலிருந்தேவிடுபட்டஆதமாவானது பர மாத்மாவென்றுசொல்லப்படுகிறது. எலலாஉலகங்களையும் பரிணமிக் கச்செய்யும்அதை ஆத்மாவென்று தெரிந்துகொள். அது, ஜலபிந்து வானது தாமரையிலையிலிருப்பதுபோல அந்தச்சரீரத்திலிருந்துகொ ண்டிருக்கிறது. க்ஷேத்ரஜ்ஞனயிருக்கும்அந்தஆத்மாவை எல்லாஉல கங்களுக்கும் ஹிததைச்செய்யும்பரமாதமரூபியும் அழிவில்லாதது மாகத் தெரிந்துகொள். ஸத்வம் ரஜஸ் தமஸ்என்கிறஇவைகளை ஜீவ னுடையகுணங்களென்றறிந்துகொள்ளவேண்டும். புததியுடன்கூடிய இச்சரீரம் ஜீவனுலஅனுபவிக்கப்படுகிறதென்று சொலலுகிறுர்கள். அந்தஜீவன் சரீரம்யாவறறையும் சேஷ்டையுள்ளதாகச்செய்கிறதும் சேஷ்டையுள்ளதுமாயிருக்கிறது. [1] க்ஷேத்திரத்தை அறிந்தவர்கள் ஏழுஉலகங்களையும்படைததவரெவரோ அவர் அந்தஜீவரூபத்தைவிட வேறென்றுகூறுகிறுர்கள். சரீரததிறகுநாசமுண்டானாலும் ஜீவனுக் குநாசமில்லை.அறியாதவர்கள் ஜீவன்மரித்ததென்றுசொல்வது பொய். ஜீவனே வேறுசரீரத்தைஅடைந்து பிரயாணப்படுகிறது. பஞ்சபூதங் களின்உருவமான சரீரத்தைவிடுவதுதான் இந்தஜீவனுக்கு மரணமெ ன்றுசொலலபபடுகிறது. இவ்விதம் ஆதமாவானது எலலாப்பிராணி களிடங்களிலும் மறைக்கப்பட்டதும் காணப்படாததுமாக ஸஞ்சரிக் கிறது. அஃது உண்மையைக்காணததக்க சக்தியுள்ளவர்களால் கூர் மையுள்ளதும் ஸூக்ஷ்மமுமான புத்தியால்மட்டும் அறியப்படுகிறது.

---

1 சரீரம்.

லகுவான ஆகாரமுள்ளவனும் பரிசுத்தமானபுத்தியுள்ளவனும் இரவுகளின்முதலிலும்கடையிலும் எப்பொழுதும் ஸமாதியிலிருப்பவனுமான அறிவுள்ளவன் அந்தஆத்மாவைப் புத்தியில்பார்ப்பான். மனத்திற்குண்டானதெளிவால் மனிதன் சுபமும் அசுபமுமானகர்மத்தைத் தள்ளிவிட்டுத் தெளிந்தபுத்தியுடன் ஆத்மரூபத்திலிருந்துகொண்டு அழிவற்றஸுகத்தை அடைவான். மனத்தில்ஸம்பந்தப்பட்ட ஜ்யோதிரூபமானது சரீரங்களில் ஜீவனென்றுசொல்லப்படுகிறது. இந்தஜீவரூபியான ப்ரம்மாவிடமிருந்து இந்தஸ்ருஷ்டியானது உண்டாயிற்றென்பது ஆத்மாவை நிர்ணயஞ்செய்தவர்களின் அபிப்பிராயம்.

---

## நாற்றெண்பத்தாறுவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(ப்ராம்மணர்கள் தம்தம்இஷ்டப்படியானநடக்கைகளால் வர்ண வேறுபாடடைந்ததைச் சொல்லியது.)

ஸ்ருஷ்டியின்தொடக்கத்தில் ப்ரபுவானப்ரம்மாவானவர் தம்முடைய தேஜஸுகளாலுண்டுபண்ணப்பட்டவர்களும் ஸூர்யன், அக்நிஇவர்களின் காந்திபோன்றகாந்தியுள்ளவர்களும் [1]ப்ரம்மநிஷ்டர்களுமான ப்ரஜாபதிகளையேமுதலில்படைத்தார். அதற்குப்பிறகு ஸத்யத்தையும் தர்மத்தையும் தவத்தையும் சாஸ்வதமானவேதத்தையும் (அதன்மூலமான) ஆசாரத்தையும் சௌசத்தையும் உண்டுபண்ணினார். ப்ராம்மணர்களில்மிகச்சிறந்தவனே! தேவர்களையும் தானவர்களையும் கந்தர்வர்களையும் தைத்யர்களையும் அஸுரர்களையும் பெரிய உரகர்களையும் யக்ஷர்களையும் ராக்ஷஸர்களையும் நாகர்களையும் பிசாசர்களையும் அப்படியே பிராம்மணர்கள், க்ஷத்திரியர்கள், வைஸ்யர்கள், சூத்ரர்களென்கிற மனுஷ்யர்களையும் மற்றுமுள்ளபிராணிக்கூட்டங்களின்சிருஷ்டியையும்படைத்தார். ப்ராம்மணர்களுக்கு [2]வெண்ணிற

---

1 'ப்ராஹ்மணாः' என்பது மூலம்; இந்தஅத்யாயம் 4-வது ச்லோகத்தில் ப்ராம்மணரை ஸ்ருஷ்டித்ததாக வேறு கூறியிருத்தலால் இதற்கு ப்ரம்மநிஷ்டராக என்றுபொருள்கொள்ளப்பட்டது; பழையஉரையும் இப்படியே யிருக்கிறது; ப்ராம்மணர்முதலியோரைச்சொல்லவிட்டது மட்டமாக ... இதை ...

2 இவ்விடத்தில்வெண்மை நிறமென்பதால் ஸத்வகுணமும் சிவப்புநிறமென்றதால் ரஜோகுணமும் மஞ்சள்நிறமென்பதால் தமோகுணங்கலந்தரஜோகுணமும் கருநிறமென்பதால் தமோகுணமும் சொல்லப்படுகின்றன. ஸத்வமுதலிய குணங்களை இவ்விதம் நிறங்களாகச் சாஸ்திரங்களில் ப்ரஸித்தம். இனிவரும் இடங்களிலும் இங்ஙனமே கொள்க.

மும் க்ஷத்திரியர்களுக்குச் செந்நிறமும் வைஸ்யர்களுக்கு மஞ்சள்நிறமும் சூத்ரர்களுக்குக் கருநிறமும்உண்டு' என்றுசொன்னார். பரத்வாஜர், 'நான்கு [1]வர்ணங்களுக்கும் "[2]வர்ணமானது வர்ணத்தால்பிரிக்கப்படுமாகில் எல்லாவர்ணங்களுக்கும்வர்ணஸங்கரமிருப்பதாக்காணப்படுகிறதே; காமமும் கோபமும் லோபமும் பயமும் சோகமும் சிந்தையும் பசியும் ஸ்ரமமும் (ப்ராம்மணர்களான) நம்மெல்லோர்களுக்கும்உண்டாகின்றன; எதனால் வர்ணம்பிரிக்கப்படுகிறது? வேர்வையையும் மூத்திரத்தையும் மலத்தையும்ஸ்லேஷ்மத்தையும்பித்தத்தையும் உதிரத்தையும் எல்லாப்ராணிகளுடையசரீரமும்பெருகச்செய்கிறது; எதைக்கொண்டு வர்ணம் பிரிக்கப்படுகிறது? ஜங்கமங்களுள்ளும் ஸ்தாவரங்களுள்ளும் கணக்கிடத்தகாதவைகளானஜாதிகளிருக்கின்றனவே; பலவிதமானவர்ணமுள்ள அவைகளுக்கு எதனால்வர்ணநிச்சயம் ஏற்படுகிறது"என்றுகேட்க, ப்ருகுசொல்லத்தொடங்கினார்.

'இவ்வுலகமெல்லாம் [3]ப்ரம்மதேவரிடமிருந்துஉண்டானது. வர்ணங்களுக்குள்ளவிசேஷமில்லை. முதலில் ஸ்ருஷ்டிக்கப்பட்டப்ராம்மணர்கள் தம்கர்மங்களால் பலவர்ணங்களை அடைந்தார்கள். விஷயபோகங்களில ப்ரீதியுள்ளவர்களும் க்ரூரர்களும் கோபமுள்ளவர்களும் ஸாஹஸங்களில்ப்ரியமுள்ளவர்களும் ஸ்வதர்மத்தைவிட்டவர்களும் சிவந்த அங்கமுள்ளவர்களுமான அந்தப்ராம்மணர்கள் க்ஷத்ரியஜாதித்தன்மையை அடைந்திருக்கிறார்கள். பசுக்களைக்கொண்டு ஜீவிப்பவர்களும் மஞ்சள்நிறமுள்ளவர்களும் க்ருஷியைக்கொண்டு ஜீவிப்பவர்களும் ஸ்வதர்மங்களை அனுஷ்டியாதவர்களுமான ப்ராம்மணர்கள் வைஸ்யஜாதித்தன்மையை அடைந்திருக்கிறார்கள். ஹிம்ஸையிலும் பொய்யிலும் ப்ரியமுள்ளவர்களும் லோபிகளும் எல்லாத்தொழிலையும்அடைந்துஜீவிப்பவர்களும் கருநிறமுள்ளவர்களும் பரிசுத்தியிலிருந்துவிலகியவர்களுமான அந்தப்பிராம்மணர்கள் சூத்ர

---

1 ஜாதி; 2 குணம்.

3 இப்பாடத்தில், 'உலகமெல்லாம் ப்ராம்மணஜாதியாக இருந்தது' என்று சிலர் பொருள்சொல்லுகிறார்கள். பழையஉரையிலும் அப்படியேதான் காணப்படுகிறது. அது பொருந்தாது. மூலத்தில், 'ப்ராம்மம்' என்ற பதமிருக்கிறது. அதற்கு ப்ராம்மண ஜாதியென்று பொருள்கொள்ளுவது வ்யாகரணசாஸ்திரத்திற்கு விரோதமாகும். வ்யாகரணத்தில், 'ப்ராம்மோஜாதௌ' என்ற ஸூத்ரத்தால் ஜாதியென்பதைத்தவிர வேறுபொருள்களிடத்தில்மட்டும், 'ப்ராம்மம்' என்ற பதமுண்டாகலாம். ஜாதியைக்குறியிடத்தில் 'ப்ராம்மண' என்ற பதமல்லாமல், 'ப்ராம்ம' என்ற பதம்பொருந்தாது என்று கூறப்படுகிறது. ஆகையால், 'ப்ராம்மம்' என்ற பதத்திற்கு ப்ரம்மாவிடமிருந்துஉண்டானதென்றே பொருள்கொள்வதுதான் பொருத்தமாகும்.

ஜாதித்தன்மையை அடைந்திருக்கிறார்கள். இவ்விதமான இந்தக்கர்மங்களால் வேற்றுமையடைந்தவர்களான பிராம்மணர்கள் வேறு வர்ணத்தைஅடைந்திருக்கிறார்கள். தர்மமும் யாகஞ்செய்வதும் இவர்களுக்கு எப்பொழுதும் தடுக்கப்படுகிறதில்லை. இவ்விதம், (ப்ராம்மணர்களுக்குக்) கர்மத்தின்வேற்றுமையால் இந்தநான்குவர்ணங்களும் ஏற்பட்டிருக்கின்றன. முதலில்பிரம்மதேவரால் வேதமென்றவாக்கானது இவர்களுக்கு அளிக்கப்பட்டது. இவர்கள் பேராசையால் (அந்தவேதத்தை) அறியக்கூடாதநிலைமையை அடைந்திருக்கிறார்கள். வேதத்தில்கூறிய தர்மத்திலிருக்கிறவர்களும் வேதத்தையும் விரதங்களையும் நியமங்களையும் எப்பொழுதும் தரிப்பவர்களுமான பிராம்மணர்களுடையதவம் நாசமடைகிறதில்லை. [1]எந்தப்பிராம்மணர்கள் ப்ராம்மணப்பிறவியானது சிறந்ததாகப்படைக்கப்பட்டதென்று [2]தெரிந்துகொள்ளவில்லையோ அவர்கள் கீழானபிராம்மணர்களாகிறார்கள். அவர்களுக்கு அந்த அந்தப்பிறவியிலுள்ள பலவிதமான வேறுஜாதிகளுண்டாகும். அவர்கள் அறிவும் விசேஷஅறிவும் நாசமடைந்தவர்களும் தம்மிஷ்டம்போன்றஆசாரமும்செய்கையுமுள்ளவர்களுமாகிப்பிசாசர்களும் ராக்ஷஸர்களும் ப்ரேதர்களும் பலவிதமானமிலேச்சஜாதிகளுமாகிறார்கள். வேதத்திலகூறிய ஸம்ஸ்காரங்களைப்பெற்றவர்களும் தம்ஜாதிக்குரியகர்மங்களில் நிச்சயமுள்ளவர்களுமான மனிதர்கள் முன்னோர்களானரிஷிகளால் தம்தவத்தால், பின்னுள்ளரிஷிகளாக ஸ்ருஷ்டிக்கப்படுகிறார்கள். தர்மானுஷ்டானத்தைமுக்கியகாரணமாகக் கொண்டதும் மனத்தால்செய்யப்பட்டதுமான அந்தஸ்ருஷ்டியானது ஆதிதேவரானப்ராம்மதேவரிடமிருந்து உண்டானதும் பரம்மத்தை மூலமாகக்கொண்டதும் அழிவில்லாததும் குறைவில்லாததுமாயிருக்கிறது' என்றுசொன்னார்.

---

## நூற்றெண்பத்தேழாவது அத்தியாயம்.

### மோக்ஷ தர்மம் (தொடர்ச்சி.)



(ப்ருகு, பரத்வாஜருக்கு ப்ராம்மணர்முதலியவர்களின் லக்ஷணத்தையும் வைராக்யமானது மோக்ஷத்திற்குக்காரணமென்பதையும் சொல்லியது.)

பரத்வாஜர், 'ப்ராம்மணர்களில்உத்தமரே! எந்தக்கர்மத்துடனிருப்பவன் பிராம்மணனாவான்? எந்தக்கர்மத்துடனிருப்பவன் க்ஷத்

---

[1] 'ஸ்ருஷ்டிக்கப்பட்டஉலகத்தை ப்ரம்மருபமென்றறியாதவர்கள்' என்பது பழையஉரை. [2] வேறுபாடம்.

திரியனாவான்? எந்தக்கர்மத்துடனிருப்பவன் வைஸ்யனாவான்? எந்தக்கர்மத்துடனிருப்பவன் சூத்திரனாவான்? பேசுகிறவர்களிற்சிறந்தவரே! பிரம்மரிஷியே! அதைச்சொல்லவேண்டும்' என்று கேட்க, ப்ருகு சொல்லத்தொடங்கினார்.

'ஜாதகர்மமுதலிய ஸம்ஸ்காரங்களைப்பெற்றவனும் பரிசுத்தனும் வேதாத்யயனஞ்செய்தவனும் [1]ஆறுகர்மங்களில்நிலைபெற்றவனும் பரிசுத்தியிலும் ஆசாரத்திலும் நன்றாக இருப்பவனும் அதிதிகளுக்கிட்ட மிச்சத்தைப்புஜிப்பவனும் குருக்களிடம் ப்ரீதியுள்ளவனும் எப்பொழுதும் வ்ரதமுள்ளவனும் ஸத்தியத்தைப்பெரிதாகக்கொண்டவனுமாக எவனிருக்கிறானோ அவனே பிராமணனென்று சொல்லப்படுகிறான். ஸத்யமும் தானமும் த்ரோஹமின்மையும் க்ரூரமின்மையும் பொறுமையும் தயையும் தவமும் எவனிடம்காணப்படுகின்றனவோ அவன் ப்ராம்மணனென்று சொல்லப்படுகிறான். க்ஷத்திரியர்களுக்குரிய யுத்தமென்னும் கர்மத்தைச்செய்கிறவனும் வேதாத்யயனமுள்ளவனும் பிராம்மணர்களுக்குக் கொடுப்பதிலும் ப்ரஜைகளிடமிருந்து வரியைப்பெறுவதிலும் உத்ஸாஹமுள்ளவனுமாகி எவனிருக்கிறானோ அவனே க்ஷத்திரியனென்று சொல்லப்படுகிறான். க்ருஷியிலும் பசுக்காத்தலிலும் வர்த்தகத்திலும் எப்பொழுதும் பரிசுத்தனாகிப்புகுகின்றவனும் வேதாத்யயனமுள்ளவனுமாயிருப்பவனெவனோ அவன் வைஸ்யனென்று பெயருள்ளவனாகிறான். எப்பொழுதும் எல்லாவற்றையும் பக்ஷிப்பதில் உத்ஸாஹமுள்ளவனும் எல்லாத்தொழிலேயும் செய்கிறவனும் சுத்தியில்லாதவனும் வேதத்தைவிட்டவனும் ஆசாரமில்லாதவனுமாயிருப்பவனெவனோ அவனே சூத்ரனென்று சொல்லப்படுகிறான். முன்கூறிய ஸத்யமுதலியவையும் சூத்திரனிடத்திலும் காணத்தக்கனவாகும். இவை ப்ராம்மணன்முதலிய மூன்றுஜாதிகளிடமும் இல்லாமலுமிருக்கும். சூத்ரன் சூத்திரனாகவேயிருப்பானென்பதில்லை. பிராம்மணனும்பிராம்மணனாகவேயிருப்பானென்பதில்லை. ஆகையால், எல்லாஉபாயங்களாலும் ஆசையையும் கோபத்தையும் அடக்கவேண்டும். இவ்வடக்கமும் அப்படியே மனத்தை அடக்குவதும் பரிசுத்தமென்று தெரிந்துகொள்ளவேண்டும். ப்ரயோஜனத்தைக்கெடுப்பதற்காக

1 ஸ்நானத்துடன்சேர்ந்த ஸந்த்யாவந்தனம், ஜபம், ஹோமம், தேவபூஜை, அதிதிபூஜை, வைச்வதேவம் என்று ஒவ்வொருநாளும் செய்யக்கூடியகர்மங்கள் ஆறு. ஸ்நானத்தையும் ஸந்த்யையையும் சேர்த்துக்கொண்டு வைச்வதேவத்தைச் சேர்ப்பில்லாததாக்கி [illegible] ; யாகஞ்செய்தல், யாகம்செய்வித்தல், வேதமோதுதல், வேதமோதுவித்தல், தானஞ்செய்தல், தானம்பெறுதல் எனினுமாம்.

வளர்ச்சியடையும்லோபத்தையும் கோபத்தையும் மிச்சமின்றி விலக்கிக்கொள்ளவேண்டும். எப்பொழுதும் ஸம்பத்தைக் கோபத்திலிருந்து ரக்ஷிக்கவேண்டும். தவத்தை மத்ஸரத்திலிருந்து ரக்ஷிக்கவேண்டும். வித்யையை மானம் அவமானம் இவ்விரண்டிலிருந்தும் காக்கவேண்டும். ஆத்மாவை அஜாக்ரதையிலிருந்து காக்கவேண்டும். ஓ! பிராம்மண! எந்தமனிதனுடையமுயற்சிகள் யாவும் ஆசையென்னும் பந்தத்திலிருந்து விலகியிருக்கின்றனவோ, எவன்செய்யும் ஹோமம் யாவும் பயனைவிடக் காரணமாகுமோ அவன் தியாகியும் புத்தியுள்ளவனுமாகிறான். மனிதன் ஹிம்ஸைசெய்யும் ஸ்வபாவமில்லாமல எல்லாப்ராணிகளுக்கும் மித்திரனாயிருக்கும்வழியில செலலுகிறவனாயிருக்கவேண்டும். ஆசைப்படத்தக்க பொருளைததள்ளிவிட்டுப் புத்தியால் இந்திரியங்களைவென்றவனாயிருக்கவேண்டும். இவ்வுலகம் மேலுலகம் இவ்விரண்டிலும் [1]அசைவில்லாத பதத்தைஅடையவேண்டும். ஜயிக்கமுடியாதபதத்தை ஜயிக்கவிருப்பமுள்ளவன் எப்பொழுதும் தவமும் இந்திரியங்களினடக்கமும் மனவடக்கமுமுள்ளவனும் ஆசைக்குக்காரணமானவைகளில பற்றில்லாதவனும் தயானத்திலிருக்கிறவனுமாயிருக்கவேண்டும். எது எது இந்திரியங்களுக்குப்புலப்படுகிறதோ அது அது வ்யக்தமென்பதுதிண்ணம். இந்திரியங்களுக்குப புலப்படாததும் லிங்கக்ராஹ்யமென்றமனத்தால அல்லது ஊஹததால அறியத்தக்கதுமா யிருப்பதை அவ்யக்தமென்று தெரிந்துகொள்ளவேண்டும். மனிதன் (வேதத்திலும் குருவசனத்திலும்) நம்பிக்கையுடனிருக்கும்படி மனததை உறுதிப்படுத்திக்கொள்ளவேண்டும். அவநம்பிக்கையிற்செல்லக்கூடாது. மனத்தைப் பிராணனில அடக்கவேண்டும். பிராணனை ப்ரம்மத்தில் அடக்கவேண்டும். வேறொன்றையும் சிந்தியாமலிருக்கவேண்டும். வைராக்யததாலேயே மோக்ஷமடையவேண்டும். அவவிதமிருக்கும்பிராம்மணன் அந்தவழியாலேயே ஆனந்தரூபமானப்ரம்மத்தை அடைகிறான். எப்பொழுதும் பரிசுத்தியும் நலலஆசாரமும் பிராணிகளிடம் தயையும் உள்ளவனாயிருக்கவேண்டும். அது ப்ராம்மணர்களின் லக்ஷணமாகும்.

---

1 'சலனமில்லாத ஆத்மாவை த்யானஞ்செய்யவேண்டும்' என்பது பழைய உரை.

## நூற்றெண்பத்தெட்டாவது அத்தியாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



(ப்ருது, உண்மையானது ஸ்வர்க்கத்திற்கும் பொய்யானது நரகத்திற்கும் பரம்பரையாகக்காரணமாகுமென்பதையும் பொய்யாலுண்டாகும் துன்பங்களையும் இவ்வுலகத்திற்கும் ஸ்வர்க்கத்திற்குமுள்ளவேற்றுமையையும் பரத்வாஜருக்குக்கூறியது.)

ஸத்யமானது வேதமாகிறது. ஸத்யம் தவமாகிறது. ஸத்யம் ப்ரஜைகளை உண்டுபண்ணுகிறது. ஸத்யத்தால் உலகம்பரிபாலிக்கப்படுகிறது. ஸத்யத்தால் உலகம் ஸ்வர்க்கலோகத்தை அடைகிறது. பொய்யானது அஜ்ஞானத்தின் உருவமாகும். அஜ்ஞானத்தால் உலகம் கீழேபோகும்படி செய்யப்படுகிறது. அஜ்ஞானத்தால் விழுங்கப்பட்டவர்கள் அஜ்ஞானத்தால்மறைக்கப்பட்ட ஒளியென்னுந் தர்மத்தைப் பார்க்கிறதில்லை. ப்ரகாசமென்பது ஸ்வர்க்கமென்றுசொல்லுகிறார்கள். அஜ்ஞானமென்பதே நரகமென்றும்சொல்லுகிறார்கள். ஸத்யம்,பொய் இவ்விரண்டுஞ்சேர்ந்து புருஷர்களால் இரண்டுமுள்ள மனிதப்பிறவியடையப்படுகிறது. உலகத்திலுள்ள அந்தமானிடப்பிறவியில் ஸதயம், பொய், தர்மம், அதர்மம், ப்ரகாசம், அஜ்ஞானம், அப்படியே ஸுகம்,துக்கம்என்ற இவ்விதமானவைகளிருக்கும். அவைகளில் எதுஸத்யமோ அதுதர்மம், எதுதர்மமோ அது ப்ரகாசம், எது ப்ரகாசமோ அதுஸுகமென்றும், அவைகளில் எது பொய்யோ அதுஅதர்மம், எதுஅதர்மமோ அது அஜ்ஞானம், எது அஜ்ஞானமோ அது துக்கமென்றும்சொல்லப்படுகின்றன. இவ்விஷயத்தில் சொல்லப்படுகிறதாவது, சரீரத்திலுள்ளவைகளும் மனத்திலுள்ளவைகளுமான துக்கங்களுடனும் துக்கமாய்முடிவடையும் ஸுகங்களுடனுங்கூடிய உலகங்களின்ஸ்ருஷ்டியை நன்றாகப்பார்க்கும்பண்டிதர்கள் அவிவேகமடையமாட்டார்கள். அறிவுள்ளவன் அவ்விதப்பிறவியிலுள்ள துக்கத்திலிருந்து விடுபடவேண்டியதற்காக முயலவேண்டும். இவ்வுலகத்திலும் மேலுலகத்திலும் பிராணிகளுக்குண்டாகும்ஸுகமானது நிலைபெறறதேயன்று. ராஹுவாலவிழுங்கப்பட்டசந்திரனுடையஒளியானது எவ்விதம்ப்ரகாசிப்பதில்லையோ அவ்விதமே அஜ்ஞானத்தால்விழுங்கப்பட்டபிராணிகளின் (பரமார்த்தமான) ஸுகமானது ப்ரகாசியாமல [1]நாசமடைகிறது. அவ்வித

1 'நஶ்யதே', என்பதுவேறுபாடம்: இதற்கு 'மறைந்திருக்கிறது' என்பது பழையவுரை.

மான விஷயஸுகமானது சரீரத்தைப்பற்றியதென்றும் மனத்தைப் பற்றியதென்றும் இரண்டுவிதமாகச் சொல்லப்படுகிறது. இவ்வுலகத்திலும் மேலுலகத்திலும் செய்யப்படும்எல்லாமுயற்சிகளும் ஸுகத்திற்குவேண்டியென்றே சொல்லப்படுகின்றன. அறம்பொருள்இன்பமென்ற த்ரிவர்க்கத்தின்பயன் இவ்விதஸுகத்தைவிட வேறுஅதிக விசேஷமாகஇருப்பதில்லை. அவ்விதமானஇந்தவிஷயஸுகமானது உலகத்திற்கு விரும்பத்தக்கவிசேஷகுணமாகிறது. அறம்பொருள்களைப்பற்றிய முயற்சியானது அந்தஸுகத்திற்குக் காரணமாகிறது. அறம்பொருள் உண்டாவதும் அவற்றிற்குள்ளமுயற்சியும் ஸுகத்தைப்பயனாகக்கொண்டவை ' என்றுசொன்னார்.

பரத்வாஜர், 'ஸுகங்களுக்கு உண்மையானநிலைமையுண்டென்று உம்மால்சொல்லப்பட்டதை நாம்அறியவில்லை. தவத்திலநிலைபெறறிருக்கும்இந்தரிஷிகளுக்கு விசேஷகுணமுள்ளதும் விரும்பத்தக்கதுமான இந்தஸுகமானது அடையக்கூடாததன்றே ; அவாகள் இந்த ஸுகத்தைவிரும்பவில்லையே ; மூன்றுஉலகங்களையும்படைத்த ப்ரபுவானப்ரம்மதேவர் தனியே தவததிலிருக்கிருரென்று கேள்விப்படுகிறோம். அவர் ப்ரம்மசாரியாயிருந்துகொண்டு சிறறின்பஸுகங்களில் மனத்தைவைக்காதவராயிருக்கிருரே ; அன்றியும், உமாதேவியின்பதியானபகவான்விஶ்வேஶ்வரர் அருகிலவந்தகாமனைச் சரீரமிலலாதவனாக நாசமடையச்செய்தாரே ; ஆகையால், இந்தப்பயனானது மஹாத்மாக்களால் அங்கீகரிக்கப்படவில்லையென்றும் இதறகுள்ளகுணக்கூட்டமானது அவவளவு விசேஷமுள்ளதன்றென்றும் சொலலுகிறோம். பூஜ்யரானநீர் இதை அறியவில்லையா ? ஸுகங்களுக்குஉண்மையான நிலைமையுண்டென்று பூஜ்யரான உம்மாலசொலலப்பட்டது. புண்யத்தால் ஸுகம்அடையப்படுகிறதென்றும் பாபத்தால துக்கம்அடையப்படுகிறதென்றும் பயனுண்டாவது இரண்டுவிதமென்றுஉலகத்தில ப்ரஸித்தியிருக்கிறதே' என்றுகேட்க, ப்ருகு சொல்லததொடங்கினார்.

' இவ்விஷயத்தில் சொல்லப்படுகிறதாவது, பொய்யிலிருநது அஜ்ஞானமுண்டாகிறது. பிறகு, அஜ்ஞானத்தால விழுங்கப்பட்டு மனிதர்கள் அதர்மத்தையே தொடர்ந்துசெலலுவார்கள்; தர்மத்தைச் செய்யமாட்டார்கள்; கோபம், பேராசை, அவிவேகம், மதமுதலிய தோஷங்களால்மறைக்கப்பட்டஜனங்கள் இந்தஉலகததிலும் மேலுலகத்திலும் ஸுகத்தைஅடையமாட்டார்கள். (அவர்கள்) பலவிதமான நோய்களாலும் புண்களாலும் வலிகளாலும் தாபங்களாலும் வ்யாபிக்கப்படுவார்கள். கொலை, கட்டு, தடை, துன்பமுதலியவைகளாலும்

பசி தாகம் ஸ்ரமங்களாலுண்டாகும் துன்பங்களாலும் வருத்தப்படுவார்கள். பெருங்காற்று அதிக உஷ்ணம் மிகுகுளிர் இவைகளாலுண்டான பயங்களாலும் சரீரத்தைப்பற்றிய துன்பங்களாலும் தாபமடைவார்கள். பந்துக்களின்நாசத்தாலும் பொருள்நாசத்தாலும் அவைகளை விட்டுவிலகுவதாலும் உண்டாவனவும், ஜராமரணங்களாலுண்டாவனவும், மற்றுமுள்ளனவுமான மனத்தைப்பற்றியசோகங்களாலும் துன்பமடைவார்கள். சரீரத்தைப்பற்றியவைகளும் மனத்தைப்பற்றியவைகளுமான இந்தத்துக்கங்களாலதொடரப்படாதது எதுவோ அதை ஸுகமென்றறிந்துகொள்ளவேண்டும். இந்ததோஷங்கள் ஸ்வர்க்கலோகத்திலுண்டாவதில்லை. அந்தஸ்வர்க்கலோகத்திலோ நல்லஸுகமானகாற்றும் நல்லவாஸனையுள்ளமணமும் உள்ளன. அவ்விடத்தில் பசியும்தாகமும்களைப்புமில்லை; கிழத்தனமில்லை; பாதகமில்லை. எப்பொழுதும் ஸ்வர்க்கலோகத்தில ஸுகந்தான். இவ்வுலகத்தில ஸுகம் துக்கம் இரண்டுமுண்டு. நரகத்தில் துக்கம் ஒன்றுதான் என்று சொல்லுகிறார்கள் ஸுகமானது உத்தமமானபதமாகும். (ஆனால இவ்வுலகில) எல்லாப்பிராணிகளையும் உண்டுபண்ணத்தக்கபூமியும் அப்படியே ஸ்த்ரீகளும் இருக்கிறார்கள். அந்தலோகத்தில, ப்ரம்மதேவரென்றபுருஷரும் தேஜோமயமானபீஜமும் உண்டென்றறிவிக்கிறார்கள். இவ்விதமாக முன்காலத்தில பரம்மதேவரால இவ்வுலகம் நிர்மாணஞ்செய்யப்பட்டிருக்கிறது. ப்ரஜைகள் தத்தம்கர்மங்களாலசூழப்பட்டவைகளாய்ச் சுற்றிவருகின்றன' என்றுசொன்னார்.

---

## நூற்றெண்பத்தொன்பதாவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(ப்ருகுவானவர் தானமுதலியவற்றின்பயனையும் நான்கு ஆச்ரமங்களுக்குரியதர்மங்களையும் சொல்லியது.)

பரதவாஜர், 'தானத்துக்கும் நன்றாகச்செய்யப்பட்டதர்மத்துக்கும் நன்றாகச்செய்யப்பட்டதவத்துக்கும் வேதாத்யயனத்துக்கும் ஹோமத்துக்கும் என்னபயன்சொல்லப்படுகிறது?' என்றுகேட்டார்.

ப்ருகு, 'ஹோமத்தால் பாபம்விலகுகிறது. வேதாத்யயனங்களால் உத்தமமானசாந்தியுண்டாகிறது. தானத்தால்போகமுண்டாகிறது. தவத்தால் யாவற்றையும் அடைவானென்றுசொல்லுகிறார்கள். தானமானது பரலோகத்துக்கென்றும் இவ்வுலகத்துக்கென்றும் இர

ண்டுவிதமென்றுசொல்லுகிறார்கள். ஸாதுக்களின்பொருட்டுக் கொடுக்கப்படுகிறது சிறிதாயினும் அது பரலோகத்திற்கு வந்துசேருகிறது. அஸாதுக்களிடம் அளிக்கப்படுகிற தானமானது இவ்வுலகத்தில் புஜிக்கப்படுகிறது. எவ்விதமான தானஞ்செய்யப்படுகிறதோ அவ்விதமான பயனுண்டாகிறதென்று சொல்லப்படுகிறது' என்றுசொன்னார். பரத்வாஜர், 'எவனுக்கு எந்தத்தர்மம் ஆசரிக்கவேண்டியது? கர்மத்தின் லக்ஷணமென்ன? கர்மம் எத்தனைவிதமாயிருக்கிறது? அதை நீர் சொல்லவேண்டும்' என்றுகேட்டார். ப்ருகு, 'தமக்குரியகர்மத்தைச்செய்வதில் முயற்சியுள்ளவர்களாயிருக்கிற அறிஞர்களுக்கு ஸ்வர்க்கமென்னும் பயன்கிடைக்கும். எவன் வேறுவிதமாயிருக்கிறானோ அவன் அவிவேகமடைகிறான்' என்றுசொன்னார். பாரத்வாஜர், 'முன்காலத்திலுள்ளபிரம்மரிஷிகளால் விதிக்கப்பட்டிருக்கிற நான்குஆஸ்ரமங்களில் அதற்குள்ள ஆசாரத்தை உள்ளபடி நீர்சொல்லவேண்டும்' என்றுகேட்க, ப்ருகு சொல்லத்தொடங்கினார்.

'உலகங்களுக்கு ஹிதத்தைச்செய்கிறவரான பகவான் ப்ரம்மதேவரால், கர்மங்களை நன்றாகக்காக்கவேண்டி முதலிலேயே ஆஸ்ரமங்கள் நான்காக உபதேசிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளுள், குருகுலத்தில்வாஸஞ்செய்வதே முதலாவது ஆஸ்ரமமென்று கூறுகிறார்கள். அந்தஆஸ்ரமத்தில் நல்லசௌசம், ஸம்ஸ்காரம், நியமம், வ்ரதம் இவைகளில் நன்றாக அடங்கியமனமுள்ளவனாய் இரண்டு ஸந்த்யாகாலங்களிலும் ஸூர்யனையும் அக்னியையும் மற்றதேவர்களையும் துதிசெய்து தூக்கத்தையும் சோம்பலையும்விலக்கிவிட்டுக் குருவைவணங்குவதாலும் வேதாப்யாஸஞ்செய்வதாலும் வேதார்த்தவிசாரஞ்செய்வதாலும் பரிசுத்தமாகச்செய்யப்பட்ட அந்தராத்மாவையுடையவனும், மூன்றுகாலங்களிலும் ஸ்நானஞ்செய்வது, பிரம்மசர்யம், அக்னியை ஆராதிக்கல், ஆசார்யனுக்குப்பணிவிடை, நித்யம் பிக்ஷையெடுப்பது, அனைத்தையும் முதலியவெல்லாநியமங்களையும் அந்தராத்மாவிடம் அர்ப்பணஞ்செய்தவனும், குருவின்வாக்யத்தைச் சொன்னபடிசெய்வதில் வேறுகருத்தில்லாதவனும், ஆசார்யனுடைய அனுக்ரஹத்தால் கிடைத்தவேதத்தைப் பெரிதாகக்கொண்டவனுமாயிருக்கவேண்டும். இது விஷயத்தில் ஒருஸ்லோகமிருக்கிறது. அதன்பொருளாவது 'பிராம்மணன்முதலிய மூன்றுவருணத்தாரில் ஒருவனெவன் குருவை நன்றாகஆராதித்து வேதத்தையடைகிறானோ அவன் ஸ்வர்க்கலோகமென்னும்பயனை அடைகிறான். அவன்மனமும் ஸித்தியடைகிறது' என்பது. 'கார்ஹஸ்த்யம்' என்பது இரண்டாவதானஆஸ்ரமமென்று

சொல்லுகிறார்கள். அந்தஆஸ்ரமத்தின் நல்லஆசாரத்திற்குரியலக்ஷணம்யாவற்றையும், தொடர்ச்சியாகக்கூறுகிறேன். ப்ரம்மசர்யத்தை முடித்து 'ஸமாவர்த்தனம்' என்ற ஸம்ஸ்காரம்பெற்றவர்களும் நல்ல ஆசாரமுள்ளவர்களும் மனைவியுடன்சேர்ந்து செய்யத்தக்கதர்மத்தின் பயனை விரும்புகிறவர்களுமாயிருப்பவர்களுக்கு க்ருஹஸ்தாஸ்ரமம் விதிக்கப்படுகிறது. க்ருஹஸ்தனா யிருப்பவன் அறம்பொருள்இன்பங்களின்பயனுக்காக (இந்த) த்ரிவர்க்கத்திற்கு ஸாதனத்தைவிரும்பி வேதாத்யயனத்தால் கிடைத்தபெருமையாலோ ப்ரம்மரிஷிகளால்செய்யப்பட்ட வழியாலோ குற்றமில்லாத கர்மத்தால் தனங்களைஸம்பாதித்து ஹவ்யகவ்யங்களிலுள்ள நியமங்களுடனும் தேவபூஜை ஸமாதி இவைகளின் அனுக்ரஹத்தால் விதிப்படிகிடைத்தபொருளுடனும்க்ருஹஸ்தாஸ்ரமத்தை நடத்திக்கொள்ளவேண்டும். அஃது எல்லா ஆஸ்ரமங்களுக்கும் மூலமென்று உதாஹரிக்கிறார்கள். எவர்கள் குருகுலத்தில் வஸிக்கிறவர்களும் ஸந்யாஸிகளும் ஸங்கல்பித்த வ்ரதங்கள் நியமங்கள் என்றதர்மங்களைச் செய்கிறவர்களுமாயிருக்கிறார்களோ அவர்களுக்கும் இந்த க்ருஹஸ்தாஸ்ரமத்திலிருந்தே பிக்ஷையும் பலியும் தானங்களும்கிடைக்கின்றன. வானப்ரஸ்தாஸ்ரமத்திலிருப்பவர்களுக்கும் த்ரவ்யம் இருப்பதில்லை. ஸாதுக்களான இவர்கள் பெரும்பாலும் குற்றமற்றதும் பத்யமுமான அன்னத்தைப்புஜிப்பவர்களும் வேதாப்யாஸம் செய்கிறவர்களுமாய்த் தீர்த்தங்களுக்குச்செல்லவும் நல்லதேசங்களைத் தரிசனஞ்செய்யவும் பூமியில் ஸஞ்சரிப்பார்கள். அவர்களுக்கு எழுந்திருப்பதும் எதிர்கொண்டு செல்வதும் நமஸ்கரிப்பதும் அஸூயையின்றி நன்மொழிகூறுதலும் இயன்றவரையில் ஸுகமான ஆஸனமும் ஸுகமான படுக்கையும் உணவளித்தலும் மர்யாதையும் க்ருஹஸ்தனால்செய்யத்தக்கவைகள். இதுவிஷயத்திலும் ஒருஸ்லோகமிருக்கிறது அதன்பொருளாவது:—'ஓர் அதிதியானவன் எந்த க்ருஹஸ்தனுடைய வீட்டிலிருந்து தன் ஆசைபங்கமடைந்தவனாகித் திரும்பிச் செல்லுகிறானோ அவனுக்குத் தன்பாபத்தைக்கொடுத்துவிட்டு அவன்புண்யத்தை எடுத்துக்கொண்டுசெல்லுகிறான்' என்பது. அன்றியும், இந்தக்ருஹஸ்தாஸ்ரமத்தில்யாகங்களைச்செய்வதால்தேவர்களும், தர்ப்பணஞ்செய்வதால் பித்ருக்களும், வேதவித்தையைக்கற்பதாலும் கேட்பதாலும் தரிப்பதாலும்ரிஷிகளும்,ப்ரஜையையுண்டுபண்ணுவதால் ப்ரம்மதேவரும் ஸந்தோஷமடைகிறார்கள். இந்த க்ருஹஸ்தாஸ்ரமவிஷயத்தில் (வேறு) இரண்டு ஸ்லோகங்களுமிருக்கின்றன. அவற்றின்பொருளாவது:—'எல்லாப்ராணிகளுக்கும் நேசமுள்ளவை

களும் செவிக்குஇனிமையுமான மொழிகளைச்சொல்லவேண்டும். இந்த க்ருஹஸ்தாஸ்ரமத்தில் (பிறரைக்) குற்றஞ்சொல்லுவதும் அபவாதம் பேசுவதும் கடுஞ்சொல்லும் நிந்திக்கப்பட்டவையாகும். அவமரியாதையும் அஹங்காரமும் டம்பமும் மிகவும் நிந்திக்கப்பட்டவையாகும். ஹிம்ஸையில்லாமையும் கோபமில்லாமையும் ஸத்யவசனமும் எல்லா ஆஸ்ரமங்களுக்கும் பொதுவான தவமாகும்' என்பது. அன்றியும், இந்தஆச்ரமத்தில் மாலை, ஆபரணம், ஆடை, அப்யங்கம் இவைகளின் இடைவிடாதபோகமும் கூத்தும் பாட்டும் வாத்யங்களும் செவிக்கு ஸுகமும், கண்களுக்கு அழகான வஸ்துக்களின்காட்சியும்கிடைக்கும். [1] பக்ஷ்யம், [2]போஜ்யம், [3]லேஹ்யம், [4]பேயம், [5]சோஷ்யம்என்ற பல விதமான ஆஹாரங்களின்போகமும் தன்னிஷ்டப்படிஸஞ்சாரத்தால் ஸந்தோஷமும் காமஸுகலாபமும் கிடைக்கும். இந்தவிஷயத்திலும் இரண்டுஸ்லோகங்கள் இருக்கின்றன. அவற்றின்பொருளாவது:-'எந்த மனிதனுக்கு க்ருஹஸ்தாஸ்ரமத்தில் எப்பொழுதும் அறம் பொருள் இன்பம்என்றத்ரிவர்க்கமான துகறகுணக்குடன்ஸித்தியடைகிறதோ அவன் இவ்வுலகில் ஸுகங்களை அனுபவித்தபின் சிஷ்டர்களுக்குரிய கதியை அடைவான். எந்தக்க்ருஹஸ்தன் உஞ்சத்தைஜீவனமாகக்கொண்டவனும் தனக்குள்ள கர்மங்களைச்செய்வதில் பற்றுள்ளவனும் காமஸுகத்திற்குள்ள முயற்சியைவிட்டவனுமாயிருக்கிறானோ அவனுக்கு ஸ்வர்க்கம்கிடைப்பது அரிதன்று' என்பது.

---

## நூறறுத்தொண்ணூறுவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(ப்ருகுமுனிவர், பரத்வாஜருக்கு வானப்ரஸ்தாச்ரமத்தும் ஸந்யாஸாச்ரமத்தும் [illegible] சொல்லிப் பின்பு ஹிமவத்பர்வதத்திற்கு வடக்கிலுள்ள லோகம் ஸ்வர்க்கத்திற்கு ஸமமானதென்றும் அது புண்ணியஞ்செய்தவர்களால் அடையத்தக்கதென்றும் சொல்லியது.)

வானப்ரஸ்தர்கள் ரிஷிகளின் கர்மத்தை அனுஸரித்துக் கொண்டிருக்கிறார்கள்; புண்யமான தீர்த்தங்களையும் நதிகளையும் மலையருவிகளையும் [illegible] ஸஞ்சரிக்கிறார்கள்; அவர்கள்

---

1 [illegible] தின்னத்தக்கவை. 2 [illegible] தின்னத்தக்கவை.
3 [illegible] தின்னத்தக்கவை. 4 பானம் பண்ணத்தக்கவை.
5 [illegible] தக்கவை.

விசாலமானவைகளும் மான், எருமை, பன்றி, புலி, [1]ஸ்ருமரம், யானை இவைகளால்நிறைந்தவைகளுமான அரண்யங்களில்தவஞ்செய்துகொண்டு ஸஞ்சரிப்பார்கள்; கிராமத்திற்குத்தக்க ஆடைகளையும் ஆஹாரங்களையும் போகங்களையும்விட்டவர்களும், பலவிதங்களும் கணக்குள்ளவைகளும் வனத்திலுண்டானவைகளுமான ஓஷதிகளையும் கனிகளையும் கிழங்குகளையும் இலைகளையும் உறுதியான ஆகாரமாகக்கொண்டவர்களும், நிற்கிறவர்களும், உட்காருகிறவர்களும், தரையிலும் கல்லிலும் புழுதியிலும் பருக்கைக்கல்லிலும் மணலிலும் சாம்பலிலும் படுப்பவர்களும், நாணலாலும் குசத்தாலும் தோலாலும் மரவுரியாலும் மறைக்கப்பட்ட அங்கங்களுள்ளவர்களும், சிகையையும் மீசையையும் நகங்களையும் ரோமங்களையும் தரிப்பவர்களும், காலங்களில்நியமமாக ஸ்நானஞ்செய்கிறவர்களும், காலந்தவறாமல் பலியையும் ஹோமத்தையுஞ்செய்கிறவர்களும், ஸமித்துக்களையும் குசங்களையும் புஷ்பங்களையும் கொண்டுவருவது பூஜிப்பது இடங்களைச்சுத்திசெய்வது இவைகளின் முடிவில் ப்ரமபரிஹாரஞ்செய்துகொள்ளுகிறவர்களும், குளிர்வெப்பம் மழை காற்றுக்களால் நன்றாகக்காய்ந்தவைகளும் வெடித்தவைகளுமான எல்லா அங்கங்களின் தோல்களையுமுடையவர்களும், பலவிதமானநியமங்களாலும் யோகாப்யாஸங்களாலும் கர்மாநுஷ்டானங்களாலும்குறைந்துபோனவைகளும் நன்றாகக்காய்ந்தவைகளுமான மாம்ஸம் உதிரம் தோல் எலும்பு இவைகளையுடையவர்களும், தைர்யத்தைப் பெரிதாகக்கொண்டவர்களுமாகி ஸத்வமிருத்தலால் சரீரங்களைவஹித்துக்கொண்டுமிருப்பார்கள். இந்தவானப்ரஸ்தாச்ரமத்தைப்பற்றி ஒரு ச்லோகமுமிருக்கிறது. அதன்பொருளாவது:—'பிரம்மரிஷிகளால் விதிக்கப்பட்ட இந்தவானப்ரஸ்தகர்மத்தை எவன் நியமத்துடன் அநுஷ்டிக்கிறானோ அவன் அக்னிபோல் தோஷங்களைஎரிப்பான்; ஜயிக்கத்தகாத உலகங்களையும்ஜயிப்பான்' என்பது. பரிவ்ராஜகருடையஆசாரமோவென்றால்இவ்விதமாகும். அதாவது:-'பொருளையும் தாரத்தையும் படுக்கைமுதலியவற்றையும்நீக்கிவிட்டும் ஆசைப்படத்தக்கவஸ்துக்களில் தமக்குள்ள அபிமானமென்னும்பாசங்களை உதறிவிட்டும்ஸந்யாஸம்அடைவார்கள். மண்ணாங்கட்டியையும்கல்லையும்பொன்னையும் ஸமமாகக்கொண்டவர்களும், அறம்பொருள்காமங்களைப்பற்றியவைகளானமுயற்சிகளில் பற்றுதலில்லாதபுத்தியுள்ளவர்களும், சத்ருவையும் மித்ரனையும் உதாஸீனனையும் ஸமமாகப்பார்க்கிறவர்களும், ஸ்தாவரங்களும் ஜங்கமங்களும் ஜராயுஜம் அண்டஜம் ஸ்வேதஜம் உத்பிஜ்

[1] ஒருவகை மான்.

ஐங்களுமானபிராணிகளுக்கு வாக்காலும் மனத்தாலும் கர்மத்தாலும் த்ரோஹஞ்செய்யாதவர்களும், வீடில்லாதவர்களும், வஸிக்க வேண்டி மலையிலும் மணல்திட்டிலும் மரத்தடியிலும் தேவாலயங்களிலும் ஸஞ்சரிப்பவர்களுமாயிருந்துகொண்டு நகரத்தையாவது கிராமத்தையாவது அடையவேண்டும். நகரத்தில்ஐந்துஇரவும் கிராமத்தில் ஓர்இரவும்இருப்பவர்களாய்ப் பிரவேசித்து உயிரைத்தரிக்கவேண்டி மாறுபடாதகர்மங்களுள்ளவர்களான த்விஜாதிகளின்வீடுகளை அடையவேண்டும். யாசிக்கப்படாமல் பாத்திரத்தில்விழுந்தபிக்ஷையைப் புஜிப்பவர்களும் காமம் கோபம் கர்வம் லோபம் அவிவேகம் தீனத்தனம் டம்பம் நிந்தை அபிமானம் ஹிம்ஸை இவைகளிலிருந்துவிலகினவர்களுமாயிருக்கவேண்டும். இந்த ஸந்யாஸாஸ்ரமத்தைப்பற்றி ஸ்லோகங்களுமிருக்கின்றன. அவற்றின்பொருளாவது:-'எவன் எல்லாப்ராணிகளுக்கும்அபயமளித்து முனியாய்ஸஞ்சரிக்கின்றானோ அவனுக்கு எல்லாப்ராணிகளிடத்திலிருந்தும் எந்தச்சமயத்திலும் பயமுண்டாகிறதில்லை. எவன் அக்னிஹோத்திரத்தைத் தன்சரீரத்திலேயேமுடிவுபெற்றதாகச்செய்துகொண்டு பிக்ஷைவாங்கிக் கிடைத்த அன்னங்களென்னும் ஹவிஸுகளால் சரீரத்திலுள்ள அக்னியைத் (திருப்திசெய்யவேண்டித) தன்முகத்தில் ஹோமஞ்செய்கிறானோ அவன் அக்னிசயனமென்ற கர்மத்தைச்செய்தவனால் அடையப்படும் உலகங்களை அடைகிறான். எவன் பரிசுத்தனும் நல்லஊறுதியுள்ளபுத்தியையுடையவனுமாய் விறகில்லாத அக்னிபோல மிகவும்சாந்தமாயிருக்கும் மோக்ஷத்திற்குரியஸந்யாஸாஸ்ரமத்தைச் சொல்லியபடி செய்துகொள்ளுகிறானோ அந்தப்ராம்மணன் ப்ரம்மலோகத்தை அடைகிறான்" என்பது' என்றுசொன்னார்.

1 பரத்வாஜர், 'இந்தஉலகத்தைவிட வேறானஉலகம்உண்டென்று கேட்கிறோம். அஃது அறியப்படுகிறதில்லை. அதை நான் அறிந்துகொள்ளவிரும்புகிறேன். அதனை நீர் சொல்லவேண்டும்' என்று கேட்க, ப்ருகு சொல்லத்தொடங்கினார்.

---

1 "பாரத்வாஜர், 'இந்திரியங்களுக்குப்புலப்படும் இவ்வுலகத்தைவிட வேறான பரமாத்மரூபமானது வேதங்களில் கேட்கப்படுகிறது. அதை நான் அறிந்து கொள்ளவிரும்புகிறேன்' என்றுகேட்க, ப்ருகு, 'பரமாத்மரூபத்தைக்காணத் தக்கவர்களுடையமானதால் ... எல்லாவுலகங்களுக்குமுடையதும் இமயமலையென்றும்மேருமலையென்றும் யோகசாஸ்த்ரங்களில் சொல்லப்படும் ... யின் அருகிலுள்ளதுமான ... இவைகளில் ஸந்நிதானத்தில் புண்ணியசாலிகளால் அடையத்தக்க அந்த பரமாத்மலோகமிருக்கிறதென்று சொல்லப்படுகிறது' என்றுசொன்னார்" என்பது பழையவுரை.

'எல்லாக்குணங்களுடனும் கூடியதும் புண்ணியமுமான இமயமலையின் உத்தரபாகத்தில் புண்ணியமும் க்ஷேமமுள்ளதும் விரும்பத்தக்கதுமான அந்தலோகம் பரலோகமென்று சொல்லப்படுகிறது. அவ்வுலகத்திலிருக்கும்மனிதர்கள் பரிசுத்தர்களும் மிகத்தெளிந்தவர்களும் லோபமோகங்களைவிட்டவர்களும் பாவச்செய்கையில்லாதவர்களும் உபத்ரவமில்லாதவர்களுமாயிருக்கிறார்கள். அந்தஉலகம் ஸ்வர்க்கலோகத்திற்குச்சமமானது. சுபமானகுணங்கள் அவ்வுலகத்திலுள்ளனவென்றுசொல்லப்படுகின்றன. அவ்வுலகத்தில் ம்ருத்யுஉண்டாகிறதில்லை; வ்யாதிகளும் (மனிதனை) தொடுகிறதில்லை; பரதாரங்களில் ஆசைஉண்டாகிறதில்லை. அங்குள்ளஜனங்கள் தம்தாரத்தில் பற்றுள்ளவர்களாயிருப்பார்கள். அவ்வுலகத்தில்ஒருவனைஒருவன் அடிப்பதென்பதில்லை; த்ரவியங்களில் வியப்புண்டாவதில்லை; பரோக்ஷமான பயனுள்ளதர்மமேயில்லை; ஸந்தேகமுமஉண்டாகிறதில்லை; செய்த கர்மத்தின்பயனே ப்ரத்யக்ஷமாகக்காணப்படுகிறது; சிலர் வாஹனங்களும் ஆஸனங்களும் போஜனங்களுமுள்ளவர்களும் மாடிகளுடன்கூடியவீடுகளை அடைந்தவர்களும் எல்லாப்போகங்களாலும் சூழப்பட்டவர்களும் ஸ்வர்ணாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவர்களுமாயிருக்கிறார்கள். சிலருக்கு உயிரைத்தரிக்கவேண்டியதற்குப் போதுமானமட்டுமிருப்பதாகக்காணப்படுகிறது; சிலர் பெரியஸ்ரமத்துடன் ப்ராணதாரணஞ்செய்துகொண்டிருக்கிறார்கள். இந்தஉலகத்தில், சிலர் தர்மத்தைப்பெரிதாகக்கொண்டவர்களாயிருக்கிறார்கள். சிலமனிதர்கள் ஹிம்ஸைசெய்கிறவர்களாயிருக்கிறார்கள். சிலர் ஸுகமுள்ளவர்களும் சிலர் துக்கமுள்ளவர்களும் சிலர் பொருளில்லாதவர்களும் மற்றுஞ்சிலர் பொருளுள்ளவர்களுமாயிருக்கிறார்கள். இதில் ச்ரமமும் பயமும் அவிவேகமும் பசியும் உறக்கமும் உண்டாகின்றன; எந்தஆசையால அறிவில்லாதவர்கள் அவிவேகமடைவார்களோ பொருளாலுண்டாகும் அந்தலோபமும்மனிதர்களுக்கிருக்கிறது. இவ்வுலகில் தர்மம்அதர்மமென்றகர்மத்தைப்பற்றியவாக்கியமானது பலவிதமாயிருக்கிறது. நல்லஅறிவுள்ளவன் அவையிரண்டையும் அறிகிறானே அவன் பாபத்தால்பற்றப்படமாட்டான். வஞ்சகம், அவமானம், திருட்டு, தூஷித்தல், அஸூயை, பிறருக்குத்துன்பமுறுத்தல், ஹிம்ஸை, கோட்சொல்லுதல், பொய்யிவைகளை எவன் செய்கிறானோ அவனுடையதவம் குறைவடையும். அறிவுள்ளவன் இவைகளை அனுஷ்டியாமலிருக்கிறானோ அவனுடையதவம் மிகவும் வளர்ச்சியடையும். தர்மம்அதர்மமென்றகர்மங்களைப்பற்றிய பலவிதமானசிந்தனை இவ்வுல

கத்திலுண்டு. இதுகர்மத்திற்குரியபூமியாகும். இவ்வுலகத்தில்சுபம் அசுபம்என்றகர்மத்தைச்செய்தபின் செய்தமனிதன் சுபகர்மங்களால் க்ஷேமத்தையும் அல்லாதகர்மங்களால் துன்பத்தையும் அடைகிறான். முன்காலத்தில் ப்ரம்மதேவரும் மற்றதேவர்களும் அப்படியே ரிஷிக்கூட்டங்களும் இவ்வுலகத்தில்செய்தயாகத்தாலும் தவத்தாலும் பரிசுத்திபெற்று ப்ரம்மலோகத்தை அடைந்திருக்கிறார்கள். பூமியின்வடபாகமானது எல்லாவற்றையுங்காட்டிலும் மிகப்புண்யமாயும் சுபமாயுமிருக்கிறது. இவ்வுலகத்தில் புண்யத்தைச்செய்தமனிதர்கள் அவ்விடத்திலபிறப்படைகிறார்கள். வேறுசிலர் கெட்டகர்மங்களைச் செய்து பசு பறவைமுதலியபிறவிகளில் பிறக்கிறார்கள். அதுபோல் பூதலத்திலுள்ளவேறுசிலர் லோபமோகங்களுடையவர்களும் ஒருவரையொருவர்விழுங்குவதில ஆசையுள்ளவர்களுமாய்ஆயுள்முடிந்து நாசமடைகிறார்கள். அவர்கள் இவ்வுலகத்திலேயே சுற்றிக்கொண்டிருப்பார்கள்; வடதிசையைஅடைகிறதில்லை. எவர்கள் நியமமுள்ளவர்களும் ப்ரம்மசாரிகளுமாய்க் குருக்களை உபாஸிக்கிறார்களோ அறிவுள்ளவர்களான அவர்கள் எல்லாஉலகங்களையும்பற்றியவழியை அறிகிறார்கள். இவ்விதம் ப்ரம்மதேவரால்ஸ்ருஷ்டிபண்ணப்பட்ட இந்தத் தர்மமானது சுருக்கமாக என்னால்உபதேசிக்கப்பட்டது. உலகத்திலுள்ளதர்மத்தையும் அதர்மத்தையும் எவன்அறிகிறானோ அவன் புத்தியுள்ளவனாகிறான்' என்றுசொன்னார். அரசனே! இவ்விதம் ப்ருகுமஹரிஷியால் உபதேசிக்கப்பட்டவரும் ப்ரதாபமுள்ளவருமான பரத்வாஜர் விசேஷமான தர்மபுத்தியுள்ளவரும் வியப்புற்றவருமாய ப்ருகுவைப்பூஜித்தார். அரசனே! உலகத்தின் உற்பத்தியானது உனக்குமுழுமையும்நன்றாகச்சொல்லப்பட்டது. அறிஞர்களிற்பெரியவனே! திரும்பவும்எதைக்கேட்கவிரும்புகிறாய்?" என்றுகேட்டனர்.

---

## நூற்றுத்தொண்ணூற்றொன்றாவது அத்தியாயம்.

### மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், நல்ல ஆசாரங்களைக்கூறியது.)

யுதிஷ்டிரர், "தோஷமில்லாதவரே! கங்கையின் ஆசாரத்தின் முறைமையை நீர்சொல்லக் கேட்க விரும்புகிறேன். தர்மமறிந்தவரே! நீர் யாவற்றையும் அறிந்தவராயிருக்கிறீரென்பது என்னுடையகருத்து" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"அயோக்யர்கள் கெட்டஆசாரமுள்ளவர்களும் கெட்டநடையுள்ளவர்களும் கெட்டபுத்தியுள்ளவர்களும் ஸாஹஸத்தில்விருப்பமுள்ளவர்களுமாயிருப்பார்களென்பதும் ஸாதுக்கள் ஆசாரத்தை அடையாளமாகக்கொண்டவர்களென்பதும் ப்ரஸித்தம். எந்தமனிதர்கள் ராஜமார்க்கத்திலும் பசுக்களின்நடுவிலும் தான்யத்தின் நடுவிலும் சிவாலயத்திலும் அக்னிசாலையிலும் ஜலக்கரையிலும் மலத்தையும் மூத்திரத்தையும் செய்யாமலிருக்கிறார்களோ அவர்கள் நல்லவர்கள். [1] அவஸ்யமாகச்செய்துகொள்ளவேண்டிய பரிசுத்தியைச்செய்துகொண்டு ஆசமனஞ்செய்தபின் நதியில்இறங்கி ஸ்நானஞ்செய்யவேண்டும். அதன்பிறகு, தேவர்களைக்குறித்துத தர்ப்பணஞ்செய்வது மனிதர்களுக்குத்தர்மமென்று (பெரியோர்கள்) கூறுகிறார்கள். எப்பொழுதும் ஸூர்யனைத் துதிசெய்யவேண்டும். ஸூர்யன்உதிக்குங்காலத்தில் உறங்காமலிருக்கவேண்டும். மாலையிலும்காலையிலும் ஸந்த்யாகாலத்தில (காயத்ரியை) ஜபிக்கவேண்டும். முதலஸந்தியில்நின்றுகொண்டும் அதுபோலமாலைஸந்தியில (உட்கார்ந்துகொண்டும்) ஜபிக்கவேண்டும். [2]ஐந்துஅங்கங்களில ஈரமுள்ளவனும் கிழக்குமுகமுள்ளவனும் மௌனத்தைஅடைந்தவனுமாகிப் போஜனத்தைசசெய்யவேண்டும். அன்னத்தையும் பக்ஷியங்களையும்நிந்திக்கக்கூடாது. மிக்க ருசியுள்ளனவென்று புஜிக்கவேண்டும். [3]ஈரமானகையுள்ளவனாகி எழுந்திருக்கவேண்டும். இரவில்காலிலீரமுள்ளவனாகிப்படுக்கக்கூடாது. தேவரிஷியானநாரதரானவர் இவ்விதம் ஆசாரத்தின்லக்ஷணத்தைச்சொன்னார். அக்னியையும் காளையையும் தேவதையையும் பசுவிருக்குமிடத்தையும் நாற்சந்தியையும் தார்மிஷ்டனான ப்ராம்மணனையும் எப்பொழுதும் ப்ரதக்ஷிணஞ்செய்யவேண்டும். அதிதிகளுக்கும் எல்லாஏவலாளிகளுக்கும் பந்துஜனத்திற்கும் வேலைக்காரனுக்கும் வேற்றுமையில்லாத தானபோஜனம் மனிதனுக்குச் சிறந்ததாகும். மனிதர்களுக்குக் காலையிலும் மாலையிலும் போஜனம் வேதத்தால்விதிக்கப்படுகிறது. இடையில போஜனம் விதிக்கப்பட்டதாகக் காணோம். அந்தவிதிப்படி இருப்பவன் உபவாஸத்தின்பயனுள்ளவனாவான். அதுபோல ஹோமத்திற்குரியகாலத்தில ஹோமஞ்செய்கிறவனும் [4]ருதுகாலத

1 'யோகுராவந்த' என்கிறவாக்கியம் இரண்டுதரம் வருவதால ஒன்று விடப்பட்டது.

2 கால்இரண்டு, கையிரண்டு, முகமொன்று ஆக ஐந்து அங்கங்கள்.

3 வேறுபாடம்; 'போஜனமானமுடிவில் ஆபோசனம் செய்துகொள்ள வேண்டும்' என்பது கருத்து.

4 ஸ்த்ரீகளாயிலஸ்யிருந்து ஸ்நானம்செய்தபின் [illegible] பன்னிரண்டுநாட்களில் விலக்குவிக்கப்படாத ஒருநாள் ருதுகாலமென்று சொல்லப்படும்.

தில்மட்டும்(தாரத்தினிடம்)செல்லுகிறவனும் வேறு ஸ்திரீகளில்லாத வனும் நல்லஅறிவுள்ளவனுமாயிருப்பவன் ப்ரம்மசாரிபோன்றவனாவான். பிராம்மணர்கள்உண்டுமிச்சமான அன்னமானது காயின்மனம் போலவும் அமிருதம்போலவும் (ப்ரம்மாவினால்) செய்யப்பட்டிருக்கிறது. அந்தஅன்னத்தை எந்தஜனங்கள் அன்புடன் அடைகிறார்களோ அந்தஸாதுக்கள் ஸத்யமானப்ரம்மத்தை அடைகிறார்கள். எந்தமனிதன் மண்கட்டிகளை உடைக்கிறவனும் புற்களைக்கிள்ளுகிறவனும் நகத்தைக்கடிக்கிறவனும் எப்பொழுதும் எச்சிலுள்ளவனும் பேராசைகொண்டவனுமாயிருக்கிறானோ அவன் இவ்வுலகில் நீண்டஆயுளை அடையமாட்டான். மாம்ஸத்தைப்புஜிப்பதிலிருந்துவிலகி, மந்திரத்தால்பரிசுத்திசெய்யப்பட்டமாம்ஸத்தைமட்டும் புஜிக்கவேண்டும். வீணைக மாம்ஸத்தைப் புஜிக்கலாகாது. [1]புறத்திலுள்ளமாம்ஸத்தை விலக்கவேண்டும். தன்தேசத்திலோ பரதேசத்திலோ அதிதியாயிருப்பவனை ஆகாரமில்லாமலிருக்கும்படி செய்யக்கூடாது. காம்யமான கர்மங்களைச்செய்துபயனை அடைந்தால் அதைப் பெரியோர்களிடம் கொடுக்கவேண்டும். பெரியோர்களுக்கு ஆஸனமளிக்கவும் அவர்களைவணங்கி ஆசீர்வதிக்கச்செய்யவும்வேண்டும். பெரியோர்களைப்பூஜித்தால் ஆயுளும் கீர்த்தியும் ஸம்பத்தும்கூடியிருப்பான். உதிக்குங்காலத்திலுள்ள ஸூர்யனைப்பார்க்கக்கூடாது. பரஸ்திரீயையும் ஆடையில்லாதஸ்திரீயையும் பார்க்கக்கூடாது. புணர்ச்சியென்பதை எப்பொழுதும் தர்மவழிவிட்டுவிலகாமல் ரஹஸ்யத்திலேயே செய்யவேண்டும். குருவானவர் தீர்த்தங்களுள் ரஹஸ்யமானதீர்த்தமாவார். சுத்திகளுள் அக்னியானது உத்தமமான சுத்தியாகும். பெரியோர்களால்செய்யப்படுவனவெல்லாம் கர்மவழியாகும். பசுவின்வாலைத்தொடுவதும் புண்யமாகும். தினந்தோறும் பார்க்கும்பொழுதெல்லாம் (பிராம்மணர்களை) ஸுகப்ரச்னஞ்செய்யவேண்டும். காலையிலும்மாலையிலும் ப்ராம்மணர்களுக்கு நமஸ்காரஞ்செய்யவேண்டுமென்று உபதேசிக்கப்பட்டிருக்கிறது. தேவாலயத்திலும் பசுக்களின்நடுவிலும் ப்ராம்மணர்களின்நடுவிலும் கர்மாநுஷ்டானஸமயத்திலும் வேதாத்யயனகாலத்திலும் போஜனஞ்செய்யும்பொழுதும் வலக்கையை [2]வெளியிலெடுத்துக்கொள்ளவேண்டும். காலையிலும் மாலையிலும் ப்ராம்மணர்களை விதிப்படி பூஜிப்பது விலையுள்ளவஸ்துக்களுள் உத்தமமானவிலையுள்ள

1 'ப்ருஷ்டமாம்ஸம்' என்பது மூலம்; 'ச்ராத்தத்தில் மிச்சமானமாம்ஸத்தை' என்பதுபழையஉரை.

2 'யஜ்ஞோபவீதியாயிருக்கவேண்டும்' என்பது பழையஉரை.

தாகவிளங்கும்; ஸம்பத்துள்ளகிருஷிகளுள் உத்தமமானகிருஷியாயும்விளங்கும்; அதிகமாகத்தான்யங்களைசேர்ப்பதுபோலவுமாகும். எப்பொழுதும் போஜனமளிக்கும்பொழுது அளிப்பவன் 'ஸம்பந்நம்' என்றுசொல்லவேண்டும். பெற்றுக்கொள்பவன் 'ஸுஸம்பந்நம்' என்று சொல்லவேண்டும். குடிக்கஜலமளிக்கால் அளித்தவன் 'தர்ப்பணம்' என்றும் பெற்றுக்கொண்டவன் 'ஸுதர்ப்பணம்' என்றும் பாயஸமளிக்கும்பொழுதும் அதுபோல் கஞ்சியையும் சித்ரான்னத்தையும் அளிக்கும்பொழுதும் அளித்தவன் 'ஶ்ரிதம்' என்றும் பெற்றுக்கொண்டவன் 'ஸுஶ்ரிதம்' என்றும் சொல்லவேண்டும். க்ஷௌரஞ்செய்துகொள்ளுகிறவனையும் அப்படியே தும்முகிறவனையும் ஸ்நானஞ்செய்கிறவனையும் போஜனஞ்செய்கிறவனையும் எல்லா நோயாளிகளையும் காணும்பொழுது, 'ஆயுஷ்யம்' என்றுசொல்வது ஸந்தோஷிக்கத்தக்கதாகும். ஸூர்யனுக்கெதிர்முகமாக மூத்திரம் விடக்கூடாது. தன்னுடையமலத்தைப்பார்க்கக்கூடாது. புத்திரர்களுடனும் ஸ்த்ரீயினுடனும் படுக்கையையும் போஜனத்தையும்விலக்கவேண்டும். பெரியோர்களின் பெயரைச்சொல்லுவதையும் அவர்களைப்பற்றி நீயென்றுசொல்லுவதையும் விலக்கவேண்டும். கீழானமனிதர்களைப்பற்றியும் ஸமமானமனிதர்களைப்பற்றியும் இவ்விரண்டையும் சொல்லுவது குற்றமாகாது. கெட்டநடையுள்ளமனிதர்களின் மனத்திலுள்ள கெட்டஎண்ணத்தை அவர்களின்முகக்குறி வெளியிட்டுச்சொல்லும். பலஜனங்கள் அறிந்துகொண்ட (பாபத்தை) மறைக்கிறமனிதர்கள் நாசமடைகிறார்கள். பலகலைகளைக்கல்லாதமனிதர்கள் தெரிந்துசெய்யப்பட்ட பாபத்தை மறைக்கிறார்கள். இதைப்பாமரைய மனிதர்கள்காணவிட்டாலும் தேவர்கள் நிச்சயமாகக்காண்பார்கள். [1]பாவத்தால் மறைக்கப்பட்டபாவமானது பாவிகளையே தொடர்ந்துகொண்டிருக்கும். தர்மத்தால்மறைக்கப்பட்டதர்மமானது தர்மாத்மாவினையே தொடர்ந்துகொண்டிருக்கும். இவ்வுலகில் மூடனானவன் தான்செய்தபாவத்தை நினையாமலிருக்கிறான். அந்தப்பாவமானது [illegible] செய்தமனிதனை [illegible]. [illegible] பிடிக்கிறது [illegible] அவனைப் பிடிக்கும். [illegible] அடைகிறது. [illegible]

1 'பாபத்தைமறைக்கவேண்டாம் [illegible]' என்றும் 'தர்மத்தை வெளியிடாமலிருக்கவேண்டும்' என்பதும் பழையபாடம்.

படுகிறதில்லை. மரணமானது (அதை), எதிர்பாராது. அறிவுள்ளவர்கள் எல்லாப்ராணிகளுக்கும் மனத்தால்செய்யப்படுவதைத் தர்மமென்றுசொல்லுகிறார்கள். ஆகையால், எல்லாப்ராணிகளிடங்களிலும் மனத்தால்க்ஷேமத்தைச்செய்யவேண்டும். தர்மத்தை ஒருவனாகவே செய்யவேண்டும். தர்மத்திற்கு வேறுஸஹாயமிருப்பதென்பதில்லை. மனத்தில் தர்மமில்லாமலிருக்கையில் வெறுவிதியைமாத்திரம்அடைந்துகிடைத்தஸஹாயமானது என்னசெய்யக்கூடும்? தர்மமானது மனிதர்களுக்குக் காரணமாகிறது; தேவலோகத்திலுள்ள தேவர்களுக்கு அம்ருதமாகிறது. மறுபிறப்பில தர்மத்தாலுண்டான ஸுகம் அந்தத் தர்மத்தைச்செய்தமனிதர்களால் இடைவிடாமல் அனுபவிக்கப்படுகிறது" என்றுசொன்னார்.

---

## நூற்றுத்தொண்ணூற்றிரண்டாவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், ஆத்மதத்வத்தையும் பூதங்களின்காரியங்களையும் முக்தனுடைய கின்செயல்களையும்பற்றிச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! இவ்வுலகில்மனிதனுக்கு ஆத்மாவைப் பற்றிச் சிந்திக்கத்தக்கதாகச் சொல்லப்படுகிற அத்யாத்மமென்பது எது? அது எத்தன்மையது? அதனை எனக்கு உபதேசிக்கவேண்டும். ப்ரம்மருஷியாயிருப்பவரே! ஸ்தாவரம்ஜங்கமம்என்ற இவ்வுலகம் யாவும் எதிலிருந்து உற்பத்தியடைந்தது? ப்ரளயகாலத்தில் எதில் போய்ச்சேருகிறது? அதனை நீர் எனக்குஉபதேசிக்கவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"அப்பா! பார்த்தனே! நீ என்னிடம் ப்ரச்னஞ்செய்கிறதும் மேன்மையைச்செய்வதுமான மிகச்சிறந்ததும் சுபமும் ஆசார்யர்களால் கண்டுபிடிக்கப்பட்டதுமான அத்யாத்மமென்ற இந்த விஷயத்தை (மோக்ஷ) சாஸ்திரங்களுடன் நான் உனக்கு விரிவாகச் சொல்லுகிறேன். எந்த மனிதன் அதைஅறிந்தால் ப்ரீதியையும் ஸௌக்யத்தையும் அடைவான். அவனுக்குஇஷ்டமான பலன்களெல்லாமும் உண்டாகும். அது எல்லாப்ராணிகளுக்கும் ஹிதமானதாயிருக்கிறது. பார்த்தனே! உறுதியானநிலையுள்ளதும் மாசற்றதுமான ஆத்மாவை அஜ்ஞானமென்னும்இருளானது எப்

பொழுதும் இவ்விதம்மறைத்துக்கொண்டு அந்தஆத்மரூபத்தில் தோ ன்றுகிறது. சந்திரன் எவ்விதமோ அவ்விதமே அந்த ஆத்மரூபமிருக் கிறது. அதைத்தெரிந்துகொண்டஇந்தமனிதன் பாவங்கள் நசிக்கப் பெற்று ப்ரம்மரூபத்தை அடையத்தக்கவனுகிறான். அண்டத்திற்கு ஆவரணமாயிருப்பவைகளின் அப்புறத்திலுள்ளஇருள்போல அஜ்ஞானமிருக்கிறது. பூமியும் வாயுவும் ஆகாயமும் ஜலமும் ஐந்தாவதானதேஜஸுமானமஹாபூதங்களானவைகள் எல்லாப்ராணிகளுடைய உத்பத்திக்கும் லயத்திற்கும்காரணமாயிருக்கின்றன. அந்தமஹாபூதங்கள் கடலினுடையஅலைகள்போல எந்தப்பூதங்களிலிருந்து உத்பத்தியடைந்தனவோ அந்தப்பூதங்களிலேயே திரும்பவும்திரும்பவும் லயப்படுகின்றன. ஆமையானது தன் அங்கங்களை வெளியில்பரவச்செய்து திரும்பவும் சுருக்கிக்கொள்ளுகிறதுபோல ஐந்துபூதங்களையும் உருவமாகக்கொண்ட ஆத்மாவானது அந்தப்பூதங்களை உத்பத்தி செய்து திரும்பவும் சுருக்கிக்கொள்ளுகிறது. பரதர்களில்சிறந்தவனே! சரீரத்தில் அந்தப்பூதங்களின்குணங்கள் ஒன்றுசேர்ந்துகொண்டிருக்கின்றன. அந்தக்குணங்களானவை எப்பொழுதும் லயமடைகின்றவைகளும் உத்பத்தியடைகின்றவைகளுமாயிருக்கின்றன. (சரீரத்தில்) எஃதுஇல்லாவிட்டால கேட்பதும் பார்ப்பதும் ப்ரகாசிப்பதுமில்லையோ இவை எதைஅடுத்திருக்கின்றனவோ அஃது அக்காரணம் பற்றி அத்யாத்மமென்று சொல்லப்படுகிறது. அஃது ஒரே உருவமுள்ளதென்று சொல்லபடுவதும் பலவிதமானப்ரஜ்ஞைகளுடன்கூடியதுமான அறிவாயிருக்கிறது. அவ்விதமிருக்கும்பொழுது சொல்லுதற்கரிதான அந்தஆத்மாவில் உன்னுடையவாக்கானது பொருத்தமுள்ளதாகாது. புஜிக்கத்தகுந்தவர்கள்விஷயமாக (சப்தமுதலிய) மிகப்பெரியகுணங்கள் ஆகாயத்திலிருந்தல்லவோ உண்டாகின்றன. இவ்விதம் ஸ்தாவரமும் ஜங்கமமுமான இவ்வுலகம்முழுமையும் அந்த ஆத்மஉருவமாகவேயிருக்கிறது. ப்ரளயகாலத்திலும் அந்தஆத்மாவிற்செல்லுகிறது. திரும்பவும் அதிலிருந்து உத்பத்தியடைகிறது. பூதங்களை உருவமாகக்கொண்டபரமாத்மா மஹாபூதங்களைப்படைத்துத் திரும்பவும் லயமடையச்செய்கிறார். பூதங்களைப்படைத்தபரமாத்மா ஐந்துமஹாபூதங்களையும் எல்லாப்ராணிகளிடத்திலும்ஸமமாகப்பண்ணியேயிருக்கிறார். அந்தமஹாபூதங்களிலுள்ளவேற்றுமையை ஜீவனானது பார்க்கிறதில்லை. சப்தமும் செவியும் இடைவெளிகளுமாகிய மூன்றும் ஆகாயத்திலிருந்து உண்டானவை. ஸ்பர்சம், சேஷ்டை, த்வக்குஎன்றமூன்றும் வாயுவிலிருந்து உண்டானவையாகக்கருதப்

படுகின்றன. தேஜஸ், ரூபம் கண் (உணவுமுதலியவை) பாகமாவதற்குக் காரணமானசூடுஎன்று மூன்றுவிதமாகச் சொல்லப்படுகிறது. ரஸம், ஈரம், நாஎன்றமூன்றும் ஜலத்தின் குணங்களென்று சொல்லப்படுகின்றன. மணம், மூக்கு, சரீரம்இந்தமூன்றும் பூமியின்குணங்களாகின்றன. மஹாபூதங்கள் ஐந்தே. மனம் ஆறாவதென்றுசொல்லப்படுகிறது. ஓ! பாரத! இந்திரியங்களும் மனமும் இந்தஜீவனுக்கு ஞானத்திற்குக்காரணங்களாயிருக்கின்றன. புத்தியென்பது ஏழாவதென்றும் க்ஷேத்ரஜ்ஞனானஜீவனே எட்டாவதென்றும்சொல்லுகிறார்கள். [1] கண்ணானது பார்க்கவேண்டியதற்காகவே. மனமானது ஸந்தேஹத்தைஉண்டுபண்ணுகிறது. புத்தியானது நிச்சயத்தைச்செய்கிறதாயிருக்கிறது. க்ஷேத்ரஜ்ஞனானஜீவன்ஸாக்ஷிபோலிருந்துகொண்டிருக்கிறது. புத்தியானது சைதன்யசக்தியால் வ்யாபிக்கப்பட்டுச் சேதனையென்று ப்ரஸித்திபெற்றதாயிருக்கிறது. அவ்விதமிருக்கும்பொழுது ஜீவனானதுசேதனையைவிட வேறானதாகி அறிந்துகொண்டிருக்கிறதென்றுகாணப்படுகிறது. தமோகுணமென்னும் அஜ்ஞானமானது சரீரத்தைவிடுவதும் விடாததுமாகக் காணப்படுகிறது. ஸாக்ஷியான ஆத்மாவானது அவ்விதஅஜ்ஞானத்தை அறிவதும் அல்லது அதைவிலக்குவதுமாயிருக்கிறது. இரண்டுஉள்ளங்கால்களுக்கும்மேலுள்ள இந்தச் சரீரத்தை எது கீழும்மேலும்அறிந்துகொண்டிருக்கிறதோ இந்தஆத்மரூபத்தால உள்ளிலுள்ள இதுயாவும்வ்யாபிக்கப்பட்டிருக்கிறதென்று தெரிந்துகொள். இவ்வுலகிலுள்ளபுருஷர்கள் இந்திரியங்களைமுழுமையையும் [2]ஜயிக்கவேண்டும். ஸத்வம், ரஜஸ், தமஸ்என்கிற குணங்களையும்வெல்லவேண்டும். அந்தமூன்றுகுணங்களும் அந்தஇந்திரியங்களை ஆச்ரயித்தவைகளாயிருக்கின்றன. மனிதன் இதைஅறிந்துகொண்டு பிராணிகளுக்குள்ள உத்பத்தியையும் லயத்தையும் தன்புத்தியால் பார்த்துக்கொண்டால் மெள்ளமெள்ள உத்தமமான ஆத்மானந்தத்தைப் பெறுவான். புத்தியானது, ஸத்வம்ரஜஸ்தமஸ்என்ற முக்குணங்களாலும் பலவிதமாகஇழுக்கப்படுகிறது. இந்திரியங்கள் ஐந்தும் ஆறாவதானமனமுமாகிய யாவும் புத்தியின்உருவமே. புத்தியில்லாவிட்டால் அக்குணங்கள் எங்கிருந்துஉண்டாகும்? இவ்விதமிருப்பதைப் பார்க்க ஸ்தாவரங்களும் ஜங்கமங்களுமான இவ்வுலகமனைத்தும் புத்திமயமாகவே ஆகிறது. (புத்தியானது லயமடைந்தால்) உலகம்

---

1 ஆதுபோலமற்றஇந்திரியங்களும் அந்த அந்தவிஷயங்களை அறிவதற்காகவென்றுதெரிந்துகொள்ளவேண்டும்.

2 'அறியவேண்டும்' என்பதுவேறுபாடம்.

லயமடைகிறது.(புத்திஉத்பத்தியடைந்தால்) உலகம்உற்பத்திஅடைகிறது. அக்காரணம்பற்றியே புத்தியானது வேதங்களில் இவ்விதம் உபதேசிக்கப்படுகிறது. புத்தியானது எந்தஉருவத்துடன் பார்க்கிறதோ அந்தஉருவம் கண்ணாகிறது. எந்தஉருவங்கொண்டு கேட்கிறதோ அந்தஉருவம் செவியென்று சொல்லப்படுகிறது. மணத்தைஅறியும் பொழுது அதை மூக்கென்றுசொல்லுகிறார்கள். நாக்குவடிவமாக அது ரஸத்தைஅறிகிறது. த்வக்உருவமாக அது ஸ்பர்சத்தைத்தெரிந்துகொள்ளுகிறது. புத்தியானது ஏககாலத்தில் பலஇந்திரியங்களின் உருவமான வேற்றுமையைஅடைகிறது. எந்தஉருவத்துடன் ஒருபொருளைநினைக்கிறதோ அந்தஉருவம் மனமாகிறது. ஐந்துவிதமான வெவ்வேறுபொருள்கள் புத்தியின்இடங்களாகின்றன. அவைகளை ஐந்துஇந்திரியங்களென்று சொல்லுகிறார்கள். அவ்விந்திரியங்களைப் புத்தியானது காணப்படாமல் பிடித்துக்கொண்டிருக்கிறது. புத்தியானது ஆத்மாவினால்பிடிக்கப்பட்டதாய் ஸத்வமுதலிய மூன்று குணங்களிலும் இருந்துகொண்டிருக்கிறது. அதுஒருஸமயத்தில் ஸந்தோஷத்தையடைகிறது; ஒருஸமயத்தில் சோகப்படுகிறது. ஒருஸமயத்தில் ஸுகத்துடன்கூடாமலும் துக்கத்துடன்கூடாமலுமிருக்கிறது. இவ்விதம் மனிதர்களின்மனத்திலுள்ள மூன்றுகுணங்களிலுமிருப்பதும் எல்லாவஸ்துக்களின் உருவமுமான அப்படிப்பட்ட இந்தப்புத்தியானது, நதிகளுக்குப்பதியும்பெரியஅலைகளுள்ளதுமான கடலானது அந்நதியின் பெரியஅலையைமீறியிருப்பதுபோல இந்தமூன்று குணங்களையும்மீறி ஆத்மரூபத்திலேயிருக்கும். இவ்விதம் வேற்றுமையில்லாத ஆத்மரூபத்தையடைந்த புத்தியானது மனமென்ற உருவத்தில்ஸூக்ஷ்மமாயிருக்கும். பிறகு, (மனத்திலிருந்து) சலிக்கத் தொடங்கும் ரஜோகுணமானது புத்தியின் உருவத்தைத்தொடர்ந்து கொண்டிருக்கும். அப்பொழுது ரஜோகுணத்தால்தொடரப்பட்ட அந்தப்புத்தியானது எல்லாஇந்திரியங்களையும் வெளியிற்செல்லும்படி செய்யும். பிறகு, இந்திரியங்களால் விஷயங்களிற்சென்றவுடனுண்டையான அறிவும் புருஷஸந்தோஷமான ஸுகமுதலிய ஸத்வகுணத்தாலும் தமோகுணத்தாலுண்டாகும் (மோஹமான) பலவிஷயஞானங்களுமுண்டாகின்றன. புத்தியானது ஸத்வகுணமும் ஸந்தோஷமானது ரஜோகுணமும் மோஹமானது தமோகுணமுமென்னும் அந்தமூன்று குணங்களுடன் மூன்றுஉருவமாயிருக்கின்றன. இவ்வுலகத்தில் எந்தஎந்தப்பொருள்கள் இருக்கின்றனவோ அவைகளெல்லாம் இந்தமூன்றுகுணங்களையும் முழுதும்பற்றியிருந்துகொண்டிருக்கின்றன. ஓ பாரத! இவ்விதம் புத்தியின்வழி

யனைத்தும் உனக்கு விரிவாகச்சொல்லப்பட்டது. அறிவுள்ளமனிதன் இந்திரியங்களையெல்லாம் வெல்லவேண்டும். ஸத்வம், ரஜஸ், தமஸ் (என்றமூன்றுகுணங்களும்) எப்பொழுதும் பிராணிகளை அடுத்தவைக ளாயிருக்கின்றன. ஓ ! பாரத ! ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்ற மூன்றுவிதமான [1]வேதனையானது எல்லாப்ராணிகளிடங்களிலுமே காணப்படுகிறது. ஸுகத்தைத் தொடர்ந்துகொண்டிருக்கும் ஸத்வ குணமும் துக்கத்தைப்பற்றியதான ரஜோகுணமும் தமோகுணத்துட ன்கூடி உலகநடையிலிருந்துகொண்டிருக்கின்றன. அவைகளில் சரீரத் திலோ மனத்திலோ எதுப்ரியத்துடன்கூடியதாயிருக்கிறதோ அது ஸத்வகுணத்திலிருந்துண்டானபொருளாயிருக்கிறதென்று தெரிந்து கொண்டு அதை அவ்விதம் உபேக்ஷைசெய்யவேண்டும். பிறகு, எது துக்கத்துடன்கூடியதும் தனக்கு அப்ரியத்தைச்செய்கிறதுமாயிருக் கிறதோ அதை ரஜோகுணம்நடைபெற்றிருக்கிறதென்றே நினைத்துக் கோபத்துடன்சிந்தியாமலிருக்கவேண்டும். பிறகு, எது மோஹத்து டன் கூடியதும் இந்திரியங்களுக்குப்புலப்படாதவிஷயங்களுள்ளதும் ஊஹிக்கத்தகாததும் அறியக்கூடாததுமாயிருக்கிறதோ அதைத் தமோகுணமென்று நிச்சயஞ்செய்துகொள்ளவேண்டும். ஸந்தோ ஷம், ப்ரியம், ஆனந்தம், ஸுகம், மனத்தில் நல்ல அடக்கம் என்றஇந்த ஸாத்விககுணங்கள் மிக அருமையாக உண்டாகின்றன. ஸந்தோஷமில் லாமையும் பரிதாபமும் சோகமும் பேராசையும் பொறாமையும் ரஜோ குணத்தினுடையாளங்களாகும். அவைகள் காரணத்தாலும்காரண மில்லாமலும் காணப்படுகின்றன. அபமானமும் அவிவேகமும் அஜா க்ரதையும் தூக்கமும் சோம்பலும் மற்றும்பலவிதங்களுமான தாமஸ குணங்கள் மிகவும் பாக்யக்குறைவாலுண்டாகின்றன. [2]கிட்டாதவிஷ யத்தில் செல்லுவதும் [3]பலவிதமாகச் செலலுந்தன்மையையும் தீன மாகயாசிப்பதையும் ஸந்தேஹத்தையும் உருவமாகக்கொண்டதுமான மனமானது எவனுக்கு நல்லஅடக்கமுள்ளதாயிருக்கிறதோ அவன் இவ்வுலகிலும் இறந்தபின்னும் ஸுகமுள்ளவனாயிருப்பான். ஸூக்ஷ் மமானபுத்தி க்ஷேத்ரஜ்ஞனான ஆத்மா இவ்விரண்டினுடைய இந்த வேற்றுமையைப்பார். இவைகளில் [illegible] குண ங்களை உண்டுபண்ணுகிறது. மற்றொன்றான ஆத்மாவானது அஹங்கா

1 வேதனை = அநுபவம்.

2 [illegible]

3 [illegible]
[illegible]

முதலியகுணங்களை உண்டுபண்ணுகிறதில்லை. 'கொசுவும் அத்திமரத்தின்காயும் எப்பொழுதும்சேர்ந்துகொண்டிருப்பதுபோல இந்த ஆத்மாவும் புத்தியும் ஒன்றோடொன்று சேர்ந்துகொண்டிருக்கின்றன. ஆத்மா புத்தி இவ்விரண்டுகளின்சேர்க்கையானது அத்திக்காய்க்கும் கொசுவுக்குமுள்ள சேர்க்கைபோலாகும். இயற்கையில் வேறான ஆத்மா புத்தி இவ்விரண்டும் எப்பொழுதும் சேர்க்கையை அடைந்துகொண்டிருக்கின்றன. மீனும் ஜலமும் எவ்விதம் சேர்ந்துகொண்டிருக்கின்றனவோ அதுபோலவே அந்தப்புத்தியும் ஆத்மாவும் சேர்ந்துகொண்டிருக்கின்றன. (புத்தியிலுள்ள) குணங்களானவை ஆத்மாவைஅறிகிறதில்லை. அந்தஆத்மாவானது (புத்தியிலுள்ள) குணங்களைமுழுதும் அறிகிறது. குணங்களுக்குஸாக்ஷியான அந்தஆத்மாவானது பார்க்கப்படுங்குணங்களைத் தன்னுடன்சேர்ந்தவைகளாக நினைக்கிறது. தீபம்போலுள்ளபரமாத்மாவானது சேஷ்டையில்லாதவைகளும்அறிவில்லாதவைகளும்புத்தியைஏழாவதாகக்கொண்டவைகளுமான (ஆறு) இந்த்ரியங்களின் வழியாய்த் தீபத்தின்கார்யமான விஷயப்ரகாசத்தைச்செய்கிறது. புத்தியானது குணங்களை உண்டுபண்ணுகிறது. க்ஷேத்ரஜ்ஞனானஆத்மா அவைகளைப்பார்த்துக்கொண்டிருக்கிறது. புத்தி க்ஷேத்ரஜ்ஞன்என்னும்அவ்விரண்டுக்குமுள்ள இந்தச்சேர்க்கையானது அனாதியாயிருக்கிறது. புத்தியென்னும் ஸத்வத்திற்கு இருப்பிடமில்லை. க்ஷேத்ரஜ்ஞனான ஆத்மாவிற்கும் இடமாயிருப்பதொன்றுமில்லை. புத்தியானது மனத்தைவெளிப்படுத்துகிறது. ஒருபொழுதும் குணங்களைவெளிப்படுத்துகிறதில்லை. எப்பொழுது மனிதன் அந்தக்குணங்களின்கிரணங்கள்போன்ற இந்த்ரியங்களை மனத்தால நன்குஅடக்குகிறானோ அப்பொழுது குடத்திலப்ரகாசிக்கும்தீபம்போல இவனுடைய ஆத்மா ப்ரகாசமாகிறது. அவன்இயற்கையிலுண்டானகர்மாவைத்தள்ளிவிட்டு எப்பொழுதும் ஆத்மாவில் ப்ரீதியுள்ளவனும் முனியுமாயிருக்கிறானோ அவன் அந்தக் கர்மத்யாகத்தால் ஸகலப்ராணிகளின்ஆத்மரூபியாயுமிருந்துகொண்டு உத்தமமானகதியைஅடைவான். ஜலத்திலஸஞ்சரிக்கும்அன்னப்பறவையானது எவ்விதம் (அந்த) ஜலத்துடன் ஒட்டுதலில்லாமலிருக்கிறதோ அவ்விதமே ஆத்மரூபத்தின் அறிவை அடைந்தவன் ப்ராணிகளிடங்களில பற்றுதலின்றியிருப்பான். இவ்விதம் பற்றுதலில்லாதஸ்வபாவமுள்ள இந்தஆத்மரூபத்தைத் தன்புத்தியால தெரிந்துகொண்டமனிதன் விளையாடிக்கொண்டிருப்பான். சோகப்படாமலும் ஸந்தோஷப்படாமலும் மாத்ஸர்யமில்லாமலும் அவன் ஸஞ்சரித்துக்கொண்டிருப்

பான். ஆத்மரூபத்தின் ஸ்வபாவ அறிவுடன்கூடிய அந்தமனிதன் எப்பொழுதும் வேண்டியபொருள்களை, எட்டுக்கால் பூச்சியானது நூலை உண்டுபண்ணுவதுபோல உண்டுபண்ணுகிறான். குணங்களானவைகள் நூல்கள்போலென்று தெரிந்துகொள்ளவேண்டும். (ஞானத்தால்) நாசமடைந்தகுணங்கள் நிவிருத்தி அடைவதில்லை. நிவிருத்தியானது ப்ரத்யக்ஷத்தால் அறியப்படுகிறதில்லை. அஃது அனுமானத்தால் பரோக்ஷமாகவித்திக்கிறது என்று இவ்விதம் [1]சிலவாதிகள்நிர்ணயஞ்செய்கிறார்கள். மற்றுமுள்ளசிலவாதிகள் குணங்களுக்கு நிவிருத்தியென்றேநிச்சயிக்கிறார்கள். இவ்விரண்டையும் நன்றாகவிசாரித்து (இதைத்தன்) புத்திக்குத்தக்கபடி நிச்சயஞ்செய்துகொள்ளவேண்டும். இவ்விதம்உறுதியுள்ளதும் புத்தியால்செய்யப்பட்டவேறறுமையை முக்யமாகக்கொண்டதுமான இந்த ஹ்ருதய [2]க்ரந்தியென்னும் அஞ்ஞானத்தைவிலக்கிக்கொண்டு ஸுகமாகஇருக்கவேண்டும். ஸந்தேகங்கள் அறுபட்டவனாய்ச் சோகப்படாமலிருக்கவேண்டும். அழுக்குள்ளமனிதர்கள், நிறைந்தநதியில்இறங்கி ஸ்நானம்செய்து பரிசுத்தியை அடைவதுபோல இந்தஞானத்தை அடைந்தவர்கள் நல்லறிவுள்ளவர்களாகிறார்களென்றுதெரிந்துகொள். ஆனால்,பெரியநதியில்விழுந்தவன் அதன் கரையைக்கண்டு(அதைஅடையவேண்டித்) தாபமடைவான். அந்தத்

1 'ஆத்மஞானத்தால் குணங்கள் நசிக்கின்றன' என்றவிஷயத்தில் வெவ்வேறுகொள்கைகளுண்டு. இந்தக்குணங்கள் தத்வஞானிக்குப் புலப்படாமல் போனாலும் அவைகளில்லாமல்போவதில்லை. இல்லாமல்போமாகில் அந்தக் குணங்களைக் காரணமாகக்கொண்ட உலகம் மற்றஜீவர்களுக்கும் புலப்படாமல் போகவேண்டும். ஆகையால்,அவ்விதம்சொல்லுவது ப்ரத்யக்ஷத்திற்குவிரோதமாகும். ஞானத்தைஅடைந்தஜீவனிடமும் அந்தக்குணங்கள் இருக்குமாகில் ஞானம் பயனற்றதாகும். ஆகையால், ஞானியானஜீவனிடமிருந்து விலகிக் குணங்கள் மற்றவர்களிடமிருக்கின்றனவென்று யோகமதத்தின்கொள்கை. குணங்கள் பலஅம்சங்களுள்ளனவாகையால் ஞானமுள்ளஜீவனைச்சேர்ந்த குணங்கள் இல்லாமற்போகின்றன. மற்றஅம்சங்கள் ஞானமில்லாதஜீவர்களிடம் முன்போலிருக்கின்றன. குணங்களின்நாசமானது நிவிருத்தியென்றும் பாதமென்றும் இருவகைப்படும். இவைகளில், ப்ரளயகாலத்தில் காரியங்களாவும்லயமடைந்து ஸத்வம், ரஜஸ், தமஸ் என்றவேற்றுமையும் [illegible] யிருப்பது நிவிருத்தியென்றுசொல்லப்படும். நிவிருத்தி [illegible] குணங்கள் திரும்பவும் ப்ரபஞ்சத்தைஉண்டுபண்ணும். ஞானத்தால் [illegible] குணங்களின்நாசம் பாதமென்றுசொல்லப்படுகிறது. இதில் [illegible] இல்லாமலேபோகின்றன. திரும்பவும் ப்ரபஞ்சம் உண்டாகிறதில்லை [illegible] வேதாந்திகளின்கொள்கை. இவைகளைத் தெளிவாக [illegible] யஞ்செய்துகொள்ளவேண்டும் என்பதுகருத்து.

2 'ஆத்மாவின் [illegible] புத்தியினுடையவையென்றும் புத்தியினுடைய குணங்கள் ஆத்மாவினுடையவையென்றும் மனத்திலுள்ள [illegible]' என்பது பழையவுரை.

தாபம்கரையை அடைந்தால் இராது. உண்மையாக ஆத்மாவை அறிந்த மனிதனே தாபமடையமாட்டான்; முக்யப்பயனை ஆத்மாவை அறிந்த உடனேயே (ஸம்ஸாரத்தைத்) தாண்டினவனாகிறான். இவ்விதம் ஆத்மாவைப்பற்றி எவர்கள் தெரிந்துகொள்ளுகிறார்களோ அவர்கள் அஜ்ஞானஸம்பந்தமில்லாத உத்தமமான ஞானத்தை அடைகிறார்கள். மனிதன் இந்தஜ்ஞானத்தை அடைந்து பிராணிகளின் உத்பத்தியையும் லயத்தையும் முழுதும் மெள்ளமெள்ளத் தன்புத்தியால் தெரிந்துகொண்டு உத்தமமானவைராக்யத்தை அடைகிறான். அறம்பொருள் இன்பம் என்ற மூன்றும் அநித்யமென்று அறிந்தவன் அந்த மூன்றையும் நன்றாகத் தெரிந்துகொண்டு மனத்தால் (ஆத்மாவை) விசாரித்து த்யானம்செய்கிறவனும் உண்மையான ஆத்மரூபத்தைக்கண்டவனும் உலகத்தைப்பற்றிய உத்ஸாஹத்திலிருந்து விலகியவனுமாய் முக்தியை அடைகிறான். வெவ்வேறான அந்த அந்த விஷயங்களில் விடப்பட்டவைகளும் தடுக்கமுடியாதவைகளுமான இந்திரியங்களை அடக்கத்தக்க புத்தியில்லாதவர்களால் ஆத்மாவானது அறியக்கூடியதாகிறதில்லை. இந்த ஆத்மாவை அறிந்தபின் அறிவுள்ளவனாவான். அறிவிற்கு வேறு என்னலக்ஷணமிருக்கிறது? இந்த அறிவை அடைந்து (உலகத்தை) இல்லாமல்செய்துகொள்ளுகிறான்; வேறுவிதமாகவும் (பிறர்களுக்குக்) காணப்படுவான். புகையால் மறைக்கப்பட்ட அக்னியானது ஜ்வாலையை வெளியிடாததுபோல (புத்தியை) வெளியிடுகிறதில்லையென்றும் எல்லாவிடத்திலும் காணப்படுகிறதில்லையென்றும் எதைச்சொல்லுகிறார்களோ சரீரத்திற்குப்பதியான அந்த ஆத்மாவானது தெளிவுள்ளதாகும்பொழுது மனிதன் இவ்விதம் மோக்ஷநிலையைப் பார்க்கிறான். [1] இந்திரியங்களுக்குப் புலப்படாதிருப்பதாலும் ஸூக்ஷ்மமாயிருப்பதாலும் மோக்ஷத்தின்வழியானது வெளிப்படுகிறதில்லை. [2] அந்த ஆத்மரூபத்தைத் தெரிந்துகொண்டபின் அறிஞர்கள் செய்யவேண்டியதைச் செய்துகொண்டதாக நினைக்கிறார்கள். ஆத்மரூபத்தை அறிந்துகொள்ளாதவர்களுக்கு மிகப்பெரியபயமுண்டாவதுபோல அதை அறிந்தவர்களுக்குப் பயமுண்டாகிறதில்லை. அதை அறிந்தவர்களுள் ஒருவனுக்குமட்டில் மேலான கதியென்பதில்லை. குணமிருக்குமிடத்திலன்றோ பேதமில்லாததென்று கூறுகிறார்கள்? எவன் பயனைக் கருதாமல் கர்மத்தைச்செய்கிறானோ அவன் முன்பிறப்பிலசெய்யப்பட்டபாபத்தையும் விலக்கிக்கொள்ளுகிறான். முன்பிறப்பிலுள்ளதும்

1 'அநிர்தேச்யத்' என்பது மூலம்.

2 இந்த அரைச்லோகம் விடப்பட்டது.

இப்பிறவியிலுள்ளதுமாகிய இந்தஇரண்டுகர்மங்களும் ஆத்மாவை அறிந்தஅவனுக்கு எவ்விதத்திலும் [1]அப்ரியத்தைஉண்டுபண்ணத் தக்கனவல்ல; [2]ப்ரியத்தைஎங்கிருந்துஉண்டுபண்ணும்? அறிவுள்ளமனிதன் கோபமுதலியவற்றால் துன்பப்படும்மனிதனை நிந்திப்பான். அறிவுள்ளவனால் நிந்திக்கப்படத்தக்க அந்தமனிதனுக்கு அவன்வினையானது இவ்வுலகில் எல்லாவிதமானபிறவியையும் உண்டுபண்ணும். பலவிதமான அந்தஅந்தவிஷயங்களைப்பற்றிச் சோகப்படுகிறவர்களும் கூச்சலிடுகிறவர்களுமான உலகத்திலுள்ள ஸம்ஸாரிஜனங்களைப் பார். ஸாதுக்கள் அடையத்தக்க [3]இரண்டுவிதமான அந்தப்பதத்தை எவர்கள் அறிகிறார்களோ அந்தஅறிவுள்ளவர்கள் அந்தவிஷயங்களில் சோகப்படாதவர்களாயிருப்பதையும் பார்.

---

## நூற்றுத்தொண்ணூற்றுமூன்றாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் த்யானயோகத்தை உபதேசித்தது.)

ஏ! பார்த்த! இவ்வுலகிலுள்ளமஹரிஷிகள் எந்தத்யானயோகத்தைஅறிந்துசாச்வதமானஸித்தியைப்பெற்றிருக்கிறார்களோநான்குவிதமான அந்தத்யானயோகத்தை இப்பொழுது உனக்குச்சொல்லுகிறேன். த்யானமானது எவ்விதம் நன்றாக அனுஷ்டிக்கப்படுமோ அவ்விதம்மோக்ஷத்திற்சென்றமனமுள்ளவர்களும்ஞானத்தில்திருப்தியுள்ளவர்களும் மஹரிஷிகளுமானயோகிகள் செய்கிறார்கள். பார்த்த! பிறப்பென்னுந்தோஷம்நீங்கப்பெற்றவர்களும்உண்மையான ஆத்மஸ்வரூபத்தில் உறுதியடைந்தவர்களும் ஸம்ஸாரதோஷத்திலிருந்து விடுபட்டவர்களுமாயிருப்பவர்கள் திரும்பவும் பிறப்படையமாட்டார்கள். மனிதர்கள் சீதோஷ்ணமுதலிய த்வந்த்வங்களிலிருந்து வெளிப்பட்டவர்களும் எப்பொழுதும் ஸத்வகுணத்திலிருப்பவர்களும் எப்பொழுதும் மோக்ஷத்தைஆச்ரயித்தவர்களுமாய் ஸ்திரீமுதலிய விஷயங்களின் ஸம்பந்தமில்லாதவைகளும் [4]விரோதிகளில்லாத

---

[1] பந்தமென்பதும், [2] மோக்ஷமென்பதும் பழையவுரையின் கருத்து.

[3] உபாஸனைசெய்கிறவர்கள் ப்ரம்மலோகஞ்சென்று அடையும்பதமொன்று; இருக்குமிடத்திலேயே ஞானிகளால் அடையப்படும் மோக்ஷபதம் ஒன்று.

[4] 'வ்யாதி, மனத்திற்கு ஊக்கமில்லாமலிருப்பது, ஸம்சேயம், அஜாக்ரதை, சோம்பல், ஆசை, ப்ராந்தி, ஸமாதியை அடையாமலிருப்பது, அடைந்த ஸமாதியில் உறுதியில்லாமலிருப்பது' என்றிவைகள் யோகத்திற்கு விரோதிகளாகும். (யோகஸூத்ரம், முதல்பாதம். 30 - வது ஸூத்ரம்.)

வைகளும் மனத்திற்குச் சாந்தியை உண்டுபண்ணுபவைகளுமான இடங்களை அடுத்தவர்களாயிருக்கவேண்டும். அவ்விடங்களில் த்யானம் பண்ணத்தக்கவஸ்துவுடன் நன்றாகச்சேர்ந்தமனத்தை ஒரேவிஷயத்தில் நிலைபெற்றதாயிருக்கச்செய்யவேண்டும். அந்தவிஷயத்தில் த்யானத்தால் மனத்தை நன்றாகத்தகைந்துநிறுத்துவதால் மனிதன் ஞானமுள்ளவனாகிறான். [1]எப்பொழுதும்விஷயத்திற்பற்றுள்ளவனானவன் [2]நான்குவிதமான பூதவஸ்துக்களில் ஸமாதிஅடைகிறானோ அவன் அந்தவஸ்துக்களின்உண்மையைஅறிந்துகொண்டுஅந்தவிஷயங்களில் சுற்றிக்கொண்டிருப்பான். இந்திரியக்கூட்டத்தைமனத்தில்ஒன்றாகச் சேரும்படிசெய்து கட்டைபோல (ஸமாதியிலிருப்பவனும்) யோகமறிந்தவனுமானமுனியானவன் செவியால் சப்தத்தைக்ரஹிக்கமாட்டான்; த்வக்கால் ஸ்பர்சத்தை அறியமாட்டான்; கண்ணால் ரூபத்தை அறியமாட்டான்; நாவால் ரஸங்களைஅறியமாட்டான்; மூக்கால் மோக்கத்தக்கயாவற்றையும் அறியமாட்டான்; (அவற்றை) விலக்கிவிடுவான். யோகபலம்பெற்றவன் ஐந்துஇந்திரியங்களின்வகுப்பையுந் துன்பப்படுத்துகிறவைகளான சப்தமுதலிய இந்தவிஷயங்களை விரும்பக்கூடாது. பிறகு, ஸாமர்த்தியமுள்ளவன் ஐந்துஇந்திரியங்களின்கூட்டத்தையும்மனத்திலஒன்றாகச்சேரும்படிசெய்து ஐந்துஇந்திரியங்களுடன்கூட வெளியிலோடுவதானமனத்தை ஸமாதியிலிருக்கும்படிசெய்வான். தீரனானமனிதன் விஷயங்களிலோடும்தன்மையுள்ளதும், பிடிப்பற்றதும், ஐந்து இந்திரியங்களையும் வழியாகக்கொண்டதும்,ஸ்திரமில்லாதவஸ்துக்களிலும்ஸ்திரமாயிருப்பதுமானமனத்தை முதலில் த்யானவழியில் நிலைபெறும்படிசெய்யவேண்டும். இந்தமனிதன் எப்பொழுது இந்திரியங்களையும் மனத்தையும்திரட்டி ஒன்றாகச் சேரும்படிசெய்கிறானோ அப்பொழுது இது முதன்மையானத்யானவழியாகிறதென்று என்னால்சொல்லப்பட்டது. ஐந்து இந்திரியங்களுடனும் ஆறாவதான ஆத்மாவுடனுங்கூடிய அந்தமனிதனுடைய அந்த மனம் அவ்விதம் முதலில த்யானத்தில தகைப்பட்டு மேகத்தில் மின்னல்சலிப்பதுபோல நடுவிலவெளிக்கிளம்பிச் சலிக்கத்தொடங்கும். (தாமரை)இலையிலிருக்கும் சஞ்சலமானநீர்த்துளியானது நான்கு

---

1 'எந்தமனிதன் தர்மார்த்தகாமமோக்ஷமென்னும் நான்குவிதமான புருஷார்த்தங்களுள் எப்பொழுதும் பொருளில் பற்றுள்ளவனாயிருக்கிறானோ அவன் அந்தப்புருஷார்த்தங்களின் அவ்விதமான உண்மையை அறிந்தபின்னும் பொருள்களிலேயேசுற்றிக்கொண்டிருப்பான்' என்றும்பொருளுண்டு.

2 'ஸ்தூலம், ஸூக்ஷ்மம், ஸூக்ஷ்மதரம், ஸூக்ஷ்மதமம்' என்று நான்கு விதங்கள்.

புறத்திலும் சலித்துக்கொண்டிருப்பதுபோல த்யானத்திலிருக்கும் இந்தமனிதனுடையமனமானது த்யானவழியில்சலித்துக்கொண்டிருக்கும். மனமானது ஒருக்ஷணம் த்யானவழியில் நிலைபெற்றதாகி நிற்கும். திரும்பவும் பிராணவாயுவைப்போல ப்ராணவாயுவின்வழியான நாடியை நாடியதாயிருக்கும். த்யானயோகத்தைத்தெரிந்துகொண்ட மனிதன் (இதில்) வெறுப்பில்லாமலும் வருத்தமில்லாமலும் சோம்பலில்லாமலும் மத்ஸரமில்லாமலும் திரும்பவும் மனத்தை த்யானத்துடன் சேர்த்துவைக்கவேண்டும். முதலாவதான த்யானவழியை அடைந்து ஸமாதியிலிருக்கும்யோகிக்கு ஆரம்பத்தில் [1]விசாரஸமாதியும் விதர்க்கஸமாதியும் விவேகஸமாதியுமுண்டாகும். யோகியானவன் மனத்தில் துன்பமுள்ளவனானாலும் ஸமாதியைச்செய்யவேண்டும்; வெறுப்பைஅடையக்கூடாது. தனக்கு நன்மையைச்செய்துகொள்ள வேண்டும். புழுதி, சாம்பல், சாணம் இவைகளின் குவிக்கப்பட்ட குவியல்கள் நீரால்நனைக்கப்பட்டவைகளானால் உடனே ஒருவடிவஞ் செய்யக்கூடியநிலையை எவ்விதம் அடைகிறதில்லையோ, இவைகளின் காய்ந்தபொடியானது (நனைத்தும்) ஊறவைக்கப்படாமற்போனால் கொஞ்சம்பிசுக்குள்ளதாய்எவ்விதமிருக்குமோ, க்ரமமாக அதுயாவும் மெள்ளமெள்ள உருண்டைசெய்யத்தக்கநிலையையும்அடையுமோ அவ்விதமே இந்திரியங்களின்கூட்டத்தைமெல்லமெல்ல நன்றாக லயமடையச்செய்யவேண்டும். காலக்ரமத்தில்இதைநசிக்கும்படிசெய்யவேண்டும். இவ்விதம்செய்யுமவன் மிகவும்நன்றாகச்சாந்தியைஅடைவான். பாரத! மனத்தையும் ஐந்துஇந்திரியங்களின்வகுப்பையும் தாமாகவே இவ்விதம் முதலில த்யானவழியில் நித்யமானயோகத்தால் நிலைக்கும்படிசெய்து சாந்தியை அடையவேண்டும். அது பௌருஷத்தாலும் எவ்விதத தெய்வத்தாலும் அடையமுடியாது. அவனுக்கு ஸமாதி ஸுகம் உண்டாகும். துன்பங்கள் வரமாட்டா. அந்தஸமாதிஸுகத்துடன்கூடியிருப்பவன் த்யானநிஷ்டையில் விளையாடிக்கொண்டிருப்பான். இவ்விதமாக யோகிகள் துன்பமில்லாததான அந்தமோக்ஷத்தை அடைகிறார்கள்" என்றுசொன்னார்.

---

1 ஸமாதியானவை ப்ரஜ்ஞாதஸமாதி அஸம்ப்ரஜ்ஞாதஸமாதி என இருவிதமாகும்: ஸ்தூலசரீரத்துடன் கூடிய [illegible] த்யானஸமாதி ஒன்று; அதுவில்லாமல் ஸூக்ஷ்மசரீரமாத்ரத்துடன் [illegible]; அதுவுமில்லாமல் காரண [illegible] பத்தியானஸமாதி ஒன்று. இவைகளில் [illegible] ஸவிதர்க்கஸமாதியென்றும் இரண்டாவது விசாரஸமாதியென்றும் மூன்றாவது விவேகஸமாதியென்றும் சொல்லப்படுகின்றன.

## நாற்றுத்தொண்ணூற்றுநான்காவது அத்தியாயம்.

### மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், ஜபத்தின்பயனையும் அதன்அநுஷ்டானவிதியையும்கூறியது.)

யுதிஷ்டிரர், "பூஜ்யரே! நான்குஆச்ரமங்களின்தர்மமும் அப்படியே ராஜதர்மங்களும் உம்மால்உபதேசிக்கப்பட்டன. பெரியபுத்தியுள்ளவரே! பலவிடங்களிலுள்ளவைகளும்வெவ்வேறுவிதங்களுமான இதிஹாஸங்களும் தர்மத்துடன்கூடிய கதைகளும் உம்மிடமிருந்து கேட்கப்பட்டன. ஆனால், எனக்கு ஒருஸந்தேகமிருக்கிறது. அதை நீர் சொல்லவேண்டும். பாரதரே! ஜபஞ்செய்கிறவர்களுக்குப் பயன் கிடைப்பதைக் கேட்கவிரும்புகிறேன். ஜபஞ்செய்கிறவர்களுக்கு என்னபயன் சொல்லப்பட்டிருக்கிறது? ஜபிக்கிறவர்கள் எந்தஉலகில் நிலைபெறுவார்கள்? தோஷமில்லாதவரே! ஜபத்தின்விதியை முழுமையும் நீர் எனக்கு உபதேசிக்கவேண்டும். ஜபிக்கிறவர்கள்செய்யும் இந்தவிதியானது ஞானத்தைச்சேர்ந்ததா? யோகத்தைச்சேர்ந்ததா? கர்மத்தின்விதியா? அல்லது இஃது ஒருயாகவிதிதானா? இந்தஜபமானது யாதென்றுசொல்லப்படுகிறது? இவ்வனைத்தையும் நீர் எனக்கு உபதேசிக்கவேண்டும். நீர் யாவற்றையும் அறிந்தவரென்றுஎன்னால கருதப்படுகிறீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"இவ்விஷயத்திலும் ஒருப்ராம்மணனுக்கும் [1]யமனுக்கும் காலனுக்கும் மிருத்யுவுக்கும் இக்ஷ்வாகுவுக்கும் முன்காலத்தில் தர்மகாரணத்தைப்பற்றிய விவாதவிஷயத்தில்நடந்த பழையஇவ்விதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். வேதாந்தத்தில் ஜபத்தைவிடுவதே சொல்லப்பட்டிருக்கிறது. [2]ஞானயோகத்திலிருக்கும் சாந்தபுருஷர்கள் வேதங்களிலிருந்தும் வேதாங்கங்களிலிருந்தும் விலகி ப்ரம்மரூபத்திலிருக்கிறார்கள். ஸமபுத்தியுள்ளவர்களான முனிவர்களால ஞானமென்றும் யோகமென்றும் எவைகள்சொல்லப்பட்டிருக்கின்றனவோ அந்தஇரண்டுவழிகளும் (ஜபவிதியை) ஆச்ரயித்தவைகளும் ஆச்ரயிக்காதவைகளுமாயிருக்கின்றன. ப்ரபுவே! இந்தவிஷயத்தில்

---

1 புண்யபாபங்களின் பயனைக்கொடுக்கும்தேவதை யமன்; ஆயுளின் அளவைக்கணக்கிடுந்தேவதை காலன், தேஹத்தையும் ப்ராணனையும் பிரிக்குந்தேவதை ம்ருத்யு.

2 'வேதவாக்யங்களும் மந்த்ரங்களும் நிதானமாயிருப்பவைகளும் ஸம்ருதிகளும் ... வைகளும் ... கருமாயிருக்கின்றன' என்பதுவேறுபாடம்.

காரணத்தையும்கேள்விப்பட்டபடி சொல்லுகிறேன். அரசனே! ஜப
யஜ்ஞத்தின்இந்தவிதியானது க்ரமமாகவிதிக்கப்பட்டிருக்கிறது. ஜப
யஜ்ஞமென்றசுபமானது மற்றொன்றின் பிடிப்புடன்கூடியதென்று
தெரிந்துகொள்ளவேண்டும். இந்தஇரண்டுவழிகளிலும்மனத்திற்குள்ள
ஸமாதிநிலையும், இந்திரியங்களின்ஜயமும், ஸத்யவசனமும், அக்னி
பூஜையும், [1]ஜனங்களில்லாவிடங்களைஸேவிப்பதும், த்யானமும், விஷ
யங்களிலுள்ளதோஷங்களை ஆலோசிப்பதும், அடக்கமும், பொறுமை
யும், அஸூயையில்லாமையும், கணக்குள்ளஆகாரமும், விஷயங்களை
விலக்குதலும், மிதவசனமும், இந்திரியங்களின்அடக்கமுமாகிய இந்
தத்தர்மங்கள் ஜபயஜ்ஞத்திற்குரியபயனைக்கொடுக்கத்தக்க ஸஹாயங்
களாகும். இனி ஜபயஜ்ஞத்தைச்செய்யும்ப்ரம்மசாரிக்கு எவ்விதம்
[2] கர்மம்விலகுகிறதோ நிவிருத்திக்குக்காரணமான அவ்விததர்மத்
தைக் கேள். அரசஸ்ரேஷ்டனே! ஜபமும் த்யானமும் விருப்பும்
வெறுப்பும் ஸந்தோஷமும் அந்தமோக்ஷவிஷயத்தில் தகுதியானவை
யல்ல. ஏனெனில், அது நன்றாகஅறிந்துகொள்ளத்தக்கதாகும். எப்
பொழுதும் ஜபத்தைஆவிருத்திசெய்துகொண்டும் ப்ரம்மசர்யத்திற்
குரியமந்திரத்தைஜபித்துக்கொண்டுமிருப்பவன் மோக்ஷமென்றபய
னிலபுத்தியுள்ளமனத்துடன்ஜபிக்கிறவனானால் பரமாத்மாவை அடை
வான். ஜபிக்கிறவன்நிலையையும் ஜபத்தையும்கூறும்வேதப்படி ப்ரண
வத்துடன்சேர்க்கப்பட்டகாயத்ரியானது சிறந்ததென்றுசொல்லப்படு
கிறது. ச்ருதிகளிலும் ஸ்ம்ருதிகளிலும்சொல்லப்பட்டதும் பரிசுத்த
மும் உசிதமுமான மற்றுமுள்ளமந்திரமும் சிறந்ததாகும். முன்கூறப்
பட்ட ஸத்யவசனமுதலிய இந்தத்தர்மம்யாவற்றையும் மச்சமின்றி
மோக்ஷத்திற்கு ஸாதகமாக மாற்றிக்கொள்ளவேண்டும். ஸ்தூலமும்
ஸூக்ஷ்மமுமான இரண்டுவிதயோகவழியையும்இடையூறின்றி அடை
ந்து [3]குசப்புற்கூட்டத்து விருப்பவனும்கையில்குசப்புற்களுள்ளவனும்

---

1 'சுத்தமான ஆஹாரங்களை உண்பது' என்றும்பொருளுண்டு.

2 வேறுபாடம்.

3 'குசமென்றால் குசமென்றபுற்களைப்போல அடிபருத்து நுனிசிறுத்த நாடிகளாகும். சரீரத்திலுள்ள ஹ்ருதயமென்னும் பத்மமானது [illegible] மேலும் கீழும் முன்னும்பின்னும் நான்குபுறத்திலும் அவ்விதநாடிகளால் வியாபிக்கப்பட்டிருக்கிறது. அந்தஹ்ருதயத்தின் [illegible] ஆகாசத்தில் பரமாத்மா [illegible] காணிக்கிறார். அவ்வாத்மாவை பரமாத்மாவை அடைய [illegible] வேண்டும்' என்பது இவருடைய அபிப்ராயம். [illegible] முறையை [illegible] இடமாகையால் கையிலும் தலையிலும் [illegible] குசமென்ற பரிசுத்தமான [illegible] என்று சொல்லலாம்.

தலையில்குசப்புற்களுள்ளவனும் குசப்புற்களால்நான்குபுறத்திலும் சூழப்பட்டவனும் அப்படியே குசப்புற்களால்மறைக்கப்பட்டு அவற்றின் நடுவிலிருப்பவனுமாயிருக்கவேண்டும். வெளியிலுள்ளவிஷயங்களை நமஸ்கரித்து விலக்கவேண்டும். உள்ளிலுள்ளவிஷயங்களையும் சிந்தியாமலிருக்கவேண்டும். மனத்தால் ஸமநிலையைஉண்டுபண்ணிக்கொண்டு மனத்திலேயே மனத்தைநிலைக்கச்செய்தவனும் ஹிதமான மந்திரத்தைஜபிப்பவனுமாயிருந்துகொண்டு அந்தஸமபுத்தியுடனே ப்ரம்மத்தை த்யானஞ்செய்யவேண்டும். அல்லது, மந்திரத்தின்பலத்தைஅடைந்து ப்ரம்மத்தைப்பற்றிய தியானத்தைஉண்டுபண்ணிக்கொள்ளவேண்டும். ஸமாதியில் நன்றாகநிலைபெற்றவன் பிறகு மந்திரத்தையும் விலக்கிக்கொள்ளவேண்டும். அல்லது, ஸாமர்த்தியமுள்ளமனிதன் தனக்கிஷ்டமானமந்திரத்தை முதலில்ப்ரணவமுள்ளதாக ஜபிக்கவேண்டும். [1]எந்தவஸ்துவிலேயேமனம்விழுந்துகொண்டிருக்கிறதோ அதில் மனத்தைநிலைக்கச்செய்யவேண்டும். அதுவும் ஸமாதிக்குக்காரணமாகும். மந்த்ரவிஷயத்திலோ, விதிப்படி [2]காயத்ரீமந்த்ரத்தை ஜபிக்கவேண்டும். [3]தவத்தால்பரிசுத்திபெற்றமனமுள்ளவனும் [4]அடக்கமுள்ளவனும் [5]பகையும்ஸ்நேஹமும்விலகியவனும் ஆசையும் அவிவேகமுமற்றவனும் குளிர்வெப்பமுதலிய த்வந்த்துவங்களிலிருந்துவிலகியவனுமாயிருப்பவன் சோகத்தையும் விஷயங்களில் பற்றுதலையும் அடையமாட்டான். அவன் செய்யவேண்டியவைகளைச் செய்கிறவனுமல்லன், செய்யத்தகாதவைகளைச் செய்கிறவனுமல்லனென்பதுதிண்ணம். மனத்தைஅஹங்காரத்துடன்சேர்ந்ததாய் எந்தவிஷயத்திலும் ப்ரயாணப்படச்செய்யாமலிருக்கவேண்டும். பொருளைப்பெறுவதில்முயற்சியுள்ளவனும் (பிறரை) அவமதிக்கிறவனும் காரியமில்லாதவனுமாயிருக்கக்கூடாது. த்யானஞ்செய்வதைப்பெரிதாகக்கொண்டவனும் அதில்முயற்சியுள்ளவனும் த்யானஞ்செய்கிறவனும் த்யானத்தால்நிச்சயமானஞானமுள்ளவனுமாயிருப்பவன் த்யானத்தில் ஸமாதியைஉண்டுபண்ணிக்கொண்டு காலக்ரமத்தில் அந்த

---

1 தனக்கிஷ்டமானவஸ்துவை த்யானஞ்செய்வதும் ஸமாதியை அடையத்தக்கஉபாயமானதொரு த்யோகமென்று யோகசாஸ்த்ரத்தில உபதேசிக்கப்பட்டிருக்கிறது. 'யதாபிமதத்யாநாத்வா' என்பதுஸூத்ரம்.

2 'ஸம்ஹிதாம்' என்பது பாடம்.

3 'விசாரதா...' என்பது பழையஉரை.

4 'இந்த்ரியங்களைஜயித்தவனும்' என்பது பழையஉரை.

5 'எல்லாபூதங்களிடத்திலும் ஸமமான மனதுள்ளவனாய் ... பரமாத்மாவை அறியவேண்டுமென்ற விருப்பமுள்ளவனும்' என்பது பழையஉரை.

த்யானத்தையும் விடவேண்டும். யாவற்றையும்விலகச்செய்துகொண்டவனும் அந்தநிலையில்ஸுகமுள்ளவனுமான ஆந்தயோகியானவன் விருப்பமில்லாதவனாய் ப்ராணன்களை விலக்குவான்; ப்ரம்மரூபமான சரீரத்தை அடைவான். ஸமாதியுள்ளவன்மரணத்தை அடைவதற்காக நினைத்து [1]நிர்விகல்பஸமாதியுள்ளவனாயிருக்கவேண்டும். அவன் எல்லாஉலகங்களையும்மீறிச்சென்று முறையேபரமாத்மாவைஅடைவான். அல்லது, அந்தஸமாதியில்பிரம்மரூபத்தின்அனுபவத்தைவிரும்பாமல் போனால் தேவயானமென்னும் மார்க்கத்திலிருந்துகொண்டு (ப்ரம்ம லோகத்திற்குக்) கிளம்பிப்போவான். வேறுஒரிடத்திலும் பிறப்பை அடையவேமாட்டான். [1](ஆத்மஞானத்தை நன்றாகஅடைந்து சாந்தியுள்ளவனும் துன்பமற்றவனும் ரஜோகுணமற்றவனுமாயிருப்பவன்) மோக்ஷரூபமான சுத்தஆத்மாவை அடைகிறான்" என்றுசொன்னார்.

---

## நூற்றுத்தொண்ணூற்றைந்தாவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், விதிப்படிஜபம்செய்யாதவனுக்குள்ளபயனைக் கூறியது.)

யுதிஷ்டிரர், "இவ்வுலகில் ஜபம்செய்கிறவர்களுக்கு நற்கதிகளுள் உத்தமமானகதிகிடைக்குமென்பதுசொல்லப்பட்டது. அவர்களுக்கு இக்கதிஒன்றேகதிதானா? அல்லது வேறுகதியையும் அடைகிறார்களா?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"புருஷர்களில்சிறந்தவனே! ப்ரபுவே! அரசனே! ஜபம்செய்கிறவர்களுக்குள்ள (வேறு) கதியையும் அதாவது அவர்கள்பலநரகத்தை அடையும்முறையையும் கவனத்துடன்கேள். ஜபம்செய்யும் எந்த மனிதன் முன்கூறிய இந்தநியமங்களைக் கூறியபடி அனுஷ்டிக்கவில்லையோ, இதில்ஒருபாகத்தைமட்டும்செய்கிறானோ அவன் நரகத்தை அடைவான். அவமதிப்புடனும் ஸந்தோஷமில்லாமலும் [2]பிரியமில்லாமலும் ஜபம்செய்கிறவன் நரகத்தை அடைவானென்பதிற்சந்தேகமில்லை. அஹங்காரமடைகிறவர்களனைவர்களுமே நரகத்தை அடைவார்கள். பிறர்களை அவமானஞ்செய்யும்மனிதன் வருங்காலத்தில் நரகத்தை அடைகிறவனாவான். அவிவேகமுள்ளதமனிதன் பயனைக் கருதியே ஜபத்தைச்செய்கிறானோ அந்தமனிதன் அவனுக்கு எந்த எந்தப்பயனில்விருப்பமிழுந்திருக்கிறதோ, அந்த அந்தப்பயனுக்குத்

---

1 'எவ்வகைப்பற்றையும்துறந்து' என்பதுமாம். 2 வேறுபாடம்.

தக்கபிறவியை அடைவான். மேலும், ஜபஞ்செய்கிறவன் அணிமா முதலியஐச்வர்யங்களில் பற்றதலுடன் எந்தஐச்வர்யத்தில் ஆசை பெற்றிருக்கிறானோ அந்தஐச்வர்யத்தின் ஆசையே அவனுக்கு நரகமாகும். அந்தமனிதன் அவ்வாசையிலிருந்துவிடுதலைபெறமாட்டான். ஜபஞ்செய்யுமெந்தமனிதன் அவிவேகமுள்ளவனாகி ஆசையுடன் ஜபத்தைச்செய்கிறானோ அவன் எந்தஎந்தவிஷயத்தில் அவனுக்கு ஆசை விழுந்திருக்கிறதோ அந்த அந்தவிஷயத்திற்குத்தக்கபடி பிறப்பான். கெட்ட புத்தியுள்ளவனும்விஷயங்களின்தோஷங்களை அறியாதவனுமாயிருப்பவன் சஞ்சலமானமனத்தை அடித்துநிற்பான்; பயனின் [1]பெருமையை அடைவான்; நரகத்தையும் அடைவான். கல்வி அறிவில்லாமல் ஜபஞ்செய்யுமெவன் மோஹத்தை அடைவான். அவன் அவிவேகத்தால் எந்தநரகத்திற்சென்று சோகப்படுவானோ அந்தநரகத்தை அடைவான். ஜபஞ்செய்யுமெவன் வைராக்யம்நிரம்பாமல் பலாத்காரமாகப் போகங்களைவிலக்கிவிட்டுப் பிடிவாதமுள்ளவனாய்ச் செய்வேனென்று ஜபத்தைச்செய்கிறானோ அவன் நரகத்தை அடைகிறான். உத்பத்தியில்லாததும் யாவற்றிலும்மேலானதும் இந்திரியங்களுக்குப்புலப்படாததும் ப்ரணவத்திலிருப்பதுமான ப்ரம்மத்தை அடைந்தவனை ஜபிப்பவன் இவ்வுலகில் சரீரத்தை அடையக்காரணமேது? அறிவின் குற்றத்தால் பலநரகங்கள் கூறப்படுகின்றன. சிறந்ததான ஜபமுறையும் அதைப்பற்றிய இந்தத்தோஷங்களும் சொல்லப்பட்டன" என்று சொன்னார்.

---

## நூற்றுத்தொண்ணூற்றொருவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், எல்லாத்தேவர்களின்ஸ்தானங்களும் பரமாத்மாவின் ஸ்தானத்தைவிட மிகத்தாழ்ந்தனவென்று சொல்லிப் பரமாத்மாவின் ஸ்தானத்தைப் புகழ்ந்தது.)

யுதிஷ்டிரர், "ஆசாரே! ஜபிப்பவன் எவ்விதநரகத்தை அடைகிறான்? எனக்கு விரிவாகச்சொல்லவேண்டும். எனக்குக் [2]குதூஹலமாயிருக்கிறது. அதை நீர்சொல்லவேண்டும்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

1 'பயனின்' [illegible].

2 ஜபமென்னும் நற்காரியத்தைச்செய்தவன் நரகத்தை அடைகிறானென்பதைக்கேட்க வியப்புண்டாகிறதென்பதுகருத்து.

"தோஷமில்லாதவனே! தர்மத்தின் அம்சத்தால் பிறவி அடைந்தவனயிருக்கிறாய்; இயற்கையில் தர்மத்தை அறிந்தவனுமாயிருக்கிறாய். தர்மத்திற்கு மூலமான வேதத்தை ஆதாரமாகக்கொண்ட வசனத்தைக் கவனத்துடன் கேள். அப்பா! ராஜனே! மரணமில்லாதசரீரமுள்ள தேவர்களுடையவைகளும் பலவிதமான ஆகிருதியும் நிறமுமுள்ளவைகளும் பலவிதமானபயன்களுள்ளவைகளுமான இந்தஸ்தானங்களும், இஷ்டம்போல்ஸஞ்சரிப்பவைகளும் திவ்யமுமான விமானங்களும், ஸபைகளும் பலவிதமானஉத்யானங்களும் தெளிவானஜலமுள்ள தாமரைக்குளங்களும், நான்குதிக்பாலகர்கள் சுக்ரன் ப்ருஹஸ்பதி மருத்துக்கள் விஶ்வேதேவர்கள் ஸாத்யர்கள் அஶ்வினீதேவர்கள் ருத்ரர்கள் ஆதித்யர்கள் வஸுக்கள் இவர்களுடையஸ்தானங்களும், மற்றத் தேவர்களுடையஸ்தானங்களும் பரமாத்மாவின்ஸ்தானத்தை அபேக்ஷிக்க நரகங்களென்று சொல்லப்படும். பரமாத்மரூபமானது, விநாசபயமில்லாததும் ஒருகாரணத்தாலுமுண்டாகாததும் அவித்யைமுதலிய [1] ஐந்துக்லேசங்களாலுமுண்டானபயத்தால் சூழப்படாததும் விருப்பு வெறுப்புமுதலிய இரட்டைகளிலிருந்துவிடுபட்டதும் முக்குணங்களிலிருந்தும்விலகியதும் [2] புரியஷ்டகமென்னும்எட்டுக்களாலும் விடப்பட்டதும் அறியப்படுவது அறிவு அறிகிறவன்என்றமூன்றின் தன்மைகளாலும்விடப்பட்டதும் [3] நான்குவிதமான அறிவுகளுக்கும் விஷயமாகாததும் அந்தநான்குக்கும் விஷயமாவதற்குத்தகுந்த [4] காரணங்களில்

1 அவித்யை, அஸ்மிதை, ராகம், த்வேஷம், அபிநிவேசமென்பன; இவைகளில் அநித்யமாயும் அசுத்தமாயும் துக்கமாயுமிருக்கும் ஆத்மாவல்லாத வஸ்துக்களில் நித்யமென்றும் சுத்தமென்றும் ஸுகமென்றும் ஆத்மாவென்றும் தோன்றும் அஜ்ஞானமானது அவித்யையென்றும், ஜ்ஞாநஸ்வரூபியான ஆத்மாவின் சித்சக்தியும் புத்தியின் ப்ரகாசசக்தியும் ஒன்றுபோல் தோற்றுவது அஸ்மிதையென்றும், விஷயங்களில் ஸுகத்தை அநுபவிப்பதாலுண்டாவதும் அப்படிப்பட்டவிஷயத்தைக் காணும்பொழுது மனதிலிருந்துவெளிவரத் தக்கதுமான ஆசை ராகமென்றும், இதற்கு மாறானது த்வேஷம் என்றும், அறிவுள்ளவர்களுக்கும் இயற்கையிலுண்டாகும் மரணபயம் அபிநிவேசமென்றும் சொல்லப்படும்.

2 பூதங்களும் இந்த்ரியங்களும் மனமும் புத்தியும் ப்ராணவாயுவும் கர்மங்களும் அவைகளின் வாஸனையும் அவித்யையுமாம்.

3 ப்ரத்யக்ஷம், ச்ருதி, மதி, விஜ்ஞானமென்ற அறிவுகள் நான்காகும். கண் முதலிய இந்த்ரியங்களாலுண்டாகும் ஜ்ஞானம் ப்ரத்யக்ஷமாகும். சப்தத்தாலுண்டாகும் ஜ்ஞானம் ச்ருதியாகும். அநுமானத்தாலுண்டாகும் ஜ்ஞானம் மதியாகும். மனத்தாலுண்டாகும் ஜ்ஞானம் விஜ்ஞானமாகும்.

4 இந்த நான்குவிதஅறிவுகளில் முதலாவது ப்ரத்யக்ஷஜ்ஞானத்திற்கு ரூபமுள்ளவஸ்து விஷயமாகும். இரண்டாவது ஜ்ஞானத்திற்கு ஜாதி குணம் க்ரியை இவைகளிலொன்றுள்ளது விஷயமாகும். காணப்படும் ஸ்வரூபவஸ்துவைக்கொ

லாததும் ஸந்தோஷமில்லாததும் ஆனந்தமில்லாததும் சோகமில்லாததும் ச்ரமமில்லாததுமாயிருக்கிறது. காலமானது அந்தரூபத்தில் [1] முடிவடைகிறது. காலமானது அந்தப்பரமாத்மாவினிடத்தில் ப்ரபுவாகிறதில்லை. அரசனே! அவர் காலத்திற்குப்ரபுவாயிருக்கிறார்; அதுபோல் யாவற்றிற்கும் ஈச்வரராயிருக்கிறார். பரமாத்மாவின் இந்தஸ்தானந்தான் ஜபத்தைச்செய்யும் மஹாத்மாவுக்குரியதாகும். அரசர்களிலுத்தமனே! அந்தஸ்தானத்திலுள்ளபரமாத்மாவை த்யானஞ்செய்கிறவரும் நல்லஸமாதிபெற்றவருமான ஹிரண்யகர்ப்பர் அதன் ஸாயுஜ்யத்தைப்பெறுவார். அந்தப்பரமாத்மரூபத்திற்சென்று ஆத்மரூபத்தைத்தவிர வேறில்லாதநிலையை அடைந்தவன் சோகப்படமாட்டான். உத்தமமானஸ்தானமானது இவ்விதமாயிருக்கிறது. அவ்விதமானஅந்தத்தேவர்களின்பதங்கள் நரகங்களாகின்றன. அவ்விதமான இந்த நரகங்கள்யாவுமே உள்ளபடிசொல்லப்பட்டன. உயர்ந்ததான அந்தப்பரமாத்மஸ்தானத்திற்கு இவ்வுலகிலுள்ளமற்றஎல்லாம் நரகமென்றுபெயருள்ளவைகளாகின்றன." என்றுசொன்னார்.

---

## நூற்றுத்தொண்ணூற்றேழாவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், ஜபஞ்செய்யும் ஒருப்ராம்மணனுக்குத் தர்மமுதலியவர்களுடன் நடந்த ஸம்வாதத்தைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "காலன், ம்ருத்யு, யமன்இவர்களுக்கும் இக்ஷ்வாகுவென்னும்அரசனுக்கும் ஒருப்ராம்மணனுக்கும் விவாதம்நடந்ததாக முன்உம்மால்சொல்லப்பட்டது. அதனை நீர் சொல்லவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"இவ்விஷயத்திலும் இக்ஷ்வாகுவென்றஅரசனுக்கும் ஸூர்யகுமாரனானயமனுக்கும் ஒருப்ராம்மணனுக்கும் காலனுக்கும் ம்ருத்யுவுக்கும் நடந்தஸம்பாஷணையான பழையஇவ்விதிஹாஸத்தை உதா

---

ண்டு அதனுடன் ஸம்பந்தப்பட்ட வேறுவஸ்துவை அறிவதென்பதும் அநுமானஞானத்திற்கு ஒருவஸ்துவுடையஸம்பந்தமுள்ள வேறுவஸ்துவே விஷயமாகும். பரமாத்மாவானது ப்ரமிப்பாததாலும் ஜாதி, குணம், க்ரியை இம்மூன்றுகளில் ஒன்றுமில்லாததாலும் ஸம்பந்தத்தை அடையாத அஸங்கரூபமானதாலும் இந்த மூன்றுவித அறிவுகளுக்கும் விஷயமாகத்தக்கதன்று. தானே ப்ரகாசரூபமாயிருப்பதால் நான்காவதான ஞானத்திற்கும் அதுவிஷயமன்று.

1 'உண்டாகிறதென்பது' வேறுபாடம்.

ஹரிக்கிருர்கள். அவர்களுக்கு அந்தஸம்பாஷணையானது எவ்விடத்தில் எக்காரணத்தால் எவ்விதம் தர்மவாதத்துடன்கூடி நடந்ததோ அதை அவ்விதம் என்னிடமிருந்துதெரிந்துகொள். கௌசிககோத்திரத்தில்பிறந்தவனும் பிப்பலாதருடையபுத்ரனும்அறிவுள்ளவர்களிற் சிறந்தவனும் [1]ஆறுஅங்கங்களையும்அறிந்தவனும் பெரிய யசஸுள்ளவனும் தர்மஒழுக்கமுள்ளவனுமான அத்தகைய ஒருப்ராம்மணன் ஜபஞ்செய்துகொண்டிருந்தான். அவனுக்கு ஆறுஅங்கங்களிலும் உண்மையானஞானமிருந்தது. வேதங்களில்திறமையுள்ள அந்தப்ராம்மணன் இமயமலையின்பக்கத்தைஅடைந்து அடக்கமுள்ளவனாய்க் காயத்ரிமந்திரத்தைஜபித்து வேதத்திலசொல்லிய தவத்தைச்செய்துகொண்டிருந்தான். ஜபித்துக்கொண்டிருக்கும் அந்தப்ராம்மணனுக்கு அவ்விதநியமத்துடன் ஆயிரம்வருஷங்கள்சென்றன. அப்பொழுது 'நான் ப்ரீதியுள்ளவளாயிருக்கிறேன்' என்றுசொல்லி காயத்ரீதேவியால் அந்தப்ராம்மணனுக்கு நேரில் தர்சனமளிக்கப்பட்டது. அந்தப்ராம்மணன் ஜபிக்கப்படும் மந்திரத்தை மௌனத்துடன் ஆவிருத்திசெய்துகொண்டு அந்தக்காயத்ரீதேவியைநோக்கிச் சிறிதும்பேசாமலிருந்தான். தேவியானவள் அப்பொழுது அந்தப்ராம்மணனிடத்திலுள்ளகருணையால மிகப்ரீதியுள்ளவளானுள். பிறகு, வேதங்களின் தாயான காயத்ரீதேவி அந்தப்ராம்மணன்செய்யும் அந்தஜபத்தை மிகச்சிறந்ததாகக்கொண்டாடினுள். [2]அப்பொழுது, தர்மபுத்தியுள்ள அந்தப்ராம்மணன் ஜபிக்கவேண்டியதைப்பூர்த்திசெய்தபின் எழுந்திருந்து காயத்ரீதேவியின்கால்களில் தலையால்வணங்கி விழுந்தான். 'தேவி! என்பாக்யத்தால் நீ ப்ரஸாதமுள்ளவளானுய்; எனக்குத்தர்சனமளிக்கவும் வந்தாய். நீ என்னிடம்அன்புள்ளவளாயிருப்பாயாகில் என்மனம் ஜபத்திலேயே விருப்பமுள்ளதாயிருக்கவேண்டும்' என்று இவ்வசனத்தையும் சொன்னுன். ஸாவித்ரீதேவியானவள், 'அந்தணரிஷியே! நீ எதைவிரும்புகிருய்? உனக்கிஷ்டமான எதை நான் செய்யவேண்டும்? சொல்லு; ஜபிக்கிறவர்களுள் மிகச்சிறந்தவனே! அபீஷ்டத்தையும் உனக்குண்டாகும்' என்றுசொன்னுள். தேவியால் இவ்விதம்சொல்லப்பட்டவனும் தர்மங்களைஅறிந்தவனுமான அந்தப்ராம்மணன் அப்பொழுது தேவியைநோக்கி, 'மங்களமூர்த்தியே! ஜபஞ்செய்வதில் எனக்குள்ளஇவ்விருப்பமானது மேன்மேலும் வ்ரு

1 வேதாங்கங்கள் ஆறு; [illegible], சிக்ஷை, [illegible], கல்பம், [illegible]ரம், [illegible] என்று [illegible] ஆறுமாம்.

2 அதிகமான ஒருஸ்லோகம் விடப்பட்டது.

த்திஅடையவேண்டும். என்மனத்திற்குள்ளஸமாதிநிலையானது ஒவ்வொருநாளும் வளரவேண்டும்' என்றுகேட்டுக்கொண்டான். பிறகு, தேவியானவள், அவ்விருப்பம் அவ்விதமே ஸித்திக்கும்' என்று இனிமையாகவிடையளித்தாள். பிறகு, அந்தப்ராம்மணனுக்கு ப்ரியத்தைச்செய்யும்விருப்பத்துடன் தேவியானவள், 'எந்த [1]நரகத்தை ப்ராம்மணச்ரேஷ்டர்கள் அடைந்திருக்கிறார்களோ அந்தநரகத்தை நீ அடையவேமாட்டாய். சோம்பலில்லாமல் சாச்வதமானபரமாத்மஸ்தானத்தை நீ அடையப்போகிறாய். இங்கு என்னிடம் உன்னால் எது ப்ரார்த்திக்கப்பட்டதோ அதுவும் உனக்கு நன்குஸித்திக்கும். அடக்கமுள்ளவனும் ஒரேபுத்தியுள்ளவனுமாய் ஜபித்துக்கொண்டிரு. தர்மமானது உன்னை வந்தடையும். காலனும், ம்ருத்யுவும், யமனும் உன்னருகில்வருவார்கள். அவர்களுக்கும் உனக்கும் இவ்விடத்தில் தர்மத்தைப்பற்றிய விவாதமுமுண்டாகும்' என்று வேறு இவ்வசனத்தையும்சொன்னாள். இவ்விதம்சொல்லிவிட்டுப் பகவதியானகாயத்ரியானவள் தன்னிருப்பிடஞ்சென்றாள். பிராம்மணனும் எப்பொழுதும் அடக்கமுள்ளவனும் கோபத்தைவென்றவனும் ஸத்யமானப்ரதிஜ்ஞையுள்ளவனும் அஸூயையில்லாதவனுமாய் அவ்விதமே நூறு தேவவருஷங்கள் ஜபித்துக்கொண்டிருந்தான். பிறகு, அந்தநியமமானது நிறைவேறியவுடன், அறிவுள்ள அந்தப்ராம்மணனிடம்ப்ரீதியுள்ள தர்மமானது அப்பொழுது நேரில்வந்து அந்தப்பிராம்மணனுக்குத்தர்சனமளித்தது, 'ஓ! ப்ராம்மண! தர்மமானஎன்னைப்பார். நான் உன்னைப் பார்க்கவிரும்பிவந்திருக்கிறேன். இந்தஜபத்திற்குப்பயன் எதுவோ அதுஉன்னால்நன்றாகஅடையப்பட்டது. அதையும்என்னிடமிருந்து கேள். எந்தஉலகங்கள் தேவர்களுக்குரியவைகளோ எந்தஉலகங்கள் மானிடர்களுக்குரியவைகளோ அவ்வுலகங்கள்யாவும் உன்னால்ஜயிக்கப்பட்டன. ஸாதுவே! தேவர்களுக்கும் இடங்கள்யாவற்றையுந்தாண்டி மேலேசெல்லப்போகிறாய். ரிஷியே! உயிரைப்போக்கிக்கொள்; உனக்கிஷ்டமான உலகங்களை அடை. உன்னுடையதானசரீரத்தை விலக்கிக்கொண்டு, பிறகு, நல்லலோகங்களை நீ அடைவாய்' என்று சொல்லிற்று. ப்ராம்மணன், 'தர்மமே! உலகங்களால் எனக்கு ஆகவேண்டியதில்லை. நீ ஸுகமாகச்செல்லப்பா. ப்ரபுவே! பல்துக்கங்களைப்பொறுக்கும் சரீரத்தை நான் விடமாட்டேன்' என்றுசொன்னான். தர்மமானது,

1 'ஸவர்கள் தங்கு' [illegible] ப்ராம்மணர்கள் ஜபத்தின்பொருளைக் [illegible] பார்த்துப்பேசி, [illegible] பல [illegible] நரகமென்றது.

'சிறந்தபுத்தியுள்ளவனே! உன்னுடையமனத்தை உறுதியாகச்செய்து கொண்டு சரீரத்தைவிடு. உனக்கு இச்சரீரத்துடன் சேர்க்கை எதற்காக? நீ எப்படி அவிவேகத்தைஅடைகிறாய்? ஐயா! ரிஷிகளிற் சிறந்தவனே! சரீரமானது அவச்யம் உன்னால் விடக்கூடியதாகும். ஓ! பிராம்மண! ஸ்வர்க்கத்திற்கு ஏறு. தோஷமில்லாதவனே! உனக்கு எது ப்ரியமாகஇருக்கிறது?' என்றுசொல்லிற்று. பிராம்மணன், 'தர்மமே! என்னசொல்லப்பட்டது? ஏன் (சரீரம்) வேண்டாமென்றுசொல்லுகிறாய்? எனக்கு இந்தச்சரீரமிருக்கும்பொழுது நீ என்னை, 'ஓ! பிராம்மணா!' என்றழைத்து, 'சரீரத்தைவிடு' என்று எதற்காகச்சொல்லுகிறாய்? ப்ரபுவே! சரீரமில்லாமல் ஸ்வர்க்கலோகத்தில் வஸிப்பதில் நான் ப்ரியப்படவில்லை. தர்மமே! நீ போ. சரீரமில்லாமல் ஸ்வர்க்கலோகத்திற்குச்செல்ல எனக்கு விருப்பமில்லை' என்றுசொன்னான். தர்மமானது, 'சரீரத்தில் மனத்தைவைப்பதில் பயனில்லை. சரீரத்தைத்தள்ளிவிட்டு ஸுகமுள்ளவனாயிரு. ரஜோகுணமற்றவைகளான உலகங்களை அடை. அவ்வுலகங்களிற்சென்று நீ சோகப்படாமலிருப்பாய்' என்றுசொல்லிற்று. ப்ராம்மணன், 'ஓ! மிக்கபாக்யம்பெற்றவனே! நான் ஜபஞ்செய்துகொண்டு ஸந்தோஷமாகஇருக்கிறேன். ஸநாதனமானஉலகங்கள்வேண்டாம். நான் ஸ்வர்க்கத்தை (அடையவேண்டுமானால்) சரீரத்துடனேஅடையவேண்டும். வேறுவிதமாகவேண்டாம்' என்றுசொன்னான். தர்மமானது, 'ரிஷிகளில்மிகச்சிறந்தவனே! உனக்கு இவ்விதம் சரீரத்தில் அதிகப்ரியமிருக்கிறது. ஓ! ப்ராம்மண! நீ சரீரத்தை விடவிரும்பாமல்போனாலும் காலனும் ம்ருத்யுவும் யமனும் இதோ உன் அருகில் வந்திருக்கிறார்கள்; பார்' என்றுசொல்லிற்று. ப்ரபுவே! பிறகு, யமனும்காலனும் ம்ருத்யுவுமாகிய மூன்றுபேர்களும் மிக்கபாக்யமுள்ள அந்தப்ராம்மணனருகிற்சென்று இவ்வசனத்தைச்சொல்லத்தொடங்கினார்கள். யமன், 'நன்றாகச்செய்யப்பட்டதும் நல்லநடையுள்ளதுமான இந்தத் தவத்திற்கு மிகச்சிறந்தானபயன் உனக்கு வந்திருக்கிறது. யமனான நான் உனக்குச் சொல்லுகிறேன்' என்றுசொன்னான். காலன், 'உண்மையாகச்செய்யப்பட்ட இந்தஜபத்தின் உத்தமமானபயனை நீ அடைந்திருக்கிறாய். ஸ்வர்க்கத்தை அடைய உனக்கு இதுகாலம். காலனானநான் உன்னை அடைந்திருக்கிறேன்' என்றுசொன்னான். ம்ருத்யுவானவன், 'தர்மமறிந்தவனே! என்னை ம்ருத்யுவென்றும் ரூபத்துடன் வந்தவனுமான ம்ருத்யுவென்று தெரிந்துகொள். ப்ராம்மணனே! நான் இப்பொழுது உன்னை இவ்விடமிருந்து அழைத்துக்கொண்டு

போவதற்காகக் காலனால் ஏவப்பட்டிருக்கிறேன்' என்றுசொன்னான். ப்ராம்மணன், 'மஹாத்மாவானயமனும் காலனும் ம்ருத்யுவும் தர்மமு மாகியஉங்களுக்கு நல்வரவா? உங்களுக்கு என்னகார்யத்தை நான் செய்யவேண்டும்' என்றுசொல்லி, அவ்விடத்தில்சேர்ந்துகொண்டிரு க்கும்பொழுது அவர்களுக்கு அர்க்யத்தையும் பாத்யத்தையும் அளி த்து, 'என்சக்திக்குத்தக்கதான எதை உங்களுக்கு நான் செய்ய வே ண்டும்' என்று மிகவும் ப்ரீதியுள்ளவனாகி, 'தம்கார்யங்களில் முயற்சி யுள்ளவர்களும்பிறர்களுக்குஉபத்ரவத்தைஉண்டுபண்ணுகிறவர்களும் உலகத்திற்குப்பொதுவாயிருப்பவர்களும் மிக்கபூஜ்யர்களுமான நீங் கள் எதற்காக வந்தீர்கள்; சொல்லுங்கள்' என்றுகேட்டான். யமன், 'நாங்கள் இவ்விதம் மிகக்குரூரர்களும் ப்ரம்மதேவருடைய கட்டளை யைமுன்னிட்டுச்செலலுகிறவர்களும் (அவரால்)ஏவப்பட்டுஓடுகிறவர் களும் (எங்கள்) கர்மங்களின் விதியைத்தொடர்ந்திருப்பவர்களுமாயி ருக்கிறோம்' என்றுசொன்னான். ப்ரபுவே! பிறகு, அதேஸமயத்தில் தீர்த்தயாத்திரைக்குவந்தவனானஇக்ஷ்வாகுராஜன் அவர்கள்சேர்ந்தி ருக்கிறஇடத்திற்குவந்தான். பிறகு,அரசர்களில்மிகச்சிறந்தஅந்தராஜ ரிஷியானவன்அனைவர்களையும்நமஸ்கரித்துநன்றாகப்பூஜைசெய்து எல் லாரையும் குசலப்ரச்னஞ்செய்தான். பிறகு, அந்தப்ராம்மணன்அந்த இக்ஷ்வாகுராஜனுக்கு ஆஸனத்தையும் அதுபோலவே அர்க்யத்தை யும் பாத்யத்தையும்அளித்தபின் குசலப்ரச்னஞ்செய்து, 'ஓ! மஹா ராஜனே! உனக்கு நல்வரவா? இங்கு எதைஎதை நீ விரும்புகிறாய்? சொல். என்னுடையசக்திக்குத்தக்கபடி எதை நான் இங்கேசெய்ய வேண்டும்; அதை நீ எனக்குச் சொல்' என்றவசனத்தையும்சொன் னான். அரசனானவன், 'நான் அரசன். நீர் [1]ஆறுகர்மங்களிலும்உறுதி யாகஇருக்கும்பிராம்மணர்.உமக்குச்சிறிதுபொருளைக்கொடுக்கிறேன். எதுவேண்டுமோ அதை எனக்குச்சொல்லும்' என்றுசொன்னான். ப்ராம்மணன், 'அரசனே! ப்ராம்மணன்ப்ரவ்ருத்தியுள்ளவனென்றும் நிவ்ருத்தியுள்ளவனென்றும் இரண்டுவிதமாவான். அவனுடையதர்ம மும் இரண்டுவிதமாகக்கருதப்படுகிறது. நான் ப்ரதிக்ரஹத்திலிருந்து நிவ்ருத்தியடைந்தவனாயிருக்கிறேன். அரசனே! எவர்கள் ப்ரவ்ருத்தி யிலிருக்கிறார்களோ அவர்கள்பொருட்டுத் தானங்களைக்கொடு. நான் தானத்தைப் பெறுங்கொள்ளுகிறவனல்லன். உனக்கு வேண்டிய தென்ன? எதை நான் கொடுக்கவேண்டும்? அரசர்களில் மிகச்சிறந்

[1] அத்யயனம், அத்யாபனம், யஜனம், யாஜனம், தானம், ப்ரதிக்ர ஹம் என்ற ஆறுகர்மங்கள்.

தவனே! நீ சொல்லு. தவத்தால் எதை நான் ஸாதிக்கவேண்டும்?' என்றுசொன்னான். அரசன், 'நான் க்ஷத்ரியன். ஓரிடத்திலும், 'கொடு' என்றவசனத்தை நான் அறிந்தவனல்லன். ப்ராம்மணோத்தமரே! ஆனால், 'யுத்தத்தைக்கொடு' என்று இவ்விதம் சொல்லுகிறவனாகி றேன்' என்றுசொன்னான். ப்ராம்மணன், 'அரசனே! நாங்கள்எவ்வி தம், ஸ்வதர்மத்தில்ஸந்தோஷமுள்ளவர்களாயிருக்கிறோமோ அது போல் நீயும் ஸ்வதர்மத்தால் ஸந்தோஷமடைகிறாய். நமக்கு ஒரு வருக்கொருவர் மறுமொழியில்லை. எது இஷ்டமோ அதைச்செய்து கொள்' என்றுசொன்னான். அரசன், 'ஓ! ப்ராம்மணரே! முத லில், 'என்சக்திக்குத்தக்கபடி நான் கொடுக்கிறேன்' என்று உம்மால் சொல்லப்பட்டது.நான் உம்மிடம் யாசிக்கிறேன்.இந்தஜபத்திற்குள்ள பயனை எனக்குக்கொடுக்கவேண்டும்' என்றுகேட்டான். ப்ராம் மணன், 'நீ, 'என்னுடையவாக்கானது எப்பொழுதும் யுத்தத்தைக் கேட்கிறது' என்றுபுகழ்ந்துபேசுகிறாயே. என்னுடன்கூட யுத்தமோ கிடையாது. திரும்பவும் எதற்காக யாசிக்கிறாய்?' என்றுசொன் னான். அரசன், 'ப்ராம்மணர்கள் வாக்கை வஜ்ராயுதமாகக்கொ ண்டவர்களென்றுசொல்லப்படுகிறார்கள். க்ஷத்திரியர்கள் கையால் ஜீவிக்கிறவர்களென்றுசொல்லப்படுகிறார்கள். ஆகையால், ஓ! ப்ராம் மண! உம்முடன் குரூரமான இந்தவாக்குயுத்தம் எனக்குவேண்டும்' என்றுசொன்னான். ப்ராம்மணன், 'இப்பொழுது என்சக்திக்குத்தக்க படி எதைக்கொடுக்கவேண்டும்? என்னுடையப்ரதிஜ்ஞைஇவ்விதமிரு க்கிறது. அரசஸ்ரேஷ்டனே! கேள். கொடுக்கிறேன். சக்தியிருக் கும்பொழுது தாமஸிக்கவேண்டாம்' என்றுசொன்னான். அரசன், 'நீர் கொடுக்கவிருப்பமுள்ளவராயிருப்பீரானால் ஜபம்செய்யும்உம்மால் நூறுவருஷங்கள் எதுபூர்ணமாகஜபிக்கப்பட்டதோ அடையப்பட்ட அதன்பயனை எனக்குக் கொடும்' என்றுகேட்டான். ப்ராம்மணன், 'என்னால் எதுஜபிக்கப்பட்டதோ அதன்சிறந்தபயனைப் பெற்றுக்கொ ள்ளலாம். நீ ஸந்தேஹமில்லாமல் அந்தஜபத்தின்பாதிப்பயனைப்பெற் றுக்கொள்; அல்லது, அரசனே! நீ இந்தஜபத்திற்குள்ளபயன்யாவற் றையும்விரும்புவாயாகில் என்னுடையஜபத்திற்குரியபயன்யாவற்றை யுமே இஷ்டப்படி பெற்றுக்கொள்' என்றுசொன்னான். அரசன், 'என்னால் எந்தஜபத்தின்பயன் யாசிக்கப்பட்டதோ அஃதனைத்தும் வேண்டாம். உமக்குச் சுபமுண்டாகட்டும். நான் போகின்றேன். உமக்கு க்ஷேமமுண்டாகட்டும். அந்தஜபத்திற்குரியபயன் என்ன வென்பதைச் சொல்லும்' என்றுகேட்டான். ப்ராம்மணன், 'என்

ஜல்ஜபிக்கப்பட்டதும் உனக்கு அளிக்கப்பட்டதும் எதுவோ அந்த ஜபத்தின்பயன் என்னகிடைக்குமென்பதை நானறியவில்லை. இந்தத் தர்மமும் காலனும் யமனும் ம்ருத்யுவும் இதற்குஸாக்ஷிகள்' என்று சொன்னான். அரசன், 'அறியப்படாதஇந்தத்தர்மத்தின் பயனானது எனக்கு என்னசெய்யப்போகிறது? ஜபத்தாலுண்டானதர்மத்தின் பயனை நீர் எனக்குச்சொல்லாவிட்டால் அந்தப்பயனை ப்ராம்மணரான நீர்அடையும். ஸந்தேகத்துடன்கூடியஅதை நான்விரும்புகிறவனல்லன்' என்றுசொன்னான். ப்ராம்மணன் சொல்லத்தொடங்கினான். 'பிறனுக்களித்ததை நான்பெற்றுக்கொள்ளமாட்டேன். ஜபத்தின் பயனானது என்னால் வாக்கால்கொடுக்கப்பட்டது. ராஜரிஷியே! இப்பொழுது என்னுடையதும் உன்னுடையதுமானவசனம் ப்ரமாணந்தானே? பாகமானது ஒருதடவைகிடைக்கும். கன்னிகையானவள் ஒருதடவைதான் கொடுக்கப்படுவாள். கொடுக்கிறேனென்பது ஒரே தடவை. இம்மூன்றும் ஒவ்வொருதடவைதான். ஜபிக்கும்விஷயத்தில் ஒருஸமயத்திலும் பயனைப்பற்றியஎண்ணத்தை நான் முந்திச் செய்தவனல்லன். அரசப்புலியே ! ஜபத்தின்பயனை நான் எவ்விதம் அறிவேன். 'கொடு' என்றுஉன்னால்சொல்லப்பட்டது. என்னால் பயனானது வாக்கால்கொடுக்கப்பட்டது. வாக்கை நான் பொய்யாகச் செய்யமாட்டேன். ஸத்தியத்தைக்காப்பாற்று; உறுதியுள்ளவனாயிரு. அரசனே! அவ்விதம் இல்லாமல்,இப்படிச்சொல்லும்என்னுடையவசனத்தை நீசெய்யாவிட்டால் உனக்குப் பொய்யால் செய்யப்பட்ட பெரியஅதர்மம் உண்டாகும். பகைவர்களை அடக்குகிறவனே! பொய்யானவசனத்தைச்சொல்லுவது உனக்கு யுக்தமன்று.அதுபோல் என்னாலும் சொல்லியதைப் பொய்யாகச்செய்யமுடியாது. முதலில்விசாரியாமல், 'கொடுக்கிறேன்' என்று என்னால் ப்ரதிஜ்ஞைசெய்யப்பட்டது. நீ ஸத்யத்திலஉறுதியுள்ளவனானால் அதை விசாரியாமல் பெறறுக்கொள்ளவேண்டும். அரசனே ! இவ்விடத்திற்குவந்தன்றோ என்னிடம் நீ ஜபத்திற்குரியபயனை யாசித்தாய்? என்னால்கொடுக்கப்பட்ட அப்பயனைப்பெற்றுக்கொள்; ஸத்தியத்தில் உறுதியுள்ளவனாகியும் இரு. அரசனே! பொய்பேசுவதைப்பெரிதாகக்கொண்ட மனிதனுக்கு இவ்வுலகமில்லை: பரலோகமுமில்லை. அவன் தன்முன்னோர்களை (த்துன்பத்திலிருந்து) மீள்விக்கமாட்டான். மற்றவர்களை எங்ஙனம் மீள்விப்பான்? புருஷர்களிற்சிறந்தவனே ! ஸத்யமானது இவ்வுலகத்திலும் மேலுலகத்திலும் எப்படி மனிதனை மீளச்செய்யுமோ அது போல யாகமும் அத்யயனமும் தானமும் நியமங்களும் மீளச்செய்

யா. நூறுவருஷங்களாலும் ஆயிரம்வருஷங்களாலும் எந்தத்தவங்கள் செய்யப்பட்டிருக்கின்றனவோ, எந்தத்தவத்தைச்செய்யப்போகிறார்களோ அவை ஸத்யத்தைவிட விசேஷமுள்ளனவல்ல. ஸத்யமொன்றே பரமாத்மரூபமாகும். ஸ்த்யமொன்றே பெரியதவமாகும். ஸத்யமொன்றே பெரியயாகமாகும். ஸத்யமொன்றே பெரியசாஸ்திரமாகும். ஸத்யமானது வேதங்களில் விளங்கிக்கொண்டிருக்கிறது. சிறந்தபயனானது ஸத்யத்திலிருக்கிறதென்றுநினைக்கப்படுகிறது. தவமும் தர்மமும் தமமுமாகியயாவும் ஸத்தியத்தில்நிலைபெற்றிருக்கின்றன. ஸத்யமானது வேதங்களும் அவற்றின் அங்கங்களுமாகின்றது. ஸத்யமானது யாகங்களும் (அவைகளின்) விதியுமாகிறது. ஸத்யமானது வ்ரதானுஷ்டானமாகிறது. ஓங்காரமானது ஸத்யமாகவேயிருக்கிறது. பிராணிகளின்பிறப்பு ஸத்யமாகவேயிருக்கிறது. ஸந்ததியும் ஸத்யமாகவேயிருக்கிறது. ஸத்யத்தால் காற்றுவீசுகிறது. ஸத்யத்தால் ஸூர்யன்ப்ரகாசிக்கிறது. ஸத்யத்தால் அக்நியானதுஎரிகிறது. ஸ்வர்க்கமானது ஸத்யத்தால் நிலைபெற்றிருக்கிறது. ஸத்யமானது யாகமும் தவமும் வேதங்களும் [1]ஸ்தோபங்களும் மந்திரங்களும் ஸரஸ்வதியுமாகிறது. தர்மமும் ஸத்யமும்தராசில்வைக்கப்பட்டனவென்று எங்களுக்குக் கேள்வியுண்டு. ஸமமானநிலையில்தூக்கும்பொழுது எதில ஸத்யமுள்ளதோ அது [2]தாழ்ந்தது. எதில் தர்மமுள்ளதோ அதுஸத்யமுள்ளது. யாவும் ஸத்யத்தால்வளர்ச்சி அடைகின்றன. அரசனே! நீ எதற்காகப் பொய்யானகார்யத்தைச் செய்யவிரும்புகிறாய்? ஸத்யத்தில்உறுதியானஎண்ணத்தைச் செய்துகொள். அரசனே! பொய்யைச்செய்யாதே. 'நீ, கொடு' என்ற வசனத்தைப்பொய்யாகவும் அசுபமாகவும் ஏன்செய்கிறாய்? அரசனே! என்னாற்கொடுக்கப்பட்டஜபத்தின்பயனை நீவிரும்பாமல்போவாயாகில் ஸ்வதர்மங்களில்நின்றும் வழுவியவனாவாய்; (அதற்குள்ள) உலகங்களை அடைவாய். அங்கீகரித்தபின் கொடுக்கவிருப்பமில்லாதவனும் யாசித்தபின் பெற்றுக்கொள்ளவிருப்பமில்லாதவனுமாகிய இருவர்களும் பொய்யுள்ளவர்களாகிறார்கள். ஆகையால், நீ பொய்சொல்லத்தக்கவனல்லன்' என்றுசொன்னான். அரசன், 'ப்ராம்மணரே! யுத்தஞ்செய்வதும் ரக்ஷிப்பதுமன்றோ க்ஷத்திரியர்களுக்குள்ளதர்மம்? க்ஷத்திரியர்கள் தானஞ்செய்கிறவர்களென்றுசொல்லப்படுகிறார்கள். நான் உம்மிடமிருந்து எப்படி (தானத்தை) பெற்றுக்

1 ரிக்கில்லாமல ஸாமவேதத்தின் இடையிலவரும் அக்ஷரங்கள்.

2 'அதிகம்' என்பதுமூலம்.

கொள்வேன்?' என்றுசொன்னான். பிராம்மணன், 'அரசனே ! நான் உன்னைப் பெற்றுக்கொள்ளென்று ப்ரார்த்தித்தவனுமல்லன் : உன்னுடையவீட்டிற்கு வந்தவனுமல்லன். நீ இவ்விடத்திற்குவந்துயாசித்துத் திரும்பவும் ஏன்பெற்றுக்கொள்ளாமலிருக்கிறாய் ?' என்று சொன்னான். தர்மம், 'உங்களிருவர்களுக்கும் விவாதமில்லாமலிருக்கட்டும். என்னை இங்குவந்த தர்மமென்றுதெரிந்துகொள்ளுங்கள். ப்ராம்மணன் தானஞ்செய்தபயன்களையுடையவனும் அரசன்ஸத்தியத்திற்குள்ளபயன்களையுடையவனுமாயிருக்கட்டும்' என்றுசொல்லிற்று. ஸ்வர்க்கம், 'அரசஶ்ரேஷ்டனே ! என்னை உருவமுள்ளதாக நேரில்வந்த ஸ்வர்க்கமென்று தெரிந்துகொள். உங்களிருவர்களுக்கும் விவாதமில்லாமலிருக்கட்டும். நீங்கள்இருவர்களும் ஸமமானபயனுள்ளவர்களாயிருங்கள்' என்றுசொல்லிற்று. அரசன், 'எனக்கு ஸ்வர்க்கத்தால் செய்யவேண்டியகார்யமில்லை. ஸ்வர்க்கமே ! நீ வந்தபடியே திரும்பிப்போகலாம். ப்ராம்மணர் [1] தானஞ்செய்யவிரும்புவாராகில் என்னாற்செய்யப்பட்டகர்மங்களின்பயனைப் பெற்றுக்கொள்ளட்டும்' என்றுசொன்னான். ப்ராம்மணன், 'அறியாமையால் இளமைப்பருவத்தில் என்னால் கைந்நீட்டப்பட்டிருக்குமானாலும் இப்பொழுது காயத்ரியைஜபித்துக்கொண்டு நிவ்ருத்தியென்றுசொல்லப்படும்தர்மத்தை உபாஸித்துக்கொண்டிருக்கிறேன். அரசனே! நெடுங்காலமாக நிவ்ருத்தியிலிருக்கும்என்னை எப்படி ஆசையுள்ளவனாகச் செய்வாய். நானே வேண்டியதைச்செய்துகொள்வேன். அரசனே! தவத்தையும் வேதாத்யயனத்தையும் ஸ்வபாவமாகச் செய்கிறவனும் ப்ரதிக்ரஹத்திலிருந்து விலகினவனுமானநான் உன்னிடமிருந்து பயனை விரும்பவில்லை' என்றுசொன்னான். அரசன், 'ஓ! ப்ராம்மணரே! ஜபத்திற்குள்ள உத்தமமானபயனானது உம்மால்கொடுக்கப்பட்டதாகுமானால் நம்மிருவருடைய ஜபத்திற்குமுள்ளபயனெதுவோ அது நம்மிருவர்களுக்கும் சேர்ந்ததாயிருக்கட்டும். ப்ராம்மணர்கள் ப்ரதிக்ரஹத்தில் அதிகாரமுள்ளவர்கள். ராஜகுலத்திலுதித்தவர்கள் தானஞ்செய்கிறவர்களாயிருப்பார்கள். ஓ! ப்ராம்மணரே! தர்மத்தின்பயன் கொடுப்பதாக அங்கீகரிக்கப்பட்டதானால் அந்தப்பயனானது நம்மிருவர்களுக்கும் சேர்ந்ததாகவேயிருக்கட்டும்; அல்லது நம்மிருவர்களுக்கும் சேர்ந்துபுஜிக்கத்தக்கதாயிருக்கவேண்டாம். என்னுடைய பயனை நீர் அடையும். உமக்கு என்விஷயத்தில அனுக்ரஹமிருக்குமானால் என்னால் செய்யப்பட்டதர்மத்தைப் பெற்றுக்கொள்ளும்'

1 'பெற்றுக்கொள்ள' என்பது வேறுபாடம். இதுவேபொருத்தமுள்ளது.

என்றுசொன்னான். பிறகு, விகாரமானவேஷமுள்ளவர்களும் [2]கிழிந்த ஆடையுள்ளவர்களுமான இரண்டுபுருஷர்கள் ஒருவரையொருவர் கட்டிப்பிடித்துக்கொண்டு வந்தார்கள்; அவர்களில் ஒருவன், 'என க்கு நீகொடுக்கவேண்டியதில்லை' என்றும், மற்றொருவன், 'நான் கொடுக்கவேண்டாம்' என்றும், இவ்விஷயத்தில் நம்மிருவர்களுக்கும் இவ்விதம் விவாதமிருக்கிறது. சிக்ஷைசெய்யத்தக்க அரசன் இதோ இருக்கிறான். நான் ஸத்யம்சொல்லுகிறேன. 'நீ இதைஎனக்குக் கொடுக்கவேண்டாம்' என்றும், 'இவ்விஷயத்தில் நீபொய்சொல்லு கிறாய்; நான் உனக்குக் கடன்கொடுக்கவேண்டும்' என்றும் பேசிக் கொண்டார்கள். அவ்விருவர்களும் மிகவும்தாபமுள்ளவர்களாய் அர சனைநோக்கி, 'நாங்களிருவர்களும் இவ்விஷயத்தில் குற்றமுள்ளவர் களாகாமலிருக்கும்படி பரீக்ஷிக்கத்தக்கவர்களாகிறோம்' என்ற இவ் வசனத்தையும் சொன்னார்கள்.

விரூபனானவன், 'புருஷப்புலியே! நான் ஒருபசுவிற்குள்ள பயனை இந்தவிக்ருதனுக்குக்கொடுக்கவேண்டும். அரசனே! நான் கொடுத்தாலும் இந்தவிக்ருதன் பெற்றுக்கொள்கிறதில்லை' என்று சொன்னான். விக்ருதன், 'அரசனே! இந்தவிரூபனானவன் எனக்கு ஒன்றுங்கொடுக்கவேண்டியதில்லை. அரசனே! இவன் ஸத்யம்போலத் தோன்றும்படி பொய்யை உன்னிடம்சொல்லுகிறான்' என்றுசொன் னான். அரசன், 'ஏ! விரூபனே! இவனுக்கு நீ என்னகொடுக்க வேண்டும்? எனக்குச்சொல்லு. நான்கேட்டு அவ்விதம்செய்கிறேன். இவ்விதம் எனக்கு மனமிருக்கிறது' என்றுகேட்டான். விரூபன் சொல்லத்தொடங்கினான். 'அரசனே! கவனித்துக்கேள். ராஜ ரிஷியே! நான் இந்தவிக்ருதனுக்கு எதை எவ்விதம்கொடுக்கவேண் டுமோ அதுமுழுமையையுங்கேள். அரசனே! குற்றமில்லாதவனே! ராஜரிஷியே! முன்னொருஸமயத்தில்தர்மத்தைஅடையவேண்டி, தவ த்தையும் வேதாத்யயனத்தையும் இயற்கையாகஉடையவனான ஒரு ப்ராம்மணன்பொருட்டு அழகான ஒருபசுவானது இந்தவிக்ருதனால் தானஞ்செய்யப்பட்டது. அரசனே! அந்தப்பசுவின்தானத்திற்குள்ள பயனை நான் இந்தவிக்ருதனிடம்வந்து யாசித்தேன். விக்ருதனும் பரிசுத்தியுள்ளமனத்துடன் அதை எனக்கு அளித்தான். பிறகு, ஆத்ம சுத்திக்காகப் புண்ணியகர்மமானது என்னால்செய்யப்பட்டது. ராஜ னே! கன்றுடன்கூடியவைகளும் அதிகமாகக்கறக்கும்தன்மையுள்ள வைகளுமான இரண்டுகோபசுக்களை விலைக்குவாங்கி அப்பசுக்களை உஞ்சவிருத்திசெய்யும் ஒருவனுக்குக் கொடுத்தேன். ப்ரபுவே! நான்

இவனிடமிருந்துபெற்றுக்கொண்டு இரட்டிப்பான அந்தப்பயனை இப்பொழுது இவனுக்கு விதிப்படி ச்ரத்தையுடன் 'திருப்பிக்கொடுக்கிறேன். புருஷப்புலியே! இவ்விதம்நடந்திருக்கிறது. இதில்யார்சுத்தியுள்ளவன்? யார்தோஷமுள்ளவன்? அரசனே! நாங்கள் இவ்விதமான விவாதத்துடன் இவ்விடத்திலுள்ள உன்னை வந்து அடைந்திருக்கிறோம். தர்மத்தைச்செய்வாயோ, அதர்மத்தைச்செய்வாயோ எங்களிருவர்களையும் அடக்கி நீ ஸமாதானஞ்செய்யவேண்டும். இவன்கொடுத்ததைப்போல நான்கொடுப்பதை இவன்விரும்பாமற்போனால் இவ்விஷயத்தில நீ உறுதியுள்ளவனாயிருந்துகொண்டு இப்பொழுது எங்களை நல்லவழியிலிருக்கும்படிசெய்யவேண்டும்' என்றுசொன்னான். அரசன், 'கொடுக்கப்படும்கடனை நீ ஏன் இப்பொழுது பெற்றுக்கொள்ளாமலிருக்கிறாய்? அவ்விதம் நீ தாமதியாமல் பெற்றுக்கொள். பெற்றுக்கொண்டே உன்னால் அனுமதிகொடுக்கப்படவேண்டும்' என்று சொன்னான். விக்ருதன், 'இவன் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டான். அப்படியே கொடுக்கிறேனென்று என்னால்சொல்லப்பட்டது. இந்தவிஷயத்தில் இவன் எனக்குக்கொடுக்கவேண்டியவனல்லன். இவன்எவ்விடத்திற்குப்போகவிரும்புகிறானோ அங்குபோகட்டும்' என்றுசொன்னான். அரசன், 'இவன்கொடுக்கும்பொழுது நீபெற்றுக்கொள்ளாமலிருக்கிறாய். இது சரியன்றென்று எனக்குத்தோன்றுகிறது. நீ தண்டிக்கத்தக்கவனென்றே என்னுடையஅபிப்பிராயம். இதிற்சந்தேகமேயில்லை' என்றுசொன்னான். விக்ருதன், 'ராஜரிஷியே! என்னால் இவனுக்குக் கொடுக்கப்பட்டது. அதைத் திரும்பவும் நான் எப்படி பெற்றுக்கொள்ளுவேன்? இந்தவிஷயத்தில எனக்கு என்னகுற்றமிருக்கிறது? ப்ரபுவே! விசாரித்துஎனக்குத் தண்டனையைக்கட்டளையிடு' என்றுசொன்னான். விரூபன், 'என்னால் கொடுக்கப்படுகிறதை எவ்விதத்திலும் நீ பெற்றுக்கொள்ளாமலிருப்பாயாகில் தர்மத்தைப்பரிபாலிக்கும் இந்த அரசன் உன்னை அடக்குவான்' என்றுசொன்னான். விக்ருதன் 'உன்னால் வலியயாசிக்கப்பட்டு என்னால் கொடுக்கப்பட்டது. அதனை இப்பொழுது எவ்விதம்பெற்றுக்கொள்வேன்? நீ போகலாம்; உனக்கு அனுமதி கொடுக்கிறேன்' என்றுசொன்னான். ப்ராம்மணன், 'அரசனே! இவர்கள் இருவர்களாலும் சொல்லப்பட்ட இருவசனம் உன்னால் கேட்கப்பட்டதா? என்னால உனக்கு எதுகொடுப்பதாகப் ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டதோ அதை விசாரியாமற்பெற்றுக்கொள்' என்றுசொன்னான். அரசன், 'மிகப்பெரியதும் கடினமுமான இவ்விருவர்களின்

காரியமும் தொடங்கப்பட்டிருப்பதைப்பார்த்தால், ஜபம்செய்யும் ப்ராம்மணருக்கு உறுதிசெய்துகொடுத்ததாகிறது. இஃது எவ்வித மாகப்போகிறதோ? ஜபப்ராம்மணரால்கொடுக்கப்படுவதை நான்பெற்றுக்கொள்ளாமற்போனால் இப்பொழுது நான் பெரியபாபத்துடன் சேர்ந்தவனாகாமலிருப்பதுஎங்ஙனம்?' என்றுநினைத்தான். அந்தராஜரிஷியானவன் அவ்விருவர்களையும்நோக்கி, 'நீங்கள் காரியத்தைச் செய்துகொண்டவர்களாகவே போவீர்கள். இப்பொழுது இவ்விடத்திலுள்ள என்னை அடைந்து அரசர்களுக்குள்ள தர்மமானது பொய்யாகவேண்டாம். அரசர்களுக்குத் தம்தர்மத்தை ரக்ஷித்துக்கொள்ள வேண்டுமென்பது நிச்சயம். புத்தியில்லாதஎன்னைக் கடினமான ப்ராம்மண தர்மமானது பிடித்துக்கொண்டது' என்றுசொன்னான். ப்ராம்மணன், 'யாசிக்கப்பட்டதைக்கொடுப்பதாக நான் அங்கீகரித்திருக்கிறேன். நான் அதைத் தரித்துக்கொண்டிருக்கிறேன். பெற்றுக்கொள். அரசனே! நீபெற்றுக்கொள்ளாவிட்டால் ஸந்தேஹமில்லாமல உன்னைச் சபிப்பேன்' என்றுசொன்னான். அரசன், 'அரசர்களுக்குரிய தர்மத்தைநிந்திக்கவேண்டும். அந்தத்தர்மத்தைப்பற்றிய காரியத்தின்நிச்சயம் இவ்விஷயத்தில் இவ்விதமிருக்கிறது. (பெற்றுக்கொண்டாலும்) எவ்விதம் (ராஜதர்மத்திற்கு)ஸரியாகஇருக்குமென்று தெரிந்துகொண்டு நான் பெற்றுக்கொள்ளவேண்டும். ஓ! ப்ராம்மணரே! என்னுடைய இந்தக்கையானது நூதனமாக ப்ரதிக்ரஹத்திற்காக நீட்டப்பட்டிருக்கிறது. எனக்காக எதைததரித்துக்கொண்டிருக்கிறீரோ அதை இப்பொழுது கொடுக்கலாம்' என்றுசொன்னான். ப்ராம்மணன், 'காயத்ரியைஜபிக்கும் என்னால் எந்தக்குணம் எவ்வளவுசெய்யப்பட்டிருக்குமோ அது சிறிதும் என்னிடத்திலிருக்குமானால் அதுமுழுமையும் நீ பெற்றுக்கொள்' என்றுசொன்னான். அரசன், 'ஓ! பிராம்மணோத்தமரே! என்னுடையகையிலவிழுந்தஇந்த ஜலமானது நமக்கு ஸமமாயிருக்கட்டும்; சேர்ந்ததாகவே இருக்கட்டும். நீர் பெற்றுக்கொள்ளும்' என்றுசொன்னான். விரூபன், 'த்விஜர்களில்உத்தமனே! மங்களை உங்கள்மனத்திலுண்டானதை அறிய விரும்பிய காமக்ரோதங்களென்று நீ தெரிந்துகொள். எங்களால் நீ இவ்விதம்செய்யப்பட்டாய். இப்பயன் சேர்ந்திருக்கட்டுமென்று உன்னால்சொல்லப்பட்டகாரணத்தால் உனக்கும்இவனுக்கும்ஸமமான உலகங்கள் கிடைக்கும். இவன்சிறிதும்கொடுக்கவேண்டியவனல்லன். உனக்காகப் பரீக்ஷைசெய்யப்பட்டது. காலம், தர்மம், மிருத்யு, காமம், நீ

ங்களிருவர்கள் ஆகியயாவரும் ஒருவரோடொருவர் சேர்ந்திருப்

பதைப் பகுத்துப்பார்க்கும்பொழுது அறிவுள்ளஉனக்குப் [1]பரீக்ஷை செய்யப்பட்டதாகிறது. எல்லாவற்றிற்கும்மேலுள்ளதும் பிறப்பில்லாதப்ரம்மத்தினுடையதும் ஒப்புற்றதும் த்வந்துவங்களில்லாததும் அழுக்கில்லாத உருவமுள்ளதுமான ஸ்தானமானது உங்களிருவர்களுக்கும்இருக்கட்டும். நாங்கள் எல்லோர்களும் (எங்களுக்குள்ள) அந்த அந்த உலகங்களுக்குச் செல்லுகிறோம். நீ எந்தஉலகங்களை விரும்புகிறாயோ உன்கர்மத்தால் ஜயிக்கப்பட்ட அந்தஉலகங்களை அடை' என்றுசொன்னான். பிறகு, தர்மம் யமன்முதலியஅவர்கள் அரசனையும் ப்ராம்மணனையும் நோக்கி, 'நீங்களிருவர்களும் எங்களுடைய சிரஸென்று சொல்லப்படுவதும் ப்ரம்மலோகமென்று சொல்லப்படுவதுமான பதத்திலிருக்கிறீர்கள். உங்களிருவர்களாலும் நாங்கள் ஜயிக்கப்பட்டோம். உங்களிருவர்களுடையவிருப்பமும் ஸந்தேஹமின்றி விரும்பியதை அடைந்ததாயிற்று' என்றுசொன்னார்கள். ஜபிப்பவர்களடையும்பயனும், ஜபம்செய்பவனால் நற்கதியும் பதவியும் உலகங்களும் ஜயிக்கப்படுகின்றமுறையும் என்னால் உனக்கு நன்றாகக் காண்பிக்கப்பட்டன. காயத்ரீமந்திரத்தைஜபிப்பவன்உத்தமஸ்தானத்திலிருக்கும் ப்ரம்மாவை அடைவான்; அல்லது, அக்னிலோகத்தைஅடைவான்; அல்லது, ஸூர்யலோகத்தைஅடைவான். அவன் அந்தஉலகங்களில் தேஜோமயமானஉருவத்துடன் விளையாடிக்கொண்டிருக்கும்பொழுது அந்ததேவர்களுக்குள்ளகுணங்களைக்கண்டு ஆசையால்மோகமடைந்துநிந்தித்துக்கொண்டிருப்பான், இவ்விதமே சந்தரலோகத்திலும் வாயுலோகத்திலும் அவ்வுலகத்திலுள்ள அந்தத் தேவர்களின்குணங்களை அடையவிருப்பமுள்ளவனும் ஆசையுண்டயவனும் பூமிபோலகனமானதும் ஆகாயம்போல லகுவானதுமானசரீரத்தைஅடைந்தவனுமாகி வஸிப்பான். பிறகு, அவன் அந்தக்குணங்களிலும் ஆசையில்லாமல ஸந்தேஹமின்றிப் பரமாத்மாவை அடைவான். அவன் அழிவற்றதான பரமாத்மரூபத்தைவிரும்பிக்கொண்டு திரும்பவும் அதையே ப்ரவேசிப்பான். மோக்ஷத்திலும்மோக்ஷமான ரூபத்தை அடைந்தவனும் ஆசையடங்கியவனும் அஹங்காரமற்றவனும் ப்ரம்மமானவனுமானஅவன் த்வந்துவங்களில்லாதவனும் ஸுகமுள்ளவனும் சாந்தனும் உபத்ரவமில்லாதவனுமாயிருப்பான்; மறுபிறப்பில்லாததும் ஒன்றானதும் அக்ஷரமென்றுபெயருள்ளதும் துக்கமில்லாததும் ஜரையில்லாததும் சாந்தமும் ப்ரம்மத்தின்ஸ்தானமுமான அந்தபதத்தை அடைவான். [2]நான்குலக்ஷணங்களையும் விட்டு

---

1 வேறுபாடம். 2 ப்ரத்யக்ஷம், அநுமானம், சப்தம், மனம்என்பன.

விலகியதும் அப்படியே [1]ஆறுதோஷங்களில்லாததும் [2]பதினறுவஸ்துக்களிலிருந்துவிலகியதுமான அந்தப்புருஷரூபத்தை அடைந்தபின் எங்கும்நிறைந்தரூபத்தையடைவான். அல்லது, ஆசையுள்ளபுத்தியுடன் இதைவிரும்பாமலிருப்பானகில் எல்லாப்போகத்தையும்அடையத்தக்கவனுவான். எதைவிரும்புகிருனே அதை மனத்தால்அடைவான். அல்லது,எல்லாஉலகங்களையும்நரகம்போலப்பார்ப்பான்.ஆசையில்லாதவனும்எல்லாவற்றிலுமிருந்தும்விடப்பட்டவனுமாய்அந்தப்ரம்மரூபத்திலேயே ஸுகமாகஸந்தோஷிப்பான். மஹாராஜனே ! இவ்விதமாக ஜபிப்பவனுக்குள்ள இந்தக்கதி எவ்விதமிருக்கிறதோ, இது முழுதும் உனக்குச்சொல்லப்பட்டது. திரும்பவும் எதைக்கேட்க விரும்புகிருய் ?" என்றுசொன்னர்.

---

## நூற்றுத்தொண்ணூற்றெட்டாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், ஜபப்ராம்மணனும் இக்ஷ்வாகுவும் மோக்ஷமடைந்ததையும் ஜபத்தின்பலனையும் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! அந்தவிரூபன் அவ்விதம் சொன்னபிறகு, அந்தப்ராம்மணனும் அரசனும் அப்பொழுது என்ன மறுமொழிகூறினர்கள்? அதனை எனக்குச்சொல்லவேண்டும். அல்லது, உம்மால்சொல்லப்பட்ட உலகத்திற்கு அவர்கள்சென்ருர்களோ, அவ்வுலகத்தில்அவர்களுக்குஎன்னஸம்பாஷணை உண்டாயிற்று? அவர்கள் என்னசெய்தார்கள்?" என்றுகேட்க, பீஷ்மர்சொல்லத்தொடங்கினர்.

"ஜபம்செய்யும் அந்தப்ராம்மணன் (விரூபனுடைய அந்தவசனம்) சரியென்றுஅங்கீகரித்துப் பூஜிக்கத்தக்கவர்களானதர்மத்தையும் யமனையும் காலனையும்மிருத்யுவையும் ஸ்வர்க்கத்தையும் நன்ருகப் பூஜித்து முதலில் அவ்விடத்தில்சேர்ந்தவர்களான மற்றுமுள்ள ப்ராம்மணஸ்ரேஷ்டர்களனைவர்களையும் தலையால்வணங்கிப் பூஜித்து அரசனைநோக்கி, 'ஓ! ராஜரிஷியே! இந்தஜபத்தின்பயனுடன்கூடி முக்கியமானநிலையை அடைந்துகொள். நான் உன்னுல் அனுமதிகொடுக்கப்பெற்றுத் திரும்பவும்ஜபித்துக்கொண்டிருக்கிறேன். மிக்க பலமுள்ள அரசனே! எனக்கு முந்தியே காயத்ரீதேவியால், 'உனக்கு ஜபவிஷயத்தில் எப்பொழுதும் ச்ரத்தையுண்டாகட்டும்' என்று வரம்

---

[1] பசி தாகம்என்ற ப்ராணதர்மம் இரண்டும், சோகம் மோகம்என்றமனே தர்மம் இரண்டும், ஜரை மரணம்என்ற சரீரதர்மம்இரண்டுமாம்.

[2] ஞானேந்திரியங்கள்ஐந்து; கர்மேந்திரியங்கள்ஐந்து; ப்ராணவாயுக்கள் ஐந்து; மனம்ஒன்று; ஆகப்பதினறு.

அளிக்கப்பட்டிருக்கிறது' என்றுசொன்னான். அரசன், 'ஓ! ப்ராம்மணரே! உமதுமந்த்ரஸித்தியானதுஇவ்விதம் பயனுள்ளதாயிருந்து உமக்கும் ஜபிக்கவேண்டியதற்கு' ச்ரத்தையிருக்குமாகில், அதை அடையும். என்னுடன்கூட ஜபத்திற்குரியபயனைப் பெற்றுக்கொள்ளும்' என்றுசொன்னான். ப்ராம்மணன், 'இவ்விடத்தில் எல்லோர்களின்ஸந்நிதியிலும் மிகப்பெரியமுயற்சி செய்யப்பட்டது. நம்மிருவர்களுக்கும் எவ்வுலகத்திற்குச்செல்லத்தக்கதோ அதில் நாமிருவரும் சேர்ந்து ஸமமானபயனுள்ளவர்களாகவே செல்லுவோம்' என்று சொன்னான். அவ்விஷயத்தில் அவ்விருவர்களுக்குமுள்ளஉறுதியைத் தெரிந்துகொண்டு தேவர்களுக்குராசனான இந்திரன் திக்பாலகர்களுடனும் மற்றத்தேவர்களுடனுங்கூட அவ்விடத்திற்கு வந்தான். ஸாத்யர்களும் விஸ்வேதேவர்களும் மருத்துக்களும் மிகப்பெரிய [1]வாத்யங்களும் ஆறுகளும் மலைகளும் கடல்களும் பலவிதமானதீர்த்தங்களும் தவங்களும் [2]கர்மங்களின்பயனைக்கூறும்விதியும் வேதங்களும் ஸ்தோபங்களும் ஸரஸ்வதியும் நாரதரும் பர்வதரும் விச்வாவஸுவும் ஹாஹாவும் ஹூஹூவும் பரிவாரக்கூட்டங்களுடன்கூடிய சித்ரஸேனனென்னும் கந்தர்வனும் நாகர்களும் ஸித்தர்களும் முனிகளும் அங்குவந்தார்கள். தேவர்களின்தேவரும் ப்ரஜைகளுக்குப்பதியும் தேவர்களுக்கீஸ்வரரும் வேதரூபியும் அழிவற்றவருமான ப்ரம்மாவும் வந்தார். ஆயிரந்தலையுள்ளவரும் அறிவிறகெட்டாதவரும் தேவருமான ஸ்ரீவிஷ்ணுபகவானும் வந்தார். ப்ரபுவே! ஆகாயத்தில பேரிவாத்யங்களும் ம்ருதங்கங்களும் வாசிக்கப்பட்டன. அவ்விடத்தில் அந்தமஹாத்மாக்களுக்கு திவ்யமானபுஷ்பவருஷங்களுமுண்டாயின. அங்கங்கு நான்குபுறங்களிலும் அப்ஸரமடந்தைகளின்கூட்டங்களும் நர்த்தனஞ்செய்தன. பிறகு, உருவமுள்ளஸ்வர்க்கமானது ப்ராம்மணனையும் (அரசனையும்) நோக்கி, 'பெரியபாக்யம்பெற்ற ப்ராம்மணரே! நீர் நல்லஸித்தியைப்பெற்றீர். அரசனே! நீயும் அதுபோல் ஸித்தியைப்பெற்றாய்' என்ற வசனத்தைச்சொல்லிற்று. ஓ! அரசனே! பிறகு, ஒருவருக்கொருவர் உபகாரத்தால்சேர்ந்தவர்களான அந்தப்ராம்மணன் அரசன்இருவர்களுமே விஷயங்களைவிலக்கத்தக்க பொறிகளின்லயத்தைச்செய்துகொண்டார்கள். அவர்கள் ப்ராணனையும் அபானனையும் வ்யானனையும் உதானனையும் ஸமானனையும் மனத்

1 வேறுபாடம்.

2 ஜீவனுக்கும் ப்ரம்மத்திற்குமுள்ள அபேதத்தைச்சொல்லும் வேதாந்தங்கள்' என்பது பழையவுரை.

தில் நிலைக்கும்படிசெய்து மனத்தை ப்ராணனில் நிலைக்கச்செய்து கொண்டார்கள். பிறகு, அவர்கள் பத்மாஸனஞ்செய்துகொண்டு புருவங்களுக்குக்கீழுள்ள மூக்குநுனியைப்பார்த்துக்கொண்டு மெள்ள மெள்ள அப்பொழுது புருவங்களுக்கும் கண்களுக்குமுள்ள ஸந்தி ஸ்தானத்தில்மனத்தைநிலைக்கச்செய்துகொண்டார்கள். பிறகு, அசைவற்றசரீரங்களுடன்கூடியவர்களும் உறுதியானபார்வையுள்ளவர்களும் ஸமாதியிலிருப்பவர்களும் ஆஸனத்தைஜயித்தவர்களுமான அவர்கள் ப்ரம்மரந்த்ரஸ்தானத்தில் மனத்தை லயிக்கும்படி செய்து கொண்டார்கள். பிறகு, மஹாத்மாவானப்ராம்மணனுடைய ப்ரம்மரந்த்ரத்தைப்பிளந்துகொண்டு மிகப்பெரிதான ஜ்யோதியின்ஜ்வாலையானது(வெளிவந்து) ஸ்வர்க்கத்திற்குச்சென்றது. அப்பொழுதுஎல்லாத் திக்குக்களிலும் மிகப்பெரிதான ஹா! ஹா! வென்னும்சப்தமுண்டாயிற்று. புகழப்படும்அந்தஒளியானது அப்பொழுது ப்ரம்மதேவரிடம் ப்ரவேசித்தது. அரசனே! ப்ரம்மதேவரும் உடனேஎதிர்கொண்டு சென்றுஒட்டைஅளவுள்ளபுருஷவடிவமான அவ்வொளியைநல்வரவு கூறினர். திரும்பவும் புன்னகைசெய்து, 'ஜபிப்பவர்களுக்கும் யோகிகளுக்கும் ஸமமானபயனுண்டென்பதில ஸந்தேஹமில்லை. யோகிகளுக்கும் ஜபிப்பவர்களுக்குமுள்ளபயன் ப்ரத்யக்ஷமாகக்காணப்படுகிறது. ஆகிலும், எதிர்கொண்டழைப்பது யோகிகளைவிட ஜபிப்பவர்களுக்கு விசேஷமான பயனென்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது' என்று இனிமையான வேறுஒருவசனத்தையும் சொன்னார். பிறகு, அந்தப்ரம்ம தேவரானவர், 'என்னிடத்தில்வஸிக்கலாம்' என்றுசொல்லி வாயைத் திறந்தார். உடனே, ப்ராம்மணன் துன்பமில்லாமல் இந்தப்ரம்மதேவரின் வாயிற்புகுந்தான். ப்ராம்மணஸ்ரேஷ்டன் எவ்விதம்புகுந்தானோ அவ்விதம் அதேவிதப்படி அரசனும் அப்பொழுது பகவானான ப்ரம்ம தேவரிடம்புகுந்தான். பிறகு, தேவர்கள் ப்ரம்மதேவரைவணங்கி, 'ஜபிப்பவர்களுக்குவேண்டி (எதிர்கொண்டுவருவதென்னும்) இம்முயற்சிசெய்யப்பட்டது. இதை அறியவேண்டியே நாங்கள்வந்தோம். இவ்விருவர்களும் ஸமமாகவே உம்மாலபூஜைசெய்யப்பட்டவர்களும் ஸமமானபயனுடன் கூடியவர்களுமானார்கள். யோகிக்கும் ஜபிப்பவனுக்கும் ஸமமானதும் மிகப்பெரிதுமானபயனானது இப்பொழுது காணப்பட்டது. எல்லாஉலகங்களையுங்கண்டிப் பிரார்த்திக்கத்தக்க லோகமுள்ளவிடத்திற்கு இவர்கள் செல்லுவார்கள்' என்றுசொன்

1 யோகத்திற்குரிய பலவகை ஆஸனங்கள்; 'ஜிதாத்மாநோ' என்பது வேறுபாடம்; அதற்கு, 'சித்தத்தை ஜயித்தவர்கள்' என்பது பழையவுரை.

ஞர்கள். ப்ரம்மதேவரானவர், 'பெரியஸ்மிருதியைப்படிக்கிறவனும் அப்படியே சுபமான உபஸ்மிருதியைப்படிக்கிறவனுமாகிய அவ்விருவர்களும் இந்தவிதிப்படி என்உலகத்தைஅடைவார்கள். யோகத்தில் பக்தியுள்ளவனுயிருக்கிறவனும் சரீரத்தின்முடிவில் இந்தவிதிப்படி என்னுடைய உலகங்களை அடைவான்; இதில்ஸந்தேஹமில்லை. நான் போகிறேன்; கார்யஸித்திக்காக அவரவர்களின் இடங்களுக்குப்போகலாம்' என்றுசொன்னுர். இவ்விதம்சொன்னபின், அந்தப்ரம்மதேவரானவர் அப்பொழுது அவ்விடத்திலேயேஅந்தர்த்தானத்தைஅடைந்தார். பிறகு, விடைபெற்றுக்கொண்டு தேவர்களும் தம்தம்இடத்திற்குச்சென்றுர்கள். அரசனே! அவ்விடத்திலுள்ள அந்தமஹாத்மாக்களனைவர்களும் தர்மத்தைப்புகழ்ந்துகொண்டு மிக்கஸந்தோஷமுள்ள மனத்துடன் பின்தொடர்ந்துசென்றுர்கள். மஹாராஜனே! ஜபிப்பவர்களுக்குள்ள இந்தப்பயனும் இந்தக்கதியும் சாஸ்திரப்படி சொல்லப்பட்டன. திரும்பவும் எதைக்கேட்கவிரும்புகிருய்?" என்றுசொன்னுர்.

---

## நூற்றுத்தொண்ணூற்றேன்பதாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(கர்மம் ஞானம் ப்ரம்மம்இவைகளைப்பற்றி ப்ருஹஸ்பதிக்கும் மனுவுக்கும்நடத்த ஸம்பாஷணை.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! ஞானயோகத்திற்கும் வேதங்களுக்கும் அக்னிஹோத்ரமுதலியநியமத்திறகும்என்னபயன்? ஜீவனை எவ்விதம்தெரிந்துகொள்ளவேண்டும்? அதனை எனக்குச் சொல்லவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினுர். "இவ்விஷயத்திலும் மனுப்ரஜாபதிக்கும் மஹரிஷியானப்ருஹஸ்பதிக்கும் நடந்த ஸம்பாஷணையான பழைய இவ்விதிஹாஸத்தை உதாஹரிக்கிறுர்கள். தேவரிஷிக்கூட்டங்களுள் மிகச்சிறந்தவரும் மஹரிஷியுமானப்ருஹஸ்பதியானவர் சிஷ்யராகி ப்ரஜைகளுக்கு மிகவும் பூஜ்யரும் ப்ரஜைகளுக்குப்பதியுமானமனுவைக் குருவாகவணங்கிப்பழையதான இந்தப்ரச்னத்தைக் கேட்கத்தொடங்கினுர்.

'பகவானே! கர்மகாண்டமானது எதை அறியவேண்டியகாரணத்திற்காக ப்ரவ்ருத்திருக்கிறதோ, எதை ஜ்ஞானத்திற்குப்பயனென்று ப்ராம்மணர்கள் கூறுகிறுர்களோ, எது மந்திரத்திலுள்ள சப்தங்களால்வெளியிடப்படாததாயிருக்கிறதோ, அதை எனக்கு உள்ளபடி உபதேசிக்கவேண்டும். ஸ்தோத்திரங்களையும் சாஸ்திரங்களையும்

வேதங்களையும் மந்திரங்களையும் அறிந்தவர்களானமஹான்களால் பல விதமானயாகங்களாலும் பசுக்களின்தானங்களாலும் எந்தப்பயன் அடையக்கருதப்படுகிறதோ அப்பயன் என்ன? அஃதுஎவ்விதமிருக்கிறது? அஃது எவ்விடத்தில்கிடைக்கும்? பகவானே! பூமியும் பூமியிலுண்டானபிராணிகளும் காற்றும் ஆகாயமும் ஜலமும் ஜலத்தை இடமாகக்கொண்டப்ராணிகளும் ஸ்வர்க்கமும் ஸ்வர்க்கத்தைஇடமாகக்கொண்டப்ராணிகளும் எதிலிருந்துபிறப்படைந்தனவோ முதலிலுள்ள அந்தக்காரணத்தை எனக்குஉபதேசிக்கவேண்டும். மனிதன் எதைஅடையவேண்டி ஜ்ஞானத்தைவிரும்புகிறானோஅந்தவஸ்துவுக்காக ஜ்ஞானத்தைப்பற்றியப்ரவிருத்தியுண்டாகிறது. நான் புராதனமான அந்தப்பரவஸ்துவை அறியவில்லை. (ஆகையால், அறியாமல்) பொய்யானப்ரவிருத்தியை நான் எவ்விதம்செய்வேன்? நான், ரிக்ஸாமங்களின்கூட்டங்களையும் யஜுஸுகளையும் சந்தஸுகளையும் [1] நக்ஷத்ரவித்யையையும் நிருக்தத்தையும் வ்யாகரணத்தையும் கல்பஸூத்ரங்களையும் சிக்ஷையையும் கற்றும், உலகங்களுக்குக்காரணமானவஸ்துவை அறியவில்லை. ஆகையால், பூஜ்யரானநீர் இஃதனைத்தையும் எனக்குப் பொதுவானசப்தங்களாலும் விசேஷசப்தங்களாலும் உபதேசிக்கவேண்டும். பூஜ்யரானநீர் ஜீவனானது சரீரத்திலிருந்து எவ்விதம்விலகுகிறதோ திரும்பவும் வேறுசரீரத்தை எவ்விதம் அடைகிறதோ கர்மத்திற்கு என்னபயனிருக்கிறதோ ஜ்ஞானத்திற்குப்பயனெதுவோ இவற்றையெல்லாம் எனக்கு உபதேசிக்கவேண்டும்' என்றுகேட்டார். மனு, 'எவனுக்கு எதுஎது ப்ரியமுள்ளதோ அவனுக்கு அதைஅதை ஸுகமென்று சொல்லுகிறார்கள். இஷ்டமில்லாததுஎதுவோ அதையே துக்கமென்றுகூறுகிறார்கள். 'இஷ்டமாயிருப்பது எனக்குக் கிடைக்கவேண்டும். இஷ்டமில்லாதது எனக்கு வேண்டாம்' என்னும்இவ்வாசையை நிறைவேற்றவேண்டிக் கர்மங்களின்விதியானது நடைபெற்றிருக்கிறது. இஷ்டமும் அனிஷ்டமும் எனக்குவேண்டாமென்ற இந்தநிலையைஅடையவேண்டி ஞானத்தின் விதியானது நடைபெற்றிருக்கிறது. வேதத்தில்கூறியகர்மவழிகள் ஆசையுள்ளவனைப்பற்றினவாயிருக்கின்றன. இவ்வாசைகளிலிருந்துவிடப்பட்டவன் பரமானபொருளை அடைவான். ஸுகத்தைவிரும்பும்மனிதன் பலவிதமான கர்மவழியில் ப்ரவிருத்தித்து நரகத்தை அடைகிறான்' என்றுசொன்னார். ப்ருஹஸ்பதி, 'வேண்டியதும் வேண்டாததும், முறையே ஸுகமும் ஸுகமில்லாததுமாயிருக்கின்றன.

---

1 ஜ்யோதிஷம்.

(ஸுகத்தைவிரும்புவதும் துக்கத்தைவெறுப்பதுமாகிய) இதுதான் (மனிதனுடைய) விருப்பம். 'அதைக் கர்மங்களாலடைகிறான்' என்று சொன்னார். மனு சொல்லத்தொடங்கினார். 'இவ்விதஆசைக்காகக் கர்மங்களின்விதியானது நடைபெற்றிருக்கிறது. இவ்வாசைகளிலிருந்து விடுபட்டவன்பரமான வஸ்துவைஅடைவான். கர்மவழியானதுஆசையுள்ளபுத்தியுடையவர்களை ஸந்தோஷிக்கச்செய்யும். இவ்வாசைகளிலிருந்து விடுபட்டுப் பரமானவஸ்துவை அடையவேண்டும். ஆசையற்ற மனமுதலியவற்றைக்கொண்டு செய்யப்படும் கர்மங்களால் விளங்குகிறவனும் மனத்தில்ப்ரகாசமென்னும் சுத்தியைஅடைந்தவனுமாய்த் தர்மத்தில்ப்ரவ்ருத்தித்தவன் மோக்ஷஸுகத்தைவிரும்பத்தக்கவனாவான். ஆசையற்றவர்கள் எந்தப்பதத்தை அடைகிறார்களோ பரமான அந்தப்பதமானது கர்மங்களுக்குரியபயனிலிருந்து விலகியதாகும். ப்ரஜைகள் மனத்தாலும் கர்மத்தாலும் படைக்கப்பட்டிருக்கின்றன. மனம் கர்மம் இவ்விரண்டுமே உலகங்களால்அனுஷ்டிக்கப்படும் நல்வழிகளாகும். கர்மமானது நிலையற்றபயனுள்ளதானாலும் சாச்வதமானபயனுள்ளதாகவும் (வேதங்களில்) காணப்படுகிறது. அதற்கு மனத்தால் கர்மங்களின்பயன்களைவிடுவது காரணமாகிறதல்லாமல்வேறில்லை. விஷயமும் அதன்போகமும் ஆசையின்வடிவங்களாக வேதத்தில்கூறப்படுகின்றன. இவ்வாசைகளிலிருந்துவிடுபட்டவன் பரவஸ்துவைஅடைவான். பலவிதமானகர்மங்களின்பயனில் ஸுகத்தை அடையவிரும்பும்அவிவேகியானமனிதன் பரவஸ்துவை அடையமாட்டான். அந்தவஸ்துவானது காமங்களுக்குள்ளபயனிலிருந்துவிலகிய வேறானபயனன்றோ! பரமானப்ரம்மமானது ஆசையற்றவர்களுக்கன்றோ அடையத்தக்கதாகிறது? தன்உருவத்தால்மனிதர்களுக்கு நாயகன்போல்விளங்கும்கண்ணானது இரவுபோனவுடன் இருளால் மறைக்கப்படாதஉருவமுள்ளதாய் (விலக்கத்தக்க முள்முதலியவற்றை)ப் பார்ப்பதுபோலப் புத்தியானது விவேகமென்னும்குணத்துடன்கூடியதாய் விலக்கத்தக்க அசுபமானகர்மத்தைப் பார்க்கிறது. மனிதர்கள் ஸர்ப்பங்களையும் தர்ப்பத்தின்முனைகளையும் கிணற்றையும் அறிந்தபின் விலக்கிக்கொள்ளுகிறார்கள். அறியாத காரணத்தால் மூடர்கள் அவைகளில்விழுகிறார்கள். அறிவிற்குள்ளேயமன் பலவிதம் சிறந்ததாயிருக்கிறதென்று பார். விதிப்படி ப்ரயோகிக்கப்படும்எல்லாமந்திரமும் கூறியபடிக்குள்ளயாகங்களும் ஒருதயாகங்களுள்ளதக்ஷிணைகளும் மிகுதியான அன்னதானமும் (யாகத்திற்குவேண்டியவைகள்)மனத்திற்குள்ளதியானமென்பவைய ஐந்தும் உட்புகுகளுமுள்ள கர்மத்தைப் பய

னுள்ளதாகச்சொல்லுகிறார்கள். வேதங்கள் கர்மத்தை மூன்றுகுண முள்ளதாகக்கூறுகின்றன. கர்மமானது மந்திரத்தையன்றோ முன் னிட்டதாயிருக்கிறது. அக்காரணம்பற்றி மந்திரமானது முக்குண முள்ளதாகிறது. (அதன் மூலமான) விதியானது மூன்றுகுணமுள்ள தாகிறது. கர்மமானது அதைச்செய்கிறவன்மனததிலுள்ளகுணத் தால் மூன்றுவிதமாகிறது. அந்தக்கர்மத்தின் [1]பயனைப்புஜிக்கும்ஜீவ னும் அதுபோல முக்குணமுள்ளதாகிறது. அழகும் பரிசுத்தியு முள்ள சப்தங்கள், ரூபங்கள், ஸ்பர்சங்கள், ரஸங்கள், கந்தங்கள் என்ற கர்மத்திற்குரியஇப்பயனானது நல்வினையாலடையத்தக்க [2]மே லுலகத்தில்வஸித்திக்கும். மனிதன் [3]மரணத்தைஅடையாமலிருக்கும் பொழுதே ஞானத்திற்குத்திறமையுள்ளவனாவான். மனிதன் சரீரத் தால் எந்தஎந்தக்கர்மத்தைச்செய்கிறானோ அதனதன் பயனைச் சரீரத் துடன்கூடியவனாகியே அனுபவிப்பான். சரீரமே ஸுகததிற்கிட மாகிறது. சரீரமே துக்கத்திறகும்இடமாகிறது. வாக்கால் ஒரு சிறிதுகர்மத்தைச்செய்யினும் அதைமுழுதும் வாக்காலேயே அனுப விக்கிறான். மனத்தால் ஒருசிறிதுகர்மத்தைச்செய்யினும் அதை அவன் மனத்தையடைந்தே அனுபவிக்கிறான். கர்மங்களின்பயனில் பறறுதலுள்ளஇந்தமனிதன் பயனைவிரும்பி எந்தஎந்தவிதமான குண த்துடன்கூடியகர்மத்தைச்செய்கிறானோ இவன் அந்தஅந்தவிதமான குணத்தால் ஏவப்பட்டுச் சுபமும் அசுபமுமானகர்மத்தின்பயனைப் புஜிக்கிறான். மீனானது ப்ரவாஹத்தை அனுஸரித்து எவ்விதம்ஓடுகி றதோஅவ்விதம் மனிதன்முதலிலசெய்யப்பட்டகர்மத்தைஅனுஸரித துச் செல்லுகிறான். இந்தஜீவனானவன் சுபமானகர்மததின்பயனில் மிகவும்ஸந்தோஷமடைகிறான்; பாபமானகர்மததின்பயனிலோ மிக வும்ஸந்தோஷமில்லாமலிருக்கிறான். இவ்வுலகமனைத்தும் எதிலிருந்து பிறப்படைகிறதோ, புத்தியுள்ளவர்கள் எதைஅறிந்து சாந்தியை அடைகிறார்களோ, எதானது வேதவாக்குக்களாலும் விளங்கச்செய்ய முடியாததோ, எது பரமானபொருளோ அந்தவஸ்து சொலலப்படுவ தைக்கேள். பலவிதமானரஸங்களிலிருந்தும் வாஸனைகளிலிருந்தும் விடுபட்டதும் சப்தமில்லாததும் ஸ்பர்சமில்லாததும் ரூபமில்லாததும்

1 ஸுகம், துக்கம், மோஹம்என்ற இம்மூன்றுபயனகளும் முறையே ஸத்வம், ரஜஸ், தமஸ்என்ற குணங்களைப்பற்றியவையாகும். இப்பயன்களுக்குக் காரணங்களானகாமங்களும் அவைகளை உபதேசிக்கும் விதிகளும் அவ்வாறு குணமுளமந்திரங்களும் அவ்வாறேமூன்று குணமுளளனவாதலால் அப்படியே அந் தந்த குணங்களுள்ளவாகின்றன என்பது கருத்து.

2 வேறுபாடம். 3 வேறுபாடம்.

கர்மேந்திரியங்களுக்கு விஷயமாகாததும் ஞானேந்திரியங்களுக்குப் புலப்படாததும் ஜாதியில்லாததும் ஒன்றுமான அந்தவஸ்துவானது ப்ரஜைகளுக்குவேண்டிச் சப்தமுதலியஐந்துவிஷயங்களையும் உண்டு பண்ணிற்று. அது பெண்ணுமன்று; ஆணுமன்று; நபும்ஸகமு மன்று; ஸத்துமன்று; அஸத்துமன்று; ஸதஸத்துமன்று; ப்ரம்மத் தைஅறிந்தமனிதர்கள் எதைப்பார்க்கிறார்களோ அந்த அக்ஷரவஸ்து வானது நசிக்கிறதில்லையென்று தெரிந்துகொள்.

---

## இருநூறுவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(ப்ருஹஸ்பதிக்கும் மனுவுக்கும் ஸம்பாஷணைத் தொடர்ச்சி.)

அக்ஷரமானபரமாத்மரூபத்திலிருந்து ஆகாயமும், அவ்வாகா யத்திலிருந்துவாயுவும் அந்தவாயுவிலிருந்துஅக்னியும் அந்தஅக்னியி லிருந்துஜலமும் ஜலத்திலிருந்துபூமியும் உண்டாயின. பூமியிலிரு ந்து ஸ்தாவரஜங்கமமானஉலகமுண்டாகிறது. இவ்வுலகங்கள் (பார்த் திவமான) சரீரங்களால் ஜலத்தையேஅடைந்து, ஜலத்திலிருந்து அக் னியையும் அதிலிருந்து வாயுவையும் அதிலிருந்து ஆகாயத்தையும் பரமாத்மரூபத்தையும்அடைகின்றன. பரமாத்மரூபத்தை அறியாத வர்கள் அதிலிருந்து திரும்புகிறார்கள். அறிந்தவர்கள் பரமாத்மாவை அடைகிறார்கள். அந்தப்பரமாத்மாவானது சூடுள்ளதுமன்று; குளி ருள்ளதுமன்று; மிருதுவுமன்று; கடினமுமன்று; புளிப்புமன்று; துவர்ப்புமன்று; இனிப்புமன்று; கசப்புமன்று; சப்தமுள்ளதுமன்று; மணமுள்ளதுமன்று; ரூபமுள்ளதுமன்று. அந்தப்பரமாத்மாவானது இவைகளைஅறியத்தக்க ஸ்வபாவமுள்ளதுமன்று. சரீரமானது ஸ்பர் சத்தையும், நாவானது ரஸத்தையும், மூக்கானதுமணத்தையும், செவி சப்தத்தையும், கண் ரூபத்தையும்அறிகின்றன. ஆத்மாவைப்பற்றிய யோகத்தை அறியாதமனிதர்கள் அந்தப்பரமாத்மரூபத்தை அறிய மாட்டார்கள். ரஸத்திலிருந்துநாவையும், மணத்திலிருந்து மூக்கையும், சப்தத்திலிருந்துசெவியையும், ஸ்பர்சத்திலிருந்துத்வக்கையும், ரூபத் திலிருந்துகண்ணையும்விலக்கிக்கொண்டு அதன்பிறகு, அந்தப்பரமாத்மாவின்ஸ்வபாவத்தைப்பார்க்கிறான். எதற்காக எதைக்குறித்து எந்த ஸ்தானத்தில எந்தக்கர்த்தாவானவன் எவ்விடத்தில் எந்தமுயற்சி யைச்செய்கிறானோ, அதிலிருந்துபிடித்துக்கொண்டு எந்தக்கர்மத்தைச

செய்கிருனோ, அவையாவும் எதைக்காரணமாகக்கொண்டனவோ, அக்காரணத்தைத் தன்னுருவமாகஅடையத்தக்க பரமாத்மாவென்று சொல்லுகிருர்கள். [1]எது வ்யாபகமான ஈசுவரரூபமும் அதைஉபாஸிக்கத்தக்க ஜீவரூபமுமாயிற்றே, எது வேதத்தால் ப்ரதிபாதிக்கப்படுகிறதோ, எது உலகத்தில் நிலைபெற்றிருக்கிறதோ,எது எல்லாவற்றிற்கும் காரணமும் [2]உண்மையாகச் செய்வதுமாயிருக்கிறதோ அது காரணமாகும். இதையொழிந்தமற்றவையெல்லாம் காரியமாகும்.ஒருமனிதன் நன்ருகச்செய்யப்பட்டபலகர்மங்களால சுபத்தையும் அசுபத்தையும் விரோதமில்லாமல் எவ்விதம்அடைகிருனோஅதுபோலஇந்தஅறிவானபரமாத்மரூபமானது சுபங்களும் அசுபங்களுமான சரீரங்களில் தன்கர்மங்களால்கட்டப்பட்டிருக்கிறது. (மரத்தின்நுனியில் நன்ருக விளங்கும்தீபமானது தான்விளங்கிக்கொண்டு எவ்விதம்எ திரிலுள்ள வேறுபொருளுக்கும் ப்ரகாசத்தைச்செய்கிறதோ அதுபோல இச்சரீரத்தில் ஜ்ஞானமென்னும் தீபத்தால் விளக்கமடையும்ஐந்துஇந்திரியங்களென்னும்மரங்கள் தம்மைவிட வேருனப்ரகாசமுள்ளவைகளாகியே இருக்கின்றன. ஓர் அரசனைச்சேர்ந்த திறமையுள்ளவர்களான பல அமாத்தியர்கள் யுக்தியுள்ளவர்களாய் எவ்விதம்வெவ்வேறுப்ரமாணத்தைச்சொல்லுவார்களோ அப்படியே சரீரங்களில் ஐந்துஇந்திரியங்களும் ஜ்ஞானரூபியான பரமாத்மாவின் அம்சங்களாயிருக்கின்றன. அந்தப்பரமாத்மாவானவர் அந்தஇந்திரியங்களைவிட மேலானவராயிருக்கிருர். அக்னிக்கு ஜ்வாலைகளும் வாயுவுக்கு வேகங்களும் ஸூர்யனுக்குக்கிரணங்களும் ஆறுகளுக்கு ஜலங்களும் எவ்விதம்போவதும் வருவதும் இருப்பதுமாயிருக்கின்றனவோ அப்படியே ஆத்மாக்களுக்குச் சரீரங்கள் போவதும் வருவதும் இருப்பதுமாயிக்கின்றன. ஒருமனிதன் கோடாலியை எடுத்துவெட்டுவதால் கட்டையிலுள்ளபுகையையும் நெருப்பையும் காணமுடியாததுபோலச் சரீரத்தையும் வயிற்றையும் கையையும் காலையும் அறுப்பதால் அச்சரீரத்தைவிட வேருனஆத்மாவைக் காண்கிருர்களில்லை. அந்தக்கட்டைகளையே கடைந்து அவற்றிலுள்ளபுகையையும் அக்னியையும் எவ்விதம் காணமுடியுமோ அதுபோல நல்லபுத்தியுள்ளமனிதன்ஜ்ஞானமடை

---

1 எது எல்லாவற்றையும் வியாபித்ததும் எல்லாவற்றிற்கும் ஆதாரமுமாயிருக்கிறதோ, எது உலகத்தில் மங்கிரபொருளாக நிலைபெற்றிருக்கிறதோ, எது எல்லாவற்றிற்கும் மூலமோ, எது சிறந்த புருஷார்த்தத்தைக்கொடுப்பதோ அதுதான் காரணவஸ்து.

2 'பரம் ஆத்மகாரீ' என்பது வேறுபாடம்; 'உயர்ந்ததும் தானொன்றே எல்லாவற்றையுஞ்செய்வதும்' என்பது பழையஉரை.

ந்து உபாயத்தால் இந்திரியங்களுக்குப்புலப்படும்விஷயங்களுடன்கூட ஓரேஸமயத்தில் அந்தப்பரமாத்மாவின்ஸ்வபாவத்தைக் காண்கிறான். ஸ்வப்னவஸ்தையின் இடையில் 'தன்னுடையசரீரத்தைப் பூமியில் விழுந்ததாகவும் தன்னைவிடவேறானதாகவும் எவ்விதம்பார்க்கிறானோ அதுபோலச் செவிமுதலியபொறிகளுடன்கூடியதும் நல்லமனமுள்ளதும் நல்லபுத்தியுள்ளதுமான ஆத்மாவானது ஒருசரீரத்திலிருந்து அதைவிடவேறானசரீரத்திற்குச் செல்லுகிறது. சரீரத்துடன்கூடிய இந்தப்பரமாத்மாவானது பிறப்பு இறப்பு வளர்ச்சி குறைகளுடன்ஸம்பந்தப்பட்டதன்று. இந்தஆத்மாவானது [1]வேறுசரீரத்தைத்தோன்றச்செய்யத்தக்க கர்மமிருப்பதால் இந்தச்சரீரம் (பிணமானதும்) காணப்படாமலே வேறுசரீரத்தை அடைகிறது. ஆத்மாவின்ஸ்வரூபத்தைக் கண்முதலியபொறிகளால் காணமுடியாது. அது போகங்களில் சிறிதும்பற்றுதலை அடைகிறதுமில்லை. அப்பொறிகளைக்கொண்டு தனக்குள்ளகாரியத்தைச்செய்துகொள்ளுகிறதுமில்லை. அந்தப்பொறிகள் அந்தஆத்மாவைக்காண்பதில்லை. ஆத்மாவானது அப்பொறிகளைப் பார்க்கிறது. (இரும்புமுதலிய) பொருள் தன்னை அடுத்து ஜ்வலிக்கும் அக்னியினுடைய மிக்கதாபத்தாலுண்டாகும் அந்தஅக்னிஉருவத்தைஅடைவதும் உண்மையில் அவ்விதவேறானரூபத்தையும் குணத்தையும் அடையாததுமாயிருப்பதுபோலவே இந்தஆத்மாவினுடையரூபமான து.சரீரத்தில்காணப்படுகிறது. அவ்விதம் மனிதன் சரீரத்தைத்தள்ளிவிட்டுப் பிறர்கள்காணக்கூடாத வேறுசரீரத்தில் ப்ரவேசிக்கிறான். தன்சரீரத்தை மஹாபூதங்களில்தள்ளிவிட்டு வேறுசரீரத்தை அடைந்தஉருவத்தையே பொறுக்கிறான். (மரணமடையும்) சரீரியானவன் நான்குபுறத்திலுமுள்ள ஆகாயத்தையும் வாயுவையும் அக்னியையும் ஜலத்தையும் அப்படியேபூமியையும் (தன்சரீரத்தால்) அடைகிறான். செவிமுதலிய ஐம்பொறிகளோ, வேறுஇடமில்லாதவைகளாய்க் கர்மங்களிலிருந்துகொண்டு ஐந்துகுணங்களையும் ஆச்ரயிக்கின்றன. அவைகளில், செவியானது ஆகாசத்தின்குணமானசப்தத்தையும், மூக்கானது பூமியின்குணமானமணத்தையும், கண்ணானது அக்னியின்குணமானரூபத்தையும், நாவானது ஜலத்தின்குணமானரஸத்தையும், வாயுவின்கூறானத்வக்கானதுஸ்பர்சமென்னும்குணத்தையும் அடைந்திருக்கின்றன. இவ்வைந்துகுணங்களும் மஹாபூதங்களிலிருக்கின்றன. இந்திரியங்களுக்குப்புலப்படத்தக்க ஐந்துகுணங்களும்

---

1 'பலலக்ஷ்யோகாத்' என்பது வேறுபாடம் 'ஸுகதுக்கங்களைக்கொடுக்கும் கர்மஸம்பந்தத்தால்' என்பது பழையஉரை.

அப்படியே இந்திரியங்களுமாகிய எல்லாம் மனத்தைஅடுத்துச்செல்லுகின்றனவாம். மனமானது புத்தியையும், புத்தியானது ஆத்மாவையும் அடுத்திருக்கின்றன. (பொறிகள்) சுபமானாலும் அசுபமானாலும் எந்தக்கர்மம் இவனால்செய்யப்பட்டதாயிருக்கிறதோ அதையே மரித்தபின் வேறுசரீரத்தில் எடுத்துக்கொள்ளுகின்றன. ஜலத்தை இருப்பிடமாகக்கொண்டபிராணிகள் ப்ரவாஹம்செல்லுவதை அநுஸரித்துச் செல்லுவதுபோலப் [1]பெரியவைகளும் சிறியவைகளுமான ப்ராணிகள்மனத்தைஅநுஸரித்துச்செல்லுகின்றன.நிலையற்றபொய்ப்பொருளானது எவ்விதம் உண்மைப்பொருள்போலக் கண்களுக்குப் புலப்படுகிறதோ, நுட்பமானவஸ்து எவ்விதம் பெரியஉருவமுள்ளது போலத்தோன்றுகிறதோஅவ்விதமே தீரபுருஷன் மிக்கதாபமுள்ளவன்போலிருந்தாலும் உண்மையில் மோஹத்தில்விழமாட்டான்; அப்படியே புத்திக்குவிஷயமானபரமாத்மாவையும் அடைவான்.

---

## இருநூற்றேழாவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(ப்ருஹஸ்பதிக்கும் மநுவுக்கும் ஸம்பாஷணைத் தொடர்ச்சி.)

வெளியிற்சென்ற இந்திரியங்களால் வெகுகாலத்திற்கு முந்தி அறியப்பட்டவிஷயங்களைப் பிறகு அந்த இந்திரியங்கள் [2]லயத்தை அடைந்திருக்கும்பொழுது எதுநன்றாகநினைக்கிறதோ புத்தியுடன் ஸம்பந்தத்தை யடைந்த அது பரமாத்மாவாகும். [3]ஒரேஸமயத்திலும் வெவ்வேறானகாலத்திலும் அருகிலிருந்துஅநுபவிக்கப்பட்ட இந்திரியங்களுக்குரியவிஷயங்களை முழுமையையும் ப்ரகாசப்படுத்திக்கொண்டும் அப்படியே நிலையற்றவைகளும் வெவ்வேறானவைகளுமான ஜாக்ரம் ஸ்வப்னம் ஸுஷுப்தியென்றமூன்று அவஸ்தைகளையும் அறிந்து

---

1 'விஷயப்புத்திமுதலியவைகள்' என்பது பழையஉரை.

2 'ஜாக்ரதாவஸ்தையில் ஓர்இந்திரியம்நஷ்டமானாலும் முதலில் அதனால் அநுபவிக்கப்பட்டதை ஆத்மாநினைக்கிறது' என்பதுகருத்து; அல்லது, 'எல்லா இந்திரியங்களும் லயத்தை அடைந்தஸமயமான ஸ்வப்னவஸ்தையில் எல்லா விஷயங்களையும் ஆத்மாஅறிந்துகொண்டிருக்கிறது' என்றுமாம்.

3 'யாதொருஆத்மாவானது நானாருபத்திலுள்ள இந்திரியங்களுக்குரிய விஷயங்களை முழுமையையும் ஒரேஸமயத்தில் அறிந்துகொள்ளாமல் முறையாகவே தகுந்தகாலத்தில் அவைகளை அறிந்துகொண்டு ஸஞ்சரிக்கிறதோ அந்த ஆத்மாவானது அக்காரணத்தால் ஒன்றாயும் பரமாத்மாவாயுமிருக்கிறது' என்பது வேறுபாடம்.

கொண்டு அவைகளில் ஸஞ்சரித்துக்கொண்டுமிருப்பதால் அந்தஆத்மாவானது ஒன்றாயும் பரமாத்மரூபியாயுமிருக்கிறது. அந்தஆத்மாவானது அந்தஒவ்வோர்அவஸ்தையிலுமுள்ள ரஜஸ் தமஸ் மூன்றாவத்தானஸத்வம்என்று வெவ்வேறானஉருவமுள்ளகுணங்களைப் பற்றுதலின்றி அறிந்துகொண்டிருக்கிறது. அந்தஆத்மாவானது அந்தக்குணங்களால் கட்டப்பட்டதன்று. அஃது உலகத்தைக் கட்டுள்ளதாகச்செய்கிறது. பரமாத்மாவானது இச்சரீரத்திலுள்ளமுக்குணங்களையும் அனுஸரித்துச்செல்லுகிறதன்று. அவ்விதமே, கட்டைகளிலிருந்துகொண்டு அவைகளை எரிக்கும்அக்னியை வாயுவானது ப்ரகாசிக்கும்படிசெய்வதுபோலச் சரீரியானஆத்மாவானது விஷயங்களில் பற்றுதலுள்ள இந்திரியங்களை ப்ரகாசப்படுத்திக்கொண்டிருக்கிறது. இந்திரியங்களை ப்ரகாசிக்கச்செய்யும் இந்திரியம்போன்ற ஆத்மாவின் உருவத்தைக் கண்ணால்காணமுடியாது; த்வக்காலும் அறியமுடியாது. அது செவியை ஸாதனமாகக்கொண்டு அறியப்படுவதுமன்று. (எந்த வேதத்தாலும் மனத்தாலும் ஆத்மாவை அறியவேண்டுமென்று வேதம்உபதேசிக்கிறதோ) அந்தவேதமும் மனமும் முடிவில்நாசமடைகின்றன. அவ்விதம், ஆத்மாவை வேதாந்தவிசாரத்தால் இரண்டாவதில்லாததாகத் தெரிந்துகொள்ளுகிறான். செவிமுதலியகருவிகள் தாமே தம்தம்உருவத்தைக்காணத்தக்கவையல்ல. யாவற்றையும் அறிந்ததும் யாவற்றையும்பார்க்கிறதும் ஜீவரூபியுமானபரமாத்மா அவ்விந்திரியங்களைப்பார்க்கிறது. இமயமலையின்பக்கமும் சந்திரமண்டலத்தின்பின்புறமும் எவ்விதமென்று மனிதர்களால்காணப்பட்டதே இல்லை. அக்காரணத்தால் அவைஇல்லாதனவாமோ? அவ்வாறே எல்லாச்சரீரங்களிலும் ஐந்துபூதங்களுக்கும் ஆத்மாவும்ஸூக்ஷ்மமும் அறிவைஉருவமாகக்கொண்டதுமான இந்தப்பரமாத்மா கண்களால் ஒருஸமயத்திலும்காணப்படாததாயினும் அக்காரணத்தால் இஃது இல்லாததாகாது. உலகமானது சந்த்ரமண்டலத்தில் ப்ரதிபிம்பமாகத்தோன்றும் [1]ஜகத்தைக் களங்கமென்றுகண்டுகொண்டாலும் ஜகத்தென்று [2]அறியாததுபோல, ஆத்மாவின் அறிவிருக்கிறது. ஆனால், உண்மையான அறிவுஉண்டாகவில்லை. அந்தஆத்மஜ்ஞானமானதுமுக்யமானபயனில்லாததாகாது. அறிஞர்கள் ரூபமுள்ளவ்ருக்ஷத்தை உத்பத்திகாலத்திலும் முடிவுக்காலத்திலும் உருவமில்லாததால் (அவ்வித

1 வேறுபாடம்.

2 'ஆத்மாவானது ஜீவரூபமாய்த்தோன்றுகிறது; பரமாத்மரூபமாய்த் தெரியவில்லை' என்பது கருத்து

ரூபமில்லாததாகப்) புத்தியால் கண்டுகொள்ளுகிறார்கள். உதயாஸ்தமயங்களை அறிந்துகொண்டு ப்ரத்யக்ஷமான ரவியின் கதியையும்தெரிந்துகொள்ளுகிறார்கள். அப்படியே நன்றாகத்தெரிந்துகொண்டவர்கள் தூரத்திலிருக்கும்ஆத்மரூபத்தைப் புத்திவிளங்கும்காரணத்தால் அறிந்துகொள்ளுகிறார்கள். அருகிலிருப்பதும் அறியத்தக்கதுமான ப்ரபஞ்சத்தை ஜ்ஞானரூபமாகச்சொல்லப்படும்ஆத்மாவில் [1] லயிக்கச்செய்யவிரும்புகிறார்கள். உபாயமில்லாமல ஒருபொருளும்ஸித்திக்கிறதில்லை. ஜலத்திலுள்ளவைகளைக்கொண்டு ஜீவிப்பவர்கள் பலகயிறுகளுள்ளவலைகளால் மீன்களைப்பிடிப்பதுபோலவும் மிருகங்களால் மிருகங்களும் பறவைகளால் பறவைகளும் யானைகளால்யானைகளும் பிடிக்கப்படுவதுபோலவும் அறியததக்கது அறிவால் க்ரஹிக்கப்படுகிறது. பாம்பின்கால்களைப் பாம்புஒன்றுதான் பார்க்கிறதென்று காணப்படுகிறது. அதுபோல, ஸ்தூலசரீரங்களிலுள்ள ஸூக்ஷ்மசரீரத்திலிருப்பதும் அறியத்தக்கதுமான ஆத்மாவை அறிவால்பார்க்கவேண்டும். இந்திரியங்களை இந்திரியங்களாலேயே அறியமுயற்சியாததுபோலவே இச்சரீரத்தில் கடைசியானபுத்தியானது தன்னை அறியத்தக்கதன்று. அந்தப்புத்தியால (உண்மையில) பரமாத்மரூபத்தைப் பார்க்கமுடியாது. அமாவாஸ்யாதிதியில் சந்திரனிருந்தாலும் அடையாளமில்லாமையால் காணப்படுகிறதில்லை. ஆனால், அதற்கு நாசமென்பதில்லை. அதுபோல, ஆத்மாஇருப்பதாகத்தெரிந்துகொள். மண்டலம் நாசமடைந்திருப்பதாலன்றோ அமாவாஸையயன்று சந்திரன்காணப்படுகிறதில்லை. அதுபோல, சரீரத்தைவிட்டுவிலகிய இந்தஆத்மாவானது காணப்படுகிறதில்லை. வேறுமண்டலத்தைஅடைந்து சந்தரனானவன் திரும்பவும் விளங்குவதுபோல ஆத்மாவானது வேறுசரீரத்தை அடைந்து திரும்பவும்விளங்குகிறது. பிறப்பும் வளர்ச்சியும் நாசமும் இந்தச்சரீரத்திற்கு ப்ரத்யக்ஷமாகக்காணப்படுகின்றன. சந்த்ரமண்டலத்திற்குள்ளதான அங்கவளர்ச்சியும் அழிவும் சரீரத்திற்கல்லாமல் அச்சரீரத்திலுள்ள ஆத்மாவிற்கில்லை. அமாவாஸ்யையன்று (காணப்படாமற்போனாலும்) திரும்பவும் மண்டலமுள்ளவனாகிச் சந்திரன்தானென்றுகாணப்படுவதுபோலப் பிறப்பும்வளர்ச்சியும் அழிவுமிருந்தாலும் அதுதானென்றுகாணப்படும். ராகுவானது சந்திரனை உண்மையிலு தொட்டதாயும் விட்டதாயும் காணப்படாததுபோலத் தேகமானது தேகியான ஆத்மாவைவிடுவதும் தொடுவதுமாயிருக்கிறதில்லை யென்று தெரிந்துகொள். அந்தராகுவானது சந்த்ரனைடனும் ஸூர்ய

---

1 வேறுபாடம்.

னுடனும் சேர்க்கைஅடைந்தபொழுது எவ்விதம்காணப்படுகிறதோ அதுபோல ஜ்ஞானரூபியான அந்தஆத்மாவானது சரீரத்துடன் சேர்க்கைஅடைந்து காணப்படுகிறது. சந்திரனையும் ஸூர்யனையும்விட்டு விலகியபின் அந்தராகுவானவன் எவ்விதம்காணப்படுகிறதில்லையோ அதுபோலச் சரீரத்தைவிட்டுவிலகியபின் சரீரியானஆத்மா காணப்படுகிறதில்லை. அமாவாஸ்யையன்று (ஸூர்யனை) அடைந்த சந்த்ரன், பிறகு, எவ்விதம் நக்ஷத்திரங்களுடன் சேருகிருனே அதுபோல் இந்தச் சரீரத்திலிருந்து விடுபட்ட ஆத்மாவானது கர்மங்களின்பயனுன வேறுசரீரங்களுடன் சேர்க்கைஅடைகிறது.

---

## இருநூற்றிரண்டாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(ப்ருஹஸ்பதிக்கும் மநுவுக்கும் ஸம்பாஷணைத் தொடர்ச்சி.)

ப்ரத்யக்ஷமான இந்தஸ்தூலசரீரமானது ஸ்வப்னகாலத்தில் உறக்கமடைந்திருக்கிறது. புத்தியெனனும்ஸூக்ஷ்மசரீரமானது இச்சரீரத்தில் பற்றுதலில்லாமல் ஸஞ்சரிக்கிறது; இதுபோல ஸம்ஸாரமுண்டாகிறது. ஸ்வப்னகாலத்தில ஸூக்ஷ்மசரீரமானஇந்திரியங்களுடன்கூடிய ஜ்ஞானரூபியான ஆத்மாவானது ஸுஷுப்தியில்அந்த ஸூக்ஷ்மசரீரத்தைவிட்டு விலகியிருப்பதுபோல மோக்ஷமுண்டாகிறது. தெளிந்தஜலத்தில் கண்ணாலபிரதிபிம்பத்தைக்காண்பதுபோலத் தெளிந்தஇந்திரியங்களுள்ளமனிதன் அறியவேண்டியஆத்மரூபத்தை ஜ்ஞானததால்அறிவான். அந்தஜலமானது கலங்கியிருக்கும்பொழுது அம்மனிதனே எவ்விதம்உருவததைக்காண்கிறனில்லையோ அதுபோல இந்திரியங்கள் கலக்கமுள்ளதாயிருக்கும்பொழுது அறியவேண்டியஆத்மாவைப் புத்தியாலஅறியமுடியாது. அவிவேகமானது அஜ்ஞானததாலுண்டுபண்ணப்படுகிறது. அவிவேகத்தால் மனம் தோஷமுள்ளதாகிறது. மனம் குற்றமுள்ளதானல் மனததைச்சார்ந்த ஐந்து இந்திரியங்களும் மிக்ககுற்றமுள்ளனவாகின்றன. அஜ்ஞானம் நிரம்பியவனும் விஷயங்களிலமுழுகியவனுமாயிருப்பவன் ஆத்மாவைஅறியமாட்டான். அவனே பரிசுத்தமான புத்தியுள்ளவனானல (அதிலுள்ள தோஷங்களை த)தெரிந்துகொண்டே விஷயங்களிலிருந்துவிலக்கமடைவான். இவ்வுலகில் மனிதனுக்குப பாபததால விஷயங்களிலுள்ள ஆசைககுக் குறைவுஉண்டாகிறதில்லை. எப்பொழுது பாபமானது நாசமடைகிறதோ அப்பொழுது விஷயங்களிலுள்ள ஆசை விலகத்

தொடங்கும். சுபங்களையும் அசுபங்களையும் உண்டுபண்ணத்தக்கதும் உள்ளத்திலிருப்பதுமான பாபமானது ஞானத்தால்கொளுத்தப்படு மாகில் அந்தமனிதன் திரும்பவும் பிறப்பை அடையமாட்டான். விஷ யங்களில்பற்றுதலாலும் அதில் சாச்வதத்தன்மையைஅடைந்திருப்ப தாலும் அதற்குமாருனஸுகத்தை மனத்தால்விரும்பிக்கொண்டிருப் பவன் பரமாத்மாவைஅடையமாட்டான். புருஷர்களுக்குப் பாபகர் மம்நாசமடைந்தபின் ஜ்ஞானமுண்டாகும். பிறகு, கண்ணாடிபோலத் தெளிவடைந்தபுத்தியில் ஆத்மாவைப்பார்க்கிருன். மனிதன் விஷ யங்களிற்சென்ற இந்திரியங்களால் துக்கமுள்ளவனுவான்; அதி லிருந்து அடக்கப்பட்ட அவ்விந்திரியங்களாலேயே ஸுகமுள்ளவ னுவான். ஆகையால், இந்திரியங்களென்னும் திருடர்களிடமிருந்து ஆத்மாவைப் புத்தியால் அடக்கி ரக்ஷித்துக்கொள்ளவேண்டும். இந் திரியங்களைவிட மனம் முந்தியதாகும். அந்தமனத்தைவிடப் புத்தி யானது மிகப்பெரிது. புத்தியைவிட ஜீவன் மிகப்பெரிது. ஜீவனை விடப் பரமாத்மா மிகப்பெரிது. அவ்யக்தமானபரமாத்மாவிலிருந்து ஜீவனும், அந்தஜீவனிடமிருந்து புத்தியும், அந்தப்புத்தியிலிருந்து மனமும் உண்டாகின்றன. மனமானது செவிமுதலிய இந்திரியங்க ளுடன்கூடிச்சப்தமுதலியவிஷயங்களைச் சிறந்ததென்றுபார்க்கிறது. சப்தமுதலிய அந்தவிஷயங்களையும் அவைகளுக்கிடமான எல்லாவஸ் துக்களையும் விலக்கிக்கொள்ளுகிறவனும், ஆமையானது தன் அங்கங் களை அடக்கிக்கொள்வதுபோல வெளியில்சென்றஇந்திரியங்களை அட க்கிக்கொள்ளுகிறவனுமானவன் [1] ப்ரக்ருதியிலிருந்து உண்டானவை களும் மனம்ஸஞ்சரிக்கும் கிராமங்கள்போன்றவைகளுமான அந்த விஷயங்களை விலக்கிக்கொண்டு மோக்ஷத்தைஅடைகிருன். உதய மடைந்தஸூர்யன் கிரணங்களின்கூட்டத்தை வெளியிடுகிறதுபோல வும் அந்தஸூர்யனுடையமண்டலம் காணப்படுகிறதல்லாமல் மண்ட லத்திலிருப்பவர் காணப்படாததுபோலவும் சரீரமானது காணத்தக்க தாயும் சரீரத்தைவிடவேருனஆத்மாவானது எப்பொழுதும் காணப் படாததாயுமிருக்கின்றன. [2]அந்தஸூர்யன் அஸ்தமயத்தை அடை யும்பொழுதுஅந்தக்கிரணமண்டலத்தைத் தன்னிடத்தில் அடக்கிக் கொள்ளுகிறான். [3]அதுபோல,உள்ளிலுள்ள ஆத்மாவானது சரீரத்தை அடைந்து இந்திரியங்களென்னும்கிரணங்களால அந்த இந்திரியங்கள் அனுபவிக்கத்தக்க ஐந்துவிஷயங்களையும்அடைந்து பிறகு அந்த ஆத்

1 வேறுபாடம். [2] இங்கு அநேகபாடமான ஒருஸ்லோகம்விடப்பட்டது.

3 இங்கு அநேகபாடமான அரைஸ்லோகம்விடப்பட்டது.

மாவானது மறையும்பொழுது அந்தஇந்திரியக்கூட்டங்களைத் தன்னி டத்தில்அடக்கிக்கொண்டு செல்லுகிறது. கிரணத்தொகுதிகளில்லா மல்போனவுடன் அக்காரணம்பற்றி இந்தஸூர்யன் இல்லாமற்போ காது. ப்ரவிருத்திமார்க்கத்திற்குரிய தர்மத்தைஅடைந்தஇந்தஜீவன் கர்மத்தால்காண்பிக்கப்பட்டவழியில் அந்தக்கர்மத்தால் திரும்பவும் திரும்பவும் இழுக்கபபட்டவனுகிக் கர்மததிற்குரியபயனை அடைகி ருன். விஷயபோகங்களிலிருந்துவிலகுகிறஜீவனுக்குஆசைஒன்றைத் தவிர விஷயங்கள் விலக்கமடையும். இந்தஜீவனுக்குள்ளஅந்தஆசை யும்பரமாத்மாவைக்கண்டதும் விலக்கமடையும். புத்தியானது கர்மங் களைச்செய்யக் காரணமான விஷயஆசைகளைவிட்டுவிலகியதாய் எப் பொழுது மனத்திலிருக்கிறதோ அப்பொழுது அந்தமனமும்ப்ரம்மத் தைஅடைந்து அந்தப்ரம்மத்திலேயே லயத்தைஅடைகிறது. புத்தி யானது தொடாததும் கேளாததும் புஜியாததும் பாராததும் மோவா ததும்ஆலோசனையில்லாததுமானபரமாத்மாவை அடைகிறது. பரமா த்மாவினிடமிருந்து ஜீவனும் அந்தஜீவனிடமிருந்து புத்தியும்அந்தப் புத்தியிடமிருந்து மனமும்உண்டாயின. ஆத்மாவினிடமிருந்துபுத்தி உண்டாயிற்று. ஞானரூபியானஆத்மா அவ்யக்தமென்றுசொல்லப்படு கிறது. அந்தஆத்மாவினிடமிருந்து புத்தியுண்டாயிற்றென்று அதை அறிந்தவர்கள் நினைக்கிறார்கள். பிறகு, அந்தப் புத்தியிலிருந்துமனம் உண்டாயிற்றென்றுகருதப்படுகிறது. அந்தமனத்திலிருந்து ஐந்தான இந்திரியங்களின்உருவங்கள் உண்டாயின. (இந்திரியங்களைவிட) மனம் சிறந்ததென்று நினைக்கப்படுகிறது. அந்தமனத்தைவிடப் புத் தியானது மிகச்சிறந்ததாகிறது. அந்தப்புத்தியையும்விட, ஜ்ஞான ரூபியானஆத்மா சிறந்ததென்று சொல்லப்படுகிறது. ஆகையால், அவைகளைவிடஆத்மாவானது ஸூக்ஷ்மமாகிறது. அந்த ஆத்மாவை விடச் சிறந்ததொன்றுமில்லை. இந்தஇந்திரியங்கள்யாவும் மனத்தால விஷயங்களை அறிகின்றன. [1] இந்திரியங்களின்உருவங்கள் மனத்தில் முழுகியிருக்கின்றன. மனமானது ஸங்கல்பத்தைஅடைந்திருக்கிறது. ஸங்கல்பமானது புத்தியைஅடைந்திருக்கிறது. புத்தியானது மே லானஆத்மரூபத்தை அடைந்திருக்கிறது. இந்திரியங்களால் மனத் தைக்காணமுடியாது. மனமானது புத்தியைஅறிகிறதில்லை. புத்தி யானது ஸூக்ஷ்மமானஆத்மாவைஅறிகிறதில்லை. ஸூக்ஷ்மமானஆத் மாவோ இவைகளைப்பார்க்கிறது.

---

1 'விஷயங்கள் மனத்தில் முழுகியிருக்கின்றன. மனமானது புத்தியை அடைந்திருக்கிறது. புத்தியானது ஜீவனை அடைந்திருக்கிறது. ஜீவனானது பரமாத்மாவை அடைந்திருக்கிறது' என்பது பழையஉரை.

# இருநூற்றுமூன்றாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(ப்ருஹஸ்பதிக்கும் மநுவுக்கும் ஸம்பாஷணைத் தொடர்ச்சி.)

சரீரத்தைப்பற்றியதும் மனத்தைப்பற்றியதுமான துக்கங்களால் துன்பமுண்டாயிருக்கும்பொழுது எந்தத்துக்கத்தைவிலக்கத் தக்கமுயற்சிசெய்ய முடியவில்லையோ அந்தத்துக்கத்தைச் சிந்தியாமலிருக்கவேண்டும். சிந்தியாமலிருப்பதென்பது துக்கத்திற்குமருந்தாகும். துக்கமானது சிந்திக்கப்படுமாகில் (மனிதனைத்) தொடர்ந்துகொண்டிருக்கும்; திரும்பவும்வளர்ச்சியடையும். மனத்திலுண்டான துக்கத்தை அறிவாலும் சரீரத்திலுண்டான துக்கத்தை ஔஷதங்களாலும் விலக்கிக்கொள்ளவேண்டும். இஃது அறிவிற்குள்ளஸாமர்த்தியமாகும். சிறுவர்களுக்குஸமமானநிலையை அடையக்கூடாது. அறிவுள்ளவன் யௌவனப்பருவமும் அழகும் ஜீவித்திருப்பதும் திரவியங்களின்சேர்க்கையும் ஆரோக்கியமும் அன்பர்களுடன்வஸிப்பதும் நிலையில்லாதனவென்று தெரிந்துகொண்டு அவைகளில் ஆசைவையாமலிருக்கவேண்டும். தேசத்திற்குப்பொதுவானதுக்கத்தைப் பற்றிச் சோகப்படுவதற்கு ஒருவன் தகுதியுள்ளவனல்லன். அதை விலக்கத்தக்க உபாயத்தைப்பார்ப்பானாகில் சோகப்படாமல்பரிஹரிக்கவேண்டும். உயிரோடிருப்பதில் ஸுகத்தைக்காட்டிலும் துக்கமே மிகவும் அதிகமென்பதில் ஸந்தேஹமில்லை. அவிவேகத்தால் இந்திரியங்களுக்குவிஷயமானபொருள்களில் ஆசைபற்றியிருப்பவனுக்குத் துன்பமும் மரணமும் உண்டாகும். ஸுகதுக்கங்களிரண்டையும் எந்தமனிதன்விலக்கிக்கொள்ளுகிறானோ அவன்அழிவில்லாத ப்ரம்மத்தைஅடைவான். அவ்விதமானபண்டிதர்கள் சோகமடையமாட்டார்கள். பொருள்களானவை கஷ்டத்துடன் சேருகின்றன. ரக்ஷிப்பதிலும் அவைகள் ஸுகமில்லாதவை; துக்கப்பட்டாலும் கிடைக்கிறதுமில்லை; இந்தப்பொருள்களின்நாசத்தைச் சிந்தியாமலிருக்கவேண்டும். அறிவானஆத்மாவானது அறியப்படுந்தன்மையை அடைந்திருக்கிறதென்று தெரிந்துகொள். ஆகையால், மனம் ஆத்மாவைச் சேர்ந்ததாகத்தோன்றுகிறது. மனமானது அறிவிற்குக்காரணமான இந்திரியங்களுடன் சேர்ந்ததானால் அதிலிருந்து விஷயங்களைப்பற்றியஅறிவு உண்டாகும். கர்மங்களைப்பற்றிய வாஸனைகளுடன்கூடிய புத்தியானது (அந்தவாஸனைகளைவிட்டு) மனனவ்ருத்தியிலிருக்கும்பொழுது த்யானயோகமென்னும் ஸமாதியால் ப்ரம்மம் அறியப்படு

கிறது. இந்தப்புத்தியானது இந்திரியங்களுடன்கூடியதாயிருந்துகொண்டு விஷயங்களைப்பற்றியே செல்லுகிறது. மலையின்சிகரத்திலிருந்து ஜலம்ஓடுவதுபோலப் புத்தியானது அஜ்ஞானத்திலிருந்து நான்கு புறத்திலும்ஓடுகிறது. எல்லாவற்றிற்கும்முந்தினதும் நிர்க்குணமானதும் த்யானம்பண்ணத்தக்கதுமான ப்ரம்மரூபத்தை மனம்அடைகிறபொழுது உரைகல்லில் பொன்னின்நிறம்விளங்குவதுபோல மனத்தில் ப்ரம்மமானது நன்றாகவிளங்குகிறது. மனமானது முதலில் அதில் லயமடைந்ததாயிருக்கும். புத்தியுடன்சேர்ந்து இந்திரியங்களுக்கெதிரிலுள்ளவிஷயங்களை அறிவிப்பதும் அதற்குங்காரணமான குணங்களை அபேக்ஷிப்பதுமானமனமானது குணமில்லாதப்ரம்மத்தை அறிவிப்பதில் ஸாமர்த்யமுள்ளதன்று. மனத்திறகுவழியான இந்த இந்திரியங்கள்யாவற்றையும் மறைத்து மனோவ்ருத்தியிலிருந்துகொண்டு அம்மனத்தையும் ஓரேவஸ்துவைப்பார்க்கத்தக்கதாமையுள்ளதாகச் செய்துகொண்டு அந்தப்பரமாத்மாவைஅறியவேண்டும். ஸூக்ஷ்மமானபூதங்கள் லயமடையும்பொழுது அவைகளின்கார்யங்களான ஸ்தூலபூதங்கள் லயமடைகின்றதுபோலப் புத்தியானது தன் கார்யங்களானஇந்திரியங்களை லயப்படுத்திக்கொண்டு அஹங்காரத்தில் லயமடைகிறது. நிச்சயமென்ற தன்குணத்துடன்கூடியதும் உள்ளில்ஸஞ்சரிப்பதுமான அந்தப்புத்தியானது மனத்தில் லயமடைகிறபொழுது மனமாகவேஆகிறது. த்யானத்திறசென்றமனமானது விஷயங்களுடன்கூட முக்குணங்களுள்ளப்ரக்ருதியில எப்பொழுது லயமடைகிறதோ அப்பொழுது எல்லாக்குணங்களையும் விட்டுவிட்டு நிர்க்குணமானப்ரம்மத்தை அடைகிறது. ஸூக்ஷ்மமானப்ரம்மத்தை அறியும்விஷயத்தில் இவ்வுலகில ஸரியானத்ருஷ்டாந்தமில்லை. எந்த விஷயத்தில் சொல்லததக்க பதப்ரயோகமில்லையோ அந்தவிஷயத்தை எவன்அறியமுடியும்? த்யானத்தாலும் மனனமென்னும்யுக்தியாலும் சமதமாதிகுணங்களாலும் ஜாதிதர்மத்தாலும் வேதாந்தச்ரவணத்தாலும் பரிசுத்திபெற்றமனத்தாலும் ப்ரம்மத்தைஅடையவிரும்பவேண்டும். முக்குணங்களையும்விட்டுவிலகியவன்அந்தஜ்ஞானவழியைவெளியிலுள்ளவிஷயங்களிலும் அடைந்துகொண்டிருக்கிறான். ப்ரக்ருதியிலுள்ளகுணங்கள் உண்மையில் இல்லாததால் அறியவேண்டிய அந்த ப்ரம்மமானது யுக்திகளுக்கெட்டாததாகும். புத்தியானதுகுணங்களில் லாமலிருந்துகொண்டு ப்ரம்மத்தைஅடையும்; குணங்களுடன்கூடியிருப்பதால் ப்ரம்மத்தினிடமிருந்துவிலக்கமடையும். அக்னியானது கட்டைகளில்ஸஞ்சரிப்பதுபோலப் புத்தியானது குணங்களில்ஸஞ்

சரிக்கத்தக்கசீலமுள்ளதாகும். எப்பொழுது ஐந்துஇந்திரியங்களும் தம்வேலைகளிலிருந்து விடுபட்டவைகளாயிருக்கின்றனவோ அப்பொழுது (குணங்களால்) விடுபட்டதும் ப்ரக்ருதியை விடவேறானதுமான அந்தப்பரப்ரம்மம் விளங்கும். இவ்விதம் எல்லாஜீவர்களும் ப்ரக்ருதியிலிருந்துஉண்டாகிறார்கள்; ப்ரக்ருதியிலகியவுடன்விலக்கமடைகிறார்கள். அப்பொழுது ஸ்வர்க்கத்துக்கும் போகிறார்களில்லை. ஜீவன் ப்ரக்ருதி புத்தி [1]விஷயங்கள் இந்திரியங்கள் அஹங்காரம் அபிமானம் ஆகிய இவைகளின்கூட்டம் பூதமென்னும்பெயருள்ளதாகிறது. இக்கூட்டத்தின் முதலானஸ்ருஷ்டியானது பரதானமென்றமூலகாரணத்திலிருந்து உண்டாகிறது. இரண்டாவதுஸ்ருஷ்டியானது இரண்டு வஸ்துக்களின்சேர்க்கையால வெளியாகி இந்திரியமுதலிய [2]பொதுவானபொருள்களை அடங்கிநடக்கச்செய்கிறது. தர்மத்தைவிட மோக்ஷம் சிறந்ததாகும். அதுபோலத் தர்மமும் அதர்மத்தைவிடச் சிறந்ததாகும். ஆசையுள்ளவன் ப்ரக்ருதியை அடைவான். வைராக்யம் பெற்றவன் ஞானமுள்ளவனாவான்.

---

## இருநூற்றுநான்காவது அத்தியாயம்.

### மோக்ஷதாமம். (தொடர்ச்சி.)



(ப்ருஹஸ்பதிக்கும் மனுவுக்கும் ஸம்பாஷணை - தொடர்ச்சி.)

எந்தவஸ்துவானது த்ருஷ்டாந்தத்துடன் உபதேசிக்கமுடியாததோ அதுவே எப்பொழுதும் உபதேசிக்கமுடியாததென்றே நினைக்கிறேன். சரீரத்தைவிடவேறானதும் அருகிலிருக்கும்ஸாரத்தை எவ்விதத்திலும் அறியாததுமான நிழல்போன்ற இச்சரீரத்தில் இந்த ஆத்மாவானது இருக்கிறது. அந்தச்சரீரத்தின்நிழலானது சரீரமில்லாமலுண்டாகிறதில்லை. சரீரமானது அந்த நிழலன்றிஇருக்கிறது. அதுபோலவே மூலகாரணமில்லாமல இச்சரீரமிருக்கமுடியாது. இந்தச்சரீரமில்லாமல காரணமானபரமாத்மாஇருக்கும். பரமாத்மாவை விட்டு இந்தச்சரீரமிராது. இந்தஆத்மாவானது ஜீவாத்மாவென்றும் பரமாத்மாவென்றும் பிரிக்கப்பட்டிருக்கிறது. அதனை ஸாஸ்வதமென்று சிலர் எண்ணுகிறார்கள். மற்றுஞ்சிலர் பொய்யென்று நினைக்கிறார்

1 வேறுபாடம்.

2 தன்மாத்திரைகளைந்து, ஞானேந்திரியங்களைந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, மனம், அஹங்காரம் இவைகள் பொதுவான பொருள்கள்

கள். அறிவுள்ளவனே! இரண்டுவிதமும் எனக்குஸம்மதமே. மோக்ஷத்திற்குக்காரணமானஞானமுண்டானால் இது ஸமாதானமுள்ளதாகும். இந்த்ரியங்களை நன்றாய் அடக்கிக்கொண்டு முக்திபெற்றவர்களால் அந்தஆத்மாவும் காணப்படுகிறது. எவர்களுக்கும்காணக்கூடியதல்லாத இந்தஆத்மாவானது மின்னல்போல்விளங்கும். ஆனால், அந்தஆத்மாவானது ப்ராம்மணனுக்கு நன்குகாணத்தக்கதாகவிருக்கிறது. பரமாத்மாவானவர் சுத்தரும் ஸாக்ஷியாயிருப்பவரும் ஸூர்யன்போலவிளங்குகிறவருமாயிருக்கிறாரென்று வேதம் உபதேசிக்கிறது. இந்தவேதம் அழிவில்லாதது. ஆகையால், பரமாத்மா ஒருவரென்றே தெரிந்துகொள்ளவேண்டும். அந்தப்பரமாத்மாவின் (ஸ்ருஷ்டிமுதலிய) செய்கையானது பயனைக்கருதிஉண்டாகிறதில்லை. சிறந்தபுத்தியுள்ளவன், அவர் அவ்விதமிருக்கிறாரென்று உண்மையைத் தெரிந்துகொள்ளவேண்டும். ப்ராணவாயுவுக்கு அஃதுஇருக்குமிடங்களின்வேறுமையைக்கொண்டு பேதமிருப்பதுபோல அந்தப்பரமாத்மாவுக்குப் பேதம்இருக்கிறதென்று கூறப்படுகிறது. இடங்களின் வேற்றுமையாலுண்டான அவ்விதபேதந்தான் அவரிடமிருக்கிறது. அறிவுள்ளவனே! அந்தஅந்தக்குணங்களின்விசேஷத்தால் பலபெயர்களுடன்கூடியவரும் அழிவில்லாதவருமான பரமாத்மாவை இவ்விதம் அறிந்துகொள். அந்தப்பரமாத்மா எல்லாவற்றிற்கும் ஈச்வரரும் எல்லாம்தானாயிருப்பவரும் எல்லாவற்றையும்நடைபெறச்செய்கிறவரும் எல்லாஉருவமுமுள்ளவரும் எல்லாச்சக்தியுமுள்ளவரும் எல்லாவற்றிற்கும்காரணத்திற்குக்காரணரும் எல்லோர்களுக்கும் பொதுவானவரும் எல்லாமஹாத்மாக்களாலும்உபாஸிக்கத்தக்கவரும் க்ஷேத்ரஜ்ஞரென்றுப்ரஸித்திபெற்றவருமாயிருக்கிறார். அவரைஅறிந்துமோக்ஷமடையவேண்டும். எப்பொழுது ஐந்துவிஷயங்களுடன்கூடிய ஐந்து இந்த்ரியங்களும் மனத்துடன்கூட அடங்கியிருக்கின்றனவோ அப்பொழுது மணியில்கோக்கப்பட்ட நூலைப்போல அந்தப்பரமாத்மாவைப் பார்ப்பான். அந்தநூலை தங்கத்திலும் முத்துக்களிலும் பவழங்களிலும் வெள்ளியிலும் மண்ணால்செய்யப்பட்டதிலுமிருப்பதுபோல அந்தப்ரம்மமானது பசுக்களிலும் குதிரைகளிலும் மனிதர்களிலும் யானைமான்முதலிய ம்ருகங்களிலும் புழுக்களிலும் பறவைகளிலும் [1]தன்கர்மங்களால பறறுதலுள்ள உருவமுள்ளதாயிருக்கிறது. இந்தஆத்மாவானது அந்தஅந்தச்சரீரத்திற்காக அந்தஅந்தக்கர்மத்

1 உண்மையில் ப்ரம்மமே ஜீவரூபமாயிருப்பதால் ஜீவர்களுக்குள்ள கர்மங்களை ப்ரம்மத்தின் கர்மங்களென்று சொல்லியிருக்கின்றனர்.

தைச்செய்கிறதோ, அந்தஅந்தச்சரீரத்தால் அந்தஅந்தக்கர்மத்தின் பயனை அனுபவிக்கிறது. ஓரேரஸமுள்ளபூமியானது ஓஷதிகளின் ரூபத்தை அனுஸரித்துச்செல்லுகிறதுபோல உள்ளிலுள்ளஆத்மாவை ஸாக்ஷியாகக்கொண்டபுத்தியானது கர்மங்களை அனுஸரித்துச் செல்லுகிறது. விஷயங்களின் அறிவைமுன்னிட்டு அவைகளில்ஆசை உண்டாகிறது. ஆசையைமுன்னிட்டுமுயறசியும்முயறசியைமுன்னிட்டுக்கர்மமும் கர்மத்தைமுன்னிட்டுப் பிறகு அதன்பயனும் உண்டாகின்றன. பயனானது கர்மத்தின்உருவமுள்ளதென்றும் கர்மம் அறியப்படும்விஷயங்களின்உருவமுள்ளதென்றும் அந்தவிஷயம் அறியும்புத்தியின்உருவமுள்ளதென்றும் புத்தியானது ஸதது அஸத்து இவைகளின்உருவமுள்ளதென்றும் தெரிந்துகொள்ளவேண்டும். [1]அறிவுகளும் பயன்களும் அறியப்படும்விஷயங்களும்அப்படியேகர்மங்களும் நாசமடைந்து முடிந்தபின்னுள்ளபயன் எதுவோ அஃது அறியத்தக்கபரமாத்மரூபத்தில் நிலைபெறற ஞானமென்று தெரிந்துகொள்ளவேண்டும். ஸமாதியிலிருக்கும்யோகிகள் எங்குமிருப்பதும் எப்பொழுதுமுள்ளதுமான பரமாத்மரூபத்தை அறிகிறார்கள். [2]முக்குணங்களிலும் சென்றபுத்தியுள்ளமூடர்கள் புத்தியிலிருக்கும் அந்தப்பரமாத்மாவைப் பார்க்கமாட்டார்கள். இவ்வுலகில் பூமியின் உருவத்தைவிட ஜலத்தின்உருவம் மிகப்பெரிது. ஜலத்தைவிடத் தேஜஸ் மிகப்பெரிது. தேஜஸைவிட வாயுபெரிது. வாயுவைவிட ஆகாயம்பெரிது. அந்தஆகாயத்தைவிட மனம் மிகப்பெரிது. மனத்தைவிடப் புத்தி பெரிது. புத்தியைவிடக் காலம்பெரிதென்றுசொல்லப்படுகிறது. இவ்வுலகமெல்லாம் அந்தவிஷ்ணுவின்உருவமே அந்தவிஷ்ணுபகவான் காலத்தையும்விடப் பெரியவர். அந்தத்தேவருக்கு ஆதியுமில்லை; நடுவுமில்லை; முடிவுமில்லை. ஆதியும்நடுவும்முடிவுமில்லாத காரணத்தால் அவர் அழிவற்றவராயிருக்கிறார். அவர் எல்லாதுக்கங்களையும்தாண்டிச்செல்லுகிறார். துக்கமானது முடிவுள்ளதென்று சொல்லப்படுகிறது. அவர் பரப்ரம்மமென்றும் (அடையத்தகுந்த) ஸ்தானமென்றும் பரமபதமென்றும் கூறப்படுகிறார். (மனிதர்கள்) [3] அந்தப்பரமபதத்தை அடைந்தபின் காலத்திற்குள்ளாகும்நிலையிலிருந்துவிடுபட்டு மோக்ஷத்தை அடைந்தவர்களுமாகிறார்கள். இந்தமுக்தர்கள், குணமில்லாதகாரணத்தால் அந்தக்குணங்களைவிட வேறான

1 இங்கு அதிகபாடமான அரைப்ச்லோகம்விடப்பட்டது.

2 'விஷயங்களிற்சென்ற புத்தியுள்ளவர்களாக' என்பது பழைய உரை.

3 'அவரை அறிந்தபின்' என்பது பழைய உரை.

ப்ரம்மத்தைஅடைந்து குணங்களிலும் ப்ரம்மரூபமாய் ப்ரகாசிக்கிறார்கள். நிவ்ருத்தியென்றுசொல்லப்படும் தர்மமானது முடிவில்லாத மோக்ஷத்திற்குக் காரணமாகிறது. [1]ரிக்குக்களும் யஜுஸ்ஸுகளும் ஸாமங்களும் சரீரங்களை அடைந்தவைகளாகி நாவின் நுனிகளில நடைபெறுகின்றன. அவைகள் முயற்சியால்ஸாதிக்கத்தக்கவைகளும் அழிவுள்ளவைகளுமாயிருக்கின்றன. ப்ரம்மமானது இவ்விதம் சரீரத்தை அடைந்தபொருளாலுண்டாகிறதென்று கருதப்படுகிறதில்லை. அந்த ப்ரம்மமானது முயற்சியாலஸாதிக்கததக்கதன்று. அது ஆதியும்நடுவும்முடிவுமுள்ளதன்று. ரிக்குக்களுக்கும் ஸாமங்களுக்கும் யஜுஸ்ஸுகளுக்கும் ஆதியானது கூறப்படுகிறது. ஆதியுள்ளவைகளுக்கு முடிவும்காணப்படுகிறது. ப்ரம்மத்திறகு ஆதியானது கூறப்படுகிறதில்லை. ஆதியில்லாததாலும்முடிவில்லாததாலும்அந்தப்ரம்மமானது அழிவில்லாததும் விகாரமில்லாததுமாயிருக்கிறது. விகாரமிலலாதிருப்பதால துக்கமில்லாததாயிருக்கிறது. துக்கமில்லாதிருப்பதால பரபரம்மரூபத்தில் மானம் அவமானமுதலிய த்வந்த்வங்களில்லை. [2]அதருஷ்டத்தை அடைந்து உபாயமிலலாமல்போவதாலும் [3]கர்மங்களைப்

1 'இவற்றின் அத்யயனமுதலியதாமங்கள்' என்பது பழைய உரை.

2 "முயற்சியிலலாமலே மோக்ஷஸாதனமான ஞானம் கிடைக்குமென்று நினைபபது 'அதருஷ்டத்தையடைந்து' என்றுசொல்லப்படுகிறது. இதுநான்கு விதமாகும். முதலில் ப்ரக்ருதிவேறு ஆத்மாவேறுஎன்று சாஸ்த்ரவிசாரத்தால் பரோக்ஷ [illegible] ஞானத்தைஅடைந்து பிறகு த்யானத்தை அப்யஸியாமலே ப்ரத்யக்ஷமானஞானம் வந்துவிடுமென்று ஸந்தோஷமாயிருப்பது முதலாவதாகும். இது ப்ரக்ருதிதுஷ்டியென்றும் அம்பஸ்ஸென்றும் சொல்லப்படுகிறது. பிறகு, இம்மட்டிலபயனுண்டாவதாயிருந்தால்ஆயாஸமின்றிஅனைவரும் முக்தர்களாகக்கூடும். ஸந்யாஸவிதியும் அப்பொழுது பயனற்றதாகும். ஆகையால், ஸந்யாஸமிருந்தால்போதும்; த்யானம்வேண்டாம் என்றிருப்பது இரண்டாவதாகும். இது உபாதான துஷ்டியென்றும் ஸலிலமென்றும் சொல்லப்படும். பிறகு, ஸந்யாஸமும் ஒரு காலவிசேஷத்திலமட்டும் மோக்ஷத்திறகுக காரணமாகும். பரபரப்புடன் வீணவருத்தமடைவதில பயனில்லையென்று ஸமாதானம்செய்துகொண்டு மௌனமாயிருப்பது மூன்றாவதாகும். இது காலதுஷ்டியென்றும் ஓகமென்றும் சொலலப்படும். பிறகு, காலமும் முன் பிறவியிலுள்ளபாக்யவசத்தால பயனைககொடுககத்தக்கதாகும்; ஆகையால், பாக்யம்வேண்டும்; த்யானம் எதறகாகஎன்றநினைப்புடனிருப்பது நான்காவதாகும், இது பாக்யதுஷ்டியென்றும் வர்ஷமென்றும் சொலலப்படும். இவை நான்காலும் மோக்ஷோபாயத்திற்கு இடையூறுநேரும். இவைகளில நான்காவதான பாக்யதுஷ்டியானது மூலத்தில் அதருஷ்டமென்றுசொலலப்படுகிறது. இதுகொண்டு முதலிலுள் மூன்றையும் தெரிந்துகொள்ளவேண்டும்" என்பது பழையஉரை.

3 "கர்மங்களைபபற்றியவிபரீத அபிப்ராயமென்றால உண்மையானவைராக்யமிலலாமல வேறுகருத்தாலுண்டாகும்வைராக்யமென்றுபொருள். அது நான்குவிதமாகும். அவற்றில, பொருளைததேடுவதிலதுன்பமிருக்கிறதுஎன்று

பற்றியவிபரீதஅபிப்ராயத்தாலும் மனிதர்கள் அந்தப்ரம்மத்தை அடையக்கூடியவழியைப் பார்க்கிறார்களில்லை. விஷயங்களிலுள்ளபற்றுதலாலும் சர்ஸ்வதமானபதத்தில் ஸந்தேஹத்தாலும் மனத்தால்வேறு பயனைவிரும்பிக்கொண்டிருப்பவன் பரப்ரம்மத்தை அடைகிறதில்லை. குணங்களில்விருப்பமுள்ள மற்றும்சிலஜனங்கள் இங்குள்ளகுணங்களைப்பார்த்து விரும்புகிறார்கள் குணமில்லாதகாரணத்தால் பரமாத்மாவைவிரும்புகிறதேயில்லை. எந்தமனிதன் (வெளியிலுள்ள) தாழ்ந்த குணங்களுடன் இருக்கிறானோ அவன் இந்த (உத்தம)குணங்களை எவ்விதமறிவான்? பரமாத்மாவின் அம்சங்களான குணங்களைக்கொண்டு அனுமானத்தாலன்றோ பரமாத்மாவைத் தெரிந்துகொள்ளவேண்டும். ஸூக்ஷ்மமானமனத்தால அதை அறிகிறோம். வசனத்தால அதைச் சொல்ல நாங்கள் திறமையுள்ளவர்களல்லோம். மனத்தால அறியத்தக்கபொருளானது மனத்தைப்போன்ற பௌதிகமாயிருக்கிறது. காணப்படும்பொருளானது அதைக்காண்கிறதான ஆத்மரூபமாகிறது. ஆத்மஜ்ஞானத்தால புத்தியையும் புத்தியால்மனத்தையும் மனத்தால் பொறிகளின்கூட்டத்தையும் சுத்தமாகச்செய்தபின் அழிவற்றபரமாத்மாவையடைகிறான், ஆத்மவிசாரத்தாலுண்டான அறிவால்நிறைந்தவனும் த்யானத்தால வேறுவ்ருத்திஇல்லாதவனும் அவ்விதமேஆசைகள அற்றவனுமாயிருப்பவன் [1]நிர்க்குணஆத்மாவை அடைகிறான். வாயுவானது கட்டைகளின் உள்ளிருக்கும்அக்நியை விட்டுவிலகுவதுபோல உலகத்தில ஆசைபற்றியிருப்பவர்கள் பரமாத்மாவைவிட்டு விலகுகிறார்கள். மனமானது விஷயங்களை ஆத்மாவில் லயிக்கச்செய்யும்பொழுது [2]புத்தியைவிட மேலானபரமாத்மாவையடைவதற்கும்

---

தெரிந்துகொண்டு அக்காரணத்தால அதிலுண்டாகும்வெறுப்பானது முதலாவதாகிறது. இதற்கு பாரமென்றுபெயர். பிறகு, அரசன் திருடர் முதலியவர்களால பொருளுக்குநேரும்நாசம் பெரிய துன்பமாயிருக்கிறதென்றுநினைத்து அதிலுண்டாகும்வெறுப்பு இரண்டாவதாகும். இதற்கு ஸுபாரமென்று பெயர். மனிதன் புஜிப்பதாலும் பொருளுக்குண்டாகுமநாசமானது துன்பமாயிருக்கிறதென்றுநினைத்து அதிலுண்டாகும்வெறுப்பானது மூன்றாவதாகும். இதற்கு பாராபாரமென்றுபெயர். பொருட்செலவாலுண்டாகும்போகமும் அழிவுள்ளதாயிருக்கிறதென்று நினைத்து அதிலுண்டாகும் வெறுப்பானது நான்காவதாகும். இதற்கு அனுத்தமாம்பஸ்என்றுபெயர். பிராணிகளைத்துன்பப்படுத்தாமல அவ்விதபோகம்உண்டாகாதாகையால போகத்தில் ஹிம்ஸையென்ற தோஷமிருக்கிறதென்றுநினைத்து அதிலுண்டாகும் வெறுப்பானது ஐந்தாவதாகும், இதற்கு உத்தமாம்பஸ்என்றுபெயர். இந்தஐந்துவைராக்கியங்களும் மோக்ஷோபாயத்திற்கு விரோதமாகும். இவைகள் ஸாங்க்யஸப்ததி என்னும் க்ரந்தத்தில தெளிவாய்க்கூறப்பட்டிருக்கின்றன' என்பது பழைய உரை.

1 வேறுபாடம். 2 வேறுபாடம்.

அந்தவிஷயங்களை ஆத்மாவைவிட வேருகப்பார்க்கும்பொழுது எப்பொழுதும் புத்திக்குக்கீழான உலகவாழ்க்கையைஅடைவதற்கும் தகுதியுள்ளதாகிறது. இந்தவிதியைத்தெரிந்துகொண்டு விஷயங்களை ஆத்மாவில லயிக்கச்செய்யததொடஙகியமனிதன் ப்ரம்மரூபத்தை அடைகிருன். புருஷன், இந்த்ரியஙகளுக்குப்புலப்படாத உருவமுள்ளவனும் புலப்படாத கர்மங்களுள்ளவனுமாயிருக்கிருன். அவன் முடிவுக்காலத்திலும் இந்த்ரியங்களுக்குப்புலப்படாத நிலைமையை அடைகிருன். இந்தஆத்மாவானது அந்த இந்திரியங்களேவளர்ச்சி அடைந்தாலும் வாட்டமடைந்தாலும் காமமல்லாதஉருவமுள்ளதாயிருக்கிறது. இந்தஆத்மாவானது எலலாஇந்த்ரியங்களாலும் நன்கு ஏவப்பட்டதும் சரீரத்தைஅடைந்ததும் ஐந்துபூதங்களையும் ஆதாரமாய்க்கொண்டதுமாயிருக்கிறது; ஆகிலும், அழிவறற அந்தப்பரமாதமாவைவிட்டுவிலகிக் கர்மத்தாலும் தன்ஸாமர்த்தியத்தாலும் செலலத்தக்கதன்று. மனிதன் இந்தபூமியின்முடிவைப்பார்க்கிறதிலலை. ஆகிலும், இந்தப்பூமிக்கு முடிவிருக்கவேண்டும். (இவ்விதமே துக்கபரம்பரைக்கும் முடிவுஇருக்கவேண்டுமென்று) தெரிந்துகொள். இவ்வுலகில்ஆசைபற்றியிருப்பவன் பரமாதமரூபத்தையடையமாட்டான். கடலிலுள்ளஓடததைக் காற்றானது கரைசேரச்செய்வதுபோல(நலல கர்மமானது) பரமாதமாவையடையச்செய்யும். ஸூர்யனானவன் ஒளிகளால்உலகைநிரம்பச்செய்து பிறகு கிரணங்களின்கூட்டங்களறறவனும் குணமில்லாதவனுமாவதுபோல, இந்தஆத்மாவானது ஞானமுள்ளதானபின் [1]விசேஷஙகளிலலாததாய்க் குணமில்லாததும் அழிவில்லாததுமான ப்ரம்மத்தைஅடைகிறது. முன்அடையப்படாததும் புண்யசாலிகளுக்குரியசிறந்தகதியும் ஒரு காரணத்தாலுமுண்டாகாததும் (மறறவைகளின்) உறபத்திலயஙகளுக்குஇருப்பிடமும் அழிவிலலாததும் ஸநாதனமும் மோக்ஷஸ்வரூபமும் விகாரமில்லாததும் ஸ்திரமானதுமான பரமாதமாவை அறிநதவுடன் வேததததில ப்ரஸித்திபெறறதும் உததமமுமானமோக்ஷத்தைஅடைகிருன்' என்று சொன்னர்'' என்றனர்.

---

1 'நிர்விசேஷஹ்வாந' என்பதுமூலம். 'அஹங்காரமறறதாய்' என்பது பழையஉரை.

## இருநூற்றைந்தாவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், யுதிஷ்டிரருக்கு நிபந்தனரென்பவர் தமதுதாய்க்கு ஸம்ஸாரத்தை அரண்யமாகச் சொல்லியதையும் நாரதருக்கும் ஸாவித்ரிக்கும் நடந்த ஸம்வாதத்தையும் நாரதர் தவஞ்செய்து ஸ்ரீவிஷ்ணு பகவானைத் தரிசித்ததையும் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! அறிஞர்களிற்சிறந்தவரே! துக்கத்தாலும்சோகத்தாலும் துன்பமுள்ளஸம்ஸாரசக்ரத்தில் ஜனங்களுக்கு வெறுப்புண்டாகவில்லையே; இது என்னகாரணம்?" என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"அரசர்களிலுத்தமனே! இவ்விஷயத்திலும் நிபந்தனரென்ற முனிக்கும் அவர்அன்னையானபோகவதிக்கும் நடந்த ஸம்பாஷணையான பழையஇவ்விதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். புதரானநிபந்தனரென்றமுனியானவர் முயற்சியற்றவரும் ஜீவனமில்லாதவரும் வேலையில்பற்றில்லாதவரும் காய்ந்தநரம்புநிறைந்த சரீரமுள்ளவருமாகித் துன்பத்துடனிருப்பதைக்கண்டு அப்பொழுது (அவர்) தாயான போகவதியானவள், 'ஏ! மூட! எழுந்திரு. பொருளை அடையத்தக்க வழியிலபற்றுதலில்லாதவனும் மித்ரர்களானமுனிவர்களுடைய ஸ்நேகமில்லாதவனுமாகி ஏன் தூங்கிக்கொண்டிருக்கிறாய்? உனக்குத் தகப்பனால் ஸம்பாதிக்கப்பட்டபொருள் என்னஇருக்கிறது?' என்றுசொன்னாள். நிபந்தனர் சொல்லத்தொடங்கினார். 'அன்னையே! எனக்குத தந்தையால ஸம்பாதிக்கப்பட்டது மிகுதியாயிருக்கிறது. இஃது இவ்வுலகிலுள்ள துக்கங்களெல்லாவற்றிற்கும் இருப்பிடமாயிருக்கிறது. அதைத தொலைக்கவேண்டி முயற்சிசெய்யப்போகிறேன். அந்தவிஷயத்தில் நீ சோகப்படாதே. மிகக்ரூரமானஇந்தச்சரீரமானது தந்தையால் அளிக்கப்பட்டது. ஸந்தேஹமில்லை. அந்ததந்தையையடைந்தகாரணத்தாலேயே அழிவில்லாதபொருளிருக்கிறது. பெரிய இந்தஸம்ஸாரத்திலிருக்கும்ஒருவன் பொருள்விருப்பத்துடன் கொடியவிலங்குகளால் நிறைந்ததும் செல்லத்தகாததுமான பெரியஅரண்யத்திற்குச்சென்றான். அந்தமனிதன் மிக்கபயங்கரமும் மிகப்புசிப்பவையுமான ஸிம்மங்களாலும் வேங்கைகளாலும் யானைகளாலும் நான்குபுறத்திலும் சூழப்பட்டஅந்தஅரண்யத்தைக்கண்டு பயமடைந்தான். அந்தஅரண்யத்திலஸஞ்சரிக்கும்அந்தமனிதன் இங்குமங்குமோடிக்கொண்டு புக

விடத்தைவிரும்பித் திக்குக்களனைத்தையும் பார்த்துக்கொண்டுவிரைவாகவோடினான். பிறகு, அந்தஅரண்யமானது வளர்ச்சியடைந்தும் நான்குபுறத்திலும் வலையாலமறைக்கப்பட்டுமிருப்பதைக் கண்டான். அந்தஅரண்யத்தின்நடுவில் புறகளால்மறைக்கப்பட்டதும் நிறைந்த கொடிகளால்சூழப்பட்டு நான்குபுறத்திலும் நன்றாகமறைக்கப்பட்டதுமான ஒருகிணறு இருந்தது. ஜனங்களில்லாத அந்தவனத்தில் அந்தப்ராம்மணன் அந்தக்கிணற்றில விழுந்தான்; கொடிகளின் கூட்டத்தால் சூழப்பட்ட அந்தக்கிணற்றில்தொத்திக்கொண்டான். அவன் அவ்விடத்தில்அதிகபலமுள்ளஒருமங்கையால் கைகளாலநன்குஆலிங்கனம்செய்யப்பட்டுத் தலைகீழும் கால்மேலுமாகத்தொங்கினான். அதே கிணற்றில் ஏற மிகக்கடினமானஒருநாவலமரம் கீழேஉண்டாயிருந்தது. அந்தக்கிணற்றின்கரையில் பலவிதமானதும் கொடிகளாலும் பூக்களாலும்நிறைந்ததும் ஆகாயத்தையளாவியதுமான அந்தமரத்தை யும் (அதில்) மிகப்பெரியஒருகனியையும் கண்டான். பலஉருவங்களுள்ளவண்டுகள் அந்தமரத்திலஇருந்தன. அப்பொழுது அந்தவண்டுகள்சேர்த்ததேன்களின்தாரையானது அதிகமாய்ப்பெருகத்தொடங்கிற்று. தொங்கிக்கொண்டிருக்கும் அந்தமனிதன் இடைவிடாமல் அந்தத்தாரையைக்குடித்தான். ஸங்கடத்திலிருந்துகொண்டு அதைக் குடிக்கும்அந்தமனிதனுக்கு ஆசையானது ஒழிவடையவில்லை. திரும்பவும்திரும்பவும் திருப்தியடையாத அந்தமனிதன் எப்பொழுதும் அந்தத்தாரையையடைய விருப்பமுள்ளவனாயிருந்தான். இவ்விதம் அந்தப்ராம்மணன் அந்தக்கிணற்றில மறுபடியும் மிகவும் துக்கத்துடன் வஸித்துக்கொண்டிருக்கிறான். என்னால அந்தத்தனமானது கொடுக்கத்தக்கதாயிருக்கிறது. நீ விரும்புவாயாகில் உனக்குக்கொடுக்கிறேன்' என்றுசொன்னார். பிறகு, அந்தப்ராம்மணர் அந்தப்பொருளைப்பறறிப்ப்ரார்த்திக்கப்பட்டு அதைக்கொடுத்தபின் முக்தியையடைந்தார். அவனும் பொருளைப்பற்றியஸங்கல்பத்தை விலக்கிவிட்டு உத்தமமானகதியைப்பெற்றான். அரசர்களிலுத்தமனே! இவ்விதம் ஸம்ஸாரமென்றசக்ரத்தின் ஸ்வரூபத்தையறிந்தவர்கள் பெரியவைராக்கியத்தையடைந்து உத்தமமானபதத்தை அடைகிறார்கள்'' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், "ஸம்ஸாரமென்னும்சக்ரத்தின்ஸ்வரூபம் இவ்விதமென்று எனக்கு அறியக்கூடவில்லை. அறிவுள்ளவரே! மஹாத்மாவான அந்தப்ராம்மணரால் தகப்பனாலஸம்பாதிக்கப்பட்ட பொருளென்று சொல்லப்பட்ட அது எது? அரண்யமென்றுசொல்லப்பட்டது

எது? யானையென்பது எது? அந்தக்கிணறு எது? பிதாமஹரே! பெரியமரமும் அதிலுள்ளதேனும்என்ன? என்னுடைய இந்தஸந்தேஹத்தை விலக்கவேண்டும். பொருள்என்றபதத்தால் என்னசொல்லப்படுகிறது? அந்தப்ராம்மணரால் பொருளானது எவ்விதமடையப்பட்டது? இந்தக்கதையிலுள்ளஇது என்ன?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர். "பாரத! இந்தக்கதைமுழுதும் மோக்ஷத்தை அறிந்தவர்களால் உதாஹரிக்கப்பட்டது. (மனிதன்) இந்தக்கதையால் நல்லஅறிவையடைவான். ஸம்ஸாரபந்தமும் நசிக்கும். அரண்யமென்றுசொல்லப்பட்டது எதுவோ அது பெரியஸம்ஸாரம்தான். அதில்நிலையுள்ளவைகளான துஷ்டயானைகள் நோய்களென்றுசொல்லப்படுகின்றன. ரூபத்தையும்மேனியையும்நசிக்கச்செய்கிறவளும்மிக்க பயங்கரமுள்ளவளுமானஸ்திரீயென்பது கிழத்தனமென்று அறிவிற்சிறந்தவர்கள் சொல்லுகிருர்கள். அந்தக்கிழத்தனத்தால் உலகமானது ஆலிங்கனம் செய்யப்பட்டிருக்கிறது. அந்தக்கிணறறிலிருக்கும்பெரிய பாம்பென்பது காலம்தான். மரமென்பது மிருத்யு. அந்தமரத்தின் அந்தக்கனியான நு தன்னுல்செய்யப்பட்டகர்மங்களின்பயனுகும். அரசனே! கறுத்தவைகளும்வெளுத்தவைகளுமான எலிகளென்று சொல்லப்பட்டவைகள் இரவுகளும்பகலகளுமாகும். பன்னிரண்டு கால்களுடன்கூடியதும்ஆறுமுகங்களுள்ளஉருவமுள்ளதுமானயானையானது வர்ஷமென்று சொல்லப்படுகிறது. பக்ஷங்களும்மாஸங்களும் ருதுக்களும் முகங்களாகின்றன. இது ஸம்ஸாரமென்னும் சக்ரத்தின் ஸ்வரூபமென்று என்னுல்சொல்லப்பட்டது. அரசனே! இவ்விதம் அடையப்பட்ட பொருள்போன்ற அந்தஸம்ஸாரஸ்வரூபத்தை நசிக்கும்படிசெய்துகொள். அரசனே! இதை அறிந்தபின் அந்தப்ராம்மணருடைய தாயானவள் பெரியவைராக்கியத்தையடைந்தாள். அந்தப்ராம்மணர்கூறிய விதிப்படி மிகவும்மேலான சிறந்தபதத்தையடைந்தார். இந்தமோக்ஷத்தையடையவேண்டியகாரணத்திற்காகப் பொருளைத்தரிக்கவும் தரிக்கும்படிசெய்யவும்செய்தார். ஆகையால், சுத்தமானமோக்ஷத்தை நீ அடையவேண்டும். ஜ்யோதிரூபமானமோக்ஷமானது தவத்தால்அடையத்தக்கது. தேவர்களிற்சிறந்தவரும் தேவகியின்புத்ரருமான ஸ்ரீக்ருஷ்ணபகவான் அந்தமோக்ஷரூபியாயிருக்கிருர். பெருமையைக்கொடுப்பவனே! அந்தக்ருஷ்ணபகவானுடைய அனுக்கிரஹத்தால் துக்கமில்லாதவனுவாய். அந்தக்ருஷ்ணபகவான் ஒருவரே உலகங்களுக்குக்கர்த்தாவும் ஞானிகளுக்குஉத்தமகதியுமாயிருக்கிருர். தேவர்களும் தேவர்களுக்குப்பதியான இந்திரனும் ருத்

ணர்களும் அவ்விதமே அஸ்வினீதேவர்களும் போகத்தையும் மோக்ஷத்தையும் அறிந்த (மற்ற) ஜனங்களும் இந்த ஸ்ரீக்ருஷ்ணரூபத்தைச் சரணமடைந்து தம்தம்பதத்தை அடைந்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட இந்தக்ருஷ்ணபகவான் ப்ராணிகளின் உள்ளிலுள்ள ஆத்மாவும் அழிவில்லாதபதத்தையுடையவருமாயிருக்கிறார். உனக்கு இவரைப்பற்றிய உண்மையான அறிவு உண்டாகும்படி, இந்தப்பகவானுடைய சிறந்த நிலையைக்கேள். ப்ரபுவான ஸ்ரீவிஷ்ணுவானவர் முன்காலத்தில் நாரதருக்குத் தம்ஸ்வரூபத்தைக்காண்பித்துத் தாம் எதைச்சொன்னாரோ அதை நீ தெரிந்துகொள். தேவரிஷியும் உண்மையுள்ளவரும் ப்ரபுவும் சோபையுள்ளவருமான நாரதரானவர் முன்காலத்தில் தீர்த்தயாத்ரை செய்துகொண்டு பூமிமுழுமையும்ஸஞ்சரித்தார். அவர் இமயமலைச்சாரலையடைந்து பலமுறைவிசாரித்து அவ்விடத்தில் தாமரைமலர்களாலும் நீலோத்பலங்களாலும்நிறைந்துள்ள ஒருகுளத்தைக்கண்டார். அரசனே! அந்தக்குளக்கரையில் எல்லாஆபரணங்களாலும்அலங்கரிக்கப்பட்டவளும் காந்தியால்விளங்குகிறவளும் நீலோத்பலங்களைக் கொண்டுவிளையாடுகிறவளுமான ஒருகன்னிகையைக்கண்டார். அந்தப் பெண்ணானவள் மஹாத்மாவான நாரதரைக்கண்டு, 'ஓ! நாரத!' என்றழைத்தாள். நாரதரானவர் அந்தப்பெண்ணின் ஸமீபஞ்சென்று மனத்தில்வியப்படைந்துநின்றார். அழகான ஆடையுள்ளவளும் பெரிய பாக்யம்பெற்றவளுமான அந்தக்கன்னிகையானவள் பார்த்துக்கொண்டிருக்கும் அந்தநாரதரைக்கண்டு புன்னகையுடன் பலதரம்கொட்டாவிவிட்டாள். அந்த முகத்திலிருந்து புருஷஉருவமுள்ளதும் ரத்நப்புள்ளிகளால் நிறைந்த அங்கங்களுள்ளதும் எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டதும் ஸூர்யனுக்கொப்பான உருவமுள்ளதும் தலையில் ஒருமணியைத்தாங்கியதுமான ஒன்று உண்டாயிற்று. திரும்பவும் அதன்உருவத்திற்குச்சமமானவேறொன்றும் பலவிதஆபரணங்களுடன்கூடிய மூன்றாவதும் உண்டாயின. மஹாராஜனே! பலவிதமான ஒலிகளுள்ள அந்தமூன்றும் அந்தக்கன்னிகையை வலஞ்செய்துவிட்டு நின்றன. பிறகு, ப்ரம்மரிஷியான நாரதர் அழகான அந்தக்கன்னிகையைநோக்கி, 'மிக்கமங்களமுள்ளவளே! தாமரைமலருக்கும்சந்திரனுக்கும் ஸமமானமுகமுள்ளவளே! ஏ! மஹாதேவி! நீயார்? உன்னை நான் அறியவில்லை. குற்றமில்லாதவளே! உண்மையைச்சொல்' என்று முற்றும் வினவினார். கன்னிகையானவள், 'ஓ! ப்ரம்மரிஷியே! கேள். நான் ஸாவித்ரியென்று பெயருள்ளவள். உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். நான் என்னசெய்யவேண்டும்?

உன்மனத்திலிருப்பதுஎதுவோ அதைச்சொல்' என்றுசொன்னாள். நாரதர், 'ஓ! ஸாவித்ரியே! உன்னைநான் நமஸ்கரிக்கிறேன். குற்றமில்லாதவளே! நான் பயனுள்ளவனானேன். ஓ! தேவி! அழகுள்ளவளே! நீ என்னுடைய இந்தஸந்தேஹத்திற்கு விடையளிக்கவேண்டும். முதலிலுண்டான புருஷஉருவமுள்ள இது என்ன? ஓ! மஹாதேவி! சுட்டிகள் என்ன? தலையில் ஒளி உருவமுள்ளதாயிருந்தது என்ன?' என்று கேட்டார். கன்னிகையானவள், 'முனியே! முதலில் உண்டானது ருக்வேதமும் வேறொன்று யஜுர்வேதமும் மூன்றாவது ஸாமவேதமுமாகின்றன. உனக்கு ஸந்தேஹமில்லாமலிருக்கட்டும். யாகத்தின்பயனை அடைந்த வேதங்கள் (பிந்து) புள்ளிகளுடன் கூடியிருக்கின்றன. பேரொளியாய்க் காணப்பட்டது (பரமாத்ம) ஜ்யோதியென்று அறிஞர்களால் சொல்லப்படுகிறது. ரிஷியே! அது என்னாலும் அறியத்தக்கது' என்றுசொல்லிவிட்டு அந்தர்த்தானத்தையடைந்தாள். புருஷஶ்ரேஷ்டனே! பிறகு, பெரியபுத்தியுள்ள அந்தநாரதரானவர் ஆச்சர்யமடைந்து நெடுநேரம் த்யானத்துடனிருந்தும் அதைஅறியவில்லை. பிறகு, மிக்ககாந்தியுள்ளவரும் புருஷப்புலியுமான அந்தநாரதரானவர் அந்தஆச்சர்யத்தையறியவிரும்பி ஸ்நானம்செய்து வாக்கையும் இந்திரியங்களையுமடக்கித் துதிசெய்யத்தொடங்கினார். பிறகு, நூறுவருஷங்கள் நிறைந்தவுடன், உலகங்களைஉண்டுபண்ணுகிறவரும் உலகங்களை உருவமாகக்கொண்டவருமான விஷ்ணுபகவான் ரிஷியினிடமுள்ள மிக்கஅன்பினால் எதிரிலதோன்றினார். அவ்விதம்வந்தவரும் உலகங்களுக்குப் பதியும் எல்லாவற்றின்காரணத்திற்கும்காரணரும் எல்லாத்தேவர்களின்கிரீடங்களிலுமுள்ளஸுவர்ணத்தால் சிவந்த இரண்டு பாதங்களுள்ளவரும் கருடனுடையகால்பட்ட அடையாளத்தால்விளங்கும் முழங்காலுள்ளவரும் பீதாம்பரத்துடன்விளங்கும்பொன்மாலைகட்டிய இடையுள்ளவரும்ஸ்ரீவத்ஸமுள்ளமார்புள்ளவரும் அழகானகௌஸ்துபமணியணிந்த கழுத்துள்ளவரும் புன்சிரிப்புள்ளமுககமலமுள்ளவரும் சலிக்கிறநீண்டகண்களுள்ளவரும் வில்லைப்போலவளைந்த இருபுருவங்களால்விளங்குகிறவரும் பலவிதமானசிறந்தரத்னங்களாலும் வைரங்களாலும் விளங்கும் மகரகுண்டலமுள்ளவரும் இந்த்ரநீலமணிக்கொப்பான மேனியுள்ளவரும் தோள்வளைகளாலும் கிரீடத்தாலும்விளங்குகிறவரும்இந்த்ரன்முதலிய தேவர்களாலும் ரிஷிக்கூட்டங்களாலும் துதிக்கப்படுகிறவருமான அந்தஸ்ரீஹரியை நாரதரானவர் ஜயசப்தத்துடன் தலையால்நமஸ்கரித்தார். பிறகு, எல்லாப்ராணிகளுக்கும்ப்ரபுவானவரும் லக்ஷ்மியுடன்கூடிய

வருமான அந்தவிஷ்ணுபகவான் பூமியில்விழுந்து நமஸ்கரித்த நாரதரைநோக்கி மேகத்தின் த்வனிபோலக் கம்பீரமானவாக்குடன், 'ரிஷியே! உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். நல்லநியமமுள்ளவனே! வரத்தைப்பெற்றுக்கொள். உன்மனத்திலிருப்பதை ஸந்தேஹமின்றிக் கொடுக்கிறேன்' என்றுசொன்னார். அந்தநாரதரிஷியும் பரபரப்புடன் சங்கத்தையும் சக்ரத்தையும் கதாயுதத்தையும்தரித்தவரும் ஹ்ருதயத்தில் தோன்றியிருந்தவருமான அந்தப்பகவானைநோக்கி ஜயசப்தத்துடன், 'உலகங்களுக்குப்பதியே! அச்சுதரே! அனுக்ரஹிக்கவேண்டும். நான்சொல்லவிரும்பியது உம்மால்அறியப்பட்டதுதான். ஓ! ஹ்ருஷீகேசரே! ஆகையால், அனுக்ரஹிக்கவேண்டும். ஹரியே! நான் அதைக்கேட்க விரும்புகிறேன்' என்றுசொன்னார். பிறகு, மஹாவிஷ்ணுவானவர் புன்னகையுடன் நாரதரைநோக்கி, 'வேதங்களின் தலையில் உன்னால் காணப்பட்ட அந்தஉருவமுள்ள என்னை த்வந்த்வங்களிலிருந்துவிலகியவர்களும் அஹங்காரமற்றவர்களும் பரிசுத்தர்களும் பரிசுத்தமான த்ருஷ்டியுள்ளவர்களுமான யோகிகள் எப்பொழுதும் பார்க்கிறார்கள். இவ்விஷயத்தில எதைவிரும்புகிறாயோ அதை அவர்களிடம் கேள். ஓ! தேவரிஷியே! எந்தயோகிகள் ப்ராஜ்ஞர்களிற்சிறந்தவர்களோ, எவர்கள் என்னுடைய அவதாரங்களென்றுநிச்சயிக்கப்பட்டவர்களோ அவர்களுடைய அனுக்ரஹத்தை என்னுடைய அனுக்கிரகமென்று தெரிந்துகொள்' என்றுசொன்னார். உலகங்களைப்படைப்பவரான அந்தவிஷ்ணுபகவான் இவ்விதம்சொல்லிவிட்டுச் சென்றார். ஆகையால், இந்திரியங்களுக்கு ஈஸ்வரரும் தேவகியின்புத்ரருமானஸ்ரீவாஸுதேவரைச்சரணமடை. மஹரிஷிகள் இந்தக்கோவிந்தரை ஆராதித்து முக்திபெற்றிருக்கிறார்கள். இவர் (உலகங்களைப்) படைப்பவரும் ஸம்ஹரிப்பவரும் எல்லாவற்றின்காரணத்திற்கும் காரணருமாயிருக்கிறார். அரசனே! என்றாலும் இது நாரதரிடமிருந்தே கேட்கப்பட்டது; அதை நீ தெரிந்துகொள்; பூஜ்யரான நாரதமுனிவர் தாமாகவே சொன்னார். எல்லாவிதமானஸம்ஸாரதுக்கத்தையும் விலக்கக்காரணமான விஷ்ணுபகவானை வேறுஇடத்தில் மனத்தைச்செலுத்தாமல் எவர்கள் ஆராதிக்கிறார்களோ அவர்கள் அடைவதற்கு மிகவும் அரிதான ஸாயுஜ்யத்தை அடைகிறார்களென்று எப்பொழுதும் (பெரியோர்கள்) உள்ளத்திலிருப்பதை ஷிரிவாய்க்கூறுகிறார்கள்." என்றுசொன்னார்.

---

## இருநூற்றுமுப்பதாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)



(பீஷ்மர், விஷ்ணு உலகங்களைப்படைத்தமுறைமையையும் நாரதரால்சொல்லப்பட்ட விஷ்ணுவின்அவதாரமுதலிய பெருமைமையையும் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! பேரறிவுடையவர்களில்பெரியவரே! பரதர்களில்மிகச்சிறந்தவரே! தாமரைமலர்போன்றகண்களுள்ளவரும் அழிவில்லாதவரும் கர்த்தரும் உத்பத்தியில்லாதவரும் எங்கும் நிறைந்தவரும் ப்ராணிகளின் உத்பத்திலயங்களுக்குக்காரணரும் இந்த்ரியங்களுக்கு ஈஸ்வரரும் கோவிந்தரும் வெல்லப்படாதவரும் நாராயணருமான ஸ்ரீகேசவரைப்பற்றி உண்மையாய்க்கேட்கவிரும்புகிறேன்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"இந்தவிஷயமானது ஜமதக்னியின்குமாரரான ராமரும் தேவரிஷியானநாரதரும் வ்யாஸரும் சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது கேட்கப்பட்டது. அப்பா! அஸிதரும் தேவலரும் பெரியதவமுள்ள வால்மீகியும் மார்க்கண்டேயரும் ஸ்ரீகோவிந்தரிடத்தில [1]பெரிய ஆச்சர்யத்தைச் சொல்லுகிறார்கள். அரசனே! ஸ்ரீகேசவருடையகுணங்கள்என்னால்வர்ணிக்கக்கூடியவையல்ல. இந்த்ரியங்களுக்குஈஸ்வரரும் பரத்திலும்பரருமான ஸ்ரீவாஸுதேவர் இவ்விதமானவர். பரதர்களில் மிகச்சிறந்தவனே! ஸ்ரீகேசவர் [2]பகவானென்றும் [3]ஈஸ்வரரென்றும் [4]ப்ரபுவென்றும் புருஷரென்றும் ஸர்வரென்றும் [5]விபுவென்றும்பலவிதமாக வேதத்தில் கேட்கிறோம். மஹாபாஹுவே! யுதிஷ்டிர! ஆனாலும், உலகத்திலுள்ளப்ராம்மணர்கள், மஹாத்மாவும் சார்ங்கமென்னும்வில்லுள்ளவருமான ஸ்ரீவாஸுதேவரிடத்தில் எந்தக்குணங்களைச் சொல்லுகிறார்களோ அவைகளைக்கேள். மனிதர்களுக்குஇந்திரனே! புராணங்களை அறிந்தஜனங்கள் ஸ்ரீகோவிந்தரிடத்தில் எந்தக் குணங்களைச் சொல்லுகிறார்களோ அவைகளெல்லாவற்றையுங் கேட்டு நான்சொல்லுகிறேன். ப்ராணிகளுக்குஆத்மாவும் மஹாத்

1 'ஆச்சர்யமானமாஹாத்ம்யத்தை' என்பது பழையவுரை.

2 'நிறைந்தஐஸ்வர்யமும் ஞானமும் யசஸும் ஸ்ரீயும் வைராக்யமும் தர்மமுமுள்ளவர்' என்பது பழையவுரை.

3 'அந்தர்யாமி' என்பது பழையவுரை.

4 'அரசன்போல வெளியிலிருந்துரக்ஷிப்பவர்' என்பது பழையவுரை.

5 'வ்யாபகர்' என்பது பழையவுரை.

மாவுமான புருஷோத்தமரானவர் ஆகாயம் வாயு ஜ்யோதிஸ் ஜலம் பூமியென்றமஹாபூதங்களைப்படைத்தார். எல்லாப்பிராணிகளுக்கும்ஈஸ்வரரும் ப்ரபுவும் மஹாத்மாவுமான அந்தப்புருஷோத்தமரானவர் பூமியைப்படைத்தபின் ஜலத்திலேயே சயனம்பண்ணிக்கொண்டிருந்தார். எல்லாத் தேஜஸுகளின்உருவமுமுள்ளவரும் சுபமான அந்த ஜலமென்றசயனத்தில் சயனித்திருப்பவருமான அந்தப்புருஷோத்தமர் எல்லாப்பிராணிகளுக்கும் முதலிலுண்டானவரும் எல்லாப்பிராணிகளுக்கும் இருப்பிடமுமானஸங்கர்ஷணரை மனத்தால் [1]சிந்தித்தாரென்றுகேள்விப்படுகிறோம். அவர் நிகழும்உலகங்களையும் சென்றதும் வரப்போகிறதுமான இரண்டையும்தரிக்கிறார்; அந்தஸங்கர்ஷணரைப் படைத்தபின் எல்லாத்தேஜஸுகளையும் விளங்கச்செய்கிறவரான ப்ரத்யும்னரைப் படைத்தார். பிறகு, எல்லாச்சக்தியுமுள்ளவரும் பெரியகாந்தியுள்ளவருமான அநிருத்தர் உண்டானார். ஆகாயத்தை அடைந்தவரும் ஜலத்தில் யோகநித்ரைசெய்பவருமான ப்ரபுவவரோ அவரிடமிருந்து மிகப்பெரியதேஜஸுள்ளவர்களும் ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரமென்றகார்யங்களுள்ளவர்களுமான ப்ரம்மாவிஷ்ணுமஹேஸ்வரரென்ற அந்த மூன்றுதேவர்களும் உண்டானார்கள்.

பிறகு, மஹாத்மாவும் மஹாபாஹுவுமான அந்தஸங்கர்ஷணர்உண்டானவுடன், நாபியில்ஸூர்யனுக்கொப்பான ஒருதிவ்யமான பத்மம் உண்டாயிற்று. அப்பா! அந்தத்தாமரைமலரில் எல்லாப்ராணிகளுக்கும்பிதாமஹரும் பூஜ்யருமான அந்தப்ரம்மதேவர் திக்குக்களை விளங்கச்செய்துகொண்டு உண்டானார். மஹாபாஹுவும் மஹாத்மாவுமான அந்தப்ரம்மதேவர்உண்டானபிறகு, தமோகுணத்திலிருந்து முதலிலுண்டான மதுவென்னும் பெரியஅஸுரனுண்டானான். க்ரூரனும் க்ரூரமானசெய்கையுள்ளவனும் க்ரூரமானபுத்தியை அடைந்தவனுமான அந்தஅஸுரனை ஸ்ரீபுருஷோத்தமரானவர் ப்ரம்மதேவருக்குப் பெருமையைச்செய்வதற்காகக் கொன்றார். அப்பா! மதுவென்னும் அந்த அஸுரனைக்கொன்ற காரணத்தால் தேவர்கள் அஸுரர்கள்மனிதர்களனைவர்களும், பக்தர்களனைவர்களையும் பாதுகாக்கும் பகவானை மதுஸூதனரென்று கருதுகிறார்கள். பிறகு, ப்ரம்மதேவரானவர், மரீசி அத்ரி அங்கிரஸ் புலஸ்தியர் புலஹர் க்ரது தக்ஷர் என்ற ஏழு [2]மானஸபுத்ரர்களைப் படைத்தார். அப்பா! அவர்களில் முதலிலுண்டானமரீசியானவர் மனத்திலிருந்துண்டானவரும்

1 'ஸ்ருஷ்டித்தார்' என்பது வேறுபாடம்.

2 மனத்தால்படைக்கப்பட்டவர்கள்.

தோஜோரூபியும் சிறந்தப்ரம்மஜ்ஞானியும் முதலிலுண்டானவரு மான கஶ்யபரென்னும்புத்ரரை உண்டுபண்ணினார். ப்ரம்மதேவரான வர் மரீசிக்கும் முதலிலுண்டானஒருவரைத் தம்பெருவிரலிலிருந்து படைத்தார். பரதர்களில்மிகச்சிறந்தவனே ! அவர் தக்ஷரென்றுப்ர ஸித்திபெற்ற ஸ்ருஷ்டிகர்த்தராயிருந்தார். பாரத! அந்தத்தக்ஷப்ரஜா பதிக்கு முதலில் பதின்மூன்றுகன்னிகைகளுண்டானார்கள். திதி யென்பவள் அந்தக்கன்னிகைகளுள் மூத்தவள். அப்பா ! எல் லாத்தர்மங்களின் விசேஷங்களையும் அறிந்தவரும் பரிசுத்தமான கீர்த்தியுள்ளவரும் பெரியபுகழுள்ளவரும் மரீசியின்புத்ரருமான கஶ்யபரானவர் அந்தக்கன்னிகைகளனைவருக்கும் பதியாயிருந்தார். பெரியபாக்யம்பெற்றவரும் தர்மங்களை அறிந்தவருமான தக்ஷப்ரஜா பதியே அந்தக்கன்னிகைகளுக்குத் தங்கைகளான பத்துப்பெண் களையும்உண்டுபண்ணித் தர்மதேவதையின்பொருட்டுஅளித்தார். ஓ ! பாரத ! தர்மத்திற்கு, வஸுக்களும் அளவற்றதேஜஸுள்ளருத்ரர் களும் விஶ்வேதேவர்களும் ஸாத்யர்களும் மருத்வான்களுமானபுத்ரர் கள் உண்டானார்கள். அந்தப்பத்துப்பெண்களைத்தவிர அவர்களுக் குத் தங்கையர் வேறுஇருபத்தேழுபெண்கள் பிறந்தார்கள். பெரிய பாக்யம்பெற்றஸோமன் அப்பெண்களனைவருக்கும் பதியானான். [1]மற் றப்பெண்கள் கந்தர்வர்களையும் குதிரைகளையும் ப்ராம்மணர்களையும் பசுக்களையும் கிம்புருஷர்களையும் மத்ஸ்யங்களையும் கொடிசெடிகளை யும் மரங்களையும் உண்டுபண்ணினார்கள். அதிதியானவள் தேவர்க ளில்மிகச்சிறந்தவர்களும் பெரியபலமுள்ளவர்களுமான ஆதித்யர் களை உண்டுபண்ணினாள். கோவிந்தரானவிஷ்ணுவானவர் வாமனாவ தாரம்செய்து அவர்களுக்குத்தலைவருமானார். அவருடையபராக்ரமத் தால் தேவர்களுக்குள்ள ஸம்பத்தானது மிகச்செழிப்படைந்தது. தனுவின்குமாரர்களும் திதியின்குமாரர்களுமான அஸுரஸந்ததி களும் தோல்விஅடைந்தன. தனுவானவள் விப்ரசித்திமுதலிய அஸுரர்களை உண்டுபண்ணினாள். திதியோ பெரியபலமுள்ளஎல்லா அஸுரர்களையும் உண்டுபண்ணினாள். பிறகு, விஷ்ணுபகவானான வர் உலகங்களுக்குப்பயத்தைஉண்டுபண்ணுகிறவனும் எல்லாப்பிரா ணிகளையும் அபஹரிக்கிறவனுமான ம்ருத்யுவைப்படைத்தார். மது ஸூதனரானவர் பகலையும் இரவையும் ருதுவுக்குத்தக்ககாலத்தை யும் முற்பகலையும் பிற்பகலையும் யாவற்றையுமே படைத்தார். அந்தப் பகவானானவர் [2]ஜலங்களையடைந்து மேகங்களையும் அவ்விதமே ஸ்தா

1 கஶ்யபரின்பத்நிகள். 2 'ஆலோசித்து' என்பது பாடம்.

வரங்களையும் ஜங்கமங்களையும் உண்டுபண்ணினார். அவர் ! அதிகதேஜ ஸுடன்கூடிய [1]பூமிமுழுமையையும் படைத்தார். யுதிஷ்டிர ! பிறகு, பெரியபாக்கியம்பெற்றவரும் பிரபுவுமான ஸ்ரீவாஸுதேவரே திரும்ப வும் மிகச்சிறந்த [2]நூறுப்ராம்மணர்களைத் தம்முகத்திலிருந்தே படை த்தார். பரதர்களிற்சிறந்தவனே ! ஸ்ரீகேசவர் கைகளிலிருந்து நூறு க்ஷத்ரியர்களையும் தொடைகளிலிருந்து நூறுவைஶ்யர்களையும் பாதங் களிலிருந்து நூறுசூத்ரர்களையும் படைத்தார். இவ்விதம் பெரிய தவமுள்ள அந்தப்பகவான் நான்குவர்ணங்களையும் உண்டுபண்ணிய பின் தாம் வேதவித்தைகளைவெளியிடத்தக்கவரும் அளவேற்றகாந்தி யுள்ளவரும் எல்லாப்ராணிகளையும்படைப்பவரும் அதிபதியுமானப்ர ம்மதேவரைப் படைத்தார். அந்தப்பகவான் பூதங்களுக்கும் [3]ஸப்த மாதாக்களுக்கும் ப்ரமதகணங்களுக்கும்அதிபதியான ருத்ரரையும் படைத்தார் ; பாபிகளைச்சிக்ஷிப்பவரும் பித்ருக்களுக்குப்பதியும் ஸம மாயிருப்பவருமான தர்மராஜரையும் படைத்தார். எல்லாப்ராணிக ளுக்கும்ஆத்மாவான பகவானவர் நிதிகளுக்குப்பதியானகுபேரனை யும் படைத்தார் ; ஜலங்களுக்குராசனும் ஜலத்திலுள்ளப்ராணிகளுக் குப்பதியுமானவருணனையும் படைத்தார். ப்ரபுவானவர் எல்லாத் தேவர்களுக்கும்பதியானஇந்த்ரனையும் படைத்தார். மனிதர்களுக்கு எவ்வளவுஎவ்வளவுகாலம் சரீரத்தைத்தரிக்கவேண்டுமென்றஆவலிரு ந்ததோ அவ்வளவுஅவ்வளவுகாலம் அவர்கள் ஜீவித்திருந்தார்கள். யமன்செய்யும்பயம்உண்டாகவில்லை. பரதர்களிற்சிறந்தவனே ! இவர் களுக்கு ஆண்பெண்களுக்குரிய சேர்க்கையென்னும் தர்மமானது இல்லை. ஸங்கல்பத்தாலேயே இவர்களுக்குக் கர்ப்பமுண்டாயிற்று. பிறகு, த்ரேதாயுககாலத்தில் தொடுவதால ப்ரஜைஉண்டாயிற்று. அர சனே ! அக்காலத்திலுள்ளவர்களுக்கும் ஆண்பெண்களுக்குரியசேர் க்கையென்னும்தர்மமானது இருக்கவில்லை. அரசனே ! ஆண்பெண் களின் சேர்க்கையென்னும்தர்மமானது ப்ரஜைகளுக்கு த்வாபரயுக த்திலுண்டாயிற்று. அரசனே! அப்படியே கலியுகத்திலுள்ள ஜனங் கள் த்வந்த்வதர்மத்தைஅடைந்தார்கள். அப்பா ! இவ்விதம் உலகங் களைப்படைத்தஇந்தவிஷ்ணுவானவர் ப்ராணிகளுக்குப்பதியென்றும் அவற்றை நன்கு காப்பவரென்றும் சொல்லப்படுகிறார். கௌந்தேய!

---

1 'ப்ருதிவீம்' என்பது மூலம் : 'பூமியிலுள்ளஎல்லாப்பிராணிகளையும்' என்பது பழையவுரை.

2 'சதம்' என்பது மூலம்; 'அனந்தமான' என்பது பழையஉரை.

3 ப்ராம்மீமுதலியஎழுவர்.

1 நரகத்தைஅடைபவர்களையும் சொல்லுகிறேன். அதைக்கேள். உனக்குக் கப்பங்கட்டுகிறவர்களும் தென்தேசத்திற்பிறந்தவர்களுமான ஆந்த்ரர்கள், புளிந்தர்கள், சபரர்கள், சூசுபர்கள். மத்ரகர்கள், அனைவரும் அவ்விதமாகிறார்கள். காம்போஜர்கள், காந்தாரர்கள், கிராதர்கள், பர்ப்பரர்களென்னும் வடதேசத்தில் பிறந்தவர்களையும் சொல்லுகிறேன். அப்பா! அரசனே! இவர்கள் பாபத்தைச்செய்கிறவர்களும் கொக்கு கழுகு சண்டாளன் இவர்களுக்குச்சமமான தர்மமுள்ளவர்களுமாகி இப்பூமியில் ஸஞ்சரிக்கிறார்கள். அப்பா! இவர்கள் க்ருதயுகத்தில் இப்பூமியில்ஸஞ்சரிக்கிறவர்களல்லர். பாரதர்களிற் சிறந்தவனே! த்ரேதாயுகமுதல் அந்தஜனங்கள் வ்ருத்தி அடைகிறார்கள். பிறகு, யுகத்தின்முடிவிலுண்டானதும் மிக்கபயங்கரமுமான அவ்வித ஸந்த்யாகாலம்சேர்ந்தவுடன், (அஸுரர்கள்) ஒருவரையொருவர் அடித்து அரசர்களானார்கள். தேவரான அந்தப்பகவானே அஸுரர்களைக்கொல்லுவதற்காக இந்த்ரஉருவத்தைஎடுத்துக்கொண்டு பூமியில் சஞ்சரித்தார். பூமியானது (யுத்தமென்னும்யாகத்திற்கு) வேதியென்னும்நிலையை அடைந்தது. இவ்விதமிருக்கும்பொழுதே பூமியை ரக்ஷிக்கவேண்டி முறையே நரஸிம்மமுதலிய ஸ்ரீவிஷ்ணுவின் அவதாரங்கள் உண்டாயினவென்றுகூறப்படுகின்றன. புருஷோத்தமரான ஸ்ரீவிஷ்ணுவானவர் பூமியிலுள்ள துக்கத்தைவிலக்குவதற்காக, ப்ரம்மா இந்த்ரன்முதலியவர்களால்துதிக்கப்பட்டு அந்த அந்தக்கார்யங்களுக்குத்தக்கஅவதாரத்தைச்செய்து ஹிரண்யகசிபுவென்றஅஸுரனையும் அவ்விதமே ஹிரண்யாக்ஷனென்றஅஸுரனையும் பெரியஅஸுரனான ராவணனையும்கொன்றுவிட்டு இதோ மஹாயோகியான ஸ்ரீக்ருஷ்ணனாயிருக்கிறார். மஹாராஜனே! பெரியதேஜஸுள்ளவரும் ஜனங்களால் விரும்பப்படுகிறவரும் கம்பீரபுத்தியுள்ளவருமான ஸ்ரீஹரியானவர் தம்முடைய அங்கத்திலிருந்து வெளுத்ததும் கறுத்ததுமான இரண்டுமயிர்களை எடுத்துவிடுத்தார். உலகத்தைஉருவமாகக்கொண்டவரும் உத்தமருமான இந்த ஸ்ரீவிஷ்ணுவானவர் இவ்வுலகில் வஸுதேவருக்குத் தேவகியிடத்திலிபிறந்து சரீரமுள்ளவராகி உனக்கு ஸம்பந்தியாயிருக்கிறார். ஓ! புருஷப்புலியே! யோகிகளுக்குஈச்வரரும் மனத்துக்கெட்டாதவரும் சிந்திக்கமுடியாதவருமான ஜகத்பதியானவர் ஆவிர்ப்பவித்திருக்கிறார். இவர் ஸாதாரணமனிதரே அல்லர். அவ்யக்தமுதல் விசேஷம்வரையிலுள்ளதும் பலஅளவும் பொருளுமுள்

1 இங்கு மூலத்தில் 'நிரயே த்ராந' என்றிருக்கிறது; பழையவுரையில் 'நிரயேக்ஷாந்' என்றிருக்கிறது; அந்தப்பாடமே கொள்ளப்பட்ட

ளதுமான இவ்வுலகமெல்லாம் ஸ்ரீஹரியினுடையலீலையே. இதை நாசமுள்ளதென்றே தெரிந்துகொள்ளவேண்டும். அழிவில்லாத தும் நித்யமுமான ஸ்ரீஹரியின் அந்தஉருவம் வேறுஇருக்கிறது. வெவ்வேறானஉருவமானது உலகத்தைப்பற்றியதாகும். ஒப்பற்ற தானஅந்தஉருவத்தைத் தெரிந்துகொள். மோக்ஷமானது உன்னால் ஜயிக்கப்பட்டதாகும். அந்தஉருவந்தான் தசார்ஹகுலத்திலுதித்த வரும் லக்ஷ்மியுடன்கூடியவரும் ஸ்ரீவத்ஸமென்னும்அடையாளமுள் ளவருமான ஸ்ரீகிருஷ்ணனாகிறது இந்தப்பரமாத்மாவினுடையதேஹ மானது பூதங்களின்உத்பத்தியால்உண்டானஉருவமுள்ளதன்று. இவ் விடத்தில் தேஹமுள்ளவராயிருக்கிற இந்தவிஷ்ணுபகவான் மாயா மயமான ஹரியாகிறார். உன்னுடையபரலோகத்தை ரக்ஷித்துக்கொ ள்ளவேண்டி ஸநாதனமானநித்யரூபத்தை த்யானம்பண்ணு. எவர் கள் பக்தியில்லாதவர்களோ அவர்கள் நான்குவேதங்களாலும் அவை களின்அங்கங்களாலும் மீமாம்ஸையாலும் ந்யாயசாஸ்த்ரத்தாலும் இதிஹாஸங்களாலும் புராணங்களாலும் மனுமுதலியதர்மசாஸ்த்ரங் களாலும் இவரைப்பற்றிக்கூறும்எல்லாவேதாந்தங்களாலும் எவ்விதத் திலும் நித்யரானஇந்தப்பரமாத்மாவை அடையமாட்டார்கள். ப்ரா ணிகளின்ஆத்மரூபியானபகவான் எல்லாப்ராணிகளிடங்களிலும் அவ் வவற்றின்புத்தியை அடைந்திருக்கிறார். ஆகையால், அறிவுள்ள நீ எப்பொழுதும் சோம்பலில்லாதவனாகி இந்தப்பரமாத்மாவையே த்யா னம்பண்ணு. குருக்களில்மிகச்சிறந்தவனே! பரமாத்மாவின் இந்த அவதாரமானது இவ்விதமானது. எல்லாஉலகங்களையும்கண்ட தேவ ரிஷியான நாரதரானவர் இவ்விதம்சொன்னார். அரசனே! பிறகு, நாரதரானவர் ஸ்ரீக்ருஷ்ணனுடைய சிறந்ததான சர்வ்வநத்தன்மை யை உள்ளபடிஅறிந்தார். மஹாபாஹுவே! பரதச்ரேஷ்டனே! இவ்விதம் இந்தவ்யாஸதேவர் மஹாபாஹுவும் ஸத்யமானபராக்ரம முள்ளவரும் சித்திரகத்தகாதவரும் தாமரைமலர்போன்ற கண்களுள் ளவருமான ஸ்ரீகேசவராகிறார். இவர் கேவலம் மானிடரல்லர். இவர் இவ்விதமானபுருஷராயிருக்கிறார். இவரை எப்பொழுதும் யார் அறி யததக்கவன்? அரசனே! உனக்கு இதனைச் சொன்னேன். திரும்ப வும் எதைக்கேட்கவிரும்புகிறாய்'' என்று வினவினார்.

---

## இருநூற்றேழாவது அத்தியாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், மரீசிமுதலிய ஸ்ருஷ்டிகர்த்தர்களையும் ஒவ்வோரு திக்கிலுமுள்ள ரிஷிகளையும் கூறியது.)

யுதிஷ்டிரர், "பரதஸ்ரேஷ்டரே! எவர்கள் முன்பு ப்ரஜைகளுக்குப்பதிகளாக இருந்தார்கள்? திக்குகள் ஒவ்வொன்றிலும் பெரிய பாக்யம்பெற்ற எந்தரிஷிகள் இருந்தார்கள்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"பரதர்களில்மிகச்சிறந்தவனே! 'எவர்கள் ப்ரஜைகளுக்குப் பதிகள்? எந்தரிஷிகள் திக்குக்களிற்கூறப்படுகிறார்கள்?' என்று நீ என்னிடம்வினவியதைக்கேள். தாமாகஉண்டானவரும் பூஜ்யரும் ஸநாதனருமானப்ரம்மாஒருவர் ஆதியிலுள்ளவர். ஸ்வயம்புவான அந்த ப்ரம்மதேவருக்கு மரீசி அத்ரி அங்கிரஸ் புலஸ்த்யர் புலஹர் க்ரது பெரியபாக்கியம் பெற்ற வஸிஷ்டர்என்ற மஹாத்மாக்களும் அந்த ப்ரம்மாவுக்கு ஒப்பானவர்களுமான ஏழுபுத்ரர்கள் உண்டானார்கள். இவர்கள், ஏழுப்ரம்மாக்களென்று புராணத்தில் நிச்சயிக்கப்பட்டிருக்கிறார்கள். இதற்குமேல் ப்ரஜாபதிகளானவர்களையுமே சொல்லுகிறேன். அத்ரிவம்சத்திலபிறந்தவரும் ப்ரம்மதேவரைக்காரணமாகக் கொண்டவரும் ஸநாதனரும் பூஜ்யருமான ப்ராசீனபர்ஹி யென்பவர் இருந்தார். ப்ரசேதஸின்புத்ரரான அவரிடமிருந்து பத்துப்பெயர்கள் உண்டானார்கள். அந்தப்பத்துப்பெயர்களுள் தக்ஷரென்று ப்ரஸித்தரான ஸ்ருஷ்டிகர்த்தரும் ஒருபுத்ரர். அவருக்கு உலகத்தில் 'தக்ஷர்' என்றும், 'க' என்றும் இரண்டுபெயர்களுண்டு. மரீசியின்புத்ரர்கஶ்யபர். அவருக்கு இரண்டுபெயர்கள் கூறப்படுகின்றன. சிலர் அரிஷ்டநேமியென்றும் மற்றும்சிலர் கஶ்யபரென்றும் கூறுகின்றார்கள். காந்தியுள்ளவனும் வீர்யமுள்ளவனும் ராஜனுமானஸோமன் அத்ரியின் ஔரஸபுத்ரன். அவன் தேவர்களுக்குரியயுகங்களில ஆயிரம்யுகங்கள் விளங்கிக்கொண்டிருப்பான், பாரதனே! பூஜ்யனான அர்யமாவும் இந்த அத்ரியின்புத்ரர்களான மற்றவர்களும் உலகங்களைப் படைப்பவாக ஸொன்றும் கட்டளையிடுகிறவர்களென்றும் சொல்லப்படுகிறார்கள். உறுதியுள்ளவனே! சசபிந்துவுக்குப் பதினாயிரம்பார்யைகளுண்டு. அப்பொழுது ஒவ்வொருபார்யையினிடத்திலும் ஆயிரம் ஆயிரம்புத்ரர்கள் உண்டானார்கள். இவ்விதம் மஹாத்மாவான அந்தச்சசபிந்து

வுக்கு [1]நூறுலக்ஷம்புத்ரர்களிருந்தார்கள். அவர்கள் வேறுஒருவனை யும் ப்ரஜைகளுக்குப்பதியாகவிரும்பவில்லை. முன்னோர்களான ப்ராம் மணர்கள், ப்ரஜைகள் சசபிந்துவிடமிருந்து உண்டாயினவென்று சொல்லுகிறார்கள். அது வ்ருஷ்ணியின்குலத்துக்குக்காரணமானதும் பெரியதுமானப்ரஜாபதியின் குலமாகும். கீர்த்திபெற்றஸ்ருஷ்டிகர்த் தர்கள் இவ்விதம் கூறப்பட்டார்கள். பெரியயோகியும் பெரியமனமுள் ளவரும் ஆத்மரூபத்தைஅறிந்தவருமான சசபிந்துவென்னும் ராஜ ரிஷியானவர் பதினாயிரம்பார்யைகளின் நடுவிலிருந்துகொண்டிருந் தார். யோகியானஅவர் ஸமாதியை அடைந்து பிறகு ஸாயுஜ்யத்தைப் பெற்றார். இதற்குமேல் மூன்றுஉலகங்களுக்கும் ஈஸ்வரர்களானதேவ ர்களைச்சொல்லுகிறேன். பகன் அம்சன் அர்யமா மித்ரன் வருணன் ஸவிதா தாதா பெரியபலமுள்ள விவஸ்வான் த்வஷ்டா பூஷா இந்த்ரன் விஷ்ணுஎன்ற இந்தப்பன்னிரண்டு ஆதித்யர்களும் கஸ்யபரின்புத்ரர் களாகிறார்கள். நாஸத்யனென்றும் தஸ்ரனென்றும் அஸ்வினீதேவர் கள் இரண்டுபேர்கள். இவர்கள் எட்டாவதுப்ரஜாபதியான மார்த் தாண்டரின்புத்ரர்கள். த்வஷ்டாவின்புத்ரனும் பெரியயசஸுள்ளவ னும் காந்தியுள்ளவனுமான விஸ்வரூபன் அஜைகபாத் அஹிர்ப்புத்னி யன் விரூபாக்ஷன் ரைவதன் ஹரன் பஹுரூபன் தேவர்களுக்கு ஈச னான த்ரியம்பகன் ஸாவிதரன் ஜயந்தன் தோல்வியடையாதபினாகி என்றஇந்தப்பதினொருவரும் மூன்றுஉலகங்களுக்கும் ஈசர்களான ருத்ரர்களென்று சொல்லப்படுகிறார்கள். பெரியபாக்யம்பெற்ற எட்டு வஸுக்களும் முன்னமே சொல்லப்பட்டிருக்கிறார்கள். இவ்விதமான இந்தத்தேவர்கள் மனுப்ரஜாபதியினிடமிருந்து உண்டானவர்கள் தாம். அவர்கள் தேவர்களென்றும் பிதுருக்களென்றும் இரண்டு வகையுள்ளவர்களாக முன்பு கூறப்பட்டிருக்கிறார்கள். [2]தேவர்க ளின்கூட்டமானது தனித்தனியாக ரிபுக்களென்றும் மருத்துக்க ளென்றும் சொல்லப்படுகிறது. இவ்விதம் இந்த விஸ்வேதேவர்களும் அப்படியே அஸ்வினீதேவர்களும் சொல்லப்படுகிறார்கள். அந்தத் தேவர்களுள் ஆதித்யர்கள் க்ஷத்ரியர்களென்றும் அவ்வாறே மருத் துக்கள் வைஸ்யர்களென்றும் உக்ரமானதவத்திலிருக்கும் அஸ்வினீ தேவர்கள் சூத்ரர்களென்றும் கூறப்படுகிறார்கள் அங்கிரஸ்என்னும் தேவர்கள் ப்ராம்மணர்களென்று கூறப்படுகிறார்களென்பது நிச்சயம். இவ்விதம் எல்லாதேவர்களுக்குமுள்ள இந்தநான்குவர்ணங்களும் சொல்லப்பட்டன. இந்தத்தேவர்களைக் காலையில எழுந்திருந்து

---

1 'சதஸஹஸ்ராணிதை' என்பதுமூலம். 2 இங்கு அரைஸ்லோகம் விடப்பட்டது.

ஸ்தோத்ரம்செய்பவன் தன்னிடம் உண்டானதும் [1]பிறரால்செய்யப் பட்டதுமான எல்லாப்பாவத்திலிருந்தும் விடுபடுகிறான்.

அப்பா! யவக்ரீதர் ரைப்யர் அர்வாவஸு பராவஸு உசிக்கினுடைய புத்ரரான கக்ஷீவான் ஆங்கிரஸரானபலர் பர்ஹிஷத்தென்னும் மேதாதிதியின்புத்ரரான கண்வமுனி என்று மூன்றுஉலகங்களையும் படைக்கத்தக்க இந்தஏழுரிஷிகளும் கிழக்குத்திக்கிலிருக்கிறார்கள். உன்முசர் விமுசர் வீர்யமுள்ள ஸ்வஸ்த்யாத்ரேயர் ப்ரமுசர் இத்மவாஹர் பூஜ்யரானத்ருடவ்ரதர் மித்ராவருணர்களின்புத்ரரும் ப்ரதாபமுள்ளவருமான அகஸ்த்யர்ஆகிய இந்தப்ரம்மரிஷிகள்எப்பொழுதும் தென்திக்கிலிருக்கிறார்கள். உஷங்கு தௌம்யரானகவஷர் வீர்யமுள்ள பரிவ்யாதர் ஏகதர் த்விதர் த்ரிதர் அத்ரியின் புத்ரரும் கல்வியுள்ள ப்ரபுவுமானதுர்வாஸர் இந்தமஹாத்மாக்களான மஹரிஷிகள் மேற்குத்திக்கை அடைந்திருக்கிறார்கள். அத்ரி வஸிஷ்டர் மஹரிஷியான காஸ்யபர் கௌதமர் பரத்வாஜர் குசிககுலத்திலுண்டான விஸ்வாமித்ரர் மஹாத்மாவான ரிசீகரின்புத்ரரும் பூஜ்யருமானஜமதக்கி இந்த ஏழுரிஷிகளும் வடக்குததிக்கை அடைந்திருக்கிறார்கள். ஒவ்வொரு திக்கிலுமிருப்பவர்களும் தீக்ஷ்ணமானதேஜஸுள்ளவர்களும் உலகங்களைப்படைப்பவர்களும் மஹாத்மாக்களும் ஸாக்ஷீபூதர்களுமான இவர்களனைவர்களும் சொல்லப்பட்டார்கள். இவ்விதம் மஹாத்மாக்களான இந்தரிஷிகள் தனித்தனியே திக்குக்களிலிருக்கிறார்கள். இவர்களைக் கீர்த்தனம்செய்பவன் எல்லாப்பாவத்திலிருந்தும் விடுபடுகிறான். எந்தஎந்தத்திக்குக்களில இவர்களிருக்கிறார்களோ அந்த அந்தத்திக்கைச் சரணமடைந்தவன், எல்லாப்பாவங்களிலிருந்தும் விடுபடுகிறான்; அவ்விதமே க்ஷேமமுள்ளவனுமாகிறான்" என்று சொன்னார்.

---

1 'பிறருடையசேர்க்கையாலுண்டானது' என்பது பழையவுரை.

## [1]இருநூற்றெட்டாவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், யுதிஷ்டிரருக்கு ஸ்ரீவிஷ்ணுபகவானுடைய வராஹாவதாரத்தைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! ப்ராஜ்ஞர்களில்பெரியவரே! யுத்தத்தில உண்மையானபராக்ரமமுள்ளவரே! அழிவில்லாதவரும் ஈஸ்வரருமான ஸ்ரீவாஸுதேவரைப்பற்றிய மிகப்பெரிதானபராக்ரமத்தையும் அவர் முன்செய்தசெய்கையையும் முழுதும்கேட்க விரும்புகிறேன். புருஷர்களிற்சிறந்தவரே! அவையனைத்தையும் உள்ளபடி நீர் எனக்கு உபதேசிக்கவேண்டும். பெரியபலமுள்ளவரே! ப்ரபுவானவாஸுதேவர் எந்தக்கார்யத்தைநடத்தவேண்டி விலங்குகளின் ஜன்மத்தைஅடைந்து எவ்விதம் உருவத்தைத் தரித்திருந்தார்? அதைச்சொல்லவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"முன்காலத்தில வேட்டைக்குச்சென்றநான் மார்க்கண்டேயருடையஆஸ்ரமத்திலிருந்தேன்; அவவிடத்தில் ஆயிரக்கணக்காக உட்கார்ந்திருக்கும்ரிஷிக்கூட்டங்களைக் கண்டேன். பிறகு, அந்தரிஷிகள் எனக்கு மதுபர்க்கத்துடன் மர்யாதை செய்தார்கள். நான் அந்த மர்யாதையைப் பெற்றுக்கொண்டு ரிஷிகளைச் சந்தோஷிக்கச்செய்தேன். அவ்விடத்தில கஸ்யபரென்றமஹரிஷியால இந்தக்கதைசொல்லப்பட்டது. மனததிறகு மிகுந்தசந்தோஷத்தை உண்டுபண்ணத்தக்க சிறந்தஅந்தக்கதையை இப்பொழுது ஒரேமனத்துடன்கேள். முன்காலத்தில் தானவர்களுள் முக்யர்களும் கோபலோபங்களுள்ளவர்களும் பலத்தாலகொழுததவர்களுமான நரகன்முதலிய நூற்றுக்கணக்கான பெரிய அஸுரர்களும் அவ்விதமே யுத்தத்தில் மிகக்கொழுப்புள்ள மற்றுமுள்ளபலஅஸுரர்களும் தேவர்களுடைய மிக உத்தமமான அந்தஸம்பததில பொறுமையுள்ளவர்களாயிருந்தார்கள். அப்பொழுது மிகவும்பயஙகரர்களான நரகன்முதலிய அஸுரர்கள் தேவர்களை அடக்கவேண்டி ஹிரண்யாக்ஷனையடைந்து பெரியமுயறசி

---

1 இந்தஅத்யாயத்திற்கு அந்தாபூமிவிக்ரீடனமென்றுபெயர். 'ப்ராணிகளின்உள்ளத்தில் உலாவிக்கொணடிருக்கும் காமமுதலியவைகளை விலக்கத்தக்கஉபாயத்தை உபதேசிக்கும்காரணததால இப்பெயர்வந்தது' என்பது பழையஉரை. ஜலத்தினுள்ளேசென்ற பூமியைஎடுக்கவேண்டிச செய்த வராஹாவதாரமென்னும் லீலையைக கூறுவதால் இப்பெயர் வந்ததென்று பொருள்கொள்ளலாம்.

யைசெய்தார்கள். அப்பொழுது மிகவும்பயங்கரனான ஹிரண்யாக்ஷனனவன் லக்ஷம்வர்ஷங்கள் காற்றைப் புஜித்துக்கொண்டிருந்தான். பிறகு, ப்ரம்மதேவரிடமிருந்து சிந்திக்கத்தகாதனவும் ஒப்பற்றனவுமான வரங்களை நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் பெற்றான். அரசனே! பிறகு, தானவர்களால் பீடிக்கப்படுகிறவர்களும் ஆங்காங்கு துன்பப்படுகிறவர்களுமான தேவர்களும் அப்படியே தேவரிஷிகளும் ஸுகத்தையடையவில்லை. அந்தத்தேவர்கள் பூமியானது பயங்கரமான உருவமுள்ளவர்களும் பெரியபலமுள்ளவர்களுமான அஸுரர்களால் நிறைந்ததும் மிகுந்துன்பமுள்ளதும் பாரத்தால்பீடிக்கப்படுவதும் ஸந்தோஷமில்லாததும் துக்கமுள்ளதும் கடலில் மிகவும் முழுகுவதுமாயிருப்பதைக்கண்டார்கள். அப்பொழுது பூமிதேவியானவள் யாவற்றையுமெடுத்துக்கொண்டு பாதாளத்தில் வஸித்துக்கொண்டிருந்தாள். பிறகு, மூன்றுஉலகங்களும், எங்கும்பயிர்க்கூட்டங்களும் வேதாத்யயனமும் யாகமுமில்லாதவையாயின. பிறகு, தேவர்கள் மிகவும்பயந்து ப்ரம்மதேவரைநோக்கி, 'ப்ரம்மாவே! அஸுரர்களால் செய்யப்படும் துன்பத்தை நாங்கள் எப்படிப் பொறுப்போம்? பகவானே! இந்தப்பூமியானது ஹிரண்யாக்ஷனால் பிடிக்கப்பட்டது. ஜலமிருத்தலால் செல்லத்தகாத அவ்விடத்தில்செல்வதற்கு நாங்கள் திறமையுள்ளவர்களாயில்லை' என்ற இவ்வசனத்தைச்சொன்னார்கள். பூஜ்யரானப்ரம்மதேவரானவர் அந்தத்தேவர்களை நோக்கி, 'பெரியதேஜஸுள்ள இந்தஅகஸ்த்யரானவர் அந்தஜலத்தை வேகமாகக்குடிப்பார். அந்தரிஷியையே க்ருபையுள்ளவராய்ச் செய்துகொள்ளவேண்டும்' என்றுசொன்னார். அந்தத்தேவர்களும் அவ்விதமேசெய்கிறோமென்றுசொல்லிவிட்டு ஸந்தோஷத்துடன் அகஸ்த்யமுனிவரைநோக்கி, 'ப்ரம்மரிஷியே! உலகங்களை நீர் ரக்ஷிக்கவேண்டும். இந்தஜலத்தை நசிக்கும்படிசெய்யும்' என்றுசொன்னார்கள். பூஜ்யரானஅந்த அகஸ்த்யமுனிவர், 'அவ்விதமே ஆகட்டும்' என்று சொல்லிவிட்டு, ப்ரளயகாலத்திலுள்ள அக்னிக்குழப்பானகாந்தியுடன் மேகக்கூட்டத்தைத்யானம்செய்துகொண்டு க்ஷணத்தில் அந்தஜலத்தைக் குடித்தார். கடலானது வற்றும்படிசெய்யப்பட்டவுடன் ரிஷிச்ரேஷ்டர்களுடன்கூடியதேவர்கள்,ப்ரம்மதேவரைநமஸ்கரித்து,'ப்ரபுவே! அகஸ்த்யமுனிவரால் ஜலமானது சோஷிக்கும்படி செய்யப்பட்டது. திரும்பவும் நாங்கள் என்னசெய்யவேண்டுமென்பதைச் சொல்லவேண்டும்' என்றுகேட்டார்கள். ப்ரம்மதேவரானவர் அந்தத்தேவர்களை நோக்கி, 'இந்தவிஷயத்தில் என்னால் ஒருவிதி உண்டு

பண்ணப்பட்டிருக்கிறது. வரமும் பலமும் மதமும்நிறைந்தவர்களும் மிகவும்மூடர்களுமான அந்தஅஸுரர்கள், இந்த்ரியங்களுக்குப்புலப் படாதவரும் தேவர்களாலும் எதிர்க்கத்தகாதவரும் தேவருமான வராஹரூபமுள்ள ஸ்ரீவிஷ்ணுபகவானை அறிகிறார்களில்லை. இந்தப் பகவானனவர் எவ்விடத்தில் க்ரூரர்களும் அதமர்களுமான அந்த அஸுரர்கள் பூமியின்உள்ளிலிருந்துகொண்டு ஆயிரக்கணக்காக வஸி க்கிறார்களோ அவ்விடத்திற்கு வேகமாய்ச்சென்று (அவர்களைக்) கொல்லப்போகிறார்' என்றுகூறினர். அதைக்கேட்டுத் தேவஶ்ரேஷ் டர்கள் ஸந்தோஷித்தார்கள்.

பிறகு, பெரியதேஜஸுள்ள ஸ்ரீவிஷ்ணுவானவர் வராஹரூப த்தையடைந்து பூமிக்குள்புகுந்து அஸுரர்களை எதிர்த்துச்சென்றார். மனிதவடிவமல்லாத உருவத்தைக்கண்டவுடன், அஸுரர்களனைவரும் வேகமாய்ச்சேர்ந்துகொண்டு அலக்ஷ்யம்செய்து [1] காலத்தால் மோஹ மடைந்து நின்றார்கள். பிறகு, அந்தஅஸுரர்கள் அருகில்ஓடி வரா ஹத்தை ஸமமாய்ப்பிடித்தார்கள்; மிக்ககோபத்துடன் அந்தவரா ஹத்தை நான்குபுறத்திலும் பிடித்துஇழுத்தார்கள். ப்ரபுவே! அப் பொழுது பெரியசரீரமுள்ளவர்களும் பெரியவீர்யத்தாலும் பலத்தா லும்உயர்ந்தவர்களுமான அந்தஅஸுரஶ்ரேஷ்டர்கள் அந்தவராஹத் திற்கு ஒன்றையும்செய்யத் திறமையுள்ளவர்களாகவில்லை. பிறகு, அந்த அஸுரத்தலைவர்கள் வியப்பையும் அப்படியே பயத்தையும் அடைந்தார்கள். ஆயிரக்கணக்கான அவர்கள் தம்மை ஸந்தேஹ நிலையைஅடைந்ததாகவும் நினைத்தார்கள். பரதர்களில்மிகச்சிறந்த வனே! பிறகு, தேவர்களுக்குமேலானதேவரும் யோகரூபியும் யோக த்தைநடத்தும்ஸாரதியுமான அந்தப்பகவான் [2]தைத்யர்களையும் [3]தான வர்களையும் கலங்கச்செய்து அப்பொழுது யோகத்தையடைந்து பெரியகூச்சலையுண்டுபண்ணினார். அந்தஒலியால் எல்லாஉலகங்களும் பத்துத்திக்குக்களும் மிக்கஒலியுள்ளனவாயின. அந்தப்பெரியகூச்ச லின் ஒலியால உலகங்களுக்குக் கலக்கமுண்டாயிற்று. எல்லாத்திக் குக்களும்இந்த்ரன்முதலியதேவர்களும் மிகுந்தஸம்ரமமடைந்தார்கள். ஸ்தாவரமும் ஜங்கமமுமான உலகமானது அந்தஒலியால் அப் பொழுது மூர்ச்சையடைந்து சிறிதும்அசைவில்லாததாயிருந்தது. பிறகு, அந்தஅஸுரர்கள் அனைவர்களும் அந்தஒலியால் பயமடைந்

1 ஒருசொல் விடப்பட்டது.

2 திதியின்குமாரர்களான அஸுரர்கள்.

3 தனுவின்குமாரர்களான அஸுரர்கள்.

தவர்களும் ஸ்ரீவிஷ்ணுவின்தேஜஸால் மிகவும்மூர்ச்சையடைந்தவர்களும் உயிர்போனவர்களுமாகவே விழுந்தார்கள். பயந்த தேவர்களைப்பார்த்துப் பிதாமஹரான ப்ரம்மதேவர், 'ஓ! தேவஶ்ரேஷ்டர்களே! பயமடையாதீர்கள். யோகேஶ்வரரான அந்தப்பகவானனவர் வராஹரூபத்தையடைந்து கூச்சலிட்டுக்கொண்டு இங்குவருகிறார்' என்றுசொன்னார். இவ்விதம்சொல்லிவிட்டுப் பிறகு பிதாமஹரான ப்ரம்மதேவரும் தேவர்களும் ரிஷிகளும் முக்தியைஅடையவேண்டி ஸ்ரீவிஷ்ணுவை நமஸ்கரித்தார்கள். பிறகு, பெரியதேஜஸுள்ளவரும் வராஹரூபியுமான ஸ்ரீஹரியானவர் ப்ரம்மதேவரை ஸந்தோஷப்படுத்திவிட்டுப் பாதாளம்சென்று, தேவர்களுக்குவிரோதிகளான அஸுரர்களுடைய மாம்ஸங்களையும் மேதஸுகளையும் எலும்புக்கூட்டங்களையும் குளம்புகளால்பிளந்தார். பெரியயோகியும் உலகங்களைப் படைக்கிறவரும் உலகங்களுக்குஆதமாவுமான ஸ்ரீபத்மநாபரானவர் பெரிய அந்தச்சப்தத்தால் [1]ஸநாதனரென்றுகூறப்பட்டார். பிறகு, தேவர்களெல்லாரும் பிதாமஹரிடம் ஓடினர். அவரிடம்போய் உலகங்களுக்குப்பதியும் மஹாத்மாவுமான ப்ரம்மதேவரைநோக்கி, 'தேவரே! இந்தச்சப்தம் எவ்விதம் உண்டாயிற்று? ப்ரபுவே! இதை நாங்கள் அறியவில்லை. இது என்ன? இந்தச்சப்தமானது யாருடையது? இந்தச்சப்தத்தால் உலகமானது தடுமாறிநிற்கிறதே? அதனுடையதேஜஸால் தேவர்களும் அஸுரர்களும் மூர்ச்சையடைந்திருக்கிறார்களே?' என்றுகேட்டார்கள். ஓ! மஹாபாஹுவே! இவ்விதமிருக்கும்பொழுது வராஹரூபத்தையடைந்த ஸ்ரீவிஷ்ணுவானவர் மஹர்ஷிகளால் துதிக்கப்பட்டுக் கிளம்பினர். மிக்கதைர்யசாலிகளான ஹிரண்யாக்ஷனுக்கும் ஸ்ரீவிஷ்ணுவுக்கும் எல்லாவுலகங்களும் மிகவும்கலங்கக்காரணமும் சிறந்ததுமான யுத்தம்உண்டாயிற்று. பூமியின்உள்ளிலிருக்கும் ஹிரண்யாக்ஷனை ஸ்ரீஹரியானவர் கொன்றார். அதைக்கேட்டுப் பெரியதேஜஸுள்ள ப்ரம்மதேவரானவர் (தேவர்களைநோக்கி) இனிமையாகச் சொல்லத்தொடங்கினார்.

'அஸுரபதிகளைக்கொன்றுவிட்டுப் பெரியசரீரமுள்ளவரும் பெரியபலமுள்ளவரும் யோகிகளில்பெரியவரும் உலகங்களுக்கு ஆத்மாவும் உலகங்களைப்படைப்பவரும் எல்லாவுலகங்களுக்குமீஶ்வரரும் யோகியும் முனியும் ஆத்மாவுக்குஆத்மாவுமான தேவரானவர் இதோ இருக்கிறார். ஸ்திரமாயிருங்கள். எல்லா இடையூறுகளையும் விலக்

1 இங்கு, ஸநாதந: என்பது, 'ஸநாதநர் என்று ஆயிற்று' என்பது பழைய வுரை.

கத்தக்கவரும் அளவற்றகாந்தியுள்ளவருமான ஸ்ரீவாஸுதேவர் மிகச் சிறந்ததும் பிறரால்செய்யமுடியாததுமான இக்கார்யத்தைச்செய்து விட்டு இதோ இருக்கிறார். பெரியபாக்யம்பெற்றவரும் பெரிய காந்தியுள்ளவரும் பெரியயோகியும் புராணரும் புருஷர்களில்உத்த மருமான ஸ்ரீபத்மநாபரானவர் தம்உருவத்தையடைந்திருக்கிறார். தேவஸ்ரேஷ்டர்கள் தாபப்படவேண்டாம்; பயப்படவேண்டாம்; சோகப்படவேண்டாம். இந்தப்பகவானானவர், விதியும் பெருமை யுள்ளவரும் (உலகங்களுக்கு) நாசத்தைச்செய்யத்தக்க காலமுமாகி றார். உலகங்களைத்தரிக்கிறவரும் மஹாத்மாவுமான அந்தத்தேவ ரால் ஒருநாதம் விடப்பட்டது: மஹாபாஹுவான அத்தகைய இந் தப்பகவான் எல்லாவுலகங்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவரும் அழி வில்லாதவரும் தாமரைமலர்போன்றகண்களுள்ளவரும் எல்லாப்ரா ணிகளுக்கும் முதன்மையானவரும் ஈஸ்வரருமாகிறார்' என்றுசொன் னார்" என்றார்.

---

## இருநூற்றெண்பதாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் வாஸுதேவரின்பெருமையைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! ப்ராஜ்ஞர்களில் பெரியவரே! திரு ம்பவுமே மஹாத்மாவான கேசவருடைய மஹிமையை உண்மையாய் நீர் சொல்லவேண்டும். பாரதரே! இந்த ஸ்ரீவாஸுதேவரை இவ்விதம் பார்த்தும் கேட்டும் நான் த்ருப்தியடையவில்லை. மஹாபாஹுவே! ஆகையால், எனக்கு இதை நீர் சொல்லவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"அரசனே! பாவங்களைவிலக்குவதான ஸ்ரீவாஸுதேவருடைய இந்தக்கதையைக்கேள். முன்காலத்தில் நாரதர் எனக்குச் சொல் லியகதையை நான் உனக்குச் சொல்லுகிறேன். தேவரிஷியான நாரத ரானவர் முன்காலத்தில் ஸ்ரீஹரியினுடைய தத்வத்தை அறியவேண்டு மென்று சிந்தித்துக்கொண்டு சுபமும் திவ்யமுமான இமயமலையில் மூச்சுவிடாமலும் ஆஹாரமில்லாமலும் நன்றாகமனத்தையடக்கிக் கொண்டும் இந்த்ரியங்களைவென்றும் நூறுதேவவர்ஷம் ஸநாதனமான ப்ரம்மத்தை த்யானம்பண்ணிக்கொண்டிருந்தார். பிறகு, முனிஸ்ரே ஷ்டரான அந்தநாரதரைப்பற்றி ஆகாயத்தில் மேகத்தின்ஒலிபோலக்

கம்பீரமானதும் திவ்யமானதும் வெளியிலுள்ளதும், 'முனிஸ்ரேஷ்டர்களிலுத்தமனே! நீ எதற்காக த்யானத்தைஅடைந்துகொண்டிருக்கிறாய்? நான் உனக்கு ஞானத்தையோ தர்மமுதலியவற்றையோ அளிக்கிறேன். நீ என்னிடம் வேண்டிக்கொள்' என்றதுமான அசரீரிவாக்கானது உண்டாயிற்று. அதைக்கேட்டு அவர் ஆலோசித்துப் பரபரப்புள்ளமனமுள்ளவராகி, 'இது ஏதாயிருக்கலாம்?' என்று சிந்தித்து வேறான அந்தப்புருஷரைக்குறித்து, 'நீ யார்? நீ நடுவிலிருந்துகொண்டு என்னைப்பற்றி வார்த்தைசொல்லி அண்டத்தை பிளக்கிறாய். வேறுஉருவம் உனக்குக்காணப்படவில்லை. நீ இவ்விதமாயிருந்துகொண்டிருக்கிறாய்' என்றுசொன்னார். அந்தப்புருஷரானவர், திரும்பவும் அந்த நாரதமுனியைநோக்கி, 'நான், மிகப்பெரியவனான அனந்தன். மூடர்கள் என்னைஅறியமாட்டார்கள். ஞானிகள் மட்டில் என்னை அறிவார்கள்' என்றுசொன்னார். ஸ்ரீமானானநாரதமுனிவர் நமஸ்கரித்து வணக்கத்துடன் அந்தப்புருஷரைநோக்கி, 'நான் உம்மைத் தெரிந்துகொள்ளவிரும்புகிறேன். உம்முடையஉண்மையை எனக்கு உபதேசிக்கவேண்டும்' என்றுசொன்னார் அந்த நாரதருடைய அந்தவசனத்தைக்கேட்டபின் உலகபதியானவர் நாரதரைநோக்கி, 'ஞானத்தால என்னைத்தெரிந்துகொள். வேறுவிதமாகத் தெரிந்துகொள்ள உனக்குச் சக்திகிடையாது' என்றுசொன்னார். நாரதர், 'ஓ! அனந்தரே! உமமுடையஉருவத்தைத் தெரிந்துகொள்ளத்தக்க அந்தஞானம் எவ்விதமானது? நீர் என்னிடம் அனுக்ரஹமுள்ளவரானால் அதனை எனக்கு உபதேசிக்கவேண்டும்' என்றுகேட்டார். உலகபதியானவர், 'ஓ! முனியே! அந்தஉருவத்தைப்பற்றிய ஞானமானது வேற்றுமையில்லாததும் பெரியதும் [1]மங்களகரமும் சிறந்ததுமானது. அந்தஞானத்தைக்கொண்டு நீ உனக்குவேண்டிய ஸாதனததைத் தெரிந்துகொள். அந்தஞானமானது இவ்வுலகில் மறைந்துகொண்டிருக்கிறது. அது சத்தமானது. மற்றது பொய். முனிகளில்மிகச்சிறந்தவனே! சுருக்கமாய் இதுமுழுதும் உனக்குச் சொல்லப்பட்டது' என்றுசொன்னார். நாரதரானவர், 'லோககுருவே! உம்முடையஉண்மை எதுவோ அதை நீர் எனக்கு உபதேசிக்கவேண்டும். அழிவில்லாதவரே! உம்மைத்தெரிந்துகொள்ள விரும்புகிறேன். நீர் எவ்விதமாயிருக்கிறீர்?' என்றுகேட்டார். பிறகு, எல்லாப்பிராணிகளுக்கும்நாதரான பகவானானவர் சிரித்துக்கொண்டு மேகத்தின்ஒலிபோலக் கம்பீரமானவாக்கால், 'ஓ! முனியே! என

1 ஒருசொல விடபபட்டது.

க்கு வாயுமில்லை; செவியுமில்லை; நாவுமில்லை; மூக்குமில்லை; கண்ணுமில்லை; த்வக்குமில்லை; அவ்விதமிருக்கும்பொழுது சரீரமில்லாதநான் என்னைப்பற்றி எவ்விதம்சொல்லுவேன்?' என்றுசொன்னார். அதைத்தெரிந்துகொண்டு ஆச்சர்யமடைந்த நாரதமுனியானவர் அந்தஉலகபதியை நமஸ்கரித்து, 'முதலில நீர் உம்மைப்பற்றி, 'நான் அனந்தன்; மிகப்பெரியவன்; நான் பலவிதமாயிருப்பவன்' என்று ப்ரீதியுடன் எனக்குச்சொன்னது எப்படி?' என்றுகேட்டார். பகவானானவர் திரும்பவும் அந்தரிஷியைநோக்கி, 'ஓ! நாரத! உனக்கும்இந்திரியங்கள் இருக்கின்றன. நீ உன்ஆத்மாவைத் தெரிந்துகொள்ளத்திறமையுள்ளவனானால் இதை எனக்குச் சொல்லு. முனியே! உன்னுடையஆதமா உனக்கு அறியப்பட்டதாகுமானால் அதனால் என்னையும் நீ அறிவாய். நம்மிருவர்களுக்கும்ஸாதனமொன்றே' என்றுசொன்னா. இவ்விதம் சொல்லிவிட்டுத் தேவரானபகவான் பிறகு ஒன்றும்சொல்லாமலிருந்தார்.

அந்தநாரதமுனியும், 'இந்தப்ரபுவானவர் எங்கேபோனார்?'என்று நெடுநேரம் ஆச்சர்யமுள்ளவரும் வருத்தமுள்ளவரும் மிக்கமயக்கமடைந்தமனமுள்ளவருமானார். 'தேவரானபகவான், 'நான் அனந்தன்; மிகப்பெரியவன்' என்று என்னை நோக்கிச்சொன்னார். ஆகையால், எல்லாவற்றிலும் எது அனந்தமும் மிகப்பெரிதுமாயிருக்கிறதென்று நான் அறியவேண்டும். இந்தப்பூமியானவள் யார்? இவள் அனந்தையென்ற பெயருள்ளவளாயிருக்கிறாள். இந்தப்பூமியில் ப்ராணிகள்உண்டாகின்றனவும் லயிக்கின்றனவுமாயிருக்கின்றன. ஆகையால், அந்தப்பூமியானவள் நிச்சயமாய்ப் பெரியவள்தான். ஆகையால், இந்தப்பூமிதேவியைக் கேட்கிறேன். இந்தப்பூமியானவள் நிச்சயமாய் எனக்குச் சொல்லுவள்' என்று நிச்சயஞ்செய்தார். ஸ்ரீமானான அந்தநாரதமுனிவர் இவ்விதம் தமக்குள்நிச்சயம்செய்துகொண்டு பூதலத்தில ப்ரவேசித்துப பூமியை நமஸகரிதது, 'ஓ! பூமிதேவியே! நீ ஆச்சர்யமாயிருக்கிறாய்; பாக்யமுள்ளவளுமாயிருக்கிறாய். நீ பெரியவள். அழகுள்ளவளே! நீ எவ்விதமிருக்கிறாயோ அவ்விதமானஉன்னை இப்பொழுது நான் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்' என்று சொன்னார். அதைக்கேட்டுப் பூமிதேவியானவள், சிரித்துக்கொண்டு, 'ஓ! பராட்பமுனியே! நான் பெரியவளுமல்லேன். மிகப்பூஜ்யரே! அனந்தையுமல்லேன். எனக்குக்காரணமான கந்தஸ்வரூபத்தைக்கேளும்' என்றுசொன்னாள். பிறகு, நாரதமுனிவர் அந்தக்கந்தமென்னும்தத்வத்தை நமஸ்கரித்து இதைக்

கேட்டார். அது, 'எனக்குங்காரணமானஜலமானது என்னையும்விட மிகப்பெரிது' என்றுசொல்லிற்று. அந்தநாரதமுனிவர் ஸமுத்ரத்தினிடம்சென்று நமஸ்கரித்து, 'அழிவில்லாதஸமுத்ரமே! நீ ஆச்சர்யமாயிருக்கிறாய். நீ பாக்யமுள்ளவனும் மிகப்பெரியவனும் அனந்தனுமாயிருக்கிறாய், நீ எவ்விதமான உருவமுள்ளவன்? உன்னை நான் தெரிந்துகொள்ளவிரும்புகிறேன்' என்றுசொன்னார். நதிகளின்நாதனானஸமுத்ரமானது இவ்வசனத்தைக்கேட்டு நாரதமுனியை நோக்கி, 'எனக்குக்காரணமான ரஸஸ்வரூபமானது மிகவும் பெரிதென்று தெரிந்துகொள்ளும். வித்வானே! முனிவர்களில் மிகவும் பூஜ்யரே! ஆகையால், நீர் மிகப்பெரிதான அந்தரஸஸ்வரூபத்தைக் கேளும்' என்றுசொல்லிற்று. பிறகு, முனிவர் யோகசக்திக்குத் தக்கபடி அந்தஜலத்தின் காரணத்தைத் தெரிந்துகொண்டு ஜலத்தின் தத்வத்திலிருந்து ஜலரூபியானரஸத்தை நமஸ்கரித்து, 'அழிவில்லாத ரஸமே! நீ ஆச்சர்யமாயும் பாக்யமுள்ளதாயும் இருக்கிறாய். நீ மிகப்பெரிதும் அனந்தமுமாயிருக்கிறாய். நீ எவ்விதஉருவமுள்ளதென்று உன்னைக்கேட்க விரும்புகிறேன்' என்றுசொன்னார். பிறகு, ரஸஸ்வரூபமுள்ள அந்ததத்வமானது முனிவரைநோக்கி, 'ப்ராம்மணரே! எனக்குங் காரணமும் தேஜோரூபியுமான அக்னியைக் கேளும். மிகப்பூஜ்யரே! நான் மிகப்பெரிதுமல்லேன்; அனந்தமுமல்லேன்' என்று பலதரஞ்சொல்லிற்று. பிறகு, வியப்புற்றமனமுள்ளமுனியானவர் யஜ்ஞரூபியும் பூஜிக்கத்தக்கதான மும் எல்லாப்ராணிகளாலும் நமஸ்கரிக்கப்பட்டவருமான அக்னியை நமஸ்கரித்து, 'அழிவில்லாதவரே! நீர் ஆச்சர்யரும் பாக்யம்பெற்றவருமாயிருக்கிறீர். நீர் அனந்தரும் மிகப்பெரியவருமாயிருக்கிறீர். நீர் எவ்விதஉருவமுள்ளவரென்று உம்மைத்தெரிந்துகொள்ள விரும்புகிறேன்' என்றுகேட்டார். பிறகு, அக்னிபகவானானவர் சிரித்துக்கொண்டு முனிவரைநோக்கி, 'ப்ராம்மணரே! நான் மிகப்பெரியவனுமல்லேன். மிகச்சிறந்தவரே! அனந்தனுமல்லேன். முனிகளிற்சிறந்தவரே! எனக்குக் காரணமானரூபமெதுவோ அதைக்கேளும்' என்றுசொன்னார். பிறகு, பேசுகிறவர்களிற்சிறந்தவரான அந்தநாரதரானவர், யோகமுறைப்படியே அறியப்பட்ட அந்தரூபத்தில் ப்ரவேசித்து ரூபாத்மாவைநமஸ்கரித்து, 'அழிவில்லாதரூபாத்மாவே! நீ ஆச்சர்யமானவனும் பாக்யம்பெற்றவனுமாயிருக்கிறாய். நீ அனந்தனும் மிகப்பெரியவனுமாயிருக்கிறாய். நீ எவ்விதஉருவமுள்ளவனென்று உன்னைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்' என்றுகேட்ட

னர். ரூபாத்மாவானது சிரித்துக்கொண்டு அந்தமுனிவரைநோக்கி, 'ப்ராம்மணரே! வாயுவானது எனக்குக்காரணமாயிருக்கிறது. முனிகளிற்சிறந்தவரே! அதைக் கேளும். அந்தவாயுவானது என்னைவிடமிகப்பெரிதும் அனந்தமும் அதிகபலமுள்ளதும் சக்தியுள்ளதுமாயிருக்கிறது' என்று விடைஅளித்தது. முனிகளில்மிகச்சிறந்தவரும் யோகஸித்திபெற்றவரும் பெரியயோகியும் ஞானம் விசேஷஞானம்இவைகளின்கரையையடைந்தவரும் பூஜ்யருமான அந்தநாரதரானவர் வாயுவைநமஸ்கரித்து, 'அழிவில்லாதவாயுவே! நீ ஆச்சர்யமாயும் பாக்யம்பெற்றவனாயுமிருக்கிறாய். நீ அனந்தனும் மிகப்பெரியவனுமாயிருக்கிறாய். நீ எவ்வித உருவமுள்ளவனென்று உன்னைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்' என்றுகேட்டனர். பிறகு, வாயுவானது முனிகளிற்சிறந்தநாரதரைநோக்கி, 'பூஜ்யரே! இப்பொழுது எனக்குக்காரணமான ஸ்பர்சாத்மாவைக் கேளும். அது என்னைவிட மிகப்பெரிதும் அனந்தமும் சக்தியுள்ளதுமாயிருக்கிறது' என்று சொல்லிற்று. பிறகு, இந்த வாயுவின்வசனத்தைக்கேட்டு அந்தநாரதரானவர் ஸ்பர்சாத்மாவைநோக்கி, 'அழிவில்லாத ஸ்பர்சாத்மாவே! நீ ஆச்சர்யமுள்ளவனும் பாக்யம்பெற்றவனுமாயிருக்கிறாய். நீ அனந்தனும் மிகப்பெரியவனுமாயிருக்கிறாய். நீ எவ்வித உருவமுள்ளவனென்று உன்னைத்தெரிந்துகொள்ள விரும்புகிறேன்' என்று கேட்டனர். அந்த நாரதருடைய வசனத்தைக்கேட்டு ஸ்பர்சாத்மாவானது முனிவரைநோக்கி, 'ப்ராம்மணரே! நான் மிகப்பெரியவனுமல்லேன். மிகச்சிறந்தவரே! அனந்தனும் அல்லேன். முனிகளிற்சிறந்தவரே! என்னைவிட மிகப்பெரிதும் எல்லாவுலகங்களையும் வ்யாபித்ததும் அழிவில்லாததும் எனக்குக்காரணமுமான அந்த ஆகாசத்தைக் கேளும்' என்று சொல்லிற்று. வாக்யங்களைக்கேட்பதில் ஸமர்த்தரும் ஸ்ரீமானுமான நாரதரானவர் அந்தவசனத்தைக்கேட்டு ஆகாயத்தினருகிற்சென்று நமஸ்கரித்து அஞ்சலிசெய்துகொண்டு, 'அழிவில்லாதஆகாசமே! நீ ஆச்சர்யமும் பாக்யம்பெற்றவனுமாயிருக்கிறாய். நீஅனந்தனும் மிகப்பெரியவனுமாயிருக்கிறாய். நீ எவ்விதஉருவமுள்ளவனென்று உன்னைத்தெரிந்துகொள்ள விரும்புகிறேன்' என்று வினவினர். ஆகாசமானது சிரித்துக்கொண்டு அந்தமுனிஸ்ரேஷ்டரைநோக்கி, 'ஓ! ப்ராம்மணரே! நான் மிகப்பெரியவனல்லேன். சப்தமானது எனக்குக்காரணமாகிறது. முனிகளிற்சிறந்தவரே! அது என்னைக்காட்டிலும் மிகப்பெரிது. அதைக்கேளும்' என்று சொல்லிற்று. பிறகு, 'ஆகாயத்திற்புகுந்து உயிர்மெய்யெழுத்துக்களுடன்

கூடியதும் பலகாரணங்களால்அலங்கரிக்கப்பட்டதும் மிக்கரஹஸ்ய மும் (உலகத்திற்குக்) காரணமும் அழிவில்லாததும் வேதமென்று கூறப்படுவதுமான சப்தாத்மாவைக் கண்டார். கண்டு, 'அழிவில்லாத சப்தாத்மாவே! நீ ஆச்சர்யமும் பாக்யம் பெற்றதுமாயிருக்கிறாய். நீ அனந்தமும் மிகப்பெரிதுமாயிருக்கிறாய். நீ எவ்விதஉருவமுடை யாயென்று உன்னைக்கேட்க விரும்புகிறேன்' என்றுகேட்டனர். வேதாத்மாவானது முனிஸ்ரேஷ்டரானநாரதரைநோக்கி, 'முனிகளிற் சிறந்தவரே! என்னைக்காரணமாகக்கொண்டு ப்ரம்மதேவரானவர் யாவையும்அறிந்திருக்கிறார். நான் ப்ரம்மதேவரின் புத்திஸ்தானத்தை அடைந்திருக்கிறேன். ஆகையால், தாமரைமலரில்பிறந்தவரான ப்ரம்மாவானவர் என்னைவிட மிகப்பெரியவரும் பெரியபுத்தியுள்ள வருமாயிருக்கிறார். முனிகளிற்சிறந்தவரே! எல்லாக்காரணங்களுக் கும்காரணரான அந்தப்ரம்மதேவரைக் கேளும்' என்றுசொலலிற்று. பிறகு,முனிஸ்ரேஷ்டரானநாரதர் ப்ரம்மலோகம்சென்று ரிஷிஸ்ரேஷ் டர்களால் ஸேவிக்கப்படுகிறவரும் மஹாத்மாவும் திக்பாலர்களாலும் தேவக்கூட்டங்களாலும் ஸமுத்திரங்களாலும் நதிகளாலும் ஐந்து பூதங்களின் தத்துவங்களாலும் மலைகளாலும் கந்தர்வர்களாலும் அப்ஸரஸுகளாலும் ஜ்யோதிக்கூட்டங்களாலும் ஸ்துதிகளாலும் ஸ்தோமங்களாலும் க்ரஹங்களாலும் ஸ்தோபங்களாலும் வேதங்க ளாலும் [1] ஆராதிக்கப்படுகிறவரும் உலகங்களுக்குப்பதியும் பரத்தி னும்பரரும் நான்குமுகங்களால அலங்கரிக்கப்பட்டவரும் உலகங்க ளுக்குராஸ்வரரும் ஹிரண்யகர்ப்பருமான ப்ரம்மதேவரை நமஸ்க ரித்து வணக்கத்துடன் கைகட்டிநின்று அவரைநோக்கி, 'அழிவில் லாதப்ரம்மதேவரே! நீர் அச்சரியராயும் பாக்கியம்பெற்றவராயுமிருக் கிறீர். நீர் அனந்தரும் மிகப்பெரியவருமாயிருக்கிறீர். நீர் எவ்வித உருவமுள்ளவரென்று உம்மைத்தெரிந்துகொள்ள விரும்புகிறேன்' என்றுசொன்னார். அதைக்கேட்டு எல்லா உலகங்களுக்கும்பிதாம ஹரும் பூஜ்யருமான ப்ரம்மதேவரானவர் சிரித்துக்கொண்டு நாரத முனிவரைநோக்கிக் கர்மங்களுக்குமூலமான (அஜ்ஞானத்தை) விலக் கத்தக்க இவ்வசனத்தைச் சொல்லத்தொடங்கினார். 'ப்ராம்மணரே! நான் மிகப்பெரியவனுமல்லேன். மிகப்பூஜ்யரே! அனந்தனுமல்லேன். எனக்கும் எல்லாஉலகங்களுக்கும் பதியாயிருப்பவரும் மிகப்பெரிய வரும் எல்லாஉலகங்களையும் ரக்ஷிக்கிறவருமாயிருப்பவர் நந்தகோப ரின்குலத்தில் கோபகுமாரர்களால் சூழப்பட்டுக் கோபாலவேஷத்

1 இரட்டித்துவருதலால் இங்கு ஒருசொல் விடப்பட்டது.

துடன் இருக்கிறார். அவர் என் உருவத்தையடைந்து உலகங்களின் ஸ்ருஷ்டியைச்செய்கிறார். ஸ்ரீமானான அவர் ஈசானஉருவத்தையடைந்து ஸம்ஹாரிக்கிறார். இந்த ஸ்ரீவிஷ்ணுவானவர் தம்உருவத்துடனிருந்துகொண்டு எப்போதும் பரிபாலிக்கிறார். அந்தஹரியானவர் எனக்குக்காரணர். ஓ! முனிஸ்ரேஷ்டரே! அந்தஹரியைக் கேளும். அவர் அனந்தரும் மிகப்பெரியவருமாகிறார்' என்றுசொன்னார்.

பிறகு, ரிஷிகளில் பெரியவரும் பூஜ்யருமான நாரதரானவர் பிரம்மலோகத்திலிருந்து இறங்கி நந்தகோபரின்குலத்திலிருப்பவரும், உலகங்களுக்குப்பதியும், சிறுவர்களுக்குரிய விளையாட்டில் பற்றுள்ளவரும், கன்றுக்கூட்டங்களால்அலங்கரிக்கப்பட்டவரும், (அவைகளை) ஊட்டவிட்டபின் கட்டுகிறவரும், புழுதிகளால் அழுக்கடைந்தமுகமுள்ளவரும், சிறந்தவரும், ஓடுகிறவர்களும் நகைக்கிறவர்களும் கூத்தாடுகிறவர்களும் கையைக்கொட்டுகிறவர்களும் வேணுகானம் செய்கிறவர்களுமான பலபேர்களால் நான்குபுறத்திலும் சூழப்பட்டவருமான இந்தக்ருஷ்ணரூபியாயிருக்கும் விஷ்ணுபகவானைக்கண்டு நமஸ்கரித்து இந்தப்பகவானைநோக்கி, 'நீர் ஆச்சர்யரும் பாக்யம்பெற்றவருமாயிருக்கிறீர்; அனந்தரும் மிகப்பெரியவருமாயிருக்கிறீர்; (யாவற்றையும்) அறிகிறவரும் அழிவில்லாதவருமாயிருக்கிறீர். உம்மை எவ்விதஉருவமுள்ளவரென்று தெரிந்துகொள்ள விரும்புகிறேன்' என்றுகேட்டார். பிறகு, பகவானானவர் நகைத்து நாரதரைநோக்கிச் சொல்லத்தொடங்கினார். 'என்னைவிட மிகச்சிறந்தது ஒன்றும் இல்லை. எல்லாம் என்னிடத்தில் நிலைபெற்றிருக்கின்றன. என்னைவிட மிகப்பெரியது வேறொன்றுமில்லை. நானே மிகப்பெரியவன். ஆகாயத்திலிருந்துகொண்டும் முதலில் நானே உனக்குச்சொன்னேன். ஒருமனிதனும் என்னைஅறிகிறானில்லை. என்னுடையமாயையை மீண்டுசெல்வது கடினம். வேறிடத்தில்பற்றில்லாதபக்தியுள்ள யோகிகள் என்னை அறிகிறார்கள். நீ எனக்குப் பிரியனும் பக்தனுமாயிருக்கிறாய். நீ என்னுடையதத்வத்தைப் பார். எந்தஞானத்தால் தத்வத்தைஅறிவாயோ அந்தஞானத்தை உனக்கு அளிக்கிறேன். [1] என்னைஅறிய உபாயமானயோகத்தில் பற்றுள்ளமனமுடையவர்களும் பக்தியுள்ளவர்களுமான மற்றவர்களுக்கும் திவ்யஜ்ஞானத்தைக் கொடுக்கிறேன். அந்தஞானத்தால் அவர்கள் என்னுடையபதத்தை அடைகிறார்கள்' என்றுசொன்னார். இவ்விதம்சொல்லிவிட்டு, ஸ்ரீ ஹரியானக்ருஷ்ணபகவான் நந்தகோபருடையவீட்டில் சேர்ந்தார்.

[1] ஒரு ச்லோகம் விடப்பட்டது.

அரசனே! மிகஉத்தமமான விஷ்ணுவின் இந்தத்தத்வம் உனக்குச் சொல்லப்பட்டது. மிக்கபூஜ்யனே! நீ, 'ஸ்ரீக்ருஷ்ண!' என்றுஜபித்துக்கொண்டு நீண்டகண்களுள்ள இந்தப்பகவானைப் பஜனம்பண்ணு. என்னையும் அவ்வாறே உன்னையும் மோகிக்கும்படிசெய்துகொண்டு இந்தப்பகவான் என்னால் சொல்லப்படுகின்றவைகளைக் கேட்கிறார். மஹாபாஹுவே! தர்மாத்மாவான பகவான் பக்தர்களை ரக்ஷிக்கிறார். (இதில்) வேறுவிதமில்லை" என்று சொன்னார்.

---

## இருநூற்றுப்பத்தாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(ஸ்ரீ விஷ்ணுவானவர், மனிதன் மரணகாலத்தில் ஜபிக்கத்தக்க மந்திரத்தை நாரதருக்கு உபதேசித்தது.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! ப்ராஜ்ஞர்களிற்பெரியவரே! எல்லாச்சாஸ்திரங்களிலும் ஸமர்த்தரே! தத்வத்தைவிசாரிப்பவர்களும் மோக்ஷத்தை விரும்புகிறவர்களுமாயிருப்பவர்களுக்கு மரணகாலத்தில் ஜபிக்கவேண்டியது எது? குருக்களில்மிகச்சிறந்தவரே! மரணகாலம் வரும்பொழுது எதைநினைப்பவன் உத்தமமான ஸ்திதியைப் பெறுவான்? இதை உண்மையாய்க் கேட்கவிரும்புகிறேன்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"குற்றமற்றவனே! உன்னால் கேட்கப்பட்ட கேள்வியானது நுணுக்கமானதும் நன்மையானதும் உனக்குத்தகுதியானதுமாயிருக்கிறது. அரசனே! முன்காலத்தில் நாரதரால்கேட்கப்பட்டதைக் கவனத்துடன்கேள். நாரதரானவர் முன்காலத்தில் ஸ்ரீவத்ஸம்என்ற அடையாளமுள்ளவரும் உலகத்திற்குக்காரணரும் உலகத்திற்கு ஸாக்ஷியும் அழிவில்லாதவரும் தேவருமான ஸ்ரீநாராயணரைக் கேட்கத்தொடங்கினார். 'அழிவில்லாததும் ப்ரகிருதியைவிடவேறானதும் குணங்களில்லாததும் உத்தமமானபதமும் ப்ரம்மதேவருக்குக் காரணமான தாமரைமலருக்கு உற்பத்திஸ்தானமுமான பரப்ரம்மத்தைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்று சொல்லுகிறார்கள். சென்றவைகளுக்கும் வருபவைகளுக்கும் ஈசரான பகவானே! நம்பிக்கையுள்ளவர்களும் இந்திரியங்களைவென்றவர்களும் பக்தியுள்ளவர்களும் மோக்ஷத்தை விரும்புகிறவர்களுமான யோகிகளால் நீர் எவ்விதம் த்யானம்பண்ணத்தக்கவராகிறீர்? மனிதன் ஒவ்வொருநாளும் காலை

யில்எழுந்திருந்து எந்தஜபத்தைஜபிக்கவேண்டும்? பெரியதேஜஸுள்ளவரே! மரிக்கும்பொழுது விசேஷமாய் எதை ஸ்மரிக்கவேண்டும்? ஸமாதியிலிருந்துகொண்டு எவ்விதம் த்யானம்செய்யவேண்டும்? ஸநாதனமானதத்வத்தை நீர் சொல்லவேண்டும்' என்று கேட்டார். நாரதர்சொல்லியதைக்கேட்டு, தேவர்களுக்குநாசரும் வரங்களை அளிபவரும் பிரபுவுமான ஸ்ரீவிஷ்ணுபகவான் அவரைநோக்கிச் சொல்லத்தொடங்கினர்.

'மனிதன் மரணகாலத்தில் எதைஜபித்து என்னுடையரூபத்தையடையத்தக்கவனாகிறானோ அந்தத்திவ்யமான அனுஸ்ம்ருதியை இப்பொழுது உனக்குச்சொல்லுகிறேன். நாரத! முதலில் ஓங்காரத்தையுச்சரித்துப் பிறகு என்னை நமஸ்கரித்து ஓரேமனமுள்ளவனும் பரிசுத்தனுமாயிருந்துகொண்டு, 'ஓம் நமோபகவதேவாஸுதேவாய' என்னும் இந்தமந்திரத்தை ஜபிக்கவேண்டும்' என்றுசொன்னர். இவ்விதம்சொல்லக்கேட்டநாரதரானவர்நமஸ்கரித்து அஞ்சலிசெய்து கொண்டு எல்லாத்தேவர்களுக்கும்நாசரும் வ்யாபகரும் ஸர்வாத்மாவும் ப்ரபுவுமான ஸ்ரீஹரியைநோக்கிச் சொல்லத்தொடங்கினர். 'அழிவில்லாதவரும் சாஸ்வதரும் உலகங்களைப்படைக்குந்தேவரும் புருஷர்களில்உத்தமரும் குறைவில்லாதவரும் பரமபதரூபியுமான ஸ்ரீஹரியை அஞ்சலிசெய்துகொண்டு சரணமடைகிறேன். புராதனரும் ப்ரபுவும் அழிவில்லாதவரும் உலகங்களுக்குஸாக்ஷியும் தாமரைக்கண்ணரும் அடியார்களுக்கன்பரும் நாசருமான ஸ்ரீவிஷ்ணுவைச் சரணமடைகிறேன். உலகங்களுக்குநாதரும் ஆயிரம்கண்களுள்ளவரும் ஆச்சர்யரும் பரமபதரூபியும் சென்றதுவருவதுநிகழ்வது இவைகளுக்குப்ரபுவுமான ஸ்ரீவிஷ்ணுபகவானை நான் சரணமடைகிறேன். எல்லாஉலகங்களையும் படைப்பவரும் முடிவில்லாதவரும் எல்லாவிடத்திலும்முகமுள்ளவரும் இந்த்ரியங்களுக்குநாசரும் உண்மைப்பொருளும் அழிவில்லாதவருமான ஸ்ரீபத்மநாபரைச் சரணமடைகிறேன். ஹிரண்யகர்ப்பரும் பூசர்ப்பரும் அம்ருதரும் பரத்திலும் பரரும் ப்ரபுவுக்கும்ப்ரபுவும் ஆதியுமந்தமுமில்லாதவரும் ஸூர்யனுடைய ஒளிபோன்றஒளியுள்ளவருமான அந்தஹரியைச் சரணமடைகிறேன். ஆயிரம்தலையுள்ளவரும் மஹாரிஷியும் உண்மையாய்ப்பாவிக்கப்படுகிறவரும் ஸூக்ஷ்மரும் அசைவற்றவரும் சிறந்தவரும் அபயமளிப்பவருமான புருஷரைச் சரணமடைகிறேன். புராணரிஷியும் யோகரூபியும் ஸநாதனரும் எல்லாதத்வங்களுக்கும் இருப்பிடமும் நிலைபெற்றவரும் நாசருமான நாராயணரைச் சரணமடைகிறேன்.

எவர் எல்லாப்ராணிகளுக்கும் ப்ரபுவோ, எவரால் இவ்வுலகெல்லாம் வ்யாபிக்கப்பட்டிருக்கிறதோ மேலானவர்களுக்கும் கீழானவர்களுக்கும் குருவும் தேவருமான அந்தவிஷ்ணுபகவான் எனக்கு அனுக்ரஹம்செய்யவேண்டும். ஸனாதனரும் தாமரைமலரைக்காரணமாகக் கொண்டவருமான ப்ரம்மதேவர் எவரிடமிருந்து உண்டானாரோ ப்ரம்மதேவருக்குக் காரணரும் விஸ்வரூபியுமான அந்தவிஷ்ணுபகவான் எனக்கு அனுக்ரஹம்செய்யவேண்டும். முன்பு ப்ரளயம்வந்தபொழுது ஸ்தாவரங்களும் ஜங்கமங்களும் நாசமடைந்து ப்ரம்மாமுதலானவர்கள் லயமடைந்து மேலானதும் கீழானதுமான உலகம்நாசமடைந்து ஐந்துபூதங்கள்வரையிலுமுள்ள உலகத்திற்கு அழிவுண்டானபொழுதும் ப்ரகிருதிஸம்பந்தமில்லாதவரும் மஹானும் விஸ்வரூபியுமான எந்தப்பகவான் ஒருவராயிருந்தாரோ அந்தவிஷ்ணுவானவர் எனக்கு அனுக்ரஹம் செய்யவேண்டும். [1]நான்குகளாலும் நான்குகளாலும் இரண்டுகளாலும் ஐந்துகளாலும் திரும்பவும்இரண்டுகளாலும் எவர் ஹோமம்செய்து த்ருப்திசெய்விக்கப்படுகிறாரோ அந்த விஷ்ணுவானவர் எனக்கு அனுக்ரஹம்செய்யவேண்டும். பர்ஜன்யரூபியும் பூமியும் ஔஷதியும் காலமும் தர்மமும் க்ரியையும் அக்ரியையும்குணங்களுக்கு இருப்பிடமுமான அந்தப்பொன்வர்ணமுள்ள வாஸுதேவரானவர் எனக்கு அனுக்ரஹம்செய்யவேண்டும். அக்னி சந்த்ரன் ஸூர்யன் நக்ஷத்திரங்கள் ப்ரம்மா ருத்ரர் இந்த்ரன் யோகிகள் இவர்களுடைய ஒளிகளை எவர் விளங்கச்செய்கிறாரோ அந்தவிஷ்ணுவானவர் எனக்கு அனுக்ரஹம்செய்யவேண்டும். யோகங்களுக்கு ஸ்தானமாயிருப்பவரே! எல்லாவற்றிற்கும் ஸ்தானமாயிருப்பவரே! வரமளிப்பவரே! உமக்கு நமஸ்காரம். ஓ! யஜ்ஞகர்ப்பரே! ஹிரண்யாங்கரே! [2]ஐந்து யஜ்ஞரூபியே! உமக்கு நமஸ்காரம். [3]நான்குமூர்த்தியுள்ளவரே! பரந்தாமரே! லக்ஷ்மீநிவாஸரே! பெரியோர்களால்பூஜிக்கப்பட்டவரே! எல்லாவற்றிற்குமிருப்பிடமானவரே! ப்ரதானத்தையுண்டுபண்ணினவரே! வாஸுதேவரே! உமக்கு நமஸ்காரம். பிறப்பில்லாதவரும் துன்பமில்லாதமார்க்கரூபியும் மூர்த்தியில்லாதவரும் உலகத்தைத் திருமேனியாகவுடையவருமானவரே! விசித்திரமான உலகங்களைப்

1 ஆஸ்ராவய, அஸ்துஸ்ரௌஷட், யஜ, யேயஜாமஹே, வஷட் என்ற மந்த்ரங்களை இவ்விடத்தில் முறையே பொருள்களாகக்கொள்க.

2 தேவயஜ்ஞம், பித்ருயஜ்ஞம், மனுஷ்யயஜ்ஞம், ப்ரம்மயஜ்ஞம், பூதயஜ்ஞம் என்பன.

3 ஸங்கர்ஷணர் ப்ரத்யும்னர் வாஸுதேவர் அநிருத்தர்.

படைப்பவரே! [1]ஐந்துகாலங்களையும்அறிந்தவரே! ஞானக்கடலே! உமக்கு நமஸ்காரம். காணப்படும் உலகமானது அவ்யக்தத்திலிருந்து பிறப்படைந்திருக்கிறது. அந்தஅவ்யக்தத்தைவிட எவர் மேலானவரும் அழிவில்லாதவருமாயிருக்கிறாரோ எவரைவிட வேறு பரமில்லையோ அவரை நான் சரணமடைந்தவனாயிருக்கிறேன். ப்ரதானமல்லாதவரும், மஹானும், அறிவுள்ளவனும் உத்பத்தியில்லாதவனுமான [2]புருஷனலலாதவரும், இவ்விரண்டிறகும் மிகவும்மேலானவருமாய் எவர் இருக்கிறாரோ அவரைச் சரணமடைந்தவனாகிறேன். ப்ரம்மா ஈசானர்முதலியவர்கள் எந்தப்ரபுவைப்பற்றி எப்பொழுதும் சிந்திப்பவர்களாயிருந்தும் நிச்சயத்தைத்தெரிந்துகொள்ளவில்லையோ அவரைச்சரணமடைந்தவனாகிறேன். இந்தரியங்களைவென்றவர்களும் ஞானத்தையும் த்யானத்தையும் மிகப்பெரியனவாகக்கொண்டவர்களுமான மஹாத்மாக்கள் எவரையடைந்து திரும்புகிறார்களில்லையோ அவரைச்சரணமடைந்தவனாகிறேன். எந்தப்ரபுவானவர் உலகமனைத்தையும் தமது ஓர்அம்சத்தால வ்யாபித்துக்கொண்டிருக்கிறாரோ அறியத்தகாதவரும் குணங்களில்லாதவரும் நித்யருமான அந்தப்ரபுவைச் சரணமடைந்தவனாகிறேன். எவர் சந்த்ரன் ஸூர்யன் அக்னிஎன்ற தேஜோரூபியாயும்நக்ஷத்ரமென்றதேஜோரூபியாயும்ஆகாயத்திலவிளங்குகிறாரோ அந்தமஹாத்மாவானவர் அனுக்ரஹிக்கவேண்டும். குணங்களுக்குஆதியும் குணமில்லாதவரும் முதலிலிருப்பவரும் லக்ஷ்மியுடன்கூடியவரும் உத்பத்தியிலலாதவரும் அறிவுள்ளவரும் ஸூக்ஷமரும் எல்லாவிடத்திலுமிருப்பவரும் யோகியுமான அந்தமஹாத்மாவானர் அனுக்ரஹிக்கவேண்டும். ஸாங்க்யர்களும் யோகிகளும் மற்றுமுள்ளஸித்திபெற்றபெரியரிஷிகளும் எவரை அறிந்து முக்திஅடைகிறார்களோ அந்தமஹாத்மாவானவர் அனுக்ரஹிக்கவேண்டும். இந்தரியங்களுக்குபபுலப்படாதவரும் நியந்தாவும் சிந்தைக்குளடடாதவரும் கார்யகாரணங்களைவிட வேறானவரும் (ஓரிடத்திலும்) இருப்பில்லாதவரும் ப்ரக்ருதியைவிடமிகச்சிறந்தவருமானஅந்தமஹாத்மாவானவர் அனுக்ரஹிக்கவேண்டும். எவர் க்ஷேத்ரஜ்ஞராயிருந்துகொண்டு ஐந்து (இந்திரியங்களென்ற) முகங்களால்ஐந்துவிதமாய் ப்ரக்ருதியை அனுபவிக்கிறாரோ, மஹானானஎவர குணங்களையுமனுபவிக்கிறாரோ அந்த மஹாத்மாவானவர் அனுக்ரஹிக்கவேண்டும். ஸூர்யனுடையமத்

[1] அத்யதனம்அனத்யதனம்என்று இறந்தகாலம்இரண்டு, நிகழ்காலம் ஒன்று, அத்யதனம்அனத்யதனம்என்று வருங்காலம்இரண்டு ஆக ஐந்து.

[2] ஜீவன்.

தியில் சந்த்ரனிருக்கிறான். அந்தச்சந்த்ரனுடையநடுவில் ஐந்துபூதங்களைவிட வேறான எந்தத்தேஜஸ்விளங்குகிறதோ அந்தத்தேஜோரூபியான மஹாத்மா அனுக்ரஹிக்கட்டும். ஓ! ஸர்வரூபியே! எல்லாவிடத்திலும் கண்களும் தலைகளும் முகங்களுமுள்ளவரே! எல்லாவிடத்திலும் உமக்கு நமஸ்காரம். விகாரமில்லாதவரே! உமக்கு நமஸ்காரம். நீர் ஸாக்ஷியும் க்ஷேத்ரமென்றசரீரத்தில நிலைபெற்ற இருட்புள்ளவருமாயிருக்கிறீர். இந்த்ரியங்களின் வழியைக்கடந்த உருவமுள்ளவரே! உமக்கு நமஸ்காரம். நீர் காணப்படும் அடையாளங்களால் அறியப்படுகிறவரல்லீர். உம்மை எவர்கள் அறியவில்லையோ அவர்கள் ஸம்ஸாரத்தில் ஸஞ்சரிப்பார்கள். காமத்திலிருந்தும்கோபத்திலிருந்தும் விடுபட்டவர்களும் நேசமும் பகையுமற்றவர்களும் பக்தர்களைப்பூஜிப்பவர்களும் மறுபிறப்பில்லாதவர்களுமான ப்ராம்மணர்கள் உம்மை அறிகிறார்கள். ஏகாந்தபக்தியுள்ளவர்களும்ஸுகம் துக்கமுதலிய த்வந்த்வங்களிலிருந்து விடுபட்டவர்களும் நிஷ்காமமாய்க்கர்மங்களைச் செய்கிறவர்களும் ஞானத்தீயால கர்மங்களை எரித்தவர்களும் விசேஷமாய் த்யானம்செய்கிறவர்களுமாயிருப்பவர்கள் உம்மை அடைகிறார்கள். சரீரத்திலிருப்பவரும் சரீரமில்லாதவரும்எல்லா ப்ராணிகளிடத்திலும் ஸமமாயிருப்பவருமானஉம்மைப் புண்யபாவங்களிலிருந்துவிடுபட்டவர்களான பக்தர்கள் அடைகிறார்கள். மாயையும் புத்தியும் அஹங்காரமும் மனமும் ஐந்துபூதங்களும் இந்திரியங்களும் உம்மிடத்திலிருக்கின்றன. அவைகளில நீர் இருக்கின்றீர். (உண்மையில்) அவைகளில நீர் இல்லை. அவைகளும் உம்மிடத்தியிலலை. எவர்கள் ஐக்யத்தையும் பேதத்தையும் பலவாயிருத்தலையும் தெரிந்துகொள்ளுகிறார்களோ அவர்கள் பரத்தைதயடைகிறார்கள். நீர் எல்லாப்பிராணிகளிடத்திலும் ஸமமாயிருக்கிறீர்.உமக்குப்பகையுள்ளவனுமில்லை. நேசமுள்ளவனுமில்லை. நான் மனம்வேறிடத்தில்செல்லாத பக்தியுடன் ஸமமாயிருக்குந்தன்மையை விரும்புகிறேன். ஸ்தாவரமும் ஜங்கமுமான இந்தஉலகம்யாவும் நான்குவிதமானப்ராணிக்கூட்டமும் உம்மால் (உண்டுபண்ணப்பட்டு)நூலில்மணிக்கூட்டங்கள் போல அவை உம்மிடத்திலேயே கோக்கபட்டிருக்கின்றன. நீர் படைக்கிறவரும் புஜிக்கிறவரும் கூடஸ்தரும் அதத்வமும் தத்வமென்று பெயருள்ளவருமாயிருக்கிறீர். அகர்த்தாவும் காரணரும் அசைவில்லாதவரும் சரீரத்தில்வேறானவருமாயிருக்கிறீர். உமக்குப் பூதங்களில் ஸம்பந்தமில்லை. நீர் பூதங்களென்றபொருள்களின்குணங்

களைவிட மேலானவர். அஹங்காரத்துடனும் புத்தியுடனும் மூன்று குணங்களுடனும் உமக்கு ஸம்பந்தமில்லை. மோக்ஷத்திற்குரிய தர்மமுமில்லை. முயற்சியுமில்லை. பிரவிருத்தியுமில்லை. எங்குமிருப்பவரே! ஜராமரணங்களிலிருந்து விடுபடவேண்டி உம்மைச் சரணமடைந்திருக்கிறேன். ஓ! ஜகந்நாதரே! நீர் ஈஸ்வரராயிருக்கிறீர். ஆகையால், சிறந்தவரென்று கூறப்படுகிறீர். தேவரே! தேவர்களுக்கீசரே! பக்தர்களுக்கு எது ஹிதமோ அதை நீர் சிந்திக்கவேண்டும். விஷயங்களுடனும் இந்தரியங்களுடனும் எனக்குத் திரும்பவும் சேர்க்கை வேண்டாம். மணமானது பூமியையடையட்டும். அவ்விதம் ரஸமானது ஜலத்தையடையட்டும். ரூபமானது அக்னியையடையட்டும். ஸ்பர்சமானது வாயுவையடையட்டும். சப்தமானது ஆகாயத்தை அடையட்டும். மனமானது அஹங்காரத்தையடையட்டும். இந்தரியங்களும் தம்தம்காரியங்களிற் செல்லட்டும். பூமியானது ஜலத்தை அடையட்டும். ஜலம் அக்னியையும், அக்னி வாயுவையும், வாயு ஆகாயத்தையும், ஆகாயம் மனத்தையும்அடையட்டும்.எல்லாப்ராணிகளுக்கும் அவிவேகத்தையுண்டுபண்ணும் மனமானது அஹங்காரத்தை அடையட்டும்.ஓ! அச்சுதரே! பிறகு, அஹங்காரமானது புத்தியையும் புத்தியானது ப்ரதானத்தையும் அடையட்டும். ப்ரதானமானது தன் நிலையையடைந்து குணங்களின் ஸமமானநிலையில்இருக்கும்போது எல்லாஇந்திரியங்களிலிருந்தும் குணங்களிலிருந்தும் பூதங்களிலிருந்தும் நான் விலகுவேன். (உலகங்களுக்குப்) பிதாவே! [1]ப்ரகிருதிஸம்பந்தமற்றதான உமது பரமபதத்தை நான் விரும்புகிறேன். எனக்கு உம்முடன் ஏகிபாவமுண்டாகட்டும். எனக்குத் திரும்பவும் பிறப்பு வேண்டாம். உம்மிடத்தில் புத்தியுள்ளவனும் உம்மிடத்தில்சென்ற ப்ராணனுள்ளவனும் உம்மிடத்தில் பக்தியுள்ளவனும் உம்மைமிகமுக்யமாகக்கொண்டவனுமான நான் மரணம்வரும்பொழுது உம்மையே நினைக்கவேண்டும். முன்சரீரத்தால் ஸம்பாதிக்கப்பட்ட நோய்கள் என்னை அடையட்டும். துக்கங்களும்துன்பப்படுத்தட்டும். என்னுடையகடன் என்னை விடவேண்டும்.தேவர்களுக்கீசரே!உம்மைத்தியானிக்கிறேன். எனக்குத் திரும்பவும் பிறவிவேண்டாம். ஆகையால், கர்மங்களென்ற கடனானது எனக்கு வேண்டாமென்று சொல்லுகிறேன். முன்பிறவியில் சேர்க்கப்பட்டவ்யாதிகள்யாவும் என்னை வந்து

1 'நிஷ்கேவலம்' என்பது மூலம்.

1 அடையட்டும். நான் கடனில்லாதவனுகி ஸ்ரீ விஷ்ணுவின் அந்தப் பரமபதத்தை அடையவிரும்புகிறேன்' என்று சொன்னுர்.

ஸ்ரீபகவான் சொல்லத்தொடங்கினர். 'ஐந்துகர்மேந்த்ரியங்களையும் ஐந்துஞானேந்த்ரியங்களையும் நன்ருய் அடக்கிப் பத்துஇந்திரியங்களையும் மனத்திலும் மனத்தை அஹங்காரத்திலும் அஹங்காரத்தைப் புத்தியிலும் புத்தியை ஆத்மாவிலும் எவன் லயிக்கச்செய்கிருனே பூஜ்யனை அந்தப்புருஷனுக்கு நானும் எனக்கு அவனும் எப்பொழுதுமிருக்கிறவர்களாகிறேம். நான் அவனுக்குக் காணுமல் போகிறவனல்லேன். அவனும் எனக்குக் காணுமல் போகிறவனல்லன். புத்தியையும் பொறிகளையும் அடக்கிக்கொண்டு பார்க்கவேண்டும். பரத்திலும் பரமானபொருளைப் புத்தியால் அறிந்துகொள்ளவேண்டும். இவ்வுலகமெல்லாம்வியாபித்திருக்கிற நான் எவனுக்கு, 'இவர் என்னுடையவர்' என்று புலப்படுகிறேனே அவன் தன்புத்தியால் ஆத்மாவில்பற்றுதலடைந்து பரமாத்மாவைநினைப்பான். பிறகு, புத்தியையும்விட மேலானஸ்வரூபத்தை அறிந்து திரும்பவும் பிறவியை அடையமாட்டான். மரணஸமயம்வரும்பொழுது எவன் என்னை இவ்விதம்நினைக்கிருனே அவன் பாவமானஒழுக்கமுள்ளவனுனாலும் சிறந்தகதியைப் பெறுவான். விஷ்ணுவைப்பற்றியதும் திவ்யமுமான 'ஓம்நமோபகவதேதஸ்மை தேவாநாம்பரமாத்மநே;நாராயணய பக்தாநாம் ஏகநிஷ்டாய சாஸ்வதே' என்கிற இந்த அநுஸ்ம்ருதியை, படுத்திருந்தாலும் எழுந்திருந்தாலும் மிகவும்கவனத்துடன் படிக்கவேண்டும்; எங்கிருந்தாலும் நன்ருய் அப்யஸிக்கவேண்டும். பௌர்ணமாஸியிலும் அமாவாஸ்யையிலும் துவாதசியிலும் விசேஷமாகப்படிக்கவேண்டும். ஸ்ரத்தையுள்ளவர்களான என்னுடைய பக்தர்களையும் விசேஷமாகக்கேட்கும்படி செய்யவேண்டும். அவ்விதமனிதன் யாகம் தானம் தவம் என்றகர்மங்களை அஹங்காரத்தையடைந்துசெய்தாலும் அதன்பயனையும் மறுபிறவியையும் அடையமாட்டான். பித்ருக்களையும் தேவர்களையும் பூஜிப்பவனும் ஜபிப்பவனும் ஹோமம்செய்கிறவனும் பலியைக்கொடுக்கிறவனும் அக்னியை ஜ்வாலைசெய்கிறவனுமான எவன் என்னைநினைக்கிருனே அவன் சிறந்தகதியையடைவான். பிராணிகளுக்கு யாகமும் தானமும் தவமும் பரிசுத்தமானவை; ஆகையால், ஆசையற்றவனுகி யாகத்தையும் தானத்தையும் தவத்தையும் செய்யவேண்டும். ஓ! நாரத! சிரத்தையுள்ளவனும் என்னுடைய

1 இங்கு ஒருசொல் விடப்பட்டது.

பக்தனுமான எவன் நமஸ்காரமென்றுமட்டில், சொல்லுகிருனே சண்டாளனுனாலும் அவனுக்கு அழிவில்லாதஉலகம்உண்டாகும். ஸ்ர த்தையுள்ளவர்களும் அடங்கிய மனமுள்ளவர்களும் என்னை அடுத்த வர்களுமான எந்தப்பக்தர்கள் விதியைமுன்னிட்டு என்னைப் பூஜிக்கி ருர்களோ அவர்கள் என்னை அடைகிருர்களென்பதில ஸந்தேகமுண் டோ? இவ்வுலகில் கர்மங்கள் உற்பத்தியும் நாசமுமுள்ளவைகளா கும். என்னிடத்தில் பக்தியுள்ளவன் மோக்ஷமடைவான். தேவ ரிஷியே! ஆகையால், நீ எப்பொழுதும் சோம்பலில்லாமல என்னையே த்யானம்பண்ணு; அதனுல், ஸித்தியையடைவாய்; என்னுடைய பத தத்தையும் காண்பாய். அறிவில்லாதவனுக்கு ஞானத்தையும் தர்மோப தேசத்தையும் அளிக்கிறவனுடையபயனுக்குப் பூமிமுழுமையையும் தானம்செய்வதாலுண்டாகும் பயனும் சரியானதன்று. ஆகையால், பிறவியென்னும்பந்தத்காலுண்டாகும்பயத்தை விலக்கததக்க ஞான த்தை ஸாதுக்களுக்கு அளிக்கவேண்டும். மனிதர்களிற சிறந்தவனே! இவ்விதம் அளிப்பதால் ஸ்ரேயஸையும் வீர்யத்தையும் அடைவான். எவன் பத்துலக்ஷம் அஸ்வமேதயாகஙகளைச் செய்கிருனே அவனும் என்னுடையபக்தர்களால் எந்தப்பதம் அடையப்படுகிறதோ அந்தப் பதததை அடையமாட்டான்' என்று சொன்னர்.

நல்லவ்ரதமுள்ளவனே! இவ்விதம் முன்காலத்தில் நாரதரென் னும்அந்தத்தேவரிஷியால விளைப்பட்ட இந்தப்பகவான் எதை உப தேசித்தாரோ அது உனக்குச்சொலலப்பட்டது. நீயும் ஒரேமன முள்ளவனுயிருந்துகொண்டு குணங்களைக்கடந்துநிற்கும், அறியத் தக்கபொருளை த்யானம்பண்ணு; அழிவிலலாதபரமாத்மாவை முழு மனத்துடனும் பஜனம்பண்ணு. ஸ்ரீநாராயணரால் சொல்லப்பட்ட திவ்யமான இந்தவசனததைக் கேட்டபின் நாரதரானவர் தேவரிடத் திலமிக்கபக்தியுள்ளவராகி ஒரே உறுதியானநிலையையடைந்தார். ரிஷி யும் தேவருமான ஸ்ரீநாராயணரைப் பததுவர்ஷங்கள், வேறுகாரியங்க ளிலலாமல் பஜித்துக்கொண்டு இதைஜபிப்பவன் ஸ்ரீவிஷ்ணுவி னுடைய அந்தப்பரமபதததையடைவான். எவனுக்கு ஸ்ரீஜனூர்த் தனரிடம் பக்தியிருக்கிறதோ அவனுக்குப் பலமந்த்ரங்களால் என்ன பயன்? 'நமோ நாராயணுய' என்ற மந்த்ரமானது எல்லாப்பயன்களை யும்கொடுக்கத்தக்கது. ரஹஸ்யமும் சிறந்ததுமான இந்த அனுஸ் மிருதியைக்கற்றுல்(மனிதன்)நிலைபெறற அறிவை அடைவான். அவன் துக்கங்களைத்தள்ளிவிட்டு ஸங்கடத்திலிருந்துவிலகி ஆசையில்லாதவ

னும் தாபமில்லாதவனும் ஸுகமுள்ளவனுமாயிருப்பான்" என்று சொன்னார்.

---

## இருநூற்றுப்பதினோராவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், கருடனால் தமக்கு உபதேசிக்கப்பட்ட ஸ்ரீவிஷ்ணுவின் மாஹாத்மியத்தைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "தேவர்களிலும் அஸுரர்களிலும் மனிதர்களிலும் ரிஷிஸ்ரேஷ்டர்களிலும் அறிவுள்ளஎவன் ஸ்ரீவிஷ்ணுவின் அந்த உண்மையைச் சொல்லியபடி அறிந்திருக்கிறான்? இவையனைத்தையும் நீர் எனக்குச் சொல்லவேண்டும். உண்மையில் எனக்கு த்ருப்தியுண்டாகவில்லை. பரதர்களில் மிகச்சிறந்தவரே! நீர் யாவற்றையும் அறிந்தவராயிருக்கிறீரென்பது எனது கருத்து" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"அரசனே! உன்னால் நான் எந்தவிஷயத்தைப்பற்றிக் கேட்கப்பட்டேனோ அந்தவிஷயத்தில் எனக்கு முன்காலத்தில் நடந்ததைக்கேள். அரசர்களிலுத்தமனே! முன்காலத்தில் கருடனுக்கும் எனக்கும் ஸம்வாதம்உண்டாயிற்று. ஓ! பார்த்த! முன்பு நான் கங்காநதியின்தீவிலுட்கார்ந்துகொண்டு தவத்தைபடைந்து ஸ்ரீவாஸுதேவரை முக்யகதியாகக்கொண்டு பத்துவர்ஷங்கள் அவரையே த்யானித்து ஸ்தோத்திரம்செய்து நமஸ்கரித்து யாகம்செய்துவந்தேன். அழிவில்லாதவனே! உலகங்களைப்பரிசுத்திபண்ணுகிறவளும் என்னையுண்டுபெண்ணினமாதாவுமான அந்தக்கங்காதேவியும் என்னைரக்ஷிக்கவேண்டி என்னருகில் உட்கார்ந்துகொண்டிருந்தாள். அந்தஸமயத்தில் ஆச்சர்யரும் ஸ்ரீமானும் எல்லாவேதங்களின்உருவமுமானவரும் ப்ரபுவும் பறவைகளில்மிகச்சிறந்தவரும் மேருமலையையும் மந்தரமலையையும்போன்றவரும் பரிசுத்தமானபுத்தியுள்ளவரும் பெரியபுகழுள்ளவருமான கருடபகவான் கங்கையைப்பார்க்கவேண்டி வந்தார். அப்படிவந்த மஹாத்மாவானஅவரை நான் எதிர்கொண்டுசென்று ப்ரார்த்தித்து முறைப்படி நமஸ்கரித்து அஞ்சலிசெய்துகொண்டு நின்றேன். ஸ்ரீமானான அந்தக் கருடபகவானும் பெரியபாக்யம்பெற்ற கங்காதேவியை மகிழ்வித்து அவளால்பூஜிக்கப்பெற்று அருகில் ஆஸனத்தில் உட்கார்ந்தார். பிறகு, பேசிக்கொண்டிருக்கையில், நான்

அந்தக்கருடனைநோக்கி, 'ஓ! வேதரூபியே! வினதையின்குமாரரே! பெரியவீர்யமும் பலமும் பெற்றவரே! இந்த்ரியங்களுக்குராஸ்வரரும் நாராயணருமான ஸ்ரீஹரியை எப்பொழுதும் வஹித்துவரும் நீர், அந்தஜனார்த்தனர் எவ்விதஉருவமுள்ளவரென்பதைச் சொல்ல அறிவீர். மிக்கபூஜ்யரே! அவருடையஉண்மையானநிலையை நீர் எனக்கும் சொல்லவேண்டும்' என்று ப்ரார்த்திக்க, வைனதேயர் சொல்லத்தொடங்கினார்.

'ஓ! பீஷ்ம! இவ்விஷயத்தில் முன்காலத்தில்நடந்ததை நீ முறைப்படி கேள். மிக்கபூஜ்யர்களும் மானஸஸரஸின்உத்தரதீரத்தில்வஸிப்பவர்களும் ஸித்திபெற்றவர்களும் ப்ராஜ்ஞர்களில்சிறந்தவர்களும் ஸ்ரீவாஸுதேவரைமுக்யகதியாகக்கொண்டவர்களுமான பல ரிஷிகள் என்னைநோக்கி, 'ஓ! பக்ஷீந்திரனே! வாஸுதேவரின் உண்மையான பரமபதத்தை நீ அறிகிறாய். உனக்குஸமமாய் அவருக்கு அருகிலிருப்பவனும் ப்ரியமாயிருப்பவனுமில்லை. ஆகையால், அதைச்சொல்' என்று கேட்டார்கள். நான் அவர்கள்வசனத்தைக்கேட்டபின் பூஜ்யரான ஸ்ரீஹரியை நமஸ்கரித்து எனக்கும் ஸ்ரீமந்நாயணருக்கும்நடந்ததை உள்ளபடி சொல்லத்தொடங்கினேன். 'முனிஸ்ரேஷ்டர்களே! கேளுங்கள். முன்காலத்தில் நான் ஸோமலதையை அபஹரித்துக்கொண்டு ஆகாயத்திற்செல்லும் பொழுது அவ்விடத்தில், 'பெரியகையுள்ளவனே! நல்லது! நல்லது! உன்னைக்கண்டதால் நான் ஸந்தோஷமடைந்தேன். பக்ஷீந்த்ரனை கருடனே! இப்பொழுது என்னிடத்திலிருந்து வரத்தைப்பெறறுக்கொள். நான் (உன்னுடைய) உண்மையானபக்தியைத்தெரிந்துகொண்டு உன்னைப்பற்றி உத்தமமானவசனத்தைச்சொல்லுகிறேன்' என்றவசனத்தைக்கேட்டேன். அப்பொழுது, திரும்பவும் பகவானவர் என்னைநோக்கி, 'நான் பெரியவீர்யம்பெற்ற ரிஷி. என்னை நீ அறியவில்லை. மூட! என்னைப்பற்றி அஸூயைப்படுகிறாய்' என்று உறுதியாய்ச்சொன்னார். முனிவர்களிற்சிறந்தவர்களே! அதைக்கேட்டுக் கர்வமடைந்தநான் தேவக்கூட்டங்களின்நடுவில், 'ரிஷியே! முதலில் நீர் என்னிடத்திலிருந்து வரத்தைப்பெறறுக்கொள்ளும். அதன்பிறகு, நான் உம்மிடத்திலிருந்து வரத்தைப்பெற்றுக்கொள்ளுகிறேன்' என்றுஇவ்விதம்சொன்னேன். அதனால், பூஜ்யரும் ஸ்ரீமானும் ஸ்ரீவத்ஸமென்றஅடையாளமுள்ளவருமான தேவரானவர், 'பக்ஷீந்த்ரனே! இப்பொழுது [1]முதல நீ எப்பொழுதும் எனக்கு

1 'ப்ரப்ருதி' என்று பாடங்கொள்ளப்பட்டது.

வாகனமாயிருக்கவேண்டும். பறவைகளுக்கீசனே! இப்பொழுது உன்னிடத்திலிருந்து இந்தவரத்தை நான் பெற்றுக்கொள்கிறேன்' என்றுசொன்னார். நான் அவரைப்பார்த்து, 'அவ்விதமே ஆகட்டும்' என்றுசொல்லி அஹங்காரமில்லாமலிருப்பவரும் வ்யாபகரும் மாயையுள்ளவருமான ஸ்ரீஹரியை ஜயிக்கவேண்டுமென்ற விருப்பத்துடன், 'ரிஷிஸ்ரேஷ்டர்களிலுத்தமரே! இப்பொழுது நான் உம்மிடத்திலிருந்து வரத்தைப்பெற்றுக்கொள்கிறேன். நான் உமக்கு மேலிருக்கவேண்டும். எனக்கு இந்தவரத்தைக் கொடும்' என்றுகேட்டேன். ப்ரபுவும் ஸ்ரீநாராயணருமான ஹரி சிரித்துக்கொண்டு, 'பக்ஷீஸ்வரனே! அப்படியே ஆகட்டும். எப்பொழுதும் நீயே எனக்கு த்வஜமாகவுமிரு. பக்ஷீந்த்ரனே! எப்பொழுதும் எனக்குமேல் நீ இருக்கலாம்' என்றுசொன்னார். இவ்விதம் சொல்லியபின், பூஜ்யரான தேவரானவர், சங்கத்தையும் சக்ரத்தையும் கதாயுதத்தையும் தரிப்பவரும் ஆயிரம் கால்களுள்ளவரும் ஸ்ரீமானும் ஆயிரம்ஸூர்யர்களுக்கு ஒப்பானவரும் ஆயிரம்தலைகளுள்ளவரும் ஆயிரம்கண்களுள்ளவரும் மஹானும் ஆயிரம்கிரீடங்களுள்ளவரும் சிந்திக்கத்தகாதவரும் ஆயிரம்முகங்களுள்ளவரும் ப்ரபுவும், மின்னலகூட்டத்திற்குஒப்பானவைகளும் திவ்யமுமான பலவிதஆபரணக்கூட்டங்களால் விளங்குகிறவருமான புருஷராக ஓரிடத்தில் தோன்றினார். அந்த ஹரியானவர் ஓரிடத்தில் நான்குகைகளுள்ளவராகத் தோன்றினார்; ஓரிடத்தில் சிந்திக்கத்தகாத ஜ்யோதிரூபமாய்த் தோன்றினார்; ஓரிடத்தில் என்தோளிலிருந்துகொண்டிருந்தார். இவ்விதம் எனக்கு விளங்கும் தேவரானவர் அவ்விடத்திலேயே அந்தர்த்தானத்தை அடைந்தார். முனிஸ்ரேஷ்டர்களே! பிறகு, வியப்புற்றவனான நான் மிகஉத்தமமான கார்யத்தைச்செய்து என்னுடன்கூட என்அன்னையை இந்தக் கத்ருவினிடத்திலிருந்துவிடுவித்துத் திரும்பவும், 'முந்தி என்னைச்சொன்னவர் யார்? என்னால் சிந்திக்கக்கூடாத அவர் யார்? அந்தப்பகவான் எவ்விதமாயிருக்கிறார்?' என்று அவரையே நினைத்துக்கொண்டிருந்தேன். பிறகு, தேவர்களுக்குத் தேவரும் என்தோளில் உட்கார்ந்திருப்பவருமான தாமரைக்கண்ணரை ஆச்சர்யத்துடன் நான் கண்டேன். 'இஃது என்ன!' என்ற சிந்தையுள்ளவனும் வியப்படைந்த மனமுள்ளவனுமான நான், அவர் எந்தஎந்தஇடத்திற்குச் செல்லவிரும்பினரோ அந்தஅந்த இடத்திற்கு அவருடைய எண்ணப்படி பரவசனாகிச்சென்றேன். திரும்

பவும் பெரியபாக்யம்பெற்றவர்களும் ஒருகல்பம் ஜீவிப்பவர்களும் இந்திரனுடன்கூடியவர்களுமான ப்ரம்மாமுதலிய தேவர்களால் துதிக்கப்படுகிறவனும் அவரவர்களால் வெவ்வேருகப்பூஜிக்கப்படுகிறவனுமான நானும் ஸர்வரூபியான அந்தப்பகவானைச் சுமந்துகொண்டு ஜலத்தினுள்சென்றேன். ரத்னமயமும் சுபமும் திவ்யமுமான பாற்கடலின் வடகரையில மஹாத்மாவான அந்தஸ்ரீஹரியினுடைய வைகுண்டமென்னும் ஆலயத்திற்குச் சென்றேன். அது திவ்யமும், தேஜோமயமும், செல்வம் நிரம்பியதும், தேவர்களாலும் நிந்திக்கத் தகாததும், பலவிடங்களிலிருப்பவைகளும் தேஜோமயமும் வாயுமயமுமான தூண்களுள்ளதும், காந்தியுள்ளஸ்வர்ணத்தால் எங்கும் அலங்கரிக்கப்பட்டதும், திவ்யமானஒளியுள்ளதும், வாத்யங்களாலும் கானங்களாலும் விளங்குவதுமாயிருந்தது. நான் அவ்விடத்தில் சப்தத்தைக்கேட்டேனேயொழிய வேறுமனிதனையும் இடத்தையும் கால்கள்வைத்தஅடையாளத்தையும் எவ்விடத்தும் காணேன். அவ்விடத்தில் நான் நடுக்கமடைந்து அஞ்சலிசெய்துகொண்டிருந்தேன். பிறகு, ப்ரம்மாமுதலியதேவர்களும் அவ்விதமே திக்பாலர்களும் ஸனந்தனர்முதலியமுனிவர்களும்அவ்விடத்தையடுத்துப்பிழைப்பவர்களான மற்றுமுள்ளவர்களும் அந்தஆலயத்திற்கு வந்தார்கள். அப்பொழுது, தேவஶ்ரேஷ்டர்களும் கந்தர்வஶ்ரேஷ்டர்களும்ஸபையின் வாயிற்படியில் ப்ரம்மதேவரை முன்னிட்டுக்கொண்டு அஞ்சலிசெய்துகொண்டிருந்தார்கள். பிறகு, அச்சமயத்தில் பாற்கடலின் திவலைகளால் விழித்துக்கொள்ளும்படி செய்யப்பட்டு விளங்குகிறவர்போல ஸ்ரீமஹாவிஷ்ணுவானவர் அவ்விடத்தில விளங்கினர். ஆயிரம் படங்களின் வரிசைகளையுடையவனும் ஸூக்ஷ்மமாயிருப்பவனுமான ஆதிசேஷனையும், அவன்மேல் நீண்டுஉருண்டவைகளும் பருமனுள்ளவைகளும் ஸமமாயிருப்பவைகளும் தோள்வளைகளாலும் கங்கணங்களாலும் விளங்குகிறவைகளுமான நான்குகைகளையுடையவரும் பீதாம்பரம்தரித்தவரும் கௌஸ்துபமணியால்விளங்குகிறவரும் லக்ஷ்மீதேவிவஸிக்கிறமார்பையுடையவரும் சிறிதுதிறந்தகண்ணுள்ளவரும் எல்லாவற்றின்காரணத்திற்கும் காரணருமான அந்த ஸ்ரீ ஜனார்த்தனரையும் நான் ஆகாயத்தில் ஸந்தோஷத்துடன்கண்டேன். அவர் பாற்கடலின்மேற்பாகத்திலுள்ள சிறந்தகறுத்தமேகம்போலத் தோன்றினர். அங்கு ஒருவனும் பேசுகிறதில்லை. [1] ஒருவனைஒருவன்சொல்லு

---

1 கூறியதுகூறலால், இங்கு மூன்றுசொற்கள் விடப்பட்டன.

கிறதுமில்லை. ப்ரம்மாமுதல் ஸ்தம்பமென்னும் ஜந்துவரையில் சப்திக்ககூடாதென்று கோபத்துடன் புருவங்களை நெரித்துக் கொண்டு, கோணலானகண்ணுள்ள பலவிதப்பூதக்கூட்டங்கள் அங்கு இருந்தன. பிறகு, சிந்திக்கத்தகாத ஸ்ரீமான் ஹரியானவர் ப்ரம்ம தேவரைப்பார்த்து உலகங்களுக்கு ஹிதத்தைச்செய்யும்விருப்பத் துடன், 'நீங்கள் போகலாம்' என்றுசொல்லி அவரைப்புறப்படும்படி செய்துவிட்டு, பிறகு, என்னைநோக்கி, 'கருட!' என்றுசொல்லி அழைத்தார். உடனே, நான் எதிரில்சென்று நமஸ்கரித்து அஞ்சலி செய்துகொண்டு நின்றேன். அவர் என்னை, 'வா' என்றுசொல்லி விட்டு வடகிழக்கானவழியில் செல்லத்தொடங்கினார். அவர் மிகவும் மெதுவாகவே போகிறவர்போலக் காணப்பட்டார். நான், பதினா யிரம் லக்ஷம் பத்துலக்ஷம் அப்படியே கோடியென்னும் யோ ஜனைதூரம் எப்பொழுதும் அங்கங்கு சென்றுகொண்டேயிருந்தேன். பிறகு, 'ஓ! தேவரே! உண்மையில நான் பக்தன். கஷ்டப் படுகிறேன். என்னை ரக்ஷிக்கவேண்டும்' என்றுசொன்னேன். அந்த மாதவரானவர் திரும்பவும், 'கருடனே! வா' என்றுசொன் னார். பிறகு, நானும் திரும்பவும் ஆகாயததில் ஓடிக்கொண்டு சென் றேன். பிறகு, நூறுகோடியோஜனைதூரம் மறைவுள்ள கோர மானஇடத்திற்கு வந்தார். அவ்விடததில் இருள்உருவமுள்ள வைகளும் மலைபோலவிளங்குகின்றவைகளும் ஓரேவிதமான பத மங்கள்போன்றவைகளுமான பூதங்களைக் கண்டேன். உடனே, நான் பயமடைந்தவனானேன். பிறகு, கோரரூபியான ஒருகிங்கரன் நூறுயோஜனைநீளமுள்ள என்னைக் கையிலெடுதது அவ்விடத்தி லிருந்து மண்ணாங்கட்டியைப்போல வீசியெறிந்தான். அப்பொழுது நான் அந்த இருளைவிட்டுவிலகி ஆகாயத்தையடைந்தேன். அவ்விடத் தில் இடியின் ஓசைக்கொப்பான ஹூங்காரதவனியானது செவியி னுள் கேட்கப்பட்டது. உடனே, நான் பலபூதங்களால சூழப்பட் டேன். பிறகு, நான், 'தேவர்களின்தேவரே! தாமரைக்கண்ணரே! ஈஸ்வரரே! நீர் என்னை ரக்ஷிக்கவேண்டும்' என்று சொன்னேன். அப்பொழுது அவ்விடத்தில் ஸ்ரீவிஷ்ணுவும் என்னைப்பற்றிச் சொன் னார். பயங்கரனானஒருவன் என்னையெடுத்து ஒருகுகையின் த்வா ரத்தில் எறிந்தான். ஒருக்ஷணத்தில் நான் அக்னியைவிலகிச்சென்று வாயுமண்டலத்தைக்கண்டேன். அவ்விடத்தில் ஆகாயத்தில் என்னை எறியவேண்டுமென்றவிருப்பத்துடன் வந்தவனைக்கண்டு நான் தூக்

கத்துடன் கதறிக்கொண்டு நின்றேன். ஒருக்ஷணத்தில் தன்பக்ஷத்தி லிருக்கிறவர்களை விளங்கச்செய்கிறவரும் பயங்கரருமானபரமாத்மாவி னால் கண்டு கோபிக்கப்பட்டபயங்கரனைஒருவன் என்னைவிட்டெறிந் தான். அங்கு ஆயிரம்ஸூர்யர்களுக்கொப்பான பலகருடக்கூட்டத் தைக் கண்டேன். பிறகு, அவர்கள்என்னைக்கண்டு, 'அந்தோ! அல்ப ஆயுளுள்ளதும் மிகப்பலவீனமுள்ளதுமான பக்ஷியானது வந்திருக்கி றது' என்று என்னைக்குறித்து மனத்தில வியப்படைந்து சொன்னார் கள். நான் அவ்விடத்தில்ஆயிரம்யோஜனைநீளமுள்ளவரும்ஆயிரம்ஆதி த்யர்களுக்குஒப்பான ஒளியுள்ளவரும் ஆயிரம்கருடர்களின்மேல் ஏறி க்கொண்டவருமான ஸ்ரீமந்நாராயணரைக்கண்டேன். பெரியபலமுள் ளவர்களான அந்தக்கருடர்கள், 'ஓ! தேவரே! இது மிகவும்விந்தை. சரீரத்தால எங்கள்குலததில் உண்டானதுபோன்றதும் மிகஅல்பபல முள்ளதும் மிகஅலபசரீரமுள்ளதுமான இது என்னபக்ஷி இவ்விடத் தில் வந்திருக்கிறது!' என்று சொன்னார்கள். அதைக்கேட்டு, நான் கர்வமழிந்தவனும் பயமுள்ளவனும் லஜ்ஜையுள்ளவனும் விவேக மடைந்தவனும் நடுக்கமடைந்தவனுமானேன். பிறகு, திரும்பவும், 'கருட! வா' என்றசப்தத்தையேகேட்டேன். உடனே, நான் செல் லத்தொடங்கினேன். பிறகு, திரும்பவும் நூறுபரார்த்தயோஜனை தூரம்சென்று அவ்விடததில உததமமானஸ்தானத்திலிருக்கும் ப்ர ம்மதேவரைக்கண்டேன். அன்றியும், அவவிடத்தில் நூறுகோடிப்ர ம்மதேவர்களையும் கண்டேன். ஸ்ரீவிஷ்ணுபகவானனவர் திரும்பவும் 'வா' என்று கம்பீரமாகச்சொன்னார். பிறகு, ஒரு பெரியகூட்டத்தைத் [1] கண்டேன். விளாம்பழததிறகொப்பானதும் இருளால மிகச் சூழப் பட்டதுமான பலஅண்டத்தைக்கண்டேன். ஸ்ரீமானான ஹரியானவர் அந்த அண்டத்திலிருந்துகொண்டு ஓர் அண்டத்தைப் பேதித்தார். திரும்பவும் ஒருபெரியபூதமானது என்னைப்பிடித்து எடுத்தெறிந் தது. அதன்இடையில் ஏழுஸமுத்திரங்களையும் ப்ரம்மதேவரையும் அவ்விதமே தேவர்களையும் எங்கள்கருடக்கூட்டத்தையும் (எங்கள்) தாயையும் அந்தஅந்தவிடத்தில் கண்டேன். உண்மையைத்தேட விருப்பமுள்ள நான் இவ்விதம் அனுபவமடைந்தேன். முனிகளில் மிகச்சிறந்தவர்களே! என்னைப்பல்லக்குக்குஒப்பாகத தெரிந்துகொள் ளுங்கள்' என்று இவ்விதம் முன்காலத்தில எனக்கு எது உண்டா னதோ அதை ப்ராம்மணர்களுக்குச்சொன்னேன். மிகப்பூஜ்யனே!

---

[1] இரண்டு சொற்கள் விடபட்டன.

ஓ! பீஷ்ம! அம்மதஜனத்தையும் உனக்கு நியாயப்படி சொன்னேன். யோகிகள், சிறந்தஞானத்தைக்கண்டு அந்த ஸ்ரீஹரியைக் காண்கிருர்கள். ஞானத்தால் அடையத்தக்க இந்தப் பரமபுருஷரானவர் வேறு விதமாய்அடையக்கூடிய உருவமுள்ளவரல்லர். பூஜ்யரான ஸ்ரீஹரியானவர் ஒரேநிலையுள்ளபக்தியால் அடையத்தக்கவராவர்' என்று சொன்னர். பூஜ்யரும் பக்ஷிகளுக்கரசரும் ப்ரபுவுமான வைனதேயர் இவ்விதம்சொல்லிவிட்டு என்தாயாரான கங்காதேவியைக் கேட்டுக்கொண்டு அவ்விடத்திலேயே அந்தர்த்தானத்தையடைந்தார். அரசஸ்ரேஷ்டனே! ஆகையால், ஸர்வரூபியும் ப்ரதானத்தையுண்டுபண்ணினவருமான ஸ்ரீவாஸுதேவர் ஞானத்தாலும் பக்தியாலும் எளிதில்அடையத்தக்கவர். வேறுவிதமாக அடையத்தக்கவரல்லரென்பது என் அபிப்பிராயம்" என்றுகூறினர்.

---

## இருநூற்றுப்பன்னிரண்டாவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(ஒருகுருவானவர் தம்சிஷ்யனுக்கு ஆத்மதத்வத்தை உபதேசித்தது.)

யுதிஷ்டிரர், "தந்தையே! பரதகுலத்திலுதித்தவரே! நீர் மோக்ஷத்திற்குரியமுக்யமானயோகத்தை எனக்கு உபதேசிக்கவேண்டும். பேசுகிறவர்களிற் சிறந்தவரே! அதை நான் உண்மையாகத் தெரிந்துகொள்ளவிரும்புகிறேன். மிகப்பூஜ்யரே! ஞானத்தின்உண்மையில நிலைபெறவேண்டித் திரும்பவும் நான் வாஸுதேவரென்று பெயர்வாய்ந்த சிந்திக்கத்தகாத பொருளைப்பற்றி உம்மிடம் கேட்கிறேன். ஆகையால், சொல்லவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

" இவ்விஷயத்திலும் மோக்ஷத்தைப்பற்றியதும் ஒருகுருவுடன் சிஷ்யனுக்குண்டானஸம்பாஷணையுமானபழைய இவ்விதிஹாஸத்தை உதாஹரிக்கிருர்கள். மேதாவிகளிலசிறந்தவனும் க்ஷேமத்தைவிரும்புகிறவனும் மிக்க அடக்கமுள்ளவனுமான ஒருசிஷ்யனானவன் இந்த்ரியங்களை வென்றவரும் ஸத்யஸந்தரும் மஹாத்மாவும் தேஜஸுகளின் கூட்டம்போன்றவரும் ரிஷிகளில் மிகச்சிறந்தவரும் உட்கார்ந்திருப்பவரும் ப்ராம்மணருமான ஓர் ஆசார்யரையடைந்து அவர்அடிகளைவணங்கிக் கைகூப்பிநின்றுகொண்டு கேட்கத்தொடங்கினன்.

'பூஜ்யரே ! என்னுடைய பணிவிடையால் நீர் ஸந்தோஷமுள்ளவரா யிருப்பீராயின் எனக்குஇருக்கிறஒருபெரியஸந்தேஹத்தை நீர் விரித் துரைக்கவேண்டும். நான் எதிலிருந்து உண்டானேன்? நீர் எதி லிருந்துஉண்டானீர்? இவ்விஷயத்தில் எது மேலானதோ அதை நன்றாக நீர் சொல்லவேண்டும். ப்ராம்மணர்களில் மிகச்சிறந்தவரே ! எல்லாப்ராணிகளும் ஸமமாயிருக்கும்பொழுது, கன்குநடைபெறு கின்றஉத்பத்திகளும்விநாசங்களும் வெவ்வேறுவிதமாக உண்டாகின் றனவென்பது எவ்விதம்? வேதங்களில் [1]வெவ்வேறுயுள்ளவாக்யமும் உலகத்திலுள்ளபொதுவான ஸ்ம்ருதிவாக்யமும்எவ்விதம்? அறிவுள்ள வரே ! இவற்றையெல்லாம் உள்ளபடி விரிவாக உரைக்கவேண்டும்' என்றுகேட்க, குரு சொல்லத்தொடங்கினார்.

'ப்ராஜ்ஞர்களில்பெரியவனான ஓ ! சிஷ்ய ! வேதரஹஸ்யமும் எல்லாப்ராணிகளின்சரீரத்திலுமுள்ளதும் வேதங்களுக்குநிதிபோன் றதுமான இப்பெரிய தத்வத்தைக் கேள். ஸ்ரீவாஸுதேவரானவர்உல கத்திலுள்ள இவ்வெல்லா உருவமுமுள்ளவரும் வேதத்தின்முகமான ப்ரணவரூபியும் ஸத்யம் தானம் தவம் யாகம் பொறுமை அடக்கம் நேர்மைஇவைகளால்அடையத்தக்கவருமாயிருக்கிறார்.ஸநாதனபுருஷ ரான ஸ்ரீவிஷ்ணுவையே(உலகங்களின்)உத்பத்தியையும் ப்ரளயத்தை யும்செய்வதும்ஸூக்ஷ்மரூபியும்சாஶ்வதமுமானப்ரம்மமென்றுவேத மறிந்தவர்கள் கருதுகிறார்கள். இப்படிப்பட்டஇந்தப்ரம்மமானது வ்ரு ஷ்ணிகுலத்திலுதித்ததாயிருக்கிறது. அதைப்பற்றியஇதிஹாஸத்தை என்னிடத்திலிருந்துகேள். பிராம்மணன் ப்ராம்மணர்களால் உபதே சம் பெறத்தக்கவனாகிறான். க்ஷத்திரியன் க்ஷத்ரியர்களால் கேட்பிக்கத் தக்கவனாகிறான். வைஶ்யன் வைஶ்யர்களால் கேட்பிக்கத் தக்கவனாகி றான். பெரியமனமுள்ள சூத்ரன் சூத்ரர்களால் கேட்பிக்கத்தக்கவனா கிறான். தேவர்களுக்குத்தேவரும் ஒப்பற்றதேஜஸுள்ளவருமான ஸ்ரீ விஷ்ணுவினுடையதும் மங்களமும் உத்தமமும் ஸ்ரீக்ருஷ்ணனென் னும் ரூபமுள்ளதுமான மஹிமையை நீ கேட்கவேண்டும். ஸ்ரீவிஷ்ணு வின் பரமபதமானது,அழிவற்றதும் சிறந்ததும் நித்யமும் அடையாள ங்களில்லாததும் அழுக்கில்லாததும் மரணமில்லாததும் சோபையுள் ளதுமானமோக்ஷமாயிருக்கிறது.ஸம்ஸாரதசையில் அதுவேற்றுமை யுள்ளதுபோலிருக்கிறது. வேற்றுமையுள்ளதும் முக்குணங்களையும் உண்டுபண்ணுகிறதுமான ப்ரதானமென்னும் மாயையானது அந்தப்

1 ஒவ்வொருஜாதிகளுக்குமட்டில் ஒவ்வொருகர்மத்தைப் பகுத்துக்கூறு வதாயுள்ளது என்றுபொருள்.

பரமாத்மஸ்வரூபத்தில் எப்பொழுதும் பற்றுள்ளதன்று. அதில் பற்றுள்ள இந்தஜீவனென்னும்புருஷன் வேறானவன். எப்பொழுதும் புருஷனால் அடையப்பட்டதும் வ்யாபகமும் உலகத்திற்குக்காரணமும் காலரூபமுள்ளதுமான ப்ரதானமானது, மிக்கசக்திபெற்ற ஸ்ரீவிஷ்ணுரூபத்தால் விகாரமுள்ளதாகச் செய்யப்பட்டு வெவ்வேறான பலபூதங்களை உண்டுபண்ணுகிறது. புருஷனானவன் ஸாக்ஷியாயிருந்துகொண்டு உண்மையில்லாத அந்த ப்ரதானத்தைப்பார்த்து வேற்றுமையில்லாதவனாலும் அந்தப்ரதானத்திற்புகுந்து* அதன் சேர்க்கைக்குத்தக்கபடி வேறுபட்டலக்ஷணமுள்ளவனாய் நடைபெறுகிறான். ஆதியும்அந்தமுமில்லாததும் இருப்பதையும் இல்லாமல்போவதையும் தன்லக்ஷணமாகக்கொண்டதுமான ப்ரதானமென்னும் காலசக்ரமானது மூன்றுலகத்திலுமுள்ளஎல்லாப்பிராணிகளிடங்களிலும் உருளைபோலச் சுற்றிக்கொண்டிருக்கிறது. புருஷர்களிற்சிறந்தவனே! எந்தப்ரம்மமானது அழிவில்லாததும் ஸூக்ஷ்மரூபியும் மோக்ஷரூபியும் சாஸ்வதமுமாயிருக்கிறதோ அதைப் புருஷோத்தமரான ஸ்ரீகேசவரென்று சொல்லுகிறார்கள். அழிவில்லாததும் சிந்திக்கத்தகாததுமான அந்தரூபமானது வேற்றுமையுள்ளரூபத்துடன் காணப்படுகிறது. காலமென்றுசொல்லப்படுவதைப் பார். அஃது எப்பொழுதும் சூடுள்ளதுமன்று; மிக்ககுளிருள்ளதுமன்று. இந்தக்குணங்கள் அதனிடத்திலில்லை. ஆகையினால், (அந்தக்காலம்), அப்படி (குளிரும்வெப்பமும் இல்லாமல்) பிரவர்த்திக்கிறது. 'இதோ குளிர்காலம்வந்தது; இதோ உஷ்ணகாலம் வந்தது' என்று ஸூர்யோதயத்தைப்பற்றி எல்லாப்பிராணிகளும் சொல்லுகின்றன. [1]குணங்களனைத்தும் காலத்தைப்பற்றி வருவதும்போவதுமாயிருக்கின்றன. எக்காலமும் ப்ரக்ருதியிலிருப்பவனும் காலத்துடன்கூடியவனுமான மனிதனால் (அனுபவிக்கப்படுவதும்) குணங்களால் (உண்டுபண்ணப்படுவதுமான) ஸுகமும் துக்கமும் தத்வஜ்ஞானத்தில் ஸமர்த்தனாயிருப்பவனை அடையா. மூலப்ரக்ருதியானது எப்பொழுதும் புருஷனால் ஆஸ்ரயிக்கப்பட்டு (உலகங்களை) உண்டுபண்ணுகிறது. அழிவில்லாத பரமாத்மாவானவர் பித்ருக்களையும் தேவர்களையும் ரிஷிகளையும் யக்ஷர்களையும் ராக்ஷஸர்களையும் நாகர்களையும் அஸுரர்களையும் மனிதர்களையும் மனத்தால் படைக்கிறார். அதுபோலவே வேதங்களையும் சாஸ்த்ரங்களையும் ப்ரளயகாலத்தில் ப்ரக்ருதியையடைந்தவைகளும்

1 'ஸகாலா:' என்று பாடங்கொள்ளப்பட்டது.

சாஸ்வதமுமான உலகத்திற்குரியதர்மங்களையும் கல்பத்தின்ஆதிகாலத்தில் திரும்பவும் படைத்தார். ஒவ்வொரு வர்ஷத்திலும் ருதுக்களில் ருதுக்களுக்குத்தக்க பலஉருவங்களுள்ள அடையாளங்கள் அந்த அந்தவிதங்களாகவே காணப்படுவதுபோல யுகங்களின் ஆதிகாலங்களில் வஸ்துக்கள் காணப்படுகின்றன. கல்பத்தின் ஆதிகாலங்களில் எப்பொழுது காலத்தின் சேர்க்கையால் எதுஎது [1]தோன்றுமோ அப்பொழுது அது அதுவும் வ்யவஹாரத்திற்குக் காரணமாயுண்டாகும் ஞானமாகும். அவ்விதஅறிவை உண்டுபண்ணவேண்டி அதற்குக் காரணரூபமாக இந்தவேதம் கூறப்படுகிறது. இந்தவேதங்கள் அத்யயனம் செய்யாத காரணத்தால் மறைவடைந்தனபோலாயின. ப்ரளயகாலத்தில் எல்லாப்பிராணிகளும் நசிப்பதால் பலவிதமானசாஸ்த்ரங்களும் நாசமடைந்தனவாகும். ஆயினும், ஜீவர்களின்ஸ்வரூபம் நித்யமாகையால் வேறு அண்டம் இருக்கும்பொழுது சாஸ்த்ரங்களும் நித்யமாயிருக்கலாம். மஹாப்ரளயகாலத்தில் மறைவடைந்தவேதங்களையும் இதிஹாஸங்களையும் உலகநடையின் அதிகாரத்தைவஹித்தவர்களும் பெரியரிஷிகளுமான ப்ராம்மணர்கள் தவத்தால் முதலில் ப்ரம்மதேவரால்அனுக்ரஹிக்கப்பெற்று ப்ரம்மதேவரின்கட்டளையால் அடைந்தார்கள். பூஜ்யரானப்ரம்மதேவர் வேதங்களையறிந்துசொன்னார். வேதாங்கங்களை ப்ருஹஸ்பதியும் உலகத்திற்கிதமான நீதிசாஸ்த்ரத்தைச் சுக்ரரும் கூறினார்கள். ஸங்கீதசாஸ்த்ரமென்னும் காந்தர்வவேதத்தை நாரதரும் தனுர்வேதத்தைப் பரத்வாஜரும் [2]தேவர்களுடையதும் [3]ரிஷிகளுடையதுமான சரித்ரத்தைக் கர்க்கரும் வைத்யசாஸ்த்ரத்தை க்ருஷ்ணாத்ரேயரும் அறிந்தார்கள். கௌதமரானவர் ந்யாயசாஸ்த்ரமுழுமையையும் உண்மையாய் அறிந்தார். வேதங்களையறிந்தவரும் ப்ரம்மத்தையறிந்தவரும் ப்ரபுவுமான ஸ்ரீவ்யாஸரானவர் வேதாந்தத்தையும் கர்மயோகத்தையும் அறிந்தார். ப்ருகுவானவர் சில்பசாஸ்த்ரத்தை அறிந்தார். அந்த அந்த வாதிகளால் பலதர்க்கசாஸ்த்ரங்களும் கூறப்பட்டன. எது யுக்தியுடனும் ஆகமத்துடனும் ஸதாசாரத்துடனும் கூறப்பட்டதோ அதுஆதரிக்கப்படுகிறது. உதபத்தியில்லாத அந்தப்பரப்ரம்மத்தைத் தேவர்களும் ரிஷிகளும் அறிகிறார்களில்லை. பூஜ்யரும் உலகத்தையுண்டுபண்ணினவரும் ப்ரபுவுமான ஸ்ரீநாராயணரொருவர் அந்தப்ரம்மத்தை அறிகிறார். ஸ்ரீநாராயணரிடமிருந்து ரிஷிக்கூட்டங்களும் முக்யர்களான

1 வேதபாடம். 2. 3 ஜ்யோதிஷம்.

தேவர்களும் அஸுரர்களும் முன்காலத்திலிருந்தராஜரிஷிகளும் துக்கங்களுக்கு மருந்துபோன்ற பரப்ரம்மத்தை அறிந்தார்கள். வ்யாஸமஹரிஷியிடமிருந்து என்னால் எதுஅடையப்பட்டதோ அதை நான் உனக்குச்சொல்லுகிறேன். ப்ரக்ருதியானது எப்பொழுது ஈசனென்னும்புருஷனால் ஆலோசிக்கப்பட்டபொருள்களை உண்டுபண்ணத் தொடங்குகிறதோ அப்பொழுது (தர்மம் அதர்மம் என்ற) காரணங்களுடன்கூடிய உலகமானது இந்தப்ரக்ருதியினிடத்திலிருந்து முதலிலஉண்டாகிறது. ஒருவிளக்கிலிருந்து வேறுவிளக்குக்கள் ஆயிரக்கணக்காக உண்டாவதுபோல ப்ரக்ருதியானது (உலகங்களை) உண்டுபண்ணுகிறது. தன்பெருமையிலிருந்துகுறைவடைகிறதில்லை. அவ்யக்தமென்னும் ப்ரக்ருதியிலிருந்து கர்மத்தைக் காரணமாகக்கொண்டு புத்தியென்னும் மகத்தத்வமுண்டாகிறது. அது அகங்காரத்தையுண்டுபண்ணுகிறது. அகங்காரத்திலிருந்து ஆகாசமென்னும் சப்ததன்மாத்ரையுண்டாகிறது. அந்தச்சப்தத்திலிருந்துஸூக்ஷ்மமானஸ்பர்சமுண்டாகிறது. அந்தஸ்பர்சத்திலிருந்து ஸூக்ஷ்மரூபமும் அந்த ஸூக்ஷ்மரூபத்திலிருந்து ஸூக்ஷ்மரஸமும் ரஸதன்மாத்ரையிலிருந்து கந்ததன்மாத்ரையுமுண்டாகின்றன. இந்தஎட்டும் மூலகாரணங்களாகின்றன. உலகமானது இவைகளில நிலைபெற்றிருக்கிறது. இவைகளிலிருந்துஉண்டானவைகளான ஐந்துஞானேந்திரியங்கள் ஐந்துகர்மேந்திரியங்கள் ஐந்துவிஷயங்கள் மனமொன்று இந்தப்பதினாறும் காரியங்களாகின்றன. செவியும் தவக்கும்கண்களும்நாவும் மூக்கும் ஞானேந்திரியங்கள். கால்களும் பாயுவும் உபஸ்தமும் கைகளும் வாக்கும் கர்மேந்திரியங்கள். சப்தமும் ஸ்பர்சமும் ரூபமும் ரஸமும் கந்தமும் விஷயங்கள். அவைகள்சித்தத்தின்ஸங்கல்பத்தாலுண்டாகின்றன. அவைகளில மனமானது எல்லாவிடத்திலும்செல்லுவதும் வ்யாபகமுமாகிறது. பத்துஇந்திரியங்களும் அவைகளின்பற்றுதலுக்குக் காரணங்களானவிஷயங்களும் இவ்விதம் சொல்லப்பட்டன. மனமானது இருக்கிறதாஇல்லையா என்று இரண்டுவிதமாய்ப் பற்றுதலென்னும்விகல்பத்தில் இருக்கிறதென்றுசொல்லப்படுகிறது. புத்தியானது நிச்சயமென்னுங்குணமுள்ளது. அஹங்காரமானது அபிமானத்துடன்கூடியது. கர்மமானது சரீரத்தையடைவதற்கு உபாதானகாரணமான அவ்யக்தத்தை ப்ரவ்ருத்திக்கச்செய்வதல்லாமல் தான் உபாதானகாரணமாகிறதில்லை. இந்தநாவானது ரஸத்தையறிவதற்கு உபயோகப்படுகிறது. அதுபோலவே வாக்கானது பேசுவதில் உபயோகப்படுகிறது. மனமானது

பலவிதமான இந்த்ரியங்களுடன் சேர்க்கையடைவதும் எல்லா இந்திரியங்களையும் விட்டுவிலகுவதுமாயிருக்கிறதென்று தெரிந்துகொள்ள வேண்டும். வெவ்வேருனதேவர்களுடன்கூடிய இந்தப் [1]பதினாறும் சரீரங்களில்(பரமாத்மை)உபாஸிப்பவனும் அறிவுகளுக்குக் கர்த்தாவுமான ஜீவனைஉபாஸிக்கின்றன. எல்லாப்ராணிகளிலுமுள்ள அவ்விந்த்ரியங்களுள் எப்பொழுதும் நாவானது ஜலத்தின்கார்யமும் மணத்தையறியும்மூக்கானது பூமியின்காரியமும் செவிகள் ஆகாயத்தின் கார்யமும் கண்ணானது தேஜஸின்கார்யமும் த்வக்கு வாயுவின்கார்யமுமாகத் தெரிந்துகொள்ளவேண்டும். மனத்தை ஸத்வகுணத்தின் காரியமென்றும் ஸத்வமானது அவ்யக்தத்தின்காரியமென்றும் கூறுகிருர்கள். ஆகையால், அறிவுள்ளவன் எல்லாப்பூதங்களுக்கும் காரணமான அவ்யக்தத்திலிருக்கும் ஈஸ்வரரை அறிந்துகொள்ளவேண்டும். ரஜோகுணமில்லாத எந்தத்தேவரைப் பரமபதமென்றுகூறுகிருர்களோ அவரை அடுத்துநிற்கும் அவ்யக்தமுதலிய இப்பொருள்களானவைகள் சராசரங்களுடன்கூடிய உலகமனைத்தையும் வஹிக்கின்றன. இந்தப்பொருள்களுடன்கூடியதும் ஒன்பதுத்வாரங்களுள்ளதும் புண்யமுமான சரீரமென்னும்புரத்தை வயாபித்துக்கொண்டு வ்யாபகரான பரமாத்மா சயனம்செய்கிருர் புரத்தில்சயனம்செய்கிருரென்ற காரணத்தால் அவர் புருஷரென்றுசொல்லப்படுகிருர். அவர் ஜரையில்லாதவரும், மரணமில்லாதவரும், கார்யரூபியென்றும்காரணரூபியென்றும் இரண்டுவிதமாய் உபதேசிக்கப்படுகிறவரும், வ்யாபகரும், குணங்களுடன்கூடியவரும், ஸூக்ஷ்மரும், எல்லாப்பூதங்களின் குணங்களுக்கும் ஆஸ்ரயருமாயிருக்கிருர். சிறிதோ அல்லதுபெரிதோ தீபமானது எவ்விதம் ப்ரகாசஉருவமுள்ளதோ அவ்விதம் எல்லாப்ராணிகளிடங்களிலும் புருஷனை ஞானரூபியென்று தெரிந்துகொள்ளவேண்டும். செவியானது கேட்கவேண்டியதைக் கேட்கும்படி செய்விக்கிறது. அந்தப்புருஷன் கேட்கிருன்; அவன் பார்க்கிருன். இந்தச்சரீரமானது அவனுக்குஸாதகமாயிருக்கிறது. எல்லாக்கர்மங்களையும் செய்கிறவன் அவன். கட்டையிலிருக்கும் அக்னியானது அக்கட்டைபிளக்கப்படுவதால் காணப்படாததுபோலவே சரீரத்திலிருக்கும் ஆத்மாவானது யோகமென்னுமுபாயமில்லாமல் காணப்படுகிறதில்லை. உபாயத்தால் கட்டையைக்கடைந்தால் அக்னியானது காணப்படுவதுபோலவே சரீ

1 'இந்த்ரியங்களைந்து பூதங்களைந்து மனமொன்று ஆகப்பதினாறு' என்பது பழையவுரை. இந்த்ரியங்களைந்து ப்ராணங்களைந்து மனமொன்று என்றும் கொள்ளலாம்.

ரத்திலிருக்கும்ஆத்மாவும் யோகத்தாலேயே காணப்படுகிறது. ஆறுகளில்ஜலங்களும் ஸூர்யனிடத்திலகிரணங்களும் சேர்ந்துகொண்டு தொடர்ந்தவைகளாக எவ்விதம் செல்லுகின்றனவோ அவ்விதம் சரீரிகளுக்குச் சரீரங்கள் செல்லுகின்றன. ஆத்மாவானது கனவுடன் சேர்க்கையடையும்பொழுது சரீரத்தைத்தள்ளிவிட்டு ஐந்துஇந்திரியங்களுடனும் செல்லுவதுபோலவே வேறுசரீரத்தில்செல்லுகிறதென்று அறியவேண்டும். யாவும் கர்மத்தால வ்யாபிக்கப்படுகின்றன; கர்மத்தாலே உண்டாகின்றன. தன்னால்செய்யப்பட்டதும் மிக்கபலமுள்ளதுமான கர்மததால ஆதமாவானது வேறுசரீரத்தில் கொண்டுபோகப்படுகிறது. அந்தஆதமாவானது ஒருசரீரத்தைத் தள்ளிவிட்டு ஆதிலிருந்து வேறுசரீரத்தை அடைகிறதுபோலத தன் கர்மங்களால பிறப்படையும் அந்தப்ராணிக்கூட்டத்தைப்பறறியும் கூறுகிறேன்.

---

## இருநூற்றுப்பதின்மூன்றுவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(ஒரு குருவானவர் தம்சிஷ்யனுக்கு ஆத்மதத்வத்தை உபதேசித்தது; தொடர்ச்சி.)

ஸ்தாவரங்களும் ஜங்கமங்களுமான நான்குவிதப்ராணிகளும் ஸூக்ஷ்மமான பிறப்புடையவைகளென்றும் ஸூக்ஷ்மமான இறப்புடையவைகளென்றும் கூறுகிறார்கள். மனமானது அவ்யக்தமான லக்ஷணமுள்ளதென்றும் ப்ரக்ருதியின்ஸ்வரூபத்தை தன்உருவமாகக்கொண்டதென்றும் தெரிந்துகொள்ளவேண்டும். பெரியஅரசமரமானது அரசமரத்தின்வித்தினுள்ளிருந்ததும் அவ்யக்தமாய் உண்டானதுமாகக்காணப்படுவதுபோல அவ்யக்தத்திலிருந்து உலகத்தின் உத்பத்தியுண்டாகிறது. காந்தமணியின்ஸமீபத்திலிருக்கும் இரும்பானது (அந்தமணியை) அனுஸரித்துச்செலவதுபோல அவயக்தத்திலிருந்துண்டான புத்தியானது ஆத்மாவை அனுஸரித்துச்செல்லுகிறது. அதுபோல மனமானது அந்தப்புத்தியைஅனுஸரித்துச் செலலுகிறது. அறிவில்லாதஇரும்பானது காந்தமணியையனுஸரித்துச்செல்வதுபோலப் பூர்வவாஸனையைக் காரணமாகக்கொண்ட கர்மங்களாலுண்டாகும் தர்மாதர்மங்களென்னும்பொருள்களும் இவைபோன்றமற்றவையும் தேகத்தையனுஸரித்துச்செல்லுகின்றன. அவ்வாறே அஜ்ஞானத்தாலுண்டானபொருள்கள், கர்த்தாவானஜீவனுக்

குக்காரணமான ப்ரம்மத்தை அனுஸரித்துச் செல்லுகிறவைகளும் அறிவில்லாதவைகளும் அறிவுள்ளஜீவனுக்குக் காரணமானப்ரம்மத்தினிடமிருந்து வெளிவந்தவைகளுமாயிருக்கின்றன. முதலில் ஜீவனைத்தவிரப் பூமியும் ஆகாயமும் ஸ்வர்க்கமும் பிராணிகளும் [1] ரிஷிகளும் [2]தேவர்களும் அஸுரர்களும் மற்றும் ஒன்றுமில்லை. அவைகள் ஜீவனையடையவுமில்லை. ஜீவனுக்கு இவைகளுடன் சேர்க்கையானது அஜ்ஞானத்தாலுண்டாகிறதென்று (வேதங்களில்) கூறப்பட்டிருக்கிறது. இந்தச்சேர்க்கை [3]அறுதியும் அஜ்ஞானமுள்ளவரையில் அழிவிலலாததும் எல்லாஜீவர்களிடமுமிருப்பதும் மனத்தைக் காரணமாகக்கொண்டதும் உறுதியானலக்ஷணமில்லாததும் ஜன்மாந்தரவாஸனையென்ற காரணத்தால் வேறுபடுகிறதுமாயிருக்கிறது. அந்தஜீவரூபமானது முன்வாஸனைஎன்றகாரணத்துடன் கூடிக்கொண்டு கர்மங்களைச் சேரச்செய்துகொள்கிறது. அந்தக் கர்மத்தால் இந்தவாஸனை தொடர்ந்துவருகிறது. இஃது முதலும் முடிவுமில்லாத பெரியசக்ரமாயிருக்கிறது. [4]அவ்யக்தமானவாஸனையைக் குடமாகவும் வ்யக்தமானசரீரமுதலியவைகளை ஆர்களாகவும் ஞானம்கர்மமுதலிய கார்யங்களைச் சுற்றிலுமுள்ளவடடையாகவும் ஆசையென்றபசையுள்ள ரஜோகுணத்தை அச்சாகவும்கொண்ட ஸம்ஸாரசக்ரமானது க்ஷேத்ரஜ்ஞனென்ற ஜீவனால் ஏற்பட்டு உறுதியாயிருக்கிறது. எண்ணெயென்னும் ஸ்நேகமுள்ளதாயிருப்பதால் எள்ளானது செக்கார்களால் பீடிக்கப்படுவதுபோல இவ்வுலகம்யாவும் ஆசையென்னும்ஸ்நேகமுள்ளதாயிருப்பதனால் அஜ்ஞானத்தாலுண்டாகும்போகங்களால் ஆக்ரமித்து இந்தஸம்ஸாரசக்ரத்தில் பீடிக்கப்படுகிறது. [5]இந்தஉலகமானது போகவிருப்பத்தாலுண்டான அபிமானத்தால் பிடிக்கப்பட்டுக் கர்மத்தைச்செய்கிறது. அந்தக்கர்மமானது அஜ்ஞானத்திற்கும் சரீரத்திற்கும் சேர்க்கையுண்டாவதற்குக் காரணமென்று உபதேசிக்கப்படுகிறது. [6]காரணமானது கார்யத்தைப் [7] போய் அடைகிறதில்லை. அதுபோலக் கார்யமும் கார

---

1 'ப்ராணங்கள்' என்பது பழையவுரை.

2 'ஸுராஸுரா;' என்பது மூலம்; 'தேவஇயற்கைக்குரிய நற்குணங்களும் அஸுரஇயற்கைக்குரிய துர்க்குணங்களும்' என்பதுபழையஉரை.

3 வேறுபாடம்.

4 அதிகபாடமான ஒருஸ்லோகம் விடப்பட்டது.

5 இங்கு அதிகபாடமான முன்றரைஸ்லோகம் விடப்பட்டன.

6 இங்கு அதிகபாடமான அரைஸ்லோகம் விடப்பட்டது.

7 'கார்யமும் காரணமும் பசுவும் குதிரையும்போல வெவ்வேறான உருவமுள்ளவைகளென்று தார்க்கிகர்கள் கருதுகிறார்கள். சிலர் கார்யகாரணங்களுக்குப் பேதமும் அபேதமும் உண்டென்று கூறுகிறார்கள். இவ்விரண்டும் சாஸ்த்ரீயமல்லவென்று இவ்விடத்திலுள்ள கருத்து' என்பது பழையவுரை.

ணத்தையடைகிறதில்லை. இக்கார்யங்கள் காரணத்திலிருக்கின்றன. இதரகாரணங்களுடன்கூடிய காலமானது(அவைகளைவெளிபண்ணக்) காரணமாகிறது. எப்பொழுதும் புருஷனால் அடையப்பட்ட ப்ரக்ருதிகளும் விகாரங்களும் கர்மாவென்ற காரணத்தால் ஏவப்பட்டவைகளாகி ஒன்றையொன்று தொடர்ந்துகொண்டிருக்கின்றன. முன் சரீரத்திலிருந்து நழுவியஜீவன், ஸத்வம் ரஜஸ் தமஸ்என்ற குணங்களுடன்கூடின (இந்திரியம் மனமுதலிய) பொருள்களுடன்கூடியவனும் (மறுபிறப்புக்குக்) காரணமான கர்மம் அவித்யை வாஸனை இவைகளின் பலத்துடன்கூடியவனுமாகிப் புழுதியானது வாயுவால் ஏவப்பட்டுச் செல்லுவதுபோல க்ஷேத்ரஜ்ஞனை பரமாத்மாவை அனுஸரித்துச் செல்லுகிறான். அந்த ஆத்மாவானது மனமுதலிய அந்தப்பொருள்களுடன் சேர்க்கையடைகிறதில்லை. அந்தப் பொருள்களும் மஹாத்மாவான அந்த ஆத்மாவுடன் சேர்க்கை அடைகிறதில்லை. அறிவுள்ளவன் புழுதிகளின் சேர்க்கையில்லாத அந்த வாயுவானது எவ்விதம் புழுதிகளுடன் கூடியதாயிருக்கிறதோ அதுபோல மனத்துக்கும் ஆத்மாவுக்குமுள்ள இந்தவேற்றுமையைத் தெரிந்துகொள்ளவேண்டும். மனமுதலியவைகளுடன்கூடியவனை அந்த ஜீவன் அப்யாஸத்தால் திரும்பவும் ஸ்வபாவமான ஆத்மரூபத்தை அறியமாட்டான். ஆத்மவிஷயத்திலுண்டாகும் இந்த ஸந்தேஹத்தைச் சிறந்தஞானவேதமானது அறுத்திருக்கிறது. சக்ரவர்த்திலக்ஷணத்தைச் செய்துகொண்ட அரசனுக்குத் தனக்குரிய தர்மத்தைச் செய்யுங்காலத்திலுள்ள அறிவுபோல ஸுகம்பெறவும் துக்கத்தைவிலக்கவும் உபாயங்களை உபதேசிக்கும் கர்மவிதிகளில் அறிவிருக்கவேண்டும். தீயில் எரிக்கப்பட்ட விதைகள் திரும்பவும் முளையாததுபோல ஞானத்தால் எரிக்கப்பட்ட [1]கிலேசங்களுடன் திரும்பவும் ஆத்மா சேர்க்கையடைகிறதில்லை.

---

1 மகுடந்தரித்த அரசனுக்குரிய ராஜஸூயயாகமென்னும் தர்மத்தில் ப்ரவ்ருத்தித்த விசேஷியான அரசன் அக்காலத்தில் சரீரத்திலுள்ள ராஜலக்ஷணங்களை ஆத்மாவுக்கிருப்பதுபோலப் பாவிப்பவனானாலும் அச்சரீரம் போனபின் உண்டாகும் அந்த யாகத்தின் பயனை அடையுங்காலத்தில் அந்த லக்ஷணங்கள் ஆத்மாவுக்கில்லையென்று உண்மையை முன்னமேயே தெரிந்துகொள்வது போலக் காமங்களைச்செய்யுங்காலத்தில் ஆத்மாவுக்குச் சரீராதிகளுடன்சேர்க்கையிருப்பதுபோலப்பாவிப்பதிலும் அக்காமங்களின் பயனையடையும் காலத்தில் அவ்விதச்சேர்க்கை ஆத்மாவுக்கில்லையென்பது உண்மையென்பதிலும் கர்மகாண்டங்களுக்குக் கருத்து, என்று தெரிந்துகொள்ளவேண்டும்.

2 அவித்தை அகங்காரம் ராகம் த்வேஷம் மரணபயம் இவைகள் கிலேசங்கள்.

## இருநூற்றுப்பதினான்காவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(ஒரு குருவானவர் தம்சிஷ்யனுக்கு ஆத்மதத்வத்தைக் கூறியது; தொடர்ச்சி.)

ப்ரவ்ருத்திமார்க்கத்திலிருப்பவர்களுக்கு (வேறுவிருப்பமின்றி) ப்ரவ்ருத்தியென்னும் தர்மம் காணப்படுவதுபோல ஞானநிஷ்டையிலுள்ளவர்களுக்கு வேறுபொருளில் விருப்பமிராது. வேதங்களையறிந்தவர்களும் வேதத்தில் கூறப்பட்ட விதிகளில் நிலைபெற்றவர்களும் துர்லபர்கள். அவர்கள் மோக்ஷமென்னும் பயன் பெரிதாயிருப்பதால் அதனைக்கருதி மிகச்சிறந்த ஞானவழியை விரும்புகிறார்கள். சிலர் வேதத்தின்கருத்து ஞானவழியில் நிலைபெற்றிருப்பதை அறியவில்லை. ஸாதுக்களால் ஆசரிக்கப்பட்டிருப்பதால் இந்த ஞானவழியானது இகழத்தக்கதன்று. எதையடைந்து பரகதியென்னும் மோக்ஷத்தையடைகிறார்களோ அஃது இந்த ஞானமாகிறது. சரீரத்தில் அபிமானமுள்ளவன் அவிவேகத்தால் ராஜஸ தாமஸங்களான காமம் கோபமுதலிய குணங்களுடன்கூடி எல்லாப்பொருள்களையும் அடையமுயல்வான். ஆகையால், சரீரத்தைவிட்டு விலகுவதாகிய மோக்ஷத்தை அடையவிரும்புகிறவன் அசுத்தமானகர்மத்தைச் செய்யாமலிருக்கவேண்டும்; கர்மங்களாலுண்டாகும்சித்தசுத்தியென்ற மோக்ஷவழியைச்செய்துகொள்ளவேண்டி அழகான உலகங்களை அடையவிரும்பாமலிருக்கவேண்டும். புடம்போட்ட பொன்னானது இரும்புடன்சேர்க்கப்பட்டால் விளங்காமல்போவதுபோல மனத்திலுள்ள அழுக்குப்போகாதவனிடம் உபதேசிக்கப்படும் ஞானமானது விளங்காது. ஆதமாவின்குணத்தையடைந்தசிலர் ஸம்ஸாரசக்ரமென்ற பந்தத்திலிருந்து விடுபட்டவர்களாகிறார்கள். மற்றவர்கள் கஷ்டமான தவங்களுடன்கூடியவர்களும் அப்படியே துக்கத்தையே பெரிதாயடைகிறவர்களுமாயிருப்பார்கள். அவர்கள் தம் [1]கர்மத்திற்குறைத்ததானபிறவியில் திரும்பவும் திரும்பவும் பிறக்கிறவர்களும் எப்பொழுதும் கோபத்தாலும் லோபத்தாலும் மதத்தாலும் பிடிக்கப்பட்டவர்களும் அறிவற்ற மனமுள்ளவர்களுமாயிருப்பார்கள். மரத்தின்நீண்டநிழலானது நிலையுள்ளதாயில்லாததுபோல் (ஸம்ஸாரத்திலுள்ள) குணங்களும் நினைக்கத்தக்கவைகளாயிருக்கின்

1 ஒருசொல விடப்பட்டது.

றனவென்று அறிஞர்கள் அறிகிறார்கள். பேராசையால் காமத்தையும் கோபத்தையும்தொடர்ந்து தர்மவழியைமீறிச்சென்று அதர்மத்தைச் செய்கிறவன் மூலத்துடன் நாசமடைகிறான். சஞ்சலமான மனமுள்ளவன் உறுதியானஞானத்தையடையாமல் சஞ்சலமான பொருள்களை அடைவான். ஆகையால், சப்தமுதலியவிஷயங்களை மிக்கஆசையுடன் அடையமுயலாமலிருக்கவேண்டும். (அன்றியும்) கோபமும் ஸந்தோஷமும் துன்பமும் ஒன்றையொன்றுஅடுத்துஉண்டாகும். யாவற்றையும் அறிந்த மனிதன் குணங்களை அடையவேண்டும். கோபம் ஸந்தோஷம் ஸுகம் துக்கம் விருப்பு வெறுப்புமுதலான த்வந்த்வங்களை வெல்லவேண்டும். ஸத்வம் ரஜஸ் தமஸ்என்ற குணங்களுள்ளதும் ஐந்துபூதங்களையும்உருவமாகக்கொண்டதுமான சரீரத்தில் இந்தமனிதன் எதைத் துதிக்கிறான்? இகழ்ச்சியாய்ப்பேசிக்கொண்டு எதை நிந்திக்கிறான்? அறிவில்லாதவர்கள் ஸ்பர்சம் ரூபம் ரஸமுதலியவைகளில் பற்றுதலையடைகிறார்கள். மாறுபட்டஞானத்தால் தம் சரீரத்தைப் பூமியிலிருந்துண்டானகார்யமென்று அறிகிறார்களில்லை. மண்ணால் செய்யப்பட்டவீடானது மண்ணாலேயே எவ்விதம்பூசப்படுகிறதோ அதுபோலப் பூமியிலிருந்துண்டான இச்சரீரமானது பூமியின்கார்யமான அன்னத்தால் நாசமின்றி ஜீவிக்கிறது. தேனும்எண்ணெயும் பாலும் நெய்யும் மாம்ஸங்களும் உப்பும் வெல்லமும் தான்யங்களும் கனிகளும் கிழங்குகளும் ஜலத்துடன்கூடிய பூமியின்கார்யங்கள். அரண்யத்தையடைந்தமனிதன் எவ்விதம் உத்ஸாஹத்தையடையாமலும், ருசியில்லாததும் சரீரயாத்ரைக்குரியதும் அல்பமுமான ஆஹாரத்தைப்புஜித்துக்கொண்டிருப்பானோ அவ்விதமே ஸம்ஸாரமென்னும்அரண்யத்தையடைந்தமனிதன்விசேஷமானப்ரமமுள்ளவனும், நோயாளியானவன் மருந்தையுண்ணுவதுபோலச் சரீரயாத்ரைக்குமட்டில் வேண்டியஆஹாரத்தை உண்ணுகிறவனுமாயிருக்கவேண்டும். ஸம்ஸாரமார்க்கத்தால் விஷயங்களையடையவேண்டிச்செல்பவன், வழியைவிட்டுமீறி ஸஞ்சாரம்செய்பவன் துஷ்டமிருகங்களுக்கு இரையாவதுபோலாவான். ஆகையால், விஷயஸுகத்தைக்கருதிக்கொண்டு செல்லாமலிருக்கவேண்டும்; சென்றால் தப்புவழியிற் செல்வான். ஆகையால், துன்பமில்லாதவழியையடைந்து அதைத் தொடர்ச்சியாய் ஸ்மரிக்கவேண்டும். அரண்யத்தில் பலஇலைகளும் கனிகளுமுள்ளவைகளான பலமரங்களிருக்கின்றன. அவற்றைப் புஜிக்கும் முனிவர்களும் இருக்கின்றனர். ஆகையால், அரண்யமானது மிகச்சிறந்ததாகிறது. சாஸ்திரங்களாலும் யுக்திகளாலும் புக

மாலும் பராக்ரமத்தாலும் ஸத்யத்தாலும் சுத்தியாலும் நேர்மையாலும் [1]த்யாகத்தாலும் தேஜஸாலும் நன்னடக்கையாலும் பொறுமையாலும் தைர்யத்தாலும் புத்தியாலும் மனத்தாலும் ஆலோசனையாலும் முறையாக எல்லாப்பொருள்களையும் கிடைத்தமட்டில் அனுபவிக்க வேண்டும். சாந்தியைவிரும்பும்மனிதன் கம்பீரமானபுத்தியுடன் இந்த்ரியங்களை நன்றாயடக்கவேண்டும். ஜந்துக்கள் ஸத்வத்தாலும் ரஜஸாலும்தமஸாலும் அவிவேகத்தையடைந்து அஜ்ஞானத்தால்உருளை போல மிகவும் சுற்றிக்கொண்டிருக்கின்றன. ஆகையால், அஜ்ஞானத்தாலுண்டாகும் குற்றங்களை நன்றாய்ப் பரீக்ஷைசெய்யவேண்டும். அஜ்ஞானத்தாலுண்டாகும் அஹங்காரத்தை எப்பொழுதும் விலக்க வேண்டும். மஹாபூதங்களும் இந்திரியங்களும் ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற குணங்களும் சரீரத்திறகுக்காரணமென்று தெரிந்துகொள். ஆகையால், இவைகள் பகவானல்ல. அந்தப்பகவானையும் அருகில் செல்லக்கடினமான ம்ருத்யுவையும் உபாயத்துடன்சொல்லுகிறேன். ஈச்வரருடன்கூடியமூன்றுஉலகமும் அஹங்காரத்தில் நிலைபெற்றிருக்கின்றன. ஓரேநிலையுள்ளகாலமானது இவ்வுலகில் அந்தஅந்தருதுக்களுக்குரிய குணங்களைக்காண்பிக்கிறதுபோல ப்ராணிகளிடங்களில் அஹங்காரமானது [2]கர்மங்களைச்செய்விக்கக் காரணமாயிருக்கிறதென்று தெரிந்துகொள்ளவேண்டும். தமஸானது அவிவேகத்தையுண்டுபண்ணுவதும் கறுத்ததும் அஜ்ஞானத்திலிருந்துண்டானதுமாயிருப்பதென்று தெரிந்துகொள்ளவேண்டும். பிறகு, பெரிய அஹங்காரமானது ப்ரக்ருதியின் குணங்களிலிருந்து உண்டாயிற்று. அஹங்காரத்திற்குப்பிறகு திரும்பவும் ப்ராக்ருதியின்குணங்களிலிருந்து பூதக்கூட்டம்உண்டாயிற்றென்று கூறப்படுகிறது. அந்தக்குணங்களையும் கேள். அந்தமூன்றுகுணங்களையும் இன்பத்துடனும் துன்பத்துடனும்கூடியவைகளென்று தெரிந்துகொள். ஸத்வம் ரஜஸ தமஸ் என்ற குணங்களின் கார்யங்களைத் தெரிந்துகொள். தெளிவு ஸந்தோஷத்தாலுண்டாகும்ப்ரியம் ஐயமில்லாமை தைர்யம் நினைப்புஇவைகள் ஸத்வகுணத்தின்கார்யங்களென்றறியவேண்டும். ராஜஸகுணங்களையும் தாமஸகுணங்களையும் கேள். ஸந்தோஷமில்லாமை பொறுமை அதைர்யம் விஷயமுதலியவைகளில் த்ருப்தியில்லாமைஎன்ற இவைகள் ரஜோகுணத்தின்கார்யங்கள். பிறகு, தமோகுணகார்யங்களையும் கேள். அவிவேகம் மயக்கம் துக்கம் தூக்கம் சோம்பல் அஜாக்ரதை வ்ருத்தம் கார்யங்களில்தளர்ச்சியாயிருப்பது இவை

---

1 'வைராக்யம்' என்பது பழையஉரை. 2 வேறுபாடம்.

தமோகுணத்தின்கார்யங்கள். காமம் க்ரோபம் அஜாக்ரதை பேராசை அவிவேகம் பயம் சோர்வு வருத்தம் சோகம் ஊக்கமில்லாமை அபிமானம் கர்வம் நாஸ்திக்யம் இவைமுதலான தோஷங்களின்பலாபலத்தைப் பரீக்ஷைசெய்து இவைகளில் ஒவ்வொன்றும் மற்றவைகளைத் தொடர்ந்திருப்பதையும் மனத்தில் இவைகளுக்குள்ளநிலையையும் கவனித்துப்பார்க்கவேண்டும். இவ்வுலகம் எதில் நிலைபெறறிருக்கிறதோ எதுஇருக்கும்பொழுது நல்லஅறிவுவெளியில்செல்லுகிறதோ அந்த அஹங்காரமானது எல்லாப்பூதங்களையும்விட மேலானதென்று எப்பொழுதும் பார்க்கவேண்டும். ஸூக்ஷமமான தன்புத்தியால் எப்பொழுது இவ்விதம்பார்க்கிறவனாகிறானோ அப்பொழுதுதான் அதன் உருவம் நிர்மலமாய்த் தானாகத்தோன்றும்' என்றுசொன்னார்.

சிஷ்யன், '(முன்னோர்களால்) எந்தத்தோஷங்கள் மனத்தால் விலக்கப்பட்டன? எவைகள் புத்தியால் பலவீனமாக்கப்பட்டன? எவைகள் திரும்பவும் திரும்பவும் வருகின்றன? எவைகள் அவிவேகத்தால் [1]அசைவற்றனபோலிருக்கின்றன? அறிவுள்ளவன் புத்தியாலும் யுக்திகளாலும் எவைகளின் பலாபலத்தைக்கவனிக்க வேண்டும்? ப்ரபுவே! இவையாவற்றையும் நான் அறிந்துகொள்ளும்படி எனக்கு உபதேசிக்கவேண்டும். அறிவுள்ளவரே! கேட்கவிருப்பமுள்ளஎன்பொருட்டு இதைப் புத்தியில்நிச்சயித்தபடி சொல்ல வேண்டும். அறிவுள்ளவர்கள் ஒவ்வொருதோஷத்திலும் தொடக்கத்திலும் முடிவிலும் அதன்நீக்கத்திலும் எவ்விதம் யுக்திசொல்லப்படுமோ அவ்விதம்கூறுவார்களே' என்றுகேட்க, குருசொல்லத்தொடங்கினார் 'தோஷங்கள் மூலத்தில்அறுக்கப்படுவதால விசேஷமாய்ச் சுத்திபெற்றமனமுள்ளவனாயிருப்பவன் முக்தியடைவான். இரும்பானது இரும்பாலுண்டுபண்ணப்பட்ட விலங்கை எவ்விதம்அறுத்துவிட்டுத் தானும் முனையற்றுப்போகிறதோ அதுபோல ஞானவாஸனையுள்ளபுத்தியானது கூடப்பிறந்தவைகளும்ரஜோகுணத்தாலுண்டானவைகளுமான. தோஷங்களை நாசம்செய்து அவைகளுடன்கூடத் தானும் நாசமடைகிறது. கூடப்பிறந்தவைகளான தாமஸ தோஷங்களால் அழுக்குள்ளபுத்தியுடையவன் நாசமடைவான். பரிசுத்தமானபுத்தியுள்ளப்ராம்மணன் ஸத்வகுணத்திலிருந்துகொண்டு ஸமயங்களிலுண்டாகும் ராஜஸதாமஸதோஷங்களைப் புத்தியாலேயே விலக்கிக்கொள்ளவேண்டும். நல்லபுத்தியையடைந்து பரிசுத்தமான மனமுள்ளவனாயிருப்பவன் மனத்தால அந்தப்புத்தியையும் விலக்க

1 'பயனற்றவைகள்போல' என்பது வேறுபாடம்.

வேண்டும். ராஜஸமுதலிய அந்தத்தோஷமெல்லாம் சரீரிகளுக்கு (சரீரத்தையடையக்) காரணமாகிறது. அறிவுள்ளவனுக்கு ஸத்வ குணமானது ப்ரம்மத்தையடையக் காரணமாகிறது. ஆகையால், புத்தியுள்ளவன் ரஜோகுணத்தையும் தமோகுணத்தையும் விலக்க வேண்டும். ரஜஸாலும் தமஸாலும் விடுபட்ட ஸத்வகுணமானது கச டற்றநிலையையடையும். ராஜஸதாமஸங்களான உணவுகளையும் எப் பொழுதும் விலக்கவேண்டும். அவிவேகத்திலிருந்து விலகச்செய் யாதவைகளான அந்தஆகாரங்கள் ப்ரம்மத்தை அடையவிடா. மந் திரத்துடன்கூடிய யாகத்திலுள்ள மாம்ஸமுதலியவைகளிலும் பாவ முண்டென்று சிலர் கூறுவார்கள். (அது சரியன்று.)அந்தமாம்ஸமுத லியவைதாம் பரிசுத்தமானதர்மத்தைப் பரிபாலிக்கவும் சித்தசுத்தி வழியாக வைராக்யத்தைப்பெறவும் காரணமாகின்றன. ரஜோகுணத் துடன்கூடிய மனிதன் போகங்களுள்ளவைகளும் பொருள்களுள்ள வைகளுமான கார்யங்களைச்செய்வான்; போகங்களனைத்தையும்இடை விடாமல அனுபவிக்கமுயல்வான். தமோகுணத்தால் (பிறருக்குத்) துன்பத்தையுண்டுபண்ணுவதில் உத்ஸாஹமுள்ளவனும் சோம்பலுட னும் உறக்கத்துடனும்கூடியவனுமாயிருந்துகொண்டு பேராசையுள் ளவைகளும் கோபத்தாலுண்டானவைகளுமான கார்யங்களைச் செய் வான். ஸத்வகுணத்திலிருப்பவன் ஸாத்விகமும் பரிசுத்தமுமானபொ ருள்களையடைவதறகுப் பார்ப்பான். ஸத்வகுணத்தையடைந்த அந்த மனிதன் பரிசுத்தனும் ஸு[illegible]த்துள்ளவனும் ஸ்ரத்தையும்வித்தையு முள்ளவனுமாயிருப்பான்' என்றுசொன்னார்.

---

## இருநூற்றுப்பதினைந்தாவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(பரமாத்மஜ்ஞானமில்லாதவர்கள் படும்துன்பத்தையும் அத் துன்பம்விலகத்தக்க உபாயத்தையும் சொல்லியது.)

[1] பரதர்களிற்சிறந்தவனே! ரஜோகுணத்தாலும் தமோகுணத் தாலும் [2]மோஹம் உண்டுபண்ணப்படுகிறது. கோபம் லோபம் பயம்

---

1 'குருசொல்லத்தொடங்கினார்' என்றபாடம் ஸரியன்று. 'பரதர்ஷப!' என்றுஅழைத்து, உபதேசிக்கப்படும்வசனம் குருவின்உபதேசமாதல் பொருந் தாது.

2 உண்மைப்பொருளின உருவம் மறைதல, அது வேறுபொருளின் உருவமாய்த்தோற்றுதல இவ்விரண்டும் மோஹமென்றுகூறப்படும். இவை களில் முதலிலுள்ளது ஆவரணசக்தியின்கார்யமென்றும் இரண்டாவது விக்ஷேபசக்தியின்கார்யமென்றும் இவ்விரணடுசக்திகளும் முறையே தமஸ் ரஜஸ்என்ற பதங்களால் கூறப்படுகின்றனவென்றும் தெரிந்துகொள்க.

கர்வம் இவைகளைவிலக்கிக்கொள்வதால் மனிதன் பரிசுத்தனுவான். பரிசுத்தர்களானவர்கள் சிறந்தவரும் பரமாத்மாவும் தேவரும் அழிவில்லாதவரும் குறைவில்லாதவரும் ஸூக்ஷ்மமானஸ்திதியுள்ளவரும் தேவர்களில்மிகப்பூஜ்யருமான அந்தவிஷ்ணுவை அறிகிறார்கள். அந்தவிஷ்ணுவின்மாயையால் மறைக்கப்பட்ட அங்கங்களுள்ளவர்களும் ஞானத்திலிருந்து நழுவினவர்களும் போகங்களில்லாதவர்களுமானமனிதர்கள், பிறகு, புத்தியிலுள்ளபெரியஅவிவேகத்தால் ஆசையைஅடைகிறார்கள்; ஆசையிலிருந்து கோபத்தையடைந்து அதன்பிறகு லோபத்தையும் மோஹத்தையுமடைகிறார்கள். அவற்றிலிருந்து அபிமானத்தையும் கர்வத்தையும் அகங்காரத்தையும் அடைகிறார்கள். அந்தஅகங்காரத்திலிருந்து கார்யங்கள் உண்டாகின்றன. கார்யங்களால ஸ்நேஹப்பற்றையும் ஸ்நேஹத்திலிருந்து பிறகு சோகததையும் அடைகிறார்கள். அதன்பிறகு, துக்கத்திற்குக் காரணமான முயற்சியுள்ளவர்களும் பிறப்பிலும் கிழத்தனத்திலும் முயற்சிசெய்துகொண்டவர்களுமாகிறார்கள். பிறப்பில், சுக்லத்தாலும் சோணிதத்தாலும் உண்டானதும் மலமூத்திரங்களின்கசிவுள்ளதும் உதிரத்தின் உத்பத்தியால கசடுள்ளதுமான கர்ப்பவாஸததையடைகிறார்கள். ஆசைகளுக்கு வசப்பட்டவனும் அவைகளால் கட்டப்பட்டவனும் அவைகளையேதொடர்ந்து நான்குபுறத்திலும் ஸஞ்சரிப்பவனும் நரகக்குழியிலிருப்பவனும் ஆசையென்றகயிறுகளால கட்டப்பட்டவனும் புண்யபாவங்களால் ஏவப்பட்டஅங்கங்களுள்ளவனுமாகி அவன் புழுவைப்போலப் பிறக்கிறான். கொசுகுகளாலும் மூட்டைப்பூச்சிகளாலும் கடிக்கப்பட்டவனும் சித்ரவதைபோன்ற துன்பமுள்ளவனும் பலவிதநோய்களால் நிறைந்தவனுமாகிவருந்தி யௌவனப்பருவத்தை அடைகிறான். பிறவிகளுக்குத்தக்க கர்மங்களுக்கிடைபட்டுச் செல்லுகிறவனான அந்தமனிதன் பெண்ணென்கிறநரகததைப் பெற்றுக்கொண்டு தன் தன்ஸுகத்தை அடையவேண்டுமென்ற ஆசையால திரும்பவும் கயிறு போலக் கர்மத்தை நீளவிடுகிறான். பட்டணத்திற்கும் நிலத்திற்கும்வேண்டிப் படும்துன்பம் சொலலமுடியாது. அந்தஸமயத்தில் (அவனை) இகழ்ந்துபேசும் மனிதன் யார்? அவன் மிகவும் நரகத்தில் தபிக்கச்செய்யப்படுவான். அதிலிருந்து கிழத்தனத்திற்குச் சென்றால் அதிலும் திரும்பவும் கர்மததைச்செய்யத் தொடங்குவான். பிறகும், பகவான் துதிக்கப்படுவாரோவெனில (அங்கில்லை). உனக்கு அதிகமாய் என்னசொலலப்போகிறேன்? ஸம்ஸாரமென்ற யந்த்ரத்தை நடைபெறச்செய்கிறவர்கள் இவர்களென்று

தெரிந்துகொள்ளவேண்டும். அவர்கள் ப்ரக்ருதியென்னும் மாயையினுடைய க்ஷேத்ரங்களாயிருக்கிறார்கள். அந்தக்ஷேத்ரத்தில் மனிதர்கள் க்ஷேத்ரஜ்ஞரூபியாயிருக்கிறார்கள். ஆகையால்தான், மனிதன் ஸாமான்யமாயும் விசேஷமாயும் அவர்களை விலக்கவேண்டும். [1]க்ருத்யைபோன்ற கோரமானஉருவமுள்ள இந்தப்பெண்கள் அவிவேகிகளை மயக்குவார்கள். ஆகையால், ஸநாதனமாயிருக்கும்இந்திரியங்களின்உருவமானது ரஜோகுணத்தில் மூழ்கியிருக்கிறது. பெண்வடிவமுள்ளதான ஆசையென்னும்காரணத்திலிருந்து பிராணிகள் ஜனிக்கின்றன. தன்தேகத்திலிருந்துஉண்டானவைகளும் மனிதனென்று பெயரில்லாதவைகளுமானகிருமிகளை அங்கத்திலிருந்து விலக்குவதுபோலத் தானல்லாதவைகளும் மனிதனென்றுபெயருள்ளவைகளுமானமக்களாகியகிருமிகளையும் விலக்கவேண்டும். இயற்கையினாலோ கர்மவசத்தினாலோ சரீரத்திலுள்ளசுக்லத்திலிருந்தும் வேர்வையிலிருந்தும் ஜந்துக்கள் உண்டாகின்றன. புத்தியுள்ளவன் அவற்றைஉபேக்ஷிக்கவேண்டும். ரஜோகுணமானது தமோகுணத்தில லயத்தைஅடைகிறது. ஸத்வகுணமும் ரஜோகுணத்தில் லயப்பட்டிருக்கிறது. (இவ்விதமானலயஸ்தானமும்) புத்திக்கும் அகங்காரத்திற்கும் காரணமுமான அஞ்ஞானமானது ஞானஸ்வரூபத்தில் லயப்படுகிறது. சரீரிகளுக்கு (சரீரமுண்டாகும்விஷயத்தில்) அவ்விதஅஞ்ஞானத்தைக் காரணமென்றுகூறுகிறார்கள். அந்த அஞ்ஞானத்திறகும் மூலமானஞானமானது ஜீவனென்றுபெயருள்ளதாயிருக்கிறது. காலத்துடன்கூடியகர்மத்தால ஸம்ஸாரத்தில் சுழலுதலுண்டாகிறது. இந்தஜீவன் கனவில சரீரமுள்ளவன்போலமனததால் எவ்விதம்விளையாடுகிறானோ அதுபோலக் கர்மங்களைஉள்ளில்கொண்டகுணங்களால் (தாயின்) கர்ப்பததில் காணப்படுகிறான். (கர்ப்பத்திலிருக்குமிவன்) காரணபூதமானகர்மத்தால் எந்தஎந்தஇந்திரியததைநோக்கி ஆசையுறறமனத்தினால ஏவப்படுகிறானோ அந்தஅந்தஇந்திரியமானது அகங்காரத்திலிருந்து (இவனுக்கு) உண்டாகிறது. விஷயபாவனையுடன் கூடியமனமுள்ளஇந்தஜீவனுக்குச் சப்தங்களிலுள்ளஆசையால செவி உண்டாகிறது. அதுபோல ரூபத்திலுள்ள ஆசையால் கண்ணும் மணத்தைஅறியும்ஆசையால் மூக்கும் ஸ்பர்சத்திற்காக [2]த்வக்கும் அதுபோலச் சரீரம்நடைபெறவேண்டிப் பிராணன், அபா

1 துன்பம்செய்யும் ஒருபெண்தேவதை. 'பகைவர்களைக்கொல்வதற்காக மந்திரத்தினால் படைக்கப்பட்ட ஒருசக்தி' என்பது பழையஉரை.

2 வேறுபாடம்.

னன், வியானன், உதானன், ஸமானன்என்னும் ஐந்துவித மானவாயுவுமுண்டாகின்றன. மனிதன் நன்றாகஉண்டானவை களும் கர்மத்தாலுண்டானவைகளும் ஆதியிலும்முடிவிலும்மத்தியி லும்துக்கமுள்ளவைகளும் சரீரத்தைச்சேர்ந்தவைகளும்மனத்தைச் சேர்ந்தவைகளுமான அங்கங்களுடன் [1]ப்ரம்மத்தினாற்சூழப்பட்டுப் பிறக்கிறான். (சரீரத்தை) அடைவதால் துக்கமுண்டாகிறதென்று தெரிந்துகொள்ளவேண்டும். அந்தத்துக்கமானது (சரீரத்தில்) அபி மானத்தாலும் சரீரத்தைவிடுவதென்னும்மரணத்தாலும் வளர்ச்சி அடைகிறது. அக்காரணங்களிலிருந்து உண்டாகும் துக்கத்தைத் தடைசெய்துகொள்ளவேண்டும். அதன் தடையை அறிந்தவன் முத்திபெறுவான். இந்திரியங்களுக்கு உற்பத்தி லயம்இரண்டும் ரஜோகுணத்தில்தான் என்று பரீக்ஷைசெய்து சாஸ்திரமென்னும்கண் ணால் உள்ளபடி அறிந்துகொண்டு ஸஞ்சரிக்கவேண்டும். ஞானேந் திரியங்கள் இந்திரியங்களுக்குரியவிஷயங்களை (அடைந்தாலும்) ஆசையற்றமனிதனைப் பற்றுகிறதில்லை. பொறிகள் [2]விலகிப்போ னால் ஜீவனானவன் திரும்பவும் சரீரத்தை அடையத்தக்கவனாக மாட்டான்.

---

## இருநூற்றுப்பதினாருவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(பரமாத்மாவை அறிவதற்கு உபாயமான பிரம்மசர்யமுதலியவற்றை விளக்கியது.)

இந்திரியங்களை வெல்லும் விஷயத்தில் உபாயத்தை உள்ளபடி சொல்லுகிறேன். அரசனே! சாஸ்திரமென்னும் கண்ணால்தத்வஜ்ஞா னத்தைஅடைந்து (சமமுதலியகுணங்களை) அனுஷ்டிப்பவன் உத்தம கதியைப்பெறுவான். எல்லாப்பிராணிகளுள்ளும் மனிதன் மிகச் சிறந்தவனென்று சொல்லப்படுகிறான். மனிதர்களுள்பிராம்மணர்களை யும் ப்ராம்மணர்களுள் மந்திரங்களைக்கண்டரிஷிகளையும் மிகச்சிறந்த வர்களென்று கூறுகிறார்கள். அந்தப்ராம்மணர்கள் எல்லாப்பிராணி களுக்கும் ஆத்மாவைப்போன்றவர்களும்எல்லாவற்றையும்அறிந்தவர் களும் எல்லாவற்றையும்கண்டவர்களும் வேதங்களையும் சாஸ்திரங் களையும் அறிந்தவர்களும் தத்வார்த்தங்களில் நிச்சயமடைந்தவர்களு மாயிருப்பார்கள். கண்ணில்லாதவொருவன் வழியில் கஷ்டங்களையடை

---

1 'சரீரத்துடன்' என்பது வேறுபாடம். 2 வேறுபாடம்.

வதுபோல ஞானமில்லாதவன் உலகத்தில் கஷ்டங்களை அடைவான். ஆகையால், [1]ஞானத்தையடைந்தவர்கள் மேலானவர்களாகிறார்கள். தர்மத்திலிருப்பமுள்ளவர்கள் சாஸ்திரத்தில்சொல்லியபடி அந்த அந்தத்தர்மங்களை உபாஸிக்கிறார்கள். அவர்களுக்கு [2]மனமொழிமெய்களின் பரிசுத்தி, பொறுமை, ஸத்யம், தைர்யம் மறதியில்லாமை இந்தக்குணங்களைத்தவிர வேறு [3]பொதுவானபொருளில்லை. தர்மமறிந்தவர்கள் எல்லாத்தர்மங்களிலும் சுபமானகுணங்களை அறிவிக்கிறார்கள். [4]ப்ரம்மத்தின்ஸ்வரூபம்போன்ற இந்தப்ரம்மசர்யமென்று கூறப்படுகிற தர்மமானது எல்லாத்தர்மங்களையும்விட மேலானது. அதனால் பரகதியென்னும்மோக்ஷத்தை அடைகிறார்கள். அந்தப்ரம்மரூபமானது லிங்கசரீரத்தின்பற்றுதலில்லாததும், சப்தமும்ஸ்பர்சமுமில்லாததும், செவியென்னும்உபாதியால் சப்தத்தைப்பற்றியஅறிவுரூபமும், கண்ணென்றஉபாதியால் ரூபங்களின் அறிவுமாயிருக்கிறது. வாக்கால்சொல்லத்தக்கவிஷயமுள்ளதும்(இந்திரியங்களின்) ஸம்பந்தமில்லாததும் மனத்திலுள்ளதும் கல்மஷமில்லாததுமானப்ரம்மசர்யத்தைப் புத்தியால் நிச்சயம்செய்யவேண்டும். (ப்ரம்மசர்யத்தில்) ஒழுங்காகநடப்பவன் ப்ரம்மலோகத்தையடைவான். நடுநிலைமையுள்ளவன் தேவர்களையடைவான். தாழ்ந்தநிலைமையை அடைந்தவன் அறிவுள்ளபிராம்மணஸ்ரேஷ்டனாகப்பிறப்பான். ப்ரம்மசர்யத்தையனுஷ்டிப்பது மிகக்கடினம். அதற்குத்தக்கஉபாயத்தை என்னிடம் கேள். பிராம்மணன் மிகக்கோபமுள்ளதும் வேகமுள்ளதுமானமனத்தை அடக்கவேண்டும்; பெண்களைப்பற்றியகதைகளைக் கேட்கக் கூடாது, ஆடையில்லாதபெண்களைப் பார்க்கக்கூடாது. எவ்விதமாவது இந்தப்பெண்களைக்கண்டால் வன்மையற்றவர்களுக்கு ரஜோகுணத்தால் காமம் உண்டாகும். காமமுண்டானவனானால் க்ருச்ரமென்னும்விரதத்தைச் செய்யவேண்டும். ஒருநாளைக்குமூன்றுமுறை ஜலத்தில் முழுகவேண்டும். ஜலத்திலமுழுகிக்கொண்டேமனத்தால அகமர்ஷணமென்னும்மந்திரத்தை மூன்றுமுறை ஜபிக்கவேண்டும். பண்டிதனானவன் இவ்விதம் உள்ளிலுண்டான ரஜோகுணஸ்வரூபமானபாவத்தை அறிவுடன்கூடியதும் நீண்டஆலோசனையுள்ளதுமானமனத்தால் பரிக்கவேண்டும். மலத்துடன்கூடிய குணபமென்

1 'ப்ரம்மத்தை அறிந்தவர்கள்' என்பது பழையஉரை.

2 'காமமில்லாமை மனத்தின்சுத்தி, பொய்சொல்லாமை மொழியின் சுத்தி, கொல்லாமை மெய்யின்சுத்தி' என்பது பழையஉரை.

3 மோக்ஷம் என்பது பழையஉரை.

4 ப்ரம்மத்தையடைய ஸாதனமான என்பது கருத்து.

னும்பையான துஇடைவெளியில்லாமல்கட்டப்பட்டிருக்கிறதுபோலச் சரீரத்தை அடைந்தஆத்மாவானது சரீரமென்ற பந்தமுள்ளதென்று அறிந்துகொள்ளவேண்டும். துர்க்கந்தமான மலத்துடன்கூடியதும் ஓட்டையில்லாததுமானஒன்றில் கட்டப்பட்டிருந்த ஒருஜந்துஎப்படி யிருக்குமோ அப்படியிருப்பதாகவே தேகத்தில்புகுந்து அமைக்கப் பட்டிருக்கிறஆத்மாவையும் அறியவேண்டும். மலங்களால்நிறைந்த தும், ஸ்லேஷ்மங்களின் அம்சங்களால்நிறைக்கப்பட்டிருக்கிறதுமான அந்தப்பாண்டத்தை மனிதன் பார்க்கவிரும்பமாட்டான்; தொடமுய ல்வானென்பது எங்கே? மலங்களால்நிறைந்ததும் வெளியில்வேர்வை நீரால்சூழப்பட்டதும் அருவருக்கத்தக்கதுமான ஆண்பெண்களுடைய சரீரமென்னும்பாண்டமானது நரகமென்பது அறிவுள்ளவர்களுடைய கொள்கை. ஓட்டைக்குடத்திலுள்ளஜலமானது நிச்சயம் ஒழுகிப் போவதுபோலப் பிராணிகளின்சரீரங்களினுள்ளிருக்கும் ஜலமானது ஒழுகுகிறது. ஸ்லேஷ்மமும் கண்ணீரும் மூத்திரத்தின்பிந்துவும் மலமும் சுக்லமும் பிசுக்குள்ள கபக்கூட்டத்தின்பெருக்கமும்உண் டாகின்றன. மனமே! (இவைகளிலிருந்து) விடுவி. ரஸங்கள், நாடிக்கூட்டங்களின்வழியாக மனிதர்களின் வாதத்தையும் பித்தத் தையும் கபத்தையும் உதிரத்தையும் தோலையும் மாம்ஸத்தையும் நரம்பையும் எலும்பையும் மஜ்ஜையையுமுடைய சரீரத்தைத் திரு ப்திசெய்கின்றன. ஐந்துஇந்திரியங்களுக்குமுரிய சக்தியை அளி ப்பவைகளான [1]பத்துநாடிகள் இச்சரீரத்தில் இருக்கின்றனவென்று தெரிந்துகொள்ளவேண்டும். அந்தப் பத்துநாடிகளிலுமிருந்து ஸூ க்ஷ்மமானவேறுநாடிகள் ஆயிரக்கணக்காக உண்டாகின்றன. இவ் விதம் ஆறுகள் கடலைத்திருப்திசெய்வதுபோல, ரஸமென்னும் ஜல முள்ள இந்த நாடிகளென்னும்நதிகள் தேகமென்னும்கடலைக் கால த்திற்குத்தக்கபடி திருப்திசெய்கின்றன. அவைகளுள், ஹ்ருதய மென்றமாம்ஸபிண்டத்தின்நடுவில் மனத்தைத்தரிப்பதான ஒருநாடி யானது காமத்தாலுண்டாகும்மனிதர்களின்சுக்லத்தை எல்லா அங் கங்களிலிருந்தும் விடுகிறது. எல்லா அங்கங்களிலும் படர்ந்தவைக ளும் அந்தமனோநாடியைத்தொடர்ந்தவைகளுமான நாடிகள் பிரகாச மென்னும்குணத்தைத் தாங்கிக்கொண்டு கண்களிற்செல்லுகின்றன. பாலில்மறைந்திருக்கும்நெய்யானது மத்துக்களால் கடைந்து வெளி யிடப்படுகிறதுபோலச் சுக்லமானது சரீரத்திலுள்ளஸங்கல்பத்தா

---

1 முன்கூறிய வாதமுதலிய பதார்ப்பாகங்களைத் திருப்திசெய்தவைக ளான பத்துநாடிகள்.

லுண்டானமதத்துக்களால் கடைந்து வெளியிடப்படுகிறது. இவ்வி தம் கனவிலும் மனத்திலுள்ள ஸங்கல்பத்தாலுண்டாகும் காமமா னது உண்டாகிறபொழுது இந்தமனிதனுடைய மனோவஹநாடி கள் (ஸ்திரீசரீரத்தின்) பற்றுதலில்லாமலே உண்டாகும்சுக்லத் தைச் சரீரத்திலிருந்து வெளியிடுகின்றன. பூஜ்யரான அத்ரிமஹ ரிஷியானவர் அந்தச்சுக்லத்தின்உற்பத்தியை அறிகிறார். [1]புருஷர் களின்பீஜமான சுக்லமானது இந்திரனைத் தேவதையாகக்கொண் டது. ஆகையால், அது இந்திரியமென்று சொல்லப்படுகிறது. சுக்ல மானது (வேறுஇடத்திற்குச்) செல்லுவதே பிராணிகளின் ஜாதிஸங் கரத்திற்குக்காரணமென்று தெரிந்துகொள்ளுகிறவர்கள் காமமற்ற வர்களும்தோஷங்களை எரித்தவர்களுமாகிச்சரீரோற்பத்தியை அடைய மாட்டார்கள். சரீரம்நடைபெறவேண்டியதற்குரிய கர்மத்தைமட்டில் செய்கிறவனும் (யோகசக்தியுள்ள) மனத்தாலேயே முக்குணங்களும் ஸமமாயிருக்கும் நிலைமைக்கு வரும்படிசெய்து முடிவுக்காலத்தில் [2] பிராணன்களை மனோவஹநாடியில் செல்லும்படி செய்கிறவனுமாயி ருப்பவன் முக்திஅடைகிறான். மனந்தான் பலவிதமாயுண்டாகிறதென் னும்அறிவானது மனத்திற்கு உண்டாகவேண்டும். அவ்விதமஹாத் மாக்களின்மனமானது மந்திரவித்தியுள்ளதும் பிரகாசமுள்ளதும்நித் யமும் ரஜோகுணமில்லாததுமாகிறது. ஆகையால், அந்தமனத்தை நாசம்செய்யவேண்டிச் சுத்தமானகர்மத்தைச் செய்யவேண்டும். சரீ ரத்திற்குக் காரணமானது இந்தக்கர்மத்திலுண்டானதாயிருக்கிறது. அறிவுள்ளபுத்திமானானவன் அவ்விதக்கர்மத்தை நினையாமலும் செய் யாமலுமிருக்கவேண்டும். ரஜஸையும்தமஸையும்விட்டபின்(மனிதன்) இவ்வுலகத்தில் தாழ்ந்தகதியைஅடையமாட்டான். இளமைப்பருவத் தில் அடையப்படும்.அறிவானது கிழத்தனத்தால் வலிமையில்லாதநிலையை அடைந்ததாகலாம். நன்றாகப்பக்குவமானபுத்தியுள்ளவன்முன்னுள்ள பாக்கியத்தால் மனத்திலுள்ளபலத்தை அடைகிறான். மனிதன்இவ் விதம் மக்களிடத்திலும் மனைவிகளிடத்திலும் ஞாதிகளிடத்திலும் ஸம்பந்திகளிடத்திலும் உறவினர்களிடத்திலும் மனத்தில் ஆசையை அடைகிறான்; வியாதிமுதலியவைகளால் பீடிக்கப்பட்டு அங்குமிங் கும்ஓடி அல்பஸுகத்தையும் அடையாமல் பல துக்கங்களால் கஷ்டப் பட்டுப் பிறகு வெறுப்பைஅடைந்து ஞானமென்னும் ஸம்மதத்தைஅடுத்

---

1 'த்ரிபீஜம்' என்று பாடங்கொண்டு, 'அன்னங்களின் ரஸம், மனோவஹ நாடி, காமம் இந்தமூன்றையும் காரணமாகக்கொண்ட சுக்லமானது' என்பது பழையஉரை. 2 வேறுபாடம்.

துப் பிறகு ஸுகத்தைப்பெறுவான். மிகவும்கஷ்டமானவழியைத் தாண்டியபின் உறுதியான நற்குணங்களுள்ளஇடத்தைப்பார்ப்பது போலத் தோஷங்களைவிட்டு விலகிச்சென்றவன் மோக்ஷத்தையடைகிறான்.



## இருநூற்றுப்பதினேழாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

(வைராக்யமுதலிய மோக்ஷகாரணங்கள்.)

பிராணிகள் முடிவில்கஷ்டமானவிஷயங்களில் பற்றுதலுள்ளவைகளாயிருந்துகொண்டு கஷ்டப்படுகின்றன. இவைகளில்பற்றுதலில்லாதமஹாத்மாக்கள் உத்தமமானகதியை அடைகிறார்கள். புத்தியுள்ளவன் உலகமானது ஜனனம், மரணம், கிழத்தனம், துக்கங்கள், நோய்கள், மனத்திலுள்ளதுன்பங்கள்இவைகளால் நிரம்பியிருப்பதைக்கண்டு மோக்ஷத்திற்காக முயலவேண்டும்; வாக்காலும் மனத்தாலும் சரீரத்தாலும்பரிசுத்தனும் அகங்காரமில்லாதவனுமாயிருக்கவேண்டும்; மிக்கஅடக்கமுள்ளவனும் அறிவுள்ளவனும் பிச்சை எடுப்பவனும் விருப்பமில்லாதவனுமாகி ஸுகமாகஸஞ்சரிக்கவேண்டும். மோக்ஷத்தையடைந்தவர்களுக்கு ஸம்ஸாரபாசங்கள் அடங்கியவைகளாயிருக்கின்றன. அந்தப்பாசங்களைவெளியிடத்தக்க (அஜ்ஞானத்தின்) ஸ்வரூபத்தை அறிவது கடினமென்றுதெரிந்துகொண்டிருந்தாலும் அவிவேகமுள்ளமனிதன் அந்தக்ஷணமே அபிமானத்தை அடைவான். இவ்விதம்பார்ப்பதும் பந்துக்களிடத்தில்ஸ்நேகசிந்தையுள்ளதும் பேதருபதகூடனிருப்பதுமான ஆத்மாவை நான் உள்ளபடி இல்லாததாகநினைக்கிறேன். அன்றியும், பிராணிகளிடம் தயைபாராட்டுவதாலும் மனத்திற்குஅபிமானமுண்டாகிறதென்றுதெரிந்துகொள்ளவேண்டும். உலகமானது கர்மத்தின்பயனென்றுதெரிந்துகொண்டு பிராணிகளிடம்தயைசெய்வதிலும் உபேக்ஷைசெய்யவேண்டும். நல்வினையோ தீவினையோ எதுசெய்யப்பட்டிருக்கிறதோ அதை உலகம்) அடையும். ஆகையால், புத்தியாலும் செய்கைகளாலும் நல்வினைகளையே செய்யவேண்டும். ஹிம்ஸையில்லாமை உண்மையுரைப்பது எல்லாப்பிராணிகளிடத்திலும்நேர்மை பொறுமை அஜாக்ரதையில்லாமைஇவைகள் எந்தமனிதனிடமிருக்கின்றனவோ அவன்

ஸுகமுள்ளவனாயிருப்பான். [1]சிறந்ததும் எல்லாப்பிராணிகளுக்கும் ஸுகத்தையளிப்பதுமான இந்தத்தர்மமானது துக்கத்திலிருந்து விலகுவிப்பதென்று தெரிந்துகொள்ளுகிற உண்மையை அறிந்தவன் ஸுகமுள்ளவனாவான். ஆகையால், புத்தியால் ஸமாதானமுள்ள மனத்தைப் பிராணிகளிடம் வைக்கவேண்டும். கேடு நினைக்கக் கூடாது. ஒன்றையும் விரும்பக்கூடாது. [2]தகாததையும்இகழ்ச்சியான தையும் சிந்திக்கக்கூடாது. அன்றியும், பழுதில்லாதமுயற்சியுடன் மனத்தை ஞானத்தில பிரவேசிக்கச்செய்யவேண்டும். நல்மொழி கூறுவதால் அழகானஞானம் உண்டாகத்தொடங்கும். கூறத்தக்க வசனத்தைப் பகுத்தறிந்துகொண்டு தர்மத்தின்ஸூக்ஷ்மத்தையும் தெரிந்துகொண்டு உண்மையுள்ளதும் கேடில்லாததும் பிறர்குற்றத் தைவெளியிடாததுமான வசனத்தைச் சொல்லவேண்டும். வஞ்சக மில்லாததும் குரூரமில்லாததும் கேடில்லாததும் பிறர்குற்றத்தைவெ ளியிடாததும் இவைபோன்றதுமான வசனத்தைச் சலித்தலில்லாத மனத்துடன் மிதமாய்ப் பேசவேண்டும். ஸம்ஸாரத்தின்நிலையானது சொல்லால் நிலைபெறுகிறதன்றோ? வைராக்யத்துடன் பேசுவாராகில் நல்லபுத்தியால்அனுக்ரஹிக்கப்பட்ட மனத்துடன் தமோகுணத்தா லுண்டான (தன்னுடைய) கர்மத்தைச் சொல்லிக்கொள்ளலாம். ரஜோகுணத்தையடைந்த கருவிகளுடன கர்மங்களையடைகிறவன் இவ்வுலகில் துக்கத்தையடைந்து நகரத்திற்குரியவனாவான். ஆகை யால், மனத்தாலும் வாக்காலும் சரீரத்தாலும் தனக்குத்தெரியததை உண்டுபண்ணிக்கொள்ளவேண்டும். விபரீதமானதிக்கென்று அறிந்து கொண்டும் (அதில்செல்லுகிறவனுடைய) நிறைந்தஉடைமையானது திருடர்களால் அபஹரிக்கப்படுவதுபோல ஸம்ஸாரத்தை அறிந்து கொண்டும் (அதில்செல்லுகிற அறிவில்லாதவர்கள் (ஆசைகளால்) அபஹரிக்கப்படுகிறார்கள். ஸம்ஸாரமார்க்கத்தை அடைந்திருப்ப வன் விபரீதவழியைவிடவேண்டும். அவ்விதவிபரீதத்திக்கில (சென்ற வனே) திருடர்களைக்கொன்றபின எவ்விதம் க்ஷேமத்தை அடை கிறானோ அதுபோல (ஸம்ஸாரத்திலிருப்பவன்) ராஜஸதாமஸங்களான கர்மங்களைவிட்டபின் க்ஷேமத்தையடைவான். சேஷ்டைகளைவிட்ட வனும் ஆசைப்படத்தக்க எல்லாப்பொருள்களிலிருந்தும்விடுபட்டவ னும் ஜனங்களில்லாதவிடத்தில ஸஞ்சரிப்பவனும் லகுவான ஆகார

---

1 அதிகபாடமான இரண்டுமூலோகம் பொருத்தமின்மையால் விடப் பட்டன.

2 'தகாததை விரும்பக்கூடாது. சௌர்யத்தையும் துர்வர்த்தையும்பற்றிச் சிந்திக்கக்கூடாது' என்பது பழையஉரை.

முள்ளவனும் (மனத்தின்ஏகாக்ரபாவமென்ற) தவமுள்ளவனும் இந்திரியங்களையடக்கினவனும் ஞானததால கிலேசங்களை பரிந்தவனும் ஸமாதிக்குரியஅங்கங்களை அனுஷ்டிப்பதில் உற்சாகமுள்ளவனுமான புத்தியுள்ளமனிதன் ஆசைவற்றதான மனத்தால மேலான அந்தப்ரம்மத்தை ஸந்தேகமில்லாமல் அடைகிருன். தைரியமுள்ளவனும் புத்தியுள்ளவனுமானமனிதன் ஸந்தேகமின்றிப் புத்தியை அடக்கிக் கொள்ளவேண்டும். புத்தியால்மனத்தையும் தன்னுடையமனத்தால் விஷயங்களையும் அடக்கிக்கொள்ளவேண்டும். ஆசைவற்றதான மனத்தை அந்தப்பரமாத்மாவிடத்தில் லயிக்கும்படிசெய்து ஸமாதியில் உறசாகத்துடனிருப்பவனுக்கு அந்தப்ரம்மமானது நன்கு விளங்கும். எல்லாப்பொருள்களின் உட்பொருளுமானபிரம்மததில் நிலைபெற்றிருப்பதை ஏகாந்தநிலைஎன்று தெரிந்துகொள். காரண ஸ்வரூபமானப்ரம்மத்தின்விசேஷநிலையைக்கூட விசேஷங்களில்லாத சுத்தப்ரம்மரூபமாக (ப்பெரியோர்கள்) அறிகிருர்கள். அல்லது, அவ்விதமானபரமாத்மரூபததில் நிலைபெறறிருக்கச்சக்தியறறவனுயிருப்பானுகில ஸமாதியிலபுத்தியுள்ளவனுகி வருங்காலததில தத்வததை வெளியிடத்தக்கயோகமுறையைச் செய்யத்தொடங்கவேண்டும். இந்திரியங்களையடக்கிக்கொண்டவனும் மனத்தைத்தன்வரமாகச்செய்து கொண்டவனுமான இந்தயோகிக்கு அநதஇந்த்ரியதேவதைகள் பிரகாசிக்கிருர்கள். அவர்கள் ஸந்தோஷமுள்ளவர்களாகி அந்தாஸ்வரரைப்பற்றிச் செலலுகிருர்கள். அந்தத்தேவதைகளுடன் ஒன்றுசேர்ந்தமனமுள்ளவனுக்குஅந்தப்ரம்மமானது நன்குவிளங்கும். காலக்கிரமத்தில் ஸத்வகுணமும்விலகியவுடன் அவன் ப்ரம்மபாவத்திற்குத் தக்கவனுகிருன். யோகியானவன் பிறருக்குவெளியாகும்நிலைமையிலிருக்கக்கூடாது. யோகஉபாயங்களைத தொடங்கவேண்டும்; யோக உபாயத்திற்குரியஆசாரம் எதுஎதுவோ அதை அதைச் செய்துகொள்ளவேண்டும்; அவல், சுண்டல, பிண்ணாக்கு, காய்கள், பிட்டு, மா, கிழங்கு, கனி, பக்ஷணம் இவைகளைப் பரியாயமாக உபயோகப்படுத்திக்கொள்ளவேண்டும்; ஸாத்விகனுயிருந்துகொண்டு எது யோகாப்யாஸத்திற்கு அனுகூலமாயிருக்கிறதோ அதைபபரீக்ஷிதது்த் தேசத்திற்கும்காலததிறகும்தக்க ஆகாரநியமத்தை அனுஸரிக்கவேண்டும். கர்மத்திற்குவேண்டி (யோகத்திறகு) இடையூறு செய்யக்கூடாது. அக்னியைப்போல ஞானத்தை மெள்ளமெள்ள வளரச்செய்யவேண்டும். அவ்விதம் ஞானததாலவிளங்கச்செய்யப்படும் ப்ரம்மமானது ஸூர்யன்போல நன்கு பிரகாசிக்கும். ஞானரூபியான ஆத்மாவை

அடுத்திருக்கும் அஜ்ஞானமானது (ஜாக்ரமுதலான) மூன்று அவஸ்தைகளைப் பிடித்துக்கொண்டிருக்கிறது. ஞானரூபியான ஆத்மாவானது புத்தியால்தொடரப்பட்டு அஜ்ஞானத்தாலுண்டாகும்மயக்கத்தால் பிரகாசமற்றதுபோலிருக்கிறது. மூன்று அவஸ்தைகளைவிட வேறாயிருக்கும் ஆத்மாவை அந்த அவஸ்தைகளுடன் பற்றுதலுள்ளதாக நினைப்பவனும் சாஸ்வதமானசுத்தஆத்மாவைத் தூஷிப்பவனுமானவன் அந்தஆத்மாவை அறியமாட்டான். மூன்றுஅவஸ்தைகளைவிட வேறானநிலையும் அந்தஅவஸ்தைகளுடன் பற்றுதலுள்ளநிலையுமான அவ்விரண்டனுள் மோக்ஷத்திற்குரியநிலையை அறிந்தவனும்ஆசையற்றவனுமானமனிதன் முக்தியடைகிறான். காலத்தைவென்றவன்கிழத்தனத்தையும்மரணத்தையும்வென்று அழிவில்லாததும் மாறுபாடற்றதும் மோக்ஷரூபமும் ஸநாதனமுமானப்ரம்மத்தை அடைகிறான்.

---

## இருநூற்றுப்பதினெட்டாவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(பரமாத்மாவை அறியும்வகை.)

கல்மஷமில்லாமல் எப்பொழுதும் ப்ரம்மசர்யமென்றயோகத்தைச்செய்யவிரும்புகிறவன் நித்திரையிலுள்ள குற்றத்தைக்கண்டுகொண்டு நித்திரையை முழுமையும் விலக்கிக்கொள்ளவேண்டும். மனிதன் நித்திரையில் ரஜோகுணத்தாலும் தமோகுணத்தாலும் கீழாகச்செய்யப்படுகிறான்; தன்னினைப்பில்லாதவனாகி வேறுசரீரத்தையடைந்தவன்போல ஸஞ்சரிக்கிறான். ஆத்மாவைவிசாரிப்பதற்காக இடைவிடாமல் ஞானப்பயிற்சியுடனிருந்தால் மனிதன் விழித்துக்கொண்டிருப்பான். விசேஷமாய் ஞானத்தில்விடாமுயற்சியிருந்தால் அந்தமனிதன் எப்பொழுதும் இரவின்றி விழித்துக்கொண்டிருப்பான். இவ்விஷயத்தில், 'கனவில் விஷயங்களுடன்கூடியதுபோலுள்ள (தேகமுதலிய) இப்பொருள் எதுவாயிருக்கலாம்? நன்றாக லயத்தையடைந்த இந்திரியங்களையுடைய மனிதன் சரீரமுள்ளவன்போலிருக்கிறானே' என்று சிலர் வினவுகிறார்கள். இவ்வினாவிற்கு விடை கூறப்படுகிறது. யோகிகளுக்குத்தலைவரான ஸ்ரீஹரியானவர் இவ்விஷயத்தை எவ்விதம் அறிகிறாரோ அவ்விதம் இதை யுக்திக்குப் பொருத்தமானபொருளுள்ளதாக மஹரிஷிகள் கூறுகிறார்கள். இந்திரியங்களுக்குண்டானஸ்ரமத்தால கனவுண்டாகிறதென்று கூறு

கிறார்கள். (அப்பொழுது) மனமானது எல்லாவிஷயங்களையும் அடைந்ததாயிருக்கிறது. இந்திரியங்கள் அந்தமனோரூபங்களென்று சொல்லுகிறார்கள். அந்தஇந்திரியங்கள் அவ்விதநிலையை அடைந்திருக்கின்றன. சிலர் எப்பொழுதுமுள்ள மூன்றுஅவஸ்தைகளும் உண்மையல்லவென்றுசொல்லுவது கூடாது. முதலாவதானஜாக்ராவஸ்தையிலிருக்கும் இந்தஜீவன் எப்பொழுதும் மூன்றுஅவஸ்தையையும் [1]அறிகிறான். வேறானஇரண்டுஅவஸ்தைகளை அடைந்தபின் எவ்விதத்திலும்அறிவுள்ளவனாயில்லை. ஸ்வப்நாவஸ்தையை அடைந்த இந்தஜீவன் ஸ்வப்நம்என்றுமட்டில் தெரிந்துகொள்ளுகிறானென்றும் சொல்லுகிறார்கள். அது யுக்திக்குச்சரியானதன்று. மூன்று அவஸ்தையும் மோஹரூபமானவை. ஆத்மாவானது மூன்று அவஸ்தையிலிருந்தும் எப்பொழுதுவிடுபடுகிறதோ அப்பொழுது (உண்மையில) இல்லாதஅவஸ்தைகளுள்ளதாகச் செய்யப்பட்டேனென்று தெரிந்துகொள்ளுகிறது. ஸ்வப்நத்தில் மனத்திற்கு லயமில்லாதிருப்பதால் அதில் அந்த அந்தவிஷயமிருக்கிறது. வேறுகாரியத்திலபற்றுதலுள்ள மனமுள்ளவனான ஜாக்ராவஸ்தையிலுள்ளமனிதனுக்கும் ஸங்கல்ப முண்டாகிறது. அப்பொழுது எவ்விதம் மனத்தில் விரும்பப்படும் போகமிருக்கிறதோ அதுபோல ஸ்வப்நாவஸ்தையிலுள்ள போகம் மனத்தைஅடைந்திருக்கிறதென்று திருஷ்டாந்தம் கூறுகிறார்கள். ஆசைபற்றியமனமுள்ளவன் கணக்கில்லாத ஜன்மங்களின்வாஸனையால் அந்தப்போகத்தையடைவான். உத்தமபுருஷனான அந்தஆத்மா மனத்தில் மறைந்திருக்கும்யாவற்றையும் அறிகிறான். ஸத்வம்ரஜஸ் தமஸ்என்றகுணங்களுள் எந்தக்குணமானது இந்தப்பிராணியின் கர்மத்தால் வெளியாகும்படி செய்யப்பட்டதோ, மனம் எவ்விதவாஸனையுள்ளதாயிருக்கிறதோ அதைஅதைப் பிராணிகள் விரும்புகின்றன. பிறகு, உடனேபயனை உண்டுபண்ணத்தக்க அவ்விஷயத்தை நக் காரணத்திற்குத்தக்கபடி ரஜோகுணங்களாவது தமோகுணங்களாவது ஸத்வகுணங்களாவது தொடருகின்றன. பிறகு, ரஜோகுணத்தாலும் தமோகுணத்தாலும் உண்டானமனோபாவங்களால் ஸம்பந்தமில்லாதவைகளும் வாதமும் பித்தமும் கபமும் மேலிட்டவைகளுமானசரீரங்களைப் பார்க்கிறார்கள்; அவ்விதமான சரீரத்தைவிலக்குவது கடினமென்றும் சொல்லுகிறார்கள். தெளிவுள்ள இந்திரியங்களால் எந்தஎந்தவிஷயத்தை மனத்திலுள்ளதாக ஸங்கல்பிக்கிறானோ அதைஅதை ஸ்வப்நம்விலகியபின்னும் மனம் [2]ஸந்தோஷமுள்

1 'வேத்தி' என்று பாடம் கொள்ளப்பட்டது. 2 வேறுபாடம்.

ளதாகப் பார்க்கிறது. மனமானது ஆத்மாவின்மகிமையால் எல்லாப்பிராணிகளிடத்திலும் தீபம்போல வியாபகமாயிருக்கிறது. எல்லாத்தேவதைகளும் ஆத்மாவினிடத்திலிருக்கின்றனவென்று அந்த ஆத்மாவைத் தெரிந்துகொள்ளவேண்டும். (ஸ்வப்நத்திற்கு) வழியும் மாணிடவுருவுமுமானஸ்தூலசரீரத்தைமனத்தில்மறைந்திருக்கும்படி செய்துகொண்டு ஸ்தூலஸூக்ஷமங்களுக்குக் காரணமும் இந்திரியங்களுக்குப்புலப்படாததுமான இந்தக்காரணசரீரத்தில் ஸாக்ஷிரூபமாய் ஸுஷுப்தியை அடைகிறான். (அப்பொழுது) இந்தஆத்மாவானது தோற்றப்படும் வேற்றுமைத்தன்மையைவிட்டுவிலகி ஜ்ஞானரூபியாக மட்டில் காணப்படுகிறது. அந்த ஆத்மாவை எல்லாப்பிராணிகளுடையமனத்திலுமிருப்பதும்மனத்திற்கும் ஸத்வமுதலியகுணங்களுக்கும்மேலானதுமாக அறிகிறார்கள். எவன் ஸங்கல்பத்தால்ஈச்வரருக்குரிய (அணிமாமுதலிய) குணத்தை மனத்தால் அடையவிரும்புகிறானோ அவன் மனதின்பரிசுத்தியால் அந்தக்குணத்தை அடைவான். எல்லாத்தேவதைகளும் மனத்திலிருக்கிறார்கள். இவ்விதமானமனத்தைத் தவத்தால ஸூர்யனைப்போலத் தமஸைவிட்டுவிலகியிருப்பதாகச்செய்யவேண்டும். மூன்றுஉலகங்களுக்கும் காரணமான ஜீவன் தமோகுணத்தின்முடிவில் மஹேச்வரரை அடைகிறான். தவமானது தேவர்களாலும் தவத்தைக்கெடுக்கும் தமோகுணமானது அஸுரர்களாலும்ஆச்ரயிக்கப்பட்டிருக்கின்றன. இந்தப்ரம்மமானது தேவகுணங்களாலும் அஸுரகுணங்களாலும் மறைக்கப்பட்டிருக்கிறது. அந்தப்ரம்மத்தை ஞானஸ்வரூபமென்றுசொல்லுகிறார்கள். ஸத்வம், ரஜஸ், தமஸ்என்பவைகள் தேவாஸுரர்களின்குணங்களென்று அறிவிக்கிறார்கள். (அவைகளில்) ஸத்வத்தைத் தேவர்களின் குணமென்றும் மற்றஇரண்டுகுணங்களையும் அஸுரர்களைச்சேர்ந்தவைகளென்றும் தெரிந்துகொள்ளவேண்டும். ஸத்வமும் மனமும் புத்தியும் தேவர்களென்று சொல்லப்படுகின்றன. [1]மறைந்திருக்கும்ஆத்மாவானது கசடுகளால நன்குவிலக்கப்பட்டால தன்னிலேயிலிருப்பதாகும். உலகங்களுக்குரிய ஸுஷுப்திமுதலியவாகச்சொல்லப்பட்டவை கசடுகளென்று கருதப்படுகின்றன. அவைகளைவிட்டுவிலகியதும் பரிசுத்தமும் சரீரத்திலுள்ளிலும்வெளியிலுமிருப்பதும் எப்பொழுதும் ஆனந்தரூபமும் அழிவில்லாததுமாயிருந்துகொண்டு அந்தப்பரமாத்மாவை அடையவேண்டும். மிகவும் கல்மஷமற்ற ப்ரம்மசர்யமானது

1 இங்கு, மூலபுஸ்தகத்தில் சிலசொற்களில்லாததால ஒருச்லோகம் விடப்பட்டது.

இவ்விதமுபதேசிக்கப்பட்டது. எல்லாவற்றிலும்பற்றுதலில்லாததும் விஷ்ணுவெனப்பெயருள்ளதும் சிந்தைக்கெட்டாததும் உலகத்தில் ஆச்சரியமுமான அந்தப்பரமபதமானது அறிவால் எங்கும் விளங்குகிறது. தியானத்தினால் தெளிந்தபுத்தியுள்ளவர்களானஎவர்கள் ஞானரூபியும் நாசமில்லாததும் ஜோதிரூபியும் குறைவில்லாததுமான அந்தப்பரப்ரம்மத்தைஅறிகிறார்களோஅவர்கள் சிறந்தகதியைப்பெறுகிறார்கள். யுக்தியுடன் இவ்வளவுவரையில் உபதேசிக்கமுடியும். ஞானக்கண்ணாலாவது [1]ப்ரத்யாஹாரத்தாலாவது இந்திரியங்களுக்குப் புலப்படாதபிரம்மத்தைத் தெரிந்துகொள்ளக்கூடும்.

---

## இருநூற்றுப்பத்தொன்பதாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(பரமாத்மாவை அறியும்வகைத்தொடர்ச்சி.)

உத்தமரானரிஷியால் வ்யக்தமென்றும் அவ்யக்தமென்றும்உபதேசிக்கப்பட்ட தத்வமாகிய [2]அந்நான்கையும் எவன்அறியவில்லையோ அவன் பரப்ரம்மத்தை அறியமாட்டான். வ்யக்தத்தை மிருத்யுவின் வழியென்றும் அவ்யக்தத்தை அழிவில்லாதபதமென்றும் அறிந்து கொள்ளவேண்டும். நாராயணரென்னும் ரிஷியானவர் நிவ்ருத்தி மார்க்கத்திற்குரியதர்மத்தைக் கூறினார். ஸ்தாவரஜங்கமங்களுடன் கூடியமூன்றுஉலகமும் அந்தநிவ்ருத்திதர்மத்தில்தான் நிலைபெற்றிருக்கும். நிவ்ருத்திமார்க்கத்திற்குரிய தர்மமானது இந்திரியங்களுக்குப் புலப்படாததும் சாஸ்வதமுமான ப்ரம்மமாகும். ப்ரவ்ருத்திமார்க்கத்திற்குரியதர்மத்தைப் பிரம்மா கூறினர். ப்ரவ்ருத்தியானது திரும்பவும் பிறப்புள்ளதாகும். நிவ்ருத்தியானது உத்தமகதியான மோக்ஷமாகும். நிவ்ருத்திமார்க்கத்தைப்பெரிதாகக்கொண்டவனும் ஞானத்தின்உண்மையில் முயற்சியுள்ளவனும் எப்பொழுதும் சுபாசுபங்களைப் பகுத்துப்பார்ப்பவனுமான முனியானவன் அந்தப்பரமகதியைப் பெறுவான். அந்தவிஷயத்தில் அவ்யக்தமென்னும்பிரதானம் ஜீவன்இவ்விரண்டையும்அவ்யக்தம்புருஷன்இவ்விரண்டைவிட வேறானதும்மிகப்பெரிதுமாயிருப்பது எதுவோ அந்தப்பரமாத்மாவையும்

---

[1] இந்திரியங்களை உள்ளத்தில்அடக்கி ஒரேமனோரூபமாயிருக்கும்படி செய்தல; இந்திரியங்களை ஒருவழிப்படுத்தல்.

[2] ப்ரக்ருதி புருஷர்களுக்குரியஒற்றுமை வேற்றுமை இரண்டும், ஜீவாத்மா, பரமாத்மாக்களுக்குரிய ஒற்றுமை வேற்றுமைஇரண்டுமாகிய நான்கு.

அறிந்துகொள்ளவேண்டும். ஸமர்த்தனாயிருப்பவன் அந்தவிசேஷத்தை நன்றாகத் தெரிந்துகொள்ளவேண்டும். ப்ராக்ருதியும் ஜீவனுமாகியஇவ்விரண்டும் ஆதியும் அந்தமுமில்லாதவைகள். இரண்டும் அடையாளமில்லாதவைகள். இரண்டும் அழிவில்லாதவைகளும் தொடர்ந்திருப்பவைகளும் பெரியவைகளைவிட மிகப்பெரியவைகளுமாயிருக்கின்றன. இரண்டுக்கும் இது இவ்விதம் பொதுவானது. வேறுவிசேஷமுமிருக்கிறது. பிரகிருதியானது காரியங்களைஉண்டு பண்ணும் தன்மையுள்ளதும் அவ்வாறேமூன்று குணங்களையும்உருவமாகக்கொண்டதுமாயிருக்கிறதென்றும் புருஷனுடைய லக்ஷணமானது இதைவிடவேறானதும் பிரகிருதியினுடையகாரியங்களுக்கு ஸாக்ஷியும் குணங்களில்லாததுமாயிருக்கிறதென்றும் தெரிந்துகொள்ளவேண்டும். க்ஷேத்ரஜ்ஞனென்னும்ஜீவனைக் கர்த்தாவாகவும் குணங்களால்மறைக்கப்பட்டவனாகவும்கூறுகிறார்கள். [1]ஜீவனீஸ்வரனென்ற இந்தப்புருஷர்கள் பிரத்யக்ஷமாகப்பார்க்கத்தகாதவர்களும் அனுமானத்திற்குரிய அடையாளமில்லாததால் பற்றுதலில்லாதவர்களுமாயிருக்கிறார்கள். (ஜீவன்) பிரக்ருதியின்ஸம்பந்தத்தையேஅடையாளமாயும் பிறப்பிற்குக்காரணமாயும் உடையவன். கர்த்தாவான ஜீவன் கர்மங்களையுண்டுபண்ணக்காரணமானகருவிகளால்எந்தஎந்தக் கர்மத்தை எவ்விதம்செய்கிறானோ அந்தஅந்தக் [2]கர்மத்துடன் அவ்விதம் காணப்படுகிறான். "நான் யார்? இது என்ன? அது என்ன?" என்று பலபெயர்களால்கூறப்படுகிறான். என்னுடையசரீரமென்றும் சொல்லுகிறான். ஆகையால், (ஜீவன்) அறிவில்லாதவனும் எப்பொழுதும் மறைக்கப்பட்டவனுமாயிருக்கிறான். தலைப்பாகையுள்ளவன் மூன்று வஸ்திரங்களால் மறைக்கப்பட்டிருப்பதுபோலஇந்தஜீவனானவன் ஸத்வம்ரஜஸ்தமஸ்என்கிறமூன்றுகுணங்களாலும்மறைக்கப்பட்டிருக்கிறான். அந்தப்புருஷனானவன் வேறாகத்தோன்றும்பரமாத்மவஸ்துவை எப்பொழுது வேற்றுமையில்லாமல் தெரிந்துகொள்ளுகிறானோ அப்பொழுதுதான் இவன் பற்றுதலில்லாதபரமாத்மாவாகவே ஆகிறான். ஆத்மாவானது பேதத்தைஅறிவிக்கும் கர்மயோகத்தில சிலவிடத்தில் வஸுக்கள் ருத்ரர்முதலியகூட்டங்களில தனக்குள்ள அனுபவத்தாலும் போகத்தாலும் பலவிதமாய் வேற்றுமைப்படுகிறது. இவ்விதம் பலவிதமாயிருக்கும் இந்தப்பரமாத்மாவானது பிறகு சுருக்கமாய் ஒரேரூபத்துடனிருப்பதாகக் காணப்படுகிறது.

---

1 இங்கு அதிகபாடமான ஒருஸ்லோகம் விடப்பட்டது.

2 வேறுபாடம்.

ஆகையால், இந்தக்காரணங்களால் மறைந்திருக்கும் நான்கையும் அறிந்துகொள்ளவேண்டும். இந்தஜீவன் நன்ருய்அவ்விதஅறிவுள்ளவனுல முடிவுக்காலத்தில் மோக்ஷத்தையடையாமலிருப்பான். 1 தேவலோகத்திலுள்ள ஸம்பத்தை அடையவிருப்பமுள்ள ஜீவன் பரிசுத்தனுகி மனத்தாலும் சரீரத்தைப்பற்றிய கடுமையானநியமங்களாலும் கஷ்டற்றதைதைச் செய்யவேண்டும். மூன்றுஉலகங்களும் உள்ளிருந்துவிளங்குவதான ஒளத்தால் சூழப்பட்டிருக்கின்றன. ஸூர்யனும் சந்திரனும் தவத்தால ஆகாயத்தில விளங்குகிறூர்கள். மற்றுமுள்ளதர்மத்தின்பொதுநிலேயும் தவமென்று சொல்லப்படுகிறது. பிரகாசமானது தவத்தினுடையதாகும். உலகத்தில் ஞானமானது தவமென்றுசொலலப்படுகிறது. எந்தக்கர்மம் ரஜஸையும் தமஸையும் விலக்கத்தக்கதோ அது தவத்திற்குரிய முக்கியலக்ஷணமாகும். 2பிரம்மசர்யமும் கொலலாமையும் சரீரத்திற்குள்ளதவமென்றுசொல்லப்படுகின்றன. நாவையும்மனத்தையும் நன்ருகஅடக்குதலாவது மனத்தாலசெய்யும்தவமென்று சொல்லப்படுகிறது. சாஸ்திரவிதிகளே அறிந்தபிராம்மணாகளிடமிருந்து ஆகாரத்தைப்பெற்றுக்கொள்வது சிறந்ததாகும். ஆகாரத்தின்நியமத்தால் இந்தஜீவனுக்கு ரஜோகுணத்தாலுண்டாகும்பாவமானது விலகும். இந்தஜீவனுடைய கருவிகளும் விஷயங்களில வைராக்யத்தை அடையும். ஆகையால, இந்தச்சரீரத்திற்கு வேண்டியமட்டில பெற்றுக்கொள்ளவேண்டும். முடிவுக்காலத்தில பரபரப்பில்லாமல் மெள்ளப் பெருமுயற்சியுடன் (தவத்தைச்) செய்யவேண்டும். இவ்விதமுயற்சியுடன்கூடிய மனத்தால ஞானமுண்டாகும். இந்த ஜீவனுனவன் 3ரஜோகுணத்திலிருந்து விலகினவனுல ஸூக்ஷ்மசரீரமுள்ளவனுகிச் சப்தம் 4 போல ஸஞ்சரிப்பான். வைராக்யத்தால பிறப்புள்ளஸ்தூலஸூக்ஷ்ம சரீரங்களால தடுக்கப்படாதமனமுள்ளவன் காரணசரீரத்திலிருப்பான். சரீரமுள்ளவரையில தவறுதலின்றித் (தவஞ்செய்வதால) மூன்றுசரீரங்களும்விலகி மோக்ஷமடைவான். பிராணிகளின்பிறப்பும் இறப்பும் எப்பொழுதும் (அஜ்ஞானமென்னும்) காரணமுள்ளவையாயிருக்கும். பரமாத்மாவைப்பற்றியஞானமுண்டாகும்பொழுது தான் ஜனனமரணநியமம் 5தொடராமலிருக்கும். எவர்கள் சரீரமுத

1 இங்கு அதிகபாடமான அரைஶ்லோகம் விடப்பட்டது.

2 இங்கு அதிகபாடமானஒன்றரைஶ்லோகம விடப்பட்டது.

3 ஸ்தூலசரீரத்தை விட்டு விலகினவனென்றுபொருள.

4 வேறுபாடம். 5 வேறுபாடம்.

லியஅனுத்மாவில் ஆத்மாவென்ற விபரீதஞானத்திலிருக்கிறார்களோ அவர்கள் உலகப்பொருளின்உற்பத்தியிலும் அழிவிலும்சென்ற புத்தியுள்ளவர்களாயிருப்பார்கள். தைரியத்தால் சரீரங்களை உறுதியுள்ளவைகளாகச்செய்துகொண்டவர்களும் புத்தியால்அடக்கப்பட்டமனமுள்ளவர்களும் இந்திரியங்களுக்கிருப்பிடமான ஸ்தூலசரீரத்தை விட்டுவிலகினவர்களுமானசிலர் ஸூக்ஷ்மமாயிருப்பதால் அந்தஇந்திரியங்களை உபாஸிக்கிறார்கள். அவையாவற்றையும் சாஸ்திரப்படி அறிந்து [1]அவற்றையே தியானம்செய்கிறார்கள். தியானம்பண்ணும் புத்தியுள்ளவனானஒருவன்பரமாத்மாவைத்தவிர வேறுஇடமில்லாமல தேகங்களின்முடிவிலுள்ளபரமாத்மாவைஅனுஸரித்துக்கொண்டிருப்பான். ஒருவன் [2]தாரணையுடன்கூடியவனாயிருப்பான். சிலர் [3]பரமாத்மாவை உபாஸிக்கிறார்கள். சிலர் வித்தைகளில அக்ஷரமென்று கூறப்பட்டவரும் பரருமானதேவரைத்தொடர்ந்து தியானம்செய்கிறார்கள். தவத்தால் பாவங்களைஎரித்தசிலர் முடிவுக்காலத்தில அவரை உபாஸிக்கிறார்கள். மஹாத்மாக்களானஇவர்களனைவரும் உத்தமமானகதியைஅடைகிறார்கள். அந்தஉபாஸனங்களுக்குள்ள ஸூக்ஷ்மமான வேற்றுமையைச் சாஸ்திரக்கண்ணாலஅறிந்துகொள்ளவேண்டும். காரணசரீரமென்னும்பிரகிருதியைக் கடைசியிலுள்ளதாக அறியவேண்டும். அபிமானம்விட்டுவிலகியவனும் துறவியும் தாரணையில்பற்றுள்ள மனமுள்ளவனுமாயிருப்பவனை ஆகாசமென்னும்பரமாத்மாவுக்கு அடுத்தபடியிலிருப்பவனாகத் தெரிந்துகொள்ளவேண்டும். உபாஸனங்களில நல்லபற்றுள்ளமனமுள்ளவர்கள் மானிட உலகத்திலிருந்து விடுபடுகிறார்கள். பிறகு, ரஜோகுணமற்றவர்களும் பிரம்மமானவர்களுமாகி உத்தமமானகதியை அடைகிறார்கள். இவ்விதம்ஒரேபிரம்மத்தை அடையக்காரணமானஉபாஸனமுறையை வேதமறிந்தஜனங்கள்கூறுகிறார்கள். அறிவுக்குத்தக்கபடி உபாஸிக்கும்அனைவரும் உத்தமகதியை அடைகிறார்கள். அவர்களுக்குக் கசடற்றதும் தெளிவுள்ளதுமானஞானம் உண்டாகிறது. அவர்களும் உத்தமமான உலகங்களை அடைகிறார்கள். ஞானத்தின்பலத்திற்குத்தக்கபடி சுத்திபெறுகிறார்கள். ஆசையற்றவர்களும் ஞானத்தால்திருப்தியடைந்தவர்களுமாயிருப்பவர்கள் பரிசுத்தர்களாகி உற்பத்தியில்லாதவரும் அவ்யக்தமென்று பெயருள்ளவரும் தேவலோகத்திலிருப்பவருமான

1 வேறுபாடம்.

2 சாஸ்திரப்படி ஓரிடத்தில மனத்தை நிறுத்திவைப்பது.

3 ஸகுணப்ரம்மம்.

ஸ்ரீவிஷ்ணுபகவானை நல்ல எண்ணத்தால் அடைகிறார்கள். அவர்கள் புத்தியிலிருக்கும் ஸ்ரீஹரியை அறிந்துகொண்டு அழிவில்லாதவர்களாகித் திரும்பவும் ஸம்ஸாரத்தை அடைகிறார்களில்லை. குறைவற்றதும் அழிவற்றதும் உத்தமமுமான அந்தப்பதத்தைப் படைந்து ஆனந்தமடைகிறார்கள். இந்தஞானமென்பது இவ்வளவுதான். இவ்வுலகமானது இருப்பதும் இல்லாததுமாயிருக்கிறது. உலகமனைத்தும் ஆசையால் கட்டப்பட்டு உருளைபோலச் சுற்றிக்கொண்டிருக்கின்றது. தாமரைத்தண்டில் உள்ளிலிருக்கும் அதன் நூலானது எவ்விதம் எல்லா விடத்திலுமிருக்கிறதோ அதுபோல ஆசையென்னும் நூலான முதலும் முடிவுமில்லாமல் எப்பொழுதும் சரீரத்தை அடைந்திருக்கிறது. தைக்கும்மனிதன் ஆடையில் நூலை ஊசியால் எவ்விதம் ஓட்டுகிறானோ அவ்விதம் ஸம்ஸாரமென்னும் நூலானது ஆசையென்னும் ஊசியால் ஓட்டப்படுகிறது; அங்குமிங்கும் எடுத்துச்சேர்த்து ஓருருவத்தையும் உண்டுபண்ணுகிறது. எவன் காரியத்தையும் காரணத்தையும் ஸனாதனரானபுருஷனையும் உள்ளபடி அறிகிறானோ அவன் ஆசையற்று மோக்ஷமடைவான். அவன் வியாபகமும் நிலையுள்ளதுமான ஆத்மாவின் உண்மையான ஸ்திதியை எப்பொழுதும் அடைகிறான். (இவ்விதம்) பகவானான நாராயணரிஷியானவர் உலகத்திற்கு நன்மையும் மோக்ஷத்திற்குக் காரணமுமான இந்த நிவ்ருத்திதர்மத்தைப் பிராணிகளிடத்திலுள்ள அருளால் உபதேசித்தார்" என்று சொன்னார்.

---

## இருநூற்றிருபதாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(பஞ்சசிகர் ஜனகருக்கு நாஸ்திகமதமுதலியவற்றைக் கண்டித்துச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "நன்னடக்கையை அறிந்தவரும் ஜனககுலத்திலுதித்தவரும் மிதிலைக்கு அதிபதியும் மோக்ஷதர்மங்களை அறிந்தவரும் புத்திமானுமான ஜனதேவர் போகங்களைத் தள்ளிவிட்டு எவ்வித நடக்கையால் மோக்ஷத்தை அடைந்தார்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"மோக்ஷதர்மங்களையறிந்த அந்த ஜனதேவன் எந்த நடக்கையால பெரிய ஸுகமான மோக்ஷத்தை அடைந்தானோ அவ்விஷயத்திலும் பழையஇவ்விதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். அரசனே! ஜனதேவனென்னும் ஜனகன் மிதிலாபுரியில் சரீரம்போன பின்காலத்தி

லுள்ள விஷயங்களை நன்றாய் ஆலோசிப்பதில் முயற்சியுள்ளவனாயிருந்தான். அவனுடைய வீட்டில் பலவிதமான பாஷண்டமதங்களைக் கண்டிப்பவர்களும் வெவ்வேறான தர்மங்களைக் காண்பிப்பவர்களுமான நூறு ஆசிரியர்கள் எப்பொழுதும் வஸித்துக்கொண்டிருந்தார்கள். அவன் அந்த ஆசிரியர்கள்சொல்லுகிறபடி இறந்தபின் ஆத்மா இருக்கின்றதென்ற நிச்சயத்திலும் மறுபிறப்பைப்பற்றியநிச்சயத்திலும் மிக்க ஸந்தோஷப்படுகிறதில்லை. அவன்வேதமார்க்கத்திலிருந்துகொண்டு ஆத்மதத்வவிஷயத்தில் மிகவும் விசேஷமாக ஸந்தோஷப்படுவான். அப்பொழுது பஞ்சசிகரென்று பெயருள்ளவரும்கபிலையின் புத்திரருமான பெரியமுனிவர் பூமிமுழுமையும் சுற்றிஸஞ்சரித்துக்கொண்டு பிறகு மிதிலைக்குச்சென்றார். அவர் ஸந்யாஸதர்மங்களனைத்துக்கும் தத்வஜ்ஞானத்தின் நிச்சயத்திற்குமுள்ளபயனை நன்கு நிச்சயம்செய்துகொண்டவர்; த்வந்த்வங்களைவிட்டு விலகியவர்; ஸந்தேகமற்றவர். ரிஷிகளுள் அவர்ஒருவரை மனிதர்கள்விஷயத்தில்விருப்பமற்றவரென்றும் நிலைபெற்றதும் அழிவில்லாததும் அடையமிகவரியதுமான மோக்ஷஸுகத்தைத் தேடுகிறவரென்றும் சொல்லுகிறார்கள். ஸாங்கியர்கள் அவரை உத்தமரிஷியான கபிலப்பிரஜாபதியென்றுசொல்வார்கள். கபிலர் நேரில் அந்தப்பஞ்சசிகர் உருவத்துடன்வந்து ஆச்சரியத்தை உண்டுபண்ணுகிறார். அவரை ஆஸுரியின்முதல்சிஷ்யரான சிரஞ்ஜீவியென்றும்கூறுகிறார்கள். அவர் [1]ஐந்துபிரவாகங்களுள்ளவிடத்தில் ஆயிரம்வருஷம்செய்யத்தக்க ஸத்ரயாகத்தைச் செய்துகொண்டிருக்கிறார். ஐந்துபிரவாகமுள்ளவிடத்தில் ஸ்நானம்செய்தவரும் ஐந்துநாள்செய்யவேண்டிய [2]பஞ்சராத்திரமென்றயாகத்தில் ஸமர்த்தரும் ஐந்துகோசங்களைப்பற்றிய உபாஸனங்களைச்செய்தவரும் [3]ஐந்துகுணங்களுள்ளவரும் பஞ்சசிகரென்று சொல்லப்படுகிறவருமான அவர் கபிலமதத்தைச்சேர்ந்த பெரியமுனிக்கூட்டம் உட்கார்ந்திருக்கும் இடத்தினருகில்வந்து புருஷர்களிடமிருப்பதும் இந்திரியங்களுக்குப்புலப்படாததும் பரமார்த்தமுமானபிரம்மத்தைஅறிவித்தார். ஸத்ரயாகம்செய்தபின் தவத்தால் திரும்பவும் நன்குவினவப்பட்ட ஆஸுரியானவர் திவ்யதிருஷ்டியால் க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞர்களைப்பற்றிய பகுத்தறிவை அறிவித்தார். ஆஸுரியானவர் அந்த முனிக்கூட்டத்தில் ஒரே அக்ஷரமானதும் பலஉருவமுள்ளதாகக்காணப்படுவதும்

---

1 ஞானேந்திரியங்களென்னும் ஐந்துபிரவாகங்களுடன் கூடின மனம் என்ற இடத்தில் மானஸயாகம்செய்தாரென்பது பொருள்.

2 'பஞ்சராத்ரவிசாரத:' என்பது மூலம்.

3 சமம், தமம், உபரதி, திதிக்ஷை, ஸமாதானம்.

அழிவில்லாததுமானப்ரம்மத்தை அறிவித்தார். அந்தஆஸுரியி னுடையசிஷ்யரான பஞ்சசிகமுனிவர் மானிடப்பெண்ணின்பாலால் வளர்க்கப்பட்டவர். கபிலையென்றுபிரஸித்திபெறறவளும்குடும்பத்தி லுள்ளவளுமான ஒருபிராம்மணப்பெண் இருந்தாள். அவர் அந்தப் பெண்ணுக்குப் புத்திரராயிருக்கும் தன்மையையடைந்து அவளிடம் ஸ்தன்யபானம்செய்தார். அதனால், அவர் காபிலேயரென்றபிரஸித்தி யையும் ஞானநிலையுள்ளபுத்தியையும் அடைந்தார். இவ்விதம் கபிலை யின் புத்ரரானபஞ்சசிகமுனிவரின்உற்பத்தியையும் அவருக்குள்ள காபிலேயரென்றபிரஸித்தியையும்எல்லாவிஷயங்களையும்பற்றியமிக்க உத்தமமான அறிவையும் எனக்குப் [2]பகவான் சொன்னார். அந்தப் பஞ்சசிகரானவர் அருகில்வந்து தர்மமறிந்தவர்களுள் மிகச்சிறந்தவ னும் ஜனகவம்சத்தில்பிறநதவனுமான ஜனதேவன், ஆசிரியர்களிடம் ஸமானமாயிருப்பதைத்தெரிந்துகொண்டு பலயுக்திகளால் நூறு ஆசிரி யர்களையும் மோகிக்கும்படிசெய்தார். அரசனே! புதநிமானன பஞ்ச சிகமுனிவர் அந்த ஆசிரியாகளனைவரையும் விலக்கவேண்டுமென்று குணமுள்ளபலயுக்திகளை அவர்களுக்குச் சொல்லினர். ஜனகனோ கபிலையின்புத்திரரான பஞ்சசிகரைக்கண்டதால் அவரிடம் மிகுந்த பக்தியுடன் நூறுஆசிரியர்களையும்தள்ளிவிட்டு அவர்பின்செலலலா னன். தர்மப்படிநமஸ்கரிததவனும் மிகவும் ஸமர்த்தனுமான அந்த ஜனதேவன்பொருட்டு [3] ஞானகாண்டத்தில் அறிவிக்கபபடுவது எதுவோ அந்த உததமமானமோக்ஷததைஅவரும் சொன்னர். ஜன னத்தில் ஆசையிலலாதிருக்கும் முறையைச்சொலலியபின் அவர் கர்ம வழியைப்புறறிய வைராக்யத்தை உபதேசிததார். கர்மததைப்பற் றிய வைராக்யததை உபதேசித்தபின் எலலாஉலகங்களைபபற்றிய வைராக்யததையும் உபதேசித்தார். கர்மங்களைச்செய்வதும் கர்மங் களின்பயனுண்டாவதும் எதைக் காரணமாகக்கொண்டவையோ அவ் விதமும் நம்பத்தகாததும் நாசமுள்ளதும் சஞ்சலமும் நிலையற்றது மான மோஹத்தையும் சொல்லத்தொடங்கினர். 'விநாசமானது ப்ர தயக்ஷமாயிருப்பதாலும் பிரதயக்ஷப்பிரமாணமானது உலகங்களை ஸாக்ஷியாககொண்டதாயிருப்பதாலும் ஆகமப்பிரமாணத்தால் சரீ ரத்தைவிட வேறுஆதமா இருக்கிறதென்று சொல்லுகிறவாதியும் தோல்வியடைகிறான். எப்பொழுதும் ஆத்மாவிற்குத்துன்பமும் மர

---

1 அதிகபாடமான அரைசுலோகம் விடப்பட்டது.

2 'மார்க்கண்டேயர்: அல்லது, ஸநத்குமாரர்' என்பது பழையஉரை.

3 வேறுபாடம்.

ணமும் கிழத்தனமும் நோயும் இயற்கையே. ஆகையால், அவிவேகத்தால் (சரீரத்தைக்காட்டிலும்) ஆத்மாவை வேறாக நினைப்பது தப்பானமதமாகும். மேலும், எது உலகத்தில் யுக்திக்கு ஒத்ததாயிருக்கவில்லையோ அதையும் சொல்லுவதுண்டு. இந்த அரசன் கிழத்தனமில்லாதவனும் மரணமில்லாதவனுமாயிருக்கவேண்டுமென்று சொல்லுகிறார்கள். இவனும் அப்படியே நினைத்துக்கொள்ளுகிறான். அதுபோல ஆகமமும் ஆத்மாவேறுஎன்று கூறுகிறது. இருக்கிறதென்றும் இல்லையென்றும் இவ்விதஸந்தேகத்திலதககாரணமில்லாதிருக்கும்பொழுது எந்தஅனுமானத்தைப்பற்றிக்கொண்டு உலகத்திலுள்ளவியவகாரத்திற்கு நல்லநிச்சயத்தைச் சொல்லமுடியும் ? ஆகமம் அனுமானம்என இவ்விரண்டுக்கும் பிரத்யக்ஷமன்றோ மூலமாயிருக்கிறது ? ஆகமமானது பிரத்யக்ஷத்தால் பாதிக்கப்படுகிறது. அனுமானத்தால உண்டாகும்நிச்சயமோ சிறிதும்இல்லை. ஏதோ ஒருவிதமான இந்த அனுமானத்தில் சிந்தைப்படுகிறவனாலும் ஸாதிக்கத்தக்கதொன்றுமில்லை. ஆகையால், சரீரத்தைவிடஜீவனென்பவன் வேறில்லையென்று நாஸ்திகர்களின்மதத்தில்கூறப்படுகிறது. ஆலமரத்தின்வித்தில அதற்குள்ளகாரணமும்,பசுவின் ஆகாரத்தில வெவ்வேறான பாலும் நெய்யும், வாஸனையுள்ளபலவஸ்துக்களின்பாகத்தில் மதசக்தியும், இரண்டுகட்டைகளின் சேர்க்கையால் தீயின்உற்பத்தியும், தர்க்கமதத்தில் ஆத்மமனம்இவைகளின்சேர்க்கையால உண்டாகும்ஸ்பிருகின்ற ஞானமும், இரும்பை அசையச்செய்யும்காந்தமணியும் ரவியின்ஒளியுடன்சேர்ந்து தீயைஉண்டுபண்ணும்ஸூர்யகாந்தமென்னும்மணியும் தீயில நீரைக்குடிக்கும்திறமையுமிருப்பதுபோலச் சரீரமே ஆத்மாவாக இருக்கலாம். ஆனாலும், மரணத்திற்குப்பின் சரீரத்தில் நான்குபூதங்களுக்குநாசமுண்டாவதும் தேவதைகளின்பிரார்த்தனையும் மரித்ததும்முன்செய்தகர்மங்கள்பயனற்றுப்போவதும் ஒருபிறப்பிலசெய்யாதகர்மங்களின்பயனுண்டாவதும் சரீரத்தைவிட ஆத்மாவேறுஎன்றவிஷயத்தில பிரமாணமென்பது நிச்சயம். கீழ்ச்சொன்ன திருஷ்டாந்தங்கள் பிரமாணங்களாகிறதில்லை. இந்தச் சிலதிருஷ்டாந்தங்களெல்லாம் ஜடவஸ்துவைப்பற்றியவைகளாயிருக்கின்றன. ஜடமல்லாதவஸ்துவிற்கு ஜடவஸ்துவுடன்கூட (காரியகாரணங்களுக்குள்ள) ஒற்றுமை பொருத்தமுள்ளதன்று. சிலர் அவித்தை, கர்மங்கள், சேஷ்டை, தோஷங்கள் இவைகளை ஸேவித்தலையும் லோபத்தையும் மோகத்தையும் மறுபிறப்பிற்குக்காரணமென்று கூறுகிறார்கள். அவர்கள் அவித்தையை க்ஷேத்திரமென்

றும் அப்படியே முன்செய்யப்பட்டகர்மத்தைப் பீஜமென்றும் ஆசையை உண்டுபண்ணுவதை ஸ்நேகமென்றும் சொல்லுகிறார்கள். இது அவர்களுடையமதத்தில் மறுபிறப்பிற்குக் காரணமாகும். இந்த அவித்தைமுதலியவை [1]ஸூக்ஷ்மமாயிருக்கும்பொழுது சைதன்யமற்றதும் மரணதர்மமுள்ளதுமான சரீரமானது நாசமடைந்தால் அதிலிருந்து வேறுசரீரமுண்டாகிறது. அவித்தைமுதலியவை ஞானத்தால்நாசமடைந்தால் அது அழிவில்லாத மோக்ஷமென்றும் சொல்லுகிறார்கள்; (இதுவும் ஸரியன்று.) ஸ்வரூபத்தாலும் ஜாதியாலும் [2]சுபகர்மங்களாலும் அவற்றின் பயன்களாலும் இது வேறாயிருக்கிறபொழுது இதில் அதுதான் என்ற [3]பிரத்யபிஜ்ஞை என்றஞானம் எவ்விதம் உண்டாகக்கூடும்? விரும்பப்படாதபயனுண்டாவதும் எவ்விதம் கூடும்? இப்படியிருந்தால் தானத்தாலும் கல்வியாலும் தவத்தாலும் பலத்தாலும் என்ன பிரியமுண்டாகக்கூடும்? எந்தஎந்தக்கர்மம் செய்யப்படுகிறதோ அது அது அனைத்தும் வேறு ஒருவனை அடைகிறதே; இவ்விதமிருந்தால இவன் இவ்விடத்திலேயே வேறு ஒருவன் செய்தகர்மங்களால துக்கமுள்ளவனாகவும் ஸுகமுள்ளவனாகவும் ஆகக்கூடுமென்பது நிச்சயமாய்த் தெரியக்கூடுமே; க்ஷணிகஜ்ஞானரூபியான ஆத்மாவானது தான் நசித்து மேன்மேலும் வெவ்வேறான ஆத்மாவை உண்டுபண்ணுகிறதென்று சொன்னால் உலக்கைகளால் சரீரத்தை அடிக்கும்பொழுது வேறுசரீரம் உண்டாவதைக் காணோமே; ஆகையால், இந்தமதம் ஸரியானதன்று. திதிகளும் ருதுக்களும் வருஷமும் சீதமும் உஷ்ணமும் விருப்பும் வெறுப்பும் எவ்விதம் சென்றது காணப்படுகிறதில்லையோ அதுபோல மோக்ஷமுமாகும். கிழத்தனத்தாலும் நாசத்தையுண்டுபண்ணும் ம்ருத்யுவாலும் சூழப்பட்டவனுக்கு வீட்டினுடையவஸ்துவைப்போலப் பலவீனமாயிருப்பது முந்தி முந்தி நாசமடையும். இந்திரியங்களும் மனமும் வாயுவும் உதிரமும் மாம்ஸமும் எலும்பும்வரிசையாகவே நாசமடைகின்றன; தம்காரணத்தையும் அடைகின்றன. உலகயாத்திரை நடப்பதும் தானதர்மங்களின் பயனுண்டாவதும் அததற்குள்ளவேதவசனங்களும் லோகவியவகாரங்களும் நசிக்குமேயென்று இவ்விதமான பல்யுக்திகள் மனத்திலுண்டாகின்றன. [4]'இது உண்மையானது; இதுஉண்மையானது' என்று யாதொன்றும்காணப்

---

1 வேறு பாடம். 2 வேறு பாடம்.

3 முன்கண்டதைப் பின்னும் காணும்பொழுது முன்கண்டதாகவும் நினைப்பது. 4 வேறு பாடம்.

படுகிறதில்லை. இவ்விதம் ஆலோசிப்பவர்களும் அந்தஅந்தவிஷயத்தைப்பற்றி ஓடுகிறவர்களுமான அவர்களின்புத்தியானது ஓரிடத்தில் பிரவேசஞ்செய்கிறது; மரத்தைப்போல அதில்தானே ஜீர்ணமடைகிறது. இவ்விதம் நன்மைகளாலும் தீமைகளாலும் கஷ்டப்படும்ஜந்துக்கள்யாவும் யானைக்காரர்களால் யானைகள்இழுக்கப்படுவதுபோல வேதங்களால்இழுக்கப்படுகின்றன. ஆசையானது ஆசைப்படும்வஸ்துக்களைப்புஜிப்பதால் ஒருபொழுதும் சமனமடையாது; அக்னியானது நெய்யால்வளருவதுபோலத் திரும்பவுமே வளரும். 'பெரும்பாலும் இந்தஜனங்கள் அறிவற்றுப் பொருள்களையும் மிகவும் ஸுகத்தைத்தரத்தக்க வேறுவிஷயங்களையும் விரும்புகிறார்கள். அவர்கள் ஸுகத்தைவிட்டு மிகப்பெரிதானதுன்பத்தைஅடைந்து ம்ருத்யுவின்வசம்செல்லுகிறார்கள். நிலையற்றஉயிருள்ளவனும் நசிக்கிறவனுமாயிருக்கிறவனுக்குப் பந்துக்களாலும் மித்திரர்களாலும் மற்றப்பொருள்களாலும் யாதுபயன்? எவன் யாவற்றையுமேவிட்டுச்செல்லுகிறானோ அவன் க்ஷணத்தில்சென்று திரும்பாமலுமிருப்பான். பூமியும் ஆகாயமும் ஜலமும் அக்னியும் வாயுவும் எப்பொழுதும் சரீரத்தைப் பாதுகாக்கின்றனஎன்ற இவ்விஷயத்தைத் தெரிந்துகொண்டபின் ஆசை எவ்விதம் உண்டாகக்கூடும்? நசிக்கும்தன்மையுள்ள இவனுக்குச்செய்யவேண்டிய கர்மம் இல்லை' என்று சொன்னார். இவ்விதம் கபடமில்லாததும் வேறுகருத்தில்லாததும் மிகவும்ஸுகமுள்ளதும் தன்னைஸாக்ஷியாகக் கொண்டதுமான வசனத்தைக்கேட்டு ஜனதேவனென்னும் அரசன் வியப்புற்றுப் பின்வருமாறு திரும்பவும்வினவத் தொடங்கினான்.

---

## [1]இருநூற்றிருபத்திரண்டாவது அத்தியாயம.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



**(பஞ்சசிகர் கர்மபலன்களை ஜனகனுக்குச் சொல்லியது.)**

அரசனானஜனகன் உத்தமரானபஞ்சசிகரிஷியால் அறிவிக்கப்பட்டுத் திரும்பவும் சரீரத்தைவிட்டு விலகியபொழுதுள்ள பிறப்பையும் பிறப்பில்லாத மோக்ஷத்தையும்பற்றிக் கேட்கத்தொடங்கினான்.

1 இருநூற்றிருபத்தோராவது அத்யாயம், ஒருபுஸ்தகத்திலமட்டுமேகாணப்படுவதாக மூலபுஸ்தகத்தில் கூறியிருப்பதாலும் அதிலபெரும்பாலும் முன்பின் அத்யாயங்களிலுள்ள பலஸ்லோகங்களே ஒருமாதிரி சேர்க்கப்பட்டதாகக் காணப்பட்டதினாலும் விடப்பட்டது.

'பூஜ்யரே! சரீரத்தைவிட்டபின் ஒருவனுக்கும் விசேஷமான அறிவு இல்லாமல்போனால் இவ்விதமிருக்கும்பொழுது அஜ்ஞானம்தான் என்னசெய்யக்கூடும்? ஞானம்தான் என்னசெய்யக்கூடும்? பிராம் மணஸ்ரேஷ்டரே! இதைப் பாரும். யாவும் விநாசத்தில் முடிவுபெறும். ஜாக்ரதையுள்ளவனோ அஜாக்ரதையுள்ளவனோ என்னவிசேஷத்தைச் செய்யப்போகிறான்? பஞ்சபூதங்களிலபற்றுதலில்லாமையோ அல்லது விநாசத்தையடையத்தக்க அவைகளில்பற்றுதலோ எதற்காகத் தத்வஜ்ஞானத்தை உண்டுபண்ணிக்கொள்ளவேண்டும்? இதில் உண்மையானநிச்சயம் எது?' என்று கேட்டான். அஜ்ஞானத்தால்மறைக்கப்பட்டவனும், நோயாளிபோலமயக்கங்கொண்டவனுமான ஜனதேவனைத் திரும்பவும் நன்மொழிகளால்ஸமாதானம் செய்து அறிவுள்ளபஞ்சசிகர் சொல்லத்தொடங்கினார். 'இந்தமோக்ஷ விஷயத்தில் விநாசத்தில்முடிவென்பதில்லை; விசேஷஜ்ஞானத்தில் முடிவென்பதுமில்லை. சரீரம் இந்திரியங்கள் மனம் இவைகளின் இச்சேர்க்கையானது கர்மங்களிலஒன்றைஒன்று அடுத்திருந்தாலும்வெவ்வேறாகவிருக்கிறது. ஆகாயம் வாயு அக்னி ஜலம் பூமியென்றஐந்து பூதங்களும் அந்தச்சரீரமுதலியவைகளுக்குக் காரணமாயிருக்கின்றன. அந்தஐந்துபூதங்கள் இயற்கையால்சேர்ந்து நிலைபெற்றிருக்கின்றன. ஸ்வபாவத்தால விலகிச்செல்லுகின்றன. சரீரத்திலுள்ள இடைவெளி ஆகாயமும், பிராணன் வாயுவும், சூடு அக்னியும், ஈரமுள்ளது ஜலமும், கடினமானவை பூமியைச்சேர்ந்தனவுமாயிருக்கின்றன. இவ்விதம் ஐந்துபூதங்களின் சேர்க்கையான இச்சரீரமும் பலவிதமாயிருக்கிறது. நான் என்றபதத்தின்பொருளும்பிராம்மணர்களுக்குஉத்தமமானதும் புத்தியின்உருவத்துடன்சேர்ந்ததும்வாக்குகளுக்குஎட்டாததும் நித்யமாயிருப்பதும் எதுவோ அது இவ்விதம் தெரிந்துகொள்ளத்தக்கதாகும். ஞானமானது, அறிவு அறியத்தக்கது அப்படியே அறிவிறகுக்காரணம்என்று மூன்றுவிதமாகச் சொல்லப்படுகிறது. கர்மங்களனைத்திற்கும் காரணமானவைகளின் சுருக்கம், புத்தி ஜாடராக்னி பிராணவாயுஎன்று மூன்றுவிதமாகும். இந்தமூன்றிலிருந்தும் இந்திரியங்களும் அவைகளுக்கு விஷயங்களானசப்தமுதலியவைகளும் அந்தவிஷயங்களின் அறிவும் சேதனையென்னும்புத்திவிருத்தியும் மனமும் பிராணனும் அபானனும் மற்றக்காரியங்களும் வெளியாகின்றன. பிராணன் முதலியவைகளின் காரியங்களும் ஞானேந்திரியங்களின்காரியங்களும் ஆத்மாவில் சேர்க்கையை அடைந்தவையல்ல. அவைகள்ஆத்மாவின்புத்திரன்போன்ற

மனத்தைக் காரணமாகக்கொண்டவைகள். பரனோ அந்தப்புருஷன் அறிவே வடிவமாயிருக்கிறான். செவி த்வக்கு நா கண் மூக்கு என்ற இந்தஐந்து இந்திரியங்களும் மனத்தைக்காரணமாகக்கொண்டு செல்லுகின்றவைகளும் அதற்குட்பட்டவைகளுமாயிருக்கின்றன. அவைகளில் சேதனையென்னும்புத்தியானது ஆத்மசைதன்யத்துடனிருந்துகொண்டு [1]மூன்றுவிதமாய் நிலைபெற்றிருக்கிறது. அந்தப் புத்தியை ஸுகமென்றும் துக்கமென்றும் ஸுகதுக்கமல்லாததென்றும் கூறுகிறார்கள். சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்ற ஐந்தும் அவைகளுக்கிருப்பிடமான திரவியங்களுமான ஆறும்மரணம் வரையில் ஞானத்தை உண்டுபண்ணக்காரணமாக இருக்கின்றன. கர்மவழியும் அதைவிடுகிற ஸந்யாஸவழியும் எல்லாவற்றிலுமுள்ள தத்வப்பொருளின் நிச்சயமும் அந்தஇந்திரியங்களை அடுத்திருக்கின்றன. அவைகளில்தத்வநிச்சயமென்பதை உத்தமமென்றும்மோக்ஷத்திற்குக்காரணமென்றும் ரஜோகுணத்தைக் கடந்துநிற்கும் பிரபுவென்றும் கூறுகிறார்கள். எப்பொழுதும் ரஜோகுணத்தில் செல்லும் மனமானது வைராக்யத்தால் அந்த அதத்வவழியிலிருக்கும். அந்தமனமானது தெளிவடைந்தால் புத்தியானது அழிவற்றதும் வியாபகமுமான பிரம்மத்தை நன்றாய்தெரிந்துகொள்ளும். குணங்களின்சேர்க்கையானஇந்தச்சரீரத்தை, 'நான்' என்றஎண்ணத்துடன் பார்க்கிறவனும் நல்ல அறிவில்லாதவனுமாயிருக்கிறவனுக்கு முடிவில்லாத துக்கமானது குறையாமலேஇருக்கும். ஆகையால், அறிவுள்ளபுத்திமானனவன் இந்தச்சரீரமுதலியவைகளில் பற்றுதலில்லாமலிருக்கவேண்டும். காணப்படுவன எல்லாம் ஆத்மாவல்ல. ஆகையால், அது நானென்றவஸ்துவாகவாவது என்னுடையதென்ற வஸ்துவாகவாவது இருக்கவில்லை. ஆகையால், தோன்றும்துன்பங்களின்தொடர்ச்சியானது எதை ஆதாரமாகக் கொண்டதாயிருக்கக் கூடும்? இவ்விஷயத்தில் மனத்தைச்சந்தேகமில்லாமல் தெளிவிப்பதான [2]மோக்ஷசாஸ்திரமானது மிகஉத்தமமாகும். உன்னுடையமோக்ஷத்திற்குக்காரணமாக எது சொல்லப்படப்போகிறதோ அதைக் கேள். மோக்ஷத்திற்காக முயறசிசெய்யுமனைவருக்கும் கர்மமுதலியவற்றைவிடுவதுதான் சிறந்ததாகும். விலகாத துன்பத்துடன் கூடியவைகளான பிரபஞ்சங்களின்சேர்க்கையானது துன்பத்தைக்

1 'வேண்டுமென்றும் வேண்டாமென்றும் இரண்டுமில்லாததென்றும் மூன்று விதமாகப் புத்திக்கு உபயோகமுண்டாகின்றது' என்பது பழைய உரை'. இதனடுத்த ஶ்லோகத்தில் சொல்லியபடி மூன்று விதமென்று கொள்வது நலம்.

2 வேறுபாடம்.

கொடுப்பதும் கெட்டதுமாகும். திரவியத்தை விடுவதற்காகக்கூறப் படும் கர்மங்களும் போகங்களைவிடுவதற்காக விதிக்கப்படும் விரதங் களும் ஸுகத்தைவிடுவதற்காக விதிக்கப்படும்தவமும் யோகமும் அனைத்தையும்விடுவதில முடிவடைகின்றன. துக்கத்தை விலக்கிக் கொள்ளவேண்டியதற்காக இரண்டாவதில்லாமல் எல்லாவற்றையும் விடவேண்டுமென்ற தியாகவழியானது இவ்விதம் உபதேசிக்கப்பட் டது. தியாகமில்லாவிட்டால் துன்பமுண்டாகும். புண்ணியமானது நசித்துப் பாவமும்விலகித் தவத்தைக்காரணமாகக்கொண்ட உறுதியு ள்ள பயனும்போனால் கிழத்தனம் மரணம் பயம் இவைகளிலிருந்துவிடு பட்டு மனிதன் ஆகாயம்போல விசேஷமற்றவனாகிப் படுத்திருப்பான். புத்தியிலிருப்பவைகளும் மனத்தை ஆருவதாகக்கொண்டவைகளு மான ஐந்துஞானேந்திரியங்களைச்சொல்லியபின் [1]மனத்தை ஆருவதா கக்கொண்டஐந்துகர்மேந்திரியங்களையும் சொல்லுகிறேன். கைகளைக் கர்மங்களைச் செய்யும் இந்திரியங்களென்று தெரிந்துகொள்ளவேண் டும். கமனத்திற்குரியஇந்திரியம் கால்கள். கர்ப்பத்தை உண்டுபண்ணு வதற்கும் ஆனந்தத்திற்கும் உரியஇந்திரியம் சேபஸ். விடுவதற் குள்ள இந்திரியம் பாயு. வெவ்வேறானசப்தங்களைச்சொல்லுவதற்காக வாக்கு. [2]இந்த ஐந்து இந்திரியங்களுடன்கூடியிருப்பது மனமென்று அறிவிக்கிறார்கள். இவ்விதமான இந்தப்பதினோர்இந்திரியங்களையும் புத்தியால் [3]சீக்கிரம் விலக்கிக்கொள்ளவேண்டும். காதுகள் சப்தம் மனம் இந்தமூன்றும் கேட்கிறதற்குக்காரணமாயிருப்பன. அப்ப டியே தொடுவதிலும் அதுபோலப் பார்ப்பதிலும் அதுபோலவே சுவைப்பதிலும் மோப்பதிலும் மும்மூன்றுண்டு. இவ்விதம் இந்த ஐந்துமூன்றுகளான ஸாதனங்கள் அந்தஅந்தஅறிவிற்குக் காரணங் களாகின்றன. மூன்றுவிதமான இந்தஸாதனமானது அந்த ஞான த்தை உண்டுபண்ணுவதற்காகவே முறையே வந்துகொண்டிருக் கிறது. ஸாத்விகம் ராஜஸம் தாமஸமென்று அந்தஸாதனங்கள் மூன்றுவிதம். அவைகளிலிருந்து எல்லாவற்றையும்ஸாதிக்கத்தக்க மூன்றுவிதமான அனுபவங்களுண்டாகின்றன. [4]ஸந்தோஷம், பிரீதி,

---

1 'பிராணனை' என்பது வேறுபாடம்.

2 வேறுபாடம். 3 வேறுபாடம்.

4 இஷ்டமானவஸ்துவைக் கேட்பது பார்ப்பது அடைவது அனுப விப்பது இவைகளிலுண்டாகும் சித்தவிருத்திகள் முறையே ஸந்தோஷ முதலிய நான்குமாகும். அனுபவித்ததிலும் அனுபவியாததிலும் ஒரேவிதமான மனத்தின்நிலை உபசாந்தியாகும்.

ஆனந்தம், ஸுகம், மனத்திற்குஉபசாந்தி இவை காரணமில்லா மலோ ஒருகாரணத்திலிருந்தோ உண்டாவது ஸாத்விககுணமாகும். ஸந்தோஷமில்லாமை பரிதாபம் பேராசை சோகம் பொறுமை இவைகள் ரஜோகுணத்தின் அடையாளங்களாகும். அவைகள் ஸ்வபாவத்தாலும் சிலகாரணங்களாலும் காணப்படுகின்றன. அவிவேகமும் மோகமும் அஜாக்ரதையும் தூக்கமும் சோம்பலும் மற்றும்பலவிதமுமான தமோகுணத்திலிருந்து உண்டானகுணங்கள் இயற்கையாலும் காரணங்களாலும் உண்டாகின்றன. அவைகளில் சரீரத்திலோ மனத்திலோ ஸுகததைத்தருவதாயிருக்கிறது ஸத்வகுணத்தாலுண்டான பொருளென்று அதை அடையவிரும்பவேண்டும். தாபமுள்ளதும் தனக்கு வெறுப்பைச்செய்கிறதுமாயிருப்பதை அந்தக்காரணத்தால் ரஜோகுணம் உண்டாயிருக்கிறதென்று நினைக்கவேண்டும். அதுபோலச் சரீரத்திலோ மனத்திலோ எது மோகத்துடன்கூடியதும் இன்னதென்றுஊகிக்கத்தகாததும் அறியத்தகாததுமாயிருக்கிறதோ அதைத் தமோகுணமென்று நிச்சயிக்கவேண்டும். ஆகாயத்தை அடைந்தசெவியும் செவியைஅடைந்திருக்கும்சப்தமும்ஆகாயமென்னும் பூதஉருவந்தாம். சப்தத்தை அறியும்பொழுது ஆகாயம்செவி இவ்விரண்டும் வேறுகஅறியப்படுகிறதில்லை; அறியப்படாமலிருப்பதுமில்லை. இதுபோல த்வக்கும் கண்களும் நாவும் ஐந்தாவதான மூக்கும் முறையே ஸ்பர்சம் ரூபம் ரஸம் மணம் இவைகள் தாம். அவைகளும் சித்தத்தைவிட வேறல்ல. அந்தச்சித்தமும் மனம் தான். ஐந்துவிஷயங்கள் ஐந்துஇந்திரியங்கள் இவைகளுக்குள்ள கேட்பதுமுதலியகாரியங்களில் ஓரேஸமயத்தில் வியாபிக்கும்திறமை சித்தத்துக்கிருப்பதால் இந்தப்பத்திலும் அதுஇருக்கிறது. சித்தத்தைப் பதினோராவதாகத் தெரிந்துகொள். புத்திஎன்பது பன்னிரண்டாவதாகும். இந்தப்பன்னிரண்டின்காரியங்களும் ஒருஸமயமில்லாமலிருப்பது (அதாவதுவிசேஷஞானமில்லாதிருப்பது) தமோகுணத்தாலுண்டானநித்திரையாகும். அப்பொழுது ஆத்மாவிற்குநாசமில்லை. அவைகளின்காரியங்கள் ஒருஸமயத்திலிருக்கும்பொழுது உண்டாவது உலகவியவகாரமாகும். இந்திரியங்களை விலக்கிச்சென்றாலும் ஜாக்ரத்தசையில் முதலில அனுபவிக்கப்பட்ட விஷயங்களின்வாஸனை வந்திருப்பதால் அந்தவிஷயங்களைக்கண்டு சிந்தித்துக்கொண்டுமூன்று குணங்களுள்ளவனுகவே சுற்றுகிறான். (இது ஸ்வப்நம்.) தமோகுணத்தால்அடிக்கப்பட்டசித்தமானது விரைவாக [1]லயத்தை அடை

---

1 வேறு பாடம்.

ந்து சரீரத்தில் நிலையுற்றதானஎந்தவுழிவைச்செய்கிறதோ அதைத் தமோகுணத்தாலுண்டான நித்ராஸுகமென்று சொல்லுகிருர்கள். வேதத்தாலுபதேசிக்கப்பட்டதும் துக்கத்தை [1]அனுபவியாததுமான அந்தமோக்ஷத்திலும் பொய்யானதும் அவ்யக்தமுமான தமஸுடன் கூடிய ஸுஷுப்தியில்போலிருக்கும். இவ்விதம் விலக்கப்பட்டதும் தம்கர்மங்களைக் காரணமாகக்கொண்டதுமான இந்தப்ரபஞ்சமானது (அஞ்ஞானமுள்ள)சிலருக்கு உறுதியாயிருக்கிறது; (ஞானமுள்ள) சிலருக்கு விலகுகிறது. நான்என்னும்இப்பொருளானது வேறுஇடத்தில் நிலையுள்ளதன்று. எவனுக்கு இது எப்பொழுதும் உறுதியாயிருக்கிறதோ அவனே அறிவுள்ளவன்.இதைவிடவேருனசரீரதர்மமானது எல்லாப்ராணிகளிடத்திலும் எப்பொழுதும் உறுதியாயிருக்கிறது. இதேஅனுமானத்தால்அந்தத்தர்மத்தை விலக்கிக்கொள்ளவேண்டும். மனிதன் ஞானத்தால் மோக்ஷமடைகிருன். தர்மபுத்தியுள்ளவன் ஞானமுள்ளவனுவான். உலகமானது தர்மத்தால் நிலைபெற்றிருக்கச் செய்யப்படுகிறது. யாவும் தர்மத்தில் நிலைபெற்றிருக்கின்றன. தர்மமானது எல்லாஇஷ்டங்களையும்உண்டுபண்ணுவதும் யாவற்றிற்கும் காரணமுமாயிருக்கிறது. உலகில் யாவும் காணப்படுகின்றன. எவ்விதத்திலும் அது எல்லோருக்கும் இஷ்டமாகிறதில்லை. ஆகையால், யாவற்றையும்தியாகம்செய்தால் பரமாத்மாவின்அருள்உண்டாகிறது. உலகங்களில்காணப்படும் பொருளைவிடக் காணப்படாததும் ஒப்பற்றதுமான ஒருவஸ்து எங்குமிருக்கிறது. ஆத்மவிசாரம்செய்கிறவர்கள் ஐந்துபூதங்களின் சேர்க்கையான இச்சரீரத்தை க்ஷேத்திரமென்று சொல்லுகிருர்கள். மனத்திலிருந்துகொண்டு விளங்கும்பொருளெதுவோ அது க்ஷேத்ரஜ்ஞனென்று சொல்லப்படுகிறது.அஜ்ஞானமென்னும்ஸ்வபாவத்தால்சேர்ந்துகொண்டிருக்கும் எல்லாப்ராணிகளிடங்களிலும்அவற்றிற்குள்ளகாரணங்களிலும் இவ்விதமிருக்கும்பொழுது (ஆத்மாவிற்கு)நாசமென்பது ஏது ? (பிரபஞ்சமானது) எவ்விதம்நிலையுள்ளதாயிருக்கக்கூடும் ? கடலில்சென்றநதிகளானவை தம்நிலையை வேருகவைத்துகொள்ளமுடியாமல் தம்உருவங்களையும் பெயர்களையும் விடுவதுபோலப் பிரபஞ்சத்திற்கு நாசமுண்டாகிறது. எல்லாவிடத்திலும் ஜீவனுனவன் வேறுவஸ்துவுடன்சேர்ந்து காணப்படுகிருன். இவ்விதமிருக்கும்பொழுது அந்த வஸ்துக்களைவிட்டு விலகியபின் திரும்பவும் விசேஷஅறிவு எவ்விதமிருக்கக்கூடும்? அஜாக்ரதையில்லாமல் ஆத்மாவைத்தேடுகிறவனும் மோக்ஷத்துக்குக்காரணமான இந்த

---

1 வேறு பாடம்.

வித்தையைத்தெரிந்துகொள்ளுகிறவனுமானவன் ஜலத்தால் நனைக்கப்பட்டதாமரை இலையானது அதனுடன் பற்றுதலில்லாமலிருப்பது போல வேண்டாதவைகளான கர்மங்களின்பயன்களுடன் பற்றுதலில்லாமலிருப்பான். இந்தமனிதன் பிரஜைகளைக் காரணமாகக் கொண்டவைகளும் தேவர்களைப்பற்றியவைகளும் உறுதியுள்ளவைகளுமான பலபாசங்களிலிருந்து விடுபட்டு ஸுகதுக்கங்களை விடுகிறபொழுது [1] லிங்கசரீரமற்றவனும் முக்திபெற்றவனுமாகி உத்தமகதியை அடைகிறான். வேதப்பிரமாணத்தால் வெளியான சமதமாதிகளான மோக்ஷஸாதனங்களால் புண்ணியம் நசித்துப்பாவமும் நீங்க அவைகளைக் காரணமாகக்கொண்டபயனும் நசிக்க, மூப்பு இறப்புப்பயங்களற்றவனாகிப் படுத்திருப்பான். இவ்விதம்மஹத்தென்னும்ஸகுணப்பிரம்மத்திலும் வைராக்யமடைந்தவர்களாகிப் பற்றுதலில்லாததும் லிங்கசரீரமில்லாததும் எங்கும்விளங்குவதுமான பரமாத்மாவை அடைந்து அநுபவிக்கிறார்கள். ஊர்ணநாபியென்னும் (எட்டுக்கால்) பூச்சியானது நூலால்கட்டப்பட்டவீட்டில் சுற்றிக்கொண்டு எவ்விதம்நிற்கிறதோ அதுபோல அவித்தையால்வீழ்த்தப்பட்டஜீவன் நிற்கிறான். அந்தப்பூச்சியானது அந்த வீட்டைவிடுவதுபோல முக்திபெற்றவன் துக்கத்தைவிடுகிறான். அவன் துக்கமானது மலையில்விழுந்தமண்கட்டிபோலச் சிதறுகிறது. ருருவென்னும் விலங்கானது பழையதானதன்கொம்பைத்தள்ளிவிட்டுப் பாராமல்செல்லுகிறதுபோலவும் பாம்பானது தன் பழையதோலைத் தள்ளிவிட்டுப் பாராமல்செல்லுகிறதுபோலவும் முக்திபெற்றவன் துக்கத்தைவிட்டுச் செல்லுகிறான். ஜலத்தில்விழுகிறமரத்தைத் தள்ளிவிட்டு அதில்பட்டுக்கொள்ளாமல் பக்ஷியானது ஓடுவதுபோல இந்த முக்திபெற்றவன் லிங்கசரீரமற்று ஸுகதுக்கங்களைத் தள்ளிவிட்டுச் சிறந்தகதியைஅடைகிறான். [2]பலவிதமானஎல்லாஸங்கல்பங்களிலிருந்தும் விடுபட்டவன், 'நானே எல்லாஉருவுமாயிருக்கிறேன். நான் எல்லாப்பொருளிலுமிருக்கிறேன். நானே உள்ளிலுமிருக்கிறேன். நானே ஜீவன்' என்ற இந்தக்கவியைப் பாடிக்கொண்டிருப்பான். அன்றியும், மிதிலாபதியானஜனகனால் தன்நகரமானது தீயால் சூழப்பட்டபோது, 'இதில் என்னுடைய உமியும் எரிக்கப்படவில்லை' என்று பாடப்பட்டிருக்கிறது. அரசனும் தானே இவ்விதம்சொன்

---

1 பிராணன் ஐந்து, இந்திரியம் பத்து, மனம் புத்தி இரண்டு, ஆகப்பதினேழும் சரீரமென்னப்படும்.

2 அதிகபாடமான அரைஶ்லோகம் விடப்பட்டது.

னுன்' என்றுசொன்னுர். பஞ்சசிகரால்சொல்லப்பட்டதும் மோக்ஷத்தைப்பற்றியதுமானஇவ்வுபதேசம்முழுமையையும் தான்நன்குகவனித்துப்பார்த்து அதன்கருத்தை நிச்சயம்செய்துகொண்ட விதேகராஜன் சோகங்களைவிட்டு உத்தமமானஸுகமுள்ளவனுகிக்களிப்புற்றிருந்தான். அரசனே! மோக்ஷத்தைநிச்சயம்செய்வதான இவ்வுபதேசத்தைப் படிக்கிறவனும் எப்பொழுதும் சிந்திக்கிறவனுமானவன் கபிலரின்சிஷ்யரான பஞ்சசிகாசார்யரைஅடைந்த மிதிலாபதியான ஜனதேவன்போலத் துக்கங்களை அனுபவிக்கமாட்டான்; துக்கமில்லாதவனுகி முக்தியையும்பெறுவான்" என்றுசொன்னுர்.

---

## இருநூற்றிருபத்துமூன்றுவது அத்தியாயம்.

### மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



(மிதிலைஎரிந்ததும் ஜனகன்கவலையற்றிருந்ததும்.)

யுதிஷ்டிரர், "அறிஞர்களில் பெரியவரே! தர்மபுத்தியுள்ள மிதிலாபதியானவன் மிதிலாபுரி எரிக்கப்பட்டதைக்கண்டும் தான் எரிக்கப்படுகிறவனல்லனென்று சொன்னது என்ன காரணம்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினுர்.

"அரசப்புலியே! மிதிலை முன்காலத்தில் எதற்காக எரிக்கப்பட்டதென்பதைக் கேள். பெரியபுத்தியுள்ளவனே! அந்த மிதிலையானது தீயால் எரிக்கப்பட்டது. அதை என்னிடமிருந்துகேள். ஜனதேவனென்னும் அந்தஜனகன் மனத்தில் நன்றுகவிசாரித்துக் கர்மங்களைத் தியானம்பண்ணிக்கொண்டு ஸர்வபாவனைபெற்று அந்த எண்ணத்துடன் ஸஞ்சரித்துக்கொண்டிருந்தான். ஆத்மாவை அறிந்தவனும் அறிவுடையோர்களிற சிறந்தவனுமானஜனகன் யாகம்செய்யும்பொழுதும் தானம்செய்யும்பொழுதும் ஹோமம்பண்ணும்பொழுதும் இந்தப்பூமியைப்பாதுகாக்கும்பொழுதும் பரமாத்மமயமான நிலைமையுடன் இருந்தான். எல்லாஉலகங்களுக்கும் ஈசரான பிரபுவானவர் தாமே அந்த ஜனகன்மனத்திலுள்ளஸங்கல்பத்தை அறிய விருப்பங்கொண்டார். பெரிய புத்தியுள்ள அவர் பிராம்மணஉருவத்துடன் அந்தமிதிலையில் சிறிது வேண்டாதகாரியத்தைச்செய்தார். அவர் பிராம்மணஸ்ரேஷ்டர்களால்பிடிக்கப்பட்டு அரசனிடம் அறிவிக்கப்பட்டார். அரசன் அக்குற்றத்தைக்காரணமாகக்கருதி, 'ஓ! பிராம்மணரே! எவ்விதத்திலும் உமக்குத் தண்டனையை நான்

விதிக்கமாட்டேன். என்னுடையபூமியின் எல்லைஆளவான என்ராஜ்யத்தைவிட்டு வெளியிற்செல்லும்' என்றுசொன்னான். அதைக்கேட்டுப் பிராம்மணரும் அரசனிடம்சென்று, 'அரசனே! சொன்னபடி செய்கிறேன். எனக்குத்தெரியும்படி சொல். உன்னுடைய பூமிக்கு எல்லை எது? எனக்கு இப்பொழுது நியாயமாகச்சொல்' என்று கேட்டார். அதைக்கேட்டு மிதிலாபதியான அரசன் அதைத் தத்வ ஞானத்துடன்தெரிந்துகொண்டு வெட்கத்தால்முகம்கவிழ்ந்து பிராம்மணரைநோக்கி ஒருபேச்சும்பேசாமலிருந்தான். பிராம்மணரான வர், 'ராஜேந்திரனே! சொல்லு. உன்ராஜ்யத்திலிருந்து துரத்தப் பட்டவனாகிச் செல்லுகிறேன்' என்று பரபரப்புடன் அரசனைநோக்கித் திரும்பவும்திரும்பவும் வினவினர். பிறகு, அரசன் பின்வருமாறு ஆலோசனை செய்துகொண்டு பிராம்மண ஶ்ரேஷ்டரைநோக்கி, 'ஓ! பிராம்மணரே! இந்தப்பூமியில் எனக்குஇருப்பிடமுமில்லை. அல்லது, பூமிமுழுமையும் என்னுடையது; நீர் சென்றாலும்செல்லும்; நின்றாலும் நில்லும். என்னுடையபுத்தி இவ்விதநிச்சயத்துடனிருக்கிறது' என்றுசொன்னான். மிதிலாபதியானஅந்தஅரசனால் இவ்விதம்சொல்லப்பட்டஅந்தப்பிராம்மணோத்தமர் மஹாத்மாவும் மந்திரிகளால்சூழப்பட்டவனுமான அந்தஅரசனைநோக்கி, 'நீ எப்பொழுதும்இவ்விதம் ஸ்ரீபத்மநாபருடைய பக்ஷத்தில் நிலையுள்ளவன். அந்தோ! நீ மிகவும் கிருதார்த்தனாயிருக்கிறாய். நான் போகிறேன். உனக்கு க்ஷேமமுண்டாகட்டும்'என்றுசொன்னார். இவ்விதம் சொலலிவிட்டுப்பிராம்மணர் ஜனகனுடையஎண்ணத்தைப்பிராம்மணஶ்ரேஷ்டர்களுக்குஅறிவிக்க வேண்டுமென்றவிருப்பத்துடன் சென்றார். பகவானானவர் தாம்அந்த ஜனகனுடைய மிதிலையைத் தீயால் எரித்தார். மிதிலாபுரிஎரிக்கப் படுவதைக்கண்டும் ஜனகராஜன் சலிக்கவில்லை. ஜனங்கள்கேட்கும் பொழுது அந்த அரசன், 'அந்தோ! என்னுடையதனம்அழிவில்லாதது. எனக்கு வேண்டத்தக்கது ஒன்றுமில்லை. மிதிலாபுரி எரிக்கப் படுவதால் என்னுடையதொன்றும்எரிக்கப்படவில்லை' என்றஇவ்வசனத்தைச்சொன்னான். இவ்விதம்சொல்லுகிற அந்தஅரசனுடையமனத்திலுள்ளஎண்ணத்தைக்கேட்டுக்கேட்டுப் பிராம்மணோத்தமரானவர் அந்தமிதிலாபுரியைத் திரும்பவும் பிழைக்கும்படிசெய்தார்; தம்மையும்காண்பித்தார். திரும்பவும், 'ஓ! நராதிபனே! தர்மத்தில் உண்மையானஎண்ணமிருக்கட்டும். உன்னுடையபுத்தி அர்த்தத்தில் இருக்கட்டும். விஷயங்களில் வைராக்யமுள்ளவனாகி ஸத்யத்திலிரு. உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். நான் போகிறேன்' என்றுசொல்லி

அவனுக்கு வரத்தையும்அளித்தார். இவ்விதம் அந்தஅரசனைநோக்கிச் சொல்லியபின் பகவானனவர் அவ்விடத்திலேயே அந்தர்த்தானத்தை அடைந்தார். அரசனே! இந்தஜனகன்கதையை உனக்குச் சொன்னேன். திரும்பவும் எதைக்கேட்கவிரும்புகிருய் ?'' என்றுகேட்டார்.

---

## இருநூற்றிருபத்துநான்காவது அத்தியாயம்.

### மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



(இல்லறத்திலிருந்தே முக்திபெறுவதற்கு உதாரணமான ஸுவர்ச்சலைகதை.)

யுதிஷ்டிரர், "பிரபுவே! ஒருவன், மனைவியுடன் நியமமுள்ளவனுக இல்லறத்திலிருந்து எல்லாஸம்ஸாரங்களையும் தாண்டினவனும் துவந்துவங்களனைத்தையும் விலக்கிக்கொண்டவனுமாயிருப்பானுகில் அவனை எனக்குச் சொல்லவேண்டும். பிராஜ்ஞர்களிற்பெரியவரே! அவ்விதமஹாஜ்ஞானபுருஷன் அரியன்'' என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"அரசனே! நீ என்னிடம்வினவியதும் ஸம்ஸாரபயத்திற்கு மருந்துபோன்றதும் பரிசுத்தமுமான இந்தஇதிஹாஸத்தை நடந்தபடிகேள். எல்லாச்சாஸ்திரங்களின் அர்த்தத்திலும் ஸமர்த்தரும் ஆசாரமுள்ளவரும் தர்மமுள்ளவரும் எப்பொழுதும் தேவர்களையும் பிராம்மணர்களையும்பூஜிப்பவருமானதேவலரென்னும்ஒருபிரம்மரிஷி இருந்தார். அவருக்கு அதிகக்குள்ளமாயிராதவளும் அதிகக்கிருசமாயிராதவளும் அதிகஉயரமாயிராதவளும் நல்லகீர்த்தியுள்ளவளும் அழகானலக்ஷணமுள்ளவளுமான ஸுவர்ச்சலையென்னும்ஒருபெண் இருந்தாள். அப்பெண் விவாகத்திற்குரியஸமயத்தையடைந்ததும் தந்தையான ரிஷியானவர் அதைப்பற்றி, 'வேதத்தைக்கற்றவரும்வித்வானும் குடும்பமில்லாதவரும் பிரியமாய்ப்பேசுகிறவரும் பெரியதவம் பெற்றவருமான் சிறந்தஒருபிராம்மணர் இவளுக்கு எங்கிருந்துபதியாகக்கிடைப்பார்?' என்று சிந்தித்துக்கொண்டிருந்தார். இவ்விதம்சிந்தித்துக்கொண்டிருக்கும்அவரைப்பார்த்து ஸுவர்ச்சலையானவள், 'அறிஞர்களிற்சிறந்ததந்தையே! பொட்டையும் பொட்டையில்லாதவருமாயிருப்பவருக்கு என்னைக்கொடுக்கவேண்டும்.' அறிவுள்ளவரே! எப்போதும் இவ்விதம் நினைத்துக்கொண்டிரும். ரிஷியே! இது என்னுடைய விருப்பம்' என்று ரஹஸ்யத்திலசொன்னள். தந்தையானவர், 'குழந்தாய்! இப்பொழுது உன்னுடையவிருப்பமானது நிறைவேறக்கூடி

யதன்றென்று எனக்குத் தோன்றுகிறது. பொட்டைத்தன்மையென்றும பொட்டையிலலாமையென்றும்சொல்லும்இது எனக்குவிகாரமாயிருக்கிறது. அழகியகண்ணுள்ளவளே! பித்துக்கொண்டவள்போல அமங்களமானவார்த்தையைப் பேசுகிறாயே' என்றுசொன்னார். ஸுவர்ச்சலை, 'நான் பித்துப்பிடித்தவளலலேன். இப்பொழுது ஸரியான புத்தியைமுன்னிட்டு உமக்குச் சொலலுகிறேன். அவ்விதமான பதிஇருப்பாராகில வேதங்களை அறிந்த அவர் என்னைக்காக்கட்டும். நீர் என்னை எந்தப் பிராம்மணருக்குக் கொடுக்கவிரும்புகிறீரோ அவரை இவ்விடததிறகு அழைத்துவாரும். அவர்களுள் என்னுடைய இஷ்டம்போல அவ்விதமானபிராம்மணரைப் பதியாக ஏறறுக்கொள்ளுகிறேன்' என்றுசொன்னாள். ரிஷியானவர், 'அப்படியேஆகட்டும்' என்று அக்கன்னிகைக்குச்சொல்லிவிட்டுச்சிஷ்யர்களைநோக்கி, 'சிஷ்யர்களே! வேதத்தையறிந்தவர்களும பிறப்பிலும்குலத்திலும் பரிசுத்தியுள்ளவர்களும் தாய்வழியிலும் தகப்பன்வழியிலும் பரிசுத்தர்களும் ஆசாரததில்சுத்தியுள்ளவர்களும் அழகுள்ளவர்களும் நோயற்றவர்களும் நல்லபுததியுள்ளவர்களும் சீலமும் பலமும் குணமுமுள்ளவர்களும் கோத்திரஙகளின்கலப்பிலலாதவர்களும் வேதாத்தியயனத்திற்குரிய விரதங்களுள்ளவர்களும் பிரம்மசர்யம்முடித்தவர்களும் தாய்தந்தைகளுடன் கூடினவாகளும் என் கன்னிகையை விவாகம் செய்யவிருப்பமுள்ளவர்களுமானபிராம்மணர்களைப்பார்ததுச்சீக்கிரம் அழைததுவாருஙகள்' என்றுகட்டளையிட்டார். அதைக்கேட்டவுடனே, சிஷ்யர்கள்ஆஶ்ரமஙகளிலும்அஙகுமிங்குமுள்ள கிராமங்களிலும் விரைந்துசென்று பிராம்மணர்களிடம்தெரிவிததார்கள். அரசனே! அந்தப்பிராம்மணோததமாகளான பலமுனிவர்களும் ரிஷியின்பெருமையையும் கன்னிகையின்பெருமையையும் தெரிந்துகொண்டு தேவலரின்ஆஶ்ரமத்தையடைநதார்கள். சிறநதவரும் (ஸுவர்ச்சலையின்) தந்தையுமானதேவலா அப்பொழுது முனிவர்களையும் முனிகுமாரர்களையும் நியாயம்போலக் கௌரவித்து விதிப்படிபூஜித்துக் கன்னியை நோக்கி, 'பெண்ணே! இங்குவந்த இந்த முனிவர்கள் ஸந்ததிகளிடத்தில விருப்பமுள்ளவர்களும் வேதங்களும்வேதாங்கங்களும் நிறைந்தவர்களும் நற்குலததிலுதிததவர்களும் கொண்டாடத்தக்க குணமுள்ளவர்களுமாயிருக்கிறார்கள். கலயாணி! நீ இவர்களுள் பெரிய விரதமுள்ள எநதவரனை விரும்புகிறாயோ, அநதக்குமாரனை இப்பொழுது வரித்துக்கொள். அழகியே! அவன்பொருட்டு நான் உன்னைக் கொடுக்கிறேன்' என்றுசொனனார். 'அப்படியேஆகட்டும்' என்று

சொல்லிவிட்டு அப்பொழுது அழகுள்ளவளும் உருக்கினதங்கம் போன்ற மேனியுள்ளவளும் எல்லாலக்ஷணமும்பொருந்தியவளும் கீர்த்தியுள்ளவளுமான ஸுவர்ச்சலையானவள் பிராம்மணர்களின் ஸபையைப்பார்த்துத் தவத்தையே பொருளாகக்கொண்ட அவர்களை நமஸ்கரித்து, 'இந்தஸபையில் பொட்டையும்பொட்டையில்லாதவருமானபிராம்மணரிருப்பாராகில், அவர் எனக்கு வரர்' என்றவசனத்தைச் சொன்னாள். அதைக்கேட்டு அங்குள்ளமுனிவர்கள் ஒருவரை ஒருவர்பார்த்துக்கொண்டு ஒன்றும் பேசவில்லை. வெவ்வேறானதேசங்களில்வஸிப்பவர்களும் ரிஷிகளில் மிகச்சிறந்தவர்களும் பெரியபாக்கியம்பெற்றவர்களுமான பிராம்மணர்கள் கன்னிகையை அறிவில்லாதவளென்று நினைத்துத் தேவலமுனிவரை மனத்தில் இகழ்ந்துகொண்டு கோபித்து வந்தபடியே திரும்பிச்சென்றார்கள். கன்னிகையான ஸுவர்ச்சலையென்னும் பெண்ணும் தகப்பன்வீட்டில்இருந்துகொண்டிருந்தாள். பிறகு, ஒருஸமயத்தில் பிராம்மணர்களுக்கு நன்மைசெய்பவரும் வித்வானும் நீதியில்ஸமர்த்தரும் [1]ஊஹாபோஹங்களின் முறையைஅறிந்தவரும் பிரம்மசர்யமுள்ளவரும் வேதங்களைக்கற்றவரும் வேதத்தின் உண்மையைஅறிந்தவரும் தர்மானுஷ்டானத்தில் ஸமர்த்தரும் ஆத்மதத்வத்தைப்பகுத்தறிந்தவரும் தாய்தந்தையுள்ளவரும் நற்குணக்கடலும் ப்வேதகேதுவென்னப்ரஸித்திபெற்றவருமான ரிஷியானவர் இந்தவரலாற்றைக்கேட்டு ஆதரவுடன்கன்னிகையை விரும்பி வேகமாக அவ்விடத்தில் தேவலரிடம்வந்துசேர்ந்தார். உத்தாலகரின்புத்திரரும் பெரியநியமமுள்ளவருமான ப்வேதகேதுவைக் கண்டு நியாயப்படி நன்குபூஜித்தபின், தேவலரானவர், 'பெரியபாக்கியம்பெற்றபெண்ணே! இதோ ரிஷிபுத்திரர் வந்திருக்கிறார். அறிவுள்ளவர்களில் பெரியவரும் வேதங்களிலும்வேதாங்கங்களிலும்கரைகண்டவருமானஇவரை வரித்துக்கொள்' என்றுசொன்னார். கன்னிகையானவள் அதைக்கேட்டுக் கோபங்கொண்டு ரிஷிபுத்திரரை நிமிர்ந்துபார்த்தாள். பிரம்மரிஷியானப்வேதகேது அந்தக்கன்னிகையைநோக்கிச் சொல்லத்தொடங்கினார். 'கல்யாணி! நான் வந்திருக்கிறேன். நான் இவ்வுலகில் உண்மையில் பொட்டையாயிருக்கிறேன். எப்பொழுதும் அவ்விதமே நினைத்துக்கொண்டிருக்கிறேன். அதுபோல ஸந்தேகமின்றி நீண்டகண்ணுள்ளவனுமாக என்னை அறிந்துகொள். பெண்மணியே! என்னை வரித்துக்கொள். குற்றமில்லாதவளே! நான் உன்னை வரிக்கிறேன். இவ்வுலகமானது எந்

1 ஸபாபர்வம் 14 - ம் பக்கம் குறிப்பைக்காண்க.

தக்கண்ணால் எப்பொழுதும் பார்க்கவும் அடையவும் அதுபோ லத்தொடவும் மணத்தைஅறியவும் பேசவும் செய்கிறதோ, எந் தக்கண்ணால் கர்மங்கள்செய்விக்கப்படுகின்றனவோ, எந்தக்கண்ணால் மனம் ஸங்கல்பிக்கவும் புத்தியானது உண்மையைஅறியவும் செய் கிறதோ அவ்வித ஆத்மஞானக்கண்ணில்லாதவன் பிறவிக்குருடனெ ன்றுசொல்லப்படுகிறான். எந்தஞானக்கண்ணிருக்கும்பொழுது பார் த்தும் கேட்டும் தொட்டும் மணத்தையறிந்தும் ருசியைஅறிந்தும் இவ்வுலகம் செல்லுகிறதோ, அதுபோல எப்பொழுதும் எந்தக் கண்ணுடன்கூடியிருக்கிறதோ அந்தக்கண்ணானது எனக்கில்லை. ஆகையால, நான் குருடன். கல்யாணி! அக்காரணத்தால் நீ இப்பொழுது என்னைவரித்துக்கொள். உலகதிருஷ்டியுடன் நித்ய நைமித்திகமுதலியகர்மங்களை நான் செய்கிறேன். அவையாவையும் ஆத்மதிருஷ்டியுடனே எப்பொழுதும் பற்றுதலில்லாமலிருக்கும்படி செய்துகொள்ளுகிறேன். காரியமானபிரபஞ்சத்தையும் அதற்குக்கார ணமானபரமாத்மாவையும் பாவித்துக்கொண்டு நான் சுமையிலலாத வனும் சாந்தனுமாயிருக்கிறேன். கர்மத்தைச்செய்வதால் மிருத்யுவை விலக்கிக்கொண்டும் வித்தையால மோக்ஷரூபமும் முந்தியே அடை யப்பட்டதுமான அந்தஆத்மரூபத்தைப்பார்த்துக்கொண்டும் இவ்வுல கில்பொறாமையில்லாமல் வஸிக்கிறேன். கல்யாணி!உன்னுடையஎண் ணப்படி நீ விலைக்குவாங்கப்பட்டவள். உனக்கு நான் பர்த்தாவாகி றேன். நீ என்னை வரித்துக்கொள்' என்று சொன்னார். பிறகு, ஸு வர்ச்சலையானவள் பிராம்மணோத்தமரான அந்தஸ்வேதகேதுவைப் பார்த்து, 'அறிவுள்ளவரே! நீர் மனத்தால் வரிக்கப்பட்டவராகிறீர். மற்றக்கர்மங்களைச் செய்யவேண்டியவர் எனது பிதா. எனக்கு வேண்டி என்தந்தையைக் கேளும். இது வேதத்தில்கூறிய விதி யின்முறையாகும்' என்றுசொன்னாள். அதை அறிந்து அவள்தந்தை யும் முனிகளில்மிகச்சிறந்தவருமானதேவலர், அவ்விதமே உத்தாலக ருடன்கூட அந்தஸ்வேதகேதுவை நன்குபூஜித்து முனிவர்களின் எதிரில தாரையை முன்னிட்டுக் கன்னிகையை அளித்தார். அவ் விடத்திலிருப்பவர்கள் அந்தஸ்வேதகேதுவைக்கண்டு, 'ஹ்ருதய புண்டரீகத்தில்வஸிப்பவரும் எல்லாப்பிராணிகளுக்கும்ஆத்மபூதரும் மதுவென்னும் அஸுரனைக் கொன்றவருமான ஸ்ரீஹரியானவர் ஸ்வேதகேதுஉருவமாகி இதோ நிற்கிறார்' என்றுசொல்லிக்கொண் டார்கள். முனிவர்களிற் சிறந்தேவலர், 'தேவரானஸ்ரீயாதவர் அருள் செய்யவேண்டும். என்னுடைய இந்தப்பெண்ணானவள் உமக்குப்

பத்னியாயிருக்கட்டும். உம்முடன் சேர்ந்து தர்மங்களைச்செய்யும் பத்னியாக அழகுள்ளகன்னிகையை உமக்கு அளிக்கிறேன்' என்று சொல்லி அந்தஸ்வேதகேதுவுக்குக் கன்னிகையைக் கொடுத்தார். பெரியகீர்த்திபெற்ற ஸ்வேதகேது அந்தக்கன்னிகையைப்பெற்றுக் கொண்டு நியாயப்படிவிவாகஞ்செய்து அதில் விதிபோலத்தொடங்கி விவாஹத்திற்குரியதும் மிகஉத்தமமுமான அனுஷ்டானத்தைமுனிக ளால் முடிவுபெறச்செய்து கிருஹஸ்தாஸ்ரமத்தில் வஸித்துக்கொண் டிருந்தார். கிருஹஸ்தாஸ்ரமத்தில் வஸிப்பவரும் அறிவுள்ளவருமான அந்தஸ்வேதகேது பார்யையான அந்தஸுவர்ச்சலையைநோக்கி, 'அழகுள்ளவளே! வேதங்களிலசொல்லப்பட்ட கர்மங்களனைத்தை யும் என்னுடையஸஹதர்மசாரியான நீ என்னுடன்கூட நியாயப்படி செய். நான்என்கிறஎண்ணத்துடன் நான் இருக்கிறேன். அது போலவே நீயும் இருக்கிறாய். ஆகையால், கர்மங்களைச் செய்; நானும் உன்னுடன்செய்கிறேன். அதற்குப்பிறகு,நீ என்னுடையதன்றென்ற எண்ணத்துடன் அந்தக்கர்மங்களை ஞானமென்னும்தீயில் லயிக்கச் செய்து பஸ்மமாகும்படிசெய்யவேண்டும். இவ்விதம் எப்பொழு தும் உன்னாலும் என்னாலும் செய்யப்படவேண்டும். [1]சிறந்த மனிதன் எதைஎதைச் செய்கிறானோஅதைஅதையே மற்றவர்களும் செய்யத்தொடங்குவர். ஆகையால், உலசம்ஸித்திபெறவேண்டியும் தனக்குஸித்தியுண்டாகவேண்டியும் கர்மங்களைச் செய்யவேண்டும்' என்றுசொன்னார். இவ்விதம்சொல்லியபின் பிராஜ்ஞர்களிற்பெரிய வரும் எல்லாஅறிவுகளுக்கும் ஓரேஇடமுமான அந்தஸ்வேதகேது வானவர் புத்திக்கும்க்ஷேத்ரஜ்ஞனுக்குமுள்ள ஒற்றுமைபோலத் தம க்குச்சரியான அந்தமனைவியைஅடைந்து அவளிடத்தில் புத்திரர் களைஉண்டுபண்ணி யாகங்களால் தேவர்களுக்குத திருப்திசெய்த பின் எப்பொழுதும் ஆத்மஜ்ஞானத்தைப் பெரிதாகக்கொண்ட வரும் த்வந்த்வங்களிலிருந்து விடுபட்டவரும் அபிமானிக்கத்தக்க பொருள்களை விட்டவருமாயிருந்தார். ஸந்தோஷத்துடன்கூட இவ் வுலகில் ஸஞ்சரிப்பவர்களும் ஸாக்ஷிபோன்றவர்களுமான அந்தப்பதி யும் பாரியையும் வேறுஉலகத்தை அடைந்தவர்கள்போலிருந்தார்கள். பிறகு, ஒருஸமயத்தில் ஸுவர்ச்சலையானவள் பர்த்தாவான ஸ்வேத கேதுவைநோக்கி, 'ஓ! பிராம்மணோத்தமரே! நீர் யார்? அதை எனக்குச் சொல்லவேண்டும்' என்றுவினவினள். பூஜ்யரும் பேசும் திறமையுள்ளவருமான ஸ்வேதகேது அந்தஸுவர்ச்சலையைநோக்கி,

---

1 ஒருசொல விடப்பட்டது.

'நான் உன்னால் அறியப்பட்டவனாயிருக்கிறேன். சந்தேகமில்லை. 'பிராம்மணோத்தம!' என்று என்னை அழைத்துவிட்டுத் திரும்பவும் என்னகேட்கிறாய்?' என்றுசொன்னார். அந்தஸுவர்ச்சலையானவள் மஹாத்மாவான அந்தஸ்வேதகேதுவைநோக்கி, 'மனத்தில்படுத்திருக்கும்ஆத்மாவைக் கேட்கிறேன்' என்றுசொன்னாள். அதைக் கேட்டு ஸ்வேதகேது அவளைநோக்கி, 'பெண்ணே! அவர் பேசமாட்டார்' என்று விடைஅளித்தார். 'ஆத்மாவைப் பெயரும்பிறப்புமுள்ளதாக் நினைப்பாயாகில் அது பொய்யாகும். பிறப்பிருக்கும்பொழுது சரீரமென்னும்பந்தமுமிருக்கிறது. இச்சரீரத்தில், 'நான்' என்னும்இந்தஎண்ணமானது உன்னிடத்திலும் நிலைபெற்றிருக்கிறது. 'நீயும் நான்; நானும் நான்; யாவும் நான்' என்பதே (உண்மையில்) இருக்கிறது. உண்மையான அந்தப்பொருளானது இந்தச் சரீரத்திலில்லை. எதற்காகக் கேட்கிறாய்?' என்றும் சொன்னார். பிறகு, தர்மங்களைச்செய்யும் அந்தஸுவர்ச்சலையானவள் சிரித்துக்கொண்டு ஸந்தோஷமடைந்தாள். அரசனே! அச்சமயத்தில் சிரித்துக்கொண்டு பர்த்தாவைநோக்கி, 'பொருத்தமில்லாதபலசொற்களால் யாதுபயன்? பிரம்மரிஷியே! எப்பொழுதும் கர்மக்கூட்டங்களால் ஞானத்தைஇழந்தவராயிருக்கிறீர். அறிவிற்பெரியவரே! நான் எவ்விதம் உம்மைத்தொடர்ந்து நியமமுள்ளவளாயிருக்கிறேனோ அவ்விதம் நீர் அந்தஞானத்தை எனக்கு உபதேசிக்கவேண்டும்' என்று சொன்னாள். ஸ்வேதகேது சொல்லத்தொடங்கினார். 'சிறந்தமனிதன் எதைஎதைச் செய்கிறானோ அதைஅதையே மற்றுமுள்ளஜனங்களும் செய்யத்தொடங்குவார்கள். அந்தக்காரணத்தால் இவ்வுலகம்நிலைபெற்றிருக்கிறது; இல்லாவிடில் ஸங்கீர்ணமாகிவிடும். தர்மமானது ஸங்கீர்ணமானால் ஜாதியும் ஸங்கரத்தையடையும் ஸங்கரமுண்டானால் (பெரியது சிறியதைவிழுங்குவதான) மீன்களுக்குரியநியாயம் நடைபெறும். கல்யாணி! இவ்வுலகைப்படைத்தவரும் மஹாத்மாவுமான ஸ்ரீஹரிக்கு அது அநிஷ்டமாகும். அழகியே! உலகங்களின் இந்தப் படைப்பானது உத்தமரானகடவுளின் விளையாட்டாகும். உலகத்தில் எவ்வளவுமணல்கள் இருக்கக்கூடுமோ அவ்வளவேஇந்தஸ்ரீஹரியின் விபூதிகளும் உண்டு; மாயைகளும்அவ்வளவு உண்டு; இந்தமாயைகளின்சக்திகளும் அவ்வளவுஉண்டு. இவ்விதம், 'பெருங்காட்டில்ஆத்மா அகப்பட்டதாயிருக்கிறது. அதில்பிறப்புஇறப்பென்னும்ஸம்ஸாரத்தை அறிவென்றகத்தியால் வெட்டிவிட்டு எவன்செல்லுகிறானோ அவனே அறிவுள்ளவன். அவன் எனக்கு நேசமுள்ளவன். அவன்

நானே. ஸந்தேகமில்லை' என்று அந்தஸ்ரீஹரியின் உறுதிமொழி. மூடர்களும் கெட்டபுத்தியுள்ளவர்களும்தர்மங்களுக்குஸங்கரத்தைச் செய்கிறவர்களும் உலகமரியாதையைமாற்றுகிறவர்களுமான நீசர்கள் ஆஸுரப்பிறவியைஅடைந்து நரகத்தில்செல்லுகிறார்களென்று தேவரின்கட்டளை. ஆகையால், பூஜ்யையான உன்னாலேயும் உலகத்தில் ஸந்தேகமில்லாமல் அது காப்பாற்றத்தகுந்தது. உலக மரியாதையைக்காப்பாற வேண்டி நான் இவ்விதமிருந்துகொண்டிருக்கிறேன்' என்றுசொன்னார். ஸுவர்ச்சலை, 'முனிகளிற்சிறந்தநாதரே! இவ்வுலகில் எது சப்தமென்றுசொல்லப்படுகிறது? அர்த்தமென்பது எது? இவைகளை வெவ்வேறான லக்ஷணத்துடனும் ஸ்வரூபத்துடனும் சொல்லவேண்டும்' என்றுகேட்டாள். ஶ்வேதகேது, 'எழுத்துக்களை மாறுதலுடனுச்சரிப்பதால் வெளியாவது எதுவோ அதைச் சப்தமென்றறியவேண்டும். அந்தச்சப்தத்தால் அறிவிக்கப்படுவது எதுவோ அது அர்த்தமென்றுசொல்லப்படுகிறது' என்று சொன்னார். ஸுவர்ச்சலை, 'இந்தச்சப்தத்திற்கும் அர்த்தத்திற்கும் ஸம்பந்தமிருக்கிறதா? இல்லையா? சப்தமுள்ளவிடத்தில் அர்த்தமுமிருக்குமாகில் அவைகளுக்குள்ளஸம்பந்தத்தை உள்ளபடிஎனக்குச் சொல்லவேண்டும்' என்றுகேட்டாள். ஶ்வேதகேது, 'சப்தத்திற்கும் அர்த்தத்திற்கும் நித்யமானஸம்பந்தமேஇல்லை. தாமரைஇலையில் நீரிருக்கிறதுபோல அந்தஸம்பந்தமிருக்கிறதென்று தெரிந்துகொள்' என்றுசொன்னார். ஸுவர்ச்சலை, 'சப்தத்தின்நிலையானது அர்த்தத்தைப்பற்றியதன்றோ? அந்தநிலையானது ஸம்பந்தமில்லாமல் இராதே? அறிஞர்களில்பெரியவரே! உத்தமரே! அர்த்தத்தின்ஸம்பந்தமில்லாமலிருக்குமாகில் அதைச்சொல்லவேண்டும்' என்றுகேட்டாள். ஶ்வேதகேது, 'அந்தஸம்பந்தமானது விசேஷமாயிருக்குமானால் அர்த்தத்தைஅறிவிக்கும்தன்மைஎன்றஸம்பந்தம் இருக்கிறதென்று சொல்லலாம். எப்பொழுதும் சப்தத்தைஉச்சரிப்பதால் அர்த்தம் அறியப்படுகிறது' என்றுசொன்னார். ஸுவர்ச்சலை, 'அர்த்தமானது சப்தத்திற்குஇருப்பிடமென்று எனக்குச் சொல்லப்பட்டது. அவ்விதமானஅர்த்தமானது சப்தத்துடன்பற்றுதலுள்ளதாயிருந்தும் பற்றுதலில்லாததாயிருக்கிறதென்று இவ்விஷயத்தில் கூறுவது விரோதமாயிருக்கிறது' என்றுசொன்னாள். ஶ்வேதகேது, 'இவ்விஷயத்தில் விரோதமாய்ச்சொல்லப்படவில்லை. உலகமானது ஆகாயமின்றி இருக்கமுடியாது. ஆகிலும், அதில் ஸம்பந்தமேயில்லை. இதுவும்அதுபோலென்றுதெரிந்துகொள்ளவேண்டும்' என்றுசொன்னார். ஸுவர்ச்சலை,

'நான்என்னும் இந்தப்பதமானது எப்பொழுதும் ஆத்மாவைப் பற்றிக்கொண்டதாயிருக்கிறதென்பது தெளிவாயிருக்கிறது. சப்தங்கள் அந்தஆத்மவஸ்துவைப்பற்றியவையாயிருக்கிறதில்லையென்று கூறுவது பொய்யாகவேண்டும்' என்றுசொன்னாள். ஶ்வேதகேது, 'நல்லவிரதமுள்ளவளே! நான் என்றசப்தமானது அஹங்காரத்தைப் பற்றியதாகும்; ஆத்மவஸ்துவைப் பற்றியதன்று. குணங்களுடன் கூடியபொருளை அறிவிக்குந்திறமையுள்ள சப்தங்கள் சிந்தைக்கெட்டாததும் பரமுமான ஆத்மப்பொருளைப் பற்றியவைகளல்ல' என்றுசொன்னார். ஸுவர்ச்சலை, [1] 'முனிகளிற்சிறந்தவரே! இவ்விரண்டில் அஹங்காரமென்பது எது? ஆத்மாவென்பது எது? இவ்விதமிருக்குமாகில் நியாயப்படி அதை எனக்கு உபதேசிக்க வேண்டும்' என்றுகேட்டாள். ஶ்வேதகேது, 'மண்ணால் உண்டு பண்ணப்பட்டபொருளில் எவ்விதம் கடத்தன்மை இருக்கிறதோ அவ்விதம் இந்த ஆத்மவஸ்துவில் அஹங்காரமென்னும்பொருள் கற்பிக்கப்பட்டிருக்கிறது. சிந்தைக்கெட்டாததும் பரமுமாயிருப்பது உண்மையானஆத்மப்பொருளாகும். 'நீ, நான், இது' என்பவை எல்லாம் பரமானஆத்மவஸ்துவில நம்மால் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால், சப்தங்கள் ஆத்மாவில பற்றுதலுள்ளவைகளல்லவென்பதில் விரோதமேயில்லை. பயந்தஸ்வபாவமுள்ளபெண்ணே! ஆகையால், எல்லாவிதத்தாலும் மனதுடன்கூடிய வாக்குக்கள் ஆத்மாவிலில்லை. ஆகாயத்தைஅடைந்தஉலகமானது (உண்மையில)பற்றுதலில்லாவிட்டாலும் பற்றுதலுள்ளதாகக் காணப்படுவதுபோல ஆத்மாவைப்பற்றியகாரியமுமிருக்கிறது. யாவும் ஆகாயத்தில பற்றுதலுள்ளவைகளல்ல. காரியமும் எப்பொழுதும் ஆத்மாவில பற்றுதலுள்ளதன்று. பரிசுத்தமான அந்தப்பரப்ரம்மமானது உபமானமில்லாப்பொருளாதலால அறிவிக்கக்கூடியதன்று; காணப்படுகிறதும் அன்று. ஆகிலும், அது அவ்விதம் காணப்படுகிறதென்று என் கருத்து' என்றுசொன்னார். ஸுவர்ச்சலை, 'ஆகாயமானது விகாரமில்லாததும் மூர்த்தியில்லாததும் அவயவமில்லாததும் எங்குமிருப்பதுமாக எப்பொழுதும் காணப்படுகிறது. நீர்கூறிய சைதன்ய உருவமான ஆத்மாவானது காணப்படுகிறதில்லையே' என்று கேட்டாள். ஶ்வேதகேது, 'ஆகாயத்திலிருக்கும் வாயுவைத் துவக்கு

---

1 இங்கு மூலபுஸ்தகத்திலுள்ளபிழைகளைப் பழையபுஸ்தகத்திலுள்ள உதாரணத்தைப் பார்த்து, திருத்தி இவ்விதம் எழுதப்பட்டது. ப்ரம்மவித்யாபரணமென்ற கிரந்தத்தில 104, 105-ம் பக்கங்களில் பார்க்க.

இந்திரியத்தால் திரும்பவும் திரும்பவும் தொட்டறிகிருன். அதிலுள்ளமணத்தை மோந்துபார்க்கிருன். அதுபோல அதிலுள்ள தேஜஸையும் இருளையும் கிரணக்கூட்டத்தையும் மேகக்கூட்டத்தையும் மழையையும் நக்ஷத்திரக்கூட்டத்தையும் கண்ணுல் காண்கிருன். ஆகாயமோ காணப்படுகிறதில்லை. ஸத்ரூபமானப்ரம்மமோ ஆகாசத்திற்கும்ஆகாசமென்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. அந்தப்ரம்மத்தில்இவைகளெல்லாம் கல்பிக்கப்பட்டிருக்கின்றன. அந்தப்பரமாத்மா ஸத்யரும் ஸ்ரீவிஷ்ணுவுமாயிருக்கிருர். குணங்களைக்கூறும் பெயர்ச்சொற்களானவை பரமாத்மாவினிடத்தில ஆரோபிக்கப்படுகின்றன. எங்கும்நிறைந்த பரமாத்மாவானவர் கண்ணுலும் மனத்தாலும் வேறு கருவிகளாலும் அறியப்படுகிறவரல்லர்; வாக்காலும் சொல்லக்கூடியவரலலர்; ஸூக்ஷ்மமானபுத்தியால் சிந்திக்கப்படுகிருர். பெரிய குடமும் சிறியகுடமும் பூமியில நிலைபெறறவைகளாயிருப்பதுபோல காணப்படும் பிரபஞ்சமுழுதும் மிச்சமின்றி அந்தப்பரமாத்மாவினிடம் நிலைபெறறிருக்கிறது. அது பெண்ணுமன்று; ஆணுமன்று; அலியுமன்று. அது ஞானமொன்றையே உருவமாகக்கொண்டது. அதில் எல்லாம் நிலைபெறறிருக்கின்றன. பூமியின்சிலபாகத்தின்சேர்க்கையாலும் சிலவஸதுக்களின்பாகங்களின்சேர்க்கையாலும் ஜலத்தில ருசியின்வேறறுமை தோன்றுகிறதுபோல ப்ரக்ருதியின்ஸம்பந்தத்தால ஆத்மாவிற்கு வேறறுமை தோனறுகிறது. தண்ணீரைக் குடிப்பவன் திருப்தி அடைவதுபோல (மனிதன்) அந்தப்பரமாத்மாவை அறிவிக்கும்வேதவாக்கியங்களைத்தெரிந்துகொண்டு எப்பொழுதும் எல்லாஅறிவையும் அடைவான். அந்தஅறிவால அந்த ஆத்மஸுகமானது பெருகும்' என்று சொன்ஞர். ஸுவர்ச்சலை, 'சிந்தைக்கெட்டாதபரமாதமா வேதத்தால் அறியத்தக்கவரென்று பௌராணிகர்கள் கூறுகிருர்கள். இந்தச்சொலலால் என்னஸாதிக்கத்தக்கதாகுமென்று எனக்குத தோன்றுகிறது. உலகத்தில பொருளில்லாதசப்தம் எவ்விதமிருக்கிறதோ அவ்விதமே இதுவும்இருக்கலாமென்று எனக்குத தோன்றுகிறது. குறறமில்லாதவரே! இவ்விதம் பார்த்து நியாயப்படி எனக்கு நீர் உபதேசிக்கவேண்டும்' என்று சொன்னுள். ஸ்வேதகேது, 'பரிசுத்தமானபரமாதமவஸ்து வேதத்தால் அறியத்தக்கதென்றுகூறும் சிறந்தவேதமானது உண்மையே. வேதமானது விரோதமாயிருப்பதால பரமாத்மாவை, 'இது' என்று உபதேசிக்கிறதில்லை. அதறகு அருகிலுள்ள அடையாளங்களிலிருந்துகொண்டு உபதேசிக்கிறது. உததமியே! உலகததிலுள்ளசபத

மும் பொருளற்றதாயிருப்பதில்லை. ஒன்றோடொன்று பொருத்தமில்லாதசப்தங்களைப் பொருளில்லாதவைகளென்று உலகத்திலுள்ளவர்கள் கருதுகிறார்கள். பரமாத்மாவைப்பற்றியசப்தங்கள் அப்படியிருப்பவைகளல்ல. அழகுள்ளவளே! அதுபோல (பரமாத்மாவிற்கு) வாக்குக்களுக்கு விஷயமில்லாதிருக்குந்தன்மை யுக்தமாகும். ஸாதனத்தைஉபதேசிப்பதாலும் வழியைஸூசனஞ்செய்வதாலும் உபலக்ஷணமுறையுடனும்மற்றவைகளைவிலக்கும்முறையுடனும்அவரை அறிவிப்பதாலும் பரிசுத்தரானபரமாத்மா வேதத்தால அறியத்தக்கவராகிறாரென்பது என்னுடைய உறுதியானஎண்ணம். நல்ல ஆசாரமுள்ளவளே! தெளிவானஞானமானது ஆத்மாவைப்பற்றிய தியானத்தாலுண்டாகிறதென்று தெரிந்துகொள். அந்தஞானததால் உத்தமகதியை அடைகிறார்கள். [1]இந்தப்பரமாத்மாவினுடையஐஶ்வர்யமானது பலஉருவமுள்ளதாகக் காணப்படுகிறது. அழகுள்ளவளே! வாயு அந்தப்பரமாத்மாவை அறிகிறதில்லை. சூரியனும் அவரை அறிகிறதில்லை. அக்னியும் அவரை அறிகிறதில்லை. அந்தப்பரமாத்மாவால் உலகமே நிறைந்திருக்கிறது. அந்தப்பரமாத்மாஇந்தமனத்தில்இருந்துகொண்டு விளங்குகிறார். ஆத்மஜ்ஞானமென்பது இவ்வளவுதான். இவ்வளவைததான் நான் அறிகிறேன். நம்மிருவருக்கும் அதில் வேற்றுமையில்லை. ஆகையால், வேற்றுமையானது அஜ்ஞானததால்அகங்காரத்திலுண்டுபண்ணப்பட்டிருக்கிறது' என்று சொன்னார். இவ்விதம் பார்த்தா உண்மையாக உபதேசிக்கக் கேட்டு ஸந்தோஷமுற்ற ஸுவர்ச்சலை எப்பொழுதும் (அவருக்குப்) பணிவிடைசெய்கிறவளும் தத்வஜ்ஞானத்தை அடைந்தவளுமாயிருந்தாள். ஓ! அரசனே! பார்த்தாவான ஶ்வேதகேதுவும் அவளைஉதவியாகக்கொண்டு நித்தியநைமித்திககர்மங்களைநடத்தி எங்கும்நிறைந்துவிளங்குகிறவரும் மஹாத்மாவும் பரமாத்மாவுமான ஸ்ரீ கோவிந்தரிடம் கர்மங்களை அர்ப்பணம் செய்து பரமாதமமயமானபாவனையுடன் நெடுங்காலமிருந்து உத்தமகதியைப்பெற்றார். அரசனே! கிருஹஸ்தாஶ்ரமத்தை அடைந்து தம்பதிகள் உத்தமகதியை அடைந்தார்கள். நீகேட்டபடியால் இதனை உனக்கு உபதேசிததேன்" என்றுசொன்னார்.

---

[1] ஒருஶ்லோகம் விடப்பட்டது.

## இருநூற்றிருபத்தைந்தாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(அடக்கமுள்ளவனுடைய லக்ஷணமும் அடக்கத்தின் சிறப்பும்.)

யுதிஷ்டிரர், "ஓ! பாரதரே! எதைச் செய்கிறவன் ஸுகம் பெறுவான்? எதைச் செய்கிறவன் துன்பம் அடைவான்? எதைச் செய்கிறவன் ஸித்திபெற்று உலகில் பயமில்லாதவனாகி ஸஞ்சரிப்பான்?" என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"வேதத்தைக்கண்ட பெரியோர்கள் எல்லாஜாதிகளுக்கும் விசேஷமாகப் பிராம்மணனுக்கும் [1]தமம் ஒன்றையே மிகச்சிறந்ததெனக் கூறுகிறார்கள். தமமில்லாதவனுக்குக் கர்மங்களின் ஸித்தியானது உள்ளபடி உண்டாகிறதில்லை. கர்மமும் தவமும் தேவர்களும் யாவும் தமத்தில நிலைபெற்றிருக்கின்றன. தமமானது தேஜஸைப்பெருகச் செய்யும். தமமானது பரிசுத்தமென்றுசொல்லப்படுகிறது. தமமுள்ள புருஷன் பாவமில்லாதவனும் பயமில்லாதவனுமாகிப் பெருமையை அடைவான். தமமுள்ளவன் ஸுகமாக உறங்குவான்; ஸுகமாகவிழித்துக்கொள்ளுவான்; ஸுகமாக உலகில்உலாவுவான். அவன்மனமும் தெளிவுள்ளதாயிருக்கும். தேஜஸானது தமத்தால் நிலைபெற்றிருக்கிறது. கொடுமையுள்ளவன் தமத்தைமீறிச் செல்லுவான். அவன் வெவ்வேறான காமமுதலிய பலபகைகளை எப்பொழுதும் மனத்தில் காணுவான். மாம்ஸங்களை உண்ணும் கொடிய விலங்குகளிடமிருந்து பயம் உண்டாவதுபோலத் தமமில்லாதவர்களிடமிருந்து பிராணிகளுக்கு எப்பொழுதும் பயமுண்டாகும். அவர்களை அடக்க வேண்டியதற்காக ப்ரம்மதேவர் அரசனைப் படைத்தார். எல்லா ஆஸ்ரமங்களிலும் தமமேசிறந்ததாகும். [2]அவ்வாஸ்ரமங்களில தர்மத்தால் அடையப்படும் பயன் எதுவோ அது தமமுள்ளவனிடம் அதிகமாக உண்டாகுமென்று உபதேசிக்கப்படுகிறது. எந்தக்குணங்களின் கூட்டம் தமமாகுமோ அந்தக்குணங்களுக்குரிய குறிகளைக் கூறுகிறேன். அவைகளாவன:—கிருபணத்தன்மையில்லாமை, பரபரப்பில்லாமை, ஸந்தோஷம், ஸ்ரத்தை, கோபமில்லாமை, நேர்மை, எப்பொழுதும் அதிகவசனம் பேசாமை, கர்வமில்லாமை, பெரியோர்களைப் பூஜிப்பது, அஸூயையில்லாமை, பூததயை, கோட்சொல்லாமை,

1 540-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

2 அதிகபாடமான அரைஸ்லோகம் விடப்பட்டது.

ஊர்வம்பு பொய் புகழாமை இகழாமை இவற்றை விடுதல் ஆகிய இவைகளாம். [1]மோக்ஷத்தில் விருப்பமுள்ளவனும் அனுபவஸமயங்களில வருங்காலத்தை விரும்பாதவனும் பகையைச் செய்யாதவனும் உண்மையான உபசாரமுள்ளவனும் நிந்தையிலும் ஸ்துதியிலும் ஸமமாயிருப்பவனும் நன்னடக்கையுள்ளவனும் நல்லசீலமுள்ளவனும் தெளிந்தபுத்தியுள்ளவனும் தைரியமுள்ளவனும் பரிசுத்தனுமாயிருப்பவன் இவ்வுலகில் பூஜையைப்பெற்று இறந்தபின்னும் ஸ்வர்க்கத்தை அடைகிறான்; எல்லாப்பிராணிகளுக்கும் அரிதான பொருளை அளிப்பவனும் ஸுகமுள்ளவனுமாகிக் களிப்பான். எல்லாப்பிராணிகளுக்கும் நன்மையைச் செய்வதில முயற்சியுள்ளவனும் மனிதரைப் பகையாதவனுமாயிருக்கிறவன் பெரியமடுவைப்போலக் கலக்கமடையாமல மிக்க அறிவுள்ளவனும் திருப்தியுள்ளவனுமாகித் தெளிந்திருப்பான். பிராணிகளிடமிருந்து எவனுக்குபயமில்லையோ, எல்லாப்பிராணிகளுக்கும் எவனிடமிருந்து பயமில்லையோ புத்தியுள்ளவனும் தமமுள்ளவனுமான அந்தப்புருஷன் எல்லாப்பிராணிகளாலும் பூஜிக்கத்தக்கவனாகிறான். பெரியலாபத்தில ஸந்தோஷமடையாமலும் பெரிய கஷ்டத்தில் சோகப்படாமலும் எப்பொழுதும் விசாலமான புத்தியுடனிருக்கும் பிராம்மணன் தமமுள்ளவனென்று சொலலப்படுகிறான். நல்ல கர்மங்களுள்ளவனும் சாஸ்திரஜ்ஞானமுள்ளவனும் பரிசுத்தனும் எப்பொழுதும் தமமுள்ளவனுமாயிருப்பவன் அந்தத் தமத்திற்குரிய பெரியபயனை அனுபவிப்பான். அஸூயையில்லாமை, பொறுமை, சாந்தி, ஸந்தோஷம், ப்ரியவசனம், ஸதயம், கொடை, ஸ்ரமமில்லாமலிருப்பது இவை துஷ்டபுத்தியுள்ளவர்களுடைய வழியல்ல. காமம், கோபம், லோபம், பிறனிடம் அஸூயை, தற்புகழ்ச்சி, ஸந்தோஷமில்லாமை, பொய், அவிவேகம் இவை கெட்டபுத்தியுள்ளவர்களின் வழியாகும். பிராம்மணன் காமத்தையும்கோபத்தையும் தன்வசத்தில அடக்கிக்கொண்டு பிரம்மசாரியும் இந்திரியங்களைவென்றவனும் கொடிதான அவிவேகத்தைவென்று மிகக் கூர்மையான நியமமுள்ளவனுமாகிக் காலத்தை எதிர்பார்த்துக்கொண்டு அபாயமில்லாதவன் போலத் தைரியத்துடன் உலகங்களில் ஸஞ்சரிக்கவேண்டும்" என்று சொன்னார்.

---

[1] வேறுபாடம்.

## இருநூற்றிருபத்தாறுவது அத்தியாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



(தவம் உபவாஸ முதலியவற்றின் முறையும் பயனும்.)

யுதிஷ்டிரர், "ஓ! பிதாமஹரே! பிராம்மணர்கள் விதிகளில் கூறிய பயனில் விருப்பங்கொண்டு விரதத்துடன்கூடியவர்களாகித் தேவதைகளுக்கு இட்டமிச்சமான மாம்ஸமுதலிய ஆகாரத்தைப் புஜிக்கிறார்களே. அது எப்படி?" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"யுதிஷ்டிர! வேதமல்லாதவிடத்தில் (அதாவது தந்திரங்களில்) கூறியவிரதமுள்ளவர்களாகிப் புஜிப்பவர்கள் தமக்குஇஷ்டமான காரியத்தைச்செய்யும் குற்றமுள்ளவர்களாவார்கள். வேதத்தில் கூறிய விரதங்களிலிருந்துகொண்டு புஜிப்பவர்கள் கர்மங்களின் பயனில் பேராசைகொண்டவர்களாகிறார்கள்" என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "ஓ! மஹாராஜரே! அவிவேகிகள்உண்ணாமலிருப்பதைத்தவமென்று கூறுகிறார்கள். இது தவமா? அல்லது, எது தவமாகும்?" என்றுகேட்க, பீஷ்மர்சொல்லத்தொடங்கினர். "ஸாதாரணஜனங்கள் ஒருமாதமாவது ஒருபக்ஷமாவது உண்ணாமலிருப்பதைத் தவமென்று நினைக்கிறார்கள். ஆத்மவித்தைக்குவிரோதமானஉபவாஸத்தைத் தவமென்று ஸாதுக்கள் கருதுகிறதில்லை. ஸந்யாஸமென்னும்தியாகமும் பிராணிகளுக்குஉபகாரம்செய்வதும் உத்தமமானதவமென்று உபதேசிக்கப்படுகின்றன. ஓ! பாரத! குடும்பத்திலிருப்பவனானாலும் தர்மத்தைப்பெரிதாகக்கொண்ட அந்தப்பிராம்மணனானவன் எப்பொழுதும் உபவாஸமுள்ளவனும் எப்பொழுதும்பிரம்மசாரியும் எப்பொழுதும் முனியும் எப்பொழுதும்தெய்வமும் எப்பொழுதும் தூக்கமில்லாதவனும் எப்பொழுதும் மாம்ஸத்தைப்புஜியாதவனும் எப்பொழுதும் பரிசுத்தியுள்ளவனும் எப்பொழுதும் அம்ருதத்தைப் புஜிப்பவனும் எப்பொழுதும் விஷத்தைப்புஜியாதவனும் எப்பொழுதும் விகஸத்தைப்புஜிப்பவனும் எப்பொழுதும் அதிதிகளிடம்அன்புள்ளவனும் எப்பொழுதும் சிரத்தையுள்ளவனும் எப்பொழுதும் தேவர்களையும் பிராம்மணர்களையும் பூஜிப்பவனுமாயிருப்பான்" என்றுசொன்னார். யுதிஷ்டிரர், 'எப்பொழுதும் உபவாஸமுள்ளவனாயிருப்பது எப்படி? எப்பொழுதும் பிரம்மசாரியாயிருப்பது எப்படி? விகஸத்தைப்புஜிப்பவனாயிருப்பது எப்படி? எப்பொழுதும் அதிதிகளிடத்தில் பிரீதியுள்ளவனாயிருப்பது எப்படி?' என்றுகேட்க, பீஷ்மர்

சொல்லத் தொடங்கினார். "காலை ஆகாரத்திற்கும் மாலைஆகாரத்திற்கும்இடைநேரத்தில் திரும்பவும்போஜனம்செய்யாமலிருப்பவன் எப்பொழுதும் உபவாஸமுள்ளவனாகிறான். ருதுகாலத்தில்மட்டும் பாரியையிடம்செல்லுகிற பிராம்மணன் எப்பொழுதும் பிரம்மசாரியாகிறான். எப்பொழுதும் ஞானமுள்ள அவன் ஸத்யவாதியாகிறான். வீணானமாம்ஸத்தைப் புஜியாமலிருப்பவன் எப்பொழுதும் மாம்ஸத்தைபுஜியாதவனாகிறான். எப்பொழுதும் தானம்செய்கிறவன் எப்பொழுதும் பரிசுத்தியுள்ளவனாகிறான். பகலில் உறங்காமலிருப்பவன் எப்பொழுதும் தூக்கமில்லாதவனாகிறான். ஓ! யுதிஷ்டிர! வேலைக்காரர்களும் அதிதிகளும் போஜனம்செய்தபின் எப்பொழுதும் புஜிக்கிறவன் அம்ருதம்ஒன்றையே புஜிக்கிறவனென்று தெரிந்துகொள். அவர்கள் போஜனம்செய்யாமலிருக்கும்பொழுது புஜிக்கும்பிராம்மணன் விஷத்தைப் புஜிக்கிறான். அதிதிகளுக்கு அன்னமளியாமல் போஜனம்செய்யாதவன் எப்பொழுதும் அதிதிகளிடம்பிரீதியுள்ளவனாகிறான். தேவர்களுக்கு அன்னமளியாமல் புஜியாதவன் தேவதையாகிறான். தேவர்களுக்கும் பித்ருக்களுக்கும் வேலைக்காரர்களுக்கும் அதிதிகளுக்கும் அளித்தமிச்சத்தை எவன் புஜிக்கிறானோ அவனே விகஸத்தைப் புஜிக்கிறவனென்றுகூறுகிறார்கள். அவர்களுக்கு ப்ரம்மதேவருடன்கூட அவரிருக்குமிடத்தில் முடிவில்லாத உலகங்கள் உண்டாகின்றன. அப்ஸரஸ்திரீகளுடன் தேவர்கள்அவனருகில்வந்து சுற்றிக்கொள்வார்கள். எவர்கள் தேவர்களுடனும் பித்ருக்களுடனும் புஜிக்கிறார்களோ அவர்கள் புத்திரர்களுடனும் பௌத்திரர்களுடனும் ஸந்தோஷமடைகின்றனர். அவர்களுக்கு மிக உத்தமமான கதி உண்டாகும்" என்று சொன்னார்.

---

## இருநூற்றிருபத்தேழாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(ஸநத்குமாரர் முனிவர்களுக்குப் பகவத்ஸ்வரூபத்தை உபதேசித்தது.)

யுதிஷ்டிரர், "அரசரே! உலகத்தில் சிலர் இரண்டுவிதமும் சிலர் மூன்றுவிதமும் சிலர் பலவிதமுமாகச்சொலலுகிறார்கள். நம்பிக்கை இல்லை. வேறு வழியும் காணப்படவில்லை. அந்தப்ரம்மமும் காணப்படுகிறதில்லை. சாஸ்திரங்களும் பலவிதமாயிருக்கின்றன. சொல்லப்படுகின்றவையும் வெவ்வேறு விதமாயிருக்கின்றன. பிதாமஹரே!

நான் எதைப் பிடித்துக்கொண்டிருப்பேன்? அதை எனக்குச் சொல்ல வேண்டும்'' என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார். தம் தம்தர்மத்தில் முயற்சியுள்ளவர்களும் சாஸ்திரங்களில் விசேஷ ஸாமர்த்தியம்பெற்றவர்களும் மஹாத்மாக்களுமான பண்டிதர்கள் உலகத்திலிருக்கிறார்கள். அவர்களில் யார் வித்வான், யார் தத்வ ஜ்ஞானி என்பதில் எல்லோருடைய உண்மையையும் தெரிந்து கொண்டு எவ்விதம் விருப்பமோ அவ்விதமிருக்கவேண்டும். இவ் விஷயத்தில் முன்காலத்தில் நடந்ததும் ஞானநிஷ்டையிலுள்ள புத்தியுள்ளவர்களான ரிஷிகளின் பெரியவிவாதத்துடன் கூடி யதுமான பழைய இதிஹாஸமிருக்கிறது. இமயமலைச்சாரிலே மிகக் கடுமையான நியமமுள்ள பலரிஷிகள் இருந்தார்கள். அவர்களில், ஆறாயிரம்பெயர்கள் கூட்டமாகக் கூடியிருந்தார்கள். அக்கூட்டத்தில் சிலர் உலகத்தை நிலையுள்ளதென்றும் சிலர் ஈஸ்வரனுடன்கூடிய தென்றும் ஈஸ்வரனில்லையென்றும் மூலமானகாரணமில்லையென் றும் இவ்வுலகமெல்லாம் இவ்விதமேஇல்லையென்றும் சொல்லத்தொ டங்கினார்கள். சில பிராம்மணர்கள் ஸ்வபாவமென்றும் சிலர் கர்ம மென்றும் மற்றும்சிலர் மனிதர்களின்முயற்சியென்றும் சிலர் தெய்வ மென்றும் ஸ்வபாவமுதலியதே அதுதானென்றும் கூறினார்கள். அர சனே! பலவிதமாகநூறுயுக்திகளுடன்கூடியவர்களும் பலசாஸ்திரங் களை நடைபெறச்செய்தவர்களுமான பிராம்மணர்கள் ஸ்வபாவத்தால் ஒருவரைஒருவர் வெல்லவேண்டுமென்ற விருப்பங்கொண்டவர்களா னார்கள். பிறகு, வாதிப்ரவாதிகளுடன்கூடியதும் பாத்திரங்களை யும் தண்டங்களையும் அடிக்கஸாதனமாகக்கொண்டதும் மரவுரிகளை யும் தோல்களையும் வஸ்திரங்களையும் கிழிப்பதுமான பெரியசண் டையானது ரிஷிகளுள் உண்டாயிற்று. பிறகு, கோபத்தையடை ந்த சிலபிராம்மணோத்தமர்கள் சாந்தர்களானார்கள். அனைவரும் வஸிஷ்டரை நோக்கி, 'நீர் ஸநாதனமான பிரம்மத்தை எங்களுக்கு உபதேசிக்கவேண்டும்' என்றுகேட்டார்கள். பிரபுவான அந்த வஸி ஷ்டரும் அந்தரிஷிகளைநோக்கி, 'பிராம்மணஸ்ரேஷ்டர்களே! நான் அறியவில்லை' என்று விடைகூறினர். அந்தப் பிராம்மணர்களனை வரும் நாரதமுனிவரைநோக்கி, 'பெரிய பாக்யம்பெற்றவரே! நீர் எங்களுக்கு உபதேசிக்கவேண்டும். நீர் உண்மையை அறிந்தவரா யிருக்கிறீர்' என்றுகேட்டார்கள். பிறகு, பூஜ்யரான அந்தநாரத ரானவர் அந்தப்பிராம்மணர்களைநோக்கி, 'பிராம்மணர்களே! நானும் அறியவில்லை. நாம் சேர்ந்துகொண்டு எவ்விடத்திற்குச் செல்லு

வோம்? இவ்வுலகில் யார் அறிவுள்ளவர்? எவரிடத்தில் அவிவேக மில்லாமல் ஆச்சரியமானமோக்ஷம் இருக்கிறது?' என்று கேட்டார். அந்தப்பிராம்மணர்கள், 'ஓ! பிராம்மணர்களே! ஸநத்என்னும் முனி யின்இருப்பிடம்சென்று கேளுங்கள். அவர் சொல்லுவார்' என்ற அசரீரியினுடைய அந்தச்சொல்லைக் கேட்டார்கள். பிராம்மண ஸ்ரேஷ்டர்களுள் மிகப்பூஜ்யரும் வேதராசிகளால் அலங்கரிக்கப் பட்டவருமான விபாண்டகரென்னும்ஒருமுனிவர் அந்தஅசரீரிபுரு ஷரைநோக்கி, 'நீர் யார்? பலஅர்த்தங்களைப்பற்றிய கலகத்தினிடையில் வார்த்தைசொல்லிக்கொண்டு காணப்படாமலிருக்கிறீர்' என்றுகேட் டார். பிறகு, அந்தப்பூஜ்யரான அசரீரியானவர் அந்தவிபாண்ட கரைநோக்கி, 'ஓ! மஹாமுனிவரே! நீர் பண்டிதர். வேதமறிந்த வர்கள் எவரை எப்பொழுதும் ஒரேஉருவமுள்ளவரும் அழிவில்லாத வருமான புராணரிஷியென்றுகூறுகிறார்களோ அந்தஸநத் என்னும் ரிஷியென்று என்னை அறிந்துகொள்ளும்' என்ற இவ்வசனத்தைச் சொன்னார். தர்மபுத்திர! மஹாத்மாவான இந்தவிபாண்டகரானவர் திரும்பவும் அந்தஅசரீரிபுருஷரைநோக்கி, 'ஸ்வரூபத்தைப்பற்றிய நிலையைச்சொல்லும். ரிஷிகளிற்சிறந்தவரே! எங்களுக்கு நீர் ஒருவர் இருக்கிறீர். காரணஸ்வரூபமானது ஸத்தா? இல்லையா? அல்லது வேறுஎவ்விதமிருக்கிறது?' என்றுகேட்டார். பிறகு, மஹாத்மாவும் அசரீரியுமான ஆதிபுருஷரானவர் மிகவும்கம்பீரமாய்ப் பேசிக் கொண்டு சொல்லத்தொடங்கினார். மனதால் தம்ஸ்வரூபத்தைத் தெரிந்து அனுபவித்தவரான அந்தப்புருஷர் முனிவர்களைப்பார்த்து, 'எனக்குச் செவிகளும் முகமும் வாயுமில்லை. கால்களும்" கைகளும் கால்நுனிகளுமில்லை' என்று ஸத்யஸ்வரூபத்தைச்சொன்னார். பிறகு, முனிவர்கள், 'ஓ! ரிஷியே! இப்படிப்பட்ட உமக்கு நினைக்கும் திற மையுள்ள மனமும் (மற்ற அங்கங்களும்) இல்லாவிட்டால் எப்படி இவ்வசனத்தைப் பேசுகிறீர்?' என்று கேட்டார்கள். பிறகு, பிராம்ம ணோத்தமர்கள் அதற்கு மறுமொழியைக் கேட்கவில்லை. ஆங் காங்கு ஆகாயத்தைப் பார்க்கிறவர்களும் நகைக்கிறவர்களுமான அந்த ரிஷிஸ்ரேஷ்டர்கள் ஆச்சரியமென்றெண்ணிக் கூட்டங்க ளுடன் ஸநத்குமாரரால் விளங்குவதும் உத்தமமுமான இமயமலை யைநோக்கிச் சென்றார்கள். அந்த மலையில் ஏறி, தியானத்திலிருந்து கொண்டு வேதங்களின் முடிவிலிருப்பவரும் பூஜ்யருமான ஸநத் குமாரதேவரைக் கண்டார்கள். அரசர்களுட்சிறந்தவனே! பிறகு, ஒரு வருஷம்நிறைந்தபின் பிராம்மணர்கள் பிரகிருதியிலிருப்பவரும்முனி

களில் பெரியவருமான ஸநத்குமாரரைக்கண்டு நமஸ்கரித்துநின்றார்கள். ஞானத்தால் பாவங்களை விலக்கினவரும் பூஜ்யருமான ஸநத்குமாரரானவர் வந்தமுனிகளைநோக்கி, 'ஓ! முனிக்கூட்டங்களே! அசரீரபுருஷருடைய அந்தவசனமானது என்னால் அறியப்பட்டது. முனிஸ்ரேஷ்டர்களே! இப்பொழுது வேண்டியதைஇஷ்டம்போலக் கேளுங்கள் என்றுசொன்னார். முனிகளிற்பெரியவரும் பிராம்மணோத்தமரும் ஞானத்திற்குநிதியும் மிகப்பரிசுத்தருமான அந்தஸநத்குமாரரைநோக்கி முனிவர்கள் கையை அஞ்சலிபந்தம்செய்துகொண்டு, 'ஓ! குமாரரே! ஞானநிதியும் சிறந்தவரும் விஸ்வரூபியுமான ஈசனை நாங்கள் எவ்விதம் பூஜிப்போம்? பகவானே! எங்களுக்குச் சிறிதுஅறிவை அனுக்ரஹிக்கவேண்டும். முனிகளிறபெரியவரே! ஸாதுக்கள் தேனுக்கொப்பாகவிளங்கும் மோக்ஷஸுகத்தின்பொருட்டு விஸ்வரூபமானஎந்தவஸ்துவை அடையவேண்டுமென்று கூறுகிறார்களோ அந்தவஸ்துவைப்பற்றிச் சொல்லவேண்டும். மஹானுபாவரே! அதுஎன்ன?' என்று கேட்டார்கள். பலவாயிரம் கல்விகளுள்ளவர்களுள் ஸதயமானகாரணவஸ்துவை அறிந்தவரும் அதில்பற்றுதலுள்ளவரும் மஹாத்மாவும் பூஜ்யருமான அந்த ஸநத்குமாரர் அந்தமுனிகளாலவினவப்பட்டுப் பரமாத்மாவின் ஆஜ்ஞையுடன், 'பரிசுத்தவஸ்துவான அந்தப்பரமாத்மாவைபபற்றிக்கேளுங்கள்' என்றுசொலலத்தொடங்கினார். 'ஓ! பிராம்மணோத்தமர்களே! அசரீரபுருஷர் முன்பு உங்களிடததில எவ்விதம்சொன்னாரோ அந்தவாக்யமானது அவ்விதம் உண்மையே. சொலலியதை நீங்கள் அறியவில்லை. கேளுங்கள். (உலகத்திற்கு) உயர்ந்ததானகாரணம் இருக்கிறது. எவ்விதம்அறியப்படுகிறதென்றால் ஒவ்வொருநாளிலும் [1] பாகவிசேஷமானது காணப்படுகிறது. அவ்வித பாகத்துடன்கூடிய யாவற்றையும் சேர்தததுவைப்பது காரணமாகிறது. எல்லோருக்கும் கண்ணிலுள்ளபுருஷனானவன் இவ்விஷயத்தில் [2] திருஷ்டாந்தமாகிறான். கண்ணுள்ளவர்களுக்குக் கண்ணாடியிலகாணப்படுவது திருஷ்டாந்தமாகலாம். (மற்றவர்களுக்கும்) ஞானத்தில் அந்தஸ்வரூபம் ஸாக்ஷியாயிருக்கிறது. அந்தஆதமாவே யாவற்றையும் அறிகிறதும் பயமில்லாததும் சலனமில்லாததுமாயிருக்கிறது. (உண்மையில) பற்

1 சரீரமுதலியவைகட்குண்டாகும் ருபரஸாதிகளின்வேற்றுமை பாகவிசேஷம் என்று சொல்லப்படுகிறது.

2 கண்ணைவிட அதற்குஸாக்ஷியாயிருப்பது எவ்விதம்வேறானதோ அதுபோல உலகத்தைவிட அதற்குஸாக்ஷியாயிருப்பது வேறென்று அறியவேண்டும்.

றுதலுடனில்லாமலிருந்தாலும், 'நான் எங்கு இருக்கிறேன் ? நான் யாருடையவனல்லேன்? நான் எதனுடன்சேர்ந்திருக்கிறேன்?' என்று தெரிந்துகொள்ளுகிறது. அது பலயுகங்களுக்குப்பின்காலத்திலும் வியாபித்திருக்கிறது. அந்தஆத்மா வெவ்வேறிருப்பதாகத் தோன்று கிறது. அது உண்மையன்று. ஒன்ருயிருக்கும்வாயுவானது எவ்வி தம் பலவிதமாய்ச்சொல்லப்படுகிறதோ அவ்விதம் சொல்வதற்கு இடத்தின்வேற்றுமை காரணமாகிறது. அது எவ்விதமென்ருல் புலி யிடத்திலும் மானிடத்திலும் மனிதனிடத்திலும் பிராம்மணனிடத் திலும் மூங்கிலிலும்இருப்பதானவாயுவானது வெவ்வேருகிறது. ஆகிலும், அது ஒன்றே. அதுபோல இந்தஆத்மாவானது பரமாத் மாவாயிருந்தும் வேருனதுபோலத் தோன்றுகிறது. இவ்விதம் அந்த ஆத்மாவே யாவற்றையும் அடைந்திருக்கிறது. பார்ப்பதும் கேட்ப துமாயிருக்கிற ஆத்மாவானது மோந்துபார்க்கிறதுமில்லை; பேசுகிறது மில்லை. சரீரமென்னும்சக்கரத்திலிருப்பதும் பெரியஉருவமுள்ளது மான அந்தஆத்மாவிற்கு நான்குபுறத்திலுமுள்ள பததுஇந்திரியங்க ளும் ஸூர்யகிரணஙகள் எவ்விதம் வெளியில்வந்து அந்தஸூர்ய னைத் தொடர்ந்துசெலலுகின்றனவோ அவ்விதம் அந்தப்பிரபுவான ஆதமாவைத் தொடர்ந்துசெல்லுகின்றன. ஸூர்யனுனவன் ஒவ் வொருநாளும் அஸ்தமயத்தை அடைகிருன்; திரும்பவும்திக்குக்களில் உதயமாகிருன். உதயம் அஸ்தமயம்என்ற அவ்விரண்டும் ரவியினிட த்திலிருப்பவைகளல்ல ; அதுபோலச் சரீரியானஆத்மாவைத தெரி ந்துகொள்ளுங்கள். [1]பொன்போல ஜோதிருபமாக விளங்கும் நிலை யுள்ளதும் புத்தியிலிருப்பதுமான ஆத்மாவென்னும் அந்தத்தீபத் தைத் தன்மனத்தாலேயேஅறிந்து பரமபதமென்னும்மோக்ஷத்தை அடையவேண்டும். வண்டானது முந்திமுந்திக்கற்கப்பட்டசுறறு தலையே அனுஸரிததிருப்பதுபோல ஆதமாவுமிருக்கிறது. எவன் ஆத்மாவைப் பொய்யான அபிமானமுள்ளதென்றுதெரிந்துகொள்ளு கிருனே அவன் அவிவேகத்தையும் குறையையும் அடையமட்டான். இந்தஆதமாவைக் கண்ணுல்காண்பவன் ஒருவனுமில்லை. கறுப்பு வெளுப்பிலலாததும் உண்மைபொருளும் புத்தியாகியகுகையிலிரு ப்பதும் அறிவென்னும்தேவியின்கையிலிருப்பதுமான அந்தஆதம ரூபத்தை மனத்திறகுஅடங்கியபுததியால அறியவேண்டும். யாகம் செய்கிறவனும்மந்திரத்தால் பூஜைசெய்கிறவனுமானபிராம்மணுேத்த மனும் பிரம்மததைஅறிந்தவனுக்கொபபான நிலையிலஇருப்பவனல்

[1] ஒரு ஸ்லோகம் விடபபட்டது.

லன். மற்றவர்களைப்பற்றி என்ன? தர்மமுள்ளவனல்லாதவதனும் அதர்மமுள்ளவனல்லாதவனும் துவந்துவங்களை விட்டுவிலகியவனும் மாத்ஸர்யமில்லாதவனும் ஞானத்தில் திருப்தியுள்ளவனுமாயிருப்பவன் மோக்ஷத்தில் புத்தியைச்செலுத்திக்கொண்டு ஸுகமாக உறங்குவான். ஸந்தேகமில்லை. பிரபுவான இந்தப்பரமாத்மாவானவர் இவ்விதம் மாயையால் உலகங்களின்படைப்பைச் செய்கிறார். இந்தஆத்மாவானது அவிவேகமடைந்தபுத்தியுள்ளதாகித் தனக்குக்காரணமானபரமாத்மாவை அறிகிறதில்லை. அந்தஆத்மாவானது தான் பார்ப்பதும் பார்க்கப்பட்டவைகளைத்தியானம்செய்வதும் மனனஞ்செய்வதும் அறிவதுமாயிருக்கிறது. உலகங்களைப் படைத்தவரும் முடிவில்லாதவருமானபரமாத்மாவை அறிகிறவன் யார்? எவ்வளவு சொல்லக்கூடுமோ அவ்வளவு என்னால் சொல்லப்பட்டது. முனி ஶ்ரேஷ்டர்களே! நீங்கள் போகலாம்' என்றுசொன்னார். இவ்விதம் உபதேசித்தவரும் ஞானக்கடலினுண்டானவருமான ஸநத்குமாரரைக்கண்டு வணங்கியபின் அநதப்ராம்மணோத்தமர்கள் மகிழ்ச்சியுடன் திரும்பிச்சென்றார்கள். குந்தியின்குமாரனே! ஆகையால், நீயும் ஞானயோகத்தைப் பெரிதாகக்கொள். அரசர்களிற்பெரியவனே! ஞானமானது இவ்விதம் எல்லாத் துர்க்கங்களையும் நசிக்கச் செய்யத்தக்கதாகும். இது முன்காலத்தில் பெரியமுனிவர்களுள் உத்தமரும் மஹாத்மாவும் புராணபுருஷருமான ரிஷியால் பெரிய துக்கங்களுக்கிருப்பிடமான மனிதர்களைக் காப்பாற்றவேண்டி உண்டு பண்ணப்பட்டது. அது நிச்சயம்" என்றுசொன்னார்.

---

## [1] இருநூற்றிருபத்தொன்பதாவது அத்தியாயம்.

## மோக்ஷதாமம். (தொடர்ச்சி.)



(ஞானம் மோக்ஷஸாதனமென்பதையும் அதை அடையும்வகையையும் பற்றி இந்திரனுக்கும் ப்ரஹ்லாதனுக்கும் ஸம்பாஷணை.)

யுதிஷ்டிரர், "ஓ! பாரதரே! இவ்வுலகில் சுபமானாலும் அசுபமானாலும் கர்மமென்பது மனிதனைப் பயனுடன் சேரும்படி செய்கிறது. அந்தக் கர்மத்திற்கு மனிதன் (உண்மையில்) கர்த்தாவாகி

---

[1] இருநூற்றிருபத்தெட்டாவது அத்யாயமுழுமையும் இருநூற்றிருபத்துநான்காவது அத்தியாயத்திலுள்ளதையாகவே இருப்பதால் விடப்பட்டது.

ருனு, அல்லது, இல்லையா என்பது ஸந்தேகம். பிதாமஹரே ! இதை உண்மையாக உம்மிடத்திலிருந்து கேட்கவிரும்புகிறேன் " என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

" யுதிஷ்டிர! இவ்விஷயத்திலும் ப்ரஹ்லாதருக்கும்இந்திரனுக்கும்நடந்தஸம்பாஷணையான பழையஇவ்விதிஹாஸத்தை உதாஹரிக்கிருர்கள். விஷயப்பற்றில்லாதவரும் பாவங்களைவிலக்கியவரும் நற்குலத்திற்பிறந்தவரும் பலகலவிகளுள்ளவரும்சோம்பலில்லாதவரும் அகங்காரமில்லாதவரும் ஸத்வகுணத்திலிருப்பவரும் இந்திரியங்களை அடக்கியவரும் இகழ்ச்சியையும் புகழ்ச்சியையும் ஸமமாகக்கொண்டவரும் அடக்கமுள்ளவரும் சூன்யமானவீடுபோன்றசரீரமுள்ளவரும் தாவரங்களும்ஜங்கமங்களுமானபிராணிகளின் பிறப்பையும் இறப்பையும்அறிந்தவரும் வெறுப்புள்ளவைகளில்கோபமில்லாதவரும் விருப்புள்ளவைகளில ஸந்தோஷமில்லாதவரும் பொன் மண் இரண்டிலும் ஸமமானபார்வையுள்ளவரும் ஆத்மஸ்வரூபத்திலும்மோக்ஷத்திலும் ஞானத்திலும் தைரியம்கொண்டவரும் நிச்சயமடைந்தவரும்பிராணிகளுக்குமுன்னுள்ளதையும் பின்னுள்ளதையும் அறிந்தவரும் யாவற்றையும் அறிந்தவரும் எல்லாவற்றையும் கண்டவரும் இந்திரியங்களுக்குப்புலப்படாத உருவத்துடன் எங்கும் நிறைந்துவிளங்கும் மஹாத்மாவான ஸ்ரீகோவிந்தரிடம் மனத்தை நன்குசெலுத்தினவரும் எல்லாப்பிராணிகளுக்கும் பிரியததைச் செய்கிறவரும் பாகவதரும் பக்தியுள்ளவரும் எப்பொழுதும் நாராயணரை மிகமேலாகக்கொண்டவரும் பரமாத்மாவைத் தியானம்செய்கிறவரும் ஹிரண்யகசிபுவின்புத்திரரும் இந்திரியங்களை அடக்கினவரும் ஒருவருமில்லாவிடத்தில் உட்கார்ந்திருப்பவருமான ப்ரஹ்லாதரிடம் சென்று அவர்புத்தியை அறியவேண்டுமென்ற விருப்பங்கொண்ட இந்திரன் இவ்விதம் சொல்லத்தொடங்கினன். ' எந்தக்குணங்களுள்ளமனிதன் உலகத்திலுள்ளமனிதர்களுக்கு ஸம்மதனுகஇருப்பானே அந்தக்குணங்கள் யாவும் உம்மிடத்தில் நிலைபெற்றிருப்பதைக் காண்கிறேன். ஆனல், உமதுபுத்தியானது இப்பொழுது சிறுகுழந்தைகளுக்கு ஒப்பாகக் காணபபடுகிறது. ஆத்மாவை அறிந்துகொண்டிருக்கும் நீர் இவவுலகில எதை ஶ்ரேயஸென்று நினைக்கின்றீர்? பிரஹ்லாதரே! கயிறுகளாலகட்டப்பட்டும் உமதுபததத்திலிருந்து நழுவியும் பகைவர்களுக்குவசப்பட்டும் ஸம்பததிலிருந்துவிலகியும் சோகப்படும்நிலைமையிலிருக்கும் நீர சோகப்படாமலிருக்கிறீர். திதியின்வம்சத்தில்பிறந்த ப்ரஹ்லாதரே ! நல்லஅறிவைஅடைந்ததாலோ

அல்லது தைரியமுள்ளவராயிருப்பதாலோ உமக்குள்ளகஷ்டத்தைக் கண்டும் துக்கமில்லாதவராயிருக்கிறீர்' என்றுகேட்டான். இவ்விதம் அந்தஇந்திரனால்கேட்கப்பட்டவரும் தீரரும் நிச்சயமுள்ளவருமான ப்ரஹ்லாதர் மென்மையான சொல்லால் தம்புத்தியை நன்கு வெளியிட்டுச் சொல்லத்தொடங்கினார். 'ப்ராணிகளுக்குள்ளபிரவிருத்தியையும் நிவிருத்தியையும் அறியாதவனுக்கு அவிவேகத்தால் தடைஉண்டாகும். அவற்றை அறிந்தவனுக்குத் தடை உண்டாவதில்லை. எல்லாப் பிராணிகளிடமும் ரகஸ்யமாயிருப்பதும் தியானம் பண்ணத்தக்கதும் அழிவில்லாததும் எப்பொழுதுமிருப்பதும் தடுக்கத்தகாததும் உபமானமற்றதும் எல்லா உருவமுமுள்ளதும் பரத்திலும்பரமுமான பிரம்மமானது எல்லாவிடத்திலும் மறைவுள்ளதாயிருக்கிறது. அதிலிருந்து இவ்வுலகம் உண்டாகிறது. அந்தப்ரம்மம்உருவமுள்ளதாயிருந்தும்உலகம் பலலக்ஷணங்களுடன்கூடியிருப்பதைப் பார்.உலகங்களைப்படைத்தவரும் விஷ்ணுவென்று சொல்லப்பட்டவருமான அந்தப்பரமாத்மா பாதுகாக்கிறார். [1]எல்லாப்பொருள்களின்உண்மையும் அவ்வாறே எல்லாவற்றின் இன்மையும் இயல்பாக உண்டானவைகளும் போகின்றவைகளுமாயிருக்கின்றன. மனிதன்செய்துகொள்ளத்தக்க பயன்ஒன்றுமில்லை. மனிதன் செய்யத்தக்கபயன் இல்லாமலிருக்கும்பொழுது ஒருவனும் தான் ஒன்றைச் செய்கிறவனாயில்லை. தானே செய்கிறவனாயிருப்பானாகில் அவனுக்கு ஒருஸமயம் அபிமானம் உண்டாகக்கூடும். எவன் நன்மையையோ தீமையையோ தான் செய்கிறதாக நினைக்கிறானோ அவனுடையபுத்தி குற்றமுள்ளதென்றும் உண்மையை அறியாததென்றும் என்னுடைய கருத்து. ஓ! இந்திரனே! மனிதன் தனக்குள்ள க்ஷேமத்தைச்செய்துகொள்ள நிச்சயம் கர்த்தாவாயிருப்பானாகில அவனுடைய முயற்சிகள் பயனுள்ளவைகளாகும். ஒருஸமயத்திலும் பயனற்றவையாயிருக்கலாகா. முயற்சிசெய்பவர்களுக்கும் விருப்பமில்லாதது உண்டாகிறதும் விரும்புவது உண்டாகாமலிருப்பதும் காணப்படுகின்றன; ஆகையால், புருஷன் செய்துகொள்ளத்தக்க பயன் ஏது? முயற்சியில்லாமலே சிலருக்கு வேண்டாதது உண்டாவதையும் வேண்டுவது உண்டாகாமலிருப்பதையும் காண்கிறோம். ஆகையால், அது ஸ்வபாவத்தால் உண்டாகிறது. மிக்க அழகுள்ளவர்களும் மிக்க புத்திசாலிகளுமான சிலர் குரூபிகளும் அல்பபுத்தியுள்ளவர்களுமாயிருப்பவர்களிடமிருந்து பொருள்வரவை விரும்புகிறவர்களா

---

1 சிலசொற்கள் இல்லாததால் இந்த அரைஸ்லோகம் விடப்பட்டது.

கக் காணப்படுகிறார்கள். சுபமும் அசுபமுமான குணங்கள்யாவும், ஸ்வபாவத்தால் ஏவப்பட்டுவருகிறபொழுது அதில் அந்த மனிதனுக்கு அபிமானிக்கத்தக்க காரணம் என்னவிருக்கிறது? ஸ்வபாவத்தாலேயே [1]யாவும் உண்டாகின்றனவென்று எனக்கு நிச்சயமாகத் தோன்றுகிறது. என்னுடையபுத்தியானது [2]ஆத்மாவில் நிலைபெற்றிருக்கிறது அதைவிட வேறுவிதமில்லை. இவ்வுலகில் சுபாசுபமான பயனை அடைவது கர்மத்தால்உண்டாவதென்று சிலர் கருதுகிறார்கள். கர்மங்களுக்குரிய விஷயமனைத்தையும் நான் கூறுகிறேன். அதைக் கேள். [3]பாயஸக்கைப் புஜிக்கும் ஒருவன் எவ்விதம் அன்னமிருப்பதை அறிவிக்கிறானோ அதுபோலக் கர்மங்கள்யாவும் ஸ்வபாவத்தையே அறிவிக்கும் அடையாளமாகும். காரியங்களையே அறிந்து காரணமும் பரமுமான ப்ரம்மத்தை அறியாதவனுக்கு அவிவேகத்தால் (மோக்ஷத்திற்குத்) தடைஉண்டாகும். பிரம்மத்தையே அறிந்தவனுக்குத் தடையில்லை. இவ்வுலகத்திலுள்ள பொருள்கள் யாவும் ஸ்வபாவத்தால் உண்டாகின்றனவென்று உறுதியாய்த் தெரிந்துகொண்டவனுக்குக் கர்வமாவது அபிமானமாவது என்ன செய்யக்கூடும்? தர்மத்தின்முறைகளையும் பிராணிகளுக்குள்ள அநித்யத்தன்மையையும் நான் அறிகிறேன். ஓ! இந்திரனே! ஆகையால், நான் சோகப்படாமலிருக்கிறேன். இவ்வுலகமனைத்துமே முடிவுள்ளதாகும். மமதையில்லாதவனும் அஹங்காரமற்றவனும் ஆசையற்றவனும் பந்தத்திலிருந்துவிடுபட்டவனும் துன்பமில்லாதவனுமானநான் விலகிஇருந்துகொண்டு பிராணிகளின் இறப்பையும் பிறப்பையும் பார்க்கிறேன். ஓ! இந்திரனே! ஞானத்தையடைந்தவனும் அடக்கமுள்ளவனும் ஆசையற்றவனும் ஸங்கல்பமில்லாதவனும் யோகநிலையை அடைந்திருப்பதால் (பிரம்மத்தைப்)பார்க்கிறவனுமான எனக்கு வருத்தமில்லை. எனக்குக் காரணத்திலும் காரியத்திலும் விருப்புமில்லை; வெறுப்புமில்லை. இப்பொழுது எனக்கு விரோதத்தைச் செய்கிறவனான பகைவனையும் காணேன். ஓ! இந்திரனே! ஸ்வர்க்கத்திலும் பாதாளத்தி

1 'மோக்ஷம் ஆத்மஜ்ஞானம்யாவும் இயற்கையால் உண்டாவன' என்பது பழையவுரை.

2 இதைக்காட்டிலும் வேறாகத் தைரியமாவது நல்லஅறிவாவது எனக்கு இல்லைஎன்றும் கொள்ளலாம்.

3 பாயஸத்தைப் புஜித்தேனென்று ஒருவன் சொல்லுமிடத்தில் அதற்கும் மூலமாய் அன்னமிருக்கிறதென்று தோன்றுவதுபோலக் கர்மத்தால் பயன் உண்டாகிறதென்று சொல்லுமிடத்திலும் அக்கர்மத்திற்கும் மூலமான ஸ்வபாவமிருக்கிறதென்று தெரிந்துகொள்ளவேண்டுமென்பது கருத்து.

லும் பூமியிலும், நான் விருப்பமுள்ளவனல்லேன். அறியவேண்டிய திலும் அறிவிலும் அறியாமையிலும் (எனக்கு) வேற்றுமைஇல்லை' என்றுசொன்னார். இந்திரன், 'ஓ! ப்ரஹ்லாதரே! இந்தப்புத்தியானது எந்தஉபாயத்தால் அடையப்படுமோ, எந்தஉபாயத்தால் சாந்திஅடையப்படுமோ அந்தஉபாயத்தைக் கேட்கும்எனக்கு நீர் நன்ருகச் சொல்லவேண்டும்'என்றுகேட்க,ப்ரஹ்லாதர் சொல்லத்தொடங்கினார். 'இந்திரனே! ருஜுவாயிருப்பதாலும் அஜாக்ரதையில்லாதிருப்பதாலும் மனத்தெளிவினாலும் புத்தியுள்ளவனுயிருப்பதாலும்' ஆசாரியர்களுக்குச்செய்யும்பணிவிடையாலும் மனிதன் [1] பெருமையை அடைவான்; ஸ்வபாவத்தால் நல்லபுத்தியை அடைகிருன்; ஸ்வபாவத்தால் சாந்தியை அடைகிருன்; எதைஎதைப்பார்க்கிருனே அவையாவும் ஸ்வபாவத்தாலேயே உண்டாகின்றன. துறவியானவன் வேற்றுமையையே அறியமாட்டான். குருவின்முகத்திலிருந்து வேதாந்தவாக்கியத்தைக்கேட்டு அவ்வாக்கியத்தின்பொருளைப்பற்றியஅறிவை மனத்தால்பார்த்துக்கொண்டு பகுத்தறிவால் அடையப்பட்டஆத்மாவையே தொடர்ந்துபார்க்கிருன்; பிறகு, வைராக்யத்தை அடைகிருன்; பயத்தால் (தனக்கு) உண்டாகும்எல்லாத்துக்கங்களிலிருந்தும் காப்பாற்றுகிறவரானபரமாத்மாவைஅடைகிருன்.பிறகு,அந்தப்பரமாத்மஸுகத்தைத் தேடுகிருன்; ஸத்புருஷர்களுடன் சேர்க்கையைச் செய்துகொள்ளுகிருன். ஸத்புருஷர்கள் பரமாத்மஸுகத்தையுண்டுபண்ணுவதற்குப் போதுமானவர்களாகிருர்கள். ஸத்துக்களினருகிலிருந்து லக்ஷணத்துடன் நல்லவழியைத்தெரிந்துகொண்டு எல்லாப்பற்றுதலிலிருந்தும் விடுபட்டுப் பரமாத்மாவை அடைகிருன். விஷயவிருப்பத்தால்செய்யப்படும்தர்மமானது ரஜோகுணமுள்ளதும் பயத்தைத்தருவதுமாகும். அந்தக்காரியத்தால் மனிதன் முறையே தர்மக்குறைவை அடைவான். திரும்பவும் அச்சுதரானபரமாத்மாவிடத்தில் பக்தியில்லாதவனுகவே இருப்பான். உபதேசிக்கும் ஆசிரியரிடத்திலும் நிலையற்றவனுகவே விடுபட்டுச் செல்லுவான். எப்பொழுதும் இவனுக்குக் கருவிகளுக்குப்புலப்படும்விஷயத்தில் பிரீதியுண்டாகும்; ஸம்ஸாரத்திலும் பிரீதியுண்டாகும். எப்பொழுதும் அறிவில்லாமையால் அவனுக்கு ஆத்மாவும் வித்திபெருது. பித்தனுடைய நிலையுள்ளவனுயிருப்பான். கிரமமாய் இவ்விதமே செல்லுவான். எப்பொழுதும் அசுத்தி வளரும். எவ்விதத்திலும் சாந்தி உண்டாகாது. விஷயத்தைப்பற்றிச்செல்லும் இவனுக்கு மோக்ஷவிருப்பமுண்டாகாது.

1 'மோக்ஷத்தை' என்பது பழையஉரை.

போலியுக்திகளில் மிக்கநம்பிக்கையுடன் விஷயங்களிலுள்ளகுணங்களைத் துதிப்பான். அபிமானமும்கர்வமுமுள்ளவனாகிச் சாஸ்திரங்களைக் கேட்கவேமாட்டான். போகமும் அவனை அடையாது. அழிவற்றதும் உயர்ந்தஉலகங்களைப்படைத்ததும் ஞானஉருவமுள்ளதும் தானாகவேவிளங்குவதுமான [1]ப்ரம்மத்தையும் அவன் அறியமாட்டான். அக்காரணத்தால் தன்வினைகளால் சுற்றிவிடப்பட்டு பலபிறவிகளையடைந்து பெரிய அவிவேகத்துடன்கூடியவனுமாகி ஸம்ஸாரத்தின் கரையைக்கடந்திருப்பவரை அறியமாட்டான். ஆசாரியரை அடைவதால் வணக்கத்தையடைந்து (பிரம்மத்தை) அறியவேண்டும். பிறகு, ஆசாரியரென்றுபிரஸித்திபெற்றவர் முறையாக இவனை அனுகூலமான தர்மங்களைச்சேர்க்கும்படி செய்வார். பலாஸுரனையும் விருத்திரனையும் கொன்றஇந்திரனே! அந்தத்தர்மத்தால் இந்த மனிதன் உறுதியுடன் நிலைபெற்றிருக்கிறான். அதனால் உண்டாகும் ஞானமென்னும்வாயுவால் முன்பிறவிகளிலுள்ள கர்மக்கூட்டமென்னும் பஞ்சுப்பொதியானது பறக்கும்படி செய்யப்படுகிறது. இவ்விதம் நன்னடக்கையில்முயற்சியுள்ளவனும் ஸம்ஸாரத்தைவிலக்கிக்கொள்ளுகிறவனுமாயிருப்பவன் எப்பொழுதும் ப்ருகுரிஷியைப் போல (உலகத்தில்) விரும்பத்தக்கவிஷயத்தையே அறுத்துவிடுகிறான். ஓ! இந்திரனே! இந்தமனிதன் வைராக்யத்தைஅடையக்கூடாத அந்தக்காமமானது உள்ளிலிருப்பதாகக் கூறப்படுகிறது. அந்தக் காமத்திற்கு ஒத்தநிலையை விலக்கவேண்டும். அந்தக்காமத்தால் செய்யப்படும்கர்மத்தாலேயே முதலாவதான (ஸுஷுப்தி அவஸ்தையை) அடைகிறான். இரண்டாவதானஸ்வப்னவஸ்தையையும் கர்மத்தால் அடைகிறான். இந்தஜீவன் இந்த்ரியங்களுடன் பிரத்யக்ஷமென்னும் ஜாக்ராவஸ்தையிலிருப்பவனாகிறான். ஸுஷுப்திபோன்ற பெயருள்ளதும் நான்காவதுமான இந்தஆத்மாவானது ஆவரணமென்னும் மாயையுடன் கூடியதன்று. ஆகிலும், அந்தஆத்மாவானது, கிரியையில்லாததும் பாதநிலும்பரமுமான அந்தப் பரமாத்மாவைப்பற்றி உலகநடைப்படி மனத்தைஅடக்கத்தக்க யோகவழியுடன் பூஜிப்பதும் ஹோமம்செய்வதும் அடக்கமுள்ளதுமாயிருக்கவேண்டும். யோகத்தின்வளர்ச்சியுண்டாகும்பொழுது பொதுவான தோற்றமிருப்பதால் சைதன்யஉருவமுள்ளபுத்தியின்விருத்தியைப் பரமாத்மாவின் மாயையென்று தெரிந்துகொள்ளுகிறான். தீயென்னும்பொருளானது அதன்பொறிபோன்றதும் அதைவிட வேறுமாக இருக்கிறதுபோல

1 'ஸ்வதஸ்ஸித்தம்' என்பது இரண்டுமுறைவருதலால விடபபட்டது.

அறிவில்லாதசிறுவர்களுக்கு ஆத்மப்பொருளானது வேருகக் கூறப் படுகிறது. உண்மையில் ஸாதிக்கத்தக்கதொன்றும் இல்லாதிருக்கும் பொழுது நட்புபகைமுதலியவைகள் எப்படி? தேவேந்திரனே! அவை களில்லாதபொழுது சோகமுதலியவைகளுமில்லை. பூஜ்யனே! இவ் விதம்தெரிந்துகொள். ஸமமானபுத்தியை அடையவேண்டும். தேவ பதியே! இவ்விதம் உபாயம் உபதேசிக்கப்பட்டது. கோணல்வழியில் செல்லவேண்டாம். உன் அறிவால் பார்த்துக்கொள். கர்மமானது ஞானிகளைப் பிரவிருத்திக்கச்செய்யாது. ஆனால், இந்த ஞானிக்கு இந்தச்சரீரத்திலுள்ள ப்ராரப்தம் இருக்கிறவரையில கர்மம் அடங் காது. அந்தப்ராரப்தத்தின்முடிவில் ஞானியானவன்அந்தக்கர்மத்தை அடையவேமாட்டானென்பது என்னுடையகருத்து. [1]வெவ்வேருன இடங்களிலிருக்கும்இந்தவாகிந்திரியமானது [2]தாலுஸ்தானத்தில் நிலை பெற்றிருப்பதுபோலப் பொருள்கள் புத்தியை அடைந்திருக் கின்றன. புத்தியானது எப்பொழுதும் ஆத்மாவை அடைந்திருக் கிறது. பலவிதமானஸங்கலபங்களனைத்திலுமிருந்து விடுபட்டதும் பரங்களுக்குப்பரமுமான பரமாத்மரூபியும் வியாபகரும் மஹாத்மாவு மான ஸ்ரீவிஷ்ணுவானவர் வேதாந்தத்தை அறிந்தவர்களால் இவ் விதம் கானம்பண்ணப்படுகிறார். எப்பொழுதும் அவரிடம் குண மிருப்பதில்லை. மஹாத்மாவான அந்தவிஷ்ணுவானவர் உலகங்களில ஜாதிகளிலும் அவற்றைஅடுத்த விசேஷணப்பொருள்களிலும்வஸித் துக்கொண்டிருப்பதால வாஸுதேவரென்று கூறப்படுகிறார். குணங் களுக்குத்தக்கபடியும் கர்மங்களுக்குத்தக்கபடியும் எல்லாஉலகத்திற் கும் எல்லாப்பயனையும் அவரே அளிக்கிறார். இவருடையஉருவமா னது பார்க்கத்தக்கநிலையில நிற்பதன்று. ஒருவனும் இவரைக் கண் ணுல்பார்ப்பதில்லை. இவ்வுலகில ஸமாதிபெற்றபுத்தியுள்ளவன் பக்தி யாலும் தைரியத்தாலும் ஞானஸ்வரூபருள்ளஇவரை எங்கும் பார்க் கிருன். பெரியோர்கள் அதை எனக்கு அறிவிக்கிருர்கள். இந்தி ரனே! மஹாத்மாவான அந்தப்பகவானே மற்றவிஷயத்தையும்அளித தார். இந்திரனே! எனக்குள்ளஉபாயத்தை இவ்விதம் தெரிந்து கொள். ஆகையால், எப்பொழுதும் எனக்கு உலகமேஇல்லை' என்று சொன்னார். அஸுரபதியானபரஹ்லாதர் இவ்விதம்சொல்ல இந்திரன் கேட்டு ஆச்சரியமடைந்தான். அரசனே! அப்பொழுது அன்புமே விட்டு அவர்வசனத்தைக் கௌரவிக்கவும்செய்தான். மூன்று உலகங

[1] இங்கு ஒருச்லோகம் விடப்பட்டது.

[2] மேல்வாய்.

களுக்கும்பதியான அந்தஇந்திரன் அப்பொழுது அஸுரர்களுக்கு அரசரானப்ரஹ்லாதரைப்பூஜித்து அவரிடம்விடைபெற்றுக்கொண்டு தன்னிருப்பிடம்சென்றான்'' என்றுசொன்னார்.

---

## இருநூற்றுமுப்பதாவது அத்தியாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



(இந்திரன் பலியையிகழ்ந்ததும் காலத்தின்வன்மையைப்பற்றி இந்திரனுக்கும் பலிக்கும் ஸம்பாஷணையும்.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! காலதண்டத்தால்துன்பப்படுத்தப்பட்டவனும் ஐச்வர்யவிலகினவனுமான அரசன் எந்தப்புத்தியுடன் பூமியில் ஸஞ்சரிக்கவேண்டுமென்பதை எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார். "இவ்விஷயத்திலும் இந்திரனுக்கும் விரோசனன்புத்திரனான பலிக்கும் நடந்த ஸம்பாஷணையான பழையஇதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். இந்திரன் எல்லா அஸுரர்களையும் வென்றபின் பிரம்மதேவரருகில் வந்து நமஸ்கரித்துக் கைகூப்பிக்கொண்டு பலியைப்பற்றிக் கேட்கத் தொடங்கினான். 'ஓ! பிரம்மதேவரே! எவன் தானம்செய்யும்பொழுது ஒருகாலும்பொருள்குறைந்ததில்லையோ அந்தப் பலியை நான் அறியவில்லை. பலியை எனக்கு நீர் சொல்லவேண்டும். அந்தப் பலி வாயுவும் வருணனுமாயிருந்தான். அவனே ரவி; சந்திரனும் அவனே; அவன் அக்கினியாய் உலகங்களைத்தபிக்கச்செய்தான்; அவன் ஜலமாயுமிருந்தான். அந்தப்பலியை நான் அறியவில்லை. பிரம்மதேவரே! பலியைப்பற்றி எனக்குச் சொல்லும். அந்தப்பலியேஅஸ்தமயத்தை அடைந்தான். அவன் திக்குக்களை விளங்கச்செய்தான் அவன் சோம்பலின்றிக் காலத்துக்குத்தக்கபடி மழைகளைப் பெய்வித்தான். அந்தப்பலியை நான் அறியவில்லை. ப்ரம்மாவே! பலியை எனக்குச் சொல்லவேண்டும்' என்றுகேட்டான். பிரம்மதேவர், 'இந்திரனே! அந்தப்பலியைப்பற்றி நீகேட்பது உனக்கு அழகன்று. ஆனால், கேட்டால் பொய்யைச்சொல்லக்கூடாது. ஆகையால், பலியைப்பற்றி உனக்குச் சொல்லுகிறேன். சசீபதியே! அவன் ஒட்டகங்களிலோ பசுக்களிலோ கழுதைகளிலோ அல்லது குதிரைகளிலோ மிகஉயர்ந்த ஜந்துவாகிப்பாழானவீட்டிலிருப்பான்' என்றுசொன்னார். இந்திரன், 'பிரம்மதேவரே! பலி பாழானவீட்டில் சென்றிருப்பானாகில்அந்தப்

பலியைநான் கொல்லட்டுமா? அல்லது, கொல்லவேண்டாமா? பிரம்ம தேவரே! அதைப்பற்றி நீர் எனக்கு விடையளிக்கவேண்டும்' என்று கேட்டான். பிரம்மதேவர், 'இந்திரனே! நீ பலியைக் கொல்லாதே. பலியானவன் வதம்செய்யத்தக்கவனல்லன். இந்திரனே! வாஸவனே! ஆனால், நீ இஷ்டம்போல நியாயத்தைக்கேட்கலாம்' என்று சொன்னார். பூஜ்யரான பிரம்மதேவர் இவ்விதம்சொல்லக் கேட்ட மஹேந்திரன் அப்பொழுது ஐராவதத்தின்பிடரியிலேறிக்கொண்டு காந்தியுடன் பூமியில் ஸஞ்சரிக்கத்தொடங்கினான். பிறகு, அந்த்இந்திரன் பூஜ்யரானபிரம்மதேவரால் சொல்லப்பட்டபடி பாழானவீட்டில் குடிகொண்டவனும் கழுதைவேஷத்துடனிருப்பவனுமானபலியைக் கண்டு சொல்லத்தொடங்கினான். 'அஸுரனே! கழுதைப்பிறவியை அடைந்து உமிகளைத் தின்பவனாயிருக்கிறாய். இப்பிறவி உனக்குச் சரியானதன்று. நீ சோகப்படுகிறாயா? அல்லது, சோகப்படாமலிருக்கிறாயா? அந்தோ! சத்துருக்களுக்குவசப்பட்டவனும் ஸம்பத்தையும் மித்திரர்களையும் விட்டுவிலகினவனும் ஐஸ்வரியத்திலிருந்தும் பராக்கிரமத்திலிருந்தும்நழுவிக் காணமல்போனவனுமான உன்னைப்பார்க்கிறேன். நீ ஆயிரம்வாகனங்களுடன் ஞாதிகளால்சூழப்பட்டு உலகங்களைத்தபிக்கச்செய்கிறவனும் உன்னையேதலைமையாகநினைத்து எங்களனைவர்களையும் மதியாதவனுமாகச் சென்றாயே. அஸுரர்கள் உன்னை எதிர்பார்த்துக்கொண்டே உன்னுடையகட்டளைப்படிநடந்தார்கள். நீ அரசாளும்பொழுது பூமியானது உழப்படாமலே தான்ய முதலியவைகளைக் கொடுப்பதாயிருந்தது. இப்பொழுது உன்னுடைய கஷ்டம் இவ்விதமாயிருக்கிறது. நீசோகப்படுகிறாயா? அல்லது, சோகப்படாமலிருக்கிறாயா? கடலின்முன்கரையில் விசேஷமாகப் [1]பூஜித்துக்கொண்டு ஞாதிகளுக்குப் பொருளை அளிப்பவனாயிருந்தபொழுது உன்னுடையமனம் எவ்விதமிருந்தது? லக்ஷ்மியுடன்விளங்கும் உன்னுடையவீட்டில் ஆயிரக்கணக்கான தேவஸ்திரீகள் அனைவரும் தாமரைமாலையுள்ளவர்களும் பொன்னிறம்போன்ற மேனியுள்ளவர்களுமாகிப் பலவருஷக்கூட்டங்கள் நர்த்தனம்செய்தார்களே. அஸுரவேந்தனே! அப்பொழுதும் இப்பொழுதும் உனதுமனம் எவ்விதம் இருக்கிறது? தங்கத்தாலசெய்யப்பட்டதும் ரத்தினங்களால அலங்கரிக்கப்பட்டதும் மிகப்பெரிதுமான குடை உனக்கு இருந்தது. அவ்விடத்தில் ஆறுபிரம்கந்தர்வர்கள் ஏழுவகுப்பாகி நர்த்தனம்செய்தார்கள். நீ யாகம்பண்ணும்பொழுது முழுமையும் தங்கமும் மிகப்

---

1 வேறுபாடம்.

பெரிதுமானயூபம் இருந்தது. ஆயிரம்லக்ஷம்பசுக்களைத் தானம் செய்தாய். அஸுரனே! அப்பொழுது மனம் எவ்விதமிருந்தது? யாகம்செய்கிறவனாகிச் [1]சம்யையென்னும்தடியை எறியும்விதிப்படி பூமிமுழுமையையும் விலக்கித் தொடர்ந்துசென்றபொழுது உனது மனத்தில் என்ன இருந்தது? உன்னுடைய பொற்பாத்திரத்தைக் காணேன்; குடையையும்காணேன்; விசிறியையும் காணேன். அஸுர வேந்தனே! பிரம்மதேவரால்அளிக்கப்பட்டஉன்னுடையமாலையையும் காணேன்' என்றுசொன்னான். பிறகு, வாஸவனால் சொல்லப்பட்ட மொழியைக்கேட்டு நகைத்து அந்தப்பலியானவன் ஆழ்ந்தஅபிமான முள்ள தேவராஜனைநோக்கிச் சொல்லத்தொடங்கினான். 'தேவக் கூட்டத்தின்தலைவனே! அந்தோ! இவ்விஷயத்தில்உனக்குஎவ்வளவு அவிவேகம்? தேவர்களுக்கு அரசனானஉனக்கு இவ்விதம்பேசுவது யுக்தமன்று. கஷ்டம்.பொற்பாத்திரத்தையும்குடையையும்விசிறியை யும் நீ பார்க்கிறாயில்லை. வாஸவ! பிரம்மதேவரால்அளிக்கப்பட்டஎன் னுடைய மாலையையும் நீ காணப்போகிறாயில்லை. குகையில்வைக்கப் பட்டஎன்னுடையரத்தினங்களை நீ வினவுகிறாய்.எப்பொழுதுஎனக்கு நற்காலம்வருமோ அப்பொழுது நீ அவைகளைப் பார்ப்பாய். நற்பய னுக்குக்காரணமான உருவமுள்ளவிதியை நீ அறியவில்லை. ஓ! வாஸவ! யாவும் காலத்தாலவரும்; நற்காலத்தில் போகா. மிகநிறைந்த பொருளுள்ள நீ பொருளில்லாதஎன்னைப்பற்றிப்புகழவிரும்புகிறாயே. இது உன்னுடையகீர்த்திக்கும் குலத்திற்கும் தக்கதன்று. ஞானத் தைக்கற்றவர்களும் ஞானத்தால் திருப்தியுள்ளவர்களும் பொறுமை யுள்ளவர்களும் ஸாதுக்களுமான அறிஞர்கள் துக்கங்களில் சோகப் படமாட்டார்கள்; ஸம்பத்துக்களிலும் ஸந்தோஷப்படமாட்டார்கள் புரந்தரனே! நீயோ அவிவேகமுள்ளபுத்தியால புகழ்ந்துகொள்ளுகி றாய். எப்பொழுது என்னைப்போல நீ ஆவாயோ அப்பொழுது நீ இவ் விதம் பேசமாட்டாய். ஐஸ்வர்யக்கொழுப்பால மதமுள்ள நீ என் னைப்பற்றிச் சிறிதும் தெரிந்துகொள்ளவில்லை. ராஜ்யத்திலிருந்து வெளிவந்தபடியால் நான் வெல்லப்படாதவனென்பதில்லை' என்று சொன்னான்.

---

[1] 'அடிபருத்து நுனிசிறுத்து முப்பத்தாறுஅங்குலம் நீளமுள்ளதடி சம்யையென்று சொல்லப்படும். அது பலசாலியான ஒருவனால எறியப்பட்டு எவ்வளவுதூரம்சென்று விழுகிறதோ அவ்வளவுவரைக்கும் ஒருயாகம்செய்வ தற்குத தகுதியான இடம். இவ்விதம் பலயாகங்களைச்செய்து பூமிமுழுமை யையும் யாகசாலையாக்கி அவற்றைவிட்டு விலகினன்' என்பது பழையஉரை.

## இருநூற்றுமுப்பத்தோராவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(காலத்தின்வன்மையைப்பற்றி இந்திரனுக்கும் பலிக்கும் ஸம்பாஷணைத் தொடர்ச்சி.)

ஓ! பாரத! திரும்பவும் சீறுகின்ற அரவம்போன்ற அந்தப்பலியைநோக்கி இந்திரன் சிரித்துக்கொண்டு நன்கு [1] பேசுவதற்காகப் பின்வருமாறு சொல்லத்தொடங்கினான். 'ஆயிரம்வாகனத்துடன் ஞாதிகளால்சூழப்பட்டவனும் உலகங்களை மிகத்தபிக்கச்செய்பவனும் எங்களனைவரையும் பொருட்டாகக் கொள்ளாதவனுமாக நீ செல்லுவாயே. ஓ!பலியே! ஞாதிகளாலும் மித்திரர்களாலும் விலக்கப்பட்டவனை நீ மிக்கதுன்பமுள்ள உன்னுடைய இந்தஅவஸ்தையைக்கண்டு சோகப்படுகிறாயா? அல்லது, சோகப்படாமலிருக்கிறாயா? முதலில் உலகங்களைத் தன்வசமாக்கிக்கொண்டு ஒப்பறறஸந்தோஷத்தையடைந்து இப்பொழுது இந்தத்துன்பத்தைப்பற்றிச் சோகப்படுகிறாயா? அல்லது, சோகப்படாமலிருக்கிறாயா?' என்றுகேட்டான். பலி சொல்லத்தொடங்கினான். 'தேவர்களுக்கரசனே! கர்வத்தையும் அபிமானத்தையும் தள்ளிவிட்டு என்னால் முன்செய்யப்பட்ட பெரிய கர்மத்தையும் உன்னைப்பற்றியஸ்திதியையும் வசப்படாதகாலத்தின் வேற்றுமையையும் உலகத்தின்பெருமையையும் அறியாமல் ஜீவன் சுற்றுவதையும் என்னிடமிருந்து கேள். ஓ! இந்திரனே! இவ்வுலகில் காலத்தின் [2] மாறுதலில் எல்லாம் நிலையற்றனவாயிருப்பதைக் கண்டு நான் சோகப்படாமலிருக்கிறேன். இவ்வுலகமனைத்தும் முடிவுள்ளதாயிருக்கிறது. தேவாதிபனே! பிராணிகளுக்குள்ள இந்தச் சரீரங்களும் முடிவுள்ளவையாயிருக்கின்றன. ஓ! இந்திரனே! ஆகையால், நான் சோகப்படாமலிருக்கிறேன். இந்தக்கழுதைப்பிறவியானது என்னுடையகுற்றத்தாலன்று. உயிரும் சரீரமும் பிறவியில் கூடப்பிறந்தவைகளாயிருக்கின்றன. இரண்டும் சேர்ந்து வளருகின்றன. இரண்டும் சேர்ந்து நசிக்கின்றன. இவ்விதம் நான் அறிவுள்ளவனாயிருக்கும்காரணத்தால் இவ்விதமானசரீரத்தைஅடைந்தும் நான் பரவசனாகத் துன்பப்படாமலிருக்கிறேன். அறிவுள்ளஎனக்குத் துன்பமேது? பிரவாஹங்களுக்குக் கடலானது முடிவாயிருப்பது போலப் பிராணிகளுக்குநாசமானது முடிவாயிருக்கிறது. வச்சிரத்

1 வேறுபாடம். 2 வேறுபாடம்.

தைத்தரிப்பவனே! இதனை நன்கு அறிந்த மனிதர்கள் அவிவேகத்தை அடையமாட்டார்கள். ரஜோகுணத்தாலுண்டாகும் அவிவேகத்தைப் பெரிதாகக்கொண்டு இவ்விதம் அறியாமல் மதிகெட்டவர்கள் துன்பத்தை அடைந்து கஷ்டப்படுகிறார்கள். மனிதன் புத்தியை அடைவதால் எல்லாப்பாவத்தையும் விலக்கிக்கொள்ளுகிறான். பாவம்விலகியவன் ஸத்வகுணம்பெறுவான். ஸத்வகுணத்திலிருப்பவன் நல்ல தெளிவுள்ளவனாவான். ஆகையால், திரும்பவும் திரும்பவும் உண்டாவனவும் நசிப்பனவுமாயிருப்பவைகளான பொருள்களால் ஏவப்பட்டுக் கிருபணர்கள் துன்பப்படுகிறார்கள். பொருள்விருத்திப்பதையும் பொருள்நாசத்தையும் ஜீவிப்பதையும் மரிப்பதையும் ஸுகத்தையும் துக்கத்தையும் மற்றப்பயனையும் நான் பகைக்கவுமில்லை; விரும்பவுமில்லை. ஒருமனிதனைக்கொல்லுகிறவொருவன் தான்கொல்லப்பட்டவனாகவே கொல்லப்பட்டவனைக் கொல்லுகிறான். எவன் கொல்லுகிறானோ, எவன் கொல்லப்படுகிறானோ அவ்விருவரும் அறிகிறார்களில்லை. இந்திரனே! [1]கொன்றபின்னும் வென்றபின்னும் பௌருஷமுள்ளவன்போலிருக்கிறமனிதன் உண்மையில் கர்த்தாவேஅல்லன். கர்த்தாவாயிருப்பதுதான் அதைச் செய்கிறது. உலகத்திற்குள்ள இறப்புபிறப்புஇவ்விரண்டையும் யார் செய்கிறார்? உண்டுபண்ணப்பட்டவஸ்துவாலேயே அந்தஉலகம் உண்டுபண்ணப்படுகிறது. அந்த வஸ்துவுக்கும் வேறுஒருவர் கர்த்தாவாயிருக்கிறார். பிராணிகள், பூமி அக்கினி ஆகாயம் ஜலம் ஐந்தாவதானவாயு இவைகளைக் காரணமாகக்கொண்டிருக்கின்றன. அவற்றில் என்னசோகமிருக்கிறது? தன்வலிமையால் பெரிதானகாலமானது அதிகப் படிப்புள்ளவனையும் அலபப்படிப்புள்ளவனையும் பலசாலியானையும் பலவீனனையும் அழகுள்ளவனையும் குரூபியானையும் நல்லவனையும் கெட்டவனையும் எல்லோரையும் தன்வசமாக்கிக்கொள்ளுகிறது. அவ்வுலகம் காலத்தின்வசத்தை அடைந்தால் அறிவுள்ளஎனக்கு என்ன சோகமிருக்கிறது? மனிதன் முதலில் எரிக்கப்பட்டதையே பிறகு எரிக்கிறான்; அடிக்கப்பட்டதையே பிறகும் அடிக்கிறான். நாசமடைந்ததே நசிக்கிறது. அடையவேண்டியதையே அடைகிறான். ஆச்சரியமானவிதியைச்சிந்தித்தால காலமாகிறஇந்தக்கடலுக்குத் தீவு இல்லை. அக்கரை ஏது? இக்கரையும் காணப்படுகிறதில்லை. இதன் முடிவை நான் காணேன். இந்திரனே! காலமானது நான் பார்க்கும்

---

1 'கொல்பவனும் வெல்பவனும் உண்மையில் ஆத்மாவல்லர். ஆத்மாவானது ஒன்றையும் செய்கிறதில்லை" என்பது பழையஉரை.

பொழுது பிராணிகளை நசிக்கும்படிசெய்யாமலிருக்குமாகில் ஸந்தோஷமும் கர்வமும் கோபமும் எனக்கு இருக்கும். ஜனங்களில்லாதவீட்டில் கழுதையின் உருவத்தை எடுத்து உமியைத்தின்றுகொண்டிருக்கிறஎன்னைத் தெரிந்துகொண்டு நீ வந்து நிந்தைபேசுகிறாய். விரும்பினால் நான் என்னுடையஉருவங்களைப் பலவிதமாக மாற்றிக்கொள்ளுவேன். பயங்கரமானஎன்னுடைய அந்த உருவங்களைக்கண்டு நீயே ஓடுவாய். காலம் யாவற்றையும் எடுத்துக்கொள்ளுகிறது. காலம் யாவற்றையும் கொடுக்கிறது. யாவும் காலத்தால் செய்யப்படுகின்றன. இந்திரனே ! பௌருஷத்தைக் கொண்டாடாதே. இந்திர! முன்காலத்தில் நான்கோபங்கொண்டால் எல்லாம் மிக நடுங்கும். எல்லாத்தேவர்களும் உன்னுடன்கூட ஓடுவார்கள். இந்திர ! இவ்வுலகத்திற்குரியஸநாதனமான தர்மத்தை நான் அறிவேன். நீயும் இவ்விதம் ஆலோசித்துப் பார். நீயாகக் கர்வத்தை அடையாதே. பிரபுத்தன்மையும் பராக்கிரமமும் ஒருபொழுதும் ஆத்மாவில் நிலைபெற்றவையல்ல. உன்னுடையமனம் இளமைப்பருவத்திலேயே இருக்கிறது; முன்போலவே இப்பொழுதும் இருக்கிறது. இந்திரனே ! நன்றாகப்பார். ஞானத்திற்குரியபுத்தியை அடை. தேவர்களும் மனிதர்களும் பித்ருக்களும் கந்தர்வர்களும் உரகர்களும் ராக்ஷஸர்களும் யாவர்களும் என்வசத்திலிருந்தார்கள். வாஸவனே ! அவற்றையெல்லாம் நீ அறிவாய். புத்தியினுள்ளமத்ஸரத்தால் அவிவேகமடைந்தவர்களானாலும், 'விரோசனன்புத்திரனானபலி இருக்கிறதிக்குக்கே நமஸ்காரம்' என்றுசொல்லிக்கொண்டு என்னை அடைந்தார்கள். நான் அதைப்பற்றிச் சோகப்படுகிறதில்லை. இந்திரனே ! எனக்குண்டான குறையைப்பற்றி நான் சோகப்படுகிறதில்லை. என்னுடையபுத்தியானது இவ்விதம் உறுதியுள்ளதாயிருக்கிறது. நான் தெய்வவசத்தில் நிற்கிறேன். நற்குலத்தில் பிறந்தவனும் அழகுள்ளவனும் பராக்ரமமுள்ளவனுமாயிருப்பவன் தன்இனத்தார்களுடன் துக்கப்பட்டு ஜீவிப்பவனாகக் காணப்படுகிறான். அது அவ்விதமிருக்கவேண்டியதாயிருக்கிறது. இந்திரனே ! கெட்டகுலத்தில் பிறந்தவனும் மூடனும் துஷ்டனுமாயிருப்பவன் இனத்தார்களுடன் ஸுகமாய் ஜீவிப்பவனாகக் காணப்படுகிறான். அது அவ்விதம் வரவேண்டியவிதியாகிறது. இந்திர ! நிறைந்தஅழகுள்ளவளும் லக்ஷணம்பொருந்தியவளுமாயிருப்பவள் பாக்கியமில்லாதவளாகக் காணப்படுகிறாள். லக்ஷணமில்லாதவளும் குரூபியுமான ஒருத்தி நல்லபாக்கியமுள்ளவளாகவும் காணப்படுகிறாள். இந்திரனே ! இது என்னால் செய்யப்பட்டதன்று.

இந்திரனே ! இது உன்னால் செய்யப்பட்டதுமன்று. வஜ்ராயுதமுள்ளவனே! நீ இவ்விதநிலையைஅடைந்திருப்பதும் நாங்கள் இவ்விதநிலையை அடைந்திருப்பதும் உன்னுடைய செயலல்ல; மற்றவர்களுடைய செயலுமல்ல ; ஓ ! இந்திரனே! என்னுடையசெய்கையென்பது ஏது? ஸம்பத்தோ விபத்தோ காலத்தின்வேற்றுமையாலேயே செய்யப்படுகின்றன. நீ தேவர்களுக்கரசனாயிருந்துவிளங்குகிறவனும் ஸம்பத்துள்ளவனும் காந்தியுள்ளவனும் எனக்குமேல்கர்ஜிப்பவனுமாயிருப்பதைப் பார்க்கிறேன். காலமானது என்னை மீறிநிற்பதாயில்லாவிட்டால் நான் இவ்விதமிருக்கவேமுடியாது. வஜ்ராயுதத்துடன்கூடியிருந்தாலும் உன்னை இப்பொழுது நான் ஒருகுத்தால் வீழ்த்திவிடுவேன். ஆனால், இது பராக்கிரமத்திற்குரியகாலமன்று. சாந்தியை அடையத்தக்ககாலம் இப்பொழுது வந்திருக்கிறது. காலம் எல்லாவற்றையும் நிலைபெறச்செய்கிறது. அப்படியே காலம் யாவற்றையும் பழுக்கச்செய்கிறது. அஸுரர்களுக்கரசனும் பலசாலியும் கர்ஜிப்பவனும் மிக்கபராக்கிரமமுள்ளவனுமானஎன்னையே காலம் வந்து அடையுமாகில் வேறுஎவனிடம் வராமலிருக்கும் ? தேவராஜனே ! என்னுடையஒருதேஜஸால் மஹாத்மாக்களும் பன்னிரண்டு ஆதித்தியர்களுமான உங்களனைவரின் தேஜஸுகளும் தரிக்கப்பட்டன. ஓ! வாஸவனே ! நானே ஜலங்களைஎடுப்பவனும் விடுகிறவனுமாயிருந்தேன். மூன்றுஉலகங்களையும் நானே தபிக்கச்செய்தேன். நானே மின்னலைஉண்டுபண்ணினேன். நான் காப்பவனும் அழிப்பவனும் கொடுப்பவனும் வாங்குபவனும் அடக்குபவனும் கட்டளையிடுபவனும் உலகங்களில்பிரபுவும் ஈஸ்வரனுமாயிருந்தேன். அமராதிபனே! என்னுடைய அந்தப்பிரபுத்தன்மையானது இப்பொழுது விலகிவிட்டது. காலத்தின் (பகல் இரவுமுதலியவையான) ஸேனையால் ஆக்கிரமிக்கப்பட்டஎனக்கு யாவும் தோன்றவில்லை. சசீதேவியின்பதியே ! நான் கர்த்தாவல்லேன். நீயும் கர்த்தாவல்லை. மற்றவனும் கர்த்தாவல்லன். இந்திரனே! உலகங்கள் தற்செயலாக வெவ்வேறானகாலத்தில அனுபவிக்கப்படுகின்றன. வேதமறிந்தஜனங்கள் காலரூபியானபிரம்மத்தை, மாஸத்தையும் பக்ஷத்தையும் வீடாகக்கொண்டதும் இரவாலும் பகலாலும் சூழப்பட்டதும் ருதுக்களைத் துவாரமாகக்கொண்டதும் பிராணவாயுவை முகமாகக்கொண்டதுமாகக் கூறுகிறார்கள். சில ஜனங்கள் தம்புத்தியால் இவ்வுலகம்யாவும் தியானம்பண்ணத்தக்கதெனக் கூறுகிறார்கள். [1]இவ்விதத்யானத்திற்கு ஐந்துஉரு

1 இங்கு அரைஸ்லோகம் விடப்பட்டது.

வத்துடன்கூடிய ஐந்துகோசங்களையே விஷயங்களென்று கருது கிறேன். விருத்திரனைக்கொன்றவனே ! பிறகு, முடிவுக்காலத்தில் அவ்வைந்தையும் அவைகளுடன்கூடியிருப்பவனையும் காணேன். யுக்திகளுக்கெட்டாததும் சாஸ்திரங்களாலும்அறியக்கூடினமானதும்பெரியகடலபோல எங்கும் நிறைந்ததும் முதலும்முடிவுமில்லாததுமான பிரம்மத்தையே அழிவில்லாதஜீவனென்றும் அழிவுள்ளபிரபஞ்சமென்றும் சொல்லுகிறார்கள். அந்தப்பிரம்மமானது தான்உபாதியின்பற்றுதலில்லாததாயினும் புத்தியின் ஸத்வகுணங்களிலிருந்துகொண்டு தன்னை அறிவிக்கிறதாகிறது. எவர்கள் உண்மையைக்கண்டவர்களோ அந்தஜனங்கள் இந்த ஆத்மாவை நித்தியமானபிரம்மமென்றே நினைக்கிறார்கள். ஐந்துவிதமான இந்திரியங்கள்யாவும் எதைத் தொடர்ந்து அறிகிறதில்லையோ அதைக் காலமென்றுதெரிந்துகொள். இவ்வுலகமனைத்தும் அதன்வசத்திலிருக்கிறது. பூஜ்யமானகாலமானது பூதங்களுக்குள்ள வேறறுமையைச்செய்கிறதென்று இவ்வளவைக்கூடத் தெரிந்துகொள்ளமுடியாது. காலத்தைக்காட்டிலும் இவ்விதசக்தியுள்ள வேறுபதார்த்தம் இல்லாததாலும் இவ்விதம் கெடுதலை அறிவிக்கக்கூடியவேறுபதார்த்தம் இல்லாததாலும் எல்லாப்பிராணிகளும் அடையத்தக்க அக்காலத்தைஅடையாமலஎங்குபோகமுடியும்? ஓடுகிறவனும் அக்காலத்தைத தள்ளமுடியாது. நின்றாலும் அதிலிருந்து விலகமாட்டான். ஐந்துவிதமான இந்திரியங்கள்யாவும் அதைக் காண்கிறதில்லை. சிலர் இக்காலத்தை அக்கினியென்று சொல்லுகிறார்கள்; சிலர் பிரம்மாவென்றுசொல்லுகிறார்கள். மற்றுஞ்சிலர் ஒன்றாயிருக்கும்இக்காலத்தை ருதுக்களென்றும் மாதங்களென்றும் பக்ஷங்களென்றும்தினங்களென்றும்க்ஷணங்களென்றும் காலையென்றும் மாலையென்றும் நடுப்பகலென்றும் முகூர்த்தமென்றும் பலவிதமாகக் கூறுகிறார்கள். இவ்வுலகம்யாவும் எதன்வசத்திலிருக்கிறதோ அதைக் காலமென்று தெரிந்துகொள். சசீபதியான இந்திரனே! உன்னைப்போல வன்மையும்பராக்கிரமமும்பொருந்திய பலவாயிரம்இந்திரர்கள் காலஞ்சென்றார்கள். ஓ! இந்திரனே! தேவர்களுக்கரசனும் மிக்கபலமுள்ளவனும் பயங்கரமானஸேனையுள்ளவனுமானஉன்னையும் காலம்வரும்பொழுது பெரியவீரியமுள்ள அக்காலமானது மிகவும் அடக்கிவைக்கும். அக்காலமானது இவ்வுலகமனைத்தையும் பெற்றுக்கொள்ளுகிறது. ஓ ! இந்திரனே ! ஆகையால், உறுதியுள்ளவனாயிரு. அக்காலமானது என்னாலும் உன்னாலும் முன்னோர்களாலும் மீறிச்செல்லக்கூடியதன்று. மிகஉத்தமமான ஆசை

ராஜ்யலக்ஷ்மியை அடைந்து, 'என்னிடத்தில் ஸம்பத்து இருக்கிறது' என்று நினைப்பதுபொய். இந்தலக்ஷ்மியானவள் ஓரிடத்திலும் நிலைத்திருக்கிறவளல்லள். உன்னைவிடமிகச்சிறந்தவர்களான பல்லாயிரமிந்திரர்களிடத்தில் இவள் இருந்திருக்கிறாள். தேவர்களுக்கதிபனே! சஞ்சலமுள்ள இந்தலக்ஷ்மியானவள் என்னையும்விட்டு உன்னை அடைந்திருக்கிறாள். இந்திரனே! இவ்விதம் திரும்பவும்நினையாதே. நீ சாந்தனாயிரு. நீயும் இவ்விதமிருப்பதைக்கண்டால் லக்ஷ்மியானவள் காலத்தால் ஏவப்பட்டு விரைவாக வேறொருவனிடம் செல்லுவாள். ஓ! இந்திரனே! உனக்குக் கர்வம்வேண்டாம். இந்திரனே! பொறுத்துக்கொள். தேவபதியே! அவ்விதமானகாலம்வந்துவிட்டதென்றுதெரிந்துகொள். தேவராஜனே! நீ ஏன் வெட்கமில்லாமல் புகழ்ந்துகொள்ளுகிறாய்? எல்லாஅஸுரர்களுக்குமதிபனும் எல்லாத்தேவர்களையும் நடுங்கச்செய்தவனும் பிரம்மலோகத்தையும் ஜயித்தவனுமாயிருந்தவன் இவ்விதமிருக்கிறான். வருங்காலத்திலுள்ளகதியை எவன் கண்டான்?' என்றுசொன்னான்.

---

## இருநூற்றுமுப்பத்திரண்டாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

**(காலத்தின்வன்மையைப்பற்றி இந்திரனுக்கும் பலிக்கும்ஸம்பாஷணைத் தொடர்ச்சியும் இந்திரனுக்கும் லக்ஷ்மிக்கும் ஸம்பாஷணையும்.)**

பிறகு, இந்திரனானவன் அப்பொழுது மஹாத்மாவானபலியின் சரீரத்திலிருந்து வெளியேகிளம்புகிறவளும் தேஜஸுள்ளவளும் தன்னுருவமுள்ளவளுமானலக்ஷ்மியைக் கண்டான். காந்தியால் விளங்கும் அந்த லக்ஷ்மியைக் கண்டவுடன், பாகனென்னும்அஸுரனை அடக்கினவனும்பூஜ்யனுமானஇந்திரன் வியப்பால் மலர்ந்தகண்ணுள்ளவனாகிப் பலியைநோக்கி, 'ஓ! பலியே! தன்காந்தியால்விளங்குகிறவளும் தோள்வளையும் மகுடமும் அழகுமுள்ளவளுமாக உன்னிடமிருந்து வெளியிற்செல்லுகிறஇவள் யார்?' என்றுகேட்டான். பலி, 'இவளை அஸுரப்பெண்ணென்றும்தெய்வப்பெண்ணென்றும்மானிடப்பெண்ணென்றும் நான் அறியவில்லை. நீ இவளைக்கேட்டாலும்ஸரி; கேளாவிட்டாலும் ஸரி. ஓ! இந்திரனே! இஷ்டம்போலச் செய்' என்று சொன்னான். இந்திரன், 'அழகுள்ளவளும் மகுடமுள்ளவளுமாகிப் பலியினிடமிருந்து வெளியிற்செல்லும் நீ யார்? அழகானசிரிப்புள்ள

வளே! அறியாத எனக்கு உன்பெயரைச் சொல். நீ யார்? அஸுர ஸ்ரேஷ்டனுன பலியைவிட்டுக் காந்தியால் விளங்கிக்கொண்டு இவ் விதம் என்னருகில் நிற்கிருயே. பெண்ணே! கேட்கும் எனக்கு அதைச்சொல்' என்று கேட்டான். லக்ஷ்மி, 'விரோசனன் என்னை அறியவில்லை. விரோசனனுடைய புத்திரனுன இந்தப்பலியும் என்னை அறியவில்லை. ஓ! வாஸவனே! துஸ்ஸஹையென்றும் விதித்ஸையென்றும் பூதியென்றும் லக்ஷ்மியென்றும் ஸ்ரீயென்றும் என்னைச் சொல்லுவார்கள். ஓ! இந்திரனே! நீ என்னை அறியமாட்டாய். தேவர்களனைவரும் என்னை அறியமாட்டார்கள்' என்றுசொன்னுள். இந்திரன், 'ஓ! துஸ்ஸஹையே! நெடுங்காலம்வஸித்தவளாயிருந்தும் நீ இந்தப்பலியை விடுகிருயே. இது என்ன? நீ எனக்காக விடுகிருயா? அல்லது, பலிக்காகவா?' என்று கேட்டான். லக்ஷ்மி, 'பிரம்மாவும் என்னை எவ்விதத்திலும் கட்டளையிடத்தக்கவரல்லர்; விதாதாவும் கட்டளையிடத்தக்கவரல்லர். இந்திரனே! காலமானது மாறிற்று. இந்திரனே! இவ்விதம் நீ அவமதிக்கவேண்டாம்' என்றுசொன்னுள். இந்திரன், 'மகுடம்தரித்தவளே! பலியானவன் உன்னுல் எவ்விதம் எதற்காகத் தள்ளப்பட்டான்? என்னை நீ எவ்விதம் விடாமலிருப்பாய்? இனியபுன்னகையுள்ளவளே! அதை எனக்குச் சொல்லவேண்டும்' என்றுகேட்டான். லக்ஷ்மி, 'ஸத்யத்திலும் தானத்திலும் விரதத்திலும் தவத்திலும் பராக்கிரமத்திலும் தர்மத்திலும் நான் நிலைபெற்றவளாயிருக்கிறேன். பலியானவன் அவைகளிலிருந்து விலகினவனுனுன். இந்தப்பலியானவன் முதலில் பிராம்மணர்களுக்கு நன்மைசெய்பவனும் உண்மைபேசுகிறவனும் இந்திரியங்களை வென்றவனுமாயிருந்து பிறகு பிராம்மணர்களிடம் அஸூயைப்பட்டான். அசுத்தனுயிருந்துகொண்டு நெய்யைத் தொட்டான். எப்பொழுதும் யாகஞ்செய்யும் தன்மையுள்ளவனுயிருந்துகொண்டு என்னையே நேரில் பூஜித்தான். பிறகு, அதை விட்டு மூடபுத்தியுள்ளவனும் காலத்தால் துன்பப்படுத்தப்பட்டவனுமானுன். ஓ! இந்திரனே! ஆகையால், அவனிடமிருந்து விலகினேன். ஓ! வாஸவனே! உன்னிடத்தில வஸிக்கப்போகிறேன். அஜாக்ரதையின்றித் தவத்தாலும் பராக்ரமத்தாலும் நான் தரிக்கத்தக்கவளாகிறேன்' என்றுசொன்னுள். இந்திரன், 'தாமரைமலரில் குடியிருப்பவளே! ஒருவனுக உன்னைவகிக்கச் சக்தி பெற்றபுருஷன் தேவர்களிலும் மனிதர்களிலும் எல்லாப்பிராணிகளிலும் எவனிருக்கிருன்?' என்று கேட்டான். லக்ஷ்மி, 'புரந்தர!

என்னை ஒருவனாகப் பொறுக்கச் சக்திபெற்றவன் ஒருதேவனு மில்லை; கந்தர்வனுமில்லை; அஸுரனுமில்லை; ராக்ஷஸனுமில்லை' என்று சொன்னாள். இந்திரன், 'அழகுள்ளவளே! நீ என்னிடத்தில் எப்பொழுதுமிருக்கும்விதத்தை எனக்குச் சொல்லவேண்டும். நீ சொல்லுகிறபடி அதை நான் செய்கிறேன். நீ அதை உண்மையாகச் சொல்ல வேண்டும்' என்றுகேட்டான். லக்ஷ்மி, 'தேவேந்திரனே! நான் எவ்விதம் உன்னிடத்தில் எப்பொழுதும் நிலைபெற்றிருப்பேனென்பதைத் தெரிந்துகொள். வேதவிதிப்படி என்னை நான்குவிதமாகப்பங்கிட்டு வைத்துக்கொள்' என்றுசொன்னாள். இந்திரன், 'சக்திக்கும் பலத்திற்கும் தக்கபடி நான் உன்னைத்தாங்குகிறேன். ஓ! லக்ஷ்மி! ஆனால், உன்னருகில் எப்பொழுதும் எனக்கு அபசாரமுண்டாகாமலிருக்கவேண்டும். மனிதர்களைப் பூமிதான் வகிக்கும்திறமையுள்ளவளும் பிராணிகளை உண்டுபண்ணுகிறவளுமாயிருக்கிறாள். அவள் உன்னுடைய ஒருபாகத்தைப் பொறுத்துக்கொள்ளட்டும். அவள் திறமையுள்ளவள் தானென்பது என்கருத்து' என்றுசொன்னான். லக்ஷ்மி, 'பூமியில் நிலைபெற்றதாக, என்னுடையஒருபாகமானது இதோ வைக்கப்பட்டது. ஓ! இந்திரனே! ஆகையால, என்னுடையஇரண்டாவதான பாகத்தை நன்குவைக்கப்பட்டதாகச் செய்துகொள்' என்றுசொன்னாள். இந்திரன், 'மனிதர்களை ஓடுகின்றஜலம்தான் வளர்க்கிறது. அது உன்னுடைய ஒருபாகத்தைப் பொறுத்துக்கொள்ளட்டும். ஜலம் பொறுக்குந்திறமையுள்ளது' என்றுசொன்னான். லக்ஷ்மி, 'ஜலத்தில் நிலைபெற்றதாக என்னுடையஒருபாகமானது இதோ வைக்கப்பட்டது. ஓ! இந்திரனே! ஆகையால், என்னுடையமூன்றாவதானபாகத்தை நன்கு உறுதியுள்ளதாகச் செய்துகொள்' என்று சொன்னாள். இந்திரன், 'வேதங்களும் யாகங்களும் தேவர்களும் நிலைபெற்றிருக்கிற அக்னியானது உன்னுடைய மூன்றாவதான பாகத்தை நல்ல உறுதியுடன் தாங்கட்டும்' என்று சொன்னான். லக்ஷ்மி, 'அக்னியில நிலைபெற்றதாக என்னுடையஒருபாகமானது இதோ வைக்கப்பட்டது. ஓ! இந்திரனே! ஆகையால, என்னுடைய நான்காவது பாகத்தை நல்லஉறுதியுள்ளதாகச் செய்துகொள்' என்று சொன்னாள். இந்திரன், 'மனிதர்களுள் ஸாதுக்களும் பிராம்மணர்களுக்கு நன்மை செய்பவர்களும் ஸத்யம் பேசுகிறவர்களுமாயிருக்கிறவர்கள் உன்னுடையஒருபாகத்தைப் பொறுத்துக்கொள்ளட்டும். ஸாதுக்கள் பொறுக்குந்திறமையுள்ளவர்கள்' என்றுசொன்னான். லக்ஷ்மி, 'ஸாதுக்களிடம் நிலைபெற்றதாக என்னுடையஒருபாகமானது இதோ உறுதிபெற்

றது. ஓ! இந்திரனே! என்னைப் பிராணிகளிடம் இவ்விதம்உறுதி பெற்றவளாக எப்பொழுதும் நீ தாங்கிக்கொள்' என்று சொன்னாள். இந்திரன், 'எவர்கள் பூமியின் சுத்தியைச் செய்துகொண்டு பிறகு ஜலங்களால் பிராணிகளைத் திருப்திசெய்கிறவர்களும் அக்னியில் யாகஞ் செய்கிறவர்களுமாயிருக்கிறார்களோ அவர்களுக்கு நீ அழிவில்லாதவளாயிருக்கிறாய். [1]இவ்விதம் என்றால் உறுதிசெய்யப்பட்டவளும் பூஜிக்கத்தக்கவளுமான உன்னைப் பிராணிகளுள் எவன் விரோதிக்கிறானோ அவன் எனக்குப் பகையாவான். என் வசனத்தை யாவரும் கேட்கட்டும்' என்றுசொன்னான். 'அப்படியே ஆகட்டும்' என்றுசொல்லிவிட்டு எல்லா உலகங்களாலும் நமஸ்கரிக்கப்பட்ட அந்தலக்ஷ்மியானவள் (பலியினிடமிருந்து) நழுவினாள். அந்தலக்ஷ்மீதேவியானவள் இந்திரனை ரக்ஷித்தாள். பிறகு, லக்ஷ்மியால் விடப்பட்டவனும் அஸுரர்களுக்கரசனுமான பலியானவன், 'ஸூர்யனானவன் [2]கீழ்த்திசையில் எவ்வளவு பிரகாசிக்கிறானோ அவ்வளவுதென்றிசையிலும் அவ்வளவே மேற்றிசையிலும் அதுபோல வடதிசையிலும் பிரகாசிப்பான். அவ்வாறு பகல்நடுவில் ஸூர்யன் அஸ்தமயமடையாமலிருக்கிறபொழுது தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் திரும்பவும் யுத்தமுண்டாகப்போகிறது. அப்பொழுது நான் உங்களை வெல்லப்போகிறேன். ஸூர்யன் நடுவிலிருந்துகொண்டு எல்லா உலகங்களையும் பிரகாசஞ்செய்கிறபொழுது தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் உண்டாகும் சண்டையில் நான் உன்னை வெல்லப்போகிறேன்' என்று சொன்னான். இந்திரன், 'ஓ! பலியே! உன்னைக் கொல்லக்கூடாதென்று நான் பிரம்மதேவரால் கட்டளையிடப்பட்டிருக்கிறேன். ஆகையால், நான் உன்தலையில் வஜ்ராயுதத்தைப் போடாமலிருக்கிறேன். அஸுரர்களுக்கரசனே! இஷ்டம்போலப்போகலாம். பெரியஅஸுரனே! உனக்குக்ஷேமமுண்டாகட்டும். ரவியானவன் நடுவிலிருந்துகொண்டு ஒருபொழுதும் பிரகாசிக்கப்போகிறதில்லை. முன்னமே பிரம்மதேவரால் இந்தரவிக்கு ஸமயம் உறுதிப்படுத்தப்பட்டிருக்கிறது. இந்த ரவியானவன் ஸத்தியமாகப் பிராஜைகளைப் பிரகாசப்படுத்திக்கொண்டு எப்பொழுதும் சுற்றிக்கொண்டிருப்பான். அவனுக்கு ஆறுமாதங்கள் உத்தராயணமும் ஆறுமாதங்கள் தக்ஷி

---

1 அதிகபாடமான ஒருஶ்லோகம் விடப்பட்டது.

2 மேருமலையின் மேற்புறத்தின் நடுவில் பிரம்மலோகமும் அதன்கிழக்கு முதலிய நான்குதிக்குகளிலும்இந்திரன், யமன், வருணன், குபேரன் இவர்களின் பட்டணங்களுமிருக்கின்றன. இவைகள் மேருமலையைச்சுற்றிவரும் ரவியால்

ணுயனமுமாகும். ரவியானவன் அந்தஅயனப்படி உலகங்களில் குளிரையும்வெய்யிலையும் உண்டுபண்ணிக்கொண்டு செல்லுகிறான்' என்று சொன்னான். ஓ! பாரத! இந்திரனால் இவ்விதம்சொல்லப்பட்டவனும் அஸுரர்களுக்கதிபனுமான பலியானவன் தென்திசையைநோக்கிச்சென்றான். இந்திரனோ வடதிசையை நோக்கிப்புறப்பட்டான். இவ்விதம் பலியால்பாடப்பட்டதும் அனகங்காரமென்றுபெயரிடப்பட்டதுமான இவ்வசனத்தைக் கேட்டபின் இந்திரனானவன் அப்பொழுது ஆகாயவழியில் சென்றான்" என்று சொன்னார்.

---

## இருநூற்றுமுப்பத்துமூன்றாவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(சோகத்தைவிட்டுப் பரமாத்மாவை த்யானிப்பது மோக்ஷஸாதனமென்பதைப்பற்றி இந்திரனுக்கும்நமுசிக்கும் ஸம்பாஷணை.)

யுதிஷ்டிரர், "துயரங்களில் மூழ்கியிருப்பவனுக்கு எது நன்மையைத்தருவதாகும்? அதை எனக்குச் சொல்லவேண்டும். ஓ! புஜபலமுள்ளவரே! உறுதியாயிருக்கவேண்டித் திரும்பவும் அதனை எனக்குச் சொல்லவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"ஓ! யுதிஷ்டிரனே! இவ்விஷயத்திலும் இந்திரனுக்கும்நமுசிக்கும்நடந்த ஸம்பாஷணையான பழைய இவ்விதிஹாஸத்தை உதாகரிக்கிறார்கள். லக்ஷ்மியைவிட்டுவிலகியவனும் கடலைப்போலக்கலக்கத்தகாதவனும் பிராணிகளின் பிறப்பிறப்புக்களை அறிந்தவனுமான நமுசியைக்கண்டு இந்திரனானவன், 'ஓ! நமுசியே! கயிறுகளால்கட்டப்பட்

---

பிரகாசிக்கின்றன. அப்பட்டணங்களிலவஸிப்பவர்களுக்கு ரவியின் தரிசனம் உதயமும் அவன் காணமலபோவது அஸ்தமயமுமாகும். அப்பட்டணங்களுள் கிழக்கில ரவிஉதயமானால மேற்றிசையிலுள்ளவர்களுக்கு அஸ்தமயமும் வடதிசையில நடுப்பகலும் தெற்கில இரவின்மத்தியமமுமாக இருக்கும். இதுபோல மற்றத்திசைகளிலும் தெரிநதுகொள்ளவேண்டும். இவைகளில் பிரம்மதேவரின் ஒரு பகலுக்குரிய காலங்களைப் பதினாறாகப் பங்கிட்டு அவைகளில் ஒரு பாககாலத்தால இநதிரநகரததிற்கழிவும் இரண்டு நான்கு எட்டுப்பாகங்களால் முறையே ஸம்யமனீமுதலியவைகளுக்கழிவும் உண்டாகும். அந்தஸமயத்தில இப்பட்டணங்களில ரவியைக் காண்பதும் காணாததும் இல்லாமல்போவதுபற்றி உதயாஸ்தமயங்களில்லை. அப்பொழுது ரவி நடுப்பகலிலிருப்பவனாகிறான். அது சிகழும் வைவஸ்வதமனுவின் காலஞ்சென்று ஸாவர்ணிமனுவின் காலமாகும். அச்சமயத்தில் தான் இந்திரபதவியை அடையக்கூடுமென்பது பலியின் கருத்து' என்பது பழைய உரை.

டவனும் ஸ்தானத்திலிருந்துநழுவினவனும் பகைவர்களுக்குவசப்பட்டவனும் ஸம்பத்தைவிட்டுவிலகியவனுமானநீ சோகப்படுகிறாயா? அல்லது, சோகப்படாமலிருக்கிறாயா?' என்றுகேட்டான். நமுசி சொல்லத்தொடங்கினான். [1]'விலக்கத்தகாதசோகத்தால் சரீரம் மிக வாடுகிறது. பகைவர்கள் மிகவும்களிக்கிறார்கள். சோகத்தைவிலக்கிக் கொள்ளத் துணையுமில்லை. ஓ! இந்திரனே! ஆகையால், நான் சோகப்படவில்லை. இவையாவுமே முடிவுள்ளனவாகும். தேவர்களுக்கீசனே! சோகப்படுவதால் உருவம்கெடும். சோகப்படுவதால் ஸம்பத்திலிருந்து நழுவுவான். சோகப்படுவதால் ஆயுளும் தர்மமும் குறையும். ஆகையால், அறிவுள்ளவன் வந்த துக்கத்தைத்தள்ளிவிட்டுமனத்திற்குஸுகமும் மனத்திலிருப்பதுமான க்ஷேமத்தை மனத்தால் நினைக்கவேண்டும். மனிதன் மனத்தை எப்படிஎப்படி க்ஷேமத்தில் செலுத்துகிறானோ அப்படி அப்படியே எல்லாப்பொருள்களும் இவனுக்குநன்குவிளைகிக்கும். இவ்விஷயத்தில் ஐயமில்லை. கட்டளையிடும் கடவுள் ஒருவரேயல்லாமல் இரண்டாம்கடவுளில்லை. கர்ப்பத்திலடுத்திருக்கும்மனிதனைக் கடவுள்கட்டளையிடுகிறார். நான் அவரால் ஏவப்பட்டுப் பள்ளத்தைநோக்கி ஜலம்செல்வதுபோல அவர்ஏவியபடிசெல்லுகிறேன். [2]உண்மையையும் உண்மையல்லாததையும் அறிந்தநான் [3]ஶ்ரேயஸை மிகப்பெரிதென்று தெரிந்துகொண்டிருக்கிறேன். ஆகிலும்,நான் அதைச்செய்கிறதில்லை. மாடிகளிலும்குழிகளிலும் [4]திக்குக்களிலும் எவ்விதம் ஏவப்பட்டவனாகிறேனோ அவ்விதம்செய்துகொண்டு செல்லுகிறேன். இந்தமனிதன் எந்தஎந்தவிதம் அடையவேண்டுமோ அந்தஅந்தவிதமே அடைகிறான். எது எவ்விதம் வரவேண்டுமோ அது அவ்விதமேவருகிறது. தெய்வத்தால் எந்தஎந்தக்கர்ப்பத்திலேயே திரும்பவும்திரும்பவும் ஏவப்படுகிறானோ அது அதிலேயே வஸிக்கிறான். எதிலிருக்கத் தான் விரும்புகிறானோ அதிலிருக்கிறதில்லை. 'எனக்குநேர்ந்திருக்கிற இந்தநிலைஎனக்குஇவ்விதம் வரவேண்டியதே' என்ற எண்ணமானது எப்பொழுதும் எவனுக்கிருக்கிறதோ அவன் ஒருபொழுதும் சோகப்படமாட்டான். காலத்தின்வேற்றுமையாலுண்டாகும் ஸுகதுக்கங்களால் பீடிக்கப்படுகிறவர்களுக்குத்துன்பமில்லை. ஆனால், துக்கத்திலிருப்பவனுக்கு, 'நான் கர்த்தா' என்

1 வேறு பாடம்.

2 பந்தத்தையும் மோக்ஷத்தையும் என்பது வேறுபாடம்.

3 'மோக்ஷத்தை' என்பது பழைய உரை.

4 'ஆசையைக் கொண்டு' என்பது பழைய உரை.

னும்எண்ணமே துக்கமாகும். உலகத்தில் துன்பங்களானவை, ரிஷி களையும் தேவர்களையும் பெரியஅஸுரர்களையும் மூன்றுவேதங்களை யும் கற்றபெரியோர்களையும் காட்டிலிருக்கும் முனிவர்களையும் மற்ற ஏவர்களையுந்தான் அடைகிறதில்லை? ஆனால், நன்மைதீமைகளை அறிந்த வர்கள் பரபரப்படையமாட்டார்கள். அறிவுள்ளவன் கோபத்தையும் அபிமானத்தையும் அடையமாட்டான். அவன் துக்கமுள்ளவனுமல் லன்; சந்தோஷமுள்ளவனுமல்லன்; பொருள்நஷ்டங்களிலும் துக்கங் களிலும் சோகப்படுகிறவனுமல்லன்; இமயமலைபோல அசைவற்றஸ்வ பாவத்துடனிருப்பான். எவனைப் பொருள்களின் பெரியலாபமானது ஸந்தோஷப்படுத்தாமலிருக்குமோ, அப்படியே ஸமயத்திலுண்டா குந்துன்பமும் அவிவேகத்தை அடையும்படி செய்யாமலிருக்குமோ, எவன் ஸுகத்தையும் அப்படியே துக்கத்தையும் பற்றுதலில்லாமல் அனுபவிக்கிறானோ அவன் உயர்ந்தமனிதனாவான். மனிதன்எந்தஎந்த அவஸ்தையை அடைவானோ அந்தஅந்தஅவஸ்தையிலும் தாபத்தை அடையாதவனாக இருக்கவேண்டும். இவ்விதம் வளருவதும் மனத்தி லுண்டாவதும்[1]ப்ரமத்தைஉண்டுபண்ணுவதுமான சோகத்தைச்சரீர த்திலிருந்து தூரவிலக்கிக்கொள்ளுகிறவனாயிருக்கவேண்டும். எந்தஸ பையை அடைவதானது எப்பொழுதும் தர்மத்தைப்பற்றிய பயத்தை உண்டுபண்ணுகிறதில்லையோ அது நல்ல [2]ஸபையுமன்று; [3]பரிஷத்து மன்று; [4]ஸதஸுமன்று. தர்மத்தின்உண்மையைத் தெரிந்துகொண்டு நடக்கும் அறிவுள்ளவன் சிறந்தமனிதனாவான். அறிவிற்சிறந்தோர் களுடையகாரியங்களின்முடிவைத் தெரிந்துகொள்வது மிகக்கடினம். கிழத்தனமடைந்த கௌதமர் ஸ்தானத்திலிருந்துநழுவி இவ்வளவு கஷ்டமானஆபத்தை அடைந்தும் அவிவேகமடையாமலிருந்தார். ஆகையால், அறிவிற்சிறந்தவன் அவிவேகமடையத்தக்ககாலத்திலும் அவிவேகமடையமாட்டான். மனிதன் மந்திரங்களின் பலத்தாலும் வீரியத்தாலும் புத்தியாலும் ஆண்மையாலும் சீலத்தாலும் நன்னடக் கையாலும் ஸம்பத்தாலும் அடையத்தகாததை அடையமாட்டான். இவ்விதம் நற்குலத்தில் பிறந்தவனுக்கு முற்காலத்தில் தெய்வம் எதைக் கட்டளையிட்டிருக்கிறதோ அதையே நான்அனுபவிக்கிறேன். ம்ருத்யுவானவன் எனக்கு என்னசெய்யக்கூடும்? ஸுகங்களோ

1 வேறு பாடம்.

2 லோகவியவகாரங்களை விசாரிக்கும்கூட்டம்.

3 ஸ்ம்ருதிகளைப்பற்றி விசாரிக்கும்கூட்டம்.

4 வேதத்தைப்பற்றி விசாரிக்கும்கூட்டம்.

துக்கங்களோ அடையத்தக்கவைகளையே அடைகிறான். செல்லத் தக்கவிடங்களுக்கே செல்லுகிறான். கிடைக்கத்தக்கவைகளே கிடைக்கின்றன. இதனை முழுதும்தெரிந்துகொண்டு அவிவேக மடையாமலிருக்கிறமனிதன் எல்லாத்துக்கங்களிலும் க்ஷேமமுள்ள வனும் பாக்கியமனைத்து முள்ளவனுமாயிருப்பான்' என்றுசொன் ஞன்'' என்றார்.

---

## இருநூற்றுமுப்பத்துநான்காவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(ஆபத்தில் தைர்யமே ஸுகத்துக்குக் காரணமென்பதைப் பற்றி இந்திரனுக்கும் பலிக்கும் ஸம்பாஷணை.)

யுதிஷ்டிரர், "அரசரே! உறவினர்களின்நாசத்திலோஅல்லது ராஜ்யங்களின் நாசத்திலோ கஷ்டமான ஆபத்தில் மூழ்கின மனித னுக்கு ஶ்ரேயஸ் எது? பரதர்களிற்சிறந்தவரே! இவ்வுலகத்தில் உத்தமமாக உபதேசிப்பவர் நீரன்றோ? இவ்விஷயத்தை உம்மிடம் கேட்கிறேன். அதனை நீர் எனக்குச் சொல்லவேண்டும்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"அரசனே! மக்கள் பெண்டிர் ஸுகங்கள் பொருள் இவைகளை விட்டு விலகியவனும் கஷ்டமானவிபத்தில் மூழ்கினவனுமாயிருப்பவ னுக்குத் தைரியமானது க்ஷேமத்தைச் செய்யத்தக்கதாகும். தைரிய முள்ளவனுக்குச் சரீரமானது அழியாது. சோகமில்லாமலிருப்பது ஸுகத்தைக்கொடுக்கும்; மிகச்சிறந்த நோயற்றநிலையையுந்தரும். சரீரத்திற்கு ஆரோக்கியமிருந்தால் அந்தமனிதன்திரும்பவும் ஸம்பத் தை அடைவான். அப்பா! ஸத்வகுணம்பொருந்திய நிலையைஅடைந் திருக்கிற அறிவிற்சிறந்தவனுக்கு ஸம்பத்தும் தைரியமும் காரியங் களில் உறுதியுமுண்டாகும். ஓ! யுதிஷ்டிர! திரும்பவும் இவ்விஷயத் திலும் பலிக்கும்இந்திரனுக்கும்நடந்த ஸம்பாஷணையான பழைய இவ் விதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். தேவர்களுக்கும் அஸுரர் களுக்கும்யுத்தமானதுமுடிவுபெறவும், தைத்தியர்களுக்கும் தானவர் களுக்கும் நாசமுண்டாகவும், உலகங்கள் விஷ்ணுவால் ஆக்கிரமிக்கப் படவும், இந்திரன்தேவர்களுக்கரசனுகவும், தேவர்கள் யாகங்களால் ஆராதிக்கப்படவும், நான்குஜாதிகளும் கலப்பின்றி நிலையிலிருக்க வும், மூன்று உலகங்களும் செழிப்பாயிருக்கவும், பிரம்மதேவர் பிரீதி யுடனிருக்கவுமுள்ளகாலத்தில் ருத்ரர்கள், வஸுக்கள், ஆதித்யர்கள்,

அஶ்விநீதேவர்கள், கந்தர்வர்கள், நாகஶ்ரேஷ்டர்கள், ஸித்தர்கள் இவர்களாலும் மற்றரிஷிகளாலும் சூழப்பட்டவனும் பிரபுவுமான இந்திரன் நான்குதந்தங்களுள்ளதும் நன்குபழக்கப்பட்டதும் யானைகளில் சிறந்ததும் காந்தியுள்ளதுமான ஐராவதத்திலேறிக்கொண்டு மூன்றுஉலகங்களையும் (பார்க்கவேண்டிப்) புறப்பட்டான். வஜ்ராயுதமேந்திய அவன் ஒருகால் கடலினருகில் ஒருமலையின் குகையில் விரோசனன்புத்திரனை பலியைக் கண்டு அவனருகில் சென்றான். ஐராவதத்தின் கழுத்திலிருப்பவனும் தேவக்கூட்டங்களால் சூழப்பட்டவனும் தேவர்களுக்கரசனுமான அந்த இந்திரனைக்கண்டு அஸுரபதியானபலியானவன்சோகப்படவுமில்லை; பயப்படவுமில்லை. அந்தப்பலியானவன் பயமில்லாமலும் வேறுவிகாரமில்லாமலுமிருப்பதைக்கண்டு சிறந்தயானையின்மீதுஏறின இந்திரனானவன் இவ்விதம் சொல்லத்தொடங்கினான்.

'ஓ! அஸுரனே! சூரதந்மையாலா அல்லது பெரியோர்களின் ஸேவையாலா அல்லது தவஞ்செய்திருப்பதாலா நீ பயப்படாமலிருக்கிறாய்? எவ்விதத்திலும் இவ்வாறிருப்பது மிகக்கடினம். விரோசனனின் புத்திரனே! பகைவர்களுக்கு வசமானவனும் மிக உத்தமமான பதத்திலிருந்து நழுவினவனுமான நீ சோகப்படவேண்டிய நிலைமையிலும் எதைக்கொண்டு சோகப்படாமலிருக்கிறாய்? ஜாதிகளுள் மிகமேன்மையை அடைந்து மிக உத்தமமானபோகங்களையும் புஜித்துக்கொண்டிருந்த நீ ரத்தினங்களும் ராஜ்யங்களும் அபகரிக்கப்பட்டும் என்னகாரணத்தால் சோகப்படாமலிருக்கிறாய்? சொல். தகப்பன்பாட்டன்பரம்பரையாகவந்த பதத்தில் முன்புஈஶ்வரனாயிருந்து இப்பொழுது பகைவர்களால் அந்தப்பதவி அபகரிக்கப்பட்டிருப்பதையுங்கண்டு ஏன் நீ சோகப்படாமலிருக்கிறாய்? வருணனுடைய பாசங்களால் கட்டப்பட்டும் வஜ்ராயுதத்தால் மிக அடிக்கப்பட்டும் தாரங்களும் தனங்களும் அபகரிக்கப்பட்டும் நீ என்னகாரணத்தால் சோகப்படாமலிருக்கிறாய்? சொல். ஸம்பத்து நசித்தும் வைபவத்திலிருந்து நழுவியும் நீசோகப்படாமலிருப்பதென்பது அரிது. மூன்று உலகங்களென்னும் ராஜ்யம் அழிந்திருக்கும்பொழுது வேறு எவன் உயிரோடிருக்க விரும்புவான்?' என்று சொன்னான். விரோசனன் புத்திரனை பலியானவன் இவ்விதமும் வேறுவிதமுமாகத் தன்னை அவமதித்துக் கஷ்டமும் குரூரமுமாகப் பேசுவதைக்கேட்டும் பரபரப்பில்லாமல் மறுமொழி கூறலானான். 'ஓ! இந்திரனே! நான் மிகவும் அடங்கியிருக்கும்பொழுது தற்புகழ்ச்சியால் உன

க்கு யாதுபயன்? ஓ! புரந்தரனே! நீ வஜ்ராயுதத்தை எடுத்துக் கொண்டு நிற்பதைக் காண்கிறேன். முன்பு நீ சக்தியற்றவனாயிருந் தாய்; கஷ்டப்பட்டுச் சக்தியுள்ளநிலையை அடைந்திருக்கிறாய். உன் னைத்தவிர வேறு எவன் மிகக்கடுமையான இவ்விதவசனத்தைப் பேசத்தக்கவன்? சத்ருவின் வசத்திலிருப்பவனும் தன் கையை அடைந்தவனுமான வீரனுக்குச் சக்தியுள்ளவனாயிருந்தும் தயைசெய் கிறவனையே புருஷனென்று அறிந்துகொள்ளுகிறார்கள். யுத்தங்க ளில் விவாதப்படும்இரண்டுபேர்களுள் ஒருவனேவெற்றிஅடைவதும் மற்றொருவனே தோல்வியடைவதும் நிச்சயமில்லையல்லவா? அஸு ரர்களுள் சிறந்தவனான என்னிடத்தில உனக்கு இந்த ஸ்வபாவம் வேண்டாம். எல்லாப்பிராணிகளுக்கும் ராசனாயிருந்த நான் பராக்கிர மத்தால் பலாத்காரமாக வெல்லப்பட்டேன். வஜ்ராயுதமுள்ளவனே! நீ இவ்விதநிலையைஅடைந்திருப்பது ஏன்? நாங்கள் இவ்விதநிலையை அடைந்திருப்பதும் ஏன்? இது எங்களால் செய்யப்பட்டதன்று. ஓ! இந்திர! இது உன்னால் செய்யப்பட்டதுமன்று. நான் முன்பு எவ்வித மிருந்தேனோ அவ்விதம் நீ இப்பொழுது இருக்கிறாய். இப்பொழுது நாங்கள் எவ்விதமிருக்கிறோமோ அவ்விதம் நீயும்இருக்கப்போகிறாய். நான் கெட்டகாரியம்செய்ததாக நீ அவமதிக்கவேண்டாம். மனிதன் காலத்தின் வேற்றுமையால் ஸுகத்தையும் துக்கத்தையும் அடைகி றான். ஓ! இந்திர! நீ கர்மத்தால் இந்திரபதவியை அடைந்தவனல்லை; காலத்தின்வேற்றுமையால அடைந்திருக்கிறாய். காலமானது என்னை இக்காலத்தில் செல்லும்படிசெய்கிறது. உன்னையும் இக்காலந்தான் செல்லச்செய்கிறது. ஆகையால், இப்பொழுது நீ இருப்பதுபோல நான் இல்லை. நாங்கள் இருப்பதுபோல நீயுமில்லை. தாய்தந்தைக ளின் பணிவிடையும் தேவதைகளின் பூஜையும் வேறுநற்குணம் பொருந்தியநடக்கையும் மனிதனுக்கு ஸுகத்தைத்தருவனவல்ல. காலத்தால்துன்பப்படுத்தப்பட்ட மனிதனைக் கல்வியும் தவமும் தான மும் நண்பர்களும் உறவினர்களும் காப்பாற்றத்திறமையுள்ளவர்களல் லர். மனிதர்கள் வருங்காலத்திலுள்ள துன்பத்தைப் புத்திவலிமை ஒன்றினாலல்லாமல் பலநூறுஇடையூறுகள்செய்தும் தடுக்கச்சக்தி யுள்ளவர்களல்லர். காலத்தின் வேற்றுமைகளால துன்பப்படுத்தப் படுகிறவர்களைக் காப்பாற்றுகிறவனில்லை. ஓ! இந்திரனே! ஆனால், 'நான் கர்த்தா' என்று நினைப்பது துக்கமாகும். கர்த்தாவாயி ருப்பதுஉண்மையானால கர்த்தாவானவன் ஒருபொழுதும் உண்டு பண்ணப்படமாட்டான. கர்த்தாவானவன்உண்டுபண்ணப்படுகிறதா

ணத்தால் கர்த்தாவும் சக்திபெற்றவனல்லன். காலத்தால் நான் உன்னை ஜயித்தேன். காலத்தால் உன்னால் நான் ஜயிக்கப்பட்டேன். காலமானது போகிறவர்களைப் போகும்படிசெய்கிறது. காலமானது பிராணிகளைக் கணக்கிடுகிறது. ஓ! இந்திரனே! அவிவேகமுள்ளபுத்தியுடன்பிதற்றுகிற நீ அறியவில்லை. சிலர் உன்னை உன்கர்மத்தால் மிகச்சிறந்ததன்மையை அடைந்தாயென்று நன்குமதிக்கிறார்கள். உலக நடைகளை அறிந்தஎன் போன்றவன்காலத்தால்துன்பப்படுத்தப்பட்டு எவ்விதம்சோகமடைவான்? அல்லது, அவிவேகமடைவான்? அல்லது, புத்திக்கேடுள்ளவனாவான்? காலத்தால்சூழப்பட்டஎனக்கோ என் போன்றவனுக்கோ புத்தியானது துன்பத்தைஅடைந்து உடைந்த கப்பல்போல எவ்விதம்கஷ்டமடையும்? ஓ! இந்திரனே! நானும் நீயும் இனிவரப்போகிற வேறுஇந்திரர்களனைவரும் பலநூறு இந்திரர்கள் சென்றவழியில் செல்லப்போகிறோம். காலம்வரும்பொழுது சிறந்த ஸம்பத்துடன் இவ்விதம்விளங்குகிறவனும்எதிர்க்கததகாதவனுமான உன்னையும் காலமானது என்னைப்போலச் செய்யப்போகிறது. தேவர்களுக்குரியயுகங்தோறும் பலவாயிரம் இந்திரர்கள் காலஞ்சென்றிருக்கிறார்கள். காலமானது மீறிச்செலலததகாததன்றோ? இந்தப்பதவியைஅடைந்துஉன்னை எல்லாப்பிராணிகளிடத்து மிருப்பவரும்அழிவிலாதவருமான பிரம்மதேவனைப்போலக்கொண்டாடிக்கொள்ளுகிறாய். இந்தப்பதவியானது எவனுக்கும் அசைவில்லாததுமன்று; அழிவில்லாததுமன்று. ஆனால், நீ அவிவேகபுத்தியுடன், 'எனக்கு இந்தப்பதவி வந்தது' என்று நினைக்கிறாய். நம்பததகாததை நம்புகிறாய். உறுதியிலலாததை உறுதியென்றும்நினைக்கிறாய். ஓ! ஸுரேஸ்வரா! காலததால்சூழப்பட்டபுததியுள்ளவன் எப்பொழுதும்இவ்விதமிருப்பான். 'இது என்னுடையது' என்று அவிவேகததால் நீ ராஜ்யலக்ஷ்மியை அடையவிரும்புகிறாய். உனக்கும் இவள் நிலைபெற்றவளல்லள்; எங்களுக்கும்அலலள்; மற்றவர்களுக்கும்அல்லள். வேறு பலபேர்களைமீறிக்கொண்டு இபபொழுது இவள் உன்னிடத்திலே வந்திருக்கிறாள். ஓ! இந்திரனே! பசுவானதுதன்னிருப்பிடத்தைவிட்டுத் திரும்பவும் வேறுஇடததிற்குச் செலவதுபோல உறுதியிலலாத இந்தலக்ஷ்மியானவள் சிறிதுகாலம்உன்னிடத்திலிருந்தபின் திரும்பவும் வேறொருவனிடம் செல்லப்போகிறாள். தேவராஜர்களாயிருந்தும் காலஞ்சென்றிருககிறவர்களை எண்ண நான் சகதியுள்ளவனலலேன். ஓ! இந்திரனே! உன்னைவிட வேறுபலபேர்களும் இருக்கப்போகிறார்கள். இந்தப்பூமியானது மரங்கள் கொடிகள் செடிகள்இவைகளுள்

ளதும், ஆறு மலை [1]ஆகரம் இவைகளுள்ளதுமாயிருக்கிறது. முன் காலத்தில் இந்தப்பூமியானது எவர்களாலனுபவிக்கப்பட்டதோ அவர்களை இப்பொழுது காணேன். ப்ருது, ஐலன், மயன், பீமன், நரகன், சம்பரன், அஸ்வக்ரீவன், புலோமா, ஸ்வர்ப்பானு, ஒப்பற்றகாந்தியுள்ளப்ரஹ்லாதன், நமுசி, தக்ஷன், விப்ரசித்தி, விரோசனன், ஹ்ரீநிஷேவன், ஸுஹோத்ரன், பூரிஹா, புஷ்பவான், வ்ருஷன், ஸத்யேஷு, வ்ருஷபன், பாஹு, கபிலாஸ்வன், விரூபகன், பாணன், கார்த்தஸ்வரன், வஹ்நி, விஸ்வதம்ஷ்ட்ரன், நைருருதி, ஸங்கோசன், வரீதாக்ஷன், வராகாஸ்வன், ருசிப்ரபன், விஸ்வஜித், ப்ரதிரூபன், வ்ருஷாண்டன், விஷ்கரன், மது, ஹிரண்யகசிபு, கைடபனென்ற திதியின் குமாரர்களும் தனுவின்குமாரர்களுமான அவர்களனைவரும் அஸுரர்களோடுகூட இருந்தார்கள். இன்னும், நாம்கேட்டிருக்கிற வேறுதைத்யபதிகளும் தானவபதிகளும் வேறுபலபேர்களும் முன்னுள்ளவர்களும் அதற்கு முன்னுள்ளவர்களுமான பல அஸுரராஜர்கள் பூமியைவிட்டுச் சென்றார்கள். யாவரும் காலத்தால் அடிக்கப்பட்டார்கள். காலமானது மிக்கவலிமையுள்ளதன்றோ? யாவரும் நூறு யாகங்களைச்செய்திருக்கிறார்கள். நீ ஒருவன் தான் நூறுயாகம்செய்தவனல்லை. யாவரும் தர்மத்தைப் பெரிதாகக்கொண்டவர்களாயிருந்தார்கள். எல்லாரும் எப்பொழுதும் யாகஞ்செய்கிறவர்கள். எல்லாரும் ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவர்கள். எல்லாரும் எதிர்த்துப் போர்புரியவல்லவர்கள். எல்லாரும் நல்ல சரீரமுள்ளவர்கள். எல்லாரும் பரிகம்போன்ற கையுள்ளவர்கள். எல்லாரும் பலமாயைகளில வல்லவர்கள். அவர்களெல்லாரும் விரும்பியபடி உருவமெடுக்கத்தக்கவர்கள். எல்லாரும் யுத்தத்தை அடைந்து தோல்விஅடைந்தவர்களாகக் கேட்கப்படவில்லை. எல்லாரும் ஸத்யத்தையே பெரிய விரதமாகக் கொண்டவர்கள். எல்லாரும் இஷ்டம்போல விளையாடிக்கொண்டிருந்தவர்கள். எல்லாரும் வேதத்திலகூறிய விரதங்களைப் பெரிதாகக் கொண்டவர்கள். எல்லாரும் பல சாஸ்திரங்களுள்ளவர்கள். எல்லாரும் ஈஸ்வரர்களாகி வேண்டியஐஸ்வரியத்தை அடைந்திருந்தார்கள். மஹாத்மாக்களான அவர்களுக்கு ஐஸ்வர்யமிருக்கிறதென்னும் அகங்காரமானது முன்னிருந்ததில்லை. எல்லாரும் தக்கபடி தானமளிப்பவர்கள். எல்லாரும் மாத்ஸர்யமில்லாதவர்கள். எல்லாரும்எல்லாப்பிராணிகளிடங்களிலும் நியாயப்படிஇருந்தார்கள். எல்லாரும் கஸ்யபரின்புத்திரர்களும் தாக்ஷாயணியினிடமுண்டானவர்களும் பெரிய

1 தங்கம் ரத்தினமுதலியவைகளை வெட்டிஎடுக்குமிடம்.

பலமுள்ளவர்களும் விளங்குபவர்களும் மிகவும் தபிக்கச்செய்கிற வர்களுமாயிருந்தார்கள். எல்லாரும் காலத்தால் ஸம்ஹரிக்கப்பட்டார்கள். ஓ! இந்திரனே! நீயும் இப்பூமியைஆண்டபின் எப்பொழுது திரும்பவும் விடப்போகிருயோ அப்பொழுது உனக்கு உண்டாகும்சோகத்தை அடக்கிக்கொள்ளச் சக்தியற்றவனுயிருக்கப் போகிருய். ஆசைப்படத்தக்கபோகங்களில் ஆசையைவிடு. ஸம்பத்தாலுண்டான இந்த மதத்தை விடு. உன்ராஜ்யத்திற்கு அழிவுண்டாகும்பொழுது நீ இவ்விதமிருந்தால் சோகத்தை நன்கு பொறுப்பாய். சோகம்வரும்பொழுதும் நீ சோகப்படாதே. ஸந்தோஷம் வரும்பொழுதும் ஸந்தோஷப்படாதே. சென்றதையும் வரப்போவதையும் தள்ளிவிட்டு நிகழுவதுடன்கூடியிரு. இந்திரனே! காலமானது சோம்பலில்லாமல் எப்பொழுதும் ஜாக்ரதையுள்ளவனை என்னையே வந்தடையுமாகில் உன்னையும்வந்தடைய வெகுநேரமாகாது. பொறுத்துக்கொள். ஓ! தேவேந்திரனே! பயப்படுத்துகிறவன் போல வாக்குக்களால் இப்பொழுது என்னைச் சிறுமைப்படுத்துகிருய். நான் அடங்கியிருப்பதுகொண்டு நீ உன்னைப் பெருமையுள்ளவனுகக் கருதுகிருய். ஸந்தேகமில்லை. ஓ! தேவேந்திரனே! காலமானது, முதலில் என்னை அடைந்தது. பிறகு, உன்னைத் தொடர்ந்தோடிவரப் போகிறது. ஆகையால், முதலில் காலத்தால் அடிக்கப்பட்டஎன்னிடத்தில் நீ கர்ஜிக்கிருய். யுத்தத்தில் கோபங்கொண்டஎன்முன் நிற்கத்திறமையுள்ளவன் உலகத்தில் ஒருவனுண்டோ? ஆனால், வன்மையுள்ளகாலமானது என்னை அடைந்தது. ஓ! வாஸவ! ஆகையால், நிற்கிருய். பெரியபராக்கிரமம்பெற்றஎன்னுடைய அங்கங்களெல்லாம் சக்தியற்றவைகளாயின. ஆயிரம்வருஷங்களின்முடிவென்பது வேகமாய்உண்டாகத்தக்கதாகும். நான் இந்திரபதத்திலிருந்து நழுவினேன். நீ இப்பொழுது தேவலோகத்தில் இந்திரனுயிருக்கிருய். மிக ஆச்சர்யமான இந்தஜீவலோகத்தில் காலத்தின்வேறுபாடே உபாஸிக்கத்தக்கது. எதைச்செய்து நீ இப்பொழுது இந்திரனுனுய்? அல்லது, எதைச்செய்து நாங்கள் நழுவினேம்? செய்வதும் கெடுப்பதும் காலமே. மற்றயாவும் காரணமல்ல. இவ்விதம் அறிவுள்ளவன் கஷ்டத்தையும் மரணத்தையும் ஐஸ்வரியத்தையும் ஸுகத்தையும் துக்கத்தையும்நன்மையையும்தீமையையும் மிகவும்அடைந்தாலும் ஸந்தோஷப்படாமலும் சோகப்படாமலும் இருக்கவேண்டும். ஓ! இந்திரனே! நீயே எங்களை அறிகிறவனன்றே? ஓ! வாஸவனே! உன்னையும் நான் அறிவேன். என்னிடத்தில் ஏன் புகழ்ந்துகொள்ளுகிருய்?

என் காலத்தால் வெட்கமில்லாதவனுயிருக்கிறாய்? யுத்தங்களில்என்னுடையசௌரியத்தையும் என்னால் மிகயுத்தஞ் செய்யப்பட்டதையும் நேரில் நீயே முந்திஅறிவாயன்றோ? ஓ! சசீபதியே! ஆதித்யர்களும் ருத்திரர்களும் ஸாத்தியர்களும் வஸுக்களும் மருத்துக்களும் முந்தி என்னால் வெல்லப்பட்டார்கள். ஓ! இந்திரனே! தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் வந்தயுத்தத்தில் மூன்றுசேர்ந்துவந்ததேவர்கள் என்னால் விரைவில் பங்கப்படுத்தப்பட்டார்கள். நீயே அறிவாய். காடுகளும் காட்டிலுள்ள ஜந்துக்களும் சிகரங்களுமுள்ள பல்மலைகள் பலமுறை என்னால் யுத்தத்தில் உன் தலையில் போடப்பட்டு உடைந்திருக்கின்றன. என்னால் என்னசெய்யக்கூடும்? காலமானது மீறிச் செல்லத்தகாததன்றோ? வஜ்ராயுதத்துடன்கூடியிருக்கும் உன்னையும் நான் ஒருகுத்தால்கொல்ல மனவலியில்லாதவனல்லேன். ஆனால், இது பராக்கிரமத்திற்குரிய காலமன்று. இது பொறுமைக்குரியகாலம் வந்திருக்கிறது. ஓ! இந்திரனே! ஆகையால், உன்னால பொறுக்கப் படாதவனானாலும் நான் உன்னைப் பொறுக்கிறேன். இந்திரனே! காலமுடிவடைந்ததும், காலத்தீயால் சூழப்பட்டவனும் காலபாசத்தால்கட்டப்பட்டவனுமான என்னிடம்வந்து நிச்சயமாகப் புகழ்ந்து கொள்ளுகிறாய். உலகத்தினால் தாண்டமுடியாதவனும் கறுத்தவனும் பயங்கரனுமான அந்தக்காலபுருஷன், பசுவைக் கயிற்றால் கட்டுவதுபோல என்னைக் கட்டிக்கொண்டு நிற்கிறான். லாபம், நஷ்டம், ஸுகம், துக்கம், ஆசை, கோபம், பிறப்பு, இறப்பு, கொலை, பந்தம், மோக்ஷம் யாவும்காலத்தால் அடையப்படுகின்றன. நான் கர்த்தாவல்லேன். நீ கர்த்தாவல்லை. எப்பொழுதும் சக்திபெற்றகாலமானது மாதத்திலுண்டான கனியைப்போல என்னைப் பழுக்கச்செய்கிறது. மனிதன் எவைகளைச்செய்து காலத்தால் ஸுகங்களுடன் சேருகிறானே அவைகளைச் செய்தே திரும்பவும் காலத்தால் துக்கங்களுடன் சேருகிறான். காலத்தைஅறிந்தவன் காலத்தால்தொடரப்பட்டாலும் சோகப்படத்தக்கவனல்லன். ஓ! இந்திரனே! ஆகையால், நான் சோகப்படாமலிருக்கிறேன். சோகம்வந்தால (அதைவிலக்க) ஸஹாயம் கிடையாது. சோகப்படுகிறவனுடையசோகமானது எப்பொழுது துன்பத்தைக் குறைக்கவில்லையோ அப்பொழுது சோகப் படுகிறவனுக்கு ஸாமர்த்தியமில்லை. ஆகையால், நான் இப்பொழுது சோகப்படாமலிருக்கிறேன்' என்றுசொன்னான். பலி இவ்விதம் சொல்ல, ஆயிரங்கண்ணுள்ளவனும் பூஜ்யனும் நூறுயாகங்களைச் செய்தவனுமான இந்திரன் கோபத்தைக் குறைத்துக்கொண்டு பின்

வருமாறு சொல்லத்தொடங்கினன். 'வஜ்ராயுதத்தை ஏந்தியகையையும் வருணனுடையபாசங்களையுங்கண்டு எவனுடைய புத்தியானது நடுங்காது? கொல்லவிருப்பமுள்ளயமனுடைய புத்தியும் நடுங்கும். உண்மையைக்கண்டதும் அசைவற்றதுமான உன்னுடையஅந்தப்புத்தியானது நடுங்காமலிருக்கிறது. ஸத்யமான பராக்கிரமமுள்ளவனே! தைரியத்தால் நீ பேசிக்கொண்டு பயமில்லாமலிருக்கிறாய். உலகம் பிரயாணத்துடனிருப்பதைக்கண்டால் உலகத்திலுள்ளஎந்தப்பிராணிதான் பொருள்களிலோ சரீரத்திலோ நம்பிக்கைவைக்க உறசாகப்படும்? நானும் இவ்வுலகத்தை நிலையில்லாததென்றும், கோரமும் மறைந்ததும் எப்பொழுதுமிருப்பதும் அழிவில்லாததுமான காலத்தீயில்வைக்கப்பட்டதென்றும் அறிகிறேன். சிறியவைகளானாலும் பெரியவைகளானாலும் முதிர்ச்சியடையும்பிராணிகளுள் காலத்தால் தொடரப்பட்டஎதற்கும் இவ்வுலகில் பரிகாரமில்லை. தனக்குமேற்பட்டதிலலாததும் அஜாக்ரதையில்லாததும் எப்பொழுதும் பிராணிகளைப்பழுக்கச்செய்வதும் விலகாததுமானகாலத்தின்முடிவை அடைந்து விடுபடுகிறவனில்லை. பிராணிகள் அஜாக்ரதையாயிருக்கும்பொழுது காலமானது அஜாக்ரதையில்லாமல் விழித்துக்கொண்டிருக்கிறது. சென்றதானகாலமானது எவனாலும் முயற்சியாலும் இதற்குமுன் காணப்பட்டதன்று. பழையதும் நிலையுள்ளதும் எல்லாப் பிராணிகளுக்குஞ்சமமானதும் தர்மமுமானகாலமானது பரிகரிக்கத்தக்கதன்று. இக்காலத்திற்கு மீறுதலுமில்லை. வட்டிக்கிட்டுப் பிழைப்பவன் வட்டியைச்சேர்ப்பதுபோலக் காலமானது பகல், இரவு, மாஸம், க்ஷணம், காஷ்டை, லவம், கலை இவைகளைச் சேர்க்கிறது. காலம்வந்தால், ஆற்றின்வேகமானது மரத்தைப் பிடுங்குவதுபோல, 'இதை இப்பொழுது செய்கிறேன், அதை நாளைக்குச் செய்யப் போகிறேன்' என்றுசொல்லிக்கொண்டிருப்பவனை அபகரிக்கிறது. 'இப்பொழுதுதான் இவன் என்னால் பார்க்கப்பட்டான். அதற்குள் எப்படி மரித்தான்?' என்று காலத்தால் அபகரிக்கப்படும் மனிதர்களின் பயனற்றவசனம் கேட்கப்படுகிறது. பொருள்களும் போகங்களும் பதவியும் ஐஸ்வர்யமும் நாசமடைகின்றன. ஜீவலோகத்தின்உயிரானது காலத்தால வந்து கொண்டுபோகப்படுகிறது. உயர்ந்தவைகள் முடிவில விழுதலுள்ளவைகளாகும். உண்மைப்பொருளானது இன்மைப்பொருளாகும். எல்லாம் அழிவுள்ளவையும் நிலையில்லாதவைகளுமாயிருக்கின்றன. ஆகிலும், இவ்வித நிச்சயமுண்டாவது கடினம். அசைவற்றதும் உண்மையைக்கண்டதுமான உன்

னுடைய அந்தப்புத்தியானது பயமில்லாமலிருக்கிறது. 'நானும் முந்தியிருந்தேன்' என்று மனத்திலும் நினைக்கிறவனில்லை. மிகவும் பலமுள்ளகாலமானது பெரியவன்சிறியவனென்பதில்லாமல் இவ்வுல கத்தை ஆக்கிரமித்து நாசஞ்செய்யும்பொழுது நசிக்கிறவன் அறிகி றதில்லை. உலகமானது ஈர்ஷை, அபிமானம், லோபம், காமம், கோபம், பயம், பிரியம், மோஹம், கர்வம் இவைகளிலகப்படுதலுள் ளதாகி மிகஅவிவேகமடைகிறது. நீயோ பொருள்களின்உண்மை யை அறிந்தவனும் வித்வானும் ஞானமும்தவமுமுள்ளவனுமாகிக் கையிலுள்ள நெல்லிக்கனியைப்போலக் காலத்தை மிகதெளிவா கப் பார்க்கிறாய். விரோசனன்புத்திரனே! காலம்செல்லுதலின்உண் மையை அறிந்தவனும் எல்லாச்சாஸ்திரங்களிலும்ஸமர்த்தனுமான நீ கிருதார்த்தனும் அறிவுள்ளவர்களால் கொண்டாடத்தக்கவனுமாக இருக்கிறாய். இவ்வுலகமனைத்தும் உன்னால் புத்தியால் முழுதும் அறி யப்பட்டதென்று நினைக்கிறேன். யாவற்றிலிருந்தும்விடுபட்டு விளை யாடிக்கொண்டிருக்கும் நீ ஒன்றிலும் வருத்தப்படுகிறவனுயில்லை. இந்திரியங்களைவென்ற உன்னை ரஜோகுணமும் தமோகுணமும் தொ டரவில்லை. நீ ஸுகமும் துக்கமுமற்றதான ஆத்மாவை உபாஸிக்கி றாய். எல்லாப்பிராணிகளுக்கும் மித்திரனும் வைரமற்றவனும் அட ங்கியமனமுள்ளவனுமான உன்னைக்கண்டு என்னுடையபுத்தியானது உன்னிடத்தில தயையுள்ளதாயிற்று. இவ்விதமான அறிவுள்ளவனை விலங்குமுதலியவைகளால நான் துன்புறுத்தவிரும்புகிறவனல்லேன். உன்னிடத்தில தயையும் கொடுமையில்லாதிருப்பதும் எனக்குப் பெரியதர்மம். உன்னிடத்திலுள்ள இந்தவருணபாசங்கள் காலடை வில் விடுபட்டவைகளாகும். பூஜ்யனான அஸுரனே! பிரஜைகளின் உபசாரத்தால உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். எப்பொழுது மருமக ளானவள் கிழவியானமாமியைப் பரிசாரகததொழிலில ஏவுவளோ, மகனும் அவிவேகத்தால தந்தையை வேலைகளில் ஏவுவனோ, சூத்திரர்களும், பிராம்மணர்களைக்கொண்டு பாதசுத்தியைச் செய் வித்துக்கொள்வார்களோ, அவர்கள் பயமின்றிப் பிராம்மணப் பெண்ணை மனைவியாகஅடைவார்களோ, புருஷர்கள் சேரக்கூடாத பெண்களுடன் சேருவார்களோ, வெண்கலப்பாத்திரங்களால் குப்பை கொட்டுவதையும் கெட்டபாத்திரங்களால பலியையும் செய்வார் களோ, எப்பொழுது நான்குஜாதிகளும் முழுமையும் வரம்பற றவையாகுமோ அப்பொழுது ஒவ்வொருபாசமும் உன்னிடத்தி லிருந்து முறையே விடுதல்பெறும். என்னிடத்திலிருந்து உனக்குப்

பயமில்லை. ஸமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிரு. துன்பமில்லாத வனும் கவலையற்றமனமுள்ளவனும் பிணியற்றவனும் ஸுகமுள்ள வனுமாயிரு' என்றுசொன்னான். பூஜ்யனான இந்திரனானவன் அந்தப் பலியைப்பார்த்து இவ்விதம்சொல்லிவிட்டு உயர்ந்த யானையான ஐரா வதத்திலேறிக்கொண்டு திரும்பிச்சென்றான். தேவாதிபனானவன் எல்லா அஸுரர்களையும்வென்று மிகவும்களித்தான் ; ஒரே அரசனாயு மிருந்தான். ஸ்தாவரஜங்கமங்களான எல்லாப்பிராணிகளுக்கும் ஈச னான அந்த இந்திரனை மஹரிஷிகள் உடனே போற்றினார்கள். அக்னி யும் யாகத்தில் ஹவிஸைப் பொறுத்தான். அவ்விதம் ஈசனான இந்திர னும் அளிக்கப்பட்ட ஹவிஸைப் பெற்றுக்கொண்டான். எல்லாவிடங் களிலுமுள்ள சிறந்த பிராம்மணர்களால் துதிக்கப்படுகிறவனும் மிக வும் விளங்கும் தேஜஸுள்ளவனும் நூறுயாகங்களைச் செய்தவனும் ஈசனுமான இந்திரன் மனம் மிகவடங்கிக் களிப்புற்றுத் தன்னிருப்பிட மான ஸ்வர்க்கத்தை அடைந்து ஸந்தோஷித்தான்'' என்றுசொன்னார்.

---

## இருநூற்றுமுப்பத்தைந்தாவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)



(லக்ஷ்மியானவள் தான் அஸுரனைவிட்டு விலகியகாரணத்தை இந்திரனுக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "அரசரே ! புருஷன் க்ஷேமத்தை அடைவதற் கும் துன்பத்தை அடைவதற்குமுள்ள முன்குறிகளை எனக்குச் சொல்லவேண்டும்'' என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங் கினார்.

"உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். மனிதன் க்ஷேமத்தை அடை வதற்கும் அவ்விதமே துன்பத்தை அடைவதற்குமுள்ள முன்குறி களை மனமே சொல்லும். இவ்விஷயத்திலும் இந்திரனுக்கும் லக்ஷ்மி க்கும் நடந்த ஸம்பாஷணையான பழைய இதிஹாஸத்தை உதாஹரிக் கிறார்கள். ஓ! யுதிஷ்டிரா ! அதைத் தெரிந்துகொள். பெரியதவத்தின் விருத்தியால் மேலானதும் கீழானதுமான இரண்டு உலகங்களையும் பார்ப்பவரும், பிரம்மலோகத்தில் வஸிப்பவர்களான ரிஷிகளுக்கொப் பான நிலையை அடைந்து பிரம்மதேவரைப்போல மிக்கவொளியுள்ள வரும், பாவங்கள் விலகியவரும், பெரியதவமுள்ளவருமான நாரத முனிவர் காலத்திற்குத்தக்கபடி மூன்றுஉலகங்களிலும் ஸஞ்சரித்துக்

கொண்டிருந்தார். ஒருஸமயம் காலையில்எழுந்து பரிசுத்தமான ஜலத்தில் ஸ்நானஞ்செய்யவிரும்பித் துருவமண்டலத்தின் துவாரத்திலிருக்கும் கங்கைக்குச்சென்றார். அவ்விடத்திலிறங்கி மேருமலையினருகிலுண்டானதும் ஸ்ரீநாராயணரின்பாதத்திலிருந்து நழுவியதுமான கங்கையைக்கண்ட அந்தநாரதர் மனத்தில களிப்புற்று அவ்விடத்திற்குச் சென்றார். தேவர்களால் நிறைந்ததும் சிறியபொன்மணலுள்ளதும் ஸாலம், தாலம், அஸ்வகர்ணம், சந்தனம்என்ற மரக்கூட்டங்களாலும் மற்றும்பலமரங்களாலும் பலபுஷ்பங்களாலும் அலங்கரிக்கப்பட்டதும் அன்னப்புட்களும் காரண்டவங்களுமுள்ளதுமான கங்கையில் தீவைஅடைந்து நீராடித் தேவர்களுக்குத் தர்ப்பணஞ்செய்து தர்மபுத்தியுள்ள அவர் மணற்குன்றை அடைந்து ப்ரம்மமயமாய்விளங்கிக்கொண்டு ஜபிக்கத்தக்கமந்திரத்தை ஜபிக்கத்தொடங்கினர். ஆயிரங்கண்ணுள்ளவனும் சம்பராஸுரனையும் பாகாஸுரனையும் கொன்றவனுமான இந்திரனும் தேவர்களாலும் ரிஷிகளாலும் அடையப்பட்ட அந்தக்கங்காநதியின் கரையைநோக்கி வந்தான். பரிசுத்தமானபுத்தியுள்ள அவ்விருவரும் நீராடிச் சுருக்கமாக ஜபத்தைச் செய்து சிறியபொன்மணலுள்ள கங்காநதியின் மண்முட்டிலிருந்து நல்லொழுக்கமுள்ள தேவரிஷிகளால் சொல்லப்பட்டகதைகளைப் பேசிக்கொண்டிருந்தார்கள். ஏகாக்ரபுத்தியுடன் அவ்விதம் உட்கார்ந்த அவ்விருவரும் மஹரிஷிகளால் சொல்லப்பட்டவைகளும் முன்னோர்களால் நடத்தப்பட்டவைகளுமான கதைகளைச் சொல்லிக்கொண்டிருந்தார்கள். பிறகு, கிரணக்கூட்டங்கள் முன்வெளிவர நிறைந்தமண்டலத்துடன் உதயமாகிறஸூர்யனைக்கண்டு அவ்விருவரும் எழுந்துநின்று துதித்தார்கள். ஜனங்களில்லாத பரிசுத்ததேசத்தில் விளையாடிக்கொண்டு ஸந்தோஷத்துடனிருந்த அவ்விருவரும் ஸூர்யன் உதித்த ஸமயத்தில ஒளிக்கூட்டங்களாலநிறைந்ததும் பலகிரணங்களால் அலங்கரிக்கப்பட்டதும் அந்தஸூர்யனுக்கு நாலுபுறத்திலும் ஆகாயத்தில் வேறுஸூர்யன் உதிப்பதுபோன்றதுமான ஜோதியைக்கண்டார்கள். ரவியின் தேஜஸ்ஸுக்கொப்பானதும் மின்னலின் ஒளிபோன்ற காந்தியுள்ளதுமான சோதியானது ஆகாயத்தில காணப்பட்டது ஓ! பாரத! அது அவ்விருவருக்குமருகில்வருவதாகவும் காணப்பட்டது. அந்தஒளியாலும் ஸூர்யனாலும் விளங்குவதானஆகாயமானது அப்பொழுது காந்திகளால் ஒப்பில்லாததும் மூன்று உலகங்களையும் பிரகாசிக்கச்செய்வதுமாக விளங்கிற்று. அந்தத்தேஜஸைக் கண்டு கைகூப்பிக்கொண்டுநின்ற பராக்ரமசாலிகளானஅவ்விருவரும்

சிறிதுநேரத்தில் ஆச்சர்யமான ஒருதிவ்யவிமானத்தைக் கண்டார்கள். அப்பொழுது அந்தவிமானத்திலிருப்பவளும் ஒளியுள்ளவளும் உலகத்தால்விரும்பத்தக்கவளும் உயர்ந்தமங்களரூபியும் உலகத்தைப் படைத்தவளும் அழகுள்ளவளும் உலகத்திற்குத்தாயும் அழிவில்லாதவளும் அருகில்விளங்கும் அழகுள்ள அப்ஸரஸுகளால் பூஜிக்கப்படுகிறவளும் பெரியவளும் ஸூர்யன்போலவிளங்குகிறவளும் அக்நியின் ஜ்வாலைபோன்றவளும் நக்ஷத்திரம்போன்ற ஆபரணங்களுள்ளவளும் நக்ஷத்ரக்கூட்டம்போன்றமாலையுள்ளவளும் தாமரைமலரின் இதழில் இருப்பவளுமான லக்ஷ்மிதேவியை நேரில்கண்டார்கள். பெண்களுள் மிகஉத்தமியான அந்தலக்ஷ்மியானவள் விமானத்தின்மேலிருந்து இறங்கி மூன்றுஉலகங்களுக்குமரசனை இந்திரனையும் நாரதமுனிவரையும் நோக்கிவந்தாள். இந்திரனும் நாரதரால்பின்தொடரப்பட்டு நேரில அந்தலக்ஷ்மியினருகில வந்தான். எல்லாமறிந்தஅந்தஇந்திரன் அஞ்சலிசெய்துகொண்டு லக்ஷ்மிதேவியினிடம் தன்னைத்தானேதெரிவித்து அந்தலக்ஷ்மிக்கு ஒப்பற்றபூஜையையும் செய்தான். அரசனே! தேவராஜனானவன் லக்ஷ்மியைநோக்கி, 'அழகானபுன்சிரிப்புள்ளவளே! நீ யார்? என்னகாரியத்திற்காக வந்தாய்? எங்கிருந்துவருகிறாய்? அழகுள்ளபெண்ணே! உனக்கு எவ்விடத்திற்குச்செல்லவேண்டும்?' என்று இவ்விதம்கேட்க, லக்ஷ்மி சொல்லத்தொடங்கினாள். பரிசுத்தமான மூன்றுலகங்களிலுமுள்ள ஸ்தாவரஜங்கமங்களனைத்தும் நான் தங்களிடமிருக்கவேண்டுமென்று விரும்பி மிகவும் முயற்சிசெய்கின்றன. தாமரைமலர்மாலை அணிந்தவளும் பத்மையென்றுபெயருள்ளவளுமான அந்தலக்ஷ்மியான நான் ரவியின் கிரணங்களால்மலர்ந்த தாமரைமலரில எல்லாப் பிராணிகளுடைய ஸம்பத்திற்காகவும் உண்டானேன். ஓ! பலாஸுரனைக்கொன்றவனே! நான் லக்ஷ்மி, பூதி, ஸ்ரீ, ப்ரத்தை, மேதை, ஸன்னதி, விஜிதி, ஸ்திதி, த்ருதி, ஸித்தி, ஸம்பூதி, ஸ்வாஹா, ஸ்வதா, ஸம்ஸ்துதி, நியதி, க்ருதி என்ற உருவமுள்ளவளாயிருக்கிறேன். நான், வெல்லும்திறமையுள்ளவர்களும் இயற்கையில்தாமமுள்ளவர்களுமான அரசர்களின்படைமுகத்திலும் த்வஜங்களிலும் தேசங்களிலும் நகரங்களிலும் வஸிக்கிறேன்! பலாஸுரனைக்கொன்றவனே! ஜயிக்கும் திறமையுள்ளவனும் சூரனும் போர்களில புறங்காட்டாதவனுமான உத்தமமனிதனிடத்தில் நான் எப்பொழுதும் வஸிப்பேன். எப்பொழுதும் தர்மமுள்ளவனும் பெரியபுத்தியுள்ளவனும் பிராம்மணர்களுக்குநன்மைசெய்பவனும் ஸத்யம்பேசு

கிறவனும் அடக்கமுள்ளவனும் கொடுக்கும்ஸ்வபாவமுள்ளவனுமான மனிதனிடத்தில் நான் எப்பொழுதும் வஸிப்பேன். முந்தி உண்மையான தர்மமிருந்தகாரணத்தால அஸுரர்களிடத்தில்வஸித்துக்கொண்டிருந்தேன். அவர்கள் விபரீதமாயிருப்பதைத்தெரிந்துகொண்டு உன்னிடத்தில் வஸிக்கவேண்டுமென்று விருப்பங்கொண்டேன்' என்று சொன்னாள். இந்திரன், 'சிறந்தமுகமுள்ளவளே! எவ்விதமானநடச்கையுள்ள அஸுரர்களிடம் நீ வஸித்துக்கொண்டிருந்தாய்? எதைக் கண்டபின் அஸுரர்களைத்தள்ளிவிட்டு நீ இங்குவந்தாய்?' என்று கேட்க, லக்ஷ்மி சொல்லத்தொடங்கினாள்.

'ஸ்வதர்மத்தைச்செய்கிறவர்களும் தைரியத்தைவிட்டுவிலகாதவர்களும் ஸ்வர்க்கத்திற்குரியவழியில் செல்லுகிறவர்களுமான பிராணிகளிடத்தில் நான் பற்றுதலுள்ளவள். அந்தஅஸுரர்களுக்குத தானமும் அத்யயனமும் யாகமும் பூஜையும் குருக்கள், அதிதிகள், பித்ருக்கள், தேவதைகள் இவர்களின்பூஜையும் எப்பொழுதும் இருந்தன. நன்குசுத்தம்பண்ணப்பட்டகுகைகளாகிய வீடுகளுள்ளவர்களும் மாதர்களைவென்றவர்களும் அக்னியிலஹோமம்செய்கிறவர்களும் பெரியோர்களுக்குப்பணிவிடைசெய்கிறவர்களும் அடக்கமுள்ளவர்களும் பிராம்மணர்களுக்குஹிதர்களும் ஸதயம்சொல்லுகிறவர்களும் ஶ்ரத்தையுள்ளவர்களும் கோபத்தைவென்றவர்களும் கொடுக்கும்இயற்கையுள்ளவர்களும் அஸூயையற்றவர்களும் மக்களையும் பெண்டிரையும் இனத்தார்களையும் காப்பாற்றுகிறவர்களும் ஈர்ஷை இல்லாதவர்களுமாயிருந்தார்கள். அவர்கள் பொறாமையால் ஒருவரைஒருவர் ஒருபொழுதும் (அடக்க)விரும்புகிறதில்லை. தீரர்களானஅவர்கள் ஒருபொழுதும் பிறர்ஸம்பத்துக்களால் தாபப்படுகிறதில்லை. கொடுக்கிறவர்களும் சேர்க்கிறவர்களும் பூஜ்யர்களும் துக்கத்தை அறிகிறவர்களும் மிக்ககருணையுள்ளவர்களும் நேராயிருப்பவர்களும் உறுதியானபக்தியுள்ளவர்களும் இந்திரியங்களை வென்றவர்களும், வேலைக்காரர்களையும் மந்திரிகளையும் ஸந்தோஷப்படுத்துகிறவர்களும் நன்றியறிவுள்ளவர்களும் பிரியமாய்ப்பேசுகிறவர்களும் யோக்யதைக்குத்தக்கபடி வெகுமதியளிப்பவர்களும் வெட்கத்துடன் நடப்பவர்களும் உறுதியானவிரதங்களுள்ளவர்களும் எப்பொழுதும் பர்வகாலங்களில் நன்றாக ஸ்நானஞ்செய்கிறவர்களும் நல்ல பூச்சுள்ளவர்களும் நல்ல அலங்காரமுள்ளவர்களும் உபவாஸத்தையும் தவத்தையும் செய்யும் ஸ்வபாவமுள்ளவர்களும் நம்பத்தக்கவர்களும் வேதமோதுகிறவர்களுமாயிருந்தார்கள். ரவியுதிக்கும் பொழுது இவர்கள்உறங்கினவர்களல்லர்; விடியற்காலத்தில்படுத்துத்

தூங்கினவர்களே அல்லர்; எப்பொழுதும் இரவில் தயிரையும் ஸத்துமாவையும் (புஜியாமல்) விலக்கினார்கள்; காலையில் நெய்யைப்பார்த்துப் பரிசுத்தர்களும் வேதமோதுகிறவர்களுமாக மங்களவஸ்துக்களைப் பார்த்தார்கள்; பிராம்மணர்களையும் பூஜித்தார்கள். எப்பொழுதும் தர்மத்தைவிட்டுவிலகாமல கொடுக்கிறவர்களும் எப்பொழுதும் வாங்காதவர்களும் இரவில் பாதியே உறங்குகிறவர்களும் பகலில் உறங்காதவர்களும் ஏழைகளுக்கும் கதியற்றவர்களுக்கும் முதியோர்களுக்கும் பலவீனர்களுக்கும் நோயாளிகளுக்கும் ஸ்திரீகளுக்கும் எப்பொழுதும் இரக்கமுற்றுத் தானத்தை ஸந்தோஷமாகச் செய்கிறவர்களும் தர்மமார்க்கத்தினின்று விலகாதவர்களுமாயிருந்து கொண்டு ஸுகமாகவே அவர்கள் காலத்தைப்போக்கினார்கள். பயந்தவனையும் துன்பமுள்ளவனையும் நடுக்கமுள்ளவனையும் பயத்தால் கஷ்டப்படுகிறவனையும் நோயால்துன்பப்படுகிறவனையும் பொருள் அபகரிக்கப்பட்டவனையும் விசனமுள்ளவனையும் அவர்கள் எப்பொழுதும் தேற்றினார்கள்; தர்மத்தையே தொடர்ந்துகொண்டிருப்பார்கள். ஒருவரை ஒருவர் துன்பப்படுத்துகிறதில்லை. காரியங்களில் அநுகூலர்களும் குருக்களையும் பெரியோர்களையும் ஸேவிப்பவர்களுமாயிருந்தார்கள்; பித்ருக்களையும் தேவர்களையும் அதிதிகளையும் ஆசிரியர்களையும் பூஜித்தார்கள்; எப்பொழுதும் ஸத்தியத்திலும் தவத்திலும் உறுதியுள்ளவர்களாகி (அதிதிகளுக்கிட்ட) மிச்சத்தை உண்பார்கள்; மிகநிறைந்த அன்னத்தை ஒருவராக உண்பதில்லை; பரஸ்திரீகளிடம்செல்லுகிறதில்லை; தயைவிஷயத்தில் தம்மிடத்தில் போல எல்லாப்பிராணிகளிடத்திலுமிருந்தார்கள். ஆகாயத்திலும் பசுக்களிலும் பர்வகாலங்களிலும் தகுதியில்லாதஇடத்திலும் சுக்கிலத்தைவிட அவர்கள் ஒருபொழுதும் விரும்புகிறதில்லை. எப்பொழுதும் தானமும் ஸாமர்த்யமும் எப்பொழுதும் நேர்மையும் உற்சாகமும் அகங்காரமில்லாமையும் மிக்கநேசமும் பொறுமையும்ஸத்யமும் 1 தவமும் சுத்தியும் தயையும் குரூரமற்ற இன்சொல்லும் மித்திரர்களிடம்கெட்டஎண்ணமில்லாமையுமாகிய யாவும் அவர்களிடமிருந்தன. பிரபுவே! தூக்கமும் சோம்பலும் ஸந்தோஷமில்லாமையும் அஸூயையும் அஜாக்ரதையும் உற்சாகமில்லாமையும் வருத்தமும் ஆசையும் அவர்களைத் தொடரவில்லை. இவ்விதகுணங்களுள்ள அஸுரர்களிடம் பிரஜைகளின் ஸ்ருஷ்டிகாலம்முதல (அவர்களுக்கு)குணக்கேடுவரும்வரையில முன்பு நான் வஸித்துக்கொண்டிருந்தேன்.

1 இரண்டுமுறை வருதலால், ஒருசொல் விடப்பட்டது.

பிறகு, காலத்தின் வேற்றுமையினாலும் குணக்கேட்டாலும் காமக் குரோதங்களுக்குவசப்பட்டமனமுள்ளவர்களான அந்த அஸுரர்க ளுக்குத் தர்மம்போனதைக் கண்டேன். அவர்கள் ஸபையிலிருந்து கொண்டு நல்லகதைகளைச்சொல்லுகிற ஸாதுக்களானபெரியோர் களைப் பரிஹஸித்தார்கள்; எல்லாப்பெரியோர்களிடமும் சிறந்த குரு க்களிடமும் அஸூயைப்பட்டார்கள். ஸாதுக்களானபெரியோர்கள் வரும்போது சிறுவர்கள் முன்போல எழுந்துபூஜியாமல் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். தந்தையிருக்கும்பொழுதே மகன் ஆளுகை அடைவான். விரோதிகளுக்கு அடிமைப்பட்டும் வெட்கமில்லாமல் புகழ்ந்துகொள்ளுவார்கள். தர்மம்விட்டகன்றதும் இகழப்பட்டது மான தொழிலால் மிக்கபொருள்களை அடைகிறவர்களான அந்த அஸுரர்களுக்கு அந்தப்பொருள்களிலஆசையானது உண்டாயிற்று. இரவில் கூச்சலிட்டுப்பேசுவார்கள். அங்கு அக்னியானது குறைந்து ஜ்வலித்தது. புத்திரர்கள் தந்தைகளை மீறிச்சென்றார்கள். பெண் களும் கணவர்களை மீறிச்சென்றார்கள். அன்னையையும் பிதாவையும் பெரியோரையும் ஆசாரியரையும் அதிதியையும் குருவையும் குருக்க ளென்று கொண்டாடவில்லை. சிறுவர்களைக் காப்பாற்றவில்லை. பிச் சையிடாமலும் பலிகொடாமலும் பூஜையில்லாமலும் பிதிருக்கள், தேவர்கள், அதிதிகள், குருக்கள் இவர்களுக்குப்பங்கிடாமலும் தாங் கள் அன்னங்களைப் புஜிப்பார்கள். அவர்களுடைய சமையற்காரர் கள் மனமொழிமெய்களால் பரிசுத்தியைச் செய்துகொள்ளவில்லை. புஜிக்கத்தக்கவஸ்துவானது மூடப்படாமலிருந்தது. அவிவேகிக ளானஅவர்கள் சிறுவர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது அன் னங்களைப்புஜிப்பார்கள். அவர்களுக்கு ஒவ்வொருவேலைக்காரனும் இரண்டுதாஸியுமிருந்தார்கள். சிலஅஸுரர்கள் மூன்றுபசுக்களுள்ள வர்களும் சிலர் நான்குஆடுகளுள்ளவர்களும் சிலர் ஐந்துஎருமை களுள்ளவர்களும் சிலர் ஆறுகுதிரைகளுள்ளவர்களும் சிலர்ஏழுயானை களுள்ளவர்களுமாயிருந்தார்கள். இரவில்தயிரையும் ஸத்துமாவை யும் எப்பொழுதும் விலக்கவில்லை. புத்தியற்றஅவர்கள் ஈன்றபத்து நாள்களுள் பசுக்களின்பாலைக் குடித்தார்கள். கிரமமாகக் கறக்கச் செய்வதில்லை. கன்றுக்குள்ளபால்களையும் குடிப்பார்கள். கதியற்ற வரும் துன்பமுள்ளவருமானமனைவியை எப்பொழுதும் அடிக்க வும்திட்டவும்செய்வார்கள். பிராம்மணர்கள் சூத்திரர்களின் அன்ன த்தால்போஷிக்கப்படுகிறவர்களும் வெட்கமில்லாதவர்களுமாயிருப் பார்கள். இறைந்துகிடக்கும் தான்யங்களைக் குடும்பத்திலிருப்பவள்

கவனிப்பதில்லை. மனிதர்கள், பூனை கோழி நாய் இவைகளுடன் விளையாடுவார்கள். கெட்டபுத்தியுள்ள அவர்களுடையவீட்டில் முள்ளுள்ளமரங்களும் அவரைமுதலியகொடிகளும் அப்படியே யாகத்திற்குரியமரங்களும் இருந்தன. எப்பொழுதும் கிணற்றில்முழுகுவதில் பறறுதலுள்ளவர்களும் பர்வகாலத்தில் புணர்ச்சிசெய்கிறவர்களுமாயிருந்தார்கள். இரவில் எள்ளைப் புஜிப்பார்கள்; எண்ணெய்தேய்த்து முழுகிக்கொண்டும் படுப்பார்கள் தான்றி புன்கு இந்தமரங்களின் அடியிலுள்ள நிழலில் வஸிப்பார்கள். அவிவேகங்கொண்ட அவர்கள் அலரிப்பூவைத் தரிப்பார்கள் தாமரைவிதைகளைத் தின்பார்கள். மோஹங்கொண்டு புஷ்பத்தை மோந்துபார்ப்பார்கள். அப்படியே அவிவேகங்கொண்டஅஸுரர்கள் எப்பொழுதும் காலத்திலுண்ண மாட்டார்கள். ஸ்ரீவிஷ்ணுவை எப்பொழுதும் பகைப்பவர்களான அஸுரஜனங்கள் அவர்பெருமையை நிந்திப்பார்கள். அங்கு ஒவ்வொருவீட்டிலும் முன்போல ஹோமதூமமும் வேதஒலியுமில்லை. அப்படியே யாகங்களும் நடப்பதில்லை.ஆசார்யசிஷ்யமுறையும்இல்லை. [1] பிராம்மணர்களுக்குநன்மைசெய்பவரும் தேவர்களுக்குத்தலைவருமான ஸ்ரீவிஷ்ணுவைத் தள்ளிவிட்டுப் பாஷண்டனை அடுத்தார்கள். ஹவ்யமும்கவ்யமுமில்லாதவர்களும் ஞானமும் அத்தியயனமுமில்லாதவர்களும் தேவஸ்வத்தைஎடுப்பதிலவிருப்பமுள்ளவர்களும் பிராம்மணர்களின் பொருள்களில் விருப்பமுள்ளவர்களுமானார்கள். தேவாலயங்களெல்லாம் போற்றுதலில்லாதவைகளும் மங்களவாத்யங்களில்லாதவைகளுமாயின. தான்யங்கள் சிதறிக்கிடந்தன. காகங்களும் எலிகளும் புஜிக்கின்றன. பாலானது மூடப்படாமலிருக்கின்றது. அசுத்தியுள்ளவர்களும் நெய்யைதொடுகிறார்கள். குந்தாலி, மண்வெட்டி, கூடை, இறைந்ததான்யம், வெண்கலப்பாத்திரம், மற்றும் உபகரணமாயுள்ள திரவியம் யாவையும் குடும்பத்திலிருப்பவர் கவனிப்பதில்லை. பிராகாரங்களும் வீடுகளும் பழுதாயிருப்பவைகளை அவர்கள் நன்றாகக் கட்டுவதில்லை. அறமற்றவர்களும் ஸம்ஸ்காரமற்றவர்களுமான ஸ்திரீகள் வயிறுவளர்க்கிறவர்களும் பரிசுத்தியும் ஆசாரமுமற்றவர்களும் வெட்கமில்லாதவர்களும் போகத்தால் வஞ்சிக்கப்பட்டவர்களுமாயிருந்தார்கள். அங்குள்ளஸ்திரீகள் வீட்டின் பல கணிகளிலிருப்பவர்களும் இரண்டுகைகளாலுமே தலையைச் சொறிகின்றவர்களுமாயிருந்தார்கள். நறகுலத்திலபிறந்த லக்ஷணமுள்ள ஸ்திரீகளும் மாமிக்கும்மாமனுக்கும் நடுவில்வெட்கமில்லாமல் பார்த்

[1] இங்கு ஒருபாதம் விடப்பட்டது.

தாவைக் கபடமாகப் பார்க்கிறார்கள். பசுக்களைக்கட்டிவைத்து அவை களைப் புல்லாலும் தண்ணீராலும் ஆதரிப்பதில்லை. சிறுவர்கள் பார்த் துக்கொண்டிருக்கும்பொழுது தின்பண்டத்தைத் தாம் தின்றார்கள். அவர்கள், வேலைக்காரர்கள் யாவரையும் திருப்திசெய்யாமல் புஜித் தார்கள். பாயஸத்தையும் எள்ளன்னத்தையும் மாம்ஸத்தையும் அப் பங்களையும் முறுக்குக்களையும் தமக்கு வேண்டிப் பாகம்செய்தார்கள். [1] வீணை மாம்ஸங்களைப் புஜித்தார்கள். ஸூர்யன் உதித்தபிற கும் உறங்கினார்கள். அனைவரும் விடியற்காலையில் படுத்திருந்தார் கள். இரவும் பகலும் ஒவ்வொருவீட்டிலும் ஓயாதகலகமுள்ளவர் களாயிருந்தார்கள். தாம் கெட்டவர்களாயிருந்தும் நன்னடக்கை யுள்ளவர்களை அவ்விடத்தில் பூஜிக்கிறார்களில்லை. தீயசெயல்களைச் செய்துகொண்டு ஆஸ்ரமத்திலிருப்பவர்களை மிகவும்பகைத்தார்கள். ஒன்றுக்கொன்று ஸங்கரங்களுண்டாயின. பரிசுத்தியில்லை. வேதத்தை நன்குணர்ந்த பிராம்மணர்களும் வேதமில்லாதவர்களும்வெகுமானத் திலும் அவமானத்திலும் சிறிதும் விசேஷமில்லாதவர்களானார்கள். வேலைக்காரர்கள் துர்ஜனர்களால் செய்யப்படும் விதிப்படி நடை, உடை, ஆபரணம், எண்ணம், நிற்பது, பார்ப்பது இவைகளைக் கொண்டாடினார்கள். ஸ்திரீகள் புருஷவேஷமும் புருஷர்கள் ஸ்திரீ வேஷமும்பூண்டுவிளையாட்டுகளிலும்போகங்களிலும்பெரியஸந்தோ ஷத்தை அடைந்தார்கள். பிரபுக்களால் முந்திப் பெரியோர்களுக்குக் கொடுக்கப்பட்டபாகங்களை இவர்கள் நாஸ்திகர்களாயிருப்பதால் ஸ்ரீ மான்களாயிருந்தும் நிறுத்திவிட்டார்கள். சிலஇடத்தில் மித்திரனால் விரும்பப்படும்திரவியத்தையும்தாமடையவிரும்பித்தொடர்ந்தார்கள். ஓர்உரோமத்தின்முனை அளவுள்ள தம்பொருளுக்காக அந்தமித்திரன் தனத்தைக் கெடுத்தார்கள். பிராம்மணஜாதிகளிலிருப்பவர்கள் பிறர் பொருளைஎடுப்பதில் ருசியுள்ளவர்களும் வர்த்தகஞ்செய்கிறவர்களு மாகக் காணப்பட்டார்கள். சூத்திரர்களும் தவத்தையேதனமாகக் கொண்டவர்களானார்கள். சிலர் விரதமில்லாமல் அத்தியயனஞ்செய் தார்கள். மற்றுஞ்சிலர் (அத்தியயனமின்றி) வீணாக விரதத்தைச் செய்தார்கள். சிஷ்யன் குருவுக்குப் பணிவிடைசெய்யாதிருந்தான். குருவும் சிஷ்யனுக்குத் தோழனாயிருந்தான். தாயும் தந்தையும் உத் ஸவத்தைமுடித்தவர்களைப்போல ஸ்ரமமுள்ளவர்களும் ஸாமர்த்திய மில்லாதநிலையிலிருப்பவர்களும் கிழவர்களுமாயிருந்துகொண்டு மக்க ளிடம் அன்னத்தைப் பிரார்த்திக்கிறார்கள். அங்கு காம்பீரியத்தில

[1] யாகத்தில் உபயோகிக்கப்படாத.

கடல்போன்றவர்களும் வேதமறிந்தவர்களுமான அறிஞர்கள் கிருஷி முதலிய தொழில்களில் பற்றுதலுள்ளவர்களாயிருந்தார்கள். மூர்க்கர்கள் ஸ்ராத்தங்களில் புஜித்தார்கள். காலையிலும் மாலையிலும் சிஷ்யர்கள் ஏவப்பட்டாலும் ஏவிய வேலைகளையும் ஸம்ப்ரஸ்னத்தையும் வேறுகாரியத்தையும் செய்யவில்லை. அந்தச்சிஷ்யர்களுக்குக் குருக்கள் வேலைசெய்தார்கள். மருமகள் மாமன்மாமிகளின்முன்னிலையில் ஏவலாட்களைக் கட்டளையிட்டாள்; பாததாவையும் கட்டளையிடுவாள்; அழைத்தும் பேசுவாள். பிதாவானவன் ஜாக்ரதையுடன் புத்திரன் மனப்படிநடந்துகொண்டுவந்தான்; மிக்கபயபயபுடன் (தனத்தையும்) பங்கிட்டான்; மிகத்துன்பமான வாஸத்தையும் செய்துவந்தான். நண்பர்களென்று வெகுமதிக்கப்பட்டவர்களும் தீப்பற்றியெரிவதாலும் திருடர்களாலும்அரசர்களாலும் பொருள்அபகரிக்கப்படுவதைக் கண்டு த்வேஷத்தால பரிஹஸித்தார்கள். அனைவரும் நன்றிகெட்டவர்களும் நாஸ்திகர்களும் பாபிகளும் குருவின்தாரத்தைத்தொடருகிறவர்களுமாயிருந்தார்கள். புத்திரர்கள் தாய்தந்தைகளைத்தள்ளிவிட்டு, 'என்கர்மத்தால் நான் உண்டானேன்' என்றுசொல்லிக்கொண்டு மாமனை அனுஸரிப்பவர்களானார்கள். புஜிக்கத்தகாதவைகளைப் புஜிப்பதில உற்சாகமுள்ளவர்களும் வரைகடந்தவர்களும் சோபைகெட்டவர்களுமானார்கள். தேவேந்திரனே! காலம் வேறுபடவும் அந்தஅஸுரர்கள் இவைமுதலியகாரியங்களைச்செய்யவும் அவர்களிடம் நான்வஸிக்கக்கூடாதென்று எனக்குத் தோன்றிற்று. சசீபதியே! ஆகையால், வலியவந்தஎன்னை நீ ஸந்தோஷமாகக் கொண்டாடு. தேவபதியே! உன்னாலபூஜிக்கப்படும்என்னைத் தேவர்களும் பூஜிப்பார்கள். நான் வசிக்கிறஇடத்தில் என்னுடன்கூடிஇருப்பவர்களும் என்னிடம்நேசமுள்ளவர்களும் என்னைஅடுத்தவர்களும் எட்டாமவளானஜயாதேவியுடன்கூடியவர்களுமான ஏழுதேவிகளும் வாஸஞ்செய்வார்கள். பாகாஸுரனைஅடக்கியவனே! ஆசை, ஸ்ரத்தை, த்ருதி, க்ஷாந்தி, விஜிதி, ஸன்னதி, க்ஷமை இவ்வெழுவருக்கும் முன்செல்லும்எட்டாமவளானவிருத்தி இந்தஎட்டுத்தேவிகளும் நானும் அஸுரர்களைத்தள்ளிவிட்டுத் தர்மத்தில்உறுதியுள்ளமனத்துடன் தேவர்களிடம் வஸிப்போமென்றுஉங்களிடம்வந்தோம்' என்று சொன்னாள்.

இவ்விதவசனத்தைச்சொன்ன லக்ஷ்மீதேவியைப்பற்றித் தேவரிஷியானநாரதரும் விருத்திராஸுரனைக்கொன்ற வாஸவனும் ப்ரீதியுடன் ஸந்தோஷித்தார்கள். உடனே அக்கினிக்குத்தோழனானவாயு

அழகியமணமும் ஸுகமானஸ்பர்சமுமுள்ளவனும் எல்லா இந்திரியங்களுக்கும் ஸுகத்தைக்கொடுப்பவனுமாக தேவர்களின்வழியில் (ஆகாயத்தில்)வீசினான். லக்ஷ்மியுடனிருக்கும்இந்திரனைப்பார்க்கவிருப்பங்கொண்டதேவர்கள் பெரும்பாலும்பிரார்த்திக்கத்தக்கதும் பரிசுத்தமுமானவிடத்தில் நின்றார்கள். பிறகு,லக்ஷ்மியுடனும்பிரியரான நாரதமஹரிஷியுடனும்கூடியதேவபதியான இந்திரன் பச்சைக்குதிரை கட்டியதேருடன் ஸ்வர்க்கத்தை அடைந்து தேவர்களால் பூஜிக்கப்பெற்றுஸபையில்சென்றான். பிறகு, இந்திரனுடையஎண்ணத்தையும் லக்ஷ்மீதேவியினுடையஎண்ணத்தையும் மனதினால்தெரிந்துகொண்டவரும் தேவர்களால்பார்க்கப்படும் பௌருஷமுள்ளவருமான நாரதரானவர் அங்குமஹரிஷிகளின்மங்களமானவைகளை லக்ஷ்மீதேவிக்குக் கூறினார். உடனே,பிரகாசிக்கும்தேவலோகமான ஆகாசமானது பிரம்மதேவரிருக்குமிடத்தில் அம்ருதத்தைப் பொழிந்தது. துந்துபி வாத்தியங்கள் அடிக்கப்படாமலே சப்தித்தன. அப்படியே திக்குக்களும் தெளிந்துவிளங்கின. இந்திரனும் ருதுவுக்குத்தக்கபடி பயிர்களுக்கு மழைபெய்வித்தான். ஒருவனும் தர்மவழியிலிருந்து சலிக்கவில்லை. பூமியானது ரத்தினமுண்டாகும்பலவிடங்களை ஆபரணமாகக்கொண்டதாயிற்று. தேவர்களுக்குண்டானஜயத்தில் அழகானபெரிய கோஷங்களுடன்கூடியவர்களும் நற்காரியங்களால் விளங்குகிறவர்களும் பெரியமனமுள்ளவர்களுமானமனிதர்களும் புண்யசாலிகளுக்குத்தக்க நல்வழியில் நிலைபெற்று விளங்கினார்கள். மனிதர்களும் தேவர்களும் கின்னரர்களும் யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் ஸம்பத்து நிறைந்தவர்களும் நல்லமனமுள்ளவர்களுமாயிருந்தார்கள். ஒருபொழுதும் காற்றால்அலைக்கப்பட்ட மரத்திலிருந்தும் அகாலத்தில் பூவும் விழுவதில்லை. கனிவிழுவதேது? பசுக்கள் பாலகொடுப்பவைகளும் இஷ்டப்படிகறப்பவைகளுமாயிருந்தன. ஒருவனிடமும் கடுஞ்சொல் உண்டாகவில்லை. எல்லாஇஷ்டங்களையும்அளிக்கத்தக்க இந்திரன்முதலியதேவர்களால் லக்ஷ்மீதேவிக்குச்செய்யப்பட்ட இந்தப்பூஜையைப் பிராம்மணஸதஸிலிருந்துகொண்டு படிக்கிறவர்கள் இஷ்டபூர்த்தியுடன் லக்ஷ்மியை அடைகிறார்கள். குருக்களிற சிறந்தவனே! ஸம்பத்திற்கும் ஆபத்திற்கும் பெரியதிருஷ்டாந்தமாக உன்னால்கேட்கப்பட்டதுமுழுதும் இப்பொழுது என்னால் சொல்லப்பட்டது. பரீக்ஷைசெய்து நீ உண்மையைத் தெரிந்துகொள்ளத்தக்கவனாகிறாய். ஜனங்கள் ஞானேந்திரியங்களுக்கும் புலப்படாதநிலையிலிருப்பவரும் தமக்குவிஷயமானஎல்லாவிடத்திலும் வாஸஞ்செய்கிற

வரும் பெரியபாவங்களைவிலக்குகிறவருமான ஸ்ரீஹரியை மிகுதியா கத்தியானஞ்செய்து பூஜித்துப் பாவங்களை விலக்கிக்கொண்டவர்களா வார்கள். எப்பொழுதும் யமநியமங்களுடன் கூடியவர்களும் ஸ்ரீவிஷ்ணுவின் உண்மையான ரூபத்தைபபார்க்கிறவர்களும் தேவர்களின்வழியை அநுஸரித்து மோக்ஷமார்க்கத்திலசெல்லுகிறவர்களுமாயிருப்பவர்கள் உயர்ந்தபதவியை (முக்தியை) அடைகிறார்கள். அரசர்தலைவனே! எப்பொழுதும் இவ்விதம் ஜபத்தையும்ஹோமத்தையும் பெரிதாகக்கொண்டவனும் ஸ்ரீவாஸுதேவரிடம் எப்பொழுதும் பக்தியுள்ளவனும் ஞானத்தையும் தயானத்தையும் மிகமுக்கியமாகக்கொண்டவனும் எப்பொழுதும்தானஞ்செய்வதிலுத்ஸாகமுள்ளவனுமாக நீ பிரஜைகளைப்பரிபாலனஞ்செய். நீ எப்பொழுதும் ஸ்ரீவாஸுதேவரிடம் பற்றுதலுள்ளவனாயிருந்துகொண்டு ஞானத்தையும் தியானத்தையும் முக்கியமாகக்கொண்டவர்களை விசேஷமாகப் பூஜைபண்ணு; எப்பொழுதும் ஆராதித்துவா" என்றுசொன்னார்

---

## இருநூற்றுமுப்பத்தாறாவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(ப்ரம்மஜ்ஞானிகளின் லக்ஷணத்தைப்பற்றித் தேவலருக்கும் ஜைகீஷவ்யருக்கும் ஸம்பாஷணையும் பார்வதிபரமேச்வரர் ஜைகீஷவ்யரைப் பரீக்ஷித்ததும்.)

யுதிஷ்டிரர், "பிரகிருதியைக்காட்டிலும்மேலானதும் நிலையுள்ளதுமான ப்ரம்மத்தின்பதம் எது? அதை எவ்விதஇயற்கையும் எவ்விதநடக்கையும் எவ்விதவித்தையும் எவ்விதபராக்கிரமமுமுள்ளவன் அடைவான்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"மோக்ஷதர்மங்களிலநிலையுள்ளவனும் லகுவானஆகாரமுள்ளவனும் இந்திரியங்களைவென்றவனுமாயிருப்பவன் பிரகிருதியைவிட மேலானதும் என்றும்அழியாததுமான அந்தப்ரம்மத்தின்ஸ்தானத்தை அடைகிறான். ஓ! பாரத! இவ்விஷயத்திலும் ஜைகீஷவ்யருக்கும் அஸிதருக்கும்நடந்த ஸம்பாஷணையான பழைய இவ்விதிஹாஸத்தை உதாகரிக்கிறார்கள். அரசரிற்சிறந்தவனே! மஹாதேவருக்கும் தேவிக்கும்நடுவில்நடந்ததும் பாவங்களைவிலக்குவதும் ஞானத்தைக் கொடுப்பதுமான இவ்விதிஹாஸத்தை உள்ளபடி கேள். அஸிதரென்னும்தேவலர் பெரியபுத்தியுள்ளவரும் தர்மசாஸ்திரங்களை நன்குஅறிந்

தவரும் கோபமில்லாதவரும் ஸந்தோஷமில்லாதவருமான ஜைகீஷவ்யரைக்கண்டு, 'நீர் துதிக்கப்பட்டாலும் ஸந்தோஷப்படுகிறதில்லை; நிந்திக்கப்பட்டாலும் கோபிக்கிறதில்லை. உம்முடைய அறிவுஎன்ன? இது எங்கிருந்துகிடைத்தது? உம்முடைய அந்தஅறிவிற்கு முக்கியமானஇடம் எது?' என்றுகேட்டார். இவ்விதம் அந்தத்தேவலரால் கேட்கப்பட்டவரும் பெரியதவமுள்ளவருமான அந்தஜைகீஷவ்யர் அந்தத்தேவலரைநோக்கி ஸந்தேகமில்லாததும் பொருள்நிறைந்தபதமுள்ளதும் பரிசுத்தமுமான பெரியவசனத்தைச் சொல்லத்தொடங்கினர். 'ஓ! பிராம்மணரே! என்னிடம்கேட்கிறதும் புண்யமான கர்மங்களைச்செய்பவர்களுக்குரியகதியும் பெரியநிலையும் சாந்தியுமான அதை நான் உமக்கு உபதேசிக்கிறேன். தேவலரே! நிந்திப்பவர்களிடத்திலும் கொண்டாடுகிறவர்களிடத்திலும் எப்பொழுதும் ஸமமாயிருந்துகொண்டு எவர்கள் அதை விலக்குகிறார்களோ அவர்களின் நடக்கையையும் புண்ணியத்தையும் சொல்லுகிறேன். அவர்கள் அஹிதமான செய்கையைச்சொன்னாலும் சொல்லுகிறவனைப்பற்றி யாதொன்றும் பேசமாட்டார்கள். நல்லபுத்தியுள்ளவர்கள் அடிப்பவனையும் திருப்பி அடிக்க விரும்பமாட்டார்கள்; கிட்டாதபொருளைப் பற்றிச் சோகப்படமாட்டார்கள்; ஸமயத்தில் கிட்டியதைச்செய்வார்கள்; சென்றவைகளைப்பற்றியும் சோகப்படமாட்டார்கள்; அவைகளை நினைக்கவுமாட்டார்கள். தேவலரே! சக்தியும்உறுதியானவிரதமுமுள்ளவர்கள் பொருள்விருப்பத்துடன்வந்தபெரியோர்களுக்குத் தம்சக்திக்குத்தக்கபடி உபகாரஞ்செய்வார்கள். வித்தையில்முதிர்ச்சிஅடைந்தவர்களும் கோபத்தைஜயித்தவர்களும் இந்திரியங்களைவென்றவர்களும் பிராஜ்ஞர்களில் பெரியவர்களுமாயிருப்பவர்கள் மனத்தாலும் செய்கையாலும் வாக்காலும் ஒருவனுக்கும் விரோதத்தைச் செய்யமாட்டார்கள்; பொறுமையற்றவர்களாயிருந்துகொண்டு ஒருவரைஒருவர் ஒருபொழுதும் துன்பஞ் செய்யமாட்டார்கள். தீரர்கள் பிறர்ஸம்பத்துக்களைக்கண்டு ஒருபொழுதும் தாபப்படமாட்டார்கள்; பிறனைப் பற்றியநிந்தையையும் ஸ்துதியையும் சிறிதும் பேசமாட்டார்கள்; புகழாலும் இகழாலும் ஒருபொழுதும் வேறுபடமாட்டார்கள். எவர்கள் எல்லாவிஷயத்திலும் அடங்கியவர்களும் எல்லாப்பிராணிகளின் ஹிதத்திலும் பிரியமுள்ளவர்களுமாயிருக்கிறார்களோ அவர்கள் ஒருவனைப்பற்றியும் கோபிக்கவும் ஸந்தோஷிக்கவும் விரோதஞ்செய்யவு மாட்டார்கள். ஹ்ருதயக்ரந்தியென்னும் அஜ்ஞானத்தைவிலக்கிவிட்டு ஸுகமாக உலாவிக்கொண்டிருப்பார்கள். மற்றப்பிராணிகளுக்கும்

பந்துக்களாயிருக்கிற இவர்களுக்கு வேறுபந்துக்களில்லை. எவர்கள் ஒருவனுக்கும் விரோதிகளல்லரோ அவர்களுக்கு விரோதிகளுமில்லை. இவ்விதம்நடக்கிறமனிதர்கள் எப்பொழுதும் ஸுகமாக ஜீவிப்பார்கள். தர்மத்தை அனுஸரிக்கிறவர்கள் தர்மமறிந்தவர்களும் பிராம்மணர்களில் மிக உத்தமர்களுமானவர்கள். இந்தவழியிலிருந்து நழுவினவர்கள் ஸந்தோஷத்தையும் துக்கத்தையும் அடைவார்கள். அவ்வழியை அடைந்தநான் எவனைப்பற்றி எப்படி அஸூயைப்படுவேன்? நிந்திக்கப்பட்டாலும் கொண்டாடப்பட்டாலும் என்னகாரணத்திற்காக ஸந்தோஷப்படுவேன்? மனிதர்கள் எதைஎதை விரும்புகிறார்களோ விரும்புங்காரணத்தால அதை அதை அடைகிறார்கள். நிந்தையாலும் ஸ்துதியாலும் குறைவும் வளர்ச்சியும் எனக்கு உண்டாவதில்லை. உண்மையை யறிந்தவன் அம்ருதத்தில்போல அவமானத்தில் மிக்கதிருப்தி அடைவான். அறிவுள்ளவன் விஷத்தில்போல எப்பொழுதும் ஸம்மானத்தில் நடுக்கமடைவான். அவமதிக்கப்படுகிறவன் எல்லாப்பாவங்களிலிருந்தும்விடுபட்டு இவ்வுலகம்மேலுலகமிரண்டிலும் ஸுகமாய்உறங்குவான். எவன் அவமதிக்கிறவனோ அவன் (அதை) அறிவான். பரகதியைவிரும்புகிற அறிவுள்ள சிலஜனங்கள் இந்தவிரதத்தை அடைந்து ஸுகமாகச் செழிப்பார்கள். எல்லாவிஷயங்களிலுமிருந்தும் எல்லாஸங்கல்பங்களையும் அடக்கி இந்திரியங்களை வென்றவன் பிரகிருதியைவிடமேலானதும் அழிபாததுமானபிரம்மபதத்தைப் பெறுவான். பரகதியை அடைந்த இவனுடையபதத்தைத் தேவர்களும் கந்தர்வர்களும் பிசாசர்களும் ராக்ஷஸர்களும் அடையத்தக்கவர்களல்லர்'' என்று சொன்னார். அந்தஜைகீஷவ்யமுனிவரின் இந்தவசனத்தைக்கேட்ட தேவலர் எல்லாத்வந்துவங்களிலிருந்தும் விடுபட்டு அவருக்கு அடிமையானசிஷ்யரானார். அரசனே! எல்லா அறிவையுமடைந்தநீ அறிவுள்ளஜைகீஷவ்யமுனிவருடைய முன்னடந்தவேறுசரித்திரத்தையும் கவனமாகக்கேள்.

எல்லாஉலகங்களுக்கும்மூலவரும் எல்லாஉலகங்களாலும் பூஜிக்கப்படுகிறவரும் ஐந்துபூதங்கள், சூரியன், சந்திரன், ஆத்மா என எட்டு மூர்த்திகளுள்ளவரும் உலகங்களைச்சரீரமாகக் கொண்டவரும் எட்டுஐஸ்வர்யங்களாலும் அலங்கரிக்கப்பட்டவரும்விரும்பினவற்றையெல்லாம் அடைவதால் விளங்குகிறவருமாக எவரைக் கூறுகிறார்களோ, எவரை அடைந்தவர்களுக்குத் துன்பமும் சோகமும் பயமும் இல்லையோ ஸ்தாவரஜங்கமமான இவ்வுலகம்இயற்கையாகஎவருடைய சக்தியோ ஸர்வரூபியானஅந்தப்பரமேஸ்வரரானவர் மேருமலையின்

வடகிழக்கில் எல்லாரத்நினங்களாலும்அலங்கரிக்கப்பட்டதும் சிந்தைக்குஎட்டாததும் பரிசுத்தமும் எல்லாருதுக்களிலுமுள்ள புஷ்பங்களுடன்கூடியதும்மரங்களால்அலங்கரிக்கப்பட்டதும் எப்பொழுதும் திவ்யமானகாற்றால்வீசப்பட்டதுமான ஓரிடத்தில்சென்று பலபூதக்கூட்டங்களுடன்கூடியவரும் எல்லாத்தேவர்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவருமாகி விளையாடிக்கொண்டிருந்தார். அவ்விடத்தில் வித்தியாதரர் கந்தர்வர் அப்ஸரஸுகள் இவர்களின்கூட்டங்களும், திக்பாலர்களும் ஸமுத்திரங்களும் ஆறுகளும் மலைகளும் குளங்களும் ரிஷிகளும் வாலகில்யர்களும் யாகங்களும் ஸ்தோபங்களும் ஸ்ருஷ்டிகர்த்தர்களும் தேவரானபரமேஸ்வரரை உபாஸித்துக்கொண்டிருந்தார்கள். அவ்விடத்தில் தேவர்களில்பெரியவரும் விருஷபக்கொடியுள்ளவரும் சந்திரன், ஸூர்யன், அக்னி இவர்களைக்கண்ணாகக்கொண்டவருமான ஸ்ரீருத்திரரானவர் உமாதேவியுடன்இருந்தார். இவ்விதம் அவ்விடத்திலிருப்பவரும் மேலானாஸ்வாருமான ருத்ரரைநோக்கிப் பூமிரூபியும் காந்தியுள்ளவளுமான உமாதேவியானவள் வணக்கத்துடன் வினவலானாள். 'ஓ! பகவானே! பொருள் எது? பொருளின் சக்தி எது? நீர் இதை எனக்குச் சொலலவேண்டும். பிரார்த்திக்கிறேன்' என்றுகேட்டாள். அந்தஉமாதேவி இவ்விதம்கேட்க, பூஜ்யரான அந்தப்பரமேஸ்வரர் சொல்லத்தொடங்கினார். 'நான் பொருள்; பொருளின்சக்தி நீ. நான் புஜிப்பவன். புஜிக்கத்தக்கவஸ்து நீ. பெரிய பாக்கியம்பெறறவளே! நீபிரகிருதி. நான் பரன். நான் விஷ்ணு. நான் பிரம்மா. நான் யஜ்ஞன். பெண்ணே! ஆகையால், நம்மிருவருக்கும் உண்மையில் வேற்றுமையில்லை. ஆகிலும், உனக்கு வேற்றுமையை அறிகிறேன். நீ என்னிடம் எதைக் கேட்கிறாய்?' என்றுகேட்டார். பிறகு, இவ்விதம்சொல்லக்கேட்டஉமாதேவியானவள், 'இவ்விரண்டனுள் உயர்ந்ததைச் சொல்லவேண்டும். ஓ! மஹாதேவரே! உமக்கு நமஸ்காரம். உயர்ந்ததைச் சொல்லவேண்டும்' என்றுகேட்டாள். அவர்களுக்குநடுவிலிருப்பவரும் அறிவுள்ளவரும் முனிவறிற்பெரியவரும் வஸுஉருவமுள்ளவருமான ஜைகீஷவ்யரானவர் சிரித்துக்கொண்டு, 'பொருள்தான் உயர்ந்தது. அதைவிடவேறு சிறந்ததில்லை. வேறானசக்தியானது அந்தப்பொருளில் லயப்பட்டது. உருண்டையான பூமியும் அதிலும் பலவிசேஷத்துடன் விரிவடைந்திருக்கிறது' என்று கர்ஜித்துக்கொண்டு சொன்னார். அவ்வசனத்தைக்கேட்டு உமாதேவியானவள், 'யார் இவன்? இப்பொழுது என்னுடைய வசனத்தைத் தடுத்துப்பேசினான்' என்று கோபத்துடன் சங்கர

ரிடம் கேட்டாள். அதைக்கேட்டவுடன் புத்தியுள்ளவரும் தேவக்கூட்டத்தினுள் அறிவுள்ளவரும் யோகத்தாலுண்டானஐஸ்வர்யங்களுடன்கூடினவரும் முனிவரிற்பெரியவருமானஜைகீஷவ்யர் அவ்விடத்திலிருந்துவெளிப்பட்டுத் தம்ஆஸ்ரமத்திற்குச் சென்றார். பிறகு, எல்லாப்பாவங்களையும் அபகரிப்பவரும் பூஜ்யருமானசங்கரரானவர் உமாதேவியைநோக்கி நகைத்து, 'ஜைகீஷவ்யனென்னும்பெரியமுனிவன் மிகவும் சாந்தமானபுத்தியுள்ளவன். ஜைகீஷவ்யனென்று பிரஸித்திபெற்றபெரியமுனியானவன் என்னுடையபக்தனும் தோழனும் சிஷ்யனுமாகிறான். அழகுள்ளவளே! அவன் சொல்லிவிட்டு வெளியிற்சென்றான்' என்று சொன்னார். அதைக்கேட்டபின் மிக்க கோபங்கொண்ட அந்த உமாதேவியானவள், 'அந்தமுனி செய்தது நியாயமன்று. ஓ! தேவரே! நான் உம்மால் அவமதிக்கப்பட்டேன். முனியாலும் அவ்விதம்செய்யப்பட்டேன். தேவர்களுக்குத்தலைவரே! இடையில்வந்த அம்முனிவசனம் கேட்கப்படவில்லை. ஆகையால், அதனை அறிவிக்கவேண்டும்' என்றுகேட்டாள். பினாகத்தைத்தரிக்கும்பகவான் ஸ்ரீமஹாதேவர் அதைக்கேட்டு, 'ஆசையற்றவனும் யோகியுமான அந்தமுனிவன் என்னை அடைந்து எப்பொழுதும்த்வந்த்வங்களிலிருந்துவிலகியவனும் அறிவுள்ளவனும் ஒரேவிதமானஇயற்கையுள்ளவனுமாயிருக்கிறான். ஓ! தேவியே! ஆசையால், அவனைப் பொறுக்கவேண்டும். அவன் உன்னாலும் ரக்ஷிக்கத்தக்கவன்' என்று சொன்னார். இவ்விதம்சொல்லக்கேட்ட அந்தஉமாதேவியானவள், 'அந்தகனை அழித்தவரே! மஹாத்மாவான அந்தமுனியின் ஆசையற்ற தன்மையை நான்பார்க்கவிரும்புகிறேன்' என்றுசொன்னாள். உலகங்களுக்குப்பதியும் தேவக்கூட்டங்களாலும் கந்தர்வக்கூட்டங்களாலும் துதிக்கப்படுகிறவரும்தேவருமானபரமேஸ்வரர்அவளைநோக்கி, 'அப்படியேஆகட்டும்' என்றுசொல்லி விருஷபத்திலேறிக்கொண்டு பரிசுத்தமானபுத்தியுள்ளவரும் முனிவரிற்பெரியவருமான அந்தஜைகீஷவ்யர்இருக்கிறஇடத்திற்கு வேகமாகவந்தார். அப்பொழுது பெரிய புகழுள்ள அந்தமுனிவர் சரீரத்தை நமஸ்கரிக்கக்கொள்ளவேண்டி இங்கும்அங்கும் கந்தைகளை தேடிக்கொண்டு ஸஞ்சரிக்கையில் ஸ்ரீமஹாதேவரைக்கண்டு எதிர்சென்று தக்கபடிபூஜித்தபின் திரும்பவும் முன்போலக் கந்தையை ஊசியாலும் நூலாலும் தைத்துக்கொண்டிருந்தார். பகவானனசம்புவும் அவரைநோக்கி, 'முனியே! உனக்கு நான் எதைக்கொடுக்கவேண்டும்? ஜைகீஷவ்ய! நீ விரும்புகிற எல்லாவற்றையும் என்னிடமிருந்து பெற்றுக்கொள்' என்றுசொன்

ஞர். முனிசளிற்சிறந்தஜைகீஷவ்யரும் தேவர்களின் தேவரானசம்பு வைப்பாராமலே, 'ஓ! வ்ருஷபக்கொடியுள்ளவரே! உம்மிடமிருந்து அடையப்படாததை நான் காணேன். நான் கிருதார்த்தனும் பரிபூர் ணனுமாயிருக்கிறேன். உமக்குக் காரியமிருந்தால போகலாம்' என்று சொன்ஞர். சங்கரரோ சிரித்துக்கொண்டு திரும்பவும் அம்முனி வரைநோக்கி, 'வரத்தைப பெறறுக்கொள். அவசியம் என்னிடமிரு ந்து வரத்தைப் பெற்றுக்கொள்ளவேண்டும். மிகஉத்தமமானவரத் தைக் கேள்' என்றுசொன்ஞா. ஜைகீஷவயரும் அந்தச்சங்கரரை நோக்கி, 'ஓ! மஹாதேவரே! ஊசியிலுள்ள நூலைத்தொடர்ந்துசெல் லுகிறவருனன்வசனத்தையும் நீர்கேட்கவேண்டும்' என்றுசொன் ஞர். பிறகு, சங்கரபகவானும் கௌரீதேவியைப்பார்த்துச் சிரித்துக் கொண்டு ஸந்தோஷமுள்ளவரும் எல்லாத்தேவர்களாலும்நமஸ்கரிக் கப்பட்டவருமாகித தம்மிடம்போய்ச்சேர்ந்தார். அரசனே! நீ வின வியகாரணததால இக்கதை உனக்குச் சொலலப்பட்டது. அந்த யோகிகள் துவந்துவங்களைவிட்டு விலகியவர்களும் நித்தியர்களும் எல்லாவிததததாலும் தாமே சக்திபெறறவர்களுமாயிருப்பார்கள்" என்றுசொன்ஞர்.

---

## இருநூற்றுமுப்பத்தேழாவது அத்தியாயம்.

### மோக்ஷதாமம். (தொடர்ச்சி.)



**(நற்குணங்கள் உலகை வசப்படுத்துமென்றும் விஷயத்தில் நார தர்ன்பெருமையைப்பற்றி உக்ரஸேனனுக்கும் வாஸுதேவ நுக்கும்நடந்த ஸம்பாஷணையும், நாரதர் வாஸுதேவ நுக்கு உபாயங்கூறியதும்.)**

யுதிஷ்டிரர், "எல்லாஉலகததிற்கும்பிரியனும் எல்லாப்பிராணிக ளாலும் கொண்டாடப்படுகிறவனும் எல்லாக்குணங்களுமுள்ளவனு மாகப் பூமியில் 'எந்தமனிதனிருக்கிறுன்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லததொடஙகிஞர்.

"பரதர்களிறசிறந்தவனே! இவ்விஷயத்தில் கேட்கும்உனக்கு நாரதரைப்பறறி உக்ரஸேனனுக்கும் ஸ்ரீகேசவருக்கும்நடந்த ஸம்பா ஷணையைச் சொல்லுகிறேன். உக்ரஸேனன், 'உலகமானது எவரைப் பற்றிச் சொலலுவதில பிரியப்படுகிறதோ அந்தநாரதர் நற்குணம் நிறைந்தவரென்றுநினைக்கிறேன். கேட்கும்எனக்கு அதைச் சொலல வேண்டும்' என்றுகேட்டான். வாஸுதேவர் சொல்லததொடங்கி

ளுர். 'குருர்களுக்கு அதிபதியானஅரசரே! நான் அறிந்தமட்டில் சிறந்தநாரதரின்குணங்களைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன். என்னிடமிருந்து கேளும். நன்னடக்கைஇருக்கிறதென்ற காரணத்தால் அந்தநாரதருக்குத் தேகத்தைவீழ்த்ததக்க அகங்காரமில்லை. அவர் உறுதியானகல்வியும் நன்னடக்கையுமுள்ளவர்; ஆகையால், எங்கும் பூஜிக்கப்படுகிறார். உற்சாகமில்லாமையும் கோபமும் சபலத்தன்மையும் பயமும் நாரதரிடமில்லை. அவர் தாமஸஸ்வபாவமில்லாதவரும் சூரருமானவர். ஆகையால, அவர் எங்கும் நிச்சயம் பூஜிக்கப்படுகிறார். அவர் உபாஸிக்கத்தக்கவர். காமத்தாலோ அல்லது லோபத்தாலோ இவர்வாக்கில வித்தியாஸமுண்டாகிறதில்லை. ஆகையால், எங்கும் பூஜிக்கப்படுகிறார். ஆகமஸித்தையின்உண்மையை அறிந்தவரும் பொறுமையுள்ளவரும்சக்தியுள்ளவரும்இந்திரியங்களைவென்றவரும் நேராயிருப்பவரும் உண்மையைப்பேசுகிறவருமாயிருக்கிறார். ஆகையால், எங்கும் பூஜிக்கப்படுகிறார். தேஜஸாலும்கீர்த்தியாலும் புத்தியாலும் ஞானத்தாலும் வணக்கத்தாலும் பிறவியாலும் தவத்தாலும் அவர் பெரியவர். ஆகையால, எங்கும் பூஜிக்கப்படுகிறார். நல்லஸ்வபாவமுள்ளவரும் ஸுகமாகப்படுபவரும் ஸுகமாகப்புஜிப்பவரும் நல்லஅன்புள்ளவரும் பரிசுத்தரும்நல்லவார்த்தையுள்ளவரும் பொறாமை இல்லாதவருமாயிருக்கிறார். ஆகையால், எங்கும் பூஜிக்கப்படுகிறார்; மிகவும் நன்மையைச் செய்கிறார். அவரிடத்தில பாவமில்லை. அவர் பிறர்துன்பங்களில பிரியப்படுகிறதில்லை. ஆகையால, எங்கும் பூஜிக்கப்படுகிறார். வேதங்களில ஓதப்படும் உபாக்யானங்களிலுள்ள பொருள்களைக் கானஞ்செய்கிறார். பொறுமையுள்ளவரும் அவமதிப்பில்லாதவருமாயிருக்கிறார். ஆகையால, எங்கும் பூஜிக்கப்படுகிறார். ஸமநிலையிலிருப்பதால எவ்விதத்திலும் நண்பனுமில்லை; பகைவனுமில்லை. மனத்திற்கு அனுகூலமாகப பேசுகிறார். ஆகையால,எங்கும் பூஜிக்கப்படுகிறார். பலகலவிகளுள்ளவரும் ஆச்சரியமானகதைகளுள்ளவரும் பண்டிதரும் சோம்பலில்லாதவரும் கள்ளத்தனமில்லாதவரும் தைன்யமில்லாதவரும் கோபமில்லாதவரும் லோபமில்லாதவருமாயிருக்கிறார். ஆகையால், எங்கும் பூஜிக்கப்படுகிறார். தனத்திலாவது வேறுபொருளிலாவது காமத்திலாவது அவருக்கு இதுவரையில் கலசமுண்டானதில்லை. தோஷங்கள் அவரிடம் நன்கு அறுக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால, எங்கும்பூஜிக்கப்படுகிறார். உறுதியான பக்தியுள்ளவரும் நிந்திக்கத்தகாத புத்தியுள்ளவரும் கல்வியுள்ளவரும் கொடுமையற்றவரும் அவிவேகமென்னும் தோஷமில்லாதவரு

மாயிருக்கிறார். ஆகையால், எங்கும் பூஜிக்கப்படுகிறார். பற்றத்தக்க எல்லாவற்றிலும் பற்றுதலற்றவரும் பற்றுதலுள்ள புத்தியுள்ளவர் போலக்காணத்தக்கவரும் ஸந்தேகமில்லாதவரும் நன்கு பேசுகிற வருமாயிருக்கிறார். ஆகையால், எங்கும் பூஜிக்கப்படுகிறார். அவரு டைய ஸமாதியானது பயனை வேண்டியன்று. எந்தச்சமயத்திலும் தம்மைக்கொண்டாடுகிறதில்லை. பொறுமையற்றவரும் இன்சொல் சொல்லுகிறவருமாயிருக்கிறார். ஆகையால், எங்கும் பூஜிக்கப்படுகிறார். அவருக்கு அகங்காரத்தில் பற்றுதலில்லை. புத்தியானது நன்னடக் கையில் உறுதிபெற்றிருக்கிறது. வேதத்தின் அர்த்தங்களைப் பகுத் தறிந்தவரும் யாகத்தை அறிந்தவரும் யோகத்தை அறிந்தவரும் கவி யும் பக்தியுள்ளவரும் எப்பொழுதும் அறிவுள்ளவருமாயிருக்கிறார். ஆகையால், எங்கும் பூஜிக்கப்படுகிறார். மூன்று குணங்களுள்ளவரும் குணங்களை அனுபவிப்பவருமைஐச்வர்யஜனரூபியுமான பரமாத்மாவை உள்ளபடி அவர் அறிகிறார். ஆகையால், எங்கும் பூஜிக்கப்படுகிறார். 1 உலகத்தின் பலவிதமான மனத்தையும் அவர் வெறுத்துக்கொள்ளா மல் பார்க்கிறார்; நட்புச்செய்யும் வித்தையில் திறமையுள்ளவர். ஆகை யால், எங்கும் பூஜிக்கப்படுகிறார். ஒருவிதமான சாஸ்திரத்திலும் குற் றம்பேசுகிறதில்லை. தம் நீதிப்படி ஜீவிக்கிறார். பழுதில்லாதகாலமுள் ளவரும் மனத்தை அடக்கினவருமாயிருக்கிறார். ஆகையால், எங்கும் பூஜிக்கப்படுகிறார். ஸிரமப்பட்டவரும் ஞானப்பயிற்சியுள்ளவரும் ஸமா தியிலபோதுமென்றெண்ணுதவரும் விடாமுயற்சியுள்ளவரும் அஜாக் கிரதையில்லாதவருமாயிருக்கிறார்; ஆகையால், எங்கும் பூஜிக்கப்படுகி றார். பிறரால் நல்லகார்யத்தில் தூண்டப்பட்டால் செய்வதில் கூச்ச மில்லாதவரும் அதில்ஸாரத்தையுள்ளவரும் பிறர் ரஹஸ்யங்களை வெளி யிடாதவருமாயிருக்கிறார். ஆகையால், எங்கும் பூஜிக்கப்படுகிறார். அர் த்தலாபங்களில ஸந்தோஷிப்பதில்லை. நஷ்டத்திலும் துக்கப்படுகிற தில்லை. உறுதியுள்ளதும் பற்றுதலில்லாததுமான புத்தியுள்ளவரா யிருக்கிறார். ஆகையால், எங்கும் பூஜிக்கப்படுகிறார். எல்லாக்குணங்க ளும் நிறைந்தவரும் ஸமர்த்தரும் பரிசுத்தரும் துன்பமில்லாதவரும் காலத்தைஅறிந்தவரும் பிரியத்தை அறிந்தவருமான அந்த நாரதரை யார் பிரியமாகக்கொள்ளமாட்டான்?' என்று சொன்னார்.

இவ்விதம் சொல்லக்கேட்ட உக்ரஸேனன் அந்தநாரதரை மிக வும் கொண்டாடிக்கொண்டு வீட்டிலிருந்து (வெளியில) சென்றான். வாஸுதேவர் அவ்விதமே இரத்தினங்களால அலங்கரிக்கப்பட்ட

1 கூறியதுகூறலால் ஒருஸ்லோகம் விடப்பட்டது.

கட்டிலில் ஏகாந்தமாயிருந்தார். ஒரு ஸமயம் பூஜ்யரான நாரதமகாமுனிவர் அங்குவந்தார். ஸ்ரீஜனார்த்தனர் அவரை முறைப்படி பூஜித்துப் பேசாமலிருந்தார். அந்த ஸ்ரீவாஸுதேவர் வருத்தமுள்ளவர்போலிருப்பதைக்கண்டு, 'ஓ! தேவரே! ஜனார்த்தனரே! இது என்ன? இதுவரையில் இல்லாதமனவருத்தம் உமக்கு இருக்கிறது. கோவிந்தரே! அதனை எனக்கு நீர் விவரமாகச் சொல்லவேண்டும்' என்ற வசனத்தைச் சொன்னார். ஸ்ரீவாஸுதேவர் சொல்லத்தொடங்கினார். 'ஓ! நாரதரே! இப்பொழுது என்னுடைய முக்கியமான ஒரு விஷயத்தை நண்பனல்லாதவன் தெரிந்துகொள்ளத்தக்கவனல்லன். பண்டிதனல்லாத நண்பனும் நட்பில்லாத பண்டிதனும் தெரிந்துகொள்ளத்தக்கவரல்லர். நண்பரும் வித்வானும் மனத்தைஜயித்தவருமான நீரே கேட்கத்தக்கவர். மனத்திலுள்ள துக்கத்தையும் நீர்கேட்கத்தக்கவர். ஐஸ்வர்யமென்றசொல்லுடன் நான் ஞாதிகளுக்கு அடிமை செய்துகொண்டிருக்கிறேன். ஞாதிகளும் ஸம்பந்திகளும் பந்துக்களும் எப்பொழுதும் கோபங்கொண்டு (என்னைப்) பகைக்கிறார்கள். ஆகிலும், தேவலோகத்திலுள்ளபோகங்கள் அவர்களுக்கு வெவ்வேறாக என்னால் அளிக்கப்பட்டிருக்கின்றன. அவ்விதமிருந்தும் என்னையும் ஒருவர் மற்றொருவரையும் பகைத்துக்கொண்டிருக்கிறார்கள்' என்றுசொன்னார். நாரதர், 'இரும்பல்லாதஆயுதத்தால் தடவித்துடைத்து இவர்களின்நாவை எடுத்துவிடும். அதன்பிறகு, பேசமாட்டார்கள்' என்றுசொன்னார். பகவான், 'சிறந்தமுனிவர்களிலுத்தமரே! இவர்களின்நாவை அறுக்கத்தக்க இரும்பல்லாத ஆயுதத்தை எப்படிஅடைவேன்? அதனை எனக்கு உள்ளபடி சொல்லவேண்டும்' என்று கேட்டார். நாரதர், 'பசு, பொன், ஆடைகள், ரத்னமுதலியதனத்தை விசேஷமாக இவர்களின்வாயில்போடும். இது இரும்பல்லாத ஆயுதமாகும். [1]ஸுஹ்ருத்துக்கள், ஸம்பந்திகள், [2]மித்திரர்கள், குருக்கள், ஸ்வஜனங்கள் இவர்களுக்கு இது ஆயுதமென்றுசொல்லப்படுகிறது. அவ்வாயுதத்தால் திரும்பவும்திரும்பவும்அறுக்கவேண்டும். இவர்களுக்கு உம்முடையபொருள்களை அளிப்பதும்நன்மொழிகளும் சிறந்தனவாகும். உம்மைஸமர்த்தரென்றுதெரிந்துகொண்டு அந்தமனிதர்களும் மிகமெச்சுவார்கள்' என்றுசொன்னார். பிறகு, நாரதமுனிவரின்வசனத்தாலேவப்பட்டவரும்பெரியதேஜஸுள்ளவருமான பகவான் சிரித்து, முனிவரிற்பெரியவரானநாரதரை மிகவும் பூஜித்து அவ்விதமேசெய்தார். முனிவர்களில்மிகப்பூஜ்யரும்பிரம்மரிஷியுமானநாரதரானவர் இவ்

---

1, 2, 385-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

விதமானபிரபாவமுள்ளவர். அரசர்களிற்சிறந்தவனே! நீ என்னிடம் கேட்டது சொல்லப்பட்டது. எல்லாக்கர்மங்களுக்கும்நன்மையான விஷயத்தில்முயற்சியுள்ளவர்களும்உண்மையானகர்மத்தைமிகப்பெரிதாகக்கொண்டவர்களும் ஞானத்திலும்விசேஷஞானத்திலும்ஸமர்த்தர்களுமாயிருப்பவர்கள் உலகத்திற்குப் பிரியமானநிலையை அடைவார்கள்" என்றுசொன்னார்.

---

## இருநூற்றுமுப்பத்தேட்டாவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(வ்யாஸர்உலகத்தின்உத்பத்திமுதலியவற்றைச் சுகருக்குச்சொல்லியது.)

யுதிஷ்டிரர், "ஓ! கௌரவரே! எல்லாப்பிராணிகளின்உற்பத்திக்கும் லயத்துக்கும் காரணமாயிருப்பதைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். தியானம் கர்மம் காலம் ஒவ்வொருயுகத்திலுமுள்ள ஆயுள் உலகத்தின்தத்வம் பிராணிகளின்ஸம்பத்து ஆபத்து ஆகிய இவைகளை முழுமையும் தெரிந்துகொள்ளவிரும்புகிறேன். இந்த உற்பத்தியும் முடிவும் எதிலிருந்து நடைபெறுகின்றன? [1]ஸாதுக்களிற்சிறந்தவரே! இப்பொழுது எங்கள்விஷயத்தில் உமக்கு அனுக்ரகபுத்திஇருக்குமானால் இதை உம்மிடத்தில் கேட்கிறேன். இதை நீர் எனக்கு உபதேசிக்கவேண்டும். முதலில் சொல்லப்பட்டதும் உத்தமமுமான ப்ருகுவின்வசனத்தையும்பிறகு பிரம்மரிஷியானபரத்வாஜரின்வசனத்தையும் கேட்டு என்னுடையபுத்தியானது சிறந்ததும் உயர்ந்ததர்மத்தைப்பற்றியதும் உத்தமமான நிலையிலிருப்பதுமாயிற்று. ஆகையால், திரும்பவும் கேட்கிறேன். அதனை நீர் சொல்லவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"பூஜ்யரானவ்யாஸர் தம்புத்ரர்கேட்டபொழுதுசொன்ன அந்தப் பழையஇதிஹாஸத்தை இவ்விஷயத்தில் நான் உனக்குச் சொல்லுகிறேன். வ்யாஸரின்புத்ரரானசுகரானவர் அங்கங்களுடனும் உபநிஷத்துக்களுடனும் எல்லாவேதங்களையும்அத்யயனஞ்செய்தபின் தர்மங்களின் ஸூக்ஷ்மத்தைத்தெரிந்து மோக்ஷநிஷ்டைக்குரிய கர்மத்தைத்தேடிக்கொண்டு அறம்பொருள்களைப்பற்றிய ஸந்தேகங்களைஅறுத்தவரான கிருஷ்ணத்வைபாயனரென்னும் வ்யாஸரிடம் சென்று ஸந்தேகமுள்ள இவ்விஷயத்தைக் கேட்கத்தொடங்கினர்.

---

1 அதிகபாடமான ஒருஸ்லோகம் விடப்பட்டது.

'காலத்தின் அறிவில் நிச்சயமுள்ளவரும் [1]பூதக்கூட்டங்களைப் படைத்தவருமானாருவரரையும் பிராம்மணன்செய்யத்தக்கதையுங்குறித்து நீர்சொல்லவேண்டும்' என்றுகேட்டார். சென்றதையும்வருவதையும் அறிந்தவரும் யாவற்றையும் அறிந்தவரும் எல்லாத்தர்மங்களையும் அறிந்தவரும் பிதாவுமான வ்யாஸர்,கேட்பவரும் புத்ரருமான அந்தச் சுகருக்குச் சொல்லத்தொடங்கினார். 'அருமைப்புதல்வனே! நீ கேட்கிறதை உள்ளபடி சொல்லுகிறேன். கவனமாகக் கேள். முதலில் காரியமென்றும் பிறகு காரணமென்றும் அல்லது முதலில் காரணமென்றும் பிறகுகாரியமென்றும் இரண்டுவிதமாக அறியப்படுவதும் மறைக்கப்பட்டதுமான இவ்வுலகமானது விசாரித்தால் ஸத்யமும் மிகவும்மங்களமுமான பிரம்மமென்று அறிவிக்கப்படுகிறது. அதனை அறிவுள்ளவர்கள் அறிகிறார்கள். ஆதிகாலத்தில் தேஜோரூபியும் உற்பத்தியில்லாததும் உலகங்களுக்குக்காரணமும் ஆச்சரியமுமான பிரம்மமே இருந்தது. ஆதியிலிருக்கும் காரணத்தாலேயே அதை அறிந்தவர்கள் ப்ரதானமென்றுகூறுகிறார்கள். மூன்றுகுணங்களுள்ளதும் ஸ்ரீவிஷ்ணுவினுடையதுமான அந்தமஹாமாயையை ப்ரக்ருதி என்றறிவிக்கிறார்கள். இவ்விதமான அந்தப்ரம்மமானது ஆதியும் முடிவுமில்லாததும் காணப்படாததும் விகாரமில்லாததும் ஸ்திரமானதும் ஊகிக்கத்தகாததும் அறியத்தகாததும் காரியங்களுக்குக்காரணமுமாக முதலில் இருந்தது. அதுதான் மூன்றுகுணங்களையும் உருவமாகக்கொண்டதும் மூன்றுகாலங்களிலும் ஸூக்ஷ்மமுமான பிரதானமென்று சொல்லப்படுகிறது. நன்குசேர்ந்தமாயையின் குணத்துடன்கூடியதும் தன்னிலையிலிருப்பதும்வ்யாபகமுமான அந்தப்ரம்மமானது தன்னிச்சையால் மாறுதலடைந்தது. மூன்றுசக்திகளை உருவமாகக்கொண்டதும் காரணரூபியும் எப்பொழுதும் ஞானரூபியான பரமாத்மாவென்னும் அதிஷ்டானத்துடன்கூடியதும் ஸ்வாதந்த்ரியமில்லாததும் ஸ்வபாவமென்னும் பெயரை அடைந்ததும் மோகஉருவத்தைத்தரிப்பதுமான அந்தப்ரம்மத்தின்பிரகிருதியானது பலவிதமான ஜீவனுடையபோகத்திற்கும்வேண்டி வெளிவந்தது.மனமானது ஸந்நிதிமாத்திரத்தால் மனத்தைதநுகரும்இந்திரியத்தைச் சலிக்கச்செய்வதற்குக் காரணமாயிருப்பதுபோலப் பரத்திலும் பரரான பரமாத்மாவானவர் யாவற்றுக்கும் காரணரென்று கூறப்படுகிறார். அவர் அந்தப்பிரதானத்தைஉண்டுபண்ணி அதிற்புகுந்து அத

1 அதிகபாடமான இரண்டரை ஸ்லோகங்கள் பொருந்தாமையால் விடப்

னுள்ளிருந்துகொண்டு அதைச் சலிக்கச்செய்தார். பிரதானமென்ற தத்வத்திலிருந்து ஸாத்விகராஜஸதாமஸமென்னும் மூன்றுவிதமான மஹத்தானது உண்டாயிற்று. அது பெரிதாயிருப்பதால் மஹத் என்றுசொல்லப்படுகிறது. உண்டானமகத்தத்வமானது காலஉரு வத்தால் மறைக்கப்பட்டு ப்ரதானதத்வத்தை நன்றாய்மறைத்துக் கொண்டது. அக்காலமானது பரமாத்மாவின் அம்சமாகும். அது புருஷனென்றும் அளவிடத்தகாத உருவமுள்ளதென்றும் சொல்லப் படுகிறது.பிரதானதகிலிருந்துஉண்டான இந்தமஹத்தான் மூன்று குணங்களுள்ளதென்று வேதம் உபதேசிக்கிறது. அந்தமஹத்தத் வத்திலிருந்து ஸாத்விகராஜஸதாமஸமென்னும் மூன்றுஉருவமுள்ள தும் மூன்றுவேற்றுமையுள்ளதுமான இந்த அகங்காரமானது உண் டாயிறறு. தாமஸமான இந்த அகங்காரமானது பூதாதியென்று பெயருள்ளதாகிறது. பூதங்களுக்கு ஆதியாயிருப்பதால் தாமஸ அகங்காரமானது பூதாதியென்று சொல்லப்படுகிறது. பிறகு, அந்தப் பூதாதியானது வேற்றுமையை அடைந்து சப்ததன்மாத்திரத்தை உண்டுபண்ணிற்று. அந்தத்தன்மாத்திரையானது சப்தத்தைஉருவ மாகக்கொண்ட ஆகாயத்தை உண்டுபண்ணிறறு. சப்தலக்ஷணமான ஆகாசமானது சப்ததன்மாத்திரத்தை மறைத்தது. அந்த ஆகாயத் தால நன்றாகச் சலிக்கச்செய்யப்படும் சப்தமானது ஸ்பர்சதன்மாத் திரத்தை உண்டுபண்ணிறறு. ஸூக்ஷ்மசப்தமுள்ள அவ்வாகாசமா னது ஸ்பர்சதன்மாத்திரையை மறைததது. அவவாகாசத்தால சலிக் கும்படி செய்யப்பட்ட ஸ்பர்சமானது வாயுவை உண்டுபண்ணிறறு. ஸ்பர்சரூபமுள்ளவாயுவானது அப்பொழுது ரூபதன்மாத்திரத்தை உண்டுபண்ணி அதை மறைத்தது. அந்த ஸ்பர்சத்தால் நன்கு சலிக் கச்செய்யப்பட்டரூபமானது அக்நியை உண்டுபண்ணிறறு. பிறகு, ஸூக்ஷ்மமானரூபமானது அக்நியைஉண்டுபண்ணி நன்குமறைத் தது. அந்தரூபத்தால நன்கு சலிக்கச்செய்யப்பட்ட அக்னியானது ரஸதன்மாத்திரத்தை உண்டுபண்ணிற்று.ஸூக்ஷ்மரூபத்தை அடை ந்த அக்னியானது ரஸதன்மாத்திரத்தை மறைத்தது. அந்த அக்னி யால் நன்கு சலிக்கச்செய்யப்படும் ரஸமானது ஜலத்தைஉண்டுபண் ணிற்று. ஸூக்ஷ்மமான ரஸமானது திரும்பவும் அந்த ஜலத்தை நன்கு மறைத்தது. அந்த ரஸத்தால் நன்குசலிக்கச்செய்யப்படும்ஜல மானது கந்ததன்மாத்திரையை உண்டுபண்ணிற்று. அந்தஜலமானது பிறகு ஸூக்ஷ்மமானகந்தத்தை மறைத்தது. அந்த ஜலத்தால் நன்றாகச் சலிக்கச்செய்யப்படும் கந்தமானது கடினத்தன்மையை

உண்டுபண்ணிற்று. ஸூக்ஷ்மமானதாக்கதிலிருந்து உண்டான அந்தக் கடினத்தன்மையிலிருந்து பூமி உண்டாயிற்று. இது முழுதுமே ஜலஉருவமுள்ளதுதான். ஜலம் திரும்பவும் கடினத்தன்மையை அடைந்தது. பிறகு, பூமிமுதலிய இந்தப் பூதங்களுண்டாயின வென்று வேதங்கள் சொல்லுகிறது. இந்தப்பூதங்களுடைய சரீரம் அன்னமென்றே அறிஞர்கள் கருதுகிறார்கள். அந்தப் பூதங்களிலுள்ள ஸூக்ஷ்மபாகங்கள் தன்மாத்திரைகளென்று சொல்லப்படுகின்றன. தேஜோரூபமானதாகு இந்திரியங்களைக் காரியத்தன்மையை அடைந்த தேவர்களென்று சொல்லுகிறார்கள். மனமானது இவைகளில் பதினேராவதாகும். இவ்விதம் விகாரத்தன்மையை அடைந்த (இந்திரியங்களாகிற) தேவர்கள் சொல்லப்படுகிறார்கள். பலவேற்றுமையுடனிருக்கும் காலமானது அந்த இந்திரியங்களுக்கு மாறுபாட்டைச்செய்யக் காரணமாகிறது. பூதங்களுக்கு ஆதமாவான பரமாதமாவானவர் குணங்களின் வேற்றுமையுள்ளவராயிருக்கிறார். அவர் ஒருவராயிருந்தும் மூன்றுவிதமான வேற்றுமையுள்ளவராகிப் பலவிதமானகாரியங்களைச் செய்கிறார். பிரம்மாவாயிருந்து பிராணிகளைப் படைக்கிறார். அழிவற்றநாராயணராயிருந்து பரிபாலிக்கிறார். உலகங்களை உருவமாகக்கொண்டருத்ரரூபியாகி ஸம்ஹாரிக்கிறார். காரியங்களில்ஸாமர்த்தியமுள்ள இவர் காலமாகிறார். ஈச்வரரூபியானகாலமும், சிந்தைக்கு எட்டாததும் மூன்றுகுணங்களை உருவமாகக்கொண்டதும் ஸனாதனமுமாயிருக்கிறது. இது இந்திரியங்களுக்குப் புலப்படாதது. இது சிந்தைக்கு எட்டாதது. இது வெவ்வேறுலக்ஷணமுள்ளதாயிருக்கிறது. வேற்றுமையில்லாததாகக் கேட்கப்படும் இவ்வுலகம் காலரூபத்தால் வேற்றுமையுள்ளதாகிறது. ஆதியுமந்தமுமில்லாததும் உற்பத்தியில்லாததும் திவ்யமும் ஸூக்ஷ்மமும் கிழத்தனமில்லாததும் உறுதியுள்ளதும் ஊஹிக்கமுடியாததும் அறியக்கூடாததுமானபிரம்மமானது முதலிலிருந்தது. பதினைந்துநிமிஷங்கள் ஒருகாஷ்டையாகும். முப்பதுகாஷ்டைகளை ஒருகலையென்று கணக்கிடவேண்டும். முப்பதுகலைகளும் ஒருகலையில் பத்திலொருபாகமும் கொண்டது ஒருமுகூர்த்தமாகும். முப்பதுமுகூர்த்தங்கொண்டது ஒருபகலும் இரவுமாகுமென்று முனிகளால் கணக்கிடப்பட்டிருக்கிறது. முப்பதுஇரவுபகல் ஒருமாஸமென்று கூறப்படும். பன்னிரண்டுமாதங்கொண்டது ஒருவருஷம். தக்ஷிணாயனம் உத்தராயணமென்ற இரண்டுசேர்ந்து ஒருவருஷமென்று கணக்கறிந்தவர்கள் கூறுகிறார்கள். மானிடஉலகத்திற்குரியஇரவுபகல்களை ஸூர்யன்

பகுத்துக்கொடுக்கிறான். இரவானது உறக்கத்திற்காகவும் பகலானது வேலைகளைச்செய்வதற்காகவும் வருகின்றன. ஒருமாதமானது பித்ருக்களுக்குரிய இரவும் பகலுமாகும். அவைகளின் பிரிவுகளை, சுக்லபக்ஷமானதுவேலைகளைச்செய்கிறதற்குரியபகலும்கிருஷ்ணபக்ஷமானது உறங்குவதற்குரியஇரவுமென்று அறியவேண்டும். ஒருவருஷமானது தேவர்களுக்குரிய இரவும் பகலுமாகும் அவைகளின் பிரிவோ, உத்தராயணம்பகலும் தக்ஷிணாயனம் இரவுமாகும். முதலில் தேவலோகத்துக்குரிய இரவுபகல்களாலுண்டாகும் வருஷத்தின்முடிவின்கணக்கைக்கொண்டுபிரம்மதேவருக்குரிய இரவுபகல்களைச்சொல்லுகிறேன். கிருதயுகம் திரேதாயுகம் துவாபரயுகம்கலியுகம் இவைகளிலுள்ள தேவர்களின்வர்ஷங்களை முறையே கூறுகிறேன். கிருதயுகமானது நாலாயிரம்வருஷங்களென்று கூறுகிறார்கள். அந்தயுகத்தின் [1] ஸந்தியாகாலம் நானூறுவருஷங்களும் அப்படியே [2]ஸந்தியாம்சம் நானூறுவருஷங்களுமாகும். அதைவிடவேறானமூன்றுயுகங்களிலும் அவைகளின்ஸந்தியைகளிலும் ஸந்தியாம்சங்களிலும் ஒவ்வொன்று குறையக் கூடியஆயிரம்வருஷங்களும்நூறுவருஷங்களுமாகும். இந்த யுகங்கள் அழிவற்றவையும் ஸநாதனமுமானஉலகங்களைத் தரிக்கின்றன. அப்பா! அழிவற்றசாஸ்வதபிரம்மரூபியான இது பிரம்மத்தை அறிந்தவர்களுக்குத் தெரியும். நான்குஅம்சங்களுடன்கூடியதும் பூர்ணமுமானதர்மமும் ஸத்யமும் கிருதயுகத்திலிருக்கின்றன. அந்த யுகத்தில் அதர்மத்துடன்நடைபெறுவதொன்றுமில்லை. வேறுயுகங்களில் தர்மமானது முறையே ஒவ்வொருபாகமாகக்குறைவடைகிறதென்று வேதத்தால் வெளியாகிறது. ஸத்யமும் சௌசமும் ஆயுளும் தர்மமும் ஒவ்வொருபாகமாகக் குறைவடைகின்றன. திருட்டு, பொய், வஞ்சகம்இவைகளால் அதர்மமும் மேலிடுகிறது. கிருதயுகத்திலிருப்பவர்கள் நோயற்றவர்களும் இஷ்டமானபொருள்களின் ஸித்தியெல்லாம்பெற்றவர்களும் நானூறுவருஷங்கள்ஜீவிப்பவர்களுமாயிருந்தார்கள். திரேதாயுகத்தில் இவர்களின்ஆயுள் ஒருபாகம் குறைவடைகிறது. யுகந்தோறும் வேதவாதங்களும் இவ்வுலகில் குறைவடைகின்றனவென்று எங்களுக்குக் கேள்வி. ஆயுளும் அனுக்ரகசக்திகளும் வேதத்திற்குரியபயனும் குறைவடைகின்றன. கிருதயுகத்தில் தர்மங்கள்வேறு. சக்திக்குத்தக்கபடி செய்யப்படுவது போன்றதாமங்கள் திரேதாயுகத்திலும் துவாபரயுகத்திலும் கலியுகத்

1 யுகத்துக்கு முன்னுள்ளகாலம்.

2 யுகத்துக்குப் பின்னுள்ளகாலம்.

திலும் வெவ்வேறாக இருக்கின்றன. கிருதயுகத்தில் தவம் பெரிதாகும். திரேதையில ஸத்யம் உத்தமமாகும். துவாபரயுகத்தில யாகத்தையே சொலலுகிறார்கள். கலியில் தானமே சிறந்தது. இவ்விதம யுகங்களின் கணக்குப்பன்னீராயிரம்வருஷங்களென்று கவிகள் அறிவிக்கிறார்கள். அந்தயுகங்கள் ஆயிரந்தடவை சுறறினால அது பிரம்மதேவருக்குரிய ஒருபகலென்று சொலலப்படுகிறது. பிரம்மதேவரின்ராத்ரியும் அதே கணக்குள்ளதாகும், ஈசரான அந்தபரம்மதேவர் இரவின்தொடக்கத்தில் உலகத்தைத் தம்மிடம் லயிக்கும்படிசெய்து உறங்கியபின் இரவின்முடிவில விழித்துக்கொள்ளுகிறார். ஆயிரம் யுகஙகளின் முடிவைப் பிரம்மதேவரின் பகலென்றும் ஆயிரம்யுகங்களின் முடிவையே இரவென்றும் இரவுபகலகளை அறிந்தஜனங்கள் அறிவிக்கிறார்கள். விழித்துக்கொண்ட பிரம்மதேவர் இரவுசென்றதும் அழிந்தமஹத்தத்துவத்தைப் படைக்கிறார். அதிலிருந்து ஸதூலஉருவமுள்ளமனமுண்டாகிறது. மனமானது படைக்கவேண்டுமென்ற விருப்பததால் ஏவப்பட்டுப படைப்பைசசெய்கிறது. அதிலிருந்து ஆகாயமுண்டாகிறது. ஆகாயத்தின்குணம் சப்தமென்று சொல்லப்படுகிறது; வேற்றுமையை அடைந்த ஆகாயததிலிருந்து எலலாக்கந்தஙகளையும் கொணர்வதும் பரிசுததமும் பலமுள்ளதுமான வாயு உண்டாகிறது. அந்த வாயுவின் குணம் ஸபர்சமென்றுசொலலப்படுகிறது. வேற்றுமையை அடைந்த வாயுவினிடமிருந்தும் பிரகாசமுள்ளதும்பரிசுததமும் அழகுள்ளதுமான அக்கினி உண்டாகிறது. அதன் குணம் ரூபமென்று சொல்லப்படுகிறது. விகாரப்பட்ட அக்கினியிடமிருந்தும் ரஸமுள்ள ஜலமுண்டாகிறது. ஜலத்திலிருந்து கந்தமென்னும் குணததைத்தரிக்கும் பூமிஉண்டாகிறது. இவவிதம் முதலான பூதங்களின்உறபத்தி சொல்லப்படுகிறது. [1] முதலாவது பூததத்தின்குணங்கள் மேன்மேலான பூததததை அடைகின்றன. புலவர்கள் ஒவ்வொன்றிலுமுள்ள குணங்களனைத்தும் அதனை தன்காரியததைஅடையுமென்று சொலலப்படுகின்றன. சிலர் அறியாமையால மணததை (ஜலத்தில)கண்டு ஜலத்திலிருப்பதாகக் கூறுவார்களாயினும் அதைப் பூமியில்மட்டுமிருப்பதாகவும் அதிலிருந்து ஜலத்தையும் வாயுவையும் அடைந்திருப்பதாகவும் தெரிந்துகொள்ளவேண்டும். ஏழுவிதமான உருவமுள்ளவைகளும் வெவ்வேறாகப் பலவிதவீரியங்களுள்ளவைகளுமான [2] இவைகள்முழுமையும்ஒன்றுசேராமலபிராணி

---

1 அதிகபாடமான ஏழுஹலோகங்கள கூறியதுகூறலால விடபபடடன.

2 மஹத அஹங்காரம் ஐந்துபூதங்களை.

களைப் படைக்கத்திறமையுள்ளவைகளாகவில்லை. பெரியஉருவமுள்ள அவைகள் சேர்ந்து ஒன்றோடொன்று கலந்து சரீரநிலையை அடைந்தன. அதனால், (ஆத்மா) புருஷனென்று சொல்லப்படுகிறான். சரீரத்தைஅடைந்தகாரணத்தால் சரீரியாகிறான். [1]பதினாறு அம்சமுள்ள ஸூக்ஷ்மசரீரமானது மூர்த்தியுள்ளதாயிருக்கிறது. கர்மங்களுடன் மஹாபூதங்களும் அதைஅடைகின்றன. ஆதிகர்த்தாவாயிருப்பவர் எல்லாப்பூதங்களையும் எடுத்துக்கொண்டு தவஞ்செய்யவேண்டி அந்தமஹாபூதத்தைப் படைக்கிறார். அவரையே ஸ்ருஷ்டிகர்த்தரென்றுசொல்லுகிறார்கள். [2]அவரே பிராணிகளை உண்டுபண்ணுகிறார். அவரே பரமபுருஷர். பிறப்பில்லாத பிரம்மதேவர், தேவர்களும் ரிஷிகளும் பித்ருக்களும் [3]மானிடர்களும்மற்றஉலகங்களும் நதிகளும் கடல்களும் திக்குக்களும் மலைகளும் மரங்களும் மானிடர்களும் கின்னரர்களும் ராக்ஷஸர்களும் பசுக்களும் பக்ஷிகளும் மிருகங்களும் பாம்புகளுமாகிய அழிவில்லாதனவும் அழிவுள்ளனவுமான ஸ்தாவரஜங்கமங்களிரண்டையும் உண்டுபண்ணுகிறார். அவர்களுள் எவர்கள் எந்தக் கர்மங்களை முன்ஸ்ருஷ்டியில் அடைந்திருந்தார்களோ திரும்பவும் திரும்பவும்ஸ்ருஷ்டிக்கப்படும்அவர்கள் அந்தக் கர்மங்களையே அடையும்படி செய்யப்படுகிறார்கள். அந்த அந்தவாஸனையுள்ளவர்களாயிருந்துகொண்டு ஹிம்ஸை, அஹிம்ஸை, மென்மை, கொடுமை, தர்மம், அதர்மம், ஸத்யம், பொய்இவைகளை அடைகிறார்கள். ஆகையால், அது அவர்களுக்குப் பிரியமாகிறது. மஹாபூதங்களிலும் இந்திரியங்களுக்குரியவிஷயங்களிலும் சரீரங்களிலுமுள்ள வேற்றுமையையும் பூதங்களுக்குரிய உபயோகத்தையும் பிரம்மதேவரே படைக்கிறார். கர்மத்தைஅறிந்தசிலர் மனிதமுயற்சியென்றும் வேறுசிலர் தெய்வமென்றும் பூதங்களைச்சிந்திப்பவர்கள் இயற்கையென்றும் சொல்லுகிறார்கள். [4]பௌருஷமென்னும்கர்மமும் தெய்வமும் இயற்கையும் பயனைக்கொடுப்பதில் ஒன்றுசேர்ந்திருக்கின்றன. இம்மூன்றும் வெவ்வேறாயிருப்பவையல்ல. இவைகளுக்கு எவ்விதத்திலும் பிரிதலில்லை. இவ்விதம் இந்தக்கர்மமும் தெய்வமும் பூதங்களின் இயற்கையும் இவ்வுலகத்தை உண்டுபண்ணுகின்றன. கர்மத்திலிருப்

1 ஞானேந்திரியம் ஐந்து, கர்மேந்திரியம் ஐந்து, பிராணன்களைந்து, மனம் ஒன்று.

2 'அவரே சரீரத்தில் பிரவேசிக்கிறார்' என்பது பழையஉரை.

3 இது இரண்டுமுறை வருகிறது. மனுக்களென்றும் கொள்ளலாம்.

4 'முயற்சியும் தெய்வமும் இயற்கையைச்சார்ந்து பலனைக்கொடுப்பவை' என்பது பழையவுரை.

பவர்கள் சந்தேகிக்கத்தக்கபடியே சொல்லுவார்கள். ஸத்வகுணத்தி லிருக்கும்ஞானிகள் எங்கும்ஒன்றானபிரம்மத்தைக் காரணமாகக்கண்டிருக்கிறார்கள். அந்தப்ரம்மஜ்ஞானத்தால் பிராணிகளுக்கு மோக்ஷமுண்டாகும். அந்தப்ரம்மஜ்ஞானத்திற்குச் சமமும் தமமும் ஸாதகமாகும். மனத்தால்விரும்புகிற போகங்களையெல்லாம் அந்தப்பிரம்மஜ்ஞானத்தால் அடைவான். உலகங்களை உண்டுபண்ணுகிறப்ரம்மத்தைத் தவத்தால் அடைவான். பிரம்மத்தன்மைபெற்றமனிதன் எல்லாப்பிராணிகளுக்கும் ராஜனாகிறான். ரிஷிகள் தவத்தால் இரவும்பகலும் வேதங்களைக் கற்கிறார்கள். ஆதியும் அந்தமுமில்லாததும் நித்தியமுமான வேதவாக்கானது பிரம்மதேவரால் வெளியிடப்பட்டது. ரிஷிகளின்பெயர்களையும் வேதத்தைப்பற்றிய அவர்களின்அறிவுகளையும் பூதங்களின்நாமரூபக்ரியைகளையும் வேதங்களிலிருந்தே முதலில் அந்தாம்ஸவரர் உண்டுபண்ணுகிறார். ரிஷிகளுக்குள்ள பெயர்களையும் வேதங்களைப்பற்றிய அவர்களின்அறிவுகளையுமே பிரளயகாலத்திற்குப்பின் உண்டான மற்றரிஷிகளுக்கு ப்ரம்மதேவர் உண்டுபண்ணுகிறார். வேதங்களில் ஆத்மாவுக்குள்ள மோக்ஷவிதியானது வேதாத்தியயனம்,கிருகஸ்தாஸ்ரமம்,வானப்ரஸ்தம்,பொதுவான தர்மம்,யாகங்கள், கீர்த்தியைத்தாத்தக்கதர்மம், கர்மாங்கங்களைப்பற்றிய உபாஸ்தியும் சரீரத்திலுள்ளமனமுதலியவைகளை ப்ரம்மமாகப் பாவித்துச்செய்யப்படும் உபாஸ்தியும் ஆத்மரூபமாகப் பாவித்துச்செய்யப்படும் பரமாத்மோபாஸ்தியுமாகிய மூன்றுவித உபாஸ்திகள், மோக்ஷமென்று பத்து வழிகளாக உபதேசிக்கப்படுகிறது. வேதத்தைஅறிந்தவர்களால் அறியக்கடினமென்று வேதங்களில்கூறப்படுவதும் வேதாந்தங்களில்மிகத்தெளிவாய்உபதேசிக்கப்படுவதுமானபிரம்மம் முன்சொன்னகிரமவழியாகவே அறியப்படும். சரீரியானஜீவனுக்குத் த்வந்துவங்களுடன் கூடிய இவ்வேற்றுமையானது கர்மத்தாலுண்டானது. ஆத்மஸித்தியென்னும் மோக்ஷரூபியானபுருஷன் பிரம்மஜ்ஞானத்தால்அவ்வேற்றுமையை விலக்கிக்கொள்ளுகிறான். பிரணவமென்ற சப்தப்ரம்மம் பரப்ரம்மமென்ற இரண்டுபிரம்மங்களையும் தெரிந்துகொள்ளவேண்டும். சப்தப்ரம்மத்தைத் தியானிப்பதில் ஸமர்த்தனானவன் பரப்ரம்மத்தை அறிவான். க்ஷத்திரியாகள்ஹிம்ஸையை யாகமாகக்கொண்டவர்களென்றும்,வைஸ்யர்கள்ஹவிஸை யாகமாகக்கொண்டவர்களென்றும், சூத்திரர்கள் பணிவிடையை யாகமாகக்கொண்டவர்களென்றும், பிராம்மணர்கள் தவத்தை யாகமாகக்கொண்டவர்களென்றும் சொல்லப்படுகிறார்கள். யாகங்களைச்செய்வதற்குரிய இவ்விதியானது திரே

தாயுகத்தில்உள்ளது. கிருதயுகத்தில் இவ்விதியிலலாமலே பிரவ்ருத்திப்பார்கள். துவாபரயுகத்திலும்அப்படியே கலியுகத்திலும் யஜ்ஞங்கள் நாசமடைகின்றன. கிருதயுகத்திலுள்ளமனிதர்கள் வேறுபடாத தர்மமுள்ளவர்களாகிக் காம்யமானயாகங்களைத் தவங்களால் வேறுக்கெரிந்துகொண்டு விலக்கிவிட்டு ருக், யஜுஸ், ஸாமம்என்ற வேதங்களைக் (கூறபடுடன்) தவத்தையுஞ்செய்கிறார்கள். த்ரேதாயுகத்திலோ, வேதங்கள்யாவும் ஸ்தாவரங்களும் ஜங்கமங்களுமான ப்ராணிகளெல்லாம் மிக்கவலிமையுடன் அடக்குகிறவைகளாகத் தோன்றின. திரேதாயுகத்தில சேர்ந்திருந்தவேதங்களும் யாகங்களும் [1]வர்ணாச்ரமங்களும் ஆயுளின்குறைவால் துவாபரயுகத்தில பிரிவடைகின்றன. கலியுகத்தில தர்மம்நாசமடைவதால யாகங்களுடன் வேதங்கள்யாவும் மிகவும்நாசமடையும். அவைகள் காணப்படுவனவும் காணப்படாதனவுமாயிருக்கும். தர்மமென்பது கிருதயுகத்தில மனத்தைஜயித்தவர்களும் தவமுள்ளவர்களும் சாஸ்திரங்களுள்ளவர்களுமானபிராம்மணர்களிடம் நிலைபெறறதாகக் காணப்படுகிறது. அந்தத் தர்மமானது ஒவ்வொருயுகத்திலும் அதர்மத்தின்வளர்ச்சிக்குத்தக்கபடி குறைவடைகிறது. வைதர்மத்தை உபதேசிப்பதற்குள்ளவேதவாதங்களும் சாஸ்திரத்தில்சொலலியபடி நாசமடைகின்றன. ஸ்தாவரங்களும் ஜங்கமங்களுமான பிராணிகள்யாவும் மழைக்காலத்தில் மழைக்குத்தக்கபடி எப்படி மிகஅதிகமாகுமோ அப்படியே ஒவ்வொருயுகத்திலும் தர்மங்களும் அதர்மங்களும் உண்டாகின்றன. ஒவ்வொரு ருதுக்களிலும் வெவ்வேறு உருவங்களுள்ள அடையாளங்கள் திரும்பவும்திரும்பவும் தமக்குத்தாமே காணப்படுகிறதுபோலப் பிரம்மா ருத்ரர்முதலானவர்களிடம் முதலும்முடிவுமில்லாதகாலத்தின்வேறறுமையும் வைக்கப்பட்டிருக்கிறது. முதலில் உனக்கு உபதேசிக்கப்பட்ட அந்தக்காலரூபியானபிரம்மமே பிரஜைகளை உண்டுபண்ணவும் ஸம்ஹரிக்கவும்செய்கிறது. பெரும்பாலும் இயறகையான த்வந்துவங்களுடன் கூடியவைகளாயிருக்கிற பிராணிகளைப் போஷிப்பதும் [2]தரிப்பதுமாயிருப்பது காலமென்றே சொல்லப்படுகிறது ஸ்ருஷ்டி, காலம், கர்மா, வேதங்கள், கர்மததைச்செய்பவன், கர்மத்திற்குள்ளமுயறசி, கர்மத்தின்பயன் இவையாவும் காலமே. மகனே ! நீ என்னிடம்கேட்டதை உனக்கு உபதேசித்தேன்.

---

1 வேறுபாடம். 2 வேறுபாடம்.

## இருநூற்றுமுப்பத்தொன்பதாவது அத்தியாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



(வ்யாஸர் பிரளயமுதலியவற்றைப்பற்றிச் சுகருக்குச்சொல்லியது.)

பகலானதும் இரவின் துவக்கத்தில் ஈஸ்வரர் இவ்வுலகத்தைத் தம்சரீரத்தில் மிகஸூக்ஷ்மமாக லயிக்கச்செய்கிற பிரளயத்தைச் சொல்லுகிறேன். அப்பொழுது ஆகாயத்தில் ஸூர்யனும் அக்னியின் ஏழுஜ்வாலைகளும் உலகத்தை எரிக்கின்றன. அப்பொழுது இவ்வுலகம், ஸூர்யன் அக்னி இவர்களுடைய ஒளிகளால் முழுமையும் நிறைந்து மிகவும் ஜ்வலிக்கிறது. பூமியிலுள்ள ஜங்கமங்களும் ஸ்தாவரங்களுமானபிராணிகள் முதலில் லயப்படுகின்றன. அவைகள் பூமியின் உருவத்தை அடைகின்றன. பிறகு, ஸ்தாவரமும் ஜங்கமுமான யாவும்லயமடைந்தபொழுது மரமும்புல்லுமில்லாதபூமியானது ஆமையின்முதுகுபோலக் காணப்படுகிறது. பூமியின் குணமானகந்தத்தையும் எப்பொழுது ஜலம் பறிக்கிறதோ அப்பொழுது கந்தம்போன பூமியானது லயத்தை அடையத்தக்கதாகிறது. அப்பொழுது ஜலம் அலைகளுள்ளதும் பெரிய சத்தமுள்ளதுமாகப் பெருகுகிறது. அது இவ்வுலகமனைத்தும் நிறைந்துகொண்டு நிற்கவும் ஸஞ்சரிக்கவும் செய்கிறது. அப்பா! எப்பொழுது ஜலத்தின்குணங்களையும் அக்னி எடுத்துக்கொள்ளுகிறதோ அப்பொழுது குணம்போன ஜலம் ஜோதியில் லயப்படுகிறது. எப்பொழுதுஆகாயத்தின்நடுவிலிருக்கும்ரவியை அக்னியின் ஜ்வாலைகள் சுற்றிக்கொள்ளுகின்றனவோ அப்பொழுது இவ்வுலகம்யாவும் ஆகாயமும் ஜ்வாலைகளால் நிறைந்து மிகவும் எரிகின்றன. ஜோதியின்குணமானரூபத்தையும் எப்பொழுது வாயுஎடுக்கிறதோ அப்பொழுது ஜோதி மிகவும் அவிந்துபோகிறது. பெரிதானகாற்று மிகவும்வீசுகிறது பிறகு, வாயுவானது தன்பிறவிக்குக் காரணமும் மூலமுமானஆகாயத்தை அடைந்து திசைகளிலும் கீழும் மேலும் குறுக்குமாக மிகவும் வீசுகிறது. வாயுவின்குணமான ஸ்பர்சத்தையும் எப்பொழுது ஆகாயம் விழுங்குகிறதோ அப்பொழுது காற்று மிகவும் லயப்படுகிறது. ரூபம், ரஸம், ஸ்பர்சம், கந்தம் இவைகளில்லாததும் மூர்த்தியில்லாததுமான ஆகாசம் மிகவும் சப்தமுள்ளதாகி நிற்கிறது. ஆகாயமானது எல்லா உலகங்களிலும்சென்ற சப்தகுணமுள்ளதாகி நிற்கிறது. ஆகாயத்தின்குணமான சப்தத்தை ஸ்தூலமாகக் காணத்தக்க உருவமுள்ள மனமானது எப்பொழுது விழுங்கு

கிறதோ அப்பொழுது பிரளயகாலத்தில அவ்வாகாசமும் லயப்படுகி றது. வ்யக்தமானமனத்தின்உருவம் வ்யக்தமும் அவ்யக்தமுமா யிருக்கிறது. இது விராட்டென்னும் பிரம்மதேவரைப்பற்றிய பிர ளயம். அந்தமனத்தை விபாபகமான குணமுள்ள ஸமஷ்டிமனத் தில பிரவேசிக்கும்படிசெய்து சந்திரன்விழுங்குகிறான். மனமானது சந்திரனிடத்தில் லயப்பட்டவுடன் இந்த ஆதமாவுக்குப் பெருமை உண்டாகிறது; விசாரமென்னும் விருத்தியுள்ளசித்தத்தைவிழுங்கு கிற ஸங்கல்ப உருவமான அந்த ஸமஷ்டிமனத்தை வெகுகாலத்தால் யோகியானவன் தன் வசமாக்கிக்கொள்ளுகிறான். ஸங்கலபத்தை வசமாக்கிக்கொள்ளுவது மிக உத்தமமான ஞானமாகும். அந்த ஞானத்தையும் காலம் விழுங்குகிறது. அக்காலத்தையும் சக்தி விழு ங்குகிறதென்று வேதம் உபதேசிக்கிறது. சக்தியைக் காலம்விழு ங்குகிறதென்பதில்லை. அக்காலத்தையும் பிரம்மஜ்ஞானமுள்ளவன் தன்வசமாக்கிக்கொள்ளுகிறான். அப்பொழுது பிரம்மஜ்ஞானமுள்ள வன் ஆகாயத்தின்குணமான நாதத்தையும் (அதாவது சப்தப்ராம்மத் தையும்) ஆதமரூபத்தில லயிக்கச்செய்கிறான். அந்த ஆத்மரூபம் ஸூக்ஷ்மமான பரபாம்மமாகும். அது சாஸ்வதமும் மிகஉத்தமமு மாகும். இவவிதம் எல்லாவஸ்துக்களையும் பிரம்மமே லயப்படுத்திக் கொள்ளுகிறது. இது இவ்விதமே உண்மையானது. ஸந்தேகமில்லை. பரமாத்மரூபிகளானயோகிகளால வித்தையில் மிக ஆவல்கொண்டவ னும் உபதேசிக்கத்தக்கவனுமான சிஷ்யனைக்கண்டு உள்ளபடி இது உபதேசிக்கப்பட்டிருக்கிறது. இவ்விதம் ஸ்ருஷ்டிப்பிரளயங்களும் சப்தப்ரம்மமென்ற பிரணவமும் ஸூக்ஷ்மமான பரப்ரம்மமும் திரும் பவும் திரும்பவும் ஆயிரம் யுகங்களுக்குப்பின் துவக்கத்தில் பகல் இரவுகளும் சொல்லப்பட்டன.

---

## இருநூற்றுநாற்பதாவது அத்தியாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



(வ்யாஸர் பிராம்மணர்களின் தர்மமுதலியவற்றைச் சுகருக்குச் சொல்லியது.)

**நீ** பூதக்கூட்டங்களைப்பற்றிக் கேட்டதை நான் இவ்விதம் சொன்னேன். பிராம்மணனுக்குச் செய்யத்தக்கது எதுவோ அதை இப்பொழுது உனக்கு உபதேசிக்கிறேன். இந்தப்பிராம்மணனுக்கு ஜாதகர்மமுதலிய தக்ஷிணையுள்ள கர்மங்களைச் செய்யவேண்டும்.

வேதங்களின் கரைகண்ட ஆசிரியரிடம் ஸமாவர்த்தனம்வரையில் வஸிக்கவேண்டும். குருவுக்குப்பணிவிடைசெய்வதில் உற்சாகமுள்ளவனாயிருந்துகொண்டு எல்லாவேதங்களையும் கற்றபின் வேதத்தின் அர்த்தமானயாகத்தைத் தெரிந்துகொண்டு குருவுக்குரிய கடனைத் தீர்த்தபின்பு ஸமாவர்த்தனஞ்செய்துகொள்ளவேண்டும். ஆசார்யரால அனுமதிகொடுக்கப்பெற்றும், அவன் பிரஜைகளை உண்டுபண்ணுவதற்காகத் தாரங்களுடனே அல்லது குருவினருகில் பிரம்மசர்யத்துடனே வனத்திலோ அல்லது ஸந்யாஸிதர்மத்துடனே நான்கில் ஓர் ஆஸ்ரமத்தை அடைந்து சரீரத்தைவிடும்வரையில் விதிப்படி இருக்கவேண்டும். இந்தக்கிருகஸ்தனென்பவன் எல்லா ஆஸ்ரமங்களின் தர்மங்களுக்கும் மூலமென்றுசொல்லப்படுகிறான். அந்தக்கிருகஸ்தாஸ்ரமத்தில பாவங்களைப்போக்கிக்கொண்டு பரிசுத்தனானவன் எல்லாஆஸ்ரமங்களிலும்வஸித்திபெறுவான். பிரஜையுள்ளவனும்வேதங்களைக்கற்றவனும் யாகஞ்செய்பவனுமாகி மூன்றுருணங்களிலிருந்தும் விடுபட்டவனும் தன் கர்மங்களால் பரிசுத்தனுமாயிருப்பவன், பிறகு வேறுஆஸ்ரமங்களை அடையவேண்டும். பூமியிலெந்தஇடத்தை மிகப்பரிசுத்தமென்று தெரிந்துகொள்ளுகிறானோ அவ்விடத்தில் வஸிக்கவேண்டும். அவ்விடத்தில்இருந்துகொண்டு உத்தமமானகீர்த்தியை அடைவதில நம்பத்தக்கநிலையை அடையமுயலவேண்டும். மிகப்பெரியதவத்தாலும் கலவிகளைமுடிவுபெறச்செய்வதாலும் யாகத்தாலும் தானங்களாலும் பிராம்மணர்களுக்குக் கீர்த்திபெருகுகிறது. இந்தமனிதனுக்கு எதுவரையில புகழ்ச்சியை உண்டுபண்ணத்தக்க கீர்த்தி இவ்வுலகிலிருக்கிறதோ அதுவரையில புண்ணியஞ்செய்தவர்களுக்குத்தக்கவையும் அழிவற்றவையுமானஉலகங்களை மனிதன் அடைவான். அத்யயனம் செய்யவும் வேண்டும். அத்யயனத்தைச் செய்விக்கவும் வேண்டும். யாகங்களைச்செய்யவும் யாகங்களைச்செய்விக்கவும்வேண்டும். வீணை ப்ரதிக்ரகத்தைப் பெறலாகாது. வீணாக எவ்விதத்திலும் தானஞ்செய்யலாகாது யாகஞ்செய்விக்கத்தக்க மனிதனிடமிருந்தோ சிஷ்யனிடமிருந்தோ கன்னிகையிடமிருந்தோ மிக்க பொருள் வருமாகில் யாகஞ்செய்யவும் தானஞ்செய்யவும் வேண்டும். எவ்விதத்திலும் ஒருவனாகப புஜிக்கக்கூடாது. கிருகத்தில் வஸிப்பவனான இந்தப் பிராம்மணனுக்கு வேறு புண்யம் சொல்லப்படவில்லை. தேவர்கள், ரிஷிகள், பித்ருக்கள், குருக்கள் இவர்களுக்கும் கிழவர்கள், நோயாளிகள், பசியுள்ளவர்கள் இவர்களுக்கும் (சத்துருவுக்குப்பயந்து) மறைந்திருப்பவர்

களும் தாபமுள்ளவர்களுமாகத தன்னிடத்திலிருக்கவிரும்புகிறவர்களுக்கும் சக்திக்குத்தக்கபடியோ சக்திக்குமீறியோ திரவியங்களையும் பக்குவமான அன்னத்தையும் அளிக்கவேண்டும். தானத்திற்குத்தகுதியுள்ள பூஜ்யர்களுக்கு அளிக்கததகாதது ஒன்றுமில்லை. மஹாத்மாவானகாஸ்யபரின்பொருட்டு ப்ரஸேனஜித் உச்சைஸ்ரவமென்னும் குதிரையைக்கொடுதது்த் தேவர்களகொண்டாடத்தக்க உலகங்களை அடைந்தான். உண்மைபேசுகிறவரும் பெரியநியமமுள்ளவருமான சுக்ராசார்யரும் நன்மொழிகூறித் தம்உயிரால் பிராம்மணன்உயிரைக் காப்பாற்றி ஸ்வர்க்கத்தை அடைந்தார். ஸங்க்ருதியின்புத்ரனைரந்திதேவனும் மஹாத்மாவான வஸிஷ்டரின்பொருட்டுக் குளிர்ந்ததும் சுடுவதுமானஜலத்தைக்கொடுதது ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். அறிவுள்ள ஆத்ரேயனென்னும் அரசன் பூஜ்யரானஇந்த்ரத்ருமிக்குப் பலவகைப்பொருளை அளித்து அழிவில்லாத உலகங்களை அடைந்தான். உசீனரன்புத்ரனைசிபி பிராம்மணருக்காகத் தன் அங்கங்களையும் ப்ரியனானஔரஸபுத்ரனையும் அளித்ததால் இங்கிருந்து தேவலோகத்தின்மேற்புறத்திறகுச் சென்றான். காசிராஜனை ப்ரதர்த்தனன் பிராம்மணன்பொருட்டுத் தன்கண்களை அளித்து இவ்வுலகிலும் மேலுலகிலும் ஒப்பற்றகீர்த்தியைப் பெறறான். தேவாவ்ருதனைவன் எட்டுக்கம்பிகளுள்ளதும் தங்கத்தால்செய்யப்பட்டதும் மிகப்பெருமையுள்ளதும் ஆச்சரியமுமான குடையைக்கொடுத்து ராஜ்யத்துடன்கூடத் தேவலோகமடைந்தான். பெரியதேஜஸுள்ளவரும் அத்ரியின்குமாருமானஸாங்க்ருதியானவர் சிஷ்யர்களுக்கு நிர்க்குணமானப்ரம்மத்தைஉபதேசித்து மிகஉத்தமமான உலகங்களை அடைந்தார். பராக்ரமமுள்ள அம்பரீஷன் பதினோர் அர்ப்புதம் எண்ணிக்கையுள்ளபசுக்களைப் பிராம்மணர்களுக்குக் கொடுத்து ராஜயத்துடன் தேவலோகமடைந்தான். பிராம்மணர்களுக்குவேண்டி ஸாவித்ரிஎன்பவள் திவ்யமான குண்டலங்களையும் ஜனமேஜயன் சரீரத்தையும் அளித்து உத்தமஉலகத்தைப் பெற்றார்கள். எல்லாரத்தினங்களையும்அளித்த வ்ருஷாதர்ப்பியும், பிரியமானஸ்திரீகளையும் அழகானகிருகத்தையும் அளித்த யுவனாஸ்வனும் தேவலோகஞ்சென்றார்கள். விதேகதேசத்திறகுஅதிபதியான நிமியானவன் ராஜ்யத்தையும், பரசுராமர்பூமியையும், கயன் பட்டணங்களுள்ள பூமியையும் பிராம்மணர்களுக்கு அளித்து நறகதிபெற்றார்கள். பிராணிகளைப்படைக்கத்தக்க வஸிஷ்டர், பிரம்மதேவர் பிரஜைகளைக் காப்பாறறுவதுபோல, மேகம் மழைபெய்யாதிருக்கும்பொழுது எல்லாப்பிராணிகளையும்

ஜீவிக்கும்படிசெய்தார். கரந்தமன்புத்திரனான மருத்தனென்னும்அர சன் அங்கிரஸனுக்குக் கன்னியைத்தானஞ்செய்து வேகமாகத் தேவ லோகமடைந்தான். புத்தியுள்ளவர்களிற்சிறந்தவனும் பாஞ்சாலதேச த்திற்குஅதிபதியுமான பிரம்மதத்தனென்னும்அரசன் பிராம்மண ஶ்ரேஷ்டர்களுக்குச் சங்கநிதியைக்கொடுத்து உத்தமலோகங்களை அடைந்தான். மித்ரஸஹனென்னும்அரசனும் மதயந்தியென்னும் தன்மனைவியை மஹாத்மாவானவஸிஷ்டருக்குஅளித்து அவருடன் ஸ்வர்க்கமடைந்தான். பெரியகீர்த்திபெற்றஸஹஸ்ரஜித்தென்னும்ராஜ ரிஷியானவன் பிராம்மணருக்காகப் பிரியமான பிராணனையும்கொடு த்துமிகஉத்தமமானலோகங்களை அடைந்தான். சத்தயும்னனென்னும் அரசன் போக்யவஸ்துக்கள்யாவும்நிறைந்ததும் ஸ்வர்ணமயமுமான வீட்டை முத்கலருக்குஅளித்து ஸ்வர்க்கலோகஞ்சென்றான். த்யுதி மானென்னும்பெயருடன் பிரஸித்தனும் பராக்ரமசாலியுமானஸால்வ தேசத்தரசன் ரிசீகரின்பொருட்டு ராஜ்யத்தைக்கொடுத்து மிகஉத்தம மான உலகங்களை அடைந்தான். பிரபுவானலோமபாதனென்னும் ராஜரிஷி ரிஶ்யஶ்ருங்கரின்பொருட்டுப் பெண்ணாணசாந்தையை அளி த்ததால் பெரியபோகங்களனைத்தையும் அடைந்தான். மதிராஶ்வ னென்னும்ராஜரிஷிமிகஅழகான இடையுள்ளகன்னிகையைஹிரண்ய ஹஸ்தருக்குக்கொடுத்துத் தேவர்களால் துதிக்கப்படும் உலகங்களை அடைந்தான். பெரியதேஜஸுள்ள ப்ரஸேனஜித்தென்னும் அரசன் கன்றுகளுடன்கூடியலக்ஷம்பசுக்களைத் தானஞ்செய்து மிகஉயர்ந்த உலகங்களை அடைந்தான். இவ்விதம் அடங்கியமனமுள்ளவர்களும் இந்திரியங்களை வென்றவர்களுமானஇவர்களும் மற்றுமுள்ளவர்களு மான பலமஹாத்மாக்கள் தானத்தாலும் தவத்தாலும் ஸ்வர்க்கத்தை அடைந்தார்கள். பூமியுள்ளவரையில் அவர்களுடையகீர்த்திநிலைபெற் றிருக்கும். தானங்களாலும் யாகங்களாலும் பிரஜைகளை உண்டு பண்ணுவதாலும் இவர்கள் தேவலோகமடைந்தார்கள்.

---

## இருநூற்றுநாற்பத்தோராவது அத்தியாயம்.

### மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



(வ்யாஸர் பிராம்மணர்களின் தர்மத்தையும் ஞானத்தின் சிறப்பையும் சுகருக்குச் சொல்லியது.)

1 உத்தமமான நிலைமையை அடைந்தவன் வேதங்களில் கூறிய த்ரயீ என்னும் வித்தையை விசாரிக்கவேண்டும். ஆறுகர்மங்களிலும்

1 'கர்மகாண்டங்களை நன்கு அறிந்தவன் ஞானகாண்டத்தைப் பார்க்க வேண்டும்' என்றும் கொள்ளலாம்.

நிலைபெற்றவனும் பூஜ்யனுமாயிருப்பவன் ருக்கு, யஜுஸ், ஸாமம், அதர்வணம் என்ற இந்த வேதாக்ஷரங்களிலேயே நிலைபெற்றிருப்பான். வேதத்தில்கூறிய விஷயங்களில் ஸமர்த்தர்களும் ஆத்மவிசாரத்தில் ஸமர்த்தர்களும் ஞானமுள்ளவர்களும் பெரியபாக்யம் பெற்றவர்களுமானவர்கள் ஸ்ருஷ்டிபிரளயங்களை அறிகிறார்கள். இவ்விதநர்மத்துடனிருக்கவேண்டும். விதிப்படிகாரியங்களைச் செய்யவேண்டும். பிராம்மணன் பிராணிகளுக்குத் துன்பமின்றி ஜீவனத்தை அடைய விரும்பவேண்டும். ஸாதுக்களிடமிருந்து நல்ல அறிவடைந்தவனும் சிஷ்டனும் சாஸ்திரங்களில் ஸமர்த்தனும் உலகத்தில் தன் தர்மப்படி கர்மங்களைச் செய்கிறவனும் (தர்மங்களின்) ஸங்கரமில்லாதவனுமாயிருக்கவேண்டும். கிருஹஸ்தனுயிருக்கும் அந்தப்பிராம்மணன் அந்தஆறுகர்மங்களிலும் உறுதியாயிருக்கவேண்டும். எப்பொழுதும் ஶ்ரத்தையுள்ளவனாக [1]ஐந்துயஜ்ஞங்களையும் செய்யவேண்டும். தைரியமுள்ளவனும் அஜாக்ரதையில்லாதவனும் அடக்கமுள்ளவனும் தர்மமறிந்தவனும் புத்தியுள்ளவனும் ஸந்தோஷத்தையும் மதத்தையும் கோபத்தையும் விட்டவனுமான பிராம்மணன் துன்பமடையமாட்டான். தானம், அத்யயனம், யாகம், தவம், வெட்கம், ருஜுவாயிருப்பது, அடக்கம் இவைகளால் தேஜஸ் மிகவும் வளருகிறது. பாவமும் குறைகிறது. பாவத்தைவிலக்கியவனும் புத்தியுள்ளவனும் லகுவான ஆகாரமுள்ளவனும் இந்திரியங்களை வென்றவனுமாகக் காமத்தையும் கோபத்தையும்வசமாக்கிக்கொண்டு பரமாத்மபதத்தை அடையவிரும்பவேண்டும். அக்னிகளையும் பிராம்மணர்களையும் தேவர்களையும் பூஜிக்கவும் நமஸ்கரிக்கவும்வேண்டும். அமங்களமானவார்த்தையையும் அதர்மமான ஹிம்ஸையையும் விலக்கவேண்டும். பிராம்மணனுக்கு மிகவும்பழமையான இந்தவ்ருத்தி விதிக்கப்படுகிறது. நல்லஞானத்தைஅடைவதுடன் கர்மங்களைச்செய்பவன் கர்மங்களில் ஸித்திபெறுவான். ஐந்துஇந்திரியங்களென்னும் ஜலமுள்ளதும் லோபமென்னுங்கரையுள்ளதும் கோபமென்னும்சேறுள்ளதும் தாண்டமிகக்கடினமானதும் எதிர்த்துச்செல்லத்தகாததும் பயங்கரமுமான நதியைப் புத்தியுள்ளவன் தாண்டுவான். மிக்கஅவிவேகத்தை உண்டுபண்ணத்தக்க காலம் எப்பொழுதும் ஜாக்ரதையாயிருப்பதாகத் தெரிந்துகொள்ளவேண்டும். பெரியதும் விதிகளில் உபதேசிக்கப்படுவதும் வலிமையுள்ளதும்தடையில்லாததுமானஸ்வபாவமென்னும்பிரவாகத்தால், உண்டானஉலகம்எப்பொழுதும்இழுக்

1 ஆதிபாவம் 559-ம்பக்கம் குறிப்பிறகாண்க.

கப்படுகிறது. காலமென்னும்ஜலமுள்ளதும் பெரியதும் எப்பொழுது முள்ளவருஷமென்னும் சுழலுள்ளதும் மாதமென்றஅலைபுள்ளதும் ருதுவென்றவேகமுள்ளதும் பக்ஷமென்னும் புற்பூண்டுகளுள்ளதும் கண்மூடுவது திறப்பதென்னும் நுரையுள்ளதும் இரவுகளென்றவேக முள்ளதும் காமமென்றமுதலையுள்ளதும் பயங்கரமானதும் வேதமும் யாகமுமாகிறதெப்பமுள்ளதும் தர்மமென்றதீவுள்ளதும் போகம்பொ ருள் இவைகளைப்பற்றியபிராணிகளின்கூச்சலுள்ளதும்உண்மையான வேதவாக்கால்கூறிய மோக்ஷமென்னுங்கரையுள்ளதும் பலவிதமான ஹிம்ஸையென்னும்மரங்களை இழுப்பதும் பிரம்மத்தால்செய்யப்பட் டதுமான யுகமென்னும்பிரவாகத்தால ப்ரம்மதேவராலபடைக்கப் பட்டபிராணிகள் யமனிருப்பிடத்திற்கு இழுக்கப்படுகின்றன. அறி வுள்ளவர்களானதீரர்கள் அறிவென்னும்தெப்பங்களைக்கொண்டு இந்த வெள்ளத்தைத் தாண்டுகிறார்கள். தெப்பமில்லாதவர்களான அறிவில் லாதவர்கள் என்னசெய்யப்போகிறார்கள் ? அறிவுள்ளவனே தாண்டு வான். அறிவில்லாத வேறுமனிதன் தாண்டமாட்டானென்பது பொருத்தமே. அறிவிற்சிறந்தவன் எல்லாவிடத்திலும்தூரத்திலுள்ள குணதோஷங்களையும் பார்ப்பான். அறிவில்லாதவனோ ஆசையுள்ள மனமுள்ளவனும் சஞ்சலமானசித்தமுள்ளவனும் அற்பபுத்தியுள்ள வனுமாக ஸந்தேகத்தால இதைத தாண்டமாட்டான். உட்கார்ந்து கொண்டேயிருப்பவன் செல்லமாட்டானன்றோ? அவிவேகமுள்ள வன் ஞானமென்னும்தெப்பமில்லாமையால பெருங்குற்றத்தையும் அறியமாட்டான். ஆசையென்னும்முதலையாலபிடிக்கப்பட்ட இந்த அவிவேகிக்கு ஞானமும் தெப்பமாகாது. ஆகையால், பகுத்தறிவுள்ள வன் முழுகாமல்கிளம்பவேண்டி முயற்சிசெய்யவேண்டும். பிராம் மணனுக்குரிய தர்மமுள்ளவனாயிருப்பதுவே அவனுக்குக் கிளம்பத் தக்கஉபாயமாகும். மூன்றுதலைமுறையாகப் பரிசுத்தமான குலத்தில் பிறந்தவனும் (அத்யயனம் யாகம் தானம்என) மூன்றுகர்மங்களைச் செய்கிறவனும் (அத்யாபனம் யாஜனம் ப்ரதிக்ரகம்என) மூன்றுகர் மங்களில்ஸந்தேகமுள்ளவனுமாகி ஞானத்தால் தாண்டிச்செல்லும் விதமாக அதிலிருந்து மேலேசெல்லமுயறசிசெய்யவேண்டும். ஸம்ஸ காரங்களைப்பெறறவனும்அடக்கமுள்ளவனும் நியமமுள்ளவனும் மன த்தைஅடக்கியவனும் அறிவுள்ளவனுமாயிருப்பவனுக்குத் தடை யின்றி இவ்வுலகிலும்மேலுலகிலும் ஸித்தியுண்டாகும். கிருகஸ்தனா யிருப்பவன் கோபமும் அஸூயையுமில்லாதவனாகி அந்தததர்மங் களிலிருக்கவேண்டும். எப்பொழுதும் அதிதிகளுக்கிட்டமிச்சத்தைப்

புஜிப்பவனும் ஐந்துயஜ்ஞங்களையும் செய்பவனுமாயிருக்கவேண்டும். பெரியோர்களின் தர்மப்படி நடக்கவேண்டும். விதிப்படி கர்மத்தைச் செய்யவேண்டும். உலகத்திற்குவிரோதமில்லாததும் இகழ்ச்சியில் லாததுமானஜீவனத்தை அடைய விரும்பவேண்டும், சாஸ்திர ஞானத்தின்உண்மையைத்தெரிந்துகொண்டவனும் பெரியோர்களின் ஆசாரங்களைநன்கு அறிந்தவனும் தன்தர்மப்படிகர்மங்களைச்செய்கிற வனும் கர்மத்தில் ஸங்கரமில்லாதவனும் நர்மமுள்ளவனும் ச்ரத்தை யுள்ளவனும் பெரும்பாலும்அடக்கமுள்ளவனும் அஸூயையில்லாத வனும் தர்மாதர்மங்களின்விசேஷங்களை அறிந்தவனுமாயிருப்பவன் தாண்டக்கடினமானஎல்லாத்துன்பங்களையும் தாண்டுவான். தைரிய முள்ளவனும் அஜாக்ரதையில்லாதவனும் அடக்கமுள்ளவனும் தர் மங்களை அறிந்தவனும் புத்தியுள்ளவனும் ஸந்தோஷமும் மதமும் கோபமும்அற்றவனுமானபிராம்மணன் துன்பப்படமாட்டான். பழை யதானஇந்தஒழுக்கம் பிராம்மணனுக்கு விதிக்கப்படுகிறது. அறி வின்பெருமையுடன் கர்மங்களைச்செய்கிறவன் எல்லாவிஷயத்திலும் ஸித்திபெறுவான். அறிவில்லாதவன் தர்மவிருப்பத்துடன் அதர் மத்தைச் செய்வான். தர்மத்தையோ தர்மம்போன்றதையோ அவன் சோகமுள்ளவன்போலச் செய்வான். தர்மத்தைச்செய்கிறேனென்று அதர்மத்தைச் செய்வான். அதர்மத்தில்விருப்பமுள்ளவனாகித் தர்மத் தைச் செய்வான். அறிவிற்சிறியவனான அவன் இரண்டுகாமங்களையும் நன்றாகத்தெரிந்துகொள்ளாமல் பிறப்பவனும் இறப்பவனுமாயிருப் பான்.

---

## இருநூற்றுநாற்பத்திரண்டாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(வ்யாஸர், ஞானம்மோக்ஷகாரணமென்பதைச்சுகருக்குச்சொல்லியது.)

மனிதன் *1 மனத்தால மூழ்குகிறவனும் கிளம்புகிறவனுமாக இழுக்கப்படுகிறான். அவன் ஸாதனத்தை அடைந்தபின் மோக்ஷத் தை அடையவிரும்புவானாகில் ஞானமென்னும் தெப்பமுள்ளவனா யிருக்கவேண்டும். அறிவுள்ளவர்கள் ஞானத்தாலுண்டுபண்ணப் பட்டதெப்பங்களால் அறிவில்லாதவர்களைக் கரையேறச்செய்கிறார் கள். அறிவில்லாதவர்கள் தம்மையோ மற்றவர்களையோ எவ்விதத்தி லும் கரையேறச்செய்யத்தக்கவர்களல்லர். காமமுதலியதோஷங்களை

1 'காலப்ரவாஹத்தால்' என்பது வேறுபாடம்.

அறுத்தமுனியானவன் யோகத்தில் முயற்சியுள்ளவனுகித் *1 தேசம், 2 கர்மா, 3அனுராகம், 4திரவியம், 5உபாயம், 6அபாயம், 7நிச்சயம், 8 கண்முதலியவை, 9ஆகாரம், 10ஸம்ஹாரம், 11மனம், 12தரிசனம் என்பன்னிரண்டுஸாதனங்களைத் தேடிக்கொள்ளவேண்டும். உத்தம மானஞானத்தைவிரும்புகிறவன் புத்தியினால் வாக்கையும் மனத்தையும் அடக்கவேண்டும். தனக்குமோக்ஷத்தைவிரும்புகிறவன்ஞானத்தினுல் புத்தியை அடக்கிக்கொள்ளவேண்டும். இந்தவாக்குமுதலியவைகளை அடக்கும்வழியை மனிதன் கண்டானுகில் அவன் மிகக் கொடியவனுனலும், எல்லாவேதங்களையும் அறிந்தவனுனலும், வேதமோதாதபிராம்மணனுனலும், தர்மமறிந்து விதிப்படி யாகத்தைச் செய்தவனுனலும், மிகவும் பாவத்தைச்செய்கிறவனுனலும், புருஷப்புலியானலும், மிகவும்பயப்படுகிறவனுனலும், தாண்டமிகக்கடினமான ஜராமரணமென்னும்கடலை இவ்விதம் தாண்டுகிருன். இவ்விதயோகமுறைப்படி முழுவதும்அப்பாஸஞ்செய்பவனுனலும்இதை அறியவிருப்பமுள்ளவனுனலும் அவன் முடிவில சப்தப்ராம்மத்தை மீறிச்செல்லுவான். தர்மத்தைஇருப்பிடமாகக்கொண்டதும் வெட்கத்தை 13வரூதமாகக்கொண்டதும் (முன்கூறிய) உபாயாபாயங்களை மூக்கணையாகக்கொண்டதும் அபானமென்னும்அச்சுள்ளதும் பிராணனென்னும் நுகமுள்ளதும் ப்ரஜ்ஞையென்றஆயுளுள்ளதும் ஜீவனென்றபிடிப்புள்ளதும் ஜாக்ரதையென்ற சேர்க்கையுள்ளதும் நன்னடக்கையோடிருப்பதென்னும் கட்டுள்ளதும் பார்ப்பது, கேட்பது, தொடுவது, மோப்பது இவைகளைக் குதிரையாகக்கொண்டதும் (நற்குணங்களைப்பற்றிய) அறிவைக் குடமாகக்கொண்டதும்எல்லாச்சாஸ்திரங்களையும் சாட்டையாகக்கொண்டதும் ஞானத்தை ஸாரதியாகக் கொண்டதும் க்ஷேத்ரஜ்ஞனென்னும் ஆத்மாவால் ஏறிக்கொள்ளப்பட்டதும் அழகுள்ளதும் உறுதியுள்ளதும் ஸ்ரத்தையையும் அடக்கத்தையும் முன்னிட்டதும் தியாகமென்னும் கடிவாளமுள்ளதும் க்ஷேமத்தைத்தருவதும் பரிசுத்தமானவழியிலசெல்லுவதும் தியான

* வேறுபாடம். 1 முள்கலமுதலியன இல்லாதபரிசுத்தமான இடம்.
2 யோகத்திற்குவிரோதமில்லாதநடை. 3 நேசத்துடன்கூடிய சிஷ்யன்.
4 ஜலமுதலியவை. 5 யோகத்திற்கு அங்கமானஆஸனமுதலியவை.
6 யோகத்திற்கு இடையூறானவைகளை விலக்குதல்.
7 சாஸ்திரத்திலும் குருவின்உபதேசத்திலும் பெரியநம்பிக்கை.
8 அவைகளின் அடக்கம். 9 பரிசுத்தமான உணவு.
10 விஷயபோகங்களிலிருந்து விலகுதல். 11 அதன் அடக்கம்.
12 பிறப்பு இறப்பு முதலியவைகளைத் தோஷமெனத் தெரிந்துகொள்வது.
13 ரதத்தைக் காப்பதாகிய ஓர் உறுப்பு.

மென்னும்தேசத்தைநோக்கிச்செல்லுவதும் (மோக்ஷவிருப்பமுள்ள) ஜீவனால்ஓட்டப்படுவதும் திவ்யமுமான யோகரதமானது பரமாத்மா வென்னும் லோகத்தின் அருகில் விளங்குகிறது. இனி, மிகவும் சீக்கிரமாகப் பரமாத்மாவை அடையவேண்டுமென்ற மனமுள்ளவ னும் இவ்விதரதத்தைஓட்டவிரும்புகிறவனுமாயிருப்பவனுக்குவிரை வாகச்செல்லத்தக்கவிதியை உபதேசிக்கிறேன். வாக்குமுதலியவை களைஅடக்கியவனே முழுமையும் அடைகின்றவையும் [1]தூரத்திலும் அருகிலுமுள்ள, விஷயங்களைப்பற்றியவையுமான [2]ஏழுதாரணைகள் வேறுஇருக்கின்றன. ஆனால், அவைகள் தாமதமுள்ளவைகள். யோகி யானவன் ப்ருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் இவைகளைப்பற்றிய ஐஸ்வர்யத்தை முறையே அடைவதுபோல அகங்காரம், புத்தி, அவ் யக்தம்இவைகளைப்பற்றிய ஐஸ்வர்யத்தையும் முறையேஅடைகிறான். யுக்தியுடன் யோகத்தை அப்யஸிப்பவனுக்குண்டாகத்தக்க அனுபவக் கிரமங்களையும் அப்படியே யோகத்திலிருந்துகொண்டு தன்சரீரத்தி னுள்ளிருக்கும் தத்வத்தைப்பார்க்கிறயோகியின்வ்ருத்தியையும் சொல் லுகிறேன். ஆத்மாவிற்குரிய இவ்விதரூபங்கள் ஸூக்ஷ்மமாகையால் அவைகளை யோகாப்யாஸத்தால ஸ்தூலசரீரத்திலிருந்துவிடுபட்ட வனே பார்ப்பான். புகைபோன்றபனியானது எவ்விதம் ஆகாயத்தில் வியாபிக்குமோ அவ்விதம் ஸ்தூலசரீரத்திலிருந்துவிடுபட்ட யோகி யின் பார்த்திவமான ஸூக்ஷ்மரூபம் உலகத்தைவ்யாபிப்பதாயிருக்கும். பிறகு, புகைபோன்ற அந்தரூபம் மறைந்ததும் இரண்டாவது ரூபம் தோன்றும். அப்போது ஆகாயத்திலுள்ள ஜலரூபத்தைப்போல யோகியானவன் அந்தச் சரீரத்திலேயே ஜலரூபத்தைப் பார்க்கிறான். ஜலரூபத்தின் தோற்றத்தையும் மீறிச்செல்லும்பொழுது இந்த யோ கிக்குத் தேஜோரூபம் பிரகாசிக்கிறது. இந்தயோகிக்குத்தோன்றும் அந்தத்தேஜோரூபம்விலகினபின் ஸூக்ஷ்மமும் அழிவிலலாததுமான வாயுவின்ரூபம் மஞ்சள்வஸ்ரதிம்போல அந்தயோகிக்குக் குறைவின் றிப் பிரகாசிக்கிறது. அந்தவாயுரூபம்விலகியபின் ஆகாசரூபம் தோன் றுகிறது. ஆகாசரூபம்விலகியபின் அந்தயோகிக்குப் புத்தியின்ரூபம் பிரகாசிக்கிறது. அந்தயோகிக்கு ஆட்டுமயிரின்ரூபத்திற்குச்சரி யானநிறமுள்ளதாகப் புத்தியின்ரூபம் பிரகாசிக்கிறது. பிறகு, பரி

1 சரீரததிற்கு வெளியிலுள்ளதும் உள்ளிலுள்ளதும் என்றுகருததது.

2 ஐந்துபூதங்கள் அகங்காரம் புத்தி இவைகளைப்பற்றியதாரணைகள் ஏழு. ஏழுஎன்பதற்குப் பலவிதமான தாரணைகளென்று பொருளகொள்ளவேணடும். 'தாரணைஎன்பது ஒருவிஷயததில மனத்தை நிறுத்திவைப்பது' என்பது பழையஉரை.

சுத்தமான ஆகாசஸ்தானத்தில் லயமடைந்து அந்த யோகியானவன் அகங்காரத்தில் பிரகாசிக்கிறான். ப்ரம்மத்தை அடைகிறயோகிக்குக் [1] கறுத்ததும் அகங்காரத்தின் லயஸ்தானமுமான ஆகாயமும் உபதேசிக்கப்பட்டிருக்கிறது. இவ்விதஸித்திகளுண்டானபின் உண்டாகும்பிரயோஜனங்களை என்னிடமிருந்துகேள். பூமியைஜயித்ததினாலுண்டானஐஶ்வர்யங்களுள்ளவனுக்கு இஷ்டப்படிஸ்ருஷ்டிக்கும் சக்தி உண்டாகிறது. அந்தயோகியானவன் பிரம்மதேவரைப்போலக் கலக்கமில்லாதவனாகித் தன்சரீரத்திலிருந்து பிரஜைகளை உண்டுபண்ணுகிறான். வாயுவின்ஜயத்தாலுண்டாகும் ஐஶ்வர்யம்வந்தால் கையாலோ காலாலோ கட்டைவிரல்நுனிமாத்திரத்தாலோ பூமியை நடுங்கச்செய்வான். ஆகாசஜயத்தை அடைந்தவன் ஆகாயத்திற்குச் சரியான ரூபமுள்ளவனாயிருப்பதால் ஆகாயத்தில் விளங்குவான்; தன் ஆகிருதியில [2]அந்தர்த்தானசக்தியுடையவனுமாவான். ஜலத்தை ஜயித்தவன் இஷ்டப்படி தடாகமுதலியவற்றின்ஜலங்களைக்குடிக்கச் சக்தியுள்ளவனாவான். தேஜஸ்ஸைஜயித்தால இந்தயோகியின் தைஜஸமானரூபமானது காணப்படுவதுமில்லை; அப்படியே அவிவதுமில்லை. அகங்காரமென்குஜயிக்கப்பட்டால இந்தஐந்துபூதங்களும் இந்த யோகிக்கு வசமாகச்செலலுவனவாகவிருக்கும். இந்தஆறுக்கும் ஆத்மாவானபுத்தியானது ஜயிக்கப்படுமானால் (அணிமாமுதலிய) ஐஶ்வர்யமுடையவனாவான். தோஷமிலலாதஅறிவானது பூர்ணமாக இந்தயோகியை அடைந்திருக்கும். அவ்விதமே புத்திமுதலியவைகளுடன்சேர்ந்த ஸ்தூலமாகக்காணப்படும்ஆத்மரூபத்தை வ்யக்தமென்றுபெயர்கொண்ட இவ்வுலகமானது எந்தப்ரம்மத்திலிருந்து வெளிவந்ததோ அந்தஸூக்ஷ்மமான ப்ரம்மரூபமாகத் தெரிந்துகொள்ளுகிறான். அவைகளின் ஸூக்ஷ்மமானப்ரம்மத்தைப்பற்றிய வித்தையை என்னிடமிருந்து விரிவாகக்கேள். அப்படியே [3]ஸாங்க்ய சாஸ்திரத்திலசொல்லியதும் ஸ்தூலமானபிரபஞ்சத்தைப்பற்றியதுமானவிஷயத்தையும் முதலில் என்னிடமிருந்து தெரிந்துகொள். யோகம், ஸாங்க்யம் இரண்டிலும் வேற்றுமையின்றி இருபத்தைந்து தத்வங்கள் ஸமமாயிருக்கின்றன. அவைகளிலுள்ள விசேஷத்தை என்னிடமிருந்து கேள். உற்பத்தி, வளர்ச்சி, ஜரை, மரணம்என்ற நான்குலக்ஷணங்களுடன்கூடியதுவ்யக்தமென்றுசொல்லப்படுகிறது. இதைவிட வேறாயிருப்பது அவ்யக்தமென்று சொல்லப்படுகிறது. வேதத்தில கூறிய ஸித்தாந்தங்களிலும் இரண்டு ஆத்மாக்கள் உதா

1 வேறுபாடம். 2 வேறுபாடம். 3 வேறுபாடம்.

கரிக்கப்படுகின்றன. அவைகளில் முதலானதை (முன்கூறிய) நான்கு லக்ஷணங்களுள்ளதும் அவ்யக்தத்திலிருந்துஉண்டானதும் நான்கு விதமானபுருஷார்த்தங்களுக்குக்காரணமுமான புத்தியென்று சொல்லுகிறார்கள். மற்றொன்றான புத்தியென்னும்ஸத்வம் க்ஷேத்ரஜ்ஞனென்னும்ஜீவன் இவ்விரண்டும் அவ்யக்தலக்ஷணமுள்ளவையாகும். வேதங்களில்சொல்லப்படும்இரண்டுஆத்மாக்களும் விஷயங்களில் பற்றுதலுள்ளவைகளாயிருக்கின்றன. விஷயங்களை விலக்கி அவைகளிலிருந்து வேறாக்ஆத்மாவைஅறிவது ஞானமுள்ளவர்களின்லக்ஷணமென்று தெரிந்துகொள். அவன் அபிமானமில்லாதவனும் அகங்காரமில்லாதவனும் த்வந்த்வங்களிலிருந்து விலகியவனும் ஸந்தேகங்களை அறுத்தவனுமாயிருப்பான்; கோபிக்கவும்மாட்டான்; பகைக்கவும்மாட்டான்; பொய்யானசொற்களைப் பேசமாட்டான்; நிந்திக்கப்பட்டாலும் அடிக்கப்பட்டாலும் ஸ்நேகத்தைப்பாவிப்பதல்லாமல கேடுநினைக்கமாட்டான்; கடுஞ்சொல், கொடியசெய்கை, மனத்தில்கெட்டஎண்ணம் இம்மூன்றையும்விலக்கினவனும் எல்லாப்பிராணிகளிடங்களிலும் ஒரேநிலையுள்ளவனுமாயிருந்துகொண்டு ப்ரம்மதேவரைப்போன்றவனாயிருப்பான்; விருப்பமுள்ளவனல்லாதவனும் விருப்பமில்லாதவனலலாதவனும் சரீரயாத்ரைமட்டில் நிலையுள்ளவனும் சாபலயமில்லாதவனும் பயமற்றவனும் அடக்கமுள்ளவனும் ஒருவிதவேஷமுமில்லாதவனும் வேஷமில்லாதவனலலாதவனுமாயிருப்பான். இவன்மனம் ஏகாக்ரத்தன்மையிலலாதிராது. பழுதில்லாத ஸங்கலபமுடையவனாயிருப்பான். எலலாப்பிராணிகளிடமும் ஒரேவிதமானஸ்நேகமுள்ளவனும் மண்கட்டியையும் கல்லையும் பொன்னையும் ஸமமாகக்கருதுபவனும் விருப்புவெறுப்புக்களில்ஸமமாயிருப்பவனும் தைரியமுள்ளவனும் தன்னைப்பற்றிய நிந்தைஸ்துதிகளை ஸமமாகக்கொண்டவனும் எலலாப்போகங்களிலும் விருப்பமற்றவனும் உறுதியானபிரம்மசரியவ்ரதமுள்ளவனும் எலலாப்ராணிகளுக்கும் கேடுசெய்யாதவனுமான இவ்விதஞானியானவன் முக்தியடைகிறான். யோகத்திலிருந்து எந்தக்காரணங்களால் எவ்விதம் முக்தி அடைகிறார்களென்று தெரிந்துகொள். யோகத்தாலுண்டாகும் அணிமாமுதலிய ஐஸ்வர்யத்தைவிட்டு விலகினவன் முக்தி அடைகிறான். இவ்விதம் (அந்தஅந்தஸித்தாந்தத்தின்) அபிப்பிராயப்படி உண்டாகும் அறிவானது ஸந்தேகமின்றி உனக்கு உபதேசிக்கப்பட்டது. இவ்விதமிருப்பவன் த்வந்த்வங்களிலிருந்து விடுபட்டவனாவான்; பரமாத்மாவையும் அடைவான்.

## இருநூற்றுநாற்பத்துமூன்ருவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சீ.)



(வ்யாஸர் பிராணிகளின்உயர்வுதாழ்வையும் ஞானத்தின்சிறப்பையும் சுகருக்குச் சொல்லியது.)

குருவின்உபதேசத்தைஅடைந்தபின் தீரபுருஷன் ஞானமென்னும்தெப்பத்தைப்பெற்றுக்கொண்டு மூழ்கினுலும் கிளம்பினுலும் தன்னுடையமோக்ஷத்திற்குக் காரணமானவித்தைதலைமறையே அடுத்தவனுயிருக்கவேண்டும்' என்றுசொன்னுர். சுகர், 'அந்தஞானம் எது? (ஜனனமரணங்கள்) இரண்டையும்விலக்கத்தக்கவித்தை எது? ப்ரவ்ருத்திரூபமானதர்மமா? அல்லது, நிவ்ருத்தியா?' என்றுகேட்க, வ்யாஸர் சொல்லத்தொடங்கினுர். 'காரணத்தின் ஸத்தையில்லாமலே ஸ்வபாவத்தால்உலகம்இருக்கிறதென்றுபார்க்கும்மூடனுனவன் புத்தியில்லாதவர்களும் [1]யுக்திதெரியாதவர்களுமான எல்லாச்சிஷ்யர்களையும் ஸந்தோஷிக்கச்செய்கிருன். அவன் யாதொருபயனையும் அடையமாட்டான். (ப்ரத்யக்ஷமாகக்காணப்படாததால ஈஸ்வரன் இல்லையென்றும் அந்தஅந்த வஸ்துக்களின்) ஸ்வபாவமே காரணமென்றும் ஓரே உறுதியாக எவர்கள கருதுகிருர்களோ அவர்கள் [2]முஞ்சையென்னும் புல்லைச்சோதித்து அதனுள்ளிருக்கும் இதழையும் வேறுஎதையும் அடையமாட்டார்கள். இந்தப்பக்ஷததைப்பிடித்துக்கொண்டு ஸ்வபாவமேகாரணமென்றறிந்து விலகுகிற அற்பபுத்தியுள்ளவர்கள் க்ஷேமத்தை அடையமாட்டார்கள். மூடச்செய்கையுள்ளவர்களின் மனத்திலுதிக்கும் ஸ்வபாவவாதமானது விநாசத்திற்கே காரணமாகும். ஸ்வபாவவாதம்பரிபாவவாதம்என்ற இவவிரண்டுவாதஙகளிலுமுள்ளகுற்றம் இவ்விதம் பகுத்துக்கூறப்படுகிறது. இவ்வுலகில் உழுதல் முதலியதொழில்களும் பயிர்களைச்சேர்ப்பதும் வாகனம் ஆஸனம் வீடு இவைகளும் அறிவுள்ளவர்களால் சிறந்தனவாகச் செய்யப்படுகின்றன. தோட்டங்கள், வீடுகள், நோய்கள், மருந்து இவைகளைப் பற்றி அறிவுள்ளவர்கள் நன்ருகச்சொலலுகிருர்கள். அறிவுள்ளவர்களால் இவைகள் செய்யப்படுகின்றன. அறிவானது பொருள்களுடன் சேரும்படிசெய்யும். அறிவானது க்ஷேமத்தை அடையச்செய்யும். அறிவிற்சிறந்த லக்ஷணமுள்ள அரசர்கள் அறிவினுல் ராஜ்யத்தை அனுபவிக்கின்றனர். பிராணிகளுக்குள்ளமேன்மையும் தாழ்

[1] வேறுபாடம். [2] வேறுபாடம்

வும் அறிவாலேயே காணப்படுகின்றன. அப்பா! வித்தையால் உண்டு பண்ணப்பட்டபிராணிகளுக்கு இவ்வுலகில் வித்தைஒன்றேசிறந்தகதியாகும். பலவிதமானபிராணிகளனைத்திற்கும் ஜராயுஜம், அண்டஜம், உத்பிஜ்ஜம், ஸ்வேதஜம் என்று நான்குவிதமான ஜன்மமிருப்பதாகத் தெரிந்துகொள்ளவேண்டும். ஸ்தாவரங்களைவிட ஜங்கமங்கள் சிறந்தவைகளென்று அறியவேண்டும். சேஷ்டையென்பது (அறிவின்)விசேஷத்தை அறிவித்து ஜங்கமங்களைச் சிறந்தவைகளாகச்செய்யுமென்பது பொருத்தமுள்ளதுதான். இரண்டுகால்களுள்ளவைகளென்றும் பலகால்களுள்ளவைகளென்றும் ஜங்கமங்களை இரண்டுவிதமாகச் சொல்லுகிறார்கள். பலகால்களுள்ளபிராணிகளைவிட இரண்டுகால்களுள்ளபிராணிகளெல்லாம் சிறந்தவைகளாகும். இரண்டுகாலுள்ள பிராணிகளையும் பூமியிலுள்ளமானிடர்களென்றும் ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவைகளென்றும் இரண்டுவிதமாகக் கூறுகிறார்கள். அவைகளில் பூமியில் ஸஞ்சரிப்பவைகள் சிறந்தவைகள். அவைகளே அன்னங்களைப் புஜிக்கின்றன. பூமியிலிருப்பவைகளையும் மத்தியமங்களென்றும் உத்தமங்களென்றும் இரண்டுவிதமாகச்சொல்லுகிறார்கள். தம் ஜாதிக்குரியதர்மங்களைச் செய்யுங்காரணத்தால் மத்தியமங்களும் சிறந்தவைகளாகும். மத்தியமங்களும் தர்மத்தை அறிந்தவைகளென்றும் அறியாதவைகளென்றும் இரண்டுவிதமென்று சொல்லுகிறார்கள். அவைகளில், தர்மமறிந்தவைகள் காரியாகாரியங்களை அறிந்தகாரணத்தால் சிறந்தவைகளாகும். தர்மமறிந்தபிராணிகளும் வேதமறிந்தவைகளென்றும் அறியாதவைகளென்றும் இரண்டுவிதமென்றுசொல்லுகிறார்கள். அவைகளில், வேதம் இவர்களிடம் நிலைபெற்றிருத்தலால் வேதமறிந்தவர்கள் சிறந்தவர்கள். வேதமறிந்தவர்களும் வேதத்தை ஓதுவிப்பவர்களென்றும் அஃதில்லாதவர்களென்றும் இரண்டுவிதமென்று சொல்லுகிறார்கள். அவர்களில் எல்லாத்தர்மங்களையும்அறியுங்காரணத்தால் ஓதுவிப்பவர்கள் சிறந்தவர்கள். தர்மங்கள் அவைகளின்பயன்கள் இவைகளுடன் வேதங்கள் அவர்களாலேயே அறியப்படுகின்றன. வேதங்கள்யாவும் தர்மங்களுடன் ஓதுவிப்பவர்களிடமிருந்து வெளியாகின்றன. ஓதுவிப்பவர்களும் ஆத்மாவை அறிந்தவர்களென்றும் அல்லாதவர்களென்றும் இருவகையரென்று கூறுகிறார்கள். அவர்களில், பிறப்புபிறப்பில்லாமைகளை நிச்சயஞ்செய்தகாரணத்தால் ஆத்மாவைஅறிந்தவர்கள் உயர்ந்தவர்கள். ப்ரவ்ருத்தி நிவ்ருத்தியென்னும் இரண்டுதர்மத்தை எவன்அறிகிறானோ அவன் பொதுவாக எல்லாம்அறிந்தவன். அவன் அனைத்தையும் விசேஷ

மாய் அறிந்தவன். அவன் உண்மையான அனுக்ரஹமுள்ளவனும் பழுதில்லாதஸங்கல்பமுள்ளவனும்உண்மைப்பொருளானவனும் பரிசுத்தனும் ஈஸ்வரனுமாகிறான். சப்தப்ரம்மத்தில் (அதாவது வேதத்தில்) நல்லஸாமர்த்தியமுள்ளவனும் பரப்ரம்மத்தில நிச்சயம்செய்துகொண்டவனும் தர்மத்தின் அறிவில் உறுதியுள்ளவனுமான அவனைத் தேவர்கள் பிராம்மணனென்று அறிகிறார்கள். யஜ்ஞத்திலும் தேவதைகளிடத்திலுமிருப்பதும் உள்ளிலிருப்பதும்வெளியிலிருப்பதுமான ப்ரம்மத்தை அறிகிறவர்களைப் பூஜிக்கிறோம். அவர்கள் தேவர்கள், அப்பா! அவர்கள்தாம் பிராம்மணர்கள். இவ்வுலகமனைத்தும் காரணத்துடன்கூட அவர்களிடம் வைக்கப்பட்டதாயிருக்கிறது அவர்களுடைய பெருமைக்கு ஒப்பானது ஒன்றுமில்லை. அவர்கள், உற்பத்தி இருப்பு முடிவுகளையும் கர்மங்களையும் முழுமையும் மீறிச்சென்று நான்கு விதமான பிராணிகளைனைத்திற்கும் ஈஸ்வரர்களும் ஸ்வதந்த்ரமான ஸாமர்த்தியம்பெற்றவர்களுமாயிருப்பார்கள்.

---

## இருநூற்றுநாற்பத்துநான்காவது அத்தியாயம.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(வ்யாஸர் மதம்யுகாதலியவற்றின் வேற்றுமையைச் சுகருக்குச் சொல்லியது.)

ஆனுதியான இந்த (ஞானநிலை பெற்றிருப்பதான) விருத்தியானது பிராம்மணனுக்கு விதிக்கப்பட்டிருக்கிறது. ஞானவான்தான் கர்மங்களைச்செய்கிறவனாகி எல்லாவற்றிலும் ஸித்தியைஅடைகிறான் ஆனால், கர்மாவில் இவ்விதம் ஸந்தேகம்ஏற்படாமலிருக்குமேயானால் கர்மாவானது [1]ஸித்தியைக்கொடுக்கும். (அந்த ஸந்தேகம் எவ்விதமென்றால்) கர்மாவானது ஸ்வபாவமா, அல்லது ஞானஸாதனமாவென்பதுவே. அவ்விதஸந்தேகத்தில் கர்மாவானது ப்ரம்மத்தையுத்தேசித்து ஞானஸாதனமென்கிறபக்ஷத்தில் [2]அது வேதவிதியாகும். யுக்தியினாலும் சாஸ்திரத்தில்காணப்பட்டிருக்கிற முறையினாலும் அதை விரிவாகஉரைப்பேன்; கேள். கர்மங்களில் சிலமனுஷ்யர்கள் புருஷனுடைய ஸாமர்த்தியத்தைக் காரணமாகவும், சிலர் தெய்வத்தைக் காரணமாகவும், வேறுசிலர் ஸ்வபாவத்தைக் காரணமாகவும் சொல்லுகிறார்கள். பலப்ராப்தியின்ஸ்வபாவத்தையனுஸரித்துப்பௌ

---

1 வேறுபாடம். 2 வேறுபாடம்.

ருஷம்,கர்மா,தெய்வம் இம்மூன்றும்சேர்ந்து ஸமமானகாரணமென்று சிலர் சொல்லுகிறார்கள். இம்மூன்றிலும் ஒன்று பிரதானமென்றும் மற்றவை அப்ரதானமென்றும் சிலர் சொல்லுகிறார்கள். கர்மத்தையே முக்யமாகக்கொண்ட [1]ஆருகதர்கள்விஷயத்தை இது ஒருஸமயமிருப்பதால் இவ்விதமென்றும், ஒருஸமயமில்லாததால் இவ்விதமில்லையென்றும்,ஒரேஸமயத்திலிருக்கிறதென்றும்இல்லாததென்றும்ஏற்படாததாலிரண்டுவிதமும் இல்லையென்றும், க்ரமமாக இருக்கிறதென்பதும் இல்லையென்பதும்ஏற்படுவதால் இரண்டுவிதமும்இல்லையென்பதில்லையென்றும் சொல்லுகிறார்கள். ஸத்வகுணம் மிகுந்தயோகிகள் ஸகலத்திற்கும் ஸமமான ப்ரம்மத்தையே காரணமாகப் பார்க்கிறார்கள். திரேதாயுகத்திலும் துவாபரயுகத்திலும் கலியுகத்திலும் ஜனித்தவர்கள் ஸந்தேகமுள்ளவர்களாயிருக்கிறார்கள். கிருதயுகத்திலுண்டானவர்கள் தவத்தில்மிகுந்தவர்களும் ஸம்சயமற்றவர்களும் ஸத்வகுணம் பொருந்தினவர்களுமாயிருக்கிறார்கள். கிருதயுகத்தில் எல்லாரும் ருக், யஜுஸ், ஸாமமென்னும் மூன்றும்வேதங்களிலும் பேதத்தைப் பாராதவர்களாகிவிருப்புவெறுப்புகளை [2]விலக்கித [3]தவத்தைச்செய்கிறார்கள். தவத்திற்குவேண்டியதர்மமுள்ளவனும் எப்பொழுதும்தவஞ்செய்பவனும் நல்லநிச்சயமுடையவனுமானமனிதன் அந்தத்தவத்தினால் மனத்தில்விரும்புகிற ஸகலகாமங்களையும் அடைகிறான். ஜகத்தைஸ்ருஷ்டிக்கிறபூதவஸ்துவானப்ரம்மத்தைத் தவத்தினால் அடைகிறான். அவ்விதமானவனாகி அதனால் எல்லாப்பிராணிகளுக்கும் பிரபுவாகிறான். அந்தப்ப்ரம்மமானது கர்மகாண்டங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. [4]ஆனால், அது காமகாண்டத்தைமாத்திரமறிந்தவர்களுக்கு அறியமுடியாது. உபநிஷத்துகளிலோவென்றால் அந்தப்ரம்மமானது தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. [1]அது கர்மயாகத்தால் அறியப்படுகிறதில்லை. க்ஷத்திரியர்கள் ஹிம்ஸாரூபமானயாகமுடையவர்களென்றும் வைச்யர்கள் ஹவிஸ்ப்பாகமுடையவர்களென்றும் சூத்திரர்கள்பணிவிடையையே யஜ்ஞமாகவுடையவர்களென்றும் பிராம்மணர்கள் ஜபயஜ்ஞமுள்ளவர்களென்றும் எண்ணப்படுகிறார்கள். வேதாத்யயனத்தினாலேயே பிராம்மணர் கிருதார்த்தராகிவிடுவார். மற்றக் கர்மங்களைச்செய்தாலும் செய்யாவிட்டாலும் (வேதார்த்தமான ப்ரம்ம

1 'கர்மஸ்தா:' என்பது மூலம். 'ஜைனர்கள்' என்பது பழையவுரை.

2 வேறுபாடம்.

3 'தபஸ்' என்பதுமூலம்; 'ஞானம்' என்பது பழையவுரை. மேலே 'தவம்' என்று வருமிடங்களிலும் இங்ஙனமே கொள்க.

4 வேறுபாடம்.

ஞானத்தினால்) எல்லாப்பிராணிகளிடத்திலும் அன்பைச் செலுத்தினவன் பிராம்மணனாகச்சொல்லப்படுகிறான். திரேதாயுகத்தின் ஆதியில் வேதங்களும் யாகங்களும் வர்ணாஸ்ரமங்களும் பிரிவற்றிருந்தன. துவாபரயுகத்தில் மனுஷ்யர்களுக்கு ஆயுள்குறைகிறபடியால் அவைகள் பிரிக்கப்படுகின்றன. துவாபரயுகத்தில வேதங்கள் மிகவும் சிதறிவிடுகின்றன; கலியுகத்திலும் அப்படியே காணப்படுகின்றன. கலியின் முடிவிலோவென்றால வேதஙகள் (சிலவிடத்தில்) காணப்பட்டும் (சிலவிடத்தில்) காணப்படாமலும் இருக்கின்றன. கலியில அவரவர்களுக்கு உரியதர்மங்களும் கோக்கள், பூமி, ஜலஙகள், ஔஷதிகள் இவைகளுடைய ரஸங்களும் அதர்மததினால் பீடிக்கப்பட்டு நசிததுவிடுகின்றன. வேதங்களும் வைதிகதர்மங்களும் ஆஶ்ரமங்களும் அதர்மத்தால் மறைந்துவிடுகின்றன. ஸ்வதாமங்களும் ஸ்தாவரங்களும் ஜங்கமங்களும்விகாரததையடைகின்றன. [1]மழையானது பூமியிலுள்ள எல்லாப் பிராணிகளையும் போஷிக்கிறதுபோல, ஒவ்வொருயுகததிலும் வேதங்கள் யமமுதலான யோகாங்கங்களைப் போஷிக்கின்றன. காலமானது நானாவிதமாகஏறபட்டிருக்கிறது. என்றால உனக்குமுன்சொல்லப்பட்டதும்பிரஜைகளை[2]உண்டுபண்ணுகிறதும்பக்ஷிக்கிறதுமான(பரமாத்மரூபமான) காலமானது ஆதியந்தமற்றது. பூதஙகளுடைய உற்பத்தியையும பாலனத்தையும் ஸம்ஹாரததையும் செய்வதும் நியந்தாவுமாயிருக்கிற அப்படிப்பட்டகாலத்தில ஒன்றுக்கொன்று தொடர்ச்சியாக நிரம்பஸ்ருஷ்டிக்கப்பட்டபூதஙகள் ஸவபாவத்தோடுகூடவே இருக்கின்றன. காலமே ஸ்ருஷ்டி. அதுவே துஷ்டி. அதுவே வேதம். அதுவே கர்ததா. அதுவே காரியம். அதுவே கர்மாவின் பயன். குழநதாய்! நீ என்னை எந்தவிஷயததைக்கேட்டாயோ அந்த விஷயத்தை உனக்குச் சொன்னேன்' என்று சொன்னார்.

---

## இருநூற்றுநாறபத்தைந்தாவது அத்தியாயம.

## மோக்ஷதாமம். (தொடர்ச்சி.)

(வ்யாஸர் ப்ரம்மஜ்ஞானததை அடையும்வழியைச் சுகருக்குச் சொல்லியது.)

இவ்விதம் சொலலக்கேட்ட சுகமுனிவர், ரிஷிஶ்ரேஷ்டரான வ்யாஸருடைய இந்தஉபதேசததைச் சிலாகிதது மோக்ஷதர்மார்த்

---

1 வேறுபாடம. 2 வேறுபாடம்.

தங்களுடன்கூடின இவ்விஷயத்தைக் கேட்கத்தொடங்கினார். 'பிரஜ்ஞையுள்ளவனும் யாகசீலனும் ஞானத்தைச்சம்பாதித்தவனும் அஸூயையில்லாதவனுமாயிருக்கிற ஸ்ரோத்ரியன் பிரத்யக்ஷத்தினாலும் யுக்தியினாலும் அறியப்படாததும் வேதங்களாலும் இவ்விதமென்று குறிப்பிட்டுக்காட்டமுடியாததுமான ப்ரம்மத்தைத் தவத்தினாலா? பிரம்மசர்யத்தினாலா ஸந்யாஸத்தினாலா புத்தியின் சக்தியினாலா ஞானமார்க்கம் அல்லது யோகமார்க்கத்தில் எப்படி அறிகிறான்? நான் உங்களைக்கேட்கிறேன். நீங்கள் சொல்லவேண்டும். புருஷர்கள் எந்த உபாயத்தினால் மனத்தையும் இந்திரியங்களையும் ஒரே விஷயத்தில் நிலைத்து நிற்கும்படி செய்கிறார்கள்? அந்த விஷயத்தையும் நீங்கள் விரிவாகச் சொல்லவேண்டும்' என்று கேட்டார். வியாஸர், 'வித்தை, தவம், ஐம்பொறிகளை அடக்கல், லோபத்தைத்தள்ளுதல் இவைகளில்லாமல் ஒருவனும் ஸித்தியடையமாட்டான். ஸகலமான மஹாபூதங்களும் ஈச்வரனுடைய முதல்ஸ்ருஷ்டியிலுண்டானவைகள். அவைகள் பிராணிகளுடைய [1]கூட்டத்தில் சரீராபிமானிகளிடத்தில் அதிகமாகப் பிரவேசித்திருக்கின்றன. அது எவ்விதமென்றால், சரீரிகளுக்குப் பூமியிலிருந்து தேகமும் ஜலத்திலிருந்து உதரமும் தேயுவிலிருந்து கண்களுமுண்டாயினவென்று ரிஷிகளால் கருதப்படுகின்றன. வாயுவானது பிராணாபானங்களைப்பற்றியிருக்கிறது. (நாஸிகைமுதலான) துவாரங்களில் ஆகாயமும், பாதத்தில் விஷ்ணுவும், [2]பலத்தில் இந்திரனும் பிரவேசித்திருக்கிறார்கள். உதரத்தில் அக்னி பிரவேசித்துப் புஜிக்கவிரும்புகிறான். காதுகளில் திக்தேவதைகள் ஸ்ரோத்ரேந்திரியமாகவும், நாவில் ஸரஸ்வதி வாகிந்திரியமாகவுமிருக்கிறார்கள். மெய், வாய், கண், மூக்கு, செவி இவ்வைந்தும் புருஷனுக்கு விஷயத்தினனுபவத்திற்குக் காரணமானதால் [3]ஞானேந்திரியங்களென்று சொல்லப்படுகின்றன. சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் இவ்வைந்தும் இந்திரியங்களுக்கு விஷயங்கள். இந்திரியங்கள் மனத்துடன் ஸம்பந்தப்பட்டுத் தனித்தனியே தங்கள் விஷயங்களைத் தெரிவிக்கின்றன. ஸாரதியானவன் தனக்குவசப்பட்ட குதிரைகளை ஏவுவதுபோல மனமானது இந்திரியங்களை (விஷயங்களில்) ஏவுகிறது. மனத்தையும், ஹ்ருதயத்தைஅடைந்தஜீவன் எப்பொழுதும் ஏவுகிறான். ஆகையால், இந்திரியங்களையும் விஷயங்களையும் ஸம்ஹரிப்பதிலும் ஸ்ருஷ்டிப்பதிலும் மனமானது அதிகாரமுடையது. அதுபோல மனிதனுடைய ஸம்ஹாரத்திலும் ஸ்ருஷ்டியிலும் புத

[1] வேறுபாடம். [2] 'கையில்' என்பது பழையவுரை. [3] வேறுபாடம்.

தியை உபாதியாகவுடையஜீவன் அதிகாரி. இந்திரியங்கள், விஷயங்கள், உஷ்ணம் சீதமுதலிய இயற்கை, புத்திவ்ருத்தி, மனம், பிராணன், அபானன், ஜீவன் (இவைகளெல்லாம்) எப்பொழுதும் பிராணிகளுடைய தேகங்களிலிருக்கின்றன. [1]புத்திக்குஆதாரமில்லை. இந்தப் பதினாறுகுணங்களும் புத்தியின் விருத்தியே. புத்தியை வாஸனையானது ஸ்ருஷ்டிக்கிறது; குணங்களை ஒருவிதத்தாலும் ஸ்ருஷ்டிக்கிறதில்லை. இவ்விதம் பதினாறு குணங்களால் சூழப்பட்ட பதினேழாவதான அந்தர்யாமியை மனத்தையடக்கியவனை வேதியன் மனத்தினால் தன்புத்தியில் பார்க்கிறான். இந்தச்சைதன்யமான ஆத்மாவானது கண்ணுக்குப்புலப்படாதது; எல்லா இந்திரியங்களாலும் அறியமுடியாதது. பெருமையுடைய ஆத்மாவானது மனமாகிற தீபத்தினால் பிரகாசிக்கிறது. ஆத்மாவானது சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்னும் பூதகுணங்களில்லாதது. (ஆகையால்) நாசமற்றது. [2]அது சரீர இந்திரியங்களின்றிச் சரீரங்களிலிருந்து கொண்டு பார்க்கிறது. அது வ்யக்தமில்லாதது. மரிக்கும் தன்மையுள்ள எல்லாச்சரீரங்களிலும் வைக்கப்பட்டதும் மரணமற்றதுமான அவ்யக்தமான ஆத்மாவைச் சாஸ்திரத்தையனுஸரித்துப் பார்க்கிறவன் சரீரநாசத்தின்பிறகு பிரம்மமாகவே ஆகிறதற்குத் தக்கவனாகிறான். பண்டிதர்களானவர்கள், வித்வானும் நல்லவம்சத்திலுதித்தவனுமாயிருக்கிற பிராம்மணனிடத்திலும் பசுவினிடத்திலும் யானையினிடத்திலும் நாயினிடத்திலும் நாயின் மாம்ஸத்தைப் பாகம்செய்யும் நீசனிடத்திலும் ஸமமான ப்ரம்மதிருஷ்டியுடையவர்களாயிருக்கிறார்கள். இவ்வுலகத்தையெல்லாம் சூழ்ந்திருக்கிற மிகப்பெரிதான அந்த ஓரே ஆத்மாவானது ஸ்தாவரங்களும் ஜங்கமங்களுமான ஸகல பூதங்களிலும் வஸிக்கிறது. எப்பொழுது ஜீவனானவன் தன்ஸ்வரூபத்தை எல்லாப்பிராணிகளிடத்திலும் எல்லாப்பிராணிகளையும் தன்னிடத்திலும் பார்க்கிறானோ அப்பொழுது [3]ப்ரம்மமாகிறான். என்னுடைய

1 'அந்தர்யாமிக்கு இந்தத்தேகாதிரூபமான ஓர் ஆதாரமுமில்லை. இந்த ஞானரூபியான ஜீவன் அந்த அந்தர்யாமிக்கு விசேஷணமானவன். அந்தர்யாமி தைஜஸாஹங்காரத்திலிருந்து உண்டான இந்திரியங்களைப் படைக்கிறான். தனக்கு விசேஷணமான ஜீவனைப்படைப்பதென்பது இல்லை' என்றும் கொள்ளலாம்.

2 'அது சரீர இந்திரியங்களின்றி இருப்பது. அந்த அந்தர்யாமியைத் தம் தம் சரீரங்களுக்குள்ளேயே பார்க்கவேண்டும்' என்றும் கொள்ளலாம்.

3 'ப்ரம்மஸம்பத்யதே' என்பது மூலம்.

ஆத்மாவில் ஆத்மாவானது எவ்வளவாயிருக்கிறதோ வேறு ஆத்மாவிலும் ஆத்மா அவ்வளவாயிருக்கிறது' என்று எவன் எப்பொழுதும் அறிகிறானோ அவன் முக்தியை அடையத்தக்கவனாவான். எல்லாப்பிராணிகளுக்கும் ஆத்மபூதனும் எல்லாப் பிராணிகளுக்கும் ஹிதனும் மார்க்கமற்றவனும் பிரம்மமாவதற்கு விருப்பமுள்ளவனுமான ஞானியினுடைய மார்க்கத்தில் தேவர்களும் மயக்கத்தை அடைகிறார்கள். ஆகாயத்தில் பக்ஷிகளின் கதியும் ஜலத்தில் மத்ஸ்யங்களின் கதியும் அறியப்படாமைபோலப் பிரம்மத்தை அறிந்தவர்களுடையகதியானது அறியப்படுகிறதில்லை. காலமானது ஸகலமான பூதங்களையும் தானாகவே தன்னிடத்திலேயே ஜீரணமாகும்படிசெய்கிறது. அவ்விதகாலமும் எந்தப்பரமாத்மாவினிடத்தில் ஜீர்ணமாகிறதோ அந்தப் பரமாத்மாவை இவ்வுலகில் ஒருவனும் அறியமுடியாது. மேலும் கீழும் குறுக்கிலும் நடுவிலும் போகிறதல்லாததும் ஓரிடத்திலிருந்தும் ஒன்றையும் கிரகிக்காததுமான பரமாத்மாவினுள், இந்த ஸகலலோகங்களும் இருக்கின்றன. இவைகளில் யாதொன்றும் அவனுக்கு வெளியிலில்லை. ஒருவன், மனம்போன்றவேகத்துடன் நாணிலிருந்து விடுபட்டபாணம்போல ஆயிரம்வருஷங்கள்நடந்தாலும் காரணமான ஆத்மாவினுடைய முடிவை அடையமாட்டான். ஸூக்ஷ்மமான அந்த ஆத்மாவைக்காட்டிலும் ஸூக்ஷ்மமானபொருளில்லை; அதைக்காட்டிலும் ஸ்தூலமுமில்லை. அது எங்கும் கால்களும் கைகளும் கண்களும் தலைகளும் முகங்களும் காதுகளுமுள்ளதாயிருக்கிறபடியால், உலகத்திலுள்ள எல்லாவற்றையும் வ்யாபித்துக்கொண்டிருக்கிறது. அது அணுவிற்கும் அணு; பெரிதிற்கும்பெரிது. அது ஸகலபூதங்களினுள்ளேயும் நிலையாயிருந்தும் காணப்படுகிறதில்லை. ஆத்மாவிற்கு அக்ஷரமென்றும், க்ஷரமென்றும் இரண்டுவிதமானபிரிவுகள் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளில் நசிக்கின்ற ஜடமான க்ஷரமானது ஸகலபூதங்களிலுமிருக்கிறது. சைதன்யமான அக்ஷரமானது அழிவற்ற ஸ்வயம்பிரகாசமான ஸ்வரூபத்திலிருக்கிறது. அந்த அக்ஷரமானது ஸ்தாவரஜங்கமங்களான ஸகலபூதங்களுக்கும்ஈசனும் ஒன்பது துவாரங்களுடைய சரீரத்தைஅடைந்து [1]ஹம்ஸமாயும் சலனமற்றதாயும் பரவசமில்லாததாயுமிருக்கிறது. தத்வத்தைஅறிந்தவர்கள் பிறவியில்லாததான அக்ஷரத்திற்குச் சரீரத்தின்நாசம் குறைபடுதல் மாறுதல்முதலியவைகளை அடைவதாலும் புதியசரீரங்களை அடைவதினாலும் ஹம்ஸத்தன்மையென்றுசொல்லுகிறார்கள். ஹம்ஸமாகச்சொல

1 சலனமுள்ளது.

லப்பட்டஜீவனும் ராசனுனஅக்ஷரமும் விகாரமற்றபிரம்மரூபமான அக்ஷரந்தான். அந்தக்கூடஸ்தமான பிரம்மத்தை அறிந்தவன் அதை அடைந்து ஜனனமரணங்களை விலக்கிக்கொள்ளுகிறான்.



## இருநூற்றுநாற்பத்தாறுவது அத்தியாயம.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)

(வ்யாஸர் யோகத்தின்முறையைச் சுகருக்குச் சொல்லியது.)

ஸத்புத்ரா! என்னிடம்கேட்டஉனக்கு இப்பொழுது வாஸ்தவமான ஞானிகளுடையதர்மத்தை உள்ளபடி சொன்னேன். இனிமேல் யோகத்தின்காரியத்தை முழுதும் சொல்லப்போகிறேன். அதனையும் கேட்கக்கடவாய். குழந்தாய்! புத்தி மனம் இந்திரியங்கள்எல்லாம் சேர்ந்து (பிரவிருத்தியற்று) ஒன்றாயிருப்பதுவே கெடுதலற்ற ஆத்மாவினுடைய உத்தமமான ஞானஸ்வரூபம். அப்படிப்பட்ட இந்த ஆத்மஸ்வரூபமானது மனத்தையும் இந்திரியங்களையும் நிக்ரகித்தவனும் தியானசீலமுடையவனும் ஆத்மாவில் பற்றுதலுள்ளவனும்(யமநியமமுதலான) சுத்தகாமங்களுள்ளவனுமாயிருக்கிறவிதவானால் அறியக்கூடியது. வித்வான்கள் யோகதோஷங்களாகநினைக்கிற காமம், குரோதம், லோபம், பயம், ஸவப்னம்என்ற ஐந்தையும் வேருடன் அறுக்கவேண்டும். (அதெப்படியெனில்,) தீரனானபுருஷன் மனோநிக்ரஹத்தால குரோதத்தையும் ஸங்கலபத்தையும்விலக்கிக் காமத்தையும் வெலலுவான்; புத்தியினுடையநல்லவிசாரத்தினால நித்திரையைவெல்ல வல்லவனுவான். தைரியத்தால ஆண்குறியையும் உதரத்தையும் ரக்ஷிக்கவேண்டும். நேத்திரத்தால கைகால்களைக் காக்கவேண்டும். கண்காதுகளை மனத்தால ரக்ஷிக்கவேண்டும் மனத்தையும் வாக்கையும் செய்கையினால ரக்ஷிக்கவேண்டும். ஜாக்ரதையினால் பயத்தையும் பெரியோர்களின்பணிவிடையினால லோபத்தையும் விலக்கவேண்டும். இவ்விதம் எப்பொழுதும் சோம்பலில்லாதவனுகி இந்தயோகமலங்களை விலக்கவேண்டும். அக்கினிகளையும் பிராம்மணர்களையும் பூஜிக்கவேண்டும். தேவதைகளையும் வணஙகவேண்டும். அசுபமும் துன்பத்துக்குக்காரணமும் மனத்தைவருத்துகிறதுமான வார்த்தையைச் சொலலக்கூடாது. ஸ்தாவரஜங்கமமாயுள்ள இந்தவுலகமனைத்தும் எந்தஸூத்ராத்மாவினுடையவிரிவோ அப்படிப்பட்ட தேஜோமயமான அந்தஸூத்ராத்மாவானது (இவ்வுலகத்துக்குக்) காரணம்.

தியானம், வேதாத்தியயனம், தானம், ஸத்தியம், லஜ்ஜை, நேர்மை, பொறுமை, சுசி, ஆகாரசுத்தாலுண்டானசுக்தி, இந்திரியங்களின் நிக்ஷை இவைகளால் ஸத்வகுணம் விருத்தியடைகிறது. அது பாவத்தையும் நிவிருத்திசெய்கிறது. இப்படிப்பட்ட குணங்கள்பொருந்திய புருஷனுக்கு ஸகல அர்த்தங்களும் ஸித்திக்கின்றன. ஞானமும் விருத்தியடைகிறது. இவன் எல்லாப்பிராணிகளிடத்திலும் ஸமபுத்தியுள்ளவனும் தானகக்கிடைத்ததிரவியத்தினால் ஸங்கோஷிக்கிறவனுமாயிருக்கவேண்டும். இவன் பாபநிவிருத்தியை அடைந்தவனும் ஸத்வகுணம்மேலிட்டவனும் மிதமான ஆகாரமுள்ளவனும் இந்திரியங்களை அடக்கினவனுமாயிருந்துகொண்டு காமக்குரோதங்களை வசஞ்செய்து மகத்தத்வத்திற்குக் காரணமானபிரதானத்தை வசஞ்செய்யவேண்டும். மனத்தையும் இந்திரியங்களையும் விஷயங்களிலிருந்துதிருப்பி ஒருமுகப்படுத்தி முன்இரவிலும் பின்இரவிலும் ஸமாதியிலிருந்து [1] புத்தியில் மனத்தை நிறுத்தவேண்டும். ஐந்து இந்திரியங்களுள்ள இந்தப்பிராணியினுடையபுத்தியானது, ஓர்இந்திரியம் [2] துவாரமுள்ளதானால் அதன்வழியாகத் தோற்பையினுடைய பாதத்தின்வழியாக ஜலம் ஓடுவதுபோல வெளியில் ஓடுகிறது. ஆகையால், யோகமறிந்தவன், செம்படவன் கெட்டதானமத்ஸ்யத்தை முதலில்பிடிப்பதுபோல மனத்தை முதலில் வசப்படுத்தவேண்டும்; பிறகு, ஸ்ரோத்ரத்தையும், அதன்பிறகு நேத்ரத்தையும், பிறகு ரஸனத்தையும், பிறகு க்ராணத்தையும் வசப்படுத்தவேண்டும். யதியானவன், இவ்விதம் இந்திரியங்களை அடக்கி மனத்தில் நிலைபெறச்செய்யவேண்டும். அவ்விதமே ஸங்கல்பங்களையுந்தள்ளிவிட்டு மனத்தையும் புத்தியில்நிறுத்தவேண்டும். யதியானவன் ஐந்து இந்திரியங்களையும்சேர்த்து மனத்தில் ஸ்தாபிக்கவேண்டும். எப்பொழுது மனமுதலான இந்த ஆறும் நிலைபெற்றுப் பிறகு புத்தியில் லயித்துக் கலங்காமலுமிருக்குமோ அப்பொழுது மகத்தத்வமானது பிரகாசிக்கின்றது. அப்படியே (ஞானவடிவமான) ஆத்மாவும் ஸூக்ஷ்மமானபுத்தியில் புகையில்லாதஅக்கினிபோலவும் மிகவும் பிரகாசிக்கிறஸூர்யன்போலவும் ஆகாயத்தில் மின்னல்லொளிபோலவும் காணப்படுகிறது. அந்தஆத்மா வியாபகமாயிருப்பதால் எல்லாம் ஆத்மாவிடத்திலும் ஆத்மா எல்லாப்பொருள்களிடத்திலும் காணப்படுகின்றன. எந்தப்பிராம்மணர்கள் மனத்தை வசீகரணஞ்

1 'ஆத்மனி' என்பது மூலம்; இந்தஅத்யாயத்தில் ஆத்மசப்தம் வரும் இடந்தோறும், 'புத்தி' என்று பழையவுரை கூறுகிறது.

2 விஷயப்பற்றுள்ளதானால் என்பது.

செய்தவர்களும் தைரியவான்களும் பேரறிவுள்ளவர்களும் ஸகலமான பிராணிகளுடைய ஹிதத்திலும் பற்றுதலுள்ளவர்களுமாயிருக்கிறார்களோ அந்த மஹாத்மாக்களே அந்த ஆத்மாவைப் பார்க்கிறார்கள். இவ்விதம் [1]ஓரளவுள்ளகாலம் கடுமையானவிரதத்தோடு ஏகாந்தத்தில் ஒருவனாயிருந்துகொண்டு யோகத்தை ஆசரித்தவன் சுத்தமான ஆத்மஸ்வரூபத்திற்கு ஸமமானநிலையை அடைவான். தத்வவித்தானவன் யோகத்தால் லயம், விக்ஷேபம், கலக்கம், கல்லவாஸனையின் ஆக்ராணம், கேள்வி, பார்வை, ரஸத்திலும் ஸ்பர்சத்திலும் சீதத்திலும் உஷ்ணத்திலும் ஆச்சரியங்கள், வாயுவுக்குச் சமானமான [2]ஆக்ருதி, ஸகலசாஸ்திரங்களுடைய அர்த்தஸ்புரணம், திவ்யஸ்திரீஸங்கமமுதலானவைகள் ஆகிய இவைகளை அடைந்தும் லக்ஷ்யஞ்செய்யாமல் புத்தியிலேயே உபஸம்ஹாரஞ்செய்யவேண்டும். (காலை முன்ராத்திரி பின்ராத்திரி) மூன்றுகாலங்களிலும் நியமமாக மௌனியாயிருந்து யோகத்தில் அப்யாஸத்தைச்செய்யவேண்டும். பாண்டங்களில் பற்றுதலுள்ளவன் அவைகளை உள் அங்கணத்தில் சேர்த்துவைப்பதுபோல யோகாப்யாஸியானவன் இந்திரியக்கூட்டத்தை ஹ்ருதயத்தில் அடக்கிப் பர்வதத்தின்சிகரத்திலோ, அல்லது கோபுரத்திலோ, விருக்ஷத்தின் நுனியிலோ யோகத்தைச்செய்யவேண்டும். தினந்தோறும் ஒரேலக்ஷ்யத்தைப்பிடித்துக்கொண்டு தியானஞ்செய்யவேண்டும். மனத்தை யோகத்தினின்றும் விலகாமலிருக்கச் செய்யவேண்டும். யோகியானவன் எந்தெந்த உபாயத்தினால் சஞ்சலமான மனத்தை அடக்கமுடியுமோ அந்த அந்த உபாயத்தைக் கைக்கொள்ளவேண்டும்; அதிலிருந்தும் சலிக்கக்கூடாது. ஏகாக்ரமுள்ளவன் சூன்யமானகுகைகளையும் தேவாலயங்களையும் சூன்யமானக்ருஹங்களையும் தனக்கு இருப்பிடமாகச் செய்துகொள்ளவேண்டும். வாக்கினாலும் செய்கையினாலும் மனத்தினாலும் ஒன்றிலும் பற்றுவைக்கக்கூடாது. எல்லாவற்றிலும் உதாஸீனனும் குறைவான ஆகாரமுள்ளவனுமாயிருந்துகொண்டு லாபாலாபங்களில் ஸமமாயிருக்கவேண்டும். தன்னை நிந்திப்பவன் துதிப்பவன் இருவரிடத்திலும் ஸமமாயிருந்து சுபாசுபங்களை நினையாமலிருக்கவேண்டும். லாபத்தில் ஸந்தோஷிப்பதும் லாபமில்லாத காலத்தில் கவலைப்படுவதும் ஆகா. வாயுவைப்போல ஓரிடத்திலும் பற்றுதலில்லாதவனாகி ஸகலப்பிராணிகளிடத்திலும் ஸமமாயிருக்கவேண்டும். இவ்விதம் [3]அடங்கினசித்தமுள்ளவனும் ஸாதுவும் எல

---

1 'ஆறுமாதகாலம்' என்று ச்ருதி கூறுகிறது. 3 வேறுபாடம்.

2 ஆகாயமுதலியவற்றில் கமனம்.

லாப்பிராணிகளையும் ஒன்றுபோலப் பார்க்கிறவனும் ஆறுமாதம்விடாமல் யோகாப்பியாஸம் செய்கிறவனுமாயிருக்கிறவனுக்குப் பிரணவமானது தன் அர்த்தத்துடன் நன்கு விளங்குகிறது. (பொருள்விருப்பத்தால்) ஜனங்கள் மிகவும் வருந்துவதைப் பார்த்து ஓட்டாஞ்சில்லியையும் பொன்னையும் சமமாயெண்ணி இந்த யோகமார்க்கத்தில் பற்றுதலுடன் (பொருள் விஷயத்தில்) ஒழிவையடையவேண்டும்; மோகத்தை அடையக்கூடாது. ஜாதியில் குறைந்தவனும் தாமத்தையே விருப்பத்துடன் செய்கிற ஸ்திரீயும் இந்த யோகமார்க்கத்தால் உயர்ந்த கதியை அடைவார்கள். மனத்தை ஜயித்த யோகியானவன் பிறவியற்றதும் அநாதியும் ஜரையற்றதும் அழிவற்றதுமாயிருக்கிற பரமாத்மாவை அசைவற்ற இந்திரியங்களால் அறிந்து அறிவான். அணுவிற்கும் அணுவும் மஹத்திற்கும் மஹத்தும் [1]ஒன்றிலும் பற்றுததுமான அந்த ஆத்மாவைப் புத்தியினால் பார்க்கிறான். உள்ளபடி (என்னால்) சொல்லப்பட்ட மஹாத்மாவான [2]மஹரிஷியினுடைய வசனத்தைக் குருவினுபதேசத்தையனுஸரித்து மனத்தினால் ஆலோசித்து யுக்தியினால் நிச்சயித்து [3]மனோவசமுள்ளவர்கள் பிரம்மப்பிரளயம்வரையில் இந்தப் பிரம்மாவுக்கு ஒத்த நிலைமையை அடைகிறார்கள்' என்றுசொன்னார்.



## இருநூற்றுநாற்பத்தேழாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

(வ்யாஸர், கர்மத்தையும் ஞானத்தையும்பற்றிச் சுகருக்குச் சொல்லியது.)

சுகர், 'காமாவைச்செய்யென்றும் விடென்றும் இவ்விதம் வேதவசனமிருப்பதனால் மனிதர்கள் வித்தையினால் எந்தக் கதியை யடைகிறார்கள்? கர்மாவினால் எந்தக் கதியை அடைகிறார்கள்? இதைக் கேட்க விரும்புகிறேன். இதை நீர் எனக்கு விரிவாகச்சொல்லவேண்டும். இவைகள் ஒன்றுக்கொன்று வேறுபட்டவையும் விரோதமானவையுமாயிருக்கின்றனவே?' என்றுகேட்டார்.

(சுகர்) இவ்விதம் கேட்க, பராசரபுத்திரரான வ்யாஸர் தம் புத்திரரை நோக்கிப் பின்வருமாறு மறுமொழி சொல்லலானார்: 'முறையே அழிவதும் அழியாததுமான இந்தக் கர்மமார்க்கத்தையும் ஞான

1 வேறுபாடம். 2 பதஞ்சலி மஹரிஷி. 3 வேறுபாடம்.

மார்க்கத்தையும் விரித்துச்சொல்வேன். 'வித்தையினால் மனுஷ்யர்கள் எந்தக்கதியை அடைகின்றார்கள், கர்மாவினால் எந்தக்கதியை அடைகின்றார்கள்' என்கிற இரண்டினுடைய வித்தியாஸமானது அறிதற்கு அருமையானது. ஆகையால், மனத்தை ஸாவதானஞ்செய்துகொண்டு கேட்கக்கடவாய். ஆனால், தர்மமிருக்கிறதென்று சொல்லிவிட்டு இந்தத்தர்மவிஷயத்திலேயே இல்லையென்று சொல்லுகிறவனுடைய பக்ஷத்திற்குச்சமானமாக என்னுடைய வாக்கியம் தோன்றும். ப்ரவிருத்திரூபமான தர்மமொன்று நிவிருத்திரூபமானதொன்று என வேதங்கள் நிலைபெறுவதற்குக் காரணமான இரண்டுமார்க்கங்கள் உண்டு. பிராணியானது கர்மாவினால் பந்தத்தை அடைகிறது; ஞானத்தினாலோ விடுபடுகிறது. ஆகையால், ஸம்ஸாரத்தின் கரையைக்கண்டவர்களான யதிகள் கர்மாவைச் செய்கிறதில்லை. கர்மாவினால் மனிதன் மரித்து மறுபடியும் [1]பதினறு குணங்களுள்ள சரீரத்தை அடைகிறான். வித்தையினால் விகாரமற்றவனும் நாசமற்றவனுமாகி நித்தியமான பிரம்மமாகிறான். சில மனிதர்கள் அல்பபுத்தியினால் கர்மாவைச் சிலாகிக்கிறார்கள். அதனால், அவர்கள் அனேகர்களைச் சந்தோஷப்படுத்திக்கொண்டு வழிபடுகிறார்கள். மிக்க அறிவுபெற்றுத் தர்மத்தின் மேன்மையையறிந்தவர்கள் நதியில் ஜலபானஞ்செய்தவன் எவ்விதம் கிணற்றைச் சிலாகிக்கமாட்டானோ அவ்விதம் கர்மத்தைச் சிலாகிக்கிறதில்லை. மனிதன் ஸுகதுக்கங்களையும் ஜனனமரணங்களையும் கர்மாவிற்குப் பலனாக அடைகிறான். எந்தப் பிரம்மத்தில் சேர்ந்து துக்கத்தை அடைகிறதில்லையோ, எதில்சேர்ந்து மரிக்கிறதில்லையோ, எதில்சேர்ந்து பிறக்கிறதில்லையோ, எதில்சேர்ந்து மூப்பை அடைகிறதில்லையோ, எதில்சேர்ந்து வளருகிறதில்லையோ, எந்த ஸ்வரூபத்தில்பரமமும் வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாததும் சலனமற்றதும் விகாரமில்லாததும் கேடு, ஆயாஸம், மரணம் இவைகளற்றதும் பேதமில்லாததுமான அந்தப் பிரம்மமானது இருக்கிறதோ, எதில் ஸுகதுக்கங்களாலும் மானஸகர்மத்தினாலும் பாதிக்கப்படுகிறதில்லையோ, எதில் சேர்ந்தவர்கள் எல்லாப்பிராணிகளிடத்திலும் ஸமமாகவும் சிநேகமுள்ளவர்களாகவும் நன்மையையே செய்பவர்களாகவுமிருக்கிறார்களோ அந்தப் [2]பிரம்ம ஸ்வரூபத்தை வித்தையினால் அடைகிறான். குழந்தாய்! வித்யாமயனான புருஷன் வேறு. கர்மமயனான

1 ஞானேந்திரியம் ஐந்து, கர்மேந்திரியம் ஐந்து, பிராணன் ஐந்து, அந்தக்கரணம் ஒன்று.

2 'தத்' என்பது மூலம்; 'மோக்ஷநிலைமையை' என்றும் கொள்ளலாம்.

புருஷன்வேறு. நித்யனும் ஞானமென்னும் குணத்தையே உருவமாகக்கொண்டவனுமான அந்த வித்யாமயனை புருஷனை அமாவாஸ்யையில் ஸூக்ஷ்மமான ஒருகலையுடனிருக்கும் சந்திரனென்று தெரிந்துகொள். [1]மஹரிஷியினால் சொல்லப்பட்ட அவ்விஷயமான இந்த விஷயமானது ஆகாயத்தில் வளைவான நூல்போலப் பிதிதாயுண்டான சந்திரனைப்பார்த்து விஸ்தாரமாக அனுமானிக்கப்படுகிறது. அப்பா! [2]அந்தச்சந்திரனை மனத்தின் ஸமஷ்டிரூபனும் கலைகளின்ஸமூகத்தினால் பரிபூர்ணனும் மூர்த்தமானுமாயிருக்கிறபடியால் கர்மபுருஷனாக அறியக்கடவாய். பாத்திரத்தில் வைக்கப்பட்ட அக்னிபோல எப்பொழுதும் அந்தச் [3]சந்திரனிடத்தில் அமைந்திருக்கிறதேவனை நித்தியம ஸர்வஸங்கத்தியாகத்தினால மனத்தைஜயித்தவனை ஆத்மாவாக அறி. மேகத்தில ஜலத்திவலைபோல அந்தச் [4]சந்திரனிடத்திலிருக்கின்றதேவனை நித்தியம் [5]யோகத்தால மனத்தைஜயித்தவனைஜீவனாகத் தெரிந்துகொள். தமஸ்ரஜஸ் ஸத்வங்களைஜீவன்குணமாகவும் ஜீவனைப்பிரத்யகாத்மாவின்குணமாகவும் பிரத்யகாத்மாவைப் பரமாத்மாவின்குணமாகவும் அறியக்கடவாய். க்ஷேத்ரவித்துக்களானவர்கள் அசேதனத்தை ஜீவன்குணமாகவும் ஜீவனை ப்ரவிருத்தியுள்ளவனென்றும் எல்லாவற்றையும்சேஷ்டிக்கும்படிசெய்கிறவனென்றும் ஏழுலோகங்களையும் காப்பாத்தவனை ஜீவனைக்காட்டிலும் பரனென்றும் சொல்லுகிறார்கள்' என்றுசொன்னார்.

---

## இருநூற்றுநாற்பத்தெட்டாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(வ்யாஸர் ப்ரம்மசர்யத்தின்பெருமையைச் சுகருக்குச் சொல்லியது.)

சுகர், 'ஸகலஸாதாரணமாகக் கடவுளிடத்திலிருந்துண்டான பிரதானம்முதற்கொண்டு ஏற்பட்டஸ்ருஷ்டியையும் அவனவனுக்கும் தனித்தனியே விஷயங்களுடன்கூடிய இந்திரியங்களுடையரூபமான

---

1 'ப்ருஹதாரண்யகதர்சியான யாஜ்ஞவல்க்யரால' என்பது பழையவுரை.

2 'கலைகளின் ஸமூகத்தினால நிரம்பினவனான (சந்திரனை) பதினொரு விகாரங்களை ஸ்வரூபமாகக்கொண்டவனும் சரீரியும காமத்தினால் வசப்பட்டவனுமான புருஷனாக அறி' என்றும் கொள்ளலாம்.

3 'புருஷனிடத்தில்' என்றும் கொள்ளலாம்.

4 'கர்மபுருஷனிடத்தில்' என்றும் கொள்ளலாம்.

5 'கர்மதேகத்தில் காமயோகத்தினால உட்படுத்திக்கொள்ளப்பட்ட' என்றும் கொள்ளலாம்.

புத்தியின் ஸாமர்த்தியத்தினலே செய்யப்பட்ட [1]அதிகஸ்ருஷ்டியையும் கேட்டேன். இவ்வுலகில எந்தவிருத்தியைப்பிடித்துக்கொண்டு ஸத்துக்கள் பிரவிருத்திக்கிருர்களோ அந்த அந்தக் காலத்திற்குரியதான ஸத்துக்களுடைய அந்தவிருத்தியை மறுபடியும் நீங்கள் சொல்ல வேண்டுமென்று விரும்புகிறேன். கர்மங்களைச்செய்யென்றும் விட்டுவிடென்றும் வேதத்தில்சொல்லப்பட்டவசனத்தை நான் எவ்விதம் அறிவேன்? அதையும் விரிவாக (மறுபடியும்) சொல்லவேண்டும். நான் குருவான உங்களுடையசிக்ஷையினலே உலகவரலாற்றின் உண்மையை அறிந்தவனும் பரிசுத்தனுமாகிப் புத்தித் தேர்ச்சியடைந்து தேகமுடிவில் நிர்விகாரமான ஆத்மாவைப் பார்ப்பேன்' என்று சொன்ஞர். வ்யாஸர், 'இந்தவிருத்தியானது முன்காலத்தில பிரம்மாவினலே ஸ்வயமாக உண்டாக்கப்பட்டது. இந்தவிருத்தி மிகவும் முன்னேர்களும் ஸத்துக்களுமானமஹரிஷிகளால ஆசரிக்கப்பட்டது. பிரம்மரிஷிகள் பிரம்மசரியத்தினல உலகங்களை ஸாதிக்கிருர்கள். (ஆகையினல) ஆத்மாவினுடைய ஸம்ரயணை மனத்தினலே ஹ்ருதயத்திலுள்ள ஆத்மாவினிடத்தில்தேடிக்கொண்டு வனத்தில்கனிகிழங்குகளைபக்ஷித்து மிகப்பெரியதவத்தைஅனுஷ்டித்தும், புண்ணியஸ்தலங்களில்ஸஞ்சரித்தும்,பிராணிகளுக்குத்துன்பம்செய்யாமலும்,புகையில்லாததும் உலக்கைச்சத்தமில்லாததுமானபோஜனகாலத்தில்பிக்ஷைசெய்துகொண்டும், வானப்ரஸ்தாச்ரமத்திலிருக்கிறவன் பிரம்மமாவதற்குத்தக்கவனுகிருன். நீயும் சுபாசுபங்களை விலக்கிவிட்டு ஒருவரையும் துதியாதவனும் நமஸ்கரியாதவனும் எதனலாவது பசியைநிவ்ருத்திசெய்கிறவனுமாயிருந்துகொண்டு வனத்தில ஒருவனுக ஸஞ்சரிக்கக்கடவாய்' என்றுசொன்னுர். சுகர், 'இந்த வேதவசனமானது லோகவியவகாரத்தில விரோதிக்கின்றதே? (கர்மாவைச் செய்யென்றும் தள்ளென்றும்) சொல்லுகிறவசனங்கள் பிரமாணங்களானலே ஒன்றுக்கொன்று விரோதமிருப்பதால எவ்விதம் சாஸ்திரங்களாகும்? அப்பிரமாணங்களானலும் எவ்விதம் சாஸ்திரங்களாகும்? ஆகையால், இவ்விரண்டும் எப்படி பிரமாணமாகும்? கர்மங்களுக்கு விரோதமில்லாமல மோக்ஷம் எவ்விதம் ஏற்படுகிறது? இதைக்கேட்க விரும்புகிறேன்' என்ருர். சுகர் இவ்விதம்கேட்க, யோஜனகந்தியின் புத்திரரான வ்யாஸமுனிவர் அளவற்றதேஜஸுள்ள புத்திரரான சுகருடைய வசனத்தைப்புகழ்ந்து அவரைநோக்கி மறுபடியும் பின்வருமாறு மறுமொழிகூறலானுர். 'பிரம்மசாரி கிருகஸ்தன் வானப்பிரஸ்தன் ஸன்

---

[1] அவனவனுக்குத் தனித்தனியான ஸ்ருஷ்டி.

யாவரி இவர்களெல்லாரும் சாஸ்திரத்தில் சொன்னபடி அனுஷ்டித்தால உத்தமகதியை அடைகிறார்கள். யாராவது ஒருவனே நான்கு ஆஸ்ரமங்களையும் காமக்குரோதங்களில்லாமல் விதிப்படி அனுஷ்டித்தாலும் அவன் பரலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். இந்நான்கு ஆஸ்ரமங்களாகிற நான்குபடியுள்ள ஓர் ஏணியானது பிரம்மத்தினிடத்தில் சாத்தப்பட்டிருக்கிறது. இந்த ஏணியில் ஏறினவன் பிரம்மலோகத்தில் பூஜிக்கபபடுகிறான் அதிகாரியானவன் பிரம்மசாரியாகித் தன்னுயுளில் நாலிலொருபாககாலம் அஸூயையில்லாதவனுக்கும் தர்மார்க்கங்களில ஸமர்த்தனுகவும் குருவினிடத்திலாவது குருவின் புத்திரனிடத்திலாவது வாஸஞ்செய்யவேண்டும். குருவின்கிருகத்தில் (குரு சயனம்செய்த) பிறகு படுத்து (அவருக்கு) முன்னலெ எழுந்திருக்கவேண்டும். சிஷ்யனுலேயோ வேலைக்காரனுலேயோ எந்த எந்தக்காரியம் செய்யத்தக்கதோ அந்தஅந்தக்காரியத்தையெல்லாம் செய்துவிட்டு, 'செய்துவிட்டேன்' என்று சொல்லிக்கொண்டு குருவின்பக்கத்தில் நிற்கவேண்டும். எலலாக்காரியங்களிலும் ஸமர்த்தனுகி வேலைக்காரனுயிருந்து எலலாக்காரியங்களையும் செய்யவேண்டும். முன்னுக்குவர விருப்பமுள்ள பிரம்மசாரியானவன் எல்லா வேலைகளையும் செய்தபின் குருவினிடத்தில அத்தியயனஞ்செய்ய வேண்டும். வலப்பக்கமாக ஸமீபத்தில் இருக்கவேண்டும். குரு அழைத்தவுடன் அவரிடம் செல்லவேண்டும். சுத்தனும் ஸமர்த்தனும் குணசாலியுமாயிருந்துகொண்டு ஸமயம்பார்த்துத் தன் இஷ்டத்தைக் குறிப்பாகத் தெரிவிக்கவேண்டும். ஜிதேந்திரியனுயிருந்துகொண்டு நேத்திரத்தினுல ஸாவதானமாகக் குருவைப் பார்க்க வேண்டும். குரு புஜியாமலிருக்கும்பொழுது (தான்) புஜிக்கக் கூடாது. அவர் தீர்த்தபானஞ்செய்யாமலிருக்கும்பொழுது (தான்) தீர்த்தபானம் செய்யக்கூடாது. அவர உட்காராமலிருக்க, தான் உட்காரக்கூடாது. அவர் நித்திரைசெய்யாமலிருக்க, தான் நித்திரை செய்யவுங்கூடாது. [1]நிமிர்ந்தகைகளால அவர்பாதங்களை மெலலப் பிடிக்கவேண்டும். இடப்பாதத்தை இடக்கையினுலும் வலபாதத்தை வலக்கையினுலும் பிடிக்கவேண்டும். குருவை வணங்கிவிட்டு, 'ஓ! பகவானே! என்னை ஓதுவிக்கவேண்டும்' என்று சொல்லவேண்டும். 'பகவானே! ஓ! குருவே! இந்தக் காரியத்தைச் செய்யப் போகிறேன். இதை நான் செய்துவிட்டேன். பின்னும் எதை நீங்கள் சொலலுவீர்களோ அதையும் செய்வேன்' என்று எலலா

[1] உள்ளங்கைகளால் என்பது.

வற்றையுந்தெரிவித்து அனுமதிபெற்றுக்கொண்டு [1]விதிப்படிசெய்ய வேண்டும்; செய்துவிட்டு மறுபடியும் அவற்றையெல்லாம் குருவினிடம் தெரிவிக்கவேண்டும். பிரம்மசாரியானவன் அனுபவியாத கந்தங்களையும் ரஸங்களையும் அவன் பிரம்மசரியவிரதத்தை முடித்துவிட்டு அனுபவிக்கவேண்டுமென்பது தர்மங்களில் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. பிரம்மசாரிக்கு எந்தெந்தநியமங்கள் [2]விரிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றனவோ அவைகளெல்லாவற்றையும் ஒவ்வொருநாளும் அனுஷ்டிக்கவேண்டும். குருவைவிட்டு அகலவுங்கூடாது. இவ்விதம் சிஷ்யனான அந்தப்பிரம்மசாரியானவன் குருவுக்குத் தன்சக்திக்குத்தக்கபடி பிரியத்தைஉண்டுபண்ணி எல்லாஆஸ்ரமங்களிலும் இப்படியே யோக்கியமான செய்கையுடனிருக்கவேண்டும். சிஷ்யனானவன் வேதவிரதம் உபவாஸம் இவைகளால் தனது ஆயுளில் நான்கிலொன்று சென்றபிறகு குருவுக்குத் தக்ஷிணைகொடுத்து விதிப்படி விரதத்தை முடிக்கவேண்டும். பிறகு, விதிப்படிகொள்ளப்பட்ட மனைவியோடு அக்கினிகளை ஆதானஞ்செய்து முயற்சியுடன் விரதங்களைச்செய்துகொண்டு ஆயுளின் இரண்டாவதுபாகத்தில் கிருகஸ்தனாயிருக்கவேண்டும்.

---

## இருநூற்றுநாற்பத்தொன்பதாவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(வியாஸர் கிருஹஸ்தர்மத்தைச் சுகருக்குச் சொல்லியது.)

அதிகாரியானவன் ஆயுளினிரண்டாவதுபாகத்தில் தர்மமாக அடைந்த தாரத்துடன் அக்கினியை ஆதானஞ்செய்து நல்லவிரதமுள்ள கிருஹஸ்தனாயிருந்துகொண்டு இல்லத்தில் வஸிக்கவேண்டும். கிருகஸ்தனுக்கு வித்வான்களால் நான்குபிழைக்கும்வழிகள் கருதப்பட்டிருக்கின்றன. அவைகளில் குதிரில் தான்யமுடையவன் முதல் விருத்தியுள்ளவன். ஒருகுடம்தான்யமுள்ளவன் இரண்டாவதுவிருத்தியுள்ளவன். ஒருநாள்ஆகாரத்திற்குள்ளவன் மூன்றாவதுவிருத்தியுள்ளவன். புறாவின்விருத்தியுடையவன் நான்காவதுவிருத்தியுள்ளவன். இவர்களில் மேன்மேல்சொல்லப்பட்டவன் சிறந்தவனாகிறான். அவன் தன்தர்மத்தால் எல்லாஉலகங்களையும் ஜயித்தவன். ஒருகிருஹஸ்தனானவன் (யாகஞ்செய்தல், யாகஞ்செய்வித்தல், அத்தியயனஞ்

---

1 வேறுபாடம். 2 வேறுபாடம்.

செய்தல், அத்தியயனஞ்செய்வித்தல், தானஞ்செய்தல், தானம்வாங்குதல்) இவ்வாறுகர்மங்களையும் நடத்துகிறான். மற்றொருவன் (யாகம் அத்தியயனம் தானம்) இம்மூன்றிலே பிரவிருத்திக்கிறான். அவர்களில் மற்றவன் (அத்தியயனம், தானம்) இவ்விரண்டிலும் பிரவிருத்திக்கிறான். நான்காமவன் பிரம்மஸத்திரமென்கிற அத்தியயனத்தில் நிலைத்திருக்கிறான். (பெரியோர்கள்) கிருஹஸ்தகர்மங்களை மிகவும் பெரியவைகளாகச் சொல்லுகிறார்கள். கிருஹஸ்தன் தனக்காகப் பாகஞ்செய்யக்கூடாது. வீணாகப் பசுவை ஹிம்ஸிக்கவுங்கூடாது. (பசுமுதலான) பிராணியோ அல்லது (அபசுமுதலான) ஸ்தாவரவிருக்ஷமோ (சேதன) மந்திரத்தால் ஸம்ஸ்காரத்திற்குத்தக்கவை. ஒரு நாளும் பகலிலும் முன்னிரவிலும் பின்னிரவிலும் நித்திரைசெய்யக்கூடாது. இரண்டுகாலத்தின்மத்தியில போஜனஞ்செய்யக்கூடாது. ருதுகாலந்தவிர மற்றக்காலத்தில் மனைவியை அழைக்கவுங்கூடாது. கிருஹஸ்தனுடைய வீட்டில(வந்த)பிராம்மணன் ஒருவனும் பூஜிக்கப்படாமலும் போஜனஞ்செய்யாமலும் வஸிக்கக்கூடாது. அவ்விதமே அவனுடைய ஹவ்ய கவ்யங்களை வஹிக்கிற அதிதிகள் எப்பொழுதும் பூஜிக்கத்தக்கவர்கள். பிராம்மணர்கள் வேதாத்தியயன விரதத்தை அனுஷ்டித்து முடித்துவிட்டு வேதங்களை ஆவ்ருத்தி செய்துகொண்டும் தங்களுக்குரிய கர்மாவினால் ஜீவித்துக்கொண்டும் இந்திரியங்களை அடக்கித் தங்கள் கர்மங்களையும் தவத்தையும் செய்துகொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய ஹவ்யமும் கவ்யமும் பூஜைக்காகவே விதிக்கப்பட்டிருக்கின்றன. இந்தக் கிருஹஸ்தாஸ்ரமத்தில் நகம்வளர்த்துக்கொண்டு அலைகிறவனுக்கும் டம்பமாகக் கர்மாவைச் செய்கிறவனுக்கும் (பிதுக்களுக்கு ஸமர்ப்பிக்காமல்) அக்கினிஹோத்திரத்தை விட்டவனுக்கும் குருவினிடத்தில் பொய்யாக நடக்கிறவனுக்கும் (சண்டாளன்முதலான) எல்லாப் பிராணிகளுக்கும் விபாகமுண்டு. கிருஹஸ்தன் அவ்விதமே சமையல் செய்யாதவர்களான பிரம்மசாரிகளுக்கும் ஸந்யாஸிகளுக்கும் அன்னமளிக்கவேண்டும். ஒவ்வொருநாளும் கிருஹஸ்தன் விகஸத்தைப் புஜிக்கிறவனாகவும் அமிருதத்தைப் புஜிக்கிறவனாகவுமிருக்கவேண்டும். யாகத்தின் மிச்சம் அமிருதமாகும். அதைப் புஜிப்பது ஹவிஸ்ஸைச்சாப்பாடாகும். வேலைக்காரர்களுக்கு அளித்த மிச்சத்தைப்புஜிக்கிறவனை விகஸத்தைப் புஜிக்கிறவனாகச் சொல்லுகிறார்கள். வேலைக்காரர் அருந்தினசேஷம் விகஸம். யாகத்தின் சேஷம் அமிருதம். கிருஹஸ்தன் தன் தாரத்தினிடம் ரமித்துக்கொண்டு மனத்தை அடக்கி அஸூயையின்றி

இந்திரியங்களை ஜயித்து ரித்விக், உபாத்தியாயன், ஆசாரியன், அம்மான், அதிதி, தன்னை அடுத்தவன், பிராயமுதிர்ந்தவன், இளைஞன், ரோகி, வைத்தியன், ஞாதி, ஸம்பந்தி, பந்து, மாதா, பிதா, ஸமான கோத்ரத்தில் பிறந்தபெண், ஸகோதரன், புத்திரன், மனைவி, புத்திரி, வேலைக்காரர்கள் இவர்களுடன் கலகஞ்செய்யக்கூடாது. இந்தக் கலகங்களை விட்டால் எல்லாப் பாவங்களாலும் விடப்படுவான். இவர்களால் (பாகவிஷயத்தில்) கலகமில்லாமல் [1]ஜயிக்கப்பட்டவன் எல்லாவுலகங்களையும் ஜயிப்பான். ஸந்தேகமில்லை. ஆசாரியன் பிரம்மலோகத்துக்குத் தலைவன். பிதா ஸிருஷ்டிகர்த்தர்களின் லோகத்திற்கு அதிபதி. அதிதி இந்திரலோகத்திற்கும் ரித்விக்குக்கள் தேவலோகத்திற்கும் தன்கோத்திரத்தில் பிறந்த பெண்கள் அப்ஸரஸின்லோகத்திற்கும் ஞாதிகள் விஸ்வேதேவர்களின்லோகத்திற்கும் தன்னைச் சேர்ந்தபந்துக்கள் திக்குக்களுக்கும் தாயும் அம்மானும் பூலோகத்துக்கும் கிழவரும் இளையவரும் ரோகிகளும் இளைத்தவரும் ஆகாசத்துக்கும் [2]பிரபுக்கள். மூத்த தமையன் பிதாவுக்கு ஸமானம். மனைவியும் மகனும் தன்சரீரமே. தொண்டர்கள் தன்னுடைய நிழல். பெண்ணானவள் (தீனன்போல) மிக்க கருணைக்குஉரியவள். ஆகையால், இவர்களால கடிந்துவிலக்கப்பட்டாலும் வருத்தமின்றி எப்பொழுதும் பொறுக்கவேண்டும். வித்வானானவன் கிருககிருத்தியத்தில் ஜாக்கிரதையுள்ளவனும் சிரமத்தைப் பாராட்டாதவனுமாயிருந்துகொண்டு நித்தியமாகத் தர்மத்தையே செய்யவேண்டும். தனத்தில் ஆசையைவைத்துக்கொண்டு கர்மங்களையும் தர்மத்தையும் சிறிதும் செய்யக்கூடாது. கிருஹஸ்தவிருத்திகள் மூவகைப்படும். அவைகளுள் மேன்மேலுள்ளதைப் பரமகதியென்று சொல்லுகிறார்கள். அவ்விதமே அந்நான்கு ஆஸ்ரமங்களையும் மேன்மேலுள்ளவைகள் உயர்ந்தகதியென்றும் சொல்லுகிறார்கள். மேலே வரவிருப்பமுள்ளவன் (சாஸ்திரத்தில்) சொல்லப்பட்ட நியமங்களெல்லாவற்றையும் செய்யவேண்டும். கும்பத்தில் தானியமுள்ளவர்களும் உஞ்சசிலமென்னும்லவ்வொருநாள்விருத்தியைஉடையவர்களும் புறாவின்விருததியை அடைந்தவர்களுமான பூஜிக்கததக்க இவர்கள் எந்த ராஜ்யத்தில வஸிக்கிறார்களோ அந்தராஜ்யம் மிகவுஞ் செழிப்புள்ள

1 'பாகமிலலாமல செய்யப்பட்டவன்' என்பது பழையவுரை.

2 இவ்விதம் ஆசாரியன்முதலானவர்கள் அந்தஅந்த உலகத்துக்குத் தலைவர்களாயிருப்பதால அவர்களுடன கலகஞ்செய்யாதவன் அந்த எலலாவுலகங்களையுமடைவான்.

தாகும். எவன் மனத்தில வருத்தமின்றி இந்தக் கிருஹஸ்தவிருத்தி களை நடத்திவருகிருனே அவன் தனதுபித்ருபிதாமஹர்களான முன்னோர்கள்பதின்மரையும் தன்பின்னுள்ளவர்களானபதின்மரையும் பரிசுத்தர்களாகச் செய்கிருன். அவன் சக்கரவர்த்திகளுடைய உல கங்களுக்குலப்பானகதியை அடைவான். அலலது, இந்திரியஜய முள்ளவர்களுக்குள்ளகதி விதிக்கப்பட்டிருக்கிறது. உதாரமன முள்ளகிருகஸ்தர்களுக்கு நலமுள்ள ஸ்வர்க்கம் விதிக்கப்படுகிறது. விமானத்துடன்கூடியதும் வேதத்தில்காணப்பட்டதுமான ஸ்வர்க்கம் மிகவும் அழகானது. அடக்கமுள்ள மனமுடைய கிருஹஸ்தர்களுக்கு ஸ்வர்க்கலோகத்தில் நிலேயானஸ்திதி ஏற்படுகிறது. பிரம்மாவினுல இது படியாகஏற்படுத்தப்பட்டது. முறையாக (இந்த) இரண்டாவது ஆஸ்ரமத்தைஅடைந்துஅனுஷ்டிப்பதனுல் ஸ்வர்க்கத்தில் பூஜிக்கப் படுகிருன். இதற்குமேல் புத்திரமித்திராதிஸங்கததைவிட்டவர்களும் (தவத்தால்) சரீரத்தைவாட்டுகிறவர்களுமான வனவாஸிகளுடைய தும் கிருஹஸ்தாகளைக்காட்டிலும்சிறந்ததும் மிகவும் உதாரமுமான ஆஸ்ரமத்தை மூன்ருவதாகச் சொல்லுகிருர்கள். அதைக் கேள்.

---

## இருநூற்றைமபதாவது அத்தியாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



(வ்யாஸர் வானப்ரஸ்த தர்மத்தைச் சுகருக்குச் சொல்லியது.)

ஓ! யுதிஷ்டிர! பெரியோர்களால்சொல்லப்பட்ட கிருஹஸ்தர் களின் விருத்தியானது உனக்குச் சொலலப்பட்டது. அதன்பிறகு சொல்லப்பட்டிருக்கிறதை அறியக்கடவாய். அது முன்காலத்தில் வ்யாஸரால் மஹானுபாவரானதமதுபுத்திரருக்குச் சொல்லப்பட்டது. வ்யாஸர், 'புத்திரனே! கிரமமாக இரண்டாவதுவிருத்தியைத் தள்ளி விட்டுப் பத்னிமுதலானவர்களுடன்சேர்ந்து நிறைவேற்றக்கூடிய விர தத்தினுல் சிரமத்தைஅடைந்தவர்களும் எலலாஉலகங்களேயும்கொடுக் கிற ஆஸ்ரமஸ்வரூபர்களும் நன்குஆலோசித்து நிவிருத்தித்தவர்களும் புண்ணியதேசவாஸிகளுமான வானப்ரஸ்தாஸ்ரமத்தை அடைந்தவா களுடைய உத்தமமான மூன்ருவதுவிருத்தியைக் கேள். உனக்கு மங்களமுண்டாகும். கிருஹஸ்தனுனவன் எப்பொழுது சரீரத்தில் தோற்சுருக்கத்தையும் நரையையும் பௌத்திரனையும் பார்ப்பானே அப்பொழுது வனததையே அடையவேண்டும். ஆயுளின்மூன்ருவது

பாகம் வானப்பிரஸ்தாஸ்ரமத்தில் வஸிக்கவேண்டும். தேவதைகளைப் பூஜித்துக்கொண்டு அந்த அக்கினிகளையே வழிபடவேண்டும். நியம முள்ளவனும் ஒரேவிதமான ஆகாரமுள்ளவனும் [1]ஆறுவதுகாலத்தில் அன்னத்தைஅருந்துகிறவனும் தவறில்லாதவனுமாயிருக்கவேண்டும்; இவனுக்கும் அக்கினிஹோத்திரம்அதுவே; பசுக்களும் அவைகளே; எல்லாயாகஸாதனங்களும் அவைகளே. உழவின்றி விளைந்தவைக ளான நெல், யவம், தினை, சாமை இவைகளை இந்த ஆஸ்ரமத்திலும அக்கினிஹோத்திரமுதலான ஐந்துயாகங்களிலும் ஹவிஸுகளாகக் கொடுக்கவேண்டும் இந்தவானப்பிரஸ்தாஸ்ரமத்திலும் இந்தநான்கு விருத்திகள் கருதப்படுகின்றன. யஜ்ஞவிதியைநடத்துகிறதற்காகவும் அதிதிபூஜைக்காகவும் சிலர் அந்தஅந்தஸமயத்தில் தேடி உடனே அலம்பிக் கவிழுக்கிறார்கள். சிலர் ஒருமாஸத்திற்கும் மற்றுஞ்சிலர் ஒருவருஷத்திற்கும் சிலர் பன்னிரண்டு வருஷத்திற்கும் தேடிவைத் துக்கொள்ளுகிறார்கள். வருஷாகாலத்தில் ஆகாயவெளியிலும் பனிக் காலத்தில் ஜலத்திலும் வேனிற்காலத்தில் பஞ்சாக்கினிமத்தியிலும் அடிக்கடி தவஞ்செய்கிறார்கள்; பூமியில சயனிக்கிறார்கள்; கால் நுனிகளாலும் நிற்கிறார்கள்; நின்றுகொண்டும் (பலவகை) ஆஸனங் களைப்போட்டுக்கொண்டும் இருக்கிறார்கள்; மூன்றுகாலங்களிலும் ஸ்நானஞ்செய்கிறார்கள். சிலர் பற்களையே உரலாகவுடையவர்கள். சிலர் கல்லினால்தேய்த்து அரிசியாக்குகிறார்கள். சிலர் சுக்கிலபக்ஷத் தில் ஒருவேளை உஷ்ணமுள்ளகஞ்சியைப் பானஞ்செய்கிறார்கள். சிலர் கிருஷ்ணபக்ஷத்தில அவ்விதமே பானஞ்செய்கிறார்கள்; அல லது முன்வழக்கப்படி அன்னத்தையாவது புஜிக்கிறார்கள். [2]வைகா னஸமதத்தைஅடைந்து உறுதியான விரதமுள்ளசிலர் கிழங்குகளா லும் சிலர்பழங்களாலும் சிலர்புஷ்பங்களாலும் நியாயமாகக் காலத் தை நடத்துகிறார்கள். மனத்தை வசப்படுத்தினவர்களான அவர்க ளுக்கு இவைகளும் வேறுஅனேகவித வ்ரதநியமங்களும் ஏற்பட்டி ருக்கின்றன. உபநிஷத்திலசொல்லப்பட்ட நான்காவதாஸ்ரமிகளுக் குரிய சாந்திமுதலானதர்மங்கள் எல்லாருக்கும் பொதுவாக ஸ்மிருதி களில் சொல்லப்படுகின்றன. அப்பா! கிருஹஸ்தர்களுக்கும் வானப் பிரஸ்தர்களுக்கும் பொதுவான சமமுதலியவற்றைக்காட்டிலும்விசே ஷமாயிருக்கிறதர்மமானது தத்வத்தைஉணர்ந்த பிராம்மணர்களால் இந்த யுகத்திலும் நடந்துவருகிறது. அகஸ்தியர், ஸப்தரிஷிகள்,

1 பகல் பதினெட்டே முக்கால் நாழிகைக்குமேல்.

2 வானப்ரஸ்தாஸ்ரமம்.

மதுச்சந்தர், அகமர்ஷணர், ஸாங்க்ருதி, ஸுதிவாதண்டி, முயற்சியுள்ள யதாவாஸர், அக்ருதஸ்ரமர், அஹோவீர்யர், காவ்யர், தாண்டியர், மேதாதிதி, புதர், பலவான், கர்ணநிர்வாஹர், சூன்யபாலர், கிருதஸ்ரமா இவர்கள் தர்மத்தில மிக்கபண்டிதர்கள். அவர்கள் தர்மத்தால் ஸ்வர்க்கத்தை அடைந்தார்கள். குழந்தாய்! கூட்டமாகச்சேர்ந்த யாவரும் பிரத்யக்ஷமாகத் தர்மத்தை அறிந்தவர்கள். உக்கிரமான தவமுடையவர்களும் தர்மத்தின் சக்தியை அறிந்தவர்களுமான ரிஷிகளுள் இவர்களும் அளவற்ற வேறு அனேக பிராம்மணர்களும் வனத்தை அடைந்தார்கள். அவர்களில் சிலர் வைகாநஸர்கள். சிலர் வாலகில்யர்கள். மற்றவர்கள் ஸைகதர்கள். அவர்கள் தர்மத்தையே நித்தியமாகக்கைக்கொண்டவர்களும் கர்மங்களால் விஷயானந்தத்தை விட்டவர்களும் இந்திரியங்களை ஜயித்தவர்களுமாகிச் சென்றுவிட்டார்கள். தர்மத்தைப் பிரத்யக்ஷமாய்அறிந்து வனத்தை அடைந்தவர்களான அவர்களெல்லாரும் அஸ்வினிமுதலான நக்ஷத்திரங்களைக் காட்டிலும் வேறானவைகளும் ஒன்றினாலும் கெடுக்கமுடியாதவைகளுமான ஜோதிக்கூட்டங்களாகக் காணப்படுகிறார்கள். [1]ஜரையினால தளர்ச்சியடைந்து வியாதியினால பீடிக்கப்பட்டவன் தனது ஆயுளின் நான்காவதுபாகத்தில வானப்பிரஸ்தாஸ்ரமத்தை விடவேண்டும். பிறகு, எல்லாப்பொருள்களையும் தக்ஷிணையாகக்கொண்டதும் (ஒருநாளில் முடிக்கக்கூடியதுமான) ஸத்யஸ்காரம் (பிராஜாபத்யம் அல்லது த்ரைதாதவி) என்னும் இஷ்டியைச்செய்துவிட்டு ஸ்திரீமுதலான யாவரையும் தியாகம்பண்ணி அக்கினிகளை ஆத்மாவில ஸமாரோபணஞ்செய்துகொண்டு தனக்கு ஜீவஸ்ராத்தம்முதலானவைகளைச்செய்து ஆத்மாவில் பற்றுதலுள்ளவனும் ஆத்மாவில் க்ரீடையுள்ளவனும் ஆத்மாவை ஆஸ்ரயித்தவனுமாயிருக்கவேண்டும். (வைராக்கியக் குறைவிருந்தால்) [2]ஸாத்யஸ்கமென்னும் யாகங்களையும் தர்சாதி இஷ்டிகளையும் எப்பொழுதும் செய்யவேண்டும். எப்பொழுது யாகசீலர்களுக்கு யாகானுஷ்டானத்தால ஆத்மாவில் யோகமானது ஏற்படுகிறதோ அப்பொழுது மூன்று அக்கினிகளையும் சரீரநாசபரியந்தம் ஆத்மாவிலேயே நன்கு அடக்கிக்கொள்ளவேண்டும். மந்திரங்களை உச்சரித்துக்கொண்டு அன்னத்தை நிந்தியாமல பிராணன்களின்பொருட்டு ஐந்து அல்லது ஆறு ஆஹுதிகளைச்செய்யவேண்டும். வானப்பிரஸ்தனானமுனிவன் கேசம், ரோமம், நகம் இவைகளை வபனஞ்செய்துகொண்டு கர்மங்களினால் பரிசுத்தனாகி அந்த ஆஸ்ரமத்திலிருந்தும் பரிசுத்தமான

1 வேறுபாடம். 2 பரம்மயஜ்ஞமுதலானவை.

ஸந்யாஸாஸ்ரமத்தை அடையவேண்டும். ஸகலப்பிராணிகளுக்கும் அபயத்தைக்கொடுத்துவிட்டு ஸந்யாஸத்தைஅடைந்த பிராம்மண னுக்குத் தேஜோமயமான உலகங்கள் ஏற்படுகின்றன. அவன் மரித்தபிறகு அழிவற்றபயனையும் அடைவான். நல்லசீலமும் அனுஷ்டானமுமுள்ளவனும் பாவமற்றவனும் ஆத்மஜ்ஞானமுள்ளவனுமான மனிதன் இம்மைமறுமைக்குரிய ஸாதனத்தைச் செய்யவிரும்புகிற தில்லை. கோபமும் மோகமும் நட்பும் பகையுமில்லாமல் உதாஸீனன் போலிருக்கவேண்டும். யதியானவன் தனக்குரியவேதம், ஸூத்ரம், ஹோமம், மந்திரம் இவைகளில் சக்தியுடன் நித்தியமாய் நடந்துவருகிற யமமுதலிய யோகங்களில் மனவருத்தமடையக்கூடாது. அப்படிப்பட்ட ஆத்மயோகிக்கு இஷ்டப்படி கதிகிடைக்கும். ஜிதேந்திரியனும் தர்மத்தில் பற்றுதலுள்ளவனுமாயிருக்கிற அவன்விஷயத்தில் (நற்கதியடைவதில்)ஸந்தேகமில்லை. இதற்குமேல் நல்ல குணங்களால் மிகவும் மேலானதும் அதிகமான நியமங்களையுடையதும் சிறந்ததும் மூன்று ஆஸ்ரமங்களுக்கும் தலைமையானதும் நான்காவதாகச் சொல்லப்பட்டதும் பரமகதிக்குக்காரணமாகச் சொல்லப்பட்டதுமாயிருக்கிற பரமாஸ்ரமமென்கிற ஸந்யாஸத்தைச் சொல்லுவேன்; கேட்கக்கடவாய்' என்றுசொன்னார்.



## இருநூற்றைம்பத்தோராவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

(வ்யாஸர் ஸந்யாஸதர்மத்தைச் சுகருக்குச் சொல்லியது.)

சுகர், 'பரமபதத்தை விரும்புகிறவன், வானப்ரஸ்தாஸ்ரமத்தில் போலவே, ஸந்யாஸாஸ்ரமத்திலிருக்கும் தன்னாத்மாவை எவ்விதம் தன் சக்தியால் அந்தப்பதவியை அடையும்படி செய்யக்கூடும்?' என்று கேட்க, வ்யாஸர் சொல்லலானார்.

'முந்தின ஆஸ்ரமங்களிரண்டிலும் சுத்தியைஅடைந்து அதன் பிறகு பரமார்த்தமான மோக்ஷத்திற்காக எந்தக்காரியம் செய்யவேண்டுமோ அதை ஒரேமனத்துடன் கேள் (முந்தின) மூன்றுபடிகளிலும் மனத்தின் மலத்தை நிவ்ருத்திசெய்து பிறகு சிறந்ததும் தனக்குமேல் ஒரு ஸ்தானமுமில்லாததுமான ஸந்யாஸத்தை அடையவேண்டும். ஆகையால், நீயும் இவ்விதமே அப்யாஸஞ்செய்யவேண்டும். அந்த விதத்தைச் சொல்லுகிறேன்; கேள். ஸந்யாஸியான

வன் ஸித்தியை அடையவேண்டி ஸஹாயமில்லாமல் ஒருவனாகவே தனக்குரிய தர்மத்தை ஆசரிக்கவேண்டும். எவன் ஆத்மாவைப்பார்க்கிறவனாக ஒருவனாகவே ஸஞ்சரிக்கிறானோ அவன் ஒன்றையும் விடுகிறதில்லை; குறைவையும் அடைகிறதில்லை. அக்கினியில்லாமலும் கிருகமில்லாமலுமிருந்துகொண்டு அன்னத்திற்காகக் கிராமத்தை அடையவேண்டும். மௌனத்துடன் ஆத்மாவைச் சிந்தித்துக்கொண்டு அந்தத்தினத்திற்குமாத்திரம் ஆகாரம் ஸம்பாதிக்கவேண்டும். அதிலும் ஒருநாளைக்கு ஒருவேளை ஒரேவிதமாக லேசான ஆகாரஞ் செய்யவேண்டும். ஓடு, மரத்தடி, கந்தை, தனித்திருத்தல், எல்லாப் பிராணிகளிடத்திலும் உபேக்ஷை இவ்வளவும் பிக்ஷுகனான ஸந்யாஸிக்கு லக்ஷணம். எவன்விஷயத்தில் சொல்லப்பட்ட (நிந்தையான) வார்த்தைகள் கிணற்றில்போடப்பட்ட கல்லுகள்போல (உள்ளேயே) போய்விடுகின்றனவோ, சொன்னவனைக்குறித்து மாறிவருகிறதில்லையோ அவன்தான்மோக்ஷாஸ்ரமமானஸன்யாஸாஸ்ரமத்தில்வஸிக்க வேண்டும். (ஒன்றையும் ஆவலுடன்) பார்க்கவே கூடாது. ஒருபோதும் ஒருவனுடைய அபவாதத்தையும் கேட்கவுங்கூடாது. அதிலும் விசேஷமாகப் பிராம்மணர்களுடைய அபவாதத்தைக் கேட்கவே கூடாது; ஒருவிதத்தாலும் சொல்லவுங்கூடாது. பிராம்மணனுக்கு எது க்ஷேமவார்த்தையாகுமோ அதையே எப்பொழுதும் சொல்ல வேண்டும். தன்னை நிந்திக்கும்பொழுது அதைத் தனக்கு ஔஷதமாகக்கொண்டு மௌனமாயிருக்கவேண்டும். எந்தஒருவனால், ஆகாசம் எப்பொழுதும் பூர்ணம்போலாகிறதோ, எவனால சூன்யமான பிரதேசம் ஜனங்கள் நிறைந்ததுபோலாகிறதோ அவனைத் தேவர்கள் பிராம்மணனென்று நினைக்கிறார்கள். எதையாவது உடுத்து எதனாலாவது பசியைப் போக்கிக்கொண்டு எங்கேயாவது சயனித்துக்கொண்டிருப்பவன் எவனோ அவனைத் தேவர்கள் பிராம்மணனென்று நினைக்கிறார்கள். எவன் கூட்டத்தைக்கண்டால் பாம்பைக் கண்டதுபோலவும் ஸம்மானத்தை அடைந்தால் மரணத்தை அடைந்ததுபோலவும் ஸ்திரீகளைக்கண்டால் பிரேதத்தைப்பார்க்கிறதுபோலவும் பயப்படுகிறானோ அவனைத் தேவர்கள் பிராம்மணனாக நினைக்கிறார்கள். எவன் வெகுமானிக்கப்பட்டும் ஸந்தோஷியாமலும் அவமதிக்கப்பட்டும்கோபியாமலும்எல்லாப்பிராணிகளுக்கும் அபயத்தைக்கொடுக்கிறவனாயிருக்கிறானோ அவனைத் தேவர்கள் பிராம்மணனாக நினைக்கிறார்கள். துறவியானவன் மரணத்தைப் பிரார்த்தியாமலும் ஜீவனத்தையும் பிரார்த்தியாமலும், வேலைக்காரன் யஜமானன்கட்டளையை

எதிர்பார்ப்பதுபோலக் காலத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்க வேண்டும். யதியானவன் தோஷமற்ற சித்தமுள்ளவனும் தோஷமற்ற வாக்குள்ளவனும் எல்லாப்பாவங்களிலிருந்தும் விடுபட்டவனுமாயிருக்கவேண்டும். அதனால் பகைவனில்லாதவனான அவனுக்குப்பயமேது? எவனுக்கு எல்லாப்பிராணிகளிடத்திலிருந்தும் பயமில்லையோ, எவனிடமிருந்து எல்லாப்பிராணிகளுக்கும் பயமில்லையோ மோகமற்றஅவனுக்கு ஒன்றிலிருந்தும் பயமிருக்கிறதில்லை. எப்படி யானையின் காலடியில் மற்றப்பிராணிகளுடைய காலடிகள் அடங்குமோ அப்படியே துறவியினுடையபதத்தில் இந்திரன்முதலானவர்களுடையஸகலபதங்களும் அடங்கிவிடுகின்றன. இப்படியே தர்மநிமித்தமான எல்லாம் கொல்லாமையில் சொல்லப்படுகின்றன. எவன் கொலையைச் செய்யாமலிருக்கிறானோ அவன் ஒருநாளும் நாசமடையமாட்டான். ஹிம்ஸை செய்யாதவனும் எல்லாவற்றிலும் ஸமமானவனும் ஸத்யவாதியும் தைரியமுடையவனும் இந்த்ரியங்களை அடக்கினவனும் எல்லாப்பிராணிகளுக்கும் ரக்ஷகனுமாயிருக்கிறவன் உத்தமமான கதியை அடைகிறான். இவ்விதம் பேரறிவால் திருப்தியடைந்தவனும் பயமற்றவனும் ஒன்றையும் விரும்பாதவனுமாயிருக்கிறவனை மிருத்யுவென்பது மீறுகிறதில்லை. அவன் மிருத்யுவை அடைகிறதில்லை. ஸகல ஸம்பந்தங்களும் விட்டவனும் ஆகாயம்போலிருக்கிறவனும் தனதில்லாதவனும் ஸகாயமில்லாமல் திரிகிறவனும் சாந்தனுமாயிருக்கிற முனியைத் தேவர்கள் பிராம்மணனாக நினைக்கிறார்கள். எவனுடைய ஜீவனம் தர்மத்திற்காகவோ, எவனுடைய தர்மம் ஹரியின் ப்ரீதிக்காகவோ, எவனுக்கு இரவுபகல்கள் புண்ணியத்திற்காகவோ அவனைத் தேவர்கள் பிராம்மணனாக நினைக்கிறார்கள். ஒன்றையும் பிரார்த்தியாதவனும் ஒன்றையும் செய்யாதவனும் ஒருவரையும் நமஸ்கரியாமலும் துதியாமலுமிருக்கிறவனும் ஸகலபந்தங்களுமற்றவனுமாயிருக்கிறவனைத் தேவர்கள் பிராம்மணனாக நினைக்கிறார்கள். எல்லாப்பிராணிகளும் ஸுகத்தில் ஸந்தோஷமடைகின்றன; துக்கத்திற்கு மிகவும் நடுங்குகின்றன. ஆகையால், ச்ரத்தையுடன்கூடிய யதியானவன் பிராணிகளுக்குப் பயத்தை உண்டுபண்ணுவதில் வருத்தமுள்ளவனாகிக் கர்மங்களைச் செய்யக்கூடாதன்றோ? இகலோகத்தில் எல்லாப்பிராணிகளுக்கும் அபயமென்ற தக்ஷிணையினுடைய தானமானது எல்லாத் தானங்களுக்கும் மேற்பட்டது. ஆகையால், எவன் முதலில் கொல்லுதலென்னும்செய்கையை விடுகிறானோ அவன் பிரஜைகளிடமிருந்து அனந்தமான அபயத்தை அடைகிறான். ஆத்மயாஜியான யதியான

வன் முகத்துவாரத்தினால் கொடுக்கப்படும் பிராணாகுதிஹவிஸ்ஸை ஹோமம்பண்ணுகிறான். சராசரமான ஜகத்துக்கு நாபியும் இருப்பிடமுமான [1]வைஸ்வாநரனானவன் தனக்கு அவயவங்களான அவனுடைய அங்கத்தையும் நல்லதும் கெட்டதுமாயிருக்கிற கர்மத்தையும் ஸகலத்தையும் அடைகிறான். எந்தவைஸ்வாநரன் ஹ்ருதயத்தில் ஓர் ஒட்டை அளவில நாபிர்குழிவில இருக்கிறானோ அவனிடத்தில் பிராணவாயு இந்திரியமுதலானவைகளை ஆத்மயாஜியானவன் ஹோமம் செய்கிறான். ஹோமம் செய்யப்பட்ட அவனுடைய அக்னிஹோத்ரமானது தேவர்கள்முதலான எல்லாப்பிராணிகளுடைய ஆத்மாவிலுமிருக்கிறது. தவிர, ஸூக்ஷ்மபூதங்கள்மூன்றையும்உபாதியாகவுடையஹிரண்யகர்ப்பனையும் பக்ஷிபோலச் சரீரத்தில்அமர்ந்த மூன்றுகுணங்களோடுகூடியாரூவாரையும்மேலானபரமாத்மஸ்வரூபத்தையும் அறிகிறவர்கள் எல்லா லோகங்களிலும் பூஜிக்கப்படுகிறார்கள். அவர்களுக்கு ஸமர்த்தர்களானதேவர்கள் அமிருதத்தை அளிக்கிறார்கள். எவன் வேதங்களையும் ஜநநத்தையும் கர்மவிதியையும் அதன்பலனையெவர்க்குமுதலானவற்றையும்பரமாத்மஸ்வரூபத்தையும்பின்னும் எல்லாவற்றையும் தனதுப்ரத்யகாத்மாவினிடத்திலேயே அறிகிறானோ அவனை எப்பொழுதும் தேவர்கள் (பூஜிக்க) விரும்புகிறார்கள். பிரகாசமாயிருக்கிறகிரணங்கள்போன்ற இந்திரியவ்யாபாரங்களுள்ள எவன் பூமியிலும் ஆகாயத்திலும் ஸம்பந்தமில்லாததும் அறியமுடியாததும் ஞானவடிவமும்ப்ரம்மாண்டத்தில ஆவிர்ப்பவித்ததும்அங்கதேவதைகளாகிய சிறகுகளுள்ளதுமான அண்டத்தின் நடுவிலுள்ள பக்ஷிபோன்ற பிரத்யகாத்ம ஸ்வரூபத்தைத் தனதுசரீரத்தில் ஹ்ருதயாகாசத்தில் அறிகிறானோ அவனைத் தேவர்கள் விரும்புகிறார்கள். எந்தக்காலமாகிற சக்கரத்தினுடையவாயில் இந்த எல்லா உலகமும் விழுகிறதோ (எப்பொழுதும்) சுற்றிவருகிறதும் சிதறிப்போகாததும் ஜனங்களுடைய ஆயுளைக்குறுகச்செய்கிறதும் ஆறுருதுக்களாகிற குடத்தையுடையதும் பன்னிரண்டு மாதங்களாகிற ஆரக்கால்களையுடையதும் அமாவாஸை பூர்ணிமை மாதப்பிறப்புக்களாகிற கணுக்களுடையதுமாயிருக்கிற அந்தககாலசக்ரமான ஆத்மஸ்வரூபமானது ஹ்ருதயகுகையில் வைக்கப்பட்டிருக்கிறது. [2]இந்தலோகத்தில ஸுஷுப்திஸ்தானத்தை அடைந்த எந்தஜீவன் ஜகத்திற்குச் சரீரமோ அவன் ஸ்தூலஸூக்ஷ்மமான ஸகலலோகங்களையும் வியாபித்திருக்கிறான். அந்தஜீவனானவன் தன்னால்வியாபிக்கப்பட்ட அந்தஇரண்டு

[1] அந்தர்யாமியான ஈஸ்வரனென்பது. [2] வேறுபாடம்.

சரீரத்திலிருந்துகொண்டு பிராணதேவதைகளை ஹிதமாகத்திருப்திசெய்கிறான். அந்தத்தேவதைகளும் திருப்தியடைந்து அவனுடையமுகத்தைத் திருப்திசெய்கிறார்கள். பிரம்மத்தை உபாஸிப்பவன் தேஜோமயனும் நித்யனும் பழமையானவனுமாகிப் பயமற்றவைகளும் அழிவற்றவைகளுமாயிருக்கிற உலகங்களை அடைகிறான். எவனிடமிருந்து பிராணிகள் ஒருகாலும் பயத்தை அடைவதில்லையோ அவன் ஒருபோதும் ஒருபிராணிக்கும் பயப்படுகிறதில்லை. எவன் மற்றவர்களால் நிந்திக்கப்படாதவனும் மற்றவர்களைத் தானும் நிந்திக்காதவனுமாயிருக்கிறானோ அந்தவேதியன் பரமாத்மாவைப் பிரத்யக்ஷமாகப் பார்ப்பான். (அதனால்) அஜ்ஞானமற்றவனும் களங்கமற்றவனுமாயிருக்கிறஅவன் [1]இகபரங்களிலுள்ளபோக்யத்தை அடைகிறதில்லை. இந்தப்பிக்ஷுகன் க்ரோதமோகங்களில்லாமல் ஓட்டாஞ்சில்லியையும் தங்கத்தையும் ஸமமாகக்கருதிச் சோகம்நசித்துப் பற்றுதலும் கலகமுமில்லாமல் நிந்தை ஸ்துதி இரண்டும் நீங்கி விருப்புவெறுப்புக்களற்று உதாஸீனன்போல ஸஞ்சரிப்பான்

---

## இருநூற்றைம்பத்திரண்டாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி)



(வ்யாஸர் ஆத்மாவை அறியும்வகையைச் சுகருக்குச் சொல்லியது.)

(மனம்இந்திரியமுதலான) மாயாவிகாரங்களால ஜீவன் ஸம்ஸாரியாகச் செய்யப்பட்டிருக்கிறான். அவைகள் இவனை அறிகிறதில்லை. இவனும் அவைகளை அறிவான். அந்தஜீவன் இந்தலோகத்தில் மனமுதலான ஆறு இந்திரியங்களாலும் வசப்பட்டவைகளும் பலமுள்ளவைகளுமாயிருக்கிற கலைக்குதிரைகளாலே ஸாரதிபோல இந்தஎல்லாக்காரியத்தையும் செய்கிறான். இந்திரியங்களைக்காட்டிலும் விஷயங்கள் மேலானவைகள். விஷயங்களைக்காட்டிலும் மனம் மேலானது. மனத்தைக்காட்டிலும் புத்தி மேலானது. புத்தியைக்காட்டிலும் [2]ஆத்மா மேலானது. அதைக்காட்டிலும் [3]மூலப்

1 இவை அறியுந்தன்மையவல்லவாதலால், எவனும் அறியாத நித்யானந்தத்தை அடைவான் என்றபடி.

2 ‘ஹிரண்யகர்ப்பபுத்தி’ என்பது பழையவுரை.

3 ‘அவ்யக்தம்’ என்பதுமூலம். ‘சரீரம்’ என்றுபொருள்கூறுவது ப்ரம்ம ஸூத்ரம் ராமானுஜபாஷ்யம்.

பிரகிருதி மேலானது. அதைக்காட்டிலும் பரமாத்மா மேலானவன். பரமாத்மாவுக்கு மேற்பட்டது வேறுஇல்லை. அவன்தான் எல்லை. அவன்தான் மோக்ஷஸ்வரூபன். இவ்விதம் ஆத்மா எல்லாப்பிராணிகளிடத்திலும் மறைந்திருக்கிறபடியால் பிரகாசிக்கிறதில்லை. ஆனால், ஸூக்ஷ்மதர்சிகளான ஞானிகளால் மேலானதும் ஸூக்ஷ்மமுமான புத்தியினால் பார்க்கப்படுகிறான். மனமுதலான ஆறுஇந்திரியங்களையும் விஷயங்களையும் தாரணசக்தியினால் அந்தராத்மாவில் லயிக்கச் செய்து வெகுவானசிந்தனையைச் செய்யாமல் வித்தையினால் பழக்கப் பட்ட மனத்தைத் தியானத்தினால் ஒடுக்கிச் சாந்தமானமனமுடையவனாகி [1]ஆத்மாவைத்தவிர வேறுபரவஸ்துவில்லையென்றறிந்திருக்கிறவன் அதனால் மோக்ஷபதமடைவான். எல்லாஇந்திரியங்களுக்கும்வசமானமனத்தையும் சஞ்சலமானநினைவையுமுடையமனிதனேயென்றால் (காமத்தில்) ஆத்மாவைக்கொடுத்ததினால்மிருத்யுவை அடைகிறான். எல்லாஸங்கல்பங்களையும்தள்ளிவிட்டுச் சித்தத்தைப் புத்தியில் பிரவேசிக்கச்செய்ய வேண்டும். சித்தத்தைப் புத்தியில்செலுத்திவிட்டுக் காலத்தைநசிக்கச் செய்கிறவனாயிருக்கவேண்டும். யதியானவன் சித்தத்தின் தெளிவினால் சுபத்தையும் அசுபத்தையும் விடுகிறான். இவ்வுலகில் தெளிவானசித்தமுள்ளவன் ஆத்மாவிலநிலைபெற்று அழிவற்றலோகத்தை அடைகிறான். சித்தத்தின் தெளிவினுடைய லக்ஷணமேதோவென்றால் திருப்தியுள்ளவன் எப்படி ஸுகமாகநித்திரைசெய்வானோ, காற்றில்லாதவிடத்தில் தூண்டப்பட்டதீபம் எவ்விதம்அசையாதோ அப்படி முன்இரவிலும் பின்இரவிலும் மனத்தைஆத்மாவில்சேர்ப்பித்துக்கொண்டு லேசான ஆகாரமுள்ளவனும் மிகவும் சுத்தமானமனமுள்ளவனுமாகித் தன்னிடத்தில் தன்னைப்பார்க்கிறானென்பதுவே. ஓ! புத்திரனே! உபதேசரூபமான இந்தச்சாஸ்திரமானது எல்லாவேதங்களுடைய ரகஸ்யமும் வேதத்தைத்தவிர மற்றசப்தங்களாலும் பிரத்தியக்ஷானுமானங்களாலும் அறியப்படாததும் தன் அனுபவத்தினாலேயே அறியக்கூடியதுமாயிருக்கிறது. திரவ்யம்போன்ற எந்தவஸ்துவானது தர்மத்தைப்பற்றின எல்லாச்சரித்திரங்களிலும் விசித்திரமான கதைகளிலும் காணப்படுகிறதோ அந்த அமிருதமானது அனேக ரிக்குக்களைக் கடைந்து எடுக்கப்பட்டது. ஓ! புத்திரனே! தயிரிலிருந்து வெண்ணெய் எடுக்கப்படுவதுபோலவும் கட்டையிலிருந்து அக்கினி எடுக்கப்படுவது போலவும் வித்வான்களுடைய ஞானமானது ப்ரமாணத்திலிருந்து எடுக்கப்பட்டது. குழந்தாய்! உத்தமாதிகாரிக்கு உபதேசிக்கப்பட்ட இந

---

1 வேறுபாடம்.

தச்சாஸ்திரமானது ஸஜ்ஜனர்களுக்குச் சொல்லக்கூடியது. அப்படிப்பட்ட இந்தச்சாஸ்திரமானது சமம், தவம், தமம், வேதாத்தியயனம், (குருவை) அனுசரித்தல் இவைகளில்லாதவனும் அஸூயையும் ஒழுங்கின்மையுமுள்ளவனும் சொன்னதைச் செய்யாதவனும் தர்க்கசாஸ்திரத்தால் கெடுக்கப்பட்டவனும் கோள்சொல்லுகிறவனுமாயிருக்கிறவனுக்குச் சொல்லத்தக்கதில்லை. எல்லாரையும் புகழ்கிறவனும் எல்லாராலும்புகழப்படுகிறவனும் சாந்தனும் தவமுள்ளவனும் பிரியனுமாயிருக்கிற புத்திரனுக்கும் தன்னை அனுசரிந்த சிஷ்யனுக்கும் இது சொல்லத்தக்கது. இந்தரகஸ்யமானதாமமானது மற்றவனுக்கு ஒருவிதத்தாலும் சொல்லத்தக்கதில்லை. ஒருகால் ஒருமனிதன் இந்தச்சாஸ்திரத்திற்காக ரத்தினங்களால்நிறைந்த இந்தப்பூமிமுழுமையும் கொடுத்தாலும் தத்வத்தை அறிந்தவன் அதைக்காட்டிலும் இதுவே பெரிதென்று நினைக்கவேண்டும். ஆகையால், மஹரிஷிகளால் ஸேவிக்கப்பட்ட அந்தச்சாஸ்திரமானது வேதாந்தங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.மிகவும் ரகஸ்யமானவிஷயத்தையுடையதும் அந்தஆத்மாவைப் பற்றியதுமான சாஸ்திரமானது ஸாதாரண மனிதர்களுக்கு எட்டாததாயிருக்கிறது. இனி எதை என்னை நீ கேட்கிறாயோ அதை உனக்கு நான் நன்குசொல்லுவேன். ஓ! குழந்தாய்! இதன்மேல் உன்மனத்தில் எது இருக்கிறதோ, எந்தவிஷயத்தில் உனக்குச் சில இடங்களில் ஸந்தேகமிருக்கிறதோ அதைக் கேட்கலாம். இதோ நான் உன்முன்னே இருக்கிறேன். உனக்கு நான் மறுபடியும் என்னசொல்லவேண்டும்?' என்று வினவினர்.

---

## இருநூற்றைம்பத்துமூன்றாவது அத்தியாயம்.

## மோக்ஷதாமம். (தொடர்ச்சி.)



(வ்யாஸர், ஐந்துபூதமுதலியவற்றின் குணங்களைச் சுகருக்குச் சொல்லியது.)

சுகர், 'ஓ! ஸகலகுணங்களும் பொருந்திய முனிசிகாமணியே! ஆத்மாவைப்பற்றிய சாஸ்திரத்தை அறிந்திருக்கிறபடி அந்த அத்யாத்மசாஸ்திரத்தை மறுபடியுமே எனக்கு விரிவாகச் சொல்லவேண்டும்' என்றுகேட்க, வ்யாஸர் கூறலானார்.

'குழந்தாய்! இந்தஉலகத்தில் மனிதனுடைய அத்யாத்மத்தை நான் உனக்குச் சொல்லப்போகிறேன். அதனுடைய இந்தவிரிவைக் கேள் பிராணிகளுக்குக் கடலின் அலைகள்போலப் பூமி, அப்பு,

தேயு, வாயு, ஆகாயம் என்ற ஐந்து மஹாபூதங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. ஆமையானது தன் அவயவங்களை வெளியிலநீட்டி மறுபடி சுருக்கிக்கொள்ளுகிறதுபோல இவ்வுலகில் அல்பமானசரீரங்களில் மஹாபூதங்கள் ஜனனமரணநிவிகாரத்தைச் செய்கின்றன. இந்தக்காரணத்தால் ஸ்தாவரஜங்கமங்களான இந்த உலகமெல்லாமும் மஹாபூதவடிவமாகவே இருக்கிறது. அந்தச் சரீரத்திலேயே அந்த விதமே ஸ்ருஷ்டிவிஷயத்திலும் பிரளயவிஷயத்திலும் ஸ்ரீரிவாகச் சொல்லப்படுகிறது. குழந்தாய! மஹாபூதங்கள் ஐந்தும் எல்லாப்பிராணிகளிலுமிருக்கின்றன. பிராணிகளைப் படைக்கிற பரமாத்மாவானவர் எந்தப்பிராணியின்விஷயத்தில் எந்தக்கர்மத்தைப் பார்த்தாரோ அதற்குத்தக்கபடி அந்தப் பிராணியிடத்திலும் பூதங்களுடைய வித்யாஸத்தைச்செய்தார்' என்றுசொன்னர். சுகர், 'சரீரங்களில்செய்த வித்தியாஸத்தைப் புருஷன் எவ்விதம் அறியக்கூடும்? சில இந்திரியங்கள்; சில குணங்கள். அவைகளையும் எவ்விதம் அறியமுடியும்?'' என்றுகேட்டார். வ்யாஸர், 'இதை உனக்கு உள்ளபடி கிரமமாகச் சொல்லுவேன். அது எவ்விதமாயிருக்கிறதென்பதையும் அதனுடைய தத்வம் எவ்விதமிருக்கிறதென்பதையும் நீ ஒரே மனமாகக் கேட்கக்கடவாய். சப்தம், ஶ்ரோத்ரம், துவாரங்கள் என்னும் மூன்றும் ஆகாயத்திலிருந்து உண்டானவை. பிராணன், சேஷ்டை, ஸ்பர்சம் என மூன்றும் வாயுவினுடைய தர்மங்கள். தேயுவானது ரூபம், நேத்ரம், உதரத்திலிருக்கும் அக்னி என மூன்றுவிதமாகச் செய்யப்படுகிறது. ரஸம், ரஸநேந்தரியம், ஸ்நேகம் என மூன்றும் ஜலத்தின் தர்மங்கள். கந்தம், நாஸிகை, சரீரம் என மூன்றும் பூமியின் தர்மங்கள். ஶ்ரோத்ரம், த்வக், நேத்ரம், நா, நாஸிகைஎன ஐந்தும் இந்த்ரியக்கூட்டம். பஞ்சபூதங்களின் விகாரமானது இவ்விதம் விவரணம் செய்யப்பட்டது. வாயுவிலிருந்து ஸ்பர்சமும், அப்புவிலிருந்து ரஸமும், தேயுவிலிருந்து ரூபமும்(உண்டாயினவென்று)சொல்லப்படுகின்றன. சப்தம் ஆகாயத்திலிருந்து உண்டானது. கந்தமானது பூமியின் குணமாகக் கருதப்படுகிறது. மனம், புத்தி, வாஸனை இம்மூன்றும் மனோமயங்கள். ஸத்வரஜஸ்தமோகுணங்களுக்குப்பிறகு உண்டான இவைகள் அந்தக்குணங்களை விட்டிருப்பதில்லை. இவ்வுலகில் ஆமையானது தன் அவயவங்களை வெளியில்நீட்டி உள்ளே அடக்கிக்கொள்ளுகிறது போலவே புத்தியானது இந்திரியக் கூட்டத்தை ஸ்ருஷ்டித்து (மறுபடியும் தன்னிடத்தில) ஒடுங்கச்செய்கிறது. பாதத்திற்குமேல் தலைக்குக் கீழுள்ளதை அறிகிறதென்கிற அந்தக்காரியத்தில உத்தம

மான புத்தியானது இருக்கிறது. புத்தியானது சப்தமுதலான குணங்களின் ஸ்வரூபத்தை அடைகிறது. புத்தியே மனமுதலான எல்லா இந்திரியங்களுமாகிறது. புத்தியில்லாத விஷயத்தில் குணங்கள் ஏது? மனிதனிடத்தில் இந்திரியங்கள் ஐந்தாகவும் மனம் ஆறாவதாகவும் சொல்லப்படுகின்றன. புத்தியை ஏழாவதாகவும் ஜீவனை எட்டாவதாகவும் சொல்லுகிறார்கள். கண் ரூபத்தை அறிவதற்கே உண்டானது. மனம் ஸம்சயத்தை உண்டாக்குகிறது. புத்தியானது நிச்சயத்தைச் செய்கிறது. க்ஷேத்ரஜ்ஞன் ஸாக்ஷியாகச்சொல்லப்படுகிறான். ரஜஸ் தமஸ் ஸத்வம் இம்மூன்றும் (பூர்வவாஸனையான) தன் காரணத்தினால் உண்டாகின்றன. அந்தக்குணங்கள் எல்லாப்பிராணிகளிடத்திலும் ஸமமாயிருக்கின்றன. அந்தக் குணங்களை ஊகித்து அறியவேண்டும். ஒருவன் எதை ஆத்மாவில் ப்ரீதியும் மிக்க சாந்தியும் சுத்தியுமுள்ளதாகப் பார்ப்பானோ அதை ஸத்வமாக நிச்சயிக்கவேண்டும். எது சரீரத்திலோ மனத்திலோ ஸந்தாபத்துடன் ப்ரவ்ருத்தியுள்ளதாகிறதோ அதை ராஜஸாகக்கண்டுகொள்ள வேண்டும். எது மோகத்துடன் கூடியதும் ப்ரகாசமற்ற விஷயத்தையுடையதும் ஊகிக்கமுடியாததும் அறியமுடியாததுமாயிருக்கிறதோ அதைத் தமஸென்று நிச்சயிக்கவேண்டும். ஸந்தோஷம், ப்ரீதி, ஆனந்தம், ஸமபாவனை, மனத்தின்தெளிவு இவைமுதலான ஸாத்விக குணங்கள் காரணத்தினாலோ காரணமில்லாமலோ உண்டாகின்றன. அபிமானம், பொய்யுரைத்தல், லோபம், மோஹம், பொருமை இவைகள் ரஜோகுணத்தின் அடையாளங்கள். அவைகள் காரணத்தாலும் காரணமில்லாமலும் ஏற்படுகின்றன. அப்படியே மோகம், அஜாக்ரதை, நித்திரை, சோம்பல், அறியாமை இவைகள் எப்படியாவது அடிக்கடி உண்டாகின்றன. அவைகளை தமஸின்குணங்களாக அறியத்தக்கவை.

---

## இருநூற்றைம்பத்துநான்காவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

(வியாஸர், ஆத்மாவே எல்லாமாய் எல்லாவற்றையும்செய்கிறதென்பதைச் சுகருக்குச் சொல்லியது.)

மனமானது (ஸங்கல்பத்தால்) பதார்த்தத்தை உண்டாக்குகிறது. புத்தியானது அதை நிச்சயிக்கிறது. அகங்காரமானது பிரியத்தையும் அப்ரியத்தையும் அறிகிறது. இம்மூன்றும் கர்மத்தினால்

உண்டானவை. இந்திரியங்களைக்காட்டிலும் விஷயங்கள் மேலானவைகள். விஷயங்களைக்காட்டிலும் மனம் மேலானது. மனத்தைக்காட்டிலும் புத்தி மேலானது. புத்தியைக்காட்டிலும் ஆத்மா மேலானதென்று ஒப்புக்கொள்ளப்பட்டது. மனிதனுக்குப் புத்தியே ஆத்மா. புத்தியே ஆத்மாவுக்கு ஸாதனம். அது எப்பொழுது பதார்த்தத்தை நாடுவதாகச்செய்கிறதோ அப்பொழுது மனமாகிறது. இந்திரியங்கள் பலவிதமாயிருக்கிறபடியால் புத்தியானது அடிக்கடி விகாரத்தை யடைகிறது. புத்தியானது சப்தத்தைக்கேட்கிறதாக ச்ரோத்ரமாகிறது; ஸ்பரிசிக்கிறதாக த்வக்கென்று சொல்லப்படுகிறது; பார்க்கிறதாக நேத்ரமாகிறது, ரஸத்தை யறிகிறதாக ரஸனைமாகிறது; கந்தத்தை யறிகிறதாகக் க்ராணமாகிறது. (இப்படி) புத்தியானது வெவ்வேறாக விகாரத்தை யடைகிறது. புத்தியின்விகாரங்களை இந்திரியங்களென்று சொல்லுகிறார்கள். அவைகளில் புருஷனானவன் காணப்படாதவனாக இருக்கிறான். புருஷனிடத்தில் புத்தியானது இருந்துகொண்டு ஸாத்விகராஜஸதாமஸவிருத்திகளில் இருக்கிறது. மனிதன் ஒருகால ஸந்தோஷத்தை யடைகிறான். ஒருஸமயம் துக்கிக்கவுஞ்செய்கிறான். ஒருஸமயம் ஸுகமும் துக்கமும் இல்லாமலுமிருக்கிறான். ஸத்வரஜஸ்தமோகுணரூபமான இந்தப்புத்தியானது, நதிகளையெல்லாம்ஏற்பதும் அலைகளுள்ளதுமானஸமுத்திரமானது பெரியகரையை அடுத்திருப்பதுபோல மூன்றுகுணங்களையும் அடுத்திருக்கிறது. எப்பொழுது ஒருபொருளை விரும்புகிறானோ அப்பொழுது அது மனமாகிறது. தனித்தனியான இந்த இந்திரியங்களின்ஆதாரங்களைப் புத்தியிலேயே அறியவேண்டும். இந்தஎல்லா இந்திரியங்களும் முழுதும் க்ரமமாக ஜயிக்கத்தக்கவைகள். எப்பொழுது எந்தஇந்திரியமானது புத்தியோடுசேருகிறதோ அப்பொழுது (அந்தஇந்திரியத்தினால் அறியப்படுவதாகும்) மனத்தின் ஸங்கல்பரூபமுமானபதார்த்தத்தில் புத்தியானது பிரிவையடையாததாயிருக்கிறது. ப்ரவ்ருத்திஸ்வபாவமான ரஜஸ்ஸை ஸத்வமும் அனுஸரிக்கிறது. எந்தப் பதார்த்தங்கள் (உலகத்தில்) இருக்கின்றனவோ அவைகளெல்லாம் இம்மூன்றுகுணங்களிலேயே ஆரக்கால்கள் வண்டிச்சக்கரத்தின் வட்டையை அனுஸரிப்பதுபோல அனுஸரித்தவைகளாகச் செல்லுகின்றன. மனமானது, உதாஸீனமுள்ளவைகளும் விஷயங்களின் ஸம்பந்தத்திற்குத்தக்கபடி வெளியில் ஸஞ்சரிக்கின்றவைகளும் புத்தியை ஸாரமாகவுடையவைகளுமான இந்திரியங்களால் தீபம்போலத் தன்னிஷ்டப்படி பிரகாசத்தைச்செய்கிறது. இந்தஜகத்தானது இவ்

வித ஸ்வபாவத்துடன்கூடியதென்று அறிந்தவித்வான் ஒருநாளும் மோகம், சோகம், ஸந்தோஷம், மாத்ஸர்யம் இவைகளை அடைகிற தில்லை. விஷயத்திற் செல்லுகின்றவைகளும் பிரவ்ருத்தியுள்ளவைகளும் நீதியற்றவைகளும் மனோவசமில்லாதவர்களுக்கு அடங்காதவைகளுமாயிருக்கிற இந்திரியங்களால் ஆத்மாவானது பார்க்கமுடிகிற தில்லை. எப்பொழுது புருஷன் இந்திரியங்களுடைய வியாபாரங்களை மனத்தினால் நன்கு அடக்குகிறானோ அப்பொழுது இவனுடைய ஆத்மாவானது தீபத்தாற் பிரகாசஞ்செய்யப்பட்ட உருவம்போலப் பிரகாசிக்கிறது. [1]இருள்நீங்கியபொழுது எல்லாப்பிராணிகளுக்கும் எல்லாப்பொருள்களும் விளங்குவதுபோலவே இதையும் நிச்சயிக்கவேண்டும். எவ்விதம் ஜலத்திலஸஞ்சரிக்கின்றநீர்ப்பறவையானது ஜலத்தின்ஸம்பந்தத்தை அடைகிறதில்லையோ அவ்விதமே முக்தனானயோகியானவன் குணதோஷங்களின்ஸம்பந்தத்தை அடைகிறதில்லை. அப்படியே பண்டிதனானவன் விஷயங்களை அநுபவித்தாலும் எல்லாப்பொருள்களிலும் பற்றுதலற்றவனாயிருப்பதால் தோஷங்களை ஒருவிதத்திலும் அடைகிறதில்லை. எல்லாப்பிராணிகளுக்கும் ஆத்மபூதனும் விஷயங்களுடையகூட்டத்தில் பற்றுதலில்லாதவனுமாயிருக்கிற எவனுக்கு முன்செய்துவந்த கர்மாவைவிட்டு எப்பொழுதும் ஆத்மாவில் பற்றுதலிருக்கிறதோ (அவன் புண்யபாவங்களை அடைகிறதில்லை.) ஆத்மாவானது புத்தியை வியாபிக்கிறது; ஒருகால விஷயங்களையும் வியாபிக்கிறது. விஷயங்கள் ஆத்மாவை அறிகிறதில்லை. ஆத்மா விஷயங்களை எப்பொழுதும் அறிகிறது. ஆத்மாவானது விஷயங்களைப் பார்க்கிறதும் அந்த அந்தப்படி படைக்கிறதுமாயிருக்கிறது. ஸூக்ஷ்மமானக்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞர்களுடைய இந்தவித்தியாசத்தை அறியக்கடவாய். இவற்றுள் ஒன்று விஷயங்களைப்படைக்கிறது. மற்றொன்று விஷயங்களைப் படைக்கிறதில்லை. இயற்கையினாலே இவ்விரண்டும் வெவ்வேறுயுள்ளவைகள்; எப்பொழுதும் சேர்ந்தவைகளாயுமிருக்கின்றன. மத்ஸ்யமானது ஜலத்தைக்காட்டிலும் வேறானாலும் ஜலத்துடன்சேர்ந்தே இருக்கிறதுபோல அவைகளும் சேர்ந்தே இருக்கின்றன. அத்திப்பழமும் கொசுவும் சேர்ந்தும் வேறுமாயிருப்பதுபோலவும் நாணலும் முஞ்சமும் சேர்ந்தும் வேறுமாயிருப்பதுபோலவும் சரீர ஆத்மாக்கள் சேர்ந்திருந்தாலும் ஒன்று மற்றொன்றில் இருப்பவைகளுமாயிருக்கின்றன.

---

1 வேறுபாடம்.

## இருநூற்றைம்பத்தைந்தாவது அத்தியாயம்.

## மோக்ஷ தாமம். (தொடர்ச்சி.)



(வ்யாஸர், ஞானிகளின் பெருமையைச் சுகருக்குச் சொல்லியது.)

புத்தியானது ஸத்வரஜஸ்தமோகுணங்களைப் படைக்கிறது. க்ஷேத்ரஜ்ஞன் அவைகளை அடைகிறான். நியந்தாவான க்ஷேத்ரஜ்ஞனவன் உதாஸீனன்போல ஸகலமான குணங்களையும் விகாரத்தை அடையும்படி செய்கிறான். விஷயங்களைப் படைக்கிற அந்தப் புத்தியானது பூர்வவாஸனையுடன் கூடியது. (ஊர்ணநாபியென்னும்) எட்டுக்காற் பூச்சியானது எவ்விதம் நூலை ஸ்ருஷ்டிக்கிறதோ அவ்விதமே (இந்த க்ஷேத்ரஜ்ஞனவன்) விஷயங்களை ஸ்ருஷ்டிக்கிறான். நாசத்தை அடைந்த பதார்த்தங்கள் இல்லாமற்போவதில்லை. (பின்னையென்னவென்றால்) அவைகளுடைய பிரவிர்த்தியானது அறியப்படுகிறதில்லை. இவ்விதம் சிலர் நிச்சயிக்கிறார்கள். மற்றுஞ்சிலர் [1] நிவிருத்தி என்று தீர்மானிக்கிறார்கள். இவ்விரண்டு விதத்தையும் புத்திக்குத் தக்கபடி விசாரித்துத் தீர்மானிக்கவேண்டும். [2]ஜனனத்தையடைந்த ஆத்மாவும் இவ்விதமே ஆவான். மனிதன் ஆதியந்தமற்றதும் நித்யமுமான ஆத்மாவை அறிந்து எப்பொழுதும் குரோதம், ஸந்தோஷம், மாத்ஸரியம் இவைகளை அடையாமல் ஸஞ்சரிக்கவேண்டும். இவ்விதம் புத்தி சிந்தை நினைவுகளால வியாபிக்கப்பட்டதும் உறுதியுள்ளதுமான ஹ்ருதயக்ரந்தியை அறுத்துவிட்டுத் துக்கமும் ஸம்சயமுமில்லாதவனாக ஸுகமாயிருக்கவேண்டும். எவ்விதம் பூமியிலிருந்து தவறிப் பெரிதான பிரவாகமுள்ள நதியில் ஆழ்ந்தவர்கள் துன்பத்தை அடைவார்களோ அவ்விதமே இவ்வுலகில் மூழ்கின அஜ்ஞானிகள் துன்பத்தை அடைவார்களென்று அறியக்கடவாய். வித்வான் துன்பத்தை அடைவதில்லை. நிர்க்குணமும் ஞானவடிவமுமான தன்னுடைய ஆத்மாவை அடைகிற தத்வஜ்ஞானியானவன் கரையில் நடக்கிறான். இவ்விதம் மனிதன் எல்லாவற்றையும் அறிந்து பிராணிகளுடைய ஜனனமரணங்களையும் வைஷம்யத்தையும் நன்றாக ஆராய்ந்து சிறந்த அடக்கத்தை அடைகிறான். ஆத்மஜ்ஞானம் அடக்கம் இவ்விரண்டும் விசேஷமாகப் பிராம்மணனுக்கு

1 இல்லாமற்போவது.

2 ஆத்மாவுக்கு நாசமென்பது, அந்தசரீரத்தில் பிரவிருத்தியில்லாமையென்பது கருத்து.

ஜன்ம ஸாமர்த்தியமாயிருக்கின்றன. அவை குறைவற்ற மோக்ஷஸாதனங்கள். இதனை அறிந்தவன் வித்வானாவான். இதைத்தவிர வித்வானுக்கு வேறு லக்ஷணம் ஏது? வித்வான்களானவர்கள் இதை அறிந்து கிருதார்த்தர்களாகி மோக்ஷத்தை அடைகிறார்கள். அவித்வான்களுக்குப் பரலோகத்தில் உண்டாகிற மிகப்பெரியபயம் வித்வான்களுக்கு உண்டாகிறதில்லை. வித்வானுக்குஉண்டாகிற அழிவற்ற சிறந்தகதியானது மற்றஒருவனுக்கும் உண்டாகிறதில்லை. மனிதன் தோஷமுள்ளஉலகத்தைப்பார்த்துப் பொறாமை அடைகிறான்; அதை அதைப்பார்த்துத் துக்கிக்கவும்செய்கிறான். எவர்கள் சோகமானது உண்டுபண்ணப்படுகிறதென்றும் சோகமில்லாமையானது ஸ்வபாவமாயுள்ளதென்றும் அறிகிறார்களோ ஸமர்த்தர்களான அந்தவித்வான்களை அந்தவிஷயத்தில் துக்கத்தைஅடையாதவர்களாக அறி. வித்வானானவன் பயனில்விருப்பமின்றி எந்தக்கர்மாவைச் செய்கிறானோ அந்தக்கர்மாவானது அவனுடையபூர்வகர்மாவை நாசஞ்செய்கிறது. அந்தஇரண்டுவிதகர்மாவும், கர்மாவைச் செய்கிறவனை அவனுக்கு இவ்வுலகில் விருப்பத்தையும் உண்டுபண்ணுகிறதில்லை; வெறுப்பையும் உண்டுபண்ணுகிறதில்லை'' என்று சொன்னார்.

---

## இருநூற்றைம்பத்தாறுவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(வ்யாஸர் ஆத்மஜ்ஞானத்தைச் சுகருக்குச் சொல்லியது.)

சுகர், 'இவ்வுலகில் எந்தத்தர்மத்திற்குமேலாக ஒருதர்மமும் இல்லையோ, எல்லாத்தர்மங்களையும்காட்டிலும் சிறந்த அந்தத் தர்மத்தை நீங்கள் எனக்கு நன்றாகச்சொல்லவேண்டும்' என்றுகேட்க, வ்யாஸர் சொல்லலானார்.

"புராதனமும் ரிஷிகளால் புகழப்பட்டதும் எல்லாத்தர்மங்களையுங்காட்டிலும் சிறந்ததுமானதர்மத்தை உனக்கு நன்றாகச்சொல்லுவேன் அதை இப்பொழுது ஒரேமனமாகக் கேட்கக்கடவாய். பலாத்காரமாகச்செல்லுகின்றவைகளும் எங்கும்விழுவதையே இயல்பாகவுடையவைகளுமான இந்திரியங்களைப் புத்தியினால் முயற்சிசெய்து தந்தை தனதுசிசுக்களை அடக்குவதுபோலஅடக்கி மனத்தையும் இந்திரியங்களையும் ஒருவழிப்படுத்துவது பெரியதவம். அது மிகவும் உயர்ந்தது. அந்தத்தர்மமானது எல்லாத்தர்மங்களையுங்காட்டிலும்

சிறந்ததாகச் சொல்லப்படுகிறது. மனத்தை ஆறாவதாகவுடைய அந்த எல்லா இந்திரியங்களையும் தாரணசக்தியினால் தரித்துக்கொண்டு பல விதசிந்தனைகளைச் செய்யாமல் ஆத்மாவில் திருப்தியடைந்தவன்போலிருக்கவேண்டும். எப்பொழுது விஷயங்களிலிருந்து திரும்பி இந்திரியங்கள் தம்மிருப்பிடத்தில் இருக்கப்போகின்றனவோ அப்பொழுது நீ உன்னுடைய புத்தியினாலே சாஸ்வதமான பரமாத்மாவைப் பார்ப்பாய். மனோவசமுடையவர்களும் மஹாத்மாக்களுமான பிராம்மணர்கள் எல்லாவற்றிற்கும் ஆத்மாவும் புகையில்லாத அக்கினிபோன்றதுமாயிருக்கிற அந்தப் பரமாத்மாவைப் பார்க்கிறார்கள். புஷ்பமும் பழமுமுள்ளதும் அனேககிளைகளுடையதுமான பெரியமரமானது ('எனது மலர் எங்கே? கனி எங்கே?' என்று) தன்னுடையமலர்களை அறிகிறதில்லை. அப்படியே புத்தியானது, 'எங்கிருந்து வந்தேன்? எங்கே போகப்போகிறேன்?' என்று அறிகிறதில்லை. இந்தச்சரீரத்தில் இந்தப் புத்தியைக்காட்டிலும் வேறாக அந்தராத்மா இருக்கிறான். அவன் எல்லாவற்றையும் பார்க்கிறான். அவன் தன்னுடைய ஸ்வரூபமாயும் மிகவும்பிரகாசமாயுமிருக்கிறஞானமாகிறதீபத்தினால ஆத்மாவைப்பார்க்கிறான். எல்லாவற்றையும் அறிந்தவனாயிருக்கிறநீ ஆத்மாவினால் ஆத்மாவைப்பார்த்து உபாதியற்றவனும் சட்டைகழற்றிய ஸர்ப்பம்போல எல்லாப்பாவங்களினின்றும் விடுபட்டவனுமாகக்கடவாய். ஓ! குழந்தாய்! இவ்வுலகில நீ சிறந்தபுத்தியைஅடைந்து பாவமும், தாபமும் அற்றவனாகி, மாயையிலிருந்து உண்டானதும், எங்கும்பெருகுவதும், உலகங்களை இழுத்துக்கொண்டுசெலவதும், பயங்கரமும், பஞ்சேந்திரியங்களாகிற முதலைகளையும் மனமும் அதன்விருத்தியுமாகிற கரைகளையும் லோபமோகங்களாகிற நாணலகளையும் காமக்குரோதங்களாகிற நீர்ப்பாம்புகளையும் ஸத்யமாகிற தீர்த்தத்தையும் பொய்யாகிற கலகத்தையும் பெரிய கோபமாகிற சேற்றையும் காமமாகிற முதலைகளையும் மிக்க வேகத்தையுமுடையதும், வாஸனையாகிற ஆழத்தால் இறங்கமுடியாததும், மனோவசமில்லாதவர்களால தாண்டமுடியாததும், பேச்சுக்களாகிய சுழலுள்ளதும், அணுகமுடியாததும், தனது கர்மத்தினால உண்டானதும், நதிகளில சிறந்ததும், ஸம்ஸார ஸாகரத்தில் சேருகிறதுமான அந்த மஹாநதியைப் புத்தியினால் தாண்டக்கடவாய். புத்திமான்களும் தைரியசாலிகளும் மனோவசமுள்ளவர்களுமானவர்கள் எந்த நதியைத் தாண்டுகிறார்களோ அதைத்தாண்டிப் பாவங்களற்று எங்கும் பற்றுவிட்டுச் சுத்தனும் ஆத்மாவை அறிந்தவனுமாகிப் பேரறிவை அடைந்து பிரம்மமாகப்

போகிருய். எல்லாத்துன்பங்களேயும் தாண்டினவனும் கலக்கமற்றுத் தெளிவான மனமுள்ளவனுமாகி, மலையிலிருக்கிறவன் பூமியிலிருக்கிறபொருள்களைப் பார்ப்பதுபோல எல்லாப்பிராணிகளேயும் பார்க்கக்கடவாய். சினமும் களிப்பும் பிறவுயிர்க்குத் துன்பஞ்செய்வதிற் புத்தியுமில்லாதவனுகிப் பிறகு எல்லாப் பிராணிகளுடைய ஜனனமரணங்களையும் பார்ப்பாய். இவ்விதமான தர்மத்தை எல்லாப்பிராணிகளுக்கும் உயர்ந்ததர்மமாகத் தாமிஷ்டர்களுள் சிறந்தவர்களும் வித்வான்களும் உண்மையை அறிந்தவர்களுமான மஹரிஷிகள் நினைக்கிருர்கள். புத்திரா! வியாபகனை ஆத்மாவினுடைய இந்தஞானோபதேசத்தைச் சுத்தனும் ஹிதனும் அனுசரிக்கிறவனுமானவனுக்குச் சொல்லவேண்டும். குழந்தாய்! எனது அனுபவஸாக்ஷியானதும் மிகவிரைவாக யான் உனக்குச் சொன்னதுமான ஆத்மஜ்ஞானமானது எல்லாரகஸ்யங்களுக்கும் மிகவும் பெரியரஹஸ்யம். இந்தப்ப்ரம்மமானது பெண்ணுமன்று; ஆணுமன்று; அலியுமன்று. அது துக்கமற்றதும் ஸுகமற்றதும் மூன்றுகாலத்திலுமுள்ள பொருளுமாயிருக்கிறது. இதை அறிந்தால் புருஷனாலும் ஸ்த்ரீயாலும் மறுஜன்மத்தை அடைகிறதில்லை. ப்ரம்மத்தை அடைவதற்காக இந்தத்தர்மமானது சொல்லப்பட்டது. ஓ! புத்திரனே! இந்த எல்லாமதங்களும் இருக்கிறபடியே என்னால் உண்மையாகச் சொல்லப்பட்டன. [1]அந்தமதங்கள் உள்ளவையுமாகின்றன; இல்லாதவையுமாகின்றன. ஓ! ஸத்புத்ரனே! ஆகையால் இப்பொழுது சொல்லப்பட்ட இதைப் ப்ரீதியுள்ளவனும் குணசாலியும் இந்திரிய நிக்கிரகமுள்ளவனுமான புத்திரனால் கேட்கப்பட்டு விருப்பமுள்ள மனத்துடன் உண்மையாக அவனுக்குச் சொல்லவேண்டும்.

---

## இருநூற்றைம்பத்தேழாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(வ்யாஸர், வைராக்யமே மோக்ஷஸாதனமென்பதைச் சுகருக்குச் சொல்லியது.)

கந்தங்களையாவது ரஸங்களையாவது ஸுகத்தையாவது அனுசரிக்கவுங்கூடாது; அதைஅதை மறுக்கவுங்கூடாது. மானம், [2]கீர்

---

1 'நித்யமும் அநித்தியமுமான எல்லாம் எப்படி நினைக்கப்படுகின்றனவோ, (இயற்கையில்) எப்படியிருக்கின்றனவோ அப்படியே என்னால் சொல்லப்பட்டன' என்றுங்கொள்ளலாம்.

2 பராக்ரமத்தாலுள்ளது.

த்தி, [1]யசஸ்இவைகளை விரும்பவும்கூடாது. அதுதான் வித்வானு யிருக்கிறபிராம்மணனுடைய ஆசாரம். பிரம்மசரியத்தோடு குருபணி விடைசெய்கிறவனாகி ருக்கு, யஜுஸ், ஸாமமுதலான ஸகலவேதங் களையும் அத்தியயனம்செய்யவேண்டும். எவன் வேதவேதாங்க பாரகதனும் எல்லாப்பிராணிகளுக்கும் பந்துவைப்போலிருக்கிற வனும் எவைகளையும் அறிந்தவனும் காமமற்றவனுமாயிருக்கி ருனோ அவன் ஒருபோதும் மரிக்கிறதில்லை. அவன் அதனால் பிராம் மணனல்லனென்கிறதில்லை. பலவிதமான இஷ்டிகளையும் போதுமான தக்ஷிணையுடைய யாகங்களையும் செய்தும் ஞானமில்லாதவிஷயத்தில் பிராம்மண்யத்தை அடைகிறதில்லை. இவன் பயத்தை அடையாமலும் இவனிடத்திலிருந்தும் ஒருபிராணியும் பயமடையாமலும் இவன்விரு ப்பு வெறுப்பற்றவனாகவும் இருந்தால் பிரம்மத்தை அடைகிறான். ஸகலமான பிராணிகளிடத்திலும் காமாவினாலும் வாக்கினாலும் மனத் தினாலும் பாவச்செய்கை செய்யாதபோது ப்ரம்மத்தை அடைகிருன். இது காமத்தினாலுண்டான பந்தனமேயொழிய வேறு பந்தனம் அன் று. காமபந்தத்திலிருந்து விடுபட்டவன் ப்ரம்மமாவதற்குஉரியவனாகி ருன். புகைநிறமுள்ள மேகத்தினின்று விடுபட்ட சந்திரன்போலக் காமத்திலிருந்து விடுபட்ட தீரன் ரஜோகுணமில்லாமல் காலத்தை எதிர்பார்த்துத் தைரியத்துடனிருக்கிருன். ஜலமானது எங்கும் நிறை ந்ததும் அசையாத நிலைமையுள்ளதுமான ஸமுத்திரத்தை அடைவது போல எவனிடத்தில ஸகல காமங்களும் அடங்குகின்றனவோ அவன் மோக்ஷத்தை அடைகிருன். காமங்களை விரும்புகிறவன் மோக்ஷத்தை அடைகிறதில்லை. காமம் அடங்கினவன் விருப்பங்கள் நிரம்பினவனாயிருக்கிருன். காமத்தில பற்றுதலுள்ளவன் அப்படி இருப்பதில்லை. அந்தத் தேகியானவன காமத்தால் ஸ்வர்க்கத்தை அடைகிருன். [2]வேதத்தினுடைய ரகஸ்யம்ஸத்யம்;ஸத்யத்தினுடைய ரகஸ்யம் அடக்கம். அடக்கத்தின் ரகஸ்யம் தானம்; தானத்தின் ரகஸ்யம் தவம்; தவத்தின் ரகஸ்யம் ஸந்யாஸம்; ஸந்யாஸத்தின் ரகஸ் யம் ஸுகம்; ஸுகத்தின் ரகஸ்யம் [3]ஸகுணப்ரம்மபாவம்; அதன் ரகஸ்யம்[4] நிர்குணப்ரம்மபாவம். ஆசை, சோகம், ஸங்கல்பம் இவை களாலுண்டான பரமத்தைத்தாண்டின புத்தியானது ஸந்தோஷத்தி னால் உத்தமமான சாந்திலக்ஷணத்தை அடைகிறது. சோகமின்மை, மமதையின்மை, இந்திரியத்தின் அடக்கம், மனத்தின் ஒழிவு, ஆத்ம

1 கொடையாலைந்தது.
2 வேறுபாடம்.
3 'ஸவர்க்கம்' என்பது மூலம்.
4 'சமம்' என்பது மூலம்.

ஜ்ஞானம், சௌசம் இந்த ஆறுலக்ஷணங்களுள்ள மனிதன் மறுபடியும் பூர்ணனுவான். ஸத்வகுணமுள்ள இந்த ஆறினுலும் ஶ்ரவணமனன நிதித்யாஸமென்னும் இம்மூன்றினுலும் அறிவுடையோர்களால் அறியப்பட்ட பரமாத்மாவை அறிகிறவர்களைப் பெரியோர்கள் இங்கேயே முக்தர்களாக நினைக்கிறார்கள். ப்ரதயகாத்மாவை அறிந்து ஞானியானவன் உற்பத்தியற்றதும் அழிவற்றதும் ஸ்வபாவஸித்தமும் ஸாதனமற்றதும் விகாரமற்றதுமாயிருக்கிற ஸுகத்தை அடைகிறான். மனத்தை ஸஞ்சரிக்கவிடாமல் ஸர்வவிதத்தாலும் நிலைக்கச்செய்து அதனுல் அடைகிறஸந்தோஷமானது மனத்தின் நிலையில்லாவிட்டால தனக்கு ஸம்பாதிக்கமுடியாது. எந்தப்பிரம்மத்தினுல் புஜியாதவனும் திருப்தியடைகிறானே, எதனுல் த்ரவயமில்லாதவனும் திருப்தியடைகிறானே, எதனுல் சரீரத்தில் பசையற்றவனும் பலத்தை அடைகிறானே, அந்தப்ரம்மத்தை அறிந்தவனே வேதத்தை அறிந்தவன். எந்தச்சிஷ்டனுன பிராம்மணன் தன்னுடைய இந்திரியத்வாரங்களை அடைத்துப் பற்றுதலில்லாதவனுகிப் பிரம்மத்யானஞ்செய்துகொண்டிருக்கிறானே அவன் ஆத்மரதியென்று சொல்லப்படுகிறான். பரதத்வத்தில ஸமாதியுள்ளவனும் காமமற்றவனும் நிலைபெற்றவனுமாயிருக்கிறவனைச் சந்திரமண்டலம்போல மேன்மேலும் விருத்தி அடைகிறஸுகமானது அடைகிறது. ஐந்துபூதங்களின் தன்மாத்திரைகளையும் ஸத்வமுதலான குணங்களையும் விட்டவனுன முனிக்கு ஸூர்யனுல் இருள்நீங்குவதுபோல ஸுகத்தினுல் துக்கமானது நீங்கிவிடுகிறது. கர்மாவைத் தாண்டினவனும் (ஸத்வாதி) குணங்களின் க்ஷயத்தைத் தாண்டினவனும் விஷயங்களால் ஸம்பந்திக்கப்படாதவனுமான பிராம்மணனை ஜராமரணங்கள் அடைகிறதில்லை. அவன் எல்லாவற்றிலிருந்தும்விடுபட்டு ஸமநிலையிலிருக்கிறபொழுது சரீரத்திலிருந்துகொண்டே இந்திரியங்களையும் விஷயங்களையும் அதிக்ரமித்துக்கொண்டிருக்கிறான். பரமகாரணத்தை அடைந்து காரியத்தன்மையை அதிக்ரமித்தவனும் பரதத்திறகுப்பரமானப்ரம்மத்தை நன்றாக அடைந்தவனுமாயிருப்பவனுக்குத் திரும்பிவருதல் இல்லை.

---

## இருநூற்றைம்பத்தெட்டாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(வ்யாஸர், ஐந்துபூதங்களின்குணங்களையும் சுகருக்குச் சொல்லியது.)

[1]தர்மார்த்தங்களையும் (ஸுகதுக்கமுதலிய) த்வந்த்வங்களையும் அடைந்திருந்தாலும் மோக்ஷத்தில்விருப்பமுள்ளசிஷ்யனுக்குக் குணவானாயிருக்கிறஆசாரியன் முதலில் பெரிதான இந்தஅத்யாத்மவிஷயத்தைச் சொல்லவேண்டும். ஆகாயம், வாயு, தேயு, அப்பு, ஐந்தாவதான பிருதிவி, இருப்பு, இல்லாமை, காலம் இவைகளெல்லாம் பாஞ்சபௌதிகமான எல்லாப்பிராணிகளிடத்திலும் இருக்கின்றன. ஆகாசமானது இடைவெளிஸ்வரூபம். ஶ்ரோத்திரேந்திரியமானது ஆகாசத்தின்காரியம். சாஸ்திரத்தின்விதியை அறிந்தமுனியானவன் சப்தத்தை அதனுடையகுணமாக அறியவேண்டும். கமனத்தை வாயுவின்ஸ்வரூபமும் பிராணாபானங்களையும் ஸ்பர்சத்தையும் துவக்கிந்திரியத்தையும் வாயுமயமுமாக அறியவேண்டும். பிரகாசமும் தாபமும் ஜீர்ணமும் தேஜஸ். புத்திமானானவன் நேத்திரத்தைத் தேஜோமயமாகவும் ரூபத்தை அதன்குணமாகவும் அது தமஸைநாசஞ்செய்கிறதாகவும் அறியவேண்டும். வேர்வையும் திரவமும் பசையும் அப்புவினுடையவையென்று சொல்லப்படுகின்றன. ரக்தமும் மஜ்ஜையும் மற்றும்பசையுள்ளவையும் ஜலவிகாரமென்று அறியவேண்டும். ரஸனேந்திரியமும் நாவும் ரஸமும் அப்புவினுடையகுணமாகச் சொல்லப்படுகின்றன. கடினவஸ்துவும் எலும்பும் பற்களும் நகங்களும் பிருதிவியின் பதார்த்தங்கள். மீசை, உரோமம், தலைமயிர், நரம்பு, ஸ்வாஸக்குழாய, தோல் (இவைகளும்) பிருதிவியே. கிராணமென்கிற பெயருள்ள இந்திரியமானது மூக்கென்றுசொல்லப்படுகிறது. இதன் விஷயமானகந்தமும் பிருதிவிமயமென்று அறியவேண்டும். மேலுள்ள பூதங்களில கீழ்ப்பூதங்களின்குணஙகள் எல்லாம் இருக்கின்றன. கீழுள்ளபூதங்களில மேலுள்ளபூதங்களின் குணங்கள் இல்லை. ஐந்துவிதமான பூதக்கூட்டங்களுடையபரம்பரையை முனிகள் அறிகிறார்கள். இவைகளுக்கு (எல்லாம்) மனம் ஒன்பதாவதும் புத்தியானது பத்தாவதுமாகச் சொல்லப்படுகின்றன. பதினொராவது அந்தராத்மா. அந்தராத்மாக்களெல்லாம் உயர்ந்தனவாகச் சொல்லப்படுகின்றன. புத்தியானது நிச்சயரூபமாயிருக்கிறது. மனம் ஸங்கல்பரூபமாயிருக்கிறது.

1 வேறுபாடம்.

சரீரத்தைஅறிகிறவனுன அந்தஜீவனுனவன் கர்மபலரூபமானகாரண த்தினுல அறியத்தகுந்தவன். காலரூபமான இந்தக்கொள்கைகளெல்லா வற்ருலும் எல்லாம் வியாபிக்கப்பட்டதாகப் புத்தியினுல் கலக்கமின் றிப் பார்க்கிறவன் மோகததை அடைகிறதில்லை.

---

## இருநூற்றைம்பத்தோன்பதாவது அத்தியாயம்.

## மோக்ஷதாமம். (தொடர்ச்சி.)



(வ்யாஸர், யோகதர்மத்தைச் சுகருக்குச் சொல்லியது.)

ஸ்தூலசரீரத்தினின்றும் விடுபட்டதும் ஸூக்ஷ்மமுமாயிருக் கிற (லிங்க)சரீரியைச் சாஸ்திரத்தை அறிந்தவர்கள் சாஸ்திரத்தில சொல்லப்பட்ட (யோகமுதலான) கர்மங்களால் நன்ருகப் பார்க்கிருர் கள். (நம்மால) பார்க்கப்படுகிற ஸூர்யகிரணங்கள்சேர்ந்து ஸஞ் சரிக்கின்றன ; போகின்றன ; நிறகவுஞ் செய்கின்றன. அப்படியே ஸ்தூலதேஹங்களால் விடப்பட்ட லிங்கசரீரஙகள் மனுஷ்யர்களுக்கு விஷயமில்லாதவைகளாக லோகங்களில் சஞ்சரிக்கின்றன. யோகி யான சாஸ்திரவித்வானேவென்ருல எப்படி ஜலததில ஸூர்யனு டைய பிரதிபிம்பமானது காணப்படுகிறதோ அப்படியே (தன்னு டைய) பிரதிபிம்பமான லிங்கசரீரத்தைப் பார்க்கிருன். ஸூக்ஷ்ம மான அந்தலிங்கங்கள சரீரத்திலிருந்தும் விடப்பட்டவைகளாயிருக் கின்றன. ஆகையினுல், இந்திரியவசமுள்ள தத்வஜ்ஞானிகள் (அவை களை) உண்மையாகப் பார்க்கிருர்கள். தம்மால் ஸங்கலபிக்கப்பட்ட தும் கர்மத்தாலுண்டானதுமான காமமுதலானவறறை [1]விட்டவர் களும் பிரதானததினுடைய சேர்க்கையிலிருந்து [2]விடுபட்டவர்களு மான எலலாயோகிகளுக்கும் தூங்கும்போதும் விழித்துக்கொண் டிருக்கும்போதும் இந்தலிங்காத்மாவானது பகலிலபோலவே இரவி லும் இரவில்போலவே பகலிலும் வசததிலிருக்கிறது. எப்போ தும் [3]நித்யனும் ஜராமரணமறறவனுமாயிருக்கிற அந்த யோகியினு டையஜீவன் எப்பொழுதும் (மஹத்தத்வம் அஹங்காரம் ஐந்துதன் மாத்திரைகள்என்கிற) ஏழுஸூக்ஷ்மகுணங்களுமுள்ளதாகி நித்யம் (ஸகலலோகஙகளிலும்) ஸஞ்சரிக்கிறது. மனம், புதகி இவைகளால ஜயிக்கப்பட்டவனும் கனவிலும் தன்தேகம் பிறர்தேகஙகளைப்பார்த்து ஸுகதுக்கங்களை அறிகிறவனுகிருன். அந்த ஸ்வப்னத்திலும் துக்

---

1 வேறுபாடம். 2 வேறுபாடம். 3 'அநித்யனும்' என்பது பழையவுரை.

கத்தை அடைகிறான்; ஸுகத்தையும் அடைகிறான்; அந்தஸ்வப்நத்திலும் குரோதலோபங்களைச்செய்து விசனத்தை அடைகிறான்; அளவற்றபொருள்களைப்பெற்று ஸந்தோஷத்தையும் அடைகிறான்; அந்த ஸ்வப்நத்திலும் புண்ணியத்தைச் செய்கிறான்; விழித்துக்கொண்டிருக்கிறவன்போலவும் பார்க்கிறான். இந்த ஜீவன் கர்ப்பத்தை அடைந்து எப்பொழுதும் உதரக்கனலினிடையில் இருந்து பத்து மாதம் குக்ஷியில் வஸித்துக்கொண்டிருக்கும் அன்னம்போல ஜீர்ணமாகிறதில்லை. சரீரங்களில் ஹ்ருதயத்திலிருக்கிறவனும் பரமேஸ்வரனது அம்சமாயிருக்கிறவனுமான இந்த ஜீவாத்மாவைத் தமோகுண ரஜோகுணங்களால் வியாபிக்கப்பட்டவர்கள் பார்க்கிறதில்லை. யோகசாஸ்திரத்தில் ஸ்ரத்தையுடையவர்களாகித் தம்ஆத்மாவை அடையவிருப்பமுள்ளவர்கள் தமஸ் ரஜஸுகளால்விடுபட்டு அறிவற்ற ஸ்தூலசரீரங்களும் ஸூக்ஷ்மசரீரங்களும் வைரம்போலுள்ள காரணசரீரங்களுமானவைகளில் அந்தஆத்மாவைப் பார்க்கிறார்கள். சாண்டில்யரானவர் தனித்தனியாக ஸ்ருஷ்டிக்கப்பட்ட நான்குஆஸ்ரமங்களின் தர்மங்களிலும் இந்த ஸமாதியோகத்தையே ஸமமாகச் சொன்னார். இந்திரியம், விஷயம், மனம், புத்தி, மகத்தத்வம், அவ்யக்தம், புருஷன் இவ்வேழையும் ஸர்வஜ்ஞனாயிருக்கை, திருப்தி, அனாதியான அறிவு, தன்வசனாயிருக்கை, எப்போதும் அழிவில்லாத ஞானம், அனந்தசக்தி இவ்வாறுஅங்கங்களுமுள்ள மஹேஸ்வரனையும்அறிந்து பிரதானத்தின்பரிணாமங்களையும் அறிந்தவன் பரப்ரம்மத்தைப் பார்க்கிறான்.

---

## இருநூற்றறுபதாவது அத்தியாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



(வ்யாஸர், காமமுதலியவற்றை வெல்வது அவசியமென்று சுகருக்குச் சொல்லியது.)

ஹ்ருதயத்தில் மோகமான வித்தில்முளைத்ததும் குரோத மானங்களாகிற பெரியஅடிக்கிளைகளுள்ளதும் உலகவிசாரமான பட்டையையுடையதும் ஆச்சரியமுமான காமமாகிற ஒருவிருக்ஷம் இருக்கிறது. அதற்கு அஜ்ஞானமானது மூலம்; அஜாக்ரதையானது பாத்தி. அது அஸூயைகளாகிற இலைகளுடையது; பூர்வபாபமாகிறவைரமுள்ளது; அவா சிந்தையென்கிறபெருங்கிளைகளையுடையது.

சோகங்களாகிற வலார்களை உடையது; பயமாகிற முளையுள்ளது; மோகத்தை உண்டுபண்ணுகிற காமதாகங்களாகிற கொடிகளால் சுற்றப்பட்டது. (ரதிமுதலியவையாகிற) பலத்தை அளிக்கிற அந்தமஹாவிருக்ஷத்தைச் சூழ்ந்துகொண்டு மிக்கஆசையுள்ளவர்கள் அதன்பலனில் விருப்பமுற்று நீண்டவைகளான (வாசனைகளாகிற) பாசங்களுடன் அதனைப்பற்றுகிறார்கள். அந்தப்பாசங்களைப்பிடித்துக்கொண்டு அந்த விருக்ஷத்தை (க்கட்டி) இழுக்கிறவன் ஜரை, மரணம்இவ்விரண்டிலுண்டான துக்கங்களுடைய முடிவை அடைவான். அறிவில்லாதவன் ஸங்கல்பத்துடன் அதில் ஏறுகிறான்; [1]அந்தவிருக்ஷத்தை அடிக்கிறான். அது அவனால் அடிக்கப்பட்டு, விழுங்கப்பட்ட விஷமானது ரோகியை அழிப்பதுபோல அவனையே அழிக்கிறது. முயற்சியுள்ளவன்வேரூன்றின அந்தமரத்தின்வேரையோகஸித்தியாகிறபலத்துடன் ஸமபுத்தியாகிறசிறந்தகத்தியினால் அறுக்கெறிகிறான். இவ்விதமானகாமத்தின் அதிகமானபரவுதலையும் காமத்தைப்பற்றினசாஸ்திரத்தின் இந்தவிஷயத்தையும்அறிபவன் விசேஷ துக்கங்களைத்தாண்டுவான். சரீரத்தை ஒருபட்டணமாகச் சொல்லுகிறார்கள். அதற்குப் புத்தியானது இராணியாகக் கருதப்படுகிறது. அந்தப்பட்டணத்தில் மனமானது சரீரத்திலிருந்துகொண்டு புத்திக்குக் கார்யங்களைச்சிந்திக்கிற மந்திரியாக இருக்கிறது. இந்திரியங்கள் பட்டணத்தின் ஜனங்கள். அவைகளுக்காகவே மனத்திற்குப் பெரிதானபிரவிருத்தி உண்டாகிறது.அந்தப்பட்டணத்தில் தமஸென்றும் ரஜஸென்றும் கடுமையான இரண்டுதோஷங்களிருக்கின்றன. [2]எந்தஅர்த்தத்தைப் பட்டணத்தின் அதிபதிகளுடன் பட்டணத்துஜனங்கள் அடிக்கிறார்களோ அந்தஅர்த்தத்தையே இரண்டுதோஷங்களும் தப்புவழியாகஅடிக்கின்றன. புத்தியானது கெடுக்கமுடியாததாயிருந்தாலும் அர்த்தவிஷயத்தில் மனத்தோடுஒற்றுமையை [3]அடைகிறது. இந்திரியங்களாகிற பட்டணவாஸிகளும் மனத்தால்திருப்தியடைகின்றன.ஆதலால், அவைகளுடைய நிலைமையும் சலித்துவிடுகிறது. எந்தஅர்த்தத்தைப் புத்தி ஹிதமென்று தீர்மானிக்கிறதோ அது கெடுதலைவிளைவித்து நசிக்கிறது. பட்டணவாஸிகளுடைய மந்திராலோசனையில்லாதபுத்தியின்அந்தஅர்த்தமானது கிரமமாகநசிக்கிறது. எந்த அர்த்தத்தை மனம் தனியாகஸங்கற்பிக்கிறதோ அதுவும் நசித்துவிடுகிறது. மனம் புத்தியைக்காட்டிலும் வேறாகித் தனிமையாகிவிடுகிறது. அந்தப்

1 'அறிவுள்ளவன் அதை அழிக்கிறான்' என்றும் கொள்ளலாம்.

2 'யத்' என்று பாடம் கொள்ளப்பட்டது. 3 வேறுபாடம்.

புத்தியில் பிரதிபிம்பித்தவனும் ஒன்றுமில்லாதவனுமான இந்த ஆத்மாவை ரஜோகுணம் சூழ்கிறது. ஆகையால், மனம் ரஜஸுடன் சேர்ந்து ஸ்னேகஞ்செய்துகொள்ளுகிறது. பிறகு, அவனையும் பட்டணத்துஜனங்களையும் எடுத்து ரஜஸினிடம் கொடுத்துவிடுகிறது' என்றுசொன்னார்.

---

## இருநூற்றறுபத்தோராவது அத்தியாயம்.

## மோக்ஷ தாமம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர் ஐந்துபூதங்களின் குணங்களையும் சொல்லியது.)

"ஓ! புத்திரனே! குற்றமற்றவனே! த்வைபாயனருடையமுகத்திலிருந்து வெளிவந்த பூதங்களின்குணங்களுடைய அளவை மறுபடியும் மிகுதியான [2]ஆதரவுடன் கேட்கக்கடவாய். ஜ்வலிக்கின்றஅக்கினிக்கொப்பான வ்யாஸபகவான் புகைபோன்ற அறிவீனர்களிடம் அன்புடன்சொன்னார். ஓ! புத்திர! ஆகையால், நானும் உறுதியான சாஸ்திரத்தை மறுபடியும்சொல்வேன். அசையாமை, கனம், கடினத்தன்மை, உண்டாக்குந்தன்மை, கந்தம், பாரம், (கந்தத்தைஏற்றுக்கொள்ளும்) சக்தி, நெருக்கம், ஆதாரமாயிருத்தல், தரித்தல்ஆகிய இவைகள் பூமியினுடையகுணங்கள். குளிர்ச்சி, ரஸம், நனைத்தல்,த்ரவத்வம், பசை, மென்மை, ரஸனேந்திரியம், பெருகுதல், (அரிசிமுதலியவைகளைப்) பாகஞ்செய்தல்இவைகள் நீரினுடையகுணங்கள். நெருங்கமுடியாமை, பிரகாசம்,உஷ்ணம், சமைத்தல்,பிரகாசிக்கச்செய்தல், சுசி, செந்நிறம், சீக்கிரகமனம், உக்கிரத்தன்மை, எப்பொழுதும் மேலேசெல்லுதல்இவைகள்தேயுவினுடையகுணங்கள். சீதமும்உஷ்ணமும் இல்லாதஸ்பரிசம், வாகிந்திரியஸ்தானம், (கமனத்தில்) ஸ்வதந்திரத்தன்மை, வன்மை, வேகம், மூத்திரமுதலானவற்றைவிடுதல், சலனம், சேஷ்டை, ப்ராணனுயிருத்தல, உற்பத்திநாசங்கள் இவைகள் வாயுவின்குணங்கள். சப்தம், வியாபித்திருத்தல், துவாரத்தன்மை, (தான்மற்றென்றுக்கு) ஆதாரமாயில்லாமை, (தனக்கு) ஓர் ஆதாரமில்லாமை, விளக்கமில்லாதிருத்தல், விகாரமின்மை, தடுக்காமலிருத்தல், ஶ்ரோத்திரம், (சரீரங்களிலுள்ள)துவாரங்கள் இவைகள் ஆகாயத்தின் குணங்கள். (இப்படி) ஐந்துபூதங்களிலும் கண்டறியப்பட்டகுணங்

---

1 தன்னைப்பிறன்போலக் கூறியது.

2 'ஶ்லாகயா' என்பதுமூலம்; 'இத்தகைய ஆத்மவித்தையை அறிந்தோமேனென்கிற எண்ணத்தோடு' என்பது பழையவுரை.

கள் ஐம்பதென்றுசொல்லப்பட்டன. பயன்விஷயத்தில் ஆராய்தல், நினைத்தல், ப்ரமம், மனோரதம், பொறுமை, வைராக்கியமுதலியவை, விருப்பு வெறுப்புமுதலானவை, வேகம், நிலையில்லாமை இந்த ஒன்பதும் மனத்தின்குணங்கள். இஷ்டாநிஷ்டவிருத்திநாசம், உத்ஸாஹம், சித்தத்தைநிறுத்தல், ஸந்தேகம், யதார்த்தமானஅறிவு இவ்வைந்தையும் புத்தியின்குணங்களாகப் பண்டிதர்கள் நினைக்கிறார்கள்'' என்றார்

யுதிஷ்டிரர், ''புத்தியானது எப்படி ஐந்துகுணங்களுடையது? [1] இந்திரியங்களின்ஐந்துகுணங்கள்எப்படி? பிதாமஹரே! ஸூக்ஷ்மமாக அறியக்கூடிய இந்த எல்லாவிஷயத்தையும் எனக்குச் சொல்லவேண்டும்'' என்றுகேட்க, பீஷ்மர், ''ஓ! புத்திரனே! பூதங்கள் புத்தியின்குணங்களுடன்சேர்ந்த அவைகளின் குணங்கள் ஆகஅறுபதையும் மூலப்பிரகிருதியினால்ஸ்ருஷ்டிக்கப்பட்டவைகளாகவும்பூதங்களைப்பற்றினவைகளாகவும் சொல்லுகிறார்கள். அக்ஷரப்ரம்மத்தாலபடைக்கப்பட்டவைகளைப் பிரம்மத்தில்பற்றினவைகளாகச் சொல்லுகிறார்கள். ஆனால், அதை இவ்வுலகில் நித்தியமாகச்சொல்லுகிறதில்லை. புத்திரனே! அது உனக்கு [2] வேதவிருத்தமாகப் பிறரால் சொல்லப்பட்டது. ஆராயுமிடத்தில் அது குற்றமுள்ளது. ஆகையால் இப்பொழுது இவ்வுலகில [3]பிரம்மதத்வம்முழுமையையும் அடைந்துபிரம்மத்தின் பிரபாவத்தால் சாந்தமான புத்தியைஉடையவனாகக்கடவாய்'' என்றுசொன்னார்.

---

## இருநூற்றறுபத்திரண்டாவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(நாரதர், ப்ரம்மதேவர் கோபத்தீயால் ப்ரஜைகளைஎரித்ததையும் ருத்ரர் அதைத்தணிப்பதற்காக அவரிடம்சென்றதையும் அகம்பனனுக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், ''ஸேனைகளின்நடுவில் உயிர்நீங்கினவர்களாகிப் பூதலத்தில்படுத்திருக்கிற மிக்கவலிமையுள்ள இந்தஅரசர்கள் ஒவ்வொருவரும் பயங்கரமானபடைகளும்பதினாயிரம்யானைபலமுமுள்ளவர்கள். இவர்கள் ஸமமான [4]பராக்ரமமும் பலமுமுள்ளவர்களான மனிதர்

---

1 'பஞ்சேந்த்ரியாகுணா:' என்று பாடம் கொள்ளப்பட்டது.

2 இங்கு, 'அநாகமம்' என்று மாற்றப்பட்டது.

3 வேறுபாடம். 4 'வலிமையும் படையும்' என்றும் கொள்ளலாம்.

களால் யுத்தத்தில் அடிக்கப்பட்டார்கள். முன்காலத்தில் யுத்தத்தில் இவ்வித மனிதர்களைக் கொல்லத்தக்கவரை நான் காணேன். இவர்கள் பராக்ரமம் நிறைந்தவர்களும் பிரதாபமும் பலமுமுள்ளவர்களுமாயிருந்தார்கள். ஆயினும் அறிவிற்சிறந்தவர்களான இவர்களும் உயிரிழந்து படுத்திருக்கிறார்கள். உயிர்போன இவர்களைப்பற்றி மரித்தவர்களென்றும் ஒருசொல் உண்டாயிற்று. பெரும்பாலும் பயங்கரமான பராக்ரமமுள்ள இவ்வரசர்கள் மரித்தார்கள். அவ்விஷயத்தில் எனக்கு ஐயமுண்டாகிறது. மரித்தவர்களென்னும் சொல் எந்தக்காரணத்தாலுண்டாகிறது. எதற்கு எதிலிருந்து மிருத்யு உண்டாகிறது ? தேவர்களுக்கொப்பானவரே! பிதாமஹரே! மிருத்யுவானவன் இவ்வுலகிலுள்ள பிரஜைகளை ஏன் அபகரிக்கிறான்? அதை எனக்குச் சொல்லவேண்டும்" என்று வினவ, பீஷ்மர் சொல்லத் தொடங்கினார்.

"அப்பா ! முன்காலத்தில கிருதயுகத்தில் அகம்பனனென்னும் ஓர் அரசனிருந்தான். அவன் யுத்தத்தில் பகைவனுக்கு வசப்பட்டவனும் வாகனங்கள் அழிந்தவனுமானான். அவனுக்குப் பலத்தில் ஸ்ரீநாராயணருக்குச்சரியான ஹரியென்னும் ஒரு புத்திரனிருந்தான். அவன் ஸேனைகளுடனும் காலாட்களுடனும் யுத்தத்தில் பகைவர்களால் கொல்லப்பட்டான். பகைவர்களுக்கு வசப்பட்டவனும் புத்திரசோகமடைந்தவனுமான அந்தஅரசன் மிக்க சாந்தியை அடைந்தான். அவன் தற்செயலாகப் பூமியில் நாரதரைக்கண்டான். அவ்வரசன் யுத்தத்தில் பகைவர்கள் தன்னைப்பிடித்துக்கொண்டதையும் புத்திரன் மரித்ததையும்முழுதும் நடந்தபடி அவரிடம் சொன்னான். பிறகு, தவத்தையே தனமாகக்கொண்ட நாரதரானவர் அவனுடைய அந்த வார்த்தையைக்கேட்டு அப்பொழுது புத்திரசோகத்தை நீக்கக்கூடிய பின்வரும் கதையைச் சொல்லலானார்.

'அரசனே! பூமிக்குஅதிபனே! மிகவிரிவானபெரியஇக்கதையை நடந்தபடியும் நான் கேட்டபடியும் என்னிடமிருந்து கேள். பெரிய தேஜஸுள்ள பிதாமஹரானவர் படைப்புக்காலத்தில் பிரஜைகளைப் படைத்தபின் (மிகவும் கிழவர்களும் பலருமான ப்ரஜைகளைப் பார்த்துப்) பொறுமையுள்ளவரானார். நிலைமைதவறாதவனே ! எங்கும் பிராணிகளால் மறைக்கப்படாதஇடம் சிறிதுமில்லை. அரசனே! மூன்றுஉலகங்களும் மூச்சுவிட இடமில்லாதவையும் மிகநெருங்கியவையுமாயிருந்தன. பூபதியே ! அந்தப்பிரம்மதேவருக்கு உலகத்தின் ஸம்ஹாரத்தைப்பற்றிச் சிந்தை உண்டாயிற்று. சிந்தையை

அடைந்த பிரம்மதேவர் அழித்தற்குரியகாரணத்தை அறியவில்லை. மஹாராஜனே! அந்தப்பிரம்மதேவருடைய இந்திரியங்களிலிருந்து கோபத்தால் அக்கினி கிளம்பிற்று. அரசனே! அந்தப் பிரம்மதேவரானவர் அந்த அக்கினியால் எல்லாத்திக்குக்களையும் எரித்தார். அரசனே! பகவானான பிரம்மதேவருடைய கோபத்தாலுண்டான அக்கினியானது பிறகு பூமி, அந்தரிக்ஷம், ஸ்வர்க்கம் என்ற சராசரங்களுடன் கூடிய உலகத்தை எரித்தது. பிரம்மதேவர் கோபங்கொண்டதும், பெரியகோபத்தின்வேகத்தால் ஸ்தாவரங்களும் ஜங்கமங்களுமான பிராணிகள் அப்பொழுது எரிக்கப்பட்டன. பிறகு, வேதங்களுக்கும் யாகங்களுக்கும் பதியும் ஜடையுள்ளவரும் ஸ்தாணுவும் பாபத்தை அபஹரிப்பவரும் தேவருமானசிவபெருமான் ஸத்யலோகவாஸியான பிரம்மதேவரைச்சரணமடைந்தார். பிரஜைகளின்நன்மையைவிரும்பி அந்தஸ்தாணுவானவர் வந்ததும், ஜ்வலிப்பவர்போன்ற பிரம்மதேவர் அப்பொழுது அவரைநோக்கி வரமளிக்கவிரும்பி, 'சம்புவே! இப்பொழுது என்னவிருப்பத்தை நான்செய்யவேண்டும்? நீர் வரம்பெறத் தக்கவராகிறீரென்று நான் நினைக்கிறேன். உம்முடையமனத்திலே என்னவிருப்பமிருக்கிறதோ அதை நான் செய்வேன்' என்று சொன்னார்.

---

## இருநூற்றறுபத்துமூன்றாவது அத்தியாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



(நாரதர், ப்ரம்மதேவர் ம்ருத்யுவைப்படைத்துப் பிரஜைகளைக் கொல்லஏவியதை அகம்பனனுக்குச் சொல்லியது.)

ஸ்தாணு, 'பிரபுவே! நான் இங்குவந்தகாரியம் பிரஜைகளின் படைப்புக்காக என்று தெரிந்துகொள்ளும். இந்தப்பிரஜைகள் உம்மால் படைக்கப்பட்டவைகளல்லவா? பிதாமஹரே! இந்தப்பிரஜைகளிடத்தில் நீர் கோபிக்கவேண்டாம். தேவரே! உமது[1] தேஜஸென்னும் தீயால் பிரஜைகள்எல்லாம் எரிக்கப்படுகின்றன. அவைகளைக்கண்டு எனக்குத் தயைஉண்டாகிறது. உலகத்திற்குப் பிரபுவே! இந்தப் பிரஜைகளைபற்றி நீர் கோபிக்கவேண்டாம்' என்று சொன்னார். பிரம்மா, 'நான் கோபிக்கவில்லை. பிரஜைகளிருக்கவேண்டாமென்றவிருப்பமும் எனக்கில்லை. ஆனால், பூமிக்குச் சுமையில்லாமலிருக்கவேண்டியதற்காக ஸம்ஹாரம் விரும்பப்படுகிறது. ஓ! மஹாதேவரே! எப்பொழு

---

1 வேறுபாடம்.

தும் பாரத்தால்துன்பமடைந்து அதனால் ஜலத்தில்முழுகுகிற இந்தப் பூமிதேவியானவள் (பிரஜைகளை) அழிக்கவேண்டி என்னைத் தூண்டி னாள். புத்தியால் பலவிதமாய் விசாரித்தும், வளர்ந்த இந்தப்பிரஜை களின் ஸம்ஹாரத்திற்குக்காரணத்தை நானறியாதபொழுது எனக் குச் சினமுண்டாயிற்று' என்று சொன்னார். ஸ்தாணு, 'தேவர்களுக் குத் தலைவரே! நீர் அழிப்பதை விட்டுவிடும். கோபம் வேண்டாம். ஸ்தாவரங்களும் ஜங்கமங்களுமான பிரஜைகளை நாசஞ்செய்யவேண் டாம். எல்லாக்குளங்களும் புல்பூண்டுகள்பாவும் ஸ்தாவரஜங்கமங் களும் நான்குவிதமான பிராணிக்கூட்டங்களுமாகிற எல்லாஜகத்தும் அகாலத்தில் பற்றிக்கொண்டு சாம்பலாயின. பூஜ்யரான பகவானே! தயைசெய்யும். என்னால் இந்தவரன் கேட்கப்படுகிறது. இந்தப்பிரஜை கள் நசித்துவிட்டால் எவ்விதத்திலும் திரும்ப வரமாட்டா. ஆகை யால், இக்கோபத்தை உம்முடைய தேஜஸினாலேயே அடக்கிக்கொள் ளும். ஓ! பிதாமஹரே! பிராணிகளுக்கு ஹிதத்தைச்செய்வதற்காக நன்மையில் விருப்பத்துடன் இந்தப் பிராணிகளெல்லாம் எரிக்கப் படாமலிருக்கும்படியான வேறுஉபாயத்தைக் கருதும். பிரஜைகள் வம்சமில்லாமல் நாசமடையவேண்டாம். நான் புத்திரனாக நினைக்கப் படுகிறேன். என்னை ஸம்ஹாரத்தில் ஏவினால் நான் அஸுரர்களுடன் சேர்க்கப்பட்டுத் தாபத்தையடைவேன். லோகத்தின் நன்மையை விரும்பினஉம்மால் தேவர்களின்மத்தியில் சேர்க்கப்பட்டிருக்கிறேன். உலகத்துக்குத்தலைவரே! ஸ்தாவரமும் ஜங்கமமுமான இவ்வுலகம் உம் மிடத்திலிருந்து உண்டானதன்றோ? சிறந்ததேவரே! பிரஜைகள் [1] திரும்பவும் உண்டாகும்படி அருள்புரிய உம்மைவேண்டுகிறேன்' என்றுசொன்னார். பிரம்மதேவர் ஸ்தாணுவின் வசனத்தைக்கேட்ட பின் வாக்கையும் மனத்தையும் அடக்கி அந்தஆக்கினியைத் திரும்ப வும் தம்அந்தராத்மாவில் ஒடுங்கச்செய்தார். பிறகு, உலகங்களில் பூஜிக்கப்படுகிறவரும் பகவானும் பிரபுவுமான பிரம்மதேவர் அந்தஅக் கினியை அடக்கிக்கொண்டு பிறப்பையும் இறப்பையும் உண்டுபண்ணி னார். கோபத்தாலுண்டான அந்தஅக்கினியை அவர் அடக்கும்பொ ழுது கறுப்பும் சிவப்புமான ஆடைஉடுத்தவளும் கண்களின்நடுவில் கறுத்தவளும் திவ்யமானகுண்டலம் பூண்டவளும் திவ்யமான ஆபர ணங்களால் அலங்கரிக்கப்பட்டவளுமான ஒருபெண் மஹாத்மாவான அவருடைய எல்லாஇந்திரியங்களினின்றும் தோன்றினாள். இந்திரி யங்களிலிருந்து வெளியில்வந்ததும் அவள் தென்திசையில் நின்றாள்.

1 'இறந்து இறந்து பிறக்கவேண்டும்' என்பது பழையவுரை.

உலகங்களுக்குத் தலைவர்களான (பிரம்மதேவர், ஸ்தாணு) இரண்டு தேவர்களும் அந்தப்பெண்ணைக் கண்டார்கள். பூபதியே! அப்பொழுது உலகங்களுக்கு ஆதிகாரணரும் ஈசருமான ப்ரம்மதேவர் அந்தப் பெண்ணை, 'ஓ! மிருத்யுவே!' என்று அழைத்து,'இந்தப்பிரஜைகளைக் கொல். கோபங்கொண்டன்னால் ஸம்ஹாரஞ்செய்யவேண்டுமென்ற புத்தியுடன் நினைக்கப்பட்டாயன்றோ? ஆகையால், அறிவுள்ளவர்களும் அறிவீனர்களுமான எல்லாப்பிரஜைகளையும் நீ ஸம்ஹாரஞ் செய்யவேண்டும். பெண்ணே! வேற்றுமையின்றி நீ பிரஜைகளை ஸம்ஹாரஞ்செய். என்கட்டளையால் நீபெரியநன்மையை அடைவாய்' என்றுசொன்னார். இவ்விதம்சொல்லப்பட்டவளும் தாமரைமாலைபூண்டவளும் சிறியபெண்ணுமான மிருத்யுதேவியானவள் துக்கத்துடன் கண்ணீர்விட்டுக்கொண்டு மிகவும் சிந்தித்தாள். உலகபதியான பிரம்மதேவர் மானிடர்களின் நன்மைக்காகத் தம்கைகளால் அந்தக் கண்ணீரையேந்தித் திரும்பவும் வேண்டினார்.

---

## இருநூற்றறுபத்துநான்காவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(நாரதர், ப்ரம்மதேவருக்கும் ம்ருத்யுவுக்கும்நடந்த ஸம்வாதத்தை அகம்பனனுக்குச் சொல்லியது.)

நீண்டகண்ணுள்ள அந்தப்பெண்ணானவள் அப்பொழுது தானாகவே துக்கத்தைவிலக்கிக்கொண்டு எதிர்முகமாய்க்கைகூப்பி ப்ரம்மதேவரைநோக்கிச் சொல்லத்தொடங்கினாள். 'பேசுகிறவர்களிற் சிறந்தவரே! உம்மால்படைக்கப்பட்ட என்னைப்போன்றபெண்ணானவள் எப்படி கொடியசெய்கையுள்ளவளும் எல்லாப்பிராணிகளுக்கும் பயத்தைச்செய்கிறவளுமாகக்கூடும்? நான் அதர்மத்திற்குப் பயப்படுகிறேன். தர்மத்தைவிட்டு நீங்காததொழிலை எனக்குக் கட்டளையிடும். ஈஶ்வரரே! நான் பயப்படுகிறேன். நீர் இனியபார்வையால் என்னைப் பார்க்கவேண்டும். சிறுவர்களோ கிழவர்களோ நடுப்பிராயத்தில் இருப்பவர்களோ குற்றமில்லாதபிராணிகளை நான் கொல்லமாட்டேன். பிராணிகளுக்குத்தலைவரே! உமக்குநமஸ்காரம். எனக்கு அனுக்கிரகஞ்செய்யவேண்டும். பிரியர்களானமக்களையும் நேயர்களையும் உடன்பிறந்தார்களையும் தாய்களையும் தந்தைகளையும் கொல்லமாட்டேன். இவ்விதம் மரிப்பார்களாகில் அவர்களைச்சேர்ந்தவர்கள்

என்னை வைவார்கள்.* நான் அவர்களிடம் பயப்படுகிறேன். துன்பப்பட்டவர்களின் கண்ணீரின்கரைவானது அளவற்றவருஷங்கள் என்னைத் தபிக்கச்செய்யும். அவர்களிடமிருந்து மிகவும்பயந்து நான் உம்மைச் சரணமடைகிறேன். தேவரே! பாவச்செய்கையுள்ளவர்கள் யமன்வீட்டில் வீழ்த்தப்படுகிறார்கள். ஓ! வரதரே! உமது அனுக்கிரகத்தை வேண்டுகிறேன். பிரபுவே! எனக்கு அனுக்ரஹஞ்செய்ய வேண்டும். உலகங்களுக்குப் பிதாமஹரே! உம்மிடமிருந்து நான் இந்தவரத்தை அடையவிரும்புகிறேன்.மஹேஸ்வரரே! உமதனுக்கிரகத்தால் நான் தவஞ்செய்யவிரும்புகிறேன்' என்றுசொன்னாள். பிதாமஹர், 'கோபங்கொண்ட என்னால் ஸம்ஹாரஞ்செய்யவேண்டுமென்றஎண்ணத்தாலன்றோ நீ சிந்திக்கப்பட்டாய்? ஆகையால், எல்லாப்பிரஜைகளையும் நீ ஸம்ஹாரஞ்செய். சிந்திக்கவேண்டாம். இது அவசியம் இவ்விதமே ஆகவேண்டும். இது வேறுவிதமாகாது. குற்றமில்லாதவளே! புகழத்தக்க அங்கமுள்ளவளே! என்வசனத்தைச் சொன்னபடிசெய்' என்றார். ஓ! புஜபலமுடையவனே! பகைவர்களின்நகரங்களை வெல்பவனே! இவ்விதம்சொல்லப்பட்டமிருத்யுவானவள் பேசாமல் பிரம்மாவுக்கெதிரில் வணக்கத்துடன் நின்றாள். பிறகு,பிரம்மாவினால் அடிக்கடிசொல்லப்பட்டஅந்தப்பெண் வலிமை குன்றி மௌனமாயிருந்தாள். அதன்பிறகு, உலகங்களின் ஈஸ்வரர்களுக்கும் ஈஸ்வரரான பிரம்மாவானவர் தமக்குள்ளேதாமாகவே கோபத்தை அடக்கினார். லோகநாதரானஅவர் புன்சிரிப்புடன் எல்லா உலகங்களையும் பார்த்தார். ஒருவராலும் ஜயிக்கமுடியாத அந்தப்பகவான் கோபம்தெளிந்தவுடனே அந்தக்கன்னிகையானவள் அவருடைய ஸமீபத்திலிருந்து சென்றாளென்று நமக்குக் கேள்வி. அரசர்களிற் சிறந்தவனே! அப்பொழுது பிரஜைகளின் ஸம்ஹாரத்தை ஒத்துக்கொள்ளாமல் பிரம்மாவைவிட்டுவிலகி, மிருத்யுவானவள் விரைவாகக் [1]கோதீர்த்தத்தைக்குறித்துச் சென்றாள். அவ்விடத்தில் அந்தத் தேவியானவள் மற்றவர்களால் செய்யமுடியாத பெருந்தவத்தைச் செய்தாள். ஆயிரத்தைந்நூறுகோடி லக்கமுள்ளவருஷங்கள் ஒரு காலால் நின்றாள். அவ்விடத்தில் அவ்வாறு மிகவும் செய்யமுடியாத தவத்தைச்செய்கிற அவளைநோக்கி மிக்ககாந்தியுள்ள பிரம்மாவானவர் மறுபடியும், 'ஓ! மிருத்யுவே! நான் சொல்வதைச் செய்' என்று சொன்னார்.

அப்பா! கௌரவத்தை அளிப்பவனே! அதை அவள்அலக்ஷியஞ்செய்து விரைவுடன் மறுபடியும் இருபது பதுமலக்கமுள்ள வரு

1 ஸப்தபுரிகளில் ஒன்றாகிய மாயாஎன்னும் ஸ்தலத்தில் உள்ளது.

ஷங்கள் அப்படியே ஒருகாலாலேயே நின்றாள். அப்பா! மறுபடியும் அவள் பதினாயிரம்பதுமங்கள் மிருகங்களோடு சஞ்சரித்தாள். மனிதரிற் சிறந்தவனே! சிறந்தபுத்தியுள்ளவனே! அரசனே! பிறகு, மறுபடியும் இருபதினாயிரம்பதுமங்கள் காற்றைப் பக்ஷித்துக்கொண்டு சிறந்தமௌனத்திலிருந்தாள். ஓ! அரசனே! எண்ணாயிரம்வருஷங்கள் ஜலத்தில் தவஞ்செய்தாள். அரசர்களுள்மிகச்சிறந்தவனே! பிறகு, அந்தக்கன்னிகை கண்டகிநதியை அடைந்தாள். அவ்விடத்தில் காற்றையும் ஜலத்தையும் ஆகாரமாகக்கொண்டு மறுபடியும் தவத்தைச்செய்தாள். பிறகு, மகாபாக்கியவதியான அந்தக்கன்னிகை கங்கையையும் மேருவையும் அடைந்தாள். அவ்விடத்தில் பிரஜைகளுக்கு நன்மையைவிரும்பிக் கட்டைபோல அசையாமல் நின்றாள். அரசரிற்சிறந்தவனே! பிறகு, இமயமலையின் கொடுமுடியில் தேவர்கள் எந்தஇடத்தில் யாகஞ்செய்தார்களோ அந்தஇடத்தில ஒருகால் கட்டைவிரலால் நின்றுகொண்டு பதினாயிரம்கோடிவருஷம் தவஞ்செய்தாள். அதில முயறசியினால பிரம்மாவையும் ஸந்தோஷிக்கச் செய்தாள். பிறகு, உலகங்களுக்கெலலாம் ப்ரபிதாமஹரான ப்ரம்மாவானவர் அவ்விடம்வந்து அவளைநோக்கி, 'பெண்ணே! ஏன் இப்படி நிற்கிறாய்? நான்சொன்னதைச் செய்யலாம்' என்றுசொன்னார். பிறகு, மறுபடியும் ம்ருத்யுவானவள் பகவானானபிதாமஹரைநோக்கி, 'ஓ! தேவரே! நான் பிரஜைகளை ஸம்ஹரிக்கமாட்டேன். திரும்பவும் நான் உம்மைத் தயைசெய்யப் பிரார்த்திக்கிறேன்' என்றுசொன்னாள். அப்பொழுது தேவர்களுக்குத்தேவரான பிதாமஹர் அதர்மத்தில்பயந்தவளும் மறுபடியும் யாசிக்கிறவளுமான அவளைத்தடுத்துப் பின்வருமாறு சொல்லலானார். 'ஓ! ம்ருத்யுவே! உனக்கு அதர்மமில்லை. மங்களகுணமுள்ளவளே! இந்தப்பிரஜைகளை அழிக்கக்கடவை. கல்யாணகுணமுள்ளவளே! இப்பிரபஞ்சத்தில என்னால்சொல்லப்பட்டதொன்றும் பொய்யாகாது. இப்பொழுதே அழிவற்றதர்மமும் உன்னை அடையப்போகிறது. நானும் தேவர்களுமே உன்னுடைய நன்மையில் எப்பொழுதும் நாட்டமுள்ளவர்களாயிருக்கிறோம். இதையோ இதைத்தவிரமற்றதையோ உன்மனத்தாலஇச்சிக்கப்பட்டஎல்லா விருப்பத்தையும் கொடுப்பேன். நோயினாலபீடிக்கப்பட்ட பிரஜைகள் உன்மேல் குற்றஞ்சொல்லமாட்டார். நீ புருஷர்களிடத்தில் புருஷரூபமாகவும் ஸ்திரீகளிடத்தில் ஸ்திரீரூபமாகவும் அலிகளிடத்தில் அலிஉருவமாகவும் ஆவாய்' என்றார். ஓ! மஹாராஜனே! இவ்விதம் சொல்லக்கேட்ட அந்த ம்ருத்யு, அழிவில்லாதவரும் தேவர்களுக்கு ஈச

ரும் மஹாத்மாவுமான் பிரம்மாவைப்பார்த்து மறுபடியும் கரங்குவித்துக்கொண்டு, 'நான் ஸம்ஹரிக்கமாட்டேன்' என்றுசொன்னாள். அப்பொழுது பிரம்மா அவளைநோக்கி, 'மங்களகுணமுள்ளவளே! ஓ! ம்ருத்யுவே! மானிடர்களை ஸம்ஹாரம்செய்யக்கடவாய். உனக்கு அதர்மம்ஏற்படாதபடி நான் தியானஞ்செய்வேன். பெண்ணே! நீ இந்த (ஸம்ஹாரத்திறகுத்) திறமையுள்ளவளும் தகுதியுள்ளவளும் (அதற்காக) முன்உண்டானவளும் கட்டளையிடப்பட்டவளும் தோஷமற்றவளுமாயிருக்கிறாய். ஆகையால், நான்கருதியதை நீ செய்யக்கடவாய். ம்ருத்யுவே! முன்பு உன்கண்களிலிருந்துவிழுந்தனவும் என்னால்கைகளில்வந்தப்பட்டனவுமான அந்தக்கண்ணீர்த்திவலைகள் காலம்வந்தபோது பயங்கரமான நோய்களாகி மனிதர்களைப்பிடிக்கும். எல்லாப்பிராணிகளிடத்திலும் முடிவுக்காலத்தில நீ காமக்குரோதங்களைச் சேர்த்தனுப்பு. இப்படிச்செய்தால் பயனைக்கொடுக்குந் தர்மம் உன்னை அடையும். (எல்லாரிடமும்) ஓரேவிதமாயிருக்கிற நீ அதர்மத்தையும் அடையமாட்டாய். பிறகு நீ இப்படியே தர்மத்தைக் காப்பாய். உன்னை அதர்மததில முழுகும்படி செய்யவுமாட்டாய். நல்லவளே! ஆகையால், நீ தானாகவந்ததானஇஷ்டததைத் திருப்தியாக அங்கீகரித்துக்கொள். அப்படிப்பட்டநீ இவ்வுலகில் ஜந்துக்களை ஸம்ஹாரம்செய்' என்றுசொன்னார். அப்பொழுது ம்ருத்யுவென்றுபெயருடைய [1]அந்தப்பெண்ணானவள் சாபத்திற்குப் பயந்து பிரம்மாவைப்பார்த்து, 'ஸரி' என்று ஒப்புக்கொண்டாள். பிறகு, அவள் எப்பொழுதும் காமக்குரோதங்களை அடையும்படி செய்து முடிவுக்காலத்தில் பிராணிகளுடையபிராணன்களைக் கொல்லுகிறாள். மனிதர்கள் (மற்ற) ப்ராணிகள்ஆகிய எல்லாருடைய முடிவுக்காலத்திலும் சரீரங்கள்அடைகிற அந்தவியாதிகள், ம்ருத்யுவினுடைய கண்ணீர்களே. ஆகையால், புத்தியினால்அறிந்து துக்கத்தை அடையாதே. ராஜஸ்ரேஷ்டனே! பிராணிகளின்எல்லா இந்திரியங்களும் நித்திரைக்காலத்தில் பிரம்மத்தைஅடைந்து மறுபடிதிரும்பும். அப்படியே எல்லாமனிதர்களும் உயிர்முடிவில பரலோகம்சென்று இந்திரியங்கள்போலத திரும்பிவருகின்றனர். பயங்கரனும் பயங்கரமான சப்தமுள்ளவனும் மிக்கதிறமையுள்ளவனும் எல்லாப்பிராணிகளுக்கும் பிராணனுமான வாயுவானவன் பிராணிகளுடைய தேகமுடிவில் திரும்புகிறதில்லை. ஆகையால், வாயுவானவன் சிறந்தவனும்

---

1 'க்ருதா' என்னும்சொல விடப்பட்டது.

இந்திரியங்களுக்குப்பிரபுவுமாயிருக்கிறவன். [1]எல்லாத்தேவர்களும், 'மர்த்யர்' என்கிற பெயருள்ளவர்களாயிருக்கிறார்கள். எல்லா மர்த்யர்களும், 'தேவர்' என்கிறபெயருள்ளவர்களாயிருக்கிறார்கள். ராஜஸிம்மமே! ஆகையால், புத்திரனைக்குறித்துத் துக்கிக்காதே. உன்னுடைய புத்ரன் ஸ்வர்க்கத்தைஅடைந்து ஸந்தோஷப்படுகிறான். இவ்விதம் பிரம்மதேவரால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட மிருத்யுவானவள் காலம்வந்தவுடன் தக்கபடி பிரஜைகளை ஸம்ஹரிக்கிறாள். அவளுடைய கண்ணீரான வியாதிகளும் இவ்வுலகில் காலம்வந்தவுடன் ஜந்துக்களை ஸம்ஹரிக்கின்றன' என்றுசொன்னார்" என்றார்.

---

## இருநூற்றறுபத்தைந்தாவது அத்தியாயம.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



### (தர்மத்தின் லக்ஷணம்.)

தர்மபுத்திரர், "பிதாமஹரே! இந்த மனுஷ்யர்களெல்லாரும் தர்மத்தைப்பற்றி ஸந்தேகிக்கிறார்கள். தர்மமென்பது எது? தர்மம் எங்கிருந்து உண்டாயிற்று? அதை எனக்குச் சொல்லும். இந்தத் தர்மம் இவ்வுலகில் பயனுடையதா? அல்லது பரலோகத்தில் பயனுடையதாகுமா? அல்லது இவ்விரண்டு உலகத்திலும் பயனுடையதா? பிதாமஹரே! அதையும் எனக்குச் சொல்லும்' என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத் தொடங்கினார்.

ஸதாசாரம், ஸ்மிருதி, வேதம் இம்மூன்றும் தர்மத்தில பிரமாணம். வித்வான்கள் உபகாரத்தையும் நாலாவது தர்மலக்ஷணமாகச் சொல்லுகிறார்கள். விதியில் சொல்லப்படாதகர்மங்களை, களர்நிலத்தில்விதைக்கப்பட்டவித்தென்று நிச்சயிக்கிறார்கள். இவ்வுலகில் உலக நடைக்காகத் தர்மத்திற்கு நியமம் செய்யப்பட்டிருக்கிறது. தர்மமானது மண்ணுலகம் விண்ணுலகம் இரண்டிலும் ஸுகத்தைக்கொடுக்கிறது. (முன்) பாவியாயுள்ளவன் நல்லதர்மத்தைஅடையாமல்பாவத்தில் பற்றுகிறான். பாவத்தைச்செய்கிறவர்கள் பாவத்திலிருந்து விடுபடுகிறதில்லையென்று சிலர் சொல்லுகிறார்கள். தர்மத்தைஅறிந்தவன் எப்படி (தர்மத்தைச்செய்தவன்) ஆகிறானோ அப்படி (ஆபத்தில் அதர்மத்தைவாதிப்பவனும்) தர்மத்தைச் சொன்னவனாகிறான். தன்னுடைய நன்னடக்கையே தர்மத்திற்குநிலை. (ஆகையால்,) ஆசாரத

---

[1] கர்மதேவர்கள் புண்யக்ஷயத்தால் மனிதர்களாவதும் மனிதர்கள் புண்யத்தால தேவர்களாவதும் கருதது.

தையேபற்றிக்கொண்டு வஸிக்கவேண்டும். அதர்மத்தையுடையவனை திருடன் பிறர்பொருளைக்கவர்கிறான். அந்தத்திருடன் பிறர் பொருளைக் கவர்ந்துகொண்டு அராஜகமான ஒருதேசத்தில் (அந்தத் தனத்தால்) ஸுகமடைகிறான். இவனுடைய தனத்தைப் பிறர் கவரும் பொழுது அரசனைத தேடுகிறான். அப்பொழுது அவர்கள் தம்சொந் தப்பொருள்களால ஸந்தோஷிக்கிறார்களோ அவர்களை மேலாகநினைக் கிறான். சுத்தனானவன் பயமும் கூச்சமுமில்லாமல அரண்மனைவாயிலை அடைகிறான். தன்னுள்ளத்தில சிறிதும் தீயசெய்கையிருப்பதாகப் பார்க்கிறதில்லை. (அப்படிப்போலவே) உண்மையைச் சொல்லுவது நல்லது. உண்மைக்கு மேறபட்டதுஇல்லை. எல்லாம் ஸத்யத்தால தரிக்கப்படுகின்றன. எல்லாம் ஸத்யத்தில் நிலைபெறறிருக்கின்றன. குரூர்களானபாவிகளும்மறைவில்செய்தபாவத்தைச்செய்தப்படி வெளியிட்டால் அந்த ஸத்யத்தைக்கைக்கொண்டே துரோகமில்லாமலும் தம்காரியத்திற்குக்கேடில்லாமலும் ஸஞ்சரிக்கிறார்கள். அவர்கள் செய்ததை மறைத்துக்கொண்டு தைர்யத்தையடைவார்களானால நாசத்தை அடைவார்கள். ஸந்தேகமில்லை. பிறர்பொருளைக் கவரக்கூடாதென்று தர்மத்தை உணர்ந்தோர்கள் நினைக்கிறார்கள். பலமுள்ளவர்கள் அந்தத் தர்மத்தைச் சக்தியற்றவர்களால் ஏற்படுத்தப்பட்டதாக நினைக்கிறார்கள். எப்பொழுது அவர்களுக்குத்தெய்வாதீனமாகப் பலக்குறைவு உண்டாகிறதோ அப்பொழுது அந்தத்தர்மம் அவர்களுக்கே விருப்பமாகிறது. ஸுகிகளாயிருந்தாலும் (ஒருவரும்) எப்பொழுதும் பலவான்களாகிறதில்லை. ஆகையால், நீ ஒருபொழுதும் புத்தியைத் தீய வழியில் செலுத்தக்கூடாது. இப்படியிருப்பவனுக்குத் துஷ்டர்களிடமிருந்தும் பயமில்லை; திருடர்களிடமிருந்தும்பயமில்லை; அரசனிடமிருந்தும் பயமில்லை. ஆகையால, ஒருவனுக்கும் ஒருதீங்கும் செய்யாமல் சுத்தனாயிருந்துகொண்டு பயமில்லாதவனாக வஸிக்கவேண்டும். திருடனானவன், கிராமத்தையடைந்தமான்போல எல்லாரிடத்திலிருந்தும் பயத்தை அடைகிறான். பிறர்விஷயத்தில் பலவிதமாகச் செய்யப்பட்டபாவத்தை நினைத்துக்கொள்ளுகிறான். சுத்தமாயுள்ளவன் எப்பொழுதும் எல்லாரிடத்திலும் பயமில்லாமல ஸந்தோஷத்துடன் போகிறான்; தன்னால் பிறருக்குச்செய்யப்பட்ட ஒருவிதமான தீங்கையும் நினைக்கிறதில்லை. தானஞ்செய்யவேண்டுமென்ற இந்தத்தர்மமானது பிராணிகளுடைய நன்மையில விருப்பமுள்ளவர்களால் சொல்லப்பட்டது. பணக்காரர்கள் அந்தத்தர்மத்தை ஏழைகளால் ஏற்படுத்தப்பட்டதாக நினைக்கிறார்கள். எப்பொழுது இவர்களுக்குத் தெய்வ

வசத்தால வறுமை (வருகின்றதோ) அப்பொழுது இவர்களுக்கே (அது) விருப்பமாயிருக்கிறது ஸுகமாயிருந்தவர்களும் கடைசி வரையிலும் பொருளுள்ளவர்களாயிருக்கமாட்டார்கள். பிறரால் தனக்குச்செய்யப்பட்ட அப்ரியமான ஒருகர்மத்தைவிரும்பாதவன் அப்ரிய யாகிலேனத்த அந்தக்கர்மத்தைப் பிறருக்குச் செய்யக்கூடாது. எவன் பிறனுடையமனைவிக்கு [1]ஜாரனுவனே அவன் யாரை என்னசொல்லத்தகுதியுள்ளவன்? பிறனொருவன் தன்மனைவிக்கு ஜாரனுகஏற்படுவானுல்' அப்பொழுது அவன் பொறுக்கமாட்டானென்பது என் எண்ணம். எவன் தான்உயிர்வாழவிரும்புகிறனே அவன் பிறனை எப்படித்துன்பம்செய்யலாம்? எதைஎதைத் தனக்கு விரும்புவானே அதை அதைப் பிறனுக்கும் நினைக்கவேண்டும். மிக்க செல்வமுள்ளவன் தனது போக்யவஸ்துக்களில தரித்திரர்களான பிறருக்கும் பாகம் கொடுக்கவேண்டும். (ஏழைகளைக் காப்பதான) இந்தக்காரணத்தால் பிரம்மதேவரால் வட்டிஜீவனமானது ஏறபடுததப்பட்டது. எந்தவழியில தேவர்கள் மகிழ்ச்சியடைவார்களோ அந்தவழியில் இருக்க வேண்டும். அல்லது, லோபமார்க்கத்திலிருந்தாலும் தர்மமான (லோபமார்க்கததில்) இருப்பது நலம். பிறருக்குததுன்பமின்றிக் கிடைத்த எல்லாவற்றையும் விதவான்கள் புண்யமாகச் சொல்லுகிறார்கள். ஓ! யுதிஷ்டிர! தர்மாதர்மங்களுடைய இந்தலக்ஷணத்தின் விதத்தைபபார். ஸூக்ஷ்மமான தர்மத்திறகாகவே ஏறபட்டதும் உத்தமமானதும் உலகத்துக்கு நன்மையைச் செய்வதுமான பெரியோர்களுடைய ஆசாரமானது முன்காலத்தில பிரம்மதேவரால் விதிக்கப்பட்டது. ஓ! குருகுலத்தலைவனே! இந்ததர்மலக்ஷணததை உனக்குச் சொன்னேன். ஆகையால், ஒருவிதத்தாலும் நீ உன்னுடைய புத்தியை அதர்மத்தில் செலுத்தலாகாது" என்றுசொன்னர்.

---

## இருநூற்றறுபத்தாறுவது அத்தியாயம.

## மோக்ஷ தாமம. (தொடர்ச்சி.)



(யுதிஷ்டிரர், தர்மத்தின் பிரமாணத்தைப்பற்றிப் பீஷ்மரிடம் ஆக்ஷேபித்தது.)

யுதிஷ்டிரர், "ஸூக்ஷ்மமான தர்மலக்ஷணமானது உம்மால நன்குஉரைக்கபபட்டது. எனக்கு ஒருவிதமான எண்ணம் உண்டாயிருக்கிறது. அதை யுக்தியுடன் எடுததுச்சொலலுவேன். என்

---

1 சோரபுருஷன்

மனததிலிருந்த அநேகம் கேள்விகளுக்கு உம்மால் உத்தரம் சொல்லப்பட்டது. ஓ! அரசரே! இப்பொழுது வேறானஇது ஒன்றைச்சொல்லப்போகிறேன். ஆக்ரகத்தினால், குதர்க்கமாகக்கேட்கவில்லை. ஓ! பாரதரே! இந்தப்பிராணிகள் தங்களைத்தாங்களேயல்லவோ [1]ஜீவிக்கச்செய்துகொள்ளுகின்றன; ஸ்ருஷ்டியையும் மரணத்தையும்செய்துகொள்ளுகின்றன. தர்மமானது வேதத்தினால்மட்டும் அறியக்கூடியதன்று. பொதுவான நிலையிலுள்ளவனுக்குத் தர்மம்வேறு. ஆபத்திலுள்ளவனுக்குத் தர்மம்வேறு. ஆபத்துக்களோவென்றால் எப்படி வேதத்தினால் அறியமுடியும்? பெரியோர்களின்ஆசாரம் தர்மமாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. பெரியோர்களோ ஆசாரத்தை அடையாளமாகவுடையவர்கள். செய்யக்கூடியதும் செய்யக்கூடாததும் எப்படி அறியமுடியும்? பெரியோர்களின் ஆசாரமானது லக்ஷணமில்லாததாயிருக்கிறது. ப்ராக்ருதனானஒருவன் தர்மரூபமாக அதர்மத்தைச்செய்கிறவனாகக் காணப்படுகிறான். மேலான ஒருவன் அதர்மரூபமாகத் தர்மத்தைச்செய்கிறவனாகவும் காணப்படுகிறான். தவிரவும், சாஸ்திரபண்டிதர்களால் இந்தத்தர்மத்திற்குப்பிரமாணமாகச்சொல்லப்படுகிற வேதவாதங்கள் இவ்வுலகத்தில் யுகத்திறகுத்தக்கபடி குறைகின்றனஎன்று நமக்குக்கேள்வி. தர்மங்கள் கிருதயுகத்தில் வேறு; திரேதாயுகத்தில் வேறு; துவாபரயுகத்தில் வேறு; கலியுகத்தில் வேறு. (ஆகையால, தர்மங்கள்)சக்திக்குத்தக்கபடி செய்யப்பட்டவைபோலிருக்கின்றன. [2]ஆம்னாயவசனம்ஸத்யமென்பது ஜனங்களின் கொள்கை, ஆம்னாயங்களினின்றும் ஸகலவிஷயங்களையும்தெரிவிக்கிற வேதங்கள்வந்தன. அந்தவேதங்கள் எல்லாவிஷயத்திலும்பிரமாணமானால், இந்தத்தர்மவிஷயத்திலும் பிரமாணமாயிருக்கின்றனவன்றோ? ஒருபிரமாணம் மற்றொருபிரமாணத்தோடு விரோதித்தால் அது எப்படி சாஸ்திரமாகும்? செய்யப்படுகிற தர்மத்தின்நிலைமையானது எப்பொழுது வலியவர்களான துஷ்டர்களால் விகாரத்தைஅடையும்படி செய்யப்படுகிறதோ அப்பொழுது அந்தநிலைமையும் நசிக்கிறது. இந்தத்தர்மத்தை அறியவும்செய்கிறோம்; ஒருகால் அறிகிறதுமில்லை. (சொன்னால) அறியவும்முடியும்; அறியவும்முடியாது; கத்திமுனையைக்காட்டிலும் ஸூக்ஷ்மமாயிருக்கிறது; பர்வதத்தைக்காட்டிலும் பெரிதாயுமிருக்கிறது. [3]கந்தர்வ நகரம்போன்ற

1 'அன்னத்தினால ஜீவிக்கின்றன' என்பது பழையவுரையின் கருத்து.

2 ப்ரத்யக்ஷமாயும் அபரதயக்ஷமாயுமிருக்கிற வேதங்கள்.

3 மாயாநகரம்.

தர்மமானது முதலில் (ஸத்யம்போலக்) காணப்படுகிறது; வித்வான்கள் நுட்பமாகப்பார்த்தால் மறுபடி காணப்படுகிறதில்லை. ஓ! பாரதரே! பசுமங்கையின் அருகிலிருக்கிற சிறுகுளங்களும் கழனிக்குப்பாய்கிற வாய்க்காலிலிருக்கிறமடுக்களும் குறைவதுபோல ஸ்மிருதியில் சாஸ்வதமாகச்சொல்லப்பட்ட தர்மமானது மிகவும் குறைவடைந்ததாகக் காணப்படுகிறதில்லை. சிலர் காமத்தினாலும் சிலர் பயத்தினாலும் அப்படியே சிலர் வேறுகாரணங்களினாலும் தர்மத்தைச் செய்கிறார்கள். வேறானபல அஸத்துக்களும் (டம்பத்துக்காக) ப்ரத்தையில்லாமல் ஆசாரத்தையடைகிறார்கள். அது விரைவில் தர்மமாகிவிடுகிறது. [1]ஸாதுக்களிடத்திலோவென்றால் அது உலகத்தால் [2]தூற்றப்படுகிறது. இவர்களை மூடர்கள் பித்தர்களாகச்சொல்லுகிறார்கள்; மேலும், பரிஹஸிக்கவும் செய்கிறார்கள். மஹாஜனங்கள் தங்கள் தர்மத்தினின்றும்மாறி ராஜதர்மத்தை அடைந்திருக்கிறார்கள். எல்லாருக்கும் நன்மையாக ஒருவிதஆசாரமும் ஏற்படுகிறதில்லையன்றோ? அந்தஆசாரத்தினாலேயே [3]ஒருவன் ஸமர்த்தனாகிறான். அது [4]மற்றொருவனுக்கு விரோதமாகிறது. அந்த [5]ஆசாரமுள்ளவனே ஸ்வபாவத்தினாலேயே எப்பொழுதும் ஓரேவிதமாயிருக்கிறான். எதனாலேயே ஒருவன் முன்னுக்குவருகிறானோ அதுவே மற்றவர்களைப் பாதிக்கிறது. ஆகையால், எல்லாஆசாரங்களுக்கும் ஓரேவிதமான நிலைமையில்லையென்று ஊகிக்கவேண்டும். முற்காலத்தில வித்வான்களால் நெடுங்காலம் அனுஷ்டிக்கப்பட்டதர்மமானது சொல்லப்பட்டிருக்கிறது. பழமையான அந்தஆசாரத்தினால் சாஸ்வதமான ஒரு மர்யாதை ஏற்பட்டிருக்கிறது" என்றுசொன்னார்.

---

## இருநூற்றுறுபத்தேழாவது அத்தியாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



(ஜாஜலிமுனிவர் தர்மநிமித்தமாகக் கர்வமடைந்து துலாதாரனிடம் சென்றது.)

பீஷ்மர், "இந்தவிஷயத்திலும் தர்மநிமித்தம் ஜாஜலிக்கும் துலாதாரனென்கிற ஒருவைஸ்யனுக்கும் உண்டான ஸம்வாதரூபமான பழைய ஓர்இதிஹாஸத்தைச் சொல்லுகிறார்கள். ஒருவனத்தில் ஜாஜலியென்கிறஒருவேதியர் இருந்தார். வனத்தில் ஸஞ்சரிப்பவ

---

1 வேறுபாடம். 2 'ப்ரலாபம்' என்பது மூலம்.
3 விஸ்வாமித்ரர். 4 பரசுராமர். 5 வஸிஷ்டர்.

ரும் மிகுந்த தவமுடையவரும் புத்திமானுமாகிய அந்த முனிவர் ஸமுத்திரப்பிரதேசத்தையடைந்து அநேக வருஷங்கள் நியமத்தோ டும் மிகவும் மிதமானஆகாரத்தோடுமிருந்து மரவுரியையும் மான் தோலையும்உடுத்து ஜடைகளைத்தரித்துச் சரீரத்தில் அழுக்குமிகுதி யாகப்படியத் தவஞ்செய்தார். ஓ! பூபதியே! மிகுந்த தேஜஸுள்ள ஜலவாஸியும் ப்ரம்மரிஷியுமானஅவர் ஒருகால் உலகங்களைப் பார்ப் பதற்காக மனோவேகமாக ஸஞ்சரித்தார். அந்த முனிவர் ஒரு ஸமயம் ஜலமத்தியிலிருந்துகொண்டு, ஸமுத்திரத்தால் சூழப்பட்ட தும் சிறிதும் பெரிதுமான காடுகளுள்ளதுமான பூமியைப் பார்த்து, 'இவ்வுலகத்தில் சராசரங்களுள் ஜலத்திலும் ஆகாயத்திலும் எனக்குச் சமானமாக என்னுடன் கூடவருபவன் ஒருவனும் இல்லை' என்று நினைத்தார். ஓ! பாரதனே! அப்பொழுது அவர் ஜலமத்தியில் பிசாசங்களால்பார்க்கப்பட்டுக்கொண்டு,'என்னால் தர்மமானது அடை யப்பட்டது' என்று ஆகாயத்தில் தோள்தட்டினார். (உடனே)பிசா சுகள் அவரைநோக்கி, 'நீர் இவ்விதம் சொலவதற்கு யோக்கியரல் லீர். வாராணஸியில் துலாதாரனென்னும்ஒருவன் வியாபாரத்தொ ழிலுள்ளவனும் மிக்கபுகழ்பெற்றவனுமாயிருக்கிறான். பிராம்மணோத் தமரே! அவனும் நீர் சொலவதுபோலச் சொல்லுகிறதில்லை' என்று சொல்லின. பூதங்களால் இவ்வாறுசொல்லப்பட்டவரும் மிக்கதவத் தையுடையவருமான ஜாஜலியானவர், 'ஞானவானும் புகழுடையவனு மானஅந்தத்துலாதாரனை நான் பார்க்கவேண்டும்' என்று மறுமொழி கூறினார். (உடனே,) பூதங்கள் ஸமுத்திரத்தினின்றும் கிளம்பி, இவ் விதம்சொன்ன அந்தமுனிவரை நோக்கி, 'ஓ! பிராம்மணோத்தமரே! இந்தவழியைஅடைந்து நடக்கக்கடவீர்' என்றுசொல்லின. பூதங் கள்இவ்விதஞ்சொல்லக் கேட்டஜாஜலியானவர் அப்பொழுது மன வருத்தத்துடன் நடந்தார். வாராணஸியில் துலாதாரனைஅடைந்து பின்வருமாறு சொல்லலானார்'' என்றார். யுதிஷ்டிரர், ''ஐயா! முன்பு ஜாஜலியினால் ஒருவராலும் செய்யமுடியாத என்னகர்மம் செய்யப்பட்டது? எந்தக்கர்மத்தால மேலானஸித்தியை அடைந்தார்? அதை எனக்கு விரிவாகச் சொலலவேண்டும்'' என்று கேட்டனர்.

பீஷ்மர், ''அந்த ஜாஜலியானவர் மிகவும் கோரமான தவமு டையவரானார். மிக்கதவமுள்ளவரும் வானப்பிரஸ்தவிதியை அறிந்த வருமான ஜாஜலிஎன்கிறஅந்தப்பிராம்மணர் காலையிலும் மாலையிலும் நதீஸ்நானத்தில் விருப்பமுள்ளவரும் செவ்வையாகஅக்னிகளை ஆரா திக்கிறவரும் வேதாத்யயனமுள்ளவருமாயிருந்துகொண்டு பிரம்ம

தேஜஸால் விளங்கினார். அவர் வனத்தில் தவத்திலிருந்துகொண்டு அதர்மத்தைக் கண்ணாலும் பார்க்கவில்லை. அவர் கார்காலத்தில் வெளியிலபடுத்தும் பனிக்காலத்தில் ஜலமத்தியிலிருந்தும் வேனிற்காலத்தில் காற்றையும்வெயிலையும் பொறுத்துக்கொண்டும் அதர்மத்தை அடையாமலிருந்தார். அவர் பூமியில அநேகவித கஷ்டமான இடங்களில் படுத்துப் புரண்டுகொண்டிருந்தார். பிறகு, ஒருகால் அந்தமுனிவர் மழைக்காலத்தில் வெளியிலிருந்துகொண்டு அடிக்கடி ஆகாயத்தில்நின்றுவிழும் மழைஜலத்தைத் தம்தலையில் தாங்கினார். ஓ! பிரபுவே! அப்படிநனைந்ததினால் அவருடையஜடைகள் நனைந்து ஒன்றாயின. பாபமற்றவரானஅவர் நித்யம்வனஸஞ்சாரத்தால்கறுத்துவிட்டார். ஒருகால் அவர் ஆகாரம்விட்டுக் காற்றைப்புசித்து மிகுந்த தவத்திலிருந்துகொண்டு ஜாக்ரதையுடன் கட்டைபோல நின்றார். ஒருபொழுதும் சலிக்கவில்லை. ஓ! பரதகுலத்திலுதித்தஅரசனே! கட்டைபோலாகிச் சேஷ்டையற்றிருக்கிற அவருடையதலையில் இரண்டுகுருவிகள் (சேர்ந்து) ஒருகூட்டைக் கட்டின. கருணையுள்ள அந்தப்பிராம்மணமுனிவர் அந்தஜடைகளில புல்லாலும் நூலாலும் கூடுகட்டுகிற ஆணும்பெண்ணுமான அவைகளைக் கவனியாமலே இருந்தார். அவைகள், அவர்கட்டைபோலாகி மிகுந்த தவத்துடன் அசையாமலிருந்தபொழுது, எளிதிலநம்பிக்கையடைந்து அந்தக்கூட்டில் ஸுகமாகவஸித்தன. ராஜனே! பிறகு, கார்காலம்சென்று சரத்காலம்வர அந்தப்பக்ஷிகள் காமததால மோகித்துக் கர்ப்பாதானவிதியினால் அவரிடம்நம்பிக்கையோடு அந்தச்சிரத்தில முட்டைகளை உண்டுபண்ணின. தீவ்ரமான விரதமுள்ளவரும் தேஜஸுள்ளவருமான அந்த அந்தணர் அவைகளை அறிந்தார். அறிந்தும், மிகுந்தகாந்தியுள்ள அந்தஜாஜலி சலிக்கவில்லை. எப்பொழுதும் தர்மத்தில் மனம்பற்றிய அவர் அதர்மத்தை விரும்பவில்லை. ஓ! பிரபுவே! அதனால் அவைகள் அபபொழுது ஒவ்வொருநாளும் வந்து அவருடையதலையில இளைப்பாறி ஸந்தோஷத்துடன் வஸித்தன. பிறகு, முட்டைகள் முதிர்ந்து குஞ்சுகள் உண்டாயின; அங்கேயே விருத்தியையுமடைந்தன. ஜாஜலியும் அசையாமலிருந்தார். விரதங்கொண்டு தர்மசித்தமுடையஅவர் குருவிகளின்முட்டைகளைக்காப்பதற்காக ஜாக்ரதையுடன் அசைவற்று அபபடியே நின்றார். ஓ! ராஜேந்திரனே! பிறகு, அந்தக் குஞ்சுகளுக்குக் காலத்தில் சிறகுகள் உண்டாயின. அந்தமுனிவரும் அந்தக்குருவிக்குஞ்சுகளுக்குச்சிறகுகளுண்டானதை அறிந்தார். புத்திமான்களிற்சிறந்தவரும் உறுதியான விரதமுடையவருமானஜாஜலி

பிறகு ஒருகால் அந்தப்பக்ஷிகளைப்பார்த்துப் பரமஸந்தோஷமடைந்தார். அப்படியே மேன்மேலும் விருத்தியடைந்துவருகின்ற அவைகளைப்பார்த்தும் ஸந்தோஷத்தை அடைந்தார். பக்ஷிகளும் பயமில்லாமல் குஞ்சுகளுடன் அவர்தலையில் வஸித்தன. அந்தஜாஜலியென்கிற வேதியரும் அவைகள் சிறகுமுளைத்து மாலைதோறும் ஆகாயத்தில் பறந்து திரும்பிவருவதையும் பார்த்தார்; அசையாமலுமிருந்தார். ஒருகால் அவைகள் தாய்தந்தைகளால் விடப்பட்டு அடிக்கடி வருவதும் போவதுமாயிருந்தன: ஜாஜலியும் அசையாமலே இருந்தார். ஓ! அரசனே! அப்படியே அந்தக்குஞ்சுகள் பகல்முழுவதும்போய் விட்டு மறுபடியும் அங்கேயேவஸிப்பதற்காக ஸாயங்காலம் திரும்பி வந்தன. ஒருஸமயம் பக்ஷிகள் ஐந்துநாள் வெளியில்சுற்றிவிட்டு ஆறுவதுநாள் வந்தன. ஜாஜலி அசையவில்லை. இறகுமுளைத்த அந்தப்பக்ஷிகள் வரவர மிகஅநேகநாட்கள் திரும்பிவராமலே இருந்தன. அரசனே! ஒருஸமயத்தில் பறந்துபோன அப்பறவைகள் ஒருமாதம் வரையிலும் திரும்பிவரவேயில்லை. பிறகு, அந்தஜாஜலியும் வேறிடம்சென்றார். அவைகள் பறந்துபோனபிறகு ஜாஜலி ஆச்சரியத்தை அடைந்து, 'நான் ஸித்தனானேன்' என்று நினைத்தார். பிறகு, அவரைக் கர்வமானது சூழ்ந்துகொண்டது. உறுதியான விரதமுடையவரும் தம்மைமெச்சிக்கொள்ளுகிறவருமான அவர் அப்படியேவெளிக்கிளம்பின பக்ஷிகளைப்பார்த்துவிட்டு உடனே தம்மை மிகவும்புகழ்ந்துகொண்டு ஸந்தோஷித்தார். பிறகு, சிறந்த தவமுள்ள அவர் நதியில் நீராடி அக்கினியைத் திருப்திசெய்து உதயமாகிற ஸூர்யனுக்கு எதிரில்வந்தார். ஜபம்செய்கிறவர்களில்சிறந்தவரான அவர் அப்படிக்குருவிகளைத்தலையில் பரிபாலித்ததால், 'என்னால்தர்மம் அடையப்பட்டது' என்று வெளியில்நின்றுசொல்லித்தோள்தட்டினார். பிறகு, ஆகாயத்தில் ஒருவாக்கு உண்டாயிற்று. அதையும் ஜாஜலிகேட்டார். அதென்னவென்றால், 'ஓ! ஜாஜலியே! தர்மத்தால் நீர் துலாதாரனுக்கு ஒப்பாக மாட்டீர். மஹாபுத்திமானான துலாதாரன் காசியிலிருக்கிறான். ஓ! ப்ராம்மணரே! அவனோ நீரெப்படிசொல்லுகிறீரோ அப்படிசொல்லத் தக்கவனல்லன்' என்பது. ஓ! அரசனே! (அதைக்கேட்டு) அந்த முனிவர் பொறாமைகொண்டு துலாதாரனைப்பார்க்கவேண்டுமென்கிற விருப்பத்தால் எவ்விடத்தில் ஸாயங்காலமாகுமோ அவ்விடத்தில் தாமவஸித்துக்கொண்டு பூமியில் ஸஞ்சரித்தார்; வெகுகாலம்நடந்து காசிப்பட்டணத்தை அடைந்தார். (அவ்விடத்தில்) வியாபாரஞ்செய்கிற துலாதாரனையும் கண்டார். மூலதனத்தாலஜீவிக்கிறஅவனும் வரு

கிறஅந்தவேதியரைப்பார்த்து உடனேஎழுந்து மிகுந்தஸந்தோஷத்துடன் க்ஷேமம்விசாரித்துப் பூஜித்தனன். பிறகு, துலாதாரன், 'ஓ! பிராம்மணரே! நீர்வரும்போதே நான் அறிந்தேன். ஸந்தேகமில்லை. ஓ! பிராம்மணோத்தமரே! நான்சொல்லுகிறவார்த்தையைக் கேளும். ஸமுத்திரப்பிரதேசத்தை அடைந்து நீர் பெரியதவஞ்செய்தீர். நீர் முந்தி ஒருவிதத்தாலும் தர்மத்தின்பேரையும் அறியாமலிருந்தீர். ஓ! பிராம்மணரே! பிறகு, தவத்தால் ஸித்தியடைந்தஉம்முடையதலையில் சீக்கிரம் பக்ஷிகள் உண்டாயின. பிராம்மணரே! அவைகளும் உம்மால் காக்கப்பட்டன. அவைகள் சிறகுமுளைத்து வெளியில் ஸஞ்சரிக்கப் போனபொழுது நீர், அந்தக்குருவிகளாலுண்டான தர்மத்தை நினைத்தீர். பிராம்மணஸ்ரேஷ்டரே! பிறகு என்விஷயமாக ஆகாயத்திலுண்டானவார்த்தையைநீர்கேட்டீர். உடனே நீர்பொறாமைஅடைந்து இங்கேவந்தீர். பிராம்மணஸ்ரேஷ்டரே! உமக்கு என்னவிருப்பத்தை நான் செய்யவேண்டும்? அதைச்சொல்லும்' என்றுசொன்னான்.

---

## இருநூற்றறுபத்தேட்டாவது அத்தியாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



(ஜாஜலிக்கும் துலாதாரனுக்கும் தர்மநிமித்தமாகநடந்த ஸம்பாஷணை.)

புத்திமானான அந்தத்துலாதாரன் இவ்விதம்சொல்ல, புத்திசாலியான ஜாஜலியென்றமுனிவர் அப்பொழுது அவனைநோக்கி ஒருவார்த்தை சொல்லலானார். 'ஓ! வைஸ்யபுத்ரா! ரஸமுள்ள எல்லாவஸ்துக்களையும் எல்லாவாஸனைப்பொருள்களையும் விருக்ஷங்களையும் ஓஷதிகளையும் விற்கின்றஉனக்கு, சிறந்ததும் நிலைததுமான இந்தஞானமானது எதனால உண்டாயிற்று? மிக்கஅறிவுள்ளவனே! இந்தவிஷயத்தையெல்லாம்எனக்குச்சொல' என்றுவினவினர். புகழ்பெற்றவேதியர் இவ்விதம் கேட்க, தர்மார்த்தங்களின் உண்மையைஉணர்ந்த துலாதாரனென்கிற வைஸ்யன் தர்மங்களுடைய ஸூக்ஷமங்களைச் சொல்லலானான். 'ஓ! ஜாஜலியே! ஜனங்கள் எல்லாப்பிராணிகளுக்கும்நன்மையும் எல்லாரிடத்திலும் ஸ்நேகத்திற்குக்காரணமும் அனுதியுமாகச் சொல்லுகிறதும், ரகஸ்யமும், ஸநாதனமுமானதர்மத்தை நான் அறிவேன். ஓ! ஜாஜலியே! எல்லாப்பிராணிகளுக்கும் துரோகமில்லாம

லாவது அல்லது (அவசியமானல்) அற்பதுரோகத்துடனவது இருக்கும்ஜீவனம்தான் சிறந்த தர்மம். அதனல் நான் ஜீவிக்கிறேன். நான் சிறியகுச்சிகளாலும் புற்களாலும் வீடுகட்டிக்கொண்டிருக்கிறேன். ஓ! பிராம்மணஶ்ரேஷ்டரே! நான் செம்பஞ்சு, பத்மகம், துங்கம், உயர்ந்ததும்தாழ்ந்ததுமானவாஸனைப்பொருள்கள், கள் தவிரப்பலவிதமானஅந்தஅந்தரஸபதார்த்தங்கள் இவைகளைஎல்லாம் கபடமின்றிப் பிறரிடமிருந்து விலைக்குவாங்கி விற்கிறேன். ஓ! ஜாஜலியே! செய்கையினலும் வாக்கினலும் மனத்தினலும் எல்லாப்பிராணிகளுக்கும் மித்திரனும் அவைகளுடையஹிதத்தில் பற்றுதலுள்ளவனுமாயிருக்கிறவன்தான் தர்மத்தையறிந்தவன். ஓ! ஜாஜலியே! நான் ஒருவனையும் அனுஸரிக்கிறதுமில்லை; [1]விரோதிக்கிறதுமில்லை; [2]துவேஷிக்கிறதுமில்லை; விரும்புகிறதுமில்லை; எல்லாப்பிராணிகளிடத்திலும் ஸமமாக இருக்கிறேன். என்னுடையவிரதத்தைப் பாரும். ஜாஜலியே! என்னுடையதராசும் எல்லாவிஷயத்திலும் ஸமமாகவேஇருக்கிறது. நான் பிறருடையசெய்கைகளைப் புகழ்கிறதுமில்லை;இகழ்கிறதுமில்லை; பிராம்மணஶ்ரேஷ்டரே! (மேகத்தாலுண்டாகும்) ஆகாயத்தினுடைய விசித்திரங்களைப்போல உலகத்தினுடைய விசித்திரங்களைப்பார்த்துக்கொண்டிருக்கிறேன். ஜாஜலியே! எனக்கு எல்லாப்பிராணிகளிடத்திலும் ஸமமான அருள் இருக்கிறது. இஷ்டவஸ்து,அநிஷ்டவஸ்து (இரண்டும்) அற்றவனனஎன்னல் விருப்புவெறுப்புஇரண்டும் வெளியில விலக்கப்பட்டன. இவ்விதம் என்னை நீர் அறியக்கடவீர். ஓ! புத்திசாலிகளிலுத்தமரான ஜாஜலியே! என்னை எல்லாப்பிராணிகளுக்கும் ஸமமாகவும் ஓட்டாஞ்சில்லியையும் பொன்னையும் ஸமமாக எண்ணுபவனகவும் நினைக்கக்கடவீர். குருடரும் செவிடரும் பித்தரும் தேவர்களால் அடைக்கப்பட்ட[3]துவாரத்தையுடையவர்களாகப் பிழைப்புமட்டுமே பயனகவுடையவர்களாயிருப்பதுபோல ஞானியானஎன்னிலைமையும் இருக்கிறது. , பிராயமுதிர்ந்தவர்களும் நோயாளிகளும் வலியற்றவர்களும் விஷயங்களிலவிருப்பமிலலாமலிருப்பதுபோலவேஎனக்கும் அர்த்தத்திலும் காமத்திலும் போகத்திலும் விருப்பமில்லை. ஓ! பிராம்மணரே! எப்பொழுது புருஷன் ஒன்றினின்றும் பயத்தையடைகிறதில்லையோ, எப்பொழுது இவனிடமிருந்தும் ஒன்றும் பயத்தையடைகிறதில்லையோ, எப்பொழுது ஒன்றையும்விரும்பாமலும் வெறுக்காம

1 வாக்கினலும செய்கையினலும் பகைபாராட்டுவது.

2 மனத்தினல் பகைபாராட்டுவது. 3 இந்திரியங்கள்.

னும் இருக்கின்றனோ அப்பொழுது ஸித்தியை அடைகிறான். எப்பொழுது காயத்தினாலும் வாக்கினாலும் மனத்தினாலும் ஒருபிராணியிடத்திலும் கெட்ட எண்ணத்தைச் செய்யவில்லையோ அப்பொழுது பிரம்மத்தை அடைகிறான். எல்லாப்பிராணிகளுக்கும் பயத்தைஉண்டுபண்ணுமலிருப்பவனுடைய தர்மத்திற்குச்சரியானதர்மம் இதற்குமுன்னும் இப்பொழுதும் இனிமேலும்இல்லை. அவன் அபயமானஸ்தானத்தை(பிரம்மத்தை) அடைவான். குரூரமானவார்த்தையும்கடினசிக்ஷையுமுடைய அவனிடமிருந்து எல்லா உலகமும் மிருத்யுவின்வாயைக்கண்டுநடுங்குவதுபோல நடுங்குகிறதோ அவன் மிக்கபயத்தை அடைவான். விதிப்படியிருக்கிறவர்களும் முதியவர்களும் புத்ரபௌத்திரர்களுள்ளவர்களும் ஒருவரையும் துன்பம்செய்யாதவர்களுமாயிருக்கிற பெரியோர்களுடைய நடக்கையை நாம் அனுஷ்டிக்கிறோம். நித்யமான தர்மமானது (சிலபாகத்தில்வேறுபட்ட) ஸதாசாரத்தால புரண்டு நஷ்டமாகிவிட்டது. அதனால வித்வானும் தவசியும் காமக்குரோதங்களைவென்றபலவானுங்கூட மோகிக்கும்படிசெய்யப்படுகிறார்கள். ஓ! ஜாஜலியே! புத்திமான் ஆசாரத்தினாலேயே விரைவாகத தர்மத்தை அடைவான். நல்லகர்மங்களால அடங்கித் துரோகசிந்தனையில்லாமல் நடந்துவருபவனுக்கு, இவ்வுலகத்தில, நதியில தானாகவே மிதந்துவருகிற ஒருகட்டையானது தானாகவே மிதந்துவருகிற மற்றொரு கட்டையுடன் சேருகிறதும், பிறகு அதில் அங்கங்கிருந்து மற்றும் சிலகட்டைகளும் குச்சிகுப்பைகூளங்களும் சேரவேண்டுமென்கிற விருப்பமில்லாமல ஒருகால் தாமாகவேவந்துசேருகிறதும்போல(புத்ரமித்திராதிகளின்சேர்க்கையும் உண்டாகிறது,) ஓ! முனிவரே! எவனிடமிருந்து ஒருபோதும் ஒருவிதத்தாலும் ஒருபிராணியும் பயந்து நடுங்காமலிருக்கிறதோ அவன் எப்பொழுதும் எல்லாப்பிராணிகளிடமிருந்தும் பயமில்லாமையை அடைவான். ஓ! வித்வானே! குரைக்கின்ற செந்நாயினிடமிருந்து எல்லாஉலகமும் நடுங்குவதுபோலவும் எல்லாஜலஜந்துக்களும் கரையையடைந்து நடுங்குவதுபோலவும் எவனிடத்தில் எல்லாப்பிராணியும் நடுங்குமோ (அவன்அபயத்தை அடையமாட்டான்,) ஆசாரம் இவ்விதம் ஏற்பட்டிருத்தலால், எவன் ஜனக்கூட்டும் தனமுமுள்ளவனாயிருக்கிறானோ அவனே நல்ல பாக்யமுள்ளவன். அப்படியே அவனே உத்தமன். ஆகையால், அற்பப்பயனைச் சிந்தித்தவர்களும் எல்லாம்அறிந்தவர்களும் ஸமர்த்தர்களுமானகவிகள் அவர்களையே கீர்த்திக்காகச் சாஸ்திரங்களில வர்ணிக்கின்றார்கள். தவங்களாலும் யாகத்தாலும் தானங்களாலும் ஞான

மானவார்த்தைகளாலும் இவ்வுலகில் எந்தஎந்தப்பயனை அடைகிறார்களோ அந்தப்பயனெல்லாம் அபயதானத்திற்கும் கிடைக்கும். உலகத்தில் எல்லாப்பிராணிகளுக்கும் அபயதக்ஷிணையைக்கொடுக்கிறவன் ஸத்யமென்கிற யாகங்களைச்செய்கிறவனாகி அபயதக்ஷிணையையடைவான். பிராணிகளுக்குத் துன்பஞ்செய்யாமலிருப்பதைப்பார்க்கிலும் உயர்ந்ததர்மம் ஒன்றுமில்லை. ஓ! மகாமுனிவரே! எவனிடமிருந்து ஒருபிராணியும் ஒருகாலும் ஒருவிதத்தாலும் நடுங்குகிறதில்லையோ அவன் எல்லாப்பிராணிகளிடமிருந்தும் அபயத்தை அடைகிறான். எவனிடமிருந்து உலகமானது வீட்டிலுள்ள பாம்பினிடம்நடுங்குவது போல நடுங்குகிறதோ அவன் இம்மையிலும் மறுமையிலும் தர்மத்தைஅடைவான. எல்லாப்பிராணிகளுக்கும் ஆத்மபூதனும் எல்லாப்பிராணிகளையும் (தன்னிடத்தில) பார்க்கிறவனும் அடையவேண்டிய கதியில்லாதவனும் பிரம்மத்தையடைய விருப்பமுள்ளவனுமாயிருப்பவனுடையமார்க்கத்தில் தேவர்களும் அறியாமல் மயங்குகிறார்கள். ஸகலபூதங்களுக்கும் செய்யும் அபயதானத்தை எல்லாத்தானங்களுக்கும் உத்தமமாகச் சொல்லுகிறார்கள். ஓ! ஜாஜலியே! உமக்கு உண்மையைச் சொல்லுகிறேன். என்னுடைய (வார்த்தையை) நம்பும். ஒருவனே செல்வமுள்ளவனாகஇருந்து பிறகு வறுமையை அடைகிறான். வினைகளுடைய நாசத்தைப்பார்த்து ஜனங்கள் எப்பொழுதும் நிந்திக்கிறார்கள். காரணமின்றித் தர்மமானது இல்லையன்றோ? ஜாஜலியே! தர்மம் ஸூக்ஷ்மமாகவன்றோ இருக்கிறது? வேதத்தில ஹித்தத்திற்காகவும் ஸாத்யத்திற்காகவும் தர்மம் சொல்லப்பட்டிருக்கிறது. மிகவும் மறைவானதர்மமானது ஸூக்ஷ்மமானதால் நன்றாக அறியமுடிகிறதில்லை. ஒருவிதமான ஆசாரத்தைக்கண்டு மற்றொருவிதமாக அறிகிறான். எருதின் விருஷணங்களைச் சேதிக்கிறவர்களும், மூக்கைக் குத்துகிறவர்களும், அதைப் பெரியசுமைகளைச் சுமக்கச் செய்கிறவர்களும், கட்டுகிறவர்களும், வசப்படுத்துகிறவர்களும், பிராணிகளைக்கொன்று தின்னுகிறவர்களுமானவர்களை ஏன் தூஷிக்கிறீரில்லை? மனிதர்கள், மனிதர்களையே தாஸராகச்செய்துகொண்டு அனுபவிக்கின்றார்கள்; இரவும் பகலும் அடிப்பதாலும் கட்டுவதாலும் நிர்ப்பந்தத்தினாலும் வேலைவாங்குகிறார்கள். தன்னை அடிப்பதிலும் கட்டுவதிலும் என்ன துக்கம் உண்டாகுமோ அதையும் அறிவான். ஐந்து இந்திரியங்களோடுகூடின பிராணிகளில் ஸூர்யன், சந்திரன், வாயு, பிரம்மா, பிராணன், க்ரது, யமன் (முதலிய) எல்லாத்தெய்வங்களும் வஸிக்கின்றன. அந்தஜீவன்களை விற்கிறவனுக்கு இறந்தபிரா

ணிகள்விஷயத்தில் ஆலோசனை ஏது? வெள்ளாடு அக்னி; செம்ம றிக்கடா வருணன்; குதிரை ஸூர்யன்; பூமி விராட்; பசுவும் கன்றும் சந்திரன்; இவைகளைவிற்றவன் ஸித்தியையடையான். ஓ! பிராம்மணரே! தைலத்திலும் நெய்யிலும் தேனிலும் ரஸங்களிலும் ஔஷதிகளிலும் என்னவிசாரம? உலங்கும்கொசுகுமில்லாதவிடத்தில் ஸுகமாகவளர்க்கப்பட்ட பசுக்களை, அவை தம்தாய்க்கு அன்பான வையென்றுதெரிந்தும், மனிதர்கள் பலவாறு பலாத்காரம்செய்து பல கொசுக்களால்நிறைந்தவையும் மிக்கசேறுள்ளவையுமான இடங்களை அடைவிக்கிறார்கள். சிலகாளைகள் விதியில்லாமலே சுமையால் வருத் தப்பட்டு நடுங்குகின்றன. அந்தச்செய்கையைவிட [1]ப்ரூணஹத்தி யும் பெரிதென்று நான் நினைக்கவில்லை. சிலர் பயிர்த்தொழிலை நல்ல தென்று நினைக்கின்றனர். அந்தத்தொழிலும் மிக்ககொடிதாயிருப் பது. கொழுவுடன்சேர்ந்த கலப்பைகளால பூமியையும் அதிலுள்ள ஜந்துக்களையும் உழுவன் துன்பம்செய்கிறான்; அப்படியே பசி தாகம் களைப்பு இவைகளால இளைத்தவையும் நுகத்தடியில் பூட்டப்பட்ட வையுமான எருதுகளையும் துன்பம்செய்கிறான். கோக்களுக்கு அக்ந் யங்கள் (=கொல்லத்தகாதவை) என்று பெயர். எவன் இவற்றைக் கொல்லத்தக்கவன்? எவன் வீணைக் கோவைத்துன்புறுத்துகிறானோ அவன் பெரியதீங்கைச் செய்தவனாவான். மோக்ஷத்தில முயற்சி யுள்ளரிஷிகள் (தங்கள் பூஜைக்காகப் பசுவையும் விருஷபத்தையும் ஹிம்ஸைசெய்த) நஹுஷனிடத்தில், 'மாதாவான பசுவையும், பிதா வான விருஷபத்தையும் கொன்றாய். ஓ! நஹுஷனே! கெட்டகாரி யத்தைச் செய்தாய். உன்னால் நாங்கள் துக்கத்தை அடையப்போகி றோம்' என்னும் இதைத் தெரிவித்தார்கள். ஓ! ஜாஜலியே! புகழ் பெறறவர்களும் மஹாபாக்யவான்களுமான அந்தரிஷிகள் அந்தப் பாவத்தை நூற்றொருரோகங்களாகச்செய்து எல்லாப்பிராணிகளிடத் திலும் தள்ளினார்கள். உண்மையான அர்த்ததத்தைக்கண்டவர்களும் மஹாத்மாக்களுமான எல்லாமுனிவர்களும் நஹுஷனை ப்ரூண ஹத்தி செய்தவனைச் சொல்லுகிறார்கள். 'அவன் கிருஹத்தில் நாங் கள் போஜனம்செய்யமாட்டோம்' என்று சொலலிவிட்டு யதிகளும் சாந்தர்களுமான ரிஷிகள் ஞானத்தினால் நஹுஷனை ஆக்ஷேபித்தார் கள். ஓ! ஜாஜலியே! அவ்வாறு பரம்பரையாகவந்த ஆசாரத்துட னிருப்பதால நீர் ஸமர்த்தராயிருந்தும் இப்பொழுது அமங்களமும் கோரமுமான இப்படிப்பட்ட ஆசாரங்களை அறியவில்லை. காரணத்தி

1 43-ம் பக்கம் குறிப்பிற் காண்க.

ணுல் தர்மத்தைத் தேடவேண்டும். கேவலம் [1]லோகாசாரத்தை ஆச ரிக்கக்கூடாது. ஜாஜலியே! எனக்குத் துன்பஞ்செய்கிறவனும் புகழ்கிறவனுமாகிய இருவர்விஷயத்திலும் கேளும். அவர்களிருவ ரும் எனக்கு ஸமமானவர்களே. எனக்கு விருப்பும் வெறுப்புமில்லை. இப்படிப்பட்ட இந்தத்தர்மத்தைப் புத்திமான்கள் கொண்டாடுகிருர் கள். இந்தத்தர்மம் யுக்திக்குஒத்தது; எப்பொழுதும் தர்மசீலர்க ளாலும் யதிகளாலும் கூரியபுத்தியால்அறியப்பெற்று அனுஷ்டிக்கப் படுகிறது' என்றுசொன்னுன்.

---

## இருநூற்றறுபத்தோன்பதாவது அத்தியாயம்.

### மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

(ஜாஜலிக்கும் துலாதாரனுக்கும் தர்மநிமித்தமாகநடந்த ஸம்பாஷணைத் தொடர்ச்சி.)

ஜாஜலியானவர், 'தராசுபிடிக்கிறவனுனஉன்னுல நடத்தப்படு கிறதர்மமானது பிராணிகளுடைய ஸ்வர்க்கமார்க்கத்தையும் ஜீவன வியாபாரத்தையும் தடைசெய்யும். கிருஷியினுலன்றே அன்னமுண் டாகிறது? அதனுல் நீயும் ஜீவிக்கிருய். ஓ! வைஸ்யனே! பசுக்களா லும் பயிர்களாலும் மானிடர்கள் ஜீவிக்கிருர்கள். அவைகளால் யாக மும் உண்டாகிறது. நீ நாஸ்திகவாதமேபேசுகிருய். இந்தஉலகமானது கிருஷி ஒன்றைமட்டும்விட்டாலே ஜீவியாதே' என்றுசொன்னுர்.

துலாதாரன், 'ஓ! ஜாஜலியே! (தர்மமான) பிழைப்பைச் சொல் லப்போகிறேன். ஓ! பிராம்மணரே! நான் நாஸ்திகனல்லேன். நான் யாகத்தையும் நிந்திக்கவில்லை. யஜ்ஞத்தைஅறிந்தவனே மிகவும் துர் லபன். பிராம்மணரே! யஜ்ஞத்துக்கு நமஸ்காரம். எந்தஜனங்கள் யஜ்ஞத்தை அறிந்தவர்களோ அவர்களுக்கு நமஸ்காரம். பிராம்மணர் கள் தங்கள்யஜ்ஞத்தைவிட்டு க்ஷத்ரியர்களுடைய யஜ்ஞத்தை அனுஷ் டிக்கிருர்கள். ஓ! பிராம்மணரே! லோபிகளும் பணத்தில் மிகவும் பற்றுள்ளவர்களுமானநாஸ்திகர்களால வேதவாதத்தை அறியாதவர்க ளுக்குப் பொய்யானது ஸத்யம்போல ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. (அறியாதவன்) 'நீ இது கொடுக்கவேண்டும்; இது கொடுக்கவேண் டும்' என்கிறதைத்தவிர வேறொன்றையும் (அவனுக்குச்) செய்ய விரும்புகிறதில்லை. ஆகையால், (கொடாதவிஷயத்தில் பொருளுக்கு)

---

1 வேறுபாடம்.

திருட்டு ஏற்படுகிறது. ஓ! ஜாஜலியே! அவனுடையகர்மங்கள மாறுபட்ட கர்மங்களாகின்றன. முறையாகச்செய்யப்படுகிற ஹவிஸினால் தேவதைகள் ஸந்தோஷிக்கிறார்கள். நமஸ்காரத்தினாலும் ஹவிஸினாலும் வேதாத்யயனத்தினாலும் நான்யமுதலானவைகளினாலும் தேவதைகளுக்குச் சாஸ்திரப்பிரமாணப்படி பூஜையானது ஏற்படும். [1]இஷ்டம் [2]பூர்த்தமென்னும் இவைகளாலும் தீயோருக்குத் [3]தீயஸந்ததி உண்டாகிறது. லோபியிடமிருந்து லோபி உண்டாகிறான். ஸமபுத்தியுள்ளவனிடமிருந்து ஸமபுத்தியுள்ளவன் உண்டாகிறான். யஜமானர்களும் ரித்விக்குக்களும் எப்படித் தங்களை நடத்திக்கொள்ளுகிறார்களோ) அப்படியே அவர்களின்ஸந்ததிகளும் உண்டாகின்றன ஆகாயத்திலிருந்து சுத்தமானஜலம்உண்டாவதுபோல யஜ்ஞத்திலிருந்து பிரஜை உண்டாகிறது. ஓ! பிராம்மணரே! அக்னியில்போடப்பட்ட ஆஹுதியானது ஆதித்யனை அடைகிறது. ஆதித்யனிடமிருந்து மழைஉண்டாகிறது. மழையினால் அன்னம்உண்டாகிறது. அன்னத்தினால பிரஜைகளுண்டாகின்றன. பலனைக்கருதாமல யஜ்ஞத்தைச் செய்துவந்த முன்னோர்கள் அந்தயஜ்ஞத்தினால விரும்பியஅன்னத்தையும் அடைந்தார்கள். பூமி உழப்படாமலே பலன்தருவதாயிருந்தது. ஆசீர்வாதங்களாலேயே கொடிகள் உண்டாயின. அந்த முன்னோர்கள் யாகங்களிலும் தங்களிடத்திலும் ஒருபயனையும் நினைக்கவில்லை. யாகபலனில ஸந்தேகப்பட்டுக்கொண்டு யாகஞ்செய்பவர்கள் [4]அஸாதுக்களும் டம்பமுடையவர்களும் லோபிகளும் தனத்தையே பிரயோஜனமாகவுடையவர்களுமாகிறார்கள். வேதப்ரமாணத்தைக் குதர்க்கத்தினால கெடுக்கிறவன் அசுபமான பாவிகளுடைய லோகங்களை அடைவான். ஓ! பிராம்மணஸ்ரேஷ்டரே! அவன் இந்தஉலகத்தில் எப்பொழுதும் அறிவில்லாதவனும் கெட்டசிந்தனையுள்ளவனுமாவான். பிராம்மணனானவன், 'இது அவசியம் செய்யத்தக்கது' என்று செய்யவேண்டிய கர்மாவைச் செய்கிறான், அப்படிச்செய்யாவிடில பயத்தை நினைக்கிறான்; உலகத்தில் பிரம்மம் ஒன்றேயிருக்கிறதென்று நினைக்கிறான்; மற்றது அவசியம் செய்யக்கூடியதென்று நினைக்கிறதில்லை. இப்படிப்பட்டவனுடைய குணமில்லாத கர்மாவும் பெரிதென்று கேட்டிருக்கிறோம். இவனிடத்தில எல்லாப்பிராணிகளுக்கும் உபகாரமும் பயனைவிரும்புவதில ஸங்கோசமுமிருக்கின்றன. ஸத்யத்தையும் தமத்தையும் யாகமாகவுடையவர்களும் லோபமற்ற

1 யாகம். 2 குளம்வெட்டுவது முதலியன.
3 வேறுபாடம். 4 வேறுபாடம்.

வர்களும் ஆத்மயாகமுள்ளவர்களும் அந்தஸமயத்திற்கு வேண்டியதுபோல [1]ச்ரத்தைகொண்டிருக்கிறவர்களுமாயிருக்கிற ஸகலஜனங்களும் மத்ஸரமில்லாதவர்களாவார்கள். சரீரம் ஆத்மா இவற்றின் தத்வத்தை அறிந்தவர்களும் தமக்குரிய யஜ்ஞத்தில் நிஷ்டையுள்ளவர்களும் ப்ரம்மத்தைச்சேர்ந்த வேதத்தை (ப்ரணவத்தை) ஜபிக்கிறவர்களுமாயிருக்கிறவர்கள் மற்றவர்களையும் ஸந்தோஷிக்கச்செய்வார்கள். அந்தப்ரணவம் ஸகலதேவதைகளின் ஸ்வரூபமும் பராபரங்களான ஸகலப் ப்ரம்மஸ்வரூபமும் பிரம்மத்தைப்பற்றியதுமாயிருக்கிறது. ஓ! ஜாஜலியே! அந்தப்ப்ரணவத்தை உபாஸிக்கிறவன் திருப்தியை அடைகிறபோது தேவர்கள் திருப்தியை அடைகிறார்கள்; [2]ஸகல ரஸங்களாலும் திருப்தியடைந்தவன் பின்பு ஒன்றையும் விரும்பான். ப்ரம்மஜ்ஞானத்தினால் திருப்தியடைந்தவனுக்கு ஸுகத்தைக்கொடுக்கின்ற நித்யதிருப்தியான ஸுகமுண்டாகிறது. ஆகையால், அவன் அதைத்தவிர வேறு ஒன்றையும் விரும்பான். தர்மத்தை ஆதாரமாகவுடையவர்கள் தர்மத்தாலுண்டான ஸுகத்தையுடையவர்களும் அப்படியே எல்லாமுயற்சியையுமுடையவர்களுமாயிருக்கிறார்கள். விவேகியானவன், 'உண்மையில் நமக்கு இதற்கு மேலானது ஒன்று இருக்கின்றது' என்று நினைக்கிறான். சாஸ்திரஜ்ஞானமும் அநுபவமுமுடைய சிலர் மிகவும் புண்ணியத்தைக் கொடுக்கின்றதும் பரிசுத்தமுள்ளதும் பரிசுத்தர்களான பெரியோர்களுடைய பரம்பரையில் வைக்கப்பட்டதுமான (ஸம்ஸாரஸமுத்திரத்தின்) அக்கரையை அடையவிரும்புகிறார்கள். அந்தஸாத்விகர்களோவென்றால் எதில்சென்று சோகத்தை அடைகிறதில்லையோ, (மறுபடி) நழுவுகிறதில்லையோ, வருத்தத்தை அடைகிறதில்லையோ அப்படிப்பட்ட பிரம்மத்தின் பதத்தை இவ்வுலகிலேயே அடைகிறார்கள். அவர்கள் ஸ்வர்க்கத்தை விரும்புகிறதேயில்லை; அதற்காக யாகம் செய்கிறதுமில்லை. பிரம்மத்தையே பொருளாகக்கொண்டு இயன்றமட்டும் ஹிம்ஸையின்றி ஸத்துக்களுடைய மார்க்கத்தையே தொடருகிறார்கள். அவர்கள் விருக்ஷங்களையும் ஓஷதிகளையும் கனி கிழங்குகளையும் அறிகிறார்கள். லோபிகளும் பயனைவிரும்புகிறவர்களுமான ரித்விக்குக்கள் இவர்களுக்கு யாகஞ்செய்விக்கிறதில்லை. காமத்தின் முடிவையடைந்த அந்தப் ப்ராம்மணர்கள் ப்ரஜைகளை அனுக்கிர

---

1 'உதபாரநதயாகிம்' என்பது மூலம். 'உள்ளதைக்கொடுப்பவர்' என்றும் சொல்லலாம்.

2 இரண்டுசொற்கள் விடப்பட்டன.

கிப்பதில் விருப்பத்தால் தம்மையே திரவியமாகச்செய்துகொண்டு யாகத்தைச் செய்கிறார்கள். ஆகையால், லோபிகளான ரித்விக்குக்கள் ஆசைகொண்ட அவ்விதமனிதர்களுக்கு யாகஞ்செய்விக்கிறார்கள் ஓ! ஜாஜலியே! '(ஸாதுக்கள்) தம்தர்மத்தைச் செய்வதனாலேயே பிரஜைகளை ஸ்வர்க்கத்தை அடைவிக்கிறார்கள்' என்கிற என்னுடைய புத்தி எல்லாருடைய விஷயங்களிலும் ஸமமாகவிருக்கிறது. ஓ! மஹாமுனிவரே! மனத்தைவசம்செய்த பண்டிதர்கள் எப்பொழுதும் யஜ்ஞத்திலேயிருக்கிற காரணத்தினால் தேவயானமென்கிற மார்க்கத்தினால போகிறார்கள். ஓ! ஜாஜலியே! உள்ளபடியே இருவரும் தேவயானமென்னும் மார்க்கத்தால போகிறார்கள். அவர்களில் ஒருவனுக்குத் திரும்பிவருவதுஉண்டு. மனத்தை அடக்கினவனுக்குத் திரும்பி வருதலில்லை. இவர்களுக்கு மனத்தின் ஸங்கற்ப ஸித்திகளால் எருதுகள் தாமாகவே வந்துசேருகின்றன; வகிக்கவும் செய்கின்றன; பசுக்களும் தாமாகவே கறக்கின்றன. அவர்கள் தாங்களே சங்கற்பத்தினால் யூபங்களைப்பெற்று எளிதிலடையப்பட்ட தக்ஷிணையுடன் யாகஞ்செய்கிறார்கள். அவ்வாறு ஆதமத்யானத்தோடிருப்பவன் கோவை ஆலம்பனம்செய்யத் தகுதியுள்ளவன். பிராம்மணரே! ஆனாலும், அவர்கள் தானியங்களால் யாகஞ்செய்வார்கள். அப்படிப்பட்டவர்கள் ஶ்ரத்தையுடன் கோவைக்கட்டி யாகஞ்செய்யமாட்டார்கள். அந்த உண்மையை உனக்குச் சொல்லுகிறேன். ஒன்றையும் பிரார்த்தியாதவனும் ஒன்றையும் ஆரம்பியாதவனும் ஒருவரையும் நமஸ்கரியாதவனும் துதியாதவனும் குறைவற்றவனும் கர்மம் நசித்தவனுமான அவனைத் தேவர்கள் பிராம்மணனாக நினைக்கிறார்கள். ஓ! ஜாஜலியே! அத்யயனம் செய்வியாமலும் யாகஞ்செய்யாமலும் பிராம்மணனிடத்தில் தானஞ்செய்யாமலும்காம்யவிருத்தியையடைய விரும்புகிறவன் என்னகதியடைகிறான்? இந்தத் தெய்வயஜ்ஞத்தைச்செய்கிறவனோவென்றால் யஜ்ஞத்திற்குத்தக்கபடி பயனை அடைவான்' என்று சொன்னான். ஜாஜலி, 'ஓ! வைஶ்ய! முனிகளுடைய தத்வத்தை நாம் கேட்டதில்லை. ஆகையால், இந்தக்கஷ்டமானவிஷயத்தைஉன்னிடங்கேட்கிறேன். முன்முன்னுள்ளவர்கள் ஆத்மலாபத்துக்குரியதும் பசுக்கள் துன்பத்தை அடையாததுமான இந்தத்தர்மத்தைக் கவனித்ததில்லை. அப்படி கவனித்தவர்களும் இந்தக்கர்மாவுக்கு மேலான அந்தயோகதர்மத்தை நடக்கும்படி செய்யவுமில்லை. இவ்விதமிருந்தால் ஆதமாவாகிற பூமியில செய்யப்படும்யாகத்தை அறிவினர்கள் செயயமாட்டார்கள். அப்படியிருந்தால் எந்தக்கர்மாவினால்

ஸ்வர்க்கத்தை அடைவான்? ஓ! மகாபுத்திசாலியே! அதைச் சொல். உன்னுடையவார்த்தையை நான் மிகவும் நம்புகிறேன்' என்றுசொன்னார். துலாதாரன், 'யஜ்ஞங்களாலும் யஜ்ஞங்களல்லாவிட்டாலும் பசுக்கள் ஒன்றிலும் ஹிம்ஸைக்குஉரியவைகளில்லே. கோவானது நெய்யினாலும் பாலினாலும் தயிரினாலும் எட்டினாலும் தோலினாலும் வாலினாலும் கொம்பினாலும் பாதத்தினாலும் உபகரித்து யாகத்தை நிறைவேறறவேசெய்கிறது. (அவைகளை யாகத்தில்) உபயோகித்துப் பத்னீவிரதத்துடன் விதியோடு நன்குசெய்கிறவன் இந்தக்கோவயாகத்தைச்செய்து அதற்குரியபயனை அடைவான். புரோடாசயாகமானது ஸகலபசுயாகங்களுக்கும் மேலானபரிசுத்தமாகச் சொல்லப்படுகிறது. எல்லாநதிகளும் (யாகத்திறகுரிய) ஸரஸ்வதிநதிகளாகின்றன. எல்லா மலைகளும் பரிசுத்தமே. ஓ! ஜாஜலியே! [1]ஆத்மாவே யாகபூமி. இடத்தைத் தேடவேண்டாம். ஓ! ஜாஜலியே! இப்படிப்பட்ட இந்தத்தர்மங்களை இம்மையில்அனுஷ்டிக்கிறவனும் காரணங்களினால தர்மத்தைத்தேடுகிறவனுமாயிருப்பவன் சுபமானலோகங்களை அடைகிறான்' என்றான். காரணங்களோடுகூடினவைகளும் எப்போதும் பெரியோர்களால ஸேவிக்கப்பட்டவைகளுமான இந்தத்தர்மங்களைத் துலாதாரன் பாலாகித்தான்.

---

## இருநூற்றெழுபதாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(ஜாஜலிக்கும் துலாதாரனுக்கும் தர்மநிமித்தமாகநடந்த ஸம்பாஷணைத்தொடர்ச்சி.)

துலாதாரன், 'நல்லஸாதனங்களினாலேயோ கெட்டஸாதனங்களினாலேயோ இந்தமார்க்கததை அடைந்திருக்கிறீர். (அவ்விஷயத்தில்) அனுபவஞானதகை உண்டுபண்ணிக்கொள்ளும். பிறகு, அது இவ்விதமென்பதை அறிவீர். உம்முடைய தலையிலுண்டான பருந்துகளும் இதரஜாதிகளுமாகிற பலவிதமான இந்தப்பக்ஷிகள் எங்கும் ஸஞ்சரிக்கின்றனவல்லவா? ப்ராம்மணோத்தமரே! அங்கங்கு குடிகொண்டிருக்கிற இந்தப்பக்ஷிகளை அழைததுப் பாரும். உம்முடையசரீரத்தில் எங்கும் கைகளாலும் கால்களாலும் பற்றிக்கொண்டிருந்தஇவைகளை யோசியும். உம்மால் பரிபாலிக்கப்பட்டபக்ஷிகள் உம்மைத் தந்தையாகநினைக்கின்றன. ஓ! ஜாஜலியே! பிதாவான

---

1 வேறுபாடம்.

நீர் குழந்தைகளான இவைகளைச் சந்தேகமின்றி அழையும்' என்று சொன்னான். உடனே அந்த ஜாஜலி தர்மத்தினாலே அந்தப்பக்ஷிகளை அழைக்க, (அவை) தர்மத்தைப்பற்றிய வார்த்தைகளால் மறுமொழி சொல்லின. துலாதாரன், 'ஓ! பிராம்மணனே! கொல்லாமையுடைதலானவையே இம்மைக்கும் மறுமைக்கும் போதுமான தர்மம். கொலையானது ச்ரத்தையைக் கெடுக்கும். அது கெட்டால் அந்தமனிதனைக்கெடுக்கும். (வாலகில்யர்களில்) ஸமமானவர்களும் ச்ரத்தையுடையவர்களும் அடங்கினவர்களும் சாந்தியுடையவர்களும், 'இது விதி' என்று யாகத்தைச்செய்கிறவர்களுமாயிருப்பவர்களுடைய யஜ்ஞமும் ஒருகாலும் அங்கீகரிக்கப்படாமல் போவதில்லை. ஓ! பிராம்மணனே! ச்ரத்தையென்றால் ஸத்வகுணமுள்ளவளும் ஸூர்யனுடைய புத்ரியுமான தேவதை. ச்ரத்தையானது ஹவிஸ், வாக்கு, மனம் இவ்வைகளை உண்டுபண்ணுகிறது; பரிபாலனமும்செய்கிறது. ஆகையால், வாக்கினால் நஷ்டமானமந்த்ரஜபத்தையும் மனத்தால் நஷ்டமான தேவதாத்யானத்தையும் ச்ரத்தையானது காக்கிறது. ஓ! ஜாஜலியே! ச்ரத்தைக்குறைவினால் நஷ்டமானதை வாக்கும் மனமும் யஜ்ஞமும் ரக்ஷிக்கத்தக்கவைகளல்ல. இவ்விஷயத்தில் பழமையை அறிந்தபெரியோர்கள் பிரம்மாவினால்சொல்லப்பட்ட ச்லோகங்களைச் சொல்லுகிறார்கள். (அவற்றின்பொருள்,) 'ச்ரத்தையில்லாமல் சுத்தனாயிருப்பவனுடையபொருளையும் சுத்தியில்லாமல் ச்ரத்தையுள்ளவனுடையபொருளையும் தேவர்கள் ஸமமாக நினைத்தார்கள். சுத்தனான லோபியினுடையஅன்னத்தையும் வட்டியினால்ஜீவிப்பவனான தாதாவினுடைய அன்னத்தையும் தேவர்கள் விசாரித்து இரண்டையும் ஸமமாகச்செய்தார்கள். அந்தத்தேவர்களை நோக்கிப் பிரம்மதேவர், 'நீங்கள் விபரீதமாகச்செய்தீர்கள்' என்றுசொன்னார். தாதாவினுடைய அன்னம் ச்ரத்தையினால்பரிசுத்தம். க்ருபணனுடையஅன்னம் அச்ரத்தையினாலே கெடுக்கப்பட்டிருக்கிறது. வட்டியினால் ஜீவிக்கின்ற தாதாவினுடைய அன்னம் புசிக்கத்தக்கது; லோபியினுடைய அன்னம் புசிக்கத்தகாதது. ச்ரத்தையில்லாதவனொருவனே தேவர்களுக்கு ஹவிஸைக்கொடுக்கத் தகுதியில்லாதவன். அவனுடையஅன்னந்தான் புஜிக்கத்தக்கதில்லையென்று தர்மத்தை அறிந்தவர்கள் நினைக்கிறார்கள். அச்ரத்தையானது கொடியபாவம். ச்ரத்தையானது பாவத்தினின்றும் விடுவிக்கிறது. ச்ரத்தையுள்ளபுருஷன், ஸர்ப்பமானது ஜீர்ணமானதோலைவிடுவதுபோலப் பாவத்தை விடுகிறான். ச்ரத்தையுடன்கூடின தோஷவிருத்தியானது பரிசுத்தம்செய்கிற கர்

மங்களுக்கெல்லாம் மேலானது எவன் ஆசாரதோஷமில்லாமல் ஶ்ரத்தையுடனிருக்கிறானோ அவன் பரிசுத்தனே. அவனுக்குத் தவத்தால்செய்யக்கூடியது என்னவிருக்கிறது? அனுஷ்டானத்தினாலும் என்ன? ஆத்மாவினால்தான் என்ன? இந்தப்புருஷன் ஶ்ரத்தையையே உருவமாகவுடையவன். எவன் எந்தஶ்ரத்தையோடிருக்கிறானோ அவன் தன்மயமாயுள்ளவன். இவ்விதம் தர்மமானது தர்மார்த்தங்களைக்கண்ட பெரியோர்களால் நன்றாகச் சொல்லப்பட்டிருக்கிறது. நாங்கள் தர்மத்தையறியவிருப்பத்துடன் தர்மதர்சனரென்கிற முனிவரிடமிருந்து தர்மத்தை அறிந்துகொண்டோம். ஓ! அறிவிற்சிறந்தவரே! ஶ்ரத்தையை வைத்துக்கடவீர். அதனால எது பரமோ அதை அடைவீர்'' என்றுசொல்ல, ஜாஜலி, 'வைஶ்யரே! நாங்கள் முனிவர்களுடைய தத்வத்தைக் கேட்டதில்லை. இந்தத்தத்வத்தை உம்மிடம் கேட்கிறேன். முன்னே முன்னேயுள்ளவர்கள் இதைக் கவனிக்கவில்லை. (கவனித்தாலும்) அந்தமுனிவர்கள் மேலான இந்த விஷயத்தை ஸ்தாபனஞ்செய்யவில்லை. ஓ! வியாபாரியே! பசுக்கள் ஸாதனமான (பால்முதலிய) பரிசுத்த வஸ்துக்களைக்கொடுத்து ஸுகத்தை அடையும். தர்மத்தில் அவைகளை உபயோகப்படுத்துகிறவன் பத்தியின் விரதத்தோடு விதிப்படி தர்மத்தைச் செய்கிறான். ஶ்ரத்தையுடையவனும் ஶ்ரத்தையுடன் அனுஷ்டிக்கிறவனுமான அவன் தர்மாத்மாவல்லனோ?' என்று கேட்க, துலாதாரன், 'ஓ! ஜாஜலியே! தன்னுடைய மார்க்கத்தில் இருந்தவனே பெரியவன்தான்' என்றுசொன்னான். பிறகு, ஸ்வல்பகாலத்தில் மஹாபுத்திமான்களான அந்த ஜாஜலியும் துலாதாரனும் ஸ்வர்க்கத்தை அடைந்து தங்கள் கர்மபலத்தினால் உண்டுபண்ணப்பட்ட தங்கள் தங்கள் ஸ்தானத்தை அடைந்து ஸுகமாகக் களித்தார்கள். இவ்விதம் துலாதாரனால் பலவிதமான அர்த்தத்துடன் சொல்லப்பட்டது; இவ்விதம் நன்றாகத் தீர்க்கவும்பட்டது; பழமையான தர்மமும் சொல்லப்பட்டது. ஓ! குந்தீபுத்திரா! பிரஸித்தமான வீர்யத்தையுடைய அந்த துலாதாரனுடைய வாக்கியங்களை ஜாஜலியானவர் கேட்டுச் சாந்தியையே அடைந்தார். [1]இவ்விதம் துலாதாரனால் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட அர்த்தத்துடனும் திருஷ்டாந்த உபதேசத்துடனும் உள்ளபடி சொல்லப்பட்டது. மறுபடியும் எதைக்கேட்க விரும்புகிறாய்?'' என்று சொன்னார்.

---

[1] கூறியது கூறலால், அதிகபாடமான ஒரு ஶ்லோகம் விடப்பட்டது.

## இருநூற்றெழுபத்தோராவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(கொலையையும் சரீரத்துக்கு வாட்டத்தையும் செய்யாமல் தர்மத்தைச் செய்யவேண்டுமென்பது.)

யுதிஷ்டிரர், "ஒருவிதமான ஹிம்ஸையையுஞ் செய்யாதவர்கள் தம் [1]சரீரத்தையும் ஆபத்துக்களையும் அறிகிறதில்லை. தொழில் இல்லாதவனுக்குச் சரீரயாத்திரை எவ்விதம் நடக்கும்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"சரீரம் வாடாமலும் மிருத்யுவுக்கு வசப்படாமலுமிருக்கும்படி கர்மத்தில் பிரவிருத்திக்கவேண்டும். செய்யும் முறையை அறிந்து தர்மத்தை ஆசரிக்கவேண்டும் இந்த விஷயத்திலும் [2]விசக்யு வென்ற அரசனால் பிராணிகளிடத்தில் தயையினால சொல்லப்பட்ட புராதனமான இதிஹாஸமொன்று சொல்லுகிறார்கள். அந்த அரசன் யஜ்ஞசாலையில் யூபத்தை முறித்துக்கொண்டு நிற்றம் விருஷபத்தையும் தொழுவத்தில் (துன்பத்தையடைகையில்) விருஷபங்களுடைய மிகுதியான சப்தத்தையும் பார்த்து, 'கோக்களுக்கு க்ஷேமமுண்டாக வேண்டும்' என்று பிரார்த்தித்தான். அது உலகங்களில் நிலையான வார்த்தையாகிவிட்டது. கோஹிம்ஸை நடந்துகொண்டிருந்தபடியால் இது ஆசீர்வாதமாகக் கற்பிக்கப்பட்டது. வரைகடந்தவர்களும் மிசவும் மூடர்களும் பிரம்மமில்லையென்கிறவர்களும் ஆத்மாவில் சந்தேகமுள்ளவர்களும் பிராணிஹிம்ஸையுள்ள கர்மத்தினாலேயே புகழைவிரும்புகிறவர்களுமான மனிதர்களால (யாகத்தில) ஹிம்ஸையானது பெரிதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. தர்மாத்மாவான மனு ஸகல கர்மங்களிலும் கொல்லாமையையே சொன்னார். தங்கள் இஷ்டப்படி நடக்கிற மனிதர்கள் யாகமில்லாமலும் பசுக்களை வதைக்கிறார்கள். ஆகையால், தெரிந்தவன் பிரமாணத்தைக்கொண்டு ஸூக்ஷ்மமான தர்மத்தைச் செய்யவேண்டும். (பிரமாணத்தில்) ஸகல தர்மங்களிலும் கொல்லாமையே பெரிதாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆகையால, ஸன்யாஸத்துடன் கிராமஸமீபத்தில வஸித்துக்கொண்டு உறுதியான நியமத்துடன் கர்மகாண்டத்தில சொல்லப்பட்ட ஹிம்ஸையைத்தள்ளிவிட்டு,'இது ஆசாரம்' என்று ஆசரியாமல்

---

1 'பிறவியையும் துன்பங்களையும் அடையமாட்டார்கள்' என்பது.

2 'விசக்நு' என்பது வேறுபாடம்.

இருக்கவேண்டும். கர்மபலத்தில் விருப்பமுள்ளவர்கள் அற்பர்கள். மனுஷ்யர்கள் யூபங்களுக்காக விருக்ஷங்களை வெட்டுகிறார்கள்; வீணாக மாம்ஸங்களைப் பக்ஷிக்கிறார்கள். ஆனால், இந்தத்தர்மம் புகழப்படுகிறதில்லை. தூர்த்தர்களால் கள், மீன், தேன், மாம்ஸம், ஆஸவம் (சாராயம்,) திலான்னம் இவை (முதலானவை) உண்ணப்படுகின்றன. இவைகள் வேதங்களில சொல்லப்படவில்லை. காமத்தினாலும் லோபத்தினாலும் மோகத்தினாலும் இவைகளில் விருப்பம் வைக்கப்படுகிறது. பிராம்மணர்கள் எல்லாயாகங்களிலும் [1]வியாபகரான பரமாத்மாவே பூஜிக்கத்தக்கவரென்று சொல்லுகிறார்கள். பாயஸங்களாலும் புஷ்பங்களாலுமே அவருடையபூஜை சொல்லப்படுகிறது. வேதத்தில் சொல்லப்பட்ட விருக்ஷங்களும், யாகத்துக்கு உரியவையென்று சொல்லப்பட்ட விருக்ஷங்களும், சிறந்தபலமுள்ளவைகளும் சுத்தியுள்ளவைகளுமான [2]விருஷபங்களால் செய்யவேண்டிய மற்றஎல்லாச்செய்கைகளும் தேவபூஜைக்குரியவையே. (ஆகையால், ஹிம்ஸையில்லாமல் தேவரைப் பூஜிக்கவேண்டும்)'' என்று சொன்னார். தர்மபுத்திரர், "ஹிம்ஸைசெய்யாமலிருக்கிறவனுடைய சரீரமும் ஆபத்துக்களும் விவாதிக்கின்றன. ப்ரவ்ருத்தியே இலலாதவனுக்குச் சரீரயாத்ரை எவ்விதம்நடக்கும்?'' என்றுகேட்க, பீஷ்மர், "சரீரம்வாடாமலும் மரணத்தை அடையாமலும் இருக்கும்படியான தொழில்களில் இருக்கவேண்டும். செய்யவேண்டிய முறையை அறிந்து தர்மத்தை ஆசரிக்கவேண்டும்'' என்றுசொன்னார்.

---

## இருநூற்றெழுபத்திரண்டாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(காரியத்தை ஆராய்ந்துசெய்யும் விஷயத்தில் உதாரணமான சிரகாரியின் கதை.)

தர்மபுத்திரர், "கார்யத்தை விரைவாகவோ தாமஸமாகவோ எப்படி பரீக்ஷிக்கவேண்டும்? எலலாவிதத்திலும் நிச்சயிக்கமுடியாத இந்தக்கார்யத்தில் எங்களுக்கு நீரே உத்தமரான குரு'' என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"இந்தவிஷயத்திலும் (பண்டிதர்கள்) அங்கிரஸகுலத்திலுதித்த சிரகாரியினுடைய பூர்வசரித்திரமாகிய பழைய இதிஹாஸத்தைச்

---

1 'விஷ்ணுமேவ' என்பது மூலம். 2 'உக்ஷபி:' என்பது மூலம்.

சொல்லுகிறார்கள். கௌதமருக்கு அனேகம் புத்திரர்களுண்டானார்கள். அவர்களனைவருள்ளும் இளையவரானபுத்திரர் சிரகாரிஎன்பவர். [1] ஓ! சிரகாரியே! உமக்கு மங்களமுண்டாகக்கடவது. ஓ! சிரகாரியே! உமக்கு மங்களமுண்டாகக்கடவது. மேதாவியான சிரகாரியானவர் கர்மங்களில் குற்றத்தைச் செய்கிறதில்லை. அறிவிற்சிறந்த அந்தச்சிரகாரி கௌதமருடையபுத்ரர். அவர் ஸகலகாரியங்களையும் நெடுங்காலம் நன்றாகஆலோசித்துத் தொடங்குவார்; விஷயங்களை நெடுநேரம் யோசிப்பார்; நெடுநேரம் தூங்காமலிருப்பார்; அப்படியே நித்திரைசெய்வார்; நெடுங்காலம் காரியத்தைச் செய்துகொண்டிருப்பார். அதனால அவர் சிரகாரியென்று சொல்லபபடுகிறார். அதனால் அவர், தீர்க்காலோசனையில்லாத புத்திக்குறைவுள்ள ஜனங்களால் சோம்பேறித்தனத்தை அடைந்தவரென்றும் துர்ப்புத்திக்காரரென்றும் சொல்லப்படுகிறார். அப்படியிருக்க, ஒருஸமயம் மாதாவான (அஹல்யைக்கு) வியபிசாரமேற்பட்டபொழுது கோபமடைந்த அவர்பிதா மற்றப்புத்திரர்களைவிட்டுச் சிரகாரியைப்பார்த்து, 'உன் தாயைக் கொல்' என்றுசொன்னார். ஜபிக்கிறவர்களுள் ஶ்ரேஷ்டரும் மஹாபாக்கியவானுமான கௌதமரென்னும்பிராம்மணர் இவ்விதஞ் சொல்லிவிட்டு ஆலோசியாமல் உடனே வனத்திற்குச் சென்றார். ஸ்வபாவத்தினாலேயே சிரகாரியான அந்தப்புத்திரர் வெகுகாலம் தாமதித்து, 'அப்படியே யாகட்டும்' என்று சொல்லிவிட்டுச் சிரகாரியானபடியால் நெடுங்காலம் ஊன்றி ஆலோசிக்கலானார்.

'பிதாவின் கட்டளையை எப்படி நான் செய்வேன்? மாதாவை எப்படிக் கொல்லாமலும்இருப்பேன்? துர்ஜனனைப்போல இந்தத் தர்மஸங்கடத்தில் எப்படி முழுகாமலிருப்பேன்? பிதாவின்கட்டளையோ பெரியதர்மம். மாதாவைக்காப்பது ஸ்வதர்மம். ஆனால், தாய்தந்தையர்களுக்கதீனமான புத்திரதன்மையானது என்னைவிட்டு நீங்காமலிருக்கவேண்டும். ஸ்திரீமாத்ரமன்றித் தாயுமானவளைக்கொன்றுவிட்டு எவன்தான் ஒருபோதாவது நன்மையடைவான்? பிதாவைஅவமதித்து எவன் புகழைஅடைவான்? பிதாவை அவமதியாமலிருப்பது உசிதம். மாதாவைரக்ஷிப்பதுஸ்வதர்மம். உசிதமும்செய்யத்தக்கதுமான இவ்விரண்டுதர்மங்களையும் எப்படி சிறிதும் விடாமலிருப்பேன்? பிதாவானவன் தன்னுடையசீலம் ஆசாரம் [2]கோத்ரம்

---

1 ஆதரவினால பீஷ்மர் கதையின்தொடக்கததில சிரகாரியைப்புகழ்ந்து அவருக்கு மங்களத்தைப பிரார்த்திக்கிறார்.

2 'பெயர்' என்பது பழையவுரை.

குலம் இவைகளைத் தரிப்பதற்காகத் தன்ஆத்மாவை மனைவியினிடம் வைக்கிறான். அப்படிப்பட்டநான்மாதாவினாலும்பிதாவினாலும்புத்திரனாகச் செய்யப்பட்டிருக்கிறேன். ஆகையால், எனக்கு விசாரமானது ஏன் ஏற்படாது? இருவரையும் சரீரத்திற்குக் காரணமாக நினைக்கிறேன். ஜாதகர்மத்திலும் [1]உபகர்மத்திலும் பிதா சொல்லுகிறது பிதாவினுடைய கௌரவத்தை நிச்சயிக்கிற விஷயத்தில் போதுமான பலமாயிருக்கிறது. சரீரத்தைப் போஷித்து வேதத்தை ஓதுவிப்பதால் பிதாவானவர் சிறந்தகுரு; அவரே மேலான தர்மம். பிதாசொல்லுகிறதே வேதங்களிலும் நிச்சயிக்கப்பட்ட தர்மமாயிருக்கிறது. புத்ரன் பிதாவின் அன்பிற்குஉரியவனாயிருக்கிறான். பிதாவோ புத்திரனுக்கு எல்லாமாயுமிருக்கிறார். பிதாஒருவரே சரீரமுதலான தானஞ்செய்யக்கூடிய எல்லாப்பொருள்களையும் கொடுக்கிறார். ஆகையால், பிதாவினுடையவசனம் (அவஸ்யம்) செய்யத்தக்கது; ஒருபோதும் விசாரிக்கத்தக்கதில்லை. பிதாவின்கட்டளையைச் செய்கிறவனுடைய பாதகமானகாரியங்களுங்கூடப் பரிசுத்தமான காரியங்களாகின்றன. பாக்கியத்தின் அனுபவத்திலும் யாகத்திலும் ஸகலமான உலகவியவஹாரத்திலும் [2]கர்ப்பாதானம் ஸீமந்தோன்னயனமுதலானவற்றிலும் பிதாவே தர்மம்; பிதாவே ஸ்வர்க்கம்; பிதாவன்றோ மேலானதவம்? பிதா ப்ரீதியடைந்தால் எல்லாத்தேவதைகளும் ப்ரீதியடைகிறார்கள். பிதா புத்திரனைக்குறித்துச்சொல்லுகிற ஆசீர்வாதங்களெல்லாம் அவனை அடைகின்றன. பிதா ஸந்தோஷிப்பதே புத்ரனுடைய எல்லாப்பாவங்களுக்கும் பிராயச்சித்தம். புஷ்பமானது காம்பிலிருந்து உதிர்கிறது. பழமானது மரத்திலிருந்து உதிர்கிறது. புத்திரஸ்நேகத்தினால், க்லேசத்தைஅடைந்தாலும் பிதா புத்திரனை விடுகிறதில்லை. புத்திரனுக்குப் பிதாவினிடத்திலுள்ள இந்தக்கௌரவமானது ஆலோசிக்கப்பட்டது. பிதா அற்பமான ஸ்தானமில்லை. இனி மாதாவைப்பற்றிச் சிந்திப்பேன். நான் மனிதத்தன்மையை அடைகையிலுண்டான பஞ்சபூதவிகாரமானகூட்டத்துக்கு (சரீரத்துக்கு) என்னுடைய மாதா அக்னிக்குஅரணிபோலக் காரணமானவள். தாய், ஜனங்களுடையதேகத்திற்கு அரணிபோன்றவள். துன்பம்அடைந்த ஸகலப்பிராணிகளுக்கும் மாதா ஸுககாரணம். மாதாவிருந்தால் புத்திரன் [3]ஸநாதன்; இல்லாவிட்டால் அநாதன். தன

---

1 'உபநயனத்திற்குள் தந்தை தேசாந்தரம் போயிருந்து திரும்பிவந்தால் புத்ரனுடைய தலையைப்பிடித்துக்கொண்டு ஜபிப்பது' என்பது பழைய உரை.

2 வேறுபாடம்.

3 காப்பவரையுடையவன்.

மில்லாதவனானாலும், 'அம்மா!' என்று அழைத்துக்கொண்டு வீட்டினுள்புகுகிறவன் துன்பத்தை அடைகிறதில்லை. கிழத்தனம் அவனுக்குக் குறைவைச்செய்யாது. மாதாவைஅடுத்திருக்கிற அவன் புத்திரபௌத்திரர்களுடனிருந்தாலும் நூறுபிராயம் நிரம்பியிருந்தாலும் இரண்டுபிராயக்குழந்தை போன்றவனே. ஸமர்த்தனானாலும் ஸாமர்த்தியமில்லாதவனானாலும் இளைத்தவனானாலும் பருத்தவனானாலும் (எப்படியிருந்தாலும்) மாதா புத்திரனை ரக்ஷிக்கிறாள். தாயைத் தவிர மற்றவர்கள் முறைப்படி போஷிக்கமாட்டார்கள். எப்போது மாதாவின் வியோகம் உண்டாகிறதோ அப்பொழுதுதான் புத்ரன் கிழவனாகிறான்; அப்பொழுது துக்கத்தையடைந்தவனாகிறான். அப்பொழுது அவனுக்கு உலகம் (எல்லாம்) சூன்யமாகிறது. மாதாவுக்குச்சமமான நிழலுமில்லை. மாதாவுக்குச்சமமான கதியுமில்லை. மாதாவுக்குச்சமமான ரக்ஷகமுமில்லை. மாதாவுக்குச்சமமான அன்புக்குரியவருமில்லை. மாதாவானவள் குக்ஷியில்தரித்ததனால், 'தாத்ரீ' என்றும், ஈன்றதால், 'ஜநநீ' என்றும், அங்கங்களை விருத்திசெய்ததால, 'அம்பா' என்றும், [1]வீரனைப்பெற்றதால், 'வீரஸூ' என்றும், சிசுவுக்குச் சுஶ்ரூஷைசெய்வதால, 'சுஶ்ரூ' என்றும் சொல்லப்படுகிறாள். மாதாவானவள் புத்திரனுடைய மறுதேகம். (கண் முதலிய) துவாரங்களுள்ள தலையையுடையவனும் அறிவுள்ளவனுமான எவன் மாதாவைக்கொல்லுவான்? தம்பதிகளுடைய வீரியஸம்பந்தத்தில் (புத்ரனுண்டாகவேண்டுமென்கிற) விருப்பம் மாதாவுக்கும் பிதாவுக்கும் ஸமம். ஆனால், உண்மையான அர்த்தமானது மாதாவினிடத்திலிருக்கிறது, புத்திரனுடையகோத்ரத்தைத் தாய் அறிகிறாள். அவன் யாருடையவனோ அவனை மாதாஅறிகிறாள். மாதாவுக்குத் தான்சுமந்ததனாலேயே சந்தோஷமும் ஸ்நேகமும் உண்டாயிருக்கின்றன. குழந்தைகள் பிதாவினுடையவைகள். புருஷர்கள் ஸ்திரீகளைத் தாமாகவேபாணிக்கிரகணம்செய்து கூடவேதர்மத்தையும் அனுஷ்டிக்கையில் வேறுஸ்திரீகளை அடைந்தால் அப்போதும் அவர்கள் [2]விடத்தக்கவர்களில்லை. ஸ்திரீயைப்பரிப்பதால் (போஷிப்பதால்)அன்றோபர்த்தா? அப்படியேபாலனத்தினால் (காப்பதனால்) அன்றோ பதி? அந்தத்தர்மங்களில்லாவிட்டால் பர்த்தாவுமல்லன்; பதியுமல்லனே. இப்படியிருக்கையில் ஸ்திரீயானவள் குற்றமுடையவளாகிறதில்லை. புருஷன்தான் குற்றமுள்ளவனாகிறான். (பரதாரகமன

1 ஆண்குழந்தை.

2 'பூஜிக்கத்தக்கவர்களில்லை' என்பது வேறுபாடம்.

ரூபமான) கொடியபாவத்தைச்செய்கிறபுருஷனுக்கே தோஷம் மிகு தியாயுள்ளது. ஸ்திரீக்கோ பர்த்தாவே சிறந்தவன். அவனே பரம தெய்வமாக நினைக்கப்படுகிறான். அவனுடையரூபத்திறகு மிகவும்ஸம மானரூபத்தைக்கொண்டவனுக்குத் தன்னைக் கொடுத்தாள். ஆகை யால், ஸ்திரீகளுக்குக் குற்றமில்லை. புருஷனே அபராதியாகிறான். ஸகலகாரியங்களிலும் பராதீனைகளாதலால் ஸ்திரீகள் அபராதமுள்ள வர்களல்லர். ஸ்திரீயினாலே இன்பவிருத்திக்காகக் கேட்கப்பட்டவந்த தை நினைப்பித்தஇந்திரனுக்கே அதர்மம் நிச்சயம். சந்தேகமில்லை. இவ்விதம் அதிகமான கௌரவததிலிருக்கிறஸ்திரீகளை அவர்களிலும் மாதாவை வதம்செய்யக்கூடாதென்று விதிவிலக்குக்களிலலாத பசுக் களும்அறியும். பிதாவை ஒன்றாகச்சேர்ந்த தேவதைகளுடைய ஸமூ கமாகநினைக்கிறார்கள். (புத்திரன்) மாதாவை மனிதர்கள் தேவதை கள்ஆகிய இருவரிடத்துமுள்ள ஸ்னேகததோடு அடைகிறான்' என்று ஆலோசித்தார். சிரகாரியானதால் அவர் இவ்விதம் வெகுவாக ஆலோசனைசெய்யும்பொழுது நீண்டகாலஞ் சென்றுவிட்டது. பிறகு, அவருடைய பிதாவானவர் வந்தார். அதிமேதாவியும் மிக்கஅறி வுடையவரும் தவததிலிருக்கிறவருமான கௌதமா அவ்வளவுகாலத் திறகுப்பிறகு பத்னியினுடைய அனுசிதமான மரணத்தையோசித் துச் சாஸ்திரஞானத்தினாலும் மனோதைர்யத்தினாலுமுண்டானதெளி வினால் பச்சாத்தாபத்தையடைந்து துக்கத்தால் கண்ணீர்சொரிந்து மிகவும் ஸந்தாபத்தையடைந்து புலம்புகிறார். ' மூன்று லோகங்களுக் கும் தலைவனான இந்திரன் பிராம்மணவேஷம்பூண்டு அதிதியின் விர தத்தைக் கைக்கொண்டு என்னுடைய ஆம்ரமம் வந்தான். அவன் என்னால் நல்லவார்த்தைகளால் மகிழ்விக்கப்பட்டுக் குசலப்பிர ம்னத்தினாலும் பூஜிக்கப்பட்டான் ; நியாயப்படி என்னால் அர்க்கிய மும் பாத்தியமும் கொடுக்கப்பெற்றான். அப்படிச்சொன்னால் ப்ரீதி யடைவானென்று, 'நான் உன்னைச் சேர்ந்தவன்' என்றும் சொன் னேன். இதில் அனர்த்தம் ஏறபட்டதனால ஸ்திரீயினிடத்தில் குற்ற மில்லை. ஆகையால், ஸ்திரீயும் குற்றம்செய்யவில்லை. நானும் குற் றம்செய்யவில்லை. வழிப்போக்கனான இந்திரனும் குறறம்செய்ய வில்லை. தர்மத்தினுடைய தவறுதலே குற்றம்செய்தது. முனிவர் கள், 'பொறாமையாலுண்டான துக்கததை அஜாக்ரதையால்' என்று சொல்லுகிறார்கள். நான் பொறாமையால் கெடுக்கப்பட்டு, பதிவிர தையும் ஸ்திரீயும் வீட்டுவேலைகளில் கவலையால் கிருகத்தில் வஸிக் கும்படி செய்யப்பட்டவளும் பரிக்க (போஷிக்கத்) தக்கவளானதால்

பாரியையுமாயிருப்பவளைக் கொன்றுவிட்டுத் துன்பக்கடலில் முழுகி விட்டேன். யார் என்னைக் கரையேறறப்போகிறார்? சிரகாரி என்ற எண்ணத்தால் உதாரபுத்தியுள்ள புத்திரன் என்னால் கட்டளையிடப் பட்டான். அவன் இப்பொழுதும் சிரகாரியாயிருப்பானானால் என்னைப் பாவத்திலிருந்து காப்பான். ஓ! சிரகாரியே! உனக்கு மங்கள முண்டாகட்டும். ஓ! சிரகாரியே! உனக்கு மங்களமுண்டாகட்டும். நீ இந்த விஷயத்தில் இப்பொழுது சிரகாரியாயிருந்தால் உள்ளபடி நீ சிரகாரிதான். என்னையும் உன் தாயையும் உன்னால் தேடப்பட்ட தவத்தையும் உன்னையும் பாதகங்களினின்றும் காப்பாற்று. இப்பொழுது சிரகாரியாயிருக்கக்கடவாய். நீ மஹாபுத்திமானாகையால் உனக்குத் தாமதித்துச்செய்வது உடன்பிறந்ததாயிருக்கிறது. உன்னுடைய அந்தத்தன்மை அப்படியே ஸபலமாகட்டும். இப்பொழுது நீ சிரகாரியாயிருக்கவேண்டும். மாதாவினால் நீ வெகுகாலம் பிரார்த்திக்கப்பட்டாய்; கர்ப்பத்தில் தரிக்கப்பட்டாய். ஓ! சிரகாரியே! நீ உன்னுடைய சிரகாரித்தனத்தை ஸபலமாகச்செய். வருத்தத்தால் நம்மிடம்வரத் தாமதிக்கிறான். அவன் எங்களிருவருக்கும் நெடுநாளைக்குண்டான துக்கத்தை நினைந்து வெகுகாலம் தூங்குகிறானோ! நன்றாகப்பார்த்துத் தாமஸித்துச்செய்கிறவனே!' என்றார். அரசனே! இவ்விதம் மஹரிஷியான கௌதமர் அப்பொழுது துக்கத்தை அடைந்தார்; பிறகு பக்கத்தில் நிற்கிற சிரகாரியென்கிற புத்திரரைப்பார்த்தார். சிரகாரியோ பிதாவைப்பார்த்து மிக்க துக்கத்துடன் ஆயுதத்தை எறிந்துவிட்டுத் தலையால் அவரை வணங்கி ஸமாதானத்தைஅடையும்படிசெய்ய எத்தனித்தார். பிறகு, கௌதமர், பூமியில் ஸாஷ்டாங்கமாக விழுந்துகிடக்கிற புத்திரரையும் (லஜ்ஜையால் சிலைபோல) அசைவற்றிருக்கின்ற மனைவியையும்பார்த்து மிக்கமகிழ்ச்சியை அடைந்தார். அந்த மஹாத்மாவானவர் மனைவியைச் சேர்த்துக்கொள்ளவில்லை. ஜனமில்லாதவிடத்தில் ஆஸ்ரமத்திலிருக்கிறஅவரால் புத்ரனும் ஸமாதானம் செய்யப்படவில்லை. ஆயுதபாணியும் அடக்கமுள்ளவனும் செய்யவேண்டியகார்யத்தில ஸமர்த்தனுமான புத்திரனிடத்தில, தம் காரியங்களுக்காகவெளியிலபோகும் ஸமயத்தில், '(மாதாவை) கொல்லக்கடவாய்' என்று ஆஜ்ஞை செய்யப்பட்டது. தமமுடைய பாதங்களில்வணங்கினபுத்திரனைப்பார்த்துப்பயத்தினால ஆயுதத்தைப்பிடித்திருப்பதனுண்டான பரபரப்பை மறைக்கிறானென்றுபிதாவுக்குஎண்ணமுண்டாயிற்று. பிறகு, பிதாவானவர் சிரகாரியை நெடுநேரம் புகழ்ந்து நெடுநேரம் உச்சிமோந்து நெடுநேரம் இரண்டுகைகளாலும்

ஆலிங்கனஞ்செய்து, 'நெடுங்காலம் ஜீவிக்கக்கடவாய்' என்று சொன்னார். மிக்கஅறிவுள்ளவரான அந்தக்கௌதமர் இவ்விதம் அன்பையும் சந்தோஷத்தையும் (சாந்திமுதலான) குணங்களையும் அடைந்து புத்திரனைப்புகழ்ந்து, 'ஓ! சிரகாரி! உனக்கு மங்களமுண்டாகுக. வெகுநாள் சிரகாரியாயிருக்கக்கடவாய். பார்க்கஇனியவனே! உன்காரியம் காம்ஸமாயிருக்குமானால் வெகுகாலம்நான் துக்கத்தையடையாமலிருப்பேன்' என்றார். (இவ்விதஞ்சொல்லிவிட்டு) முனிசிகாமணியும்வித்வானுமான கௌதமர் சில ஶ்லோகங்களையும் சொன்னார். (அவற்றின்பொருள்,) 'தாமதித்துச்செய்கின்ற தீர்க்கஸூத்ரத்தில் குணங்களும் காரியங்களின் முறைகளும் இதரர்கள்வந்து அடையும்தன்மையும் இருக்கின்றன. வெகுநாள்ஆராய்ந்து (ஒருவனை) மித்ரனாக்கிக்கொள்ளவேண்டும். செய்ததை(விடுகிறதானால்)வெகுநாள் எண்ணி விடவேண்டும். வெகுகாலம் ஆராய்ந்து நண்பனாகச்செய்யப்பட்டவன் வெகுகாலம் பழகுவதற்குத் தகுதியுள்ளவன். அன்பு, கர்வம், மானம் துரோகம், பாவச்செய்கை, அப்ரியம் இவைகளைச்செய்வதில தாமதித்துச்செய்கிறவன் சிலாகிக்கப்படுகிறான். உறவினர், நண்பர், வேலைக்காரர்கள், ஸ்திரீஜனம் இவர்களுடைய மறைவானகுற்றங்களில் தாமதித்துச்செய்கிறவன் சிலாகிக்கப்படுகிறான்' என்பது. ஓ! பாரத! யுதிஷ்டிர! இவ்விதம் அந்தக்கௌதமர் அப்பொழுது புத்திரனுடைய செய்கையினாலும் தாமதித்துச்செய்யும் தன்மையினாலும் பிரீதியை அடைந்தார். ஆகையால், இப்படியே மனிதன் எல்லாக்காரியங்களிலும் நன்குஆலோசித்துப் பொறுத்து நிச்சயித்தால் பரிதாபத்தை அடையமாட்டான். தாமஸமானது கோபத்தைஅடக்கும். தாமஸமானது, 'இது காரியம். இது அகாரியம்' என்று கர்மத்தை நியமனஞ்செய்யும். பச்சாத்தாபத்தைச்செய்கிற ஒருகர்மமும் தக்கதன்று. வெகுநாள் பெரியோர்களை அடுத்திருக்கவேண்டும். வெகுகாலம் இதரர்களைப் பூஜிக்கவும் வேண்டும். வெகுகாலம் தர்மத்தைச் செய்யவேண்டும். ஒருவிஷயத்தைப் பலநாள் ஆராயவேண்டும். நெடுங்காலம் வித்வான்களுடன் பழகி நெடுங்காலம் சிஷ்டர்களை அடுத்து நெடுங்காலம் மனத்தை அடக்கினால் நெடுங்காலம் அவமரியாதையை அடையாமலிருப்பான். தர்மமான வார்த்தையை மற்றொருவனுக்குச் சொன்னாலும் வெகுகாலம் பிரமாணம் செய்யப்பட்டுச் சொல்லவேண்டும். அப்படியானால் வெகுகாலம் பரிதாபத்தை அடையாமலிருப்பான். மிகுந்த தவமுடைய கௌதமர் பலவருஷங்கள் அந்தவானப்பிரஸ்தாஶ்ரமத்தில்ஒழுகிப் பிறகு புத்திரரோடு ஸ்வர்க்கத்தைஅடைந்தார்'' என்றுசொன்னார்.

---

## இருநூற்றெழுபத்துமூன்றாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(பிரஜைகளைத் துன்பப்படுத்தாமல் காக்கும்விஷயத்தில் ஸத்யவானுக்கும் த்யுமத்ஸேனனுக்கும்நடந்த ஸம்பாஷணை.)

யுதிஷ்டிரர், "ஓ! பிதாமஹரே! அரசனானவன் (ஹிம்ஸையின்றி) எப்படி பிரஜைகளை ரக்ஷிப்பான்? (பரிபாலித்தால்) எப்படி ஒரு ஜந்துவையும் வருத்தப்படுத்தாமலிருப்பான்? ஓ! ஸாதுக்களில் சிறந்தவரே! உம்மைக் கேட்கிறேன்; அதைச் சொல்லவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"இந்த விஷயத்திலும் த்யுமத்ஸேனனுக்கு ஸத்யவானென்கிற அரசனுடன் நடந்த ஸம்வாதரூபமான ஒரு பழமையான இதிஹாஸத்தைச் சொல்லுகிறார்கள். பிதாவான த்யுமத்ஸேனனுடைய கட்டளையால் (கொலைக்குயோக்கியமானவர்கள்) கொலைக்குக்கொண்டுபோகப்படும்பொழுது ஸத்யவானானவன் ஒருவராலும் சொல்லப்படாத வசனத்தைச் சொன்னானென்று நமக்குக் கேள்வி. ஸத்யவான், 'தர்மம் அதர்மமாகும். அதர்மமும் தர்மமாகும். கொலையென்பது தர்மமாகுமென்னும் இது பொருந்தாது' என்றான். த்யுமத்ஸேனன், 'ஓ! ஸத்யவானே! (திருடர்களைக்) கொல்லாமை தர்மமென்றால் ஒரு ஸமயமாவது எது அதர்மமாகும்? திருடர்கள் கொலைசெய்யப்படாவிட்டால் (அதுவே அதர்மமாவதால்) தர்மாதர்மங்கள் கலந்துபோகும். ஓ! ஸத்யவானே; கலியுகத்தில், 'இது என்னுடையது. இது இவனுடையது' என்கிற பிரவ்ருத்தி ஏற்படாது; உலகியல் நடவாது. (இந்தவிஷயம்) உனக்குத்தெரிந்தால் எனக்குச் சொல்' என்றான். ஸத்யவான், 'மூன்றுவர்ணங்களான எல்லோர்களுமே பிராம்மணர்களுக்கு அடங்கினவர்களாகச் செய்யத்தக்கவர்கள். தர்மபாசத்தினால் கட்டுண்டவர்களுள் அற்பனுங்கூட அபராதத்தைச் செய்யமாட்டான். அவர்களுள் எவனெவன் அபசாரத்தைச் செய்தானோ அவனவனை அந்தணன் அரசனிடத்தில், 'இவன் என்சொல்லைக் கேட்கவில்லை' என்று சொல்லவேண்டும். உடனே அரசன் அவனுக்கு (சிக்ஷையை) விதிக்கவேண்டும். [1]அதிலும் சரீரநாசமில்லாத சிக்ஷையே செய்யத்தக்கது. குற்றங்களையும் நீதிசாஸ்திரத்தை

---

1 வேறுபாடம்.

யும் விதிப்படி நன்குஆலோசியாமல் வேறாவிதமான (வதமானது) செய்யத்தக்கதன்று. அரசன் திருடர்களையும் குற்றமில்லாதவர்களான பலரையும் கொல்லுகிறான். கொல்லப்பட்ட அந்தமனிதன்மூலமாக அவனுடையமனைவியும் தாயும் தந்தையும் புத்திரனும் கெடுக்கப்படுகிறார்கள். ஆகையால், பிறன் குற்றஞ்செய்தபோது அரசன் சிக்ஷையை நியாயமாகச் செய்யவேண்டும் கெட்டமனிதன்கூட ஒரு ஸமயம் நல்லவனுடைய ஒழுக்கத்தையும் அடைகிறான். நீசயோகவிடத்தினின்றும் நல்லஸந்ததியும் உண்டாகிறதன்றோ? ஆகையால், மூலநாசமானது செய்யத்தக்கதில்லை இது ஸநாதனமான தர்மமாகாது பயமுறுத்தல், சிறைசெய்தல், அங்கபங்கமுதலானவைகளால் வதமில்லாமலே சிக்ஷையானது விதிக்கப்பட்டிருக்கிறது புரோகிதர்களுடையஸபையில் அந்தத்திருடர்கள் கொலையானாலும் சிக்ஷையால் கிலேசப்படுத்தத்தக்கவர்களில்லை அந்தத்திருடர்கள் புரோகிதரைச் சரணமாகக்கூறி, 'ஓ! பிராம்மணரே! இனிமேல் நாங்கள் ஒருபாவமுஞ்செய்யவில்லை' என்றுசொல்லிக்கொண்டு அடைகிறபொழுது அவர்களை விட்டுவிடவேண்டுமென்று பிரம்மாவின் ஆஜ்ஞை தண்டம், மான்தோல் இவைகளைத்தரித்துக்கொண்டு முண்டிதனாயிருக்கிற பிராம்மணஸந்யாஸியும் (குற்றஞ்செய்தால்) சிக்ஷைக்குத்தக்கவனாகிறான். பெரியவர்களும் அடிக்கடி குற்றஞ்செய்தால் பெரிய சிக்ஷையை அடையவேண்டும் முதல்தடவையிலேபோல விடத்தக்கவர்களல்லர்' என்றுசொன்னான். த்யுமத்ஸேனன், 'எந்தஎந்தஸமயத்தில் குடிகளைச் சிக்ஷிப்பது தக்கதாகுமோ, எவ்வளவுஎவ்வளவுசிக்ஷை குற்றத்தின் அளவுக்கு அதிகப்படாமலிருக்குமோ அந்த அந்தஸமயத்தில் அவ்வளவு அவ்வளவு சிக்ஷை தர்மமாகச் சொல்லப்படுகிறது கொல்லத்தக்கவர்களைக் கொல்லாவிட்டால் எல்லாருமே அவமதிப்பார்கள். முன்னோர்களும் அவர்களுக்கு முன்னோர்களும், மென்மைக்குணமுள்ளவர்களும் மிகுந்தஸத்யஸந்தர்களும் அற்பதுரோகமும் அற்பகோபமுமுள்ளவர்களுமாயிருந்தமையால் எளிதில் சிக்ஷிக்கக்கூடியவர்களாயிருந்தார்கள் முதலில் [1]'திக்' என்கிற சொல்லே சிக்ஷையாயிருந்தது பிறகு, வாயால்வைதல் சிக்ஷையாயிருந்தது. அதன்பிறகு; பொருளை வாங்குதல் சிக்ஷையாயிற்று. இப்பொழுது கொலையானது சிக்ஷையாயிருக்கிறது சிலஜனங்களை வதத்தினால்கூடத் திருத்தமுடிகிறதில்லை வேதமானது, 'திருடன் மனுஷ்யர்களுக்கும் நல்லவனல்லன்; தேவர்களுக்கும் நல்லவனல்லன்;

---

1 'சீ' என்பதுபோன்ற நிந்தைமொழி.

கந்தர்வர்களுக்கும் பித்ருக்களுக்கும் நல்லவனல்லன்' என்று சொல்லு கிறது யார் யாரைச்சேர்ந்தவன்? ஒருவனும் (ஒருவனையும்) சேர்ந்தவ னல்லன். திருடன் மயானத்திலிருந்து பக்குவமானபண்டத்தைக்கூட எடுத்துக்கொள்ளுகிறான்; பிசாசுகளையும் தெய்வமாகக் கொண்டாடு கிறான் கெட்டபுத்தியுள்ள அந்தத்திருடர்கள்விஷயத்தில் எவன் ஒருவிதநியமம்செய்வான்?' என்றுசொன்னான் ஸத்யவான், 'அந் தத்திருடர்களைக் கொல்லாமலே ஸாதுக்களாகச்செய்து காப்பதற் குக் கூடாவிட்டால் ஏதாவது ஒருபூதபயமென்கிற யாகத்தைச் செய்யவிரும்பி அவர்களின்கொலையைச் செய் [1]அரசர்கள் உலகம் நடப்பதற்காக மிகச்சிறந்ததவத்தைச் செய்கிறார்கள். அப்படிப் பட்டஅரசர்களிடமிருந்தும் அவர்கள் லஜ்ஜையை அடைகிறார்கள்; நடுங்கும்படிசெய்யப்பட்டு அவர்களைப்போலத் தவமுடையவர்களு மாகிறார்கள் ஸுக்ருதமுடையவர்கள் காமத்தினாலே தீயசெய்கை யுள்ளவர்களை ஹிம்ஸிக்கிறதில்லை. அரசர்கள் ஸுக்ருதத்தினாலேயே மிகவும் பிரஜைகளைச் சிக்ஷிக்கிறார்கள். இவ்விதமிருந்தால் உலகம் மேன்மேலும் நன்மையைக்கொடுக்கக்கூடிய ஒழுக்கத்தை அடையும்' என்றுசொன்னான் த்யுமத்ஸேனன், 'தன்னை ஸமாதானஞ்செய்து கொள்ளாமல் பிறரைஸமாதானஞ்செய்யநினைக்கிறவனும் விஷயங் களிற்செல்லுகிற இந்திரியங்களுக்குவசமாயிருக்கிறவனுமானவனை மனிதர்கள் பரிகாஸம்செய்கிறார்கள். டம்பத்தாலுண்டானமோஹத் தால் அரசனுக்கு அனுசிதமானகாரியத்தைச்செய்கிறவன்எல்லாஉபா யங்களாலும் சிக்ஷிக்கத்தக்கவன். அப்படியானால் அவன் அந்தப பாவத்திலிருந்தும் விடுபடுவான் கெட்டசெய்கையுள்ளவனை அடக்க வேண்டுமென்கிற எண்ணமுடையவன் முதலில் தன்னையே அடக்கிக் கொள்ள வேண்டும். தனக்கு நெருங்கின பந்துக்களைக்கூடப் பெரிய சிக்ஷைகளால் சிக்ஷிக்கவேண்டும் லோபத்தாலுண்டான மோகத் தால் ஏதாவது அயோக்யத்தனத்தைச்செய்கிறஅரசனும் எல்லாஉபா யங்களாலும் அடக்கத்தக்கவன். அப்படி அடக்கினால் அவன் அந் தப்பாவத்திலிருந்தும் விடுபடுவான். எந்தத்தேசத்தில் பாவத்தைச் செய்கிறஇழிந்தவன் பெரியதுக்கத்தையடையவில்லையோ அந்தத் தேசத்தில் பாவங்கள் விருத்தியடைகின்றன தர்மமும் குறைகிறது

---

1 'அரசர்கள் தம்ராஜ்யத்தில் திருடர்களிருப்பதற்காக லஜ்ஜையை அடை கிறார்கள். அதற்காகவே அவர்கள் தவம்செய்கிறார்கள். அரசனிடமுள்ள பயத் தினால் குடிகள்நல்லவர்களாகிறார்கள். அரசர்கள் தீமைசெய்பவர்களைத் தம்விரு ப்பத்திற்காகக் கொல்வதில்லை' என்பது பழைய உரை.

நிச்சயம். இவ்விதம் கருணைசீலரும் வித்வானுமான ஒருபிராம்மணர் எனக்கு உபதேசித்தார் அப்பா! இப்படியே முன்னோர்களான பிதாமஹர்களும் எனக்குச் சமாதானஞ்செய்து மிகவுங்கருணையினால் உபதேசித்தார்கள் அரசன் இந்தப்பூமண்டலத்தைக் கிருதயுகத்தில் முந்தினகல்பத்தினாலே (அதாவது திக்தண்டத்தினாலே) ஜயிக்க வேண்டும் திரேதாயுகத்தில் ஒருபாதம்குறைந்த தர்மத்தினாலேயாவது நடக்கவேண்டும் துவாபரயுகத்தில் இரண்டுபாதத்தோடு கூடின தர்மத்தோடாவது நடக்கவேண்டும் இழிவான கலியுகத்திலோவெனில் கால்பங்குதர்மத்தாலாவது நடக்கவேண்டும் கலியுகமுண்டானபிறகு அரசனுடைய கெட்டஒழுக்கத்தாலும் காலவிசேஷத்தாலும் தர்மத்தின்பதினாறிலொருபாகமிருக்கும் ஓ! ஸத்யவானே! அலைது முதல்கல்பத்தினாலும் தர்மத்திற்குக் கலப்புஉண்டாகுமானால் ஆயுளையும் சக்தியையும் காலத்தையும் பார்த்துச சிக்ஷையை விதிக்க வேண்டும் தர்மத்தின்பெரிதானபலமானது ஸத்யத்தைக்கைவிடாதபடி செய்யவேண்டுமென்று பிராணிகளிடமுள்ள அருளால் ஸ்வாயம்புவமனு சொன்னார்' என்றுகூறினன் " என்றுசொன்னார்

---

## இருநூற்றெழுபத்துநான்காவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

**(பசுவைக்கொல்லாமல் யாகம்செய்யவேண்டுமென்பதைப்பற்றிக் கபிலருக்கும் ஸ்யூமரஸ்மிக்கும் நடந்தஸம்பாஷணை.)**

யுதிஷ்டிரர், "ஓ! பிதாமஹரே! பிராணிகளுக்குவிரோதமில்லாதஸன்யாஸமானது (ஐஶ்வர்யம், ஞானம், கீர்த்தி, சாந்தி, வைராக்யம், தர்மம்என்றுசொல்லப்பட்ட)ஆறுகுணங்களுடையஸமூகத்தைச் செய்கிறது (1ஹிம்ஸையுள்ளதும்ஹிம்ஸையில்லாததுமாகிய) இரண்டையும் அடைந்ததர்மங்களை எனக்குச சொல்லும் பிதாமஹரே! (ஒரேபயனுக்குக் காரணமானதால்) ஒன்றுக்கொன்று நெருங்கினவைகளாயிருக்கிற கிருகஸ்ததர்மம் யோகதர்மம் இவ்விரண்டிலும் எது சிறந்தது?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"இரண்டுதர்மங்களும் பெரியபாக்கியத்தினாலே உண்டாகின்றன. இரண்டும்அனுஷ்டிக்க ப்ரமமுள்ளவைகள் இரண்டும் பெரும்பயனை அளிப்பவைகள். இரண்டும் பெரியோர்களால்ஆசரிக்கப்பட்டிருக்கின்

---

1' இல்லறம் துறவறம்' என்றும்சொல்லலாம்.

றன. அப்படிப்பட்ட இவ்விரண்டினுடைய பிராமாண்யத்தையும் உனக்குச் சொல்லுகிறேன். ஓ! குந்தியின்புத்ர! தர்மார்த்தங்களில்ஸந்தேகம்நீங்கும்படி ஒரேமனத்துடன் கேட்கக்கடவாய் இந்தவிஷயத்திலும் கபிலமுனிவருக்கும் ஒருகோவுக்கும் நடந்தஸம்வாதமான பழையஇதிஹாஸத்தைச சொல்லுகிறார்கள ஓ! யுதிஷ்டிர! அதை அறியக்கடவாய். முன்காலத்தில நஹுஷனென்பவன் பழமையானதும் அழிவற்றதும் உறுதியுள்ளதுமான ஆம்நாயத்தைக் கவனித்துக் கொண்டு த்வஷ்டாவுக்காகக் கோவை [1]ஆலம்பனஞ்செய்தானென்று நாம் கேட்டிருக்கிறோம் அந்தபபடி ஹிம்ஸையில் உபயோகிக்கப் பட்ட அந்தக்கோவை நலலசித்தமுடையவரும் ஸத்வகுணம்பொருந்தியவரும் தியானத்திலபற்றுள்ளவரும் ஞானவானும் ஆஹாரநியமமுள்ளவருமான கபிலமுனிவா பார்த்தார் சிறந்ததும் நிஷ்டைபொருந்தியதும் ஓரிடத்திலும் பயமற்றதுமான புத்தியையுடைய அந்தக் கபிலமுனிவர் அப்பொழுது, "வேதங்களே!" என்று நீனமானஸ்வரத்தோடுகூடிய ஸத்யமானவாக்கியத்தை ஒருமுறை சொன்னார் ஸ்யூமரச்மியென்கிறமுனிவர் அந்தப்பசுவினுள்புகுந்து கபிலரைநோக்கி, 'ஆச்சரியம்! வேதங்கள்நிந்திக்கபபடுமானால மற்றத்தர்மங்கள் எதனால் ஒபபுக்கொளளப்படும்? தைரியசாலிகளும் வேதஜ்ஞானமாகிற கண்ணுள்ளவர்களுமான முனிவர்கள் எல்லாவேதத்தையும் எந்நாளும் ஆத்மஜ்ஞானமுளள ஈச்வரருடையவசனமாக நினைக்கிறார்கள் பயனில ஆசையற்றவரும் விருபபுவெறுப்பில்லாதவரும் ஒருவிஷயத்திலும் முயற்சியிலலாதவருமான ஈச்வரருக்கு வேதங்களில இப்படிச் சொல்லவேண்டுமென்கிற எண்ணமானது ஏது?' என்றுசொன்னார் கபிலர், 'நான் வேதங்களை நிந்திக்கவில்லை; ஒருவிஷயத்திலும் விஷமமாகபபேசவுமில்லை தனித்தனியாயிருக்கிற ஆச்ரமிகளுடையகர்மங்கள் ஒரேபயனுடையவைகளென்று நமக்குக்கேள்வி ஸன்யாஸியும் உத்தமகதியை அடையவேசெய்கிறான்; வானபரஸ்தனும் அடைகிறான்; கிருகஸ்தன பிரம்மசாரி இவவிருவரும் அடைகிறார்கள் தேவயானங்களென்கிற அழியாதமார்க்கங்கள (இவவிதம்) நான்காக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின்றன இவைகளுக்குப பயன்விஷயத்தில் பலாபலரூபமான உயர்வும் தாழ்வும் சொலலபபட்டிருக்கின்றன இவ்விதமறிந்துகொண்டு எல்லாவிஷயங்களையும் தொடங்கவேண்டுமென்று ஒருவேதவசனமிருக்கிறது மற்றோரிடத்தில் ஒன்றையும் தொடங்கவேண்டாமென்று நிஷ்டையைத்தெரிவிக்கிற வேதவாக்கிய

---

[1] தர்மத்திற்காக ஏற்படுகிற பசுஹிம்ஸை.

மானது கேட்கப்படுகிறது. ஆனால், ஆரம்பியாதவிஷயத்தில் தோஷ மில்லையென்பது ஸித்தம். ஆரம்பித்தலில் பெரியதோஷம் ஏற்படு கிறது. இவ்விதமிருக்கிறசாஸ்திரத்தின் பலாபலம் அறியக்கூடியதா யில்லை. இந்தவிஷயத்தில் வேதசாஸ்திரங்களைவிட்டுக் கொல்லாமை யைக்காட்டிலும் மேலானதென்று ப்ரத்யக்ஷமாக ஒப்புக்கொள்ளப் பட்டதர்மமொன்று இருந்தால் அதை அறிவீரானால் சொல்லும்' என்று சொன்னார். ஸ்யூமரச்மி, 'ஸ்வர்க்கத்திலிருப்பமுள்ளவன் யாகஞ் செய்யவேண்டுமென்று எப்பொழுதும் வேதம் கூறுகிறது. முன் னமே பயனையேற்படுத்தியன்றோ யாகமானது விதிக்கப்பட்டிருக் கிறது? வெள்ளாடு, குதிரை, செம்மறியாடு, கோ, பக்ஷிக்கூட்டங்கள், கிராமத்திலுண்டான ஓஷதிகள், வனத்திலுண்டான ஓஷதிகள் இவைக ளெல்லாம் பிராணனுக்கு ஆகாரமென்று வேதம் கூறுகிறது. அப் படியே ஒவ்வொருநாளும் காலையிலும் மாலையிலும் அன்னமானது தேடப்படுகிறது. பசுக்களும் தான்யமும் யாகத்திற்கு அங்கமென்று வேதம் சொல்லுகிறது. பிரம்மா இவைகளை யஜ்ஞத்தோடு படைத் தார். அந்தயாகத்தினாலே பிரபுவான அவர் தேவர்களைப் பூஜித்தார். ஆகையால், ஏழுவகையாயிருக்கிற (யாகஸாதனமான) பிராணிகளெல் லாம் ஒவ்வொன்றும் மேலானவைகள். கோ, ஆடு, மனிதன், நாய், குதிரை, கோவேறுகழுதை, கழுதை இந்த ஏழுபசுக்களும் ஸாதுக்களாலே க்ராம்யங்களென்று சொல்லப்படுகின்றன. ஸிம்மம், புலி, பன்றி, எருமைக்கடா, யானை, மான், முள்ளம்பன்றி இந்த ஏழும் ஆரண்யங்களாக நினைக்கப்படுகின்றன. யாகங்களிலுபயோ கிக்கப்பட்டவையெல்லாம் உத்தமமென்று பெயர்பெற்றவையாகச் சொல்லுகிறார்கள். இதுதானே முன்னோர்களாலும் அவர்களுக்கும் முந்தினவர்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. தன்னுடைய சக்தியையறிந்தவனெவன்தான் பிராணிகளை ஒருபோதும் தொடா மலிருப்பான்? யாகத்தில் உபயோகிக்கப்பட்ட பசுக்களும் மனுஷ்யர்க ளும் ஓஷதிகளும் விருக்ஷங்களும் ஸ்வர்க்கத்தையே* அடைகின்றன. யாகத்தைவிட்டால் உனக்கு ஸ்வர்க்கமில்லை. ஓஷதிகள், பசுக்கள், விருக்ஷங்கள், கொடிகள், நெய், பால், தயிர், ஹவிஸ், பூமி, திக்குக் கள், ச்ரத்தை, காலம் இவைகள் பன்னிரண்டும், ருக்கு, யஜுஸ், ஸாமம், ரித்விக்குக்கள்,' இவைகள் சேர்ந்து பதினாறு ஆகின்றன. அக்னி, கிருகபதியாக அறியத்தக்கது. அது பதினேழாவதாகச் சொல்லப்படுகிறது. இவைகள் யஜ்ஞத்திற்கு அங்கங்கள். யஜ்ஞம்

* 'அபிகாங்க்ஷந்தே' என்பது மூலம்.

மூலமென்று வேதம் சொல்லுகிறது. கோவானது நெய், பால், தயிர், கோமயம், ஆடை, தோல, வால்கள், கொம்பு, கால் இவைகளால் யாகத்தை நிறைவேற்றவே செய்கிறது. இவ்விதம் யாகத்திற்கு விதிக்கப்படுகின்றவையெல்லாம் ஒவ்வொன்றும் ரித்விக்குக்களோடும் தக்ஷிணைகளோடும் சேர்ந்து யஜ்ஞத்தை நிறைவேற்றவே செய்கின்றன இன்னமும் இவைகளெல்லாம் சேர்ந்தும் யஜ்ஞத்தை நிறைவேற்றுகின்றன. யாகங்களுக்காகவன்றோ இவைகள் படைக்கப்பட்டன? அந்தப்படி உண்மையாகவே வேதம் கூறுகிறது இப்படியே முன்னோர்களுக்கும் முன்னோர்களான மனிதர்களெல்லாரும் செய்திருக்கிறார்கள். எவன் பலத்தை விரும்பாமல் யாகங்களால் ஆராதிக்கவேண்டுமென்று யாகம் செய்கிறானோ அவன் 'ஒன்றையும் ஹிம்ஸிக்கிறவனும் ஆரம்பிக்கிறவனும் துரோகம்செய்கிறவனுமாகிறதில்லை இவைகளெல்லாம் விதிவாக்கியத்தால யாகாங்கங்களாகவே உள்ளபடி சொல்லப்பட்டிருந்தாலும் விதியில் சேர்ந்தவைகளாகி ஒன்றையொன்று காரியப்படச் செய்கின்றன காமகாண்டங்களை நிலைநிறுத்துகின்ற மஹரிஷியான பரமேஸ்வரரால் வெளியிடப்பட்ட ஆம்னாயத்தை (பிரத்யக்ஷாபிரத்தியக்ஷ சுருதிஸமுதாயத்தை) நான் அறிகிறேன். வித்வான்கள் பிராம்மணத்தை ஆராய்ந்து பார்த்து அந்த ஆம்னாயத்தைக்கண்டு நிச்சயிக்கிறார்கள யஜ்ஞம் பிராம்மணத்தில விதிக்கப்பட்டது; பிராம்மணர்களுக்கு அர்ப்பணம் செய்யப்பட்டது எப்பொழுதும் உலகமுழுமையும் யாகத்தை அடுத்திருக்கிறது யாகமும் உலகத்தை அடுத்திருக்கிறது வேதத்திற்குக்காரணமான ஓம என்பதையும், நம:, ஸ்வாஹா, ஸ்வதா, வஷட் இவைகளையும் (யாகத்தை) தன் சக்திக்குத் தக்கபடி செய்தாவது அதில் பிரயோகிக்கிறவனுக்கு மூன்று உலகங்களிலும் பரலோக பயத்தைப் பெரியோர்கள் நினைக்கிறதில்லை' என்று வேதங்கள் சொல்லுகின்றன; இவ்வுலகத்தில ஸித்தர்களான பரமரிஷிகளும் சொல்லுகிறார்கள். எவனிடத்தில் விதிவாக்கியத்தினால விதிக்கப்பட்ட ருக்கு, யஜுஸ், ஸாமம், ஸ்தோத்திரம் இவைகளெல்லாமிருக்கின்றனவோ அவனே இவ்வுலகில இருபிறப்புடையவனாவான். ஓ! பிராம்மணரே! அக்கினியாதானத்தில எதுஉண்டாகிறதென்றும் ஸோமயாகத்திலும் எது உண்டாகிறதென்றும் மற்றமஹாயாகங்களாலும் எது உண்டாகிறதென்றும் அறிவுள்ளவரான நீரே அறிகிறீர். ஓ! பிராம்மணரே! ஆகையால், யோசிக்காமல் யாகம் செய்யவும் வேண்டும்; செய்விக்கவும் வேண்டும் யாககர்மத்தினால் பூஜிக்கிறவனுக்கு மரணத்திற்

குப் பிறகு பெரிதான ஸ்வர்க்கபலம் உண்டாகிறது. யாகஞ்செய்யாதவர்களுக்கு இவ்வுலகமும் இல்லை; பரலோகமும் இல்லையென்பது நிச்சயம். வேதத்திலுண்டான அர்த்தவாதத்தை அறிந்தவனுக்கே அப்பொழுது (யாகஞ்செய்தவனுக்கு ஸ்வர்க்கபலம் யாகஞ்செய்யாதவனுக்கு ஸ்வர்க்கபலம்இல்லை என்று) இவ்விரண்டும் பிரமாணமாகும்' என்றுசொன்னர்

---

## இருநூற்றெழுபத்தைந்தாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

(கபிலருக்கும் ஸ்யூமரஸ்மிக்கும் நடந்தஸம்பாஷணைத்தொடர்ச்சி)

கபிலர், 'இவைகளையும் ஆராய்ந்து பார்க்கிற துறவிகள் ஞானமார்க்கத்தை அடைந்து (மோக்ஷத்தை) அடைகிறார்கள். அவர்களுக்கு எல்லா உலகங்களிலும் ஒருதடையுமில்லை வித்வான்கள் (ஸுகதுக்கமுதலிய) த்வந்த்வமில்லாதவர்களும (ஒருவரையும் ஒருவிதமான காரியத்திற்காகவும்) வணங்காதவர்களும் ஸங்கற்பங்களுடைய ஸம்பந்தமில்லாதவர்களும் உள்ளும் புறமும் சுத்தர்களும் எல்லாபபாவங்களிலிருந்தும் விடுபட்டவர்களுமாகி ஸஞ்சரிக்கிறார்கள். மோக்ஷத்தையும் ஸந்நியாஸத்தையும் புத்தியில் நிச்சயம் பண்ணுகிறவர்களும் பிரம்மத்தையே தியானஞ்செய்கின்றவர்களும் [1]பிரம்மத்தையே இருப்பிடமாகவுடையவர்களும் பிரம்மமானவர்களும் (அதனால் தமோகுணத்தின் காரியமான) சோகமில்லாதவர்களும் ரஜோகுணமில்லாதவர்களுமாயிருக்கிறவர்களுக்கு நித்யஸித்தமான உலகங்கள் ஏற்படுகின்றன உத்தமமான கதியை அடைந்த அவர்களுக்கும் கிருகஸ்தாச்ரமத்தில என்னபயனிருக்கிறது?' என்றுசொன்னர். ஸ்யூமரஸ்மி, 'இவர்களுக்குப பரமநிஷ்டை இருக்குமானல் இவர்களுக்கே பரமகதி உண்டாகுமானல(ஒருவிதபாரிவிருத்தியும் மற்ற ஆச்ரமத்திலில்லாதபடியால) கிருகஸ்தர்களை அடுக்காமல் ஓராச்ரமமும் நடக்கிறதில்லை. எல்லாபபிராணிகளும் தாயைபபடுத்து ஜீவிக்கின்றதுபோல மற்றஆச்ரமங்கள்கிருகஸ்தாச்ரமத்தை அடுத்துக்கொண்டிருக்கின்றன கிருகஸ்தன் தான் யாகஞ்செய்கிறன். கிருகஸ்தனே தவஞ்செய்கிறன். எவ்வளவு தர்மங்கள் இருக்கின்றனவோ அவ்வளவு தர்மங்களுக்கும கிருகஸ்தாச்ரமமே மூலம் முனிவரே!

---

1 'முனே' என்று பாடம் கொள்ளப்பட்டது.

எல்லாப்பிராணிகளும் உற்பத்திமுறையில் உண்டாயிருக்கின்றன. அதானது மற்ற ஆப்ப்ரமத்தில் சிறிதும்இல்லையன்றோ? ஓஷதிகளுக்கு வெளிப்பட்டு ஒருபிராணியும் இல்லாத காரணத்தினால் [1]புல்லுகள் ஓஷதிகள், வெளியிலும் மலையிலுமுண்டான மற்றச செடி கொடி முதலான எல்லாவற்றிற்கும் [2]கிருகஸ்தாப்ரமமே மூலம் கிருகஸ் தாப்ரமத்தினால் மோக்ஷமானது கிடையாதென்கிற எவனுடைய வார்த்தைதான் ஸத்யமாகும்? ப்ரத்தையற்றவர்களும் அறிவீனர்களும் ஸூக்ஷ்மமான ஆலோசனையில்லாதவர்களும் சோம்பேறிகளும் (அதனால்) ஒன்றிலும் ஆசையில்லாதவர்களும் ப்ரமத்தையடைந்தவர்களும் தங்கள் பாவச்செய்கையால (கூன்குருடர்களாகிய) கஷ்டத்தை அடைந்தவர்களுமான அவித்வான்களால் சாந்திக்குக்காரணமானஒழிவானது ஸந்யாஸத்திலென்று நினைக்கபபட்டிருக்கிறது. மூன்றுஉலகங்களுக்குமே [3]காரணமும் அனுதியும் ஸ்திரமும் எல்லையும் பகவானுமானபிராம்மணன் பிறந்ததுமுதல் பூஜிக்கபபடுகிறான். முதலிலேயே த்விஜர்களிடம் கர்பபாதானமந்திரங்கள பிரவ்ருத்திக்கின்றனவல்லவா? வேதமந்திரங்கள் வேதமின்றிநிசசயிக்கமுடியாதவைகளான ஸ்வர்க்கமுதலானவைகளிலும் (மழைமுதலான) பிரத்யக்ஷமானவிஷயங்களிலும் பற்றிக்கொண்டிருக்கின்றன; பித்ருக்களுடன்சேர்ப்பதற்காக ஏற்பட்டசரீர தகனத்திலும்சேர்ந்தபிறகுஉண்டான தர்ப்பணப்ராத்தங்களிலும் கோதானம், விருஷபத்தினுத்ஸர்ஜனம், ஜலத்தில் பிண்டங்களைக்கரைத்தல் இவைகளிலும் பிரவருத்திக்கின்றன. அர்சிஷ்மான்கள், பர்ஹிஷத்துக்கள், கிரவ்யாத்கள் முதலானபித்ருக்களும்மந்திரங்களும்மரணத்தை அடைந்தவனுடைய (தகனம்முதலானவற்றை) ஸம்மதிக்கிறாகள் அவைகளுக்கு மந்திரங்கள் காரணம். இவவிதம் வேதங்கள் முறையிடுகையில ஒருவனுக்கு மோக்ஷமானது எதனாலஉண்டாகிறது? மனுஷ்யர்கள், பித்ருக்கள், தேவர்கள், அதிதிகள், இவர்கள்விஷயத்தில் கடன்காரர்களாயிருப்பதால் தனமற்றவர்களும் சோம்பேறிகளுமானபண்டிதர்களால் வேதத்திலுண்டானஆத்தவாதத்தினுடைய உண்மைஅறிவில்லாமல் ஸத்யம்போல [4]ஏற்படுத்தப்பட்டமோக்ஷமானது பொய்யாகும். வேதசாஸ்திரங்களைக்கொண்டு யாகம்செய்கிறபிராம்மணன் பாவங்களால்

---

1 வேறுபாடம்.

2 கிருகஸ்தத்ர்மத்தால் மழைபெய்து புல்பூண்டுகள் உண்டாகின்றன என்பது கருத்து.

3 வேறுபாடம். 4 வேறுபாடம்.

பற்றப்படுகிறதில்லை ; (நரகத்திற்கு) இழுக்கப்படுகிறதுமில்லை. யாகஞ் செய்கிறவன் பசுக்களுடன் உயர்ந்தகதியை அடைகிறான். பிறகு, மறுபடி காமங்களை நினைக்கிறதில்லை. புருஷன் வேதங்களை அவமதித்தலினாலும் வஞ்சனையினாலும் மாயையினாலும் பெரியகதியை அடைகிறதில்லை. [1]பிராம்மணன் பிரம்மத்தை அடைகிறான்' என்று சொன்னார். கபிலர், 'புத்திமான்களுக்கு, தர்சயாகம் பூர்ணமாஸயாகம் அக்னிஹோத்ரம் சாதுர்மாஸ்யம் இவைகளெல்லாம் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளில் ஸனாதனமான [2]தர்மமானது இருக்கிறது. ஒருவிதமானமுயற்சியுமில்லாதவர்களும் நல்லதைரியமுடையவர்களும் உள்ளும்புறமும் சுத்தர்களும் பிரம்மஜ்ஞானமுடையவர்களுமான அந்தப் பிராம்மணர்களே தேவதைகளை அமிருதங்கள் திருப்திசெய்வதுபோலத் திருப்திசெய்கிறார்கள். எல்லாப்பிராணிகளுக்கும் ஆத்மாவானவனும் எல்லாப்பிராணிகளையும் (ஒன்றுபோலப்) பார்க்கிறவனும் சலனமில்லாதவனும் பிரம்மத்தைவிரும்புகிறவனுமான வித்வானுடையமார்க்கத்தில் தேவர்களுங்கூட மோகத்தை அடைகிறார்கள். கைகள்முதலான நான்குதுவாரங்களையுடையவனும் சரீரம், இந்திரியம், மனம், புத்தி என்கிற [3]நான்குமுகங்களையுடையவனுமானபுருஷனை [4]வேதவாக்யத்தால் விராட், ஹிரண்யகர்ப்பன், அந்தர்யாமி, சுத்தமென்கிற நான்குவிதமாக ஜீவன் அடைகிறான். கைகளும் வாக்கும்உதரமும்குறியும்அந்தத்தேவர்களுக்கு வாயில்கள் அந்தவாயில்களைக் காக்கவிரும்பவேண்டும். புத்திமானானவன் சொக்கட்டான்காய்களால்விளையாடக் கூடாது ; பிறனுடையபொருளைக் கவரக்கூடாது; உறவினனல்லாதவனுடையஹவிஸைக் கிரகிக்கக்கூடாது ; (அதாவது, அவனுக்குயாகம் செய்விக்கக்கூடாது;) கோபத்தையடைந்து ஒருவரையும் அடிக்கவே கூடாது. அப்படியிருந்தால், இவனுடைய அந்தக்கால்கைகள் நன்கு ரக்ஷிக்கப்பட்டனவாகும் கடுஞ்சொல் சொல்லக்கூடாது. வீண்வார்த்தை சொல்லக்கூடாது கோள்சொல்லக்கூடாது. ஜனங்களைக் குறித்து அபவாதம் சொல்லக்கூடாது. ஸத்யத்தையே விரதமாகக் கொள்ளவேண்டும். அஜாக்ரதையில்லாமல் மிதமாகப் பேசவேண்டும். அப்படியானால் அவனுடையவாக்கு நன்கு காக்கப்பட்டதாகும். ஆகாரம்செய்யாமல் இருக்கக்கூடாது அதிகஆகாரம்செய்யவும் கூடாது. ஜிஹ்வாசாபல்யமில்லாமலிருக்கவேண்டும் பெரியோர்க

1 வைதிககர்மாவைச் செய்பவன். 2 வேறுபாடம்.
3 யோகஸாதனங்களை. 4 வேறுபாடம்.

னால் ஆகாரத்திற்காக அடையப்பட்டவனாக இருக்கவேண்டும். சரீர யாத்ரைக்குவேண்டியஆகாரத்தை அடையவேண்டும். அப்படியானால் அவனுடையஉதர்வாயில்நன்குகாக்கப்பட்டதாகும். பிறன்மனைவியை விரும்பக்கூடாது. ருதுவில்லாதகாலத்தில் தன்ஸ்திரீயையும் அழைக்கக்கூடாது. 1தான் பத்நீவிரதமுள்ளவனாக இருக்கவேண்டும். அவ்விதமானால் இவனுடையகுறி ரக்ஷிக்கப்பட்டதாகும். எந்தப்புத்திசாலியினுடையகுறி உதரம் கைகள் நான்காவதானவாக்கு இந்நான்குவாயில்களும் முழுதும் நன்குரக்ஷிக்கப்படுகின்றனவோ அவன்தான் இருப்பிறப்புடையவன். துவாரங்களைக்காப்பாற்றாதவனுக்கு எல்லாம் பயனற்றவை ஆகிவிடும். அவனுக்குத் தவத்தினால் என்ன பயன்? யாகத்தினால் என்ன பயன்? சரீரத்தினால்தான் என்ன பயன்? உத்தரீயமில்லாமல் ஒருவஸ்திரமுடையவனும் விரிப்பில்லாமல் சயனம் செய்கிறவனும் கைகளைத்தலையணையாகவுடையவனும் சமனத்தை அடைகிறவனுமானவனைத் தேவர்கள் பிராம்மணனாக நினைக்கிறார்கள் எல்லாரும் சீதோஷ்ணமுதலான த்வந்துவங்களில் களித்துக்கொண்டிருக்கும்பொழுது பிறருடைய (ஸுகதுக்கங்களை) நினையாமல் தனியாயிருந்து (ஆத்மாவில்) ஸுகித்துக்கொண்டிருக்கும் முனிவனைத் தேவர்கள் பிராம்மணனாக நினைக்கிறார்கள். காரணமும் காரியமுமான எல்லாப்பொருள்களையும் எல்லாப்பிராணிகளுடைய கதியையும் அறிந்தவனைத் தேவர்கள் பிராம்மணனாக நினைக்கிறார்கள். எவனுக்கு எல்லாப்பிராணிகளிடமிருந்தும் பயமில்லையோ, எவனிடமிருந்து எல்லாப்பிராணிகளுக்கும் பயமில்லையோ, எவன் எல்லாப்பிராணிகளுக்கும் ஆத்மாவாயிருக்கிறானோ அவனைத் தேவர்கள் பிராம்மணனாக நினைக்கிறார்கள். மனிதன் வேதங்களில் சொல்லப்பட்ட கர்மங்களுடைய (சித்தசுத்திரூபமான) பயனைப்பற்றி அறிகிறதில்லை. அதை முழுதும் அறியாமல் வேறுபயனை விரும்புகிறான். தம்கர்மாக்களுடன் பற்றிக்கொண்டிருப்பவர்களுடைய தவம் கோரமாகின்றது. மனிதர்கள் ஆச்சரியகரமும் அனாதியும் அவசியம் அனுஷ்டிக்கத்தக்கதும் நிச்சயமாய்ப் பயனைக்கொடுக்கிறதுமான அந்த ஸதாசாரத்தை அனுஷ்டிக்க இயலாதவர்களாயிருக்கிறார்கள். ஆகையால், தர்மங்களில் சிறிது குறிப்பிக்கப்பட்டிருக்கிறது. ஆபத்தர்மமில்லாமலும் அஜாக்ரதையில்லாமலும் விருப்பு வெறுப்புகளால்சூழப்படாமலுமிருக்கின்றது ஆசாரம்; கர்மங்களைப் பயனுள்

---

1விவாஹம்செய்துகொள்ளாதஸ்திரீகளை விலக்கவேண்டுமென்பது.

ளவைகளும் ஐச்வரியமுள்ளவைகளும் நிலையுள்ளவைகளும் குண மில்லாதவைகளும் அநேகங்களுமாக யார் பார்க்கமாட்டார்? அவை களுடையகுணங்கள் ஒருவராலும் சிறிதும் அறியக்கூடாதவை களாயிருக்கின்றன; அறியப்பட்டாலும் இப்பொழுது அநுஷ்டிக்க முடியாதவைகளாயிருக்கின்றன; அநுஷ்டிக்கப்பட்டாலும் அழி வுள்ளபயனை அளிக்கின்றனவென்று நீர் அறிகிறீர்' என்று சொன் னார். ஸ்யூமரச்மி, 'கர்மம் ஸந்யாஸம் என்ற இரண்டு மார்க்கங்களும் வெளிப்படையாயிருக்கின்றன. வேதம் பிரமாணமாவதும் ஸந்யாஸம் பயனுள்ளதாவதும் எவ்விதம்? பகவானே! அதை எனக்குச் சொல் லும்' என்றார். கபிலர், 'ஸன்மார்க்கத்திலிருக்கின்ற நீங்கள் பிரத்யக்ஷ த்தைக் கவனியுங்கள். நீங்கள் எதை அநுஷ்டிக்கின்றீர்களோ அதில் எது பிரத்யக்ஷமாயிருக்கின்றது?' என்றனர். ஸ்யூமரச்மி, 'ஓ! பிராம் மணரே! ஸ்யூமரச்மி என்கிற நான் தெரிந்துகொள்வதற்காக இவ்வி டம்வந்தேன்; க்ஷேமத்தைவிரும்பி மனவுண்மையினால் எதிர்த்துக் கேட்டேன்; வாதிக்கவேண்டுமென்கிறஎண்ணத்தினால் கேட்கவில்லை. இந்த அரியஸம்சயத்தை எல்லாமறிந்தநீர் எனக்குச் சொல்லவேண் டும் ஸன்மார்க்கத்திலிருக்கின்றநீங்கள் இந்தவிஷயத்தில் பிரத்யக்ஷத் தைப் பார்க்கின்றீர்கள். நீங்கள் அநுஷ்டிக்கிறதில் மிகவும்பிரத்யக்ஷ மாயுள்ளது எது? தர்க்கசாஸ்திரங்களுக்குவேறான ஆகமத்தின் அர்த் தத்தை ஆகமத்திலுள்ளபடி அறிகிறேன் வேதவாதங்களும் [1]ஆக மம்; தர்க்கசாஸ்திரங்களும் ஆகமம் ஆச்ரமத்திற்குத்தக்கபடி உபா ஸிக்கவேண்டும். அதில ஆகமம் ஸித்திபெறுகிறது. ஆகமத்தின் நிச்சயத்தினால் காரியஸித்தியானது பிரத்யக்ஷம்போலக் காணப்படு கிறது ஓ! வேதியரே! ஓடத்திலகட்டப்பட்டதும் வெள்ளத்தால் அந்தக்கட்டுடன் அடித்துக்கொண்டு போகப்பட்டதுமான மற்றோர் ஓடம்போல (குயுத்தியாகிறவெள்ளத்தால் ஆகமநிச்சயமாகிறமூலத் துடன்) இழுக்கப்படுகிறகாரியஸித்தியானது (அந்தக்) கெட்டபுத்தி யுள்ளவர்களை எப்படி கரையேற்றப்போகிறது? எல்லாமறிந்தநீர் இதைச் சொல்லவேண்டும். உம்மை அடைந்தவனாக இருக்கிறேன். எனக்கு உபதேசம்செய்யும் ஒருவனும் தியாகியாகவுமில்லை ஸந் தோஷமுடையவனாகவுமில்லை; சோகமில்லாதவனாகவுமில்லை; வியாதி யில்லாதவனாகவுமில்லை; அறியவிருப்பமில்லாதவனாகவுமில்லை; சோகத் தையற்றவனாகவுமில்லை; அழிவுள்ளவனாகவுமில்லை. நாங்கள் எப்படியோ

1 சாஸ்திரம்.

அப்படியே நீங்களும் ஸந்தோஷிக்கவும்செய்கின்றீர்கள்; துக்கிக்கவும்செய்கின்றீர்கள். உங்களுடைய இந்திரியவிஷயங்களும் எல்லா ஜந்துக்களிடமும் ஸமமாயிருக்கின்றன. இப்படிப்பட்டநான்குவர்ணங்களுடைய மார்க்கங்களிலும் நான்குஆஶ்ரமங்களுடையமார்க்கங்களிலும் சிறந்தஒன்றைஅடைகிறவர்களுக்கு முடிவில் எது குறைவற்றதாகும்? எல்லாமறிந்தநீர் இதை எனக்குச சொல்லவேண்டும். உங்களை அடுத்தவனாயிருக்கிறேன். ஓ! எனக்கு உபதேசம்செய்ய வேண்டும்' என்றார். கபிலர், 'இந்தவர்ணாஶ்ரமாசாரங்களில் எதை எதை ஆசரிக்கின்றானோ அந்தஎல்லாப்பிரவிருத்திகளிலும் சாஸ்திரம் பயனுள்ளதாகிறது எந்தஆஶ்ரமத்தில் எவனுக்கு அனுஷ்டானம் ஏற்படுகிறதோ அவனுக்கு அதுவே தோஷமில்லாததாயிருக்கிறது. எவன் ஞானவழியைப் பற்றுகிறானோ அவனுக்கு ஞானமானது எல்லாவற்றையும் அடைவிக்கிறது. ஞானத்தைவிட்டுவிலகியிருக்கின்றவிருத்தியானது பிரஜைகளை நாசஞ்செய்கிறது நீங்கள் எப்பொழுதும் ஞானமுள்ளவர்களாயிருக்கிறீர்கள்; எல்லாவற்றிலும் தோஷமில்லாதவர்களாயு மிருக்கிறீர்கள் (அனேகர்களில்) ஒருவனல்லவோ ஏகாத்மாவாயிருக்கும்தன்மையை ஒருபோது அடைகிறான்? சில ஜனங்கள் வாதத்தின்சாஸ்திரபலத்தினால சாஸ்திரத்தை உள்ளபடிஅறியாமல்விருப்புவெறுப்புக்களால்கவரபபட்டுஅகங்காரத்திற்கு வசமானார்கள்; சாஸ்திரங்களின்உண்மையைஅறியாமல் சாஸ்திரத்திருடர்களும் பிரம்மத்திருடர்களும் நன்முயறசியில்லாதவர்களும் பக்குவமில்லாதமனமுடையவர்களும் அமங்களமுள்ளவர்களுமாகிக் குணமில்லையென்றே நினைக்கின்றார்கள்; குணங்களை மற்றவர்களுக்கு உண்டுபண்ணுவதில்லை. அஜ்ஞானத்தையே சரீரமாகவுடைய அவர்களுக்கு அஜ்ஞானமே கதி. எந்த ஜந்துவானது எவ்விதஸ்வபாவமுள்ளதாயிருக்கிறதோ அது அந்தஸ்வபாவத்தினுடையவசத்தை அடையும். அதனுக்குப் பகை, விருப்பு, சினம், டம்பம், பொய், மதம்என்னும்குணங்கள் அந்தஸ்வபாவத்தினால்உண்டாகி எப்பொழுதும் அனுஸரிக்கின்றன ஸமாதியில்பற்றுதலுள்ளவர்களும் உத்தம கதியைவிரும்பினவர்களுமானயதிகள் அந்தபரம்மத்தைஅறிந்து தியானஞ்செய்து சுபாசுபங்களை விலக்கிக்கொள்ளுகிறார்கள்' என்றுசொன்னார். ஸ்யூமரஶ்மி, 'ஓ! பிராம்மணரே! உம்மால் சாஸ்திரப்படி இவைகளெல்லாம்சொல்லப்பட்டன சாஸ்திரத்தின்அர்த்தத்தைஅறியாமல் பிரவ்ருத்திகள் நடப்பதில்லை. நியாயமான ஆசாரமெல்லாம் சாஸ்திர

மென்று வேதம் கூறுகிறது. எது அந்யாயமோ அது அசாஸ்திர மென்றும் வேதம் கூறுகிறது. சாஸ்திரமின்றி ஒரு செய்கையும் இல்லையென்பது நிச்சயம் வேதவாதங்களுக்குவிலக்கானது அசாஸ் திரமென்று ஶ்ருதிசொல்லுகிறது. மிகவும் அகங்காரிகளான அனே கர்கள் சாஸ்திரத்திலிருந்துவிலகினதையே பார்க்கின்றார்கள் சிலர் இகத்திலும் பரத்திலும் ஏற்பட்டசாஸ்திரத்திலுள்ள தோஷங்களைப் பார்க்கிறதில்லை. இந்திரியவிஷயங்களும் உங்களுக்கும் ஸகலஜந் துக்களுக்கும் ஸமமாயிருக்கின்றன. இவ்விதம் நான்குவர்ணங்கள் நான்குஆஶ்ரமங்கள் ஆகிய இவைகளுடையபிரவிருத்திகளில்ஒன்றை அடைகின்றவர்களுக்கு முடிவில எல்லாவிதத்திலும் பயனுள்ளதென் பதைச்சொல்லுகிறவரும் ஸமர்த்தருமானஉம்மால விஜ்ஞானமில்லாத வர்களும் கெட்டஅறிவையுடையவர்களும் குறைவான அறிவுடைய வர்களும் தமோகுணத்தால வியாபிக்கபபட்டவர்களுமாயிருக்கின்ற நாங்கள் சித்தத்தால் வசீகரணஞ்செய்யப்பட்டோம் தனித்திருப்ப வனும் யோகத்தோடுகூடினவனும் எல்லாவிஷயத்திலும் ஸமர்த்த னும் சிறிதும் [1]பேசாதவனும் சக்தியுள்ளவனும் மனத்தைஜயித்த வனுமாயிருக்கிறவன் சரீரமாத்திரத்தை அவலம்பித்துக்கொண்டு எல்லாத்திக்கிலும் சஞ்சரிக்கவேண்டி வேதத்தின் அர்த்தவாதத்தை நம்பி மோக்ஷமானது இருக்கிறதென்று சொல்லத்தகும். நியா யம்சாஸ்திரமிவைகளைவிட்டவனும் ஸகலஜனங்களையும் தூஷிக்கின்ற வனுமாயிருக்கிறவனால் குடும்பத்தை ஆஶ்ரயித்தஇந்தக்கர்மம் செய்ய முடியாதது தானம், அத்தியயனம், யஜ்ஞம், பிரஜைகளுடைய உற்பத்தி, நேராயிருத்தல் இவைமுதலானவைகளைச் செய்துங்கூட ஒருவனுக்கும் மோக்ஷமானது இல்லையென்றிருக்குமானால் (அவை களைச்செய்கின்ற) கர்த்தாவையும் கர்மாவையும் நிந்திக்கவேண்டும். இந்தஶ்ரமமும் பயனில்லாததாகும். வேறுவிதமாக நாஸ்திக்கியம் ஏற்படும். வேதங்களும் விலக்கப்பட்டனவாகும். ஓ! ஸர்வஜ்ஞரே! இந்தக் கர்மாவினுநித்யமானபயனையளிக்கும்தன்மையை விரைவில் கேட்கவிரும்புகிறேன். பிராம்மணரே! எனக்கு உண்மையைச்சொல் லும். உம்மை நான் அடைந்தவனாயிருக்கிறேன் எனக்கு உபதே சிக்கவேண்டும். ஓ! பிராம்மணரே! உம்மைஅடுத்த எனக்கு உண் மையை உபதேசிக்கவேண்டும். நீர மோக்ஷத்தை அறிந்தவண்ணம் எனக்கும் கற்பிக்கவேண்டும்' என்றுசொன்னார்.

---

1 'வதமாநோ' என்று பாடம்கொள்ளப்பட்டது.

## இருநூற்றெழுபத்தாறுவது அத்யாயம்
## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



(கபிலருக்கும் ஸ்யூமரஸ்மிக்கும்நடந்த ஸம்பாஷணைத்தொடர்ச்சி.)

கபிலர், "வேதங்கள் உலகங்களுக்குப் பிரமாணம் வேதங்கள் விலக்கப்படுகிறதில்லை சபதப்ரம்மம் பரப்ரம்மம்என்னும் இரண்டு பரம்மங்களும் அறியத்தக்கவைகள் சப்தபரம்பத்திலஸமர்த்தனு யுள்ளவன் பரப்ரம்மத்தை அடைகின்றான் [1]வேதத்தில்சரீரத்தைஉப யோகப்படுத்துவதென்பதே இந்தச்சரீரத்தின் உபயோகம் சரீர சுத்தியுள்ளபிராம்மணனே பாத்ரனாகிறான் கர்மாக்கள் நித்யமான பயனளிப்பதைஆலோசித்து வேதமாத்திரத்தினால அறியமுடியாத தும் புத்தியால நிச்சயிக்கமுடியாததும் இந்திரியத்திற்குப்புலப் படாததும் எல்லாஜனங்களுடைய அனுபவத்தையும் ஸாக்ஷியாகக் கொண்டதுமான அப்பயனை உமக்குச சொல்லுகிறேன் எவர்கள் பயனில்விருப்பமில்லாமல் கர்மமென்றே யஜ்ஞங்களைச செய்கிறார் களோ அவாகள கிடைத்ததை உடனேசெலவுசெய்கிறவர்களும் லோபமில்லாதவர்களும் விருப்புவெறுப்பற்றவர்களுமாவார்கள். ஸத் பாத்திரங்களில தானம் செய்வதுதான் தனமுளளவர்களுக்கு மார்க் கம். ஒருபோதும் பாபகர்மத்தைஅடையாதவர்களும் கர்மயோகத் தையுடையவர்களும் மனத்தின்ஸங்கல்பத்தில் ஸித்தியடைந்தவர் களும் சுத்தமான அறிவின் உறுதியையுடையவர்களும் கோபம் அஸூயை அகங்காரம் மாத்ஸரியம் இவைகளறறவர்களும் ஜ்ஞான ஸாதனத்தில்நிஷ்டைபெற்றவர்களும் (உற்பத்தி, கர்மா, வித்தை என்னும்) மூன்றும் சுத்தமாகவுள்ளவர்களும் எல்லாப்பிராணிகளின் க்ஷேமத்திலும்பற்றுதலுள்ளவாகளும் தம்தர்மங்களிலாதரவுடையவர் களும் விதிபபடிநடக்கின்றவர்களுமாயிருக்கின்ற (யாஜ்ஞவல்கியர் முதலிய) பிராம்மணர்களும் (ஜனகர்முதலிய) அரசர்களுமான, அனே கர் கிருகஸ்தர்களாயிருந்தாகள் ஸமமாயிருப்பவர்களும் ஒழுங் கானதன்மையுடையவர்களும் (எபபொழுதும்) சந்தோஷத்தையடை ந்தவர்களும் ஞானத்தில உறுதியுள்ளவர்களும் பிரத்யக்ஷமாக (சித்த சித்திரூபமான) தர்மபலத்தைய னுபவிக்கிறவர்களும் சுத்தர்களும்

[1] 'வேதத்தில்சொல்லியபடி ஸம்ஸ்காரத்துடன் சரீரத்தைஉண்டுபண் ணுவதுதான் சரீரத்தின்சுத்தியாகும்' என்பது பழையவுரை.

பரப்ரம்மத்தில்ஶ்ரத்தையுடையவர்களும் முன்ஜன்மத்திலேயேசுத்த வாஸனையுள்ள மனத்தையுடையவர்களும்உள்ளபடிவிரதத்தைஅனுஷ்டித்தவர்களுமாயிருக்கின்ற அவர்கள் கஷ்டதசையிலும்அஸௌகரிய மானவிடத்திலும் இருந்தாலும் தர்மத்தை அனுஷ்டிக்கின்றார்கள். அவ்விதம் சேர்ந்து தர்மத்தை அனுஷ்டித்த அவர்களுக்கு முன்காலத்தில் அது ஸுகமாகத்தானே இருந்தது ? அவர்களுக்கு ஒருவிதமாகவும் பிராயச்சித்தமானது செய்யவேண்டியதாயிருக்கவில்லை. ஸத்யமான தர்மத்தைஅடைந்து (ஒருவராலும்) கொஞ்சமும்நெருங்கமுடியாதவர்களாக ஒப்புக்கொள்ளப்பட்டஅவர்கள் தம்புத்திசென்றவழி செல்லுகிறதில்லை ; முடிவாகத் தர்மத்தில் கபடத்தைச்செய்கிறதில்லை. தர்மத்தில் எது முதற்கற்பமோ அதையே அனுஷ்டிப்பவர் பெரியவர். இந்த நிலையிலிருப்பவர்களுக்குப் பிராயச்சித்தம்இல்லை துர்பலமானமனமுள்ளவர்களுக்குப் பிராயச்சித்தம் ஏற்படும். இவ்வித ஆசாரத்தையுடையவர்களும் யாகத்தைநடத்துகிறவர்களும் முன்னோர்களுமான இவர்கள் பின்வருமாறு சொல்லுகிறார்கள் வேதத்தில் சிறந்தவர்களும் சுத்தர்களும் சீலமுடையவர்களும் கீர்த்திபெற்றவர்களுமான வித்வான்கள் பயனைவிரும்பாமல் ஒவ்வொருநாளும் யாகங்களைச் செய்கிறார்கள் அவர்களுடையயாகங்களும் வேதங்களும் மற்றக்காமங்களும் பொருள்வரவுக்குத்தக்கபடி ஏற்படுகின்றன வரவு ஸங்கல்பத்தையனுஸரித்தும் ஸங்கல்பமும் விரதத்தையனுஸரித்தும் ஏற்படுகின்றன காமக்ரோதமற்று மற்றவர்களால் அனுஷ்டிக்க அரிய ஆசாரத்தையும் கர்மத்தையுமுடையவர்களும் தங்கள்கர்மங்களால் ப்ரஸித்திபெற்றவர்களும் ஸ்வபாவமாகவே மேலான சித்தமுடையவர்களும் ஒழுங்கானவர்களும் எப்பொழுதும் அடக்கமுள்ளவர்களும் தங்கள்கர்மங்களிலிருக்கின்றவர்களுமானவர்களுக்கு எல்லாம் அழிவற்றபயனுடையவையென்று நமக்குப் பலநாளாகக் கேள்வி. உதார சித்தமுடையவர்களும் மற்றவர்களால் அனுஷ்டிக்கமுடியாத ஆசார கர்மங்களையுடையவர்களும் தங்கள் கர்மங்களால் பிரஸித்திபெற்றவர்களுமாயிருக்கிறவர்களுடைய தவமானது கோரமாயிருக்குந்தன்மையை அடைந்தது. ஆச்சரியகரமானதும் ஆதியிலேயே உண்டானதும் நிலைபெற்றதும் உறுதியுள்ளதுமான அந்தஸதாசாரத்தை அனுஷ்டிக்க முடியாதவர்களாலே தர்மங்களில் சிறிது அறிவிக்கப்பட்டது. ஓ! பிரபுவே! முன்காலத்தில் ஸகலஜாதிகளிலும் ஆபத்தர்மமேயில்லாத ஆசாரமும் ஜாக்கிரதையும் காமக்ரோதங்களால்

அவமானமில்லாமையுமிருந்த காரணத்தால் அவர்களில் ஒருவித வித்தியாஸமும் இல்லாமலிருந்தது. பிறகு, மனிதர்கள் ஒரே தர்மத்தை நாலுபாதமாக அடைந்தார்கள். ஸத்துக்கள் அந்தத் தர்மத்தை விதிப்படிசெய்து உத்தமகதியை அடைகிருர்கள் சிலர் கிருகங்களிலிருந்துவெளிக்கிளம்பி வனத்தைஅடைந்து உத்தமகதியை அடைந்திருக்கிருர்கள் சிலபிரம்மசாரிகள் கிருகஸ்தாஶ்ரமத்தை ஆஶ்ரயித்து உத்தமகதியை அடைகின்ருர்கள். பிராம்மணர்கள் நாலாகப் பகுக்கப்பட்ட ஆஶ்ரமத்தை ஒன்ருகவே அறிகிருர்கள். இவ்விதமான ரீதியையுடைய இந்தமுன்னேர்களான பிரம்மசாரிகள், எல்லா ஆஶ்ரமங்களிலுமுள்ள எல்லோர்களும் உத்தமகதியை அடைகிருர்களென்றுசொல்லுகின்ருர்கள். அப்படிப்பட்ட இந்தப பிராம்மணர்கள் ஸந்தோஷத்திஞல் எல்லையற்ற பிரம்மபாவத்தையடைந்து ஜோதிவடிவமாகி ராசிசக்கரங்களில அஶ்வினீமுதலான நக்ஷத்திரங்கள்போல அனேகமான நக்ஷத்திரக் கூட்டங்களாகி ஆகாயத்தில் காணப்படுகிருர்களென்பது வேதவசனம் அப்படிபபட்டவர்கள் பூர்வகாமத்திஞல் மறுபடியும் யோனிகளில ஜனித்து ஸம்ஸாரத்தை அடைந்தால் ஒருபோதும் பாபகர்மத்திஞல் வியாபிக்கப்படுகிறதில்லை. வேதாந்த விசாரத்தில் விருப்பமுள்ளவனும் உறுதியான நிசசயத்தையுடையவனுமான பிரம்மசாரியானவன் இப்படியே ஆகிருன். இவ்விதம் ஸதாசாரமுடையவன் பிராம்மணஞவான் மற்றவன் பிராம்மணப் போலியாவான். நல்லவஞே, கெட்டவஞே என்பதை மனிதனுடைய செய்கையே சொல்லுகிறது. இவ்விதம் பக்குவசித்தமுள்ளவர்களுக்கு வேதாந்தஶ்ரவணத்திஞலும் அதஞலுண்டான அனந்தமான பிரம்மபாவத்திஞலும் எல்லாவிதத்திலும் அழிவற்ற தன்மை உண்டாயிற்றென்று நமக்கு அழிவற்றவேதம் கூறுகிறது. ஆசைநீங்கினவர்களும் சுத்தர்களும் மோக்ஷத்தில் விருப்பமுள்ள மனமுடையவர்களுமான அவர்களுக்கு நான்காவதும் உபநிஷத்தில் சொல்லபபட்டதும் எல்லாவர்ணத்தார்களுக்கும் பொதுவானதுமான (ஶமம் தம முதலான)தர்மமானது ஸ்மிருதிகளில்சொல்லபபட்டிருக்கிறது. ஸித்தி பெற்றவர்களும் மனத்தைவசஞ்செய்தவர்களுமான பிராம்மணர்களால் நித்தியமான பிரம்மஜ்ஞானமானது ஸாதிக்கப்படுகிறது. யதியின் தர்மமானது ஸந்தோஷத்தைக் காரணமாகவுடையதும் தியாகரூபமும் ஞானத்திற்குக் காரணமும் மோக்ஷத்தில் புத்தியை உண்டுபண்ணுகிறதும், அழிவில்லாததும் அஞதியுமாகச சொல்லப்

படுகிறது. அந்த யுதிதர்மமானது தன்வைராக்ய பலத்திற்குத்தக்க படி இதர ஆஶ்ரமதர்மத்துடன் சேர்த்தாவது தனியாகவாவது அனுஷ்டிக்கப்படுகிறது. புத்திவன்மையுடையவர்கள் க்ஷேமத்தை அடைகிறார்கள். புத்திபலமில்லாதவன் இந்த ஸம்ஸாரத்தில் துன்பப்படுகிறான். பிரம்மபதத்தை விரும்புகின்ற சுத்தனான பிராம்மணன் ஸம்ஸாரத்திலிருந்து விடுபடுகிறான்' என்று சொன்னார். ஸ்யூமரஶ்மி, 'எவர்கள் தர்மமாக [1]ஸம்பாதிக்கப்பட்ட பொருள்களினால் போகத்தை அடைகின்றவர்களும் தானஞ்செய்கின்றவர்களும் யாகஞ்செய்கின்றவர்களும் அத்யயனஞ்செய்கின்றவர்களுமாயிருக்கிறார்களோ, எவர்கள் ஸன்யாஸத்தை அடைந்தார்களோ, இவர்களுள் எவர் மரணத்தின் பிறகு ஸ்வர்க்கத்தை நன்றாஜயித்தவர்கள்? ஓ! பிராம்மணரே! கேட்கின்ற எனக்கு இதை உள்ளபடி சொல்லவேண்டும்' என்று கேட்க, கபிலர், 'ஸகலமான [2]பரிக்ரகத்தையுமுடைய தர்மாஶ்ரமங்களும் குணத்தினால் சுபகரங்களாயும் மறுமைப்பயனைத் தருபவைகளாயுமிருக்கின்றன. ஆனாலும் அவர்கள் ஸன்யாஸத்தினாலுண்டான ஸுகத்தை அடைந்தவர்களாக இல்லை இதை நீரும் அறிகிறீர்' என்று சொன்னார். ஸ்யூமரஶ்மி, 'நீங்கள் ஞானநிஷ்டர்களும் கிருகஸ்தர்களும் தர்மநிச்சயமுடையவர்களுமாயிருக்கின்றீர்கள். எல்லா ஆஶ்ரமங்களுக்கும் முடிவில் ஒரே பயன் சொல்லப்படுகிறது. (ஆகையால் ஆஶ்ரமம்) ஒன்றாயிருப்பதிலும் பலவாகப்பிரிப்பதிலும் வேறுவிசேஷம் ஒன்றும் சொல்லப்படவில்லை. ஆகையால், எல்லாமறிந்தநீர் நியாயமாக உள்ளபடி எனக்குச் சொல்லவேண்டும்' என்றார் கபிலர், 'கர்மங்கள் (ஸ்தூல ஸூக்ஷ்ம) சரீரசுத்தியைச் செய்கின்றன. ஞானமோ மோக்ஷஸாதனம். சித்தத்தின் [3]மலமானது பக்குவமான காலத்தில் விஜ்ஞானமுண்டாகிறது. உண்மையான ஞானமிருக்கும்பொழுது பூததயை, [4]பொறுமை, [5]சாந்தி, கொல்லாமை, ஸத்யம், நேர்மை, துரோகமில்லாமை, அபிமானமில்லாமை, லஜ்ஜை, சீதோஷ்ணமுதலியவற்றைப்) பொறுத்தல், ஒழிவு இவ்விதமான ப்ரம்மமார்க்கங்கள் ஏற்படுகின்றன. இவைகளால் பரப்ரம்மத்தை அடைகின்றான். ஆகையினால், வித்வானானவன் கர்மபலத்தின்நிச்சயத்தை மனத்தினால் உற்றுப்

1 'லப்தாபி:' என்று பாடம் கொள்ளப்பட்டது. 2 சேர்க்கை.

3 'க்ஷாயே' என்று பாடங்கொள்ளப்பட்டது.

4 ஒருவர் கோபம்வரும்படி செய்தாலும் கோபம்வாராமலிருத்தல்.

5 மனவடக்கம்.

பார்க்கவேண்டும். எல்லாவற்றிலும் அடக்கமுடையவர்களும் விசுத்தர்களும் பிரம்பஜ்ஞானத்தில் உறுதிபெற்றவர்களுமாயிருக்கிறவேதியர்கள் ஸந்தோஷத்தை அடைந்து எந்தக்கதியை அடைகின்றார்களோ அதை உயர்ந்தகதியாகச் சொல்லுகின்றார்கள். இவ்விதம் வேதங்களையும் வேதத்தினால் அறியக்கூடிய கர்மப்ரம்மஸ்வரூபத்தையும் அவைகளின் அனுஷ்டானத்தின்ஸ்திதியையும் அறிந்தவன் வேதவித்தாகிறான். இதற்கு வேறாயுள்ளவன் காற்றுநிறைந்த தோல்துருத்தியாகிறானென்று சொல்லுகின்றார்கள். வேதத்தை அறிந்தவர்கள் எல்லாவற்றையும் அறிகின்றார்கள். வேதத்தில் எல்லாம் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. வேதத்திலல்லவோ இப்பொழுது எதுஎது இருக்கின்றனவோ, எதுஎது [1]இல்லையோ அந்தஎல்லாவற்றிற்கும் இருப்பு இருக்கிறதென்பதும் இல்லைஎன்பதுமே எல்லாவஸ்துக்களுக்கும் இயற்கை?' பிரம்மத்தையறிந்தவனுக்கு இது [2]முடிவும் [3]நடுவும் ஸத்தும் அஸத்துமாயிருக்கின்றது. (வேதமானது) ஸன்யாஸமென்று தானே முடிந்திருக்கின்றது? சமமென்றுதானே நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது? ஸந்தோஷமென்று எங்கும் வியாபித்திருக்கின்றது. மோக்ஷத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றது? ஒருகாலமும்பாதிக்கப்படாததும் வ்யக்தாவ்யக்தமும் அறியப்பட்டதும் அறியவேண்டியதும் எல்லாவற்றிற்குமாத்மாவும் ஸ்தாவரஜங்கமரூபமும் முழுதும் ஸுகமும் சிவமும் ப்ரேஷ்டமும் (ராகிகளுக்குப்) பிரகாசியாததும் ஜகத்தின் உற்பத்திலயகாரணமுமானப்ரம்மமானது தேஜஸ், க்ஷமை, சாந்தி, கெடுதலற்றசுபம், அப்படிப்பட்டவியோமம், ஸநாதநம், [4]த்ருவமென்கிறஇந்தச்சொற்களாலே ஞானக்கண்ணுடையபிராம்மணர்களால் அறியப்படுகின்றது. ஆகையால், பிரம்மரூபமான அந்தப்பிராம்மணனுக்கு நமஸ்காரம்' என்றுசொன்னார்" என்றார்

---

1 முன்சென்றதும் இனிவருவதும்.

2 மோக்ஷரூபமாயும். 3மத்தியில்தோன்றுகின்றஜகத்தாயும்.

4 நிலையுள்ளது.

## இருநூற்றெழுபத்தேழாவது அத்யாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



(அறம்பொருளின்பங்களுள் அறமே சிறந்ததென்பதைப்பற்றிய குண்டதாரன்கதை.)

யுதிஷ்டிரர், "ஓ! பாரதரே! வேதங்கள் தர்மத்தையும் அர்த்தத்தையும் காமத்தையும் சொல்லுகின்றன இவைகளுள் எதை அடைவது ச்லாக்யம்? ஓ! பிதாமஹரே! அதை எனக்குச் சொல்லவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர்சொல்லலானார். "இந்தவிஷயத்தில் முன்பு குண்டதாரன் ப்ரீதியுடன் பக்தனுக்கு உபகாரஞ்செய்ததாகிய பழமையான கதையை உனக்குச்சொல்லப்போகிறேன். தரித்திரரான ஒரு பிராம்மணர் ஆசையினால் [1]தனத்தையே நோக்கினார் அதனால் அவர் யாகத்திற்காகத் தனத்தைவிரும்பி உக்கிரமான தவத்தைச் செய்தார். பிறகு, அவர் உறுதிசெய்துகொண்டு தேவதைகளைப் பூஜித்தார்; பக்தியுடன் தேவதைகளைப்பூஜித்தும் தனத்தை அடையவேயில்லை. பிறகு, அவர், 'மனிதர்களால் ஸ்ரமப்படுத்தப்படாததும் எனக்குச்சீக்கிரத்தில் அருள்செய்யக்கூடியதுமான தெய்வம் எது?' என்று சிந்தையையடைந்தார். அவர், பிறகு, தெளிவானமனத்தினால் தேவனுக்குப்பின்செல்லுகிறதும் தமதருகிலிருக்கிறதுமான குண்டதாரனென்கிற மேகத்தைப் பார்த்தார். மஹாபாஹுவான அந்தமேகதேவதையைப் பார்த்தவுடனே, 'இவன் எனக்கு மேன்மையைச்செய்வான் இந்தமேனி அப்படிப்பட்டதாயிருக்கிறது தேவனுக்குநெருங்கியவனாயுமிருக்கிறான்; வேறு மனிதர்களால் வரிக்கப்படவுமில்லை இந்தத்தேவன் விரைவிலேயே எனக்கு அதிகமான தனத்தைக் கொடுப்பான்' என்று அவருக்குப் பக்தி உண்டாயிற்று பிறகு, அவர் அந்தத்தேவனைத் தூபங்களாலும் கந்தங்களாலும் ஏற்றத்தாழ்வுள்ளமாலைகளாலும் நானாவிதமான பூஜைகளாலும் பூஜித்தார். அப்பொழுது அந்தப்பூஜையினால் அற்பகாலத்திலேயே அந்தமேகமானது சந்தோஷத்தையடைந்து, 'பிரம்மஹத்திசெய்தவனுக்கும் ஸுராபானஞ்செய்தவனுக்கும் திருடனுக்கும் விரதபங்கமுடையவனுக்கும் அறிஞர்களால் பரிகாரம் விதிக்கப்பட்டிருக்கிறது; செய்ந்நன்றிமறந்தவன்விஷயத்தில் பரிகாரம் விதிக்கப்படவில்லை. அதர்மம் ஆசையின் புத்திரனாகவும் குரோதம் அஸூ

---

[1] 'தர்மத்தை' என்பது வேறுபாடம்.

யையின் புத்திரனாகவும் லோபம் வஞ்சனையின் புத்திரனாகவும் எண்ணப்படுகின்றன. நன்றிமறந்தவன் பிரஜைக்கு யோக்கியனில்லை' என்று அவருடைய உபகாரத்தில் உறுதியான இந்தவார்த்தையைச் சொல்லிற்றும். பிறகு, அந்தப்பிராம்மணர் தர்ப்பங்களில் சயனஞ் செய்துகொண்டு அப்பொழுது குண்டதாரனுடைய தேஜஸினால் ஸ்வப்னத்தில் எல்லாப்பிராணிகளையும் பார்த்தார். சமத்தினாலும் தவத்தினாலும் பக்தியினாலும் போகத்தை விட்டவரும் சுத்தமனமுள்ளவருமான அந்தப் பிராம்மணர் ராத்திரியில் பக்தியின் உறுதியைக் கண்டார் யுதிஷ்டிர! அவர் அந்தக்கூட்டத்திலிருக்கிறவனும் தேவதைகளுக்குள்ளே மிக்கஒளியுள்ளவனும் மஹாத்மாவும் பயன்களை அளிக்கிறவனுமான [1]மாணிபத்ரனென்பவனைப் பார்த்தார். அங்குள்ளதேவர்கள் சுபகர்மங்களால் முயற்சிசெய்து ராஜ்யங்களையும் தனங்களையும் கொடுக்கின்றார்கள்; அசுபகர்மங்களைச் செய்தால் அபகரிக்கின்றார்கள். பரதசிரேஷ்ட! அப்பொழுது யக்ஷர்களும் தேவர்களும் பார்த்துக்கொண்டிருக்கையில் மிக்கதேஜஸுள்ள குண்டதாரன் ஓடிவந்து தேவர்களினமுன் பூமியில் விழுந்தான். பிறகு, பூமியில்விழுந்த குண்டதாரனைநோக்கி, நல்லமனமுள்ள மாணிபத்ரன் தேவர்களின் வசனத்தினால், 'குண்டதார! நீ எதைவிரும்புகிறாய்?' என்று கேட்டான். குண்டதாரன், 'இந்தப்பிராம்மணர் என்னுடைய பக்தர். தேவர்கள் என்விஷயத்தில் அருள் வைப்பார்களானால் இவருக்குச் சிறிது ஸுகத்தைத்தரத்தக்க அனுக்கிரகத்தைச் செய்ய விரும்புகிறேன்' என்றுசொன்னான். உடனே, மாணிபத்ரன் தேவர்களுடைய வசனத்தினாலேயே மறுபடியும் மிக்ககாந்திபொருந்திய இந்தக்குண்டதாரனை நோக்கி, 'எழுந்திரு; எழுந்திரு உனக்கு மங்களமுண்டாகட்டும். காரியஸித்திபெற்று ஸுகமுள்ளவனாவாய். இந்தப் பிராம்மணர் தனத்தைவிரும்பினால் இவருக்குத் தனம்கொடுக்கலாம். உனக்கு நண்பராயிருக்கிற இந்தப் பிராம்மணர் எவ்வளவு தனத்தை விரும்புகிறாரோ அளவற்ற அவ்வளவு தனத்தையும் நான் தேவர்களுடைய கட்டளையினால் கொடுக்கிறேன்' என்றுசொன்னான். குண்டதாரன் மனிதர்களின் செல்வமானது சலிப்பதும் நிலையில்லாததுமென்று நினைத்து யசஸுள்ள பிராம்மணருடைய தவத்தில் புத்தியைச் செலுத்தினான். (அவ்விதம் நிச்சயித்து மாணிபத்ரனை நோக்கி,) 'தனத்தை அளிக்கின்றவனே!

---

1 இது, 'மணிபத்ரன்' என்றும் காணப்படுகிறது.

பிராம்மணருக்காக நான் தனத்தை யாசிக்கவில்லை. என்பக்தருக்காக வேறான அனுக்கிரகத்தைச் செய்யவேண்டுமென்று யாசிக்கிறேன். என்னுடைய பக்தருக்காக ரத்தினங்களால் நிறைந்த பூமியையோ பெரிய பொருட்குவியலையோ நான் யாசிக்கவில்லை. பின்னை என்ன வென்றால், இவர் தர்மிஷ்டராகவேண்டும். இவருடையபுத்தி தர்மத்தில் மகிழவேண்டும். இவர் தர்மத்தையே அடுத்து ஜீவிக்கவேண்டும்; தர்மத்தை முதன்மையாகவுடையவராகவேண்டும். இந்த அனுக்கிரகம் எனக்கு ஸம்மதம்' என்றுசொன்னான். மாணிபத்ரன், 'இவர் சரீரஸ்ரமமில்லாமல் எப்பொழுதும் தர்மத்தின் பயனான ராஜ்யத்தையும் நானாவித ஸுகங்களான பயனகளையுமே அனுபவிக்கட்டும்'என்று சொல்ல, பிறகு பெரும்புகழுள்ள குண்டதாரன் அனேகமுறை (முன் யாசிக்கப்பட்ட) தர்மவிஷயத்தில் அப்யாஸத்தையே கேட்டான். தேவர்கள் அதனால் ஸந்தோஷித்தார்கள். மாணிபத்ரன், 'ஸகலதேவதைகளும் உன்விஷயத்திலும் இந்தப்பிராம்மணர் விஷயத்திலும் ப்ரீதியடைந்தார்கள். இவா தர்மாத்மாவாகப்போகிறார். தர்மத்தில் புத்தியைச் செலுத்தவும் போகிறார்' என்றான். ஓ! யுதிஷ்டிர! அதனால் அந்தமேகம் மற்றவர்களால் அடையமுடியாத மனத்துக்கு விருப்பமான வரத்தைஅடைந்து காரியசித்திபெற்றுஸந்தோஷத்தை அடைந்தது. பிறகு, அந்தப் பிராம்மணப்ரேஷ்டர் தம்முடைய பக்கத்தில் ஸமீபத்தில் வைக்கபபட்ட ஸூக்ஷ்மமான மரவுரிகளைப் பார்த்தார். உடனே ஒழிவை அடைந்து, 'இந்தக்குண்டதாரன் நன்மையை அறியவில்லை. நான் செய்த ஸுகிருதத்தை வேறுயார் அறியப்போகிறார்? இனிமேல் நான் தர்மத்தால் ஜீவிப்பதற்கு வனத்தையே அடைகிறேன்' என்றார். அப்பொழுது அந்தப்பிராம்மணப்ரேஷ்டர் ஒழிவினாலும் தேவர்களுடைய அருளினாலும் வனத்தை அடைந்து பெரியதவத்தைச் செய்யத்தொடங்கினார். ஓ! மஹாராஜனே! அந்தப் பிராம்மணர் தேவதைகளும் அதிதிகளுமருந்திய மீதியான கனிகிழங்குகளைப் பக்ஷித்துக்கொண்டிருந்தார். தர்மத்தில் அவருக்கு உறுதியான புத்தியும் உண்டாயிற்று. பிறகு, பிராம்மணர் கனிகிழங்குகளையெல்லாம் தள்ளிவிட்டுச் சருகுகளைப் பக்ஷித்துக் கொண்டிருந்தார் மறுபடியும் அவர் சருகுகளையும் தள்ளிவிட்டு ஜலத்தைப் பானஞ்செய்துகொண்டிருந்தார். அதன்பிறகு, பலவருஷங்கள் வாயுவைப் பக்ஷித்துக்கொண்டிருந்தார்; இவருடைய பிராணன் குறைவை அடையவில்லை. அது ஓர் ஆச்சரியமாயிற்று. தர்

மத்தில் நம்பிக்கையுடையவரும் உக்கிரமான தவத்திலிருக்கிறவரு மான அவருக்கு நெடுங்காலத்துக்குப் பிறகு திவ்ய திருஷ்டியுண்டா யிற்று. அவருக்கு, 'இவ்வுலகத்தில் நான் யாருக்காவது ஸந்தோ ஷத்தோடு தனத்தைக் கொடுத்தால் எனது வாக்கானது வீணாகாது' என்னும் புத்தி உண்டாயிற்று. பிறகு, அவர் மலர்ந்தமுகத்துடன் மறுபடியும் தவத்தைச் செய்ய ஆரம்பித்தார் மறுபடியும் தவஸித்தி பெற்று அவர், 'நான் ஸந்தோஷத்துடன் யாராவது ஒருவனுக்கு ராஜ்யத்தை அளித்தால் அவன் சீக்கிரத்தில் அரசனாவான். என்னு டையவார்த்தை வீணாகாது' என்று தாம் மேலானதென்று நினைக்கிறதைப் பற்றி ஆலோசித்தார். பாரத! அப்பொழுது குண்டதாரன் அந் தப்பிராம்மணருடைய தவத்தினாலும் யோகத்தாலும் ஸ்நேகத்தாலும் ஏவப்பட்டு அவருக்குப் பிரத்தியக்ஷமானான் அந்தப் பிராம்மணர் அந்தக்குண்டதாரனருகிற்சென்று அவனை விதிப்படி பூஜித்தார்; ஓ! அரசனே! அதனால் ஆச்சரியத்தை அடைந்தவருமானார். பிறகு, குண்டதாரன் அவரைநோக்கி, 'உமக்கு உத்தமமான ஞானக்கண் உண்டாயிருக்கிறது ஓ! பிராம்மணரே! அந்தநேத் திரத்தினால் அரசர்களுடைய கதியையும் உலகங்களையும் பாரும்' என்று சொன்னான். பிறகு, அந்தப்பிராம்மணர் உடனே நரகத்தில் அழுந்தின அனேக அரசர்களைத் தூரத்தில் திவ்யதிருஷ்டியினால் பார்த்தார் குண்டதாரன், 'பக்தியுடன் என்னைப்பூஜித்து நீர் துக் கத்தை அடைவீரானால் என்னால் உமக்கு என்ன செய்யப்பட்ட தாகும்? நான் என்ன அனுக்ரகம் செய்ததாகும்? மறுபடியும் நீர் நினை த்துப்பாரும்; ஆராய்ந்துபாரும் மனிதன் காமங்களை எப்படி இச்சிக் கலாம்? ஸ்வர்க்கத்துவாரமானது மனிதர்கள்விஷயத்தில் விசேஷமாக அடைக்கப்பட்டிருக்கிறது' என்றுசொன்னான். பிறகு, அந்தப் பிராம் மணர் மனிதர்களைச் சுற்றிக்கொண்டிருக்கிற காமம், குரோதம், லோ பம், பயம், மதம், நித்திரை, மயக்கம், சோம்பல் இவைகளைப்பார்த் தார். குண்டதாரன், 'உலகங்கள் இந்தக் காமமுதலியவைகளால் சூழப்பட்டிருக்கின்றன. தேவர்களுக்கு மனிதனிடமிருந்து பயம். அந் தக் காமமுதலியவைகள் அப்படியே தேவர்களுடையவார்த்தையினால் எல்லாவிஷயங்களிலும் இடையூற்றைச்செய்கின்றன. தேவர்களால் அனுமதி கொடுக்கப்படாத ஒருவனும் தார்மிகனாகிறதில்லை. நான் தவத்தினால் ராஜ்யத்தையும் தனங்களையும் கொடுக்கச் சக்தியுள்ள வனாயிருக்கிறேன்' என்றுசொன்னான். அப்பொழுது தர்மாத்மா

வான பிராம்மணர் மேகத்தைத் தலையால் வணங்கி அதனை நோக்கி, 'எனக்குப் பெரிய அனுக்ரகமானது செய்யப்பட்டது. காம லோபங்களின் தொடர்ச்சியினால் ஸ்னேகத்தை அறியாமல் நான் உனனிடத்தில் பொறுமைப்பட்டதை நீ பொறுக்கக்கடவாய்' என்றும் சொன்னார். அப்பொழுது குண்டதாரன், 'என்னால க்ஷமிக்கவேபட்டது' என்று சொல்லி, அந்தப்பிராம்மணச்ரேஷ்டரைக் கைகளால் ஆலிங்கனம்செய்துகொண்டு அவ்விடத்திலேயே மறைந்தான். உடனே, அந்தப்பிராம்மணர் குண்டதாரன அனுக்கிரகத்தினாலும் தவத்தினாலும் ஸித்தியடைந்து ஸகலலோகங்களிலும் சஞ்சரித்தார். அவருக்குத் தர்மத்தாலும் யோகத்தாலுமுண்டான சக்தியினால் ஆகாயத்தில் கமனமும் நினைத்தபொருள்களை அடைதலும் மேலான கதியும் உண்டாயின தேவதைகளும் ஸாதுக்களான பிராம்மணர்களும் யக்ஷர்களும் மனிதர்களும் சாரணர்களும் இவ்வுலகில் தார்மிகர்களைப் பூஜிக்கின்றார்கள்; செல்வவான்களைப பூஜிக்கிறதில்லை; காமிகளையும் பூஜிப்பதில்லை யுதிஷ்டிர! உனது புத்தி தர்மத்தில் பற்றியிருத்தலால் உன்னிடத்தில் தேவர்கள் மிகவும் அருளுடையவர்களாயிருக்கிறார்கள. தனத்தில் ஸுகத்தின் ஓர் அம்சம் இருக்கிறது. தர்மத்திலோ பரமமான ஸுகம் இருக்கிறது" என்றுசொன்னார்.

---

## இருநூற்றெழுபத்தெட்டாவது அத்யாயம்.
## மோக்ஷ தர்மம் (தொடர்ச்சி.)

(கொலைக்குக்காரணமாதலால் யாகம் இழிந்ததென்பதைப்பற்றி நாரதர் சொல்லிய உஞ்சவ்ருத்தி ப்ராம்மணர்கதை.)

யுதிஷ்டிரர், "ஓ! பிதாமஹரே! ஓரேபயனையுடையனவும் பலவகைப்பட்டனவுமான யஜ்ஞம் தவமிவைகளுள் ஸுகத்திற்காகவும், தனத்திற்காகவுமில்லாமல் தர்மத்திற்காகவே ஏற்படுத்தப்பட்டது எவ்விதமானது?" என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"இந்த விஷயத்தில் நாரதரால் சொல்லப்பட்ட உஞ்சவிருத்திப் பிராம்மணருடைய யஜ்ஞநிமித்தமான பூர்வசரித்திரத்தை உனக்குச் சொல்லுகிறேன். நாரதர், 'விதர்ப்பதேசத்தில் சிறந்ததான தர்மோத்தரமென்கிற ராஜ்யத்தில் உஞ்சவிருத்திசெய்யும் ஒரு பிராம்மணரிஷி இருந்தார். அவர் யாகத்தைச் செய்வதற்கு யத்தனித்தார். அவ்

விடத்தில் [1]ஆகாரம் செய்யக்கூடிய சாமைதான்யமும் ஸூர்யபர்ணி ஸுவர்ச்சலை என்னும் சாகங்களும் யாகத்திரவ்யமாக இருந்தன. துவர்ப்புள்ளதும் ரஸமில்லாததுமான கீரையும் தவத்தினால் சுவையுள்ளதாயிற்று. பகைவர்களைக்காப்பவரே! வனத்தில் ஓரிடத்தை அடைந்து ஒருபிராணிக்கும் துன்பம்செய்யாமல் கிழங்குகளினாலும் கனிகளினாலும் செய்யப்பட்டாலும் யாகமானது ஸ்வர்க்கத்தையளிக்கும். விரதத்தினால் இளைத்தவளும் சுசியுள்ளவளும் யஜ்ஞத்தில் பத்னியாக அழைத்துவரப்பட்டவளுமான அவருடைய பத்னியான புஷ்கரமாலினியென்பவள் அந்த ஸத்தியரிடத்தில் அனுஸரிப்பதில்லை அவள் சாபத்தினின்றும்நடுங்கி அவருடையஸ்வபாவத்தை அனுஸரித்தாள். அவளுக்கு மயில்களின் உதிர்ந்த இறகுகளால் வஸ்திரம் செய்யப்பட்டது அவளுக்கு விருப்பமில்லாமலிருந்தும் தீக்ஷிதரானபர்த்தாவின் அனுஸரணத்தினால் அவ்விடத்தில் யாகஞ்செய்யப்பட்டது. தர்மமறிந்ததும் சருகுகளைப்புஜிப்பதுமான ஒரு மிருகமானது [2]சுக்ரர்பலமுறை கட்டளையிட்டதனால் அந்தவனத்தில் அவர்சமீபத்தில் வஸித்துக் கொண்டிருந்தது (அப்பொழுது) அந்தமிருகமானது ஸத்தியரை நோக்கி, 'உம்மால் இந்தத்தீயசெய்கை செய்யப்பட்டது. (பசுவில்லாததால்) அதற்குரியமந்திரரூபமான அங்கக்குறையுள்ள இந்தயாகமானது விபரீதமாகிறது. ஐயா! ஆகையால், நீர் என்னை அக்கினியில் ஆகுதிசெய்து தடையில்லாமல் ஸ்வர்க்கத்தை அடையக்கடவீர்' என்றவார்த்தைகளைச் சொல்லிற்று. பிறகு, ஸாவித்ரியானவள், யாக விஷயத்தில் அவரைக்கண்டு நேரில்வந்து அவரைத் தூண்டினாள். அவர், 'நான் என்னுடன்வஸிக்கும்மிருகத்தைக் கொல்லமாட்டேன்' என்று மறுமொழிசொல்லினர். யாகாக்கினியிலிருந்துகிளம்பின அந்தஸாவித்திரியானவள், 'யஜ்ஞத்தில் என்னகெட்டகாரியம் செய்யப்பட்டது?' என்றுசொல்லிவிட்டுப் பாதாளத்தைப்பார்க்கவிரும்பித் திரும்பிவிட்டாள். மறுபடியும், கலைமான் கைகுவித்துநின்றஸத்தியரையாசிக்க, அவர் அதை ஆலிங்கனம்செய்துகொண்டு,'போகலாம்' என்றுசொல்லினர். பிறகு, அந்தமான் எட்டுஅடி நடந்து திரும்பி

---

[1] 'அந்தவனத்தில் சாமைதான்ய ஆகாரமும் மிகவும் பளபளப்பான ஸூர்யபர்ணிஎன்கிற இலையும் துவர்ப்பும் ரஸமில்லாததுமானகீரையும் தவத்தினால் அவருக்குச் சுவையுள்ளனவாயிருந்தன' என்றும் கொள்ளலாம்.

[2] வேறுபாடம்.

வந்து, 'ஓ! ஸத்தியரே! என்னைத் தடையின்றிக் கொல்லும். உம்மால் கொல்லப்பட்டு நான் நல்லகதியை அடைவேன்.' என்றால் கொடுக்கப் பட்டஞானக்கண்ணால் ஸ்வர்க்கத்திலுள்ள அப்ஸரஸுகளைப்பாரும். மஹாத்மாக்களானகந்தர்வர்களுடைய விசித்திரமான விமானங்களை யும் பாரும்' என்றுசொல்லிற்று. பிறகு, அந்தமுனிவர் விருப்பத் துடன் கண்ணால் (அவர்களை) நீண்டகாலம்பார்த்துவிட்டு மிருகத் தையும்பார்த்து, 'ஹிம்ஸையினால் ஸ்வர்க்கவாஸம்' என்றுதீர்மானித் தார் மிருகவடிவமாகிப் பலவருஷங்கள் வனத்தில்வஸித்துக்கொண் டிருந்த அந்தத்தர்மமானது அந்தப் [1]பாவத்திற்குப் பரிஹாரத்தைச் செய்துகொண்டது இது யாகத்திற்கு ஏற்பட்ட நல்லவிதியில்லை. அப்பொழுது மிருகஹிம்ஸைசெய்யநினைத்த அவருடைய அவ்வித அபிப்பிராயத்தால் பெரியதவம் நசித்துவிட்டது. ஆகையால், ஹிம் ஸையானது யாகத்திற்கு உரியதன்று பிறகு, அந்தஸத்தியருக்குத் தர்மபகவான் தானே யாகம்செய்வித்தான். பிறகு அவர் தவத்தினால் மனைவியின்பெரியஸமாதானத்தையும் அடைந்தார்' என்றார். கொல் லாமையானது மேலானதர்மம் ஹிம்ஸாரூபமானதர்மம் ஸ்வர்க்க ஸாதனமானது உனக்கு உண்மையைச் சொல்லுகிறேன் பிரம்ம வாதிகளுக்கு இது தர்மமன்று" என்றார்

---

## இருநூற்றெழுபத்தோன்பதாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

(தர்மமே மேன்மைக்குக் காரணமென்பது.)

யுதிஷ்டிரர், "ஒருவன் எப்படி பாவத்தைச்செய்தவனாகிறான்? எப்படி தர்மத்தைச் செய்கிறான்? எதனால் ஒழிவை அடைகிறான்? எதனால் மோக்ஷத்தை அடைகிறான்?" என்று கேட்க, பீஷ்மர் சொல் லத்தொடங்கினார்.

"உனக்கு ஸகலதர்மங்களும்தெரியும் (ஆனாலும்) மரியாதைக்கா கக்கேட்கிறாய். மோக்ஷத்தையும் ஒழிவையும் பாவத்தையும் தர்மத் தையும் மூலத்துடன் கேள் ஓ! பரதஸ்ரேஷ்ட! புருஷனானவன்(சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்தங்களென்கிற) ஐந்துவிஷயங்களுடைய அனு பவத்திற்காக இச்சையைமுன்னிட்டுப் பிரவ்ருத்திக்கிறானல்லவா?

---

[1] மிருகமாயிருந்ததற்குக்காரணமானபாவம்.

[1]அவைகளில் ஒன்றைப்பற்றிக் காமமோ த்வேஷமோ உண்டாகிறது. பிறகு, அவைகளுக்காக முயற்சிசெய்கிறான். பெரிதான காமத்தையும் ஆரம்பிக்கிறான் தன்னால்விரும்பப்படுகிற ரூபகந்தாதிகளை அடிக்கடி அனுபவிக்கவும் விரும்புகிறான். அதனால் ராகமானது பலமாகிறது. அதுபற்றி த்வேஷமுமுண்டாகிறது அதனால் லோபம் பலமாகிறது அதன்பிறகு, மோகமும் உண்டாகிறது லோபமோகங்களால் பற்றப்பட்டவனும் விருப்பு வெறுப்புக்களுள்ளவனுமானவனுக்குத் தர்மத்தில் புத்தியுண்டாகிறதில்லை கபடத்தினால் தர்மத்தையுஞ் செய்கிறான். கபடமாகத் தர்மத்தைப் பழக்கப்படுத்துகிறான். கபடத்தினால் பொருளை அடையவிரும்புகிறான் குருவம்சத்திலுதித்தவனே! கபடத்தினால் [2]தனங்கள்வளர்க்கும்பொழுது அதிலேயே புத்தியைச்செலுத்துகிறான். பாரத! பிறகு, நண்பர்களாலும் பண்டிதர்களாலும் தடுக்கப்பட்டாலும் பாவத்தைச்செய்ய முயற்சிசெய்கிறான் விதியால்ஏவப்பட்டதாவுகம்(ஆகாரவியவகாரங்களில லஜ்ஜையை விட்டவன் ஸுகியாவான் என்கிற) நியாயத்துடன்கூடினதாகவும் மறுமொழிசொல்லுகிறான் (அப்பொழுது) அவனுக்கு ராகமோகங்களாலுண்டான [3]மூன்றுவிதபாவங்கள் வளருகின்றன பாபதர்மத்தை நினைக்கிறான்; சொல்லுகிறான்; செய்யவும்செய்கிறான் அதர்மத்தில்ப்ரவருத்தித்த அவனுடைய தோஷங்களை ஸாதுக்கள் கவனிக்கிறார்கள் பாவச்செய்கையுள்ள அவனுக்கு அவனைப்போன்ற நடக்கையுள்ளவர்களும் நண்பர்களாகின்றனர். அவன் இம்மையிலேயே ஸுகத்தை அடைகிறதில்லை மறுமையில் எதனால்தான் அடைவான்? இவ்விதம் மனிதன் பாவச்செய்கையுள்ளவனாகிறான். இனி தர்மாத்மாவைக்குறித்துச் சொல்லுகிறேன்; கேள். நல்லதர்மத்தையுடையவன் க்ஷேமத்தை அடைகிறான்;குற்றமற்றதர்மத்தினாலேயே இஷ்டமானகதியை அடைகிறான். அவன் முன்னதாகவே தன்புத்தியினால் இந்தத்தோஷங்களைக் கவனித்துப் பார்க்கிறான். புத்திமானானவன் ஸுகத்திற்காக ஸாதுக்களை அடுத்துப் பணிவிடையுஞ்செய்கிறான் அவனுக்கு நல்ல ஆசாரத்தினாலும் அப்பியாஸத்தினாலுமே (நல்ல கர்மம்) விருத்தியடைகிறது. அந்தப்பிராஜ்ஞன் தர்மத்தில் விருப்பமடைகிறான்; தர்மத்தையே அடுத்துஜீவிக்கிறான் குருநந்தன! பிறகு; அவன் தர்மத்தால் தனங்களையடையும்பொழுது நன்

---

1 வேறுபாடம். 2 வேறுபாடம்.

3 மனமொழிமெய்களால் உண்டாவன.

மையுண்டானதைப்பார்த்து அதன்காரணத்தையே [1]விருத்திசெய்கிறான்; இவ்விதம் தர்மாத்மாவாகிறான்; நல்லமித்திரனையும் அடைகிறான் அவன், நன்னட்பு தனம் இவைகளுடையலாபத்தால் இம்மையிலும் மறுமையிலும் ஸந்தோஷிக்கிறான் பாரத! ஸ்பரிசத்திலும் சபதத்திலும் ரஸத்திலும் ரூபத்திலும் கந்தத்திலும் பராணியானது [2]பிரபுத்தன்மையை அடைகிறது பெரியோர்கள் இதைத் தர்மபலமாக நினைக்கிறார்கள் யுதிஷ்டிர! அவனே தர்மபலத்தை அடைந்து திருபதி அடைகிறதில்லை. குந்தியின்புத்திர! தாமதத்திலிருக்கிறவர்களுடைய ஸகலபோகக்கிரியைகளிலும் திருப்தியடையாமல' ஞானக்கண்ணாலே ஒழிவையே அடைகிறான். சபதத்திலும் ஸ்பர்சத்திலும் ரூபத்திலும் மனத்தைசசெலுத்தாமல ஞானக்கண்ணினால காமத்தில தோஷத்தைபபார்ப்பவன் காமத்தினின்றும் விடுபடுகிறான் ; தாமத்தைவிடுகிறதுமில்லை; நசிக்கின்ற உலகத்தைபபாாதது எல்லாவற்றையும்விடுவதிலும் முயற்சிசெய்கிறான்; பிறகு, உபாயத்தினால மோக்ஷத்தின் பொருட்டு முயற்சிசெய்கிறான்; உபாயமில்லாமல முயற்சிசெய்யான்; பிறகு, நாளடைவில ஒழிவை அடைகிறான்; பாபகாமததையும் தள்ளுகிறான் ; தர்மாத்மாவுமாகிறான் ; பரமான மோக்ஷத்தையும் அடைகிறான் அபபா! பாரத! நீ என்னிடம்கேட்ட பாவம் தாமம் மோக்ஷம் ஒழிவு என்கிற இவைகளைப்பற்றி உனக்குச சொனனேன் யுதிஷ்டிர! ஆகையால், எல்லாநிலைமைகளிலும தர்மததில ப்ரவருததி செய்யக்கடவாய் குந்தீபுத்திர! தாமத்திலிருபபவர்களுக்கு ஒழிவில்லாதஸித்தி உண்டாகின்றது" என்றுசொன்னார்.

---

## இருநூற்றெண்பதாவது அத்யாயம்
## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)

### (மோக்ஷத்திற்குரிய உபாயங்கள்.)

யுதிஷ்டிரர், "பாரதரே! பிதாமஹரான நீங்கள், 'உபாயத்தால் மோக்ஷம்; உபாயமில்லாமலில்லை' என்று சொன்னீர்கள். அந்தஉபாயத்தை முறைப்படி கேட்கவிரும்புகிறேன்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்

---

1 'வின்சதே' என்பது மூலம்.

2 'இவற்றைஅனுபவிக்கததக்கது' என்றுகருத்து.

"பிராஜ்ஞர்களிற்சிறந்தவனே! குற்றமற்றவனே! எப்பொழுதும் உபாயத்தினாலேயே எல்லாவிஷயங்களையும் ஆராய்கிறாயென்னும் இந்தத்தெளிவானஞானம் உனக்கே தக்கது. குடத்தைச்செய்கையில் எந்தப்புத்தியானது உண்டானதோ அது குடமுண்டான பிறகு வேண்டப்படுவதில்லை. இப்படியே யஜ்ஞாதிதர்மத்தினால் சாந்திமுதலான தர்மங்கள் ஏற்பட்டபொழுது (மோக்ஷத்திற்கு) வேறுகாரணம் வேண்டுவதில்லை. கீழ்ஸமுத்திரத்திற்குஇருக்கிற மார்க்கம், மேற்குஸமுத்திரத்திற்குச் செல்லுகிறதில்லை. மோக்ஷத்திற்கு ஒரேமார்க்கமன்றோ? அதை என்னிடமிருந்து விரிவாகக்கேள். தீரனானவன் பொறுமையால் கோபத்தைத் தொலைக்கவேண்டும்; ஸங்கல்பத்தின் தியாகத்தினால் காமத்தை நாசஞ்செய்யவேண்டும்; ஸத்வகுணத்தைப்பற்றிக்கொண்டு நித்ரையை விலக்கவேண்டும்; ஜாக்ரதையினால் பயத்தில்காக்கவேண்டும்;ஆத்மத்யானத்தினால் பிராணனைரக்ஷிக்கவேண்டும். தைர்யத்தினால் இச்சையையும் த்வேஷத்தையும் காமத்தையும் மிச்சமின்றி நீக்கவேண்டும்; ஐயம் திரிபு அறியாமைகளை அப்யாஸத்தினால் நீக்கவேண்டும். தத்வத்தை அறிந்தவன் ஞானாப்யாஸத்தினால் நித்திரையையும் புத்தியின்தோற்றமையையும் நிவ்ருத்திசெய்யவேண்டும். உபத்திரவங்களையும் ரோகங்களையும் ஹிதமாயும் ஜரிக்கக்கூடியதாயும் மிதமாயுமிருக்கிறஆகாரத்தினால் நிவ்ருத்திசெய்யவேண்டும். ஸந்தோஷத்தினால் லோபமோகங்களையும் தத்வதரிசனத்தினால் விஷயங்களையும் தயையினால் அதர்மத்தையும் ஜயிக்கவேண்டும். பரிபாலனத்தினால் தர்மத்தையும் வரவினால்ஆசையையும் ஆசையைவிலக்குவதனால் அர்த்தத்தையும் அநித்தியத்தன்மையினால் ஸ்னேகத்தையும் யோகத்தினால் பசியையும் கருணையினால் தன்னுடையமானத்தையும் ஸந்தோஷத்தினால் [1]திருஷ்ணையையும் [2]ஸஞ்சாரத்தினால் சோம்பலையும் பண்டிதன் ஜயிக்கவேண்டும். நிச்சயத்தினால் விபரீதஞானத்தை ஜயிக்கவேண்டும். மௌனத்தினால் அதிகவார்த்தையையும் சௌரியத்தினால் பயத்தையும் ஜயிக்கவேண்டும். புத்தியினால் வாக்கையும் மனத்தையும் அடக்கவேண்டும். அந்தப்புத்தியை [3]ஞானக்கண்ணால் அடக்கவேண்டும். ஞானத்தை மஹானான ஆத்மா அடக்கவேண்டும். மகத்தானஆத்மாவை ஆத்மா

1 ஆழ்ந்தபற்று.

2 'உத்தானேந' என்பது மூலம்; 'முயற்சியினால்' என்பதுபழையவுரை.

3 விருத்திஜ்ஞானம்.

வினுடையஞானமானது அடக்கவேண்டும் அப்படிப்பட்ட இந்த ஆத்மா சாந்தனும் சுத்தகர்மமுடையவனுமானவனால் அறியத்தகுந்தது. பண்டிதர்கள் யோகத்திற்குஇடையூறுகளென்று அபிப்பிராயப்படும் காமம், குரோதம், லோபம், பயம், நித்திரை என்னும்ஐந்தையும் விலக்கவேண்டும். அவற்றைவிலக்கிவிட்டுத் தியானம், அத்தியயனம், தானம், ஸத்யம், லஜ்ஜை, கபடமின்மை, பொறுமை, சுத்தி, உணவால்உண்டாகும்சுத்தி, பொறிகளின் அடக்கம் என்னும்யோக ஸாதனங்களை அப்யஸிக்கவேண்டும் இவைகளால தேஜஸ் விருத்தியடைகிறது; பாவமும் தொலைகிறது; இவனுடையஸங்கர்ப்பங்களும் ஸித்திக்கின்றன; விஜ்ஞானமும் ஏற்படுகிறது பாவம் அகன்றவனும் தேஜஸ்வியும் லகுவான ஆகாரமுள்ளவனும் இந்திரியஜய முடையவனுமாகிக் காமக்ரோதங்களைவசபடுத்திக்கொண்டு பரம்மத்தின்பதத்தை அடையவிரும்பவேண்டும் மூடனாகாமலிருத்தல், பற்றுதலற்றிருத்தல், காமக்குரோதங்களைவிலக்குதல், தீனனாகாமலிருத்தல், கர்வமில்லாமலிருத்தல், பயமில்லாமை, [1]உறுதியாயிருத்தல், (மற்றப்பயனில்) விருப்பமின்றி மனோவாக்குக்காயங்களின் அடக்கம் ஆகியஇவைகள் மோக்ஷத்திற்குத் தெளிவும் களங்கமற்றதும் சுத்தமுமான வழி.

---

## இருநூற்றெண்பத்தோராவது அத்யாயம்

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

**(பிராணிகளின் பிறப்பிறப்புக்களைப்பற்றி நாரதருக்கும் தேவலருக்கும்நடந்த ஸம்பாஷணை.)**

இந்தவிஷயத்திலும் நாரதருக்கும்அஸிதரென்னும் தேவலருக்கும் நடந்த ஸம்வாதரூபமான பழைய சரித்திரத்தைச் சொல்லுகிறார்கள். உட்கார்ந்திருக்கிறவரும் பிராயமுதிர்ந்தவருமான தேவலரை நாரதர் புத்திமான்களுள் சிறந்தவராக அறிந்து பிராணிகளுடைய உற்பத்தி நாசங்களைப்பற்றி, 'ஓ! பிராம்மணரே! ஸ்தாவர ஜங்கமஸ்வரூபமான இந்தப பிரபஞ்சமானது எதினின்றும் ஸ்ருஷ்டிக்கப்பட்டது? முடிவில் எதை அடைகிறது? அதை நீங்கள் எனக்கு நன்கு சொல்லவேண்டும்' என்று வினவ, அஸிதர் சொல்லத் தொடங்கினார்.

---

1 'அவ்யவஸ்திதி:' என்றுபிரித்து, 'வீடில்லாமை' என்பது பழைய வுரை.

'காலமானது பிராணிகளின் வாஸனையினால் ஏவப்பட்டு எவைகளால் பிராணிகளைப் படைக்கிறதோ அவைகளைப் பஞ்சமஹாபூதங்களென்று பூதவாதிகள் சொல்லுகின்றார்கள். காலமானது பரமாத்மாவால் ஏவப்பட்டு அந்தப்பூதங்களால் பிராணிகளைப் படைக்கிறது எவன் இவைகளைக்காட்டிலும வேறுஒன்றைச சொல்லுவானோ அவனை பொய்சொன்னவனுவான் ஸந்தேகமில்லை நாரதரே' இந்த ஐந்தையும், எபபொழுதுமிருபபவையும் சலியாதவையும் ஆதியந்த மற்றவையும் பெரியதேஜஸான மஹத்தத்வத்தினுடைய குவியல்களும் இயற்கையாகவே காலத்தை ஆறுவதாகவுடையவையும் அப்பு, ஆகாயம், பிருதிவி, வாயு, அக்நிகளுமாக அறியக்கடவீர். இந்தப் பூதங்களுக்கு மேறபட்டு ஸம்சயமிலலாமல (பதாரத்தம்)'ஸித்திக்கிற தில்லை அபபடிச சொலலுகிறவன் திருஷ்டாந்தத்துடனும் சொலல மாட்டான்; யுக்தியுடனும் சொலலமாட்டான. ஸம்சயமில்லை. அஸத்தையே சொலலுவான இந்த ஆறையும் எலலாமானவைகளாக அறியக்கடவீா. இவை எதனுடைய கார்யங்களோ அபபடிபபட்ட அஜ்ஞானத்தையும் அறியக்கடவீர் பூதஙகள் ஐந்து, காலம ஒன்று, விஷயசூன்யங்களான வாஸனை அஜ்ஞானமிரண்டு ஆகிய நிலைபெற்ற இந்த எட்டுப பூதங்களும் (ஸதாவரஜங்கமங்களான பிராணிகளுக்கு) உற்பத்திநாசகாரணங்கள் [1]அவைகளிலேயே நாசத்தை அடைகின்றன. அவைகளினின்றும் உண்டாகின்றன. ஐந்துவானது அவைகளை அனுஸரித்து நசித்தாலும் மறுபடி ஐந்துவிதமாகிறது. அந்த ஜந்துவினுடையதேகம் பூமியின்விகாரம் ஶ்ரோத்ரம் ஆகாயத்தினின்றும் உண்டானது. ஸூர்யனிடமிருந்து நேத்திரமும் வாயுவினின்றும் பிராணனும் ஜலத்தினின்றும் ரக்தமுமுண்டாயின. கண்கள், மூக்கு, காதுகள், துவக்கு, ஐந்தாவதான நா இந்த இந்திரியங்களையும் பார்த்தல், கேட்டல், முகாதல, பரிசித்தல, சுவையறிதல் என்கிற இந்திரியவிஷயங்களுடைய ஞானங்களையும் கவிகள் அறிகிறார்கள். ஒத்திருபபதினுலே ஐந்துஇந்திரியங்களின் விஷயத்திலும் ஐந்து குணங்களையும் அறிவாய் ரூபம் கந்தம் ரஸம் ஸ்பரிசம் சபதம் இவைகளே அவைகளின் குணங்கள். ஐந்து இந்திரியங்களாலும் ஐந்துகுணங்கள் ஐந்துவிதமாக அறியப்படுகின்றன ரூப ரச கந்த ஸ்பரிச சப்தங்களான அவற்றின்குணங்களை இந்திரியங்கள் அறிகிறதில்லை. ஜீவனே அவைகளால அவைகளை அறிகிறான். சித்தமானது

[1]வேறுபாடம்.

இந்திரியஸமூகத்திற்கு மேலானது அதைப்பார்க்கிலும் மனம் மேலானது. மனத்தைக்காட்டிலும் புத்தி மேலானது. ஜீவன் புத்தியைக் காட்டிலும் மேலானவன். எந்தப்பிராணியானது இந்திரியங்களோடு ஸம்பந்தப்பட்ட விஷயங்களை நினைத்துத் தீர்மானஞ்செய்கின்றதோ அந்தப்பிராணியானது முதலில் இந்திரியங்களால் விஷயங்களைத் தனித்தனியாக அறிகிறது பிறகு, மனத்தால் விசாரித்து அப்பால் புத்தியால் நிச்சயிக்கிறது. ஆத்மவிசாரம் செய்கிறவர்கள் சித்தம் இந்திரியக்கூட்டம் மனம் எட்டாவது புத்தி இந்தஎட்டையும் ஞானேந்திரியங்களாகச் சொல்லுகின்றார்கள் பாணி, பாதம், பாயு, மேஹநம்,ஐந்தாவதுமுகம் என்று சொல்லப்பட்டகர்மேந்திரியங்களையும் கேள். பேசுவதற்கும் ஆகாரம் செய்வதற்கும் உரிய இந்திரியம் முகமென்று சொல்லப்படுகிறது நடப்பதற்குரிய இந்திரியம் பாதங்களாகவும் கர்மாவைச் செய்வதற்குரிய இந்திரியம் கரங்களாகவும் புரீஷத்தை விடுவதிலும் காமத்தால் வீரியத்தை விடுவதிலும் ஸமமான தொழிலையுடைய இந்திரியங்கள் பாயுவாகவும் மேஹநமாகவும் சொல்லப்படுகின்றன. என்றால் சாஸ்திரத்தைஒத்து மனத்தை ஆறாவதாகவுடையவையும் வாக்குமுதலானவைகளுடன் கூடினவையுமான ஞானேந்திரியங்களும் ஞானம் சேஷ்டையென்கிற எல்லா இந்திரியங்களின் குணங்களும் நன்கு சொல்லப்பட்டன இந்திரியங்களுக்கு எப்பொழுது ப்ரமத்தால்தம்செய்கைகளிலிருந்து ஒழிவு ஏற்படுகிறதோ அப்பொழுது மனிதன் இந்திரியங்களைத்தியாகஞ்செய்துவிட்டுத் தூங்குகிறான் இந்திரியங்கள் ஒழிவடைந்து மனம் ஒழிவடையாமலிருக்குமானால் விஷயங்களையே பற்றி நிற்கிறான். அதை ஸ்வப்நாநுபவமாக அறியவேண்டும் (ஸ்வபநத்தில்) ஸாத்விகமும் ராஜஸமும் தாமஸமுமான வாஸனாரூபமாகியஸூக்ஷ்ம விஷயங்கள் (புண்ணியபாப) கர்மங்களுடன் கூடிக்கொண்டு இருக்கும் (அவைகளில்) ஸாத்விகங்களைச் சிலாகிக்கின்றார்கள் அப்படி மற்றவைகளைச் சிலாகிப்பதில்லை ஸாத்விகனுடைய கருத்தானது ஆனந்தம், கர்மங்களின் ஸித்தி, ஞானம், உயர்ந்தகதிக்குக் காரணமான தர்மம் என்னும் தனக்குக்காரணங்களாகிய இந்த ஜாக்ரத்வாஸனாமயமான விஷயங்களைப்பற்றி நிற்கிறது. இவ்விதம் ஸாத்விக ராஜஸ தாமஸர்களில் எவன் எப்படிப்பட்ட வாஸனையை அடைந்திருக்கிறானோ அவனுடைய நினைவு அந்த வாஸனையைப் பற்றுகிறது ஜாக்ரத்ஸ்வப்நங்களிலுண்டான இரண்டு வாஸனைகளு

டைய பிரத்யக்ஷமான நாசமானது நித்தியமு் விரும்பப்பட்டதாக இருக்கிறது (மனம் புத்தி சித்தம் பிராணன் ஞானேந்திரிய கர்மேந்திரியங்கள் ஆக) இந்திரியங்கள் (பதினைந்து) (ஸாத்விக ராஜஸ தாமஸ) வாஸனைகள் (மூன்று) (ஆகப்) பதினேழும் குணங்களாக எண்ணப்பட்டிருக்கின்றன. இவைகளுக்குப்' பதினெட்டாமவன் தேஹி. எவன் சரீரத்திலிருக்கிறானோ அவன் அழிவற்றவன் அல்லது, சரீரத்துடன் அந்தப்பதினேழும் சேர்ந்து ஆகப்பதினெட்டும் சரீரிகளானஜீவர்களுக்குக் குணங்கள். அவைகளு் சரீரியைப்பற்றி நிற்பவை. சரீரிபிரிந்தபொழுது சரீரத்துடன் சேர்ந்த அவைகள் இருப்பதில்லை. அல்லது, பிரிவுபிரிவாகப் பஞ்சபூதவிகாரமானசரீர மொன்றும் கர்மேந்திரியம் அவைகளின் சேஷ்டை ஆகப்பத்தும் ஞானேந்திரியம், சித்தம், மனம், புத்தி ஆகஎட்டும் சேர்ந்து சரீரிகளுடைய குணங்கள்; அல்லது, ஜாடராக்கினியுடன் சேர்ந்து இருப்தும் பஞ்சபூதவிகாரமான ஒருகூட்டம். இந்தஸங்கமான சரீரத்தை மஹானான ஆத்மாவானவன் பிராணவாயுவுடன்கூடநன்குதரிக்கிறான். (அந்தப்பிராணன்)உண்மையான திறமையுள்ள ஆத்மாவினுடையதேகத்தை நசிக்கச்செய்வதற்குக் காரணம் ஒருபொருள் எப்படி உண்டாகிறதோ அபபடியே அழிவை அடைகிறது. இந்தஜீவன் புண்யபாவம் நசித்தவுடன் வேறுபுண்யபாவத்தாலஏவப்பட்டுக் காமாவினால்ஏற்பட்டசரீரத்தைக் காலத்தால அடைகிறான். எபபொழுதும் ஓர் ஆதாரத்தைப்பற்றியவனான இந்தத்தேஹிகாலத்தினால்ஏவப்பட்டு,ஜீர்ணமான வீட்டைவிட்டு மறுவீட்டையடைவதுபோல, திரும்பவும் திரும்பவும் ஒருசரீரம்விட்டுமறுசரீரத்தை அடைகிறான். நிசசயஞானத்தையுடையபண்டிதர்கள் அதைக்குறித்துப பச்சாத்தாபப்படுகிறதில்லை; (சரீரம்) தமதெனனும் அபிமானமுள்ள எளிய அறிவுள்ளஜனங்கள் பச்சாத்தாபப்படுகிறார்கள். இவன் ஒருவனையுஞ்சேர்ந்தவனல்லன் இவனைச்சேர்ந்தவனும் ஒருவனுமில்லை. இவன் சரீரத்தில் புண்ணிய பாபங்களைச்செய்துகொண்டு எப்பொழுதும் தனியாகவே இருக்கிறான். பிராணியினுடையஆத்மாவானவன் ஒருபோதும் ஜனிக்கிறதேயில்லை; ஒருபோதும் நசிக்கிறதுமில்லை ஒருபோது' இவன் தேகத்தைவிட்டு மேலானகதியை அடைகிறான். அந்தஜீவன் புண்யபாபமயமானதேகத்தைக் கர்மநாசத்தினால க்ஷயிக்கச்செய்து அப்போது அடைந்திருக்கிறதேகத்தின்முடிவில் ப்ரம்மபாவத்தை அடைகிறான். புண்யபாவங்களுடையநாசத்திற்காகஸாங்கியம்என்னும்ஆத்மஜ்ஞானம் விதிக்கப்படுகிறது. புண்யபாவங்கள்நசித்தபின் ப்ரம்மத்தன்மையுண்டாகிச் சிறந்தகதியானமோக்ஷத்தை மனத்தில் அனுபவிக்கிறார்கள்' என்றுசொன்னார்" என்றுகூறினார்.

---

## இருநூற்றெண்பத்திரண்டாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(ஜனகர் ஆசையைவிடுவதே ஸுககாரணமென்பதை மாண்டவ்யருக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பாவபுத்தியுடையவர்களும் க்ரூரர்களுமான எங்களால் தனத்திற்காகப் பிராதாக்களும் தந்தைகளும் பேரர்களும் ஞாதிகளும் மித்ரர்களும் புத்ரர்களும் கொல்லப்பட்டார்கள். ஓ பிதாமஹரே! பொருள்விஷயத்திலுண்டான அவாவை எப்படி நாங்கள் நிவிருத்திசெய்வோம்? அவாவினால் நாங்கள் பாவங்களைச்செய்யும் படி தூண்டப்பட்டோம்" என்றுசொல்ல, பீஷ்மர் சொல்லலானார்.

"இந்தவிஷயத்திலும் விதேஹராஜன் தன்னிடம்கேட்டமாண்டவ்யருக்குச்சொல்லிய புராதனமான இந்தசரித்திரத்தைச் சொல்லுகிறார்கள். விதேஹராஜன், 'மிகவும்ஸுகமாக ஜீவிக்கின்றேன் எனக்கு ஒன்றிலும் பற்றுதலில்லை ஆகையினால், மிதிலைஎரிந்தாலும் என்னுடையது ஒன்றும் எரிக்கப்படவில்லை. ஞானிகளுக்கு நிறைந்த பொருள்களும் அதிகமான துக்கமல்லவா? குறைவானபொருள்களுங் கூட அறிவீனர்களை எப்பொழுதும் மயக்குகின்றன. இவ்வுலகில் காமத்தினாலுண்டாகும் ஸுகமும் தேவலோகத்திலுள்ள மஹத்தான ஸுகமும் அவாவின்நாசத்தினாலுண்டான ஸுகத்தினுடைய பதினாறில் ஒருபாகத்தைக்கூட அடையயோக்யமாகிறதில்லை. பசுவானது காலத்தில் விருத்தியடையும்பொழுது அதன் கொம்பானது விருத்தியடைவதுபோலத் தனம்விருத்தியடையும்பொழுது அவாவும் விருத்தியடைகிறது. 'என்னுடையது' என்று அபிமானிக்கப்பட்ட சிறிய பொருளும் நசிக்கும்பொழுது பெரியவருத்தத்தை உண்டுபண்ணுகிறது. விஷயங்களில் பற்றுவைக்கக்கூடாது. விஷயங்களிலுண்டான பற்றுதலானது துக்கமன்றோ? அர்த்தத்தை அடைந்தால் தர்மத்தை அனுஷ்டிக்கவேண்டும்; காமங்களை விலக்கவேண்டும். வித்வானானவன் எல்லாப்பிராணிகளிடத்திலும் [1]தன்னிடத்திலிருப்பதுபோல இருக்க வேண்டும். பரிசுத்தமானமனமுள்ளவனும் க்ருதார்த்தனுமானவித்வான் எல்லாவற்றையும் தானாகவே விடுகிறான். ஆகையினால், [2]மெய் பொய்களையும்ஸுகதுக்கங்களையும்அன்பு அன்பின்மைகளையும் பயம்

1 வேறுபாடம். 2'விழிப்புஸ்வப்னங்கள்' என்பது பழையவுரை.

பயமின்மைகளையும் தள்ளிவிட்டு மனோவியாதியற்றுச் சாந்தராகக் கடவீர். அறிவில்லாதவர்களால்விலக்கமுடியாததும் உடையவன் ஜீர்ணதசையை அடைந்தாலும் தான்ஜீர்ணதசையடையாததும் மரண பரியந்தமுள்ளரோகமுமான ஆசையைவிட்டவனுக்கே ஸுகம். சந்திரன்போலச்சுத்தனும் குற்றமற்றவனுமான தர்மாத்மாவானவன் தன்னுடையஆசாரத்தைப்பார்த்துக்கொண்டு இம்மையிலும் மறுமையிலும் கீர்த்தியையும் ஸுகத்தையும் அடைகிறான்' என்றான். மாண்டவ்யனென்கிறபிராம்மணர் இவ்விதம் அரசனுடையஅந்தவார்த்தையைக்கேட்டு பரீதியுடையவரானார்; அந்தவசனத்தைக்கொண்டாடி மோக்ஷத்தையுமடைந்தார்" என்றுசொன்னார்.

---

### *இருநூற்றெண்பத்துமூன்றாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

**(காலம்விரைந்துசெல்லுதலால் நற்கதிக்குரியதை உடனேசெய்ய வேண்டுமென்பதைப்பற்றி ஒருதந்தைக்கும் தநயனுக்கும்நடந்த ஸம்பாஷணை.)**

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! காலமானது ஸகலப்பிராணிகளுக்கும் பயத்தைக்கொடுத்துக்கொண்டு செல்லும்பொழுது என்ன ச்ரேயஸ் அடையப்படும்? அதனை எனக்குச் சொல்லும்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

" யுதிஷ்டிர! இந்த விஷயத்திலும் ஒருபிதாவுக்கும் புத்திரனுக்கும் நடந்த ஸம்வாதமான பழையஇவ்விதிஹாஸத்தை உதாகரிக்கிறார்கள். அதனை அறியக்கடவாய் குந்தீபுத்திரா! வேதாத்தியயனத்தில் மிக்கபற்றுதலுள்ள ஒரு பிராம்மணனுக்கு மேதாவியென்று பெயருடைய மேதாவியான புத்திரனொருவன் இருந்தான். மோக்ஷத்திற்குரிய தர்மங்களில்ஸமர்த்தனான அந்தபுத்திரன், மோக்ஷதர்மங்களில் ஸாமர்த்தியமில்லாதவரும் தம்வேதத்தைஓதுவதில்பற்றுதலுடையவருமான பிதாவைநோக்கி, 'தந்தையே! மானிடர்களுடைய ஆயுள் விரைவாகச்சென்றுவிடுவதால தீரனானவன் எதை நன்குஉணர்ந்து அனுஷ்டிக்கவேண்டும்? ஓ! தந்தையே! நான்செய்யவேண்டியதும் உள்ளபடி பயனைஅளிப்பதுமான தர்மத்தை எனக்கு முறையா

---

*இவ்வத்யாயக்கதை முன் 174-வது அத்யாயத்தில் சிறிதுமாறுபட்டு வந்திருக்கிறது.

கச்சொல்லும்' என்றுகேட்க, பிதா, 'குமாரனே! பிரம்மசரியவிரதங்களிலிருந்து வேதங்களை அத்தியயனஞ்செய்து பிறகு பித்ருக்களைப் பரிசுத்தஞ்செய்யவேண்டிப் புத்திரர்களை உண்டுபண்ணவேண்டும். அக்னிகளை ஆதானஞ்செய்து விதிப்படி யஜ்ஞங்களை அனுஷ்டித்துப் பிறகு வனத்தையடைந்து முனியாவதற்கு விரும்பவேண்டும்' என்று சொன்னார். புத்திரன், 'இவ்விதம் உலகமானது அடிக்கப்பட்டும் எங்கும்சூழப்பட்டும் பழுதுபடாமல்சென்றுகொண்டுமிருக்க நீர் என்ன தீரர்போலப்பேசுகிறீரே?' என்று சொன்னான். பிதா, 'உலகம் எப்படி அடிக்கப்பட்டிருக்கிறது? எதனால் சூழப்பட்டிருக்கிறது? இவ்வுலகில் பழுதற்றவைகளாக எவைகள் விழுகின்றன? என்ன என்னைப் பயப்படுத்துகிறாய்?' என்றுவினவ, புத்திரன், 'உலகம்மிருத்யுவினால் அடிக்கப்பட்டிருக்கிறது; ஜரையினால் சூழப்பட்டிருக்கிறது. இராப்பகல்கள் சென்றுகொண்டிருக்கின்றன. இவற்றை ஏன் அறிகிறீரில்லை? மிருத்யுவானவன் நிற்கமாட்டானென்று அறிகையில் நானே *ஞானத்தால் காப்பாற்றிக்கொள்ளாமல் எங்ஙனம் காத்திருப்பேன்? ஒவ்வோர்இரவும்சென்று ஆயுள்மிகவும்குறைந்துகொண்டு வருவதால் ஆழமில்லாதஜலத்திலிருக்கும்மத்ஸ்யம்போல எவன் ஸுகத்தைஅடைவான்? எந்தமுதல்இரவிலே கர்ப்பம் மாதாவை அடைகிறதோ அந்தஒருராத்ரிதூங்கிவிட்டுப பிறகு மரணத்திற்கு வழிப்படுகிறது. வேறுவிஷயத்தில் மனத்தைச்செலுத்திக்கொண்டு புஷ்பங்களைத்தேடுகிறவன்போலிருக்கிறமனிதனை விருப்பங்கள்நிறைவேறு முன்னமே மிருத்யு அடைகிறான். நாளைசெய்யவேண்டியதை இன்றே செய்யவேண்டும். மாலையில்செய்யவேண்டியதைக் காலையிலே செய்யவேண்டும். இவனுடையகாரியம் செய்யப்பட்டதையாவது செய்யப்படாததையாவது மிருத்யு எதிர்பார்க்கமாட்டான். ஆகையால், ச்ரேயஸைக்கொடுக்கக்கூடியதை இப்பொழுதே செய்யக்கடவீர். உம்மை மகத்தானகாலமானது கடந்துபோகவேண்டாம் யாருக்கு இன்னஸமயம் மரணகாலம்வரப்போகிறதென்று யார் அறிவார்? காரியங்கள்செய்யப்படாமலிருக்கையிலேயே ம்ருத்யு இழுக்கிறான். யௌவனமுள்ளபொழுதே தர்மசீலனாகவேண்டும். உயிர்வாழ்தல் நிமித்தமில்லாததாயிருக்கிறது. தர்மமானதுசெய்யப்பட்டால் இகத்திலும் பரத்திலும் அழிவில்லாதஇன்பமே உண்டாகும். மோகத்தால் மிகவியாபிக்கப்பட்டவனன்றோ மனைவிமக்கள்விஷயத்தில் முயற்சி

*'அஜ்ஞானத்தில்மறைந்து' என்றும்கொள்ளலாம்.

செய்துசெய்யக்கூடியதையோசெய்யக்கூடாததையோ செய்து இவர் களுக்குப் பிரீதியைக் கொடுப்பான்? புத்திரர்களையும்பசுக்களையு முடையவனும் அதிகமாக விஷயத்தில்அழுந்தினவனுமான அந்தமனி தனை மிருத்யுவானவன்,தூங்குகின்றபுலியைப் பெரியவெள்ளம்போல, எடுத்துக்கொண்டுபோகிறான். காமங்களில்சிறிதும்திருப்தியடையா மல (அவற்றைச்) சேகரிக்கின்றபோதே இவனை மிருத்யுவானவன்பெ ண்செந்நாய் செம்மறியாட்டைப்பிடிப்பதுபோலப்பிடித்துக்கொண்டு போகிறான் 'இந்தக்காரியம் செய்யப்பட்டுவிட்டது. இது செய்யப் படவேண்டியதாயிருக்கிறது மற்றொன்றுசெய்யப்பட்டதும் செய்யப் படாததுமாயிருக்கிறது' என்றஆசையுள்ளவனை ம்ருத்யுவானவன் எடுத்துக்கொண்டுபோய்விடுகிறான். செய்யவேண்டியவைகள்நடந்து கொண்டிருக்கையில் செய்யப்பட்டகாரியங்களின்பயனை அடையாத வனும் நிலம், கடை, வீடுஇவைகளில்பற்றுள்ளவனுமாயிருப்பவனை மிருத்யு எடுத்துக்கொண்டு போய்விடுகிறான் பலமற்றவனையும் பலவா னையும் புத்திசாலியையும் சூரனையும் மூடனையும் கவியையும் எல்லாக் காமங்களையும அர்த்தங்களையும்அடையாமலிருக்கையிலேயேமிருத்யு எடுத்துக்கொண்டுபோய்விடுகிறான் மரணமும் கிழத்தனமும் வியா தியும் அநேகவிதகாரணங்களுள்ள துக்கமும் மனிதர்களால நவெகு விலக்கமுடியாமலிருக்க ஏன்கவலையற்றவர்போலிருக்கிறீர்? பிறந்த உடனேயே தேகியை மிருத்யுவும் ஜரையும் நாசம்பண்ணுவதற்காக அடைகின்றன; ஸ்தாவரஜங்கமங்களான இந்தப்பிராணிகள் இரண்டி னாலும் தொடரப்படுகின்றன மிருத்யுவின்ஸேனைவரும்பொழுது ஒருவனாலும் ஒருகாலும் ஸத்தியம்ஒன்றினாலல்லது டலத்தினால் தடுக்கவியலாது ஸத்தியத்திலன்றோ *அமிருதமானதுநிலைபெற்றிருக் கிறது? 'கிராமத்திலிருக்கிறவனுடையவிஷயப்பற்றுதலென்பது மிரு த்யுவின்வீடு வனமென்பது தேவர்கள்கூடுமிடம்' என்று வேதம் சொல்லுகிறது கிராமத்தில்வசிப்பவனுடையவிஷயப்பற்றானதுகட்டு கிறபாசமாகும். புண்யசாலிகள் இந்தப்பாசத்தை அறுத்துவிட்டுப் போகிறார்கள். பாவிகள் இதை அறுப்பதில்லை மனம்மொழிசெய்கை யாகியகாரணங்களால் பிராணிகளை ஹிம்ஸியாதவனஉயிரையும்பொரு ளையும்கவரும்பிராணிகளால் கட்டப்படுவதில்லை. ஆகையால், ஸத்திய மானவிரதமும்ஆசாரமுமுள்ளவனும் ஸத்தியமானவ்ரதத்தையேமுக் கியமாகக்கொண்டவனும் ஸத்யத்தில்விருப்பமுள்ளவனும் எல்லாப்

---

*மோக்ஷம், மரணமில்லாமை, அல்லது ப்ரம்மம்.

பிராணிகளிடத்திலும் ஸமமானவனும் மனவடக்கமுள்ளவனுமாகி ஸத்யத்தினாலேயே மிருத்யுவை ஜயிக்கவேண்டும். அமிருதம், மிருத்யு இரண்டும் தேஹத்திலேயே ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன மோகத்தினால் மிருத்யு அடையப்படுகிறது ஸத்யத்தினால் அமிருதம் அடையப்படுகிறது அப்படிப்பட்டநான் கொல்லாமையைவிரும்புகிறவனும் காமக்குரோதங்களை விலக்கியவனுமாகி ஸத்தியத்தைக்கைப்பற்றி ஸுகமாக க்ஷேமத்துடன் மிருத்யுவில்லாதவன்போல மிருத்யுவை விலக்கப்போகிறேன். சாந்தியாகிற யஜ்ஞத்திலபற்றுதலுடையவனும் இந்திரியங்களைவசஞ்செய்தவனும்பிரம்மத்தியானமுடையவனும்மௌனியும் ஜபம், தியானம், ஸ்நானமுதலியவற்றையஜ்ஞமாகவுடையவனுமாகி உத்தராயணமார்க்கத்திற்குரியவனாவேன் என்னைப்போன்ற அறிஞன், பிசாசம்போலஹிம்ஸைக்குக்காரணமும் முடிவுள்ளவையும் க்ஷத்திரியஜாதிக்குரியயாகங்களுமான பசுயாகங்களை எப்படி செய்யத்தக்கவனாவான்? பிதாவே! ஆத்மாவில்மனத்தைசசெலுத்தி ஆத்மாவிலநிலைபெற்றுப பிரஜைகளை அடையாமல ஆத்மயஜ்ஞமுடையவனாகப்போகிறேன். பிரஜையானது என்னைக் கரையேற்றமாட்டாது. எவனுடையவாக்கும் மனமும் தவமும் தியாகமும் யோகமும் எப்பொழுதும் நன்கு உறுதிபபடுத்தபபட்டவைகளாகுமோ அவன் அவைகளால எல்லாவற்றையும் அடைவான். வித்தைக்குஸமமான நேத்திரமிலலை. வித்தைக்கு ஸமமானபயனுமிலலை. ஆசைக்கு ஸமமான துக்கமுமில்லை. ஸந்யாஸத்திறகுசசமமான ஸுகமுமில்லை. பிராம்மணனுக்குத் தனிமை, ஸமபுத்தி, ஸத்யம், நல்லசீலம், வாக்கு மனம்காயம்இவைகளை அடக்கல்,கபடமின்மை,ஸகலகாரியங்களிலிருந்தும்ஒழிவு இவைகளுக்கு ஸமமான தனம் இலலை ஓ! பிராம்மணரே! மரிக்கப்போகின்றஉமக்குத் தனங்களால என்னபயன்? உறவினர்களால்தான் என்னபயன்? மனைவியினாலதான் என்னபயன்? ஹ்ருதய குகையில்புகுந்திருக்கின்ற ஆத்மாவைத்தேடும் உம்முடையபாட்டன்மார் எங்கேபோனார்கள்? உம்முடையபிதாவும் எங்கேபோனார்?" என்றான் அரசனே! புத்திரனுடைய இவவிதமான வார்த்தையைக் கேட்டுத் தந்தையானவர் அபபடியேசெய்தார் ஓ! அரசர்களிலுத்தமனே! நீயும் அப்படியே ஸத்யமானதர்மத்தில பற்றுதலுள்ளவனாகக் கடவாய்" என்றுசொன்னார்

---

## இருநூற்றெண்பத்துநான்காவது அத்யாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



**(ப்ரம்மத்தைஅடைவதற்குரிய ஆசாரமுதலியன.)**

யுதிஷ்டிரர், "எவ்வித ஸ்வபாவமும் எவ்வித நல்லஆசாரமும் எவ்விதமுானவித்தையும் எவ்விதமான ஆம்ரயமுமுள்ளவன் மூலப் பிரகிருதிக்கு அப்புறமுள்ளதும் சலனமற்றதுமான ப்ரம்மத்தின் ஸ்தானத்தை அடைகிறான்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"மோக்ஷதர்மங்களில் பற்றுதலுள்ளவனும் மிதமான ஆகாரமுடையவனும் இந்திரியங்களை ஜயித்தவனுமானவன் பிரகிருதிக்கு மேற்பட்டதும் சலனமற்றதுமான பரமமானஸ்தானத்தைஅடைகின்றான். யுதிஷ்டிரா! இந்தவிஷயத்திலும் முன்காலத்தில் ஹாரீதரால் சொல்லப்பட்ட பழமையான ஒருசரித்திரத்தைச் சொல்லுகிறார்கள். அதை அறியக்கடவாய் இம்மைக்குரியபொருள்களை வேண்டுமட்டும் அடைந்திருக்கும்போதே ஆசையில்லாமல் தன்னுடையவீட்டினின்றும்கிளம்பிக் கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் மனவேறுபாடின்றி மௌனத்துடன் ஸன்யாஸத்தை அடையவேண்டும் நேத்திரத்தினாலும் மனத்தினாலும் வாக்கினாலும் பிறனைத் தூஷிக்கக்கூடாது. நேரிலோ அல்லதுபுறத்திலோ ஒரிடத்திலும் தூஷணத்தைச் சொல்லக்கூடாது. ஒருபிராணிக்கும் துன்பம்செய்யக்கூடாது. ஸூரியனுடையகதிபோன்றகதியுடன் ஓரிரவுஓரிடமாய் ஸஞ்சரிக்கவேண்டும். இந்தஜீவனத்தை அடைந்து ஒருவனோடும் வைரத்தைச் செலுத்தக்கூடாது எல்லைகடந்தசொற்களைப் பொறுக்கவேண்டும். ஒருவனைப்பற்றியும் அகங்காரத்தை அடையக்கூடாது கோபிக்கப்பட்டாலும் பிரியவார்த்தைசொல்லவேண்டும். வையப்பட்டாலும் நல்லவார்த்தைசொல்லவேண்டும். [1]கிராமத்தின்மத்தியில் இடமும்வலமுமாகப் போகக்கூடாது. பிக்ஷாடனத்தைச்செய்யாமல் [2]முந்தியே அழைக்கப்பட்டுப் போகக்கூடாது. [3]புழுதிகளாலிறைக்கப்பட்டாலும் நன்றாக மனத்தைஅடக்கிக்கொண்டு வாக்கினால்கூட அப்பிரியத்தைச்

---

1 'கிராமப்பொதுக்காரியங்களில் அனுகூலமாகவும் பிரதிகூலமாகவும் நடக்கக்கூடாது' என்பது பழையவுரை.

2வேறுபாடம். 3அவமதிக்கப்பட்டால்.

சொல்லாமலிருக்கவேண்டும். தயையுள்ளவனும் ப்ரதிசெய்யாதவனும் பயமற்றவனும் தோஷமில்லாதவனுமாயிருக்கவேண்டும். புகை அடங்கி உலக்கைசார்த்தித் தணலவிந்து ஜனங்கள்புஜித்துப் பரிமாறுகின்றவர்களுடையஸஞ்சாரம்நின்றபொழுது முனியானவன் பிக்ஷையை அடையவிரும்பவேண்டும் ஆகாரங்களின்லாபங்களில் ஆதரவு வையாமல் ப்ராணயாத்திரைக்குமட்டும் ஆகாரமுடையவனாயிருக்க வேண்டும். கிடையாதபொழுது வருத்தமடையக்கூடாது. லாபமும் இவனை மகிழ்விக்கக்கூடாது எல்லாருக்கும்பொதுவான சந்தனம் ஆரமுதலானலாபத்தை விரும்பக்கூடாது. பூஜிக்கப்பெற்றுப் புஜிக்கக்கூடாது. அப்படிபபட்டவன் பூஜித்துக்கொடுப்பதை வெறுக்கவேண்டும். அன்னதோஷங்களை இகழக்கூடாது. குணங்களையும் புகழக்கூடாது. ஏகாந்தமானபடுக்கையையும் இருத்தலையும் எப்பொழுதும் விரும்பவேண்டும் சூன்யகிருகத்தையோ மரத்தின் அடியையோ அல்லது வனத்தையோ குகையையோ ஒன்றை ஒருவருக்குந்தெரியாமல அடைந்து மற்றோரிடத்தில்போய் வஸிக்கவேண்டும். சலனமற்றவனும் நிலைபெற்றவனுமாகி (பிறர்) அனுஸரித்தாலும் விரோதித்தாலும் ஸமமாயிருக்கவேண்டும் தன்கர்மாவில[1]நல்ல கார்யத்தையோ கெட்டகார்யத்தையோஇரண்டையும் நினைக்கக்கூடாது. எப்பொழுதும்திருப்தியுடையவனும் மிகவும் ஸந்தோஷமுடையவனும்தெளிவானமுகமும்இந்திரியங்களுமுடையவனும் பயமற்றவனும் ஜபிக்கவேண்டிய (ப்ரணவத்)தைமுக்கியமாகக்கொண்டவனும் (மற்ற வார்த்தைகளில) மௌனமுள்ளவனும் வைராக்யத்தை உறுதியாக அடைந்தவனும் பூதவிகாரமானதேஹம்இந்திரியமுதலானவற்றையும் பிராணிகளின் [2]போக்குவரவுகளையும் கவனித்து ஆச்சரியமடைந்தவனும் எல்லாவற்றையும்பார்க்கிறவனும் பக்வபதார்த்தத்தினாலும் அபக்வபதார்த்தத்தினாலும்ஜீவிப்பவனும ஆத்மாவில்ரமிக்கிறவனும் மிகவும்சாந்தமானசித்தமுடையவனும் லேசானஉணவுடையவனும் இந்திரியங்களை ஜயித்தவனுமாயிருக்கவேண்டும். தவமுடையவனாகி வாக்கின்வேகத்தையும் மனத்தினாலுண்டான கோபத்தின்வேகத்தையும் பிறருக்குத்துன்பம்செய்தலிலுண்டானவேகத்தையும் உதரம் குறி இவைகளின்வேகத்தையும் விலக்கவேண்டும். பிறர்செய்த நிந்தையும் இவனுடையமனத்தைக் கெடுக்கக்கூடாது. புகழ்ச்சி இகழ்ச்சிகளை ஒப்பாகக்கொண்டு மத்யஸ்தனாகவேஇருக்கவேண்டும்.

---

1 புண்யபாபமிரண்டையும். [2]ஜனனமரணங்களையும்.

ஸன்யாஸியானவன் பரிசுத்தமாயும் மேலனதாயுமிருக்கிற இந்தஸாதனத்தை அவலம்பிக்கவேண்டும் மகத்தான சித்தமுடையவனும் ஸகல விஷயங்களிலும்அடங்கினவனும் ஓரிடததிலும் ஸங்கமில்லாதவனும் முன்பழகியவிடத்திற்சேராதவனும் ஸமாதியுடையவனும் மெல்லிய தன்மையுள்ளவனும் தனக்காக ஓரிருப்பிடமில்லாதவனுமாயிருந்து கொண்டு ஒருபொழுதும் வானப்பிரஸ்தன் கிருகஸ்தன் இவர்களுடன சேராமலிருக்கவேண்டும் இன்னவிடமிருந்து லாபம்கிடைக்குமென்பதைக்கருதாமலே உணவு ஆடைமுதலியவைகளை அடையவிரும்ப வேண்டும் (லாபத்தில்) இவனைச் சந்தோஷம் அடையக்கூடாது வித்வான்களுக்கு இந்தஸன்யாஸாச்ரமம் மோக்ஷஸாதனமாகும் அவித்வான்களுக்கு இது ச்ரமமாகும் இவைஎல்லாவற்றையும் வித்வான்களுக்கு மோக்ஷவழியென்று ஹாரீதர் சொன்னார் எவன எல்லாப் பிராணிகளுக்கும் அபயத்தைக்கொடுத்துவிட்டு வீட்டிலிருந்துவெளிப்பட்டுசெல்லுவானோ அவனுக்குத் தேஜோமயமான உலகங்கள் ஸித்திக்கும். அவன் மோக்ஷத்தையடையத்தகுந்தவனுவான்" என்று சொன்னார்.

---

## இருநூற்றெண்பத்தைந்தாவது அத்யாயம்
## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)

**(அறிவே ஸுகதுக்கங்களுக்குக் காரணமென்பதைப்பற்றிச் சநிதருக்கும் விருத்ரனுக்கும்நடந்த ஸம்பாஷணை.)**

யுதிஷ்டிரர், "எல்லாஜனங்களும்எங்களை, 'தன்யர்கள், தன்யர்கள்' என்றுசொல்லுகிறார்கள். ஆனால், இவ்வுலகில் எங்களுக்கொப்பாக ஒருவனும் மிகவும்துக்கத்தைஅடைந்தவனில்லை ஓ! குருகுலத்திற்சிறந்தவரே! பிதாமஹரே! உலகத்தாரால்மதிக்கப்பெற்ற தேவர்களாலே மானிடர்களிடத்தில்உற்பத்தியையடைந்தும் நாங்கள் துக்கத்தையடைந்தோம் எப்பொழுது துக்கத்திற்கு ஔஷதமான ஸன்யாஸத்தை நாங்கள் அடையப்போகிறோம்? ஓ! குருச்ரேஷ்டரே! சரீரங்களைத் தரிப்பதென்பது துக்ககரமானது. ஓ! பிதாமஹரே! கடுமையான விரதமுடையமுனிவர்கள் (பிராணன்கள் ஐந்து, இந்திரியங்கள் பத்து, மனம் புத்தி இரண்டு ஆகப்) பதினேழாலும் ஸம்ஸாரகதியையுண்டுபண்ணுகிற (காமம் க்ரோதம் லோபம் பயம்

ஸ்வப்னமென்கின்ற யோகதோஷங்கள்) ஐந்தாலும் (சப்தஸ்பரிசரூப ரஸகந்தங்களென்கிற) இந்திரியவிஷயங்களாலும் (ஸத்வரஜஸ்தமோ) குணங்களாலும் (ஸ்தூலபூதங்கள்ஐந்து, அவித்தை, அஹங்காரம், கர்மம் ஆகிய) எட்டாலும் விடப்பட்டு மறுஜன்மத்தை அடையாமலி ருக்கிறார்கள். சத்துருக்களைத் தபிக்கச்செய்பவரே! நாங்கள் ராஜ்யத் தைவிட்டுவிட்டு எப்பொழுது செல்வோம்?" என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"ஓ! மஹாராஜனே! முடிவில்லாதது ஒன்றுமில்லை. எல்லாம் அளவில் அடங்கியதே. மறுஜன்மமும் அளவிடப்பட்டிருக்கிறது. இவ்வுலகில் ஒன்றும் ஸ்திரமானதில்லை ஓ! அரசனே! அதிகப் பற்றுதலினாலே இந்த ராஜ்யதோஷம் அடையப்படுகிறதில்லையென்ப தில்லை. ஆனாலும், தர்மத்தை அறிந்த நீங்கள் முயற்சியினாலேயே சிறிதுகாலத்தில் மோக்ஷத்தை அடையப்போகிறீர்கள் ஓ! அரசனே! தேஹியானவன் எப்பொழுதும் புண்ணிய பாவங்களுக்குத் தக்கவனாகிறதில்லை; அவைகளாலேயே கிளம்பின மோகத்தினால் வியாபிக்கவும்படுகிறான். (ரூபமற்ற) வாயுவானது முதலில்அஞ்சனம் பிறகு மனச்சிலையின்பொடி இவைகளின் ஸம்பந்தத்தால் அவ்வவற் றின் வர்ணமுள்ளதாகித் திசைகளை அந்தஅந்தவர்ணமுள்ளனவாகச் செய்வதாகக் காணப்படுவதுபோல ராகத்வேஷாதிகளற்ற ஆத்மாவா னவன் மோகத்தால் சூழப்பட்டுக் கர்மபலங்களில் ஆசையை அடை ந்து விருப்புவெறுப்புமுதலியவைகளை ஆச்ரயித்துத் தேகங்களில் சுற்றுகிறான். பிராணியானது எப்பொழுது அஜ்ஞானத்தினாலுண் டான தமோகுணத்தை ஞானத்தினால் விலக்கிக்கொள்ளுகிறதோ அப்பொழுது ஸநாதனமான ப்ரம்மம் பிரகாசிக்கின்றது. முனிவர்க ளும் முக்தர்களும் அந்தப்பிரம்மத்தைக் கர்மாவினால் ஸாதிக்கத்தகா ததாகச் சொல்லுகின்றார்கள். உன்னாலும் தேவர்களாலும் மற்ற உல கத்தார்களாலும் உபாஸிக்கத்தக்க முக்தர்களான மஹரிஷிக்கூட்டங் களும் அந்தப் பிரம்மோபாஸ்தியிலிருந்தும் ஒழிவை அடைவதில்லை. அரசனே! பாரத! இந்தவிஷயத்தில் தேவர்களால் ஜயிக்கப்பட்டவனும் ஸஹாயமற்றவனும் ராஜ்யத்தை இழந்தவனும் ஸாமர்த்தியமிழந்த வனும் சத்துருக்களுடைய மத்தியில் கேவலம் புத்தியையேகொண்டு துக்கமற்றவனுமாயிருக்கிற விருத்ராஸுரன் செய்ததைப்பற்றி முன் சொல்லப்பட்ட சரித்திரத்தை ஒரே மனத்துடன் கேட்கக்கடவாய். முன்காலத்தில் ஐசுவரியமிழந்த விருத்ராஸுரனை நோக்கி, சுக்ரர், 'தானவ! பகைவர்களால் வெல்லப்பட்ட உனக்கு இப்பொழுது

வருத்தமில்லையா?' என்று கேட்க, விருத்ராஸுரன் 'நான், ஸத்யத்தினாலும் தவத்தினாலும் உலகத்தின் அழிவை அறிந்து பிராணிகளுடைய வரவையும் போக்கையும்குறித்துத் துக்கிக்கிறதுமில்லை; ஸந்தோஷிக்கிறதுமில்லை. ஜீவர்கள் காலத்தினால் ஏவப்பட்டுத் தம்வசமில்லாதவர்களாகி நரகத்தில் முழுகுகிறார்கள். புத்திமான்கள் ஸந்தோஷமுள்ள எல்லாவற்றையும் திவ்யங்களாகச் சொல்லுகிறார்கள். பிராணிகள் காலத்தினால்ஏவப்பட்டுக் கணக்கிடப்பட்ட அந்தக்காலத்தைக்கழித்துவிட்டு மிகுந்தகாலத்தில் உலகங்களில் மாறிமாறிச் சுற்றுகின்றன ஜீவர்கள் காலமாகிறகட்டில்கட்டப்பட்டுத் தம்வசமற்று ஆயிரம்திரியக்ஜன்மங்களையும் நரகத்தையுமடைந்து மறுபடியும் வெளியில்வருகின்றனர் நான் இவ்விதம் ஸம்ஸாரத்தில் உழலுகின்றபிராணிகளைப் பார்த்தவன் வினைக்குத்தக்கபயனுண்டாகுமென்று சாஸ்திரத்தில் காணப்படுகிறது சிலர் திரியக்ஜன்மத்தையும் சிலர் நரகத்தையும் சிலர் மனுஷ்யஜன்மத்தையும் சிலர் தேவத்தன்மையையும் அடைகின்றனர். எல்லாப்பிராணிகளும் முன்னமே நண்பர்களிடத்திலும் பகைவர்களிடத்திலும் ஸுகதுக்கங்களைச்செய்து யமனுடையசிக்ஷையையடைந்து செலலுகின்றன. ஸகலபிராணிகளும் எப்பொழுதும் சென்றவழியிலேயே செல்லுகின்றன' என்றான். காலத்தின் அளவினால் அளவிடப்பட்டதாகவும் ஸ்ருஷ்டிஸ்திதிவிஷயமாகவும்சொலலுகின்ற அவனைநோக்கிச் சுக்ரபகவான், 'அப்பா! நீ இந்தவார்த்தைகளை ஏன் பிதற்றுகிறாய்?' என்று மறுத்துக்கூறினார். விருத்ரன், 'முன்காலத்தில் நான் ஜயத்தில்விருப்பங்கொண்டு பெருந்தவம்புரிந்ததும்,பூதங்களுடையபலவிதமானகந்தங்களையும்ரஸங்களையும்அனுபவித்து எனதுவலிமையினாலே மூவுலகங்களையும் ஆக்ரமித்து விருத்தியடைந்ததும், ஜ்வாலைகளின்ஸமூகங்களால்வியாபிக்கப்பட்டவனும் ஆகாயத்தில்ஸஞ்சரிப்பவனும் எல்லாப்பிராணிகளுக்கும் வெல்லமுடியாதவனும் எப்பொழுதும்பயமில்லாதவனுமாயிருந்ததும் உங்களுக்கும் மற்றப்புத்திமான்களுக்கும் வெளிப்படையாகத் தெரியும். தவத்தினால் ஐசுவரியம் அடையப்பட்டது. அது என்கர்மங்களால் நழுவிவிட்டது ஓ! பகவானே! ஆகையால், நான் தைர்யத்தை அடைந்து துக்கிக்காமலிருக்கிறேன் முன்காலத்தில் மஹாத்மாவான இந்திரனோடு யுத்தம்செய்யவிருப்பமுள்ளநான் அவ்விடத்தில் எல்லாப் பாவங்களையும் அபகரிக்கிறவரும் ஸமர்த்தரும் ஓரிடத்திலும் தடையில்லாதவரும் பரிபூர்ணரும் முடிவற்றவரும் சுத்தரும் வியாபகரும் அனாதியும் பழுத்த தர்ப்பைபோலப் பொன்னிறமானகேசத்

தையுடையவரும் மஞ்சள்நிறமான மீசையையுடையவரும் எல்லாப் பிராணிகளுக்கும் பிதாமஹரும் பகவானுமான நாராயணரைத் தரிசித்தேன். அந்தத் தவத்தின் புண்யம் என்னிடத்தில் நிச்சயமாக மிச்சமிருப்பதால இப்பொழுது கர்மாவின் பயனைப்பற்றி உம்மிடம் கேட்க எனக்கு விருப்பமுண்டாயிற்று. ஓ! பிராம்மணரே! பெரிய ஐஶ்வரியமானது எந்த ஜாதியில் நிலைபெற்றிருக்கிறது? உத்தமமான ஐஶ்வரியமானது மறுபடியும் எப்படி நிவருத்திக்கவுஞ்செய்கிறது? எதினின்றும் பிராணிகள் உண்டாகின்றன? எபபடி பிரவ்ருத்திக்கின்றன? ஜீவன் எந்த மேலான பயனை அடைந்து நிலைத்திருக்கிறான்? ஓ! பிரம்மரிஷியே! அந்தப் பயனானது எந்தக் கர்மத்தினால் அடையக்கூடியது? அல்லது, எந்தஞானத்தினால் அடையக்கூடியது? அதை எனக்கு விவரிக்கவேண்டும்' என்றான். ராஜஶ்ரேஷ்டனே! புருஷஶ்ரேஷ்டனே! இவ்விதம் இதைப்பற்றிக்கேட்க அந்த முனிவர் அப்பொழுது சொன்னமறுமொழியை நான் சொல்லுகிறேன். அதனை,நீ சித்தத்தை வெளியில்விடாமல் தம்பிகளோடு கேட்கக்கடவாய்" என்று சொன்னார்.

---

## இருநூற்றெண்பத்தாறுவது அத்யாயம்

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)

**(ஸநத்குமாரர் விஷ்ணுவின் மகிமையையும் பிறப்பின் கணக்கையும் ஜீவர்களின்வர்ணமுதலியவற்றையும் சுக்ரருக்கும் வ்ருத்ரனுக்கும் சொல்லியது.)**

சுக்ராசாரியர், 'ஸர்வாத்மகரும் பகவானுமான அந்தத் தேவருக்கு நமஸ்காரம். ஓ! ஐயனே! அஸுரஶ்ரேஷ்டனே! எவருடைய பாஹுஸ்தானமானது ஆகாயத்தோடுகூடியப்ருதிவியோ,எவருடைய சிரஸ்தானமானது முடிவற்றமோக்ஷமோ அப்படிப்பட்டவிஷ்ணுவினுடைய உத்தமமான மாஹாத்மியத்தை நான் சொல்லப்போகிறேன்' என்று சொன்னார் இவ்விதம் அவ்விருவரும் சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது ஸந்தேகத்தை நிவிருத்திசெய்வதற்காகத் தர்மாத்மாவான ஸநத்குமாரமகாமுனிவர் வந்தார். ஓ! அரசனே! முனிசிகாமணியான அவர் அஸுரஶ்ரேஷ்டனாலும் சுக்ரரென்னும் முனிவராலும் பூஜிக்கப்பட்டு மிகச்சிறந்தஆஸனத்தில் உட்கார்ந்தார். உட்கார்ந்திருப்பவரும் மகாப்ராஜ்ஞருமான அவரைநோக்கிச் சுக்ரா

சாரியர், 'இந்த அஸுரச்ரேஷ்டனுக்கு விஷ்ணுவினுடைய உத்தமமான மாஹாத்மியத்தைச்சொல்லும்' என்று சொன்னார். ஸநத்குமாரர் (அந்த) வார்த்தையைக்கேட்டுப் புத்திமானான அஸுரராஜனுக்கு விஷ்ணுவினுடையமாஹாத்மியத்தோடுகூடினதும் பயனுள்ளதுமான வார்த்தையைச் சொல்லத்தொடங்கினார். 'திதியின் புத்ரனே! உத்தமமானி இந்த விஷ்ணுவின் மாஹாத்மியத்தை முழுதும் கேட்கக்கடவாய். பகைவர்களைத் தபிக்கச்செய்பவனே! எல்லாஜகத்தும் விஷ்ணுவினிடத்திலிருக்கின்றதென்று அறி ஜகத்திலுள்ளனவெல்லாம் இவரிடத்திலேயே லயமடைகின்றன; இவரிடமிருந்து உண்டாகின்றன; இந்தமஹாபாஹுவானவர் ஸ்தாவரஜங்கமரூபமான பிராணிவர்க்கத்தை ரக்ஷிக்கின்றார்; இவரே ஸமயத்தில் ஸம்ஹரிக்கவும் செய்கின்றார்; ஸமயத்தில் ஸ்ருஷ்டிக்கவும் செய்கின்றார். தானவ! இவர் உன்னுடைய தவத்தினாலும் யாகத்தினாலும் அடையக்கூடியவரல்லர்; ஆனால், இந்திரியங்களை அடக்குவதனாலேயே அடையக்கூடியவர் வெளியிலும் உள்ளிலுமுள்ள யாகயோகாதிகர்மத்தினால நிச்சயத்துடன் மனத்திலிருந்து தன்னை நிர்மலமாகச் செய்துகொள்ளுகிறவன் அபவர்க்கத்தில் அழிவில்லாமையை அடைகிறான். தட்டான் அநேகந்தடவை மிக்க முயற்சியோடு பெரிதான தன்னுடைய செய்கையினால வெள்ளியை அக்னியில் சுத்தம்செய்வதுபோல ஜீவனானவன் சிறிது சிறிதான கர்மத்தினால் அநேகம் ஜன்மங்களால் சுத்தியடைகிறான்; ஒருஜன்மத்தில் பெரிதான யத்தனத்தினாலும் முழுதும் சுத்தனாகிறான் விளையாட்டினால்படிந்த அற்பமானபுழுதியைத் தன் அவயவத்திலிருந்தும் துடைப்பதுபோலப் பெரிதான அனேகம்யத்தனத்தினால பாபநிவ்ருத்தியைச் செய்யவேண்டும். அற்பமான புஷ்பமாலையினால் வாஸனைகட்டப்பட்ட [1]கடுகெண்ணெயானது தன்னுடைய கந்தத்தை விடுகிறதில்லை. [2]அதுபோல ஸூக்ஷ்மவஸ்துவின் தரிசனம் எளிதில் உண்டாகிறதில்லை. அந்தத் தைலமே அனேகம் புஷ்பமாலைகளால் அடிக்கடி வாஸனைகட்டப்பட்டுத் தன்வாஸனையைவிட்டுப் புஷ்பவாஸனையை அடைகிறது. [3]இப்படியே முக்குணங்களால் ஸ்திரீ முதலானவர்கள்

---

[1]'திலஸர்ஷபம்' என்பது மூலம்; 'எள்ளும் கடுகும்' என்றும் கொள்ளலாம். [2]அப்படியே கொஞ்சமாகச்செய்தகாரியத்தை (நிஷ்பலமாக)க் கண்டுகொள்ளுவான் என்றும் கொள்ளலாம். [3]'இப்படியே குணங்களுடன்நெருங்கின ஸம்பந்தத்தையுடையவர்களிடத்தில் அனேகஜன்மங்களினால் ஏற்பட்டதோஷமானது அப்யாஸத்தினாலுண்டான ப்ரயத்தனத்தினால் தம்முடைய புத்தியினாலேயே விலக்கப்படும்' என்றும் கொள்ளலாம்.

நிமித்தமாக ஏற்பட்ட தோஷமானது புத்தியினால் அனேகஜன் மங்களில் அப்யஸிக்கப்பட்ட யத்தனத்தினால் நிவ்ருத்திக்கின்றது. தானவ! பிராணிகள் தம்முடையகர்மத்தினாலே பற்றுள்ளவைகளும், பற்றற்றவைகளுமாகின்றன. பிராணிவர்க்கங்கள் கர்மவிசேஷங்களை அடைகின்றவிதத்தைக்கேள். [1]எப்படி உண்டாகின்றனவோ எதில் எப்பொழுதுமிருக்கின்றனவோ அதை உனக்கு முறையாக விவரிக்கப் போகிறேன். அதை இப்பொழுது ஒருமனமாய்க் கேள். ஆதியந்த மற்றவரும் ஸ்ரீமானும் ஜனங்களுடைய ஹ்ருதயகுகையிலிருக்கிற வரும் ப்ரபுவும் ஸ்வயம்ப்ரகாசருமான ஸ்ரீஹரியானவர் சராசரங் களான பிராணிகளை ஸ்ருஷ்டிக்கின்றார். [2]இவர் ஸகலப்ராணிகளிடத் திலும் க்ஷரமானதேகமும் அக்ஷரமானஜீவனும் பதினொருவிகாரங் களான இந்திரியங்களுடைய ரூபமுமாயிருந்துகொண்டு இந்திரிய வியாபாரங்களால் ஜகத்தை அனுபவிக்கின்றார் பூமியை அவரு டைய பாதங்களாகவும் ஸ்வர்க்கத்தைச்சிரஸாகவும் அறியக்கடவாய். தைத்தியனே! அவருக்குத் திக்குக்கள் கைகள்; ஆகாயமே ஸ்ரோத் திரம்; சூரியன் நேத்திரம்; சந்திரன் மனம்; மஹத்தத்வம் எப்போ தும் வ்ருத்திஜ்ஞானம்; ஜலம் ரஸனேந்திரியம். ஓ அஸுரஸ்ரேஷ் டனே! கிரகங்கள் அவருடையபுருவங்களுக்கருகிலிருக்கின்றன. அஸு ரனே! நேத்திரத்தை நக்ஷத்திரமண்டலமாகவும் முகத்தை அக்கினி யாகவும் அவரை விஸ்வமானவராகவும் விஸ்வத்திற்கு ஆதியாகவும் பரமானஈஸ்வரராகவும்அறியக்கடவாய் ரஜஸையும்தமஸையும் ஸத்வ த்தையும் நாராயணஸ்வரூபமாக அறியக்கடவாய்.ஐயனே!அவர்ஆஸ்ர மங்களுக்குக் காரணம். அவரைக் கர்மாவின்பயனாக நினைக்கின்றார் கள். ஸந்யாஸத்தின் சிறந்தபயனானமோக்ஷமும் அழிவற்றவரான அவரே. மந்திரங்கள் எவருடையரோமங்களோ, பிரணவமானது எவ ருடைய வார்த்தையோ அவர் அனேகம் இருப்பிடங்களுடையவர்; அநேகம் முகங்களுடையவர். அவரே தர்மம். அவர் பிராணிகளின் ஹ்ருதயத்திலிருக்கின்றார். அவரே பரம்மம். அவரே ஞானம். தவ மும் அவர். ஸத்தும் அவர். அஸத்தும் அவர். மந்திரம், பிராம்மணம்,

---

1 'எவ்விதம் கர்மாவில் ப்ரவிருத்திக்கின்றனவோ, எதனால் எப்பொழு தும் ஒழிவை அடைகின்றனவோ' என்பது பழையவுரை.

2 'ஸம்ஸாரிஜீவஸ்வரூபரும் முக்தஸ்வரூபருமான அந்தப்பகவான் எல் லாப் பிராணிகளிலும் பதினொரு விகாரங்களுக்கு ஆத்மாவாயிருந்து தம் கிரணங்களான ஜீவர்கள்வழியாய் ஜகத்தை அனுபவிக்கின்றார்' என்றும் கொள்ளலாம்.

பாத்திரங்கள் இவைகளுடன்கூடியதும் [1]பதினாறுரித்விக்குக்களுள்ளதுமானயாகமும் அவரே. பிரம்மாவும் அவர். ருத்திரரும் அவர். அஸ்வினீதேவர்களும் அவர் இந்திரனும் அவர். ஸூரியனும் அவர். வருணனும் அவர் யமனும் அவர். குபேரனும் அவர். அந்தபரம்மா முதலான ரித்விக்குக்கள் இவ்விதம்தனியாகப்பார்க்கின்றவர்களாயிருந்தாலும் அப்படியே நாராயணருடைய ஒரே ரூபமாயிருப்பதையும் அறிகின்றார்கள். இந்த ஸகல ஜகத்தும் அந்த ஒரே தேவருடைய வசத்தில், இருக்கிறதென்று அறி. ஓ! அஸுரஸ்ரேஷ்ட! பலரூபமான அவரே ஒருவராயிருக்கிறாரென்றும் சொல்லுகின்றார்கள். பிராணியானது விஜ்ஞானத்தினால் (அவரைஎல்லாமாகப)பார்க்கிறது. பிறகு, ஒரே ஸத்தாரூபமான ப்ரம்மம் பிரகாசிக்கிறது. சில பிராணிகள் ஆயிரங்கோடி கல்பங்கள் ஸ்தாவரங்களாயிருக்கின்றன சில ஜீவர்கள் ஜங்கமங்களாயிருக்கின்றார்கள். அஸுரனே! பிரஜைகளின் ஸம்ஸாரத்தின அளவைச் சொல்லுகிறேன் ஒவ்வொன்றும் ஒரு யோசனை தூரம் அகலமும் ஐந்நூறு யோசனை நீளமுமுள்ளனவும் ஒரு க்ரோசம் ஆழமாயிருப்பதால் இறங்கமுடியாதனவும் விருத்தியடைந்தனவுமான பலவாயிரம்வாபிகளிலுள்ள ஜலம் முழுமையும் ஒரு மயிரின் நுனியால ஒருநாளுக்கு ஒரேதரமாக இறைத்தால் வற்ற எவ்வளவு காலமாகுமோ அவ்வளவு காலம் பிரஜைகளுடையமுக்கியமான ஒரு ஸ்ருஷ்டியும் ஸம்ஹாரமுமென்று தெரிந்துகொள் கறுப்பு, தாம்ரம், நடுத்தரமான நீலம், மிகவும் ஸஹிக்கக்கூடிய சிவப்பு, ஸுகமாயுள்ள மஞ்சள்வர்ணம், மிகவும் ஸுகமாயுள்ள வெண்மைஎன்று ஜீவர்களின் ஆறுவர்ணங்கள் உயர்ந்தபிரமாணமாயிருக்கின்றன திதியின் குமாரனே! ஜீவனானவன் ஆயிரக்கணக்காக யோனிகளில் உற்பத்திகளை அடைந்து பிறகு ஸித்தியை அடைகிறான்; தேவனான இந்திரன் சுபமானசாஸ்திரத்தையே அப்பியஸித்துத் தன் அனுபவரூபமாகச்சொன்னகதியையும் அடைகிறான். கதியோவென்றால் பிரஜைகளுக்கு வர்ணத்தினால் செய்யப்படுகிறது. அஸுரஸ்ரேஷ்ட! வர்ணமானது (கிருதயுகமுதலான) காலத்தினால் செய்யப்படுகிறது. அஸுர! இகத்தில் ஜீவஸமூகத்திற்கு (க்கர்மேந்திரிய ஜ்ஞானேந்திரிய மனது புத்தி சித்தாஹங்காரங்களென்கிற

1 எல்லாவேதமுமுள்ளப்ரம்மா, ப்ராம்மணச்சம்ஸீ, ஆக்நீத்ரர், போதா ஆகிய நால்வரும், ருகவேதிகளான ஹோதா, மைத்ராவருணர், அச்சாவாகர், கிராவஸ்தோதா ஆகிய நால்வரும், யஜுர்வேதிகளான அத்வர்யு, ப்ரதிப்ரஸ்தாதா, நேஷ்டா, உந்நேதா ஆகிய நால்வரும், ஸாமவேதிகளான உத்காதா, ப்ரஸ்தோதா, ப்ரதிஹர்த்தா, ஸுப்ரம்மண்யர் ஆகிய நால்வரும் ஆகப்பதினறுவர்.

பதினான்கினுடையவிருத்திகளின்பேதத்தினால்) பதினான்குலக்ஷம்பெரியகதிகள் ஏற்படுகின்றன. அந்தஜீவர்களுக்கு மேலேஏறுதலும் நடுவில்நிற்றலும் கீழேஇறங்குதலும் அவைகளாலே செய்யப்பட்டனவாகவே அறியக்கடவாய்; ஆனால், எவன் இந்தமானிடத்தன்மையிலிருந்தும் காலயோகத்தினால் நழுவுகிறானோ அவன் எல்லாவற்றிலும் கீழான கிருஷ்ணவர்ணத்திலிருக்கிறான் தைத்யனே! அதில் மிகவும் பற்றினவனாகி நரகத்தையடைந்து ஆங்காங்கு சுற்றிக்கொண்டுமிருக்கிறான். கிருஷ்ணவர்ணத்தினுடைய கதி இழிவானது அதிலிருக்கின்றவன் நரகத்தில பாகஞ்செய்யப்பட்டு முழுகுகிறான். அவன் கொடிய துன்பங்களுடன் அநேகம் கல்பங்கள் நரகத்திலிருப்பதாகச் சொல்லுகிறார்கள் அங்கு லக்ஷம்கலபங்கள் ஸஞ்சரித்துப் பிறகு புகைநிறமான திரியக்ஜன்மாவைக்கொடுக்கும் தூம்ரவர்ணத்தை அடைகிறான் அவன் தமோகுணம் சூழ்ந்த மனமுள்ளவனும் மேலேவரச்சக்தியில்லாதவனுமாயிருந்து அந்த வர்ணத்திலேயே ஒருயுகத்தின் முடிவுவரை வஸிக்கிறான் அவன் எப்பொழுது ஸத்வகுணத்துடன் தன்னுடைய புத்தியினால் தமோகுணத்தை விலக்கிவிட்டு (மேல பதவிக்கு) யத்தனிக்கிறானோ அப்பொழுது (தேவசரீரத்தைக் கொடுக்கக்கூடிய) சிவப்புவர்ணத்தை அடைகிறான்; நீலவர்ணத்தையடைந்து மானிடவுலகத்திலும் சுற்றுகிறான் அவன் அந்த மானிடவுலகத்தில ஒரு கலபகாலம் தன்கர்மங்களாலுண்டான விதிநிஷேதங்களாகிற நிர்ப்பந்தங்களால் (தவத்திலுண்டான கிலேசத்தை) அடைந்து பிறகு (தேவத்தன்மையை அளிக்கின்ற) மஞ்சள்வர்ணத்தை அடைகிறான் நூறுகலபமானவுடன் தேவத்தன்மையைவிட்டு மனிதனாகிறான். தைத்யனே! மஞ்சள்நிறமுடையவனோ ஆயிரக்கணக்கான கலபங்கள் ஸஞ்சரித்தாலும் விஷயத்திலிருந்து விடுபடாமல் பிறகு நரகத்தில் ப்ரளயத்தினால் செய்யப்பட்ட (அவனுக்குள்ள பத்தொன்பது தத்வங்களால ஒவ்வொன்றுக்கும் ஆயிரக் கணக்கான) பத்தொன்பதினாயிரம் ஜன்மங்களையும் அனுபவிக்கிறான். பிறகு, அவனை நரகத்திலிருந்தும் வேறான எல்லா ஜன்மங்களிலிருந்தும் விடுபட்டவனாக அறி. அவன் தேவலோகத்தில் அடிக்கடி ஸுகத்தை அனுபவிக்கிறான் அதினின்றும் நழுவி மனிதத்தன்மையை அடைகிறான். மானிடஜன்மங்களில் (ஞானேந்திரியம் ஐந்து மனம் புத்தி சித்தம் மூன்று ஆகிய இவ்வெட்டால்) ஒவ்வொன்றுக்கும் நூறு நூறாக எண்ணூறு ஜன்மங்கள் இருந்துவிட்டுத் தேவத்தன்மையை அடைகிறான் பிறகு,

அவன் காலவசத்தினுலே இந்தத் தேவத்தன்மையிலிருந்தும் தவறுகி ருன் எல்லாவற்றிலும் கீழான கறுப்புவர்ணமான ஸ்தானத்தி லிருக்கிருன். ஓ! அஸுரசிகாமணியே! எப்படி இந்த ஜீவராசியா னது மோக்ஷத்தை அடையுமோ அதை உனக்குச் சொல்லுகிறேன். 'மோக்ஷத்தில் விருப்பமுள்ள ஜீவன் (முறைமே சமமுதலான குணங் களை அபிமானிக்கின்ற தேவத்தன்மையுள்ள) சிவப்புநிறமுள்ளவ னும் மஞ்சள்வர்ணமுள்ளவனும் சுக்கிலவர்ணமுள்ளவனுமாகிப் புத்தி யின் பிரிவுகளான ஞானேந்திரிய மனோபுத்திகளின் செய்கைக ளான எழுநூறு தேவவ்யூகங்களை ஆஸ்ரயித்து முடிவில் இந்தச் சுக் கிலவர்ணத்தையே அடைந்து [1]புர்யஷ்டகத்திற்கு மேற்பட்டவை யும் மிகவும் பூஜிக்கத்தக்கவையுமான (பிரம்மலோக முதலான) உல கங்களை அடைகின்றுன் [2]ஆருயிரத்தெண்ணூறு விருத்திகளும் சிறந்த பிரம்மஜ்ஞானிகளுடைய மனத்திற்கு விரோதமாயுள்ளவை கள். மஹானுபாவா! ஜாக்ரத் ஸ்வபந ஸுஷுப்தி மூன்றும் தடுக்கப் பட்டால்தான் சுக்லவர்ணத்தின் சிறந்தகதி ஏற்படும். (இவ்விதத் தன்மையுடையவன்) அந்த ஒரு பிறவியில அனிஷ்டத்தை அடைகின் ருன் அந்தக் கதியில் அசக்தனுயிருக்கிற யோகியானவன் மற்றும் நான்கு ஜனனங்களையும அடைகிருன் யோகத்தில் அசக்தனுன வன் ஆருவது வர்ணத்தினுடைய சிறந்தகதியான ஸித்தியில் நிலைபெருதவனும் ராகமுதலானக்லேசங்கள் நீங்கினவனுமாயிருப்ப வனுடைய கதியும் ஞானேந்திரியமனோபுத்திகளாகிய ஏழாலும் சிறந்தவையுமான நூறு ஜனனமரணங்கள் கர்மசேஷத்துடன் வஸிக்கிருன் [3]மஹானுன அவன் பிறகு அதிலிருந்து திரும்பி மானிடவுலகத்தில் மனிதத்தன்மையை அடைகிருன் அவன், பிறகு, அந்த மனிதத்தன்மையிலிருந்து வெளிவந்து வரிசையாக மேலே மேலே பிராணிகளின ஜன்மத்தையடைய யததனிக்கிருன். அவன் ஸமாதியினுலும் அதிலிருந்து வெளிவருதலாலும் செய்யப்

---

1 669-வது பக்கம் குறிப்பிற்காண்க.

2 பூதங்கள் ஐந்து, விஷயங்கள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து, கர் மேந்திரியங்கள் ஐந்து, பிராணவாயுக்கள் ஐந்து, மனம் புத்தி சித்தம் அஹங் காரம் தேஜஸ் ஐநது, அவித்தை காமம் காமம் மூன்று ஆக முப்பத்துமூன் றும் ஜாக்கிரத ஸ்வப்னமிரண்டுக்குமுண்மையால் அறுபத்தாறு, ஸுஷுப்தி யில் அவித்தையால் சூழப்பட்ட ஸ்வரூபானந்தானுபவம், அதற்கு ஸாதன மான அவித்யாவிருத்தி ஆக அறுபத்தெட்டும் அவைகள் தினங்களின் பேதத் தினுல் அனேகங்களாதலால் ஒருவிதமான கணக்கினுல் ஆருயிரத்தெண்ணூரு கச் சொல்லப்பட்டன. இதைகு பலர் பலவாருகக் கூறுவர்.

3 கூறியது கூறலால் அரை ஸ்லோகம் விடப்பட்டது.

பட்ட [1]ஸாமர்த்தியத்தை அடைந்து ஒருலகத்திற்கு ஒருதரமாக ஏழுதரம் ப்ரம்மலோகம்வரையிலுள்ள ஏழுலகங்களிலும் ஸஞ்சரிக்கிறான். பிறகு, ஏழுவிதமான உபத்திரவங்களையுமே தள்ளிவிட்டு அவைகளைத் துக்கமாக நிச்சயித்து ஜீவலோகத்தில் நிலைத்திருக்கிறான். பிறகு, விகாரமில்லாததும் அளவற்றதும் பிரகாசனசக்தியுடையுமான ஈசுவரருக்கும் வியாபனசக்தியுள்ள விஷ்ணுவுக்கும் விருத்தியுடையும் சக்தியுள்ள பரம்மாவுக்கும் ஆதிசேஷனுக்கும் மனிதனுக்கும் ஈசரும் விஷ்ணுவுமான மாயாசக்தியுள்ள பரமேஶ்வரருக்குமே ஸ்தானமுமான் ப்ரம்மத்தை அடைகிறான் பிரஜைகளும் இந்திரியரூபமான தேவஸமூகங்களும் ப்ரம்மலோகத்திலுள்ள அமரர்களும் எப்போதும் ஸம்ஹாரகாலத்தில் ஈஶ்வரரால் சரீரம் [2]தகிக்கப்பட்டவர்களாகி ப்ரம்மத்தை அடைகிறார்களல்லவோ? அந்த ஜீவர்கள், ஸ்ருஷ்டிகாலத்திலோ, அனுபவித்து மிசசமான கர்மத்தோடு தங்கள் தங்கள் ஸ்தானங்களையே அடைகிறாகள். (மாறிமாறி) ஸமமான நிலையுள்ளவர்களாயிருக்கும் தேவர்கள் மனிதர்கள் ஆகிய யாவரும் மறுபடியும் மிசசமின்றிக் கர்மசேஷத்தின்முடிவில் அந்த ப்ரம்மரூபமான ஸ்தானத்தையே அடைகிறார்கள் எவர்கள் ஸித்தலோகத்திலிருந்தும் கிரமமாகநழுவினார்களோ அவாகள் மறுபடியும் அந்தக்கிரமமாக அவர்களுடைய கதியை அடைகிறார்கள். மற்ற ஜீவர்கள் அதற்கு மாறுதலாகப பலம் வேஷம் ரூபமிவைகளை அடைந்து தங்கள் தங்கள் கர்மாவை அடைகிறார்கள அந்த ஸித்தனானவன் எதுவரை சேஷமானபோகத்துடனிருக்கிறானோ அதுவரை பிரஜைகளும் சுத்தமான பராபரவித்தைகளும் அவனுடைய அங்கங்களிலேயே இருக்கின்றன. பிறகு, அவன்சுத்தமானபாவனையை அடைந்துபஞ்சேந்திரியரூபமான இந்த மனத்தை ஸமாதியால் வசஞ்செய்து எப்போதும் சுத்தமான மனத்தினால் ப்ரம்மத்தைத்தியானித்துச் சுத்தமும் மிகவும் உயர்ந்ததுமான ப்ரம்மஸாக்ஷாத்காரரூபமான பரவித்தையை அடைகிறான். சிறந்த புத்தியுள்ளவனே! பிறகு, அவன், விகாரமற்றதும் மற்றவனால் அடையமுடியாததும் அழிவற்றதுமானப்ரம்மஸ்வரூபமானபதத்தை அடைகிறான். இவ்விதம் இப்பொழுது என்னால் உனக்கு நாராயணருடைய இந்த மஹிமையானது சொல்லபபட்டது' என்றுசொன்னார். வ்ருத்ரன், 'சிறந்தபுத்தியுள்ளவரே! இவ்வாறு இருக்கையில் எனக்கு ஒருவிதமான வருத்தமுமில்லை. இந்தவார்த்தையை நானும் அப்படியே

1 வேறுபாடம். 2 'தக்த' என்று பாடம் கொள்ளப்பட்டது.

நன்கு அறிகிறேன் இப்பொழுதோ உம்முடையசொல்லைக்கேட்டுக் கல்மஷமற்றவனும் பாபம்நீங்கினவனுமாயிருக்கிறேன். ஓ! பகவானே! மஹரிஷியே! மிக்ககாந்தியுள்ளவரும் எப்பொழுதும் எங்கும் எல்லாமாயிருப்பவருமான விஷ்ணுவினுடைய அளவற்ற வீரியமுள்ள இந்த ஆஜ்ஞாசக்ரமானது நடந்துவருகின்றது. எந்த ஸ்தானத்தில் எல்லாஸ்ருஷ்டிகளும் ஏற்பட்டிருக்கின்றனவோ அவருடைய அந்த ஸ்தானமானது அழிவற்றதாயிருக்கின்றது அவர் மஹாத்மாவும் புருஷர்களுள் உத்தமருமாயிருப்பவர் அவரிடத்தில் இந்த எல்லா ஜகத்தும் நிலைபெற்றிருக்கிறது' என்றான் குந்தியின்புதல்வனே! அந்த வ்ருத்ராஸுரனானவன் இவ்விதஞ்சொல்லிவிட்டு அப்படியே தன்மனத்தைப் பரமாத்மாவான நாராயணனிடத்தில் சேரச்செய்து பிராணனை விட்டான்; பரமபதத்தையும் அடைந்தான்" என்றார்.

யுதிஷ்டிரர், "ஓ! பிதாமஹரே! முன்காலத்தில் ஸனத்குமாரரானவர் விருத்ராஸுரனுக்கு எந்தப் பரப்பிரம்மத்தைச் சொன்னாரோ பகவானும் தேவருமான அந்த ஜனார்த்தனர் இதோ இருக்கிறார்" என்று சொல்ல, பீஷ்மர், "காரணஸ்தானத்திலிருக்கிறவரும் பெரிய மனமுள்ளவருமான அந்த பகவான் அளவற்ற தம்முடைய தேஜஸோடு அதிலிருந்து தம்முடைய ஸ்வரூபமான அந்த ஜீவர்களைப் படைக்கின்றார். நிலைதவறாத இந்தக்கிருஷ்ணபகவானை அவருடைய நான்கிலொருபாகமாக அறியக்கடவாய். பிரம்மாவையும் மஹாத்மாவான அவருடையநான்கிலொருபாகமாக அறி புத்திமானான பகவான் நாலிலொருபாகத்தினாலே மூன்று உலகங்களையும் உண்டுபண்ணுகிறார் கீழேஇருக்கின்ற ஸ்திரமான பகவானுடைய அம்சமானது கல்பத்தின்முடிவில் அவரை அடைந்துவிடுகின்றது. மூலத்திலிருக்கின்ற மிகுந்தபலமுடையபிரபுவான அந்தப்பகவான் அப்பொழுது ஜலங்களில் பள்ளிகொள்ளுகிறார் பிரஸன்னமானமனத்தையுடையவரும் எல்லாவற்றையும்ஸ்ருஷ்டிக்கின்றவருமான அந்தப்பகவான் சாஸ்வதமான அந்தலோகங்களில் ஸஞ்சரிக்கின்றார். அளவற்றவரும் அழிவற்றவருமான பகவான் எல்லாவற்றையும் சூன்யமில்லாமல்செய்கிறார். தடையற்றவரும் மஹாத்மாவுமான அவர் திரும்பவும் ஸ்ருஷ்டிக்கிறார் பற்பலவிதமான இந்தஉலகம்முழுவதும் அவரிடமிருக்கின்றது" என்றார். யுதிஷ்டிரர், "உண்மையுணர்ந்தவரே! ஓ! பிதாமஹரே! விருத்ராஸுரனால் தன்னுடையகதியானது ஸுலபமாகப் பார்க்கப்பட்டதென்று நினைக்கிறேன் ஆகையால்தான், துக்கப்படாமல் ஸுகமாயிருந்தான். ஓ! குற்றமற்றவரே! பிதாமஹரே! நற்குலத்

திற்பிறந்தவனும் *(ரஜஸூம்தமஸூமில்லாமல் ஸத்வகுணமான) சுக்கிலவர்ணமுடையவனும் விலங்குகதியிலிருந்தும் நரகத்திலிருந்தும்விடுபட்டு ஸாத்தியனென்கிறதேவபாவத்தை அடைந்தவனுமான அவன் திரும்புகிறதில்லை ஓ! அரசரே! மஞ்சள்வர்ணத்திலாவது சிவப்புவர்ணத்திலாவது இருப்பவன் தாமஸமான தன்கர்மங்களால் சூழப்பட்டுத் திரியக்ஜன்மத்தையே அனுபவிக்கின்றான் மிகவும் ஆபத்தை அடைந்தவர்களும் ரக்தவர்ணமான தால ஸூகத்திலபற்றுள்ளவர்களும் துக்கத்தில்அழுந்தினவர்களுமான நாங்களோ(ரஜஸ் மேலிட்டுத் தமஸூம்ஸத்வமும்குறைந்த) நீலவர்ணத்தையோ அல்லது (தமஸ்மேலிட்டு ரஜஸூம்ஸத்வமும்குறைந்த) இழிவானகிருஷ்ண வர்ணத்தையோ எந்தக்கதியை அடையப்போகின்றோமோ" என்று சொன்னார். பீஷ்மர், "ஓ! பாண்டவர்களே! சுத்தமானவம்சத்தில் பிறந்தவர்களும் கடுமையானவ்ரதமுடையவர்களுமானநீங்கள் தேவலோகத்தில் வஸித்துவிட்டு மறுபடியும் மனுஷ்யஜன்மத்தை அடையப்போகின்றீர்கள் ஒருகலபகாலம் உலகத்தில் ஸூகமாக இதர தேகங்களிற்சென்று ஸூகங்களை அனுபவித்துவிட்டு ஸூகமாக ஸித்தர்களின் ஸங்கத்தை அடையபபோகிறீர்கள் உங்களுக்குப் பயம் வேண்டாம் உங்களுக்குப் பாபம் உண்டாகாமலிருக்கட்டும்" என்று சொன்னா

---

## இருநூற்றெண்பத்தேழாவது அத்யாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)

(இந்திரனுக்கும் வ்ருத்ரனுக்கும் யுத்தம்.)

யுதிஷ்டிரர், "நிகரில்லாதஞானமும் விஷ்ணுபக்தியுமுள்ள அளவற்றபராக்ரமசாலியானவிருத்ராஸூரனுடைய தர்மிஷ்டனாயிருக்குந்தன்மையானது ஆச்சரியம். ஓ! அரசரிற்சிறந்தவரே! இந்த வ்ருத்ராஸூரன் அளவற்றதேஜஸூள்ள அந்தவிஷ்ணுவினுடைய அறியமுடியாதபதத்தை எபபடித்தான் அறிந்தான்? நிலைதவறாதவரே! உம்மால்சொல்லப்பட்டஇதை நான் நம்பவும்செய்கிறேன். ஆனாலும், மறுபடியும் எனக்குத் தெளிவாகத்தோன்றாதஒருபுத்தியானது உண்டாகிவிட்டது. ஓ! பரதஸ்ரேஷ்டரே! தர்மசீலனும் விஷ்ணுபக்தனும் விஷ்ணுபக்தர்களின்பரம்பரையில்தத்வத்தைஉணர்ந்தவனு

*தேவமனுஷ்யலோகங்கள்.

மான" விருத்ராஸுரன் எப்படி இந்திரனால் கொல்லப்பட்டான்? பரதரேறே! கேட்கின்றஎனக்கு இந்தஸந்தேகத்தைச் சொல்லும். ஓ! ராஜஸ்ரேஷ்டரே! அந்தவிருத்திரன் இந்திரனால் எப்படி வெல்லப் பட்டான்? ஓ! பிதாமஹரே! யுத்தமும் எவ்விதம் நடந்தது? புஜபலமுடையவரே! எனக்குப் பெரியஉற்சாகமிருத்தலால் அதை யும் விரிவாகச்சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"ஓ! பகைவர்களையடக்குபவனே! முன்காலத்தில் இந்திரனானவன் தேவகணங்களுடன் தேரிலேறிப் புறப்பட்டான் அப்பொழுது ஐந்நூறுயோஜனை அளவு உயர்ந்தவனும் எண்ணூறுயோஜனை அகன்றவனும் மலைபோல அசையாமல்நிற்பவனுமான விருத்ராஸுரனை எதிரில் கண்டான் மூன்றுஉலகத்தினாலும்ஜயிக்கமுடியாத அப்படிப் பட்ட அந்தவிருத்ரனுடைய உருவத்தைப்பார்த்துத் தேவர்கள் நடுங்கித் தேறுதலடையவில்லை அரசனே! அப்பொழுது இந்திரனுக் கோவென்றால், விருத்திரனுடைய உத்தமமான அந்தரூபத்தைபபார்த்துஉடனேபயத்தினால் தொடைகள் அசைவற்றவைகளாயின. பிறகு, போர்தொடங்கியபொழுது ஸகலமான தேவாஸுரர்களுடையகோஷ மும் வாத்யங்களுடையமுழக்கமும்உண்டாயின குருகுலத்திற்பிறந்தவனே! அப்பொழுது எதிரில் நிற்கின்ற இந்திரனைப்பார்த்து விருத்திரனுக்குப் பரபரப்பாவது பயமாவது ஒருவிதமான எண்ணமாவது உண்டாகவில்லை. அதன்பிறகு, தேவர்கோனான இந்திரனுக்கும்பெரிய சரீரமுடைய விருத்திரனுக்கும் கத்திகள், பட்டஸங்கள், சூலங்கள், வேல்கள், தோமரங்கள், இருப்புலக்கைகள், நானாவிதமான கற்பாறைகள், பெரிய ஒலியுள்ளவில்லுகள், பலவகையான சிறந்தஅஸ்திரங்கள், எரிகொள்ளிகள் இவைகளால மூவுலகத்திற்கும்பயங்கரமான யுத்தம் ஏற்பட்டது பிறகு, தேவாஸுரசேனைகளால் எல்லாம் கலக்கமுற்றவையாயின. அப்பொழுது, பிதாமஹரைத்தலைவராகக் கொண்டஎல்லாத்தேவகணங்களும் மஹாபாக்யவான்களானரிஷிகளும் அந்தயுத்தத்தைப்பார்க்க வந்தார்கள். மஹாராஜனே! பரதரிற் சிறந்தவனே! ஸித்தர்களும் தேவதாஸிகளும் கந்தர்வர்களும் சிறந்த விமானத்திலேறிக்கொண்டு வந்தார்கள். தர்மத்தைவகிக்கின்றவர்களில் ஸ்ரேஷ்டனான விருத்திராஸுரன் ஆகாயத்தைஅளாவிநின்றுகல் மழையால் இந்திரன்மேல்எங்கும்இறைத்தான். பிறகு,தேவக்கூட்டத் தார்கள் கோபத்தை அடைந்து எங்கும்அம்புமழைகளால்யுத்தத்தில் விருத்திரனால் விடப்பட்டகல்மழையைவிலக்கினார்கள். குருஸ்ரேஷ்டனே! மஹாமாயாவியும் மிக்கபலசாலியுமானவிருத்திரனோ பலமுறை

மாயாயுத்தத்தினால் இந்திரனை மயங்கச்செய்தான். பிறகு, விருத்ரனால் பீடிக்கப்பட்ட அந்த இந்திரனுக்கு மயக்கம் உண்டாயிற்று. அவ்விடத்தில் வஸிஷ்டர் அவனுக்கு ரதந்தரமென்கிற ஸாமத்தினால் தேறுதலைசெய்தார் வஸிஷ்டர், 'தேவேந்திரா! நீ தேவர்களுக்கெல்லாம் ஶ்ரேஷ்டனாயிருக்கிறாய். தைத்யர்களையும் அஸுரர்களையும் கொல்லுகின்றவனே! இந்திர! மூவுலகங்களாகிற ஸைன்யத்தோடுகூடிய நீ ஏன் துக்கிக்கிறாய்? இதோ பிரம்மாவும், விஷ்ணுவும், ஜகத்திற்கெல்லாம் அதிபதியும் உமாஸமேதரும் ஸர்வஜ்ஞரும் தேவருமான பரமேஶ்வரரும், எல்லாப்பரமரிஷிகளும் மோகத்தை அடைந்த உன்னைப் பார்த்து உன்னுடைய ஜயத்தின்பொருட்டு, 'ஸ்வஸ்தி' என்றுசொன்னார்கள் இந்திரனே! மற்றொருவன்போல மனக்கலக்கத்தை அடையாதே ஸுராதிபனே! யுத்தத்திற்சிறந்தபுத்தியைசெய்து சத்துருக்களை நாசம்செய் இதோ லோககுருவும் எல்லா உலகங்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவருமான முக்கண்ணரான பகவான் உன்னைப் பார்க்கின்றார். ஓ! ஸுராதிபனே! மோஹத்தைவிடு இந்திரனே! இதோ பிருஹஸ்பதிமுதலான பரம்மரிஷிகளும் ஜயத்திற்காக உன்னைச் சிறந்த ஸ்தோத்திரத்தினால துதிக்கின்றார்கள' என்றுசொன்னார் இவ்விதம் மஹாத்மாவான வஸிஷ்டரால்போதிக்கப்பட்டவனும் உத்தமமான பலமுடையவனுமான வாஸவனுக்கு மிக்கவலிமையுண்டாயிற்று. பிறகு, பகவானான இந்திரன் புத்தியை அடைந்து பெரிய யோகத்துடன்கூடி அந்தமாயையை விலக்கினான். பிறகு, ஸ்ரீமானான பருஹஸ்பதியும் அந்தமஹரிஷிகளும் விருத்திரனுடைய பராக்ரமத்தைபபார்த்துப பரமேஶ்வரரை அடைந்து லோகங்களுடையநன்மையைவிரும்பி விருத்திரனுடையநாசத்தைக்குறித்துத்தெரிவித்தார்கள். பிறகு, ஜகத்திற்கெல்லாம்பதியான பகவானுடையதேஜஸானது ஜ்வரமாகஆகி உடனே உக்கிரமாகவிருப்பவனும் லோகங்களுக்குப் பதியுமான விருத்ரனை அடைந்தது அப்பொழுது தேவரும் ஸகலலோகங்களாலும் பூஜிக்சப்பட்டவரும் பகவானுமான விஷ்ணுவானவர் லோகரக்ஷணத்தில் விருபபமுள்ளவராகி இந்திரனுடைய வஜ்ராயுதத்தில் பிரவேசித்தார் பிறகு, புத்திமானானப்ருஹஸ்பதியும் மஹாதேஜஸ்வியானவஸிஷ்டரும் மற்றுமுள்ள எல்லாச்சிறந்தரிஷிகளும், உலகங்களால பூஜிக்கப்பட்டவனும் வரன்களையளிப்பவனும் நூறு யாகங்களைச்செய்தவனுமான இந்திரனிடம் வந்து ஒரே மனமாக, 'பிரபுவே! விருத்திரனைக்கொல்' என்று சொன்னார்கள். பரமேஶ்வரர், 'இந்திரனே! இந்த விருத்திரன் பெரியவன்; பெரிதான சேனை

யால் சூழப்பட்டவன்; அனேக ரூபமுடையவன்; எங்கும் செல்லுகின்றவன்; அனேக மாயையுடையவன்; பிரஸித்திபெற்ற வன். ஸுரஸ்ரேஷ்டா! ஆகையால், மூவுலகங்களாலும் வெல்ல முடியாதவனான இந்த அஸுரஸ்ரேஷ்டனை நீ யோகத்தை அவலம்பித்துக் கொல்லக்கடவாய். அலக்ஷ்யமாயிராதே! அமரர்வேந்தனே! இவன் பலத்திற்காக அறுபதினாயிரம் வருஷம் தவஞ்செய்தான். தேவேந்திரனே! பிரம்மாவும் இவனுக்கு யோகிகளுள் சிறந்தவனாயிருப்பதையும் பெரியமாயையுள்ளவனாயிருப்பதையும் பெரியபலமுள்ளவனாயிருப்பதையும் உயர்ந்த தேஜஸ்ஸையும் வரமாக அளித்தார். வாஸவனே! இதோ என்னுடைய தேஜஸானது உன்னை அடைகிறது. இவ்விதம் கொல்லமுடியாத அந்த விருத்ராஸுரனை வஜ்ராயுதத்தால் கொல்லக்கடவாய்!' என்று சொன்னார். இந்திரன், 'பகவானே! தேவஸ்ரேஷ்டரே! உம்முடைய அருளால நெருங்கமுடியாதவனான விருத்ராஸுரனை நீர் பார்த்திருக்கும்பொழுதே வஜ்ராயுதத்தினால் கொல்லுவேன்' என்று சொன்னான் திதியின் புத்திரனான பெரிய அஸுரன் ஜ்வரத்தினால் பிரவேசிக்கப்பட்டஸமயத்தில் தேவர்கள் ரிஷிகள் இவர்களுடைய ஸந்தோஷத்தினால் பெரியசப்தமானது உண்டாயிற்று பிறகு, பேரொலியுள்ள துந்துபிவாத்யங்களும் சங்கங்களும் மத்தளங்களும் டிண்டிமவாத்தியங்களும் ஆயிரக்கணக்காக முழக்கப்பட்டன எல்லா அஸுரர்களுக்கும் மிகவும் ப்ரஜ்ஞாபங்கம் ஏற்பட்டது நிமிஷத்திற்குள்ளே பெரிதானமாயையும் ஒழிந்தது பிறகு, ரிஷிகளும் தேவதைகளும் அந்த அஸுரனிடம் ஜ்வரம் பிரவேசித்ததென்று அறிந்து ஸமர்த்தனான இந்திரனைத் துதித்து (அஸுரனைக் கொல்ல) ஏவினார்கள் யுத்தகாலத்தில் ரதத்திலிருப்பவனும் மஹாத்மாவும் ரிஷிகளால துதிக்கப்பட்டவனுமான இந்திரனுடைய ரூபம் பார்க்கமுடியாததாயிற்று.

---

## இருநூற்றெண்பத்தெட்டாவது அத்யாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)

**(இந்திரன் வ்ருத்ரனைக் கொன்றதும், இந்திரனைத்தொடர்ந்த ப்ரம்மஹத்தியை ப்ரம்மதேவர் அக்கினிமுதலிய நால்வருக்குப் பங்கிட்டதும்.)**

மஹாராஜனே! எல்லாவிதத்தாலும் ஜ்வரத்தினால் வியாபிக்கப்பட்ட விருத்திராஸுரனுடைய சரீரத்தில் உண்டான அடையாளங்

களைச் சொல்லுகிறேன்; கேள் அவன் ஜ்வலிக்கின்றமுகத்துடன் பயங்கரனானான் நிறம் மிகவும் குன்றிவிட்டது அரசரே! உடலில் மிகவும்பெரியநடுக்கமும் பெரியமேல்மூச்சுமுண்டாயின. தீவ்ரமான மயிர்க்கூச்சலும் பெரிதான கீழ்மூச்சும் உண்டாயின. அவனுடைய முகத்துக்கெதிரில் மிகவும் பயங்கரமும் மிகவும் கோரமும், அமங்களமுமான நரியானது குதித்தது பாரத! அவனுடைய நினைவும் நசித்தது. அவனுடைய பக்கத்தில் ஜ்வலிக்கின்றவையும் எரிகின்றவையுமான கொள்ளிகளும் விழுந்தன பருந்துகளும் கழுகுகளும் கொக்குக்களும் மிகவும் பயங்கரமாகக் கத்திக்கொண்டு அவனுடைய தலைக்குமேலே களிப்புடன்சக்கரம்போலச் சுற்றின பிறகு,யுத்தத்தில் தேவர்களால் உற்சாகத்தைஅடையும்படிசெய்யப்பட்டஇந்திரன் வஜ்ராயுதத்தைக்கையிலெதாங்கி அந்தரதத்தில்ஏறிக்கொண்டு அந்தவிருத்ராஸுரனை எதிர்த்தான் பிறகு, அந்தப் பெரியஅஸுரன் அமானுஷமாகச் சப்தித்தான் ராஜஸ்ரேஷ்டனே! கொடியஜ்வரத்துடன் கொட்டாவிவிட்டான அவன்கொட்டாவிவிடும்பொழுது இந்திரன் வஜ்ராயுதத்தை எறிந்தான மிகவும்பெரியபலமுடையதும் காலமிருத்யுவிற் கொபமானதுமான அந்தவஜ்ரம் உடனே பெரியசரீரமுடையவிருத்ராஸுரனைக் கீழேவீழ்த்தியது ஓ! பரதஸ்ரேஷ்டனே! பிறகு, கொலைபட்டவிருத்ரனைபபார்த்து மறுபடியுமே எங்கும் தேவர்களுடைய சப்தமானது உண்டாயிற்று அஸுரசத்துருவும் மிகபபுகழ்பெற்றவனுமான இந்திரனானவன் விஷ்ணுவுடன் கூடினவஜ்ரத்தினால் விருத்ரனைக் கொன்றுவிட்டு ஸ்வர்க்கமே சென்றான் குருவம்சத்திலுதித்தவனே! பாரத! பரதஸ்ரேஷ்டனே! தர்மத்தையறிந்தவனே! பிறகு, விருத்திரனுடையசரீரத்திலிருந்தும் மஹாகோரமுள்ளதுப் ரௌத்ராகாரமானதும் உலகங்களுக்குப்பயத்தைச்செய்கின்றதும் தெற்றிப்பற்களுடையதும் (அதனாலும்) பயங்கரமானதும் விகாரமானதும் கறுத்தும்சிவந்துமிருப்பதும் பரட்டைத்தலையையும் கோரமானகண்களையுமுடையதும் [1]கிருத்யைபோன்றதும் கபாலமாலைபூண்டதும் ரத்தத்தினால் நனைந்ததும் மரவுரியுடுத்ததுமான பிரம்மஹத்தியானது வெளிப்பட்டது. ஓ! அரசரிற்சிறந்தவனே! பரதஸ்ரேஷ்டனே! அப்போது, அவிதஉருவமெடுத்துப் பயங்கரமாயிருக்கின்ற அந்தப் பிரம்மஹத்தியானது வெளிவந்து இந்திரனைத் தேடிற்று குருநந்தன! பிறகு,ஒருஸமயத்தில்,இந்திரன் உலகங்களுடையநன்மையை விரும்பினதனால ஸ்வர்க்கத்தைநோக்கிச் சென்றான் அப்பொழுது

---

1 762-வது பக்கம் குறிப்பிற்காண்க.

அந்தப்பிரம்மஹத்தி வெளியில்வந்த அதிகதேஜஸுள்ள இந்திரனைப் பார்த்து அவனைக் கழுத்தில்பிடித்து உறுதியாகப்பற்றிக்கொண்டது. இந்திரன் பிரம்மஹத்தியினால் அவ்விதபயமேற்பட்டபொழுது தாமரைத்தண்டின்நடுவிலிருந்து மிகபலவருஷங்கள் வாஸஞ்செய்தான். குருகுலத்திற்பிறந்தவனே! அப்பொழுது, இந்திரன் அந்தப்பிரம்மஹத்தியினால் முயற்சியுடன் பின்தொடர்ந்து பிடிக்கப்பட்டு ஒளியிழந்தவனானான் அவன் அந்தஹத்தியைப்போக்குவதற்குப் பெரிய முயற்சியைச் செய்தான் அவன் அந்தஹத்தியைநிவிருத்திக்கச் சக்தனாகவில்லை பரதஶ்ரேஷ்டனே! அதனால் பற்றப்பட்டபடியே தேவேந்திரன் பிதாமஹரைஅடைந்து தலையால் வணங்கினான். பரதர்களிற் சிறந்தவனே! அப்பொழுது அந்தப் பிரம்மதேவர் 'பிராம்மணஶ்ரேஷ்டனுடைய ஹத்தியினால்பிடிக்கப்பட்ட இந்திரனைப்பார்த்து ஆலோசித்தார் புஜபலமுள்ளவனே! பாரத! பிறகு, பிதாமஹர் அந்தப் பிரம்மஹத்தியைநோக்கி மெல்லியகுரலோடு நன்மை சொல்லுகிறவர்போல, 'பெண்ணே! தேவர்களுக்கெல்லாம் தலைவனான இவனை விட்டுவிடு. நான்விரும்பியதை நீ செய்யக்கடவாய். இப்பொழுது உனக்கு நான் என்னசெய்யவேண்டும்? நீ எதை விரும்புகிறாய்? சொல்' என்றுசொன்னார் பிரம்மஹத்தி, 'மூவுலகங்களையும்படைத்தவரும் மூவுலகங்களினாலும்பூஜிக்கப்பட்டவரும் தேவருமானநீங்கள் பிரீதியடைந்தால்போதுமென்றே நினைக்கிறேன் ஆனால், எனக்கு ஓர்இருப்பிடத்தை ஏற்படுத்தும். உலகரக்ஷணத்தை விரும்பினஉம்மால் இந்தமரியாதை செய்யப்பட்டது. தேவரே! உம்மால் இந்தபெரியமரியாதையானது நடக்கும்படியும் செய்யப்பட்டது. எல்லாஉலகங்களுக்கும் ஈஶ்வரரே! தர்மத்தையுணர்ந்தவரே! பிரபுவே! நீர் பிரீதியை அடைந்தால் இந்திரனைவிட்டு விலகிப் போகிறேன் எனக்கு ஓர்இருப்பிடம் ஏற்படுத்தும்' என்றுசொல்லிற்று. அப்பொழுது அந்தபிதாமஹர் உபாயத்தினால் இந்திரனுடைய பிரம்மஹத்தியைப் போக்குவதற்காக அதனை நோக்கி, 'அப்படியேஆகட்டும்' என்றுசொன்னார் பிறகு, மஹாத்மாவான ப்ரம்மதேவர் அந்த இடத்தில அக்கினியை நினைக்க, உடனே அக்னி வந்து அவரைநோக்கி, 'பகவானே! குற்றமற்றவரே! தேவரே! உம்முடைய ஸமீபம் வந்துவிட்டேன். தேவரே! நான் செய்யத்தக்கது எதுவோ அதை நீர் சொல்லவேண்டும்' என்று சொன்னான். பிரம்மா, 'இப்பொழுது நான் இந்திரனைவிடுவிப்பதற்காக இந்தப் பிரம்மஹத்தியை அநேகமாகப் பிரிக்கப்போகிறேன். நான்கிலொரு

பாகத்தை நீ வாங்கிக்கொள்ளவேண்டும்' என்று சொன்னார் அக்கினி, 'ஓ! பிரபுவே! பிரம்மாவே! நான் விடுதலை அடைதற்கு எல்லை எது? அதை யோசியும் உலகங்களால் ஆராதிக்கப்பட்டவரே! உள்ளபடி இதை அறிய விரும்புகிறேன்' என்றுசொன்னான். பிரம்மதேவர், 'அக்னியே! தமோகுணத்தினால் சூழப்பட்ட எந்தமனிதன் ஜ்வலிக்கின்ற உன்னை அவனுகவே அடைந்து ஓரிடத்திலும் தானியம் ஸமித்துக்கள் ஸோமரஸம் இவைகளால யாகஞ்செய்யவில்லையோ அவனை உடனே இந்த ப்ரம்மஹத்தி அடையும்; அவனிடத்திலேயே வஸிக்கவும் போகிறது ஹவிஸைவஹிப்பவனே! உன்னுடைய மனக்கவலை போகட்டும்' என்றார் இவ்விதம் சொல்லியதைக் கேட்டு ஹவ்யகவ்யங்களை அருந்துகிற அக்னிபகவான் பிரம்மாவினுடைய அந்தவார்த்தையை அங்கீகரித்தான். பிரபுவே! அதுவும் அப்படியே ஆயிற்று. மஹாராஜனே! பிறகு, பிதாமஹர் மரஞ்செடிபுற்களை அழைத்து இந்தவிஷயத்தைப்பற்றிச சொல்லத்தொடங்கினார். 'மஹாபயத்தைஉண்டுபண்ணுகிறஇந்தப்பிரம்மஹத்தியானது *விருத்திரர்ஸுரனிடமிருந்துஉண்டாகி இந்திரனை அடைந்தது இதில்நான்கிலொருபாகத்தை நீங்கள்வாங்கிக்கொள்ளுங்கள்' என்றார். அரசனே! பிறகு, முன்போலவேஉள்ளபடிசொல்லப்பட்ட மரம்கொடிபுற்பூண்டுகள் வருத்தமுற்று அக்னிபோலவே பிரம்மாவைநோக்கிப் பின்வருமாறு சொல்லின 'உலகங்களுக்கெல்லாம்பிதாமஹரே! எங்களுக்கு பிரம்மஹத்தியின்முடிவு எது? ஸ்வபாவத்தினாலேயேகெடுக்கப்பட்டிருக்கிறஎங்களை மறுபடியும் நீங்கள் கெடுப்பது தகாது ஓ! தேவரே! நாங்கள் எப்பொழுதும் அக்னியையும் குளிரையும் மழையையும் காற்றினால்அலைக்கப்படுதலையும் வெட்டுதலையும்பிளத்தலையும் பொறுக்கின்றோம். மூவுலகங்களுக்கும் ஈஸ்வரரே! இப்பொழுது நாங்கள்உம்முடையகட்டளையினால இந்தபரம்மஹத்தியை அங்கீகரிக்கின்றோம். நீங்கள் எங்களுக்கு விடுதலை ஆலோசிக்கவேண்டும்' என்றுசொல்லின. பிரம்மா, 'பர்வகாலம்ஏற்பட்டபொழுது எந்த மனிதன் மோஹத்தினால் உங்களை வெட்டுவதையும் பிளப்பதையும் செய்கிறானே அவனை இந்தஹத்தி அடையும்' என்றுசொன்னார். பிறகு, மஹாத்மாவால் இவ்விதம் சொல்லப்பட்ட மரம்கொடிபுற்பூண்டுகள் பிரம்மாவைப்பூஜித்துவிட்டு உடனே வந்தபடியே சென்றன. ஓ! பாரத! பிறகு, லோகபிதாமஹரானதேவர் அப்ஸரஸுகளை அழைத்து நன்மொழிசொல்லுகிறவர்போல இன்பமான வசனத்தி

*'வ்ருத்ராத்' என்று பாடம் கொள்ளப்பட்டது.

ளுல், 'ஓ! பெண்ணரசிகளே! இந்தப்பிரம்மஹத்தியானது இந்திரன் மூலமாக ஏற்பட்டிருக்கிறது. நீங்கள் என்வார்த்தைக்காக இதனுடைய நான்கிலொருபாகமான அம்சத்தை வாங்கிக்கொள்ளுங்கள்' என்று சொன்னார். தேவதாஸிகள், 'ஓ! தேவேசரே! பிதாமஹரே! உம்முடைய ஆஜ்ஞையினால் கிரகிப்பதில் நிச்சயங்கொண்ட எங்களுக்கு நிவிருத்தியின் ஸமயத்தை ஆலோசிக்கக்கடவீர்' என்றுசொன்னார்கள். பிரம்மா, 'எவன் ரஜஸ்வலைகளான ஸ்திரீகளிடத்தில் சேருகின்றானோ அவனை உடனே இது அடையும். உங்களுக்கு மனக்கவலை போகட்டும்' என்றுசொன்னார். ஓ! பரதஸ்ரேஷ்டனே! அப்ஸரஸுகளுடைய கூட்டங்கள் மனக்களிப்புடன், 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லிவிட்டுத் தங்களிருப்பிடமடைந்து களிப்புடனிருந்தன. பிறகு, மூன்றுஉலகங்களையும்படைத்தவரும் பெருந்தவமுடையவருமான பிரம்மதேவர் மறுபடியும் ஜலங்களை நினைத்தார் உடனே, நினைக்கப்பட்ட ஜலங்களும் வந்துசேர்ந்தன அரசனே! அந்தஎல்லா ஜலங்களும் வந்து அளவற்ற ஒளியுடைய பிதாமஹரான பிரம்மதேவரைவணங்கி, 'பகைவரையடக்குபவரே! தேவரே! இதோ நாங்கள் உம்முடையகட்டளையினால் உம்முடைய ஸமீபம்வந்துவிட்டோம். உலகங்களுக்கு ஈசரே! பிரபுவே! எங்களை ஆஜ்ஞைசெய்யும்' என்னும் வசனத்தைச் சொல்லின. பிரம்மா, 'மிகவும் பயங்கரமான இந்த ப்ரம்மஹத்தியானது விருத்திராஸுரனிடமிருந்து இந்திரனை அடைந்திருக்கின்றது. இதனுடைய நான்காவது பாகத்தை நீங்கள் வாங்கிக்கொள்ளுங்கள்' என்று சொன்னார். ஜலங்கள், 'ஓ! பிரபுவே! உலகங்களுக்குத் தலைவரே! எங்களுக்குச் சொல்லுகிறபடியே ஆகட்டும் நாங்கள் விடுதலை அடையும் ஸமயத்தை ஆலோசிக்கத்தக்கவராகிறீர் தேவர்தலைவரே! நீர் எல்லா உலகத்திற்கும் பரமமான கதியல்லவா? உம்மைத்தவிர வேறு யார் எங்களைக் கஷ்டத்திலிருந்து கரையேற்றுவதற்கு வேண்டிக்கொள்ளத்தக்கவர்?' என்று சொல்லின பிரம்மா, 'கொஞ்சமாயிருக்கின்றனவென்றெண்ணி மதிமயங்கி உங்களிடத்தில் கோழையையும் மலமூத்திரத்தையும் விடுகிறவனை இது உடனே அடையும்; அவனிடத்திலேயே வஸிக்கவும் செய்யும். அவ்விதம் உங்களுக்கு விடுதல் ஏற்படப்போகிறது. இவ்விதம் உங்களுக்கு உண்மையைச் சொல்லுகிறேன்' என்று சொன்னார். ஜனாதிப! யுதிஷ்டிரனே! பிரம்மஹத்தியானது பிறகு தேவேந்திரனைவிட்டு நீங்கிப் பிரம்மாவினுடைய கட்டளைப்படியே அந்த வாஸத்தை அடைந்தது. அரசனே! இந்திரன் பிரம்மஹத்

தியை அடைந்தது. இவ்விதம். இந்திரன் பிதாமஹரிடம் அனுமதி பெற்றுக்கொண்டு அஸ்வமேதத்தைச் செய்தான். ஓ! மஹாராஜனே! பிரம்மஹத்தியை அடைந்த இந்திரன் பிறகு அஸ்வமேதத்தினால் சுத்தியை அடைந்தானென்று கேள்வி. ஓ! பூபதியே! தேவனான வாஸவன் ஆயிரக்கணக்காகப்பகைவர்களைக்கொன்றுராஜ்யலக்ஷ்மியை அடைந்து ஒப்பற்ற சந்தோஷத்தை அடைந்தான். குந்தீநந்தன! விருத்ராஸுரனுடைய ரத்தத்தினாலேயே குமிழிகளுண்டாயின. ஆகையால், ஜலக்குமிழிகள் இருபிறப்போர்களாலும் (விசேஷமாக) தீக்ஷிதர்களாலும் தவத்தையே செல்வமாகவுடையமுனிவர்களாலும் அருந்தத்தக்கவைகளல்ல. நீயும் எல்லாநிலைமைகளிலும் இப்படிப்பட்ட பிராம்மணர்களுக்குப் பிரியத்தைச் செய்யக்கடவாய். குருநந்தன! அவர்கள் பூமியிலுள்ள தேவர்களென்று பிரஸித்தி பெற்றவர்கள். குருகுலத்தில் பிறந்தவனே! இவ்விதம் அளவற்ற வலிமையுடைய இந்திரன் புத்தியின்கூர்மையினால் உபாயத்தை முன்னிட்டுப் பெரிய அஸுரனான விருத்திரனைக் கொன்றான். குந்தீபுத்திரா! பகைவனைக்கொல்பவனும் தேவனுமான இந்திரன்போல நீயும் பூமியில் பகைவரால் ஜயிக்கப்படாதவனாக இருக்கப்போகிறாய். எவர்கள் பர்வங்கள்தோறும் திவ்யமான இந்த இந்திர சரித்திரத்தை வேதியர்களின் மத்தியில் சொல்லுவார்களோ அவர்கள் பாவத்தை அடையமாட்டார்கள். ஐயனே! இவ்விதம் ஆச்சரியமும் பெரிதும் விருத்திரனைப்பற்றியதுமான இந்திரனுடைய செய்கையானது உனக்குச் சொல்லப்பட்டது. மறுபடியும் எதைக் கேட்க விரும்புகிறாய்?" என்று வினவினார்.

---

## இருநூற்றெண்பத்தோன்பதாவது அத்யாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)

**(பரமசிவன் தம்மை அழையாமையால் கோபங்கொண்டு தக்ஷயாகத்தை அழித்ததும், தமதுகோபாக்நியைப் பல பொருள்களில் ஜ்வரமென்னும் வ்யாதியாக அமைத்ததும்.)**

யுதிஷ்டிரர், "பேரறிவினரே! ஸகல சாஸ்திரங்களிலும் வல்லவரே! பிதாமஹரே! ஐயா! இந்தவிருத்ரவதத்தில் எனக்கு ஒரு வார்த்தைசொல்லவேண்டுமென்கிற விருப்பமுண்டாகிறது. ஓ! நரஶ்ரேஷ்டரே! குற்றமற்றவரே! ஜ்வரத்தினால் விருத்ரன் மயக்கத்தை அடையும்படி செய்யப்பட்டானென்றும் இவ்வுலகில் இந்திரனால் வஜ்ரா

யுதத்தினால் கொல்லப்பட்டானென்றும் நீங்கள் எனக்குச்சொன்னீர்கள். பெரிய அறிவுடையவரே! இந்த ஜ்வரம் எப்படி உண்டாயிற்று? ஓ! பிரபுவே! ஜ்வரத்தின் உற்பத்தியை நன்றாகக் கேட்க விரும்புகிறேன்" என்று வினவ, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"ஓ! அரசனே! உலகத்தில் பிரஸித்தமாயிருக்கிற இந்த ஜ்வரத்தின் உற்பத்தியைக் கேள் பாரத! இது உண்டானவகையையும் சொல்லுகிறேன். மஹாராஜனே! பாரதனே! முன்காலத்தில் மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்றதும் ஸூர்யனைச்சேர்ந்ததும் எல்லாரத்னங்களினாலும் அலங்கரிக்கப்பெற்றதும் அளவிடமுடியாததும் எல்லா உலகங்களிலும் (ஒருவராலும்) அசைக்கமுடியாததும் ஸ்வர்ண தாதுக்களால்அலங்கரிக்கப்பட்டதுமான ஜ்யோதிஷ்கமென்கிற மஹாமேருவினுடைய கொடுமுடியின் பிரதேசத்தில் பரமேஸ்வரர் மஞ்சத்தில் விளங்கிக்கொண்டு உட்கார்ந்திருந்தார் இவருடைய பக்கத்தில் எப்பொழுதும் பர்வதராஜகுமாரியானவள் இருந்துகொண்டு விளங்கினாள். அப்படியே மஹாத்மாக்களான தேவர்களும், அளவற்ற பராக்ரமமுடைய வஸுக்களும், மஹாத்மாக்களும் வைத்ய ஸ்ரேஷ்டர்களுமான அஸ்வினீதேவர்களும், யக்ஷர்களுக்குத்தலைவனும் ஸ்ரீமானும் கைலாஸவாஸியும் பிரபுவும் சங்கம் பத்மம் என்கிற நிதிகளோடு அளவற்ற செல்வமுடையவனும் குஹ்யகர்களால் சூழப்பட்டவனும் விஸ்ரவஸின் புத்திரனும் அரசனுமான குபேரனும், மஹாகவியான சுக்ராசார்யரும் மஹாத்மாவான பரமேஸ்வரரை உபாஸித்துக்கொண்டிருந்தார்கள். ஸனத்குமாரர்முதலான மஹரிஷிகளும் அங்கிரஸ்முதலான மற்றத் தேவரிஷிகளும் விஸ்வாவஸு என்கிறகந்தர்வனும் நாரதபர்வதர்களும் கூட்டம்கூட்டமாகப் பலஅப்ஸரஸுகளும் வந்தார்கள். நானாவித வாஸனைகளை வஹிக்கிறதும் பரிசுத்தமுமான காற்றானது ஸுகமாயும் மங்களமாயும் வீசிற்று புஷ்பமுள்ள மரங்கள் எல்லாருதுக்களிலும் புஷ்பங்களுடையனவாயிருந்தன பாரதனே! வித்யாதரர்களும் ஸித்தர்களும் தபோதனர்களும் பசுபதியானமஹாதேவரைச் சூழ்ந்துகொண்டு உபாஸித்தார்கள் ஓ! மஹாராஜனே! நானாவிதமான ரூபங்களுள்ள பூதங்களும் மிகவும் குரூரர்களான ராக்ஷஸர்களும் மிக்கவலிமையுள்ளபிசாசங்களும் பலஉருவங்களைத்தரித்தவர்களும் ஸந்தோஷத்துடன் அனேக ஆயுதங்களைக்கையிலேந்தியவர்களும் அக்கினிபோன்றவர்களுமானமஹாதேவருடையஸேவகர்களும்அவ்விடத்தில் நின்றுகொண்டிருந்தார்கள். நந்திபகவானும் தம்முடைய

காந்தியினால் பளபளப்பாயும்ஜ்வலிக்கிறதாயுமிருக்கிற சூலத்தைவகித்துக்கொண்டுமஹாதேவருடையஅனுமதிபெற்றுஅவ்விடத்தில்நின்றுகொண்டிருந்தார். குருநந்தன! நதிகளுக்கெல்லாம் மேலானகங்கையும் ஸகலகட்டங்களிலுமுள்ள தீர்த்தங்களும்பிரகாசிக்க உருவமெடுத்து அந்தமஹாதேவரை உபாஸித்தாள். மிகப்பெரியதேஜஸுள்ளவரும் பகவானுமான அந்தமஹாதேவர் அவ்விடத்தில் முனிச்ரேஷ்டர்களாலும் தேவர்களாலும் இவ்விதம் பூஜிக்கப்பட்டார் பிறகு, ஒரு ஸமயத்தில் தக்ஷனென்கிற ஸ்ருஷ்டிகர்த்தன் முன் சொல்லப்பட்ட விதிப்படி யாகம் செய்யக்கருதி (தேவர்களை) அடைந்தான். பிறகு, இந்திரன்முதலான எல்லாத்தேவர்களும் அவனுடைய யாகத்திற்குப் போவதற்காக ஒன்றுசேர்ந்து அப்பொழுது நிச்சயித்தார்கள் மஹாத்மாக்களான அந்தத் தேவர்கள் ஈச்வரருடைய அனுமதியின்மேல் அக்னிக்கும் ஸூர்யனுக்குமொப்பான காந்தியுள்ள விமானங்களில் ஏறிக்கொண்டு கங்காத்துவாரமென்கிற க்ஷேத்திரத்தை அடைந்தார்களென்று கேள்வி. அப்போது, பதிவ்ரதையான பர்வதராஜ புத்திரியானவள் (யாகத்திற்காக) தேவர்கள் புறப்பட்டதைப்பார்த்துத் தேவரும் பசுபதியுமானதனது பதியை நோக்கி, 'பகவானே! இந்திரன்முதலான இந்தத் தேவர்கள் எங்கே போகிறார்கள்? உண்மையை அறிந்தவரே! உள்ளபடி சொல்லும். எனக்கு இதில் ஒரு பெரிய ஸந்தேகம் உண்டாகின்றது' என்றாள் பரமேச்வரர், 'ஓ! மஹாபாக்யவதி! உத்தமஞான தக்ஷனென்கிற ஸ்ருஷ்டிகர்த்தன் அச்வமேதயாகஞ்செய்கிறான் அதற்காகத் தேவர்கள் போகின்றார்கள்' என்றார். உமை, 'ஓ! மகாதேவரே! இந்த யஜ்ஞத்திற்கு நீர் ஏன் போகவில்லை? எவ்விதமான தடையினால் நீங்கள் (யாகத்திற்குப்) போகவில்லை?' என்றாள். பரமேச்வரர், 'மஹாபாக்கியவதி! தேவர்களாலேயே இது முன் அனுஷ்டிக்கப்பட்டது. எல்லா யாகங்களிலும் எனக்கு ஏற்பட்ட பாகமானது இப்போது கல்பிக்கப்படவில்லை சிறந்த மேனியுள்ளவளே! முந்தின கொள்கையின் முறைப்படி தேவர்கள் தர்மமாக ஏற்பட்ட யஜ்ஞத்தினுடைய பாகத்தை எனக்குக் கொடுக்கவில்லை' என்றார். உமை, 'பகவானே! நீர் எல்லாப் பிராணிகளிலும் மிக்க பெருமை வாய்ந்தவர். குணங்களாலும் பராக்கிரமத்தினாலும் யசஸினாலும் ஸ்ரீயினாலும் பிறரால் வெல்லமுடியாதவர். குற்றமற்றவரே! உமக்குப் பாகத்திலுண்டான இந்த ஆக்ஷேபத்தினால் எனக்குமிகவும் துக்கமுண்டாயிற்று; நடுக்கமும் உண்டாயிற்று' என்று சொன்னாள்.

ஓ! அரசனே ! அந்தத் தேவி தேவரும் பசுபதியுமான தன் பதியை நோக்கி இவ்விதம் சொல்லிவிட்டு மனக்கொதிப்புடன் மௌனமாக இருந்தாள். பிறகு, சங்கரர் எது செய்யவேண்டுமென்று தேவியின் மனத்திலிருக்கிறதோ அந்த அபிப்பிராயத்தை அறிந்து நந்தியை நோக்கி, 'நீ (இங்கே) நில்' என்று கட்டளையிட்டார். பிறகு, யோகத்தில் வல்லமையுள்ளவர்களுக்கெல்லாம் தலைவரும் மிக்க காந்தியுள்ளவரும் தேவர்களுக்கெல்லாம் தேவரும் பிநாகமென்கிற வில்லை ஏந்தியவருமான அந்த மகாதேவர் யோகபலத்தைச் செய்து கொண்டு அப்பொழுதே பயங்கரமான கணங்களால் விரைவில் அந்த யாகத்தை நாசஞ்செய்வித்தார். (அந்தக்கணங்களில்) சிலர்கூச்சலிட்டார்கள்; சிலர் சிரித்தார்கள் ஓ! அரசனே! மற்றவர்கள் அந்த யாகத்தில் ரத்தத்தைவாரி அக்கினியில் இறைத்தார்கள் சிலர் முகங்களைவிகாரப்படுத்திக்கொண்டு யூபங்களைப்பிடுங்கித் தூரத்தில் எறிந்தார்கள். மற்றவர்கள் பரிசாரகர்களை வாய்களால் விழுங்கினார்கள். ஓ! அரசனே! பிறகு, நான்குபக்கத்திலும் கெடுக்கப்பட்டஅந்தயஜ்ஞமானது மான்ரூபத்தைத்தரித்துக்கொண்டு உடனே ஆகாயத்தை நோக்கியே சென்றது. அப்பொழுது பிரபுவான அந்தமஹேஶ்வரர் அந்தயாகம் அந்தவடிவத்துடன்போகின்றதைஅறிந்து பாணத்துடன் வில்லைஎடுத்துக்கொண்டு பின்தொடர்ந்தார். பிறகு, தேவர்களுக்கெல்லாம்ஈசரும் அளவற்றபராக்ரமமுடையவருமான அவருடையநெற்றியினின்றும் கோரமான ஒருவேர்வைத்திவலை கோபத்தால் வெளிப்பட்டது அந்தவேர்வைத்திவலை பூமியில்விழுந்தவுடனே காலாக்னிக்குச்சமமான மிகப்பெரிய அக்னியானது உண்டாயிற்று. ஓ! புருஷஶ்ரேஷ்ட! அப்பொழுது அந்தஅக்னியில மிகவும்குள்ளரும சிவந்தகண்களையுடையவரும் மஞ்சள்வர்ணமானமீசையுடையவரும் பயங்கரரும்உயரக்கிளம்பினதலைமயிர்களுடையவரும்ரோமங்களடர்ந்தஅவயவங்களுள்ளவரும் பருந்தையும்கோட்டானையும்போன்றவரும் பயங்கரமானகரியநிறமுடையவரும் சிவந்தஆடைஉடுத்தவருமான ஒருபுருஷர் உண்டானார். மிகவும்பலசாலியான அவர் அந்தயாகத்தை, தீயானதுஉலர்ந்தகாட்டை எரிப்பதுபோல எரித்துவிட்டார். அவர் எங்கும் சுற்றினார்; தேவர்களையும் ரிஷிகளையும் துரத்தினார். எல்லாத்தேவர்களும் அவரிடம்பயந்து பத்துத்திக்குக்களிலும் ஓடினார்கள். ஓ! பிரஜைகளைப்பரிபாலிக்கின்றஅரசனே! பரதஶ்ரேஷ்டனே! அவ்விடத்தில்சஞ்சரிக்கிற அந்தப்புருஷரால் பூமியானது மிகவும் நடுக்கமடைந்தது. அப்பொழுது, 'கூ, கூ' என்றுகதறுகிற ஸகல

ஜகத்தையும்பார்த்து* ப்ரபுவானப்ரம்மதேவர், மஹாதேவரைநோக்கி நேரில்நின்றுகொண்டு சொல்லலானார். 'ஓ! பிரபுவே! தேவர்களெல்லாரும் உமக்குப் பாகத்தைக் கொடுப்பார்கள். ஸகலதேவர்களுக்கும் ஈஶ்வரரே! நீங்கள் கோபத்தீயை அடக்கவேண்டும். பகைவரைவாட்டுகிறவரே! மஹாதேவரே! இந்த ஸகலமான தேவர்களும் முனிவர்களும் உம்முடைய கோபத்தினாலே மனத்தில் கலக்கமடைகிறார்கள். தேவசிகாமணியே! தர்மத்தை அறிந்தவரே! உம்முடைய வேர்வையிலிருந்துண்டான ஜ்வரம் என்கிற பெயருள்ள இந்தப் புருஷன் உலகங்களில் ஸஞ்சரிப்பான். பிரபுவே! ஆனால், ஒன்றாயிருக்கிற இந்தத் தேஜஸைத்தரிப்பதில் இந்தப் பூமி முழுமையும் சக்தியற்றது. ஆகையால், இது அநேகவிதமாகச் செய்யப்படட்டும்' என்றார். பிரம்மாவினால்இவ்விதம்சொல்லபபட்டதேவர், பாகமும்ஏற்படுத்தப்பட்டவுடன், அளவற்ற பராக்கிரமமுடையபகவானானபரம்மாவை நோக்கி, 'அப்படியே ஆகட்டும்' என்று சொன்னார். பினாகியானவர் சிரித்துக்கொண்டு மிகுந்த பிரீதியை அடைந்தார். அப்பொழுது, சங்கரர் பிரம்மாசொல்லியபடி பாகத்தையும் அடைந்தார். அப்பொழுது, ஸகல தர்மத்தையும் உணர்ந்த தேவரானவர் ஸகலமானபிராணிகளுக்கும் நன்மையுண்டாவதற்காக ஜ்வரத்தையும் அநேகம் பிரிவாகச் செய்தார் குழந்தாய்! அதனையும் கேள். தர்மமறிந்தவனே! மஹாத்மாவான தேவரால் ஜ்வரமானது யானைகளுக்கு மண்டைக்கொதிப்பாகவும் மலைகளுக்குத் தாதுவாகவும் ஜலங்களுக்குப் பாசியாகவும் பாம்புகளுக்குச் சட்டையாகவும் விருக்ஷங்களுக்குக்குளம்புரோகமாகவும் பூதலத்தில் உவராகவும் பசுக்களுக்கு மாலைகண்ணாகவும் குதிரைகளுக்குக் கண்டத்தில்சதையடைபபாகவும்மயில்களுக்கு மண்டைவெடிப்பாகவும் குயில்களுக்குக் கண்ணோயாகவும் சொல்லப்பட்டது. செம்மறியாடுகளுக்கெல்லாம் பித்தவிகாரமென்று நமக்குக் கேள்வி. எல்லாக்கிளிகளுக்கும் விக்கல் என்கிற ஜ்வரமானது சொல்லப்படுகின்றது. தர்மமறிந்தவனே! பின்னும் புலிகளிடத்தில் ஶ்ரமமென்கிற ஜ்வரமானது இவ்வுலகில் சொல்லப்படுகின்றது. தர்மமறிந்தவனே! மானிடர்களிடத்தில்ஜ்வரமென்றே இது பிரஸித்தமாயிருக்கிறது. மஹேஶ்வரருடைய இந்தத்தேஜஸாகிற மிக்க கொடிய ஜ்வரம் மனிதனைப் பிறப்பிலும் இறப்பிலும் அப்படியே நடுவிலும் அடைகின்றது. (ஆகையால்) ஈஶ்வரரானவர்எல்லாபபிராணிகளாலும் வணங்கவும் பூஜிக்கவும் தக்கவர் இந்த ஜ்வரம் உட்புகுந்த

*'ஹிக்கிகா' என்பது மூலம்.

வுடன் தர்மவான்களுள் சிறந்தவனான விருத்ராஸுரன் கொட்டாவி விட்டான். பிறகு, அவனைக்குறித்து இந்திரன் வஜ்ராயுதத்தை ஏவினான். ஓ! பாரதனே! வஜ்ரமும் விருத்ரனை அடைந்து பிளந்து விட்டது. மஹாயோகியான அந்தப் பெரிய அஸுரன் வஜ்ரத்தினால் பிளக்கப்பட்டு அளவற்ற பராக்கிரமமுடைய விஷ்ணுவினுடைய சிறந்த ஸ்தானத்தை அடைந்தான். முன் விஷ்ணுபக்தியினாலன்றோ அவன் இந்த உலகத்தில் வியாபித்தான்? ஆகையால், யுத்தத்தில் கொல்லப்பட்டு விஷ்ணுவினுடைய ஸ்தானத்தை அடைந்தான். இவ்விதம் விருத்ராஸுரனைப்பற்றியிருந்த பெரிய ஜ்வரத்தினுடைய இந்த விரிவான விஷயமானது என்னால் சொல்லப்பட்டது. புத்திரனே! உனக்கு வேறு என்ன சொல்லவேண்டும்? ஜ்வரத்தினுடைய இந்த உற்பத்தியை விசாலமான மனத்தையுடைய எந்த மனிதன் மிக்க அடக்கத்துடன் எப்பொழுதும் படிப்பானோ அவன் ரோகம் விலகினவனும் ஸுகசாலியும் ஸந்தோஷமுள்ளவனுமாகி விரும்பியவைகளை அடைவான்" என்றார்" என்றுகூறினார்.

---

## இருநூற்றுத்தோண்ணூறுவது அத்யாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)

**(பரமசிவன் வீரபத்ரரைக்கொண்டு தக்ஷயாகத்தை அழித்ததும், தக்ஷன் ஸஹஸ்ரநாமத்தினால் அவரைத்துதித்ததும், அவர் கோபந்தணிந்து வரமளித்ததும்.)**

ஜனமேஜயர், "பிராம்மணரே! வைவஸ்வதமன்வந்தரத்தில் பிரசேதஸின் வம்சத்தில்பிறந்த ஸ்ருஷ்டிகர்த்தனான தக்ஷனுடைய அஶ்வமேதமானது எப்படி நாசத்தை அடைந்தது? ஓ! பிராமணரே! ஸ்ருஷ்டிகர்த்தனுடைய அந்த அஶ்வமேதமானது எப்படி ஏற்பட்டது? எல்லாரூபமாயுமிருக்கிற பிரபுவானவர் தேவியினுடைய கோபத்தைக் குறித்தன்றோ தாமும் கோபத்தை அடைந்தார்? தக்ஷன் அவருடைய பிரஸாதத்தை அடைந்து அந்தயாகத்தை எப்படி பூர்த்திசெய்தான்? இதை அறியவிரும்புகிறேன். எனக்கு உள்ளபடி சொல்லும்" என்று கேட்க, வைசம்பாயனர் சொல்லலானார்.

"முற்காலத்தில் இமயமலையின் தாழ்வரையில் ரிஷிகளாலும் வஸித்தர்களாலும் அடுக்கப்பட்டதும் கந்தர்வர்களாலும் அப்ஸரஸுகளாலும் சூழப்பட்டதும் அனேகவிதமான விருக்ஷங்களாலும் கொடிக

ளாலும் சூழப்பட்டதுமான கங்காத்துவாரத்தில மங்களகரமான இடத்தில் தக்ஷன் யாகம் செய்தான். அப்பொழுது ஆகாயத்திலும் மண்ணுலகிலும் ஸ்வர்க்கலோகத்திலும் வஸிக்கின்ற எல்லோரும் அஞ்சலிசெய்துகொண்டு, 'ரிஷிகளுடைய ஸமூகங்களால் சூழப்பட்டவனும் தர்மத்தைத் தரிக்கின்றவர்களில் சரேஷ்டனுமான தக்ஷனென்கிற ஸ்ருஷ்டிகர்த்தனை ஸ்தோத்திரஞ்செய்தார்கள். உடனே, தேவர்கள் அஸுரர்கள் கந்தர்வர்கள் பிசாசர்கள் உரகர்கள் ராக்ஷஸர்கள் ஹாஹா ஹூஹூவென்னும் கந்தர்வர்கள் தும்புரு நாரதர் விசவாவஸு விசவஸேனன் கந்தர்வர்களைச் சேர்ந்த அப்ஸரஸ்திரீகள் ஆதித்யர்கள் வஸுக்கள் ருத்ரர்கள் மருத்துக்களுடைய கூட்டங்களோடு கூட ஸாத்யர்கள் ஆகிய யாகத்தில் பாகமுடையவர்களான எல்லோரும் இந்திரனுடன் வந்தார்கள். ஊஷ்மபர்களும் ஸோமபர்களும் தூமபர்களும் ஆஜ்யபர்களுமான ரிஷிகளும் பிதருக்களும் பிரம்மாவுடன் வந்தார்கள். மற்றுமுள்ள அனேகமான *ஜராயுஜம் அண்டஜம் ஸ்வேதஜம் உத்பிஜ்ஜம் என்கிற நான்குவிதப்பிராணிகளின் ஸமூகங்களும் சீக்கிரமாய் வந்தன. ஆலோசனையுடன் அழைக்கப்பட்ட எல்லாத்தேவர்களும் பத்தினிகளுடன் விமானத்திலிருந்துகொண்டு ஜ்வலிக்கின்ற அக்கினிகள்போல விளங்கினார்கள். (அப்பொழுது) ததீசி மஹரிஷியானவர் அவர்களைப்பார்த்துக் கோபமுண்டு ஒருவார்த்தை சொன்னார். 'ருத்ரபூஜையில்லாத இது யாகமுமாகாது; தர்மமுமாகாது. எல்லோரும் மரணசம்பந்தத்தை அடைந்துவிட்டார்களோ? இது *காலத்தின் வித்தியாஸமா? அல்லது நேரிட்ட விநாசத்தை இவர்கள் மோகத்தினால் அறியவில்லையா? பெரிதானயாகத்தில் நேரிட்ட கோரமான பயத்தை அறியவில்லையே?' என்றார். இவ்விதம் சொல்லிவிட்டு அந்த மஹாயோகியானவர் ஞானதிருஷ்டியினால் பார்த்தார். அவர் மஹாதேவரான ஈசவரரையும் வரத்தை அளிக்கின்றவளும் மங்களஸ்வரூபியுமான தேவியையும் அந்தத் தேவிக்குச் சமீபத்தில மஹாத்மாவான நாரதரையும் பார்த்தார். யோகத்தை அறிந்தவரான அந்தத்ததீசியானவர் இவ்விதம் நிச்சயம் செய்து மிக்க ஸந்தோஷத்தை அடைந்தார். அவர்களெல்லோரும் ஒரே ஆலோசனையுள்ளவர்களாயிருந்தார்கள். ஈசனை அழையாத காரணத்தினால் ததீசியானவர் அந்த இடத்தை விட்டு விலகி இருந்துகொண்டு (அவர்களை நோக்கி) மனிதன் பூஜிக்கத்தகாதவைகளைப் பூஜிப்பதினாலும் பூஜிக்கத்தக்கவர்களைப் பூஜியாததினாலும் அடிக்கடி

*அநுசாஸனபர்வம் 771-வது பக்கம் குறிப்பிலிகாண்க.

மனுஷ்யஹத்திக்குச் சமமான பாவத்தை அடைகின்றான். நான் முந்தியும் பொய்யைச் சொன்னதில்லை; இனி ஒருபொழுதும் சொல்லப் போகிறதுமில்லை. தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் மத்தியில் நான் உண்மையைச் சொல்லுகின்றேன். தாமே வந்தவரும் பசுக்களை வகிக்கின்றவரும் ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிறவரும் ரக்ஷிக்கிறவரும் யாகத்தில் எல்லாருக்கும் முதலில் பூஜிக்கிறவருமான பிரபுவைப் பாருங்கள்' என்று சொன்னார். தக்ஷன், 'எங்களுக்குக் கரத்தில் சூலாயுதமுடையவர்களும் ஜடாதாரிகளும் பதினொருஸ்தானங்களை அடைந்தவர்களுமான அநேக ருத்ரர்களிருக்கின்றார்கள். நான் மஹேசவரரை அறியவில்லை. எல்லோரும் ஆலோசித்துத்தான் இவரை அழைக்கவில்லை' என்று சொன்னான். ததீசி, 'நான் சங்கரருக்குமேல் வேறு தெய்வத்தைப் பார்க்கவில்லை யென்பது உண்மையானால் தக்ஷனுடைய பெரிய இந்த யாகமானது (இப்போது) நிறைவேறப் போகிறதில்லை' என்று சொன்னார். தக்ஷன், 'யாகத்தின் தலைவருக்காக ஸ்வர்ண பாத்திரத்தில் வைக்கப்பட்டதும் விதிப்படி மந்திரத்தினால் பரிசுத்தமுள்ளதுமான இந்த ஹவிஸை, நிகரற்ற விஷ்ணுவினுடைய பாகமாகச் சோபிக்கின்றேன். இவர் பிரபுவும் வியாபகரும் ஆராதிக்கத் தக்கவருமானவர்' என்று சொன்னான். தேவியானவள், 'இப்பொழுது பிரபுவும் வியாபகரும் ஆராதிக்கத்தக்க ஸர்வஜ்ஞரும் நினைக்கவும் அரியருமான இந்த என்னுடைய பதியானவர் எல்லாப் பாகத்தையுமாவது பாதிப்பாகத்தையாவது அல்லது மூன்றிலொரு பாகத்தையாவது அடையும்படியான தானத்தையோ விரதத்தையோ தவத்தையோ நான் செய்வேன்' என்று சொன்னாள். இவ்விதம் சொல்லிக் கலக்கமுற்ற தம்முடைய பத்நியை நோக்கி ஸர்வஜ்ஞரான ஈச்வரர் அதிக ஸந்தோஷத்தையடைந்து, 'தேவியே! மெல்லிய அங்கமும் இடையுமுள்ளவளே! என்னை நீ அறியவில்லை. யாகத்திற்கு ஈசனான என் விஷயத்தில் இந்த வசனமானது உசிதமா? நீண்ட கண்களையுடையவளே! நான் (எல்லாவற்றையும்) அறிகிறேன். அறிவில்லாத அஸத்துக்கள் ஒன்றையும் அறிகிறதில்லை. இப்பொழுது உன்னுடைய மாயையினாலே இந்திரனும் தேவர்களும் மூவுலகங்களிலுமுள்ளோரும் முழுதும் அஜ்ஞானத்தை அடைந்திருக்கின்றனர். யாகத்தில் என்னை ஹோதாக்களான ருக்வேதிகள் துதிக்கின்றார்கள். என்னைக் குறித்து ஸாமகர்களும் ரதந்த்ர ஸாமத்தைக் கானஞ்செய்கின்றார்கள். என்னைப் [1] பிரம்ம

1 அதர்வவேதிகள்.

வித்துக்களான பிராம்மணர்கள் பூஜிக்கின்றார்கள். எனக்கு அத்வரியுக்களென்கிற யஜுர்வேதிகள் ஹவிர்ப்பாகத்தைக் கொடுக்கின்றார்கள்' என்று சொன்னார். தேவியானவள், 'மிகவும் இழிந்தவரானாலும் எல்லாப் புருஷரும் ஸ்திரீஜனங்களின் மத்தியில் தம்மைப் புகழ்ந்து கொள்ளுகின்றனர்; கர்வத்தையும் அடைகின்றனர். ஸந்தேகமில்லை' என்றாள். சங்கரர், 'தேவர்களுக்கெல்லாம் ஈசவரியே! சிறுத்த இடையுள்ளவளே! நான் என்னைத் துதிக்கவில்லை. சிறந்த மேனியுடையவளே! உத்தமியே! இந்த யாகநிமித்தம் நான் ஸ்ருஷ்டிப்பவனைப் பார்' என்றார். அந்தப் பகவான் பிராணனைக் காட்டிலும் பிரியமானவளும் பத்நியுமான உமையைப் பார்த்து இவ்விதம் சொல்லிவிட்டுத் தம்முடைய முகத்திலிருந்து மிகுந்த உற்சாகமுடையதும் கோரமுமான ஒரு பூதத்தை ஸ்ருஷ்டித்தார். அவர் அவனை நோக்கி, 'தக்ஷனுடைய யாகத்தை அழித்துவிடு' என்று சொன்னார். பிறகு, முகத்திலிருந்து விடுபட்ட அந்த ஒப்பற்ற ஸிம்மம் போன்ற வீரபத்திரரால் தேவியின் கோபந்தணிவதற்காகத் தக்ஷனுடைய யாகமானது விளையாட்டாக அழிக்கப்பட்டது. I (தேவியினுடைய) கோபத்தினால் மிகவும் பயங்கரையும் மஹாகாளியுமான மஹேசவரியானவள் உண்டாகி ஆத்மரூபரான ஈசவரருடைய கர்மத்திற்குச் சாக்ஷியாக அவருடன் பின் தொடர்ந்தாள். சௌரியத்தினால் ஆத்மாவான ஈசவரருக்குச் சமமான பலம் ரூபம் இவைகளுடன் கூடினவரும் (ஈசவரருடைய) கோபமே வேறு உருவமெடுத்தது போன்றவரும் அளவற்ற பலம் வீர்யங்களுள்ளவரும் அளவற்ற பலமுள்ள ஆண்மைத்தனமுடையவரும் வீரபத்திரரென்று பிரஸித்தி பெற்றவரும் தேவியின் கோபத்தைத் துடைக்கின்றவருமான அந்தப் பகவான் தேவருடைய அபிப்ராயத்தை அறிந்து சிரஸால் வணங்கிப் பிறகு தம்மயிர்க்கால்களிலிருந்தும் ரௌம்யர்களென்கிற சிறந்த கணங்களை ஸ்ருஷ்டித்தார். பிறகு, ருத்திரருக்குச் சமமானவைகளும் ருத்திரருக்குச் சமமான வீர்யமும் பராக்ரமமுமுடையவைகளும் பயங்கரமானவைகளுமான அந்தக்கணங்கள் தக்ஷனுடைய யாகத்தை அழிப்பதற்காக விரைவில் வந்தன. பிறகு பயங்கரமான ரூபமுடையவைகளும் பெரிய சரீரமுடையவைகளும் நூற்றுக்கணக்கும் ஆயிரக்கணக்குமாயிருப்பவைகளுமான அவைகள் கிலகிலா சப்தங்களால்

---

I 'மஹேச்வரியும் மஹாபயங்கரமான மஹாகாளியாகித் தனக்காக உண்டான கார்யத்தை நேரில் பார்ப்பதற்காக அவருடன் பின் சென்றாள்' என்றும் கொள்ளலாம்.

ஆகாயத்தை நிரம்பச்செய்தன. பெரிய அந்தச் சப்தத்தினால் அங்குள்ள தேவர்கள் நடுங்குகின்றார்கள்; மலைகளும் சிதறின; பூமியும் அசைந்தது; காற்றும் சுழன்றது; கடல் கலங்கிற்று. அக்னிகளும் ஒளி மழுங்கின; ஸூர்யனும் பிரகாசிக்கவில்லை; கிரகங்களும் பிரகாசிக்கவில்லை; நக்ஷத்திரங்களும் சந்திரனும் பிரகாசிக்கவில்லை; ரிஷிகளும் பிரகாசிக்கவில்லை; தேவர்களும் பிரகாசிக்கவில்லை; மனிதர்களும் பிரகாசிக்கவில்லை; இவ்விதம் இருளடைந்தபொழுது சில கணங்கள் கர்வத்துடன் எரித்தன. கோரமுள்ள மற்றவைகள் அடித்தன; யூபங்களையும் பிடுங்கின. மற்றவைகள் இடித்தன. வேறு சில கசக்கின. வாயுவேகமுள்ள சில எங்கும் ஓடின. மனோவேகமுள்ள சில குதித்து ஓடின. யாகபாத்ரங்களும் திவ்யமான ஆபரணங்களும் பொடியாக்கப் பட்டன. அவைகள் வாரி இறைக்கப்பட்டு ஆகாய வெளியில் நக்ஷத்திரங்கள் போலக் காணப்பட்டன. திவ்யமான அன்னம் பானம் பக்ஷ்யம் இவைகளுடைய குவியல்கள் மலைகளுக்குச் சமானமாயிருந்தன. அப்பொழுது நெய்விட்ட பாயஸங்களாகிற சேறுகளோடு கூடின பாலாறுகள் காணப்பட்டன. தயிராடைகளாகிற ஜலத்தையுடையவையும் சிறந்த சர்க்கரைக் கட்டிகளாகிற மணல்களுடையவையும் அறுசுவையுள்ளவையும் மனத்திற்கினியவையுமான வெல்லவாய்க்கால்கள் ஓடின. பலவிதமான மாம்ஸங்களையும் பலவகையான பக்ஷ்யங்களையும் திவ்யமான பானகங்களையும் [1]லேஹ்யங்களையும் சோஷ்யங்களையும் கணங்கள் நானாவிதமான வாய்களால் புஜித்தன; அழித்தன; வாரியுமெறிந்தன. ருத்ரருடைய கோபத்தினால் பெரிய சரீரத்தையுடையவைகளும் பிரளயகாலாக்னிக்கு ஒப்பானவைகளுமான கணங்கள் நான்கு பக்கத்திலும் தேவஸைன்யங்களைப் பயப்படுத்திக் கலக்கின; அநேக வடிவங்களையெடுத்து விளையாடின; தேவஸ்திரீகளை வாரி எறிந்தன. ருத்ரருடைய கோபத்தினின்றும் எல்லாத் தேவர்களாலும் பிரயாசத்துடன் நன்கு காக்கப்பட்ட அந்த யாகத்தைக் கொடிய செய்கையுள்ள வீரபத்ரர் எங்கும் விரைவில் எரித்தனர்; எல்லாப் பிராணிகளுக்கும் அச்சத்தை விளைவிக்கும்படி கோரமான சப்தத்தைச் செய்தனர்; யாகத்தின் சிரஸைக் கொய்துவிட்டுக் கர்ஜித்தனர்; சந்தோஷித்தனர். பிறகு, நான்முகன் முதலான எல்லாத் தேவர்களும் ஸ்ருஷ்டிகர்த்தனான தக்ஷனும் அஞ்சலி செய்துகொண்டு, 'நீர் யார்? சொல்லும்' என்று கேட்க, வீரபத்ரர், 'நான் ருத்ரருமல்லேன்; தேவியுமல்லேன். இங்கே நான் ஹவிஸையருந்தவும்

1. 645 ஆம் பக்கம் குறிப்பிற்காண்க.

வரவில்லை. நீங்கள் தேவிக்குக் கோபம் வரும்படி செய்ததை
நினைத்து ஸர்வாத்மாவான பிரபுவானவர் கோபத்தை
அடைந்தார். பிராமமணசிரேஷ்டர்களைப்பார்க்கவும் வரவில்லை.
உத்ஸாஹத்தினாலும் வரவேஇல்லை. என்னை உன்யாகத்தை
அழிப்பதற்காக இங்கேவந்தவனாக அறிந்துகொள். நான் வீரபத்திர
னென்று பெயர்பெற்றவன்; ஈசவருடையகோபத்தினின்றும் குதித்
தவன்; இவள் பத்ரகாளி என்று பெயர்பெற்றவள்; தேவியின்
கோபத்தினின்று வெளிப்பட்டனள். நாங்களிருவரும் தேவர்களுக்
கெல்லாம் தேவரான அவராலே அனுப்பப்பட்டு யாகஸமீபத்தை
அடைந்தோம். பிராம்மணசிரேஷ்டனே! உமாபதியானதேவதேவ
னை சரணமடை. தேவருடையகோபமும் மேலானது. மற்றவிடத்
திலிருந்து வரதானமும இழிந்தது' என்றுசொன்னர். வீரபத்ரரு
டையவார்த்தையைக்கேட்டு, தர்மத்தைத்தரிக்கிறவர்களில் சிறந்த
வனான தக்ஷன் பரமேசவரரைப்பணிந்து ஸ்தோத்திரத்தினால்ஸந்தோ
ஷிக்கசசெய்யலானன். 'தேவரும் சிக்ஷகரும் சாசவதரும் நிலையுள்ள
வரும் அழிவில்லாதவரும் மஹாத்மாவும் எல்லாஉலகத்திற்கும்பதியு
மான மஹாதேவரை நான் சரணமடைகிறேன்' என்றான். நன்றாகச
சேகரிக்கப்பட்ட அந்தத்திரவியங்களோடு கூடின தக்ஷனுடையயாகத்
தில் எல்லாத்தேவர்களும் தபோதனர்களானரிஷிகளும் அழைக்கப்
பட்டார்கள். தேவரும் (ஸ்ருஷ்டிமுதலான) எல்லாத்தொழில்களையு
முடையவருமான மஹேசவரர் அதற்கு அழைக்கப்படவில்லை. அப்
பொழுது மஹாதேவியானவள் கோபத்தை அடைந்தாள். அதனி
மித்தம் ஈசவரர் கணங்களை அனுப்பினர். அப்பொழுது யாகசாலை
எரிக்கப்படடும் பிராமமணர்கள ஓடியும் மஹாத்மாவும் பயங்கரரும்
ஜ்வலிக்கிறவருமான வீரபத்ரர் நக்ஷத்ரமண்டலத்தை வியாபித்தும்
பரிசாரகர்கள் சூலத்தால் மார்புபிளக்கப்பட்டு அலறிக்கொண்டும்
யூபங்கள் அசைத்துப் பிடுங்கி எங்கும் எறியப்பட்டும் கழுகுகள் மாம்
ஸத்தில் ஆசைகொண்டு உயரக்கிளம்பியும் கீழேஸஞ்சரித்துக்கொண்
டும் யக்ஷர்களும் கந்தர்வக கூட்டங்களும பிசாசர்களும் உரகர்களும்
ராக்ஷஸர்களும் அவற்றின் இறகுகளின்காற்றினால் தள்ளப்பட்டும்
அநேகம்நரிகளால் ஊளையிடப்பட்டும் இருக்கும்பொழுது, அனேக
நேத்ரங்களையுடையவரும் சத்துருக்களை ஜயிக்கின்றவரும் தேவ
தேவருமான ஈசவரர் முகஸ்தானத்தினால் முயற்சியுடன்பிராணபா
னங்களை அடக்கிக் கண்களால் எங்கும் பார்த்துக் கொண்டு
சீக்கிரமாக அக்னி குண்டத்திலிருந்தும் கிளம்பினர். ஆயிரம்

ஸூர்யர்களுடைய ஒளியைவகிக்கிறவரும் ஊழித்தீப்போன்றவருமான அவர் (தக்ஷனைநோக்கிப்) புன்னகை செய்து, 'உனக்கு நான் என்னசெய்யவேண்டும்? சொல்' என்னும் வசனத்தைச் சொன்னார். பிறகு, சிருஷ்டிகர்த்தனான தக்ஷன் யாகத்தைப்பற்றின அத்யாயத்தைத் தேவகுருவினிடமிருந்து கேட்டபொழுது, அஞ்சலிசெய்துகொண்டு பயமும் சிந்தையும் நடுக்கமுமடைந்து கண்களிலும் முகத்திலும் கண்ணீர்பெருக அந்தத்தேவரைநோக்கி, 'ஸர்வஜ்ஞரானநீர் அருளுள்ளவரும் எனக்குவரமளிப்பவரும் நான் உமக்குப்பிரியனும் அனுக்ரஹிக்கத்தக்கவனுமாயிருந்தால் நெடுநாள் பெருமுயற்சியால் நன்குசேர்க்கப்பட்டதும் எரிக்கவும் கடிக்கவும் குடிக்கவும் தின்னவும் அழிக்கவும் பொடிக்கவும் எறியவும் பட்டதுமான இவ்விதயாகஸாமக்ரியானது வீணாகவேண்டாம். நான் எனக்கு இந்தவரத்தை வரிக்கின்றேன்' என்று சொன்னான். ஸர்வஜ்ஞரும் பகனென்கிற ஸூர்யனுடைய நேத்ரத்தைப்பிடுங்கினவரும் தாமங்களுக்குப் பயனளிக்கின்றவரும் விரூபமான நேத்திரங்களையுடையவரும் முக்கண்ணரும் தேவரும் பிரஜைகளுக்கெல்லாம் பதியுமான ஹரர் 'அப்படியே ஆகட்டும்' என்று சொன்னார். தக்ஷனவன் முழங்கால்களை பூமியிற்படியநமஸ்கரித்து ஈசவரரிடமிருந்து வரத்தைஅடைந்து விருஷபத்வஜரான அவரை ஆயிரத்தெட்டுநாமங்களினால் துதித்தான்' என்றார்.

யுதிஷ்டிரர், "ஐயா! குற்றமற்றவரே! பிரஜைகளுக்குப்பதியான தக்ஷன் எந்தநாமங்களினால் ஈசவரரைத் துதித்தான்? அவற்றை நீர் எனக்குச் சொல்லவேண்டும். எனக்குக் கேட்பதற்கு சிரத்தை உண்டாயிருக்கிறது" என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார். "பாரத! ஆச்சரியமான செய்கையையுடையவரும் ரகஸ்யமானவ்ரதத்தையுடையவருமான தேவதேவருடைய ரகஸ்யமும் பிரகாசமுமான நாமங்களைக் கேள். தக்ஷன், [1]'தேவரே! தேவர்களுக்கெல்லாம் ஈசவரரே! தேவர்களின்பகைவர்களின் வன்மையை அழிப்பவரே! உமக்கு நமஸ்காரம். தேவேந்திரனுடைய பலத்தைஸ்தம்பநம்செய்தவரே! தேவர்களாலும் அஸுரர்களாலும் பூஜிக்கப்பட்டவரே! ஆயிரம்கண்களுள்ளவரே! (ஸூர்ய சந்திராக்நிகளாகிய) விரூபங்களானகண்களையுடையவரே! மூன்றுகண்களுள்ளவரே! யக்ஷாதிலவனைகுபேரனை நண்பனாகவுடையவரே! எங்கும் கைகளும்கால்களும்

---

1 இவற்றில், அநுசாஸனபர்வத்தில் சிவஸஹஸ்ரநாமம் வந்தவிடத்துப் பொருள்கூறப்படாத நாமங்களுக்குப் பொருள் கூறப்படுகிறது.

ஸாங்க்யமு முள்ளவரே! எங்கும் கண்களும் தலைகளும் முகங்களுமுடையவரே! எங்கும்காதுகளுள்ளவரே! உலகத்தில எல்லாவற்றையும் வியாபித்திருப்பவரே! முளைபோன்ற காதுகளுடையவரே! பெரிய காதுகள உடையவரே! குடங்களபோன்ற காதுகளுள்ளவரே! ஸமுத்ரத்தை இருப்பிடமாகவுடையவரே! பெரிய யானையின் காதுகளுக்கு நிகரான காதுகளுள்ளவரே! பசுவின்காதுகளை யொத்த காதுகளுள்ளவரே! கைகளுக்கு நிகரான்காதுகளுள்ளவரே! நூறு வயிறுகளுடையவரே! நூறுரோமசசுழிகளுள்ளவரே! நூறு நாக்களுடையவரே! உமக்கு நமஸ்காரம். காயத்ரீ மந்திரஜப முடையவாகள உம்மைக் கானஞ்செய்கிறார்கள். ஸூர்யனை உபாஸிப்பவர்கள் ஸூர்யனுக்கு அதிஷ்டான தேவதையான உம்மை ஆராதனை செய்கிறார்கள். உம்மைப் பிரம்மாவாகவும் நூறு அசுவமேதமுள்ள இந்திரனாகவும் [1]ஊர்த்தவராகவும் ஆகாயத்திற்கு நிகராகவும் நினைக்கிறார்கள். பெரிய சரீரத்தையுடையவரே! கடலுக்கும் ஆகாயத்துக்கும் நிகரானவரே! உம்முடைய இந்தச்சரீரத்தில எல்லாத் தேவதைகளும் கொட்டிலில் பசுக்கள் இருப்பதுபோல இருக்கின்றார்கள். உம்முடைய சரீரத்தில் சந்திரன் அக்நி வருணன் ஆதித்யன் விஷ்ணு பிரம்மா பிருஹஸ்பதி இவர்களைப் பார்க்கிறேன். நீரே பகவான்; காரணர்; கார்யர்; க்ரியை; கரணர்; ஸத்து அஸத்துக்களின் உற்பத்தி நாசமாயிருப்பவர். பவரும் சர்வரும் [2]ருத்ரரும் வரதருமான உமக்கு நமஸ்காரம். பிரம்மாமுதலான பசுக்களுக்குப் பதியும் அந்தகாஸுரனைக் கொன்றவருமான உமக்கு எப்பொழுதும் நமஸ்காரம். மூன்று விதமான ஜடைகளை யுடையவரும் மூன்றுதலைகளுள்ளவரும் மூத்தலைச சூலத்தால யுத்தம் செய்யும் தன்மையுள்ளவரும் சாஸ்திரம், குரு, தியானம் ஆகிய மூன்று வித நேத்திரங்களை யுடையவரும் ஸூர்யன் சந்திரன் அக்நி ஆகிய மூன்று கண்களையுடையவரும் முப்புரத்தையழித்தவருமான உமக்கு நமஸ்காரம். [3]சண்டரும் [4]குண்டரும் [5]அண்டரும் அண்டத்தைத தரிக்கின்றவருமான உமக்கு நமஸ்காரம். [6]தண்டியும் நேரும்கோணலுமாயிருப்பவரும் தண்டம் முண்டனம் இவற்றையுடைய ஸந்யாஸியுமான உமக்கு நமஸ்காரம். உயரக் கிளம்பின கோரப்பற்களும கேசங்களு முள்ளவரும் [7]சுக்லரும் [8]அவ

1 எல்லாவற்றிற்கும் மேலானவர்.
2 பாவத்தைவிலக்குபவர்.
3 குரூரரூபி.
4 சட்டிபோன்றவர்.
5 பிரம்மாண்டமாயிருப்பவர்.
6 சிக்ஷிககிறவர்.
7 ஸத்வகுணத்தால் வெண்மையானவர்.
8 எங்கும் வியாபித்தவர்.

தரும் [1]விலோஹிதரும் [2]தூம்ரரும் (ஹாலாஹலத்தினால்) கறுத்த கண்டமுடையவருமான உமக்கு நமஸ்காரம். நிகரற்றவரும் [3]விரூபரும் [4]சிவரும் [5]ஸூர்யரும் ஸூர்யமண்டலத்தில் சயனஞ் செய்பவரும் ஸூர்யன் போல விளங்குகின்ற த்வஜமும் கொடிச்சீலையுமுள்ளவருமான உமக்கு நமஸ்காரம். ப்ரமதகணங்களுக்கு நாதரும் விருஷபத்தின் தோளுக்கு நிகரான தோளுள்ளவரும் தநுஸும் சத்ருக்களைச் சிக்ஷிப்பவரும் [6]தண்டரும் பூர்ஜவிருக்ஷத்தின் பட்டையையும் மரவுரிகளையும் வஸ்திரமாகவுடையவருமான உமக்கு நமஸ்காரம். ஸுவர்ணத்தைக் கர்ப்பத்திலுடையவரும் ஸுவர்ணமயமான கவசமுடையவருமான உமக்கு நமஸ்காரம். ஸுவர்ணத்தினால் செய்யப்பட்ட கிரீடமுள்ளவரும் ஸுவர்ணங்களுக்குப் பதியுமான உமக்கு நமஸ்காரம். [7]ஸ்துதரும் [8]ஸ்துத்யரும் [9]ஸ்தூயமானருமான உமக்கு நமஸ்காரம். ஸர்வரும் எல்லாவற்றையும் பக்ஷிக்கிறவரும் எல்லாப் பிராணிகளுக்கும் அந்தராத்மாவுமான உமக்கு நமஸ்காரம். ஹோதாவும் மந்த்ரரும் வெண்மையான கொடி கொடிச்சீலைகளுள்ளவருமான உமக்கு நமஸ்காரம். [10]நாபரும் [11]நாப்யருமான உமக்கு நமஸ்காரம். ஆவரணங்களுக்கு ஆவரணரும் க்ருசமான நாசியுள்ளவரும் க்ருசமான அங்கங்களுள்ளவரும் க்ருசருமான உமக்கு நமஸ்காரம். [12]ஸம்ஹ்ருஷ்டரும் [13]விஹ்ருஷ்டரும் [14]கிலகிலருமான உமக்கு நமஸ்காரம். [15]சயமானரும் [16]சயிதரும் [17]உத்திதரும் [18]ஸ்திதரும் [19]தாவமானரும் முண்டரும் [20]ஜடிலருமான உமக்கு நமஸ்காரம். நடனத்தை ஸ்வபாவமாகவுடையவரும் முகவாத்யம் வாசிப்பவரும் நதியிலுண்டான தாமரை மலர்களாகிற பூஜாஸாதனத்தில ஆசையுள்ளவரும் கான வாத்தியங்களால் விளங்குகிறவருமான உமக்கு நமஸ்காரம். [21]ஜ்யேஷ்டரும் [22]சரேஷ்டரும் பலத்துக்கு அபிமானி தேவதையான இந்திரனைச் சிக்ஷித்தவரும் காலனுக்கும் நியந்தாவும்

1 ரஜோகுணத்தால் சிவப்பு நிறமுள்ளவர்.
2 தமோகுணத்தால் புகைநிறமுள்ளவர்.
3 நானாவிதரூபமுள்ளவர்.
4 மங்களமூர்த்தி.
5 ஸூர்யமண்டல ரூபி.
6 நிக்ரகரூபி.
7 துதிக்கப்பட்டவர்.
8 துதிக்கத்தக்கவர்.
9 துதிக்கப்படுகிறவர்.
10 நாபியில் எல்லா ஜகத்தையுமுடையவர்.
11 நாபிஸ்தானமாயிருக்கத்தக்கவர்.
12 மிக்கமகிழ்ச்சியுள்ளவர்.
13 விசேஷஸந்தோஷமுள்ளவர்.
14 'கிலகில' என்னும் த்வனி வடிவமாயிருப்பவர்.
15 சயனிக்கிறவர்.
16 சயனஞ்செய்தவர்.
17 எழுந்திருந்தவர்.
18 நிற்பவர்.
19 ஓடுகிறவர்.
20 சடைகளுள்ளவர்.
21 பிராயத்தால் பெரியவர்.
22 குணங்களால் சிறந்தவர்.

1 கல்யரும் 2க்ஷயரும் 3உபக்ஷயருமான உமக்கு நமஸ்காரம். அச்சத்தைத் தருவதும் துந்துபியொலிபோன்றதுமான சிரிப்புள்ளவரும் பயங்கரமான விரதத்தைத் தரிப்பவரும் உக்ரருமான உமக்கு எப்பொழுதும் நமஸ்காரம். பத்துக்கைகளுடைய உமக்கு நமஸ்காரம். மண்டையோட்டைக் கையிலுடையவரும் சிதையிலுள்ள பஸ்மத்தில் பிரியமுள்ளவரும் 4விபீஷணரும் 5பீஷ்மருமான உமக்கு நமஸ்காரம். 6 பீமரே! சமமுதலான விரதங்களைத்தரிக்கின்ற உமக்கு நமஸ்காரம். விகாரமான மூசமுள்ளவரும கததிபோன்ற நாவுள்ளவரும் 7தப்ஷ்ட்ரியும் யாகததில பக்வமாயும் சமசானததில் பசசையாயுமிருக்கிற மாம்ஸத்தில் ஆசையுள்ளவரும் சுரைக்காய் வீணையில பிரியமுள்ளவருமான உமக்கு நமஸ்காரம். 8 வ்ருஷரும் 9வ்ருஷ்யரும் நந்திரூபரும் 10வ்ருஷரும் 11கடங்கடரும் தண்டரும் 12பசபசருமான உமக்கு நமஸ்காரம். எல்லாவற்றிற்கும் மேலானவரும் வரதருமான உமக்கு நமஸ்காரம். சிறந்தவைகளான மாலை கந்தம் வஸ்திரம் இவற்றையுடையவரும் வரத்திறகெல்லாம் மேலான வரத்தை அளிக்கின்றவருமான உமக்கு நமஸ்காரம். ஆசையுள்ளவர் ஆசையற்றவரென்னும் இரண்டு உருவமாயிருப்பவரும் 13பாவநரும் ருத்ராக்ஷமாலையுள்ளவரும் 14ஸம்பிந்நரும15விபிந்நரும் 16சாயரும் 17ஆதபனருமான உமக்கு நமஸ்காரம். கோரமிலலாததும் கோரமுமான ரூபமுள்ளவரும் கோரமாயும் அதிகோரமாயுமிருப்பவருமான உமக்கு நமஸ்காரம். சிவரும் சாந்தரும் மிகவும் சாந்தரும் ஒருகாலுள்ளவரும், அநேகம் கண்களுடையவரும் ஒரு சிரமுள்ளவரும் 18ருத்ரரும் (கபாலமுதலிய) அற்பவஸ்துக்களில் ஆசையுள்ளவரும வேறுகப் பிரிந்திருப்பதில் பிரியமுள்ளவருமான உமக்கு நமஸ்காரம். 19பஞ்சாலரும வெளுத்த அங்கங்களுடையவரும் 20சமசமருமான உமக்கு நமஸ்காரம். உக்ரமான கண்டாமணியுள்ளவரும் 21கண்டரும் கண்டையில்லாதவராயினும்

1 ஸமர்த்தர்.
2 மஹாப்ரளயமாயிருப்பவர்
3 இடையிலுள்ள பிரளயமாயிருப்பவர்.
4 பயமற்றவர்.
5 பயங்கரர்.
6 பயங்கரர்.
7 கோரப்பற்களுள்ளவர்.
8 மழையைச்செய்பவர்.
9 தர்மத்துக்குஹிதமானவர்.
10 தர்மமாயிருப்பவர்.
11 எப்பொழுதும் செல்லுகிறவர்.
12 எப்பொழுதும் பிராணிகளைப் பாகஞ் செய்பவர்.
13 தியானஞ்செய்கிறவர்.
14 காரணரூபமாக எங்கும் கலந்தவர்.
15 கார்யரூபமாக வெவ்வேறுயிருப்பவர்.
16 நிழலாயிருப்பவா.
17 வெயிலாயிருப்பவர்.
18 ரோகத்தைநிவ்ருத்திப்பவர்.
19 விச்வகர்மா.
20 எப்பொழுதும் சமகுணமுள்ளவர்.
21 மணியின் ஓசையாயிருப்பவர்,

கண்டாநாதத்துடன் கூடினவரும் ஆயிரம் பேர்களால் வாசிக்கப்பட்ட கண்டைகளையுடையவரும் கண்டாமாலையில் பிரியமுடையவரும் பிராணனையே கண்டையாகவுடையவரும் கந்தரும் கலகலருமான உமக்கு நமஸ்காரம். குரோதத்தின் முடிவான சமஸ்வரூபரும் பூராதிலோகங்களின் முடிவான பிரம்மரூபரும் நாமரூபப்ரபஞ்சத்திற்குக் காரணமான ஈச்வராதிஷ்டான பிரம்மரூபரும் துரியப்ரம்மமுமான உமக்கு நமஸ்காரம். பூராதிலோகம் நாமரூபப்ரபஞ்சம் அதன்காரணமான ஈச்வரர் இவைகளில் பிரியமுடையவரும் மிகவும் சமத்தை அடைகின்றவரும் எப்பொழுதும் மலைகளையும் விருக்ஷங்களையும் இருப்பிடமாகவுடையவருமான உமக்கு நமஸ்காரம். வயையில் நரிபோல ஆசையுள்ளவரும் [1]தாரகரும் [2]தாரரும் யஜ்ஞரும் [3]யஜியும் [4]ஹுதரும் [5]ப்ராஹுதருமான உமக்கு நமஸ்காரம். [6]யஜ்ஞவாஹரும் [7]தாந்தரும் [8]தப்யரும் [9]ஆதபநருமான உமக்கு நமஸ்காரம். [10]தடரும் [11]தட்யரும் ஸமுத்திரமுமான உமக்கு நமஸ்காரம். [12]அந்நதரும் அன்னத்திற்குப் பதியும் அன்னத்தை அருந்துகின்றவருமான உமக்கு நமஸ்காரம். ஆயிரந்தலைகளுடையவரும் ஆயிரம் பாதங்களுடையவருமான உமக்கு நமஸ்காரம். உயரத்தூக்கப்பட்ட ஆயிரம் சூலாயுதமுடையவரும் ஆயிரம் நேத்திரங்களுடையவரும் பாலஸூரியன் போன்ற நிறமுள்ளவரும் பாலனுடைய ரூபத்தைத் தரிக்கின்றவருமான உமக்கு நமஸ்காரம். [13]பாலர்களான சிநேகிதர்களை ரக்ஷிக்கின்றவரும் பாலவிளையாட்டுடன் கூடியவரும் வ்ருத்தரும் [14]லுப்தரும் [15]க்ஷுப்தரும் [16]க்ஷோபணருமான உமக்கு நமஸ்காரம். அலைகளால் அடையாளம் செய்யப்பட்ட கேசத்தையுடையவரும் தர்ப்பைபோன்ற கேசத்தையுடையவருவான உமக்கு நமஸ்காரம். யஜனமுதலான ஆறு கர்மங்களிலும் ஸந்தோஷமுடையவரும் யஜனம் அத்யயனம் தானம் என்கிற மூன்றுகர்மங்

---

1 கரையேற்றுபவர்.
2 கரையேறக்காரணர்.
3 யாகஞ்செய்கிறவர்.
4 பிராம்மணன்முகமாக த்ருப்தி அடைகிறவர்.
5 அக்னிமுகமாக த்ருப்தியடைகிறவர்.
6 யஜ்ஞத்தை நிறைவேற்றும் ரித்விக்குமுதலானவர்களாயிருப்பவர்.
7 ஜிதேந்திரியர்.
8 ஸத்வமயர்.
9 ரஜோமயர்.
10 கரையாயிருப்பவர்.
11 நதியாயிருப்பவர்.
12 அன்னமளிப்பவர்.
13 'இதனால் பாலகிருஷ்ணரூபமாக லீலைசெய்தவர் என்பது ஸூசிக்கப்பட்டிருக்கிறது' என்பது பழையவுரை.
14 ஆசைகொண்டவர்.
15 கலங்கினவர்.
16 கலக்குகிறவர்.

களில் பற்றுதலுள்ளவருமான உமக்கு நமஸ்காரம். விதிப்படி வர்ணாசிரமங்களுடைய தனித்தனி கர்மங்களிலிருக்கின்ற உமக்கு நமஸ்காரம். [1]குஷ்யரும [2]கோஷரும் கலகலருமான உமக்கு நமஸ்காரம். வெளுப்பாயும் பொன்னிறமாயுமுள்ள கண்களையுடையவரும் கறுப்பாயும் சிவப்பாயுமுள்ள விழிகளையுடையவரும் சுவாஸத்தை ஜயித்தவரும் [3]தண்டிரும [4]ஸ்போடநரும க்ருசரும் தர்மம் காமம் அர்த்தம் மோக்ஷம் இவைகளில சொல்லககூடிய கதைகளையுடையவரும் [5]ஸாங்கியரும் ஸாங்கியர்களில் முக்கியரும வேதாந்தவிசாரத்தையும் தியானத்தையும அனுக்ரஹித்து நடத்துகின்றவருமான உமக்கு நமஸ்காரம். தேர் ஏறவும் தேரில்லாதிருக்கவும் தக்கவரும் நான்குமார்க்கங்களிலும் ரதமுடையவரும மான்தோலை உத்தரீயமாகவுடையவரும் ஸர்ப்பயஜ்ஞோபவீதமுடையவருமான உமக்கு நமஸ்காரம். ஈசாநரே! வஜ்ரம்போன்ற சரீரசேர்க்கையை உடையவரே! மஞ்சள் நிறமான கேசமுடையவரே! உமக்கு நமஸ்காரம். மூன்று கண்ணுடைய அம்பிகைக்கு நாதரான உமக்கு நமஸ்காரம். [6]வ்யக்தரே! [7]அவ்யக்தரே! உமக்கு நமஸ்காரம். காமரே! [8]காமதரே! [9]காமக்நரே! திருப்தியடைந்த பிரம்மத்தையும் திருப்தியடையாத ஜகத்தையும் விசாரிக்கின்ற உமக்கு நமஸ்காரம் ஸர்வரே! ஸர்வதரே! [10]ஸம்ஹாரகரே! ஸந்தியாகாலத்திலுண்டாகும் சிவப்புவர்ணமாயிருப்பவரே! உமக்கு நமஸ்காரம். பெரிய பலமுடையவரே! பெரியகைகளுள்ளவரே! விரிவான புத்தியையுடையவரே! பெரிய காந்தியுள்ளவரே! பெரியமேகங்களின் கூட்டத்திற்கு நிகரானவரே! மஹாகாலரூபியே! ஸ்தூலரே! ஜீர்ணமான அங்கங்களுடையவரே! [11]ஜடையுள்ளவர்போல நடிப்பவரும் மரவுரியையும் புனித தோலையும் தரிக்கிறவரும் பிரகாசிக்கின்ற ஸூர்யனும் அக்னியும்போன்ற ஜடைகளுள்ளவரும் மரவுரி மான் தோல்களை ஆடையாகவுடையவருமான உமக்கு நமஸ்காரம். ஆயிரம் ஆதித்யர்களுக்குநிகரானவரே! தவத்தை நித்யமாகவுடையவரே! [12]உந்மாதநரே! உமக்கு நமஸ்காரம். அநேகம் சுழிகளுள்ள கங்காஜலத்தினால் நனைந்தகேசமுடையவரே! சந்திரனை மாறி மாறி உண்டாகச

---

1 கோஷிகத்தக்கவர்.
2 கோஷரூபி.
3 தண்டமென்னும் ஆயுதரூபி.
4 பிளக்கிறவர்.
5 கபிலராயிருப்பவர்.
6 கார்யரூபி.
7 காரணரூபி.
8 காமத்தையளிப்பவர்.
9 மன்மதனைக்கொன்றவர்.
10 எல்லாவற்றையும்ஸம்ஹரிப்பவர்.
11 'ஜடிலே' என்பது மூலம்.
12 மயக்குகிறவர்.

செய்கிறவரே! யுகங்களைத்திருப்புகிறவரே! மேகங்களைத்திரும்பச் செய்கிறவரே! உமக்கு நமஸ்காரம். நீரே அந்நம்; [1] அத்தா; [2] போக்தா; [3] அந்நதா; அந்நபுக்; அந்நத்தைஸ்ருஷ்டிக்கிறவர்; [4] பக்தா; [5] பக்வபுக்; பவநர்; அநலர்; ஜராயுஜங்கள்; அண்டஜங்கள்; ஸ்வேதஜங்கள்; உத்பிஜ்ஜங்களாயிருக்கிறீர். தேவரே! தேவேசரே! நான்குவிதமான பிராணிகளுடைய ஸமூகமாயிருக்கிறவரும் நீரே. ஸ்தாவரஜங்கமங்களை ஸ்ருஷ்டிப்பவரும் ஸம்ஹரிப்பவரும் நீரே. பிரம்மவித்துக்களுள் சிறந்தவரே! உம்மைப்பிரம்மவித்துக்கள் பிரமமென்று சொல்லுகின்றனர். நீரே மனத்திற்கு முக்கியமான காரணம். ஆகாயமும் வாயுவும் ஒளிகளுக்கு நிதியுமாயிருக்கிறீர். பிரம்மவித்துக்கள் உம்மை ருக்காகவும் ஸாமமாகவும் ஓங்காரமாகவும் சொல்லுகிறார்கள். தேவசிரேஷ்டரே! உம்மை, 'ஹாயிஹாயி' என்றும், 'ஹுவாஹாயி' என்றும், 'ஹாவுஹாயி' என்றும் பிரம்மவாதிகளான ஸாமகர்கள் அடிக்கடி கானஞ் செய்கின்றார்கள். வேதத்திலுள்ள உபநிஷத்ஸமூகங்களான துதிகளால் நீர் யஜுர்வேதமயமாயும் ருக்வேதமயமாயும் ஆஹுதிமயமாயும் சொல்லப்படுகிறீர். பிராம்மணர்களும் க்ஷத்ரியர்களும் வைசியர்களும் சூத்ரர்களும் ஸங்கரஜாதியர்களும் நீரே. மேகக்கூட்டங்களும் [6] வித்யுத்தும் [7] ஸ்தநிதமும் [8] கர்ஜிதமும் நீரே. ஸம்வத்ஸரமும் ருதுக்களும் மாஸமும் பக்ஷமும் யுகமும் நிமேஷங்களும் காஷ்டைகளும் நக்ஷத்திரங்களும் கிரகங்களும் கலைகளும் நீரே. நீர் விருக்ஷங்களுள் முக்கிய விருக்ஷங்களும் பர்வதங்களுடைய கொடுமுடிகளும் மிருகங்களுள் புலியும் பக்ஷிகளுள் கருடனும் ஸர்ப்பங்களுள் சேஷனும் ஸமுத்திரங்களுள் பாற்கடலும் யந்திரங்களுள் வில்லும் ஆயுதங்களுள் வஜ்ரமும் வ்ரதங்களுள் ஸத்யமுமாயிருக்கிறீர். த்வேஷமும் இச்சையும் ராகமும் மோஹமும் க்ஷமையும் அக்ஷமையும் வ்யவஸாயமும் த்ருதியும் லோபமும் குரோதமும் ஜயமும் அஜயமும் நீரே. நீர் [9] கதீ. நீர் [10] சரீ; [11] சாபீ; [12] கட்வாங்கீ; [13] ஜர்ஜ்ஜரீ. நீர் [14] சேத்தா; [15] பேத்

---

1 உண்பவர்.
2 போகங்களை அனுபவிப்பவர்.
3 அந்நத்தைக்காப்பவர்.
4 சமைப்பவர்.
5 பக்வமானவைகளை உண்பவர்.
6 மின்னல்.
7 மழையுடன்கூடியமேகத்தொனி.
8 மழையில்லாதமேகத்தொனி.
9 கதாயுதமுள்ளவர்.
10 அம்புள்ளவர்.
11 வில்லுள்ளவர்.
12 கட்வாங்கமென்னும் ஆயுதமுள்ளவர்.
13 ஜர்ஜ்ஜராவாத்யமுள்ளவர்.
14 வெட்டுபவர்.
15 பிளப்பவர்.

தா; [1]ப்ரஹர்த்தா; [2]நேதா, [3]மந்தா; பிதாவாகநினைக்கப்பட்டவர். (யமம்ஐந்து நியமம் ஐந்துஆக) பத்துலக்ஷணங்களுள்ள தர்மமும அர்த்தமும் காமமும நீரே. கங்கையும ஸமுத்திரங்களும் நதிகளும் [4]பல்வலங்களும [5]ஸரஸுகளும நீரே [6]லதைகளும் [7]வல்லிகளும் த்ருணங்களும் ஓஷதிகளும் பசுக்களும் மிருகங்களும் பக்ஷிகளும் திரவியகர்மங்களின்ஸமாரம்பமும புஷ்பங்களையும் பலங்களையும் கொடுக்குங்காலமும் நீர. தேவர்களுடைய ஆதியும் அந்தமும் காயத்ரியும் ஓங்காரமும் நீரே. [8]ஹரிதமும் ரோஹிதமும் நீலமும் கிருஷ்ணமும் ரத்தமும் அருணமும் கதருவும் கபிலமும் கபோதமும் மேசகமும் நீர. நீர [9]அவர்ணரும் [10]ஸுவர்ணரும் வர்ணத்தைச செய்கின்றவரும் மேகத்திற்குநிகரானவரும் ஸுவர்ணரென்றுபெயருடையவரும ஸுவர்ணத்தில ப்ரியமுள்ளவருமாயிருக்கிறீர. இந்திரனும் யமனும் வருணனும் [11]தநதனும் அநலனும [12]உபப்லவமும சித்ரபாநுவும் [13]ஸ்வர்பாநுவும் பாநுவும்நீரே. [14]ஹோத்ரமும [15]ஹோதாவும் [16]ஹோம்யமும [17]ஹுதமும [18]ப்ரபுவும் த்ரிஸுபர்ணமந்திரத்தில துதிக்கப்பட்டவரும் யஜுர்வேதத்திலுள்ள சதருத்ரநாமமான வேதரூபியும் நீரே. நீர பவித்ரங்களுக்குப பவித்ரரும் மங்களங்களுக்கெல்லாம் மங்களமும் [19]கிரிகநும [20]ஹிண்டுகரும் வ்ருக்ஷரும் ஜீவரும் [21]புத்கலமுமாயிருக்கிறீர. ப்ராணரும் ஸத்வமும் ரஜஸும் தமஸும் [22]அப்ரமதரும் பிராணனும் அபாநனும் ஸமாநனும் உதாநனும் வியாநனும் நீரே. [23]உந்மேஷமும்[24]நிமேஷமும் [25]க்ஷுதமும் [26]ஜ்ரும்பிதமும் நீரே. நீர சிவப்பாயும உள்ளடங்கினதாயுமிருக்கிற திருஷ்டியையுடையவரும பெரிய முகமுடையவரும் பெரியவயிறுடையவருமாயிருக்கிறீர். நீர் ஊசிபோன்றரோமங்க

---

1 அடிப்பவர்.
2 நடத்துகிறவர்.
3 மனனஞ்செய்பவர்
4 குட்டைகள்.
5 ஏரிகள்.
6 பெரியகொடிகள்.
7 சிறுகொடிகள்.
8 இதுமுதல் பத்துநாமங்கள் வர்ணவிசேஷங்கள்
9 வர்ணமில்லாதவர்.
10 நல்லவர்ணமுள்ளவர்.
11 குபேரன்.
12 கிரகணம்.
13 ராகு.
14 அக்னி.
15 ஹோமஞ்செய்கிறவர்.
16 ஹோமத்துக்குத்தக்கஹவிஸ்.
17 ஹோமஞ்செய்யப்பட்ட ஹவிஸ்.
18 ஹோமபலனையளிக்கும் ஈச்வரர்.
19 மலைபோல ஜடமான சரீரத்தைச் சப்திக்கச்செய்கிறவர்.
20 போதல்வருதலைச் செய்பவர்.
21 சரீரம்.
22 பத்தியில்லாதவர்.
23 கண்ணைத்திறப்பது.
24 கண்ணைமூடுவது.
25 தும்மல்.
26 கொட்டாவி.

ளுள்ளவர்; செம்மட்டை நிறமான மீசையுள்ளவர்; உயரக்கிளம்பின கேசத்தையுடையவர்; மிகவும் சலிக்கிறவர்; கானவாத்தியங்களின் உண்மையை அறிந்தவர்; கானம் வாத்யம்வாசித்தல் இவைகளில் பிரியமுடையவர். நீர் [1]மத்ஸ்யரும் [2]ஜலசரரும் [3]ஜால்யரும் [4]அகலரும் லீலைக்காகவே ஸம்ஸாரத்தை அடைகிறவரும் [5]கலியும் [6]அகலரும் [7]அதிகாலரும் [8]துஷ்காலரும் காலரூமாயிருக்கிறீர். நீர் ம்ருத்யுவும் [9]க்ஷுரமும் [10]க்ருத்யரும் [11]பக்ஷரும் சத்துருக்களை க்ஷயம்செய்கிறவரும் மேககாலரும் பெரியதெற்றிப்பற்களுடையவரும் பிரளயகால மேகமுமாக இருக்கிறீர். நீர் [12]கண்டரும் [13]அகண்டரும் [14]கடியும் கண்டியும் [15]சருசேலியும் [16]மிலிமிலியும் [17]ப்ரம்மமும் அக்கினிகளுடைய பாதிசசரீரமான ஸ்வாஹாரூபியும் [18]தண்டியும் [19]முண்டரும் மூன்றுதண்டமுடைய யதியுமாக இருக்கிறீர்; நான்குயுகமும் நான்கு வேதமும் அத்வர்யுமுதலானவர்களுடைய நான்கு கர்மங்களை நடத்துகிறவரும் நான்கு ஆசரமங்களையும் நடக்கும்படி செய்கிறவரும் நான்கு வர்ணங்களையும் செய்கிறவருமாயிருக்கிறீர். எப்பொழுதும் சொக்கட்டானில் பிரியமுடையவரும் [20]தூர்த்தரும் கணங்களுக்குப்பிரபுவும கணங்களை ரக்ஷிக்கிறவரும் சிவப்பான மாலையையும் வஸ்திரத்தையும் தரிக்கிறவரும் [21]கிரிசரும் காஷாயங்களில் பிரியமுடையவருமாயிருக்கிறீர். நீர் [22]சில்பிகர்; சில்ப வேலைக்காரர்களில் மேலானவர்; எல்லாச சில்பங்களையும் நடத்துகிறவர்; பகனென்கிற ஸூர்யனுடைய நேத்திரததிற்கு அங்குசமாயிருக்கிறவர்; சண்டர்; பூஷாவென்கிற ஸூர்யனுடைய பறகளை உதிர்த்தவர். நீர் ஸ்வாஹா; ஸ்வதா; வஷட்காரம; நமஸ்காரம ; சிஷ்டர்களால் சொல்லப்படும், 'நமோநம:' என்னும் நமஸ்காரமாயிருப்பவர்; ரகஸ்யமான விரதங்களையுடையவர்; ரகஸ்யமான தவத்தையுடையவர்; [23]தாரகர்;

1 மத்ஸ்யம்போன்ற ஜீவரூபி.
2 ஸம்ஸார நதி ஜலத்தில் ஸஞ்சரிப்பவர்.
3 ஸம்ஸாரவாஸனையாகியவலையில் கட்டப்பட்டவர்.
4 அடக்கமுடியாதவர்.
5 கலிரூபர்.
6 காலமற்றவர்.
7 காலத்தைத்தாண்டினவர்.
8 கெட்டகாலமாயிருப்பவர்.
9 க்ஷுரியசக்தி.
10 வெட்டத்தக்கவர்
11 மித்ரர்.
12 பிரகாசிப்பவர்.
13 மாயையால் மறைக்கப்பட்டவர்.
14 ஜீவர்களைக் கர்மபலன்களுடன் சேர்ப்பவர்.
15 சராசரங்களால் விளையாடுபவர்.
16 எப்பொழுதும் கார்யவர்க்கங்களில் அனுப்ரவேசித்திருப்பவர்.
17 ப்ரணவம்.
18.19 இவற்றால் பரமஹம்ஸர் சொல்லப்படுகிறார்.
20 சூதாடுகிறவர்.
21 மலையில் சயனிப்பவர்.
22 அல்ப சில்பி.
23 ப்ராணவர்.

நக்ஷத்திரங்களால் வியாபிக்கப்பட்ட ஆகாசம்; [1]தாதா; [2]விதாதா; [3]ஸந்தாதா; [4]விதாதா; [5]தாரணர்; [6]ஆதரர்; [7]ப்ரம்மா; தபஸ்; ஸத்யம்; ப்ரம்மசர்யம்; ஆர்ஜவம்; [8]பூதாத்மா; [9]பூதக்ருத்; [10]பூதர்; சென்றது நிகழ்கின்றது வருவது என்னும் மூன்றையும் உண்டு பண்ணும் மாயா சபலதத்துக்கு உற்பத்தி ஸ்தானமானவர்; *பூ:; * புவ:; * ஸ்வ:; காணப்படும் பொருள்களைக்காட்டிலும் சாசவதா; [11]தாந்தா; பிரம்மா முதலான ஈசவரர்களைக் காட்டிலும் மேலான மஹேச்வரர்; தீக்ஷிதர்; [12]அதீக்ஷிதா; [13]க்ஷாந்தர்; மற்றவரால் அடக்கமுடியாதவர்; அடங்காதவர்களை நாசஞ்செய்கிறவர்; சந்திரனைத்திருப்புகிற மாஸமானவர்; யுகங்களைத திருப்புகிற கல்பமானவர்; [14]ஸம்வர்த்தர்; [15]ஸம்பாவர்த்தகர்; [16]காமர்; [17]பிந்து; அணு; ஸ்தூலர்; காணிகாரமாலையில் பிரியமுடையவர்; நந்தியின் முகம்போன்ற முகமுடையவர்; பயங்கரமான முகமுடையவர்; ஸுமுகர்; துர்முகர்; அமுகர்; நான்கு முகமுடையவர்; அனேக முகமுடையவர்; யுத்தங்களில் அக்னிமுகர்; ஹிரண்யகர்ப்பர்; [18]சகுநி; பெரிய ஸர்ப்பங்களுக்குப்பதி; விராட்; அதர்மத்தை அழிக்கிறவர்; பெரிதான பக்கபலத்தையுடையவர்; உக்கிரமான சிக்ஷையைத தரிக்கிறவர்; கணங்களுக்கு அதிபா; விருஷபம்போலச் சப்திக்கிறவா; பசுக்களை ஸங்கடங்களினின்றும் காக்கின்றவா; விருஷபசரேஷ்டத்தை வாகனமாக உடையவர்; மூன்று உலகங்களையும் ரக்ஷிக்கின்றவரும் கோவிந்தரும் கோக்களின் மார்க்கத்தில செல்லுகின்றவரும் [19]அமார்க்கரும் சரேஷ்டரும ஸ்திரரும் ஸ்தாணுவும் [20]நிஷ்கம்பரும் [21]கம்பருமாயிருக்கிறீர்; தடுக்கமுடியாதவரும் கொடிய ஹாலாஹலவிஷத்தையும் அபகரித்தவரும் (யுத்தத்தில்) ஒருவராலும் ஸஹிக்கமுடியாதவரும் அதிக்ரமிக்கமுடியாதவரும் பயமுறுத்தவுமுடியாதவரும்

---

1 ஆதிகர்த்தாவான விஷ்ணு.
2 பௌதிகங்களை ஸ்ருஷ்டிக்கும் பிரம்மா.
3 ஒன்றுசேர்த்து நிலைநிறுத்துபவர்.
4 ஸம்ஹரிப்பவரான மஹேச்வரரும் புண்யபாப ரூபமான கர்மமும்.
5 எல்லாவற்றையும் தரிக்கும் மூல காரணர்.
6 ஆதாரமற்ற சுத்தப்ரம்மம்.
7 ப்ரம்மவித்.
8 பிராணிகளுக்கு ஆத்மா.
9 பிராணிகளைப்படைப்பவர்.
10 நித்யஸித்தர்.
* வ்யாஹ்ருதிகள்.
11 ஜிதேந்த்ரியர்.
12 தீக்ஷிதரல்லாதவர்.
13 பொறுமையுள்ளவர்.
14 பிரளயமாயிருப்பவர்.
15 ஸ்ருஷ்டிகாரணர்.
16 பெண்ணாசையுள்ளவர்.
17 வீர்யமாயிருப்பவர்.
18 பக்ஷிபோல ஸங்கமற்றவர்.
19 மார்க்கமற்றவர்.
20 அசையாதவர்.
21 அசைபவர்.

அசைக்கமுடியாதவரும் பிரவேசிக்கமுடியாதவரும் ஜயிக்கமுடியாதவரும் [1]ஜயருமாயிருக்கிறீர்; [2]சசரும் முயலை அடையாளமாகவுடைய சந்திரனும் [3]சமநரும் குளிர்ச்சி, உஷ்ணம், பசி, ஜரை, மனோவியாதி இவைகளைச் செய்கிறவரும் ஆதிகளும் [5]வ்யாதிகளும் வியாதிகளை நிவ்ருத்திக்கின்றவரும் [6]அவ்யாதியுமாயிருக்கிறீர்; என்னுடைய யாகமாகிய மானுக்கு வேடனாயிருக்கிறவரும் வியாதிகளின் உற்பத்திக்கு இடமானவரும் வியாதிகளின் லயஸ்தானமானவரும் [7]சிகண்டியும் தாமரைமலர்கள் போன்ற நேத்திரங்களுடையவரும் தாமரை ஓடையை இருப்பிடமாக உடையவருமாயிருக்கிறீர். சிக்ஷையைத் தரிக்கிறவரும் வேதங்களாகிய மூன்று கண்களுடையவரும் உக்கிரமான சிக்ஷை செய்கிறவரும் அண்டங்களை நாசஞ்செய்கின்றவரும் விஷரூபமான அக்னியை உண்டவரும் தேவசிரேஷ்டரும் ஸோமபானஞ்செய்பவரும் பசுபதியும் நீரே. நீர் அமிருதபானஞ்செய்தவர். ஜகத்திற்கெல்லாம் நாதரே! தேவர்களுக்குத் தேவரே! கணங்களுக்கு ஈசவரரும் விஷாக்னியினின்று ரக்ஷித்தவரும் மிருத்யுவைப் பானஞ்செய்தவரும் க்ஷீரத்தைப்பானஞ் செய்கிறவரும் ஸோமபானம் செய்கிறவரும் ஸ்வர்க்காதி லோகத்திலிருந்து நழுவினவர்களை முந்திக் காக்கின்றவரும் நீரே. தேவர்களுக்கு முந்தினவரான பிரமமாவைக் காக்கின்றவரும் நீரே. [8]ஹிரண்யரேதஸும் புருஷரும் நீரே. ஸ்திரீயும் நீரே. புமானும் நீரே. அலியும் நீரே. பாலரும் யுவாவும் [9]ஸ்தவிரரும் தந்தம் உதிர்ந்தவரும் நீரே. ஐராவதமும் இந்திரனும் எல்லாவற்றையும் படைப்பவரும் எல்லாவற்றிற்கும் கர்த்தாவும் நீரே. விசவத்தை ஸம்ஹரிக்கின்றவரும் விசவத்தைச் செய்கிறவர்களான பிரமமாதிகளுக்கும் பூஜ்யரும் விச்வத்தை வகிக்கின்றவரும் விசவரூபியும் தேஜஸ்வியும் எங்கும் முகமுடையவரும் ஸூரிய சந்திரர்களை நேத்திரங்களாக உடையவரும் பிரமமனையே ஹ்ருதயமாகவுடையவரும் நீரே. நீர் பெருங்கடலும் [10]ஸரஸ்வதியும் வாக்கும் [11]பலமும் அநலும் அநிலனும் பகலிரவுகளும் பிராணிகள் கண்களை மூடுவது திறப்பதென்னும் கர்மங்களையுடையவருமாயிருக்கிறீர். சிவபெருமானே! உம்முடைய மஹி

---

1 வெற்றிவடிவமானவர்.
2 முயல்போல வேகமாகச் செல்லுபவர்.
3 யமன்.
4 மனோவியாதிகளாயிருப்பவர்.
5 சரீரவியாதிகளாயிருப்பவர்.
6 வியாதியற்றவர்.
7 மயில்தோகைபுனைவர்.
8 அக்னி.
9 கிழவர்.
10 ஸரஸ்வதிஎன்னும் நதி.
11 வைராக்கியம்.

மையை உள்ளபடி அறிவதற்குப் பிரம்மாவும் சக்தரல்லர்; விஷ்ணுவும் சக்தரல்லர்; முன்னோர்களான பிரஸித்திபெற்ற ரிஷிகளும் ஸமர்த்தர்களல்லர். மிகவும் ஸூக்ஷ்மமான உம்முடைய மூர்த்திகள் எனக்குத்தெரியா. என்னை ரக்ஷியும். பிதாவானவன் ஔரஸபுத்திரனை ரக்ஷிப்பதுபோல என்னை எப்பொழுதும் ரக்ஷியும். மாசில்லாதவரே! என்னை ரக்ஷியும். நான் உம்மால் காக்கப்படத்தக்கவன். உமக்கு நமஸ்காரம். பகவானுனை நீர் பக்தர்களிடம் தயையுள்ளவர். நான் உம்மிடத்தில எப்பொழுதும பக்தியுள்ளவனுமிருக்கிறேன். எவர் அநேகமாயிரம வருஷம் புருஷர்களை அஜ்ஞானத்தினுல் மறைத்துப் பார்க்க அரியரும் ஏகருமாகி 1 ஸம்ஸார ஸமுத்திரத்தின் அக்கரையில் இருக்கின்ருரோ அவர் என்னை எபபொழுதும் ரக்ஷிக்க வேண்டும். எந்தச சித்ஜோதியை நித்திரையை விட்டவர்களும சவாஸத்தை ஜயித்தவர்களும ஸர்வகுணத்திலிருப்பவர்களும இந்திரியங்களை அடக்கியவர்களுமான யோகிகள் பார்க்கின்ருர்களோ யோகரூபமான அவருக்கு நமஸ்காரம். ஜடையுடையவர்போல நடிக்கிறவரும் தண்டமுள்ளவரும தொங்குமவயிறுடைய சரீரமுள்ளவரும் கமண்டலுவையே அம்பருத்தூணியாகக் கொண்டவரும சதுர்முகரூபியுமான அவருக்கு எப்பொழுதும நமஸ்காரம. எவருடைய கேசங்களில் மேகங்களும எல்லா அவயவங்களுடைய ஸந்திகளிலும் நதிகளும் உதரத்தில் நான்கு ஸமுத்திரங்களுமிருக்கின்றனவோ ஜலரூபியான அவருக்கு நமஸ்காரம. யுகத்தின் முடிவில எல்லாப் பிராணிகளையும பக்ஷித்துவிட்டு எவா ஜலத்தின நடுவில் சயனஞ்செய்கிருரோ ஜலத்தில சயனித்த அவரை நான் சரணமடைகிறேன். எவர் ராகுவின் வாயில புகுந்து ராத்ரியில சந்திரனைப் பானஞ்செய்கிருரோ, ராகுவாகி ஸூர்யனையும் விழுங்குகின்ருரோ அவர் என்னை ரக்ஷிக்கட்டும. ஸ்ருஷ்டியை அடுத்து வந்தவர்களும சிசுக்கள் போன்றவர்களுமான எவர்கள தமக்குரிய பாகங்களை அடைகின்ருர்களோ அவர்களுக்கு நமஸ்காரம. அவர்கள, 'ஸ்வதா, ஸ்வாஹா' என்னும சப்தங்களால் கொடுக்கபபடும ஹவ்யகவ்யங்களால ஸந்தோஷத்தை அடையட்டும. கட்டைவிரல் அளவுள்ள எந்தப் புருஷர்கள் எல்லாத் தேகிகளுடைய தேகங்களிலுமிருக்கின்ருர்களோ அவர்கள்என்னை எப்பொழுதும்ரக்ஷிக்கட்டும். எப்பொழுதும்என்னைத் திருப்தி செய்யட்டும். எவர்கள் தேகத்திலிருந்துகொண்டு தாம் அழாமல் தேகிகளை அழச்செய்துகொண்டும் அவர்களை மகிழவியாமல் தாம்

1 'காமங்கள் நசித்தபொழுது பிரகாசிக்கிருரோ' என்பது பழையவுரை.

மகிழ்ந்து கொண்டிருக்கின்றார்களோ அவர்களுக்கு நித்யம் நமஸ் காரம். நதிகளிலும் ஸமுத்திரங்களிலும் மலைகளிலும் குகைகளி லும் மரத்தினடிகளிலிலும் கொட்டில்களிலும் காட்டிலும் பிரவேசிக்க முடியாத இடங்களிலும் நாற்சந்திகளிலும் ரதவீதிகளிலும் முற்றங் களிலும் கரைகளிலும் கஜசாலைகளிலும் குதிரைச்சாலைகளிலும் தேர்ச்சாலைகளிலும் அழிந்த தோப்புக்களிலும் இடிந்த ஆலயங்களி லும் எவர்களிருக்கின்றார்களோ, ஐந்துபூதங்களிலும் திக்குக்களிலும் விதிக்குக்களிலும் எவர்களிருக்கின்றார்களோ, சந்திரசூரியர்களின் இடையில் எவர்கள் அடைந்திருக்கின்றார்களோ, எவர்கள் 'சந்திர ஸூரியர்களுடைய கிரணங்களிலிருக்கின்றார்களோ, எவர்கள் பாதா ளத்தை அடைந்திருக்கின்றார்களோ, எவர்கள் அதற்கும் அப்புறத் தை அடைந்திருக்கிறார்களோ அவர்களுக்கு எப்பொழுதும் நமஸ் காரம். அவர்களுக்கு நமஸ்காரம். அவர்களுக்கு நமஸ்காரம். எவர்களுக்கு எண்ணிக்கையும் அளவுமில்லையோ, ரூபமுமில்லையோ, எந்த ருத்ரர்கள் எண்ணிக்கையற்ற குணங்களுள்ளவர்களோ அவர் களுக்கு நித்தியம் நமஸ்காரம். நீர் எல்லாப் பிராணிகளையும் படைக் கின்றவரும் எல்லாப்பிராணிகளையும் காக்கின்றவரும் ஸம்ஹரிக் கின்றவரும் எல்லாப் பிராணிகளுக்கும் அந்தராத்மாவுமாயிருத்தலால் அழைக்கப்படவில்லை. நீரே நானாவித தக்ஷிணைகளையுடைய யாகங் களால் பூஜிக்கப்படுவதனாலும், எல்லாவற்றையும் செய்வதனாலும் நீர் அழைக்கப்படவில்லை. தேவரே! அல்லது, ஸூக்ஷ்மமான உம் முடைய மாயையினால் மயக்கப்பட்டேன். முன்சொன்ன காரணத்தி னாலாவது இந்தக்காரணத்தினாலாவது நீர் அழைக்கப்படவில்லை. எனக்கு அருள் செய்யும். உமக்கு மங்களமுண்டு. தியானத்தை அடைந்தவனான எனக்கு நீர் (முன்) வரவேண்டும். தேவரே! என் னுடைய ஹ்ருதயமானது உம்மிடமிருக்கவேண்டும். புத்தியும் உம் மிடமிருக்கவேண்டும். மனமும் உம்மிடமிருக்கவேண்டும்' என்றான்.

இவ்விதம் ஸ்ருஷ்டிகர்த்தனை தக்ஷன் மஹாதேவரைத்துதித்து விட்டு நின்றான். பகவானும் மிகவும் பிரீதியடைந்து மறுபடி யும் தக்ஷனை நோக்கிச் சொல்லலானார். 'நல்லவ்ரதத்தையுடைய வனே! தக்ஷ! உன்னுடைய இந்த ஸ்தோத்திரத்தினால் மிகவும் சந் தோஷமடைந்தேன். இதுவிஷயத்தில் அநேகமாகச் சொல்லுவா னேன்? என்னுடைய பக்கத்திலிருக்கப்போகிறாய். பிரஜைகளுக்குப் பதியே! எனதருளால் ஆயிரம் அச்வமேதங்கள் நூறுவாஜபேயங்கள் ஆகிய இவற்றின் பயனை அடைவாய்' என்றார். மேலும், உலகத்திற்கு

அதிபதியான ஈசவர் இந்தத் தக்ஷனை நோக்கி ஆறுதலைச்செய்வதும் சொல்லக்கூடியதும் வாக்கியத்தை அறிந்தவர்களுடைய வாக்கியத்திற்கு ஸமமுமான ஒரு வசனத்தைச் சொல்லலானார். 'ஓ! தக்ஷ! தக்ஷ! இந்த விக்னத்தைக் குறித்துக் கோபிக்கவேண்டாம். நான் உன்னுடைய யாகத்தை அழிக்கிறவன். இது முன்கல்பத்திலும் நடந்ததாகக் காணப்பட்டது. நல்லவ்ரதமுடையவனே! உனக்கு வேண்டியவரையில் வரத்தை அளிக்கிறேன். அதை நீ பெற்றுக்கொள். இப்பொழுது பிரஸன்னமான முகத்தையுடையவனும் ஒரே மனமுள்ளவனுமாயிருந்துகொண்டு அதைக் கேள். அனுஷ்டிக்க அரிதாயும் விரிவாயுமிருக்கிற தவமானது தேவர்களாலும் அஸுரர்களாலும் ஆறு அங்கங்களுள்ள வேதத்திலிருந்தும் ஸாங்கியத்திலிருந்தும் யோகத்திலிருந்தும் யுக்தியினால் எடுத்து நன்றாகச் செய்யப்பட்டது. தக்ஷனே! நூதனமும் செய்யுமகாலமும் முடிக்குங்காலம் ஆகிய எப்பொழுதும் மங்களமும் எல்லாவர்ணாசரமங்களுக்கும் பொதுவும் நாசமில்லாததும் அனேகமவருஷம் யமநியமங்களைப் பத்தாகிற யாகங்களோடு கூடியதும் ரகஸ்யமும் மூடர்களால் நிந்திக்கப்பட்டதும் சிலவிஷயத்தில் வர்ணாசரமதர்மங்களுக்கு மாறுபட்டதும் சிலவிஷயத்தில் ஒத்ததும் ஸித்தாந்தத்தை அறிந்தவர்களால் நிர்மாணிக்கப்பட்டதுமான அத்யாசரமமாகிற இந்தப் பாசுபதமென்கிற சுபமான விரதமானது முன்காலத்தில் என்னால் உண்டுபண்ணப்பட்டது. அது நன்கு அனுஷ்டிக்கப்பட்டால் அந்தப்பலன் புஷ்கலமாக உண்டாகிறது.' ஓ! மிக்கபாக்கியம் பெற்றவனே! 'அந்தப்பயன் உனக்கு உண்டாகட்டும். மனத்தின் கொதிப்பை விட்டுவிடு' என்றார். அளவற்றபராக்ரமமுள்ள மஹாதேவர் இவ்விதம் சொல்லிவிட்டுப் பத்னியோடும் பரிவாரங்களோடும் தக்ஷனுக்குத் தெரியாமல் மறைந்தார். தக்ஷனால் சொல்லப்பட்ட இந்த ஸ்தோத்திரத்தைப் படிப்பவனும் கேட்பவனுமான மனிதன் ஒருவிதமான அமங்களத்தையும் அடையமாட்டான்; தீர்க்காயுளையுமடைவான். எல்லாதேவர்களிலும் ஸர்வஜ்ஞரான சங்கரர் மிகச்சிறந்தவராயிருப்பதுபோல வேதத்திற்குச் சமமான இந்த ஸ்தோத்திரம் எல்லாஸ்தோத்ரங்களிலும் மிகச்சிறந்தது. புகழ், ராஜ்யம், ஸுகம், ஐசவரியம், போகத்துக்குரிய பொருள், தனம் இவைகளை விரும்பியவர்களாலும் வித்தையை விரும்புகிறவர்களாலும் பக்தியை அடைந்து முயற்சியுடன் கேட்கத்தக்கது. நோயுற்றவனோ துக்கத்தையடைந்தவனோ ஏழையோ திருடர்களிடம் அகப்பட்டவனோ பயத்தினால் பீடிக்கப்பட்டவனோ ராஜகாரியத்தில்

பிரவ்ருத்திதவனோ எவனானாலும் பெரிய பயத்திலிருந்தும் விடுபடுவான். இந்தத் தேகத்தோடேயே சிவகணங்களுடைய ஸாரூப்யத்தை அடைவான்; தேஜஸ்ஸையும் யசஸ்ஸையுமடைந்து நிர்மலனாவான். எந்தக்கிருகத்தில் இந்த ஸ்தோத்திரம் படிக்கப்படுகின்றதோ அந்தக் கிருகத்தில் ராக்ஷஸர்களும் பிசாசங்களும் பூதங்களும் விநாயகர்களும் விக்னத்தைச் செய்யார். பதிவ்ரதையாயிருக்கிற ஸ்திரீ சிவபக்தியுடன் (இதைக்) கேட்டால் அவள் பிதாவின்வம்சத்திலும் மாதாவின்வம்சத்திலும் ஈசுவரர்போலப் பூஜிக்கத்தக்கவளாவாள். எவன் ஸ்தோத்திரம் முழுமையையும் மனமடங்கிக் கேட்பானோ, அல்லது படிப்பானோ, அவனுடைய எல்லாக்காரியங்களும் எப்பொழுதும் ஸித்தியை அடையும். இந்தத் தோத்திரத்தை அடிக்கடி படிப்பதனால் மனத்தால் நினைக்கப்பட்டதும் வாக்கினால் சொல்லப்பட்டதுமான எல்லாம் அவனுக்குக் கைகூடும். ஈசுவரருக்கும் ஸுப்ரமண்யருக்கும் தேவிக்கும் நந்திகேசுவரருக்கும் நன்றாக விதிப்படி [1]பூஜையைச் செய்து பிறகு அடக்கத்தோடும் நியமத்தோடுமிருந்து சீக்கிரம் கிரமமாக நாமங்களை ஜபிக்கவேண்டும். அவ்விதம்ஜபித்தமனிதன் விரும்பிய பொருள்களையும் போகங்களையும் காமங்களையும் அடைகிறான்; மரித்தபின் ஸ்வர்க்கத்தை அடைகிறான். திர்யக்ஜாதியில் பிறக்கமாட்டான். இவ்விதம் பகவானும் பராசரபுத்ரரும் பிரபுவுமான வேதவ்யாஸர் கூறினார்" என்றனர்.

---

## [2] இருநூற்றுத்தொண்ணூற்றோராவது அத்யாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)

(ஆத்மா புத்தி பூதங்கள் இந்திரியங்கள் குணங்கள் முதலியவற்றின்விவரணம்.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! இவ்வுலகில் புருஷனுடைய ஆத்மவிஷயமாயிருக்கிற அத்யாத்ம சாஸ்திரமென்பது எது? எதிலிருந்து

---

1 இந்தஸ்தோத்திரத்திற்காகச் செய்யவேண்டிய பூஜையின்கிரமம்:— சுசியாய்த் திருநீறிட்டு ருத்ராக்ஷங்களணிந்து நித்யக்கடன் முடித்துப் பூதசுத்தி ஸ்தலசுத்தி ஆத்மசுத்திமுதலியன செய்து பஞ்சாக்ஷர விதியால் நியாஸம் தியானங்கள் செய்து குஹர்முதலிய தேவதைகளைப் பூஜித்துப் பலிவைத்து அர்த்தஜ்ஞானத்துடன் ஸ்தோத்திரத்தை ஆவிருத்திசெய்து உத்தர பூஜை செய்யவேண்டும்.

2 இவ்வத்யாயம் பெரும்பாலும் நூற்றுத்தொண்ணூற்றிரண்டாவது அத்யாயத்தை ஒத்திருக்கிறது.

உண்டாயிற்று? அதை எனக்குச் சொல்ல வேண்டும்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"குழந்தாய்! எல்லாவற்றையும் அறிவிப்பதும் சிறந்ததுமான எதைப்பற்றி நீ புத்திசாலித்தனத்தால் என்னிடம் கேட்டாயோ அதை உனக்கு விரிவாக உரைப்பேன். அதன் விரிவைக் கேள். ப்ருதிவி வாயு ஆகாயம் அப்பு ஐந்தாவதான தேயுவென்கிற மஹா பூதங்கள் எல்லாப் பிராணிகளுடைய உற்பத்திநாசங்களுக்கும் காரணமாயிருக்கின்றன. ஓ! பாரதசரேஷ்டனே! அந்தப் பூதங்களுடைய அந்தக் காரியவாக்கமானது சரீரம். அந்த (ப்புத்தி முதலான) குணங்களென்று (சொல்லப்பட்ட) காரியங்கள் எப்பொழுதும் லயிக்கின்றன; ஜனிக்கவுஞ்செய்கின்றன. அவைகளிலிருந்து உண்டான பிராணிகள் அவைகளிலேயே லயிக்கின்றன. அடிக்கடி ஸமுத்ரத்தில் அலைகள் உண்டாவதுபோல ப்ராணிகளின்பொருட்டு மஹாபூதங்கள் உண்டாகின்றன. ஆமையானது தன் உறுப்புக்களை வெளியில்நீட்டித் திரும்பச் சுருக்கிக்கொள்வதுபோலப் பெரியபூதங்கள் சிறியபிராணிகளை வெளியில்பரவச்செய்து உள்ளே அடக்கிக் கொள்ளுகின்றன. சரீரத்திலிருக்கிற சப்தம் ஆகாயத்தின் குணமாகவும் கடினபாகம் பிருதிவியின்குணமாகவும் பிராணன் வாயுவின்குணமாகவும் உதிரமுதலானதிரவபதார்த்தம் அப்பின்குணமாகவும் ரூபமானது தேயுவின்குணமாகவும் சொல்லப்படுகின்றன. இவ்விதம் ஸ்தாவரஜங்கமமான இவையெல்லாம் இந்தப் பூதமயமாகவேயிருக்கின்றன. இப்பூதம் பிரளயத்தில் அந்த ஆத்மாவில் லயிக்கிறது. மறுபடியும் ஆத்மாவிலிருந்து உண்டாகின்றது. பிராணிகளைப்படைக்கும் ஆத்மாவானவர் எல்லாப்பிராணிகளிடத்திலும் ஐந்துமகாபூதங்களையே விஷயங்களாகப் படைத்தார்; எதில் எதைப் பார்க்கிறாரோ (அதைக் கேள்.) சப்தம் சரோத்ரம் த்வாரங்கள் மூன்றும் ஆகாயமாகிறகாரணத்தினின்று உண்டாயின. ரஸம் பசை நா இவைகள் அப்புக்களின் குணங்களாகக் கருதப்பட்டன. தேயுவானது ரூபம் சக்ஷுஸ் சமைத்தல் இம்மூன்றுவிதமாகச் சொல்லப்படுகிறது. கந்தம் மூக்கு சரீரம் இவை பிருதிவியின்குணங்களாகக் கருதப்பட்டன. ப்ராணன் ஸ்பர்சம் சேஷ்டை இவைகள் வாயுவின்குணங்களாகக் கருதப்பட்டன. அரசனே! இவ்விதம் பஞ்சபூதங்களுடையஎல்லாக்குணங்களும் விரிவாய்ச்சொல்லப்பட்டன. பாரத! ஸத்வம், ரஜஸ், தமஸ், காலம், கர்மம், மனம், புத்தி இவைகளை ஈசுவரர் இந்தக்குணங்களுள் நன்கு அமைத்தார். உள்ளங்கால்களுக்கு மேலும் தலைக்குக் கீழும்

எதைப் பார்க்கிருயோ இந்த இடையிலே இந்தப் புத்திமுழுதும் இருக்கிறது. மனிதனிடத்தில் இந்திரியங்களைந்தென்றும் மனம் ஆருவதென்றும் சொல்லப்படுகின்றன. புத்தியையே ஏழாவதாகச் சொல்லுகிருர்கள். க்ஷேத்ரஜ்ஞனை ஜீவனே எட்டாமவன். இந்திரியங்களும் கர்த்தாவும் பிரித்து அறியத்தக்கவை. தமஸ் ரஜஸ் ஸத்வங்களும் இந்தப் பதார்த்தங்களும் அந்தக் கர்த்தாவை அடுத்திருக்கின்றன. நேத்ரமுதலியவை தர்சனமுதலியவற்றின் பொருட்டே. மனம் ஸம்சயத்தைச் செய்கிறது. புத்தியானது நிச்சயத்தின்பொருட்டாகிறது. க்ஷேத்ரஜ்ஞனென்பவன் ஸாக்ஷியாகச் சொல்லப்படுகிருன். பாரதனே! தமஸ், ஸத்வம், ரஜஸ், காலம், கர்மமென்னும் குணங்களால் புத்தியானது மிகவும் விஷயங்களில் கொண்டு போகப்படுகிறது. இந்தக் குணங்களும் மனத்தை ஆருவதாகவுடைய எல்லா இந்திரியங்களும் புத்தியே. புத்தியில்லாதகாலத்தில் குணங்கள் ஏது? புத்தியானது பார்ப்பதனல சக்ஷுவாகவும் கேட்பதனல் சரோத்ரமாகவும் சொல்லப்படுகிறது; முகாவதனல் க்ராணமாகிறது; ரஸங்களை அறிவதனல ரஸனையாகிறது; ஸ்பர்சங்களை உணர்வதனல் த்வக்காகிறது. புத்தியானது அடிக்கடி விகாரத்தை அடைகிறது. எப்பொழுது ஒன்றைப் பிரார்த்திக்கின்றதோ அப்பொழுது அது மனமாகிறது. ஐந்துவிதமான இவைகள் புத்தியினுடைய தனித்தனியான ஸ்தானங்களல்லவா? அவைகளை இந்திரியங்களாகச் சொல்லுகின்ருர்கள். அவைகள தோஷத்தை அடைந்தபொழுது புத்தியும் தோஷத்தை அடைகிறது. புத்தியானது சாக்ஷியினிடமிருந்துகொண்டு (சாத்விகமுதலான) மூன்று தன்மைகளை அடைகிறது; ஒருசமயம் சந்தோஷத்தை அடைகிறது; ஒருசமயம் துக்கத்தையும் அடைகிறது; ஒரு சமயம ஸுகமும் துக்கமுமற்றதாயிருக்கிறது. பாவரூபமான இந்தப்புத்தியானது இந்த மூன்று கொள்கைகளிலும் சுற்றிச் சுற்றி வருகிறது. நதிகளுக்கெல்லாம் பர்த்தாவும அலைகளுள்ளதுமான ஸமுத்ரமானது கரையில் அடங்கியிருப்பதுபோல இவ்விதம் பாவத்தை அடைந்த புத்தியானது பாவரூபமானமனத்திலிருக்கிறது. ப்ரவ்ருத்திக்கின்ற ரஜோஸாவெனில் புத்தியின்தன்மையை அனுசரித்திருக்கிறது! புருஷனிடத்தில் அதிக ஸந்தோஷம், ப்ரீதி, ஆனந்தம், ஸுகம், மிகவும் அடங்கின மனமுள்ளவனயிருத்தல் என்னும் சாத்விககுணங்கள் பெருமுயற்சியால் உண்டாகின்றன. பெரிதானதாபம், சோகம், மனக்கொதிப்பு, த்ருப்தியில்லாமை, பொறுமையில்லாமை ஆகிய இந்த ரஜோகுணத்தின்

அடையாளங்கள் காரணம்பற்றியும் காரணமில்லாமலும் காணப்படு கின்றன. அஜ்ஞானம், ராகம், மோகம், அஜாக்ரதை, கர்வம், பயம், ஸமிருத்தியில்லாமை, தீனனையிருத்தல், அதிக மோகம், ஸ்வப் நம், சோம்பல் என்னும் பலவிதமான தமஸின் குணங்கள் எப்படி யாவது உண்டாகின்றன. அவைகளில் சரீரத்திலோ மனத்திலோ ப்ரீதியுடன் உண்டாகுங்காரியத்தை ஸாத்விகபாவமென்று ஊகிக்க வேண்டும். துக்கத்துடன்கூடி ஆத்மாவுக்கு அப்ரியத்தைச் செய் வதை ரஜோகுணமே ப்ரவ்ருத்தித்ததென்று பரபரப்பின்றி நினைக்க வேண்டும். மோகத்துடன்கூடிச் சரீரத்திலோ மனத்திலோ உண் டாகிற அதை ஊகிக்க முடியாததும் அறியமுடியாததுமான தமோ குணமாக நிச்சயிக்கவேண்டும். இவ்விதம் புத்தியின் கதிகள் முழு மையும் இப்பொழுது விரித்துரைக்கப்பட்டன. இதை அறிந்தால் வித்வானவான். இதைத் தவிர வித்வானுக்கு வேறு லக்ஷணம் ஏது? ஸூக்ஷ்மமான புத்திக்கும் க்ஷேத்ரஜ்ஞனுக்குமுள்ள இந்த வித்யா சத்தை அறியக்கடவாய். இவைகளில் ஒன்று குணங்களைப் படைக் கிறது; ஒன்று குணங்களைப் படைப்பதில்லை மத்ஸ்யமானது ஜலத் தைக் காட்டிலும் வேறாகவும் அதனுடன் சேர்ந்ததாகவுமிருப்பது போல (ஆத்மாவும் புத்தியும்) இயற்கையாகவே வேறானவையும் எப் பொழுதும் ஒன்றோடொன்று சேர்ந்தவையுமாயிருக்கின்றன. குணங் கள் ஆத்மாவை அறிகிறதில்லை ஆத்மாவானது குணங்களெல்லா வற்றையும் அறிகிறது. ஆத்மாவானது குணங்களைப் பார்ப்பதாகவும் நினைக்கிறபடி அவைகளில் பற்றுள்ளதாகவுமிருக்கிறது. புத்திக்கு ஆச்ரயமில்லை. குணங்களுடைய ஸ்ருஷ்டியினாலே இதனுடையஸத்வ மும் அறிவும் ஏற்படுகின்றன. ஒரு சமயம் மற்றவைகள் குணங்க ளைப் படைக்கின்றன. இந்தப்புத்தி அறிகின்றது. புத்தியானது குணங்களை ஸ்ருஷ்டிக்கின்றது. ஜீவன் அபிமானிக்கிறான். அந்தப் புத்திக்கும் ஜீவனுக்கும் இந்தச் சேர்க்கையானது நிலையுள்ளது. அசேதனங்களும் அறியாதவைகளுமான இந்திரியங்களால் விஷயத் தின் பிரகாசத்திற்காகப் புத்தியானது இடையில் ஏற்படுத்தப்படு கிறது. [1]இந்த்ரியங்கள் பெரியதீபம் போன்றவை. அப்படிப்பட்ட இந்த விஷயத்தை இவ்வித இயற்கையுள்ளதாக நினைத்து சஞ்சரிக் கும் மனிதன் துக்கமில்லாதவனும் சந்தோஷியாதவனும் மத்சரமில் லாதவனுமாயிருப்பான். இது குணங்களைப்படைப்பது, சிலந்தி யானது நூலைப் படைப்பதுபோல ஸ்வபாவஸித்தமாகவேயுள்ளது.

---

1 புத்தி தீபப்ராகாசத்துக்கு ஒப்பானது.

குணங்கள் நால்களைப்போல அறியக்ககூடியவை. குணங்கள் நாசத்தை அடைகின்றன. [1]நிவ்ருத்திப்பதில்லை. ஏனெனில், அவைகளின் ப்ரவ்ருத்தியானது அறியப்படுகிறதில்லை. இவ்விதம் சிலர் நிச்சயிக்கின்றனர். மற்றவர்கள் குணங்களுக்கு நிவ்ருத்தியென்று நிச்சயிக்கின்றனர். இவ்விதம் புத்தியின் சிந்தாரூபமாயும் உறுதியாயுமிருக்கிற இந்தஹ்ருதயத்தின் முடிச்சை அவிழ்த்துவிட்டுச் சோகமில்லாதவனும் ஸம்சயமற்றவனுமாகி ஸுகமாயிருக்கவேண்டும். மனிதர்கள் மோகமாகிற ஜலத்தினால் நிறைந்ததும் பெரிதுமான சம்சாரநதியில் விழுந்து ஞானயோகமயமான மேட்டுப்ரதேசத்தை அறியாமல் வாடுவதுபோல ஆத்மஜ்ஞானமுள்ளவர்களும் தீரர்களுமான வித்வான்கள் (மோக) ஜலத்தின் அக்கரையைத் தோணியால் அடைவதால் வாடுவதில்லை. மேலான ஞானமே தோணி. அவித்வான்களுக்கு ஏற்படும் பெரிய பயமானது வித்வான்களுக்கு உண்டாகிறதில்லை. ஒருவனுக்கும் அதிகமான கதியான்துகிடையாது. வேதமானது இந்தமோக்ஷத்தில் ஒரேதரமாக ஸமமான தன்மையைத் தெரிவிக்கிறது. இந்த விதவானானவன் அந்தஜன்மத்தில் செய்கிறதும் முன்ஜன்மத்தில் செய்ததுமான மிக்க தோஷமுள்ள கர்மாவை ஒரே ஞானத்தினால் அழிக்கிறான். பிறன்செய்த அநிஷ்டத்தைத் தூஷிப்பது, தான் அதைச் செய்வது ஆகிய இரண்டையும் செய்யான்" என்று சொன்னார்.

---

(இருநூற்றுத்தொண்ணூற்றிரண்டாவது அத்யாயம்.

மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



(துக்கமுதலியன தொடராமலிருத்தற்குரிய காரணத்தை ஸமங்கர் நாரதருக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "ஓ! பிராமஹரே! பிராணிகள் எப்பொழுதும் மனவருத்தத்தினாலுண்டான துக்கத்திலும் மரணத்திலும் நடுங்குகின்றன. அவ்விரண்டும் எங்களுக்கு உண்டாகாமலிருக்கும் விதத்தை எனக்குச்சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர்சொல்லத் தொடங்கினர்.

"ஓ! பாரதனே! இந்த விஷயத்திலும் நாரதருக்கும் ஸமங்கருக்கும் நடந்த ஸம்வாதரூபமான பழைய சரித்திரத்தைச் சொல்லுகின்றார்கள். நாரதர், 'மார்பினால் வணங்குகிறவர்போலவும் புஜங்க

---

1 திரும்பவும் கார்ணரூபமாகிவிடுவது.

ளால் (ஸம்ஸார நதியைத்) தாண்டுகிறவர்போலவுமிருக்கிறீர். எப்பொழுதும் மனத்தில் மிக்க சந்தோஷமடைந்து சோகமற்றவர் போலக் காணப்படுகிறீர். உம்மிடத்தில் ஒருவித பயத்தையும் சிறிதும் நான் காணவில்லை. நித்தியம் திருப்தியடைந்தவர்போல ஸ்வஸ்தராய்ச் சிறுவன்போல வ்யவஹரிக்கின்றீரே' என்று சொன்னார். ஸமங்கர், 'ஓ! நாரதரே! நான் ஸகலமான பிராணிகளிடத்திலும் நடந்ததையும் நடக்கின்றதையும் நடக்கப்போகின்றதையும் அவைகளின் தத்வங்களையும் அறிகின்றேன். அதனால், நான் மனவருத்தமில்லாதவனாயிருக்கிறேன். நான் உலகத்தில் கார்யங்களின் ஆரம்பங்களையும் மறுபடி பயன்களின் உற்பத்திகளையும் நானாவிதமான பயன்களையும் அறிவேன். அதனால் நான் மனவருத்தமில்லாதவனாயிருக்கிறேன். ஓ! நாரதரே! நாதனில்லாதவர்களும் இருப்பிடமில்லாதவர்களும் (கல்விசெல்வமுதலிய) கதியுடையவர்களும் குருடர்களும் மூடர்களும் ஜீவிக்கின்றார்கள். ஜீவிக்கிறவர்களான நம்மையும் பாரும். முன்செய்த வினையினாலேயே ரோகமில்லாத அவயவங்களுடைய தேவர்களும் பலவான்களும் பலமில்லாதவர்களுமே ஜீவிக்கின்றார்கள். அவ்வாறே நம்மையும் மேலாக நினையும். ஆயிரமுள்ளவர்களும் ஜீவிக்கின்றார்கள். நூறுள்ளவர்களும் ஜீவிக்கின்றார்கள். சிலர் கீரையினாலும் ஜீவிக்கின்றார்கள். ஜீவிக்கின்ற நம்மையும் பாரும். ஓ! நாரதரே! நாம் துக்கத்தை அடையாமலிருக்கும்போது நமக்குத் தர்மத்தினாலோ உலகவியாபாரத்தினாலோ என்ன பயன் ஏற்படவேண்டும்? ஸுகங்களும் துக்கங்களும் அழியுந்தன்மையுள்ளனவாயிருப்பதால் அவைகள் (நம்மைத்) துன்பப்படுத்தா. [1] மேலான அறிவுடைய மனிதர்கள் இந்திரியங்கள் கலக்கமற்றிருப்பது ப்ரஜ்ஞைக்குக் காரணமென்று சொல்லுகின்றனர். இந்திரியங்கள் மோகத்தை அடைகின்றன; துக்கத்தையும் அடைகின்றன. இந்திரியங்கள் மயங்கியவனுக்கு அந்தப் பிரஜ்ஞையின் லாபமானது இல்லை. மூடனுக்கு அந்தமோகமே மறுபடி கர்வமாகின்றது. மூடனுக்கு இந்த லோகமுமில்லை; பரலோகமுமில்லை. எப்போதும் துக்கங்களே உண்டாவதில்லை. எப்பொழுதும் ஸுகத்தின் லாபமுமில்லை. மாறிமாறிக்கொண்டிருக்கின்ற வாஸனாரூபமான பெரிய ஜ்வரத்தை என்னைப்போன்றவன் ஒருபோதும் அடையமாட்டான்; பிரியமான போகங்களையோ ஸுகத்தையோ அனுஸரிக்கமாட்டான்;

1 ஒரு சொல் விடப்பட்டது; இங்கு பழையவுரை சிறிது வேறுபடுகிறது.

சேர்ந்த துக்கத்தையும் சிந்திக்கமாட்டான்; மனத்தை ஸமாதானஞ் செய்துகொண்டு பிறருடைய ஸுகமுதலியவற்றில் ஆசைப்படாம லிருப்பான். வரப்போகிற லாபத்தைக்குறித்தும் ஸந்தோஷிக்க மாட்டான். தனலாபமானது அதிகப்பட்டபொழுதும் ஸந்தோ ஷத்தை அடையமாட்டான்; பொருள் அழிவிலும் துக்கிக்கமாட் டான்; பரலோகத்தில் உறவினர், செல்வம், நல்லகுலம், கல்வி, மந்தி ரங்கள், பலம் ஆகிய எல்லாம் துக்கத்திலிருந்து காக்கத் திறமை யுள்ளவையல்ல. ஆனல், மனிதர்கள் நல்ல சீலத்தினால்தான் சாந் தியை அடைகின்றார்கள். யோகமில்லாதவனுக்குப் புத்தியிராது. யோகமில்லாதவன் ஸுகத்தை அடைவதில்லை. [1]மனத்தை வெளி யில்விடாமல் தரிப்பது துக்கத்தை விலக்குவது ஆகிய இரண்டும் ஸுகம். (விஷயத்தில்) பிரியமானது ஸந்தோஷத்தை உண்டுபண்ணு கிறது. அந்த ஸந்தோஷம் கர்வத்தை விருத்திசெய்கிறது. கர்வ மானது நரகத்துக்கே காரணமாகிறது. ஆகையால், நான் அவை களை முழுதும் தள்ளி இருக்கிறேன். உலகத்தில் இந்தத் தேகத்தி னுடைய சேஷ்டையினால் ஸுகதுக்கங்களில் மோகத்தையுண்டு பண்ணுகிற சோகம், பயம், கர்வம் இவைகளை ஸாக்ஷிபோலப் பார்த்துக்கொண்டிருக்கிறேன். தனத்தையும் காமத்தையும் தள்ளி விட்டுச் சோகமில்லாதவனும் கவலையில்லாதவனுமாகி ஆசை மோகங் களையும் தள்ளிவிட்டு இந்தப் பூமியில் ஸஞ்சரிக்கிறேன். அமிருத பானஞ்செய்தவனுக்குப்போல எனக்கு இகத்திலோ பரத்திலோ மரணத்திலிருந்தோ அதர்மத்திலிருந்தோ லோபத்திலிருந்தோ ஓரி டத்திலிருந்தும் சிறிதும் பயமில்லை. ப்ராம்மணரே! பெரிதும் அழி வற்றதுமான தவத்தைச் செய்ததால் இதை அறிகிறேன். ஓ! நாரதரே! அதனால் என்னைச் சோகம் வந்தடைந்து வருத்துவதில்லை' என்று சொன்னார்" என்றார்.

---

## இருநூற்றுத்தொண்ணூற்றுமூன்றாவது அத்யாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)

(நாரதர் மேன்மையடைதற்குரிய காரணங்களைக் காலவருக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! சாஸ்திரங்களின் தத்வத்தை அறி யாதவனும் எப்பொழுதும் சந்தேகமுள்ளவனும் (ஆத்மஜ்ஞானத்

---

1 'ந்ருப' என்னும் பதம் விடப்பட்டது.

திற்காக) முயற்சிசெய்யாதவனுமாயிருப்பவனுக்கு ச்ரேயஸுக்குக் காரணத்தைச் சொல்லும்' என்று கேட்க, பீஷ்மர் சொல்லத் தொடங்கினர்.

"எப்பொழுதும் (மாதாமுதலான) குருக்களுடைய பூஜையும் பெரியோர்களுடைய ஸேவையும் குருமுகமாகச சாஸ்திரங்களைக் கேட்பதுமே நிலையான சரேயஸுக்குக் காரணமாகச சொல்லப்படுகின்றன. இவ்விஷயத்திலும் காலவருக்கும் தேவரிஷியான நாரதருக்கும் நடந்த ஸம்வாதரூபமான பழைய இக்கதையைச சொல்லுகின்றார்கள். இந்திரியங்களை ஜயித்தவரும் மோக்ஷத்தை விரும்புகிறவருமான காலவர் மோஹமும் சரமமுமற்றவரும் எல்லா வேதங்களையுமுணர்ந்தவரும ஞானத்தினால் திருப்தி அடைந்தவரும மனவடக்கமுடையவருமான நாரதரை நோக்கிச சொல்லலானார். 'உலகத்தில் ஒரு புருஷன் எவ்விதக குணங்களாலே மனிதர்களில் நற்புகழ்கொள்ளப்படுகிறானே அவ்விதக குணங்களையெல்லாம உம்மிடத்தில் ஸ்திரமாகக காண்கிறோம. இப்படிப்பட்ட பண்டிதரான நீர் வெகுகாலமாக மூடர்களாயிருப்பவர்களும உலகததின் தத்வத்தை அறியாதவர்களுமான எங்களுடைய சந்தேகத்தை நிவ்ருத்திசெய்யவேண்டும். பொதுவாகக் காரியங்களைத் தெரிந்துகொண்டாலல்லவா இவ்விதம் ப்ரவிருத்தி ஏற்படும்? எது செய்யவேண்டியதோ அதை நாங்கள் உறுதியாக அறியவில்லை. அதைச சொல்லவேண்டும. ஓ! பகவானே! எல்லா ஆச்ரமங்களும தனிததனி ஆசாரங்களை வெளியிடுகின்றன. எல்லோரும், 'இது சரேயஸ்காம; இது சரேயஸ்காம்' என்று போதிக்கப்பட்டிருக்கிறார்கள். சாஸ்திரங்களைக் கொண்டாடுகின்றவர்களும் சாஸ்திரங்களாலே வெவ்வேறு மார்க்கங்களில் பிரவிருத்தித்தவர்களுமான அவர்களைப் பார்த்து எங்கள் சாஸ்திரங்களால் ஸந்தோஷத்தை அடைந்த நாங்கள் சரேயஸை அறியவில்லை. சாஸ்திரமொன்றாயிருக்குமானால் அப்பொழுது சரேயஸ் ஸ்பஷ்டமாகும். அனேகமான சாஸ்திரங்களாலே சரேயஸானது மிகவும் ரகஸ்யமாக வைக்கப்பட்டிருக்கிறது. இந்தக காரணத்தினால் சரேயஸானது எனக்கு அறியமுடியாததாகத் தோற்றுகிறது. ஆகையால், பகவானை நீர் அதை எனக்குச் சொல்லும். நான் உம்மை அடுத்தவன். உபதேசியும்' என்று கேட்க, நாரதர், 'ஓ! காலவரே! ஐயா! தனித்தனியே ஏற்படுத்தப்பட்ட ஆசரமங்கள் நான்கு. அப்படியே அந்த எல்லாவற்றையும் உட்புகுந்து நீர் கவனித்துப்பாரும். அந்த அந்த ஆச்ரமங்களுடைய அந்த அந்தவிஷயத்தில் தனித்தனியாய் விலக்ஷண

மாகப் ப்ரவிருத்தித்த பலவாறான குணங்களுடைய உத்தேசத்தைப் பாரும். அவர்கள் ஸந்தேகமற நன்றாக இஷ்டத்தையடைகிறதில்லை. மற்றவர்கள் ஆச்ரமங்களுடைய மேலான கதியைக் கண்டுகொண்டார்கள். எது நன்றாக மோக்ஷசாதனமோ அதுதான் சந்தேகமில்லாத ஸ்வரூபத்தையுடையதாயிருக்கிறது. மித்ரர்களை அனுக்கிரகிப்பதையும் சத்துருக்களை நிக்ரகிப்பதையும் தர்மார்த்தகாமங்களைத் தேடுவதையும் புத்திமான்கள் ச்ரேயஸாகச் சொல்லுகிறார்கள். பாபகர்மத்தினின்றும் விலகுவது, எப்பொழுதும் புண்ணியசீலனாயிருப்பது, ஸத்துக்களோடு ஸஹவாஸம் இவைகள் ஸந்தேகமில்லாமல் ச்ரேயஸாகின்றன. எல்லாப் பிராணிகளிடத்திலும் மிருதுவாயிருத்தல், உலக வியவஹாரங்களில் நேராயிருத்தல், மதுரமான வாக்கு ஆகிய இவை சம்ஸயமின்றி ச்ரேயஸாயிருக்கின்றன. தேவதைகளுக்கும் பித்ருக்களுக்கும் அதிதிகளுக்கும் (ஹவிஸ் முதலானவற்றைக்) கொடுப்பதும வேலைக்காரர்களைக் கைவிடாமலிருப்பதும் ஸம்சயமின்றி சரேயஸாகின்றன. ஸத்யத்தைசசொல்வது ச்ரேயஸ். ஸத்யத்தை அறிவதோவென்றால் லேசாயில்லை. பிராணிகளுக்கு மிகவும் ஹிதமாயிருக்கின்ற இதை நான் ஸத்யமாகச் சொல்லுகிறேன். அகங்காரத்தைத் தள்ளுவதும் அஜாகரதையை விலக்குவதும் ஸந்தோஷமும் ஒரே விதமான நடக்கையும் நிலைபெற்ற சரேயஸாகச் சொல்லப்படுகின்றன. விதிப்படி வேதாத்யயனமும் வேதாங்கங்களுடைய அத்யயனமும் ஞானஸாதனங்களை அறிய விரும்புவதும் ஸந்தேகமின்றி சரேயஸாகின்றன. ச்ரேயஸை விரும்புகின்றவன் நிமித்தமின்றி சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் கந்தம் இவைகளை எவ்விதத்திலும் அதிகமாகப் பற்றக் கூடாது. ச்ரேயஸை விரும்புகின்றவன் ராத்ரியில் ஸஞ்சரிப்பதையும் பகலில் நித்ரை செய்வதையும் சோம்பலையும் கோட்சொல்லுவதையும் மதத்தையும் ஆகாரமுதலியதை அதிகமாகக் கொள்ளுகிறதையும் ஆகாரம் செய்யாமலே இருப்பதையும் தள்ளவேண்டும். பிறருடைய தூஷணையினால் தனக்கு மேன்மையைத் தேடக்கூடாது. தன்னுடைய குணங்களாலேயே மற்றவர்களைக் காட்டிலும் விசேஷமான மேன்மையைத் தேடவேண்டும். அநேகமாகக் குணமில்லாமலேயிருக்கிற மனிதர்கள் தம்மைத்தாமே கௌரவித்துக்கொண்டு தங்களுடைய குணங்களின் குறைவினால் குணசாலிகளான இதரர்களைத் தோஷஞ்சொல்லி விலக்குகின்றார்கள். மறுபடி அவர்கள் (மற்றவர்களால், 'நீங்கள் சொல்வது ஸரிதான்' என்று) அனுஸரித்துச் சொல்லப்பட்டவர்களும் தங்களுடைய

மானத்தினால் கர்வமுடையவர்களுமாகிய மற்றஎல்லாஜனங்களையுங் காட்டிலும் தம்மை மிகவும் குணமுடையவர்களாக நினைக்கின்றார்கள். குணங்கள்நிறைந்த வித்வானானவன் ஒருவனுடைய நிந்தையையுஞ் சொல்லாதவனும் தன் கௌரவத்தை ச்லாகியாதவனுமாகிப் பெரிதான புகழை அடையவேசெய்கிறான். சுத்தமும் நல்லவாஸனையுள்ளதுமான புஷ்பங்களின் வாஸனையானது சொல்லாமல் தானே வீசுகிறது. அப்படியே ஆகாயத்தில் நிர்மலமானஸூர்யன் சொல்லாமலிருந்துகொண்டே பிரகாசிக்கிறான். இவைமுதலானவைகளும மற்றுமுள்ள அசேதனங்களும் பேசாமலே உலகத்தில் புகழால்விளங்குகின்றன. மூடனானவன் குணமற்றவனானதன்னைப் புகழ்வதனால் உலகத்தில் பிரகாசிக்கிறதில்லை. வித்வானானவன் குழியில வைத்து மறைக்கப்பட்டவனாயிருந்தாலும் பிரகாசிக்கிறான், கம்பீரமாகச சொல்லப்பட்டாலும் அஸத்தான சப்தமானது மறைந்துவிடுகிறது. மெதுவாகச சொல்லப்பட்டாலும் நல்லவசனமானது உலகங்களில் விளங்கவே செய்கிறது. மூடர்களும் கொழுத்தவர்களுமானவர்களுடைய ஸாரமில்லாததும் அதிகமுமாயிருக்கிற வார்த்தையானது ஸூர்யன் தன்னை அக்நிரூபமாககாண்பிப்பதுபோல அவர்களைக் கொடுமையுள்ளவர்களாகக் காண்பிக்கிறது. இந்தக் காரணத்தினால் பெரியோர்கள் வேறுவேறாயிருக்கிற ஞானத்தைத் தேடுகின்றார்கள். பிராணிகளுக்குப் பிரஜ்ஞையின்லாபமே உத்தமமாக எனக்குத் தோன்றுகின்றது. புத்திமானானவன் தெரிந்தவனாயிருந்தாலும் தன்னைக்கேளாமலிருக்கும்பொழுது ஒருவனுககும் சொல்லக்கூடாது. நியாயவிரோதமாய்க கேட்கிறவனுக்கும் மறுமொழி சொல்லக்கூடாது; மூடன்போல உட்கார்ந்திருக்கவேண்டும். ஆகையால், கர்மத்தை நித்தியமாகக்கொண்டவர்களும் ஸாதுக்களும் கொடுப்பவர்களும் தங்களுக்குரிய தர்மங்களில் பற்றுள்ளவர்களுமான மனிதர்களிடத்தில் வாஸத்தைவிரும்பவேண்டும். ச்ரேயஸைவிரும்புகிறவன் எந்த இடத்தில் நான்குவர்ணங்களுடைய தர்மங்களுக்குங் கலப்பு உண்டாயிருக்கிறதோ அந்த இடத்தில் எவ்விதத்தினாலும் வாஸத்தைச் செய்யக்கூடாது. இவன் ஒருப்ரயத்தனமுமில்லாதவனும் கிடைத்தபடி ஜீவிக்கிறவனுமாயிருந்தாலும் புண்யசாலிகளிடத்தில் சேர்க்கையால் நிர்மலமான புண்யத்தையும் பாவிகளிடத்தில் சேர்க்கையால் பாவத்தையும் அடைவான். ஜலம் அக்னி சந்திரன் இவற்றின் ஸ்பரிசத்தை அனுபவிக்கிறதுபோல நல்லோர் தீயோர்களுடைய ஸம்பந்தத்தை நாம் பார்க்கிறோம். யஜ்ஞசேஷத்

தைப் புஜிக்கின்றவர்கள் இதரவிஷயத்தைப்பாராமல் புஜிக்கின்றார்கள். எவர்கள் இதரவிஷயங்களை (ஆராய்ந்து) புஜிக்கின்றார்களோ அவர்களைக் கர்மங்கள் தொடருமென்று அறியும். எந்தத்தேசத்தில் சொன்னபடி நடவாதவர்களும் மரியாதையின்றிக் கேட்கிறவர்களுமாயிருக்கிறவர்களுக்குப் பிரம்மதத்வத்தை ஒருவன் சொல்லுவானோ அந்தத் தேசத்தை நல்ல சித்தமுள்ளவன் தள்ளவேண்டும். எந்தத்தேசத்தில் குருசிஷ்யர்களுடைய செய்கையானது சாஸ்திரப்படி ஏற்பட்டதும் நன்றாக ஸ்தாபிக்கப்பட்டதுமாயிருக்குமோ அந்தத் தேசத்தை எவன் தள்ளுவான்? எந்த இடத்தில் வெளியிலுள்ளவர்கள் வித்வான்களுக்கு நிச்சயமாகத் தோஷத்தைச் சொல்லுவார்களோ அந்தத் தேசத்தில் தனக்குக் கௌரவத்தை விரும்புகிறவனான எந்தப்பண்டிதன் வஸிப்பான்? எந்தத் தேசத்தில் லோபிகளாலே தர்மத்தின் அணைகள் பெரும்பாலும் உடைக்கப்பட்டிருக்கின்றனவோ, அந்தத் தேசத்தை, முன்றானை பற்றியெரிகின்ற வஸ்திரத்தைப்போல, யார்தான் விடமாட்டான்? எந்தத்தேசத்தில் அச்சமும் மத்ஸரமுமின்றி ஜனங்கள் தர்மத்தை அனுஷ்டிக்கின்றார்களோ அங்கே ஜனிக்கவேண்டும். புண்யசீலர்களான ஸாதுக்களிடத்தில் வஸிக்கவேண்டும். எந்த இடத்தில் ஜனங்கள் தனத்திற்காகத் தர்மத்தை அனுஷ்டிக்கின்றார்களோ அவர்களிருக்குமிடத்தை அடுத்து ஒருபோதும் வஸிக்கக்கூடாது. அந்த ஜனங்கள் பாபம் செய்கிறவர்களல்லவா? எந்த இடத்தில் ஜனங்கள் பாவத்தொழிலால் ஜீவிக்க விரும்புகிறார்களோ அந்த இடத்திலிருந்தும், ஸர்ப்பத்தோடுகூடிய கிருகத்திலிருந்து ஓடுவதுபோல, வேகமாக ஓடவேண்டும். [1]கட்டிலிலேறி வஸிக்கின்றவன், தனக்கு க்ஷேமத்தை விரும்புவானானால் பச்சாத்தாபம் அடையக்கூடியகர்மாவை முதலிலேயே செய்யாமலிருக்கவேண்டும். எந்தத் தேசத்தில் அரசனும் அரசனுக்கடுத்த மந்திரிமுதலான புருஷர்களும் குடும்பிகளுக்கு முந்தி ஆகாரம் செய்கின்றார்களோ மனஸ்வியானவன் அந்தராஜ்யத்தை விடவேண்டும். எந்த ராஜ்யத்தில் வேதாத்யயனம் செய்தவர்களும் தர்மத்தை நித்யமாகவுடையவர்களும் பரம்பரையாயிருப்பவர்களும் வேள்விசெய்வித்தலும் வேதாத்யயனம் செய்வித்தலுமுடையவருமாயிருக்கிறவர்கள் முந்தி போஜனம் செய்கின்றார்களோ அந்தராஜ்யத்தில் வஸிக்கவேண்டும். எந்த ராஜ்யத்தில் ஸ்வாஹாகாரமும் ஸ்வதாகாரமும் வஷட்காரமும் நன்றாக அனுஷ்டிக்

---

1 ஸம்ஸாரியாயிருப்பவன்.

கப்பட்டு எப்பொழுதும் நடந்துவருகின்றனவோ அந்த ராஜ்யத்தில் விசாரியாமல் வஸிக்கவேண்டும். எந்த ராஜ்யத்தில் ஜீவனத்தினால் ச்ரமத்தையடைந்தவர்களும் அசுத்தர்களுமான பிராம்மணர்களைப் பார்ப்பானோ விஷம் கலந்த மாம்சத்தைப்போலப் [1]பக்கத்திலிருக்கிற அந்த ராஜ்யத்தை விடவேண்டும். எந்த ராஜ்யத்தில் மனிதர்கள் யாசிக்கப்படாமலே அன்புடன் கொடுக்கின்றார்களோ அந்த ராஜ்யத்தில் நல்ல மனமுள்ளவன் மனக்கவலையற்றுக் கிருதகிருத்தியன் போல வஸிக்கவேண்டும். எந்த ராஜ்யத்தில் விநயமில்லாதவர்களிடத்தில் சிக்ஷையும் சித்தவசமுள்ளவர்களிடத்தில் பூஜையும் நடக்கின்றனவோ அந்த ராஜ்யத்தில் ஸஞ்சரிக்கவேண்டும். அங்குள்ள புண்யசீலர்களான ஸாதுக்களிடத்தில் வஸிக்கவும்வேண்டும். எந்த ராஜ்யத்தில் அடக்கமுள்ளவர்களைக் கோபிக்கிறவர்களும ஸாதுக்களைத் துன்பஞ்செய்கிறவர்களும் லோபிகளுமான துஷ்டர்களுக்குப் பெரிய சிக்ஷை நடக்கின்றதோ அந்த ராஜ்யத்தில் வஸிக்கவேண்டும். எந்த ராஜ்யத்தில் எல்லா ஸம்பத்துக்களுமுள்ள அரசன் காமங்களை விலக்கித் தர்மத்தைத் நித்யமாகக் கொண்டு தர்மமாக ராஜ்யத்தைப் பரிபாலனம் செய்வானோ அந்த ராஜ்யத்தில் விசாரியாமல் வஸிக்க வேண்டும். அரசர்கள் சிலத்துக்குத்தக்கபடியிருப்பார்களல்லவா? தமக்கு நன்மையேற்பட்டபொழுது தேசவாஸிகளான எல்லா ஜனங்களையும் சீக்கிரம ச்ரேயஸோடு சேர்ப்பிப்பார்கள். ஐயா! நீ கேட்டமையால இந்த ச்ரேயஸானது என்னால் உனக்குச் சொல்லப்பட்டது. தனக்குரிய முக்கியமான ச்ரேயஸானது அறியமுடியாதது. இந்தப்படி ஜீவனத்தை நடத்திப பிராணிகளுடையநன்மையில் மனத்துடனிருப்பவனுக்குத் தவத்தினாலேயே இவ்வுலகில மிகுதியான ச்ரேயஸானது வெளிப்படையாக உண்டாகும்' என்று சொன்னார்" என்றார்.

---

1 பக்கத்தில் வஸிப்பதையும் விடவேண்டுமென்பது.

## இருநூற்றுத்தொண்ணூற்றுநான்காவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(கருடன ஸகரனுக்கு வைராக்கியமுதலிய மோக்ஷோபாயங்களை உபதேசித்தது.)

யுதிஷ்டிரர், "எங்களைப்போன்ற அரசன் எவ்விதமான ப்ரவிருத்தியுடன் உலகில் ஸஞ்சரிக்கவேண்டும்? எப்பொழுதும் எந்தக் குணங்களுடனிருந்தால் பற்றுதலாகிற பாசத்தினின்றும் விடுபடுவான்?' என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"இந்தவிஷயத்தில் வைனதேயரால் தம்மையனுஸரித்துக் கேட்ட ஸகரமகாராஜனுக்குச் சொல்லப்பட்ட பழமையான சரித்திரத்தை நான் உனக்குச் சொல்வேன். ஸகரன், 'பிராம்மணரே! இகத்தில் க்ஷேமத்தைத் தருவதும் உத்தமமுமான எந்தக்கார்யத்தைச்செய்து ஸுகத்தையடைகின்றான்? எப்படி துக்கத்தையடையாமலும் கலங்காமலுமிருப்பான்? இதை அறிவதற்கு விரும்புகிறேன்' என்று கேட்டான். இவ்விதம் கேட்க, எல்லாச் சாஸ்திரங்களையும் அறிந்தவர்களில் சிறந்தவரான வைநதேயர் அப்பொழுது அவன் உபதேசம்பெற மிகவும் தக்கவனென்பதையறிந்து இந்த ஸாரமான வார்த்தையைச் சொல்லலானார். 'உலகத்தில் மோக்ஷஸுகமே ஸுகம். புத்திரர்களிடத்திலும் பசுக்களிடத்திலும் மிகவும் பற்றுள்ளவனும் தனதான்யங்களில் கவலையுள்ளவனுமான மூடன் அதை அறிகிறதில்லை. பற்றுதலுள்ள புத்தியுடையவனும் நிலையில்லாத மனமுடையவனுமான அவன் சீர்திருத்த முடியாதவன். ஸ்நேகமாகிற கயிற்றால் கட்டுண்ட அந்த மூடனானவன் மோக்ஷத்திற்குரியவனாகிறதில்லை. ஸ்நேகத்தாலுண்டான பாசங்களை உனக்குச் சொல்லுகிறேன். அவைகளை என்னிடம் கேள். [1]காதுள்ள தலையால் (கேட்டு) அறிகின்றவனால் (அவைகள்) அறுக்கக்கூடியவைகளாகின்றன. புத்திரர்களையுண்டுபண்ணிக் காலக்கிரமமாக யௌவனப்பிராயமுள்ளவர்களான அவர்களை (கிருகத்தில்) இருக்கச்செய்து (தங்கள்) ஜீவனத்தில் திறமையுள்ளவர்களாக அறிந்து அவர்களிடமிருந்து விடுபட்டு ஸுகமாக ஸஞ்சரிக்கக்கடவாய். மனைவியைப் புத்திரவதியும் பிராயமுதிர்ந்தவளும் முன் உன்னால் லாலனை செய்யப்பட்டவளும் புத்திரர்களிடத்தில் அன்புள்ளவளுமாகத் தெரிந்து காலக்கிரமத்தால் மேலான

---

1 'ச்ரோத்ரத்துக்கு வேதாந்த ச்ரவணம் பயன்' என்பது கருத்து.

மோக்ஷவிஷயத்தைக் கவனித்துப்பார்த்து அவளை விட்டுவிடு. புத்திரனுள்ளவனுயிருந்தாலும் இல்லாதவனுயிருந்தாலும் முக்தனுகி ஸுகமாக நட. நீ இந்திரியங்களாலே இந்திரியவிஷயங்களை விதிப்படி அனுபவித்து அந்த விஷயங்களில் உற்சாகத்தை விட்டு முக்தனுகிச் சுகமாக நட. தற்செயலாகக் கிடைத்த விஷயங்களில் (விருப்பு வெறுப்பின்றி) ஸமனாக இரு. மோக்ஷத்தைப் பயனுகவுடைய இந்தத் தியாகமானது உனக்கு முதலில் என்னால் சுருக்கமாகச் சொல்லப்பட்டது. இனி, மறுபடியும் விஸ்தாரமாகச சொல்லுகிறேன். அதைக் கேள். விஷயத்தினின்றும் விடுபட்டவர்களும் பயம் நீங்கினவர்களுமான மனிதர்கள் உலகத்தில் ஸுகமாக ஸஞ்சரிக்கின்றார்கள்; பற்றுள்ள மனமுடைய மனிதர்கள் நாசத்தையடைகின்றார்கள். அந்தவிஷயத்தில் சந்தேகமில்லை. கிருமிகளும் எறும்புகளும் ஆகாரத்தைத் தேடுவதுபோல மனிதர்கள் ஆகாரத்தைத் தேடுவதிலேயே பற்றுள்ளவர்களாயிருக்கிறார்கள். உலகத்தில் பற்றில்லாதவர்களே ஸுகிகள்; பற்றுள்ளவர்களோ நசிக்கின்றார்கள். மோக்ஷத்தை நாடுகின்ற உன்னாலே ஸ்வஜனத்தின் விஷயத்தில், 'நானில்லாமற் போனால் இவர்கள் எப்படி இருப்பார்கள்?' என்று கவலைப்படத்தக்கதில்லை. பிராணியானது தானே உண்டாகிறது; தானே விருத்தியடைகின்றது; தானாகவே ஸுகதுக்கங்களையும் மரணத்தையுமடைகின்றது. மனிதர்கள் உலகத்தில் போஜனத்தையும் வஸ்திரத்தையும் மாதாவினாலும் பிதாவினாலும் சேகரிக்கப்பட்டதையும் தம் கர்மத்தினாலேயே அடைகின்றனர். முன் செய்யப்படாதது ஒன்றுமில்லை. உலகத்தில் எல்லாப்பிராணிகளும், தெய்வத்தால் ஏற்படுத்தப்பட்ட ஆகாரங்களையுடைவைகளும் தம் கர்மங்களாலே ரக்ஷிக்கப்பட்டவைகளுமாகிப் பூமியில் ஸஞ்சரிக்கின்றன. மண்கட்டிபோன்றவனும் எப்பொழுதும் பரதந்திரனும் மனஉறுதியில்லாதவனுமான ஜீவனுக்குத் தன்னுடைய ஜனத்தைப் பக்ஷிக்கவோ அல்லது காக்கவோ என்ன காரணமிருக்கின்றது? தான் பார்த்திருக்கும்பொழுதே பெரிய முயற்சி செய்யப்பட்டிருந்தும் தன் உறவினரைப் பூமியில் மிருத்யுவானவன் கொல்லவே செய்கிறானுகையால தானே அறிந்து கொள்ளவேண்டும். இந்த உறவினர்கள் ஜீவித்துக்கொண்டிருக்கையிலும் அவர்களை வளர்த்தலும் காத்தலும் முடிவுபெறாமலிருக்கையிலும் அவர்களை விட்டுவிட்டுச் சாகவே போகிறாய். பிறகு, அவர்கள் மரித்தார்களென்றும் ஸுகத்தையடைந்தார்களென்றும் துக்கத்தை அடைந்தார்களென்றும் நீ அறியமாட்டாய். ஆகையால், தானாகவே

அறிந்துகொள்ளத்தக்கதன்றோ? நீ இறந்தாலும் ஜீவித்திருந்தாலும் உன் சுற்றத்தார் தம் கர்மத்தையே அனுபவிப்பார்களாகையால் இவ் விதமறிந்துகொண்டு உனக்கு ஹிதமாயுள்ளதைச் செய்யவேண்டு மன்றோ? இவ்விதமறிந்த நீ இவ்வுலகத்தில் எவன் எவனைச் சேர்ந் தவனென்ற நிச்சயத்துடன் மனத்தை மோக்ஷத்தில் செலுத்து. மேலும் மேலும் மனத்தில் உறுதிசெய்துகொள். இந்த உலகத் தில் எந்தத் தேகிக்குப் பசிதாகமுதலான நிலைமைகளும் க்ரோத மும் லோபமும் மோகமும் ஜயிக்கப்பட்டிருக்கின்றனவோ நல்லமன முள்ள அவன் முக்தனே. சூதாட்டத்திலும் பானத்திலும் ஸ்திரீகள் விஷயத்திலும் வேட்டையிலும் மோகத்தினால் தவறியும் பற்றுதலில் லாதவன் எப்பொழுதும் முக்தனே. இரவும் பகலும் எப்பொழு தும் போஜனத்துக்காகவே சரமத்தையடைகின்றவன் தோஷபுத்தி யுடையவனாகச் சொல்லப்படுகிறான். எப்பொழுதும் ஜாக்ரதையுள்ள வனாகி அடிக்கடி ஸ்திரீகளிடத்தில் உண்டாகும் ஸங்கத்தைத் தன் பிறப்புக்குக் காரணமாக உள்ளபடி அறிகிறவன் முக்தனே. இந்த உலகத்தில் எவன் பிராணிகளுடைய பிறப்பையும் இறப்பையும் செய் கையையும் உண்மையாக அறிகிறானோ அவன் முக்தனே. ஆயிரம் கோடி வண்டி தானியங்களில் ஒருபடி தான்யத்தையும், உப்பரிகை யில் தன் மஞ்சத்திற்குரிய இடத்தையும் தன் வாழ்க்கைக்குப் போது மானவையாகப் பார்க்கிறவன் மோக்ஷத்தை அடைகிறான். எவன் உலகமானது ம்ருத்யுவினால் அடிக்கப்படுவதையும் வியாதியினால் பீடிக்கப்படுவதையும் பிழைப்பில்லாமையினால் வருந்துவதையும் பார் க்கிறானோ அவன் முக்தியை அடைகிறான். இவ்வுலகத்தில் எவன் இவ்விதம் பார்க்கிறானோ அவன் சந்தோஷமுடையவனாவான்; பாரா தவன் கெடுக்கப்படுகிறான். எவன் சிறிது கிடைப்பதாலும் ஸந்தோ ஷிக்கின்றானோ அவனும் முக்தனே. எவன் இவையெல்லாம் போக் தாவான அக்னி அன்னமான ஸோமன் ஆகிய இவ்விரண்டென்று பார்க்கிறானோ அவன் ஆச்சரியமான பதார்த்தங்களாலே பற்றப்படு கிறதில்லை. அவன் முக்தனே. எவனுக்கு மஞ்சசயனமும் பூமியும் ஸமானமோ எவனுக்கு நெல்லரிசி அன்னமும் இழிவான அன்ன மும் ஸமானமோ அவன் முக்தனே. எவனுக்கு வெண்பட்டும் தர்ப் பையாலுண்டான ஆடையும் பீதாம்பரமும் மரவுரிகளும் ஆட்டின் ரோமக்கம்பளமும் தோலும் ஸமானமோ அவன் முக்தனே. எவன் உலகத்தைப் பஞ்சபூதங்களாலுண்டானதாக நன்றாகப் பார்க்கின் றானோ பார்த்துவிட்டு ஸமமாகவே இருக்கிறானோ அவன் இவ்வுலகில்

முக்தனே. எவனுக்கு 'ஸுகதுக்கங்களும் லாபாலாபங்களும் ஜயாபஜயங்களும் விருப்பு வெறுப்புக்களும் பயமும் தைர்யமும் ஸமானமாயிருக்கின்றனவோ அவன் எல்லா விதத்தாலும் முக்தனே. இரத்தம், மூத்ரம், அமேத்யம் ஆகிய தோஷங்களுடைய ஸமூகங்களையும் தோஷம் மிகுந்த சரீரத்தையும் பார்த்து (மனிதன்) தானே முக்தியடைகிறான். எவன் கிழத்தனத்தாலுண்டான நரை திரைகளுடைய ஸம்பந்தத்தையும் சரீரத்தின் இளைப்பையும் நிறங்குன்றிப்போவதையும் கூனலையுமே பார்க்கின்றானோ அவன் முக்தனாகிறான். எவன் நாளடைவில் ஆண்மையின் கெடுதலையும் கண் தெரியாமல் போவதையும் செவிடாகப் போவதையும் பலத்தின் குறைவையும் பார்க்கின்றானோ அவன் முக்தனாகிறான். எவன் இவ்வுலகத்திலிருந்து பரலோகத்தையடைந்த முனிவர்களையும் தேவர்களையும் சென்றவர்களான அஸுரர்களையும் பார்க்கின்றானோ அவன் முக்தனாகிறான். அந்தப் பலவகைச்சிறப்புக்களையடைந்திருந்த ஆயிரக்கணக்கான ராஜசிரேஷ்டர்கள் மண்ணுலகைவிட்டுப் போய்விட்டார்களென்றறிந்தவன் முக்தனாகிறான். எவன் உலகத்தில் திரவியங்களை அடைவது அரிதென்றும் துன்பங்களே அதிகமென்றும் குடும்பத்தின் நிமித்ததில் துக்கமே உண்டாவதென்றும் அறிகின்றானோ அவன் விடுபடுகிறான். உலகத்தில் புத்திரர்களுடைய விரோதமான குணத்தையும் விரோதமானகுணமுடைய ஜனத்தையும் அதிகமாகக் கவனித்து அறிகின்றவனான எவன்தான் மோக்ஷத்தைப் பாராட்டமாட்டான்? எந்த மனிதன் சாஸ்திரத்தினாலும் உலகத்தினாலும் எல்லாவற்றையுமறிந்து மனுஷ்யஜன்மத்தை அஸாரம்போலப் பார்க்கிறானோ அவன் எல்லாவிதத்தாலும் முக்தனே. கிருஹஸ்தாசரமத்திலிருந்து மோக்ஷத்தில் உன்னுடைய புத்தியானது தளர்ச்சியில்லாமல் செய்யப்படுமானால் என்னுடைய இந்த வார்த்தையைக்கேட்டு முக்தன்போல நடக்கக்கடவாய்' என்று சொன்னார். அப்பொழுது அந்த ஸகரமகாராஜன் அந்தக்கருடபகவானுடைய வார்த்தையை நன்றாகக்கேட்டு [1]மோக்ஷத்தையிலுண்டான குணங்களோடிருந்து பிரஜைகளையும் பரிபாலனஞ்செய்தான்" என்று சொன்னார்.

---

[1] ஞானத்தினாலுண்டான குணங்களோடு' என்பது பழையவுரை.

## இருநூற்றுத்தொண்ணூற்றைந்தாவது அத்யாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



### (உசநஸ் சுக்ரரென்னும் பெயரை அடைந்தகதை.)

யுதிஷ்டிரர், "ஐயா! என்னுடைய மனத்தில் எப்பொழுதும் இந்த உற்சாகம் இருக்கிறது. கௌரவர்களுக்குப் பிதாமஹரே! ஆகையால், நானும் உம்மிடமிருந்து கேட்கவிரும்புகிறேன். தேவரிஷியும் கவியும் மிக்க புத்திமானுமாகிய உசநஸ் என்பவர் ஏன் எப்பொழுதும் அஸுரர்களுக்குப் பிரியத்தைச் செய்கிறவரும் தேவர்களுடைய அனிஷ்டத்தில் சந்தோஷமுடையவருமானர்? அளவற்ற பராக்ரமமுடைய அஸுரர்களுக்குப் பலத்தை எதற்காக விருத்தி செய்தார்? அஸுரர்கள் ஏன் அவரால் எப்பொழுதும் தேவ சரேஷ்டர்களோடு வைரமுள்ளவர்களாகச் செய்யப்பட்டார்கள்? தேவர்களின் காந்திபோன்ற காந்தியுள்ள அந்த உசனஸ் எப்படி சுக்ரராயிருப்பதை அடைந்தார்? அவர் எப்படிச் செல்வப்பெருக்கையுமடைந்தார்? இவை எல்லாவற்றையும் எனக்குச் சொல்லும். மிக்க ஒளியுள்ள அவர் ஏன் ஆகாயத்தின் நடுவோடே போகிறதில்லை? ஓ! பிதாமஹரே! இதை முழுதும் நான் கேட்கவிரும்புகிறேன்" என்று வினவ, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"குற்றமற்றவனே! அரசனே! என்னுல் புத்திக்குத் தக்கபடி முன்கேட்கப்பட்ட இவையெல்லாவற்றையும் உள்ளபடி ஜாக்கிரதையுடன் கேள். ப்ருகுவம்சத்தில் பிறந்தவரும் பூஜ்யரும் உறுதியான விரதத்தை உடையவருமான இந்தமுனிவர் முன் நடந்த ஒரு காரிய நிமித்தமாகத் தேவர்களுக்கு அப்பிரியத்தைச் செய்தார். அளவிறந்த செல்வமுடையவனும் ராஜனென்று பெயருடையவனும் யக்ஷர்களுக்கும் ராக்ஷதர்களுக்கும் அதிபதியும் எப்பொழுதும் பிரபுத்தன்மையுள்ளவனும் பொக்கசத்திற்கும் உலகத்திற்கும் பிரபுவுமான குபேரனென்னெருருவனிருக்கிறான். ஒரு ஸமயம், யோகத்தில் ஸித்தி பெற்ற அந்த மகாமுனிவர் குபேரனுடைய சரீரத்தினுள்புகுந்து தனபதியான அந்தத் தேவனை யோகத்தால் ஒன்றுமறியாமல் மயக்கித் தனத்தை அபகரித்தார். தனத்தைக் கவர்ந்தவுடனே குபேரன் முன்போல ஸுகத்தையடையவில்லை. துக்கமுற்ற அவன் கோபங்கொண்டு தேவர்களுள் மிகச்சிறந்த ஈசவரரை அடைந்தான். அப்பொழுது அளவற்ற பராக்ரமமுடையவரும் தேவச்ரேஷ்டரும் ஸம்

ஸாரரோகத்தை விலக்குகிறவரும் சாந்தரும் அனேகம் ரூபங்களு ளுடையவருமான சங்கரரிடம், 'யோகத்தையே உருவமாகக் கொண்ட கவியினலே என்னைத்தடுத்து என்னுடைய தனம் அபகரிக்கப்பட் டது. மிக்க தவமுடைய அவர் யோகத்தினல் என்னை மயக்கி வசப் படுத்திக்கொண்டு வெளியிலும் போய்விட்டார்' என்று விஜ்ஞாபனம் செய்தான். ஓ! அரசனே! மகாயோகியான பரமேச்வரர் இதைக் கேட்டு உடனே கோபத்தையடைந்து கண்கள் மிகவும் செந்நிற மடையச் சூலத்தையேந்தி நின்ருர். சிறந்த ஆயுதத்தை எடுத்துக் கொண்டு, 'அவன் எங்கே? அவன் எங்கே?' என்று சொல்லினர். அந்த உசநஸ் மகாயோகியும் மஹாத்மாவுமான அவருடைய அப்ப டிப்பட்ட கோபத்தையும் செய்ய நினைத்திருக்கிற காரியத்தையும் அறி ந்து அவருக்குத் தூரத்திலிருந்தார். பிறகு, பிரபுவான சங்கரர் (என்னுடைய) போக்கையும் வரவையும் இருப்பையும் அறிவார் என்று உக்கிரமான தவத்தோடுகூடிய மஹாத்மாவான மஹேச் வரரை நினைத்து யோகசித்தியடைந்த மனத்தையுடைய கவியானவர் ஈச்வரருடைய சூலத்தின் முனையில் காணப்பட்டார். அப்பொழுது தவத்தில் ஸித்திபெற்ற அந்தச் சுக்ரர் உடனே ஆயுதபாணியான ஈச் வரரால் அறியப்பட்ட ஸ்வரூபத்தையுடையவரானர். தேவர்களுக் கெல்லாம் தலைவரான பரமேசவரர் அறிந்து சூலத்தையும் கையினல் வளைத்தார். பிறகு, அளவற்ற பலமுடைய பாணியினலே சூலமானது வளைக்கப்பட்டவுடன் உக்கிரமான ஆயுதத்தையுடைய பிரபுவானவர் சூலத்தைப் பார்த்து [1]பிநாகமென்று சொன்னர். [2]தேவசரேஷ் டரும் உமாபதியுமான ஈசர் பாணியின் மத்தியை அடைந்த அந்தச் சுக்கிரரைப் பார்த்து வாயைத்திறந்து கையினல் (அவரை) வாயில் மெல்லப்போட்டுக்கொண்டார். பிரபுவான சுக்கிரர், உடனே பரமேச் வரருடைய உதரத்தில் பிரவேசித்தார். மஹாத்மாவான இந்தப்பிருகு நந்தனர் அந்த உதரத்தில் ஸஞ்சரித்தார்" என்று சொன்னர்.

யுதிஷ்டிரர், "ஓ! அரசரே! மிக்ககாந்தியுள்ள சுக்ரர் தேவதே வரும் புத்திமானுமான அந்த ஈசருடைய உதரத்தில் எதற்காக ஸஞ் சரித்தார்? பிறகு என்ன செய்தார்?" என்று கேட்க, பீஷ்மர் சொல் லத்தொடங்கினர். "அரசனே! முன்காலத்தில் பெரியவிரதமுடைய

1 'பாணி' என்கிறபெயரில் முதல் எழுத்தான பகாரத்தை இகாரம் சேர்த்தும், 'வளைத்தார்' என்கிற அர்த்தமுடைய, 'அநாமயத்' என்கிற பதத் தின் இரண்டாவது எழுத்தான 'நா' என்பதையும் 'க' என்கிற அதிக எழுத்தையும் சேர்த்தும் பிநாகம் என்பது. 2 வேறுபாடம்.

அந்த ஈச்வரர் ஜலத்தின் மத்தியையடைந்து பத்துலக்ஷம்கோடி வருஷங்கள் கட்டைபோல அசையாமலிருந்தார்; செய்யவரிய தவத்தைச் செய்துவிட்டுப் பெரிதான மடுவிலிருந்தும் வெளியில்வந்தார். அப்பொழுது தேவர்களுக்கெல்லாம் மேலான தேவரான பிரம்மா அவரிடம் வந்தார். அழிவற்ற ப்ரம்மா தவத்தின் விருத்தியையும் க்ஷேமத்தையும் வினவினர். விருஷபத்துவஜரான ஈச்வரரும், 'தவமானது நன்றாக அனுஷ்டிக்கப்பட்டது' என்று சொன்னர். பிறகு, அந்தச் சங்கரர் அவருடைய சேர்க்கையினால் மேன்மையென்றும் நினைத்தார். மகாராஜனே! சிறந்த அறிவுள்ளவரும் அறிபடாத ஸ்வரூபத்தையுடையவரும் எப்பொழுதும் ஸத்யத்திலும் தர்மத்திலும் பற்றுள்ளவரும் மகாயோகியும் வீரியமுள்ளவருமான அந்த ஈச்வரர் அப்படிப்பட்ட தவத்தினாலும் தனத்தினாலும் நிறைந்து மூவுலகங்களிலும் விளங்கினர். பிறகு, யோகத்தையே உருவமாகக் கொண்ட பிநாகியானவர் தியானயோகத்தை அடைந்தார். அப்பொழுது சுக்கிரர் மிகவும் வருத்தமுற்று உதரத்தில் மறைந்தார். மகாயோகியான அவர் அங்கிருந்துகொண்டே தேவரான ஈசனை ஸ்தோத்ரமும் செய்தார். அவர் வெளியில் வர விரும்பியும் அந்த ஈசரால் தடுக்கப்பட்டார். பகைவர்களை நாசம் செய்பவனே! பிறகு, மகாமுனிவரான சுக்ரர் அப்படி உதரத்திலிருந்துகொண்டே, 'எனக்கு அனுக்ரகம் செய்யவேண்டும்' என்று அடிக்கடி சொன்னர். தேவச்ரேஷ்டராகிய மஹாதேவர், எல்லாத்துவாரங்களையுமடைத்துக்கொண்டு அவரை நோக்கி, "சிசனத்தால் வெளியில்போ' என்று சொன்னர். எங்கும் மறைக்கப்பட்ட அந்த முனிவர் அந்தத்துவாரத்தைக் காணமல் தேஜஸினால் எரிக்கப்பட்டு இங்கும் அங்கும் சுற்றினர். (முடிவில்) அவர் சிச்னத்தால் வெளிவந்து சுக்கிரத்தன்மையை அடைந்தார். அந்தக்காரியத்தால் ஆகாயத்தின் நடுவால் போகவில்லை. அதனாலேயே மஹாமுனிவரான சுக்ரர் தேவர்களிற்சேராமல் இந்திரனுடையபலத்தின் குறைவிற்காக அஸுரர்களுக்குப் புரோகிதரானர். வெளியில் வந்தவரும் தேஜஸினால் ஜ்வலிக்கிறவருமான அவரைப் பார்த்துவிட்டு ஈசவரர் கோபம்மேலிட்டுச் சூலத்தைக்கையிலேந்திக் கொண்டு நின்றார். (அப்பொழுது) தேவியானவள் கோபத்தையடைந்தவரும் தனக்குப் பதியுமான அந்தப்பசுபதியைத் தடுத்தாள். தேவியினாலே சங்கரரானவர் தடுக்கப்பட்டபொழுது சுக்ராசாரியர் தேவிக்குப் புத்திரத்தன்மையை அடைந்தார். தேவியானவள், 'எனக்குப் புத்திரத்தன்மையை அடைந்த இவன் உம்மால் கொல்லத்தக்கவனே

அல்லன். தேவரான் உம்முடைய உதரத்திலிருந்து வெளிவந்த ஒருவனும் நாசத்தையடையத் தக்கவனல்லன்' என்று சொன்னாள். அரசனே! பிறகு, சங்கரர் தேவியினால் சந்தோஷத்தையடைந்து சிரித்துக்கொண்டு, 'இவன் இஷ்டப்படி போகட்டும்' என்று பலமுறை சொன்னார். பிறகு, புத்திமானும் மகாமுனிவருமாகிய சுக்ராசாரியர் வரத்தையளிக்கின்றவரான தேவரையும் தேவியான உமையையும் நமஸ்கரித்து விரும்பிய இடத்தையடைந்தார். ஐயா! பாரதச்ரேஷ்டனே! நீ என்னிடம்கேட்ட மஹாத்மாவான பார்க்கவருடைய இந்தச் சரித்திரமானது உனக்குச் சொல்லப்பட்டது" என்று சொன்னார்.

---

## இருநூற்றுத்தொண்ணூற்றொருவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி)

—••✥✥✥••—

(பராசரகீதை; ச்ரேயஸுக்குரியகாரணங்கள்.)

யுதிஷ்டிரர், "நீண்ட கைகளையுடையவரே! இனி எது [1]ச்ரேயஸோ அதை எனக்குச் சொல்லும். ஓ! பிதாமஹரே! அமிருதத்தைப்போல உம்முடைய வார்த்தையைக் கேட்பதில் போதுமென்ற எண்ணம் உண்டாகவில்லை. ஓ! புருஷர்களில் மிகவும் சிறந்தவரே! புருஷனானவன் எந்தச் சுபகர்மத்தைச் செய்து இகத்திலும் பரத்திலும் சிறந்த ச்ரேயஸையடைவானோ அதைச் சொல்லும்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"இந்த விஷயத்தில் முன் நடந்தபடி உனக்குச் சொல்லுவேன். பெரும்புகழுள்ள ஜனகராஜர் மஹாத்மாவான பராசரரை நோக்கி, 'இகலோகத்திலும் பரலோகத்திலும் ஸகலப்பிராணிகளுக்கும் எது நன்மையைத் தருவதோ, எது அறியவேண்டியதாகுமோ அதை நீர் எனக்குச் சொல்லும்' என்று கேட்டார். அப்பொழுது தவத்தையுடையவரும் எல்லாத்தர்மானுஷ்டானத்தையுமறிந்தவருமான அந்த முனிவர் அரசரிடம் அனுக்ரகபுத்தியுடன் பின்வருமாறு சொல்லலானார். '(தன்னால்) செய்யப்பட்ட தர்மமே இந்தலோகத்திலும் பரலோகத்திலும் நன்மையைத் தருவது. வித்வான்கள் சொல்லியபடி அதைப்பார்க்கிலும் மேலானது இல்லை. "மனிதன் தர்மத்தையனுஷ்டித்து ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்படுகிறான்' என்று

---

[1] நன்மை.

வித்வான்கள் சொல்லுகின்றனர். ஓ! அரசர்களில் மிகச்சிறந்தவனே! தேகிகளுக்குத் தர்மரூபமான கர்மவிதியானது (ஏற்பட்டிருக்கிறது.) அதனிமித்தம் இவ்வுலகத்தில் அவர்கள் ஆச்ரமத்தோடு கூடியவர்களாகித் தங்கள் கர்மங்களைச் செய்கின்றார்கள். ஐயா! இந்த உலகத்தில் நான்குவிதமான ஜீவனோபாயம் விதிக்கப்பட்டிருக்கின்றன. மனிதர்கள் எந்த ஜீவனோபாயத்திலிருக்கின்றார்களோ அதுவும் காமத்தால் நடக்கின்றது. நானாவிதமான முறைகளால் புண்ணிய பாபகர்மத்தைச செய்து பாஞ்சபௌதிகமான சரீரங்களில் சேர்க்கப்பட்ட பிராணிகளுக்குப் பலவிதமான கதியானது ஏற்படுகிறது. பாத்திரமானது ஸ்வர்ணமயமாகவும் வெள்ளிமயமாகவும் பூசப்படுகிறது போலப் பிராணியானது பூர்வகர்மங்களின் வசத்தையடைந்து (அவைகளால்) பூசப்படுகிறது. விதையில்லாமல் ஒன்றும் உண்டாகிறதில்லை. (கர்மாவைச்) செய்யாமல் ஸுகமானது உண்டாகிறதில்லை. மனிதன் தேகநாசத்தையடைந்தபிறகு, ஸுக்ருதங்களால் ஸுகத்தை அடைகிறான். ஐயா! [1]தெய்வத்தை நான் பார்க்கவில்லை. தெய்வத்திற்குப் பிரமாணமில்லை. தேவர்களும் கந்தர்வர்களும் தானவர்களும் பூர்வகர்மவாஸனையினாலன்றோ மிகவும் ஸித்தியை அடைந்திருக்கின்றார்கள்? ஜனங்கள் இறந்துவிடுகிறார்கள். செய்யப்படாதகர்மத்தை எப்பொழுதும் நினைக்கிறதில்லை. அவர்களோ அந்தக்கர்மாவினுடைய பயனையடையும்பொழுது நான்குவிதமான கர்மாவையும் நினைக்கிறார்கள். உலகவ்யவஹாரத்தையடுத்த சப்தமே மனத்தின் சமாதானத்திற்காக வேதத்தையடுத்ததாகச செய்யப்பட்டிருக்கிறது. ஐயா! இது பெரியோர்களுடைய சிக்ஷையில்லை. (மனிதன்) [2]நேத்திரத்தினாலும் மனத்தினாலும் வாக்கினாலும் கிரியையினாலும் செய்கிற நான்குவிதமான கர்மாவின்பயனை (மறுபடி) அடைகிறான். ஓ! அரசனே! (மனிதன்) புண்யத்தையோ பாவத்தையோ இடைவிடாமலும் கலந்ததாகவும் அடைகிறான். இந்தக்கர்மத்திற்கு நாசம் இல்லை. அப்பா! ஒருஸமயம் ஸம்ஸாரத்தில் முழுகின மனிதனுடைய புண்யமானது (அவன்) துக்கத்தையனுபவித்து விடுபடும் வரையில் [3]அசைவற்றது போலிருக்கின்றது. பிறகு, (அனுபவத்தால்) துக்கநாசத்தைச்செய்துவிட்டுப் புண்யகர்மத்தின் பயனை அனுபவிக்கின்றான். புண்ணியத்

---

1 மீமாம்ஸகமதம்.

2 மற்ற இந்திரியங்களையும் உபலக்ஷணமாகக் கொள்ளவேண்டும்.

3 பயனை அளியாமல் உலைக்கூடம்போலிருப்பது கூடஸ்தம், அதுபோல இருப்பதென்றால் பயனளியாமலிருக்கின்றது.

தின் பலன் முடிந்தபிறகு பாவத்தை அனுபவிக்கின்றான். ஓ! அரசனே! அதை அறியக்கடவாய். அடக்கம், பொறுமை, தைர்யம், பலம், ஸந்தோஷம், உண்மையுரைத்தல், லஜ்ஜை, கொல்லாமை, சோக மில்லாமை, ஸாமர்த்தியம் என்னுமிவைகள் ஸுகத்தைக் கொடுக்கின்றன. புண்யத்திலும் பாவத்திலும் பிராணியானது நிலைத்திராது. (ஆகையால்) வித்வானானவன் எப்பொழுதும் மனத்தை [1]ஸமாதானஞ் செய்வதில் முயற்சிசெய்யவேண்டும். இவன் வேறொருவனுடைய புண்யத்தையும் பாபத்தையும் அடைகிறதில்லை. எவ்விதக் கர்மத்தைச் செய்கிறானோ அவ்விதக்கர்மபலனை அடைகிறான். மனிதன் ஸுக துக்கங்களுக்குக் காரணமான புண்ணிய பாவங்களைச் செய்துவிட்டு வேறு வழியில் செல்லுகின்றான். பூமியில இவனுடன் சேர்ந்த ஜனங்களெல்லாரும் வேறுவழியினாலேயே போகின்றனர். மனிதன் பிறருடைய எந்தக்காரியத்தை வெறுப்பானோ அதைத் தான் செய்யக்கூடாது. அப்படி வெறுப்பவன் அவ்விதக் காமத்தைசசெய்தால் பரிஹாஸத்தை அடைவான். ஓ! அரசனே! பயமுள்ளவனான க்ஷத்ரியனும் எல்லாவற்றையும் பக்ஷிக்கின்ற பிராம்மணனும் (தனலாபத்தில) இச்சையில்லாத வைசியனும் சோமபேறியான சூத்ரனும் ஒழுக்கமில்லாத வித்வானும் ஆசாரக்குறைவுள்ள உயர்குலத்தவனும் ஸத்தியத்திலிருந்து தவறினவனும உத்ஸாகமுள்ள பிராம்மணஸ்திரீயும் ஆசையுள்ளயோகியும் தனக்காகச் சமையல செய்கின்றவனும் (ஸபையில்) பேசும்மூடனும் அரசனில்லாத ராஜ்யமும யோகமில்லாமல் பிரஜைகளிடம் ஸ்னேகத்தைவிட்டவிரக்தனும ஆகிய இவர்களெல்லோரும் துக்கிக்கப்படத்தக்க நிலைமையை அடைகின்றார்கள்.

---

## இருநூற்றுத்தொண்ணூற்றேழாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

(பராசரகீதை; ச்ரேயஸுக்குரிய காரணமுதலியன.)

[2] எந்த மனிதன் இந்திரியவிஷயங்களாகிற குதிரைகளையுடைய மனத்தின் சங்கற்பமாகிய தேரையடைந்து ஞானத்தாலுண்டான

---

1 ஓரிடத்திலேயே நிலைக்கச்செய்தல்.

2 'விஷயங்களாகிற குதிரைகள் சங்கற்பமாகிற தேரிலிருக்கிற மனிதனைக் கண்டபடி இழுத்துக்கொண்டு போய்விடும். அறிவாகிறகடிவாளத்தைக் கையிற்பிடித்துக்கொண்டு ஸாவதானமாகச் செல்லவேண்டும்' என்பது.

வழிவாளங்களால் செல்லுகின்றனோ அவன் புத்திமான். [1]ஜீவனமில்லாதவனும் (ஸேவையை) அடுத்த மனமுள்ளவனுமாயிருப்பவனுக்குப் பிராம்மணன் கையால் நிறைவேறின ஸேவையானது புகழப்படுகின்றது. ஸமானமாயிருக்கிற ஒருவருக்கொருவரிடத்திலிருந்து உண்டாவது சிலாகிக்கப்படுகிறதில்லை. ஓ! அரசனே! மனிதனானவன் அடையமுடியாத ஆயுளை அடைந்து (வீணாகக்) கழிக்கக்கூடாது. புண்ணியகர்மத்தினால் மேன்மையின் பொருட்டு முயற்சிசெய்யவேண்டும். வர்ணங்களினின்றும் நழுவினவன் மேன்மையையடைகிறதில்லை. மேன்மையையடைந்து ராஜஸமான கர்மத்தையனுஷ்டிக்கிற மனிதன் புண்ணிய கர்மத்தாலுண்டாகின்ற வர்ணத்தின் மேன்மையை அடைகிறதில்லை. துர்லபமான வர்ணமேன்மையை அடையாமல் பாவச் செய்கையால் தன்னைக் கெடுத்துக்கொள்வானல்லவா? அறியாமையால் செய்யப்பட்ட பாவத்தைத் தவத்தினாலேயே போக்கவேண்டும். தன்னால் (அறிந்து) செய்யப்பட்ட பாவச்செய்கையானது பாவத்தையே கொடுக்கின்றது. ஆகையால், துக்கமாகிறபயனை அளிக்கின்ற தீவினையைப் பற்றக்கூடாது. புத்திமானானவன் பெரிய பயனுள்ளதாயினும் பாவஸம்பந்தமுள்ள காரியத்தை, பரிசுத்தனாயிருப்பவன் [2]ராஜஸனாயிருப்பவனை எப்படி ஆச்ரயிக்கக்கூடாதோ அப்படி ஆச்ரயிக்கக்கூடாது. பாவச்செய்கைக்குப் பெரியகஷ்டத்தைப் பயனாக நினைக்கிறேன். அந்தப் பாவத்திலிருந்து திரும்பினவனுக்குச் சரீரமே விருப்பமாயிருப்பதில்லை. ஒழிவுண்டாகாத அற்பபுத்தியுள்ள மனிதனுக்கும் மரணகாலத்தில் மிகப்பெரிய பச்சாத்தாபமானது உண்டாகிறது. ஓ! அரசனே! சுத்தமானவஸ்திரமானது (அசுத்தமானால்) முயற்சியால் சுத்தம் செய்யப்படுகிறது. கறுப்பு வஸ்திரமோ சுத்தம் பண்ணப்படுகிறதில்லை. [3]பாவமும் இவ்விதமென்பதை என்னிடமிருந்து அறியக்கடவாய். புத்திபூர்வமாகவே பாவத்தைச் செய்துவிட்டுப் பிராயச்சித்தத்தைச் செய்வதற்குச் சுபகர்மத்தையே அனுஷ்டிக்கின்ற மனிதன் இரண்டையும் தனித்தனி

---

1 'த்விஜ! யோகத்தை அவலம்பிக்காத மனமுள்ளவனும் விருத்தியற்றவனுமானவனுக்கு ஞானியிடத்திலிருந்து ஏற்பட்டபக்திமார்க்கமானது புகழப்படுகிறது. தனக்குச் சமமானவனிடத்திலிருந்து உண்டானால் புகழப்படுகிறதில்லை' என்பது பழையவுரை.

2 'குசலிநம்' என்பது மூலம்; 'ஒருவிதசண்டாளன்' என்பது பழைய உரை; 'விடனை' என்பர் சிலர்.

3 'அஜ்ஞானத்தால் செய்து பச்சாத்தாபமுள்ளவனுக்குப் பரிகாரமுண்டு" என்பது.

யாக அனுபவிப்பான். சாஸ்திரத்தின் வசனத்தினாலே பிரம்மவித்துக்களான பிராம்மணர்கள், 'அறியாமையால் செய்யப்பட்ட ஹிம்ஸையை [1]அஹிம்ஸையானது விலக்குகிறது' என்று சொல்லுகிறார்கள். அப்படிப்போல, 'இவன் விரும்பிச்செய்த ஹிம்ஸையை அஹிம்ஸையானது விலக்குகிறதேயில்லை' என்று பிரம்மசாஸ்திரத்தை அறிந்தவர்களும் பிரம்மவாதிகளுமான பிராம்மணர்கள் சொல்லுகின்றார்கள். நானோ பாவமில்லாமல் அறிந்து செய்யுங் காரியத்தைக் குணமுள்ளதாகக் கருதுகிறேன். ஏனெனில், ஸூக்ஷ்மமாயிருந்தாலும் மனத்துடன் விசாரித்துப் புத்தி பூர்வமாய்ச செய்யப்பட்ட கர்மங்கள் அதற்குத்தக்கபடி பயனையளிக்கின்றன. ஓ! தர்மத்தையுணர்ந்தவனே! கர்மமானது அறியாமல் நித்தியமாக அனுஷ்டிக்கப்பட்டு விருத்தியடைந்ததாயிருந்தாலும் அற்பப்பயனுள்ளதாகின்றது. ஆகையால், உக்கிரமானகர்மம் வேண்டாம். தேவதைகளாலும் முனிவர்களாலும் செய்யப்பட்ட கர்மங்களைத் தர்மாத்மாவானவன் செய்யக்கூடாது; கேட்டு நிந்திக்கவும் கூடாது. ஓ! அரசனே! எவன் தன்னுடைய சக்தியை மனத்தினால் ஆலோசித்துத் தெரிந்து சுபகர்மத்தைச செய்கின்றானோ அவன் மங்களங்களைப் பார்க்கின்றான். புதுக்கலயத்தில வைக்கப்பட்ட ஜலமானது குறைந்துவிடுகின்றது. பழையகலயத்தில் வைக்கப்பட்டால் முன்போலவே குறைவின்றியிருக்கிறது. ஜலத்தோடுகூடிய அதிலேயே விடப்பட்ட வேறு ஜலம் [2]விருத்தியை அடைகின்றது. ஓ! அரசனே! அதுபோல இவ்வுலகத்தில் புத்தி பூர்வமாகச் செய்யப்பட்ட கர்மங்கள் (குறையாமல்) ஸமமும் அதிகப் புண்ணியமுமாகின்றன. அரசன் பகைவர்களையும் வணங்காதவர்களையும் ஜயிக்கவேண்டும். மன்னுயிர்களை நன்றாகக் காக்கவேண்டும். அநேக யஜ்ஞங்களால் அக்னியைப் பூஜிக்கவேண்டும். முடிவிலாவது நடுவிலாவது வனத்தையடைந்து வஸிக்கவும் வேண்டும். மனிதன் அடக்கமுள்ளவனும் தர்மசீலனுமாயிருந்து மற்றப் பிராணிகளையும் தன்னைப்போலப் பார்க்கவேண்டும். ஓ! அரசனே! பெரியோர்களைச சத்தியத்தோடும் ஒழுக்கத்தோடும் தன் சக்திக்குத் தக்கபடி ஸுகமாகப் பூஜிக்கவேண்டும்.

---

1 இனி ஹிம்ஸை செய்யக்கூடாதென்கிற நிச்சயத்துடனிருத்தல்.
2 மூன்று சொற்கள் விடப்பட்டன.

## இருநூற்றுத்தொண்ணூற்றெட்டாவது அத்யாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)

(பராசரகீதை; இயன்றவரை தர்மஞ்செய்வதே மேன்மைக்குக் காரணமென்னும் விஷயத்தில் சிலரை உதாகரித்தது.)

யார் யாருக்கு உபகரிக்கிறான்? யார் யாருக்கு (எதை)க்கொடுக்கிறான்? மனிதன் தனக்காகத் தானாகவே எல்லாக் கர்மத்தையும் செய்கிறான். கௌரவமிழந்தவனை ஒரே உதரத்தில் பிறந்த ப்ராதாவாயிருந்தாலும் ஸ்நேகத்தைப் பாராட்டாமல் தள்ளிவிடுவான். தன்னைச்சேராத மற்றவனைத் தள்ளக்கேட்பானேன்? சிறந்தவனுக்குத் தானஞ்செய்வதும் சிறந்தவனிடத்திலிருந்து பெற்றுக்கொள்வதும் சமானமாயிருக்கின்றன. அவைகளில் பிராம்மணனுக்குக் கொடுப்பவனுடைய அந்தத் தானமானது மிகவும் புண்ணியமாயுள்ளது. நான்குவர்ணங்களும நியாயமாகக்கிடைத்த தனத்தை நியாயமாகவே விருத்திசெய்து தர்மத்திற்காக முயற்சியுடன் நன்கு காக்கவேண்டுமென்பது உறுதி. தர்மத்தைவிரும்புகிறவன் ஹிம்ஸையுள்ள கர்மத்தினால் தனத்தைத் தேடக்கூடாது. தனவிருத்தியைக்கருதாமல் சக்திக்குத்தக்கபடி எல்லாக்கார்யங்களையும செய்யவேண்டும். சுத்தமான குளிர்ந்தஜலத்தையாவது அக்னியில்சுடவைத்த ஜலத்தையாவது பசியால்வருந்தின அதிதிக்குச சக்திக்குத்தக்கபடிகொடுப்பவன் பயனையடைகிறான். மகாத்மாவான ரந்திதேவன் உலகத்தில் விரும்பினசித்தியை அடைந்தான். அவன் கனிகளாலும் இலைகளாலும் கிழங்குகளாலும் முனிவர்களைப் பூஜித்துவந்தான். அவ்விதமான பழங்களாலும இலைகளாலுமே சைப்யனென்னும் அரசனும் [1]மாடாஹுடன்கூடின சூரியனைச் சந்தோஷிக்கசெய்தான். அதனால் அவன் மேலானஸ்தானத்தை அடைந்தான். மனிதன், தேவதைகள் அதிதிகள் வேலைக்காரர்கள் பித்ருக்கள் தான் ஆகிய இவர்களுக்குக் கடனுள்ளவனாகப் பிறக்கிறான். ஆகையால், தன்னுடையவேதத்தை ஓதுவதால் மகரிஷிகளினிடமிருந்தும் யாகத்தினால் தேவர்களிடமிருந்தும் சிராத்ததானத்தினால் பிதருக்களிடமிருந்தும் பூஜையினால் அதிதிகளிடமிருந்தும் யாகத்தில்மீதியான ஆகாரத்தினாலும் பாலனத்தினாலும் தன்னிடமிருந்தும் கடனில்லாமலிருத்தலை அடையவேண்டும்.

---

1 ஸூர்யனுடைய பக்கத்திலுள்ளவன்.

ப்ருத்யவர்க்கத்திற்கு முதலிலிருந்து முறையாக எல்லாக் காரியத்தை யும் செய்யவேண்டும். தனமில்லாதவர்களும் முயற்சியால் நன்கு ஸித்தியடைந்திருக்கின்றனர். முனிவர்கள் அக்கினியில் நன்குஹோமஞ்செய்து ஸித்தியடைந்தார்கள். ஓ! மஹாபாஹுவே! [1]ரிசீகரின் புத்திரனான சுநசசேபன் யஜ்ஞத்திலபாகமுடையவர்களான தேவர்களை ரிக்குக்களால் துதித்து விசுவாமித்ரருக்குப் புத்திரனுதலை அடைந்தான். வீரியமாயிருப்பதையடைந்த உசநஸ் தேவியைத் துதித்துத் தேவதேவருக்கு அருள்வரசசெய்து ஒளி நிரம்பப்பெற்று ஆகாயத்தில் சந்தோஷிக்கிறார். அஸிதர், தேவலர், நாரதபர்வதர்கள், கக்ஷீவான், ஜமதகனியின் புத்திரரான பரசுராமர், மனோவசமுள்ள தாண்டியர், வஸிஷ்டர், ஜமதகனி, விசவாமித்ரா, அத்ரி, பாத்வாஜர், ஹரிசமசரு, குண்டதாரர், சருதச்ரவஸ் இந்தமஹரிஷிகள் ஸமாதியடைந்து ரிக்குக்களாலே விஷ்ணுவைத்துதித்துத் தவத்தினலே புத்திமானை அவருடைய அருளைப்பெற்று ஸித்தியை அடைந்தார்கள். தாழ்ந்தவர்களும் சிறநத அவரையே துதித்து மேன்மையை அடைந்தாாகள். இவ்வுலகில் கெடட செய்கையைச செயது மேன்மையைத் தேடக்கூடாது. தாமத்தால வந்த அர்த்தங்கள் ஸத்யமானவை. அதாமததால வந்தவைகளை நிநதிக்கவேண்டும. உலகத்தில் சாசுவதமான தாமத்தைத தனதநில் விருப்பத்தால தளளக்கூடாது. ஓ! ராஜசரேஷ்டனே! பிரபுவே! எலலாவேதங்களுமமூன்றுஅக்னிகளிலிருக்கின்றன. ஆதலால அக்னியை ஆதானஞ்செய்தாதர்மாத்மாவே புண்ணியஞ்செய்கின்றவாகளில உத்தமன். அனுஷ்டானம் குறையாமலிருக்கிற அந்தப பிராமமணன்தான் ஆஹிதாகனியாயுள்ளவன். அனுஷ்டானமில்லாதவன் அநாஹிதாக்னியாயிருப்பது சிறந்தது. அனுஷ்டானமில்லாத அக்னிஹோத்ரம சிறந்ததன்று. ஓ! நரசிரேஷ்டனே! அக்னியும் ஆத்மாவும் பெறற மாதாவும பிதாவும் குருவும் அவரவர்களுக்குத் தக்கபடி உபசரிக்கத்தக்கவர்கள். எவன் அபிமானத்தைவிட்டுப் பெரியோர்களை ஸேவித்து வித்வானும் காமமற்றவனுமாகி ப்ரீதியுடன் (உலகத்தைப்) பார்க்கின்றானே, ஸாமர்த்தியமில்லாமல் தர்மத்துடன்கூடி (ஒரு பிராணிக்கும்) துன்பஞ்செய்யாமலிருக்கிறானே அந்த ஆரியன் நல்லோர்களால் பூஜிக்கப்படுகிறான்.

---

1 'மூலத்தில், 'அஜீகர்த்தஸுதன்' என்று இருக்கவேண்டும்' என்பது பழையவுரை.

## இருநூற்றுத்தொண்ணூற்றுரென்பதாவது அத்யாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)



(பராசரகீதை ; வர்ணதர்மங்கள்.)

சூத்ரஜாதிக்கு மூன்றுவர்ணங்களிலிருந்தும் ப்ரீதியுடன்கொடுக்கப்பட்ட ஜீவனமானது சிறந்ததென்று சொல்லப்பட்டிருக்கிறது. (அது அவர்களை) எப்பொழுதும் தர்மத்திற்சிறந்தவர்களாகச்செய்கின்றது. சூத்ரனுக்குத் தன்னுடைய தாதை மூதாதைதொட்டு நிலைத்த ஜீவனமில்லையானால் (முன்வர்ணத்தோர்களுடைய) பணிவிடையையே செய்யவேண்டும். வேறுவழியாக ஜீவனத்தைத் தேடக்கூடாது. எப்பொழுதும் எல்லாநிலைமைகளிலும் தர்மத்தையறிந்த ஸாதுக்களோடு சேர்ந்திருப்பதே சோபிக்கின்றது. அஸத்துக்களோடு சேர்க்கையானது விளங்காதென்பது என் எண்ணம். உதயபருவதத்திலுள்ள திரவியமானது (ஸூர்ய) ஸம்பந்தத்தால் விளங்குவதுபோலத் தாழ்ந்த ஜாதியிற்பிறந்தவனும் ஸத்துக்களின் சேர்க்கையால் விளங்குகிறான். வெளுப்பான வஸ்திரமானது எந்த வர்ணத்தினாலே சாயமேற்றப்படுகின்றதோ அந்த ரூபத்தை அடைகின்றது. அப்படியே இதையும் என்னிடமிருந்து அறியக்கடவாய். ஆகையால், குணங்களில் நீ பற்றுதல் செய்யவேண்டும்; ஒருபோதும் தோஷங்களில பற்றக்கூடாது. இவ்வுலகில் மரிக்கும் தன்மையுள்ள ஜனங்களுடைய மிகவும் சஞ்சலமாயிருக்கிற உயிரானது அநித்யமன்றோ? ஸுகத்திலேயோ துக்கத்திலேயோ இருந்துகொண்டு ஸமர்த்தனுகிச் சுபகர்மங்களையே தேடுகின்றவன் இவ்விடத்தில் மங்களங்களைப் பார்க்கிறான். பெரியபயனையுடையதாயினும் தர்மத்தினின்றும் விலகிய கர்மத்தைப் புத்திசாலியானவன் செய்யக்கூடாது. அது இம்மையில் ஹிதமாகச் சொல்லப்படுகிறதில்லை. சிறுபயனையளிப்பதாயினும் தர்மமுள்ள கர்மமானது சந்தேகமில்லாமல் செய்யத்தக்கது. அது மிகவும் ஸுகத்தைத் தரும். எந்த அரசன் ஆயிரம் பசுக்களையபகரித்து ரக்ஷிக்கமாட்டாமல் தானம் செய்வானே அந்த அரசன் (கோதானஞ் செய்தவனென்கிற) சப்தமாத்திரமான பயனையடைந்து திருடனாகிறான். பிரம்மாவானவர் முதலில் உலகங்களால் பூஜிக்கப்பட்டதாதாவைச் சிருஷ்டித்தார். தாதாவானவர் உலகங்களைத் தரிப்பதில் ஸமர்த்தரான (பர்ஜன்யரென்கிற) ஒரு புத்ரரைச் சிருஷ்டித்தார். வைச்யர் அவரைப் பூஜித்து மிகவும் செல்வப் பெருக்கைத்தரும் கிருஷிமுதலிய

வற்றைச் செய்யவேண்டும்; க்ஷத்ரியர்கள் காக்கவேண்டும்; பிராம் மணர்கள் டம்பமும் கபடமும் கோபமுமில்லாமல் ஹவ்யகவ்யங்களைச் செய்துகொண்டு அனுபவிக்கவேண்டும்; சூத்ரர் (பூமியின்) சுத்தி முதலானவற்றைச் செய்யவேண்டும். இப்படியானால் தர்மம் நசிக்கிற தில்லை. ஓ! அரசரிற்சிறந்தவனே!, தர்மம் நசியாமலிருந்தால் பிரஜை கள் ஸுகமுடையவைகளாகின்றன. பிரஜைகளுடைய ஸுகத்தால் ஸ்வர்க்கத்தில் தேவர்கள் ஸந்தோஷிக்கிறார்கள். ஆகையால், இவ் விதம் தர்மத்தால் ரக்ஷிக்கின்ற அரசனும், அத்யயனஞ்செய்கின்ற வேதியனும், பொருள்தேடுவதில் முயற்சியுள்ள வைசியனும், இந் திரியங்களை ஜயித்து எப்பொழுதும் பணிவிடைசெய்கின்ற சூத்ரனும் பூஜிக்கப்படுகின்றார்கள். அரசனே! இதற்கு வேறுவிதமாக நடப் பவன் தன்னுடைய தர்மத்திலிருந்தும் குறைவையடைகின்றான். மனவருத்தத்தோடு கொடுக்கப்பட்ட சோகிகளும் பெரும்பலனு டையவைகள். நியாயமாகச் சம்பாதிக்கப்பட்டவைகளும் ஆயிரக்கண க்காகக் கொடுக்கப்பட்டவைகளுமான மற்றத்திரவியங்களைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமா? பிராம்மணர்களைத் தினந்தோறும் பூஜித்து அவர்களுக்குத் தானஞ்செய்யும் அரசன் அதற்குத்தக்கபடி நிலைத்த பயனை அனுபவிப்பான். (ஏற்பவர்களின்) இருப்பிடம் சென்று கொடுப்பதைத் தர்மமானதும் சிலாக்யமுமாகச் சொல்லுகின்றார்கள். கேட்டபின் கொடுப்பதை மத்திய பலனைச் சொல்லுகின்றார்கள். அவமதிப்போடும் அச்ரத்தையோடும் கொடுக்கும் தானத்தை ஸத்ய வாதிகளான முனிவர்கள் அதமமாகச் சொல்லுகின்றார்கள். (ஸம் ஸாரஸாகரத்தில்) முழுகுகின்ற மனிதன் எப்பொழுதும் பலவித (உபாய)த்தால் தாண்டவேண்டும். (முக்தி கிடைக்குமோ கிடைக் காதோவென்கிற) ஸம்சயத்தினின்றும் விடுபடுமாறு முயற்சிசெய்ய வேண்டும். பிராம்மணன் அடக்கத்தினால் விளங்குகிறான். க்ஷத்ரி யன் வெற்றியினால் விளங்குகிறான். வைச்யன் தனத்தினால் விளங்கு கிறான். சூத்திரன் நித்யம் வேலைத்திறமையினால் விளங்குகிறான்.

---

மூந்நூறுவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

(பாரசரகீதை; முப்புரமெரித்த கதை.)

ப்ரதிக்ரஹத்தால் ஸம்பாதிக்கப்பட்ட தனங்கள் பிராம்மண னிடத்திலும் யுத்தத்தில் ஜயத்தால் ஸம்பாதிக்கப்பட்ட தனங்கள்

க்ஷத்ரியனிடத்திலும் நியாயத்தால் ஸம்பாதிக்கப்பட்ட தனங்கள் வைச்யனிடத்திலும் பணிசெய்தலால் சம்பாதிக்கப்பட்ட தனங்கள் சூத்ரனிடத்திலும் அற்பமாயிருந்தாலும் தர்மத்தில் உபயோகித்தால் பெரும்பயனுள்ளவைகளாக ச்லாகிக்கப்படுகின்றன. நித்யம் மூன்று வர்ணத்தார்களுக்கும் ஏவினதைச் செய்வோன் சூத்திரனாகச் சொல்லப்படுகிறான். பிழைப்பில்லாத பிராம்மணன் க்ஷத்ரிய தர்மத்தை யடைந்தும் வைச்யதர்மத்தை யடைந்தும் இழிவையடையான். எப்பொழுது பிராம்மணன் சூத்ர தர்மத்தை யுடையவனாவானோ அப்பொழுது இழிவையடைகின்றான். எப்பொழுது ஜீவனமார்க்கம் ஏற்படவில்லையோ அப்பொழுது சூத்ரனுக்கும் வியாபாரம் பசு மேய்த்தல் (கொல்லுதச்சு முதலான) சில்பவேலையால் ஜீவனம் ஆகிய இம்மூன்றும் விதிக்கப்படுகின்றன. உலகில் நிந்திக்கப்பட்டவையான நாடகத்தில் வேஷந்தரித்தலும் [1]பதுமையாட்டலும் மது மாமிசங்களை விற்பதும் உலோஹமும் தோல் இவற்றை விற்றலும் (தன் முன்னோர்களால் செய்யப்படாமல்) புதிதாகத் தான் செய்யக் கூடாது. முன்னோர்களால் செய்யப்பட்ட இந்தக் கர்மத்தையுடைய வம்சத்திலிருந்தும் இதைத் தள்ளுகிறவனுக்குப் பெரிதான தர்மம் என்று கேள்வி. உலகத்தில் ஸித்தியடைந்த புருஷன் செருக்குற்ற மனத்துடன் எந்தப் பாவகர்மத்தைச் செய்கிறானோ அதுவும் (பிறரால்) கொள்ளத்தகாததாகச் சொல்லப்படுகின்றது. (அப்படியுமேற்படுமோவென்றால்) அடங்கினவர்களும் தர்மத்தைப் பிரதானமாக வுடையவர்களும் நியாயமான தர்மத்தை அனுஸரித்தவர்களுமான ப்ரஜைகள் (குறையைத் தெரிவிக்கிற) திக்தண்ட ரூபமான சிக்ஷை யுடையவர்களாகப் புராணங்களில் சொல்லப்படுகிறார்களல்லவா? ஓ! அரசனே! மனிதர்களுக்கு எப்பொழுதும் இவ்வுலகில் தர்மந்தான் சிலாகிக்கப்படுகின்றது. உலகத்தில் தர்மத்தால் பெரியோர்களான மனிதர்கள் குணங்களையே அனுஷ்டிக்கின்றார்களல்லவா? ஓ! நரபதியே! அஸுரர்கள் அந்தத் தர்மத்தைப் பொறுக்கவில்லை. அப்பொழுது அவர்கள் வரவர விருத்தியடைந்து பிரஜைகளுள் புகுந்தார்கள். அந்தப் பிரஜைகளுக்குத் தர்மத்தை நாசஞ்செய்கின்ற கொழுப்பானது உண்டாயிற்று. அதன்பிறகு, கொழுத்தமனமுடைய அந்தப்பிரஜைகளுக்குக் கோபம் உண்டாயிற்று. குரோதத்தாலாக்ரமிக்கப்பட்ட பிரஜைகளுடைய நடக்கை லஜ்ஜையைக் கொடுக்கக் கூடியதாயிற்று. அரசனே! பிறகு, லஜ்ஜையும் நசித்தது. மோகம் உண்டாயிற்று. பிறகு,

1 'வேசிகளால் பிழைப்பது' என்றும் கொள்ளலாம்.

மோகத்தால் சூழப்பட்ட அந்தப்பிரஜைகள் ஒன்றையொன்றுவருத்தி (மோகத்தை) விருத்திசெய்துகொண்டு முன்போல ஸுகமாக (த்தர்மத்தை) ப்பார்க்கவில்லை. பிறகு, அந்தப் பிரஜைகளையடைந்து அந்தத் திக்தண்டமானது (அடக்குவதில்) காரணமாகவில்லை. பிறகு, பிரஜைகள் பிராம்மணர்களையும் தேவர்களையும அவமதித்து விஷயங்களை அனுபவித்தன. இந்தச் சமயத்திலேயே தேவர்கள் தேவர்களுக்கெல்லாம் சிரேஷ்டரும் தீரரும் அனேக ரூபமுடையவரும் குணங்களால் மேலானவருமான பரமேசுவரரைச் சரணமடைந்தார்கள். பட்டணத்தோடு ஆகாயத்தில் செல்லுகிறவர்களான அந்த அஸுரர்கள் மூவராயிருந்தும் அந்தப் பரமேசவரரால் தேவர்களால் விருத்தி செய்யப்பட்ட தேஜஸையுடைய ஒரேபாணத்தினாலே (அறுத்துப்) பூமியில் தள்ளப்பட்டார்கள். பயங்கரனும் பயங்கரமான பராக்ரமமுடையவனுமான அந்த அஸுரர்களுடைய தலைவன் மாத்திரம் இருந்தான். தேவர்களுக்குப் பயத்தையுண்டுபண்ணுகிற அவன் சூலபாணியான பரமேசுவரரால் கொல்லப்பட்டான். அவன் கொல்லப்பட்டபிறகு, மனிதர்கள் தங்கள் நிலைமையை அடைந்தார்கள். வேதங்களும் சாஸ்திரங்களும் பூர்வம்போலப் பிரவிருத்தித்தன. பிறகு, ஸ்வர்க்கத்தில் தேவர்களுடைய ராஜ்யத்தில் இந்திரனுக்கு அபிஷேகம்செய்து ஸப்தரிஷிகளும் மனிதர்களுடைய சிக்ஷையைநடத்துவதில் சேர்ந்துகொண்டார்கள். பிறகு, ஸப்தரிஷிகளுக்கு மேலே விப்ருதுவென்கிற அரசனும் சேர்ந்துகொண்டான். பிறகு, க்ஷத்ரியர்களும் ராஜ்யங்களில் தனித்தனி அரசர்களானார்கள். பெரிய குலங்களில் பிறந்தவர்களுக்கும் மிகவும் முன்னோர்களான முதியோர்களுக்கும் இருதயத்திலிருந்து அஸுரத்தன்மையானது விலகவில்லை. ஆகையால், தொடர்ச்சியாய் வந்த அந்த அஸுரத்தன்மையினாலேயே பயங்கரமான பராக்ரமத்தையுடைய அரசர்கள் அஸுரர்களுக்குரிய காரியங்களையே செய்தார்கள். அவைகள் அவர்களிடத்திலேயே இருந்தன. அவர்கள் அவைகளையே நிலைபெறவும் செய்தார்கள். இப்பொழுதும் மிகவும் புத்தியில்லாத மனிதர்கள் அவைகளைச் செய்கின்றார்கள். ஓ! அரசனே! ஆகையால், நான் உனக்குச் சொல்லுகின்றேன். வித்வானான புருஷன் சாஸ்திரத்தாலாராய்ந்து அநாதிஸித்தமான பிரம்மஜ்ஞானத்தையடையவேண்டும்; ஹிம்ஸாரூபமான கர்மாவை விடவேண்டும். தர்மத்திற்காக முறைதவறிக் கலப்பாகத் திரவியத்தைச் சம்பாதிக்கக்கூடாது. அது க்ஷேமமாகச் சொல்லப்படுகிறதில்லை. அடக்கமுடையவனும் க்ஷத்ரியனும் இஷ்டர்களான

உறவினர்களையுடையவனுமான நீ அடக்கத்துடன் இவ்விருந்து பிரஜைகளையும் வேலைக்காரர்களையும் புத்திரர்களையும் உன்னுடைய தர்மத்தோடு கவனித்து ரக்ஷி. இஷ்டர்களுடையவும் பகைவர்களுடையவும் சேர்க்கையில் ஸ்நேகமும் வைரமும் உண்டாகின்றன. அதனால், அனேகமாயிரம் பிறவிகளில் சுழலுகின்றான். ஆகையால், குணங்களில் பற்றுதல் வைக்கக்கடவாய். ஒரு விதத்தாலும் தோஷங்களில் பற்றுதல் வைக்காதே. [1]குணமில்லாதவனாயிருந்தாலும் எவன் துர்ப்புத்தியுள்ளவனோ அவன் [2]தனக்கு அதிகனாயிருக்கிறான். ஓ! மஹாராஜனே! தர்மாதர்மங்கள் மனிதர்கள் விஷயத்தில் பிரவிருத்திக்கின்றன. மனிதர்களல்லாத மற்றப் பிராணிகள் விஷயத்தில் அப்படிப் பிரவிருத்திக்கிறதில்லை. மனிதனானவன் ஆசையுள்ளவனாயிருந்தாலும் ஆசையற்றவனாயிருந்தாலும் தாமசீலனாயும் வித்வானாயும் எப்பொழுதும் உலகத்தில் [3]ஆத்மபூதனாயுமிருந்துகொண்டு பிராணிகளுக்கு ஹிம்ஸையில்லாமல் நடக்கவேண்டும். எப்பொழுது அவனுடைய மனமானது சங்கற்பம் நீங்கினதாகின்றதோ அப்பொழுது அஸத்யமே ஏற்படாது. க்ஷேமத்தையுமடைவான்.

---

முந்நூற்றோராவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

(பராசரகீதை; தவத்தின் பெருமை.)

ஐயா! கிருஹஸ்தனுடைய இந்தத் தர்மவிதியானது சொல்லப்பட்டது. (இனி) தவத்தின் விதியைச் சொல்லப்போகிறேன். தெளிவாகச் சொல்லுகின்ற என்னுடைய அந்த வார்த்தையைக் கேள். அரசனே! பெரும்பாலும் கிருகஸ்தனுக்கு ராஜஸ தாமஸ விருத்திகளாலும் ஸங்கத்தாலும் வரும் மமதையென்பது உண்டாகிறது. இம்மையில் மனிதனுக்கு வீடுகளையடுத்துக் கோக்களும் க்ஷேத்ரங்களும் தனங்களும் பத்னிகளும் புத்திரர்களும் வேலைக்காரர்களும் உண்டாகின்றனர். இவ்விதம் பிரவிருத்தித்து அவைகளை நித்யமாக

---

1 'அறிவீனன் நற்குணமற்றவனாயிருந்தாலும் தன்னிடம் மிக்க அன்புள்ளவனாயிருக்கிறான்' என்பது வேறுபாடம்.

2 தன் எண்ணத்தில் (அதாவது) தன்னை அதிகனாகத் தானே நினைக்கிறான்.

3 எல்லா ஜந்துக்களையும் தன்னைப்போலப் பார்க்கிறவன்.

வே நினைக்கின்றவனும் அநித்யமாக நினையாதவனுமான அவனுக்கு ராகமும் த்வேஷமும் விருத்தியடைகின்றன. அரசனே! ராகத்வேஷங்களாலாக்கிரமிக்கப்பட்டவனும் தனத்தின் வசத்தையடைந்தவனுமான மனிதனை மோகத்தாலுண்டான பற்றுதலென்பதும் அடைகின்றது. சிற்றின்பத்தை முக்கியமாகக்கொண்ட எல்லாரும் போகத்தை அனுபவிக்கிறவனைக் கிருதார்த்தனாக நினைத்துக் காதலினாலே சிற்றின்பத்தைக்காட்டிலும் வேறு லாபத்தைச் சிந்திக்கிறதில்லை. பிறகு, அவாவினால் பற்றப்பட்ட மனதையடைந்து மோகத்தால் (தன்) குடும்பத்தை விருத்திசெய்கிறான். அந்தக் குடும்பத்தைப் பாதுகாப்பதற்காகத் தனத்தைத் தேடவிரும்புகிறான். அவன் தெரிந்தே தனத்திற்காக அகாரியத்தைப் பண்ணுகிறான். இளமைமுதல் உண்டான ஸ்நேகமுள்ள ஜனத்தில் அதிகரித்ததால அந்த ஜனத்தின் நாசத்தால் அனுதாபமுமடைகிறான். பிறகு, அகங்காரம் நிரம்பித் தனக்கு அபஜயம் வாராமல் காக்க விரும்பி, 'எதனால் ஸுகியாவோம்' என்று கருதி அதைச் செய்கின்றான். அதனால் நாசத்தையடைகின்றான். ஓ! அரசனே! அஃது அப்படியன்றோ? புத்தியுள்ளவர்களும் சாசுவதமான பிரம்மத்தைச் சொல்லுகின்றவர்களும் சுபகர்மத்தைத் தேடுகின்றவர்களும் விஷயத்தை வெறுத்தவர்களுமான மனிதர்களுக்கே ஸுகம். மனிதன் அன்புக்குரியவர்களுடைய நாசத்தாலும் தன நாசத்தாலும் ஆதி வியாதிகளாலுண்டான தாபத்தாலும் ஒழிவை அடைகின்றான். ஒழிவினால் ஆத்மநிச்சயமுண்டாகிறது. ஆத்மநிச்சயத்தால் ஆத்மப்ரத்யக்ஷம் உண்டாகிறது. அரசனே! சாஸ்திரார்த்தமான ஆத்மாவினுடைய ப்ரத்யக்ஷத்தினால் தவத்தையே கருதுகிறான். மனிதர்களிற்சிறந்தவனே! பிரியமானவிஷய ஸுகம் நசித்தகாலத்தில தவத்தைச்செய்வதற்கு முயற்சிசெய்கின்றவனும் ஸாராஸார விவேகமுடையவனுமானமனிதன் துர்லபனல்லனோ? எல்லார்க்கும் ஸாதாரணமானதும் ஸ்வர்க்கமார்க்கத்தை அடைவிக்கிறதுமான தவமானது ஜிதேந்திரியனும் அடக்கமுடையவனுமான சூத்ரனுக்குக்கூட விதிக்கப்படுகிறது. முன்காலத்தில் பிரபுவும் விரதத்தில்ஜாகரூகருமான ஹிரண்யகர்ப்பர் சிற்சிலவிடத்தில் விரதங்களையனுஷ்டித்துத் தவத்தால் பிரஜைகளைச்சிருஷ்டித்தார். ஐயனே! ஆதித்யர்களும் வஸுக்களும் ருத்ரர்களும் அக்னியும் அச்வினீதேவர்களும் மாருதர்களும் விசுவேதேவர்களும் ஸாத்யர்களும் பித்ருக்களும் மருத்துக்களுடையகணங்களும் யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் மற்றத்தேவர்களும் மற்

ழுமுள்ளஸ்வர்க்கவாஸிகளும் தவத்தால் ஸித்தியை அடைந்தார்கள். முன்காலத்தில் பிரம்மாவினால் முதலில் தவத்தால்படைக்கப்பட்ட பிராம்மணர்கள் தவத்தைசெய்துகொண்டு பூமியிலும் தேவலோகத்திலும் ஸஞ்சரிக்கின்றார்கள். பூலோகத்தில் அரசர்களாகவும் பெரிய குலங்களில் மற்றக்கிருகஸ்தர்களாகவும் பிறப்பதெல்லாம் தவத்தின் பயனே. பட்டாடைகளும் சோபனமான ஆபரணங்களும் வாகனங்களும் ஆஸனங்களும் பானங்களுமாகிய இவையெல்லாம் தவத்தின் பயனே. மனத்திற்கொத்தவர்களும் அழகுள்ளவர்களும் ஆயிரக்கணக்குள்ளவர்களுமான ஸ்திரீகளும் உப்பரிகையின்மேல் வாஸமுமாகிய இவையெல்லாம் தவத்தின்பயன். உயர்ந்தவைகளான படுக்கைகளும் பலவகையான ஆகாரங்களும் விரும்பப்படும்மற்றவைகளும் நல்வினைசெய்தவர்களுக்கு உண்டாகின்றன. பகைவர்களை வாட்டுகின்றவனே! மூவுலகங்களிலும் தவத்தாலடையக்கூடாதது ஒன்றுமில்லை. நல்வினைசெய்யாதவர்களுக்கு ஸுகங்களில்லாமற்போவதே பயன். ஓ! ராஜசிரேஷ்டனே! ஸுகியாயிருந்தாலும் துக்கமுடையவனாயிருந்தாலும் மனிதன் மனத்தினால் சாஸ்திரத்தை ஆராய்ந்து பார்த்து அஸந்தோஷமானது அஸுகத்தின்பொருட்டென்னும் நிச்சயத்தால் ஆசையைத்தள்ளவேண்டும். லோபத்தால் இந்திரியங்களுக்கு மயக்கமுண்டாகும். அதனால் இவனுடைய்பிரஜ்ஞையானது அப்யாஸமில்லாத வித்தைபோல நசித்துவிடும். ப்ராஜ்ஞை நசித்தவுடன் நியாயத்தைக் கருதமாட்டான். ஆகையால், ஸுகத்திற்கு நாசம் வந்தபொழுது மனிதன் கடுந்தவத்தைச செய்யவேண்டும். இம்மையில் எது இஷ்டமோ அதை ஸுகமாகச சொல்லுகின்றார்கள். வெறுக்கப்படுவது துக்கமாகச் சொல்லப்படுகின்றது. தவம் செய்வதற்கும் தவம் செய்யாமலிருப்பதற்கும் பயன் எவ்விதமாயிருக்கிறதென்பதைப் பார். மனிதர்கள் குற்றமற்றதவத்தைச் செய்து நித்யம் மங்களங்களையும் பார்க்கின்றார்கள்; விஷயஸுகங்களையும் அநுபவிக்கின்றார்கள்; பிரஸித்தியையும் அடைகின்றார்கள். துக்கமானது, அப்ரியமாயும் அவமானமாயும் அனேகவிதமான ரூபமுடையதாயிருக்கிறது. பயனை விரும்புகிறவன் நல்ல வழியைவிட்டு விஷயரூபமான வழியை அடைகின்றான். அவனுக்குத் தர்மத்திலும் தவத்திலும் தானத்திலும் ஸந்தேகமுண்டாகின்றது. அவன் கொடியபாவங்களைபேசெய்து நரகத்தை அடைகிறான். ஓ! அரசனே! ஸுகத்திலிருந்தாலும் துக்கத்திலிருந்தாலும் நல்லொழுக்கத்திலிருந்து சலியாத மனிதன் சாஸ்திரத்தை நேத்திரமாயுடையவன். ஓ! அரசனே! ஸ்திரீஸங்கத்திலும்

உணவிலும் காட்சியிலும் மோப்பதிலும் கேட்பதிலும் (வில்லிலிருந்து விடப்பட்ட) ஓர் அம்பு பூமியில் விழுங்காலம்வரையில் ஸுகமானது கருதப்படுகிறது. பிறகு, அதனுடைய நாசத்தினால் இவனுக்கு மிகுதியான துக்கம் உண்டாகின்றது. ஆகையால், வித்வான்கள் மிகவும் மேலான ஸுகரூபமான மோக்ஷத்தைச் சிலாகிக்கின்றார்கள். அதனால், விவேகமுடைய எல்லாருக்கும பெரிதான ஸுகத்தின் பொருட்டுச் சமமுதலான குணங்கள் உண்டாகின்றன. தர்மம் விருத்தியடைவதால் எப்பொழுதும் பொருள் இன்பங்களால் குறைவை அடையான். முயற்சியின்றிக்கிடைத்தவை கிருகஸ்தர்களால் எப்பொழுதும் அனுபவிக்கத்தக்கவை. தன் தர்மமானது முயற்சியால் அடையத்தக்கதென்பது என் எண்ணம். மானிகளும் நல்லகுலத்திற்பிறந்தவர்களும் எப்பொழுதும் சாஸ்திரத்தினர்த்தத்தில் திருஷ்டியுள்ளவர்களுமாயிருக்கிறவர்களுடைய செய்கையானது தர்மத்தினின்றும் விடுபட்டமூடசித்தர்களால் [1]செய்யமுடியாது. உலகத்தில் மனிதமுயற்சியால் செய்யப்பட்ட கர்மமானது நாசத்தையடைகின்றபொழுது அவர்களுக்குத் தவத்தைத்தவிர வேறுகர்மமானது இல்லை. ஓ! அரசனே! கிருகஸ்தனானவன் ஸாமர்த்தியத்தோடு ஹவ்யகவ்யத்தின் பொருட்டு ஸ்வதர்மத்தில் நடந்துகொண்டு மனோவாக்காயங்களால் கர்மத்தின் நிச்சயத்தை அனுஸரிக்கவேண்டும். நதீ நதங்களான எல்லா ஆறுகளும் ஸமுத்திரத்தில் நிலைபெறுவதுபோல எல்லா ஆசரமிகளும் கிருஹஸ்தனிடத்தில் நிலைபெறுகின்றார்கள்' என்று சொன்னார்.

---

முந்நூற்றிரண்டாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

(பராசரகீதை; வர்ணங்களின் பிரிவுகளும் விசேஷதர்மங்களும் பொதுவான தர்மங்களும்.)

ஜனகர், 'ஓ! மஹரிஷியே! [2]ஜாதி விசேஷங்களிலிருந்து வேறு ஜாதியானது எப்படி உண்டாகிறது? இதை அறிய விரும்புகி

---

1 'அகக்யா' என்று மாற்றப்பட்டது.

2 பிராம்மண க்ஷத்ரிய வைச்ய சூத்ர ஜாதிகளைக்காட்டிலும் வேறான அனுலோம பிரதிலோமஜாதிகள் இங்கு விசேஷவர்ணங்களென்று சொல்லப்பட்டன. '286-வது அத்யாயத்தில் சொல்லப்பட்ட கிருஷ்ணவர்ணங்கள்' என்பது பழையவுரை.

றேன். சொல்லுகிறவருள் சிறந்தவரே! அதைச் சொல்லும். பிறக்கும் இந்தக் குழந்தை [1] 'அவனே' என்று வேதம் சொல்லுகிறது. பிராம் மணனிடத்திலிருந்தும் உண்டானவன் எப்படி வேறுஜாதியாகக் கொள்ளப்படுகிறான்?' என்று கேட்க, பராசரர் சொல்லலானார்.

'ஓ! மகாராஜனே! இது இப்படியே எவன் எவனாலுண்டா னானோ அவன் அவனே. தவத்தின் குறைவினாலே ஜாதிபே தத்தை அடைந்தான். நல்ல க்ஷேத்திரத்தினாலும் நல்ல பீஜத் தினாலும் பரிசுத்தமான பிறப்பு உண்டாகிறது. இவைகள் இரண் டிலொன்று தாழ்ந்ததானால் தாழ்ந்தவன் உண்டாகின்றான். உல கங்களைப்படைக்கின்ற ஹிரண்யகர்ப்பனுடைய முகத்திலும் புஜங் களிலும் தொடைகளிலும் பாதங்களிலுமிருந்தே (வர்ணங்கள்) உண் டாயினவென்று தர்மத்தையறிந்தவர்கள் அறிகின்றார்கள். ஐயா! அரசனே! முகத்திலிருந்து உண்டானவர்கள் பிராம்மணர்களா கவும் புஜத்திலிருந்து உண்டானவர்கள் க்ஷத்ரியர்களாகவும் தொடை யிலிருந்து உண்டானவர்கள் தனவான்களான வைசயர்களாக வும் பாதத்திலிருந்து உண்டானவர்கள் பணிசெய்யும் சூத்திரர்களாக வும் நினைக்கப்படுகின்றார்கள். ஓ! புருஷசரேஷ்டனே! நான்கு வர்ணங்களுக்குத்தான் ஹிரண்யகர்ப்பனிடமிருந்து உற்பத்தி. இவை களைக்காட்டிலும் வேறாக அதிகமான அவர்கள் ஸங்கரஜாதிகளாக நினைக்கப்பட்டனர். க்ஷத்ரியாதிரதர், அம்பஷ்டர், உக்கிரர், வைதேஹ கர், ச்வபாகர், புல்கஸர், ஸ்தேநர், நிஷாதர், ஸூதர், மாகதர், அயோகர், காரணர், விராததியர், சண்டாளர் ஆகிய இவர்கள் நான்கு வர்ணங்களிலிருந்தும் ஒன்றோடொன்று கலந்து உண்டாகி றார்கள்' என்று சொன்னார். ஜனகர், 'ஓ! முனிச்ரேஷ்டரே! ஒரே ப்ரம்மாவினால் உண்டானவர்கள் கோத்திரத்தினால் எப்படி அநேகர் களானார்கள்? இவ்வுலகில் கோத்ரங்கள் அநேகங்களல்லவா? எங்கே வேண்டுமோ அங்கே உண்டான முனிவர்கள் எப்படித் தம்ஜாதியை அடைந்தார்கள்? சிலர் சூத்திர [2]ஜாதியிலுண்டானவர்கள். மற்றவர் கள் அயோநிஜர்கள்' என்று கேட்க, பராசரர், 'ஓ! அரசனே! தவத் தால் சுத்தமாகச் செய்யப்பட்ட மனத்தையுடைய மகாத்மாக்களின் பிறப்பானது இழிவானபிறப்புடன் சேர்க்கக்கூடியதாகாது. அரசனே! முனிவர்கள் எங்கேவேண்டுமோ அங்கே புத்திரர்களையுண்டுபண்ணி

1 தந்தையே.

2 மூலத்தில் வேறு சொல்லிருக்கிறது. சூத்ர ஸ்திரீயினிடம் பிறந்தவன என்பதுபொருள்.

அந்தப்புத்திரர்களுக்கு மறுபடியும் தங்கள் தவத்தாலேயே ரிஷித்தன்மையைச் செய்கின்றார்கள். அரசனே! வைதேஹ! முன்காலத்தில் என்னுடைய பிதாமஹரான வஸிஷ்டர், ரிசயசருங்கர், காச்யபர், வேதர், தாண்டியர், கிருபர், கக்ஷீவான், கமடர் முதலியவர்கள், யவக்ரீதர், பேசுகிறவர்களுள் சரேஷ்டரான த்ரோணர், ஆயு, மதங்கர், தத்தர், த்ருமதர், மாத்ஸ்யர் ஆகிய இவர்கள் தவத்தின் வன்மையால் ரிஷித்தன்மையை அடைந்தார்கள். வேதத்தை ஓதியுணர்ந்தவர்களும் தமத்தோடு கூடிய தவத்தினாலேயே பிரதிஷ்டையை அடைந்தார்கள். அங்கிரஸ், கச்யபர், வஸிஷ்டர், ப்ருகு என்று மூலகோத்ரங்கள் நான்கு உண்டாயின. அரசனே! கர்மத்தால் இதர கோத்திரங்கள் உண்டாயின. தவத்தாலுண்டான ஸத்துக்களுடைய அந்தப்பெயர்களும் கிரகிக்கயோக்யமானவைகள்' என்று சொன்னார். ஜனகர், 'ஓ! பகவானே! எனக்குவர்ணங்களுடைய தனித்தனி தர்மங்களைச் சொல்லும். பிறகு, பொதுவான தர்மங்களையும் சொல்லும். எல்லாவற்றிலும் ஸமர்த்தராயிருக்கிறீர்' என்று கேட்க, பராசரர், 'அரசனே! தானம்வாங்குதலும் யாகம்செய்வித்தலும் அத்தியயனம்செய்வித்தலும் பிராம்மணர்களுக்கு விசேஷமான தர்மங்கள். க்ஷத்ரியனுக்கு நன்றாகரக்ஷிப்பது உரியதர்மம். வைசயர்களுக்கு உழவும், மாடு மேய்த்தலும், வாணிபமும் உரியதர்மம். அரசனே! இருபிறப்போர்களான மூவருக்கும் பணிசெய்தல் சூத்திரனுக்கு உரிய தர்மம். அரசனே! வர்ணங்களுடைய விசேஷதர்மங்கள் சொல்லப்பட்டன. ஐயனே! பொதுவான தர்மங்களை என்னிடமிருந்து விரிவாகக்கேள். அரசனே! குரூரத்தன்மையில்லாமை, கொல்லாமை, தவறுதலில்லாமை, (உலகத்தில்சேர்ந்தும்) விலகியிருத்தல், ச்ராத்தகர்மம், அதிதிகளைப்பூஜித்தல், ஸத்தியம், குரோதமில்லாமை, தங்கள் பத்நியுடன் மகிழ்ந்திருத்தல், சுசியாயிருத்தல், எப்பொழுதும் அஸூயையின்மை, ஆத்மஜ்ஞானம், பொறுமை ஆகிய இவைகள் பொதுவான தர்மங்கள். பிராம்மணர்கள், க்ஷத்ரியர்கள், வைச்யர்கள் இம்மூன்று ஜாதிகளும் த்விஜாதிகள். ஓ! மனிதர்களிற்சிறந்தவனே! இந்தத்தர்மங்களில் அவர்களுக்கு அதிகாரம். ஓ! அரசனே! இம்மையில் ஸ்வகர்மங்களைப்பற்றிப் பெரியோர்கள் மேலேபோவதுபோலத் தமக்குத்தகாத கர்மங்களிலிருக்கின்ற மூன்றுவர்ணத்தார்களும் கீழ்மையடைகின்றார்கள். சூத்திரனானவன் பதனத்தையடைகிறதில்லையென்பதும் இம்மையில் ஸம்ஸ்காரத்தையடைய யோக்கியனில்லையென்பதும் நிச்சயம். (ஏனென்றால்) வேதத்தால் சொல்லப்பட்ட தர்மம் அவனுக்கு இல்லை.

அவனுக்குத் [1]தர்மத்தின் விசேஷதமுமில்லை. மஹாராஜனே! வேதாத்தியயனத்துடன்கூடின த்விஜர்கள் சூத்திரனை (தர்மத்திற்கு உபயோகமில்லாததுபற்றி ஸ்தூலசரீரமிருந்தும் இல்லாததுபோலானபடியால்) வைதேஹகனைச் சொல்லுகின்றார்கள். ஸகலஜகத்திற்கும்தேவரும் காரணருமான [2]விஷ்ணுவாக நான் நினைக்கிறேன். (ஆகையால்) தம்மை உயர்த்திக்கொள்ளவேண்டுமென்கிற சூத்திரர்கள் ஸத்துக்களுடைய (சமமுதலிய) ஒழுக்கத்தையடைந்து மந்திரமில்லாமல் புஷ்டியைச்செய்கின்ற கிரியைகளைச்செய்கிறவர்களாகித் தோஷங்களை அடையார். இதரஜனங்கள் நல்லநடக்கையைப்பற்றிநடப்பதற்கு [3]ஏற்றபடிஸ்வர்கத்தையடைந்து இகத்திலும்பரத்திலும் ஸந்தோஷிக்கின்றார்கள்' என்று சொன்னார். ஜனகர், 'ஓ!மகாமுனிவரே! ஒருவனைத்தோஷமுள்ளவனைச்செய்வது கர்மமா? அல்லது ஜாதியா? எனக்குச் சந்தேகமுண்டாகிவிட்டது. ஆகையால், எனக்கு விவரித்துச்சொல்லவேண்டும்' என்றுகேட்க, பராசரர், 'ஓ! மகாராஜனே! கர்மா ஜாதி இரண்டும் ஸம்சயமின்றித் தோஷத்தைசெய்யும். ஆனால், விசேஷத்தைக் கேள். ஜாதியினால் தோஷத்தையடைந்து பாவத்தைச்செய்யாமலிருப்பவன் ஜாதியினாலும் கர்மாவினாலும் துஷ்டகர்மத்தைப் பற்றுகிறதில்லை. மேலானஜாதியில் பிறந்தவனானாலும் நிந்திக்கப்பட்டகர்மத்தைச்செய்தால் அவனை அந்தக்கர்மமானது தோஷமுள்ளவனைச்செய்கிறது. ஆகையால் கர்மாவானது நல்லதன்று' என்றுசொன்னார். ஜனகர், 'ஓ! பிராம்மணச்ரேஷ்டரே! இந்த உலகத்தில் எந்தக் கர்மங்கள் தர்மத்திலிருந்துவிலகாதவைகளும் செய்தால் பிராணிகளுக்கு எப்போதும் துன்பமுண்டாகாதவைகளுமாயிருக்கும்?' என்று கேட்க, பராசரர் சொல்லத்தொடங்கினர். 'ஓ! மகாராஜனே! என்னை நோக்கி எதைப்பற்றி நீ கேட்டாயோ அதுவிஷயத்தில் ஹிம்ஸையில்லாமல் எப்பொழுதும் மனிதனைக் காக்கக்கூடிய கர்மங்களை என்னிடமிருந்து கேள். அக்னிகளைத் தள்ளிவிட்டு உதாஸீனர்களாயும் மனக்கவலை நீங்கினவர்களாயுமிருக்கின்றவர்கள் கிரமமாகக் கர்மமார்க்கத்திலேறி மோக்ஷமார்க்கத்தைப் பார்க்கின்றார்கள். ச்ரத்தையுள்ளவர்களும் வணக்கமுள்ளவர்களும் எப்போதும் அடங்கினவர்களும் கூரிய புத்தியுள்ளவர்களும் எல்லாக்கர்மங்களி

---

1 'குரூரத்தன்மையில்லாமைமுதலிய பொதுவானதர்மங்கள்' என்பது பழையவுரை.

2 'க்ஷத்திரியனுக்கு ஒப்பானவன்' என்பது பழையவுரையின் கருத்து.

3 வேறுபாடம்.

லிருந்தும் விலகினவர்களுமான (அவர்கள்) ஜரையற்றஸ்தானமான மோக்ஷத்தை அடைகின்றார்கள். ஓ! அரசனே! ஜீவலோகத்தில் எல்லாஜாதிகளும் தர்மகாரியங்களை நன்றாகச்செய்து ஸத்யவார்த்தைகளையும் சொல்லிக் கொடிய அதர்மத்தையும்விட்டு ஸ்வர்க்கத்தை அடைகின்றன. இந்த விஷயத்தில ஆலோசிக்கவேண்டா.

---

## முந்நூற்றுமூன்றாவது அத்யாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)

---

**(பாராசரகீதை ; மனிதப்பிறப்பின் உயர்வும் அதற்குரிய பல தர்மங்களும்.)**

ஓ! அரசனே! உலகத்தில் குணமில்லாதவர்களுக்குத் தந்தையும் நண்பர்களும் குருக்களும் மனைவிகளும் மிக்கஅன்புள்ளவர்களும் இன்சொற்கூறுகிறவர்களும் நன்மைசெய்கிறவர்களும் வசப்பட்டவர்களும் பயன்படுகிறதில்லை. மனிதர்களுக்குப் பிதா மேலானதெய்வம். பிதாவை மாதாவினும் சிறந்தவனுகச் சொல்லுகின்றார்கள். ஞானத்தினுடைய லாபத்தைச் சிறந்ததாகச் சொல்லுகின்றார்கள். இந்திரியங்களையும் விஷயங்களையும் ஜயித்தவர்கள் பரமானபிரம்மத்தை அடைகின்றார்கள். ராஜகுமாரனானவன் எப்பொழுது பாணுக்கினிபரவினயுத்தகளத்தில் வதத்தையடைந்து கொளுத்தப்படுகின்றானோ அப்பொழுது தேவர்களாலடையமுடியாதலோகங்களை அடைகிறான் ; ஸுகமாக ஸ்வர்க்கபலத்தையும் அநுபவிக்கின்றான். ஓ! அரசனே! களைப்பையடைந்தவனையும் பயந்தவனையும் ஆயுதம்நழுவினவனையும் அழுகின்றவனையும் புறங்காட்டி ஓடுகின்றவனையும் (தேர் கவசமுதலிய) யுத்தஸாதனம் குறைந்தவனையும் யுத்தஸன்னாஹம்செய்யாதவனையும் ரோகியையும் யாசிக்கின்றவனையும் இளையவனையும் முதியவனையும் ஹிம்ஸிக்கக்கூடாது. அரசன் யுத்தத்திற்குரிய நல்லஸாதனங்களையுடையவனும் நன்றாகக்கூடினவனும் யுத்தமுயற்சியுள்ளவனும் தனக்குச் சமநிலையை அடைந்தவனுமான ராஜகுமாரனை வெல்லவேண்டும். இவ்வுலகில் ஸமமாயுள்ளவனிடமிருந்தும் மேலானவனிடமிருந்தும் வதமானது ச்ரேயஸ்கரமென்பது நிச்சயம். தனக்குக் குறைவானவனிடமிருந்தும் பயந்தவனிடமிருந்தும் தீனனிடமிருந்தும் வதமானது நிந்திக்கப்பட்டிருக்கின்றது. ஓ! நரபதியே! பாவியினிடமிருந்தும் பாவஒழுக்கமுள்ள கீழோரிடமிருந்துமுண்

டான இந்தவதமானது பாவமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அது நரகத்திற்குக் காரணமாகுமென்பது நிச்சயம். ஓ! அரசனே! யமன் வசத்தையடைந்தவனை ஒருவனும் காப்பதேயில்லை. ஆயுள்மிச்ச முள்ளவனையும் ஒருவனும் இழுக்கிறதேயில்லை. இவ்வுலகில் தன்னிடம் ஸ்நேகமுள்ளவர்களால் தனக்காகச் செய்யப்பட்ட ஹிம்ஸையைக்கொடுக்கின்ற எல்லாக்கர்மங்களையும் விலக்கவேண்டும். பிறனுடையபிராணனுல் தன்பிராணனைக் காக்கவிரும்பக்கூடாது. அப்பா! மரணத்தை எதிர்பார்க்கின்ற எல்லாக்கிருகஸ்தர்களுக்கும் தமக்குரிய கர்மத்துடன் மணல்திட்டோடுகூடின நதீதீரங்களில் மரிப்பது சோபனம். ஆயுளானது நசித்தகாலத்தில் மரணமானது (தானே) வருகின்றது. அப்படியானுல் காரணமில்லாமல் ஏற்பட்டதாகின்றது. தேகத்தை அடைந்து பலாத்காரமாகச் சரீரத்தைவிடுகிறவனுக்கு ஆத்மஹத்தி முதலியகாரணங்களால் யாதனுசரீரம் உண்டாகின்றது. அவன் மோக்ஷமார்க்கத்தைப்பற்றினவனுனுலும் இழிந்தவனே. அவன் ஒரு வீட்டைவிட்டு மற்றொரு வீட்டையடைந்தவன்போலாகின்றுன். அந்த விஷயத்தில் இரண்டாவதான வேறு ஒருகாரணமுமில்லை. தேகிகளுடைய அந்தயாதனுதேகமானது மோக்ஷத்தைக் கொடுப்பதற்காக ஏற்பட்ட ருத்திரருடைய பிசாசங்களிடத்தில் சேர்க்கப்பட்டதாயிருக்கிறது. ஆத்மவிஷயமான சிந்தனையுள்ள வித்வான்கள், ‘தேகமானது பெருநரம்பு, சிறுநரம்பு, எலும்பு இவைகளுடைய கூட்டம்; நிந்திக்கத்தக்க அமேத்யங்களால் வியாபிக்கப்பட்டது; பஞ்சபூதங்கள் இந்திரியங்கள் விஷயவாஸனைகள் இவற்றின்சேர்க்கை; தோலை மூடிவினுடையது’ என்றுசொல்லுகிருர்கள். மரிக்குந்தன்மையையடைந்த சரீரமானது ஸௌந்தரியமுதலான குணங்களழிந்து ஜீவனுல்தள்ளப்பட்டுச் செயலற்றதும் அறிவற்றதும் ஆகிவிடுகின்றது. பூதங்கள் தம்காரணத்தையடைந்து உடனே பூமியில் அழிந்துவிடுகின்றன. ஓ! விதேஹகுலத்தரசனே! இந்தச்சரீரம் எந்தஎந்த நினைவிலிருந்துகொண்டு மரிக்கின்றதோ அதில் அதில் கர்மயோகத்தால் வாஸனையுடையதாகச் செய்யப்பட்டு ஜனிக்கின்றது.. அந்தச்சரீரம் விழுந்தகாலத்தில் கர்மாவினுல் அப்படிப்போல வேறுசிருஷ்டியானது காணப்பட்டிருக்கின்றது. ஓ! நரபதியே! இவன் மறுபடி சிலகாலம் ஜனிக்காமலுமிருக்கின்றுன். மகானுனஜீவன் ஆகாயத்தில் மேகம் சுழலுவதுபோலச் சுழலுகின்றுன். [1]ஓ! ராஜனே! அவன் மறுபடியும் இகலோகத்தில் ஸ்தானத்தையடைந்து ஜனிக்கின்றுன். ஓ! நரபதியே! ஆத்மாவோ

---

[1] வேறு பாடம்.

மனத்தைக்காட்டிலும் ஶ்ரேஷ்டன்; மனம்இந்திரியங்களைக்காட்டிலும் ஶ்ரேஷ்டம். ஓ! அரசனே! அனேகவிதமான பிராணிகளுள் ஜங்கமங்கள் மேற்பட்டவைகள். ஜங்கமங்களுள்ளும் இரண்டுகாலுள்ள ஜீவர்கள் மேலானவர்களாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின்றார்கள். இரண்டு பாதமுடையவர்களுள்ளும் பிராம்மணர்கள் மேலானவர்களாகக் கருதப்பட்டிருக்கின்றார்கள். ஓ! ராஜஶ்ரேஷ்டனே! வேதியர்களுள்ளும் பிரஜ்ஞையுடையவர்கள் மேலாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறார்கள். அறிஞர்களுள்ளே ஆத்மஞானிகள் மேலானவர்கள். ஆத்மஞானிகளுள் அபிமானம்விட்டவர்கள் மேலோர்கள். மனிதர்களுடைய விஷயத்தில், பிறந்தவனை மரணம் பின்தொடருகிறதென்பது உறுதி. பிரஜ்ஜைகளோவென்றால் அழிவுள்ளவைகளான கர்மங்களைக் குணமாகச் செய்கின்றன. ஓ! அரசனே! எவன் இஹலோகத்தில் ஜனத்தைத் துன்பப்படுத்தாமல் தன்னுடைய சக்திக்குத்தக்கபடி தர்மத்தைச் செய்து இயற்கையாக உண்டான மரணத்தினால் பாவத்தை அலம்பிவிட்டு ஆதித்யன் வடக்குத்திக்கையடைந்தகாலத்தில் புண்யநக்ஷத்திரத்திலும் புண்யமுகூர்த்தத்திலும் மரணத்தையடைவானோ அவன் புண்யம் செய்தவன். விஷத்தாலும் தூக்கினாலும் தீயினாலும் திருடன்கையினாலும் கோரப்பற்களுள்ள பிராணிகளாலும் பசுக்களினாலுமுண்டான மரணங்கள் இழிவானவையென்று சொல்லப்படுகின்றன. புண்ணியகர்மமுடையவர்கள் இவைகளோடும் ஒருவித எண்ணத்தாலுண்டான இவற்றைப்போன்றனவாகிய வேறு அநேகவிதமானப்ராகிருதவதங்களோடும் கூடுகிறதில்லை. ஓ! நரபதியே! மேலான புண்யவான்களுடைய பிராணன்கள் சிரத்தைப்பிளந்துகொண்டு போகின்றன. நடுநிலையான புண்யசாலிகளுடைய பிராணன்கள் நடுவாலும் பாவிகளுடைய பிராணன்கள் கீழாலும் பேதித்துக்கொண்டு போகின்றன. ஓ! அரசனே! புருஷனுக்கு அஜ்ஞானமொன்றே பகை. அஜ்ஞானத்திற்குநிகராக இரண்டாவதுபகை இல்லை. அந்த அஜ்ஞானத்தால் சூழப்பட்டவன் மிகவும்பிரவிருத்தித்துக் கோரமும் மிகவும் ஹிம்ஸையுள்ளதுமான கர்மங்களைச் செய்கின்றான். ராஜகுமாரனே! புருஷனானவன் ஞானத்தைத் தனக்கு உண்டுபண்ணுவதற்காக (வேதத்திற்சொன்ன குருசுஶ்ருஷைமுதலான) தர்மத்தோடே பெரியோர்களை உபாஸித்து எந்த அஜ்ஞானசத்துருவின்விஷயத்தில் ஸமர்த்தனாவானோ அந்த அஜ்ஞானசத்துரு பிரயாஸத்தால் வெல்லக்கூடியவன். பிரஜ்ஞையாகிறசரத்தினாலே அடிக்கப்பட்டு நசிக்கின்றான். தர்மத்தை விரும்புகிறபுருஷன் இவ்வுலகத்தில் பிரம்ம

சாரியாகி நியமத்துடன் வேதத்தைஓதிச் சக்தியினால் ஐந்துமகா யஜ்ஞங்களையும்செய்து தன்னுடையவம்சத்தை ஸ்தாபித்து ஃப்ரே யஸைவிரும்பி வனத்தையடையவேண்டும். ஸ்திரீமுதலான உபபோ கங்களாலே விடுபட்டும் சரீரத்தை மனிதனானவன் நாசஞ்செய்யக் கூடாது. அப்பா! சண்டாளஜாதியாயிருந்தாலும் மானிடத்தன்மை யானது எல்லாவிதத்தாலும் மேலானது. ஓ! பூபதியே! எந்தப் பிறப்பையடைந்து சுபமானகர்மங்களாலே ஆத்மாவானது ரக்ஷிக்க முடிகின்றதோ அப்படிப்பட்ட மானிடப்பிறப்பானது மேலானது. ஓ! பிரபுவே! மனிதர்கள், 'இந்தப்பிறவியிலிருந்து எப்படி மிகவும் நஷ்டமாகாமலிருப்போம்' என்று வேதம் பிரமாணமென்கிற உறுதியி னால் தர்மத்தைச் செய்கின்றார்கள். எந்தமனிதன் மிகவும்கிடைக்காத தான மனுஷ்யஜாதியையடைந்து (தர்மத்தை) த்வேஷிக்கின்றானோ தர்மத்தை அவமதிக்கின்ற அவன் காமத்தையே உருவமாகவுடைய வனாவான். அவன் காமத்தால் வஞ்சிக்கப்பட்டவனாகிறானல்லவா? ஐயனே! தீபத்துக்கு ஒப்பான பிராணிகளை நேயத்தையுடைய கண்ணினால் பார்ப்பவனும் அவைகளிலுள்ள (குணதோஷங்களாகிய) எல்லாவிஷயங்களையும் பாராதவனும் ஸமாதான வார்த்தையினாலும் தானத்தினாலும் பிரியமான வார்த்தையினாலும் அனுசரிக்கின்றவனு மான மனிதன் ஸமமான ஸுகதுக்கங்களையுடையவனாகிப் பரலோகத் தில் பூஜிக்கப்படுகின்றான். மந்திரபூர்வகமானகொடையும் ஸாதாரண மானகொடையும் மனிதனுக்கு மங்களகரமான [1]சரீரம். மனித னால் ஸரஸ்வதி நைமிசம் புஷ்கரம்இவைகளிலும், பூமியிலுள்ளவேறு புண்யப்ரதேசங்களிலும் தவத்துடன் தீர்த்தங்களாலே சரீரமானது அடிக்கடி நீராட்டத்தக்கது. கிருகங்களில் எவர்களுடைய பிராணன் கள் விழுகின்றனவோ அவர்களை உடனே வெளிப்படுத்தலும் ஸ்ம சானத்திற்கு வாகனத்தால் கொண்டுபோதலும் சுத்தமானவிடத்தில் விதிப்படி தகனமும் சிறந்த தர்மம் இஷ்டியும் புஷ்டிகர்மாவும் யாகமும் யாகஞ்செய்வித்தலும் தானமும் புண்யகர்மங்களின் அனுஷ் டானமும் சக்திக்குத்தக்கபடி பித்ருகர்மமும் மேலானவை. இவைக ளெல்லாவற்றையும் இந்தமனிதன் தனக்காகவே செய்கிறான். [2]ஓ! நரபதியே! தர்மசாஸ்திரங்களும் வேதங்களும் (சிக்ஷைமுதலான) ஆறு வேதாங்கங்களும் கர்மாவைத் துன்பமென்றுநினையாத மனித னுக்கு ஸ்ரேயஸின்பொருட்டு விதிக்கப்படுகின்றன' என்றார். நரா

---

1 வேறு பாடம்.

2 ஓரு ஸ்லோகம் விடப்பட்டது.

திப! இந்த எல்லாவிஷயமும் மிகவும் மகாத்மாவான பராசரமுனிவ ராலே முன்காலத்தில் விதேஹராஜனுக்கு ஸ்ரேயஸின்மித்தத்தில் சொல்லப்பட்டது.

---

## முந்நூற்றுநான்காவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

——:o:——

(பாராசரகீதை; பலவிதமோக்ஷோபாயங்கள்.)

மிதிலாதிபனான ஜனகன் மறுபடியும் தர்மத்தில் பெரிய நிச்சய முள்ளமஹாத்மாவான பராசரரை நோக்கி, 'ஓ! ப்ராம்மணரே! ஸ்ரேயஸுக்குக்காரணம் எது? கதியாவது எது? எதைச்செய்தால் நசியாமலிருக்கும்? எங்கே சென்றவன் திரும்பாமலிருக்கிறான்? விசாலமான புத்தியுள்ளவரே! அவற்றை எனக்குச் சொல்லும்' என்று கேட்க, பராசரர் சொல்லலானார்.

பற்றற்றிருப்பது ஸ்ரேயஸுக்குக் காரணம். ஞானரூபமானவனே! ஞானமானது பரமானகதி அனுஷ்டிக்கப்பட்டதவமானது, [1]ஸத்பாத்திரத்தில் செய்யப்பட்ட தானம்போல நசியாது. எப்பொழுது அதர்மமயமான பாசத்தை அறுத்துத் தர்மத்தில் பற்றுகின்றானோ அப்பொழுது அபயதானமென்னும் ஸன்யாஸத்தைச் செய்து ஸித்தியை அடைகின்றான். எவன் ஆயிரம் கோக்களையும் நூறு குதிரைகளையும் எல்லாப்பிராணிகளுக்கும் அபயத்தையும் கொடுக்கின்றானோ அவனை எப்பொழுதும் எல்லாப்பிராணிகளிடமிருந்தும் அபயமானது சூழ்கிறது. புத்திசாலியானவன் விஷயங்களின் மத்தியில் வஸித்தாலும் வஸிக்கின்றவனாகிறதில்லை. (பற்றுதலுள்ள) துர்ப்புத்தியுள்ளவன் விஷயங்களில்லாதபோதும் விஷயங்களிலேயே வஸிக்கிறான். ஜலமானது தாமரைஇலையைப்பற்றாததுபோல அதர்மமானது அறிவுள்ளவனைப் பற்றுகிறதில்லை. அரக்கானது கட்டையில்பற்றுவதுபோலப் பாவமானது புத்தியில்லாதவனை அதிகமாகப்பற்றுகிறது. பயனையளிக்கவிருக்கமாயிருக்கிற அதர்மமானது செய்தவனை விடுகிறதில்லை. ஆகையால், கர்த்தாவானவன் காலத்தை அநுஸரித்து அந்த அதர்மத்தாலுண்டானபயனை அடைகின்றான்.

---

1 'நல்லநிலத்தில் விதைக்கப்பட்ட விதைபோல' என்றும் கொள்ளலாம்.

2 மோக்ஷம்.

ஆத்மாவின் நிச்சயத்தையுணர்ந்தமனேவசமுள்ளீவர்கள் துன்பத்தை அடைகிறதில்லை. மிகவும் மதத்தையடைந்த ஞானேந்திரிய கர்மேந்திரியங்களுடைய (சேஷ்டையை) அறியாதவன் சுபாசுபங்களில்பற்றினமனத்துடன் மிகப்பெரியபயத்தை அடைகின்றான். எப்பொழுதும் முற்றும் ஆசைநீங்கினவனும் கோபத்தை வென்றவனுமாயிருப்பவன் விஷயத்திலிருந்தாலும் பாவத்தை அடைகிறதில்லை. வரம்பிலே கட்டப்பட்ட தர்மமாகிற அணையானது உடைபடுகிறதில்லை. அணையினுலே பெருகின வெள்ளம்போலத் தர்மஸமூஹமானது தானுக விருத்தியடைந்ததாகின்றது ஓ! ராஜச்ரேஷ்டனே! சுத்தமானசூரியகாந்தமணியானது சூரியனிடத்துள்ளதேஜஸை நியமமாகக்கிரகிக்கின்றதுபோல யோகியானவன் தியானததினுல் பிரம்மதேஜஸை அடைகின்றான். எள்ளின்குணமானது இவ்வுலகில் பரிசுத்தமானபதார்த்தங்களுடைய சேர்க்கையினுல் தனித்தனியாக அவையவைகளுடைய நுட்பமையை மிகுதியும் அடைகின்றதுபோல யோகிகளானமனிதர்களுடைய ஸத்வகுணமானது ஆச்ரயத்திற்குத்தக்கபடி பிரவிருத்திக்கின்றது. மனிதன் மோக்ஷததில்விருப்பமுள்ளவனுகி மனைவியையும் பலவிதமானசெல்வங்களையும் இருப்பிடத்தையும் வாகனத்தையும் பலவிதமானசுபகர்மங்களையும் தள்ளுகின்றபொழுது இவனுடைய புத்தியானது விஷயங்களினின்றும் விலகுகின்றது. அரசனே!, விஷயங்களிற்பற்றினபுத்தியுடன் ஒருவிதத்திலும் தன்னுடைய நன்மையை அறியாமலிருப்பவன் எல்லா விஷயவாஸனையையுமடைந்த சித்தத்தால் (தூண்டிலிலுள்ள) இறைச்சியால் மீன் இழுக்கப்படுதல்போல இழுக்கப்படுகிறான். ஒன்றையொன்று ஆச்ரயித்ததும் வாழைத்தண்டுபோலப் பலமில்லாததும் சரீரேந்திரியங்களுடைய கூட்டத்தோடுகூடியதுமான மானிடஜன்மமானது வெள்ளத்தில் முழுகுகிறதோணிபோல முழுகுகின்றது. மனிதனுக்குத் தர்மத்திற்குக்காலமானது (இதுதானென்று) நிச்சயிக்கப்படவில்லை. மிருத்யுவும் மனிதனை எதிர்பார்க்கிறதில்லை. எப்பொழுதும் தர்மத்தைச்செய்வதே நன்மையானது. அப்பொழுதுதான் மனிதன் மிருத்யுவின்வாயிலிருந்து திரும்புவான். குருடன் தன்வீட்டில் ஜாக்ரதையுடன் அப்யாஸத்தினுலேயே நடக்கின்றதுபோல அறிஞனனவன் யோகத்துடன்கூடிய மனத்தினுல் அந்த மோக்ஷகதியை அடைகின்றான். பிறந்தால்இறப்பதும் இறந்தால் பிறப்பதும் சொல்லப்பட்டிருக்கின்றன. மோக்ஷதர்மங்களை அறியாதவன் பந்தத்தைஅடைந்து சக்கரம்போலச் சுழலுகின்றான். ஞானவழியில் சென்றவனுக்கு இம்மையிலும் மறுமையிலும் ஸுகமே.

விரிவாயுள்ளவைகள்¹ துன்பத்தைத் தருகின்றன. சுருங்கினவை களோ ஸுகத்தையளிக்கின்றன. விரிவானவையெல்லாம் ஆத்மாவைத்தவிர மற்றவைகளுக்காகவென்றும் சுருக்கமென்றதியாகத்தை ஆத்மாவுக்கு நன்மையானதென்றும் (அறிஞர்கள்) அறிகின்றார்கள். இவ்வுலகில் தாமரைத்தண்டில் ஒட்டினசேறு சீக்கிரம் விட்டுப்போகிறதுபோலப் புருஷனுடைய ஆத்மாவானது மனத்தால் விடுபடுகிறது. மனமானது ஆத்மாவை இழுக்கிறது. ஆத்மா மனத்துடன் சேருகிறது. அது யோகத்துடன் கூடுகிறபொழுது அந்தப் பரமாத்மாவைப் பார்க்கிறது. இந்திரியவிஷயங்களில் பற்றுள்ள எவன் ஆத்மாவுக்கு வேறானவைகளின் காரியத்திலிருந்துகொண்டு அதைத் தன் காரியமாக நினைக்கிறானோ அவன் தன் காரியக்குறைவை அடைகின்றான். ப்ராஜ்ஞனுடைய ஆத்மாவும் மற்றவனுடைய ஆத்மாவும் பலமாகச்செய்யப்பட்ட புண்யபாபங்களாலே ஸ்வர்க்கத்தில் மேலான கதியையும் கீழானதிரியக்கதியையும் அடைகின்றன சுட்டமண்பாண்டத்திலுள்ள ஈரம் சுண்டிப்போவதுபோலத் தவத்தால் வாட்டப்பட்ட சரீரம் விஷயங்களில் அழுந்தாது. எவன் விஷயங்களை அதிக்ரமிக்கிறானோ அவன் அவற்றை அனுபவியான்; ஸந்தேகமில்லை. ஆத்மாவை அறியாதவன் பனிபோன்ற அஞ்ஞானத்தால் சூழப்பட்டு ஆகாரத்திலும் சிற்றின்பத்திலும் பற்றினவனாகிப் பிறவிக்குருடன்போல வழியை அறிகிறதில்லை வணிகனானவன் ஸமுத்திரததிலிருந்தும் மூலதனததிற்குத் தக்கபடி தனத்தையடைகின்றது போலவே ஜந்துவுக்கு மர்த்தியலோகமாகிற ஸமுத்திரத்திலிருந்து கர்மத்திற்கும் ஞானததிற்கும் தக்கபடி கதி ஏற்படுகின்றது. இரவு பகல்களுடைய விகாரமான உலகத்தில் மிருத்யுவானவன் ஜரையின் உருவமாகி ஸஞ்சரித்துக்கொண்டு ஸர்பபம் காற்றைப்புசிப்பது போலப் பிராணிகளைப் புசிக்கின்றான் பிறந்த பிராணியானது தன்னால் செய்யப்பட்ட கர்மங்களை அடைகின்றது. இவ்வுலகத்தில் ஒருவனும் தன்னால் செய்யப்படாத பிரியம் அப்ரியமொன்றையும் அடைகிறதில்லை. சுபாசுபங்களான கர்மங்கள் மனிதனைப் படுத்திருக்கையிலும் நடக்கையிலும் இருக்கையிலும் தொழிலைச்செய்கையிலும் எப்பொழுதும் வந்தடைகின்றன. புருஷன் அக்கரையை அடைந்து மறுபடியும் அடைய யத்தனிக்கிறதில்லை. இந்த ஜந்துவுக்கு ஸம்ஸார மகாஸமுத்திரத்தில் தாங்கமுடியாதகெடுதல் காணப்படுகிறதன்றோ? பெரிய பிரவாகத்தில் மரக்கலமானது கயிற்றினால் மீகாமனுடைய

1 'யாகமுதலானவை' என்பது பழையவுரை.

அபிப்பிராயப்படி செல்லுகின்றதுபோலச் சரீரமானது மனத்தின் அபிப்பிராயப்படி காரியத்தைச் செய்கிறது; ஸமுத்திரத்தைச் சுற்றிலும் அதற்கு வேறான நதிகள் வந்துவிழுவதுபோல மனத்தின் வாஸனையால் எப்பொழுதும் (ஜந்துவைத்) தன்னியற்கைக்கு வேறான ஸ்வபாவமானது சுற்றிவளைகின்றது. பலவிதமான ஸ்நேகபாசங்களாலே பற்றுதலுள்ளமனமுடைய மனிதர்கள் ப்ரகிருதியிலிருந்துகொண்டு, ஜலத்தில மணலால் கட்டப்பட்ட வீடுபோலச் சிதறுகின்றார்கள். சரீரமாகிற கிருகத்திலிருப்பவனும் சௌசமாகிற தீர்த்தத்தையுடையவனும் ஞானவழியில் நடப்பவனுமாயிருக்கிற தேகிக்கு இஹத்திலும் பரத்திலும் ஸுகம். விரிவாயுள்ளனவெல்லாம் துன்பத்தைத் தருகின்றன. சுருக்கமானவைகளோ! ஸுகத்தைக் கொடுக்கின்றன விரிவானவைகளெல்லாம் தன்னைத்தவிர மற்றவைகளுக்காகவென்றும் தியாகத்தை ஆத்மஹிதமாகவும் வித்வான்கள் அறிகின்றார்கள். தோழர்களின் கூட்டமானது சங்கற்பத்தால் உண்டாகின்றது. ஞாதிகள் காரணத்தை முன்னிட்டு ஏற்பட்டவர்கள். பத்தினியும் புத்திரனும் வேலைக்காரனும் தம்முடைய பிரயோஜனத்தை [1]அனுபவிக்கின்றார்கள். தாயும் தந்தையும் எவனிடமிருந்தும் எதையும் அடைகிறதில்லை ஜந்துவானது தான் செய்த தானத்தைக் கட்டமுதாகக்கொண்டு தன் வினைப்பயனை அடைகின்றது. மாதாவும் பிதாவும் புத்திரனும் பிராதாவும் மனைவியும் மித்ரர்களின் கூட்டமும், ஸுவர்ணம் வைத்திருக்கும் பெட்டியில் [2]அரக்குமுத்திரைபோலக் காணப்படுகின்றார்கள் முன்செய்த நல்வினை தீவினைகளெல்லாம் செய்தவனை அடைகின்றன. அந்தராத்மாவான ஈஸ்வரர் அப்பொழுது நேரிட்ட கர்மபலனையறிந்து அதற்குத்தக்கபடி புத்தியை ஏவுகின்றார். எவன் முயற்சிசெய்து உதவிகளையடைகின்றானோ அவனுடைய ஒரு கார்யமும் ஒருபோதும் கெட்டுப்போகிறதில்லை. சலனமற்றமனமுடையவனும் கார்யத்தில் முயற்சிசெய்தவனும் சக்தியுள்ளவனும் மனோதைர்யமுடையவனும் பண்டிதனுமாயிருப்பவனை ஸம்பத்தானது எந்நாளும் கிரணங்கள் சூரியனை விடாததுபோல விடுகிறதில்லை. பரலோகநம்பிக்கை, முயற்சி, உபாயத்துடன்கூடிய புத்தி இவற்றோடு காரியத்தை ஆரம்பிக்கிற குற்றமற்றஸ்வபாவமுடையவன் காரியத்திலிருந்தும் கெடுதலடையான். எல்லாப்பிராணிகளும் முன்பு சுபாசுப

[1] வேறுபாடம்.

[2] 'விருப்பப்படிவெளிவரவிடாமல் தடுத்துக்கொண்டிருக்கிறார்கள்' என்பது கருத்து.

மானகர்மங்களைச் செய்தமையால் கர்ப்பமுதல் தாமாகவே தம்முடைய சுபாசுபகர்மங்களைத் தவறாமல் அடைகின்றன. பரிகரிக்கமுடியாதவனும் (கர்மாவுக்குச்) [1]சமமான கதியையுடையவனுமான மிருத்யுவும் ஆயுளின் முடிவைச்செய்கின்ற காலத்துடன்சேர்ந்து, வாயு வாளால் அறுபட்ட மரப்பொடியைப்போல, (பிராணிகளை) முடிவை அடையச் செய்வான். எல்லா மனிதனும் தனக்குஏறபட்ட ஜாதிஆசாரத்தையும் தன்னால்செய்யப்பட்ட புத்திரன்முதலானவிஸ்தாரத்தையும் நல்லகுடிப் பிறப்பையும் தனக்குவியலைச்சேர்ப்பதையும் தன்னால்செய்யப்பட்ட சுபாசுபகர்மத்தால் அதற்குத்தக்கபடி அடைகின்றான்' என்றார். அரசனே! *தர்மத்தையுணர்ந்தவர்களில் ஸ்ரேஷ்டனான ஜனகன், மனோவசமுடைய பராசரர் இவ்விதம்சொல்லக்கேட்டு, உண்மையை அறிந்து மிகுதியானஸந்தோஷத்தை அடைந்தான்" என்று சொன்னார்.

---

## மூந்நூற்றைந்தாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

### (உண்மைஅடக்கமுதலியவற்றைப்பற்றி ஸாத்யர்களுக்கும் ஹம்ஸத்திற்கும்நடந்த ஸம்பாஷணை)

யுதிஷ்டிரர், "ஓ! பிதாமஹரே! உலகத்திலுள்ளவித்வான்களானமனிதர்கள் உண்மையையும் அடக்கத்தையும் பொறுமையையும் ஞானத்தையும் புகழ்கினறார்கள். இதில் உம்முடைய அபிப்பிராயம் என்ன?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"யுதிஷ்டிரா! இந்தவிஷயத்தில் ஸாத்யர்களுக்கும் ஹம்ஸத்திற்கும்நடந்த ஸம்வாதரூபமான பழையசரித்திரத்தை இப்பொழுது உனக்குச் சொல்லுகிறேன். ஒருகாலத்தில் ஆதியுமந்தமுமற்றபிரம்மதேவர் பொன்மயமான ஹம்ஸவேஷங்கொண்டு மூன்றுஉலகங்களிலும் ஸஞ்சரித்துவந்தார்; அப்பொழுது ஸாத்யர்களிடம் வந்துசேர்ந்தார். ஸாத்யர்கள், 'பக்ஷியே! நாங்கள் ஸாத்யர்களென்றதேவர்கள். உன்னை ஒன்று கேட்கின்றோம். (அதிலும்) மோக்ஷதர்மத்தைப்பற்றி உன்னிடம் வினவுகின்றோம். நீயோ மோக்ஷத்தையறிந்தவனும். நீ பண்டிதனென்றும் தைரியமாகச்சொல்லுகின்றவனென்றும் நாங்கள் கேட்டிருக்கிறோம். பக்ஷியே! உன்னுடைய இனிய

---

[1] 'ஸமகதி' என்பதுமூலம்; 'தாரதம்யமின்றி யாரிடத்தும் ஒருநிகரா யிருப்பவன்' என்றும் சொல்லலாம்.

சப்தமானது எங்கும் கேட்கிறது. ஓ! பக்ஷியே! நீ எதை மிகவும் சிறந்ததாக நினைக்கின்றாய்? ஓ? மஹாத்மாவே! உன்மனம் எதில் பற்றுகின்றது? எந்தக்காரியத்தை எல்லாக்காரியங்களுள்ளும் சிறந்ததும் நிகரற்றதுமாக நினைக்கின்றாயோ, [1]இவ்வுலகில் மனிதன் எதைச்செய்து ஸகலபந்தங்களினின்றும் விரைவில் விடுபடுகின்றானோ அந்தக்காரியத்தை எங்களுக்கு உபதேசம்பண்ணு' என்று வினவ, ஹம்ஸமானது சொல்லததொடங்கிற்று. 'அமிருதத்தை அருந்தும் தேவர்களே! அந்தக்காரியத்தைக் கேளுங்கள். [2]தவம், [3]தமம், ஸத்யம், மனத்தை அடக்குதல் இவைகள் செய்யததக்கவை. மனத்தினுடைய ஆசைமுதலான எல்லா முடிச்சுக்களையும் விடுத்துப் பிரியம் அப்பிரியம் (இரண்டையும்) [4]தன்வசமாகச செய்யவேண்டும். ரகஸ்யமான குற்றத்தை வெளிப்படுத்தி வருத்தத்தை உண்டாக்கவும் கடுஞ்சொல்சொல்லவும்கூடாது கீழ்ப்பட்டவனிடமிருந்து [5]உயர்ந்த விஷயத்தைக் கிரகிக்கக்கூடாது. பிறருக்கு அசசத்தையுண்டாக்குவதும் அமங்களமும் நரகத்தைக்கொடுபபதுமான வார்த்தையைச் சொல்லக்கூடாது. வாயினின்றும் சொற்களாகிற பாணங்கள் விழுகின்றன. அவைகளாலடிக்கபபட்டவன் இரவும் பகலும் துக்கிக்கின்றான். அவைகள் பிறனுடைய மர்மங்களுக்கு வேறான இடங்களில் விழுகிறதில்லை அவற்றைபபண்டிதனானவன் பிறரிடத்தில விடக்கூடாது. பிறன் இவனை அதிகவார்த்தைகளான பாணங்களால் மிகவும் அடிப்பானானால் அதைபபொறுத்தலே செய்யத்தக்கது. எவன் கோபமூட்டப்பட்டும் சந்தோஷத்தையே அடைகிறானோ அவன் இதரனுடைய புண்யத்தை அடைகிறான். வசையையுண்டுபண்ணுவதும் ஆக்கிரகத்தால் அப்பிரியததைச் செய்வதும் ஜ்வலிக்கிறதுமான கோபத்தை அடக்குகிறவனும் கெட்டஎண்ணமில்லாதவனும் சந்தோஷமுடையவனும் அஸூயையற்றவனுமாயிருப்பவன் பிறருடைய புண்யத்தை அடைகின்றான். நான் எப்பொழுதும் வையப்பட்டாலும் ஒன்றும் சொல்லுகிறதில்லை; அடிக்கப்பட்டாலும் பொறுத்துக்கொண்டிருக்கிறேன் பெரியோர்கள் பொறுமையைச் சிறந்ததாகச் சொல்லுகின்றார்கள்; அபபடியே ஸத்யத்தையும் கபடமின்மை

---

1 இங்கு ஒருசொல் விடப்பட்டது.

2 தன் தாமத்தையனுஷ்டிப்பது.

3 ஐம்பொறியடக்கம்.

4 அவற்றின்வழியில் தான் செல்லக்கூடாது.

5 'பரம்' என்பது மூலம்; 'சாஸ்திர ரஹஸ்யம்' என்பது பழையவுரை.

யையும் குரூரத்தனமில்லாமையையும் சிறந்தனவாகச் சொல்லுகின்றார்கள். வேதத்தினுடைய ரஹஸ்யம் ஸத்யம். ஸத்யத்தின் ரஹஸ்யம் அடக்கம். அடக்கத்தின்ரகஸ்யம் மோக்ஷம். இதுவே எல்லாருடையஉபதேசமும். எவன் வாக்கின்வேகம் மனத்தின்கோபத்தினுடைய வேகம் அதிக ஆசையின்வேகம் உதரத்தின் வேகம் காமத்தின்வேகம் ஆகிய மிருகின்றவைகளான இந்தவேகங்களை ஸகிபபானோ அவனையே நான் பிராம்மணனாகவும் முனியாகவும்; நினைக்கின்றேன். கோபத்தையடையாதவன், கோபிக்கின்றவனுக்கு மேலானவன். பொறுமையுள்ளவன் பொறுமையில்லாதவனுக்கு மேலானவன். மனிதன் விலங்குகளுக்கு மேலானவன் அப்படியே, ஞானவான் ஞானமில்லாதவனைக்காட்டிலும் மேலானவன் தன்னை ஒருவன் வைதாலும் தான் திரும்ப அவனை வையக்கூடாது. இவ்விதம் பொறுமையுள்ளவனுடைய சினமானது வைதவனை எரிக்கின்றது இவனுடைய புண்யத்தையும் அவன் அடைகின்றான். எவன் அதிகமாகநிந்திக்கப்பட்டாலும் கடினவார்த்தையையும் அதிகமாகத் துதிக்கப்பட்டாலும் பிரியமானவார்த்தையையும் சொல்லுகிறதில்லையோ, எவன் அடிக்கப்பட்டாலும் தனக்கு வன்மையிருந்தும் பதில் அடியாமலும் அடித்தவனை அவனுக்குக் கெடுதலைபபிரார்த்தியாமலுமிருக்கின்றானோ அவனை இவ்வுலகில் தேவர்கள் அடையவிரும்புகிறார்கள். [1]கீழானவனையும் மேலானவனையும் ஸமமானவனையும் அவர்கள் தன்னை அவமதித்தாலும் அடித்தாலும் தான் அவர்களைக் கோபியாமல் பொறுக்கவேண்டும் இப்படியிருந்தால் மோக்ஷஸித்தியை அடைவான் நான் (எல்லாவற்றாலும்) பூர்ணனாயிருந்தாலும் எப்பொழுதும் பெரியோர்களை உபாஸிக்கின்றேன் எனக்கு ஆசையும் கோபமும மேலோங்குகிறதில்லை. நான் எதையும் அடையவிரும்பித் தர்மத்தை விட்டு விலகுகிறதில்லை. ஒன்றையும் தீயவழியில் அடைகிறதில்லை. என்னை ஒருவன் சபித்தாலும் நான் திரும்ப அவனைச் சபிக்கிறதில்லை. இவ்வுலகத்தில் அடக்கத்தை மோக்ஷத்திற்கு வாயிலாக நினைக்கின்றேன். அப்படிப்பட்ட இந்த அடக்கத்தை ரஹஸ்யமான [2]பிரம்மமாகச் சொல்லுகிறேன் மானிடஜன்மத்தைக் காட்டிலும் மிகவும்மேலானது ஒன்றுமில்லையன்றோ? தீரனானவன் மேகங்களிலிருந்தும் சந்திரன்விடுபடுவதுபோலப் பாவங்களினின்றும்விடுபட்டுக் களங்கமற்றவனும் காலத்தை எதிர்பார்க்கிறவனுமாயிருந்து

1 'பாபீயஸ:' என்பது மூலம்; 'மிக்க பாபமுள்ளவன்' என்பது பொருள்.

2 'குஹ்யம் ப்ரம்ம' என்பது மூலம்; 'பெரியரஹஸ்யம்' என்பது பழையவுரை.

தைரியத்தினால் ஸித்தியையடைகின்றான். எல்லாராலும் பூஜிக்கத் தக்கவனும் கர்விக்தற்குரியகாலத்திலும் தூண்போலிருப்பவனும் தன்விஷயத்தில் ஜனங்களால் சிறிதும் அபவாதம் சொல்லப்படாதவனும் அடங்கின மனமுடையவனுமாயிருப்பவன் தேவர்களை அடைகின்றான். உலகத்தில் விரோதிகளான ஜனங்கள் ஒருவனிடத்திலுள்ள கெட்ட குணத்தைச்சொல்ல விரும்புவதுபோல நல்லகுணங்களைச் சொல்லவிரும்புவதில்லை. எவனுடையவாக்கும் மனமும் எப்பொழுதும்காக்கப்பட்டு நன்றாகநிலைநிறுத்தப்படுகின்றனவோ அவன் வேதங்களும் தவமும் தியாகமுமாகிய [1]எல்லாவற்றையும் அடைவான். அறிவுள்ளவன் அறிவில்லாதவர்களை நிந்தையினாலும் அவமானத்தினாலும் அறிவிக்கக்கூடாது; அதனால், அவர்களை [2]விருத்திசெய்யவும்கூடாது. தனக்குத் துன்பம்விளைத்துக்கொள்ளவும் கூடாது. பண்டிதனானவன் அமிருதத்தினால்திருப்திஅடைவதுபோல அவமானத்தால் திருப்தியடையவேண்டும். (அப்படிச்செய்தால்) அவமானிக்கப்பட்டவன் ஸுகமாகத் தூங்குவான்; அவமானம்செய்தவன் நசிக்கின்றான். கோபமுடையவன்செய்கிற யாகத்தையும் தானத்தையும் தவத்தையும் ஹோமத்தையும் முழுதும் யமன் கொண்டு போய்விடுகிறான். கோபமுடையவனது சிரமமானது வீணாகிவிடுகிறது. ஓ! அமரர்களிலுத்தமர்களே! குறிகள், உதரம், கைகள், நான்காவதானவாக்கு ஆகியஇந்நான்கையும் நன்குகாப்பவனே தர்மமுணர்ந்தவன். உண்மை, அடக்கம், நேராயிருத்தல், க்ரூரமில்லாமை, ஸந்தோஷம், பொறுமை இவைகளையுடையவனும் வேதாத்யயனத்தைநித்யமாகவுடையவனும் பிறரை விரும்பாதவனும் தவறாத நல்ல சீலமுடையவனுமாயிருப்பவன் உயர்வானகதியுடையவனாவான். கன்றானது தாயின் நான்குமுலைகளையும் பார்ப்பதுபோல எல்லாவேதங்களையும விசாரித்ததில் ஒரு வேதத்திலும் சத்தியத்தைக்காட்டிலும் மிகவும் பரிசுத்தமானதொன்றையும் நான் அறியவில்லை. நான் ஸஞ்சரித்துக்கொண்டு தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் ஸமுத்திரத்திறகுத்தோணிபோல ஸ்வர்கத்திற்கு ஸத்தியத்தைப் படியாகச் சொல்லுகின்றேன். ஒருவன் எப்படிப்பட்டவர்களுடன் வியவஹாரம் செய்கின்றானோ, எப்படிப்பட்டவர்களை ஸேவிக்கின்றானோ, எப்படிப் பட்டவனாவதற்கு விரும்புகின்றானோ அப்படிபட்டவனாகின்றான்.

---

1 'இவற்றின்பயனை' என்பது பழையவுரை.

2 அதனால் அவர்களுக்கு அதிககோபமுண்டாகி இவனுக்குத் துன்பம் தான் ஏற்படுமென்பது கருத்து.

நல்லவனை அடுத்தாலும் கெட்டவனை அடுத்தாலும் தவமுடையவனை அடுத்தாலும் திருடனை அடுத்தாலும் ஆடையானது சாயத்தின் வசத்தைஅடைவதுபோல அவன் அவர்களுடையவசத்தை அடைகின்றான். எப்பொழுதும் தேவர்கள் ஸாதுக்களுடன் ஒற்றுமையாயிருக்கின்றார்கள். மானுஷவிஷயத்தை விரும்பவில்லை. சந்திரன் ஒரேவிதமாயிருப்பதில்லை. வாயுவும் ஸமமாயிருப்பதில்லை வளர்வதும் தேய்வதுமான விஷயதத்தை எவன் அறிந்தானோ அவனே அறிந்தவன் இருதயத்தினுள்ளிருக்கின்ற புருஷன் தோஷமில்லாமலிருந்தால் ஸாதுக்களுடைய மார்க்கத்திலிருக்கின்ற அவனாலேதான் தேவர்கள் பிரீதியடைகின்றார்கள் எப்பொழுதும் குறியிலும் வயிற்றிலும் மிகவும் பற்றுள்ளவர்களும் திருடர்களும் எந்நாளும் கடுஞ்சொல்லுடையவர்களுமாயிருப்பவர்களைத் தர்மமிழந்தவர்களெனஅறிந்து தேவர்கள் தூரததில் விலக்குகின்றார்கள் தேவர்கள், இழிவான புத்தியுடையவனும் (வர்ஜ்யாவர்ஜ்யம் இல்லாமல்) எல்லாவற்றையுமருந்துகிறவனுமாயிருக்கிற பாபகர்மமுடையவனால் சந்தோஷத்தையடைவதில்லை. எந்தமனிதர்கள் ஸத்தியத்தையேவிரதமாகக்கொண்டவர்களும் நன்றியறிவுடையவர்களும் தர்மத்தில்பற்றுள்ளவர்களுமாயிருக்கின்றார்களோ அவர்களோடுகூடத தேவர்கள் ஸுகத்தைப் பங்கிட்டடைகின்றார்கள். பேசுவதைக்காட்டிலும் பேசாமலிருப்பதைச் சிறந்ததாகச் சொல்லுகின்றார்கள். (பேசினால்) ஸத்தியமானவார்த்தையைச் சொல்லவேண்டும். அதை இரண்டாவதாகவும், தர்மத்தினின்றுமவிலகாத வார்த்தையைச் சொல்லுவானேயானால் அதைமூன்றாவதாகவும், பிரியமான வார்த்தையைச்சொல்லுவானானால் அதை நான்காவதாகவும் சொல்லுகின்றார்கள்' என்றது. ஸாத்யர்கள், 'இந்தஉலகம் எதனால் சூழப்பட்டிருக்கிறது ? எதனால் பிரகாசிக்கிறதில்லை? எதனால் நட்பினைவிடுகின்றது? எதனால் ஸ்வர்க்கத்தையடைகிறதில்லை? ' என்று கேட்டார்கள். ஹம்ஸம், 'உலகமானது அஜ்ஞானத்தால் சூழப்பட்டிருக்கிறது; மத்ஸரத்தால் பிரகாசிக்கிறதில்லை; லோபத்தால் நண்பர்களைவிடுகிறது. ஸங்கத்தால் ஸ்வர்கத்தையடைகிறதில்லை' என்றது. ஸாத்யர்கள், 'பிராம்மணர்களில் எவன் ஸந்தோஷத்தை அடைகிறான்? எவன் அநேகர்களுடனிருந்தும் மௌனமாயிருக்கின்றான்? எவன் வலிமையற்றவனாயிருந்தாலும் வலிமையுள்ளவனாயிருக்கிறான்? எவன் மனிதர்களுடையசண்டையில் சேராமலிருக்கிறான் ? என்றுகேட்டார்கள். ஹம்ஸம், ' பிராம்மணர்களுள் பேரறிவுள்ளவனொருவனே ஸந்தோஷித்துக்கொண்டிருக்கிறான். பேரறிவுள்ள ஒருவன் அநேகர்களுடனிருந்

தும் மௌனமாயிருக்கிறான். பேரறிவுள்ளவனொருவன் துர்ப்பலனு யிருந்தாலும் பலவானுயிருக்கிறான். பேரறிவுள்ளவன் இவர்களுடைய கலகத்தை அனுஸரிக்காமலிருக்கிறான்'" என்று சொல்லிற்று ஸாத் யர்கள், 'பிராம்மணர்களுக்கு எது தேவத்தன்மையாகவும் எது ஸாதுத்தன்மையாகவும் சொல்லப்படுகின்றன? எது அவர்களுடைய அஸாதுத்தன்மையாகக் கருதப்பட்டிருக்கிறது? எது அவர்களுக்கு மனிதத்தன்மையாகக் கருதப்பட்டிருக்கிறது' என்றனர். ஹம் ஸம், 'இவர்களுக்கு வேதாத்யயனமானது தேவத்தன்மையாகவும் விரதமானது ஸாதுத்தன்மையாகவும் சொல்லப்படுகின்றன பரநிந் தையானது அஸாதுத்தன்மையாகவும் மரணமானது மனிதத் தன்மையாகவும் சொல்லப்படுகின்றன' என்று சொல்லிற்று. பரம ரும் தேவரும் பகவானும் நித்யரும் விகாரமில்லாதவருமாயிருக்கிற (ஹம்ஸரூபியான) ப்ரம்மாவானவர் இவ்விதம் சொல்லிவிட்டு ஸாத்யர் களான தேவகணங்களோடு ஸ்வர்க்கத்தையடைந்தார் புகழுக்குக் காரணமும் ஆயுளுக்குக்காரணமும் ஸ்வர்க்கத்தைத் தாத்தக்க நிலைத்த புண்ணியமுமாயிருக்கிற இது தேவதேவரும் மேலானவரும் அழி வற்றவருமான ப்ரம்மதேவரால் காண்பிக்கப்பட்டது இவ்விதம் ஸாத்யர்களுக்கும் ஹம்ஸத்திற்கும் நடந்த சிறந்த ஸம்வாதமானது சொல்லப்பட்டது. சரீரமானது கர்மங்களுக்குக் காரணம் (அதில்) ஸாதுத்தன்மையானது ஸத்யமாகச் சொல்லப்படுகின்றது" என்று சொன்னார்.

---

## முந்நூற்றுருவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

### (யோகமுறையும் யோகிகளின் சிறப்பும்.)

யுதிஷ்டிரர், "ஐயா! எனக்கு ஸாங்கியத்திலும் யோகத்திலு மிருக்கிறவிசேஷத்தைச் சொல்லவேண்டும். தர்மத்தையறிந்தவரே! குருக்களுள் சிறந்தவரே! நீர் எல்லாமறிந்தவரன்றோ?" என்று வினவ, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்

"ஸாங்கியர்களான பிராம்மணர்கள் ஸாங்கியத்தைச் சிலாகிக்கின் றார்கள். யோகிகளான பிராம்மணர்கள் யோகத்தைச் சிலாகிக்கின்றார் கள். தங்கள் மதத்தின் உத்கர்ஷத்தின்பொருட்டு மேலானகாரணத் தைச் சொல்லுகின்றார்கள் 'சத்துருக்களை வதைக்கிறவனே! புத்தி

மான்களான யோகிகள் ஈச்வரனில்லாத விஷயத்தில் எப்படி முக்தியை யடைவானென்று இவ்விதம் (தங்கள) காரணத்திற்கு நன்றாக உத்கர்ஷத்தைச் சொல்லுகின்றார்கள். ஸாங்கியர்களான ப்ராம்மணர்களும் நன்றாக இந்தக்காரணத்தைச சொல்லுகின்றார்கள் 'இவ்வுலகில் (பிராணிகளுடைய) எல்லாக்கதிகளே புரிந்து விஷயங்களில் விரக்தனுயிருப்பவன் சரீரம்நீங்கியபிறகு மிகவும் செவ்வையாக முக்தியடைவான்; வேறுவிதமானல் முக்தியடையான்' என்கிற இந்த ஸாங்கியத்தை மகாப்ராஜ்ஞர்களான அவர்கள் (மோக்ஷத்திற்குரிய) ஞானமாகச் சொல்லுகின்றார்கள். தன்னுடைய பக்ஷத்தில் உறுதியுள்ளதும் நன்மையைத்தரத்தக்கதுமான வசனமானது காரணமாகக் கொள்ளத்தக்கது சிஷ்டர்களால்ஸம்மதிக்கப்பட்ட உன்னைப் போன்றவர்களாலே சிஷ்டர்களுடையமதமானது கொள்ளத்தக்கதன்றோ? யோகிகள் ப்ரத்யக்ஷத்தைக் காரணமாகவுடையவர்கள். ஸாங்கியர்கள் சாஸ்திரத்திலுறுதியுடையவர்கள். அப்பா! யுதிஷ்டிர! இந்த இரண்டு சாஸ்திரங்களும் எனக்கு ஸம்மதங்களே. அரசனே! இவைகளாலுண்டாகிற இரண்டுஞானங்களும் சிஷ்டர்களுக்குச சம்மதவாக ஒப்புக்கொள்ளபபட்டவை அவைகள், சாஸ்திரப்படி அனுஷ்டிக்கப்பட்டால் மேலானகதியை அடையும்படி செய்கின்றன குற்றமற்றவனே! இருவருக்கும்சுத்தியானது ஒரேவிதம்தான் பிராணிகள்விஷயத்தில் தயையும் ஒன்றே. விரதங்களைத்தரிப்பதும் ஒன்றே. அவர்களுக்குச் சாஸ்திரமானது ஸமமாயில்லை. அவர்களுக்கு மிகவும் ஸூக்ஷ்மவிசாரமில்லாத விஷயத்தில் ஒரேசாஸ்திரமேற்படும்'' என்று சொன்னர். யுதிஷ்டிரர், ''ஓ! பிதாமஹரே! இவர்களுக்கு விரதமும் சௌசமும் பிராணிதயையும் அப்படியே பயனும் ஸமமேயானல் சாஸ்திரமாத்திரம் என்னகாரணத்தினல் ஸமமில்லை? அதை எனக்குச் சொல்லும்'' என்றுகேட்டார். பீஷ்மர், ''அந்தயோகிகள் ராகம், மோகம், ஸ்நேகம், காமம், க்ரோதம் இவ்வைந்துதோஷங்களையும் யோகத்தால் நன்றாக அறுத்துவிட்டு மோக்ஷபதத்தை அடைகின்றார்கள. பருத்தமத்ஸ்யங்கள் 'வலையையறுத்துவிட்டு மறுபடியும் ஜலத்தையடைவதுபோலத் தோஷங்களைத் தொலைத்துவிட்டு யோகிகளானவர்கள் அந்தமோக்ஷபதத்தை அடைகின்றார்கள் வேந்தே! பலமுடையமிருகங்கள் வலையையறுத்து எல்லாக்கட்டுகளிலிருந்தும் விடுபட்டுத் தடையில்லாதமார்க்கத்தை அடைவதுபோல யோகபலமுடையவர்கள் லோபத்தாலுண்டானபந்தங்களை யோகத்தாலறுத்துவிட்டு நிர்மலமாயும் மங்களமாயுமிருக்கிற மேலானமார்க்கத்தை அடைகின்றார்

கள். அரசனே! பலமில்லாதமற்றமிருகங்கள் வலைகளில் (சிக்கிக் கொண்டு) நசிப்பதுபோல யோகபலமில்லாதவர்கள் நசிப்பார்கள். ஸந்தேகமில்லை. குந்திபுத்திர! ராஜஶ்ரேஷ்ட! பலமில்லாதமீன்கள வலையில் அகப்பட்டு நாசத்தை அடைவதுபோலச் சிறிதும்பலமில்லாத யோகிகளும் நாசத்தை அடைவார்கள். பகைவர்களை அடக்குகிறவனே! பக்ஷிகள் நுண்ணியவலையை அடைந்து அதில்சிக்கிக்கொண்டு நாசத்தை அடைவதுபோலவும் பலமுள்ளவைகள்விடுபடுவதுபோலவும் கர்மத்தாலுண்டானபந்தங்களால்கட்டுண்ட பலமில்லாதயோகிகள் நசிக்கின்றார்கள். பலமுடையவர்கள் விடுபடுகின்றார்கள். அரசனே! பிரபுவே! அற்பமும் பலமில்லாததுமான அக்னியானது பருத்தவிறகுகளால் நிரப்பப்பெற்றால் அவிந்துபோவதுபோலப் பலமில்லாதயோகியானவன் நசித்துவிடுகிறான். அரசனே! அந்த அக்கினியே திரும்பவும்பலமடைந்து வாயுவுடன் சேர்ந்துகொண்டு பூமிமுழுமையும் சீக்கிரத்தில் எரித்துவிடுவதுபோலப பலத்தையடைந்தயோகியானவன் பிரகாசிக்கின்றதேஜஸையும் பெரியபலத்தையுமடைந்து பிரளயகால ஆதித்தியன்போல உலகமனைத்தையும் எரியசெய்வான். அரசனே! பலமில்லாதமனிதன் வெள்ளத்தாலிழுக்கப்படுவதுபோலப் பலமற்றவனை யோகியானவன் தன்வசமின்றி விஷயங்களாலே இழுக்கப்படுகிறான். அதேபெரியவெள்ளத்தை யானையானது தடுத்துவிடுவதுபோல யோகபலத்தை அடைந்து பலவிஷயங்களை யோகியானவன் விலக்கிவிடுகிறான். குந்தியின்புத்திரனே! யோகபலத்தையுடையவர்கள் சக்தியுடையவர்களும் பிறருக்குவசமாகாதவர்களுமாகி யோகத்தினாலே பிரஜைகளுக்குப்பதிகளான (மரீசிமுதலிய) வர்களிடத்திலும் ரிஷிகளிடத்திலும் தேவர்களிடத்திலும் மஹாபூதங்களிடத்திலும் பிரவேசிக்கின்றார்கள். ஓ! அரசனே! அளவற்றபலமுடையயோகியை அடக்க யமனும் கோபத்தையடைந்த அந்தகனும் பயங்கரமான பராக்ரமமுடையமிருத்யுவுமாகிய எல்லோரும் வல்லவர்களல்லர். பரதஶ்ரேஷ்டனே! யோகியானவன் யோகபலத்தையடைந்து அநேகமாயிரம் சரீரங்களை உண்டாக்கிக்கொள்வான்; அந்த எல்லாச்சரீரங்களாலும் பூமியில் ஸஞ்சரிப்பான். ஐயனே! அவைகளில் ஒன்று விஷயங்களை அனுபவிக்கும். (ஒன்று) மறுபடியும் உக்கிரமானதவத்தைச் செய்யும். சூரியன் தன் கிரணக்கூட்டங்களைச் சுருங்கச்செய்வதுபோல அவன் மறுபடியும் (அந்தச்சரீரங்களைக்) கிரகித்துவிடுவான். அரசனே! பலமுள்ளவனும் பந்தத்தையறுக்கவல்லவனுமான யோகிக்கு மோக்ஷவிஷயத்தில் வல்லமையானது ஸந்தேகமின்றி உண்

டாகும். அரசனே! நன்கு தெரிவிக்கிறதற்காக யோகத்தா லடையப்பட்ட பலங்களை நான் சொன்னேன். மறுபடியும், உனக்கு உதாரணத்திற்காக ஸூக்ஷ்மங்களைச் சொல்லுவேன். தலைவனே! பரதஶ்ரேஷ்டனே! மனத்தை ஒருவழிப்படுத்தும் விஷயத்திலும் ஓரே இடத்தில் நிற்கச்செய்கின்ற விஷயத்திலும் ஸூக்ஷ்மமான என்னுடைய திருஷ்டாந்தங்களைக் கேள். வில்லாளியானவன் அஜாக்ரதையின்றி மனத்தை ஒருவழிப்படுத்தி லக்ஷ்யத்தை அடிப்பதுபோல யோகியானவன் மனத்தை நன்கு ஒருவழிப்படுத்தி ஸம்சயமின்றி மோக்ஷத்தை அடைகிறான். அரசனே! ஒருவன் (தலையிலிருக்கிற) எண்ணெய்நிறைந்தகுடத்தில் மனத்தைச் சலியாமல்வைத்துக்கொண்டு ஊன்றியமனத்துடன் ஜாக்கிரதையுள்ளவனுமாகிப் படியில் ஏறுவதுபோலவே இந்த யோகியும் சலியாததானமனத்தை அடைந்து (தன்னுடைய) ஆத்மாவை நிர்மலமும் ஸூர்யனுக்குச்சமமான தரிசனத்தையுடையதுமாகச் செய்கின்றான். குந்தீபுத்திரனே! அரசனே! நரபதியே! ஓடக்காரனானவன் மனத்தை ஒருமுகமாகவே செய்துகொண்டு பெரிய ஸமுத்திரத்தைஅடைந்தஓடத்தை விரைவில் பட்டணம் கொண்டுவந்து சேர்ப்பதுபோலத் தத்வஜ்ஞானியானவன் யோகததினால் மனத்தை ஒருவழிப்படுத்திக்கொண்டு இந்தத் தேகத்தைத்தள்ளிவிட்டு அடைதற்கரிய ஸ்தானத்தை அடைகின்றான். புருஷஶ்ரேஷ்டனே! ஸாரதியானவன் நல்லகுதிரைகளைப் பூட்டி ஜாக்ரதையுடன் வில்லாளியை அவனுக்கு இஷ்டமான இடத்தில் சேர்ப்பிப்பதுபோல யோகியானவன் லக்ஷ்யங்களில் மனத்தை ஜாக்கிரதையுடன் ஊன்றச்செய்து விடப்பட்டபாணம் லக்ஷ்யத்தை அடைவதுபோலப் பரமானஸ்தானத்தை விரைவில் அடைகின்றான். எந்த யோகியானவன் மனத்தை ஆத்மாவில் பற்றச்செய்து சலிக்காமலிருக்கிறானோ, அவன் தனது பாவத்தை நாசம் செய்கிறான்; பரிசுத்தமுள்ளவர்களடைகின்ற அழிவற்றபதத்தையும் அடைகின்றான். அளவற்ற பராக்கிரமமுடையவனே! அரசனே! எந்த யோகியானவன் [1]மஹாவிரதமென்கிற விரதத்தில்பற்றிநின்று நாபி, கண்டம், சிரம், ஹ்ருதயம், மார்பு, விலாப்புறங்கள், நேத்திரம், ஶ்ரோத்திரம், க்ராணம் இந்தஸ்தானங்களிலே தானாகவே ஸூக்ஷ்மமான (தனது) மனத்தை நன்கு சேர்ப்பிக்கிறானோ அவன் மலைபோன்ற புண்ணிய

---

1 சாஸ்திர விஹிதமான ஜாதிஹிம்ஸை தேசவிசேஷத்தில் ஹிம்ஸை காலவிசேஷத்தில் ஹிம்ஸை காரியவிசேஷத்தில் ஹிம்ஸைமுதலியவைகளைக் கூட விட்டிருத்தல்.

பாபகர்மங்களை சீக்கிரமாக எரித்துவிட்டு மேலான யோகத்தை அடைந்து தான் விரும்புமபோது முக்தியடைகிறான்" என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், "ஓ! பாரதரே! யோகியானவன் எப்படிப்பட்ட ஆகாரங்களை அருந்தி எவைகளை ஜயித்து (யோக) பலத்தை அடைகின்றான்? அதை நீர் எனக்குச் சொல்லக்கடவீர்," என்று கேட்டார். பீஷ்மர், "ஓ! பாரதனே! யோகியானவன் பிண்ணாக்கையும் நொய்களையும்பக்ஷிப்பவனும் தைலங்களைத் தள்ளுபவனுமாகி யோகபலத்தை அடைவான். பகைவரையடக்குபவனே! யோகியானவன் உண்ண முடியாத [1]யவபிஷ்டத்தை நெடுங்காலம் ஒருவேளை உண்பவனும் மிகவும் சுத்தமான மனமுடையவனுமாயிருந்தால் யோகத்தின் வலிமையை அடைவான். யோகியானவன பக்ஷங்களோ மாஸங்களோ ருதுக்களோ வருஷங்களோ பகலில் மாத்திரம் பால்கலந்த ஜலத்தை அருந்தி யோகபலத்தை அடைவான அரசனே! மிகவும் சுத்தமான மனமுடைய யோகியானவன் எப்பொழுதும் எல்லாமாம்ஸத்தையும் தள்ளிவிட்டால் யோகபலத்தையடைவான் மன்னருட் சிறந்தவேந்தனே! ஆசையற்றவர்களும் மிக்க அறிவுடையவர்களும் மகாத்மாக்களுமான யோகிகள் தியானம் பிரணவஜபம் இவற்றின் மிகுதியினால் காமத்தையும் குரோதத்தையும் சீதோஷ்ணங்களையும் மழையையும் பயத்தையும் சோகத்தையும் சுவாஸத்தையும் மனிதமுயற்சியாலடையக்கூடிய விஷயங்களையும் ஜயிக்க முடியாதமனசோர்வையும் கோரமான ஆசையையும் ஸ்திரீஸங்கத்தையும் நித்திரையையும் ஜயிக்க முடியாத சோம்பலையும் ஜயித்துவிட்டு புத்தியினாலே ஸூக்ஷ்மமான ஆத்மாவை பிரகாசிக்கச் செய்கிறார்கள். பண்டிதர்களான பிராம்மணர்களுடைய இந்த மார்க்கம் செல்வதற்கு முடியாததாகக் கருதப்பட்டிருக்கிறது. பரதச்ரேஷ்டனே! இந்த மார்க்கத்தில் ஒருவனும் க்ஷேமத்தோடு செல்லுகிறதில்லை. யௌவனமுடைய ஒருவன் பயங்கரமானதும் அநேக நல்லபாம்புகளும் ... பாம்புகளுமுடையதும் ... களோடுகூடினதும் ஜலமற்றதும் பிரவேசிக்கமுடியாததும் அநேகமுள்ளுகளோடுகூடினதும் ஆகாரவஸ்துவில்லாததும் செடிகொடிகள்நிறைந்ததும் காட்டுத்தீயால் கருகினவிருக்ஷங்களுள்ளதும் திருடர்கள் நிறைந்ததுமாயிருக்கிற வனமார்க்கத்தில் க்ஷேமமாகச் செல்லுதல்போல யோகமார்க்கத்தையடைந்து செல்லுகிற பிராம்மணன் க்ஷேமத்தோடு அந்த மார்க்கத்தி

1 யவதான்யத்தின் மா.

லிருந்தும் முடிவடைவான் அந்த மார்க்கமானது வெகுதோஷங்க ளுடையதாகக் கருதப்பட்டது அரசனே! கூர்மையான கத்தி முனைகளிலும் ஸுகமாக இருக்கமுடியும். மனோவசமில்லாதவர்க ளாலே யோகத்தினுடைய தாரணைகளிலே இருக்கமுடியாது. ஐயா! அரசனே! ஓடக்காரனில்லாத ஓடங்கள் அலைகளிலிருக்கும் மனி தர்களை ஸமுத்திரத்தில் கெட்டகதியை அடையசசெய்கிறதுபோல ஆபத்துள்ள தாரணைகள் கெட்டகதியை அடையசசெய்கின்றன. குந்தீ புத்திர! விதிப்படி தாரணைகளிலிருக்கின்றவன் மரணத்தையும் ஜனனத்தையும் துக்கத்தையும் ஸுகத்தையும்விட்டு விலகுகின்றான். இது அநேக சாஸ்திரங்களிலுமுள்ளதும் யோகசாஸ்திரங்களில் சொல்லப்பட்டதுமாயிருக்கின்றது. யோகத்தினுடைய சிறந்தபய னானது பிராம்மணர்களிடத்தில் நிச்சயிக்கப்பட்டதாயிருக்கிறது. நல்ல ஸ்வபாவமுள்ளவனே! சிறந்த அந்த யோகபலமானது ப்ரம்மரூபம். மஹானும் பெரியமதியுடையவனுமான யோகியான வன் சீக்கிரமாக விடுபட்டுப பரத்திற்கும் பரமான (சுத்த) ப்ரம்மத் தைஅடைந்து ஸ்வதந்திரரான ப்ரம்மாவையும் வேண்டும்வரத்தை அளிக்கின்ற விஷ்ணுவையும் ஈச்வரரையும் தர்மராஜனையும் ஷண் முகரையும் (கபிலர்முதலாகிய) மஹானுபாவர்களான ஆறு ப்ரம்ம புத்திரர்களையும் கஷ்டமான தமோகுணத்தையும் மிகப் பெரி தான ரஜோகுணத்தையும் சுத்தமான ஸத்வகுணத்தையும் பர மான மூலபரகிருதியையும் வருணனுக்குப பத்நியான ஸித்திதேவி யையும் [1]எல்லாதேஜஸையும் மிகவும் பெரிதான [2]தைரியத்தையும் நிர்மலமானவனும் நக்ஷத்திரங்களோடுகூடினவனுமான ஆகாயத்தி லுள்ள சந்திரனையும் விச்வேதேவர்களையும் உரகர்களையும் பித்ரு தேவதைகளையும் எல்லாமலைகளையும் பயங்கரமான ஸமுத்திரங்களையும் எல்லாநதிகளையும் ஜலத்தோடுகூடிய மேகங்களையும் நாகர்களையும் விருக்ஷங்களையும் யக்ஷர்களின் கூட்டங்களையும் திக்குக்களையும் கந்தர் வர்களின்கூட்டங்களையும் புருஷர்களையும் ஸ்திரீகளையும் அடைவான். அரசனே! மகாத்மாவான யோகியானவன், எல்லாமனிதர்களுக்கும் மேலாகி நாராயணஸ்வரூபத்தையடைந்து சிறந்தசக்தியும் ஞான முமுள்ள அந்தத்தேவவிடத்தில் ஏற்பட்ட சுபமான ஸ்ருஷ்டிமுத லானவற்றைச் செய்கிறான்'' என்றுசொன்னார்.

---

1 தேயுவின் ஸித்தியையும். 2 பிருதிவியின் ஸித்தியையும்.

## முந்நூற்றேழாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

———:0:———

(ஸாங்கியத்தின்முறையும் சிறப்பும்.)

யுதிஷ்டிரர், "ஓ! அரசரே! இப்பொழுது சிஷ்யனுக்குநன்மையைவிரும்புகிற உம்மால் சிஷ்டர்களுக்கு ஸம்மதமான இந்தயோகமார்க்கமானது முறைப்படி நன்கு சொல்லப்பட்டது. இப்பொழுது, ஸாங்கியத்திலிருக்கிறவிதியைக் கேட்பவனை எனக்கு முழுதும் சொல்லும். மூவுலகங்களிலுமுள்ள சாஸ்தரங்களெல்லாம் உம்மால் அறியப்பட்டனவல்லவா?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

" அரசனே! எவ்விதத்தவறுதலானஞானங்களும் காணப்படாததும் பலகுணங்களையுடையதும் சிறிதும்தோஷமில்லாததும் எல்லாயதிகளாலும் ஸ்வதந்திரர்களான கபிலர்முதலானவர்களாலும் அறியப்பட்டதுமான ஆத்மஜ்ஞானிகளான ஸாங்க்யர்களுடைய இந்தவிஷயத்தை முழுதும் நீ என்னிடம் கேள். அரசனே! பேசுகிறவர்களுள் சிறந்தவனே! பாரத! தோஷமுள்ளவையும் ஜயிக்கமுடியாதவையுமான மனிதர்களுடைய எல்லாவிஷயங்களையும் பிசாசங்களுடையவிஷயங்களையும் ஞானத்தினால்நிச்சயித்து ராக்ஷஸர்கள், யக்ஷர்கள், உரகர்கள், கந்தர்வர்கள், [1]பித்ருக்கள், விலங்குஜாதிகளில் ஸஞ்சரிப்பவர்கள், கருடர்கள், மருத்துக்கள், ராஜரிஷிகள், ப்ரம்மரிஷிகள், அஸுரர்கள், விஶ்வேதேவர்கள், தேவரிஷிகள், யோகீஶ்வரர்கள், ப்ரஜைகளுக்குப் பதிகள், ப்ரம்மா இவர்களின்விஷயங்களையும் உலகத்தில் ஆயுளின் பரமமானகாலத்தையும் ஸுகத்தின்மேலானதத்வத்தையும் எப்பொழுதும் விஷயத்தில்பற்றுள்ளவர்களுக்குக் காலம் நேரிட்டபோது உண்டாகும் துக்கத்தையும் விலங்குப்பிறவிகளில் விழுந்தவர்களின் துக்கத்தையும் நரகத்தில் விழுந்தவர்களின் துக்கத்தையும் ஸ்வர்க்கத்திலுள்ள எல்லாக்குணங்களையும் எல்லாத்தோஷங்களையும் [2]வேதவாதத்திலுள்ள குணதோஷங்களையும் ஞானயோகத்திலும் கேவலயோகத்திலுமுள்ள குணதோஷங்களையும் ஸாங்க்யஞானத்திலுள்ள குணதோஷங்களையும் பின்னும் மற்றவைகளிலுள்ள குண

---

1 ஒருசொல் விடப்பட்டது.

2 அதிகபாடமான அரைஶ்லோகம் விடப்பட்டது.

தோஷங்களையும் [1]பத்துக்குணங்களுள்ள ஸத்வகுணத்தையும் [2]ஒன்பது குணங்களுள்ள ரஜோகுணத்தையும் [3]எட்டுக்குணங்களுள்ள தமோகுணத்தையும் [4]ஏழுகுணங்களுள்ள புத்தியையும் [5]ஆறுகுணங்களுள்ள மனத்தையும் [6]ஐந்துகுணங்களுள்ள ஆகாயமுதலியவற்றையும் மறுபடியும் [7]நான்குகுணங்களுள்ள புத்தியையும் [8]மூன்றுகுணங்களுள்ள தமோகுணத்தையும் [9]இரண்டுகுணங்களுள்ள ரஜஸ்ஸையும் [10]ஒரேகுணமுள்ள ஸத்வத்தையும் ஆத்மாவினுடையஸ்ருஷ்டியையும் உண்மையாகஅறிந்து ப்ரளயவிஷயத்திலும் நன்றாகப்பார்த்துச ரஸ்திரத்தாலுண்டானஞானம் ஸாக்ஷாத்காரம் இவற்றுடன் கூடினவர்களும் மோக்ஷஸாதனங்களால் ஸத்வாஸனையுடையவர்களுமாயிருக்கிற நல்லோர்கள், ஸூக்ஷ்மவஸ்துக்கள் மேலானஆகாயத்தை அடைவதுபோலச் சுபமான மோக்ஷத்தை அடைகின்றார்கள். ராஜனே! பகைவரைத்தபிக்கச்செய்கிறவனே! ஜனங்களைக் காப்பவனே! பூபதியே! நரபதியே! பரதஸ்ரேஷ்டனே! ரூபத்தோடுசேர்ந்த நேத்ரத்தையும் கந்தமென்னும் குணத்தையுடைய க்ராணத்தையும் சப்தத்தில்பற்றின ஸ்ரோத்ரத்தையும் ரஸங்களாகிற குணங்களில்பற்றின ஜிஹ்வையையும் ஸ்பர்சத்தில்பற்றினத்வகிந்திரியத்தையும் ஆகாயத்தில ஆச்ரயித்தவாயுவையும் தமஸில்சேர்ந்த மோகத்தையும் அர்த்தங்களில்பற்றின லோபத்தையும் விஷ்ணுவினிடம் ஸஞ்சாரத்தையும் இந்திரனிடம்சேர்ந்த பலத்தையும் உதரத்தில் சேர்ந்த அக்நியையும் ஜலத்தில்சேர்ந்த பூதேவியை

1 ஆனந்தம், ப்ரீதி, கெட்டவிஷயத்தில்நடுக்கம, மனத்தின் பிரகாசம், புண்யத்தையேநாடுதல். ஸந்தோஷம், ச்ரத்தை, நேராயிருத்தல், த்யாகத்தில் நாட்டம், ஐச்வர்யம.

2 ஆஸ்திகத்தன்மை, ஈயாதவனுபிராமை, ஸுகதுக்கங்களை ஸேவித்தல், பேதப்படுத்தல், புருஷகாரம், காமம், க்ரோதம், மதம், கர்வத்திலும் த்வேஷத்திலும்உண்டாகும் அதிகப்பேச்சு.

3 தமஸ், மோகம், மகாமோகம், தாமிஸ்ரம், அந்ததாமிஸ்ரம், நித்ரை, அஜாக்ரதை, சோம்பல்.

4 மஹத்தத்வம், அஹங்காரம், ஸூக்ஷ்மபூதங்களான தன்மாத்திரைகள் ஐந்து.

5 வெளிப்புலன்களின் செய்கைஐந்து, ஸங்கல்பம்.

6 சப்தமுதலியவை.

7 ஸம்சயம், நிச்சயம், அகங்காரம், ஸ்மரணம்.

8 ஜயம், நிரபு, அறியாமை.

9 ப்ரவ்ருத்தி, துக்கம்.

10 ப்ரகாசம்

யும் தேயுவில் சேர்ந்த ஜலத்தையும் வாயுவில்சேர்ந்த தேயுவை யும் ஆகாயத்தில்சேர்ந்த வாயுவையும் மகத்தத்துவத்தில் சேர்ந்த ஆகாயத்தையும் புத்தியில்சேர்ந்த மகத்தத்துவத்தையும் தமஸில்பற்றின புத்தியையும் ரஜஸில்பற்றின தமஸையும் ஸத்வத்தில் பற்றின ரஜஸையும் ஆத்மாவில் பற்றின ஸத்வத்தையும் ஈசுரரூபி தேவருமாயிருக்கிற நாராயணரிடத்தில் பற்றின ஆத்மாவையும் மோக்ஷத்திலபற்றின தேவரான நாராயணரையும் ஒன்றையுமபற்றாத மோக்ஷத்தையும் புத்தியுடன்கூடினதும் பதினாறு குணங்களால சூழப்பட்டதுமான தேகத்தையும் தேகததை ஆஸ்ரயித்த பூர்வவாஸனையையும் பரஜ்ஞையையும் மானஸிகமான ஸ்வபநத்திலுண்டான பாபஸம்பந்தமில்லாததால் உதாஸீனனும் விஷயங்களை விரும்புகின்ற இந்திரியங்களைசசேர்ந்த இரண்டாவதான ஜாக்ரத்திலுண்டான காம மில்லாதவனும் ஒருவனுமாயிருக்கிற அந்த ஆத்மாவையும் விஷயத்தைவிரும்புகிறவர்களுடைய இரண்டாவதான கர்மத்தையும் புத்தியில் ஆஸ்ரயித்த எல்லா இந்திரியங்களையும் இந்திரியவிஷயங்களையும் வேதத்தைமுன்னிட்டு மோக்ஷத்தின் அடைய அரிதானதன்மையையும் பிராணன் அபானன் ஸமானன் வியானன் உதானன் என்னும் வாயுக்களையும் ஆவஹன் பிரவஹன் என்றவாயுக்களையும் ஏழு ஏழு விதமாகசசெய்யப்பட்ட மற்ற ஸப்தமருத்துக்களையும் பிரஜைகளுக்குப் பதிகளையும் ரிஷிகளையும் சிறந்தபலவழிகளையும் ஸப்தரிஷிகளையும் பலராஜரிஷிகளையும் மகான்களான மற்றத் தேவரிஷிகளையும் ஸூர்யனுக்கு ஸமமான பரமரிஷிகளையும் பெரியகாலத்தினால் ஐஸ்வர்யத்திலிருந்து நழுவும்படி செய்யபபட்டவர்களையும் மகத்துக்களான பூதஸமூகங்களுடைய நாசத்தையும் பாபகர்மத்தோடுகூடியவர்களுடைய கஷ்டமானகதியையும் யமனுடைய கிருகத்தில் பதிதர்களுக்கு வைதரணி நதியிலுள்ள துக்கத்தையும் அநேக விதமான பிறவிகளிலுண்டான கெட்டஸம்ஸாரங்களையும் உதிரமாகிற ஜலத்துக்கு இருப்பிடமான அசுபமான குக்ஷியிலும் கொடிய துர்க்கந்தமுள்ள கபத்திலும் மூத்ரத்திலும் மலத்திலும் வாஸத்தையும் வீர்யம் உதிரம் இவற்றின்சேர்க்கையாலுண்டானதும் மஜ்ஜைநரம்புகளின் ஸம்பந்தமுள்ளதும் அநேக மெல்லிய நரம்புகளால் நிரம்பியதும் ஒன்பது த்வாரங்களுடையதும் அசுத்தமுள்ளதுமானசரீரமாகிய புரத்தில் வைக்கப்பட்ட ஆத்மாவையும் தமோகுணமுள்ளவைகளும் அழகானவஸ்துக்கள் நிறைந்தவைகளுமான பிராணிகளுடைய கூட்டங்களையும் ஸாத்விகமான பிராணிகளுடைய அவ

மதியையும் மகான்களும் ஆத்மவித்துக்களுமான ஸாங்க்யர்களுக்குத தனத்தினுலுண்டாகும் நிந்தையையும் சந்திரனுக்கும் ஸூர்யனுக்குமுள்ள கோரமான ராகுவின் உபத்ரவங்களையும் சிறுநக்ஷத்ரங்கள் விழுவதையும் பெரியநக்ஷத்திரங்களின் (ஓழிவில்லாத) சலனத்தையும் [1] துக்கிக்கத்தக்கதான ஸ்திரீபுருஷர்களின் பிரிவையும் பிராணிகள் ஒன்றை ஒன்று கொடுமையாகப் பக்ஷிப்பதையும் இளமையிலுள்ள மோகத்தையும் தேகத்தின் அசுபமானக்ஷயத்தையும் ராகமும் மோகமுமுண்டானபொழுது ஸத்வகுணமானது ஒருமூலையில் ஒதுங்குவதையும் அறிந்து ஆயிரவர்களில் ஒரு மனிதன் மோக்ஷபுத்தியை அடைந்தவனாகிறான் அரசனே! குந்திபுத்ர! பாரத! யுதிஷ்டிர! வேதத்தைமுன்னிட்டு மோக்ஷத்தின் அடைய அரிதான தன்மையையும் அடைபட்டாதவஸ்துக்களில் அதிக ஆதரவையும் அடையப்பட்ட வஸ்துவில் உதாஸீனத்தன்மையையும் விஷயங்களுடைய துஷ்டஸ்வரூபத்தையும் இறந்தவர்களின் அசுபமான தேகங்களையும் வீடுகளில் ஜந்துக்களின் கஷ்டமான வாஸத்தையும் பிரம்மஹத்திசெய்தபதிதர்களின் மிகக்குரூரமான கதியையும் ஸுராபானத்தில் பற்றுள்ளவர்களும் துஷ்டசித்தமுள்ளவர்களுமான பிராம்மணர்கள் குருபத்னியிடம் விருப்பம்வைத்தவர்கள் இவர்களுடைய அசுபமானகதியையும் தாய்விஷயத்தில் ஒழுங்காயிராதவர்கள், தேவர்கள் விஷயத்திலும் மனிதர்கள் விஷயத்திலும் சரியாயிராதவர்கள் ஆகிய கொடுஞ்செய்கைக்காரர்களின் கதியையும் விலங்குப்பிறவியை அடைந்தவர்களுடைய தனியானகதியையும் பலவிதமான வேதவாதங்களையும் ருதுக்களின் மாறுதல்களையும் வர்ஷங்களுடைய நாசத்தையும் மதங்களுடைய நாசத்தையும் பக்ஷங்களுடையநாசத்தையும் தினங்களுடைய நாசத்தையும் சந்திரனுடைய க்ஷயத்தையும் விருத்தியையும் ஸமுத்ரங்களுடைய வருத்தியையும் மறுபடியும் அவைகளின் க்ஷயத்தையும் தனங்களின் க்ஷயத்தையும் மறுபடியும் வ்ருத்தியையும் கூட்டங்களுடையநாசத்தையும் விசேஷமாக யுகங்களின்நாசத்தையும் மலைகளின் நாசத்தையும் நதிகளின்நாசத்தையும் வர்ணங்களுடைய நாசத்தையும் அடிக்கடி வ்ருத்தியையும் ஜரை, ம்ருத்யு ஜன்மமிவைகளையும் துக்கங்களையும் தேகதோஷங்களையும் தேகங்களின் துக்கத்தையும் தேகத்தின்தளர்ச்சியையும் ஆத்மாவில்ஆஶ்ரயித்த எல்லா ஆத்மதோஷங்களையும் தன்தேகத்திலிருந்துண்டாகும் தீயநாற்றங்களையும் மூத்ரம் கபம் மலமுதலியவைகளையும் வேர்வையிலிருந்துண்டாகும் மிகக்கெட்ட

---

[1] ஒருசொல் விடப்பட்டது.

பதார்த்தங்களையும் உண்மையாக அறிந்து ஆபிரத்தில் ஒருவன் மோக்ஷ புத்தியை அடைகிறான்" என்றுசொன்னார்.

யுதிஷ்டிரர், "அளவற்றபராக்ரமமுள்ளவரே! பிராணிகளின் சரீரத்திலுள்ள எந்தத்தோஷங்களைப் பார்க்கிறீர்? எனக்கு இந்த ஸந்தேகத்தையெல்லாம் உண்மையாகச்சொல்லவேண்டும்" என்று கேட்க, பீஷ்மர், "ஓ! பிரபுவே! புத்திமான்களும் மார்க்கத்தையறிந்தவர்களும் கபிலருடையமதத்தைப் பற்றினவர்களுமான ஸாங்கியர்கள், தேகத்தில் ஐந்துதோஷங்களைச் சொல்லுகின்றார்கள். பகைவர்களைவதைக்கின்றவனே! அவைகளைக் கேள். காமம், க்ரோதம், பயம், நித்ரை, ஐந்தாவதாகச் சொல்லப்படும் அதிகமூச்சு ஆகிய இந்தத்தோஷங்கள் எல்லாத்தேகிகளின் சரீரங்களிலும் காணப்படுகின்றன. அரசனே! (வித்வான்கள்) பொறுமையால் கோபத்தையும் சங்கற்பங்களைத்தள்ளுவதால் காமத்தையும் அறுக்கின்றார்கள். ஸத்வகுணத்தைப்பற்றுவதால் நித்ரையையும் ஜாக்ரதையால் பயத்தையும், அற்பமான ஆகாரத்தால் ஐந்தாவதான சுவாஸத்தையும் அறுக்கிறார்கள். அரசனே! மனிதர்களைக்காப்பவனே! பாரத! மகாப்ராஜ்ஞர்களானஸாங்க்யர்கள் அநேககுணங்களால் குணங்களையும் அநேக தோஷங்களால் தோஷங்களையும் பலவிதமான அநேககாரணங்களால் பலவிதமானகாரணங்களையும் உண்மையாகஅறிந்து உலகத்தை ஜலத்தின் நுரைக்குச்சமமாகவும் விஷ்ணுவினுடைய அநேகமாயைகளாலுண்டுபண்ணப்பட்டதாகவும் சித்திரச்சுவருக்குச்சமமாகவும் நளமென்கிறபுல்லின்பலம்போன்ற பலமுள்ளதாகவும் பயனற்றதாகவும் இருளடைந்தகுழிக்குச்சமமாகவும்பார்த்து மழையாலுண்டானகுமிழிபோன்றதும் கிலேசத்தால்நிறைந்ததும் ஸுகமில்லாததும் முடிவில்நசிப்பதும் ஸ்வாதீனமில்லாததும் ரஜஸிலும் தமஸிலும்மூழ்கிச் சேற்றில்மூழ்கினயானையைப்போலப் பரவசமானதும் பிரஜைகளுக்காகச்செய்யப்பட்டதுமான தேகத்தை எங்கும்வ்யாபித்ததாயும் பெரிதாயுமிருக்கிற ஸாங்க்யமென்கிற ஞானயோகத்தினால்தள்ளிவிட்டு அசுபமானரஜோகுணத்தின் வாஸனைகளையும் அவ்விதமான தாமஸவாஸனைகளையும் ஸ்பர்சத்தாலுண்டானவைகளும் தேகத்தையடைந்தவைகளும் பரிசுத்தமுள்ளவைகளுமான ஸாத்விகவாஸனைகளையும் தவமாகிறதண்டமுள்ள ஞானமாகிறகத்தியினால் சீக்ரமாக அறுத்துவிட்டுப் பிறகு பயங்கரமானதும் கவலைசோகமாகிறபெரியமடுவுள்ளதும் வ்யாதிமரணங்களாகிற பெரியமுதலைகளுள்ளதும் மிகுந்தபயமாகிற பெரிய நீர்ப்பாம்பையுடையதும் தமோகுணமாகிற ஆமையையுடைய

தும் ரஜோகுணமாகிற மீன்களுள்ளதுமான துக்கமாகிற ஸமுத்ரத்தை நல்ல ஞானத்தினுலே தாண்டுகின்றூர்கள். பகைவர்களையடக்குபவனே! பாரத! தவிரவும் ஸித்தர்களானமுனிவர்கள் ஸ்நேகமாகிற சேறுள்ளதும் ஜரையாகிற செல்லமுடியாத இடமுள்ளதும் ஞானமாகிறதீபமுள்ளதும் கர்மமாகிற ஆழமுள்ளதும் ஸத்யமாகிறகரையுள்ளதும் விரதங்களாகிற இருக்குமிடங்களுள்ளதும் ஹிம்ஸையாகிற சீக்கிரமான பெரியவேகமுள்ளதும் பலவித ரஸங்களுக்கிருப்பிடமும் பலவிதமான பிரீதிகளாகிறபெரிய ரத்னங்களுள்ளதும் துக்கமும் ஜ்வரமுமாகிறகாற்றையுடையதும் சோகமும் ஆசையுமாகிற பெருஞ்சுழல்களுள்ளதும் கொடியவியாதிகளாகிற பெரியயானைகளுள்ளதும் எலும்புகளுடைய கூட்டங்களாகிற [1]பார்களுள்ளதும் கபமாகிறநுரையுள்ளதும் தானங்களாகிற முத்துக்களுக்கு இருப்பிடமானதும் பயங்கரமும் உதிரமடுவாகிற பவழமுள்ளதும் சிரிப்பினுடைய பெரியசப்தமாகிற ஒலியுள்ளதும் அநேகவித அஜ்ஞானங்களாகிற தாண்டமுடியாத இடங்களுள்ளதும் கண்ணீராலுண்டான மலமாகிற உப்புக்களுள்ளதும் ஸங்கத்தை விடுவதாகிற பெரியமார்க்கமுள்ளதும் புத்ரர்களும் பத்நிகளுமாகிற அட்டைகளின் கூட்டங்களுள்ளதும் நண்பர்களும் உறவினர்களுமாகிற பட்டணங்களுள்ளதும் அஹிம்ஸையும் ஸத்யமுமாகிறஎல்லைகளுள்ளதும் ப்ராணத்யாகமாகிற பெரிய அலைகளுள்ளதும் வேதாந்தவிசாரமாகிற திட்டுள்ளதும் எல்லாப்பிராணிகளிடத்திலும் தயையாகிற (நல்ல) ஜலத்துக்கிருப்பிடமும் மோக்ஷமாகிற அடைதற்கரியபொருளுள்ளதுமான ஸம்ஸாரமாகிற கொடிய சமுத்திரத்தை ஞானமாகிற ஓடத்தினுல் தாண்டுகிறூர்கள். தாண்ட மிகவும் அரிதான ஜன்மத்தைத்தாண்டி நிர்மலமான ஆகாயத்தை அடைகின்றூர்கள். அரசனே! அந்த ஆகாயத்தில் ஸூர்யனுனவன் தாமரைத்தண்டினுள் நூல்போலக் கிரணங்களால் பிரவேசித்து அந்தப் புண்யசாலிகளான ஞானிகளைச் (செல்லவேண்டிய) இடங்களுக்குப் பலாத்காரமாகக் கொண்டுபோகிறுன். பாரதனே! அவ்விடத்தில் ஆசையற்றவர்களும் ஸித்தியடைந்தவர்களும் வீரியமுள்ளவர்களும் தவத்தையே தனமாகவுடையவர்களுமான அந்த யதிகளை ஸூக்ஷ்மமானவனும் குளிர்ந்தவனும் நல்லகந்தமுள்ளவனும் ஸுகமானஸ்பர்சமுடையவனுமான ப்ரவஹனென்கிறவாயுவானவன் பிடித்துக்கொள்ளுகிறுன். பாரத! குந்திபுத்ர! ஏழுமருத்துக்களுள்ளும் சிறந்தவனும் சுபமானலோகங்களில் செல்லுகின்றவனுமான அவன் அவர்

1 'ஸங்கட்ட:' என்பது மூலம் 'தெப்பங்கள்' என்றும் சொல்லலாம்

களை ஆகாயத்தின் பரமானமார்க்கத்தை அடையச்செய்கிருன். பூபதியே! ஆகாயமானது ரஜஸின்பரமகதியான (அகங்காரதத்வத்தை) அடையச்செய்கிறது. ராஜஸ்ரேஷ்டனே! ரஜஸானது ஸத்வத்தின் பரமகதியான (சுத்தஜீவஸ்வரூபத்தை) அடையச்செய்கிறது சுத்தஸ்வரூபமான ஸத்வமானது பரரும் ப்ரபுவுமானநாராயணரை அடையச்செய்கிறது. சுத்தஸ்வரூபரானப்ரபுவானவர் நம்முடையஸ்வரூபத்தின்வழியாய்ப் பரமாத்மாவை அடையச்செய்கிருர். விபுவே! களங்கமற்றயதிகள் பரமாத்மாவை அடைந்து பரமாத்மாவாகி மோக்ஷத்துக்குரியவர்களாகிருர்கள். அவர்கள் திரும்புகிறதில்லை. குந்தீபுத்ர! அது ஸுகதுக்கமுதலிய த்வந்த்வமற்றவர்களும் மஹாத்மாக்களும் ஸத்யத்திலும் நேர்மையிலும் பற்றுள்ளவர்களும் எல்லாப்பிராணிகளிடத்திலும் தயையுள்ளவர்களுமான யதிகளுடைய மேலானகதி'' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், "குற்றமற்றவரே! நிலைத்த விரதமுள்ள அந்தயதிகள் ஸர்வஜ்ஞராகிய பரமாத்மஸ்வரூபமான உத்தமஸ்தானத்தை அடைந்தபின் பிறப்பிறப்பு முதலானவிஷயத்தை நினைகின்ருர்களா? இல்லையா? இதில் உண்மையை எனக்கு நீர் உள்ளபடிசொல்லவேண்டும். குருவம்சத்திலுதித்தவரே! உம்மைத் தவிர வேறு ஒருவரையும் இதைக்குறித்துக் கேட்கமாட்டேன். ஸித்தியடைந்தமுனிவர்களைக்குறித்து மோக்ஷவிஷயத்தில் இந்தப் பெரிய தோஷமானது (தோன்றுகிறது.) அரசனே! மேலானயதிகள் பரமான அந்த மோக்ஷத்திலும் விசேஷஞானத்திலிருப்பார்களானல் அவர்களிடத்தில் மிகவும்ப்ரவ்ருத்திரூபமான தர்மமிருப்பதாக நினைக்கிறேன். பரமானஞானத்தில் முழுகினவனுக்கு எது மிகுந்த துக்கமாகாது?'' என்று கேட்க, பீஷ்மர், "அப்பா! உன்னல் நியாயப்படி மிகவும் ஸங்கடமானகேள்வி கேட்கப்பட்டது. பரதஸ்ரேஷ்டனே! இந்தக்கேள்வியில் வித்வான்களுக்கும் பெரியமயக்கம் ஏற்பட்டிருக்கிறது. மகாத்மாக்களான ஸாங்க்யர்களும் மிகமேலாகமதிக்கின்ற இந்த விஷயத்திலும் என்னல் நன்குசொல்லப்பட்ட பரமமானதத்வத்தைக் கேள். அரசனே! தேகிகளுக்குத் தம்தேகத்தில் இந்திரியங்களே அறியப்படுகின்றன. அவைகள் ஆத்மாவுக்குச்சாதனங்கள். ஸூக்ஷ்மனை அவனேவெனில், அவைகளால் பார்க்கிருன். ஆத்மா இல்லாவிடில் அவை கட்டைக்கும் சுவருக்கும் ஒப்பாகப் பெரியஸமுத்ரத்திலுண்டாகும் நுரைகள்போல நசிக்கின்றன. ஸந்தேகமில்லை. பகைவர்களை வாட்டுபவனே! இந்திரியங்களோடு தேகியானவன் நித்திரை செய்யுங்கால் (ஆத்மாவானவன்)

ஸூக்ஷ்மனாகி ஆகாயத்தில் வாயுவைப்போல எங்கும் ஸஞ்சரிக்கிறான். விபுவே! பாரத! அவன் விழித்துக்கொண்டால் முன்போல இவ்வுலகில் எல்லாவற்றையும் நியாயப்படி பார்க்கிறான். ஸ்பர்சங்களை ஸ்பர்சிக்கிறான். இப்பொழுது எல்லா இந்திரியங்களும் விஷமில்லாத ஸர்ப்பங்கள்போலச் சக்தியில்லாமையால் தம்தம்ஸ்தானத்தில் விதிப்படி லயிக்கின்றன. தர்மபுத்தியுள்ளவனே! குந்தீபுத்ர! யுதிஷ்டிர! ஆத்மாவானவன் தங்கள்ஸ்தானங்களிலேயேயிருக்கிற எல்லா இந்திரியங்களுடைய ஸூக்ஷ்மமான எல்லாக்கதிகளையும் ஸத்வத்தின் எல்லாக்குணங்களையும் ரஜஸின்குணங்களையும் தமஸின் எல்லாக்குணங்களையும் புத்தியின்குணங்களையும் மனத்தின்குணங்களையும் ஆகாயத்தின் குணங்களையும் வாயுவின்குணங்களையும் தேஜஸின்குணங்களையும் அப்பின்குணங்களையும் ப்ருதிவியின்குணங்களையும் ஆக்ரமித்துக்கொண்டு ஸஞ்சரிக்கிறான். ஜீவர்களிடத்திலிருக்கிறகுணங்கள் எல்லாவற்றாலும் வியாபிக்கப்பட்ட ஆத்மாவும் க்ஷேத்ரஜ்ஞனை ஜீவனை அடைகிறான்; புண்யபாபங்களான கர்மங்களும் அடைகின்றன. ப்ரபுவே! மகாத்மாவான அந்தக்ஷேத்ரஜ்ஞனை இந்திரியங்களும் சிஷ்யர்கள்போல அடைகின்றன அந்த ஜீவனானவன் ப்ரக்ருதியையும் அதிக்ரமித்து அழிவற்றவரும் தன்னுடைய ஆத்மஸ்வரூபரும் பரரும் ஸ்வயம்ப்ரகாசரும் ஸுகதுக்கங்களானத்வந்த்வமற்றவரும் ப்ரகிருதிக்கு அதீதருமான நாராயணரை அடைகிறான்; பாரதனே! எல்லாப்பாவங்களிலிருந்தும் விடுபட்டவனும் நாசமற்ற நிர்க்குணனை அந்தப்பரமாத்மாவை அடைந்தவனுமாகி மறுபடி திரும்பான். அப்பா! பாரத! அவனிடத்தில் மிச்சமுள்ளமனமும் இந்திரியங்களும் காலத்தை அனுஸரித்து ஈச்வரனுடைய ஆஜ்ஞையைச்செய்துகொண்டுவருகின்றன. குந்தீபுத்ர! குணத்தை விரும்புகிறவனும் இவ்விதம் சொல்லப்பட்டவனும் உசிதமானஞானமுள்ளவனுமாகிய மோக்ஷத்தையடைந்தவனால் (பாபாபத நாசத்தில்) அற்பகாலத்திலேயே, சாந்தியை (விதேகமுக்தியை) அடையமுடியும். அரசனே! பெரிய அறிவுள்ளஸாங்க்யர்கள் பரமமானகதியை அடைகின்றார்கள். குந்தீபுத்ரனே! இந்த ஞானத்துக்கு ஒப்பானஞானம் இல்லை. இந்த விஷயத்தில் உனக்கு ஸந்தேகம்வேண்டாம். ஸாங்க்யஞானமானது சிறந்ததாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. சாந்தமனமுள்ளவர்கள் எந்தப்ரம்மத்தை நாசமில்லாததும் சலனமில்லாததும் வ்யக்தமில்லாததும் எங்கும் நிறைந்ததும் அனாதியும் ஆதிமத்யாந்தமில்லாததும் ஸுகதுக்கமுதலிய த்வந்த்வமற்றதும் கர்த்தாவும் எப்

பொழுதுமிருப்பதும் விகாரமில்லாததும் நித்யமுமாகச் சொல்லு கிறார்களோ, எதனிடமிருந்து எல்லாஸ்ருஷ்டி ப்ரளயங்களானவிகாரங் களும் நடக்கின்றனவோ, எதைப் பரமரிஷிகளும் எல்லாவேதியர் களும் தேவர்களும் சாந்தியையடைந்தஜனங்களும் ஸ்லாகிக்கின்றார் களோ, சாஸ்திரங்களிலும் சொல்லுகின்றார்களோ பிராம்மணர்களு க்குஹிதரும் ஸ்ரேஷ்டரானதேவரும் வ்யாபகரும் சிறந்தவரும் அச்சு தருமான அந்தப்பரமாத்மாவைப் பிரார்த்தித்துக்கொண்டு குணங் களில் புத்தியுள்ளப்ராம்மணர்களும் அப்படியே யோகத்தில்தேர்ந்த யோகிகளும் அளவற்ற அறிவுள்ளஸாங்க்யர்களும் சொல்லுகிறார்கள். குந்தீபுத்ர ! சரீரமில்லாத அந்தப்பரமாத்மாவுக்கு ஸாங்க்யஞானம் சரீர மென்று வேதம் சொல்லுகிறது பரதஸ்ரேஷ்ட ! பதார்த்தஞானங் களை அவருடைய ஞானமாகச் சொல்லுகிறார்கள். அரசனே ! இந் தப் பூமியில் ஜங்கமஸ்தாவரங்களென்று பெயருள்ளவைகளாகப் பிராணிகள் இரண்டுவிதமாயிருக்கின்றன. (அவைகளில்) ஜங்கமம் சிறந்தது. அரசனே ! மகான்களிடத்திலும் வேதங்களிலும் ஸாங்க் யங்களிலும் யோகத்திலும் காணப்படுவனவும் புராணத்தில் அநேக விதமாகக்காணப்படுவனவுமாகிய ஞானங்களெல்லாம் ஸாங்க்யத் திலிருந்து வந்தன. அரசனே ! பெரியஇதிஹாஸங்களில் காணப் படுவதும் சிஷ்டர்களால் அங்கீகரிக்கப்பட்ட அர்த்தசாஸ்திரத்திலுள்ள தும் இந்தஉலகத்திலுள்ள மற்றவையுமான பெரியஞானமெல்லாம் ஸாங்க்யத்திலிருந்தும் வந்தன. அரசனே ! ஸாங்க்யத்தில் அடக்க மும் காணப்படுகிறது. ஸாங்க்யத்திலுள்ளபரமமானவன்மையும் ஞான மும் உள்ளபடி சொல்லப்பட்டன. ஸூக்ஷ்மமான தவங்களும் ஸுகங்களும் உள்ளபடி விதிக்கப்பட்டிருக்கின்றன. குந்தீபுத்ரனே ! ஸாங்க்யர்கள் ஞானஸித்திக்காவிடில் எப்பொழுதும் ஸுகமாகத் தேவர்களை அடைகின்றார்கள். அந்தத்தேவர்களுக்கு அதிகாரிகளா யிருந்துவிட்டுப் பிறகு க்ருதார்த்தர்களாகி மறுபடியும் முயற்சியுள்ள ப்ராம்மணர்களிடத்தில் பிறக்கிறார்கள். குந்தீபுத்ரனே ! ராஜனே ! ஸாங்க்யர்களான அந்தப்ராம்மணர்கள் பெரிய அர்த்தத்தையுடையதும் சிஷ்டர்களால் அங்கீகரிக்கப்பட்டதுமான ஸாங்க்யத்தில் இதைக் காட்டிலும் அதிகப் பற்றுள்ளவர்களாகித் தேகத்தைவிட்டு விட்டுத் தேவர்கள் ஸ்வர்க்கத்தில் பிரவேசிப்பதுபோல மோக்ஷத்தில் பிரவேசிக்கின்றார்கள். அரசனே ! இந்த ஞானத்தில்பற்றுள்ளவர் களுக்குப் பாவஞ்செய்தவர்களுக்கிருப்பிடமான திர்யக்ஜாதியில் பிர வேசம் காணப்படவில்லை. கீழானகதியும் இல்லை. அந்தப்பிராம்மணர்

கள் அறிவில்லாதவர்களுடைய கதியையும் அடைவார். ஸாங்க்யஞானத்தை விரிவாகவும் சிறந்ததாகவும் அநாதியாகவும் பெரியஸமுத்ரம் போன்றதாவும் நிர்மலமாகவும் சொல்லுகிறார்கள். அரசனே! மகாத்மாவான நாராயணர் அறியமுடியாததான ஸாங்க்யமனத்தையும் அறிகிறார். மானவர்வேந்தனே! இந்தத்தத்வமானது ஏன்றால் சொல்லப்பட்டது. புராதனமான இந்தப்ரபஞ்சம் நாரயணரே. அவர் படைப்புக்காலத்தில் படைப்பைச்செய்கின்றார்; ஸம்ஹாரகாலத்தில் அதைத் திரும்பப் பக்ஷிக்கின்றார். ஜகத்திற்கு அந்தராத்மாவாயிருக்கிறஅவர் எல்லாவற்றையும்ஸம்ஹரித்துத் தமதுடையப்ரகத்திலிருக்கச்செய்து ஜலத்தில் சயனிக்கிறார்" என்றுசொன்னார்.

---

## முந்நூற்றெட்டாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

(வஸிஷ்டர் க்ஷராக்ஷரங்களின் லக்ஷணத்தை ஜனகருக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "ஜீவன், அடைந்தபின் மறுபடியும் திரும்புவதில்லாத அக்ஷரமென்று சொல்லப்படுவது எது? அடைந்து மறுபடியும் திரும்புகின்றக்ஷரமென்றுசொல்லப்பட்ட அதுவும் எது? பகைவர்களைக் கொல்லுகின்றவரே! சிறந்த கைகளையுடையவரே! குருவம்சத்தைச் சந்தோஷிக்கச் செய்கின்றவரே! அக்ஷரம் க்ஷரம் இவைகளுடைய பேதத்தை உண்மையாக அறிவதற்காகக் கேட்கின்றேன். நீரோ வேதாந்தின் கரையை அடைந்த வேதியர்களாலும் மஹாபாக்கியவான்களான ரிஷிகளாலும் மஹாத்மாக்களான யதிகளாலும் ஞான நிதியாகச் சொல்லப்படுகிறீர். உம்முடைய நாள்களில் மிச்சம் சொற்பமாயிருக்கின்றது. தக்ஷிணமார்க்கத்தில் பிரகாசிக்கின்றசூரிய பகவான் திரும்பினவுடன் மேலான கதியை அடையப்போகிறீர். நீர் சென்றபிறகு நாங்கள் யாரிடமிருந்து ச்ரேயஸ்ஸைக் கேட்கப்போகிறோம்? குருகுலத்தை விளங்கச்செய்யும் நீர் ஞானதீபத்தால விளங்குகின்றீர். குருகுலத்தைத் தாங்குகின்றவரே! ஆகையால், இதை உம்மிடமிருந்து கேட்கவிரும்புகின்றேன். ஓ! ராஜேந்திரரே! இப்படிப்பட்ட அமிருதத்தைக்கேட்டு நான இப்பொழுது திருப்தியடைய வில்லை" என்று சொல்ல, பீஷ்மர் சொல்லலானார்.

"இந்தவிஷயத்தில் வஸிஷ்டருக்கும் கராளஜனகனுக்கும் நடந்த ஸம்வாதரூபமான பழைய சரித்திரத்தை உனக்குச் சொல்லப்போகின்றேன். ஜனகராஜன், ரிஷிகளுள் சிறந்தவரும் சூரியனுடைய ஒளி போன்ற ஒளியுடையவரும் உட்கார்ந்துகொண்டிருக்கின்றவருமான வஸிஷ்டரை அடைந்து, மோக்ஷத்திற்கு ஸாதனமும் சிறந்ததுமான ஞானத்தைக்குறித்து வினவினான். முன்காலத்தில் கராளஜனகனென்கிற அரசன் ஆத்மவிஷயத்தில் மிகவும் குசலரும் ஆத்மானுபவத்தால் நிச்சயமுடையவரும் முனிசிகாமணியும் உட்கார்ந்துகொண்டிருப்பவருமான வஸிஷ்டரை வணங்கி அஞ்சலிசெய்துகொண்டு மெலிவிய குரலோடும் மதுரமாயும் வணக்கத்துடனும் நல்ல அக்ஷரங்களையுடைய வாக்கியத்துடனும், 'ஓ! பகவானே! எதை அடைந்த அறிஞருக்குத் திரும்பவும் பிறவியில்லையோ அக்ஷரமென்று கூறப்பட்டதும் ஆனந்தரூபமும் க்ஷேமத்தைத் தருவதும் தோஷமற்றதும் ஸநாதனமுமான அந்தப்பரப்ரம்மத்தையும் அதில் லயிக்கும் க்ஷரமென்று சொல்லப்பட்ட ஜகத்தையும் கேட்கவிரும்புகிறேன்' என்று வினவ, வஸிஷ்டர் சொல்லத்தொடங்கினார். 'பூபதியே! உலகமழியும் விதத்தையும் முன்னும் மற்ற எக்காலத்திலும் நசியாத அக்ஷரத்தையும் கேள். பன்னீராயிரம் தேவவருஷங்கொண்டதும் மனுஷ்யர்களுடைய நான்கு யுகங்களுமான யுகத்தைக் கற்பமாக அறியக்கடவாய். ஆயிரம் கற்பம் திரும்பிய அது பரம்மதேவருடைய பகலாகச் சொல்லப்படுகின்றது. ஓ! அரசனே! எதன் முடிவில் ப்ரம்மா விழித்துக் கொள்ளுகிறாரோ அப்படிப்பட்ட ராத்திரியும் இவ்வளவுள்ளது. வடிவமில்லாத ஸ்வரூபத்தையுடைய சம்புவானவர் அளவற்ற கர்மாவையுடையவரும் மஹாபூதமும் எல்லாவற்றிற்கும் முன்னுண்டானவரும் மூர்த்தியுடன்கூடினவரும் எல்லா ப்ரபஞ்சமுமாயிருக்கிற ப்ரம்மாவைச் சிருஷ்டிக்கின்றார். [1] இயற்கையிலமைந்த அணிமா, லகிமா, ப்ராப்தி இவைகளையுடையதும் எல்லாவற்றிற்கும் நியந்தாவும் ஜோதிரூபமும் விகாரமற்றதுமான அந்த ஸ்வரூபமானது எங்கும் கைகால்களுடையதும் எங்கும் கண்ணும் தலையும் முகமுமுடையதும் எங்கும் காதுள்ளதுமாகி உலகத்திலே எல்லாவற்றையும் வியாபித்துக்கொண்டிருக்கின்றது. ஒன்றான அக்ஷரமென்று கருதப்பட்டவரும் பலவிதமான ஸ்வரூபமுடையவரும் பலவிதமான சரீரமுடையவரும் ப்ரபஞ்சரூபரும் உண்மையில் ஜனனமற்றவரும் ஸகலஐச்வரியங்களுமுடைய புத்தியென்று கருதப்பட்டவருமான இந்த [2] ஹிரண்யகர்ப்பர் யோக

1 வேறுபாடம்.

2 ஸூத்ராத்மா.

சாஸ்திரங்களிலும் ஸாங்க்யசாஸ்திரத்திலும் மஹத்தத்துவம் விரிஞ்சி என்னும்பெயர்களால் சொல்லப்படுகிறார். எவரால் தம்மாலே அநேக ரூபமாகவிருக்கிற மூன்றுலகமும் படைக்கப்பட்டனவும் சூழப்பட்டனவுமாயிருக்கின்றனவோ அவர், எல்லாம் அவருக்கு ரூபமாயிருப்பதால், விஸ்வரூபரென்று கருதப்பட்டார். விகாரத்தை அடைந்தவரும் பெரிய தேஜஸுள்ளவருமான இந்த ஹிரண்யகர்ப்பர் தாமாகவே தம்மையே அஹங்காரமாகவும் அஹங்காரத்தைச் செய்கின்ற விராட்டாகவும் ஸ்ருஷ்டிக்கின்றார் (பிரகாசமில்லாததான) அவ்யக்தத்திலிருந்தும் பிரகாசமுடையதான மஹத்தத்வமென்னும் அந்த ஸமஷ்டி அஹங்காரத்தையும் வ்யஷ்டி அஹங்காரத்தையும் வித்யா ஸ்ருஷ்டியாகவும் அவித்யாஸ்ருஷ்டியாகவுமே சொல்லுகின்றார்கள். ஓரிடத்திலுண்டான அபரமென்கிற ஜடமான உபாதியும் பரமென்கிற சைதன்யமும் வேதசாஸ்திரங்களின் அர்த்தத்தை விசாரிக்கின்றவர்களால் வித்தை அவித்தையென்று சொல்லப்படுகின்றன. அரசனே! அஹங்காரத்திலிருந்துமுண்டான ஸூக்ஷ்ம பூதங்களின் ஸ்ருஷ்டியை மூன்றாவதாக அறியக்கடவாய். ஸாத்விகராஜஸதாமஸங்களாயிருக்கிற எல்லாஅகங்காரங்களிலுமுண்டான ஸ்தூலபூதஸ்ருஷ்டியை நான்காவதாக அறியக்கடவாய். (அந்தப் பூதஸ்ருஷ்டி எவ்விதமென்றால் :—) வாயுவும்தேயுவும் ஆகாயமும் ஜலமும் பிருதிவியும் சப்தமும் ஸ்பரிசமும் ரூபமும் ரஸமும் கந்தமும் ஆகிய இவ்விதமான பத்தின்ஸமூகமும் ஒரே காலத்திலுண்டாயின ஸந்தேகமில்லை. ராஜஸ்ரேஷ்டனே! ஸ்தூலபூதங்களிலிருந்துண்டானதும் பயனுடையதுமான ஸ்ருஷ்டியை ஐந்தாவதாக அறியக்கடவாய் ராஜனே! சுரோத்திரம், த்வக்கு, சக்ஷுஸ், ஜிஹ்வை, ஐந்தாவதானகிராணம், வாக்கு, கைகள், பாதங்கள், பாயு, குறி இந்த ஞானேந்திரியங்களும் கர்மேந்திரியங்களும் இவ்வுலகில் மனத்துடன் கூட ஒரேகாலத்தில் உண்டாயின. எந்தத் தத்வங்களின் கூட்டத்தையறிந்து தத்வவித்துக்களான ப்ராம்மணர்கள் துக்கிக்கவில்லையோ அப்படிப்பட்ட அந்த இருபத்துநான்கு தத்வங்களின்கூட்டமும் எல்லாவடிவங்களிலுமிருக்கிறது. அரசனே! இது தேவர்கள், அஸுரர்கள், நரர்கள், யக்ஷர்கள், பூதங்கள், கந்தர்வர்கள், கின்னரர்கள், மகாநாகர்கள், சாரணர்கள், பிசாசர்கள், தேவரிஷிகள், ராக்ஷஸர்கள், தேள்கள், கொசுக்கள், துர்க்கந்தமுள்ள புழுக்கள், எலிகள், நாய்கள் அதைப் பாகம் செய்கின்ற புலையர்கள், மான்களைத்தின்கின்றவேடர்கள், சண்டாளர்கள், புல்கஸர்கள், யானைகள், குதிரைகள், கழுதைகள், புலிகள், செந்நாய்கள், கோக்கள்முதல்

ஷியவைகளுடன்கூடிய மூன்று உலகங்களிலுமுள்ள எல்லாத் தேகிக ளிடத்திலுமிருக்கின்ற தேகமென்று சொல்லப்பட்டதாக அறிய வேண்டும். வடிவமாக இருப்பதெல்லாவற்றிலும் இந்தத்தத்வக்கூட் டம் இருக்கிறதென்று காணக்கூடியது. 'தேகமுடையவர்களுக்கு ஜலத்திலும் பூமியிலும் ஆகாயத்திலும் இருப்பு; மற்றவிடத்திலில்லை' யென்பது உறுதியென்று கேட்டிருக்கிறோம். அப்பா! வ்யக்தமென் கிற பெயருடைய இவையெல்லாம் ஒவ்வொருநாளும் விகாரத்தை அடைகின்றன. ஆகையால், (இந்தப்) பூதங்களுக்கு ஆத்மாவான ஜீவன் க்ஷரனென்று கருதப்பட்டான். இந்த ஜகத்து விகாரத்தை அடைவதாலல்லவா க்ஷரமென்று சொல்லப்பட்டது? வ்யக்தமென்று பெயரடைந்த அவ்யக்தத்தை மோஹமயமான உலகமாகச சொல்லு கின்றனர். (இந்த வ்யக்தங்களில்) எப்பொழுதும் மஹத்தத்வம் முந்தி உண்டாகிறது. ஓ! மஹாராஜனே! இந்த க்ஷரத்தின் உதாரணமா னது உனக்குச் சொல்லப்பட்டது. எதை அடைந்து மறுபடி திரும்புகிறதில்லையோ தத்வமில்லாதவரும் தத்வமென்றுபெயருள்ள வருமான அந்தவிஷ்ணு இருபத்தைந்தாமவர். வித்வான்கள் இந்த விஷ்ணுவை இருபத்துநான்கு தத்வங்களுக்கும் அதிஷ்டாதாவாக இருப்பதால் தத்வமாகச சொல்லுகின்றனர் வ்யக்தத்தைப்படைத்த தும் நசிப்பதுமான அது அந்த அந்தமூர்த்தியை அடைகிறது. அது இருபத்துநான்காவதான அவ்யக்தம். இருபத்தைந்தாமவன் சரீர மில்லாதவன்; எல்லா மூர்த்திகளுமுள்ளவனும் (உண்மையில்) மூர்த்தி யில்லாதவனுமான அவனே சேதனவஸ்துக்களுக்கெல்லாம் அறி வைக்கொடுத்து எப்பொழுதும் எல்லாமூர்த்திகளிலும் ஹ்ருதயத் தில் ஆத்மாவாக இருக்கிறான்; [1]ஸ்ருஷ்டிப்ரளயமென்கிற தர்மத் தோடுகூடின பிரகிருதியினாலே ஸ்ருஷ்டிப்ரளய தர்மத்தையுடையவ னாகவும் இருக்கிறான். குணமில்லாதவனாயிருந்தும் குணமுள்ளவ னென்கிற பெயருடன் எப்பொழுதும் விஷயமாகிறான். இவ்விதம் இந்த மஹானான பரமாத்மா ஸ்ருஷ்டிப்ரளயங்களில் ஸமர்த்தனாயிருக் கிறான். அவனே பிரகிருதியுடன் கூடி விகாரத்தையடைகிறான். அறிந்துகொள்ளுதலில்லாமல் (அந்த விகாரத்தை) அபிமானிக்கின் றான். தமஸ், ஸத்வம், ரஜஸ் இவைகளுடன்கூடி அந்த அந்தப் பிறப்புக்களில் அழுந்துகின்றான். அஜ்ஞானிகளான ஜனங்களு டைய பழக்கத்தினால் ஆத்மாவையறியாமல் ஸகவாஸம் இருப்பிட மான சரீரம் இவைகளின்மயமாகி, 'நான் வேறு' என்று அறிய

[1] வேறு பாடம்.

வில்லை. 'நான் இப்படிப்பட்டவன் ; அப்படிப்பட்டவன் ' என்றுசொல்லிக்கொண்டு (பிராணன்முதலான) குணங்களையே அனுஸரித்திருக்கிறான். தமோகுணத்தினால் பலவகையானதாமஸவிருத்திகளையும் ரஜோகுணத்தால் ராஜஸவிருத்திகளையும் ஸத்வத்தின் ஆச்ரயத்தால் ஸாத்விகவிருத்திகளையும் அடைகிறான். பிரகிருதியைச்சேர்ந்த இந்தரூபங்களெல்லாம், வெளுப்பு, சிவப்பு, கறுப்பு ஆகிய இம்மூன்றுரூபங்களே. தமோகுணமுள்ளவர்கள் நரகத்தையடைகின்றார்கள். ரஜோகுணமுள்ளவர்கள் மானிடப்பிறப்பை அடைகின்றார்கள். ஸத்வகுணமுள்ளவர்கள் ஸுகத்தையடைந்து தேவலோகத்தைக்குறித்துச் செல்லுகின்றார்கள். பாபமாத்ரத்தினால் விலங்கு ஜன்மத்தை அடைவான். புண்ணியபாபங்களின் சேர்க்கையால் மானிட ஜன்மத்தையும் புண்ணியமாத்திரத்தினால் தேவத்தன்மையையும் அடைவான் இவ்விதமான அவ்யக்தத்தின் விஷயத்தை வித்வான்கள் க்ஷரமாகச் சொல்லுகின்றார்கள். இருபத்தைந்தாமவரான இவர் ஞானத்தினாலேதான் பிரவிருத்திக்கின்றார்.

---

## முந்நூற்றேன்பதாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

——:o:——

(வஸிஷ்டர், ஜீவர்கள் அஜ்ஞானத்தினால்படும்துன்பங்களை ஜனகனுக்குச் சொல்லியது.)

இவ்விதம், ஆத்மபோதமின்மையினாலும் அறிவீனரை அனுஸரித்திருப்பதாலும் ஒருதேகம்விட்டு ஆயிரம்தேகங்களை அடைகின்றான். குணங்களுடைய குறைவினால் ஆயிரம் விலங்குப் பிறவிகளிலும், ஒருகால் குணங்களுடையசேர்க்கையினால் தேவதைகளிடத்திலும் உண்டாகிறான். மனிதப்பிறவியிலிருந்தும் ஸ்வர்க்கத்தையடைகிறான். ஸ்வர்கத்திலிருந்தும் மனிதப்பிறவியையடைகிறான். மனிதப்பிறவியிலிருந்தும் அளவற்ற நரகஸ்தானத்தை அடைகிறான். கூட்டைக்கட்டும்பூச்சியானது நித்தியம் நூல்களால் தன்னைக்கட்டிக்கொள்ளுகிறதுபோலவே குணமில்லாதஇந்தஜீவன் குணங்களால் தன்னைக் கட்டிக்கொள்ளுகிறான். துவந்துவமில்லாதவனாயிருந்தும் அந்தஅந்தப்பிறப்புக்களில் தலைவலியிலும் கண்வலியிலும் பல்குத்திலும் கழுத்துப்பிடிப்பிலும் ஜலோதரத்திலும் அதிகதாகரூபமான

ரோகத்திலும் ஜ்வரகண்டத்திலும் விஷூசியிலும் வெண்குஷ்டத்திலும் அக்கினிதக்தமென்கிறரோகத்திலும் காசரோகத்திலும் அபஸ்மாரத்திலும் த்வந்துவத்தை அடைகிறான். (இவைகளைத்தவிரத்) தேகிகளிடத்திலுண்டாகிற பிராகிருதங்களான நானாவிதமானவேறுத்வந்துவங்களையும் இவன் அனுபவிக்கின்றான். அபிமானத்தால் அப்படியே நல்லகர்மங்களையும் அபிமானிக்கிறான். அறிவில்லாதவனான ஜீவனானவன் வெளுத்த வஸ்திரமுடையவனும் கெட்ட வஸ்திரமுடையவனும் நித்தியம் கீழே சயனம்செய்கிறவனும் தவளைபோலச் சயனிக்கிறவனும் வீராஸனத்தை அடைந்தவனும் மரவுரியைத்தரித்தலும் ஆவரணமில்லாதவிடத்திற்படுக்கையும் இருப்புமுடையவனும் செங்கற்பரப்பினவிடத்திலும் முள்ளுகள்பரந்தவிடத்திலும் சாம்பல்பரப்பினவிடத்திலும் படுக்கிறவனும் பூமியில் படுக்கையால் புழுதிபுரண்டவனும் வீரஸ்தானத்திலும் ஜலத்திலும் சேற்றிலும் பலகைகளிலும் சயனத்தைச் செய்கிறவனும் பயனில் விருப்பத்துடன் அனேக விதமான சயனங்களில் சயனிப்பவனும் தர்ப்பையாலுண்டான கடிஸூத்திரமுள்ளவனும் வஸ்திரமில்லாமலிருப்பவனும் வெண்பட்டுக்கள், மான்தோல்கள், சணல், ரோமம், புலித்தோல், ஸிம்மத்தின்தோல், பட்டாடை, பூர்ஜவிருக்ஷத்தின் தோல், இலவுமுதலான முள்ளுமரத்தின் பருத்தியால் உண்டான வஸ்திரம், பட்டுப்பூச்சியாலான பட்டுவஸ்திரம், சீரவஸ்திரம்இவற்றை உடுப்பவனுமாகி (இவைகளைத்தவிர) வேறு அநேக வஸ்திரங்களையும் விசித்திரமான போஜனங்களையும் அநேகவித ரத்தினங்களையும் அபிமானிக்கின்றான். ஒரு வஸ்திரம் அரையில் தரிப்பதையும் ஒருவேளை ஆகாரத்தையும் அபிமானிக்கின்றான். ஒருநாளில் நான்காவது காலத்திலோ எட்டாவது காலத்திலோ ஆறாவது காலத்திலோ புஜிக்கிறவனும் ஆறு ராத்ரிக்கொருவேளை புஜிக்கிறவனும் எட்டுப் பகலுக்கு ஒரு வேளை புஜிக்கிறவனும் ஏழு ராத்ரிக்கொருவேளை புஜிக்கிறவனும் பத்துப்பகலுக்கு ஒருவேளை புஜிக்கிறவனும் பன்னிரண்டு பகலுக்கொருவேளை புஜிக்கிறவனும் ஒருமாதமுபவாஸமுடையவனும் வேர்கள், கனிகள், வாயு, ஜலம், பிண்ணாக்கு, தயிர், கோமயம், கோமூத்திரம், சாகம், புஷ்பம், பாசிக்கொத்து, வடித்தகஞ்சி, உதிர்ந்த சருகுகள், உதிர்ந்த கனிகள் ஆகிய இவற்றைப் புஜிக்கிறவனுமாகி ஸித்தியில் விருப்பத்தால் நானாவிதமான கிருச்சிரமென்கிறவிரதங்களை அனுஷ்டிக்கிறான். விதிப்படி சாந்திராயணவிரதங்களையும் நானாவிதமான (ஜடைமுதலிய) அடையாளங்களையும் நான்குஆஸ்ரமங்களுடைய மார்க்கத்தை

யும் விருத்தமான கர்பாலிக முதலானமார்க்கங்களையும் வேறான [1]உபா ஸ்ரமங்களையும் பலவிதமானபாஷண்டமதங்களையும் ஆஸ்ரயிக்கின்றான். ஏகாந்தமான குன்றுகளின் நிழல்களையும் அருவிகளையும் ஏகாந்தமான மணற்குன்றுகளையும் ஏகாந்தமான காடுகளையும் பரிசுத்தமான தேவாலயங்களையும் ஏகாந்தமான தடாகங்களையும் ஏகாந்தமும்திவ்யமுமான கிருகங்களுக்கு நிகராயிருக்கிறமலைகளின் குகைகளையும் ஆஸ்ரயிக்கின்றான். ரகஸ்யமான மந்திரங்களையும் பலவிதமான விரதங்களையும், பலவிதமான நியமங்களையும் அநேகவிதமான தவங்களையும் அநேகவிதயாகங்களையும் (மூன்றுகாலமும் ஸ்நானமுதலான) பலவித விதிகளையும் வணிகர்களின் வழியையும் பிராம்மணக்ஷத்ரியவைஸ்யசூத்ரஜாதியையும் தீனர்களிடத்தும் குருடர்களிடத்தும் ஏழைகளிடத்தும் பலவகையான தானத்தையும் ஸத்வம்ரஜஸ்தமஸென்கிற மூன்று குணங்களையும் தர்மார்த்தகாமங்களையும் அறிவில்லாமையால் அபிமானிக்கிறான். ஆத்மாவானவன் தன்னையே அவித்தையினால் இவ்விதம் விபாகஞ்செய்கிறான். தவிரவும், ஸ்வதாகாரம், வஷட்காரம், ஸ்வாஹாகாரம், நமஸ்காரம், அத்யயனம் செய்வித்தல், யாகம்செய்வித்தல், ஈதல், ஏற்றல், வேள்விசெய்தல், வேதமோதல் ஆகியஇவற்றையும் அபிமானிக்கிறானென்று சொல்லுகின்றார்கள். ஜனனத்திலும் மரணத்திலும் விவாதத்திலும் ஹிம்ஸையிலும் மங்களமும் அமங்களமுமானகர்மாவின் பயனை எல்லாவற்றையும் அபிமானிக்கின்றானென்று சொல்லுகின்றார்கள். மூலப்ரகிருதியான தேவியானவள் ஸ்ருஷ்டியையும் ஸம்ஹாரத்தையும் செய்கின்றாள். காலத்தின்முடிவிலே ஆத்மாவானவன் இந்தக்குணங்களைத் தன்னிடம் ஒடுக்கிக்கொண்டு ஒருவனாயிருக்கின்றான். சூரியன் கிரணக்கூட்டத்தை ஒடுக்கிக்கொள்வதுபோல அந்த அந்தக்காலத்தில் ஒடுக்கிக்கொள்ளுகிறான் இப்படியே இந்த ஆத்மா அடிக்கடி விளையாட்டுக்காகத் தன்னுடையரூபமாயும் அநேகவிதமாயும் மனத்திற்குப் பிரியமாயுமிருக்கிற இந்தக்குணங்களெல்லாவற்றையும் அபிமானிக்கின்றான். இவ்விதம் விகாரத்தையடைகின்றவனும் கர்மமார்க்கத்தில் பற்றினவனும் முக்குணங்களுக்கும் அதிபதியுமான இவன் உற்பத்திநாசம்என்கிற தர்மத்துடன்கூடின கர்மத்தையும் மூன்று குணங்களையும் அபிமானிக்கிறான். கர்மமார்க்கத்தையடைந்து கர்மத்தை, ' அது அப்படிப்பட்டது ' என்றும் அபிமானிக்கின்றான். அரசனே! இந்த உலகமெல்லாம் பிரகிருதியினாலே குருடாகச் செய்யப்பட்டது. எல்

[1] ' பாசுபதபாஞ்சராத்ராதிகள் ' என்பது பழையவுரை.

லாம் ரஜோகுணத்தாலும் தமோகுணத்தாலும் அநேகவிதமாக வியாபிக்கப்பட்டிருக்கின்றன. ராஜனே! பிறகு, இவ்விதம், 'என்னிடத்தில் எந்நாளும் இந்த ஸுகதுக்கமுதலான த்வந்துவங்கள் இருக்கின்றன. இவைகள் எனக்கே உண்டாயிருக்கின்றன. என்னை அவைகள் அதிக்கிரமிக்கின்றன' என்றும், 'ஆனால் இவைகளெல்லாம் அதிக்கிரமிக்கத்தக்கவைகள்' என்றும் இவன் அறிவில்லாமையால் நினைக்கின்றான். அப்படியே, ஸுகிருதங்களையும், 'என்னால் தேவலோகத்தையடைந்து இவைகள அனுபவிக்கத்தக்கவைகள். சுபா சுபமான' பயனையளிக்கின்ற இதை இம்மையிலேயே அனுபவிக்கப்போகிறேன். புண்ணியமே செய்யத்தக்கது. அதைச்செய்து எனக்கு நல்ல ஸுகமுண்டாகவேண்டும். ஒவ்வொரு ஜன்மத்திலும் எனக்கு முடிவுவரை ஸௌக்கியமே உண்டாகும். இம்மையிலும் கர்மத்தினால் 'எனக்கு அளவற்ற துக்கம் உண்டாகப்போகிறது. மனுஷ்யஜன்மமானது பெரிய துக்கம். நரகத்திலழுந்துவதும் உண்டாகப்போகிறது. சில காலத்தினால் நான் மறுபடியும் நரகத்திலிருந்தும் மனுஷ்யஜன்மத்தையுமடைவேன்' என்றும் நினைக்கின்றான். மனிதன் மனிதத்தன்மையிலிருந்து தேவத்தன்மையையும் தேவத்தன்மையிலிருந்து மறுபடியும் மனிதத்தன்மையையும் மனிதத்தன்மையிலிருந்தும் நரகத்தையும் கிரமமாக அடைகிறான். ஸ்வரூபமில்லாதவனும் ஆத்மாவினுடைய (ஸத்தைமுதலிய) தர்மங்களால்சூழப்பட்டவனும் இவ்விதம் எப்பொழுதும்நினைக்கிறவனுமான ஜீவனால் தேவரிடத்திலும் மனிதர்களிடத்திலும் நரகத்திலும் ஜன்மமானது அடையப்படுகிறது. எப்பொழுதும் மமதையினால் சூழப்பட்டு அவைகளிலேயே மரணத்தைமுடிவாகவுடைய பிறவிகளில் ஆயிரம்கோடிஸ்ருஷ்டிகாலம் சுழலுகிறான். சுபாசுபமான பயனையளிக்கின்ற இவ்விதமானகர்மத்தைச் செய்கின்றவன் மூவுலகங்களிலும் சரீரமுடையவனாகி இவ்விதமானபயனை அடைகின்றான். சுபமும் அசுபமுமாயிருக்கின்றபயனையே ஸ்வரூபமாகவுடையகர்மத்தை ப்ரகிருதியானது செய்கிறது. ஆசையை அடைந்ததான ப்ரகிருதியே மூன்று உலகங்களிலும் அந்தக்கர்மத்தை அனுபவிக்கவும் செய்கின்றது, விலங்குப் பிறவியிலும் மனுஷ்யஜாதியிலும் தேவலோகத்திலுமுண்டான இந்த மூன்று ஸ்தானங்களையும் பிரகிருதியாலுண்டானவைகளாக அறியவேண்டும். பிரகிருதியை அடையாளமற்றதாகச் சொல்லுகின்றார்கள். (காரியங்களாகிற) அடையாளங்களால் நாம் அனுமானிக்கின்றோம். அப்படிப்போலவே புருஷனைச்சேர்ந்த (அறிவு ரூபமான)

அடையாளமுமிருக்கின்றது. அனுமானத்தாலல்லவா புருஷன் அறியப்படுகிறான்? அவன் கார்யரூபமானலிங்கத்தின்மத்தியை அடைந்து ப்ரகிருதியைச் சேர்ந்தவிகாரமில்லாத லிங்கமாகின்றான். அவன் விகாரத்திற்குவழிகளாயிருக்கின்ற (சுரோத்ரமுதலான) எல்லாவற்றையுமடைந்து கர்மத்தினால் தன்னிடத்தில் பார்க்கிறான். பிறகு, ஶ்ரோத்ர முதலானயாவும் வாக்குமுதலான ஐந்துகர்மேந்திரியங்களும் இவ்வுலகில் குணங்களோடு குணங்களில் ப்ரவிருத்திக்கின்றன. இந்திரியங்களில்லாதவனாயிருந்தும், 'இவைகளெல்லாம் நான்' என்றும், 'இந்த இந்திரியங்கள் என்னிடத்திலுள்ளன' என்றும்; விகாரமில்லாதவனாயிருந்தும், 'விகாரமுடையவனாயிருக்கிறேன்' என்றும் நினைக்கிறான். ஆத்மாவை லிங்கசரீரமில்லாததாயினும் லிங்கசரீரமுள்ளதாகவும் காலமில்லாததாயினும் காலமுள்ளதாகவும் (புத்தியாகிற) ஸத்வமில்லாததாயினும் (புத்தியாகிற) ஸத்வமுள்ளதாகவும் தத்வமாகாததாயினும் தத்வமாகவும் மரணமில்லாததாயினும் மரணமுள்ளதாகவும் ஸஞ்சாரமில்லாததாயினும் ஸஞ்சரிப்பதாகவும் சரீரமில்லாததாயினும் சரீரமுள்ளதாகவும் உற்பத்தியில்லாததாயினும் உற்பத்தியுள்ளதாகவும் தவமில்லாததாயினும் தவமுள்ளதாகவும் கதியில்லாததாயினும் கதியுள்ளதாகவும் ஸம்ஸாரமில்லாததாயினும் ஸம்ஸாரமுள்ளதாகவும் பயமில்லாததாயினும் பயமுள்ளதாகவும் கர்த்தாவாகாததாயினும் கர்த்தாவாகவும் காரணமில்லாததாயினும் காரணமுள்ளதாகவும் நாசமில்லாததாயினும் நாசமுள்ளதாகவும் அவித்வான் அபிமானிக்கிறான்.

---

## முந்நூற்றுப்பத்தாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

——:o:——

**(வஸிஷ்டர் பிராணிகளுக்குச் சரீரமும் உருவமுதலியவையும் உண்டாகும் வகையை ஜனகருக்குச் சொல்லியது.)**

இவ்விதம், அறிவின்மையினாலும் அஜ்ஞானிகளான ஜனங்களுடைய ஸஹவாஸத்தாலும் மரணத்தை முடிவிலுடைய ஆயிரம் கோடி ஜன்மங்களை அடைகின்றான். தாமஸவினாலே திரியக்ஜாதியிலும் மனுஷ்யஜாதியிலும் தேவலோகத்திலும் பதனத்தை முடிவாகவுடைய ஆயிரம் ஸ்தானங்களை அடைகிறான். இவ்விதம் இந்த அவித்வானானவன் அறிவின்மையினால் பிராணிகளுடைய ஆயிரக்

கணக்கான ஸ்தானங்களில் மறுபடியும் சந்திரன்போல லயத்தை அடைகிறான். (பதினாறு கலைகளையுடைய புருஷனது) பதினைந்தாவது கலையானது உத்பத்திகாரணமென்கிற ப்ரகிருதி. அது தாமாவென்று சொல்லப்படுகிறது. பதினாறாவதான கலையை அழிவில்லாத இந்தச் சந்திரஸ்தானமாக அறியக்கடவாய். புத்தியில்லாதப்ராணியானது அடிக்கடி பதினாறாவது கலையுடன் உண்டாகின்றது. அதனுடைய தாமாவைப் பிராணிகள் உபயோகிக்கின்றன. மறுபடியும் அது உண்டாகின்றது. பதினாறாவது கலையோவென்றால் ஸூக்ஷ்மமாயுள்ளது. அது சந்திரஸ்தானமாக நிச்சயிக்கப்படவேண்டும். அது [1] தேவர்களாலே உபயோகிக்கப்படுகிறதில்லை. அந்தப் பதினாறாவது கலையானது [2] தேவர்களை உபயோகிக்கின்றது. ராஜஶ்ரேஷ்டனே! இந்தப் பதினாறாவது கலையை க்ஷீணிக்கச் செய்யாமல் பிராணியானது ஜனிக்கின்றது. பதினாறாவதான அந்தக்கலையானது இவனுக்குப் பிரகிருதியாகக் காணப்படுகின்றது. அதனுடைய நாசத்தால் மோக்ஷமானது சொல்லப்படுகிறது. இருபத்தைந்தாமவனான ஆத்மாவானவன் அவனுடைய அஜ்ஞானத்தினாலேதானே இவ்விதம் பதினாறு கலைகளுடையதும் அவ்யக்தமென்று சொல்லப்பட்டதுமான அந்தத்தேகத்தை, 'இது என்னுடையது' என்று நினைத்து அதிலேயே சுழலுகிறான். அரசனே! ஆத்மாவானவன் சுத்தியுடையவர்களையும் அசுத்தியில்லாதவர்களையும் அடுப்பதால் சுத்தியுடையவனும் அசுத்தியில்லாதவனுமாகிறான். சுத்தமான ஆத்மாவையுடையவன் அசுத்தனையடுப்பதால் அவனைப்போல அசுத்தனாகவே ஆகிறான். வித்வானாயிருந்தும் அவித்வான்களை அடுப்பதனாலே அவித்வானாவான். ராஜஶ்ரேஷ்டனே! ஆத்மஜ்ஞானமில்லாதவனும் [3] அப்படியே அறியத்தக்கவன். மூன்று குணங்களுடைய ப்ரகிருதியை அடைவதால் ப்ராகிருதனாவான்' என்று சொன்னார். கராளஜனகன், 'பகவானே! அக்ஷரம் க்ஷரம் இரண்டிற்கும் இந்தச் சம்பந்தமானது சொல்லப்படுகிறது. அதுபோல ஸ்திரீபுருஷர்களுக்கும் ஸம்பந்தமானது சொல்லப்படுகிறது. இவ்வுலகத்தில் புருஷனில்லாமல் ஸ்திரீயானவள் கர்ப்பத்தைத் தரிப்பதில்லை. அப்படியே புருஷன் ஸ்திரீயில்லாமல் ஒருரூபத்தை உண்டுபண்ணமாட்டான். ஒருவரோடொ

---

[1] 'ஆத்மகலையின் விஷயத்தில் இந்திரியங்களால் அல்லது பிராணிகளால்' என்று கொள்க.

[2] இந்திரியங்களை.

[3] 'அப்படிப்போலவே ஆத்மவித்துக்களின் ஸேவையினால் ஆத்மவித்தாகிறான்' என்பது வேறுபாடம்.

ருவர் சேர்வதாலும் ஒருவர் ஒருவருடைய குணங்களை அடுப்ப தாலும் இந்த ரூபத்தை உண்டுபண்ணுகிறார்கள். எல்லாப்பிறவிகளி லும் இப்படியே ஆண்பெண்களுடைய சேர்க்கையினாலும் ஒன்றுக் கொன்று குணங்களுடைய ஆச்ரயத்தினாலும் ருதுகாலத்தில ரூப மானது உண்டுபண்ணப்படுகின்றது அதன் உதாரணத்தைச சொ ல்லுகிறேன். வேதியரே! பிதாவினுடைய குணங்களிலும் மாதாவின் குணங்களிலும் எலும்பு நரம்பு ஊன் இவைகளைப பிதாவின் குணங்க ளாகவும் தோல் மாமிசம் உதிரம் என்பவைகளை மாதாவினிடமிருந் துண்டானவைகளாகவும் கேட்டு அறிகிறோம் ஓ' ப்ராம்மணச்ரே ஷ்டரே! இது இவ்விதம் வேதத்திலும் சாஸ்திரத்திலும் சொல்லப் படுகின்றது. வேதத்தில் சொல்லப்பட்டதும் சாஸ்திரத்தில் சொல்லப் பட்டதும் பிரமாணமாகச சொல்லப்படுகின்றன. அந்த வேதமும் சாஸ்திர [1] மிரண்டுமே ஆனதியான பிரமாணம். இப்படியே பிரகிருதி யும் புருஷனும் அன்னியோன்ய குணங்களின் தடையினாலேயும் அன்னியோன்னிய குணங்களை ஆச்ரயித்ததினாலேயும் எப்பொழு தும் சேர்ந்திருக்கிறார்கள். பகவானே! ஆகையால், மோக்ஷதர்ம மானது இல்லையென்று நினைக்கின்றேன். இல்லாவிடில ஏதாவது மோக்ஷத்தில் திருஷ்டாந்தமானது உம்மால் நேரில் பார்க்கப்பட்டிருந் தால் அதை உண்மையாக எனக்குச் சொல்லும். எல்லாவிதத்தாலும் நீர் ப்ரத்தியக்ஷமாகப் பார்த்திருப்பீரல்லவா? மோக்ஷத்தில் விருப்ப முடையவர்களான நாங்களும் நாசமற்றதும் தேகமற்றதும் ஜரையற்ற தும் நித்தியமும் இந்திரியத்திற்குப்புலப்படாததும் தனக்குஓர்ஈச்வரனில்லாததுமாயிருப்பது எதுவோ அதை 'அறியவிரும்புகிறோம்' என்றுவினவினான்.

வஸிஷ்டர், 'நீசொல்லிய வேதசாஸ்திரங்களிலுள்ள உதாரணமா னது இப்படித்தான் ஆனாலும், அதை நீ உள்ளபடி அறியவில்லை. அரசனே! நீ வேதம் சாஸ்திரமிரண்டிலுமுள்ளகிரந்தங்களைப் படித்து மிருக்கிறாய். நீ கிரந்தத்தினுடையதத்வத்தை உள்ளபடி உணர வில்லை வேதத்திலும்சாஸ்திரத்திலுமுள்ளகிரந்தத்தைப்படிப்பதில் மாத்திரம் பற்றுள்ளவனும் கிரந்தத்தின் அர்த்தத்தின் உண்மையை அறியாதவனுமாயிருப்பவனுடைய அந்தப்படிப்பானது வீண் கிரந் தத்தினுடைய அர்த்தத்தையறியாதவன் அதனுடையசுமையைச சுமக்கின்றவன். கிரந்தத்தினுடைய அர்த்தத்தின் உண்மையை அறிந்த வனுடைய கிரந்தத்தைப்படிப்பதாலுண்டான குணமானது வீணன்று.

---

1 வேறுபாடம்.

கேட்பவன் கேட்டவுடன் தத்வத்தையறிந்து அதனுடையபயனை அடையும்படி சொல்லவல்லவனே சொல்லுதற்குத்தக்கவன். ஸ்தூல புத்தியுடையவனும் நன்மையறிவில்லாதவனுமானவன், கிரந்தத்தினர்த் தத்தை ஸபைகளில் எங்ஙனம் உறுதியாகச்சொல்லுவான்? அந்தக் கிரந்தநிச்சயத்தை உள்ளபடி சொல்லமாட்டாதமறதியுள்ளவனும் அவ னுக்குநூல்களைக்கற்பித்தவனும் பரிஹஸிக்கத்தக்கபுத்தியையுடைய வர்களாகிறார்கள் ராஜச்ரேஷ்டனே! ஆகையால், ஸாங்கியர்களிடத் திலும் மஹான்களானயோகிகளிடத்திலும் உண்மையாகக்காணப் படுகிறதை உள்ளபடி கேள். யோகிகள் எதைப்பார்க்கின்றார்களோ அதையே ஸாங்கியர்களும் பார்க்கிறார்கள். ஸாங்கியத்தையும் யோகத் தையும் ஒன்றாகப்பார்ப்பவன் புத்திமான். ஐயா! தோலும் மாம்ஸ மும் உதிரமும் மேதையும் பித்தமும் மஜ்ஜையும் நரம்பும் இந்திரிய ஸமூகம். இதை அப்பொழுது நீ என்னிடம் சொன்னாய். திரவ்யத்தி லிருந்தும் திரவியத்திற்குஉற்பத்தி. ஆகையால், இந்திரியத்திலிருந் தும் இந்திரியத்தையும் தேகத்திலிருந்துதேகத்தையும் பீஜத்திலிரு ந்து பீஜத்தையும் அடைகிறான். இந்திரியமில்லாதவரும் பீஜமில்லாத வரும் திரவ்யமில்லாதவரும் தேகமில்லாதவருமான மகானான ஆத்மா நிர்க்குணராயிருப்பதால் எப்படி குணங்களுண்டாகும்? குணங்கள் குணங்களிலுண்டாகின்றன; அவைகளிலேயே ஒடுங்குகின்றன. இப்படியிருக்க, குணங்கள் ப்ரகிருதியிலிருந்துண்டாகின்றன; அங் கேயே ஒடுங்குகின்றன. தோல், மாம்ஸம், உதிரம், மேதை, மஜ்ஜை, பித்தம், எலும்பு, நரம்பு இந்தஎட்டையும் வீரியத்தினாலுண்டானவை களாகவும் [1]பிரகிருதியாலுண்டானவைகளாகவும் அறி. புருஷன், புருஷனைக்காட்டிலும்வேறானஸ்திரீ, அலி ஆகியமூன்றுலிங்கங்களும் பிரகிருதியைச் சேர்ந்தவைகளாகக் கருதப்பட்டன புருஷனாகாதவ னும், ஸ்திரீயும் அலியுமாகாதவனுமாயிருக்கிற அந்த ஆத்மாவானவன் லிங்கத்துடன்கூடியவனாகச சொல்லப்படுகிறான் லிங்கமற்றவனான ஆத்மாவையடைந்து பிரகிருதியானது தன்னிடமுண்டானகாரியலிங் கங்களாலே அறியப்படுகின்றது. அப்பா! சரீரமில்லாத ருதுக்கள் புஷ்பங்களாலும் பழங்களாலும் எப்பொழுதும் அறியப்படுவதுபோல லிங்கமில்லாததும் அனுமானத்தினாலே அறியப்படுகிறது. இருபத் தைந்தாமவனும் லிங்கங்களின்மத்தியில்நிலையானஸ்வரூபத்தையுடை யவனும் ஆதியந்தமற்றவனும் அளவற்றவனும் கெடுதலற்றவனும் எல்லாவற்றையும்பார்க்கிறவனுமான ஆத்மாவானவன் குணங்களில்

---

1 மாதா.

அபிமானியாகமாத்திரமிருப்பதால் நிர்க்குணனுகச் சொல்லப்படுகிறுன். குணமுடையதற்குக் குணங்களிருக்கின்றன. நிர்க்குணனை ஆத்மாவுக்குக் குணங்கள் எப்படி உண்டாகும்? ஆகையால், குணங்களைப்பார்க்கின்றஜனங்கள் இப்படி அறிகின்றுர்கள். இவன் குணங்களைப் பிரகிருதியினிடத்திலேயே* ஊகித்தறிகிறபொழுது [1]குணங்களுடையநாசத்தால் ஸாங்கியர்களும் யோகிகளும் ஜடங்களை விலக்கியதால் மஹாபிராஜ்ஞனும் எல்லாவற்றையுமறிகின்றவனும் புத்திக்குமேற்பட்டவனுமாகச்சொல்லுகிற பரமாத்மாவைப் பார்க்கின்றுன். சாங்கியமென்கிறஞானத்திலும் யோகத்திலும்ஸமர்த்தர்களும் மோக்ஷத்தைவிரும்புகிறவர்களுமான வித்வான்கள் குணத்தை ஜடமாகவும் பிரகாசமில்லாததாகவும் ஸ்வதந்திரமில்லாததாகவும் ஈஶ்வரரை நிர்க்குணராகவும் நித்யாகவும் பிரகிருதிக்கும் குணங்களுக்கும் நியந்தாவாகவும் இருபத்தைந்தாமவராகவும் சொல்லுகிறுர்கள். (இளமைமுதலாகவும் ஜாகரணமுதலாகவுமிருக்கின்ற) நிலைமைகளிலும் ஜன்மத்திலும் பயந்தவர்கள் பிரகிருதியை அறிந்தபொழுது அறிகின்றவனுன ஆத்மாவை ஞானத்தினுலே ஸமமானபரம்மத்தை அடையச்செய்கின்றுர்கள். பகைவர்களைக்கொல்பவனே! நல்லஞானமானஇதுவும் கெட்டதானவிஷயஞானமும் ஞானிகளுக்கும் அஞ்ஞானிகளுக்கும் தனித்தனியான திருஷ்டாந்தம் (வாதிகளுள்) ஒருவருக்கொருவரால் க்ஷரத்தையும் அக்ஷரத்தையும்பற்றிய இந்த [3]உதாரணமானது சொல்லப்பட்டது. வித்வான்கள் அபேதத்தை அக்ஷரமாகச் சொல்லுகின்றுர்கள். [4]பேதமானது க்ஷரமாகச சொல்லப்படுகின்றது. இவன் இருபத்தைந்துதத்துவங்களிலும் நிலைபெற்று நன்றுகப் [5]பிரவிருத்திக்கிறபொழுது, இவனுக்கு அபேதமானது ஞானமும் பேதமானது அஜ்ஞானமுமாகின்றன. தத்வத்திற்கும் நிஸ்தத்வத்திற்கும் இது தனித்தனியான உதாரணம். வித்வான்கள் இருபத்தைந்துதத்வத்தையும் தத்வமாகச் சொல்லுகின்றுர்கள். தத்வமில்லாததென்கிற நிஸ்தத்வத்தை இருபத்தைந்தாவதற்குமேலானதும் (இருபத்தைந்தானஐந்துவர்க்கங்களில்) ஸஞ்சரிப்பதும் (அதனுல்) வர்க்கத்திற்குவர்க்கமும் ஸனுதனமும்* (அதனுல்) தத்வத்தைக் காட்டிலும் (மேலான) தத்வமுமானஉதாரணமாகச் சொல்லுகின்றுர்கள்' என்றுர்.

---

1 வேறுபாடம். 2 'சாஸ்திரமானது' என்பது பழையவுரை.
3 'ஏகத்வம்' என்பது மூலம். 4 'நாநாத்வம்' என்பது மூலம்.
5 வேறுபாடம்.

## முந்நூற்றுப்பதினோராவது அத்யாயம்.
## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)



(வஸிஷ்டர் யோகமுறை ஸாங்கியமதமுதலியவற்றை ஜனகருக்குச் சொல்லியது.)

ஜனகர், 'ஓ! முனிசிகாமணியே! உம்மால் இது பேதாபேதமென்று சொல்லப்பட்டது. இந்தப்பேதாபேதங்களுடைய திருஷ்டாந்தத்தை நான் சந்தேகமாகவே பார்க்கிறேன். ஓ! குற்றமற்றவரே! அஜ்ஞானியினாலும் ஞானியினாலும் அறியப்பட்ட ஆத்மாவினுடைய தத்வத்தையும் நான் ஸ்தூலபுத்தியினால் அறியவில்லை. இது உண்மை. ஓ! மாசில்லாதவரே! உம்மால்சொல்லப்பட்ட க்ஷராக்ஷரங்களுடையகாரணமும் சஞ்சலபுத்தியுடைமையால எனக்கு நசித்தது போன்றதே ஓ! பகவானே! ஆகையால், இந்தப்பேதாபேதங்களுடைய ஞானத்தையும் ஞானியையும் அஜ்ஞானியையும் உண்மையாக அறியப்படுகிறவஸ்துவையும் வித்தையையும் அவித்தையையும் க்ஷரத்தையும் அக்ஷரத்தையும் ஸாங்கியத்தையும் யோகத்தையும் பேதத்தையும் அபேதத்தையும் முழுதும் கேட்கவிரும்புகிறேன்' என்று சொல்ல, வஸிஷ்டர் சொல்லலானார்.

'ஓ! மஹாராஜனே! கஷ்டம். நீ கேட்கிற இதை உனக்குச் சொல்லுகிறேன். யோகத்தின் காரியத்தை என்னிடம் தனியாகக் கேள். யோகிகளுக்கு யோகத்தில் செய்யவேண்டியதியானமே சிறந்தவன்மை. வேதவித்துக்களான ஜனங்கள் அந்தத்தியானத்தையும் இரண்டுவிதமாகச் சொல்லுகின்றார்கள். (அவைகள்) மனத்தை ஒருமுகமாகச்செய்வதும் பிராணாயாமமுமாம். பிராணாயாமம் மனத்தின்[1] குணத்தோடுகூடினதும்[2] குணமில்லாததுமாக இருக்கிறது. ஓ! அரசனே! ஜலமலம் விடுத்தலும் போஜனம்செய்தலுமாகிய இவ்விரண்டுகாலத்திலும் யோகம் செய்யக்கூடாது. மற்றக்காலமெல்லாம் ஜாக்கிரதையுடன் யோகத்தைச செய்யவேண்டும். புத்திமானான முனிவன் இந்திரிய விஷயங்களிலிருந்தும் இந்திரியங்களை மனத்தினால் திருப்பிப் பிறகு[3] இருபத்திரண்டு ஏவுதல்களாலும் நிலைத்திருப்ப

1 தியானயோகம். 2 ஹடயோகம்.

3 கால்நகமுதல் தலைவரையிலுள்ள ஆகாயத்தில் பிராணவாயுவை முதலில் வியாபித்திருக்கச்செய்து பிறகு, அதிலிருந்து நெற்றி, புருவங்களின் நடு, நேத்திரஸ்தானம், நாஸிகாமூலம், ஜிஹ்வாமூலம், கண்டம், ஹிருதயமத்யம், நாபிமத்யம், லிங்கம், மூலாதாரம், அபானம், அடித்தொடைகள், நடுத்தொடை

வ்னும் ஜரையில்லாதவனும் வித்வான்களால் இந்த ஏவுதலுக்கு உரிய வனுகச் சொல்லப்பட்டவனுமான அந்த ஜீவனை இருபத்துநான்காவ தைக்காட்டிலும் மேலான, பரமாத்வைக் குறித்து ஏவவேண்டும். மாசற்றமனமுடையவனுக்கு விரைவில ஏவுதல்களால் எப்பொழுதும் ஆத்மா (பரனுடன்) சேர்ப்பிக்கக்கூடியவன் அப்படியில்லாவிட்டால் முடியாதென்பது திண்ணமென்று கேட்டிருக்கிறோம் எல்லா ஸங்கங்களிலிருந்தும் விடுபட்டவனும் லகுவான ஆகாரமுடையவனும் இந்திரியங்களை ஜயித்தவனுமாயிருந்துகொண்டு முன்ராத்ரியிலும் பின்ராத்திரியிலும் ஆத்மாவில் மனத்தை நிறுத்தவேண்டும். ஓ! மிதிலாபதியே! மனத்தால் இந்திரியக் கூட்டத்தை நிலைக்கச்செய்து புத்தியினுல் மனத்தை ஸ்திரமாகச்செய்து கல்லுப்போலவும் [1]கட்டை போலவும் [2]மரம்போலவும் அசையாமலிருப்பவனை (யோக) விதிகளின் அனுஷ்டானத்தையுணர்ந்த வித்வான்கள் யோகத்தை அடைந்த வனுகச் சொல்லுகிறார்கள். (சப்தத்தைக்) கேளாதவனும் (கந்தத்தை) முகராதவனும் (ரஸத்தைச்) சுவையாதவனும் (ரூபத்தைப்) பாராதவனும் (ஸ்பரிசத்தை) அறியாதவனும் மனத்தில் சங்கற்பமில்லாதவனும் ஒன்றையுமபிமானியாதவனும் கட்டைபோல ஒன்றையும் அறியாதவனுமாயிருக்கிற யோகியை வித்வான்கள் பிரகிருதியை அடைந்தவனுகச் சொல்லுகிறார்கள். ஐயா! லிங்கசரீரமில்லாதவனும் அசைவற்றவனுமாகிக் காற்றில்லாதவிடத்தில் ஜ்வலிக்கின்றதீபம்போல மேலே பிரகாசிக்கின்றவனும் சலனகதியை அடையாதவனுமாயிருப்பவன் பரமாத்மாவைப் பார்ப்பான். பார்த்து, 'அப்பா!, என்னைப்போன்றவர்களால் அறியவேண்டியவனும் (எல்லாவற்றையும்) அறிகிறவனுமான பரமாத்மா இருதயத்திலிருக்கிறான்' என்றுசொல்லுவான். அப்படியே, ஆத்மாவானவன் புகையில்லாத அக்கினிபோலவும் கிரணங்களுள்ள ஸூர்யன்போலவும், ஆகாயத்தில் மின்னலுடைய ஜோதிபோலவும் தன்னிடத்தில் காணப்படுவான். மஹாத்மாக்களும் தைரியமுடையவர்களும் வித்வான்களும் ப்ரம்மத்தைத் தெரிவிக்கின்ற சாஸ்திரத்தில்

---

கள், முழங்கால்கள், கணைக்கால் மதயங்கள், குதிகால்கள், கால்கட்டை விரல்கள், பாதங்கள் இவைகளில் ஒன்றினின்றும் ஒன்றில் இழுத்து நிறுத்தல் ப்ரத்யாஹாரம். இவை [3]பதினெட்டுச்சோதனைகள் (ஏவுதல்கள்) எனப்படும். இவற்றுடன் தாரணை, தியானம், ஸமாதி, பிரகிருதி புருஷர்களின் விவேகஞானம் இவைகளைச் சேர்க்க ஏவுதல்கள் இருபத்திரண்டாகும்.

1 'ஸ்தாணு' என்பது மூலம்.

2 'தாரு' என்பது மூலம்; 'கிரி' என்பது வேறுபாடம்.

3 'திர்யக்கதி' என்பது மூலம்.

நிஷ்டையுள்ளவர்களுமான பிராம்மணர்கள் ஜன்னமரணமற்ற ஆத்மா வை நன்றாகப் பார்க்கின்றார்கள். அதனையே, அணுக்களைக்காட்டிலும் அணுவாகவும் மகத்துக்களைக்காட்டிலும் மகத்தாகவும் சொல்லு கின்றார்கள். அந்தப்பிரம்மதத்வமானது எல்லாப் பிராணிகளிடத்தி லும் ஹ்ருதயத்தில்நிலைபெற்றிருந்தும் காணப்படுகிறதில்லை. உலகத் தைப் படைக்கிற அவர் புத்தியாகிற நெய்யுள்ள மனமாகிறதீபத் தால் பார்க்கப்படுவார்; பெரிதான (அஜ்ஞான) இருளுக்கு அப்புறப் பட்டிருப்பதால் தமோகுணமில்லாதவர். அவர் வேதத்தின்கரை யடைந்ததத்வஜ்ஞானிகளால் [1]மானஸரென்றும் விமலராயிருப்பதால் விதமஸ்கரென்றும் லிங்கமில்லாதவராயிருப்பதால் அலிங்கரென்றும் பெயர்கொண்டாரென்றும் சொல்லப்பட்டார். யோகிகளுடைய இந்த யோகத்தையே யோகத்தினுடைய லக்ஷணமாக நினைக்கிறேன். யோகி கள் இவ்விதம் ஆத்மஸ்வரூபத்திலிருக்கின்றவனும் ஜரையில்லாத வனும் சிறந்தவனுமான த்ரஷ்டாவைப் பார்க்கின்றார்கள். உனக்கு என் னால் இதுவரையில் யோகஞானமானது உள்ளபடி சொல்லப்பட்டது. இனி, பரிஸங்கியானமென்கிற பிரகிருதிபுருஷர்களை வேறாகப்பார்ப்ப தான ஸாங்கியஞானத்தைச் சொல்லுகிறேன். ஓ! ராஜஶ்ரேஷ்டனே! பிரகிருதியைச் சொல்லுகின்றவர்கள் அவ்யக்தத்தை மேலானகாரண மாகச்சொல்லுகின்றார்கள். அதிலிருந்தும் இரண்டாவதான மகத்தத் வம் உண்டாயிற்று. மகத்தத்வத்திலிருந்தும் மூன்றாவதான அஹங்கா ரம் உண்டானதென்று நமக்குக்கேள்வி. ஸாங்கியஞானமுடையவர்கள் அஹங்காரத்திலிருந்தும் பஞ்சஸூக்ஷ்மபூதங்களுண்டாயினவென்று சொல்லுகின்றார்கள். இந்தஎட்டும் பிரகிருதிகள். ஐந்துமஹாபூதங் களும் தம்விஷயங்களைப் பிரகாசம் செய்கின்ற இந்திரியங்கள்பதினொன் றுமாக விகாரங்கள் பதினாறு. புத்திமான்களும் ஸாங்கிய சாஸ்திரத்தி லுள்ளவிதியின் தாத்பரியத்தையறிந்தவர்களும் ஸாங்கியமார்க்கத்தில் பற்றுள்ளவர்களுமாயிருக்கிற ஸாங்கியர்கள் தத்வங்களை இவ்வள வாகவே சொல்லுகின்றார்கள். எதிலிருந்து எது உண்டாகின்றதோ அது அதிலேயே லயிக்கின்றது. ஸ்ருஷ்டி முறைக்குவிபரீதமாக லயிக் கின்றன. அந்தராத்மாவினால் ஸ்ருஷ்டிக்கப்படுகின்றன. ஸமுத்திரத்தி னுடைய அலைகள்போலக் குணங்கள் குணங்களிலே கிரமமாக உண்டா கின்றன; விபரீதமாக லயிக்கின்றன. ஓ! ராஜசிகாமணியே! பிரகிரு தியினுடைய ஸ்ருஷ்டியும் பிரளயமும் இவ்வளவே. இதற்குப் பிர ளயத்தில் ஒன்றாயிருக்கும் தன்மையும் ஸ்ருஷ்டிகாலத்தில் அனேகமா

---

[1] மனத்தாலறியக்கூடியவர்.

யிருக்கும்தன்மையும் இப்படியேஎன்று அறியத்தக்கதை அறிபவர்கள் அறியவேண்டும். அதிஷ்டாதாவென்று சொல்லப்பட்ட அவருக்கும் [1] இதுவே உதாரணம். அவர் பிரகிருதியினுடைய அபேதத்தையும் பேதத்தையும் அனுஸரித்துத் தத்வத்தோடு கூடினவராயிருக்கிறார். அவருக்குப் பிரளயத்தில் ஒன்றாயிருக்கும் தன்மையும் பிரவிருத்தியினால் அநேகமாயிருக்குந் தன்மையும் ஏற்படுகின்றன. ஸ்ருஷ்டிஸ்வபாவத்தையுடைய பிரகிருதியானது தன்னை அநேகமாகச்செய்தது. அந்த க்ஷேத்திரத்தில், மகானும் இருபத்தைந்தாமவருமான ஆத்மாவானவர் தலைவராயிருக்கிறார். ராஜஸ்ரேஷ்டனே! அதனால், யதிஸ்ரேஷ்டர்களாலே அதிஷ்டாதாவென்று சொல்லப்படுகிறார். க்ஷேத்திரங்களை ஆள்வதனால் அதிஷ்டாதாவென்று நமக்குக்கேள்வி. ஜடமான க்ஷேத்திரத்தையறிவதால் க்ஷேத்ரஜ்ஞனென்று சொல்லப்படுகிறார். வியக்தமில்லாத (சரீரமாகிற) புரத்தில்சயனித்திருத்தலால் புருஷரென்று சொல்லப்படுகிறார். க்ஷேத்ரம்வேறும் க்ஷேத்ரஜ்ஞன் வேறுமாகச் சொல்லப்படுகின்றன. க்ஷேத்ரமானது அவ்யக்தமென்று சொல்லப்பட்டது. ஞாதா இருபத்தைந்தாமவன் [2]ஞானமும் வேறேயாகும். ஞேயமானது வேறாகசசொல்லப்படுகிறது. ஞானமானது அவ்யக்தமென்று சொல்லப்படுகின்றது. ஞேயன் இருபத்தைந்தாமவன். க்ஷேத்ரமென்றுசொல்லப்பட்ட அவ்யக்தமானது ஸத்வத்திற்குத்தக்கபடி சக்தியுள்ளது. இருபத்தைந்தாவதான (ஆத்ம) தத்வமானது (க்ரியா) சக்தியில்லாததும் தத்வமில்லாததுமாயிருக்கிறது. ஸாங்கிய ஞானம் இவ்வளவே. ஸாங்கியர்கள் பரிஸங்கியானமென்கிற பிரகிருதி புருஷர்களைப் பிரித்து அறிகின்றார்கள். பிரகிருதியையும் ஜகத்காரணமாகச் சொல்லுகின்றார்கள் ஸாங்கியர்கள் பிரகிருதியுடன் கூடத் தத்வங்களைக்கணக்கிட்டு இருபத்துநான்கு தத்வங்களாகவும் சொல்லுகின்றார்கள். அவன் [3]தத்வமில்லாதவன். இருபத்தைந்தாமவன் ஆத்மாவை அறியாதவனும் அறிகிறவனென்று கருதப்பட்டான். அவன் எப்பொழுது தன்னை அறிகிறானோ அப்பொழுது கைவல்யத்தையடைந்தவனாகிறான். இதுவரை உனக்கு யதார்த்தமாக நல்ல ஞானத்தைச் சொன்னேன். இவ்விதம் இதை அறிகின்றவர்கள் பிரம்மபாவத்தை அடைகின்றார்கள். நல்லஞானமென்பது [4]பிரகிருதியை உள்ளபடியே பார்ப்பது. காணப்பட்ட இந்தப்பொருள்கள் குணத்தன்மையிருப்

1. ஸிருஷ்டியில் பேதமும் பிரளயத்தில் அபேதமும். 2. வேறு பாடம்.
3. தத்வமென்றால் அதுவாயிருத்தல்; அதாவது பிரத்யக்ஷமாகாமை.
4. 'ப்ரம்மத்தை' என்பது பழையவுரை.

பதால் எப்படி (நிர்க்குணனுக்கு வேறே) அப்படியே நிர்க்குணனும் (இவற்றிற்கு) வேறுவான். இவ்விதமிருப்பவர்களுக்கு மறுபடி ஜனனம் இல்லை. அந்த நிர்க்குணன் அழிவற்ற பராத்பரமாய் அக்ஷரத்தன்மையிலேயே இருக்கிறான். பிரகிருதிபுருஷர்களை ஒன்றாக நினைத்துப்பார்ப்பவர்களுக்கு நல்லதரிசனம் ஏற்படாது. பகைவர்களை வாட்டுபவனே! அவர்கள் அடிக்கடி அவயக்தத்தை அடைகின்றார்கள். இந்த ஸர்வத்தையுமறிந்து அஸர்வனை அறியாதவர்கள் வ்யக்தர்களாகி வ்யக்தங்களின் வசத்திலிருப்பவர்களாவார்கள். ஸர்வம் அவ்யக்தமென்று சொல்லப்பட்டது. அஸர்வன் இருபத்தைந்தாமவன்; இவனை அறிகின்றவர்களுக்குப் பயம் உண்டாவதில்லை.

---

## முந்நூற்றுப்பன்னிரண்டாவது அத்யாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)

### (வஸிஷ்டர், வித்தை அவித்தைகளைப்பற்றி ஜனகருக்குச் சொல்லியது.)

**அ**ரசனே! இதுவரையில் உனக்கு ஸாங்கியஞானமானது சொல்லப்பட்டது. இனி, வித்தை அவித்தைகளைக் கிரமமாக என்னிடமிருந்து தெரிந்துகொள். ஸ்ருஷ்டிப்ரளயமென்கிற தர்மங்களையுடைய அவித்தையை அவ்யக்தமாகச் சொல்லுகிறார்கள். ஸ்ருஷ்டிப்ரளயமற்றவித்யாரூபனை இருபத்தைந்தாமவனென்று சொல்லுகிறார்கள். [1]வெவ்வேறான வித்தையை நீ கிரமமாக அறியக்கடவாய். ஐயா! முனிவர்களாலே இந்த ஸாங்கியஞானத்தினுடைய திருஷ்டாந்தமானது உண்மையாகச் சொல்லப்பட்டிருக்கிறது [2]ஞானேந்திரியமானது எல்லாக்கர்மேந்திரியங்களுடைய வித்தையாகவும் கருதப்பட்டது. அப்படியே ஸ்தூலபூதங்கள் [3]ஞானேந்திரியங்களுடைய வித்தையென்று நமக்குக்கேள்வி. [4]புத்திமான்கள் மனத்தை ஸ்தூலபூதங்களுடைய வித்தையாகச் சொல்லுகின்றார்கள். ஐந்து ஸூக்ஷ்மபூதங்களையும் மனத்தினுடைய [5]வித்தையென்று சொல்லுகின்றார்

---

1 அதிகபாடமான அரைச்லோகம் விடப்பட்டது.

2 கர்மேந்திரிய வியாபாரம் விட்டு ஞானேந்திரியங்களையே தானாய் பிமானித்திருத்தல். இது இந்திரியோபாஸ்தி.

3 ஞானேந்திரியங்களை விட்டு ஸ்தூல பூதங்களைத் தானாகத் தியானித்திருத்தல். இது விசேஷபூதோபாஸ்தி.

4 மனோமாத்திரமாயிருத்தல். மனத்தின் உபாஸ்தி.

5 ஸூக்ஷ்மபூதத்தின் உபாஸ்தி.

கள். அஹங்காரமானது ஐந்து பூதங்களுடைய [1]வித்தை. இந்த விஷயத்திற்சந்தேகமில்லை. ஓ! ராஜனே! அப்படியே [2]புத்தியானது அகங்காரத்தினுடைய வித்தை. தத்வங்களுக்கெல்லாம் மேலானதும் காரணமுமாயிருக்கிற அவ்யக்தமானது [3]புத்தியின் வித்தையாக அறியத்தக்கது. ஓ! அரசனே! இது பரமமான விதியாகவும் நினைக்கப்பட்டது. இருபத்தைந்தாவதும் பரமுமான ஆத்மாவை அவ்யக்தத்தினுடைய வித்தையாகச் சொல்லுகின்றார்கள் அரசனே! எல்லா ஞானத்திற்கும் விஷயமான எல்லாம் அவ்யக்தமென்று சொல்லப்பட்டன. ஞானமானது அவ்யக்தமென்று சொல்லப்பட்டது. [4]ஜ்ஞேயம் இருபத்தைந்தாவதான ஆத்மா. அப்படியே, ஞானம் அவ்யக்தமென்று சொல்லப்பட்டது அறிகிறவன் இருபத்தைந்தாமவன். விரும்பியபடியால வித்தையும் அவித்தையும் என்னால உனக்கு வகுத்துச்சொல்லப்பட்டன. அக்ஷரமென்றும் க்ஷரமென்றும் சொல்லப்பட்டதை என்னிடமிருந்து அறி. [5]இருவரும் அக்ஷரங்களாகச் சொல்லப்பட்டிருக்கிறார்கள். இவ்விருவரும் க்ஷரங்களாகவும் சொல்லப்பட்டிருக்கிறார்கள். இந்த விஷயத்தில் காரணத்தைச் சொல்லுகிறேன். உண்மையானது ஞானத்தினாலே வெளியாகும். இவர்கள் உற்பத்திநாசமற்றவர்களா இருவருமே ஈச்வரர்களாக அங்கீகரிக்கப்பட்டிருக்கிறார்கள் இவ்விருவரும் பிரம்மவித்துக்களாலே தத்வமென்று பெயருடையவர்களாகச் சொல்லப்படுகிறார்கள் ஸ்ருஷ்டிப்பிரளயமென்கிற தர்மங்களையுடையதாயிருப்பதால அவ்யக்தத்தை அக்ஷரமாகச்சொல்லுகிறார்கள் அப்படிப்பட்ட இந்த அவ்யக்தமானது (மகதாதி) குணங்களுடைய ஸ்ருஷ்டிக்காக அடிக்கடி விகாரத்தை அடைகின்றது. மஹத்தத்வமுதலிய குணங்களுடைய பரம்பரைகள் உற்பத்தியடைகின்றன அப்படிப்பட்ட இந்த இருபத்தைந்தாவதான ஆத்மாவை ஆதாரமானக்ஷேத்திரமாகச் சொல்லுகிறார்கள். (இரண்டிற்கும் க்ஷரத்தன்மை எப்படியென்றால் போகியானவன்) அந்தக் குணஸமூகத்தை அகம்புத்திக்கு விஷயமாகாத [6]சுத்தப்பிரம்மத்தில் லயம் செய்யும்பொழுது அந்த இருபத்தைந்தாவ

---

1 அஹங்காரோபாஸ்தி.

2 புத்தி மகத்தத்துவம். தன்மாத்ரமாயிருப்பது மகத்தத்வோபாஸ்தி.

3 அவ்யக்தோபாஸ்தி.

4 புத்திவிருத்தியால் பிரகாசிக்கின்ற போதரூபனை ஆத்மா.

5 வேறுபாடம் ; பிரகிருதியும் ஜீவாத்மாவும

6 ' அவ்யக்தாத்மநி ' என்பது மூலம்.

தான [1]ஜீவன் அந்தக் [2]குணங்களோடு லயத்தை அடைகின்றான். ஐயனே! (காரிய) குணங்கள் (காரண) குணங்களில் லயத்தை அடைகின்றபொழுது பிரகிருதிஒன்றே இருக்கும். அதுபோல க்ஷேத்ரஜ்ஞனான ஜீவனும் அவனுக்கு அதிஷ்டானமான ப்ரம்மத்தில் லயத்தை அடைகிறபொழுது குணமென்றுபெயர்பெற்ற மூலப்பிரகிருதியும் (மகதாதிகுணங்களுடன் சேர்ந்து) நாசத்தை அடைகின்றது. ஓ! விதேஹராஜனே! குணங்களிலேயிருப்பில்லாததினால் பிரகிருதிக்கு நிர்க்குணத்தன்மை ஏற்படுகிறது இவ்விதமே, க்ஷேத்ரஜ்ஞனான ஜீவனும் க்ஷேத்திரத்தின் ஞானம்நசித்தபொழுது க்ஷரத்தன்மையை அடைகிறான் இவன் ஸ்வபாவத்தில் நிர்க்குணனென்று கேட்டிருக்கிறோம். இவன் க்ஷரமாகிறபொழுது குணத்துடன்கூடின பிரகிருதியைக் கலந்து அபிமானிக்கிறான். அப்படியே, ஆத்மாவுக்கு நிர்க்குணத்தன்மை உண்டாகிறபொழுது, பிரகிருதிஸம்பந்தத்தை விடுதலினால் சுத்தனாகிறான். அறிவுள்ளவன், 'நான் வேறு. இது வேறு' என்று அறிகிறபொழுது இந்தப்பிரகிருதி வேறாகின்றது. கலந்திருக்கும் தன்மையை அடையமாட்டாது. ஓ! ராஜஶ்ரேஷ்டனே! பிரகிருதியோடுகலந்தவனும் வேறில்லாதவனுமாகக் காணப்படுகிறான். பிரகிருதியைச சேர்ந்தஅந்தககுணஸமூகத்தை நிந்தித்துப் பிரகிருதிக்குவேறான த்ரஷ்டாவைப்பார்க்கும்பொழுது பார்க்கிறவனைஅவன் மறுபடி ஸம்பந்திக்கமாட்டான். 'நான் என்ன இவ்விதம்செய்தேன்? இவ்வளவு காலம் மத்ஸ்யஜலஞானத்தை அனுஸரித்து இந்த [3]ஜனத்தை அடுத்திருந்தேனே இவ்வுலகில் மத்ஸ்யமானது (ஜலத்தையும் வலையையும்) பிரிததறியாமையால் வலையை அடுத்திருந்தது. நானும் மிகுந்தமோகத்தால் ஒரு ஜனத்தைவிட்டு மற்றொருஜனத்தை அடுத்திருந்தேன். மத்ஸ்யம் ஜலமென்கிறஞானத்தினால் அடுத்திருந்ததுபோல நானும் அடுத்திருந்தேன். மத்ஸ்யமானது ஜலத்தைக்காட்டிலும் வேறாயிருத்தலை அறிந்து அபிமானியாததுபோலவே 'நானும் அஜ்ஞானத்தினாலே ஆத்மாவையும் வேறாயிருத்தலையும் அறியவில்லை. அடிக்கடி போகத்தினால் ஒருஜனத்தைப்பற்றி வெவ்வேறான இந்த ஜனத்தை

---

1 ஜீவனுக்குக் குணங்களாலுண்டான ஜீவத்தன்மை நசிக்கின்றது; அதுவே லயம்; ஸ்வரூப நாசமில்லை. பிரம்ம ஸ்வரூபமாய்ச் சேஷ்டித்து நிற்கிறான்.

2 பிரகிருதிக்கு மகதாதிகளுடன்கூட ஸ்வரூப நாசம் லயம்.

3 'ஜனம்' என்பது மூலம்; 'சரீரம்' என்பது பழையவுரை.

அனுஸரித்திருந்த அறிவீனனுனஎன்னை நிந்திக்கவேண்டும். இவன் இந்தவிஷயத்தில் பந்துவாவான். இவனோடு எனக்கு ஸமமானதன் மையானது தகுதி. நானும் இவனைப்போன்ற தன்மையுள்ளவனுகி இவனுடன் ஸமமாயிருக்குந்தன்மையை அடைவேன். இவனோடொப் பான நான் இவன்விஷயத்தில் ஸமபாவத்தைப பார்க்கிறேன். இவனே கபடமற்றவனுயிருக்கிருன். நானும் ஸ்பஷ்டமாக இவன்போலவே யிருக்கிறேன். ஜடமானபிரகிருதியுடன்சேர்ந்து அஜ்ஞானத்தாலுண் டானமோகத்தினுலே பிரவிருத்தித்தவனும் அஸங்கனுமான நான் ஸங்கத்துடன்கூடிய பிரகிருதியுடன் இவ்வளவு காலம்வரையில் இருந் தேன். இந்தப்பிரகிருதியினுலே நான் வசம்செய்யப்பட்டு இவ்வளவு காலமாக அறியவில்லை. நான் உயர்வானதேவர்களேயும் நடுவானமனி தர்களேயும் இழிவானபசுபக்ஷிகளேயும்சேர்ந்த அந்தப்பிரகிருதியில் ஏன் வஸிக்கிறேன்? (எனக்கு) ஸமானமாயிருக்கிற இதனுடன் அறிவீனத் தன்மையால் நான் ஏன் ஸகவாஸத்தைச் செய்கிறேன்? இப்பொழுது நான் ஸ்திரனுகிறேன். இந்தஸமயமோ வஞ்சனைக்குட்பட்டு (நான் இதனுடன்) ஸகவாஸத்தை செய்யமாட்டேன் விகாரமற்றநான் விகாரமுடைய இதனுல்வஞ்சிக்கப்பட்டேனென்பது இதனுடையகுற்ற மன்று. இது என்னுடைய குற்றம்தான். சரீரமற்றநான் பராமுகனுயிரு ந்து இதனிடம்பற்றியிருந்ததனுல் அனேகவிதமானசரீரங்களிலிருந் தவனுகிறேன். நான் சரீரமில்லாதவனுயிருந்தும் பிரகிருதியினுடைய அவிநயத்தினுல் இகத்தில் அந்தஅந்தப் பிறவிகளில்விழுந்து என தென்கிறமமதைக்குவசப்பட்டுச் சரீரமே நானுனேன். மமதையில் லாதவனுனஎனக்கு அறிவழிந்ததாயிருக்கிற சித்தத்தினுலே அந்த அந்தப்பிறவிகளில் மமதையையுண்டுபண்ணி என்னகாரியம் செய்யப் பட்டது? தன்னை அநேகமாகச்செய்துகொண்டு என்னை மறுபடியும் அவைகளில்சேர்ப்பிக்கிறதும் (என்னுடைய) ஆத்மாவை அகங்காரத் திலுட்படுத்தியதுமான இந்தப்பிரகிருதியினுலே இகத்தில் எனக்கு ஒன்றுமி செய்யவேண்டியதில்லை மமதையில்லாதவனும் அகங்கார மில்லாதவனுமானநான் * இப்பொழுது விழித்துக்கொண்டேன். இந் தப்பிரகிருதியினுலே எப்பொழுதும் மமதையானது அகங்காரத்தை முன்னிட்டுச்செய்யப்பட்டு ஸ்வரூபத்தையுடையதாயிருக்கிறது. நான் இந்தப்பிரகிருதியைவிட்டுவிலகி நாசமற்றதான பரமாத்மாவை ஆஸ்ர யிப்பேன். நான் இந்தப்பரமாத்மாவுடன் ஸமபாவத்தையடைவேன். ஜடமான இந்தப்பிரகிருதியுடன் ஸமபாவத்தையடையமாட்டேன். எனக்கு இந்தப்பரமாத்மாவுடன் * ஐக்யமானது மங்களம்; இந்தப்பிர

* L கூக

கிருதியுடன்ஐக்யம் க்ஷேமமன்று' என்று இருபத்தைந்தாவதான ஆத்மா பரமாத்மஞானத்தினாலே இவ்விதமறிந்து க்ஷரமானபிரகிருதியை விட்டுவிட்டு அழிவற்றதான [1]அக்ஷரத்தன்மையை ஸ்தாபித்துக் கொள்ளவேண்டும். ஓ! மிதிலாதிப! அவ்யக்தமும் வ்யக்தமுமாயிருக்கிற (ஸ்ருஷ்டிமுதலிய) கர்மத்தையுடையவனும் ஸகுணனும் நிர்க்குணனுமானபரமனை நிர்க்குணனாகஸாக்ஷாத்கரித்து அத்தன்மையாகஆகிறான். இப்பொழுது, என்னால் வேதத்தில்சொல்லியபடி ஞானத்துடன்கூட க்ஷராக்ஷரங்களுடைய தத்வத்தின் நிதர்சனமானது சொல்லப்பட்டது. ஸந்தேகமில்லாமலும் நுணுக்கமாகவும் தெளிவாகவும் நன்கு அறியப்பட்டதாகும்படி நான் கேட்டவிதமே திரும்ப உனக்குச் சொல்லுகிறேன். அதை அறிந்துகொள். என்னாலே ஸாங்கியமும் யோகமும் அந்தஇரண்டின் சாஸ்திரங்களின் உதாரணத்துடன் சொல்லப்பட்டன. ஸாங்கியர்களாலே சொல்லப்பட்ட சாஸ்திரமானது யோகசாஸ்திரமே. ஓ! பூபதியே! ஸாங்கியர்களுடைய சாஸ்திரமானது நன்றாக அறிவையுண்டுபண்ணுகிறது. அது அந்தச் சாஸ்திரத்தில் சிஷ்யர்களுடைய நன்மையைக்கருதி மிகவும்தெளிவாகச் சொல்லபபடுகிறது ஸமர்த்தர்களான ஜனங்கள் இவ்விதமான இந்தச்சாஸ்திரத்தை வேறுதானென்றும் சொல்லுகிறார்கள். அரசனே! யோகிகளுக்கு இந்தசசாஸ்திரத்திலும் வேதத்திலும் ஆதரவிருக்கிறது. (அவைகளில் பிரவிருததித்தவன்) இருபத்தைந்தாவதற்குமேலானதத்வத்தைக் காண்கிறதில்லை. ஜடமான அவ்யக்தமும் அறிகிறவனான ஜீவதத்வமும் உள்ளபடி ஸாங்கியர்களுடைய போதரூபமானபரதத்வமும் எடுத்துரைக்கப்பட்டன. (யோகிகள்) அறிகிறவனானஜீவனையும் அறிவான ஆத்மாவையும் யோகத்தின் உதாரணமாகச் சொல்லுகின்றார்கள்.

---

மூந்நூற்றுப்பதின்மூன்றாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

——:o:——

(வஸிஷ்டர், ஞானஜ்ஞானங்களையும் உபதேசம்பெறத்தக்கவர் தகாதவரையும் ஜனகருக்குச் சொல்லியது.)

இனி, ஜடமான அவ்யக்தத்தையும் இந்தக்குணவிதியையும் கேள். இந்தப்பிரகிருதி குணங்களைப் போஷிக்கிறது; படைக்கிறது; அழிக்கிறது. அரசனே! எப்பொழுதும் இவ்வுலகில் விளையாட்டிற்

1 ப்ரம்மபாவத்தை.

காகத் தன்னைப் பலவாகச் செய்து விகாரத்தையடைகின்றது. ஜீவ
னானவன் அவைகளையே பார்க்கிறான். இவ்விதம் வேறுபாட்டை
யடைவதான இதை அறிகிறதில்லை. வ்யக்தமில்லாமல் அறிவதினாலே
தான் அறிகிறவனாகவும் சொல்லுகிறார்கள் அவ்யக்தம் ஒருபோதும்
குணத்துடன் கூடின விகாரத்தையும் நிர்க்குணமான பரமாத்மாவையும்
அறிகிறதேயில்லை. அதனாலேதான், இதை அறிவில்லாத ஜடமாகச்
சொல்லுகின்றார்கள். ஒருகால் அவ்யக்தமானது அறிகிறதானாலும்
இருபத்தைந்தாவதாயிருந்துகொண்டு அறியும். இந்தத்ரஷ்டாவான
வன் சித்ஜடஸங்கரூபனாயிருக்கிறானென்று வேதம் சொல்லுகிறது.
ஸங்கரூபனாயிருக்கும் காரணத்தால் அவ்யக்தனும் அச்சுதனும் இருப
த்தைந்தாமவனுமான மகாத்மாவைப் பிரித்தறியாதவனென்று சொல்
லுகிறார்கள் அவ்யக்தமாக அறிவதினாலேயும் அறிகிறவனைச் சொல்
லுகின்றார்கள். இவன் களங்கமற்றவனும் ஞானஸ்வரூபனும் எப்
பொழுதுமிருப்பவனும் அறியமுடியாதவனுமான இருபத்தாறாமவனை
அறிகிறதில்லை. அவன் அந்த இருபத்தைந்தாமவனையும் இருபத்
துநான்காமவனையும் அறிகிறான் ஐயா! பார்க்கப்படுகின்றவர்களும்
பார்க்கப்படாதவர்களுமான பிரகிருதிபுருஷர்கள்இருவருமே அவ
னால் வியாபிக்கப்பட்டுப் பெரியகாந்தியுடையவர்களாயிருக்கிறார்கள்.
ஆகையால், அவ்யக்தமும் கேவலமுமான அந்தப்ரம்மம் அறிகின்
றது. கேவலமானது இருபத்தைந்தாமவனையும் இருபத்துநான்
காவதையும் பார்க்கிறது. ஆகையால், திரஷ்டாவானவன் எப்பொ
ழுது தன்னை, 'நான் வேறானவன்' என்று அறிகிறானோ அப்
பொழுது பிரகிருதியுடன் கூடின அவன் அவ்யக்தத்தை அறிகிறவனா
கிறான். ராஜஶ்ரேஷ்டனே! எப்பொழுது விஷயங்களாலும் ஸ்வரூபத்
தாலும் களங்கமற்ற மேலான அறிவை (அடைந்து) இருபத்தாறாமவனை
அறிகின்றானோ அப்பொழுது அப்படியே ஞானரூபனாயிருப்பதை
அடைகிறான். பிறகு, அவன் ஸ்ருஷ்டிப்பிரளயதர்மங்களையுடைய அவ்
யக்தத்தை விடுகிறான். எப்பொழுது நிர்க்குணனாய்க் குணங்களோடு
கூடியதும் ஜடமுமாயிருக்கிற பிரகிருதியை அறிந்தானோ அப்பொ
ழுது அவ்யக்தத்தைப் பார்த்ததினால் கேவலத்தினுடைய தர்மத்தை
யுடையவனாகிறான். கேவலத்துடன் கலந்து விமுக்தனாகி ஆத்மாவை
அடைவான். இதனைத் தத்வமற்றதும் ஜரைமரணமற்றதுமான தத்வ
மாகவும் சொல்லுகிறார்கள். [1](பகைவர்களுடைய) கௌரவத்தைக்
கெடுப்பவனே! தத்வங்களையடுத்ததினால் இவன் தத்வங்களையுடைய

1 'ஶத்துருக்களுக்கு மரியாதையளிப்பவனே' என்றும் கொள்ளலாம்.

வனாகமாட்டான். வித்வான்கள் இருபத்தைந்து தத்வங்களைச் சொல்லு கிறார்கள். ஐயா! இவன் தத்வமுடையவனே அல்லன். புத்திமானான இவன் தத்வமற்றவனே. ப்ராஜ்ஞனும் ஜரைமரணமற்றவனும், 'இரு பத்தாறுமவன் நான்' என்று கொள்ளப்பட்டவனுமான இவன் புத்தி விருத்திக்கு விஷயமாயிருக்கும் தன்மையானதத்வத்தைச் சீக்கிரம் விடுகிறான். புத்திவிருத்தியுடன் கூடாத திரஷ்டாவானவன் கேவல ஸ்வபாவமான பலத்தினாலேயே பேரறிவுவடிவமான இருபத்தாறும வனுடன் ஸமபாவத்தை அடைகிறான். ஸாங்கியம் சுருதி இவைகளின் உதாரணத்தைக்கொண்டு இவ்விதம் பலவாயிருத்தலென்று சொல் லப்பட்டது. புத்தியினால் அறியாதபொழுது சேதனனுடன் சேர் ந்த இருபத்தைந்தாமவனுக்கு ஒருவனாயிருக்கும் தன்மை ஏற்படு கிறது. மிதிலாதிபனே! இவன் அறிகிறவனாகி ஜடத்துடன் ஸம பாவத்தை அடைகிறபொழுது சேர்க்கையைத தர்மமாகவுடையவனா கிறான். அரசனே! சேர்க்கையற்ற ஸ்வரூபத்தையுடையவனும் ஜனன மில்லாதவனும் வியாபகனுமான இருபத்தாறுமவனை அடைந்து சேர்க் கையில்லாதஸ்வரூபமுடையவனாகிறான். ஓ! பெரியபாக்கியமுடைய வனே! வியாபகனான ஜீவன் இருபத்துநான்காவதான இந்த அவ்யக் தத்தை அறிகிறபொழுது இருபத்தாறுமவனை நன்றாக அறிந்து அவ் யக்தத்தை விட்டுவிடுகிறான். ஓ! குற்றமற்றவனே! உனக்குச் சுருதி யின் உதாரணத்தினாலே இந்த ஜடமான பிரகிருதியும் ஞாதாவானஜீவ னும் ஞானரூபமான பிரம்மமும் உள்ளபடி சொல்லப்பட்டன. சாஸ் திரத்தில் திருஷ்டியுள்ளவர்களால் அநேகத்தன்மையும் ஐக்யமும் இவ் வளவாகப் பார்க்கத்தக்கன அத்திப்பழமும் அதனுள்ளிருக்கும் கீடமும்போலவே இருபததுநான்காவதற்கும் இருபத்தைந்தாவதற் கும் பேதம். மத்ஸ்யத்துக்கும் ஜலத்துக்கும்போலவே இவைகளு க்கும் பேதமானது அறியப்படுகிறது. இப்படிப்போலவே இவைக ளுக்கு அனேகத்தன்மையும் ஏகத்தன்மையும் அறியத்தக்கன. அவ்யக்தஞானமென்றுபெயருடைய இதுதான் 'இருபத்தைந்தாமவ னுக்கு மோக்ஷமென்று சொல்லப்பட்டது. தேகங்களிலிருக்கிற இவன் அவ்யக்தவிஷயத்திலிருந்தும் விடுவிக்கத்தக்கவனென்று சொல்லுகிறார்கள். அப்படிப்பட்ட இவன் இவ்விதம் விடுபடுவான். வேறுவிதமானால் விடுபடானென்பது உறுதி. இவன் பரமாத்மாவோடு சேர்ந்து பரமாத்மாவினுடைய தர்மத்தையுடையவனாகிறான்; சுத்த னுடன் சேர்ந்து விசுத்தனுடைய தர்மமுடையவனாகிறான். அவன் ஞானரூபனுடன்சேர்ந்து ஞானரூபனாகிறான். ஓ! புருஷச்ரேஷ்

டனே! முக்தனுடன்சேர்ந்து முக்தனுடையதர்மத்தையுடையவனுகிருன். தவிர, வியோகத்தைத்தர்மமாகவுடையவனுடன் சேர்ந்து வியோகதர்மமுடையவனுகிருன். இகத்தில் மோக்ஷமுடையவனுடன் சேர்ந்து மோக்ஷமுடையவனும் சுத்ததர்மமுடையவனும் சுசியும் அளவற்றபிரகாசமுடையவனுமாகிருன். நிர்மலமான ஆத்மாவுடன் சேர்ந்து நிர்மலமான ஆத்மாவாகிருன் கேவலனுடன்சேர்ந்து கேவலாத்மாவாகிருன். சுதந்திரனேடு சேர்ந்து சுதந்திரத்தன்மையை அடைந்து சுதந்திரனுகிருன் மகாராஜனே! யதார்த்தமான தத்வத்தையும் சொல்வதிலுண்டான பயனையும் மாத்ஸர்யமில்லாமல, தெரிந்துகொண்டு உண்மையானதும் எப்பொழுதுமிருப்பதும் மிகவும் சுத்தமும் எல்லாவற்றிற்கும் ஆதியுமான இந்தப் பிரம்மமானது என்னுல் உனக்குசசொல்லப்பட்டது ஓ! அரசனே! பரமமும் அறிபவிருப்பமுள்ளவனுக்கு விசேஷமான அறிவிற்குக்காரணமும் நல்லபோதநிமித்தம் வணங்கினவனுக்குச் சொல்லப்பட்டதுமான இதை நீ [1]வேதத்தில் நிஷ்டையில்லாதவனுக்குச் சொல்லக்கூடாது அப்படியே இது அஸத்யபுத்தியுடையவனுக்கும் சொல்லத்தக்கதில்லை. ரகஸ்யமாக வஞ்சிக்கிறவனுக்கும் [2]மனந்தளர்ந்தவனுக்கும் கோணலானபுத்தியுள்ளவனுக்கும் சொல்லக்கூடாது. தான் பண்டிதனென்கிற எண்ணத்தால் பிறருக்குத் தாபத்தைச்செய்கிறவனுக்கும் சொல்லக்கூடாது உன்னுலே உபதேசிக்கப்படத்தக்கவனைத் தெரிந்துகொள் மனுஷ்யர்களுள் எப்பொழுதும் ஶ்ரத்தையுள்ளவனும் நற்குணங்களுள்ளவனும் பிறரை அபவாதம் சொல்லாதவனும் சுத்தமானயோகமுடையவனும் அறிவுடையவனும் [3]விஹிதகர்மத்தைசசெய்கிறவனும் (ஸுகதுக்கங்களை) ஸஹிப்பவனும் ஹிதனும் சுத்தமான சீலமுடையவனும் விஹிதகர்மத்தில் பிரியமுடையவனும் விசேஷமாக வாதம் செய்யாதவனும் அதிகமாக அத்யயனம் செய்தவனும் அறிகிறவனும் அடக்கமும் பொறுமையுமுடையவனும் ஓரிடத்தில் மனத்தையடக்குவதில் ஸமர்த்தனுமாயிருப்பவனுக்கே சொல்லத்தக்கது இந்தக்குணங்கள் மிகவும் குறைந்தவனிடத்தில் மிகவும் சுத்தமான இந்தப்பரப்ரம்மமானது கொடுக்கத்தக்கதில்லையென்று சொல்லுகின்றுர்கள். அப்படிப்பட்டவனிடம் செய்யப்பட்டது அபாத்திரதானமானதால் தர்மத்தைச் சொன்னவனுக்கு ஶ்ரேயஸைக்கொடாது ஒருவன் ரத்தினங்களால்

1 வேதார்த்தானுஷ்டானம். 2 'க்லீபாய' என்பது மூலம்.
3 'குருசொல்லியபடிசெய்கிறவன்' என்றும் கொள்ளலாம்.

நிறைந்த இந்தப்பூமிமுழுமையும் கொடுப்பனுனாலும் விரதமில்லாத வனுக்கு இது கொடுக்கத்தக்கதில்லை. ஓ! அரசனே! ஃப்ரேஷ்டமான இது இந்திரியங்களை ஜயித்தவனுக்கு நீ கொடுக்கக்கூடியது. ஓ! காளனே! உனக்குச் சிறிதும் பயம்வேண்டாம். நீ இப்பொழுது இந்தப்பரப்ரம்மத்தைக் கேட்டாய். ஓ! அரசனே! உள்ளபடி என்னால் சொல்லப்பட்டது. ஃப்ரேஷ்டமும் பரிசுத்தமும் சிறிதும்சோகமில்லாததும் ஆதிநடுவில்லாததும் ஜனனமரணமற்றதும் கெடுதலில்லாததும் பயமில்லாததும் மங்களமும் எல்லா ஞானத்திற்கும் உண்மையான விஷயமுமான இந்தப்பிரம்மத்தை அறிந்து பிரத்யக்ஷமாகப்பார்த்து இப்பொழுதாவது மோகத்தை விடு. ஓ! நரஃப்ரேஷ்டனே! இப்பொழுது உன்னால் என்னிடமிருந்து அடையப்பட்டதுபோலவே நான் ஸநாதனரும் ப்ரம்மத்தை ஆராதிக்கிறவரும் உக்ரமானதேஜஸையுடையவருமான ஹிரண்யகர்ப்பரை முயற்சியுடன்மகிழ்வித்து அவரிடமிருந்து ஸநாதனமான இந்தப் பிரம்மத்தை அடைந்தேன். ஓ! நரஃப்ரேஷ்டனே! நீ என்னைக்கேட்டபடியே நான் இதனை உனக்குச்சொன்னேன். ஓ! அரசனே! மோக்ஷவித்துக்கெல்லாம் பரமஸாதனமான பெரியஞானமானது என்னால பிரம்மாவினிடமிருந்து அடையப்பட்டது' என்று சொன்னார். மஹாராஜனே! இருபத்தைந்தாமவன் எதைஅடைந்து மறுபடி திரும்புகிறதில்லையோ அந்தப்பரப்ரம்மமானது பரமரிஷியானவஸிஷ்டருடைய உதாரணத்தைக்கொண்டு சொல்லப்பட்டது. மேலானப்ரம்மஞானத்தையடைந்து மறுபடிதிரும்புவானாயினல் ஞாதாவானவன் ஜராமரணமற்றபிரம்மத்தை உள்ளபடி அறியவில்லை. ஐயா! அரசனே! தேவரிஷியான நாரதரிடமிருந்துகேட்டு மோக்ஷத்தையளிக்கின்ற சிறந்தஇந்தஞானமானது என்னால் உனக்கு உள்ளபடி சொல்லப்பட்டது. ஹிரண்யகர்ப்பரிடமிருந்தும் மஹாத்மாவான வஸிஷ்டமுனிவரால் அடையப்பட்டது. முனிசிகாமணியாகியவஸிஷ்டரிடமிருந்து இதை நாரதரடைந்தார். நாரதரிடமிருந்தும் ஸநாதனமான இந்தப் பிரம்மமானது என்னால் அறியப்பட்டது. கௌரவர்களிற்சிறந்தவனே! நீ இந்தப்பரமபதத்தைக்கேட்டு இனி சோகத்தையடையாதே. க்ஷராக்ஷரங்களை அறிந்தவனுக்குப் பயமில்லை. அரசனே! இதைஅறியாதவனுக்குப் பயமுண்டு. மூடபுத்தியுடையவன் அறியாமையினாலே அடிக்கடி துன்பத்தை அடைவான். மரித்தபின் மரணத்தைமுடிவாகவுடைய அநேகமாயிரம்ஜன்மங்களை அடைகின்றான். தேவலோகத்தையும் (பசுமுதலான) விலங்குஜாதியையும் மனிதஜன்மத்தையும்

அடைகிறான். காளடைவில் சுத்தியை அடைந்தால் அந்தச்சுத்தியி னாலே அவன் அகாதமான இந்தஅஜ்ஞானமாகிற ஸமுத்திரத்தினின் றும் கரையேறி மேலானமங்களத்தை அடைகின்றான். பாரதனே! பிராணிகள் ஒவ்வொருநாளும் முழுகுகின்ற அந்தஅஜ்ஞானக்கட லானது கோரமும், அகாதமும், ஸ்பஷ்டமில்லாததுமாகச் சொல்லப் படுகிறது. வேந்தனே! அகாதமும் ஸ்பஷ்டமில்லாததும் ஸநாதனமு மான அஜ்ஞானஸமுத்திரத்திலிருந்து கரையேறிவிட்டமையால் நீ ரஜஸில்லாதவனும் தாமஸில்லாதவனுமாயிருக்கிறாய்.

---

## முந்நூற்றுப்பதினான்காவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

——:o:——

(ஒருமுனிவர் நன்மைக்குரியவற்றை ஸுமானுக்குச் சொல்லியது.)

ஜனகருடைய புத்திரனை ஒருவன் வேட்டையாடிக்கொண்டு நிர்ஜனமானஒருவனத்தில் ப்ருகுவினுடைய வம்சத்திற்பிறந்த பிராம் மணஸ்ரேஷ்டரான ஒருமுனிவரைக் கண்டான். ஸுமானென்கிற (அவன்) உட்கார்ந்திருக்கிற அந்த முனிவரைத் தலையால்வணங்கி அரு கிலிருந்து அவரால் அனுமதிகொடுக்கப்பெற்று, 'ஓ! பகவானே! நிலை யில்லாததேகத்தில் காமத்தின்வசத்திலிருக்கின்றபுருஷனுக்கு இவ் வுலகிலும் பரலோகத்திலும் எது [1]நன்மையாகும்?' என்றுவின வினான். பெரியதவமுடையமகாத்மாவானவர் பூஜிக்கப்பட்டு ப்ரச்னஞ் செய்யப்பட்டுப் பிறகு அவனுக்கு நன்மைக்குக்காரணமான பின்வரும் வார்த்தையைச் சொல்லலானார்:

'இகத்திலும் பரத்திலும் மனத்துக்கு விபரீதமாயுள்ளவைகளை விரும்பாமலிருப்பாயானால் இந்திரியங்களை அடக்கிப் பிராணிகளுக் குப் பிரதிகூலங்களாயிருக்கிறகார்யங்களிலிருந்தும் ஒழிவை அடை. எப்பொழுதும் தர்மம் புருஷர்களுக்கு நன்மையானது. ஸத்துக் களுக்குத் தர்மமே ஆதாரம். ஐயா! ஸ்தாவரஜங்கமங்களோடு கூடிய மூன்றுஉலகங்களும் தர்மத்தினால் பிரவிருத்திக்கப்பட்டவைகளா ருசியா யுள்ளதில் ஆசையுள்ளவனே! காமங்களில்வெறுப்பை ஏன் அடை யவில்லை? துர்புத்தி கொண்டவனே! தேனைப்பார்க்கிறாயே தவிர (தலைசிதற) விழுவதை கவனிக்கவில்லையே? ஞானத்தின் பயனை விரும்புகிறவன் ஞானத்தில் அப்யாஸம் செய்யவேண்டுவதுபோலத்

---

1 'ஸ்ரேயஸ்' என்பது மூலம்; 'நன்மை' என்று வருமிடந்தோறும் இங் ஙனமே கொள்க.

தர்மத்தின்பயனை விரும்புகிறவன் தர்மத்தில் அப்யாஸஞ்செய்யவேண்டும். தர்மத்தைவிரும்புகிற அஸத்தினாலே மிகவும் சுத்தமானகர்மமானது செய்யஇயலாது. தர்மத்தில்விருப்பமுள்ளஸத்தினால் செய்ய இயலாதகர்மமும் எளிதிற்செய்யஇயலும். விஷயஸுகத்தில் ஆசையுள்ளவன் காட்டிலிருந்தாலும் நாட்டிலுள்ளவனே. விஷயஸுகத்தை விட்டவன் நாட்டிலிருந்தும் காட்டில்வஸிப்பவனே. நிவிருத்தியிலும் பிரவிருத்தியிலுமுள்ள குணதோஷங்களை நன்றாகத்தெரிந்து மனமொழிமெய்களின் தர்மத்தில் உறுதியுடன் ப்ரார்த்தனைவைக்கக் கடவாய். எப்பொழுதும் புண்ணியதேசத்திலும் புண்ணியகாலத்திலும் அஸூயையில்லாமல் ஸாதுக்களான பிராம்மணர்களுக்குப் பிரார்த்தித்து மரியாதைசெய்து மிகுதியாகத் தானம்செய்யக்கடவாய். நல்ல வழியில் அடையப்பட்டதைத் தக்கோர்களுக்குக் கொடுக்கவேண்டும். கோபமில்லாமல்கொடுத்துப் பிறகு பச்சாத்தாபத்தை அடையாமலிருக்கவேண்டும் கொடுத்ததைச் சொல்லக்கூடாது. துன்பம் செய்யாதவனும் சுசியும் அடக்கமுடையவனும் உண்மைஉரைக்கின்றவனும் நேர்வழியிலிருக்கின்றவனும் [1]பிறப்பினாலும் செய்கையினாலும் மிகவும் சுத்தனும் வேதவித்துமாயிருக்கிறப்ராம்மணன் தக்கபாத்திரமாவான். ஸம்ஸ்கரிக்கப்பட்டவளும் ஒருவனுக்கே பத்நியும் (ஸமான) ஜாதியுள்ளவளுமாயிருப்பவள் இவ்விடத்தில் சுத்தமானபிறப்புக்கிடமானவள் என்று ஒப்புக்கொள்ளப்படுகிறாள். ரிக்குயஜுஸ் ஸாமங்களையுடையவனும் வித்வானும (யஜனமுதலான) ஆறுகர்மங்களையுடையவனுமானவன் பாத்ரமாகச் சொல்லப்படுகிறான். பாத்ர விசேஷத்தினாலும் [2]அகர்மவிசேஷத்தினாலும் தேசகாலங்களைப்பார்த்தும் அந்த அந்த மனிதனைக் குறித்து அதுவே தர்மமாகும்; அதுவே அதர்மமுமாகும். ஒருமனிதன் விளையாட்டினால் (உண்டான) அற்பமான தூளியைத் (தன்னுடைய) சரீரத்திலிருந்து துடைப்பதுபோல மிகுந்த முயற்சியினால் பெரியபாவநிவிருத்தியைச் செய்யவேண்டும். [3]விரேசனம்செய்தவனுக்கு நெய் நல்ல மருந்தாவதுபோலத் தோஷத்தைப் பரிகரித்துக்கொண்டவனுக்குத் தர்மமானது மரணத்திறகுப் பிறகு ஸுகத்தைப் கொடுக்கும். எல்லாப்பிராணிகளிடத்திலும் மனம் சுபமாயும் அசுபமாயுமிருக்கிறது. (ஆகையால்,) மனத்தை அசுபங்களிலிருந்தும்திருப்பிச சுபங்களிலேயே நிலைக்கச்செய்து எல்லாவிஷயத்தி

1 'யோநிகர்மவிசுத்த:' என்பது மூலம்.

2 தனக்கு விதிக்கப்படாத கர்மம்.

3 எண்ணெயையுண்டதனால் மலசோதனம்.

னும் எல்லாராலும்செய்யப்படும் எல்லாவற்றையும் கௌரவிக்கக்கட வாய். உனக்குவிருப்பமான ஸ்வதர்மத்தை விரும்பியவண்ணமே செய். நிலையில்லாத மனமுடையவனே! நிலையில் நில்லு. துர்ப்புத்திகொண்ட வனே! புத்திமானாக இருக்கக்கடவாய். சாந்தகுணமில்லாதவனே! நீ சாந்தகுணமுள்ளவனாயிருக்கக்கடவாய். பிரஜ்ஞையில்லாதவனே! பிராஜ்ஞன்போல நட. கூடவேஸஞ்சரிக்கிற ஞானஒளியினால் இகத்தி லும் பரத்திலும் நன்மையைத்தரத்தக்கஉபாயத்தை அடையலாம். அதற்குமூலம் பரமானமனோதைரியம். தைரியமில்லாத மஹாபிஷ னென்கிறராஜரிஷி ஸ்வர்க்கத்திலிருந்து விழுந்தான். புண்ணியம் நசித் தும் யயாதி தைரியத்தினால் லோகங்களை அடைந்தான். தவமுடைய வர்களும் தர்மவான்களுமான வித்வான்களுடையசேர்க்கையால் விரி வானபுத்தியை அடைவாய். அப்படியே நன்மையையும் அடைவாய்' என்றுசொன்னார். அந்தவஸுமான் முனிவருடைய அந்தவார்த்தை யைக்கேட்டு நல்லஸ்வபாவத்தையடைந்து காமத்திலிருந்து மனத் தைத்திருப்பித் தர்மத்தில் புத்தியைச் செலுத்தினான்'' என்று சொன்னார்.

---

## முந்நூற்றுப்பதினைந்தாவது அத்தியாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

—:0:—

(யாஜ்ஞவல்கியர் பிரகிருதிகளையும் படைப்புமுறையையும் ஜனகருக்குச் சொல்லியது)

யுதிஷ்டிரர், "தர்மாதர்மங்களினின்றும்விடுபட்டதும் ஸகலஸந் தேகத்திலிருந்தும் விடுபட்டதும் ஜனனமரணங்களிலிருந்தும் விடு பட்டதும் புண்ணியபாபங்களிலிருந்தும் விடுபட்டதும் மங்களமான தும் எப்பொழுதும் பயமில்லாததும் எப்பொழுதும்விகாரமில்லாத தும் அழிவற்றதும் சுசியானதும் எப்பொழுதும் ஆயாஸமில்லாதது மானது எதுவோ அதை நீர் சொல்லவேண்டும்'' என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"பாரதனே! இந்தவிஷயத்தில் யாஜ்ஞவல்கியருக்கும் ஜனகருக் கும் நடந்த ஸம்வாதரூபமான பழையசரித்திரத்தை உனக்குச் சொல் லுவேன். பெரியபுகழ்பெற்றவரும் கேள்விகளை அறிந்தவர்களுக்கெல் லாம் மேலானவரும் தேவராதனுடைய புத்திரருமான ஜனகராஜர் முனிஶ்ரேஷ்டரான யாஜ்ஞவல்கியரைநோக்கி, 'ஓ! பிரம்மரிஷியே!

இந்திரியங்கள் எத்தனை? பிரகிருதிகள் எவ்வளவு? அவ்யக்தமென்பது எது? அதைக்காட்டிலும் மேலான பரப்ரம்மம் எது? ஓ! ப்ராம்மணஸ்ரேஷ்டரே! உம்முடைய அனுக்ரகத்தைவிரும்புகிற எனக்கு (இவைகளேயும்) உற்பத்தியையும் நாசத்தையும் காலத்தின்கணக்கையும் சொல்லவேண்டும். அறியாமையினால் கேட்கிறேன். நீர் ஞானமயமானநிதி. ஆகையால், நான் இந்த எல்லாவற்றையும் சந்தேகமறக் கேட்கவிரும்புகிறேன்' என்று வினவ, யாஜ்ஞவல்கியர் சொல்லலானார். 'நீ வினவிய யோகிகளுடையஞானத்தையும் ஸாங்கியர்களுடைய ஞானத்தையும் விசேஷமாகச் சொல்லுகிறேன்; கேள். உனக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. நீ என்னை(பரீக்ஷித்து)அறியவிரும்புகிறாய். ஆனாலும், கேட்டால் சொல்லவேண்டுமென்பது பழமையான தர்மம். எட்டுப்பிரகிருதிகளும் பதினறுவிகாரங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த எட்டுப்பிரகிருதிகளுள் ஆத்மவிஷயத்தில் சிந்தையுள்ளவர்கள் ஏழுகளை வ்யக்தங்களாகச் சொல்லுகின்றார்கள். [1]அவ்யக்தம், மஹத்தத்வம், அஹங்காரம், பிருதிவி, வாயு, ஆகாயம், அப்பு, ஐந்தாவதானதேயு இந்த எட்டும் பிரகிருதிகள். விகாரங்களேயும் என்னிடமிருந்து கேள் ராஜேந்திரனே! ஸ்ரோத்திரம், த்வக்கு, சக்ஷுஸ், ரஸனம், ஐந்தாவதானகிராணம், சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்தம், வாக்கு, பாணிகள், பாதங்கள், பாயு, குறி ஆகிய இவை ஐந்து மஹாபூதங்களிலுண்டான விசேஷங்கள். ஓ! மிதிலாபதியே! ஆனால், ஆத்மாவின்கதியைச் சிந்திக்கின்றவர்களும் தத்வபுத்தியில்ஸமர்த்தர்களுமான நீயும் மற்றவர்களுமான வித்வான்கள் [2]விசேஷங்களுடன்கூடிய ஞானேந்திரியங்களேயும் பதினறாவதான மனத்தையும் (விகாரங்களாகச்) சொல்லுகின்றீர்கள். ஓ! அரசனே! அவ்யக்தத்தினின்றும் [3]மஹானென ஆத்மாவானது உண்டாயிருக்கின்றது. பண்டிதர்கள் இந்த முதல்ஸ்ருஷ்டியைப் பிராதானிகமென்று சொல்லுகிறார்கள். அரசனே! பின்னும் மஹத்திலிருந்தும் அஹங்காரம் உண்டாகிறது. இரண்டாவதுஸ்ருஷ்டியான இது புத்திஸ்வரூபமாகக் கருதப்பட்டதென்று சொல்லுகிறார்கள். அஹங்காரத்திலிருந்தும் பூதங்களுடைய குணமயமானமனம் உண்டாயிற்று இந்தமூன்றாவது ஸ்ருஷ்டியானது ஆஹங்காரிகமென்று சொல்லப்படுகிறது ஓ! அரசனே! மனத்திலிருந்து மஹாபூதங்களுண்டாயின. இந்த நான்காவதுஸ்ருஷ்டியை ஸங்

1 ப்ரதானம் 2 காரியங்கள்.
3 ஹிரண்யகர்ப்பரின் உபாதியான மஹத்தத்வம்.

கல்பரூபமான மான்ஸமென்று சொல்லுகின்றார்கள். சப்தஸ்பரிச ரூபரஸகந்தம் என்கிற ஐந்தாவதுஸ்ருஷ்டியைப் பூதங்களைச் சிந்திக்கின்றவர்கள பௌதிகமென்று சொல்லுகின்றார்கள். ஸ்ரோத்ரம், த்வக்கு, சக்ஷுஸ், ரஸனம், கிராணம் என்கிற ஆறாவது ஸ்ருஷ்டி அனேகசிந்தைகளின் ரூபமாகக் கருதப்பட்டதென்று சொல்லுகிறார்கள். ஓ! அரசனே! ஸ்ரோத்ரமுதலிய (ஞானேந்திரியங்களுக்குக்) கீழிருக்கிறஇந்திரியஸமூகமானது உண்டாயிற்று. ஏழாவது ஸ்ருஷ்டி ஐந்திரியமாகக் கருதப்படுகிறதென்று சொல்லுகிறார்கள் வேந்தனே! பிறகு, மேலேசெல்லும்பிராணவாயுவும் குறுக்காகச்செல்லும் வியான உதான ஸமானனும் உண்டாயின. எட்டாவது ஸ்ருஷ்டியான இது (விசேஷமில்லாமல் ருஜுவான விருத்தியுடன் கூடியிருப்பதால்) ஆர்ஜவமாகக் கருதப்படுகிறதென்று சொல்லுகின்றார்கள். அரசனே! பிறகு, கீழேயுள்ள பிரவாகமான அபானவாயுவும் கீழே குறுக்கேசெல்லும் வியானஸமானஉதானனும் உண்டாயின ஒன்பதாவது ஸ்ருஷ்டியானஇதுவும் ஆர்ஜவகமென்று வித்வான்கள சொல்லுகின்றனர். பூபால! இந்த ஒன்பதுஸ்ருஷ்டிகளும் இருபத்துநான்கு தத்வங்களும் வேதத்தில்சொன்னபடி சொல்லப்பட்டன. மஹாராஜனே! இதற்குமேல் உள்ளபடி மஹாத்மாக்களால் கிரமமாகச்சொல்லப்பட்ட இந்தக் குணத்தினுடைய காலக்கணக்கை என்னிடமிருந்து அறி.

---

## மூந்நூற்றுப்பதினாறுவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

(யாஜ்ஞவல்கியர் அவ்யக்தமுதலியவற்றின் காலக்கணக்கையும் ஸ்ருஷ்டியையும் ஜனகருக்குச் சொல்லியது)

அரசனே! (உபாஸனத்தினால்) அவ்யக்தத்தன்மையடைந்தவருடையகாலத்தின்கணக்கை என்னிடமிருந்து அறி. அவ்யக்தருக்குப் பதினாயிரம்கல்பங்கள் பகலாகச் சொல்லப்படுகின்றன. ராத்திரியும் இவ்வளவே. ஓ! அரசனே (பிறகு) அவர் விழித்துக்கொண்டு முதலில் எல்லாப்பிராணிகளுக்கும் ஜீவனமாயிருக்கிற [1]ஒஷதியையே படைக்கிறார், பிறகு, ஸுவர்ணமயமான [2]அண்டத்திலிருந்தும் உண்டான பிரம்மாவைப் படைத்தார் அவர் எல்லாப்பிராணிகளுக்

1 அன்னத்தின்காரியமான மனம் என்பது பழையவுரை.

2 பிரம்மாண்டம்.

கும்சரீரமென்று கேட்டிருக்கிறோம். அரசனே! 'பிரஜைகளுக்குப் பதியும் மகாமுனியுமான பிரம்மாவானவர் ஒருவருஷம் அண்டத்தில் வஸித்து வெளியில்வந்து ஸ்வர்க்கம்பிருதிவி இவைகளுள் முழுதும் பிருதிவியான ஒருபாதியையும் ஸ்வர்க்கமான ஒருபாதியையும் சேர்த்தார்' என்று வேதங்கள் கூறுகின்றன. பிரபுவான பிரம்மா அவ்விரண்டு பாதிகளுடையநடுவை ஆகாயமாகச் செய்தார். இவருடைய கணக்கையும் வேதவேதாங்கங்களின் கரைகண்டவர்கள் பகல் நாலிலொருபாகம் குறைவான பதினாயிரம் கல்பங்களென்று சொல்லுகிறார்கள். ஆத்மத்யானஞ்செய்கின்றவர்கள் இவருடைய ராத்திரியையும் இவ்வளவாகச் சொல்லுகின்றார்கள். ஞானவானான அவர் முதலில் தேஜோமயமான அஹங்காரமென்கிற [1]பூதத்தைப் படைக்கிறார். மகரிஷியான அவர் முதலில் தம் சரீரத்திலிருந்தும் வேறுநான்கு புத்திரர்களையும் படைக்கிறார். ஓ! ராஜஶ்ரேஷ்டனே! அவர்கள் பித்ருக்களுக்கும் பித்ருக்களாகக் கேட்கப்படுகிறார்கள். தேவர்கள் பிதிருக்களுடைய புத்திரர்கள். ஓ! அரசனே! சராசரங்களான பிராணிகள் தேவர்களால் சூழப்பட்டனவென்று கேட்டிருக்கிறோம். மேலான ஸ்தானத்திலிருக்கிற அஹங்காரம் பிருதிவி, வாயு, ஆகாயம், அப்பு, ஐந்தாவதானதேயு என்னும் ஐந்துவித பூதங்களையும் படைத்தது. மூன்றாவதான ஸ்ருஷ்டியைச செய்கின்ற இந்த அஹங்காரத்தினுடைய ராத்திரியையும் ஐயாயிரம் கற்பங்களாகச சொல்லுகின்றார்கள். பகலும் அவ்வளவாகவே சொல்லப்படுகிறது. ஓ! ராஜஶ்ரேஷ்டனே! சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், ஐந்தாவதான கந்தம் ஆகிய இவை ஐந்து மஹாபூதங்களிலுமுள்ள குணங்கள். ஓ! அரசனே! நாசமற்றவைகளான பிராணிகள் தங்களைச்சூழ்ந்து தங்கள்மனததை அபகரிக்கின்ற அந்தக்குணங்களால் தினந்தோறும் ஒன்றையொன்று விரும்புகின்றன; ஒன்றற்கொன்று தீங்கு செய்தலில் பற்றுள்ளவைகளாகின்றன; ஒன்றைக்கொன்று மேலேபோகின்றன; ஒன்றோடொன்று சண்டைசெய்கின்றன; ஒன்றையொன்று கொல்லுகின்றன; இவ்வுலகிலேயே பசுபக்ஷி முதலான பிறவிகளிலகப்பட்டுச் சுழலுகின்றன. ஓ! அரசனே! [2]இவைகளுக்கும் மனத்திற்கும் பகல் மூவாயிரம் கல்பங்களாகச் சொல்லுகிறார்கள். ராத்திரியும் இவ்வளவே. ஓ! ராஜஶ்ரேஷ்டனே! இந்திரியங்களாலே செய்யப்பட்ட

1 ஐந்து பூதங்களுக்கும் காரணமானதால் அஹங்காரமென்கிற பூதம் என்றது.

2 'இவைகள்' என்பது பூதங்கள் அல்லது குணங்கள்.

எல்லாவற்றையும் மனமே செய்கின்றது இவைகளில் இந்திரியங்கள் பார்க்கிறதில்லை. மனமே பார்க்கின்றது நேத்திரமானது ரூபங்களை மனத்தினாலேதான் பார்க்கின்றது. (மனம்) நேத்திரத்தாலே பார்க்கின்றதில்லை. மனம் கலங்கியிருக்கும்பொழுது நேத்திரம் பார்க்கிறதாயிருந்தாலும் பார்க்கிறதில்லை. ஆனால், எல்லாஇந்திரியங்களும் பார்க்கின்றனவென்று சொல்லுகின்றார்கள் ஓ! அரசனே! மனம் ஒழிவடைந்தபொழுது இந்திரியங்களுக்கு ஒழிவு ஏற்படும் இந்திரியங்கள் ஒழிவடைந்தபொழுது மனத்திற்கு ஒழிவு ஏற்படாது. இவ்விதம் இந்திரியங்கள் மனத்தைப்பிரதானமாகவுடையவைகளென்று கருதவேண்டும். எல்லா இந்திரியங்களுக்கும் மனம் தலைமையாகச் சொல்லப்படுகின்றது மிக்கபுகழுள்ளவனே! இவ்வுலகத்தில் எல்லாபூதங்களும் இந்தமனத்தில் பிரவேசிக்கின்றன.

---

## மூந்நூற்றுப்பதினேழாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

—:o:—

### (யாஜ்ஞவல்கியர் பிரளயத்தின்முறையை ஜனகநுக்குச் சொல்லியது.)

தத்வங்களுடையஸ்ருஷ்டியின்கணக்கும் காலத்தின்கணக்கும் என்னால் கிரமமாகச் சொல்லப்பட்டன. ஸம்ஹாரத்தையும் என்னிடமிருந்து கேள். ஆதியந்தமற்றவரும் நித்யரும் விகாரமேயில்லாதவருமான பிரம்மதேவர் பிராணிகளை அடிக்கடி ஸ்ருஷ்டிக்கவும் ஸம்ஹரிக்கவும்செய்தார். பகலின்முடிவை அறிந்து ராத்திரியில்நித்திரை செய்யஎண்ணிய பகவானும் அவ்யக்தருமானஅவர் அஹங்காராபிமானியாயிருக்கிற (காலாக்னி) ருத்திரரை அவ்விதம் (ஸம்ஹரிக்கும்படி) ஏவினார். பிறகு, ஹிரண்யகர்ப்பரால்ஏவப்பட்ட ஆதித்யரூபியான அவர் நூறாயிரம்கிரணங்களுடன் தம்முருவத்தைப் பன்னிரண்டுவிதமாகச்செய்து அக்னிபோல ஜ்வலித்தார். ஓ! அரசனே! அவர் ஜராயுஜம், அண்டஜம், ஸ்வேதஜம், உத்பிஜ்ஜம்என்கிற நான்குவிதமானபிரஜைகளின்ஸமூகத்தைத் தம்முடையதேஜஸினால்விரைவில் எரித்தார். இவர் நேத்திரத்தைத்திறந்தவுடன் ஸ்தாவரமும் ஜங்கமமும் நசித்துவிட்டன. பிறகு, பூமியானது நான்குபக்கத்திலும் ஆமைமுதுகிற்கு நிகராய்விடுகிறது. அளவற்றபலமுள்ள ருத்திரர் ஜகத்தையெரித்து

விட்டு வெறுமையான பூமியைப் பிறகு வேகமுடைய ஜலத்தினால் சீக்கிரமாக எங்கும் நிரப்புகிறார். பிறகு, அந்தஜலமானது பிரளயகாலக்கனலை அடைந்து நாசத்தை அடைகிறது. ராஜஸ்ரேஷ்டனே! ஜலமானது நாசத்தையடைந்தபொழுது அக்னியானது வளர்ந்து மிகவும்ஜ்வலிக்கின்றது. அளவற்றஅதிகபலத்தையுடையதும் ஜ்வலிக்கிறதும் எல்லாப்பிராணிகளுக்கும் உஷ்ணமானதும் எழுஜ்வாலைகளையுடையதுமான அந்தஅக்னியைப் பிறகு [1]எட்டுவிதமானரூபமும் பலமும் அளவற்றவேகமுமுடைய வாயுபகவான் கீழும் மேலும் குறுக்குமாக ஸஞ்சரித்துக்கொண்டு சீக்கிரம்பக்ஷித்துவிட்டான். [2]நிகரற்றபலமுடையவனும் பயங்கரனுமான அந்தவாயுவை ஆகாயம் விழுங்கியது. ஆகாயத்தையும் எங்கும்சஞ்சரிக்கின்ற ஸ்வபாவமுடையமனமானது பெரியசப்தத்தைசசெய்துகொண்டு விழுங்குகின்றது எல்லாரூபமாயும் பிரஜைகளுக்குப்பதியாயுமிருக்கிறஅஹங்காரமானது மனத்தை விழுங்குகிறது. அஹங்காரமானது சென்றவைநிகழ்பவைவருபவைகளைஅறிந்தவனும் மஹானுமான ஆத்மாவாகிறது. நிகரற்ற ஸ்வரூபமுடையவனும் எல்லாமாயிருப்பவனும் மஹானுமான அந்த ஆத்மாவையும் பிரஜைகளுக்குபபதியானசம்புவானவர் விழுங்குகிறார். அணிமா, லகிமா, ப்ராப்திமுதலானஸித்திரூபரும் நியமனசக்தியுடையவரும் ஜ்யோதிஸ்வரூபரும் நாசமற்றவரும் எங்கும்கைகால்களுடையவரும் எங்கும் நேத்திரமும் தலையும் முகமுமுடையவரும் எங்கும்காதுகளுடையவரும் எங்கும்வியாபித்திருக்கிறவரும் எல்லாப்பிராணிகளுக்கும் ஹிருதயத்திருலிப்பவரும் ஒருபாகத்தினால்கட்டைவிரலளவுடையவரும் அணுவாயிருப்பவரும் அளவற்றவரும் மஹாத்மாவுமான அந்தஈஸ்வரர் எல்லாவற்றையும் விழுங்குகிறார். பிறகு, குறைவும் நாசமும் விகாரமுமற்றவரும் சென்றவையும் இருக்கின்றவையும் வருபவையுமான பிராணிகளைஸ்ருஷ்டிக்கிறவரும் தோஷமில்லாதவருமான அவரை அடைந்து எல்லாம் தன்மயமாகின்றன. ராஜஸ்ரேஷ்டனே! ஸம்ஹாரமானது உள்ளபடி உனக்கு நன்கு சொல்லப்பட்டது. அத்யாத்மத்தையும் அதிபூதத்தையும் அதிதெய்வத்தையும் கேள்

---

1 எட்டுத்திக்குகளிலுமிருந்து எட்டுஉருவங்கொண்டு.

2 'மஹாத்மாவென்கிறதுஹிரண்யகர்ப்பரிடம் லயிக்கிறது' என்றுகருத்து.

## முந்நூற்றுப்பதினெட்டாவது அத்யாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)

——:o:——

(யாஜ்ஞவல்கியர் அத்யாத்மமுதலியவற்றையும் முக்குணங்களையும் ஜனகருக்குச் சொல்லியது.)

தத்வங்களைத் தெரிவிக்கின்ற வேதியர்கள், 'பாதங்கள் அத்யாத்மம்; மார்க்கம் அதிபூதம்; விஷ்ணு அதிதெய்வம்' என்று சொல்லுகின்றனர் உள்ளபடி தத்துவார்த்தங்களைத் தெரிவிக்கிறவர்கள், 'பாயு அத்யாத்மம்; விடுதல் அதிபூதம்; மித்திரன் அதிதெய்வம்' என்று சொல்லுகின்றனர் உள்ளபடி யோகத்தைத் தெரிவிக்கின்றவர்கள், 'குறி அத்யாத்மம்; ஆனந்தம் அதிபூதம்; பிரமா அதிதெய்வம்' என்று சொல்லுகின்றனர். ஸாங்கியபடி தெரிவிக்கின்றவர்கள், 'கைகள் அத்யாத்மம்; செய்யக்கூடியது அதிபூதம்; இந்திரன் அதிதெய்வம்' என்றனர். வேதத்தை அனுஸரித்துத் தெரிவிக்கின்றவர்கள், 'வாக்கு அத்யாத்மம்; சொல்லவேண்டிய விஷயம் அதிபூதம்; அக்னி அதிதெய்வம்' என்றனர். வேதத்தை அனுஸரித்துத் தெரிவிக்கின்றவர்கள், 'நேத்திரம் அத்யாத்மம்; ரூபம் அதிபூதம்; ஸூர்யன் அதிதெய்வம்' என்றுசொல்லுகின்றார்கள். வேதத்தை அனுஸரித்துச் சொல்லுகின்றவர்கள், 'ச்ரோத்ரம் அத்யாத்மம்; சப்தம் அதிபூதம்; திக்குக்கள் அதிதெய்வம்' என்று சொல்லுகின்றார்கள். வேதத்தை அனுஸரித்துச்சொல்லுகிறவர்கள், 'ரஸனை அத்யாத்மம்; ரஸம் அதிபூதம்; அப்பு அதிதெய்வம்' என்றுசொல்லுகிறார்கள் வேதத்தையனுஸரித்துசசொல்லுகிறவர்கள், 'சரீரத்தில் கிராணம் அத்யாத்மம்; கந்தம் அதிபூதம்; பிருதிவி அதிதெய்வம்' என்றுகூறுகிறார்கள். தத்வஞானத்தில்ஸமர்த்தர்கள், 'துவக்கு அத்யாத்மம்; ஸ்பரிசம் அதிபூதம்; வாயு அதிதெய்வம்' என்று சொல்லுகிறார்கள். உள்ளபடி சாஸ்திரத்தில் ஸமர்த்தர்கள், 'மனம் அத்யாத்மம்; நினைக்கக்கூடியவிஷயம் அதிபூதம், சந்திரன் அதிதெய்வம்' என்றுசொல்லுகிறார்கள். தத்வங்களைத் தெரிவிக்கின்றவர்கள், 'அஹங்காரம் அத்யாத்மம்; கர்வம் அதிபூதம்; புத்தி அதிதெய்வம்' என்றுசொல்லுகிறார்கள். உள்ளபடி தெரிவிக்கின்றவர்கள், 'புத்தி அத்யாத்மம்; அறியக்கூடியவிஷயம் அதிபூதம்; க்ஷேத்ரஜ்ஞன் அதிதெய்வம்' என்றுசொல்லுகிறார்கள். தத்வங்களையுணர்ந்த அரசனே! ஸ்ருஷ்டியிலும் ஸ்திதியிலும் முடிவிலும் உள்ளபடி ஸ்பஷ்டமாக

உனக்கு இந்த (தத்வங்களின்) விபூதியானது தெரிவிக்கப்பட்டது. பிரகிருதியானது இஷ்டப்படி ஆத்மாவின் விருப்பத்தினால் க்ரீடைக்காகக் குணங்களை நூறுநூறுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் மிகவும் படைக்கிறது. மானிடர்கள் ஒருதீபத்திலிருந்தும் ஆயிரந்தீபங்களை உண்டுபண்ணுவதுபோலவே பிரகிருதியானது மனிதனுக்கு அநேக குணங்களைச் செய்கிறது. தைரியம், ஆனந்தம், அபிவிருத்தி, பிரீதி, மேலானவிஷயத்தில விருப்பம், ஸுகம், மனத்தின்சுத்தி, ஆரோக்கியம், ஸந்தோஷம், ச்ரத்தை, எளிமையில்லாமை, பரபரப்பில்லாமை, பொறுமை, ஞாபகசக்தி, ஹிம்ஸைசெய்யாமலிருத்தல், ஸமமாயிருத்தல், உண்மையுரைத்தல், கடனில்லாமை, நேராயிருத்தல், லஜ்ஜை, சபலமில்லாமை, சரீரசுத்தி, மேன்மை, ஆசாரம், விஷயத்திலாசையில்லாமை, மனத்தில் பரபரப்பில்லாமை, இஷ்டப்ராப்திகளையும் அநிஷ்டநிவிருத்திகளையும் செய்தகர்மங்களையும் புகழாமலிருத்தல், தானத்தால் பிராணிகளை வசப்படுத்தல், வைராக்கியம், பரோபகாரம், எல்லாப் பிராணிகளிடத்திலும் தயை இவைகள் ஸத்வத்தின் குணங்களாகக் கருதப்பட்டன. [1]அழகு, செல்வம், கலகம், ஈயாமை, தயையில்லாமை, ஸுகதுக்கங்களை அடுத்து ஸேவித்தல், பிறர்தூஷணையில் விருப்பம், விவாதங்களைச் செய்தல், அகங்காரம், பெரியோர்களைப் பூஜியாமலிருத்தல், கவலை, விரோதத்தைப்பாராட்டல், பரிதாபம், எல்லாவற்றையும் கிரகித்தல், லஜ்ஜையில்லாமை, ஒழுங்கில்லாமை, பேதப்படுத்தல், கடுமையாயிருத்தல், காமம், குரோதம், மதம், கர்வம், துவேஷம, அபிமானம் இவைகள ரஜஸின்குணங்களாகச் சொல்லப்பட்டன. தாமஸகுணங்களுடைய ஸமூகங்களைச சொல்லுகிறேன்; ஞாபகத்தில் வைக்கக்கடவாய். அவை மோகம், பிரகாசமில்லாமை, தாமிஸ்ரம், அந்ததாமிஸ்ரம் என்பன. மரணம் அந்ததாமிஸ்ரமாகவும் குரோதம் தாமிஸ்ரமாகவும் சொல்லப்படுகின்றன. தமஸின் அடையாளங்களாவன: பக்ஷணமுதலானவைகளில் அபிருசி, போஜனங்களில் திருப்தியடையாமை, பானங்களில் திருப்தியடையாமை, எப்பொழுதும் வஸ்திரத்திலும் கந்தத்திலும் கேளிகளிலும் சயனங்களிலும் ஆஸனங்களிலும் பகல்தூக்கத்திலும் விவாதத்திலும் அஜாக்ரதைகளிலும் பற்றுதல், அறியாமையால் நடனவாத்தியகானங்களில் பற்றுதலுடனிருத்தல், விசேஷமான தர்மங்களில் துவேஷம் ஆகிய தமஸின் குணங்களான இவைகளே.

---

1 இங்கு இரண்டுசொற்கள் விடப்பட்டன.

## முந்நூற்றுப்பத்தோன்பதாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

———:0:———

(யாஜ்ஞவல்கியர் குணங்களுக்கும் வினைகளுக்கும்உரியகதிகளை ஜனகருக்குச்சொல்லியது.)

புருஷஶ்ரேஷ்டனே! பிரகிருதியினுடைய இந்தமூன்றுகுணங்களும் எப்பொழுதும் எல்லாஉலகத்தையும்விட்டு விலகாமலிருக்கின்றன. அவ்யுக்தரூபமானபகவான் பிரகிருதியினலை நூறுவிதமும் ஆயிரம்விதமுமாகிறார் இவர் பிரகிருதியினலே தன்னைத் தானாகவே நூறுவிதமாகவும் ஆயிரம்விதமாகவும் நூறுயிரம்விதமாகவும் கோடிக்கணக்காகவும் செய்கிறார் ஆத்மவிசாரம் செய்கின்றவர்கள் ஸத்வகுணமுடையவனுக்கு உத்தமமானஸ்தானத்தையும் ரஜோகுணமுடையவனுக்கு இம்மையில் நடுவானஸ்தானத்தையும் தமோகுணமுடையவனுக்குக் கீழானஸ்தானத்தையும் சொல்லுகின்றார்கள். இதில் மனிதன் புண்யமாத்ரத்தினல் மேலானகதியையும் புண்யபாபங்கள் கலந்ததினல் மானிடஜன்மத்தையும் பாவமாத்திரத்தினலை தாழ்ந்தகதியையும் அடைவான். ஸத்வம், ரஜஸ், தமஸ்என்கிற இம்மூன்றனுள் இரண்டின்சேர்க்கையையும் மூன்றின்சேர்க்கையையும் உண்மையாக என்னிடம் கேள். ஸத்வத்தில் ரஜஸும் ரஜஸில் தமஸும் தமஸில் ஸத்வமும் ஸத்வத்தில் அவ்யக்தமும் காணப்படுகின்றன. அவ்யக்தனை ஜீவன் ஸத்வத்தோடுகூடிய தேவலோகத்தை அடைவான் ரஜஸ்ஸத்வமிவைகளோடுகூடினவன் மனிதர்களிடத்தில் பிறக்கிறான். ரஜஸ்தமஸ் இவைகளையுடையவன் விலங்குப்பிறவிகளில் பிறக்கின்றான் ராஜஸதாமஸ குணங்களோடுகூடிய ஸத்வங்களால் மனுஷ்யஜன்மத்தை அடைவான் புண்யபாவங்கள் விலகினபெரியோர்களுக்கு நிலைத்ததும் விகாரமில்லாததும் குறைவில்லாததும் மரணமற்றதுமான அப்படிப்பட்டஸ்தானத்தைச் சொல்லுகிறார்கள். ஞானிகளுக்கு ஏற்படுகிற ஸ்தானமானது சிறந்ததும் கெடுதலில்லாததும் நழுவாததும் இந்திரியங்களுக்குப்புலப்படாததும் காரணமற்றதும் ஜனனத்தையும் மரணத்தையும் அஜ்ஞானத்தையும் போக்குகின்றதுமாயிருக்கிறது. ஓ! அரசனே! நீ என்னைக்கேட்ட அவ்யக்தத்திலிருக்கிற பரம்பொருளான பிரம்மம் பிரகிருதியிலிருந்தாலும் அவ்யக்தத்திலிருப்பதாகச் சொல்லுகிறார்கள். ஓ! அரசனே! பிரகிருதியானது அசேதன

மென்று ஒப்புக்கொள்ளப்பட்டது. இந்தப்பரமாத்மாவினாலே வியாபிக்கப்பட்டு ஸ்ருஷ்டிக்கவும் ஸம்ஹரிக்கவும்செய்கிறது' என்று சொன்னார்.

ஜனகர், 'சிறந்தஅறிவுள்ள ரிஷிஸ்ரேஷ்டரே! இவ்விரண்டுமே ஆதியந்தமற்றவைகளும் சரீரமற்றவைகளும் அசைவற்றவைகளும் அசைக்கமுடியாத அஸங்கமென்கிறகுணமும் ஸங்கமென்கிறதோஷமுமுள்ளவைகளும் அறியமுடியாதவைகளுமாயிருக்கின்றன. (அப்படியிருக்க) ஒன்று ஜடமென்றும் மற்றொன்று அறிவுடன்கூடின க்ஷேத்ரஜ்ஞனென்றும் எப்படி சொல்லப்பட்டன? ஓ! பிராம்மண ஸ்ரேஷ்டரே! நீரோ மோக்ஷதர்மத்தை முழுதும் அனுஷ்டிக்கின்றீர். நான் மோக்ஷதர்மமுழுமையையும் உள்ளபடி கேட்கவிரும்புகிறேன். (ஆகையால்) தத்வமில்லாமலிருப்பவனையும் நிர்க்குணத்தன்மையையும் பிரகிருதியைவிட்டிருப்பதையும் தேகத்தை அடைந்திருக்கின்ற தேவதைகளேயும் எனக்கு நன்றாகச்சொல்லும். மரணத்தைஅடைந்து சரீரம்விட்டுக்கிளம்பினதேகிக்கு நாளடைவில் அடையக்கூடியஸ்தானத்தை எனக்குச் செவ்வையாகச் சொல்லும். உள்ளபடி ஸாங்கிய ஞானத்தையும் தனிமையாகயோகத்தையும் மரணத்தைத்தெரிவிக்கின்ற குறிகளேயும் எனக்குச் சொல்லவேண்டும். ஓ! சிறந்தவரே! இவற்றைஎல்லாம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல அறிந்திருக்கிறீர்' என்று கேட்டார்.

---

## முந்நூற்றிருபதாவது அத்யாயம்

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

---:o:---

**(யாஜ்ஞவல்கியர் ஸாங்கியமதத்தை ஜனகருக்குச் சொல்லியது.)**

யாஜ்ஞவல்கியர் சொல்லத்தொடங்கினார். 'ஐயா! அரசனே! நிர்க்குணனானவன் குணமுள்ளவனாகச் செய்யப்படான். குணவானாயிருப்பவனும் குணமில்லாதவனாகச்செய்யப்படான். உள்ளபடி என்னிடமிருந்து தெரிந்துகொள். தத்வத்தையுணர்ந்தவர்களும் மகாத்மாக்களுமானமுனிவர்கள், 'குணங்களேயுடையவன் குணவானாகவே இருக்கின்றான். அப்படியே நிர்க்குணனும் குணமற்றவனாகவே இருக்கின்றான்' என்று இவ்விதம்சொல்லுகின்றார்கள். குணங்களேஇயற்கையாகவுடையபிராகிருதன் குணங்களிலேயே சுழலுகின்றான். இயற்கையாகவே அறிவீனனாயிருக்கிற அவனே குணங்களே

உபயோகிக்கிறான். இயற்கையாகவே அறிவீனனான பிராகிருதபுருஷன் தன் ஆத்மாவை அறிகிறதில்லை. 'என்னைக்காட்டிலும் மேலானவனில்லை' என்று எப்பொழுதும் அபிமானிக்கின்றான். (பிரகிருதியுடன்கூடினவன் அறிவில்லை) என்கிற இந்தக்காரணத்தினால் பிரகிருதி ஜடமாகும். (பிரகிருதியைசசேர்ந்தபுருஷன்) நித்தியனும் நாசமில்லாதவனுமாயிருப்பதாலும் (பிரகிருதி) நாசமுடையதாயிருப்பதாலும் அது ஜடத்தன்மைக்கு வேறாகிறதில்லை. அஜ்ஞானத்தால் அடிக்கடி குணங்களுடைய படைப்பைச்செய்து ஆத்மாவை அறியாமலிருக்கும்பொழுது ஆத்மாவானது விடுபடுகிறதில்லை. ஸ்ருஷ்டிகளுக்குக் கர்த்தாவாயிருப்பதால் ஸ்ருஷ்டிதர்மமுடையவனாகச் சொல்லபபடுகிறான்; யோகங்களுக்குக்கர்த்தாவாயிருப்பதால் யோகதர்மமுடையவனாகச் சொல்லபபடுகிறான்; [1]பிரகிருதிகளையுண்டுபண்ணுவதால் பிரகிருதிதர்மமுடையவனாகச் சொல்லபபடுகிறான்; பீஜங்களுக்குக் கர்த்தாவாயிருப்பதால் பீஜதர்மமுடையவனாகவும் சொல்லப்படுகிறான். ஸித்திபெற்றவர்களும் ஆத்மஜ்ஞானிகளும் மனக்கவலை நீங்கினவர்களுமானயதிகள் குணங்களுக்கு உற்பத்திஸ்தானமும் லயஸ்தானமுமாயிருப்பதாலும் [2]உதாஸீனனாயிருப்பதாலும் இரண்டற்றவனாயிருப்பதாலும் குணங்களில் அபிமானமாத்திர ஸம்பந்தமுடையவனாயிருப்பதாலும் ஆதமாவை நிர்க்குணனாக நினைக்கின்றார்கள். இந்தப்பிரகிருதியை (ஞானமில்லாதவரையில்) நித்தியமாயும் (ஞானத்தால்) நசிப்பதாயும் (காரணரூபத்தால) அவ்யக்தமாயும் (கார்யரூபத்தால்) வியக்தமாயும் இருப்பதாகக் கேட்டிருக்கிறோம். எல்லாப்பிராணிகளிடத்திலும் தயையுடையவர்களும் ஞானத்தையே அடைந்தவர்களுமான புருஷர்கள் (இவ்விதம் அபிமானத்தால்) அவ்யக்தத்துடன் ஐக்யத்தையும் (ஸ்வபாவமாக) பேதத்தையும் சொல்லுகிறார்கள். நிலையுள்ளவனென்று பெயருடைய அந்தப்புருஷன் வேறு. நிலையற்றபிரகிருதி வேறு. நடுவிலிருக்கிற நாணற்குச்சிகளுக்குத் [3]தர்ப்பைபோலவே இது ஏற்படுகிறது. தர்ப்பத்தின் சேர்க்கையினால் குருத்தானது அதைச் சேர்ந்ததாகவே அறியப்படுகிறதில்லை. மசகத்தை வேறாகவும் அத்திப்பழத்தை வேறாகவும் அறியவேண்டும். அத்திப்பழத்தின் சேர்க்கையினால் மசகம் அதில் சேருகிறதில்லை. அப்படியே,

---

1 'பிரஜைகளை' என்பது பழையவுரை.

2 இங்கு அதிகபாடமான ஒன்றரைசுலோகங்கள் பொருத்தமில்லாமையால் விடப்பட்டன.

3 'முஞ்சம்' என்பது மூலம்.

மத்ஸ்யம்வேறாகவும் ஜலம் அதைக்காட்டிலும் வேறாகவும் கருதப்பட்டன. ஜலத்தின் ஸம்பந்தத்தினால் மத்ஸ்யம் எந்தவிதத்திலும் பற்றப்படுகிறதில்லை. எப்பொழுதும் அக்னி வேறு; [1]உகை வேறு. இவ்விதம் அறியக்கடவாய். அந்த அக்கினியானது உகையின் சம்பந்தத்தினால் பற்றப்படுகிறதில்லை. தாமரையிலை வேறாகவும் ஜலம் வேறாகவும் கருதப்பட்டன. ஜலத்தின்ஸம்பந்தத்தினால் தாமரையிலை அதில் ஸம்பந்திக்கிறதில்லை. பிராகிருதஜனங்கள் நித்யமாயிருக்கிற இந்தக் குணங்களுடைய ஸஹவாஸத்தையும் அவைகளினிருப்பிடத்தையும் எந்நாளும் உண்மையாகப் பார்க்கிறதில்லை வேறுவிதமாகப் பார்க்கிறவர்களுக்கு நலலஞானமில்லை. அவர்கள் அடிக்கடி நிச்சயமாகக் கோரமானநரகததை அடைகிறார்கள் குணங்களைப்பிரித்து அறியப்படுவதும் உத்தமமுமான இந்த ஸாங்கியஞானமானது உனக்குச் சொல்லபபட்டது. ஸாங்கியர்கள இவ்விதம் குணங்களைப்பிரிததறிந்து கைவலயத்தை அடைந்தாாகள. தத்வங்களில் ஸமர்த்தர்களான மற்றவர்களுடைய உறுதியும் இதுவே இதற்குமேல் யோகிகளுடைய ஞானத்தைச சொலலபபோகிறேன்.

---

## மூந்நூற்றிருபத்தோராவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

**(யாஜ்ஞவல்கியர் யோகத்தை ஜனகருக்குச் சொல்லியது.)**

ஓ! ராஜஶ்ரேஷ்டனே! என்னால் ஸாங்கியஞானமானது சொல்லப்பட்டது. (இனி) நான் கேட்டறிந்தபடி யோகஞானத்தை என்னிடமிருந்து அறி. ஸாங்கியத்திற்கு நிகரான ஞானமில்லை. யோகத்திற்கு நிகரான பலமுமில்லை. அவ்விரண்டும் ஒரே அனுஷ்டானத்தையுடையவைகளாகவும் இரண்டும் மரணத்தைநிவிருத்திக்கின்றவைகளாகவும் கருதப்பட்டன. ஞானத்தில பற்றில்லாமலிருக்கிற மனிதர்கள் அவைகளைத் தனித்தனியாகப் பார்க்கின்றார்கள். ஓ! அரசனே! நாம் உறுதியினால் ஒன்றாகவே பார்க்கின்றோம். யோகிகள் எதைப் பார்க்கிறார்களோ அதையே ஸாங்கியர்களும் பார்க்கிறார்கள். யோகத்தையும் ஸாங்கியத்தையும் ஒன்றாகப் பார்க்கிறவன் தத்வமுணர்ந்தவன். சத்துருக்களைச சிக்ஷிக்கிறவனே! பிராணன்முதலியவைகளைப் பிரதானமாகவுடைய மற்றயோகிகளையும் அறியக்கடவாய். அவர்

---

1 உலோகங்களை உருகசெய்தற்குரிய ஒருவகைப்பாத்திரம்.

கள் அந்தச்சரீரத்தோடே பத்துத்திக்குக்களிலும் ஸஞ்சரிக்கிறார்கள். ஓ! குற்றமற்றவனே! அப்பா! பிரளயகாலம்வரையில் அணிமாதிகளான எட்டுக்குணங்களுடைய ஸூக்ஷ்மயோகத்தால் (ஸ்தூலதேகத்தை) விட்டுவிட்டு ஸுகமாக[1] உலகங்களில் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிறான். புத்திமான்கள் எட்டுஅங்கங்களுள்ளயோகத்தைச் சொல்லுகின்றார்கள் ராஜச்ரேஷ்டனே! எட்டுஅங்கங்களுள்ளயோகத்தை ஸூக்ஷ்மமாகச் சொல்லுகின்றார்கள் மற்றதைச் சொல்லுகிறதில்லை. யோகிகளுடையஉத்தமமானயோககார்யத்தைச் சாஸ்திரவசனப்படி ஸகுணம் நிர்க்குணமென இரண்டுவிதமாகச் சொல்லுகிறார்கள். ஓ! அரசனே! மனத்தை (மூலாதாரமுதலானவிடத்தில்) தரிப்பதும் பிராணவாயுநிரோதமும் மனம்ஒரேமுகமாயிருப்பதும் இந்திரியநிக்ரகமும் சொல்லப்பட்டிருக்கின்றன பிராணநிரோதமானது ஸகுணயோகமாகும் ஆகையால், மனத்தை [1]நிர்க்குணமாயிருக்கும்படி நிலைக்கச் செய்யவேண்டும் சிறந்தமிதிலாதிபனே! (தியானத்தால் இஷ்டதேவதையைப் பாராமலிருக்கும்போது (கேவலயோகத்தைச் செய்து) பிராணன்களைவெளியிலவிட்டால் வாதரோகம் அதிகரிக்கவே செய்யும் ஆகையால், அதை அனுஷ்டிக்கக்கூடாது ராத்ரியின் முதல்யாமத்தில பன்னிரண்டு (மனத்தின்) ஏவுதல்கள் கருதப்பட்டன. நடுராத்ரியில நித்திரைசெய்து பின்யாமத்திலும் பன்னிரண்டுஏவுதல்களே கருதப்பட்டன. ஆகையால், இவ்விதம் மனத்தின் சமனத்தையடைந்தவனும் வெளிப்புலன்கள் அடங்கினவனும் தனித்திருக்குந்தன்மையுள்ளவனும் ஆத்மாவில் பற்றுள்ளவனும் ஞானியுமாயிருப்பவனால் மனமானது சோபிக்கத்தக்கது ஸந்தேகமில்லை. மிதிலாதிபனான அரசனே! (யோகிகள்) சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்தம் என்கிற ஐந்துஇந்திரியங்களுடைய ஐந்துவிதமான தோஷங்களையும் விலக்கி [2]விக்ஷேபத்தையும் [3]லயத்தையும் நிவிருத்தி செய்து எல்லாஇந்திரியஸமூகத்தையும் மனத்திலடக்கி மனத்தை அஹங்காரத்தில்ஸ்தாபித்து அஹங்காரத்தைப் புத்தியென்கிறமகத்தத்வத்திலும் புத்தியைப் பிரகிருதியிலும் இவ்விதம்விலக்கி, பிறகு, கேவலமும் ரஜோகுணம்சிறிதுமில்லாததும் நித்தியமும் அளவற்றதும் சுத்தமும் குறைவில்லாததும் ஸ்திரமும் பூர்ணமும் எப்பொழுதும்பேதிக்கமுடியாததும் மூப்பிறப்பற்றதும் அனாதியும் விகாரமில்லாததும் (எல்லாவற்றிற்கும்) நியந்தாவும் நாசமில்லாததுமான

1 செய்கையற்றிருக்கும்படி.
2 வெளிக்கிளம்பல்.
3 தானாகவுண்டான லயம்.

பிரம்மத்தைத் தியானம்செய்கின்றார்கள். மஹாராஜனே! யோக முள்ளவனுடைய லக்ஷணங்களை மனத்தில் தரித்துக்கொள். யோகப் பிரஸாதத்தின் லக்ஷணம் திருப்தியடைந்தவன் ஸுகமாக நித்திரைசெய்வதுபோன்றது. காற்றில்லாதவிடத்தில் எண்ணெய்நிரம்பிய தீபமானது அசையாமல் உயரக்கிளம்பினஜ்வாலையுடன் ஜ்வலிப்பதுபோல யோகியும்இருப்பானென்று புத்திமான்கள் சொல்லுகிறார்கள். மேகத்திலிருந்துண்டானஜலத்திவலைகளாலே அடிக்கப்பட்டும் சிலையானது சிறிதும் அசைக்கப்படாது அதுபோலிருப்பது யோகியினுடைய லக்ஷணம். ஊதப்பட்டசங்கம், துந்துபிஇவைகளுடைய பெரியசப்தங்களாலும் பலவிதமானகானவாத்தியங்களாலும் (மனம்) சலியாமலிருப்பது யோகியின்லக்ஷணம். ஒருவன் எண்ணெய்நிறைந்தபாத்திரத்தைக் கைகளாலெடுத்துக்கொண்டு, கையில் கத்தியுடையவர்கள் அதட்ட அவர்களிடமிருந்துண்டானபயத்தினால் மனத்தைச் சலியாமல்வைத்துக்கொண்டு, ஒருதுளியும் பாத்திரத்திலிருந்துசிதறவிடாமல் படியில்ஏறுவதுபோல, யோகியானவன் மிகவும் சிறந்தயோகத்தையடைந்து இந்திரியங்களுடைய நிலையினாலும் அப்படியே (மனத்தின்) நிலையினாலும் ஒருமுகப்பட்டமனமுடையவனாயிருப்பான். இவ்விதம் யோகியானமுனிவனுடைய லக்ஷணங்களைக் கண்டுகொள்ளவேண்டும். ஆத்மயோகத்தோடுகூடினவன் மிகவும் சிறந்ததும் அழிவற்றதும் பெரிய அஜ்ஞானத்தின் இடையிலிருந்ததும் அக்னிக்கொப்பானதுமான அந்தப்பிரம்மத்தைப பார்க்கின்றான். ஓ! அரசனே! அவன் இந்தஞானத்தினால் ஸாக்ஷியானஜீவன்விலகினதாயிருக்கிற தேகத்தைவிட்டுவிட்டு நாளடைவில் கைவல்யத்தை அடைகிறான். இந்தப்படி அநாதியானவேதம் கூறுகிறது இதுவே யோகிகளுடையயோகம். யோகத்தின் லக்ஷணம் வேறில்லை. புத்திமான்கள் அதையறிந்து (தங்களை) கிருதார்த்தர்களாக நினைக்கின்றார்கள்.

---

## மூன்னூற்றிருபத்திரண்டாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

—:o:—

**(யாஜ்ஞவல்கியர் ஜீவன்வெளிப்படும்உறுப்புக்களால்வரும்பயனையும் மரணக்குறிகளையும் ஜனகருக்குச் சொல்லியது.)**

ஓ! அரசனே! அப்படியே, சரீரத்திலிருந்துமேலேகிளம்புகிறவர்களின்ஸ்தானத்தையும், ஜாக்கிரதையுடன் கேள். பாதங்களின்

வழியே மரித்துசெல்லுகிறவனுக்கு விஷ்ணுவின் ஸ்தானமானது சொல்லப்படுகிறது கணுக்கால்களால் மரித்துசெல்லுகிறவன் வஸுக்களென்கிறதேவர்களை அடைவானென்று நமக்குக் கேள்வி. முழங்கால்களால், மஹாபாக்கியம் பெற்றஸாத்யர்களென்கிற தேவர்களை அடைவான். பாயுவினால் மேலேகிளம்புகிறவன் மித்ரனுடைய ஸ்தானத்தை அடைவான். பின்தட்டுவழியாய் உத்கிரமிக்கிறவன் பிருதிவியையும் தொடைகளால்செல்லுகிறவன் பிரம்மாவையும் அடைவார்கள். பார்ஸ்வங்களால் மருத்துக்களென்கிற தேவர்களையும் நாஸிகைகளால் சந்திரனையும் கைகளால் இந்திரனையும் மார்பால் ருத்திரரையும் அடைவானென்றுசொல்லுகிறார்கள் கழுத்தினால், மிகவும் சிறந்தவனும் முனிஸ்ரேஷ்டனுமானநரனை அடைகின்றான் முகத்தினால் விஸ்வேதேவர்களையும் காதினால் திக்குக்களையுமடைவான். கிராணத்தால் வாயுவையும் நேத்திரங்களால் ஸூர்யனையும் புருவங்களால் அசுவினிதேவதைகளையும் நெற்றியினால் பிதிருக்களையும் அடைவான் தலையினால் தேவர்களுக்கெல்லாம் முன்னுண்டானவரும் விபுவுமாயிருக்கிற பிரம்மாவை அடைகின்றான். மிதிலாதிபனே! இந்தஉத்கிராந்தி ஸ்தானங்கள் சொல்லப்பட்டன வித்வான்களாலவிதிக்கப்பட்ட [1] அரிஷ்டங்களைச் சொல்வேன். முன்பார்க்கப்பட்ட அருந்ததீநக்ஷத்திரத்தையும் துருவநக்ஷத்திரத்தையும் பிறகு ஒருபொழுதும்பாராமலிருந்தால் அந்தசரீரிக்கு ஒருவருஷத்தில் சரீரவியோகம் ஏற்படுமென்று சொல்லுகிறார்கள். பூர்ணசந்திரனையும் தென்பாகத்தில் தீபத்தையும் இரண்டு பிரிவானபிரகாசமுடையனவாகப் பார்க்கிறவர்களும் ஒருவருஷம் ஆயுளுடையவர்கள். ஓ! அரசனே! பிறருடைய நேத்திரத்தில் தம்முடையசாயாரூபத்தைக் காணாதவர்களும் ஒருவருஷம் ஆயுளுடையவர்கள். அதிககாந்தியும் அதிகப்ரஜ்ஞையும் பிரஜ்ஞையில்லாமையும் காந்தியில்லாமையும் ஸ்வபாவமாறி விகாரத்தையடைதலும் ஆறுமாதத்திலேற்படும் மரணத்திற்கு லக்ஷணம் தேவதைகளை அவமதிப்பதும் பிராம்மணர்களைவிரோதிப்பதும் புகைபோன்றகாந்தியும் ஆறுமாதத்திலேற்படும் மரணத்தின் அடையாளம் குடம்சிதறின உருளைபோல சந்திரனையும் சூரியனையும் துவாரமுடையனவாகப் பார்க்கின்றவன் ஏழுராத்திரியில் மரணத்தையடைவான். தேவாலயத்திலிருக்கிறவன் நல்லவாஸனையை அடைந்தும் சவத்தின் வாஸனையாகக் கிரகித்தால் ஏழுராத்திரியில் மரணத்தையடைவான். காதுமூக்குக்கள் வளைதலும் பற்களிலும் நேத்திரங்களிலும் பசையற்றுப்போவதும்

1 மரணஸூசகமான துர்நிமித்தங்கள்.

பிரஜ்ஞையின்நாசமும் உஷ்ணமில்லாமையும், உடனே உண்டாகும் மரணத்திற்கு லக்ஷணம். ஓ! அரசனே! இடக்கண் காரணமில்லாமல் கண்ணீர்விடுகிறதும் தலையிலிருந்தும் புகைகிளம்புகிறதுமாகிய இவ்விரண்டும் உடனே உண்டாகும் மரணத்திற்கு அடையாளம். நல்ல மனமுடையமனிதன் இவ்வளவு அரிஷ்டங்களையும் அறிந்து எந்தக் காலம் மரணத்திற்கேற்பட்டதாகுமோ அந்தக்காலத்தை எதிர்பார்த்து இரவிலும் பகலிலும் மனத்தைப் பரமாத்மாவிடம் சேர்ப்பிக்கவேண்டும். ஆனால், இவன் மரணத்தில் இஷ்டமில்லாமல் உயிருடனிருக்கவிரும்புவானானால் இந்தக்கிரியையைச் செய்யவிரும்பவேண்டும். எல்லாக்கந்தங்களையும் ரஸங்களையும் ஸமாதியுடன் ஜயிக்கவேண்டும். [1]ஓ! அரசனே! ஸாங்கியயோகங்களுடன் (ஆத்மாவை) அறிந்து ப்ரம்மத்தில்பற்றினமனதுடன் யோகத்தினால் மரணத்தை ஜயிக்கவேண்டும். அவன் க்ஷயமில்லாததும் ஜனனமில்லாததும் ஸர்வமும் நாசமில்லாததுமான மங்களவஸ்துவையடைந்து சாஸ்வதமும் சலனமற்றதும் மனோவசமில்லாதவர்களாலடைய அரியதுமான ஸ்தானத்தை அடைவான்.

---

## முந்நூற்றிருபத்துமூன்றாவது அத்யாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)

——:o:——

**(யாஜ்ஞவல்கியர் விஸ்வாவஸுவின் கேள்விகளுக்குத் தாம்விடையளித்ததை ஜனகருக்குச் சொல்லியது.)**

அரசனே! அவ்யக்தத்திலிருக்கிறதும் பரமுமான ஒன்றை நீ என்னிடம் கேட்டாய் அரசனே! பரமும் ரகசியமுமான இந்தக் கேள்வியை ஜாக்கிரதையுடன் கேள். ஓ! மிதிலாதிபதியே! இவ்வுலகில் ரிஷிகளுக்குரியவிதியுடன் ஸஞ்சரிக்கிறவனும் குருவினால் அவமதிக்கப்பட்டவனுமான நான் ஆதித்யனிடமிருந்தும் யஜுஸுகளை அடைந்தேன். நான் தாபத்தையே சீலமாகவுடைய தேவரைப் பெரியதவத்தினால் ஆராதித்தேன். குற்றமற்றவனே! அப்பொழுது, பிரீதியடைந்தவரும் பிரபுவுமான ஸூர்யர் என்னை நோக்கி, 'ஓ! பிரம்மரிஷியே! உனக்கு எது இஷ்டமோ அந்தவரத்தைக்கேள். நான், அடையமிகவுமரிதாயிருப்பினும் அதனை உனக்குப்

1 இங்கு அதிகபாடமான அரைஸ்லோகம் விடப்பட்டது.

பிரியத்துடன் கொடுப்பேன். என்னுடையஅருள் அடையமிகஅரியது' என்று சொன்னார். தபிக்கசெய்பவருட்சிறந்தஅவரை நான் தலையால்வணங்கி, '(இதற்குமுன் ஒருவராலும்) உபயோகிக்கப் படாதயஜுஸுகளை விரைவில் அறியவிரும்புகிறேன்' என்று சொன்னேன். பிறகு, அந்தப்பகவான் என்னை நோக்கி, 'ஓ! பிராம்மண! உனக்கு (அப்படியே) கொடுப்பேன். இப்போது ஸரஸ்வதியானவள் சப்தரூபத்துடன் உன்னுடையசரீரத்தில்புகுவாள்' என்றுசொன்னார். பிறகு, என்னை நோக்கிப் பகவானனஅவர், 'உன் வாயைத்திற' என்று சொன்னார். அப்பொழுது, திறக்கப்பட்ட என்னுடையவாயில் ஸரஸ்வதியானவள் புகுந்தாள். குற்றமற்றவனே! அதனால், எரிக்கப் படுகிறவனான நான் மஹாத்மாவான ஆதித்யரை அறியாமையினாலும் (அவருடையதாபத்தைப்) பொறுமையினாலும் உடனே ஜலத்தில் விழுந்தேன். பிறகு, சூரியபகவான், எரிக்கப்படுகிறவனான என்னை நோக்கி, 'ஒருமுகூர்த்தம் தாபத்தைப் பொறுத்துக்கொண்டிரு. பிறகு குளிர்ந்துவிடும்' என்று சொன்னார். குளிர்ச்சியடைந்தவனான என்னைப்பார்த்துவிட்டு ஸூர்யபகவான், 'ஓ! பிராம்மண! உனக்குக் [1]கில மந்திரங்களுடன்கூடியதும் உபநிஷத்துக்களுடன்கூடியதுமான வேதமானது தோன்றும். ஓ! பிராம்மணச்ரேஷ்ட! சதபதமென்கிற பிராம்மணம் முழுமையும் வெளியிடப்போகிறாய். அதன்முடிவில் உன்னுடையபுத்தியானது மோக்ஷத்தை நாடப்போகிறது. ஸாங்கியர்களாலும் யோகிகளாலும் விரும்பப்பட்டதும் உனக்கு இஷ்டமானதுமான அந்த (ப்ரம்ம) பதத்தை அடையவும்போகிறாய்' என்று சொன்னார். இவ்வளவு சொல்லிவிட்டுப் பகவானான அவர் அஸ்தமனத்தை அடைந்தார். தேவரான ஆதித்யர் சென்றபிறகு, நான் அவருடையவார்த்தையைக்கேட்டு வீட்டுக்கு வந்து ஸந்தோஷத்துடன் ஸரஸ்வதியைத் தியானித்தேன். அப்போது, எனக்கு அதிமங்களையும் உயிரெழுத்து மெய்யெழுத்துக்களாலலங்கரிக்கப் பட்டவளுமான ஸரஸ்வதிதேவியானவள் ஓங்காரத்தை முன்னதாகச் செய்துகொண்டு வெளிப்பட்டாள். உடனே, நான் ஸரஸ்வதிக்கு விதிப்படி அர்க்கியத்தையளித்தேன். சிறந்த் முயற்சியைச் செய்து அந்த ஸரஸ்வதியையே முக்கிய ஆதாரமாய்க்கொண்டு உட்கார்ந்திருந்தேன். பிறகு, மிக்க சந்தோஷத்துடன் உபநிஷத்துக்களோடும் சுருக்கமான வாக்கியங்களோடும் சேஷவாக்கியங்களோடும் கூடின சதபதம் முழுமையும் செய்தேன். மஹாராஜனே! சிஷ்யர்களுடன்

1 விரும்பிஉபயோகிக்கப்படும் வேறுசாகைகளின்மந்திரங்கள்.

கூடினவரும் மகாத்மாவுமான [1]மாமாவினுடைய விரோதத்திற்காகச் சிறந்தவர்களான நூறுசிஷ்யர்களுக்கு அத்யயனம் செய்வித்துப பிறகு கிரணங்களோடுகூடின ஸூர்யன்போன்ற சிஷ்யர்களுடன் கூடினஎன்னுலே மகாத்மாவான உன்னுடையபிதாவின் யாகமானது விபாகிக்கப்பட்டது. பிறகு, மாதுலரோடுகலகம்ஏற்பட (அவரைச சேர்ந்த)தேவலர் பார்த்திருக்கையில் என்னுடைய வேததக்ஷிணை யின்நிமித்தம் பாதிபணத்தை அபகரித்தேன். பிறகு, நான் அத ஞல் ஸுமந்துவினுலும் பைலராலும் ஜைமினியினுலும் உன்னுடைய பிதாவிஞலும் முனிவர்களாலும் வெகுமானிக்கப்பட்டேன். ஓ! குற்றமற்றவனே! என்னுல் ஸூர்யனிடமிருந்து [2]பதினைந்துயஜுஸுகள் அடையப்பட்டன. அப்படியே ஸூதராலே (இந்தவேதத்திற குரிய) புராணம் தெரிந்துகொள்ளப்பட்டது ஓ! அரசனே! இந்தக் காரணத்தைக்கொண்டு ஆதித்யருடைய பிரபாவத்தாலும் ஸரஸ்வதீ தேவியைமுன்னிட்டும் நான் சதபதப்ராம்மணத்தைச்செய்யத் தொடங்கினேன் என்னுலெ புதிதானஇது [3]செய்யவும்பட்டது. அப்படியே, இஷ்டமானமார்க்கப்படி அது கொடுக்கப்பட்டது. சிஷ்யர்களெல்லோரும் ஸூத்ரவாக்யங்களோடுகூடின சதபதமுழுமையும் உபதேசிக்கப்பெற்ருர்கள். எல்லாசிஷ்யர்களும் பரிசுத்தர்களாயும் மிகுந்த ஸந்தோஷமடைந்தவர்களாயும் சென்றுர்கள். ஸூர்யரால்உபதேசிக்கப் பட்ட பதினைந்து சாகைகளான இந்த வித்தைகளை இஷ்டப்படி நிலைக் கச்செய்துவிட்டு அதன்பிறகு பொருளைச சிந்தித்தேன். அரசனே! 'இதில் பிராம்மணர்களுக்கு ஹிதமும் ஸத்யமுமாயுள்ளது ஏது? மேலானபொருளும் ஏது?' என்று சிந்தித்துக்கொண்டிருக்கும் பொழுது, வேதாந்தஞானத்தில்வல்லவனை விச்வாவஸுவென்கிற கந்தர்வன் அவ்விடம் வந்து என்னை நோக்கி, வேதத்தைச் சேர்ந்த இருபத்துநான்கு கேள்விகளைக் கேட்டான். அரசனே! அப்பொழுது மனஸுமென்கிற யுக்திவிஷயமாய் இருபத்தைந்தாவதுகேள்வியைக் கேட்டான் ஓ! அரசனே! புருஷச்ரேஷ்ட! விச்வாவிச்வம், புருஷன், பிரகிருதி, மித்திரன், வருணன், ஞானம், [4]ஞேயம், [5]ஞன், [6]அஜ்ஞன், [7]கம், [8]தபஸ், [9]அதபஸ், ஸூர்யாதிஸூர்யர்கள்,

---

1 வைசம்பாயனா.
2 சாகைகள்.
3 வெளியிடப்பட்டது.
4 ஞானவிஷயம்.
5 அறிகின்றவன்.
6 அறியாதவன்.
7 ஆனந்தம்.
8 ஆலோசனை.
9 ஆலோசியாமை.

வித்யாவித்யைகள், [1]வேத்யாவேத்யம், சலம், அசலம், [3]அவ்யயம், [4]அக்ஷரம், க்ஷேம்யம் ஆகிய இவறறைப்பற்றி மிகவும் சிறந்த கேள்வியைக் கேட்டான் மஹாராஜனே! பிறகு, கந்தர்வஶ்ரேஷ்டனை அரசனைப்பார்த்து நான், 'நீ கிரமமாக அர்த்தமுள்ளதும் உத்தமமுமான கேள்வியைக் கேட்டாய் ஒரு முகூர்த்தகாலம் இருக்கவேண்டும். இதைப்பற்றி ஆலோசிக்கிறேன்' என்று சொன்னேன் அந்தக்கந்தர்வன், 'ஆகட்டும்' என்று சொல்லிவிட்டு மௌனமாயிருந்தான் பிறகு, மறுபடியும் நான் ஸரஸ்வதிதேவியைத் தியானித்தேன் என்னுடைய மனத்தினாலே 'அந்தக்கேள்வியானது தயிரிலிருந்து நெய்போல எடுக்கப்பட்டது.[2] ஓ! அரசனே! அப்பொழுது, உபநிஷத்தையும் பரிசேஷமென்கிற மிசசவாக்கியத்தையும் மனத்தால ஆராய்ந்தேன். ஓ! ராஜஶ்ரேஷ்டனே! ஐயா! சிறந்தயுக்திரூபமான வித்தையைப்பார்த்துவிட்டு மோக்ஷத்திற்கு நன்மையும் இருபத்தைந்தாவதான ஆத்மாவை அடைந்தவனை நான் உனக்குச்சொல்லியதும் (வேதம்வார்த்தைதண்டநீதி இவைகளை அபேக்ஷித்து) நான்காவதுமாயிருக்கிற இந்த வித்தையைச் சொன்னேன். அரசனே! பிறகு, உடனே நான் விஶ்வாவஸுவென்கிற கந்தர்வராஜனைப்பார்த்து, 'நீ என்னிடம் இப்பொழுது கேட்ட கேள்வியைசசொலலுகிறேன்; கேள். ஓ! கந்தர்வஶ்ரேஷ்டனே! நீ கேட்ட விஶ்வாவிஶ்வமென்பதில் விசுவத்தைப் பரமாயும் சென்றதும் இனி வருவதுமான ஸம்ஸாரபயத்தைச செய்கிறதாயும் குணங்களைச் செய்கிறபடியால் மூன்றுகுணங்களுடையதாயுமுள்ள அவ்யக்தமாக அறியவேண்டும். அவிஶ்வம் நிஷ்களனை ஆத்மா., விசுவாவிசுவமென்கிற இரட்டையானது இப்படியே காணப்படுகிறது அவ்யக்தத்தைப் பிரகிருதியென்றும் நிர்க்குணத்தைப் புருஷனென்றும் சொல்லுகிறார்கள். வருணனைப்பிரகிருதியாகவும் மித்திரனைப்புருஷனாகவும் ஞானத்தைப்பிரகிருதியாகவும் ஞேயத்தைப்புருஷனாகவும் சொல்லுகிறார்கள். [5]அஜ்ஞனானது அவ்யக்தமென்று சொலலப்பட்டது. ஞேயோ நிஷ்களனாகச் சொல்லப்படுகிறான். கமென்றும் தபஸென்றும் அதபஸென்றும் உம்மால் சொல்லப்பட்டவற்றில் இந்தப் புருஷன் [6]'க' என்று சொல்லப்படுகிறான். தபஸைப் பிரகிருதியாகச் சொல்லுகின்றார்கள். அதபஸென்பவன் நிஷ்களனாகக் கருதப்பட்டான். [7]ஸூர்யம் அவ்

1 அறியக்கூடியது அறியக்கூடாதது.
2 ஒருசொல் விடப்பட்டது.
3 நாசமற்றது.
4 குறைவற்றது.
5 அறியாதது.
6 ஸுகரூபன்.
7 ஜனங்களை விஷயத்தில் ஏவுகின்றது.

யக்தமென்று சொல்லப்பட்டது. [1]அதிஸார்யன் [2]நிஷ்களன். அவ்யக்தமானது அவித்தையாகச் சொல்லப்பட்டது. புருஷன் வித்தையாகச் சொல்லப்படுகிறான். அவ்யக்தம் [3]அவேத்யமாகவும் புருஷன் [4]வேத்யனாகவும் சொல்லப்படுகிறார்கள். நீ சொல்லிய சலாசலம் என்பதையும் என்னிடம்கேள். ஸ்ருஷ்டிப்ரளயங்களுக்குக்காரணமானபிரகிருதியைச் [5]சலமாகச் சொல்லுகிறார்கள். ஸ்ருஷ்டிப்ரளயங்களுக்குக் கர்த்தாவாகாத புருஷன் [6]அசலனாக நினைக்கப்பட்டான். இருவரும் [7]அஜ்ஞர்கள். [8]நிலையுள்ளவர்கள். இருவரும் [9]க்ஷயமில்லாதவர்கள். இருவரும் ஜனனமில்லாதவர்கள். நாசமுமில்லாதவர்களென்று ஆத்மாவின்கதியில் உறுதியுள்ளவர்கள் சொல்லுகிறார்கள். இவ்வுலகில் சிலர் ஸ்ருஷ்டியில் ஜனியாததை க்ஷயமில்லாததால் அவ்யயமாகச் சொல்லுகிறார்கள். வித்வான்கள் இவனுக்கு க்ஷயமில்லை என்கிற காரணத்தால் புருஷனை அக்ஷயனாகவும் (அவ்யக்தத்தைக்) குணங்களுக்கு க்ஷயமேற்படுவதால் பிரகிருதியாகவும் கர்த்தாவாயிருப்பதால் அக்ஷயமாகவும் சொல்லுகிறார்கள். உனக்கு மோக்ஷத்திற்குரிய நான்காவதான இந்த நியாயவித்தை சொல்லப்பட்டது. ஓ! விஸ்வாவஸுவே! வேதவாதிகளெல்லாரும் [10]கர்மாவினாலே வித்தையோடுகூடத் தனத்தைத்தேடி நித்யமான கர்மத்தில் ஓரே திருஷ்டியுடையவர்களாக நினைக்கப்படுகிறார்கள். கந்தருவஸ்ரேஷ்டனே! இந்தப்பிராணிகள் இருப்பதற்கு இடமும் அவைகளால் நழுவப்பெற்றதும் வேதத்தின் பொருளுமான (அந்த) வேத்யத்தை எவர்கள் அறியவில்லையோ அவர்கள் பிறப்பதும் இறப்பதுமாக இருக்கின்றார்கள். அங்கங்களுடனும் உபாங்கங்களுடனும் வேதங்களை அத்தியயனம் செய்தும் வேதத்தாலறியவேண்டியதை அறியாதவன் வேதங்களாகிற சுமைகளைச் சுமக்கிறவனே. ஓ! கந்தருவஸ்ரேஷ்ட! நெய்யில் விருப்பத்துடன் கழுதைப்பாலைக்கடைபவன் அதில் அசுத்தமான

---

1 சூரியனை அதிக்ரமித்தவன்.
2 நிர்க்குணன்.
3 அறியக்கூடாதது.
4 அறியக்கூடியவன்.
5 சலிக்கிறதாக.
6 சலிக்காதவனாக.
7 ஒன்று ஜடம்; மற்றவன் ஞானருபனேயன்றி ஞானமுள்ளவனல்லன்.
8 அனாதிகள்.
9 ஒன்று பரிணாமத்தால்; மற்றவன் ஸ்வபாவத்தால்.
10 '[வேதவித்தையாகிற] தனத்தை நியாய சாஸ்திரத்துடன் சேர்த்து [குருஸேவை முதலிய] கர்மத்தினால் எல்லா வேதங்களும் நித்ய கர்மத்திலேயே திருஷ்டியுள்ளவைகளாக நினைக்கப்பட்டவைகள் என்று அறியத்தக்கன' என்பது பழையவுரை.

பொருளேயேயல்லாமல் 'ஆடையையாவது நெய்யையாவது காணுதது போல வேதங்களேயுணர்ந்து வேத்யத்தையும் அவேத்யத்தையும் அறியாதமூடபுத்தியுள்ளவன் கேவலம் வேதமாகிறசுமையைசசுமக்கிறவனுகக் கருதப்படுகிறுன். தனக்கு அடிக்கடி ஜனனமரணங்களேற்படாதபடி இந்தவேத்யாவேத்யங்களே அவைகளிலேயே மனத்தைநிலேக்கச்செய்து எப்போதும் பார்க்கவேண்டும் ஓ! காசியப! நித்யமானஜனனமரணங்களே ஆலோசித்து இந்தவேதத்தையும் (விசாரித்து) இதில் நசிக்கிறதானதர்மத்தைத்தள்ளிவிட்டு ' அழிவில்லாத (மோக்ஷ) தர்மத்தைப்பற்றிக்கொண்டு ஒவ்வொருநாளும் இடைவிடாமல் (வேத்யாவேத்யங்களே) நன்ருகபபார்த்தால் அவன் கேவலனுகி இருபத்தாருவதானபரமாத்மாவைப் பார்க்கின்ருன். சாசுவதனுன அவ்யக்தன் வேறு. இருபத்தைந்தாமவனுன ஜீவன் வேறு. ஸாதுக்கள் அந்தஜீவஸ்வரூபத்திலிருக்கிற அந்த ஈசனே ஒருவனென்று பார்க்கிருர்கள் ஆகையால், பரமபதத்தை விரும்புகின்றயோகிகளும் ஞானிகளும் ஜனனமரணபயத்திஞலே அழிவில்லாதவனுயிருந்தும் இருபத்தைந்தாமவனுனஜீவனேச சிலாக்கிக்கிறதில்லே' என்றுசொன்னேன் விசுவாவஸு, 'ஓ! பிராம்மணேத்தமரே! உம்மால்சொல்லப்பட்ட இந்தஇருபத்தைந்தாமதை நான் அப்படிஅறியவில்லே. அதை நீர் சொல்லவேண்டும். ஜைகீஷவ்யர், அஸிதர், தேவலர், பிரம்மரிஷியானபராசரர், புத்திமானுனவார்ஷகண்யர், ஸங்யாஸியானபஞ்சசிகர், கபிலர், சுகர், கௌதமர், ஆர்ஷ்டிஷேணர், மஹாத்மாவான கர்க்கர், நாரதர், ஆஸுரி, புத்திமானுன புலஸ்தியர், ஸநத்குமாரர், மகாத்மாவானசுக்கிரர் இவர்களிடம் நான் கேட்டேன். பிதாவானகசியபரிடமும் முன்னமேகேட்டிருக்கிறேன். அதன்பிறகு, விசுவரூபரும் புத்திமானுமான ருத்ரர், தேவர்கள், பிதிருக்கள், அஸுரர்கள் இவர்களிடமிருந்தும் முழுதும் தெரிந்துகொண்டேன். அவர்களும் வேத்யத்தை நித்தியமாகசசொல்லுகிருர்கள். ஓ! பிராம்மணரே! ஆகையால், அதை உம்முடையபுத்தியால் கேட்கவிரும்புகிறேன். நீர் சாஸ்திரங்களில் தேர்ந்தவர்; சொல்லவல்லமையுள்ளவர்; மிக்கபுத்திமான். உமக்குத்தெரியாதது ஒன்றுமில்லே. நீர் வேதநிதியாக நினேக்கப்படுகிறீர். ஓ! பிராம்மணரே! நீர் தேவலோகத்திலும் பித்ருலோகத்திலும் புகழப்படுகிறீர். பிரம்மலோகத்தையடைந்த மகரிஷிகளுமே உம்மைக் கொண்டாடுகிருர்கள். ஜோதிகளுக்கெல்லாம்பதியான ஆதித்யர் உமக்குப் பலமுறை சொன்னவர். ஓ! பிராம்மணரே! ஸாங்கிய

[1] ஞானம்முழுதும் நீர் கேட்டிருக்கிறீர். யாஜ்ஞவல்கியரே! அப்படியே விசேஷமாக யோகசாஸ்திரத்தையும் அறிந்திருக்கிறீர். நீர் ஐயமற உணர்ந்தவர்; சராசரங்களையறிகின்றவர். தயிரிலிருந்து வெண்ணெயைத் திரட்டிஎடுப்பதுபோல அந்தஞானத்தைக் கேட்கவிரும்புகிறேன்' என்றுசொன்னான் நான், 'கந்தருவஸ்ரேஷ்டனே! நான் உன்னை எல்லாவற்றையுமறிந்தவனாகவே நினைக்கிறேன். ஓ! அரசனே! என்னைப் பரீக்ஷிக்கவிரும்புகிறாய். ஆகையால், நான் கேட்டபடி (சொல்லுகிறேன்;) தெரிந்துகொள். அறிகிறவனாயிருப்பதால் இருபத்தைந்தாமவன் பிரகிருதியை அறிகிறான் ஓ! கந்தருவ! பிரகிருதியோ இருபத்தைந்தாமவனை அறிகிறதில்லை ஸாங்கியயோகங்களுடைய அர்த்தத்தின் தத்வத்தையுணர்ந்தவர்கள் வேதத்தில்சொன்னபடி ஞானம்பிரதிபலிப்பதால் அதைப் பிரதானமாகச்சொல்லுகிறார்கள். குற்றமற்றவனே! இவன் எப்பொழுதும் பார்க்கிறவனும் பாராதவனுமாயிருந்துகொண்டு பார்க்கிறான். வேறொருவன் எப்பொழுதும் இருபத்தாறாமவனைதன்னையும் இருப்பத்தைந்தாமவனையும் இருபத்துநான்காவதையும் பார்க்கிறான். இவனை அடுத்துப் பார்க்கிறஜீவன் பார்க்கிறவனாயிருந்தும் (இவைகளைப்) பார்க்கிறதில்லை. இருபத்தைந்தாமவனை ஜீவன், 'எனக்குமேலே வேறு ஒருவனுமில்லை' என்று அபிமானிப்பான். ஞானக்கண்ணுடையவர்களாலே இருபத்துநான்காவது (தாமென்று) பார்க்கத்தக்கதில்லை. மத்ஸ்யமானது ஜலத்தைஅனுஸரித்துச்செல்வதுபோல ஜீவனானவன் செலுத்தப்படுகிறபடி (பிரகிருதியை அனுஸரித்து) பிரவிருத்திப்பான். மத்ஸ்யம்அறிவதுபோல ஜீவனும் எப்பொழுதுமுள்ளஸ்னேகத்தாலும் ஸஹவாஸத்தாலும் அபிமானத்தாலும் பிரகிருதியையும் தன்னையும் ஒன்றாகவேஅறிகிறான். ஒருவனாயிருத்தலை அறியாதவரையில் ஸம்ஸாரத்தில் முழுகுகிறான். [2]பிரம்மபாவத்தை அடையும்போது ஸம்ஸாரத்திலிருந்தும் வெளிப்படுகிறான். ஒருபிராம்மணன், 'நான் வேறு; இந்தப்பிருகிருதி வேறு' என்று நினைக்கிறபொழுது கேவலனாகி இருபத்தாறாவதான பரமாத்மாவைப் பார்க்கிறான். ஓ! அரசனே! பரமன் வேறு. இருபத்தைந்தாமவன் வேறு. அந்த ஜீவனிடத்திலிருப்பதால் ஸாதுக்கள் அவனை ஒருவன்என்றே அறிகிறார்கள். ஓ! காசியபா! அதனால் ஜனனமரணத்துக்குப் பயந்தவர்களும் இருபத்தாறாமவனைப்பார்க்கிறவர்களும் அவனையே பற்றியிருப்பவர்களும் சுத்தர்களும் ஸாங்கியர்களும் யோகிகளும், அச்சுதனை

1 சாஸ்திரம். 2 'ஸமத்வேந' என்பது மூலம்.

யிருந்தும் இந்த இருபத்தைந்தாமவனைச் சிலாகிக்கிறதில்லை. அவன் கேவலனாகிப் பிரம்மத்தைப் பார்க்கும்பொழுது எல்லாவற்றையும் அறிந்த வித்வானாகி மறுஜன்மத்தை அடைகிறதில்லை. ஓ! களங்கமில்லாதவனே! இவ்விதம் ஜடமான பிரகிருதியையும் அறிகிறவனான ஜீவனையும் [1]ஞானரூபமானபரம்மத்தையும் வேதத்தின் திருஷ்டாந்தத்தைக்கொண்டு உள்ளபடி சொன்னேன். ஓ! காஸ்யப! பார்க்கிறதும் பாராததும் க்ஷேமத்திற்கு ஹிதமானதத்வத்தைப் பாராததும் ஜடமற்றதானசத்தமும் ஜடத்துடன்கூடியதுமான இருபத்தைந்தாவதும் பரமானஇருபத்தாறாவதும் சொல்லப்பட்டன' என்று சொன்னேன். விஸ்வாவஸு, 'ஓ! பிரபுவே! உபாயம் உண்மையும் சுபமும் க்ஷேமத்திற்குரியதும் தேவதைகளுக்கு ஆதியுமான இவ்விஷயம் உள்ளபடி நன்கு சொல்லப்பட்டது. உமக்கு எப்பொழுதும் அழிவில்லாதக்ஷேமம் உண்டாகட்டும். அறிவிற்சிறந்தஉம்மை எப்பொழுதும் புத்திபூர்வமாக நமஸ்கரிப்பேன்' என்று சொன்னான். இவ்விதம் சொல்லிவிட்டு, [2]சோபைபொருந்தியரூபத்தால்விளங்குகின்றவனும் பரம ஸந்தோஷமுள்ளவனாகக் காணப்பட்டவனும் மகாத்மாவுமான அந்தக்கந்தருவன் புகழ்ந்து என்னைப் பிரதக்ஷிணம் செய்துவிட்டு ஸ்வர்க்கத்தை நோக்கிச் சென்றான். ஓ! அரசனே! பிரம்மாமுதலான தேவர்களுக்கும் பூமியிலும் பாதாளத்திலும்வஸிக்கிறவர்களுக்கும் க்ஷேமத்திற்குரியமார்க்கத்தை அடைந்திருக்கின்றவர்களுக்குமே அந்தச் சாஸ்திரத்தை நன்றாகவெளியிட்டான். ஞானத்தால் காணப்பட்ட இந்தச்சாஸ்திரம் ஸாங்கியதர்மத்தில் பற்றுள்ள எல்லாஸாங்கியர்களுக்கும் யோகதர்மத்தில்பற்றுள்ள யோகிகளுக்கும் மோக்ஷத்தில் விருப்பமுள்ள மற்றமனிதர்களுக்கும் உரியது. ராஜஸ்ரேஷ்டனே! 'ஞானத்தால் மோக்ஷமுண்டாகிறது; அஜ்ஞானத்தாலுண்டாகிறதில்லை' என்று இவ்விதம் சொல்லுகின்றார்கள். ஆகையினால், ஆத்மாவை ஜனனமரணங்களிலிருந்தும் விடுவிக்கக்கூடியஞானத்தை உண்மையாகத் தேடவேண்டும். ச்ரத்தையுள்ளவன் பிராம்மணனிடமிருந்தோ க்ஷத்ரியனிடமிருந்தோ வைச்யனிடமிருந்தோ சூத்ரனிடமிருந்தோ நீசனிடமிருந்தோ எப்போதும் ஞானத்தையடைந்து ச்ரத்தையை வைக்கவேண்டும். ச்ரத்தையுடையவனை ஜனனமரணங்கள் தொடருகிறதில்லை. பிரம்மத்தினிடமிருந்துண்டான எல்லா வர்ணத்தார்களும் பிராம்மணர்களே. எல்லாரும்

---

1 வேறு பாடம்.

2 'சிறந்தசாஸ்திர ஞானத்தால்' என்றும் கொள்ளலாம்.

எந்நாளும் பிரம்மத்தைச் சொல்லுகிறார்கள். '[1]பிரம்மஞானத்தினால் உண்மையானசாஸ்திரத்தைச் சொல்லுகிறேன். ஸகலஜகத்தும் எல்லாமாயிருக்கிற இந்தப்பிரம்மமே. பிரம்மாவின்முகத்திலிருந்தும் பிராம்மணர்களுண்டானார்கள்; கைகளிலிருந்தும் அரசர்களுண்டானார்கள்; நாபியிலிருந்தும் வைஶ்யர்களுண்டானார்கள்; பாதங்களிலிருந்தும் சூத்ரர்களுண்டானார்கள். எல்லாவர்ணங்களையும் வேறுவிதமாக அறியக்கூடாது. அரசனே! அவர்கள் அஜ்ஞானத்தால் அந்தஅந்த வினைக்குரியபிறவியைஅடைந்து கெட்டுப்போகிறார்கள். அப்படியே அறிவீனமானவர்ணங்கள் மிகுந்த அஜ்ஞானத்தால் பிராகிருதமான பலபிறவிகளில் விழுகின்றன. ஆகையால், ஞானமானது [2]ஸர்வவிதமாகவாவது தேடத்தக்கது இந்தப் [3]பிரம்மமானது எங்குமிருக்கிறதென்பது என்னால் உனக்குச் சொல்லப்பட்டது. ஓ! அரசனே! [4]பிரம்மாவாலும் மற்றவனாலும் அந்தப்பிரம்மத்திலிருக்கிறவனுக்கு நிலைபெற்ற மோக்ஷமுண்டென்று சொல்லுகிறார்கள். அரசனே! நீ கேட்டதை நான் உனக்கு உண்மையாக உபதேசித்தேன். சோகமற்றவனாகி அதை அடையக்கடவாய். இந்தஅர்த்தத்தினுடைய முடிவை அடையக்கடவாய் நன்றாகச் சொன்னேன். உனக்கு எப்பொழுதும் க்ஷேமமுண்டாகுக' என்றுசொன்னார். இவ்விதம் புத்திமானையாஜ்ஞவல்கியரால் மிதிலாதிபதியான அரசர் உபதேசிக்கப்பட்டு உடனே ப்ரீதியுள்ளவரானார். தேவராதனுடைய புத்திரரும் மோக்ஷத்தைஅறிந்தவருமான ஜனகராஜர் முனிவரிற்சிறந்தஅந்த யாஜ்ஞவல்கியரை ப்ரதக்ஷிணம்செய்ய, அவர் சென்றனர். பிறகு, அந்தஅரசர் அவ்விடத்திலிருந்து கோடிப்பசுக்களையும் கோடி ஸுவர்ணங்களையும் தானஞ்செய்தார். அப்பொழுது, வேதியர்களுக்கு ரத்னங்களைக் கையினால் அள்ளிக்கொடுத்தார். உடனே, அவர் புத்திரனிடம் ராஜ்யத்தை வைத்துவிட்டு யதிகளுடைய தர்மத்தை அனுஷ்டித்துக்கொண்டு வஸித்தார். ராஜஶ்ரேஷ்டனே! அவர் ஸாங்கியசாஸ்திரத்தையும் யோகசாஸ்திரத்தையும் முழுதும் அத்யயனம் செய்துகொண்டு '[5]பிராகிருதமான தர்மா

---

1 அதிகபாடமான அரைஶ்லோகம் விடப்பட்டது.

2 'யாரிடத்திலிருந்தும்' என்றும் கொள்ளலாம்.

3 'ஞானம்' என்றும் கொள்ளலாம்.

4 'அந்தஞானநிஷ்டையுள்ளவனே ப்ராம்மணன். எவனாயிருந்தாலும் ஞானநிஷ்டையுள்ளவனுக்கு நித்யமானமோக்ஷமுண்டென்று சொல்லுகிறார்கள்' என்றும் கொள்ளலாம்.

5 அவித்தையாலுண்டான.

தர்மங்களை, நிந்தித்து நித்யனும் கேவலனுமாயிருக்கிற தன்னை [1]அனந்தனென்றுகருதித் தர்மாதர்மங்களையும் புண்ணியபாபங்களையும் ஸத்யாஸத்யங்களையும் ஜனனமரணங்களையும் பிராகிருதமாகநிச்சயித்து அந்தப்பிரம்மத்தையே சிந்திக்தான். ஓ! மன்னரிற்சிறந்த அரசனே! தங்கள்சாஸ்திரத்தில்பிரஸித்தர்களான ஸாங்கியர்களும் யோகிகளும் இந்தத்தர்மமுதலானவை அவித்தையின் காரியமென்று எப்பொழுதும் பார்க்கிறார்கள். பரதநிற்கும் பரமானபிரம்மமானது இஷ்டாநிஷ்டங்களால்விடுபட்டு (அவனிடம்ஸ்திரமாய்) இருந்ததல்லவா? அந்தப்ரம்மத்தை வித்வான்கள் எப்பொழுதும் சுத்தமுள்ளதாகச் சொல்லுகின்றார்கள். ஆகையால், நீ சுசியுள்ளவனுகக்கடவாய். அரசனே! கொடுக்கப்படுவதும் அடையப்படுவதும் கொடுக்கப்பட்டதைஸம்மதிப்பதும் அவ்யக்தத்தாலென்று நினை. வேறு விதமாக நினையாதே. கொடுப்பதும் வாங்குவதும் அவ்யக்தமே. 'அவ்யக்தன் கொடுக்கிறான் அவ்யக்தன் கிரகிக்கிறானென்றிருப்பதால் ஆத்மாவைச்சேர்ந்தவன் ஆத்மாஒருவனே அவனைக்காட்டிலும் வேறாளவன் சிறந்தவனுவான?' என்று எப்பொழுதும் நினை. வேறுவிதமாக நினையாதே ஸகுணமான அவ்யக்தத்தையும் நிர்க்குணத்தையும் அறியாதவனும் பண்டிதனுமானவன் புண்ணிய தீர்த்தஸ்நானங்களையும் யாகங்களையும் செய்யவேண்டும். குருவம்சத்திலுதித்தவனே! ஒருவன் தன்னுடைய வேதங்களாலும் தவங்களாலும் யாகங்களாலும் அவ்யக்தஸ்தானத்தை அடைகிறதில்லை அவ்யக்தத்தை அறிந்தவன் பூஜிக்கப்படுகிறான்; அப்படியே, மகத்தத்வத்தின் ஸ்தானத்தையும் அஹங்காரத்தின் ஸ்தானத்தையும் அஹங்காரத்திற்குமேலுள்ள ஸ்தானங்களையும் அடைவான். சாஸ்திரத்தில் பற்றுதலுடையவர்களும் அவ்யக்தத்தைக்காட்டிலும் வேறானதும் நித்யமுமாயிருக்கிற ப்ரம்மத்தை அறிகிறவர்களுமானவர்கள் ஜனன மரணமற்றதும் எப்பொழுதும்பந்தமற்றதும் ஸதஸத்ரூபமான பிரபஞ்சமுமாயிருக்கிற (அதையடைகிறார்கள்.) ஓ! அரசனே! நான் இந்தப் பிரம்மஜ்ஞானத்தை முன்காலத்தில் ஜனகரிடமிருந்து அடைந்தேன். அவரும் யாஜ்ஞவல்கியரிடமிருந்து அடைந்தார். ஞானமானது சிறந்தது. யாகங்கள் அப்படியல்ல (மனிதன்) ஞானத்தினால் [2]துர்க்கத்தைத் தாண்டுகிறான்; யாகங்களால் தாண்டுகிறதில்லை. ஓ! அரசனே! ஞானத்தை அறிந்தவர்கள் ஜனனத்தையும் மரணத்தையும்

---

1 இடம் காலம் பொருள்மூன்றாலும் அளவிடற்கரியவன்.

2 தாண்டுவதற்கு அரியது.

துர்க்கமாகச் சொல்லுகின்றார்கள். [1]பௌதிகமான துர்க்கத்தைத் துர்க்கமாகச் சொல்லுகிறதில்லை. (மனிதர்கள்) யாகங்களாலும் தவங்களாலும் நியமங்களாலும் விரதங்களாலும் ஸ்வர்க்கத்தையடைந்து (திரும்பவும்) பூமியில் விழுகின்றார்கள். ஆகையால், மகத்தும் சுத்தமும் மங்களமும் மோக்ஷரூபமும் நிர்மலமும் பரிசுத்தமுமான பரம் பொருளை உபாஸிக்கக்கடவாய். ஓ! அரசனே! [2]க்ஷேத்ரத்தை அறிந்து உண்மையானஞானமாகிற யாகத்தைஉபாஸித்து ரிஷியாவாய். முன்காலத்தில் அந்தயாஜ்ஞவல்கியர் ப்ரம்மத்தைப்பற்றிய உபநிஷத்தை ஜனகராஜருக்கு உபதேசித்தார். அந்தஜனகர் (வித்வான்களால்) தியானம்பண்ணப்பட்டதும் அறுதியும் அழிவற்றதும் சுபமும் சோகமற்றதும் மோக்ஷரூபமுமான அந்தப்பிரம்மத்தை அடைந்தார்'' என்று சொன்னார்.

---

## முந்நூற்றிருபத்துநான்காவது அத்யாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)

(பஞ்சசிகர் மூப்பு இறப்புக்களைத்தாண்டும் வகையை ஜனகருக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "ஓ! பரதஶ்ரேஷ்டரே! மிகுந்த வல்லமையை அடைந்தோர், அதிகமானதவத்தையடைந்தோர் அல்லது நீண்டஆயுளையடைந்தோர் எப்படி மிருத்யுவைத்தாண்டலாம்? பெரிதானதவத்தினலேயா? அல்லது கர்மாவினலேயா? அத்தியயனத்தினலேயா? ரஸாயனங்களைஉண்பதினலேயா? எந்த உபாயங்களால் ஜராமரணங்களை அடையாமலிருப்பான்?'' என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"இவ்விஷயத்திலும் பஞ்சசிகரென்கிற ஸன்யாஸிக்கும் ஜனகருக்கும் நடந்த ஸம்வாதரூபமான பழையசரித்திரத்தைச் சொல்லுகிறார்கள். விதேஹகுலத்தில்உதித்த ஜனகமஹாராஜர், வேதத்தை நன்றாய் அறிந்தவரும் தர்மார்த்தங்களில் ஸம்சயமற்றவருமான, பஞ்சசிகரென்கிற மஹரிஷியைநோக்கி, 'ஓ! பகவானே! ஒருமனிதன் தவத்தினலேயா அல்லது வேதாத்தியயனத்தினலேயா மதியினலேயா அல்லது கர்மாவினலேயா எந்த நடக்கையினலே ஜராமரணங்களைத் தாண்டவேண்டும்?' என்று வினவினர். இவ்விதம் வினவ, (எல்லாவற்

---

1 மதில் அகழ்முதலிவை.          2 சரீரம்.

றையும்). ப்ரத்யக்ஷமாய்ப்பார்ந்த அந்தப் பஞ்சசிகர் விதேஹராஜரை நோக்கி, 'இந்தஜராமரணங்களுக்கு நிவிருத்தியில்லை. ஒருவிதத்தாலும் இவைகளை மீறிச்செல்லமுடியாது. சென்றபகல்கள் மறுபடியும் திரும்புகிறதில்லை. மாஸங்களும் திரும்புகிறதில்லை. ராத்ரிகளும் திரும்புகிறதில்லை. எல்லாப்பிராணிகளையும் நாசஞ்செய்வதும் நிலையாததுமான இந்தக்காலமானது நெடுநாளாக நிலையானமார்க்கத்தை அடைகின்றது. (அதனால்) பிராணியானது பிரவாஹத்தாலிழுக்கப்படுவதுபோல இழுக்கப்படுகிறது. (இவ்விதம்) இழுக்கப்பட்டவனும் ஜராமரணங்களாகிற பெரிய்முதலைகளையுடையதும் ஓடமில்லாததுமான காலமாகிற ஸமுத்திரத்தில் முழுகுகின்றவனுமான ஒருவனும் மீறுகிறதுமில்லை. ஒருவனும் இவனைச சேர்ந்தவனில்லை; இவனும் ஒருவனையும் சேர்ந்தவனாகிறதில்லை. மனைவியோடும் மற்றஉறவினர்களோடுமுண்டான சேர்க்கையானது மார்க்கத்திலுண்டானசேர்க்கைபோன்றது. ஒருவனாலும் இது நெடுநாள் ஸஹவாஸமாக முன்னமே அடையப்பட்டதில்லை. அடிக்கடி அதனோடு சேர்ந்தும் விடப்படுகிறார்கள். காலத்தால்சென்றுகொண்டிருக்கிற பிராணிகள், கர்ஜிக்கின்ற மேகங்கள் காற்றினால் பிரிக்கப்படுவதுபோல, அந்தஅந்தக்காரணங்களால் அடிக்கடி பிரிக்கப்படுகின்றன. ஜராமரணங்கள் செந்நாய்கள்போல வலிமையுள்ளவைகளும் சிறியவைகளும், பெரியவைகளுமான எல்லாப்பிராணிகளையும் விழுங்குகின்றன. எப்பொழுதுமுள்ளவைகளும் நிலையில்லாதவைகளுமாயிருக்கிற இவ்விதப்பிராணிகள்பிறக்கும்போது எப்படி ஸந்தோஷிக்கலாம்? மரிக்கும்காலத்திலும் வருத்தத்தை அடையக்கூடாது. 'நான் எங்கிருந்துவந்தேன்? நான் யார்? எங்கே போகப்போகிறேன்? எவனைச்சேர்ந்தவன்? எவ்விடத்திலிருந்தேன்? எதனால் எங்கே உண்டாகப்போகிறேன்?' என்று ஏன் வருத்தப்படுகிறாய்? ஸ்வர்க்கத்தைப் பார்த்தவனுமில்லை. அப்படியே நரகத்தைப்பார்த்தவனுமில்லை. வேதங்களை அதிக்ரமியாமல் தானஞ்செய்யவும் வேண்டும்; யாகஞ்செய்யவும் வேண்டும்' என்று மறுமொழிகூறினார்'' என்று சொன்னார்.

---

## முந்நூற்றிருபத்தைந்தாவது அத்யாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)

(ஜனகருக்கும் ஸுலபைக்கும் முக்திலக்ஷணமுதலியவற்றைப்பற்றி நடந்த ஸம்வாதம்.)

யுதிஷ்டிரர், "ஓ! குருவம்சத்திய ராஜரிஷிகளிற்சிறந்தவரே! கிருகஸ்தாஸ்ரமத்தைவிடாமல் எந்த அரசன் ஸித்தியை அடைந்தான்? மோக்ஷதத்வத்தை எனக்குச் சொல்லும். ஓ! பிதாமஹரே! இந்த லிங்கசரீரமும் வ்யக்தமான ஸ்தூலசரீரமும் எப்படி விலக்கப்படுகின்றனவென்பதையும் மோக்ஷத்தின் பரமமானதத்வத்தையும் எனக்குச் சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர். "பாரத! இந்கவிஷயத்திலும் ஜனகருக்கும் ஸுலபைஎன்பவளுக்கும் நடந்தஸம்வாதரூபமான ஒரு பழையசரித்திரத்தைச் சொல்லுகின்றார்கள். முன்காலத்தில், ஸன்யாஸத்தின்பயனை அடைந்தவரும் மிதிலாதிபதியும் தர்மத்வஜரென்று பிரஸித்திபெற்றவருமான ஜனகரென்கிற ஓர் அரசர் இருந்தார். [1]வேதத்திலும் மோக்ஷசாஸ்திரத்திலும் தம்முடையசாஸ்திரமான ராஜநீதியிலும் தேர்ச்சிபெற்றஅவர் இந்திரியங்களை அடக்கிக்கொண்டு இந்தப்பூமியை ஆண்டுவந்தார். உலகங்களிலுள்ள வேதவித்துக்களும் பிராஜ்ஞர்களுமான மற்றமனிதர்கள் அவருடைய அந்தநல்லநடக்கையைக்கேட்டுப் புருஷர்களிற்சிறந்த அந்தஜனகரை விரும்பினர்கள். பிறகு, தர்மத்தைப்பிரதானமாகவுடைய அந்தயுகத்தில் யோகதர்மத்தைஅனுஷ்டிக்கின்ற ஸுலபையென்கிற ஒருபிக்ஷுகியானவள் (பூமிமுழுமையும்) ஸஞ்சரித்தாள். இந்தஉலகமுழுமையும்ஸஞ்சரிக்கின்ற அந்தஸுலபையானவள் அங்கங்கே திரிதண்டிகளானயதிகள், 'மிதிலாதிபதி மோக்ஷசாஸ்திரத்தில்நிபுணன்' என்றுசொல்வதைக்கேட்டாள். அவள், மிகவும்ஸூக்ஷ்மமான ஜனகருடையசரித்திரத்தைக் கேட்டு உண்மையா அன்றுவென்று ஸந்தேஹித்து அவரைப் பார்க்க விரும்பினள். அப்பொழுது, குற்றமற்ற அங்கங்களுடையஅவள், உடனே யோகசக்தியினால் தன்னுடையபழையரூபத்தைத்தள்ளிவிட்டு மிகவும்உத்தமமானவேறுரூபத்தை எடுத்தாள். அழகானபுருவங்களும் தாமரைமலர்கள்போன்றகண்களுமுடைய அந்தஸுலபையானவள் வேகமுள்ள அஸ்திரத்தின்கதிபோல நடந்து இமைப்பொழுதில்

---

1 கர்மகாண்டத்திலும்.

விதேக அரசர்களுடைய பட்டணத்தை அடைந்தாள். அவள் செல்வவான்களால் நிரம்பியதும் அழகுள்ளதுமான மிதிலையை அடைந்து பிக்ஷாடனமென்கிற வியாஜத்தினல் மிதிலாதிபதியான ஜனகரைக் கண்டாள். அப்பொழுது, அரசர் அவளுடைய சிறந்த அழகைப் பார்த்து, 'இவள் யார்? யாரைசசேர்ந்தவள்? எங்கிருந்து வருகிருள்?' என்று ஆச்சரியத்தை அடைந்தார்; பிறகு, அவளுக்கு நல்வரவுகூறி உத்தமமான ஆஸனங்கொடுத்துப் பாதப்ரக்ஷாளனம் செய்து பூஜித்துச் சிறந்த அன்னத்தினல் திருப்தியடையும்படி செய்தார். பிறகு, அரசர் மந்திரிகளால் சூழப்பட்டுப் போஜனம் செய்தவளும் பிரீதியடைந்தவளுமான அந்தபிக்ஷுகியை ஸர்வபாஷ்யங்களுமுணர்ந்த பண்டிதர்களின் நடுவில் சிலகேள்விகளைக் கேட்டார் ஓ! அரசனே! யோகத்தை அறிந்தஸுலபை, 'யோகதர்மங்களில இவன் முக்தனே அல்லனே' என்றஸம்சயத்துடன் அவருடைய புத்தியில் தன்னுடைய புத்தியினல் பிரவேசித்தவளானுள். அந்த ஸுலபையானவள் இவருடைய நயனங்களின் கிரணங்களைத் தனது கிரணங்களோடு சேரச் செய்து நேத்ரங்களால் அவரை ஏவி யோகத்தினலுண்டான (மனே) பந்தங்களால் கட்டினள். ராஜஶ்ரேஷ்டனே! ஜனகராஜரும் சிரித்துக்கொண்டு இவளுடையஅபிபிராயத்தை (தம் அபிபிராயத்துடன் கலவாமல்) வேறுபடுத்தித் தம்முடைய அபிப்பிராயத்தினல் அவளுடைய அபிப்ராயத்தைத் தாம் கிரகித்தார். அப்பொழுது, குடைமுதலானவைகளில்லாத ஜனகருக்கும் திரிதண்டமுதலானவையில்லாத ஸுலபைக்கும் ஒரு சரீரத்தில் ஒருஸம்வாதம் உண்டாயிற்று. அதனைச் சொல்லுகிறேன்; கேள். பூபதியானஜனகர், 'பூஜிக்கத்தக்கவளான (உன்னுடைய) இந்தயோகானுஷ்டானமானது எவ்விடத்தில் அப்யஸிக்கப்பட்டது? எங்கே போகிருய்? நீ யாரைச்சேர்ந்தவள்? எங்கிருந்துவருகிருய்? [1]சாஸ்திரவிஷயத்திலும் பிராயத்தின்விஷயத்திலும் ஜாதிவிஷயத்திலும் உண்மையானது அறியப்படவில்லை. ஆகையால், இந்தவிஷயங்களில் என்னுடன் சேர்க்கையின் நிமித்தம் விடைகூறவேண்டும். என்னை நீ குடைமுதலான (பேதய) விசேஷங்களில் முக்தனென்று உண்மையாக அறியக்கடவாய். நீ என்னல் பூஜிக்கப்படத்தக்கவளென்று தோன்றுவதனல் நான் உன்னை நன்ருய் அறியவிரும்புகிறேன். முற்காலத்தில் வைசேஷிகசாஸ்திர ஜ்ஞானத்தை எனக்கு உபதேசித்தவரும் மோக்ஷசாஸ்திரத்தை நன்ரு

1 இதனல் தன்னுடையபுத்தி அவளுடைய புத்தியினல்பிரவேசிக்கப்படவில்லை என்று காண்பித்தார்

கச்சொல்வதில் ஒப்பற்றவருமான எனது ஆசார்யர் யார் என்பதைக் கேள். நான், பராசரமஹரிஷிக்கு ஸமானகோத்ரமுடையவரும் பிராய முதிர்ந்தவரும் மஹாத்மாவும் ஸன்யாஸியுமான பஞ்சசிகருக்கு மிக்க ப்ரியனான சிஷ்யன். நான் ஸாங்கியஞானம் யோகம் ராஜநீதி ஆகிய (ஞானம் உபாஸனம் கர்மம் என்கிற) இந்தமூன்றுவிதமான மோக்ஷ தர்மத்திலும் வெகுதூரஞ்சென்று ஸந்தேகந்தெளிந்தவன். அந்தப் பஞ்சசிகர் (ஸன்யாஸியானதால்) சாஸ்திரத்திற்கண்டபடியான மார்க்கத்தினால் இவ்வுலகத்தில ஸஞ்சரிக்கையில முன்னொருகாலத்தில் என்னிடத்தில் மழைக்காலமான நான்குமாதங்கள் ஸுகமாக வஸித்தார். ஸாங்கியர்களில் சிறந்தவரும் அர்த்தத்தை நன்றாகப் பார்த்தவருமான அவர் மூன்றுவிதமான மோக்ஷதர்மத்தையும் எனக்கு உண்மையாக உபதேசித்தார். ராஜ்யத்திலிருந்து விலகும்படி செய்யவுமில்லை நான் மேலானபதத்திலிருந்துகொண்டு மோக்ஷத்தை அடுத்த மூன்று விதமான அந்த எல்லாவிருத்தியையும் ஆசையற்றவனும் ஒருவனுமாயிருந்து அனுஷ்டிக்கின்றேன் வைராக்யமோ இந்த மோக்ஷத்திற்கு உயர்ந்தஸாதனம் முக்திபெறுவதற்குக்காரணமான வைராக்யமும் ஞானத்தினால்தான்உண்டாகிறது. ஞானத்தினால் [1]யத்னத்தைச் செய்கின்றான். யத்னத்தினால் [2]பெரியஅறிவு அடையப்படுகிறது. மஹத்தான ஞானம ஸுகதுக்கமுதலான இரட்டைகளுடைய நாசத்திற்குக் காரணமாகின்றது. அந்த இம்மூன்றின் ஸித்தியானது [3]பிராயத்தை அதிக்ரமித்தது. துவந்துவமில்லாத இந்த மேலான ஸித்தியானது இவ்வுலகத்திலேயே ஸங்கம்விட்டு மோஹம் நீங்கி ஸஞ்சரிக்கிறவனான என்னால் அடையப்பட்டது. (உழவு முதலியவற்றால்) மிருதுவானதும் ஜலத்தினால் நனைக்கப்பட்டதுமான பூமியானது முளையை உண்டாகச்செய்வதுபோல மனிதர்களுடைய கர்மமானது மறுஜன்மத்தை உண்டாகச்செய்கின்றது. ஓட்டிலாவது அல்லது வேறு எதிலாவது நன்றாக வறுக்கப்பட்ட வித்தானது முளைக்குக்காரணமாயிருந்தும் முளைக்குந்தன்மையில்லாமையால் முளைக்கிறதில்லை. சிகையென்கிறவார்த்தையுடன் கூடின பெயரையுடையவரும் பிக்ஷுவுமான அந்தப்பகவானாலே (வாஸனையாகிற) வித்தில்லாமல் செய்யப்பட்டமையால் என்னுடையஞானமானது விஷயங்களில் செல்லுகிறதில்லை;

1 முயற்சி; 'யோகாப்யாஸம்' என்பது பழையஉரை.
2 'மஹத்' என்பது மூலம்; 'ஆத்மஜ்ஞானம்' என்பது பழையவுரை.
3 மிருத்யுவைஜயித்தது.

திலும் பற்றுகிறதில்லை; ஸ்திரீமுதலானஇடத்திலும் பற்றுகிறதில்லை. பயனில்லாமையால் இவற்றின் விஷயத்திலுண்டான விருப்புவெறுப்புக்களிலும் பற்றுகிறதில்லை. என்னுடைய வலக்கையைச் சந்தனத்தினால்நனைப்பவனும் இடக்கையை வாளால்வெட்டுபவனுமாகிய இவ்விருவரும் எனக்குச்சமமானவர்கள் அப்படிப்பட்டநான், ஸுகியும் பயனையடைந்தவனும் ஓட்டாஞ்சில்லியும் கல்லும் பொன்னும் ஸமமானவனும் பற்றற்றவனும் மற்றயதிகளோடுகூடியவனுமாகி ராஜ்யத்திலிருக்கின்றேன் மோக்ஷதர்மத்தையறிந்தவர்களிலுத்தமர்களால மோக்ஷதர்மத்தில் மூன்றுவிதமானநிஷ்டைகள் காணப்படுகின்றன. மோக்ஷசாஸ்திரத்தையறிந்தவர்களான சிலஜனங்கள் உலகத்தில் உத்தமமானஞானத்தையும் எல்லாக்கர்மங்களையும்விடுவதையும் ஞானநிஷ்டையாகச் சொல்லுகின்றார்கள் நுணுக்கமாகப்பார்க்கின்றவர்களான மற்றயதிகள் கர்மநிஷ்டையைச் சொல்லுகின்றார்கள் மஹாத்மாவான அந்தப்பஞ்சசிகர் கேவலஞானமும் கேவலகர்மமுமாயிருக்கிற அந்தஇரண்டையுமே தள்ளிவிட்டு இந்த மூன்றாவது நிஷ்டையை நன்றாகச் சொல்லியிருக்கிறார் யமமும் நியமமும் காமமும் த்வேஷமும் ஸ்திரீமுதலான பரிக்கிரகமும் கர்வமும் டம்பமும் ஸ்நேகமும்ஆகிய இவைகளில் இருக்கும் விஷயத்தில் அந்தயதிகள் கிருகஸ்தர்களோடொப்பானவர்களே. திரிதண்டமுதலானவையிருக்கையில் ஒருஞானத்தினால் மோக்ஷமிருக்குமேயானால் குடைமுதலானவைகளிருந்தால் ஏன்மோக்ஷமேற்படாது?, பற்றிதலானது இருவருக்கும் ஸமம்தானே இவ்வுலகத்தில் எவனுக்கு எந்த எந்தக்காரணத்தால் கர்மத்தில் பயன் ஏற்படுகின்றதோ அவன் தன்னுடையபயனுக்காகக் கொள்ளப்பட்ட எல்லாத் திரவியத்திலும் அதைஅதைப் பற்றுகின்றான் கிருகஸ்தாஸ்ரமத்தில் தோஷத்தைப் பார்த்து வேறு ஆஸ்ரமத்தில் பிரவேசிக்கின்றவன் ஒன்றைவிட்டு மற்றொன்றைக்கிரகித்தவனானாலும் [1]ஸங்கத்தினின்றும் விடுபடுவதில்லை. அப்படியே, (சிஷ்யர்கள்முதலானவர்கள் விஷயத்தில்) நிக்ரஹானுக்ரஹரூபமான அதிகாரமானது ஸமானமாயிருத்தலால் அரசர்களுக்கொப்பான பிக்ஷுக்கள் எந்தக்காரணத்தினால் விடுபடுகிறார்கள்? இகத்தில் யஜமானத்தன்மையானது இருந்தாலும் கேவலம் ஞானத்தினாலேயே விடுபடுகிறார்களென்றால் மேலான ராஜ்யஸ்தானத்திலிருப்பவர்கள் ஏன் விடுபடுகிறதில்லை? காஷாயந்தரித்தல் முண்டனஞ்செய்துகொள்ளுதல் மூன்றுதண்டம்சேர்த்துத்தரித்தல் கமண்

1 'ஸங்கமிருத்தலால்' என்றும் கொள்ளலாம்; ஸங்கம் = அபிமானம்.

டதுவாகிய மோக்ஷமார்க்கத்திற்குரிய வெளிப்படையான (இந்த) அடையாளங்கள் மோக்ஷத்திற்குக்காரணமாகாவென்பது என்னுடைய எண்ணம் இந்த அடையாளமிருந்தாலும் இந்தவுலகத்தில் துக்கத்தின் நிவிருத்திக்கு ஞானமேகாரணமானால் அடையாளம் மாத்திரம் பயனற்றது அல்லது, துக்கத்தின்குறைவை ஆலோசித்து அடையாளத்தில புத்திவைக்கப்பட்டதேயானால் குடைமுதலானராஜலக்ஷணங்களிலும் அந்தப் [1]பொதுவானபயன்தானே காணப்படுகிறது? ஒன்றுமில்லாமலிருப்பதில் மோக்ஷமிருக்கிறதென்பதில்லை. ஏதாவதிருப்பதில பந்தமிருக்கிறதென்பதுமில்லை. செல்வமிருந்தாலும் இல்லாவிட்டாலும் பிராணியானது ஞானத்தினால் முக்தியை அடைகிறது. ஆகையால், பந்தத்துக்கிருப்பிடமான தர்மார்த்த காமங்களும் ராஜ்யபாரமும் இருக்கையிலும் பந்தமற்ற ஸ்தானத்திலிருப்பவனாக என்னை அறியக்கடவாய் இவ்வுலகில ராஜ்யம்அதிகாரமிவைகளின்ஸ்வரூபமும் ஸ்நேகத்திற்கிருப்பிடமான (ஸ்திரீமுதலானவர்களிடத்தில்) கட்டுகிறதுமான பாசமானது என்னாலே மோக்ஷமாகிறபாறையில்தீட்டப்பட்ட தியாகமென்கிற கத்தியால அறுக்கப்பட்டது. பிக்ஷுகியே! இவ்விதமான தன்மையை அடைந்தவனும் முக்தனுமானநான் உன் விஷயத்தில் ஆதரவுடையவனாயிருக்கிறேன். உன்னுடைய ரூபமோ உண்மையானதன்று. அதைச் சொல்லப்போகிறேன். என்னிடம் கேள். உனக்கு மார்த்தவம் அழகு மேன்மை பொருந்தியசரீரம் (தருண) வயது இவையனைத்துமிருந்தும் நியமமும்உண்டென்பதில் சந்தேகம் உண்டாயிருக்கிறது. உன்னுடைய செய்கையும் இந்தவேஷத்திற்குப் பொருந்தாதது. 'இவன் முக்தனாயிருப்பானோ? இரானோ?' என்று என்னுடையசரீரமானது அவமதிக்கப்பட்டதாகும். மூன்றுதண்டமுடையவளே! யோகியாயிருந்தாலும் ஆசையுள்ளவனிடத்தில் (முக்தனுடையலக்ஷணமானது) இருக்கிறதுமில்லை. இந்தமுக்தலக்ஷணமானது உன்னால் ரக்ஷிக்கப்படவுமில்லை. முக்தனுக்கு [2]மறைவானவ்யவஹாரமில்லை என்னுடைய சரீரத்தை உன்னுடைய இச்சையினாலே அடைந்தாய். அப்படி என்னுடைய [3]பக்ஷத்தை அடைந்ததால் உனக்குண்டானதோஷத்தைக் கேள். நீ என்னகாரணத்தினால் என்னுடையராஜ்யத்திலும் பட்டணத்திலும் பிரவேசித்தாய்? யாருடையஸம்பந்தத்தால் நீ என்னு

---

1 தாரித்ரியத்தாலுண்டானதுக்கம்குறைதல்.

2 'பிறனை ரக்ஷிக்கிறசெயலும் வேண்டுவதில்லை' என்றும் கொள்ளலாம்.

3 சரீரத்தை.

டையமனத்தில் புகுந்தாய்? நீ வர்ணங்களுள் சிறந்த ப்ராம்மணஸ்திரீயாயிருக்கிறாய். நானோ க்ஷத்ரியன். நம்மிருவருக்கும் ஒரு சேர்க்கையுமில்லை. நீ வர்ணங்களுடைய [1]ஸங்கரத்தைச் செய்யாதே. நீ மோக்ஷதர்மமுள்ளவளாயிருக்கிறாய். நான் கிருகஸ்தாஶ்ரமத்திலிருக்கிறேன். ஆஶ்ரமஸங்கரமான இதுவும் உனக்கு இரண்டாவது தோஷம். நீ ஸமானகோத்ரமுடையவளோ வேறுகோத்ரமுடையவளோவென்று நான் அறியவில்லை. நீயும் என்னை அறியவில்லை. (ஒருபோது) ஸமான கோத்திரமுடைய என்னை அடைந்தவளானால் உனக்கு மூன்றாவதான கோத்திரஸங்கரம் ஏற்படுகிறது. தவிரவும், உன்னுடையபதியானவர் ஜீவித்திருக்கிறாரோ; அல்லது எங்கேயாவது போயிருக்கிறாரோ பிறனுடைய மனைவி சேரக்கூடாதவளென்றிருப்பதால் நான்காவதானதர்மஸங்கரம் ஏற்படுகின்றது. அப்படிப்பட்ட நீ காரியத்தை அபேக்ஷித்து இந்தக் கெட்டகாரியங்களைச் செய்கிறாயா? அல்லது, அறியாமையினாலா? அல்லது, பிராந்தியினாலா? அல்லது, இப்பொழுது ஏதாவது உன்னுடையதோஷத்தினால ஸ்வதந்திரையாயிருக்கிறாயா? அப்படியானால், உனக்குஇருக்கிற சிறிது சாஸ்திரஞானமும் முழுதும் பயனற்றதாகிவிட்டது. உன் சித்தத்தை என்சித்தத்துடன் சேர்த்ததென்பது மூன்றாவதுதோஷம். இது துஷ்டையென்பதற்கு அடையாளமாக உன்னால் வெளியிடப்பட்டதென்று தெரிகிறது. ஜயத்தை விரும்புகிறவளான நீ என்னைமாத்திரம் ஜயிக்கவிரும்பவில்லை. என்னுடைய இந்தஸபையை அனைத்தையும் ஜயிக்கவிரும்புகிறாய். அப்படியே, பூஜ்யர்களையும் ஜயிக்கவிரும்புகிறாய். ஆகையினாலேதான், நீ என்பக்ஷத்தைக்கெடுப்பதற்கும் உன்பக்ஷத்தை மேன்மைப்படுத்துவதற்கும் (உன்னுடைய) பார்வையை ஒவ்வொருவரிடத்திலும் செலுத்துகிறாய். அப்படிப்பட்ட நீ பொறாமையாலும் யோகஸித்தியின் மோகத்தாலும் மயங்கி மறுபடியும் விஷத்தையும் அமிருதத்தையும் சேர்ப்பதுபோல (என் புத்தியுடன் உன்புத்தியைச்) சேர்க்கிறாய். இவ்வுலகில், (பரஸ்பரம்) ஆசையுள்ள ஸ்திரீபுருஷர்களுடைய சேர்க்கையானது அமிருதத்திற்தொப்பாகும். 'தன்னைவிரும்புகிற புருஷனைகப்படவில்லை' என்கிற அந்ததோஷமும், விஷத்திற்கொப்பாகும். (ஸ்வதர்மத்தை) [2]விடாதே. நன்றாக ஆராய்ந்துபார். [3]உனக்குரிய (யதி) சாஸ்தி

1 கலப்பு.
2 'மாத்யாக்ஷீ:' என்பது மூலம்; 'என்னைவிட்டுவிடு' என்றும் கொள்ள[லாம்.
3 யதிகளுக்குரிய உன்னுடைய சாஸ்திரத்தை.

ரத்தைக் காப்பாற்று. '(இவன்) முக்தனோ? ' அல்லனோ?' என்று என்னை அறியவேண்டுமென்னும் விருப்பத்தை நிறைவேற்றினாய். உன்னுடைய மறைவான செய்கைகளை எல்லாம் நீ என்னிடம் மறைக்கக் கூடியவளல்லை. அப்படிப்பட்ட நீ உன்காரியத்திற்காகவாவது வேறு அரசனுடைய கார்யத்திற்காகவாவது [1]வேஷம்மாறிக்கொண்டு என்னிடம் உண்மையை மறைக்கத்தக்கவளல்லை. அரசனைக் கள்ளத்தனமாக அணுகக்கூடாது. பிராம்மணனை எவ்விதத்திலும் அப்படி அடையக்கூடாது. பெண்களுக்குரிய குணங்களையுடைய மனைவிகளையும் கள்ளத்தால் அடையக்கூடாது. இவர்களைக் கபடமாக அணுகுகிறவர்கள் நாசமடைவார்கள். அரசர்களுக்கு ஐச்வரியம் பலம். பிராம்மணர்களுக்கு வேதம் பலம். பெண்டிர்களுக்கு அழகும் யௌவனமும் கற்பும் மிகச்சிறந்தபலம். ஆகையால், தன்னுடையக்ஷேமத்தைவிரும்புகிற மனிதன் இந்தமூன்றையுமே பலமாகக்கொண்ட இவர்களை நேர்வழியால் அடையவேண்டும். கோணலானவழியானது கெடுதலுக்குக்காரணமாகும். (ஆகையால்,) நீ உன்ஜாதி, வித்தை, ஆசாரம், அபிப்பிராயம், ஸ்வபாவம், வரவின்நோக்கம் இவ்வளவையும் உள்ளபடி சொல்லவேண்டும்' என்றுகேட்டார். இவ்விதம் ஸுகமில்லாதவைகளும் யோக்யமில்லாதவைகளும் பொருந்தாதவைகளுமான வார்த்தைகளைக்கூறி அரசர் விலக்கவும் ஸுலபை சலிக்கவில்லை. அரசர்சொல்லிமுடித்தபிறகு, அழகானரூபமுடையஸுலபை அவரை நோக்கித் தன் சரீரத்தைக்காட்டிலும் அழகான வார்த்தையைச் சொல்லத்தொடங்கினாள்.

'ஓ! அரசனே! சொல்லின்குற்றம் ஒன்பதும் புத்தியின்குற்றம் ஒன்பதுமில்லாததும் உசிதமான அர்த்தத்தையுடையதும் பதினெட்டுக்குணங்களுள்ளதும் ஸௌக்ஷ்மம், ஸாங்கியம், கிரமம், நிர்ணயம், பிரயோஜனம் இவ்வைந்துவிஷயங்களுள்ளதுமான சொற்றொடர் வாக்கியமென்று சொல்லப்படுகிறது. 'பதத்தின்பொருள், பதம், வாக்கியம் இவைகளைக் கொண்டு [2]பிரவிருத்திக்கும்படிசெய்யப்பட்ட ஸௌக்ஷ்மத்தன்மைமுதலிய இந்த விஷயங்களின் லக்ஷணத்தைக்கேள். வெவ்வேறானவிஷயங்களில் ஞானமானது வெவ்வேறாகப்பிரவிருத்திக்க அவைகளில் புத்தியைப்புகுவிப்பது ஸௌக்ஷ்மத்தன்மையாகும். ஓர் அர்த்தத்தைக்கருதிக் குணங்களையும் தோஷங்களையும் அளவிட்டுப் பிரித்தறிவது ஸாங்கியமாகும். 'இது முன் சொல்லத்தக்கது. இது பின்சொல்லத்தக்கது' என்றுபொருள்தோன்

1 வேறுபாடம். 2 பரவும்படிசெய்யப்பட்ட.

றச்சொல்லப்பட்ட வாக்கியம் கிரமமுள்ளதென்று வாக்கியலக்ஷணம் தெரிந்தவர்கள் சொல்லுகிறார்கள். தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் இவைகளில் ஒன்றைபபிரதிஜ்ஞைசெய்து வாக்யத்தின் முடிவில், 'இதுதான அது' என்று சொல்லப்பட்டது நிர்ணயமாகும். ஓ! அரசனே! இச்சையாலுண்டாகிற துக்கத்திலும் த்வேஷத்தாலுண்டாகிறதுக்கத்திலும் (முறையே இதை அவசியம் செய்வேனென்கிற) ப்ரவிருத்தியும் (இதை அவசியம் விலக்குவேனென்கிற) நிவ்ருத்தியும் பிரயோஜனமாகும். ஓ! அரசனே! ஓமே அர்த்தத்தில இப்படிப்பட்ட ஸௌக்ஷ்மத்தன்மை முதலானவைகள் சேர்ந்திருப்பதே வாக்கியம் என்று நான் சொல்வதைக்கேள். தொடர்ந்த அர்த்தங்களையுடையதும் அநேக அர்த்தமில்லாததும் யுக்தியுள்ளதும் சுருக்கமுள்ளதும் [1]பொருத்தமுள்ளதும் ஸந்தேகமில்லாததும் சிறந்த பொருளுள்ளதுமான வாக்யத்தைச் சொல்லபபோகிறேன். கடினமான அக்ஷரங்களில்லாததும் (அர்த்தத்தைத் தெரிவிப்பதில்) வெறுப்பைத் தரும் பதங்களில்லாததும் பொய்யில்லாததும் தர்மார்த்தகாமங்களுக்கு விரோதமில்லாததும் (வியாகரண சாஸ்திரப்படி) ஸம்ஸ்காரமில்லையென்பதில்லாததும் வாக்கியக்குறைவில்லாததும் பதக்குறைவில்லாததும் முறைத்தவறாகச் சொல்லப்படாததும் [2]லக்ஷணையில்லாததும் பயனற்றதாகாததும் யுக்தியில்லாததாகாததுமான வாக்கியத்தைச சொல்லப்போகிறேன். காமத்தினாலும் குரோதத்தினாலும் பயத்தினாலும் லோபத்தினாலும் ஏழைத்தன்மையாலும் அயோக்யதையாலும் லஜ்ஜையாலும் தயையினாலும் கர்வத்தினாலும் ஒருவிதத்திலும் சொல்லமாட்டேன். ஓ! அரசனே! சொல்லவிரும்புங்கால் சொல்லுகிறவனும் கேட்கிறவனும் வாக்கியமும் முழுதும் ஒத்திருந்தால் அந்த அர்த்தம் பிரகாசிக்கும். வார்த்தை சொல்லுகிறவிஷயத்தில் சொலலுகிறவன் எப்பொழுது கேட்கிறவனை அவமதிக்கிறானே அபபொழுது அந்தவார்த்தை தனக்குமாத்திரம் விளங்குவதேயன்றி (அது எவ்வளவுசிறந்ததானாலும்) பிறரால் ஏற்றுக்கொள்ளபபடுவதில்லை. தவிரவும், தன் விஷயத்தைவிட்டுப் பிறர் விஷயத்தைச சொல்லும் மனிதனிடம் சங்கையுண்டாகிறது. ஆகையால், அந்த வாக்கியமும் தோஷமுடையது. ஓ! அரசனே! கேட்கிறவனும் சொல்லுகிறவனுமான இருவருக்கும் விரோதமில்லாத அர்த்தத்தைச் சொல்லுகிறவனே சொல்லுகிறவன். மற்ற

1 'ஸௌக்ஷ்மம் முதலிய எட்டுக்குணங்களையுடையது' என்பது பழைய வுரை; 'கடுஞ்சொற்களில்லாதது' என்றும் கொள்ளலாம்.

2 பரம்பரையாக அர்த்தத்தைத் தெரிவிக்கும் சப்த விருத்தி.

வன் சொல்லுகிறவனல்லன். ஓ! அரசனே!' ஆகையால், அர்த்தமுள்ளதும் வாக்கியலக்ஷணம் நிரம்பியதுமான இந்தவாக்கியத்தை மனத்தைவெளியில்விடாமலும் மனத்தை ஒருவழிப்படுத்தியுமிருந்து கேட்கவேண்டும். ஓ! அரசனே! 'நீ யார்? யாரைச்சேர்ந்தவள்? எங்கிருந்து வருகிறாய்?' என்று என்னை நீ கேட்டாய். அதற்கு விடையான இந்தவார்த்தையை ஒரேமனத்துடன் கேள். அரசனே! அரக்கும் கட்டையும் புழுதிகளும் ஜலத்திவலைகளும் நன்குசேர்ந்திருப்பதுபோன்றது இவ்வுலகில் பிராணிகளின் இருப்பு. சப்தம், ஸ்பரிசம், ரஸம், ரூபம், கந்தம், ஐந்து இந்திரியங்கள் ஆகிய வெவ்வேறான இந்தப்பத்தும் அரக்கும்கட்டையும்போல ஒரு சரீரத்தில் பொருந்தியிருக்கின்றன. இவைகளைக்குறித்து, 'நீ யார்?' என்று கேட்பவரில்லை என்பது உறுதி. அப்படிப்பட்ட தோஷமிருத்தலால இவைகளுள் ஒவ்வொன்றும் தன்னையும் அறிகிறதில்லை; மற்றவற்றையும் அறிகிறதில்லை. நேத்திரம் தன்னைப்பார்க்கிறதில்லை. ச்ரோத்திரம் தன்னை அறிகிறதில்லை. ஜலமும் புழுதியும் சேர்ந்திருந்தும் ஒன்றையொன்று அறியாததுபோல இவைகளும் சேர்ந்திருந்தும் அறிகிறதில்லை. வெளியிலுள்ள மற்றக்குணங்களையே அபேக்ஷிக்கின்றன. அவைகளையும் என்னிடம் கேள். ரூபம் நேத்திரம் பிரகாசம் மூன்றும் பார்க்கும் விஷயத்தில காரணங்கள். இதில்போலவே மற்றஞானஞேயங்களிலும் காரணங்களிருக்கின்றன. ஒருமனிதன் நன்மைதீமைகளை ஆராய்ந்துபார்க்கிறதற்குரியமனம் இந்தஞானஞேயங்களுக்கிடையிலிருக்கிறது. முதலில் சந்தேகிக்கப்பட்ட விஷயங்களில உறுதிசெய்வதற்குரிய புத்தி என்கிற பன்னிரண்டாவதான வேறுகுணமும் கொள்ளப்படுகிறது. பன்னிரண்டாவதான அதில் ஸத்யமென்கிற வேறுகுணமிருக்கிறது. அதனால், அவன் மஹாஸத்வமுள்ளவனென்றும் அற்பஸத்வமுள்ளவனென்றும் ஊகிக்கப்படுகிறான். 'இவன் என்னைச்சேர்ந்தவன்; இவன் என்னைச்சேராதவன்' என்று அபிமானிக்கிற [1]அகங்காரமென்னும் பதினான்காவதுகுணம் வேறு இருக்கிறது. ஓ! அரசனே! அந்த அகங்காரத்தில் பதினைந்தாவதான (பூர்வவாஸனை என்கிற) வேறுகுணமானது கருதப்பட்டிருக்கிறது. இவ்வுலகில் அது தனித்தனியான (ரூபமுதலான) [2]கூறுகளின் ஸமூகத்தினுடைய சேர்க்கையாகச் சொல்லப்படுகிறது. அதில் [3]ஸங்காதமென்னும் பதினாறாவது வேறொருகுணமானது இருப்பதாகக் கருதப்படுகிறது.

---

1 வேறு பாடம். 2 வேறு பாடம்.

3 ஸத்வமுதலானவற்றின் ஸமுதாயம் அவித்தை.

அதை [1]ஜாதிவ்யக்திஎன்னும்இரண்டுகுணங்களும் ஆச்ரயித்திருக்கின்றன. ஸுகதுக்கங்கள் ஜனனமரணங்கள் லாபாலாபங்கள் பிரியாப்ரியங்கள் என்பவை [2]த்வந்த்வயோகமென்னும்பத்தொன்பதாவதான் குணமென்று நினைக்கப்படுகின்றன. பத்தொன்பதிற்குமேல் காலமென்றுவேறொருகுணம் உண்டு. இவ்விதம் பிராணிகளுடைய உற்பத்திநாசங்கள் இந்தஇருபத்திநான்குமென்று அறியக்கடவாய். இந்தக்கூட்டமான இருபது, மகாபூதங்கள்ஐந்து, இருப்பது இல்லாதது இவைகளுடைய ஸம்பந்தமுடையவைகளும் பிரகாசரூபங்களுமான (யதார்த்தஞானம், பிரமமென்கிற) வேறுஇரண்டுகுணங்கள் ஆக இவ்விதம் குணங்கள் இருபத்தேழு. புண்ணியபாபங்கள், வீரியம், பலமென்று இவைகள்வேறுமூன்றுகுணங்கள இவ்விதம் முப்பதென்று கணக்கிடப்பட்ட கலைகள் பூர்ணமாகநிரம்பியது சரீரமென்று நினைக்கப்பட்டது. இந்தக்கலைகளுக்கு அவ்யக்தமானது காரணமென்று ஒருவன் கருதுகிறான். ஸ்தூலபுத்தியான மற்றொருவன் [3]வியக்தமென்கிற ஸ்பஷ்டமானவஸ்துவைக் காரணமாகப் பார்க்கிறான். ஆத்மவிசாரஞ்செய்கிறவர்கள் அவ்யக்தமோ வ்யக்தமோ இரண்டோ அல்லது [4]நான்கோ எல்லாப்பிராணிகளுக்கும்காரணமென்று நினைக்கிறார்கள். ஸ்பஷ்டமில்லாதஇந்தப்பிரகிருதி கலைகளால ஸ்பஷ்டமாயிற்று. ராஜச்ரேஷ்டனே! நானும் நீயும் மற்றசரீரிகளும் அவைகளிலிருந்து வந்தோம். வீரியபிந்துவைக்கர்ப்பத்திலவைத்தல் முதலான அவஸ்தைகள் வீரியம் உதிரமிவைகளிலிருந்து உண்டாகின்றன. அவைகளுடைய சேர்க்கையினால் கலலமென்பது உண்டாகிறது. கலலத்திலிருந்து புத்புதமென்பது உண்டாகிறது. புத்புதத்திலிருந்தும் பேசி (என்கிறமாம்ஸபிண்டமானது) உண்டாகிறது பேசியிலிருந்தும் அவயவங்கள் உண்டாகின்றன அவயவத்திலிருந்தும் நகங்களும் ரோமங்களும் உண்டாகின்றன ஓ! மிதிலாதிபனே! ஒன்பதாவதுமாதம்நிறைந்தபின் பிறந்ததானஜந்துவுக்கு அடையாளத்தைக்கொண்டு ஸ்திரீயென்றோ புருஷனென்றோ பெயரும் ரூபமும் உண்டாகின்றன. பிறந்தவுடன், (சிசுவானது) சிவந்தநகங்களும் விரல்களுமுடையதாகக் காணப்படுகிறது. பிறகு, குமாரனுக்குரியரூபத்தை அடைந்ததும் அதைவிட்டு வேறுரூபமுண்டயவனாகி யௌவனத்தையும் யௌவனம்

---

1 'ஆக்ருதி' என்பது மூலம்; 'ஜாதிக்குஆதாரமான சரீரம்' என்பது பொருள்.
2 இரட்டைகளின் சேர்க்கை.
3 'பரமாணு' என்பது பழையவுரை.
4 அவ்யக்தம், வ்யக்தம், ஜீவன், ஈச்வரன்.

விட்டுக் கிழத்தன்மையையும் அடைகிருன். இந்தமுறையாக முன் முன்உண்டானரூபம் காணப்படுகிறதில்லை. எல்லாப்பிராணிகளிடத்திலும் க்ஷணந்தோறும் தனித்தனிபயனுள்ளகலைகளுடையமாறுதலானது இருக்கிறது. ஸூக்ஷ்மமாயிருப்பதால் அறியப்படுவதில்லை. அரசனே! ஒவ்வொருநிலைமையிலும் இந்தக்கலைகளுடைய உற்பத்தியும் நாசமும் தீபஜ்வாலையினுடையகதிபோலக் காணப்படுகிறதில்லை. இவ்விதமான தன்மையையுடையஎல்லாஉலகமும் நல்ல குதிரைபோல எப்பொழுதும் ஓடிக்கொண்டிருக்கையில் 'யார் எங்கிருந்துவந்தவன்? எங்கிருந்துவரவில்லை? இது யாருடையது? இது யாருடையதில்லை? இது எங்கிருந்துவந்தது? இது எங்கிருந்து வரவில்லை? இகத்தில் பிராணிகளுக்குத் தம்மவயவங்களோடுதான் என்ன ஸம்பந்தமிருக்கிறது? ஸூர்யன், ஸூர்யகாந்தமணி, கொடி இவைகளிலிருந்து அக்கினிஉண்டாகிறதுபோல இவ்வுலகத்தில் கலைகளுடையகூட்டத்திலிருந்தும் பிராணிகள் உண்டாகின்றன நீ உன்னுடையசரீரத்தில மனத்தினுல் ஆத்மாவைப பார்ப்பதுபோலவே பிறனிடத்தில் நீயே ஆத்மாவை ஏன் பார்க்கவில்லை உன்னிடத்திலும் பிறனிடத்திலும் ஸமமானதன்மையை நிச்சயிக்கிருயானுல் அப்பொழுது என்னை, 'நீ யார்? யாரைசசேர்ந்தவள்?' என்று ஏன் கேட்கிருய்? ஓ! மிதிலாதிப! இது எனக்கு வேண்டும்; இது வேண்டாம்' என்கிற விருப்புவெறுப்புக்களான துவந்துவங்களால் விடப்பட்டவனுக்கு, 'நீ யார்? யாரைசசேர்ந்தவள்? எங்கிருந்துவருகிருய்?' என்கிறகேள்விகளால் என்னபயன்? சத்துருவினிடத்திலும் மித்திரனிடத்திலும் உதாஸீனனிடத்திலும் ஜயத்திலும் ஸந்தியிலும் கலகத்திலும் (அதற்குஉசிதமான) செய்கையுள்ள பூபதியினிடத்தில் முக்தனுக்குரியலக்ஷணம் ஏது? இவ்வுலகத்தில கர்மங்களில் தர்மமும், அர்த்தமும், காமமும், (தர்மமும் அர்த்தமும், தர்மமும் காமமும், அர்த்தமும் காமமும், தர்மம் அர்த்தம் காமம் மூன்றும்) ஆக ஏழுவிதமாகவைக்கப்பட்ட தர்மார்த்தகாமங்களை அறியாமல் அவைகளில் பற்றுள்ளவனுயிருப்பவனிடத்தில் முக்தனுடையலக்ஷணம் ஏது? எவனுடையபார்வை பிரியனிடத்திலும் அப்ரியனிடத்திலும் பலமில்லாதவனிடத்திலும் பலவானிடததிலும் ஸமமாயில்லையோ அவனிடத்தில் முக்தனுக்குரியலக்ஷணம் ஏது? அரசனே! ஆகையால், யோகமில்லாதஉனக்கு மோக்ஷத்தில் அபிமானம் ஏற்படுவது பத்தியமில்லாதவனுக்கு மருந்தைவிலக்குவதுபோல நண்பர்களால் தடுக்கத்தக்கது. ஓ! சத்துருக்களைசசிக்ஷிப்பவனே! (ஸ்திரீ

(முதலான) அந்தஅந்த ஸங்கத்திற்குரிய ஸ்தானங்களை நன்ருக ஆராய்ந்து ஆத்மாவினிடத்திலே நீயே பார் இதைத்தவிர முக்த னுக்குரியலக்ஷணம் வேறுயாது? மோக்ஷத்தைப்பற்றித்து ஸூக்ஷ்மங் களும் சயனம், மற்றஸுகானுபவங்கள், போஜனம், வஸ்திரமென்கிற நான்கு அங்கங்களிலுண்டானவைகளுமான வேறுஇந்தச் [1]ஸிலஸங்க ஸ்தானங்களைச் சொல்லுகிறேன் கேள். இந்தப்பூமிமுழுமையும் ஓரேகுடையின்கீழிருந்துஆளுகிறஅரசன் ஒரேபட்டணத்தில் வஸிக் கிறுன்; அந்தப்பட்டணத்திலும் ஓரேகிருஹத்தில் வஸிக்கிறுன்; அந்தக்கிருகத்திலும் இரவில ஒரேசயனத்தில படுத்துக்கொள்ளு கிறுன். அதிலும் ஸ்திரீயுடன்சயனித்தால படுக்கையின்பாதிதான் அவனைச்சேர்ந்தது. ஆகையால, இந்தஸம்பந்தத்திலுலே அரசன் போகஸாதனங்களிலும் போஜனம் வஸ்திரமுதலிய அளவற்றகுணங் களிலும் அற்பபயனுள்ளவனுகிறுன். சிக்ஷை ரக்ஷணைவிஷயத்திலும் அரசன் எப்பொழுதும் தன்வசமற்றவன்; அவ்விஷயமிருந்தும் மிகவும் அற்பத்திலும் பற்றுதல்வைக்கிறுன். ஸமாதானம் யுத்தம் இவைகளின் ஸம்பந்தத்தில் அவனுக்கு ஸ்வாதந்திரியம் ஏது? ஸ்திரீகளிடம் போகம்லீலைஇவைகளிலும் இவன் எப்பொழுதும் ஸ்வதந்திரமில்லாத வன். மந்திரிகளுடன் சேர்ந்து ஆலோசிப்பதில் இவனுக்கு ஸ்வதந் திரம் ஏது? இதரர்களை ஆஜ்ஞைசெய்கிறதிலமாத்திரம் இவனுக்கு ஸ்வதந்திரம் இருக்கிறது அந்தஅந்த [2]க்ஷணத்திலும் அவசனு யிருந்து கார்யங்களைச செய்கிறுன் நித்திரைசெய்யவிருப்பமுள்ள வனுயிருந்தும் தன்னிடம் காரியநிமித்தம் ஜனம்வருதலால் நித்திரை செய்ய அவகாசம்அடைவதில்லை சயனத்தில்தூங்கினுலும் தன் ஏவலால் அவசனுக எழுப்பப்படுகிறுன். 'ஸ்நானம்செய். பூசிக் கொள். பானம்செய். போஜனம்செய் ஹோமம்செய். யாகம் செய்' என்றும், 'சொல்லு, கேளு' என்றும் பிறர்சொல்ல அவச னுகக் கார்யங்களைச் செய்கிறுன் இப்படியே ஜனங்கள் வந்துவந்து எப்பொழுதும் யாசிக்கிறுர்கள். தனத்தைக்காப்பாற்றுகிற அரசனும் அந்த ஜனக்கூட்டத்திற்குத் தானம்செய்ய உத்ஸாஹப்படுகிறதில்லை. கொடுத்தால் இவனுடைய பொக்கரமும் நசித்துவிடும். கொடுப்ப வனை இவனுக்கு (சேர்ந்தவர்களுடைய) விரோதமும் ஏற்படும். க்ஷணத்திற்குள் இவனுக்கு வெறுப்பையுண்டுபண்ணுகிற தோஷங் களும் நேரிடுகின்றன.) ஒரே இடத்திலிருக்கிறவர்களானுலும் பிராஜ் ஞர்களையும் சூரர்களையும் வைத்தியர்களையும் சங்கிக்கிறுன். தன்

---

1 வேறுபாடம். 2 வேறுபாடம்.

வேலைக்காரர்களிடத்திலும் பயத்துக்குக்காரணமில்லாமலே பயப்படு கிறான். அரசனே! அப்படியிருப்பதால் முன் என்னால்சொல்லப் பட்டஇவர்கள் தோஷமுள்ளவர்களாகிறார்கள். அப்படியானால் இவ னுக்கு அவர்களிடமிருந்து எவ்வளவுபயமுண்டாகுமென்பதைப் பார். எவனும் தன்தன்கிருகத்தில் அரசனே. ஜனக! தம்தம் கிருகத்தில் நிக்ரஹாநுக்ரஹங்களைசெய்கிற கிருகஸ்தனைவரும் அரசர் களுக்கு நிகரே. புத்திரர்கள், பத்னிகள், சரீரம், பொக்கசம், மித் ரர்கள், ஸாதனங்கள்முதலியஇவைகள் அந்தஅந்தக்காரணங்களால் அரசனுக்கும் மற்றவர்களுக்கும் பொதுவாயிருக்கின்றன.' 'தேசம் கெட்டுவிட்டது. பட்டணம் எரிந்துவிட்டது. பட்டத்துயானை இறந்துவிட்டது' என்று உலகங்களுக்குப்பொதுவான இவைகளில், 'எனது' என்கிற அபிமானத்தால தாபத்தை அடைகிறான். இச்சை, துவேஷம், [1]பயமிவைகளாலுண்டான மனோதுக்கங்களாலே விடு படாதவனும் சிரோரோகமுதலிய ரோகங்களாலும் தீங்கைவிளைவிக் கிற அந்தஅந்தத்வந்துவங்களாலும் கெடுக்கப்பட்டவனும் எங்கும் சங்கையுடையவனுமாயிருந்து அநேகர்களால் விரும்பப்பட்ட ராஜ் யத்தை ராத்திரிகள் முழுதும் கணக்கிட்டுக்கொண்டு ஆளுகிறான். ஆகையால், அற்பஸுகமுடையதும் மிகுந்த துக்கமுடையதும் சிறிதும்ஸாரமில்லாததும் வைக்கோலில்பற்றிய தீக்கொழுப்பானதும் நுரைக்கும் குமிழிக்கும் நிகரானதுமான ராஜ்யத்தை எவன் அடை வான்? அடைந்தும் (எவன்) சாந்தியை அடைவான்? ஓ! அரசனே! இந்தப்பட்டணத்தையும் ராஜ்யத்தையும் பொக்கசத்தையும் சேனை யையும் மந்திரிகளையும் உன்னுடையவையென்று நினைக்கிறாயே. இவைகள் யாருடையவைகளல்ல? மித்திரர்கள், மந்திரிகள், [2]பட்ட ணம், தேசம், ஸைன்யம், பொக்கசம், அரசன்எனஏழுஅங்கங்களு டையஇந்தக்கூட்டமானது ராஜ்யமென்று சொல்லப்படுகிறது. ஏழு அங்கங்களையுமுடைய இந்தராஜ்யம், ஒன்றோடொன்று கயிற்றினால் சேர்ந்ததாக நிற்கின்றமுக்காலிபோல ஒன்றுக்கொன்று ஸகாயமு டையதாயிருக்க, குணத்தினால யார் யாரைக்காட்டிலும் அதிகம்? அந்தஅந்தக்காலங்களில் அந்த அந்த அங்கம் அதிகமாகிறது. ஒன்றி னால் ஒரு காரியம் நிறைவேற்றப்படுகிறபோது அது பிரதானமாகிறது. ஏழு அங்கங்களுமுள்ள ஸங்காதமும் (அபிவிருத்தி, க்ஷயம்,இரண்டுமில்

---

**1 வேறுபாடம். 2 'புரம்' என்பது மூலம்: 'அதற்கு [illegible]' என்பது பொருந்தும்.**

லாமையென்கிற) வேறு மூன்றுசேர்ந்து [1] பத்தும்அடங்கியஇந்தக் கூட்டமானது ராஜ்யத்தை ஆளுகிறது. மிகுந்தஉத்ஸாஹத்துடன் ராஜதர்மத்தில் பற்றுள்ளவனுயிருக்கிறஅரசன் பத்துப்பாகத்தாலும் ஸந்தோஷிப்பான். அவனைத்தவிர வேறானவன் குறைந்தபாகங்களால் ஸந்தோஷிப்பான். அரசனென்று தனியே ஒருவனில்லை. அரசனில்லாமல் ராஜ்யமில்லை. ராஜ்யமில்லாவிடில் தர்மமேது? தர்மமில்லாவிட்டால் பரலோகமேது? இவ்விடத்தில் அரசனுக்கும் ராஜ்யத்திற்கும் பரிசுத்தத்தைத்தருவதும் சிறந்ததும் பூமியைத் தக்ஷிணையாகவுடையதுமான அஸ்வமேதமென்கிற தர்மமுமில்லை. ஓ! மிதிலாதிபதியே! நான் அரசர்களுக்குத் துக்கத்தைவிளைவிக்கக்கூடிய செய்கைகளை நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் சொல்லத்திறமையுள்ளவள். எனக்கு என்சரீரத்தில் அபிமானமில்லை; பிறசரீரத்தில் அபிமானமேது? இப்படிப்பட்டவளும் யோகமுடையவளுமான என்னைநோக்கி நீ இவ்விதம் சொல்லத்தகாது. நீ (தியானமாகிற) உபாயம் [2]உபநிஷத்து (யமமுதலான) தியானுங்கங்கள் வஸித்தாந்தம் இவற்றுல்கூடிய மோக்ஷத்தைப பஞ்சசிகரிடமிருந்து முழுதும் கேட்டிருக்கிறாயன்றோ? அரசனே! ஸம்பந்தம்விட்டவனும் (காமமுதலான) பாசங்களைஜயித்தவனுமான உனக்குக், குடைமுதலானவிசேஷவஸ்துக்களில் மறுபடியும் அபிமானம் எதற்கு? [3]உன்னுடையசாஸ்திரவிசாரத்தை நான் விசாரமாக நினைக்கவில்லை. அல்லது, டம்பத்துக்காக ஸ்ரவணம்செய்திருக்கலாம். இல்லாவிட்டால், சாஸ்திரம்போன்ற வேறுசாஸ்திரத்தை ஸ்ரவணம்செய்திருக்கவேண்டும். நீ ஸ்ரவணம்செய்திருந்தும் ஸாதாரணமனிதனைப்போல விருப்புவெறுப்புக்களால்கட்டப்பட்டு இம்மைக்குரியஇந்தஞானங்களிலேயே பிரவ்ருத்திக்கிறாய். நீ எல்லாவிஷயத்திலும் பற்றில்லாதவனானால் நான் உன்னிடத்தில் புத்தியினால்பிரவேசித்ததில் உனக்கு என்ன அபகாரம்செய்ததாகும்? சூன்யமானவிடத்தில்வஸிப்பது யதிதர்மங்களுள் நியமமல்லவா? [4]சூன்யமான உன்னுடையஹ்ருதயத்தில் நான் வஸிப்பதினால் யாருக்கு என்னதீங்கு செய்யப்பட்டதாகும்? ஓ! மறுவற்றமன்னவ! கைகளாலும் புஜங்களாலும் பாதங்களாலும் தொடைகளாலும் மற்ற அவயவங்களாலும் நான்

---

1 தசவர்க்கம். 2 ஸ்ரவணமனனங்கள், அல்லது ரகஸ்யம்.

3 இதனால் அரசனால்சொல்லப்பட்ட ஞானகர்மங்களின் சேர்க்கை தூஷிக்கப்பட்டது.

4 குறிப்பால் இகழ்ந்தபடி.

உன்னைத்தொடவில்லை. பெரியகுலத்திற்பிறந்தவனும் லஜ்ஜையுள்ளவனும் தீர்க்காலோசனையுள்ளவனுமாயிருப்பவன் நல்லதானாலும் தீதானாலும் ரகஸ்யத்தில்செய்ததை ஸபையில் சொல்லலாகாது. இந்தப்பிராம்மணர்கள் உனக்குக் குருக்களும், குருக்களிலும்சிறந்தவர்களும் பூஜ்யர்களுமாயிருக்கின்றனர். நீயோ (சிக்ஷாரக்ஷணம்செய்வதால்) இவர்களுக்கும் குருவாயிருக்கிறாய். ஒருவருக்கொருவருடைய மேன்மை இவ்விதமிருக்கிறது. அதை இவ்விதம் நன்குஆராய்ந்து பார்த்துச் சொல்லக்கூடியதையும் சொல்லக்கூடாததையும் பரீக்ஷிக்கிறவனான உன்னால் ஸ்திரீபுருஷர்களுடையஇந்தசேர்க்கையானது ஸபையில் சொல்லத்தக்கதில்லை. ஓ! மிதிலைவேந்தனே! தாமரை இலையிலிருக்கிறதண்ணீர் அந்த இலையைப்பற்றாமலிருப்பதுபோல நான் உன்னைத்தொடாமலே உன்னிடத்தில் வஸிப்பேன். (அல்லது,) இப்பொழுது என்னுடையஸ்பரிசத்தை நீ அறிகிறாயானால் அந்தப் பஞ்சசிகபிக்ஷுவினால் உன்னுடையஞானமானது ஸம்ஸாரகாரணமற்றதாக எப்படிச் செய்யப்பட்டதாகும்? அப்படிப்பட்ட நீ கிருகஸ்தாச்ரமத்திலிருந்தும் தவறி அடைய அரிதான மோக்ஷத்தையும் அடையாமல் மோக்ஷவார்த்தையைப்பேசிக்கொண்டு இரண்டிற்கும் நடுவிலிருக்கிறாய். ஆத்மாவின்ஒன்றாயிருக்கும் தன்மையையும் சரீராதிகளின் பிரிவையுமுணர்ந்தமுக்தனுக்கு மற்றொருமுக்தனோடு ஆத்மாவுக்கும் பிரகிருதிக்குமுண்டாகிறசேர்க்கையில் வர்ணத்தின் கலப்பு உண்டாகிறதில்லை சரீரமும் ஆத்மாவும்ஒன்றாயிருப்பதால் தனித்தனியாக விஷயங்களைப்பார்க்கிறவனுக்கு வர்ணங்களும் ஆச்ரமங்களும் ஏற்பட்டன ஒன்று மற்றொன்றாகிறதில்லையென்று அறிந்தால ஒன்று மற்றொன்றிலிருக்கிறதில்லை. கையில்தாழியும் தாழியில் பாலும் பாலில்ஈயுமாக ஆதாராதேயஸம்பந்தத்தால் வேறாகஇருந்துகொண்டே ஆச்ரயித்திருக்கின்றன தாழியில் பாலின்தன்மையில்லை. பால் ஈயாகிறதில்லை இந்தபதார்த்தங்கள் தம்தன்மையை அடையுமேயன்றி மற்றொன்றின்தன்மையை அடைகிறதில்லை ஆச்ரமங்கள் வேறாயிருப்பதாலும் வர்ணங்கள் வேறாயிருப்பதாலும் ஒன்றுக்கொன்று தனித்தனியாயிருப்பதாலும் உனக்கு வர்ணத்தின்கலப்பு எப்படிவரும்? நான் ஜாதியினால் உனக்கு மேலானவர்ணமல்லேன்; வைச்யஜாதியுமல்லேன்; சூத்திரஜாதியுமல்லேன் அரசனே! உனக்குஸமானஜாதியும் சுத்தமானபிறப்புமுடையவளும் தோஷமில்லாதவளுமாயிருக்கிறேன். பிரதானரென்கிற ராஜரிஷியை நீ நன்றாகக் கேட்டிருப்பாய். அவருடைய குலத்திற்பிறந்தவளும் ஸுலபை

என்றபெயருடையவளாக (என்னைத்) தெரிந்துகொள். துரோண பர்வதமும் சதஸ்ருங்கபர்வதமும் [1]வக்ரத்வாரமென்கிற பர்வதமும் மஹேந்திரமும் என்னுடைய முன்னோர்களால் யாகங்களில் [2]அக்னி சயங்களாகச் செய்யப்பட்டன. அந்தக் குலத்தில் உண்டான நான் எனக்குச் சரியான கணவனில்லாமையால் மோக்ஷதர்மங்களில் கற்பிக்கப்பட்டுத் தனியே முனிவிரதத்தை அனுஷ்டிக்கிறேன். நான் வேறு வேஷம் தரிக்கவில்லை; பிறர்பொருளில் பற்றுள்ளவளுமில்லை; தர்மஸங்கரத்தைச் செய்யவுமில்லை. ஸ்வதர்மத்தில் உறுதியான விரதமுடையவளாயிருக்கிறேன். என்னுடைய பிரதிஜ்ஞையில் உறுதியில்லாமலில்லை. நான் ஆலோசியாமல் சொல்லுகிறவளல்லேன். ஜனங்களுக்கதிபதியே! இப்பொழுது நான் ஆலோசியாமல் உன்னிடம் வரவில்லை. உன்னுடைய புத்தி மோக்ஷபாவனையுடையதென்று கேள்வியுற்று க்ஷேமத்தைவிரும்பின நான் உன்னுடைய மோக்ஷத்தைப் பரீக்ஷித்துத் தெரிந்துகொள்ளும் விருப்பத்தால் இங்கு வந்தேன். தன் பக்ஷம்பிறர்பக்ஷங்களுள் ஒரு கூட்டத்தில் சேர்ந்துகொண்டு இதைச் சொல்லவில்லை. பற்றுக்களை அறுத்து அடக்கத்தைவிடாமலிருப்பவனே முக்தன். யதியானவன் பட்டணத்தில் சூன்யமான கிருகத்தில் ஒரு ராத்திரிவஸிப்பதுபோல உன்னுடைய இந்தச் சரீரத்தில் இந்த ஒருராத்திரி வஸிக்கப்போகிறேன். மிதிலாதிபனே! கௌரவத்தையளித்தலாலும் இன்சொல்சொல்லுதலாலும் அதிதிபூஜைசெய்தலாலும் பூஜிக்கப்பட்டவளான நான் நல்லகிருகத்தில் நித்திரைசெய்து ப்ரீதியடைந்து நாளைப்போய்விடுகிறேன்' என்று சொன்னாள். அந்த அரசர் இவ்விதம் யுக்தியுள்ளவைகளும் பயனுள்ளவைகளுமான வார்த்தைகளைக்கேட்டு இதற்குமேல் வேறொன்றையும் சொல்ல அறியவில்லை'' என்று சொன்னார்.

---

1 'சக்ரத்வாரம்' என்பது வேறுபாடம்.

2 மலைகளே கல்லுகளாயின என்பது.

## [1] முந்நூற்றிருபத்தாறுவது அத்யாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)

(ஆஸுரி அவ்யக்தமுதலியவற்றைச் சொல்லும்படி கபிலரைக் கேட்டது.)

யுதிஷ்டிரர், "ஓ! பரதஸ்ரேஷ்டரே! அவ்யக்தம் வ்யக்தம் தத்வம் இவைகளுடைய உறுதியையும் ஜனனமற்ற தேவருடைய கர்மாவையும் சொல்லவேண்டும்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார். "இந்த விஷயத்திலும் குருசிஷ்யர்களான கபிலருக்கும் ஆஸுரிக்கும் நடந்ததும் துக்கத்தை எல்லாம் நிவிருத்திக்கின்றதுமான ஸம்வாத்தைச் சொல்லுகின்றார்கள். ஆஸுரியானவர், 'ஓ! அளவற்ற அறிவுடைய பகவானே! நான் உம்மைப் பிரார்த்திக்கிறேன். நீர் எனக்கு அவ்யக்தம் வ்யக்தம் தத்வமிவைகளில் உறுதியான உமது புத்தியின் நிச்சயத்தைச் சொல்லவேண்டும் வியக்தமென்பது எது? அவ்யக்தமென்பது எது? அவ்யக்தமும் வ்யக்தமுமாயிருப்பது எது? தத்வங்கள் யாவை? தத்வங்களுடைய ஆதியும் நடுவும் எவை? அத்யாத்மம் அதிபூதம் அதிதெய்வமென்பவை யாவை? ஸ்ருஷ்டிப்பிரளயமென்பவை யாவை? ஸ்ருஷ்டிகள் எத்தனை? பூதம் எது? பவ்யம் எது? பவிஷ்யம் எது? ஞானம் எது? ஞாதா யார்? அறியப்பட்டது எது? ஜடம் எது? அறியப்படுகிறது எது? கணுக்கள் எத்தனை? பிரவாகங்கள் எத்தனை? கர்மஜன்மங்கள் எத்தனை? ஏகத்தன்மை எது? அநேகத்தன்மை எது? ஸஹவாஸம் எது? வஸிக்கும்ஸ்தானம் எது? வித்தை எது? அவித்தை எது?' என்று கேட்டனர்.

---

## முந்நூற்றிருபத்தேழாவது அத்யாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)

(கபிலர் அவ்யக்தமுதலியவற்றை ஆஸுரிக்குச் சொல்லியது.)

கபிலர், 'நீர், 'வ்யக்தமென்பது எது? அவ்யக்தமென்பது எது?' என்று கேட்டீரன்றோ? அதைச் சொல்லுகிறேன். அவ்யக்தமானது (கர்மேந்திரியங்களால்) கிரகிக்கமுடியாததும் (புத்தியினால்)

---

1 இதுமுதல் மூன்று அத்யாயங்கள் அதிகபாடம்.

விசாரிக்கமுடியாததும் (ஞானேந்திரியங்களால்) யதார்த்தமாக அறிய முடியாததுமாயிருக்கிறது. அவ்யக்தம் வ்யக்தமாகக் காணப்படுகிறது. ருதுக்கள் சரீரமில்லாதவைகளாயிருந்தும் அவைகளிலுண்டாகும்புஷ்பங்களாலும் பலங்களாலும் அவற்றின்ஸ்வரூபம் அறியப்படுகிறதுபோல வியக்தமான குணங்களால அவ்யக்தம் அறியப்படுகிறது. கீழ்த்திசையை அடைந்ததும் மேற்றிசையை அடைந்ததும் மேலேயுள்ளதும் கீழேயுள்ளதும் குறுக்கேயுள்ளதுமாக அறியக்கூடியதாயிருப்பதால் கிருதி, [1]வியக்தம், உத்தமம், ரஜஸ், ஸத்வம், தத், பிரதானம், தத்வம், அக்ஷரம், அஜரம் இவைமுதலானவை அவ்யக்தத்திற்குப் பெயர்கள் இப்படி (ஆசார்யர்) சொல்லுகிறார். அதாவது, 'அவ்யக்தமானது வித்தின்தன்மையுடையது ; [2]பெரிதான முதலைபோன்றது ; ஜடமானது அதிலிருந்து ஒருகுணமுடையது பிறந்தது. அது வ்யக்ததத்வமான ஈச்வரன்' என்பது. அப்படிப்பட்ட இந்த அவ்யக்தம் பெருகுதல், தரித்தல், கொடுத்தல்இவைகளை ஸ்வபாவமாகவுடையது பெருக்கால் அபபுக்களாகிறது. குணங்களைத்தரிப்பதிலும் உண்டுபண்ணுவதிலும் கொடுப்பதிலும் அது மூலகாரணம். அப்படிப்பட்ட இந்த அவ்யக்தம் இந்தக்காரியங்களைச்செய்வதில் மிகவும்ஜாக்ரதையுள்ளது வயக்தமென்பதைச் சொல்லுகிறேன். ஓ! ஆஸுரியே! முதலில் அவ்யக்தத்திலிருந்துண்டானதும் நியமன சக்தியுள்ளதும் அறியப்படாத குணங்களுள்ளதுமானது வ்யக்தம். இது புருஷனென்று பெயருடையது ; மகத்தென்றும் புத்தியென்றும் சொல்லப்பட்டது. [3]ஸததை, ஸ்மிருதி, [5]த்ருதி, [6]மேதை, [7]வியவஸாயம், [8]ஸமாதிப்ராப்தி முதலானபெயர்களை வயக்தசப்தத்திற்குப் பரியாயமாகச் சொல்லுகிறார்கள் இப்படி (ஆசார்யர்) சொல்லுகிறார். பெரியஸமாதியும் மேலான ஸ்ருஷ்டியும் (ஆத்ம) பிரகாசத்திற்காக மிக்கஉற்சாகமுமுண்டாயிருத்தலால் மேன்மேலும் (ஸ்ருஷ்டிப) பெருக்குக்களால் பெரிதாயிருப்பதினாலும் ஜடமாயிருப்பதினாலும் அவ்யக்தமாயும் அவ்யக்ததரமாயுமிருக்கிற அகங்காரத்தை ஆத்மாவுக்கு உண்டுபண்ணுகிற, வியக்தத்திலிருந்துமுண்டான ஸித்தி ஏழாவது வந்துவிட்டது. இப்படி ஆசார்யர் சொல்லுகிறார். வியக்தாவ்யக்ததர

---

1 வியக்தத்தில் கிளம்புகிறது.

2 முதலைபோல எல்லாவற்றையும் கிரகிக்கிறது.

3 இருத்தல், 4 நினைத்தல். 5 தரித்தல். 6 புத்தியில்வஹித்தல். 7 முயற்சி. 8 ஸாமாதிபெறுதல்.

மென்பதைச் சொல்லுகிறேன். [1] 'வியக்தாவ்யக்ததரமென்பது மூன்ருவது புருஷனென்று பெயர்கொண்டது அப்படிப்பட்ட இது விரிஞ்சன், வைரிஞ்சம் என்னும் இவ்விரண்டினுடைய ஒவ்வொன்றில் உற்பத்தி. (என்னவென்ருல்) விரிஞ்சம், அபிமினீயினிடமிருக்கிற அவிவேகம், பொருமை, காமம், குரோதம், லோபம், மதம், கர்வம், மமதை இவைகள் அஹங்காரசப்தத்திற்குப் பரியாயநாமங்கள்; இவ்விதம் (ஆசாரியர்) சொல்லுகிருர் ஈஸ்வரர், 'நான் கர்த்தா' என்றி அஹங்காரமடைந்து ஜகத்தை ஸ்ருஷ்டித்தார். அபிமானமாகிறகுணமுடைய இவரை மூன்ருவதுபுருஷராக அறிகிருர்கள் அஹங்காரத்திலிருந்து ஒரேஸமயத்தில் சப்தஸ்பரிசரூபரஸகந்தங்களை லக்ஷணங்களாகவுடைய ஐந்துமஹாபூதங்களை [2] உண்டுபண்ணிஞர். [3] அவைகள் தாம் அறியப்படுகின்றன இவ்விதம் (ஆசாரியர்) சொல்லுகிருர். பூதஸமூகத்தை அஹங்காரத்திலிருந்தும உண்டானதாக அறிகிறவித்வான் அபிமானத்தைக்கடந்து மஹத்தத்வத்தில் நிலைத்திருக்கிருன். பூதங்களிலும் அஹங்காரத்தைச் செலுத்துகிறவன் [4] குதிரையின் ஸ்வரூபம்போன்ற ஸ்வரூபமுடையவனுகச் சொல்லப்படுகிருன். திரும்பவும் அவன் விஷயத்தையறிவதில் ஹேதுவாவதால் மனமென்றுபெயருடையவனுகக் கருதப்படுகிருன். அகங்காரி விகாரனென்கிற அம்ஸ்வரூபத்தினிடமிருந்தும் வைகாரீ இந்திரியங்களுடன் ஒரேஸமயத்தில் உண்டுபண்ணுகிருன் சுரோத்திரம், கிராணம், நேத்திரம், ரஸனை, த்வக்கு என்கிற இவைகளைச் சப்தஸ்பரிசரூபரஸகந்தங்களை அறிகிறதினுல் ஐந்துஞானேந்திரியங்களாகச் சொல்லுகிருர்கள் இவ்விதம் (ஆசாரியர்கள்) சொல்லுகிருர்கள் வாக்கு, பாணி, பாதம், பாயு, குறி என்னும் ஐந்தும் இந்திரியங்கள். விசேஷம், ஆதித்யம், அசுவினிகள், நக்ஷத்திரங்கள என்கிற இவைகளை இந்திரியங்களுக்கு வேறுபெயராகச் சொல்லுகிருர்கள். இவ்விதம் (ஆசாரியர்) சொல்லுகிருர். அஹங்காரத்திலிருந்தும் பூதங்களை உண்டுபண்ணிப் புத்தி ஆத்மா இவைகளுக்கு வைகாரத்தன்மை வந்தது. அந்தவைகாரனிடமிருந்தும் விஷயாபிமானியான வைகாரியனென்கிற [5] 'ராஜன் உண்டா

1 'வ்யக்தாவ்யக்ததரம்' என்று பாடம் கொள்ளப்பட்டது.

2 'உத்பாதயாமாஸ' என்று பாடம் கொள்ளப்பட்டது.

3 எது அறியப்படுகிறதென்கிற வினவுக்கு விடை.

4 குதிரைபோல வேகமுடையவன்.

5 'ராஜ்ஞா' என்பது மூலம்! 'ராஜா' என்று பாடம் கொள்ளப்பட்டது; சரீரத்தையும் விஷயங்களையும் அபிமானித்தவனிதன்.

ஞன். அகங்காரத்தை விகாரத்திலிருப்பதாக அறிந்தமனிதன் சந்திர னும் நக்ஷத்திரங்களுமுள்ளளவும் பெரியஐஸ்வரியத்தை அடை கின்றான்.

---

## மூநூற்றிருபத்தெட்டாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

:o.

**(கபிலர் தத்வங்கள்முதலியவற்றை ஆஸுரிக்குச் சொல்லியது.)**

'தத்வங்கள் எவ்வளவு?' என்று நீ கேட்டாய் [1]வரிசையாகச் சொல்லப்பட்டவையே தத்துவங்கள். இவைகளை ஆசார்யர் சொல்லு கிறார். சொல்லப்பட்ட தத்வங்களை ஆசார்யனிடம் அறிந்து (தன்னைக் காட்டிலும் வேறாக) நிச்சயமாய் அறிகிறவன் அவைகளினுடைய சேர்க்கையிலிருந்தும் விடுபட்டுப் பாவத்தைப் பற்றமாட்டான். இப் பொழுது, 'தத்வங்களுடைய முதலிலும் இடையிலும் உண்டானவை எவை?' என்றுகேட்ட விஷயத்திலும் சொல்லுகிறேன். 'புத்தியை முதலிலுடையவைகளும் ஸ்தூலபூதங்களை முடிவிலுடையவைகளு மான இருபத்துமூன்றுதத்வங்கள் அறியவேண்டியவைகளாகின்றன' என்று என் ஆசாரியரால் சொல்லப்பட்டது ஆகையால், இந்த விஷயத்தில் விரிவாக நான் சொன்னேன். தத்வமானது அந்தப் பிர தானமே (தேவ)தத்தன், பிராம்மணன், க்ஷத்ரியன், வைசியன், சூத் திரன், சண்டாளன், புல்கஸன்முதலானவர்கள் உண்டாகும்பொழுது புத்திமுதல் ஸ்தூலபூதம்வரையிலுள்ள தத்வங்களும் (வேறாக) அறி யத்தக்கவைகளாகவும், மனனம்பண்ணத்தக்கவைகளாகவும் த்யானிக் கத்தக்கவைகளாகவும் சொல்லப்பட்டன இது ஆத்யமும் மத்யமு மாம். இந்தப்பிரதானத்திலிருந்தும் தத்வங்களுடைய உற்பத்தி உண் டாகிறது. இதில், தத்வங்கள் வியக்தமடைகின்றன. சில ஆசாரி யர்கள் சொல்வதாவது, 'நானென்கிறஸ்வரூபத்தையுடையதும் சரீ ரத்தோடுகூடினதுமான தத்வஸங்காதமானது மூவுலகங்களிலும் வ்யக்தமாயும் அவ்யக்தத்திலிருப்பதாயுமுள்ளது. இது தேவதத்த னென்கிறபெயருடையது' என்பது. போக்கம் [2]தசமபுருஷ (திருஷ்

---

1 'யதி' என்று கொள்ளப்பட்டது.

2 'ஆற்றில் பத்துமனிதர்கள் இறங்கிக்கரையேறி ஒவ்வொருவனும் தன்னைவிட்டுவிட்டு ஒன்பதுபோலே எண்ணிப்பார்த்து எல்லாருமவருத்தமுற அப்பொழுது அவ்விடம்வந்தஒருவனுடைய உபதேசத்தால் தன்னை அறிந்து கொண்டதுபோல் ஆசாரியனுபதேசத்தால் தன்னைத்தெரிந்துகொள்ளுகிறான்' என்பது; உபதேசத்தால் ஆத்மஸாக்ஷாத்காரம்வருவதற்கு இது திருஷ்டாந்தம்.

டாந்தத்தாலுண்டான) அறிவு இவைகளையுடையவர்களுக்கு இருபத்தைந்து தத்வங்களுள் அறியப்பட்ட (பிரதானபுருஷர்கள் விஷயத்தில் ஒன்றுக்கொன்று) சுத்தமாயும் மிகவும்விலகினதாயுமிருக்கிற பேத புத்தியுண்டாகிறதென்று ஆசார்யர் சொல்லுகிறார். இருபத்து நான்குதத்வங்களையறிந்தவன் அவ்யக்தத்தில் நிலைத்திருக்கிறான் இருபத்தைந்துதத்வங்களையுணர்ந்தவனும் அவ்யக்தத்திற்குமேலானவனாயிருக்கிறானென்று (ஆசார்யர்) சொல்லுகிறார்' என்றுசொன்னார்'' என்றார்.

---

## முந்நூற்றிருபத்தோன்பதாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

---:o:---

**(வ்யாஸர் உலகம் அநித்யமென்பதையும் ப்ரம்மஜ்ஞானத்தினால் மோக்ஷம் பெறுவது அவசியமென்பதையும் சுகருக்குச் சொல்லியது.)**

யுதிஷ்டிரர், "முன்காலத்தில் வ்யாஸருடையபுத்திரரான சுக முனிவர் எப்படி வைராக்யத்தையடைந்தார்? இதை நான் கேட்க விரும்புகிறேன். எனக்குக்கேட்பதில் மிக்கஆவலிருக்கிறது'' என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்

"பிதாவானவ்யாஸர், உலகத்துக்கொத்தநல்லொழுக்கத்துடன் ஸஞ்சரிக்கிறவரும் ஒன்றிலிருந்தும்பயமில்லாதவருமான புத்திரருக்குத் தமக்குரியவேதமுழுமையும் அத்யயனம்செய்வித்து உபதேசிக்கலானார். 'புத்திரா! தர்மத்தை அனுஷ்டிக்கக்கடவாய். இந்திரியங்களைஜயித்து மிகவும்கடுமையானபனிவெய்யில்களையும் பசிதாகங்களையும் காற்றையும் எப்பொழுதும் ஜயிக்கக்கடவாய். ஸத்யம், ருஜுவாயிருத்தல், குரோதமில்லாமை, அஸூயையில்லாமை, தமம், தவம், துன்பம்செய்யாமை, குரூரத்தனமில்லாமைஇவைகளை விதிப்படி காப்பாற்று. கபடத்தை யெல்லாம்விட்டுத் தர்மத்தைப்பற்றி உண்மைவழியில் நில். தேவதைகளையும் அதிதிகளையும் ஆராதித்துச் சேஷத்தால் பிராணயாத்திரையான ஆகாரத்தை அருந்து. குழந்தாய்! நீ நுரைக்குநிகரானதேஹத்தில் ஜீவன் பக்ஷிபோலிருக்கையிலும் இஷ்டர்களுடையஸகாயம் அநித்யமாயிருக்கையிலும் எப்படி [1] நித்திரைசெய்கிறாய்? (காமமுதலான) பகைகள் மிக்கஜாக்ரதை

1 மோக்ஷத்திற்கு யத்தனியாமலிருக்கிறாய் என்பது.

யுள்ளவைகளும் எப்பொழுதும் (தர்மகார்யத்தில்) முயற்சியுள்ள வைகளும் ஸமயத்தையடையவிரும்புகிறவைகளுமாயிருப்பதைச் சிறு வனை நீ அறியாமலிருக்கிறாய். நாள்கள் கணக்கிடப்படுகின்றன. அப்படியே, ஆயுள் க்ஷீணமாகிறது வாழ்நாள் (இவ்வளவென்று) எழுதப்படுகிறது. ஏன் எழுந்திருந்து [1]ஓடாமலிருக்கிறாய்? மிகவும் நாஸ்திகர்களாயுள்ளவர்கள் பரலோகத்திற்குரியகார்யங்களில் தூங்கு கிறவர்களாகி மாம்ஸம்உதிரமிவைகளை வளர்த்தற்குவேண்டிய இம் மைக்குரியகார்யங்களை விரும்புகிறார்கள் புத்திமோகத்தையடை ந்து தர்மத்தில்அஸூயையையடைகிறவர்களும் கெட்டமார்க்கத்தில் செல்லுகின்றவர்களுமானமனிதர்களை அனுஸரிக்கிறவனும் துன்பத் தையடைகிறான். மிக்கவலிமையுடையவர்களும் வேதத்தையேமுக் கியமாகக்கொண்டவர்களும் ஸந்தோஷத்தையடைந்தவர்களும் தர்மத் திலிருந்தும் விலகாதமார்க்கத்தையடைந்திருக்கிறவர்களுமான பெரி யோர்களை உபாஸித்துக் கேட்கக்கடவாய் வித்வான்களும் தர்மத் தைப்பார்க்கிறவர்களுமான அவர்களுடையகொள்கையை (மனத்தில்) தரித்து மேலானபுத்தியினாலே மார்க்கத்திலிருந்துவிலகிசெல்லு கின்றமனத்தை அடக்கக்கடவாய் நிகழ்காலத்தைமாத்திரம் பார்க் கிறபுத்தியினாலே நாளையென்பது தூரத்திலென்றுநினைத்துப் பய மற்றவர்களும் எல்லாவற்றையும் பக்ஷிக்கிறவர்களும் அறிவில்லாதவர் களுமாயிருப்பவர்கள் கர்மாவுக்குரியபூமியைப் பார்க்கிறதில்லை தர்ம மாகிற ஏணியைஅடைந்து சிறிதுசிறிதாகஏறு தன்னைச்சுற்றிக்கூடு கட்டுகிறபூச்சிபோல ஆத்மாவை (காமாதிகளால்) சுற்றச்செய்து அறியாமலிருக்கிறாய நாஸ்திகனும் மர்யாதையைமீறினவனும் [2]கரை யைபிடிக்கிறபிரவாகம்போலிருப்பவனுமான மனிதனைத் தடையற்ற வனாகி (வழியில்) பிடுங்கப்பட்ட [3]மூங்கிலைப்போல இடப்பக் கத்தில்செய் தைரியமாகிற ஓடத்தைசசெய்து, காமக்ரோதங்க ளாகிறமுதலைகளையுடையதும் ஐந்துஇந்திரியங்களாகிறஜலத்தையு டையதுமான (ஸம்ஸார) நதியையும் (அதிலுள்ள), ஜனனங்களாகிற மடுக்களையும் தாண்டக்கடவாய். உலகம் மிருத்யுவினால்கொல்லப் பட்டும் ஜரையினால் துன்பப்படுத்தப்பட்டுமிருத்தலாலும் (ஆயுளை

1 'தெய்வத்தையாவது குருவையாவது அடையாமலிருக்கிறாய்' என் பது கருத்து.
2 'வெள்ளத்தாலழிக்கப்படும் கரையின்மேலே கட்டப்பட்டவீடுபோன் றவனும்' என்பதும்,
3 'மூங்கில்போலவணங்காதவனும்' என்பதும் சிலர்கருத்து.
4 'விலக்கிவிடு' என்பது கருத்து.

யபஹரிப்பதால்) வீணுகாதஇரவுகள் வந்துகொண்டிருத்தலாலும் (ஸம்ஸாரமாகிறநதியைத்) தர்மமாகிற [1]ஓடத்தால் தாண்டிக்கடவாய். நிற்கிறவனையும் படுத்திருக்கிறவனையும் மிருத்யுவானவன் அகாரண மாகக்கொல்லுகையில் (எவன்) எப்படி ஸுகத்தையடைவான்? ஒரு வன் கர்மங்களில் திருப்தியடையாமல் அவைகளைத் தேடிக்கொண் டிருக்கையிலே பெண்செந்நாய் செம்மறிக்கிடாயை எடுத்துக்கொண்டு போவதுபோல மிருத்யு அவனை எடுத்துக்கொண்டு போய்விடுகிறான். அந்தகாரத்தில் பிரவேசிக்கவேண்டியிருக்கையில், வளர்க்கப்பட்ட ஜ்வாலையையுடையதும் தர்மபுத்திமயமும் பெரிதுமானதீபததை நாளடைவில் முயற்சியுடன் தரிக்கவேண்டும். பிராணியானது அநேக ஜன்மங்களையெடுதது ஒருஸமயம் இந்தமனுஷ்யஜன்மத்தில் பிராம் மணத்தன்மையை அடைகிறது புத்திரனே! அதைக் காப்பாற்று இவ்வுலகில் பிராம்மணனுக்கு இந்தசசரீரம் காமத்திற்கும் அர்த்தத் திற்குமாக உண்டாகிறதில்லை; கிலேசத்திற்கும் தவத்திற்குமே உண் டாகிறது. மரிததபிறகு நிகரற்றஸுகமுண்டாகிறது. பிராம்மண ஜன்மமானது அநேகமானதவங்களால் அடையப்படுகிறது. அதனை அடைந்து கிரீடையில்பற்றுவைத்து விளையாடக்கூடாது. தன்வேதத் திலும் தவத்திலும் இந்திரியங்களையடக்குவதிலும் எபபொழுதும் பிரவிருத்தித்து மோக்ஷத்தைவிரும்பி நல்லகார்யங்களில்பற்றுடன் எப்பொழுதும் முயற்சிசெய் அவ்யக்தத்தைக்காரணமாகவுடையதும் கலைகளைசரீரமாகவுடையதும் ஸூக்ஷ்மமான ஸ்வரூபமுடையதும் க்ஷணங்களும் த்ருடிகளும் இமைப்பொழுதுகளுமாகிற ரோமங்களு டையதும் [3]ஸமமானசக்தியுள்ள சுக்லகிருஷ்ணபக்ஷங்களான கண்க ளுடையதும் மாஸங்களாகிறஉறுப்புக்களுடையதுமான மனிதர்களு டைய பிராயமாகிறஇந்தக்குதிரையானது ஓடுகிறது. எப்பொழுதும் புறப்பட்டதும் கடியவேகத்துடன்போகிறதுமான அதைப்பார்த்து எப்பொழுதும் இம்மையில நன்றாகப்பார்க்கிற உன்கண்ணானது மற் றொருவன்வழிகாட்டி அழைத்துக்கொண்டுபோகவேண்டாததாயிருந் தால் பரலோகத்தைக்கருதி உன்மனம் தர்மத்தில் பற்றிநிற்கட்டும். தர்மமும் காமமும் சீலமும்குன்றியவர்கள் எபபொழுதும் அனிஷ் டத்தின் ஸம்பந்தத்தால் அலறுகிறவர்களும்'' அதர்மங்களாகிற அநேக கவலைகளாலே மிகவும் கிலேசத்தையடைந்தவர்களுமாகி யாதனாசரீ[லாம்.]

---

1 வேறு பாடம்.

2 கலையென்கிறகாலம்; 'பிராணன்முதலானகலைகள்' என்றும் கொள்ள

3 இங்கு இரண்டுசொற்கள் விடப்பட்டன.

ரத்தை அடைகின்றார்கள். எப்பொழுதும் தர்மத்தில் பற்றினவனும் உத்தமாதிஜாதியை நன்றாகப்பார்த்துக் காப்பவனுமான அரசன் புண்ணியவான்களடைகிற உலகங்களை அடைகிறான்; அவைகளில் பலவிதமாகவும் ஸஞ்சரிக்கிறான்; இதற்குமுன் அடையப்படாததும் குற்றமற்றதுமான (மோக்ஷ) ஸுகத்தையும் அடைகிறான் குருக்களுடைய வார்த்தையைக்கொள்ளாதவன் மரணத்தையடைந்தபொழுது, [1]நரகத்தில் பயங்கரமான சரீரமுடைய நாய்களும் இரும்புபோன்ற மூக்குக்களையுடைய பக்ஷிகளும் வலியகழுகு குராமுதலான பக்ஷிகளுடைய கூட்டமுமான உதிரத்தை அருந்தும் துஷ்டஜந்துக்கள் வந்து சூழுகின்றன: இவ்வுலகத்தில், மனம்போனவழியேசென்று [2]பிரம்மாவினால் நியமிக்கப்பட்டவைகளும் (சுசியாயிருத்தல், ஸந்தோஷம், தவம், வேதாத்தியயனம், ஈஸ்வரத்தியானம், கொல்லாமை, பொய்சொல்லாமை, திருடாமை, ப்ரம்மசர்யம், பிரதிக்ரகம்செய்யாமையென்கிற) பத்துக்குணங்களுடையவைகளுமான இந்தமரியாதைகளைப் பேதிக்கிற பாபியானவன் யமனுடையராஜ்யத்திலுள்ள (அஸிபத்திர) வனத்தையடைந்து மிகவும் கஷ்டத்துடன் வஸிக்கிறான். லோபமுடையவனும் பொய்சொல்லுவதில் மிக்கபிரியமுள்ளவனும் எப்பொழுதும் அவமானத்திலும் வஞ்சனையிலும் பற்றுதலுடையவனும் வியாஜகர்மங்களால் பிறருக்குக்கஷ்டத்தைச் செய்தவனும் பாபகர்மமுடையவனுமான மனிதன் கொடிய நரகத்தையடைந்து மிக்கதுக்கத்தை அனுபவிக்கிறான்; (தவிரவும்,) கொதிக்கின்ற வைதரணியென்கிற பேராற்றில் முழுகினவனும் அஸிபத்திரவனத்தாலறுக்கப்பட்ட சரீரமுடையவனும் கோடாலிக்காட்டில் படுத்தவனுமாகிப் பெரியநரகத்தில்விழுந்து துன்பத்துடன் வஸிக்கின்றான். (பிரம்மலோகமுதலான) பெரியஸ்தானங்களைப் புகழ்கிறாய்; பரப்ரம்மத்தைச் சிந்திக்கவில்லையே? சிலகாலத்தில் மரணத்தை விளைவிக்கிற கிழத்தனம் வருவதை நீ அறியவில்லையே. புறப்படு. ஏன், இருக்கிறாய்? பெரிதும் மிகவும் வருத்துகிறதும் கொடியதுமான பயம் உண்டாகிவிட்டது. ஸுகத்திற்கு வழியைத் தேடு. நீ மரித்து யமனுடைய கட்டளையினாலே கொடியவர்களான யமபடர்களால் யமனிடம் கொண்டுபோகப்படுவாய். (ஆகையால்,) நீ நல்வழியில் முயற்சிசெய். பிறர் துக்கத்தையறியாத பிரபுவானவன் பந்துக்களோடு ஸமூலமாக அபகரிப்பான். உன்னுடைய இந்த உயிர் எவ்வளவு? யமனைவிலக்குகிறவன் இல்லை. யமன் வருவதற்கு முன்

1 'நரகத்தும்' என்பது மூலம்; 'நரர்களுக்கு வருத்தத்தைக்கொடுப்பது' என்பது.

2 'வேதத்தினால்' என்பது பழையவுரை.

வீசுங்காற்றானது உண்டாகப்போகிறது. நீ ஒருவனாகவே கொண்டு போகப்படுவாய். பரலோகத்திற்குரிய ஸாதனத்தைச் செய்துகொள். முடிவைச் செய்கிற காற்று ஒன்றே உனக்கு வீசப்போகிறது. பெரிய பயம்வரும்பொழுது உனக்குத் திசைமயக்கம் உண்டாகப்போகிறது. குழந்தாய்! இகத்தில் கலக்கத்தை அடைந்த உனக்குக் காதும் அடைக்கப்படப்போகிறது (ஆகையால்,) உத்தமமான ஸமாதியைச் செய். அஜாக்கிரதையாலுண்டான கர்மத்தினால் சித்தின் பூர்வபுண்ணிய பாவங்களை நினைத்துப் பச்சாத்தாபத்தை அடையப்போகிறாய். தனிமையான (தர்மமாகிற) நிதியையே தேடக்கடவாய். பலம், அங்கம், அழகு இவைகளைக்குறைக்கிற ஜரையானது உன்னுடைய சரீரத்தைத் தளர்ச்சியுள்ளதாகச் செய்யப்போகிறது. கேவலம் புண்ணியநிதியைத் தேடக்கடவாய் அந்த அந்தகனானவன் உயிர்நீங்கும்போது ரோகங்களாகிற பாணங்களாலே பலாத்காரமாகச் சரீரத்தைப் பிளக்கப்போகிறான். பெரியதவத்தைச்செய்ய யத்தனம் செய் மனுஷ்யதேகங்களில் இருப்பமுள்ள பயங்கரமான [1]செந்நாய்கள் எங்கும் ஓடிவரப்போகின்றன. புண்ணியத்தைவிடாமல் அனுஷ்டிப்பதில் யத்னம்செய். ஒருவனாக இருளைப் பார்க்கப்போகிறாய் (ஆகையால்,) விரைந்து செய். [2]மலையினுச்சியில் ஸ்வர்ணமயமான விருக்ஷங்களைப் பார்க்கப்போகிறாய். உன்னுடைய கெட்ட சேர்க்கைகளும் நண்பர்கள் போன்ற பகைவர்களும் உன்னை ஞானத்திலிருந்தும் சலிக்கச்செய்வார்கள். புத்திர! (ஆகையால்,) பிரம்மத்தையடைய முயற்சிசெய். அரசனிடமிருந்தும் பயமில்லாததும் திருடனிடமிருந்தும் பயமில்லாததும் மரித்தவனைக் கூடவிடாததுமான அந்த வித்யாதனத்தை ஸம்பாதனம் செய். அந்த யமலோகத்தில் தங்கள் கர்மங்களாலுண்டான கர்மப்பயனாகிற தனமானது ஒருவரோடொருவர் விபாகம் செய்துகொள்ளப்படுகிறதில்லை. எவனுக்கு எது விவாகத்தில் கொடுக்கப்பட்ட [3]யௌதகம்போலுள்ளதோ அதையே அவ்விடத்தில் அவன் அனுபவிக்கிறான். புத்திரனே! பரலோகத்தில் எந்தத்தனத்தினால் ஜீவிக்கலாமோ அதனையே தேடு. எந்தத்தனம் நசியாமல் நிலைத்ததாயிருக்குமோ அதனையே தேடு. ஜனங்கள் யவைமாவைப் பூக்குவஞ்செய்கிற அளவுக்குள் விரைவாக நசிப்பாய் மரணஸங்கடத்தில் ஒருவனாகவேசெல்லுகிற

---

1 'காமமுதலானவை' என்பது பழையவுரை.

2 இது மரணக்குறிப்பு

3 விவாக காலத்தில் கன்னிகையோடு கொடுக்கப்படுவது; இதில் மற்றவர்களுக்குப் பாகமில்லை

வினை அன்னையும் புத்திரர்களும் உறவினர்களும் தொடர்ந்து செல்வதில்லை. நன்கு உபசரிக்கப்பெற்ற அன்பர்களும் தொடர்ந்து செல்லுவதில்லை. புத்திரனே! முன்ஜன்மத்தில் செய்யப்பட்டபுண்ணியபாபகர்மமாத்திரம் போகிறவனுக்குப் பரலோகத்தில் பௌதகம்போலாகிறது. நல்வினை தீவினைகளால் ஸம்பாதிக்கப்பட்ட பொன் மணி இவைகளுடையகுவியல்கள் அவனுக்குச் சரீரநாசம் நேரிடும்போது ஒருகாரியத்தையும் ஸாதிக்கிறதில்லை புத்திரா! உன்னுடையபுண்ணியபாபகர்மத்திற்கு [1]முடிவுஇல்லை மனுஷ்யர்களுக்கு இந்தப்புண்ணியபாபகர்மத்தில் ஆத்மாவுக்குச்சமமான ஒருசாக்ஷியும் இல்லை. பரலோகத்தில் செல்லுகிறவனுக்கு மனுஷ்யதேகம் சூன்யமாய்விடுகிறது. (பரலோகத்திற்குச்செல்லுகிற ஆத்மா ஞானியினால்) புத்தியாகிற நேத்திரத்தினால் பிரவேசித்து முழுதும்பார்க்கப்படுகிறது. இகத்தில் அக்னி, ஸூர்யன், வாயுமூவரும் சரீரத்தை ஆச்ரயித்திருக்கிறார்கள். தர்மத்தைப்பார்க்கின்றஅவர்களே அதற்குஸாக்ஷிகளாகின்றனர். அவர்கள் இரவும்பகலும் எல்லாவிடங்களிலும் ஸ்பரிசிக்கிறவர்களும் ஸஞ்சரிக்கிறவர்களுமாயிருத்தலால் வெளிப்படையும் ரகஸ்யமுமானசெய்கைகளில் உன்தர்மத்தையே காப்பாற்று. பரலோகமானது அநேக சத்ருக்களையுடையதும் விகாரரூபமுள்ள பயங்கரமான ஈக்களையுடையதுமாயிருத்தலால் தனக்குரியகர்மமே ரக்ஷிக்கப்படவேண்டும். தான்செய்தகர்மம் பரலோகத்தில்வரும் அவ்விடத்தில் தங்கள்கர்மங்களை ஒருவருக்கொருவர் பிரித்துக்கொள்வதில்லை. தான்செய்தகர்மத்தாலுண்டானபயனை அப்படியே அனுபவிக்கவேண்டும். அப்ஸரஸுகளுடையகூட்டங்கள் மகரிஷிகளுடன் விமானத்திலேறி இஷ்டமானவிடம்சென்று தம்கர்மத்தாலுண்டான இன்பப்பயனை அனுபவிப்பதுபோல, இவ்வுலகில் பாவமில்லாதவர்களும் சரீரத்தாலாகும் பயனையுடையவர்களும் சுத்தமான பிறப்புள்ளவர்களுமானமனிதர்கள் எந்தசுபகர்மம் எவ்விதம் செய்யப்பட்டதோ அதை அவ்விதமே அடைகிறார்கள் அவர்கள், கிருகஸ்ததர்மங்களாகிறஅணைகளாலே பிரம்மா, பிருஹஸ்பதி, இந்திரன் இவர்களுடைய சிறந்தலோகங்களை அடைகிறார்கள். திரும்பவும் மதிமயக்கத்தைச்செய்யாதவிஷயத்தை ஆயிரம்விதமாகவும் அநேகவிதமாகவும் சொல்லுவதற்கு உத்ஸாஹப்படுகிறேன். ஆகையால், நீ பரிசுத்தமாகச்செய்கிறதர்மமே உனக்குப் பிரபு. இருபத்துநான்கு பிராயங்கள் சென்றுவிட்டன. நிச்சயமாக இருபத்தைந்தாவது

1 பயனில்லாமல்போகாது.

பிராயம் நடக்கிறது. தர்மத்தை ஸம்பாதிப்பாய். உனக்குப் பிராயம் சென்றுவிடுகிறதே. அந்தயமன் உன்தவறுதலைத் தன்சேனைக்குக் [1]கோமுகமாகச் செய்யப்போகிறான். (ஆகையால்,) [2]முயற்சியுடன் தர்மத்தைகாப்பதில் விரைவாய்! முன்னும்பின்னும் ஒருவருமின்றித் தனியேசெல்லப்போகிறஉனக்குச் சரீரத்தாலும் பிறனாலும் என்னஉபயோகம்? பரலோகத்தில் தனித்துச்செல்லுகிறவர்களுக்குப் பயகாலங்களில் நன்மைசெய்யக்கூடிய அந்தநிதியைமாத்திரம் தேடக்கடவாய். ஒருவரிடத்திலும்அபிமானமில்லாதவனும் யாராலும்தடுக்கமுடியாதவனும் பிரபுவுமானமிருத்யுவானவன் [3]நுனிமுதல் அடிவரையுமுள்ளபந்துக்களுடன் அபகரிப்பான் (ஆகையால்,) தர்மமாகிறநல்லநிதியைத் தேடு. புத்திரா! நான் இம்மையில் (எல்லாராலும்) ஸம்மதிக்கப்பட்டஉதாரணத்தை எனது அநுபவத்தாலும் அநுமானத்தாலும் உனக்கு எடுத்துரைத்தேன் அவ்விதம்செய். தனதுகர்மத்தால்ஸம்பாதிக்கப்பட்ட தனங்களைக்கொடுப்பவன் ஒருவனே புத்திமோகத்தாலுண்டாகாத குணங்களையுடையவன். அவன் சுபகர்மங்களைச் செய்கிறவனுக்குள்ள எல்லா நன்மைகளையும் அடைகிறான். அப்படிப்பட்ட இந்தஅர்த்தஞானமானது கிருதஜ்ஞனுக்குப் பயன்தரத்தக்கதாயிருக்கிறது கிராமத்தில்வஸிப்பவனுக்குப் பற்றுதலென்பது கட்டும்கயிறு. புண்ணியசாலிகள் இதை அறுத்துவிட்டுச் செல்லுகிறார்கள் பாவிகள் இதை அறுப்பதில்லை. புத்திரனே! மரிக்கப்போகிறஉனக்குத் தனத்தாலும் உறவினர்களாலும் புத்திரர்களாலும் என்னபயன்? ஒற்றுதபருகையைஅடைந்த ஆத்மாவைத்தேடு. உன்னுடையபிதாமஹர்களெல்லாரும் எங்கே போனார்கள்? நாளைசெய்வதை இன்றுசெய்யவேண்டும். சாயங்காலத்தில்செய்வதை முற்பகலிலே செய்யவேண்டும் மிருத்யுவானவன் இவனுடையகாரியம்முடிந்ததையும் முடியாததையும் எதிர்பார்க்கமாட்டான். மரித்தவுடன் பந்துக்களும் ஞாதிகளும் ஸுஹ்ருத்துக்களும் பின்தொடர்ந்துவந்து மனிதனை அக்னியில்போட்டுவிட்டுத் திரும்பிவிடுகிறார்கள் (ஆகையால்,) பரமாத்மாவை அடையவிருப்பமுடையவனும் சோம்பலில்லாதவனுமாகி நாஸ்திகர்களும் தயையில்லாதவர்களும் பாபபுத்தியுள்ளவர்களுமானமனிதர்களைத் தடையின்றி இடப்பக்கமாகச்செய். இவ்விதம், உலகம் கெடுக்கப்பட்டும் காலத்தால்பீடிக்கப்பட்டுமிருத்தலால் மிகுந்த தைரியத்தையடைந்து

1 ஒருவிதவாத்யம். 2 ஒருசொல் விடப்பட்டது.
3 வேறுபாடம்.

எல்லாவிதத்தாலும் தர்மத்தைச் செய். ஆனால், இந்தஞானோபாயத்தை நன்றாக அறிகிறமனிதன் இம்மையில் நன் தர்மத்தை நன்றாகச் செய்து பரலோகத்தில் ஸுகத்தை அநுபவிக்கிறான் அறிந்தவர்களுக்குத் தேகம்வேருனாலும் மரணமில்லை நன்றாகக்காக்கப்பட்ட (தர்ம) மார்க்கத்தில நாசமுமில்லை. தர்மத்தைவிருத்திசெய்கின்றவனே பண்டிதன் தர்மத்திலிருந்துமநழுவுகிறவன் பாபத்தை அடைகிறான். கர்மமார்க்கத்திலிருந்து தன்புண்ணியபாபகர்மங்களைச் செய்தால அவற்றைசசெய்தவன் முறைப்படி பயனை அடைகிறான். இழிந்தகர்மத்தைசசெய்தவன் நரகத்தை அடைகிறான் தர்மத்தின் கரையையடைந்தவன் ஸ்வர்க்கத்தை அடைகிறான். ஸ்வர்க்கத்திற்குப் படிபோன்றதும் அடையவரியதுமான மநுஷ்யஜன்மத்தையடைந்தவன் தன்னைத் திரும்பவும் நழுவாமலிருக்கும்படி செய்துகொள்ள வேண்டும் ஸ்வர்க்கமார்க்கத்தை அநுஸரித்துத் தர்மத்தைமீருமலிருக்கிற புத்தியையுடையவனைப புண்ணியவானுமுடையவனென்றும் மித்திரர்களாலும் பந்துக்களாலும் துக்கிக்கத் தகாதவனென்றும் சொல்லுகிறார்கள். விஷயங்களால் கெடுக்கப்படாததும் உறுதியில் பற்றிநிற்பதுமான புத்தியையுடையவனும் ஸ்வர்க்கத்தில இடத்தைத் தேடிக்கொண்டவனுமானவனுக்குப பெரியபயமில்லை தபோவனங்களில் பிறந்தவர்களும் அவ்விடத்திலேயே மரணத்தையடைந்தவர்களும் காமபோகங்களையறியாதவர்களுமான அவர்களுடையதர்மமானது மிகவும்[1] சிறிதாகும் போகங்களைத்தள்ளிவிட்டுச சரீரத்தினுல்தவத்தைச் செய்பவனுல் அடையப்படாதது ஒன்றுமில்லை. அந்தப் பயனைத்தான் நான் நன்குமதிக்கிறேன் அநேகமாயிரம் தாய்தந்தைகளும் பெண்டுபிள்ளைகளும் உண்டானார்கள ; இனியும் உண்டாவார்கள். அவர்கள் யாரைச்சேர்ந்தவர்கள் ? நாம் யாரைசசேர்ந்தவர்கள் ? நான் ஒருவனே. எனக்கு ஒருவருமில்லை நான் வேறு ஒருவனையும் சேர்ந்தவனில்லை. நான் எவனைச சேர்ந்தவனே அவனைப் பார்க்கவில்லை. எவன் என்னைச்சேர்ந்தவனே அவனையும் பார்க்கவில்லை. அவர்களுக்கு உன்னால் செய்யக்கூடியதுமில்லை. உனக்கு அவர்களால் செய்யக்கூடியதுமில்லை. தங்கள் கர்மங்களால அவர்களுண்டானார்கள் நீயும் பிரயாணம்போகிறாய் இந்த உலகத்தில் தனமுள்ளவர்களுக்குப் பிறனும் தம் ஜனம்போலாகிவிடுகிறான். உயிருடனிருக்கையிலும் தரித்திரர்களுக்கு ஸ்வஜனங்களிருந்தும் இல்லாதவர்

1 ' அவைகளால் மாத்திரம் புண்யமுண்டாகாது ' என்றபடி ; ' அதர்ம: ' என்று பதம்பிரித்து, ' அதர்மம் மிகச்சிறிதாகும் ' என்றும் கொள்ளலாம்.

களாகிறார்கள். மனிதன் களத்திரத்தை அபேக்ஷித்துத் தீவினைகளைச் செய்கிறான்; அதனால், இம்மையிலும் மறுமையிலும் துன்பத்தை அடைகிறான்; தன் கர்மத்தினாலே பந்துஜனங்கள் விலகினவர்களா யிருப்பதைப் பாராய். புத்திரனே! சொல்லியவற்றையெல்லாம் சொல்லியபடியே செய்வாய். இதை நன்றுதெரிந்துகொண்டு பூமியைக் கர்மாவுக்குரியதென்று கண்டவன் பரலோகத்தைவிரும்பிச் சுபமான கர்மங்களைச் செய்யவேண்டும். மாதங்களும் ருதுக்களுமென்னும் பெயருள்ள தாண்டுகோலுடையதும் இரவுபகல்களாகிற விறகுகளுள்ளதும் அவரவர்களுடைய கர்மநிஷ்டையின் பயனுக்குஸாக்ஷியுமாகிற ஸூர்யனாகிற அக்கினியினால் காலமானது பிராணிகளை வலிந்து பாகம்செய்கிறது. கொடாததும் அனுபவியாததுமான தனத்தால் என்ன பயன்? பகைவர்களைவருத்தாத வன்மையால் என்னபயன்? தர்மத்தை அனுஷ்டியாத சாஸ்திரஞானத்தால் என்ன பயன்? இந்திரியங்களை ஜயியாததும் மனோவசமற்றதுமான அந்த ஆத்மாவினால் என்னபயன்?' என்றுசொன்னார். வ்யாஸருடைய நன்மையைத்தரத் தக்க இந்த வார்த்தையைக்கேட்டு, சுகர் மோக்ஷத்தை உபதேசித்த பிதாவைவிட்டு நீங்கிச் சென்றார்'' என்று சொன்னார்.

---

## முந்நூற்றுமுப்பதாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

---

**(வினை செய்தவனையே சென்றடையுமென்பது முதலியன.)**

**யு**திஷ்டிரர், "பிதாமஹரே! தானம், யாகம், செய்யப்பட்ட தவம், குருபணிவிடை இவற்றின் பயனை எனக்குச் சொல்லும்'' என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்:

"அனர்த்தத்தோடுகூடியபுத்தியால மனம் பாவத்தில் செல்லுகிறது. அவன் தீவினையைச்செய்து பெரியதுன்பத்தை அடைகிறான். தீவினைசெய்தவர்கள் தரித்திரர்களும் பிரேதங்களைக்காட்டிலும் பெரிய பிரேதங்களுமாகித் துர்ப்பிக்ஷத்திலிருந்தும் அதிக துர்ப்பிக்ஷத்தையும் துன்பத்திலிருந்தும் அதிகத் துன்பத்தையும் பயத்திலிருந்தும் அதிகப்பயத்தையும் அடைகிறார்கள். புண்ணியகர்மமுடையவர்கள் ச்ரத்தையுடையவர்களும் அடக்கமுடையவர்களும் தனமுடையவர்களுமாகி [1]உத்ஸவத்திலிருந்தும உத்ஸவத்தையும் ஸ்வர்க்கத்திலிருந்

---

1 ஸந்தோஷத்தை விளைவிக்கக்கூடிய கார்யம்.

தும் ஸ்வர்க்கத்தையும் ஸௌகத்திலிருந்தும் ஸௌகத்தையும் அடைகிறார்கள் தயானைகளிருப்பதால் உட்புகமுடியாதவைகளும் ஸர்ப்ப பயமும் சோரபயமுமுள்ளவைகளுமான இடங்களில் நாஸ்திகர்கள் கைவிலங்குடன் செல்லுகிறார்கள் இதைக்காட்டிலும் வேறு என்னவேண்டும்? தானத்திலபிருந்தவர்களும் தேவர்களிடம் ப்ரீதியுடையவர்களும் விருந்தினர்க்கினியவர்களும் ஸாதுக்களிடம் ப்ரியமுடையவர்களும் கைகளிலதக்ஷிணையுடையவர்களுமான மனிதர்கள் க்ஷேமத்திற்குக்காரணமும் மனத்தைஜயித்தயோகிகளுக்குரியதுமான மார்க்கத்தை அடைந்தவர்களாவார்கள் எவர்களுக்குத் தர்மம் காரணமாகத் தோற்றவில்லையோ அவர்கள், தான்யங்களில் பதர்களும் பக்ஷிமுட்டைகளுள் அழுகினமுட்டைகளும்போல மனிதர்களில இருக்கிறார்கள் அதிகவேகமாகஓடுகிறவனாயிருந்தாலும் செய்த கர்மம் அவனைப் பின்தொடருகிறது எவனெவனால் எந்தளந்தவிதம் எந்தளந்தக்கர்மம் செய்யப்பட்டதோ அவன்அவனை அந்தஅந்த விதம் அந்தஅந்தக்கர்மம் படுக்கையில படுத்தும் நிற்கையில் நின்றும் ஓடுகையில் ஓடியும் ஒருதொழிலைசெய்கையில தொழிலைசெய்தும் நிழல்போலஅனுஸரிக்கிறது எவனெவனால் எப்படிஎப்படி எந்த எந்தக்கர்மம் முன்செய்யப்பட்டதோ அவன்அவனால அப்படி அப்படி அதுஅதுவே எப்பொழுதும் அனுபவிக்கபபடுகிறதென்பது நிச்சயம் காலமானது அதிருஷ்டத்தால்காக்கப்பட்ட பொதுவானகர்மநிதியைக்குறித்து இந்தப்பிராணிகளின் ஸமூகத்தை நான்குபக்கத்திலும் இழுக்கிறது மலர்களும் கனிகளும் பிறர்தூண்டுதலின்றியே தங்களுக்குரியகாலத்தை அதிக்ரமியாததுபோல முன்செய்யப்பட்டகர்மமும் தனக்குரியகாலத்தை அதிக்கிரமிக்கிறதில்லை ஸம்மானமும் அவமானமும் லாபமும் நஷ்டமும் ஜயமும் அபஜயமும் அடிக்கடிஉண்டாகிப் பயனைக்கொடுப்பதில தவறுகிறதில்லை. ஒருவன் முன்சரீரத்தில் தன்னால செய்யப்பட்டதுக்கத்தையும் ஸௌக்யத்தையும் கர்ப்பமாகிறசயனத்தை அடைந்ததுமுதல் அனுபவிக்கிறான். பாலனாகவும் தருணனாகவும் விருத்தனாகவுமிருந்து எந்தளந்தப் புண்ய பாவத்தைச் செய்கிறானோ அதைஅதை அந்தஅந்த நிலைமையில் ஜன்மந்தோறும் அனுபவிக்கிறான். ஆயிரம்பசுக்களுள் கன்றானது தன்னுடையதாயைத்தேடி அடைவதுபோலவே முன் ஜன்மத்தில் செய்யப்பட்டகர்மமானது செய்தவனைச் சென்றடைகின்றது. அழுக்கான வஸ்திரமானது பிறகு ஜலத்தினால் சுத்தமாகிறதுபோல உபவாஸங்களாலே தாபத்தையடைந்தவர்கள் நீண்டதும் அழிவற்றது

* L• எள

மான ஸுகத்தை அடைகிறார்கள் நீண்டகாலம் தபோவனத்தில் அநுஷ்டிக்கப்பட்ட தவத்தினால் தர்மத்தால்பாவங்களைத்தொலைத்தவர்கள் தங்கள்மனோரதங்களை அடைகிறார்கள். ஆகாயத்தில் பக்ஷிகளும் ஜலத்தில் மீன்களும் சென்றவழியானது காணப்படாததுபோலப் புண்ணியசாலிகளுடைய கதியும் காணப்படுகிறதில்லை பிறரை நிந்திப்பதும் அவர்களுடைய தவறுகளைச்சொல்லுவதும் வேண்டா. நல்லதும் தகுதியுள்ளதும் ஆத்மாவுக்குஹிதமுள்ளதுமானவினையைச் செய்யவேண்டும்'' என்று சொன்னார்.

---

## முந்நூற்றுமுப்பத்தோராவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி)

—:o:—

**(வ்யாஸர் புத்ரனுக்காகத் தவஞ்செய்ததும், சங்கரர் வரமளித்ததும்.)**

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! வ்யாஸருக்குத் தர்மாத்மாவும் மிக்கதவமுடையவருமான சுகர் பிறந்தவரலாற்றையும் அவர் மேலான ஸித்தியை அடைந்ததையும் எனக்குச் சொல்லும். தவத்தையே தனமாகவுடைய வ்யாஸமுனிவர் சுகரை எந்த ஸ்திரீயினிடத்தில் உண்டுபண்ணினார்? மஹாத்மாவான இந்தச் சுகருடைய மாதாவை நாங்கள் தெரிந்துகொள்ளவில்லை; உத்தமமான இவருடையஜன்மத்தையும் அறியவில்லை. இவர் பாலராயிருந்தபோதே இவருடைய புத்தியானது ஸூக்ஷ்மமான ஞானத்தில் எவ்விதம் பற்றியது? இவ்வுலகத்தில் வேறொருவருக்கும் இவ்விதம்உண்டானதில்லையே. விசாலமானபுத்தியுடையவரே! இதை நான் விரிவாகக் கேட்கவிரும்புகிறேன். இப்பொழுது, உத்தமமான கதாம்ருதத்தைக்கேட்டு எனக்குப் போதுமென்கிற திருப்தியானது உண்டாகவில்லை. ஓ! பிதாமஹரே! ஆகையால், சுகருடையபெருமையையும் ஆத்மயோகத்தையும் பிரம்மஞானத்தையும் உள்ளபடி வரிசையாகச் சொல்லும்" என்றுவினவ, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"ரிஷிகள் பிராயங்களால் தர்மத்தைச் செய்வதில்லை; நரைகளாலேயுமில்லை; தனங்களாலேயுமில்லை; பந்துக்களாலேயுமில்லை. எவர் கற்றுணர்ந்தவரோ அவர் நமக்குப் பெரியவர். பாண்டுபுத்திரா! நீ என்னைக்கேட்டவையெல்லாம் தவத்தையே காரணமாகவுடையன. அந்தத்தவமானது இந்திரியங்களை அடக்குவதால் உண்டாகிறது;

வேறுவிதத்தால் உண்டாகிறதில்லை. மனிதன் இந்திரியங்களுடைய ப்ரவிருத்தியினால் சந்தேகமில்லாமல் தோஷத்தையடைவான்; அந்த இந்திரியங்களை அடக்கியே ஸித்தியை அடைகிறான். ஐயா! ஆயிரம் அஸ்வமேதங்களுக்கும் நூறு வாஜபேயங்களுக்கும் யோகத்தினுடைய வீசத்திற்குள்ள பயனானது இல்லை. இந்தவிஷயத்தில் உனக்குச் சுகருடைய பிறப்பையும் யோகபயனையும் மனத்தை வசம் செய்யாதவர்களால் அடையமுடியாத மேலானகதியையும் சொல்லப்போகிறேன். முன்காலத்தில் நான்கு பக்கமும் கொன்றை வனங்களோடுகூடிய மேருவின் சிகரத்தில் மகாதேவர் பயங்கரமான பூதகணங்களால் சூழப்பட்டு விளையாடிக்கொண்டிருந்தார். மலையாசன்மகளான தேவியும் அங்கேயே இருந்தாள். அவ்விடத்தில், பிரபுவான கிருஷ்ணத்வைபாயனரானவர் சிறந்த தவத்தைச் செய்துகொண்டிருந்தார் குருஸ்ரேஷ்டனே! யோகத்திலும் தர்மத்திலும் பற்றுடையவரான அவர் யோகத்தால் ஆத்மாவான ஈஸ்வரரிடம் பிரவேசித்துத் தாரணையைச்செய்து புத்திரனுக்காகத் தவம் செய்தார் ஓ! விபுவே! 'அக்னிக்கும் பூமிக்கும் அப்புக்கும் வாயுவுக்கும் ஆகாயத்திற்கும் ஒப்பான வீர்யமுள்ள புத்திரன் எனக்கு உண்டாகவேண்டும்' என்கிற ஸங்கற்பத்தோடும் மௌனத்தோடும் மனோவசமில்லாதவர்களால் அடையவரியதும் உத்தமுமானதவத்தை மேற்கொண்டு தேவர்களுக்குத்தலைவரான மகாதேவரைப் பிரார்த்தித்தார். ஸமர்த்தரான அவர் வாயுவை ஆகாரமாகக்கொண்டு, அநேக ரூபங்களுடையவரும் உமாபதியுமான மகாதேவரை ஆராதித்துவந்தார் அவ்விடத்தில், ப்ரம்மரிஷிகளனைவரும் தேவரிஷிகளும் லோகபாலகர்களும் வஸுக்களும் ஸாத்யர்களும் ஆதித்யர்களும் ருத்ரர்களும் ஸூர்யசந்திரர்களும் வாயுவும் ஸப்தமருத்துக்களும் ஸமுத்திரங்களும் நதிகளும் அஸ்வினீதேவர்களும் தேவகந்தர்வர்களும் நாரதபர்வதர்களும் விஸ்வாவஸுவென்கிற கந்தர்வனும் ஸித்தர்களும் அப்ஸரஸுகளுடைய கூட்டங்களும் லோகேசரான அவரை ஆராதித்தார்கள். அவ்விடத்தில் ருத்ரரான மஹாதேவர் கொன்றைமலர்களால் கட்டப்பட்டதும், மங்களகரமுமான மாலையைத்தரித்துச் சந்திரன் சந்திரிகையோடு விளங்குவது போல விளங்கினர். திவ்யமும் பார்ப்போர் மனத்தைக் கவர்வதும் தேவர்களாலும் தேவரிஷிகளாலும் நிரம்பியதுமான அந்த வனத்தில் வ்யாஸமுனிவர் புத்திரனுக்காகச் சலியாமல் மேலான யோகத்திலிருந்தார். இவருக்குச் சக்தி குறையவில்லை; களைப்பும் உண்டாகவில்லை. மூவுலகங்களுக்கும் ஆச்சரியமாயிருந்தது. யோகத்தைச் செய்பவரும்

அளவற்ற தேஜஸுள்ளவருமான அவருடைய ஜடைகள் ஒளியால் அக்னிஜ்வாலைகள்போல மிகவும் ஜ்வலித்துக்கொண்டு விளங்கின பகவானான மார்க்கண்டேயர் எனக்கு இதைச சொல்லினர். அவர், அப்பொழுது இவ்விஷயத்தில எனக்குத் தேவசரித்திரங்களைச் சொன்னார். ஐயா! மஹாத்மாவான வ்யாஸருடைய அந்தத்தவத்தால் ஜ்வலிக்கும்படி செய்யப்பட்ட அவருடைய ஜடைகள் இப்பொழுதும் அக்னிக்குச் சமமான வர்ணமுடையவைகளாகப் பிரகாசிக்கின்றன. பாரத! அவருடைய இவ்விதத்தவத்தாலும் பக்தியினாலும் மஹேஸ்வரர் மனத்தில் திருப்தியுற்று அனுக்ரகம் செய்யலானார். பிறகு, மகாதேவர் அவருக்கு அம்பிகையோடு பிரத்யக்ஷமானார். பகவானான முக்கண்ணர் புன்னகையுடன் அவரைநோக்கி, 'த்வைபாயனரே! உமக்கு இப்படிப்பட்ட புத்திரன் உண்டாகப்போகிறான் அக்கினியும் வாயுவும் பூமியும் ஜலமும் ஆகாயமும்போலச சுத்தனும் மஹானுமான புத்திரன் உண்டாவான். உம்முடைய புத்திரன் [1]பிரம்மபாவத்தைத்யானிக்கிறவனும் ப்ரம்மத்தில் உறுதியுடையவனும் பிரம்மததினிடம் ஆதரவுள்ளவனும் ப்ரம்மத்தை ஆஸ்ரயமாகவுடையவனுமாகித் தேஜஸால் மூவுலகங்களையும் வியாபிக்கசசெய்து கீர்த்தியை அடையப்போகிறான்' என்று சொன்னார்.

---

## மூந்நூற்றுமுப்பத்திரண்டாவது அத்யாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி)

### (சுகருடையபிறப்பும் உபநயனமுதலியனவும்.)

ஸத்யவதியின் புத்திரரான அந்தவ்யாஸர், சங்கரரிடமிருந்து உத்தமமானவரததைஅடைந்து, பிறகு, அக்னியையுண்டுபண்ணவேண்டுமென்கிறவிருப்பத்தால் அரணியை எடுத்துக் கடைந்தார் அரசனே! பிறகு, பகவானான வ்யாஸமுனிவர், தன்னுடைய தேஜஸினால் உத்தமமானரூபத்தைத்தரிக்கின்ற கிருதாசியென்று பெயருடைய அப்ஸரஸைக் கண்டார். யுதிஷ்டிரனே! பகவானான அவர் அந்தவனத்தில் அந்த அப்ஸரஸைப்பார்த்து உடனே காமத்தால் மோஹத்தை அடைந்தவரானார். மகாராஜனே! அப்பொழுது, அந்தக்கிருதாசியும், காமத்தால் வருத்தமுற்ற மனத்தையுடைய வ்யாஸரைப்பார்த்துப்

---

1 'தத்பாவபாவி' என்பது மூலம்; 'நான் ப்ரமமம் என்னும் தியானம' என்பது பழையவுரை. 'பரம்மத்தினிடத்தில் பக்தியுள்ளவர்' என்பர் சிலர்.

பெண்கிளியாகிக் கிட்டவந்தாள். அவர் வேறுரூபத்தால்மறைக்கப் பட்ட அந்த அப்ஸரஸைப பார்த்துச சரீரமுழுதும் காமத்தினால் வியா பிக்கப்பட்டார் அந்த வ்யாஸமுனிவர், மிக்கதைரியத்தால் காமத் தை அடக்கியும், மிகுவும்பற்றின அந்தமனத்தை அடக்கக்கூட வில்லை. வருவதுவந்தேவிடுமானதினால், அவர் கிருதாசியினுடைய வடிவத்தின்அழகினால் இழுக்கப்பட்டார் அந்தமுனிவர் அக்கினியை உண்டுபண்ணவிருப்பத்தால் முயற்சிசெய்து மனதைமையடக்கும் பொழுது, உடனே அவருடைய வீரியமானது அரணியிலேயே விழுந் தது. அரசனே! பிராம்மணசிரேஷ்டரான அந்தப்பிரம்மரிஷியானவர் சங்கையில்லாதமனததுடன் அப்படியே அரணியைக் கடைந்தார். அந்த அரணியில சுகர்உண்டானார் சுக்கிரமானது கடையப்படும் போது, பெருந்தவமுடையவரும் பரமரிஷியும் மஹாயோகியும் அர ணியின் கர்பபத்தில உற்பத்தியையுடையவருமான அந்தச் [1]சுகர் பிறந்தார்; யாகத்தில விருத்திசெய்யப்பட்டவனும் ஹவிஸைத்தாங்கு கிறவனுமான அக்னியானவன் விளங்குவதுபோலத் தேஜஸினால் விளங்கினார். குருவம்சத்தரசனே! அப்பொழுது, அவர் பிதாவினு டைய மிகச்சிறந்தரூபத்தையும் நிறத்தையுமுடையவரும் ஆத்ம ஸ்வரூபத்தை தயானம்செய்கிறவரும் புகையில்லாத அக்கினிபோல ஜ்வலிக்கிறவருமாக விளங்கினார் அரசனே! அப்பொழுது, மகா மேருவின் சிகரத்தில் அவரை நதிகளுள்சிறந்த கங்காதேவியா னவள் தன் வடிவததுடன் வந்தடைந்து ஜலத்தினால நீராட் டினாள். குருவம்சத்திலுதித்த ராஜஸ்ரேஷ்டனே! மஹாத்மாவான சுகருடைய நிமித்தத்தில் ஆகாயததிலிருந்தும் தண்டமும் கிரு ஷ்ணாஜினமும் பூமியில் விழுந்தன. (அப்பொழுது,) கந்தர்வர்கள் கானம் செய்தார்கள்; அப்ஸரஸுகளின் கூட்டங்களும் நடனம் செய் தன; தேவதுந்துபிகளும் ஆயிரக்கணக்காக வாசிக்கப்பட்டன. விஸ் வாவஸுவென்கிற கந்தருவனும் தும்புருநாரதர்களும் ஹாஹா ஹூஹூவென்கிற கந்தர்வர்களும் சுகருடைய உற்பத்தியைத் துதித்தார்கள். அவ்விடத்தில் இந்திரன்முதலான லோகபாலர்களும் தேவர்களும் தேவரிஷிகளும் பிரம்மரிஷிகளும் வந்தார்கள். வாயுவும் தேவலோகத்திலுள்ள எல்லாப்புஷ்பங்களையும் வருஷித்தான். ஜங்கம மும் ஸ்தாவரமுமான ஜகத்தானது மிகவும் ஸந்தோஷத்தையடைந் தது. மிக்ககாந்தியுடையவரும் மஹாத்மாவுமான (ஈஸ்வரர்) தேவி

1 சுக்ரமென்றால் வீரியம் சுக்ரமென்கிறபதத்தில் ரகாரத்தைத்தள்ளிச் சுகரென்று பெயர்கொண்டார

யோடுகூடத் தாமாகவே பிரீதியுடன் அந்த வ்யாஸமுனிவருடையபுத் திரருக்குப் பிறந்தவுடனே விதிப்படி உபநயனஞ்செய்வித்தார். தேவர் களுக்கெல்லாம் தலைவனான இந்திரன் பிரீதியுடன் அவருக்குத தேவ லோகத்திலுள்ளதும் பார்க்க ஆச்சரியமுமான கமண்டலுவையும் தேவர்களுக்குரிய வஸ்திரங்களையும் கொடுத்தான் பாரதனே! அநேக மாயிரம் ஹம்ஸங்களும் ஸாரஸபக்ஷிகளும் நூறுசிறகுகளுடைய ஹம் ஸவிசேஷங்களும் கிளிகளும் அவரை வலம்வந்தன. திவ்யமான ஜன் மத்தையடைந்து மகாகாந்திமானும் மேதாவியும் பிரம்மசாரியும் அர ணியிலுண்டானவருமான சுகரானவர் ஸமாதியையடைந்து அப்பொ ழுது அவ்விடத்திலேயே வஸித்தார் மஹாராஜனே! வேதங்கள் உபநிஷத்துக்களுடனும் ஸூத்ரங்களுடனும் அவருடையபிதாவை வந்தடைந்ததுபோலவே பிறந்தவுடனேயே அவரை வந்தடைந்தன. மகாராஜனே!, வேதங்களையும் வேதாங்கங்களையும் அவற்றின்பாஷ்யங் களையும் அறிந்தவராயிருந்தும் அந்தச்சுகர் தர்மத்தையே ஆலோசித் துக்கொண்டு பிருகஸ்பதியை உபாத்தியாயராக வரித்தார் மகாமுனிவ ரான அவர் உபநிஷத்துக்களோடும ஸூத்திரங்களோடும்கூடிய எல் லாவேதங்களையும் இதிஹாஸத்தையும் தர்மசாஸ்திரங்களையும் முழு தும் அத்யயனஞ்செய்துவிட்டுக் குருவுக்குத் தக்ஷிணைகொடுத்து ஸமாவர்த்தனமென்கிற வித்தையின்முடிவைச் செய்துகொண்டு பிரம்ம சாரியும் ஸமாதியுடையவருமாயிருந்து உக்கிரமான தவஞ்செய்ய யத்தனித்தார். சிறு பிராயத்திலேயே பெரியதவத்தையுடைய அவர் ஞானத்தினாலும் தவத்தினாலும் தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் ஆலோசிக்கத்தக்கவரும் பூஜிக்கத்தக்கவருமானார். அரசனே! மோக்ஷ தர்மங்களை ஆராய்ந்து பார்க்கின்ற அவருடைய புத்தியானது கிருகஸ் தாஸ்ரமமுதலான மூன்று ஆஸ்ரமங்களிலும் பற்றவில்லை.

---

## முந்நூற்றுமுப்பத்துமூன்றாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

—:o:—

(சுகர் பிதாவின் கட்டளையால் ஜனகரை அடைந்தது.)

அந்தச் சுகர் [1]மோக்ஷத்தை ஆலோசித்துக்கொண்டே பிதாவை வந்தடைந்தார். மோக்ஷத்தை விரும்புகிற அவர் விநயத்துடன்

1 'மோக்ஷசாஸ்திரத்தை உபதேசம் பெறவேண்டுமென்றெண்ணி' என் பது பழையவுரை.

பிதாவைவணங்கி, 'ஓ பிரபுவே! என்னுடைய மனத்திற்கு மேலான சாந்தியானது உண்டாகும்படி மோக்ஷதர்மங்களில் ஸமர்த்தரும் பகவானுமான நீர் எனக்குச்சொல்லவேண்டும்' என்று கேட்டார். பரமரிஷியானவ்யாஸர் புத்திரனுடைய வார்த்தையைக்கேட்டு அவரை நோக்கி, 'புத்திர! மோக்ஷத்தையும் அநேகவிதமான தர்மங்களையும் அத்யயனம் செய்யக்கடவாய்' என்று சொன்னார். பாரதவம்சத்தார்சனே! தர்மத்தை வகிக்கிறவர்களில் சிறந்தவரானசுகர் பிதாவினுடைய கட்டளையினால் யோகசாஸ்திரத்தையும் ஸாங்கியசாஸ்திரத்தையும் முழுமையும் அறிந்தார். அந்தவ்யாஸர் பிரம்மதேஜஸோடு பிரம்மாவுக்குச் சமமான பராக்கிரமமுடையவராயிருக்கிற அந்தப்புத்திரரை மோக்ஷதர்மங்களில ஸமர்த்தராக நினைத்தபொழுது, 'மிதிலாதிபதியானஜனகனை அடையக்கடவாய். அந்தமிதிலாதிபன் உனக்குமோக்ஷவிஷயம் எல்லாவற்றையும் சொல்லுவான்' என்று சொன்னார். (அப்பொழுது,) சுகர் பிதாவினுடைய கட்டளையினால் தர்மத்தினுடைய நிஷ்டையையும் மோக்ஷத்தினுடைய பரமான ஸ்தானத்தையும் கேட்பதற்கு மிதிலாதிபரான ஜனகராஜனை அடைந்தார். (அவரவும்,) வியாஸர், 'நீ மனிதர்கள் செல்லுகின்றவழியில் கர்வமில்லாமல் போகவேண்டும். (யோக) பராபவத்தாலுண்டான ஆகாயகமனத்தால் போகக்கூடாது. ருஜுவாகச்செல்லவேண்டும். ஸுகத்தைத்தேடிக்கொண்டு போகக்கூடாது. விசேஷபதார்த்தங்களைத் தேடக்கூடாது. விசேஷபதார்த்தங்கள் பற்றுதலுக்குக்காரணம். என்னுடைய சிஷ்யனான அந்த அரசனிடத்தில் அகங்காரம் அடையத்தக்கதில்லை. அவனுடைய வசத்தில் இருக்கவேண்டும். அவன் உன்னுடையஸந்தேகத்தை நிவிருத்திசெய்வான். அந்த அரசன் தர்மத்தில் ஸமர்த்தன்; மோக்ஷசாஸ்திரத்தில் வல்லவன்; எனக்கு சிஷ்யன். அவன்சொல்லுவது சங்கையின்றிசெய்யத்தக்கது' என்று சொல்லினார். இவ்விதம் சொல்லக்கேட்ட தர்மபுத்தியுடைய அந்தமுனிவர் கடல்சூழ்ந்தபூமியை ஆகாயத்தால்தாண்டுவதற்கு ஸமர்த்தராயிருந்தாலும் மிதிலைக்குக் காலால் நடந்து சென்றார். அவர் மலைகளையும் ஆறுகளையும் புண்ணியதடாகங்களையும் அநேகமதயானைகளாலும் மிருகங்களாலும் நிரம்பியகாடுகளையும் மாசசோலைகளையும், கடந்து, பிறகு, மேருவைச்சார்ந்தஇளாவிருதவருஷம் ஹரிவருஷமிரண்டையும், பிறகு இமயமலையைச்சேர்ந்த கிம்புருஷவருஷத்தையும் இவ்விதம் கிரமமாகத்தாண்டிப் பாரதவருஷத்தை அடைந்தார். அந்தமகாமுனிவர் சீனர்களாலும் ஹூணர்களாலும் வசிக்கப்பெற்ற அநேகவிதமான தேசங்களைப் பார்த்துக்

கொண்டே ஆரியாவர்த்தமென்கிற இந்தத்தேசம் வந்தார். அவர் பிதாவின் வசனத்தைப்பறிந்து அந்த அர்த்தத்தையே ஆலோசித்துக் கொண்டு ஆகாயத்தில்செல்லுகின்றபக்ஷிபோல மார்க்கத்தைத்தாண்டினர்; ரமணீயமானபட்டணங்களையும் செழிப்புள்ள நகரங்களையும் விசித்திரமான ரத்தினங்களையும் பார்த்தும் பாராதவரானர். பிறகு, மார்க்கத்திலசெல்லுகிற அந்தசுகர் அழகிய பூந்தோட்டங்களையும் தேவாலயங்களையும் புண்ணியதீர்த்தங்களையும் தாண்டிச்சென்றார். அவர் சிறிதுகாலத்தில் தர்மமாக ராஜ்யம்வகிக்கிறவரும் மகாத்மாவுமானஜனகராலே பரிபாலிக்கப்பட்ட விதேஹதேசத்தை அடைந்தார் அவர் அந்தத்தேசத்தில பலவகை அன்னங்களும் சுவைபொருந்திய உணவுகளுமுள்ள கிராமங்களையும் மிகவும் செழிப்புள்ளவைகளும் அநேகம்பசுக்கூட்டங்களால் நிரம்பியவைகளுமான இடைச்சேரிகளையும் பார்த்துக்கொண்டு, நெறபயிர்களாலும் யவப்பயிர்களாலும்செழித்ததும் ஹம்ஸங்களும் ஸாரஸபக்ஷிகளும்வஸிக்கப்பெற்றதும் சோலைபொருந்திய அநேகம்தாமரைஓடைகளால் அலங்கரிக்கப்பட்டதும் மிகவும்செழிப்புடையஜனங்களால் ஸேவிக்கப்பட்டதுமான விதேகதேசத்தைக் கடந்து அழகுபொருந்தியதும் செழிப்புடையதுமான மிதிலையின் உபவனத்தை அடைந்தார் யானைகளாலும்குதிரைகளாலும் தேர்களாலும் நிறைந்ததும் ஆடவர்மகளிர்கள்நிரம்பியதுமான அதை அவர் பார்க்கிறவராயிருந்தும் பாராதவர்போலச் சலியாதவராய்த் தாண்டிச்சென்றார். மனத்தினாலே (பிதாவின்வசனமாகிற) அந்தப்பாரத்தைத்தாங்கிக்கொண்டு (மோக்ஷ விஷயமான) அந்தஅர்த்தத்தையே சிந்திக்கிறவரும் ஆத்மாவில் ரமிக்கிறவரும் தெளிவான மனத்தையுடையவருமாகி மிதிலையை அடைந்தார் அந்தமிதிலையின்வாயிலையடைந்து வாயில்காப்பவரால் தடுக்கப்பட்டுத் தியானம்செய்துகொண்டுநிற்க, இன்னரென்று அறிந்தபின்விடப்பட்டு உள்ளேபிரவேசித்தார் அவர், செல்வவான்களான ஜனங்களால் நிரம்பிய ராஜமார்க்கத்தின் வழியே ராஜகிருகத்தையும் அடைந்து சங்கையில்லாமல் பிரவேசித்தார். அவ்விடத்திலும் துவாரபாலகர்கள் கடுஞ்சொல்லினல் அவரைத்தடுத்தார்கள அவ்விடத்தில் சுகர் முன்போலவே கோபமில்லாமல் நின்றார். வெய்யிலால் வழியில் மிகவும் தாபத்தையடைந்தவரும் பசிதாகங்களாலுண்டான சிரமத்தையுடையவருமாகியும் களைப்பும் வாட்டமும் அடையவில்லை; வெய்யிலினின்றும் விலகவுமில்லை. அந்தத்துவாரபாலகர்களில் ஒருவன் (ஆகாய) மத்தியையடைந்த ஆதித்யன்போலநிற்கிற சுகரைப்பார்த்துச்

சோகமடைந்து முறைப்படி வணங்கிப பூஜிதது அஞ்சலிசெயது கொண்டு அவ்விடமிருந்து ராஜகிருகத்தினுடைய முதற்கட்டில் பிரவேசிக்கச்செய்தான். ஐயா! நிழலிலும் வெயிலிலும் ஸமமான பார்வையும் ஸமமானகாந்தியுமுடைய சுகர் மோக்ஷத்தையே சிந்தித் துக்கொண்டு அவ்விடத்திலேயே நின்றார் பிறகு, ஒருமுகூர்த்தத் திற்குள் அரசனுடையமந்திரி வந்து அஞ்சலிசெய்துகொண்டு அவரை அங்கிருந்தும் ராஜகிருகத்தின் இரண்டாவதுகட்டில் கொண்டுவந்துவிட்டான். அவ்விடத்தில் அந்தப்புரத்திலிருப்பதும் பெரியதும் சைத்ரரதமென்கிற குபேரனுடைய உத்யானத்திற்கு நிகரா னதும் அழகானதும் பூத்தமரங்களையுடையதும் நன்குஅமைக் கபபட்டஜலமுள்ளதுமான உத்யானத்தை அந்தமந்திரியானவன் அந்தசுகருக்குக்காண்பித்து உத்தமனான அந்தஜனகரையும் காண் பித்துத் தகுதியான ஆஸனமும்கொடுத்துவிட்டுத் திரும்பவும் அங்கி ருந்து வெளியிலசென்றான் (அபபொழுது,) அழகான வேஷமுடைய வர்களும் [1] தருணவயதுள்ளவர்களும் பிரியமான தோற்றமுடைய வர்களும மெல்லியசிவபபுவஸ்திரந்தரித்தவர்களும் புடம்வைத்த பொன்னாபரணமுடையவர்களும் [2] சல்லாபம் [3] ஆலாபமிவைகளில் ஸாமார்த்தியமுடையவர்களும் நாட்டியம் கானம் இவைகளில் தேர் ச்சிபெற்றவர்களும் சிரித்துக்கொண்டேபேசுகிறவர்களும் அழகிய அப்ஸரஸுகளுக்கொபபானவர்களும் அந்தரங்கத்துடன் உபசரிப் பதில் சக்தியுள்ளவர்களும் அபிப்ராயத்தை அறிகிறவர்களும் ஶ்ருங் காரசேஷ்டைகளில் தேர்ந்தவர்களும் தாஸிகளிற்சிறந்தவர்களுமான ஐம்பதற்கு மேற்பட்டஸ்திரீகள் அவரிடம் வந்தார்கள்; பாத்ய முதலானவைகள் கொடுத்துச் சிறந்த பூஜையினால் உபசரித்தார்கள்; அப்பொழுது, அந்தஸமயத்துக்குத்தகுந்த ருசியானஅன்னத்தினால் திருப்தியும் அடைவித்தார்கள். ஐயா! பாரத! அவர் போஜனம்செய்த பிறகு, ஒவ்வொருத்தியாக மிக்கஅழகான அந்தப்புரத்தோட்டத்தைக் காண்பித்தார்கள். (பிறர்) மனத்தைஅறிகின்றவர்களான ஸ்திரீகள் விளையாடுகிறவர்களும் நகைக்கிறவர்களும் இனிமையாகக் கானம் செய்கிறவர்களுமாகி உதாரமனமுடைய அவருக்குப் பணிவிடைசெய் தார்கள். சுத்தமனமுடையவரும் ஸந்தேகமற்றவரும் ஶ்ரவண மனனநிதித்தியாஸனமென்கிற மூன்றுகர்மங்களும்செய்தவரும் இந்

1 ஒருசொல் விடப்பட்டது.
2 ஒருவரோடொருவர் மனங்கலந்து பேசுதல்.
3 ஒருவரே கதைமுதலியன சொல்லுதல்.

திரியவசமுடையவரும் கோபத்தைஜயித்தவரும் அரணியிலுண்டானவருமானசுகர் ஸந்தோஷிக்கவுமில்லை; கோபிக்கவுமில்லை. சிறந்தவர்களான அந்தஸ்திரீகள் அவருக்குச் சிறந்ததும் சிறந்தவர்களுக்குரியதும் ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டதும் உயர்ந்ததான விரிப்புவிரித்ததும் படுக்கயோக்கியமுமான ஆஸனத்தைக்கொடுத்தார்கள். சுகர் பாதசுத்திசெய்துகொண்டு ஸந்தியை உபாஸித்துவிட்டு அந்தஅர்த்தத்தையே சிந்தித்துக்கொண்டு பரிசுத்தமான ஆஸனத்தில் உட்கார்ந்தார் ஸமர்த்தரானஅந்தசுகர் அதில் முன் ராத்ரியில் தியானத்திற்பற்றி[1]யிருந்துவிட்டு நடுராத்திரியில் முறைப்படி நித்திரைசெய்தார் பிறகு, ஒருமுகூர்த்தம்சென்று எழுந்திருந்து சுத்திசெய்துகொண்டு புத்திமானுனஅவர் ஸ்திரீகளால்சூழப்பட்டும் தியானத்தையேஅடைந்தார். பாரத! (மனம்) சலியாதவரான வ்யாஸபுத்திரர் இந்த விதியுடன் ராஜக்ருகத்தில அந்தமீதிப்பகலையும் அந்தராத்ரியையும் போக்கினுர்.

---

## மூந்நூற்றுமுப்பத்துநான்காவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

——:o:——

(ஜனகர் சுகரைப்பூஜித்து அவருக்கு ப்ரம்மஜ்ஞானத்தை உபதேசித்தது.)

பாரத! பிறகு, அந்தஜனகராஜர் மந்திரிகளுடன் புரோஹிதரைமுன்னிட்டுக்கொண்டும் எல்லாஅந்தபுரஸ்திரீகளாலும் ஆஸனத்தையும் பலவிதமானரத்தினங்களையும் எடுப்பித்துக்கொண்டும் சிரஸால் அர்க்கியத்தைஏந்திக்கொண்டும் குருபுத்ரரைவந்தடைந்தார். அப்பொழுது, அந்தஅரசர் அநேகரத்தினங்களால்அலங்கரிக்கப்பட்டதும் உயர்ந்தவிரிப்பால் விரிக்கப்பட்டதும் எல்லாவிஷயத்திலும் மங்களகரமும் செழிப்புடையதும் புரோகிதரால்கிரகிக்கப்பட்டதும் சிறந்ததும் பூஜிக்கப்பட்டதுமான ஆஸனத்தைவாங்கிக் கையால் துடைத்துக் குருபுத்திரரானசுகருக்குக்கொடுத்தார். அந்தஆஸனத்திலுட்கார்ந்த வ்யாஸபுத்திரரானஅந்தச்சுகரைச் சாஸ்திரப்படி பூஜித்து முதலில் [2]பாத்தியத்தைக்கொடுத்துப் பிறகு அர்க்கியத்தையும் கோவையும் [3]கொடுத்தார். அவரும் மந்திரத்தையுடைய பூஜையை

---

1 வேறு பாடம். 2 கால் கழுவ நீர்.

3 'ந்யவேதயத்' என்பது மூலம்.

விதிப்படி ஏற்றுக்கொண்டார். ராஜஶ்ரேஷ்டனே! பிராம்மணஶ்ரேஷ்டரும் மிக்கதேஜஸுள்ளவருமான சுகர் ஜனகரிடமிருந்தும் அந்தப் பூஜையை ஏற்றுக்கொண்டு பசுவைக் (கொண்டுபோகும்படி) கட்டளையிட்டு அரசரையும் கௌரவப்படுத்திப் பரிவாரங்களையுடைய அரசரிடம் அழிவில்லாத க்ஷேமத்தையும் ஆரோக்கியத்தையும் வினவினார். பிறகு, உதாரமான மனமும் வம்சமுமுடைய அந்த அரசர் அவரால் அனுமதி செய்யப்பட்டுப் பரிவாரங்களுடன் அஞ்சலி செய்துகொண்டு பூமியிலுட்கார்ந்தார். பூபதியான அரசர் வ்யாஸபுத்திரரை நோக்கிக் குசலத்தையும் குறைவில்லாமையையும் வினவி, 'வந்ததென்ன?' என்றும் பிரஶ்னம் செய்தார். சுகர், "உமக்கு மங்களம். 'மோக்ஷதர்மங்களின் விஷயத்தை அறிந்தவனும் விதேஹ தேசத்து அரசனும் என்னால் யாகம் செய்விக்கத்தக்கவனுமான ஜனகனென்பவன் பிரஸித்தனாயிருக்கிறான். பிரவிருத்தியிலோ நிவிருத்தியிலோ உனக்கு மனத்தில் ஸந்தேகமிருக்குமானால் சீக்கிரம் அவனிடம் செல்லு. அவன் உன்னுடைய ஸந்தேகத்தை நிவிருத்திசெய்வான்' என்று என்பிதா எனக்குச் சொன்னார். நான் பிதாவின் கட்டளைப்படி உம்மைப் பிரஶ்னம் செய்ய இங்கு வந்தேன். தர்மிஷ்டர்களில் சிறந்தவரே! அதனை உள்ளபடி எனக்குச் சொல்லவேண்டும். இவ்வுலகில் பிராம்மணனால் எது செய்யத்தக்கது? மோக்ஷரூபமான புருஷார்த்தமானது என்ன ஸ்வரூபமுடையது? மோக்ஷமானது எப்படி அடையத்தக்கது? ஞானத்தினாலேயா? தவத்தினாலேயா?' என்று கேட்டார். ஜனகன், "பிராம்மணனாலே ஜன்மம் தொடங்கி எது செய்யத்தக்கதோ அதைக்கேளும். ஐயா! உபநயனம் செய்யப்பட்டு வேதத்தில் பற்றுதலுடையவனாயிருக்க வேண்டும். பிராம்மணரே! தவத்தோடும் குருசுஶ்ரூஷையோடும் பிரம்மசரியத்தோடும் தேவதைகளுடைய கடனும் ரிஷிகளுடைய கடனும் தீர்ந்தவனும் அஸூயையில்லாதவனும் நியமமுடையவனுமாயிருந்து வேதங்களை அத்யயனம்செய்து குருவுக்குத் தக்ஷிணைகொடுத்துவிட்டு (அவருடைய) அனுமதிபெற்றுக்கொண்டு பிறகு ஸமாவர்த்தனம்செய்யவேண்டும். ஸமாவர்த்தனம் செய்துகொண்டு கிருகஸ்தாஶ்ரமத்தில் தன்னுடைய பத்னியிடமே பற்றுள்ளவனாய் வஸிக்கவேண்டும். அஸூயையில்லாதவனும் நியாயப்படி அக்கினியை ஆதானம் செய்தவனும் கபடமற்றவனுமாகிப் புத்திரபௌத்திரர்களை உண்டுபண்ணிப் பிறகு வானப்பிரஸ்தாஶ்ரமத்தில் சாஸ்திரப்படி அந்த அக்கினிகளையே ஆராதித்துக்கொண்டு அதிதிகளிடம் பிரியமுடையவனாக வஸிக்கவேண்டும். தர்மத்தையுணர்ந்த அந்த வானப்பிரஸ்தன்

வனத்தில் அக்கினிகளை முறைப்படி ஆத்மாவில் ஸமாரோபணம் செய்துகொண்டு துவந்துவமில்லாதவனும் ஆசையொழிந்தமனமுமுடையவனுமாகி ப்ரம்மாஶ்ரமமென்கிற ஸந்யாஸாஶ்ரமபதத்தில் வஸிக்கவேண்டும்' என்று சொன்னார். சுகர், 'சாஸ்திரஞானமும் அனுபவமுமுண்டாகி இருதயத்தில் சாஶ்வதமான ப்ரம்மம் பிரத்யக்ஷமாயிருக்கையில் அவஶ்யமாக [1]ஆஶ்ரமங்களிலாவது வனங்களிலாவது இருக்கவேண்டுமா? அதனை உம்மிடம் கேட்கிறேன். அதனை நீர் சொல்லவேண்டும். அரசரே! வேதார்த்தத்தின் உண்மையை அனுசரித்து நீர் எனக்குச் சொல்லவேண்டும்' என்று கேட்டார். (அப்பொழுது) ஜனகர், [2]ஞானமும் [3]விஜ்ஞானமுமில்லாமல் மோக்ஷப்ராப்தி உண்டாகாது. குருவின்ஸம்பந்தமில்லாமல் ஞானலாபமில்லையென்று கருதப்படுகிறது. இவ்வுலகில் குருவை ஓடக்காரனாகவும் அவனுடைய ஞானத்தை ஓடமாகவும் சொல்லுகிறார்கள் விஜ்ஞானத்தையடைந்து கிருதகிருத்யனும் (ஸம்ஸாரஸாகரத்தைத்) தாண்டினவனுமாகி அந்த [4]இரண்டையும் தள்ளவேண்டும். உலகங்களும் கர்மங்களும் நசியாமலிருப்பதற்காக முன்னோர்களாலே நான்கு ஆஶ்ரமங்களையும் பற்றியதர்மமானது அனுஷ்டிக்கப்பட்டது இம்மையில, இந்தக்கிரமப்படி கர்மங்களுக்குரிய அநேகம் பிறப்புக்களில், புண்யபாபகர்மங்களை விட்டு மோக்ஷமென்பது அடையப்படுகிறது. இந்த ஜீவன் அநேக ஸம்ஸார ஜன்மங்களிலே சுத்திசெய்யப்பட்ட (புத்திமுதலான) கரணங்களாலே சுத்தமனமுடையவனாகி முதலாஶ்ரமத்திலேயே மோக்ஷத்தையடைகிறான். அந்தமுதலாஶ்ரமத்தையடைந்தே முக்தனும் அனுபவிக்கப்பட்ட புருஷார்த்தத்தையுடையவனும் பரமாத்மாவையே அடைய விருப்பமுள்ளவனுமாயிருக்கும் பண்டிதனுக்கு மூன்று ஆஶ்ரமங்களிலும் என்ன பயன் உண்டாகும்? எப்பொழுதும், ரஜோகுணத்தாலும் தமோகுணத்தாலுமுண்டான தோஷங்களை விலக்கவேண்டும். ஸாத்விகமார்க்கத்தையடைந்து புத்தியினால் தன் ஆத்மாவைப் பார்க்கவேண்டும். தன் ஆத்மாவை எல்லாப்பிராணிகளிடத்திலும், எல்லாப்பிராணிகளையும் தன்னாத்மாவிடத்திலும் பார்க்கிறவன் ஜலத்தில் ஹம்ஸமிருப்பதுபோல ஸம்பந்தப்படமாட்டான். சமனத்தை அடைந்தவனும் துவந்துவமற்றவனுமான அவன், (ஸ்தூலஸூக்ஷ்மகாரண)

---

1 'ஆஶ்ரமேஷு த்ரிஷு' என்பது வேறு பாடம்; 'மூன்று ஆஶ்ரமங்களிலும்' என்பது பொருள்.

2 சாஸ்திரத்தினாலுண்டானது.

3 அனுபவ ஞானம்.

4 ஓடத்தையும் ஓடக்காரனையும்.

5 வேறு பாடம்.

தேகங்களைவிட்டுத் [1]தாழ்ந்தகதியிலிருந்து பக்ஷிபோல ஊர்த்வ கதியை அடைந்து முக்தனாகி மோக்ஷத்தில் அளவற்றதன்மையை அடைகிறான். ஐயா! இந்த விஷயத்தில் முன் யயாதிராஜனால் சொல்லப்பட்டவையும் மோக்ஷசாஸ்திரத்தில தெரிந்தவர்களான பிராம்மணர்களாலே தரிக்கப்படுகின்றவையுமான ச்லோகங்களைக் கேளும். (அவற்றின்பொருளா,) 'ஜோதியானது ஆத்மாவிலிருக்கிறது. மற்ற விடத்திலில்லை அது எல்லாபபிராணிகளிடத்திலும் ஸமமாயிருக்கிறது. மிகவும் ஸமாதியுடன் கூடிய சித்தமுடையவனால அது நேரில் பார்ப்பதற்குத்தக்கது. எவனிடமிருந்து மற்றவன் பயப்படவில்லையோ, எவன் மற்றவனிடமிருந்து பயப்படுகிறதுமில்லையோ, எவன் (ஒன்றையும்) விரும்புகிறதில்லையோ, வெறுக்கிறதுமில்லையோ அவனே பரம்மமாகிறான் எப்பொழுது, எல்லாபபிராணிகளின் விஷயத்திலும் செய்கையினாலும் மனத்தினாலும் சொல்லினாலும் கெட்டஎண்ணத்தைசசெய்யவில்லையோ அபபொழுது பரம்மமாகிறான் மனத்துடன் ஆத்மாவைசசேர்த்து மோகத்தையுண்டுபண்ணுகிற பொறாமையை விட்டுக் காமத்தையும் மோகத்தையும் விட்டுவிட்டுப பிறகு பிரம்மமாயிருப்பதை அடைகிறான். எபபொழுது, இவன் கேட்கத்தக்கதிலும் பார்க்கத்தக்கதிலும் எல்லாப்பிராணிகளிடத்திலும் ஸமமாகிறானோ அபபொழுது த்வந்த்வமற்று ப்ரம்மமாகிறான். எபபொழுது, துதியையும் நிந்தையையும் தங்கத்தையும் இரும்பையும் ஸுகத்தையும் துக்கத்தையும் குளிர்ச்சியையும உஷ்ணத்தையும் அர்த்தத்தையும் அனர்த்தத்தையும் பிரியத்தையும் அப்ரியத்தையும் பிறப்பையும் இறப்பையும் ஸமமாகவேபார்க்கிறானோ அபபொழுது பிரம்மமாகிறான். இவ்வுலகில் ஆமையானது (தன்னுடைய) உறுப்புக்களை வெளியில் நீட்டித் திரும்பவும் சுருக்கிக்கொள்வதுபோல யதியானவன் மனத்தால் இந்திரியங்களை அடக்கிக்கொள்ளவேண்டும். இருட்டால் நிரம்பியவீடு தீபத்தால் பார்க்கபபடுவதுபோல அஜ்ஞானத்தால் நிரம்பிய ஆத்மாவானது புத்தியாகிற தீபத்தைக்கொண்டு பார்க்கக்கூடியது' என்பது, புத்திமான்களில் சிறந்தவரே! உம்மிடத்தில் இந்த எல்லாவற்றையும் பார்க்கிறேன். என்னால் சொல்லப்படாமலிருக்கிறதையும் நீர் உண்மையாக அறிவீர். ஓ! பிரம்மரிஷியே! நீர் உம்முடைய பிதாவின்அருளாலும் உம்முடையசிக்ஷையினாலும் விஷயங்களின்முடிவையடைந்தவராக அறியப்பட்டீர். அந்தமகாத்மாவினுடைய அனுக்ரகத்தினாலேயே எனக்கும் இந்தத்திவ்யஞானமானது உண்

---

1 வேறு பாடம்.

டாயிற்று. அதனால், நான் உம்மை அறிந்தேன். உமக்கு விஜ்ஞா னம் அதிகமாயிருக்கிறது. உம்முடையகதியும் அதிகமாயிருக்கிறது. உம்முடையயோகைஶ்வரியமும் அதிகமாகவிருக்கிறது. அதனை நீர் அறியவில்லை. இளமையினாலேயோ ஸந்தேகத்தினாலேயோ பயத்தி லிருந்தும்விடபடாமையினாலேயோ அனுபவமுண்டாயிருந்தும் அந் தக்கதியை அறியவில்லை. என்னைப்போன்றவர்களாலே ஸம்சயமறுக் கப்பட்டுச் சுத்தமானமுயற்சியுடன் இருதயமுடிச்சுக்களைவிட்டுவிட்டு அந்தக்கதியை அடைகிறான் ஓ! பிராம்மணரே! நீர் அனுபவமுண் டானவரும் ஸ்திரபுத்தியுடையவரும் ஆசையொழிந்தவருமாகி முயற் சியில்லாமலே அந்தப்பரப்ரம்மத்தை அடைகிறீர். உமக்கு ஸுக துக்கங்களில் வேறுபாடில்லை. அவாவுடையவராகவில்லை. ஆடல் பாடல்களில் உத்ஸாகமில்லை. ஸ்திரீகளிடத்தில இச்சை உண்டா கிறதில்லை. பந்துக்களிடத்தில் உமக்குப் பற்றுதலில்லை. பயங்க ளுண்டாகும்பொழுது உமக்குப் பயமில்லை மஹாபாக்கியமுள்ளவரே! நான் உம்மை ஓட்டாஞ்சில்லியிலும் ஸ்வர்ணத்திலும் ஸமமாயிருக்கிற வராகப் பார்க்கிறேன். நானும் மற்றப்புத்திமான்களும் உம்மை நாச மற்றதும் கெடுதலற்றதும் பரமுமான அந்தமார்க்கத்தை அடைந்தவ ராகப் பார்க்கிறோம். இவ்வுலகில் பிராம்மணனுக்குரிய பயனான மோக்ஷபுருஷார்த்தத்தில் நீர் இருக்கிறீர். வேறு எதைக் கேட்கிறீர்?' என்று சொன்னார்.

---

## முந்நூற்றுமுப்பத்தைந்தாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

—:o:—

**(ஸுப்ராம்மண்யர் உலகை அவமதித்துக்கூறியதும், விஷ்ணு சக்தியை அசைத்ததும், ஸுமந்துமுதலியோர் வ்யாஸரிடம் வேதமோதியதும்.)**

மனத்தை ஜயித்தசுகர் இந்த வார்த்தையைக்கேட்டு உறுதிசெய் துகொண்டு மனத்தை ஆத்மாவினிடம் செலுத்திய புத்தியினால் ஆத் மாவைப்பார்த்துச செய்யவேண்டியதைச் செய்தவரும், ஸுகியும் சாந் தருமாகி இமயமலையைநோக்கி வாயுவுக்குச் சமமாக மௌனத்து டன் வடக்குமுகமாகச் சென்றார். இந்தஸமயத்திலேயே தேவரிஷி யானநாரதரும் ஸித்தர்களாலும் சாரணர்களாலும் அடுக்கப்பட்ட தும், அப்ஸரஸுகளுடைய கூட்டங்களால் சூழப்பட்டதும், கானசப் தத்தால் நாதமுடையதும், அநேகமாயிரம்கின்னரர்களாலும் சிறந்த

வண்டுகளாலும் நீர்க்காகங்களாலும் கருங்குருவிகளாலும் பலவிதமான சகோரப்க்ஷிகளாலும் விசித்திரவர்ணமுடையவைகளும் அநேக கேகாசப்தங்களால் விளங்குகின்றவைகளுமான மயில்களாலும் ராஜஹம்ஸஸமூகங்களாலும் செந்தோஷத்தையடைந்த குயில்களாலும் வியாபிக்கப்பட்டதுமான அந்த இமயமலையைப் பார்ப்பதற்குப் புறப்பட்டார். பக்ஷிகளுக்கெல்லாம் அரசனாயிருக்கிறகருடனும் நித்தியம் வஸிக்கிற அந்தமலையில் நான்குலோகபாலர்களும் ரிஷிகணங்களோடு கூடினதேவர்களும் உலகத்தினுடைய ஹிதத்தில் விருப்பத்தால் நித்தியம்வருகின்றார்கள். மஹாத்மாவானவிஷ்ணுவினாலே புத்திரனிமித்தம்அந்தமலையில் தவம்செய்யப்பட்டது. அந்தமலையிலேயே ஸுப்ரம்மண்யரால் பால்யத்தில் தேவர்கள் அவமதிக்கப்பட்டார்கள். மூன்று உலகத்தையும்அவமானம்செய்து சக்தியானது பூதலத்தில் வைக்கப்பட்டது அந்தஇடத்தில அப்பொழுது ஸ்கந்தரானவர் ஜகத்தைநிந்தித்து, 'என்னைவிடமேலானவனும் அந்தணரிடம் அதிகஅன்புள்ளவனும் அவருக்குநன்மைசெய்பவனும் மூவுலகங்களுள்ளும்வீரனுமான வேறுஇரண்டாமவனிருந்தால அவன் இந்தசக்தியைத் தூக்கட்டும்; அல்லது அசைக்கவாவதுசெய்யட்டும்' என்றுசொன்னார். அதைக் கேட்டு உலகத்திலுள்ளவர்கள், 'எவன் இதைத் தூக்குவான்' என்று மனவருத்தமடைந்தார்கள். பிறகு, பகவானான விஷ்ணுவானவர் [1]பிரமத்தைஅடைந்த இந்திரியங்களையும் மனத்தையுமுடையதும் அஸுரர்கள இராக்ஷஸர்கள் இவர்களுடன்கூடினதுமான எல்லாத்தேவகணமும் அவமதிக்கப்பட்டதைப் பார்த்தார்; இந்தவிஷயத்தில் எது நல்லகாரியமாகுமென்று ஆலோசித்து அவரிடமிருந்து அவமானத்தைபொறுக்காமல் ஸ்கந்தரையும் பார்த்தார் மிகவும்சுத்தமான மனமுடையபுருஷோத்தமர் அப்பொழுது மிகவும்ஜ்வலிக்கிறதான சக்தியை இடக்கையால் பிடித்து அசைத்தார் [2] பலசாலியான விஷ்ணுவினாலே சக்தியானது அசைக்கப்பட்டபோது மலைகளும் தோப்புகளும் காடுகளும் நிரம்பினபூமிமுழுமையும் நடுங்கியது ஸ்கந்தசக்தியுடையவராயிருந்தும் அவரால் அப்பொழுது அது அசைக்கப்பட்டதாயிற்று, ஸமர்த்தரானவிஷ்ணுவினாலே குமாரராஜனுக்கு அவமதிப்புவராமல் ரக்ஷிக்கப்பட்டது. பகவானானவர் அதைஅசைத்துவிட்டு ப்ரஹ்லாதனைநோக்கி, 'குமாரனுடையவீரியத்தைப் பார் மற்றவன் இதைச் செய்யமாட்டான்' என்று சொன்னார். அப்பொழுது, அவன்

1 சுழலுகின்ற

2 ஸ்கந்தனை அவமதிக்கக்கூடாதென்று அவ்விதம்செய்தார்.

அந்தவார்த்தையைப்பொருமல் அன்தத்தூக்க நிசசயம்செய்து அந்தச் சக்தியைப்பிடித்தான் அதை அசைக்கமுடியவில்லை ஹிரண்யகசிபுவி னுடையபுத்திரனை அவன் பெரியசபதத்தைவெளியிட்டு மலையினுசசி யில் மூர்ச்சையடைந்து தளர்ச்சியுற்றாக தரையில் விழுந்தான் மனத் தைஜயிக்காதவர்களாலே அடையமுடியாததும் ஆதித்யபர்வதமென்று பெயருடையதுமான ஈஸ்வாருடைய ஆஸ்ரமமானது ஜ்வலிக்கிறஅக்னி யினுல் சூழப்பட்டிருக்கிறது ஐயா! விருஷபதவஜரான அந்தஈஸ்வ ரர் அந்தவிடததில வடதிக்கையடைந்து இமயமலையினுடையபக்கத் தில் மாற்றமுடியாததவத்தை எப்பொழுதும்செய்தார். அவவிடத்தில, யக்ஷர்களாலும் ராக்ஷஸர்களாலும் தானவர்களாலும் செல்லஇயலாது. அவ்விடத்திலவீரியமுள்ள அக்னிபகவான் தானே ஆயிரம்தேவவரு ஷம்ஒருகாலால்நிற்பவரும் புத்திமானுமாகியமகாதேவருடையஎலலா விக்னங்களேயும் நிவிருததிசெய்துகொண்டு பத்துயோஜனவிஸ்தாரம் அக்னிஜ்வாலைகளால சூழப்பட்டதாயிருக்கும்படி நிறகிருன். அந்த விடத்தில் பெரியவ்ரதமுடையமஹாதேவர் தேவர்களைத் (தவத்தால்) தபிக்கும்படி செய்தார். புத்திமானை ஹிமவானுடைய கீழ்த்திசையை அடைந்து ஏகாந்தமானதாழ்வரையில் பெரியதவமுடையவரும் பரா சரபுத்திரருமான வ்யாஸமுனிவர் மஹாபாக்கியவானை ஸுமந்து, வைசம்பாயனர், மகாப்பிராஜ்ஞரானஜைமினி, தவமுடையவரானபை லர்என்னும்சிஷ்யர்களுக்கு வேதங்களை அத்தியயனம் செய்வித்தார். மிக்கதவமுடையவ்யாஸர் இந்தசசிஷ்யர்களால் சூழபபெற்றிருந்தார். ஆகாயத்தில்சூரியன்போலச சுத்தஸ்வரூபமுடையவரும் அரணியி லுண்டானவருமான சுகர் அவ்விடத்தில் ரமணீயமும் உத்தமுமான பிதாவின் ஆஸ்ரமத்தைக்கண்டார். அப்பொழுது, வ்யாஸர் அசைக்கப் பட்டதும் ஜ்வலிக்கின்றதுமான அக்னிக்குநிகரானவரும் ஸுர்யனுக் குசசமமானதேஜஸுடையவரும் யோகத்துடன்கூடினவரும் மஹா த்மாவுமானபுத்திரர் நாணிலிருந்துவிடப்பட்டபாணம்போல விருக்ஷங் களிலும் மலைகளிலும் தேசங்களிலும் பற்றுமல் வருகிறதைப் பார்த் தார். அந்தசசுகர் ஸமீபம்வந்து பிதாவின்பாதங்களில் வணங்கிஞர். மகாமுனியானஅவர் ப்ரீதியுடன் அந்தசசிஷ்யர்களுடன் சேர்ந்து கொண்டார். பிறகு, அவர் மனத்திலமகிழ்ச்சியடைந்து பிதாவினிடம் ஜனகராஜருடன்நடந்தஸகலஸம்வாதத்தையும் குறைவின்றித் தெரி வித்தார். இவ்விதம் பராசரர்புத்திரரும் வீரியவானுமான வ்யாஸமகா முனிவர் சிஷ்யர்களுக்கும் புத்திரருக்கும் அத்தியயனம் செய்வித் துக்கொண்டு ஹிமயமலையின்மேலே வஸித்தார். பிறகு, ஒருஸமயம்

ம்வேதார்த்தியயனத்தில்தேர்ந்தவர்களும் சாந்தமானமனமுடையவர்களும் இந்திரியங்களைஜயித்தவர்களுமான அந்தச்சிஷ்யர்கள் அவரைச் சுற்றிஇருந்தார்கள். அப்பொழுது, உடனே தவமுடையவர்களாயிருக்கிறஅந்தச்சிஷ்யர்கள், வேதங்களிலும் வேதாங்கங்களிலும்தேர்ச்சிஅடைந்து குருவானவ்யாஸரைநோக்கி, அஞ்சலிசெய்துகொண்டு, 'மிக்கதேஜஸையுடையவர்களும் யசஸினால்விருத்திசெய்விக்கப்பட்டவர்களுமாயிருக்கிறோம். இப்பொழுது, குருவான நீர் ஓர்அநுக்ரகம் செய்யவேண்டுமென்றுவிரும்புகிறோம்' என்றுசொன்னார்கள். பிரம்மரிஷியான வ்யாஸர் இவ்விதமான அவர்களுடைய வார்த்தையைக் கேட்டு அவர்களைநோக்கி, 'குழந்தைகளே! உங்களுக்கு நான் செய்யக்கூடியவிருப்பத்தைச் சொல்லுங்கள்' என்று சொன்னார். ராஜனே! அந்தச்சிஷ்யர்கள் குருவினுடைய அந்தவார்த்தையைக் கேட்டு மனத்தில் சந்தோஷத்தையடைந்து திரும்பவும் அஞ்சலி செய்துகொண்டு குருவைச சிரத்தால்வணங்கி எல்லாரும்சேர்ந்து, 'ஓ! முனிசிகாமணியே! உபாத்தியாயரானநீர் ப்ரீதியுள்ளவரானால் நாங்கள் தன்யர்களாகிறோம். ஆனாலும், நாங்களெல்லாரும் குருவான உம்மால் வரம் கொடுக்கப்பட விரும்புகிறோம். உம்முடைய ஆறாவதுசிஷ்யன் கியாதியை அடையக்கூடாது. இந்த விஷயத்தில் எங்களுக்குக் கிருபைசெய்யவேண்டும். உமக்கு நாங்கள் நாலுசிஷ்யர்கள்; ஐந்தாமவர் குருவான உமதுபுத்திரர். இந்தஐவரிடத்திலும் வேதங்கள் நிலைத்திருக்கவேண்டும். இது எங்களால் விரும்பப்பட்டவரம்' என்று இந்தஉத்தமமானவார்த்தையைச் சொன்னார்கள். சிஷ்யர்களுடையவார்த்தையைக்கேட்டு வேதார்த்தத்தின் உண்மையையுணர்ந்தவரும் பராசரரின்புத்திரரும் புத்தியாலும் பரலோகவிஷயத்தைச் சிந்திக்கிறவரும் தர்மாத்மாவுமாகிய வ்யாஸமுனிவர் சிஷ்யர்களைநோக்கித் தர்மத்தைவிட்டுவிலகாததும் மோக்ஷத்திற்குஸாதனமுமான ஒரு வசனம் சொல்லலானார். '(இந்த வேதமானது) பிரம்மலோகத்தில்நிலைத்ததானவாஸத்தை நன்குவிரும்புகிறவனும் பரப்ரம்மத்தைவிசாரிக்கவிருப்பமுடையவனுமான பிராம்மணனுக்கு எப்பொழுதும் உபதேசிக்கதக்கது. நீங்கள் (சிஷ்யர்களால்) பெருகக்கடவீர்கள், இந்தவேதத்தைப் பரவும்படிசெய்யுங்கள். சிஷ்யனாகாதவனிடத்திலும் விரதமில்லாதவனிடத்திலும் மனத்தைவெல்லாதவனிடத்திலும் (இதைக்) கொடுக்கக்கூடாது. சிஷ்யனுக்குரியஎல்லாக்குணங்களும் உண்மையாக அறியத்தக்கன. நடக்கையைப்பரீக்ஷியாமல் ஒருவிதத்தாலும் வித்தையை உபதேசிக்கக்

கூடாது. சுத்தமானஸ்வர்ணத்தைக் காயசசுதலாலும் வெட்டுதலாலும் உரைத்தலாலும் பரீக்ஷிப்பதுபோலச் சிஷ்யர்களேயும் குலம் குணமுதலியவைகளால் பரீக்ஷிக்கவேண்டும். நீங்கள் சிஷ்யர்களை ஏவக்கூடாதமிக்கபயமுள்ளகாரியதத்தில் ஏவக்கூடாது. புத்திக்கும் படிப்புக்கும்தக்கபடி வித்தை பயன்படும். எல்லாரும் ஸங்கடங்களைத் தாண்டட்டும். எல்லாரும் மங்களங்களைப் பார்க்கட்டும். பிராம்மணனை முன்னேவைத்துக்கொண்டு நாலுவர்ணங்களையும் கேட்கும்படிசெய்ய வேண்டும். இது வேதத்தின் அத்யயனமன்றோ? அதுவோ பெரிய காரியமாகக் கருதப்பட்டது. பிரம்மாவினாலே தேவதைகளுடைய ஸ்துதியின்பொருட்டு இவ்வுலகில் வேதங்கள் ஸ்ருஷ்டிக்கப்பட்டன. வேதத்தினகரையைஅடைந்தவனானபிராம்மணனை மதிமயங்கி நிந்திப்பவன் பிராம்மணனவமானத்தால் ஐயமற அவமானத்தையடைவான். அதர்மமாக உபதேசம்செய்பவனும் அதர்மமாக ப்ரச்னம் செய்பவனுமான அவர்களில் ஒவ்வொருவனும் மரிப்பான்; அதிகமான பகையையும் அடைவான். வேதாத்யயனத்தின்விதியைப்பற்றின இதுஎல்லாம் உங்களுக்குச சொல்லபபட்டது. சிஷ்யர்களுக்கு உபகரிக்கவும் வேண்டும். இது உங்களுடையஇருதயத்தில் இருக்கவும்வேண்டும்' என்றுசொன்னார்.

---

## முந்நூற்றுமுப்பத்தாறுவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

**(ஸுமந்துமுதலியோர் வ்யாஸரிடம் விடைபெற்றுச் சென்றதும், நாரதர் எதுஎதற்கு எதுஎது தோஷமென்பதையும் பிசாசின்கதையையும் சொல்லி வ்யாஸரை வேதமோதச்சொல்லியதும், வ்யாஸர் பெருங்காற்றடிக்கையில் வேதமோதக்கூடாதகாரணத்தைச் சுகருக்குச்சொல்லியதும்.)**

மிக்கதேஜஸுள்ள வ்யாஸருடையசிஷ்யர்கள் குருவினுடைய இந்தவார்த்தையைக்கேட்டு உடனே மனத்தில் ஸந்தோஷத்தையடைந்து ஒருவரைஒருவர் ஆலிங்கனம்செய்துகொண்டார்கள் 'பகவானான குரு அந்தஸமயத்திற்கும் வருங்காலத்திற்கும் மிகவும்ஹிதமான ஒன்றைச் சொல்ல நாம் கேட்டோம். அது நம்முடையமனத்தில் நன்றாகப் பதிந்துவிட்டது. அதை அப்படியே செய்வோம்' என்று இவ்விதம் ஒருவரோடொருவர் ஸம்பாஷணம்செய்துகொண்டு மனத்

தில் மிகவும் பிரீதியடைந்து மறுமொழியில் ஸமர்த்தர்களான அவர்கள் திரும்பவும் குருவை நோக்கி, 'பிரபுவே! உமக்கு இஷ்டமிருக்குமானால் வேதங்களைப்பரவச்செய்வதற்கு இந்தமலையிலிருந்து பூமிக்குச்செல்ல நாங்கள் விரும்புகிறோம்' என்று தெரிவித்தார்கள். ஸமர்த்தரான பராசரபுத்திரர் சிஷ்யர்களுடைய வார்த்தையைக்கேட்டு, பிறகு, 'இஷ்டமிருக்குமானால் பூமிக்கோ தேவலோகத்துக்கோ போகலாம். வேதத்திற்குப் பலகெடுதிகளுண்டு. நீங்கள் ஜாக்கிரதையாயிருக்கவேண்டும்' என்று அறம்பொருள்களுடன் கூடினதும் ஹிதமுமான வார்த்தையைசசொன்னார். பிறகு, அவர்களெல்லாரும் ஸத்யவாதியானகுருவினாலே அனுமதிகொடுக்கப்பெற்று அவரைப்பிரதக்ஷிணம் செய்து தலையால்வணங்கிவிட்டுச சென்றார்கள். உடனே, அவர்கள் பூமியிலிறங்கிப் பிராம்மணர்களையும் அரசர்களையும் வைசியர்களையும் யாகம் செய்யும்படி செய்து அக்னிஹோத்ரமுதல் ஸோமயாகபரியந்தமான நான்கு கர்மாவைச் செய்வித்தார்கள்; எப்பொழுதும் இருபிறப்போர்களாலே பூஜிக்கப்பட்டவர்களும் ஸந்தோஷிக்கிறவர்களும் கிருகஸ்தாச்ரமத்தில பற்றுதலுள்ளவர்களும் வேள்விசெய்வித்தலிலும் ஓதுவிததலிலும் பற்றுதலுள்ளவர்களும் ஸம்பத்தையுடையவர்களும் உலகத்தில் பிரஸித்திபெற்றவர்களுமாயிருந்தார்கள். சிஷ்யர்கள், (பூமியில) இறங்கியவுடன், புத்திமானும் புத்திரரை ஸஹாயமாயுடையவருமான வ்யாஸர் மௌனமாகத் தியானஞ்செய்துகொண்டு ஏகாந்தத்திலிருந்தார். இந்தசசமயத்தில், தேவரிஷியான நாரதர் ஸித்தராலும் சாரணராலும் ஆச்ரயிக்கப்பட்ட இமயமலையைப் பார்க்க வந்தார். (அப்பொழுது,) மிகபபெரிய தவத்தையுடைய நாரதரானவர் ஆச்ரமஸ்தானத்தில அந்தவ்யாஸரைக் கண்டார். பிறகு, அவரை ஸமயத்தில் மதுரமான அக்ஷரங்களையுடைய வார்த்தையினால், 'ஓ! மகரிஷியே! வஸிஷ்டகுலத்தில் பிறந்தவரே! வேதகோஷமானது இல்லையே. ஒருவராகத் தியானம்செய்துகொண்டு ஆலோசிக்கிறவர்போல ஏன் மௌனமாகவிருக்கிறீர்? வேதகோஷங்களில்லாத இந்தப் பர்வதமானது ரஜஸினாலும் தமஸினாலும், ராகுவினால் பீடிக்கப்பட்ட சந்திரன்போலச் சோபிக்கவில்லை. வேதகோஷமில்லாமையால தேவர்களின் கூட்டங்களாலும் ரிஷிகளின் கூட்டங்களாலும் அடையப்பட்டிருந்தும் முன்விளங்கியதுபோலில்லாமல் வேடர்களுடைய கிருகம் போலிருக்கிறது. ரிஷிகளும் தேவர்களும் பெரியகாந்தியுடைய கந்தருவர்களும் வேதகோஷமில்லாதவர்களாகி முன்போல விளங்கவில்லை' என்று சொன்னார். (அப்பொழுது,) வ்யாஸர் நாரதருடைய

வார்த்தையைக்கேட்டு அவரை நோக்கி, 'வேதத்தைச்சொல்வதில் ஸமர்த்தரான மகரிஷியே! நீர் சொல்லிய இது என்மனத்திற்கு அநுகூலமானதே. நீர் எனக்குச்சொல்லவேண்டும். நீர் (எனக்குச) சொல்லத்தக்கவராகிறீர். நீர் எல்லாம் அறிந்தவர்; எல்லாவற்றையும் பார்த்தவர்; எல்லாவற்றிலும் உறசாகமுடையவர். மூவுலகங்களிலுமுள்ள ஆசாரமும் உம்முடைய கொள்கையிலிருக்கிறது. பிரம்மரிஷியே! ஆகையால், நான் உமக்கு என்ன செய்யவேண்டும்? அதைக்கட்டளையிடும். பிரம்மரிஷியே! நான் அநுஷ்டிக்கவேண்டியதைச் சொல்லும். இவ்விடத்தில் சிஷ்யர்களைவிட்டுப் பிரிந்திருப்பவனான என்னுடைய மனமானது சிறிதும் ஸந்தோஷத்தையடையவில்லை' என்று சொன்னார். நாரதர், 'வேதங்களுக்கு ஆவிருத்தியில்லாமை தோஷம். பிராம்மணனுக்கு விரதமில்லாமை தோஷம். பிருதிவிக்குப் [1]பாஹ்லீக தேசத்து ஜனங்கள் தோஷம். ஸ்திரீகளுக்கு உத்ஸாஹம் தோஷம். (ஆகையால்,) நீர் புத்திமானான புத்திரரோடு ராக்ஷஸ பயத்தாலுண்டான தமஸை வேதகோஷத்தால் விலக்கிக்கொண்டு வேதங்களை அத்யயனம் செய்யவேண்டும்' என்று சொன்னார். பரமமான தர்மத்தை உணர்ந்தவ்யாஸர் நாரதருடைய வசனத்தைக்கேட்டு, 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லிவிட்டு ஸந்தோஷத்தையடைந்தவரும் வேதாப்பியாஸத்தில் உறுதியான விரதத்தையுடையவருமாகித் திரும்பவும் மஹாப்பிராஜ்ஞரான நாரதரை நோக்கி, 'பேசுகிறவர்களுள் சிறந்தவரே! உம்மால் இப்பொழுது பிருதிவிக்குப பாஹ்லீகதேசம் தோஷமென்று சொல்லப்பட்டது. பாஹ்லீகர்கள் எப்படிப்பட்டவர்கள்? எனக்குச் சொல்லும்' என்று கேட்டார். நாரதர், 'இந்தப்பூமியில் நான்குதேசங்கள் பாவிகளான ஜனங்களால் சூழப்பட்டவைகள். அவைகளில் முதலாவது யுகந்தரம். பூதிலகமென்பது (இரண்டாவதாகக்) கருதப்படுகிறது. மூன்றாவது அச்சுதச்சலமென்று சொல்லப்படுகிறது. அது மிகவும் பாவமுள்ளது. நான்காவது கொடியபாவமுள்ளதும் பாஹ்லீகமென்று பெயருள்ளதுமானது. இந்த யுகந்தரத்திலுள்ள ஜனங்கள் மான் ஒட்டகம் கழுதை இவற்றின் பாலைப் பானம் செய்கிறார்கள். அச்சுதசலத்திலுள்ள ஜனங்கள் ஒரேசெவியுள்ளவர்களாகக் காணப்படுகிறார்கள். பூதிலகத்திலுள்ள பாவிகள் ஜலத்தில் மலமூத்திரங்களை விடுகிறார்கள். தினந்தோறும் அதிகமான ஆஹாரத்தையும் அந்த ஜலத்தையுமே அருந்துகிறார்கள். பாஹ்லீகதேசத்திலு

---

1 'வாஹீகா:' என்பது வேறுபாடம்; 'மூட்டைதூக்குபவர்' என்பது பொருள்.

ள்ளஜனங்கள் ஹரியைவிட்டுவிலகினவர்களாகி ஒருபொழுதும் ஹரியை நினைக்கிறதில்லை. பாஹ்லீகர்களென்றுபிரஸித்திபெற்ற அவர்கள் இவ்வுலகஸௌக்யத்தையே மோக்ஷமாகக்கொண்டவர்களும் மாம்ஸத்தையும் ரக்தத்தையும் விருத்திசெய்கிறவர்களுமாகி வீணாகப்பிறந்தவர்களாவார்கள். ஓ! மஹாமுனிவரே. புஷ்கரக்ஷேத்திரத்தில் ஆகாரத்தில் ஆவலுள்ள ஒரு பெண்பேயானது கொடியஉலக்கையைவைத்துக்கொண்டு என்னசொல்லிற்றென்பதைக் கேளும். நீர்த்தத்தைக் காத்துக்கொண்டிருக்கிற (அந்தப்) பெண்பேயானது அநேகம்புத்திரர்களுடையவளும் புஷ்கரத்தில ஸ்னானம்செய்யவந்தவளுமான ஒரு பிராம்மணஸ்திரீயைநோக்கி, 'நீ யுகந்தரத்தில் ஜலபானம்செய்து அச்சுதச்சலத்தில் வாஸம்செய்து பூதிலகத்தில்ஸ்னானம்செய்து பாஹ்லீகர்களைப்பார்த்துவிட்டு அப்படியே ஸ்னானம்செய்வதற்கு வந்திருக்கிறாய். ஏன் ஸ்வர்க்கத்தை அடையமாட்டாய்?' என்று (பரிஹாஸமாகச) சொல்லி இருப்புலக்கையினால பிராம்மணஸ்திரீயின் பாத்திரத்தைஉடைத்துத்தள்ளிவிட்டுக் கோபத்தால் கண்சிவந்து, 'உனக்குப் பகலில் இந்தவேலை. பிறகு, இரவில் வேறுவிதமான வேலை. போ. நீ பாஹ்லீகர்களுடைய சேர்க்கையால அசுத்தமானவள். சந்தேகமில்லை. மஹாத்மாவான அச்சுதரை த்வேஷிக்கிறவர்களுக்கும் நினையாதவர்களுக்கும் அவர்களுடையசேர்க்கையுடையவர்களுக்கும் புண்ய தீர்த்தங்களில [1]கதி கிடையாது' என்று சொல்லிற்று. இவ்விதம் அந்தப்பேய்சொல்லப் பிராம்மணஸ்திரீயானவள் பயமடைந்து புத்திரர்களுடன்திரும்பிசசென்று தன்தேசத்திலிருந்து தியானத்தில்பற்றின்றுமுடிவில்லாதவரான ஹரியினுடைய சுத்தமும் பன்னிரண்டு அக்ஷரங்களுள்ளதுமானநாமத்தைப் புத்திரர்களுடனே ஜபம்செய்தாள். மூன்றுவருஷம்சென்றபிறகு, அந்தப்பிராம்மணஸ்திரீ மீண்டும் புத்திரர்களோடு புஷ்கரக்ஷேத்திரத்தின்வாயிலில் வந்தாள். அப்படிவந்த அவளைநோக்கிப் பிசாசமானது, 'மங்களகுணமுள்ளபிராம்மணியே! உனக்கு நமஸ்காரம். உன்னுடைய தரிசனத்தினால் நான் பரிசுத்தமானேன். பாபமற்றவளான நீ புத்திரர்களுடன் தீர்த்தத்தில் ஸ்நானத்தையும் செய்யக்கடவாய். பதிவ்ரதையான நீ ஹரிநாமத்துடன் என்னையும் ஜலத்தினால் ப்ரோக்ஷிக்கவேண்டும்' என்றுசொல்லிற்று. இவ்விதம் சொல்லக்கேட்டவளும் சுபமானவிரதமுடையவளுமான பிராம்மணஸ்திரீயானவள் புத்திரர்களோடு ஸந்தோஷத்தை அடைந்து பன்னிரண்டு அக்ஷரங்கொண்டநாமத்துடன் ஜலத்தினால் ப்ரோக்ஷித்தாள்.

---

1 ஈடேற்றம்; மோக்ஷம.

அந்தக்ஷணத்திலேயே பிசாசானது பரிசுத்தமாகிவிட்டது; திவ்யமான ரூபமுடைய அப்ஸரஸென்னும் தெய்வப்பெண்வடிவத்துடன் உத்தம மானஸ்வர்க்கலோகத்தை அடைந்தது. வாஸுதேவரைப்பரகதியாகக் கொண்டபிராம்மணியும் காலக்கிரமத்தில் புத்திரர்களுடன் சுபமும் பரமுமான அச்சுதருடையஸ்தானத்தை அடைந்தாள் ஓ! வித்துவானாகியமுனிவரே! இந்தவிஷயம் உமக்குச்சொல்லப்பட்டது. (புறப்பட வேண்டிய) நேரமாகிவிட்டது. ஓ! போறிவாளரே! நான் போகிறேன். மறுபடியும் வருகிறேன்' என்றுசொன்னார். பேசுகிறவர்களுள்சிறந்தவரான அந்தநாரதர் இவ்விதம் சொல்லிவிட்டு உடனே சென்றார். பகவானானவ்யாஸர் முனிஶ்ரேஷ்டரிடமிருந்து அந்த வார்த்தையைக்கேட்டு, பிறகு புத்திரரானசுகரோடு சிக்ஷையுடன் கூடினதும் உயர்ந்ததுமான ஸ்வரத்தினால் உலகங்களைநிரப்புகிறவர் போல வேதாப்பியாஸத்தைச்செய்தார் அவர்கள் நானாவிதமான தர்மங்களைவிசாரிக்கிறவர்களும் வேதாப்பியாஸம் செய்கிறவர்களுமாயிருக்கையில், ஒருபெருங்காற்று ஸமுத்திரக்காற்றுடன் வேகமாக அடித்தது. உடனே, வ்யாஸர் அத்தியயனம்செய்யக்கூடாதகாலமென்று அந்தப்புத்திரரைத் தடுத்தார். தடுக்கப்பட்டவுடன், சுகர், குதூஹலத்துடன் பிதாவைநோக்கி, 'ஓ! பிராம்மணரே! இந்தவாயு எங்கிருந்து உண்டாயிற்று? நீர் வாயுவினுடைய செய்கைஎல்லாவற்றையும் சொல்லவேண்டும்' என்று கேட்டார் மேலான தர்மத்தை அறிந்த வ்யாஸமுனிவர் சுகருடையஇந்தவார்த்தையைக்கேட்டு அத்தியயனம் இல்லாமைக்குநிமித்தமான இந்தவிஷயத்தில் பின்வருமாறு சொல்லலானார். ''உனக்குத் திவ்யநேத்திரமுண்டாகிவிட்டது. உன்னுடையமனம் நிச்சலமாகக் கவலையற்றிருக்கிறது. தமோகுணத்தாலும் ரஜோகுணத்தாலும்விடுபட்டு ஸத்வகுணத்திலிருக்கிறாய். கண்ணாடியில் தன்னுடைய பிரதிபிம்பத்தைப்பார்ப்பதுபோலப் புத்தியினால் ஆத்மாவைப் பார்க்கிறாய். ஆத்மாவில் நீயாகவே மனத்தை வைத்துப் புத்தியால் நன்றாக ஆலோசித்துப்பார். தேவயானமார்க்கத்திலிருப்பவர் விஷ்ணு. பித்ருயானமார்க்கத்திலிருப்பவன் ஸூரியன். இந்தஇரண்டு மார்க்கங்களையும்அடைந்து தேவலோகத்திலும் கீழேயும் செல்லுகிறார்கள். பிருதிவியிலும், ஆகாயத்திலும் வீசுகிற வாயுவின்மார்க்கங்கள் ஏழு. அவைகளைக் கிரமமாக அறியக்கடவாய். [1]அவ்விடத்தில் மிக்கபலசாலிகளான ஸாத்தியர்களென்கிறதேவகணங்கள் உண்டாயின. ஜயிக்கமுடியாதவனை ஸமானனென்கிறபுத்-

1 அவைகளிடத்தில்.

திரன் அவைகளுக்கு உண்டானான். அவனுக்கு உதானனென்கிற புத்திரனுண்டானான். அவனுக்கு வியானன் என்கிற புத்திரனுண்டானான். அவனிடமிருந்து அபானன் உண்டாயினன் அவனுக்கும் பிராணனென்கிறபுத்திரன உண்டானான் வெளியேறியாதவனும் பகைவர்களை வாட்டுகிறவனுமானபிராணன் புத்திரனில்லாதவனானான். அந்த வாயுக்களுடைய தனித்தனியானசெய்கைகளையும் உண்மையாகச் சொல்லுகிறேன். வாயுவானது பிராணிகளுக்கு எங்கும்இயக்கத்தை உண்டுபண்ணுகிறது முதல் மார்க்கத்தில் புகைகளாலும் உஷ்ணங்களாலுமுண்டான மேகக்கூட்டங்களைச் சலிக்கச்செய்வதும் முதலாவதுமான ஆவஹனென்கிறவாயு பிராணிகளைப் பிழைக்கச் செய்வதால் பிராணனென்று சொல்லப்படுகிறது. அடிக்கடி சந்திரன் முதலான ஜோதிகளுக்கு உதயத்தைச் செய்கிறதும் புத்திமான்களால சரீரங்களில் உதானன்என்று சொல்லப்படுவதும் இரண்டாவதுமான பிரவஹனென்பது மேகங்களினின்று ஸ்னேகத்தையும் மின்னல்களிலிருந்து பெரியகாந்தியையும் அடைந்து ஜலத்தைவருஷிக்கிற மேகங்களுடன் கூடிக்கொண்டு ஆகாயத்தில் வீசுகிறது நான்குஸமுத்திரங்களிலிருந்தும் ஜலத்தைஎடுப்பதும் ஜலத்தை எடுத்து ஆகாயத்தில் மேகங்களுக்குக்கொடுப்பதும் மேகங்களை ஜலத்துடன்சேர்த்துப் பர்ஜன்யனுக்குக்கொடுப்பதும் மிகவிருத்தியடைந்ததுமான உத்வஹனென்பது மூன்றாவதுவாயு அந்தமேகங்களை வஹிப்பதும் அநேகவிதமாகத் தனித்தனியாக (அங்கங்கு) கொண்டு போவதும் ஜலங்களைவிடுவதில் ஆரம்பம்செய்விப்பதும் கனமுள்ளவையும் லேசானவையுமாகச் செய்வதும் அடிக்கப்பட்டவையும் சேர்க்கப்பட்டவையும் குமுறலைஉள்ளே உடையவையுமாகச் செய்வதும் (உலக) ரக்ஷணத்தின்பொருட்டுச் சேர்ந்து ஜலத்தைவருஷிக்கும் தன்மையை அடையச்செய்வதும் ஆகாயத்தால் தேவர்களுடைய விமானங்களைத்தாங்குவதும் பர்வதங்களையும் உடைப்பதுமான ஸம்வஹனென்பது நான்காவது வாயு. விரைந்துசெல்வதும் கொடிதும் ரஸங்களைவற்றச்செய்வதும் மேகங்களை அடித்து வலாஹகங்களாகச்செய்யாததும் ஆகாயத்தில் பயங்கரமும் ஆபத்திற்கு நிமித்தமுமான ஸஞ்சாரத்தையுடையதும் மேகங்களோடு கூடியதும் பெரியவேகமுள்ளதுமான [1]விவஹனென்பது ஐந்தாவதுவாயு. தேவலோகத்திலுள்ள ஜலங்களை ஆகாயத்தில் ஓடும்படிசெய்வதும், பரிசுத்தமான ஆகாசகங்கையின் ஜலத்தைத் தாங்கிக்கொண்டிருப்பதும், பூமியைப் பிரகாசிக்கச் செய்பவனும் ஆயிரம்கிரணங்களுக்கு ஆதாரனுமான

1 மேகங்களை விஷமமாகவஹிப்பவன்,

ஸூர்யனைத் தூரத்தில் அடித்து ஓரே கிரணமுள்ளவன்போலச் செய்வதும், அமிருதத்திற்குக்காரணனும் பிரகாசமுடையவனுமான சந்திரனைப் பூரணம்செய்வதுமான பரிவஹனென்பது [1]வெற்றியடைகிறவர்களில்சிறந்த ஆறாவதுவாயு. [2]ஆத்மவிசாரம் செய்கிறவரே! கல்பத்தின்முடிவில் எல்லாப்பிராணிகளுடைய பிராணன்களையும் வெளியாக்குவதும் மிருத்யு யமன் இருவரும் அநுஸரித்திருக்கும் மார்க்கமுள்ளதும் சாந்தமான புத்தியினலே நன்றாகஆலோசிக்கிறவர்களும் தியானத்தின் அப்பாஸத்தில் பற்றுள்ளவர்களுமாயிருப்பவர்களுக்கு மோக்ஷத்தைச்செய்வதும் தன்னிடம் அகப்பட்டவர்களும் ஸ்ருஷ்டிகர்த்தனை தக்ஷனுடைய புத்திரர்களுமான பதினாயிரவரை வேகத்தினுல் திக்குக்களின் முடிவை அடையச்செய்வதும் தன்னுல்தொடப்பட்டவனை அவமானத்தையடைவித்துத் திரும்பாமலே போகச்செய்வதுமான பராவஹனென்பது (ஒருவராலும்) அதிக்ரமிக்கமுடியாத மேலான (ஏழாவது) வாயு. இவ்விதம் மிகவும்ஆச்சரியமான இந்தவாயுக்கள் அதிதியின்புத்திரர்கள். அவர்கள், எப்பொழுதும் எங்கும் செல்லுகிறவர்களும் எல்லாவற்றையும் தரிக்கிறவர்களுமாகி வீசுகிறார்கள். அதிகமாக வீசுகிற அந்தவாயுவினலே மலைகளுட்சிறந்த இந்தமலையானது சீக்கிரமாக அலைக்கப்பட்டதென்பது பெரிய ஆச்சரியம். குழந்தாய்! இந்தவேதமானது விஷ்ணுவினுடைய மூச்சுக்காற்றாயிருக்கிறது. காற்றானது வேகததால் தூண்டப்பட்டுச் சீக்ரமாகக் கிளம்பும்பொழுது உலகம் பீடையடைகிறது. ஆகையால், அதிகக்காற்றடிக்கையில் வேதவித்துக்கள் வேதத்தை அத்தியயனஞ்செய்வதில்லை. வாயுவுக்கு வாயுவினிடமிருந்து பயமானது சொல்லப்பட்டதல்லவா? ஆகையால், வேதமானது பீடிககப்பட்டதாகும்' என்றார். இவ்வளவு வார்த்தையைப் பிரபுவான பராசரபுத்திரர் சொல்லிப் புத்திரரை '(காற்றுநின்றபின்) வேதத்தை அத்தியயனம்செய்' என்றும் சொல்லிவிட்டு, அப்பொழுது தேவகங்கையை அடைந்தார்.

---

1 பலசாலிகளில்.

2 'சுகரிடத்துள்ள உயர்வினல் இங்ஙனம் பன்மையாகவிளித்தார்' என்பது பழையவுரை.

## முந்நூற்றுமுப்பத்தேழாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

(நாரதர் சுகருக்கு உலகஇயல்புகளைச்சொல்லி மோக்ஷோபாயத்தை உபதேசித்தது.)

இந்தஅவகாசம்ஏற்பட்டபொழுது, நாரதரானவர் வேதாத்தியயனத்தில் பற்றினவராயிருக்கிறசுகரிடம் வேதார்த்தங்களைக்கேட்கும்விருப்பத்தால் திரும்பவும் வந்தார். அப்பொழுது, சுகர் தம் ஸமீபத்தையடைந்த தேவரிஷியான நாரதரைப்பார்த்து, வேதத்தில் சொல்லப்பட்ட அர்க்கியமுதலான விதியினால் பூஜித்தார். பிறகு, நாரதர் பிரீதியடைந்து (சுகரைநோக்கி) ஸந்தோஷத்துடன், 'ஓ! பிரம்மவித்துக்களுள் சிறந்தவனே! குழந்தாய்! நான் உனக்கு என்னநன்மையைச செய்யவேண்டும். சொல்' என்று கேட்டார். ஓ! பாரதனே! சுகர் நாரதருடையவார்த்தையைக்கேட்டு (அவரைநோக்கி) இந்தஉலகத்தில் எது ஹிதமோ அதை எனக்குச் செய்யும்' என்றுசொன்னார். நாரதர், 'முன்காலத்தில் தத்வத்தை அறிய விருப்பமுடையவர்களும் ஆத்மத்யானமுள்ளவர்களுமான முனிவர்களுக்குப் பகவானானஸநத்குமாரர் பின்வருமாறு சொன்னார். 'வித்தைக்குச்சமமான நேத்திரமில்லை. ஸத்தியத்திற்குநிகரான தவமில்லை. ஆசைக்குநிகரான துக்கமில்லை. தியாகத்திற்கு நிகரான ஸுகம் இல்லை. பாபச்செய்கையிலிருந்து விலகுதல், எப்பொழுதும் புண்ணியசீலனாயிருத்தல், நல்லஜீவனம், நல்லஆசாரம் ஆகியஇவைகள் மிகச்சிறந்தச்ரேயஸ். [1]ஸுகமற்ற மனுஷ்யஜன்மத்தையடைந்து எவன் (விஷயங்களில்) பற்றுதலுற்று விடுபடவில்லையோ அவன் துக்கத்திலிருந்து விடுதலடைவதற்கு ஸமர்த்தனாகான். சேர்க்கையானது துக்கத்திற்குக் காரணம். (விஷயத்தில்) பற்றுள்ளவனுக்கு மோகமாகிறவலையைவிருத்திசெய்து புத்தியானது சலிக்கிறது. மோகவலையால் சூழப்பட்டஅவன் இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் துக்கத்தை அனுபவிக்கிறான். சிரேயஸைவிரும்புகிறவன் எல்லாஉபாயத்தினாலும் காமக்குரோதங்களை அடக்கவேண்டும். அவைகள் நன்மையைக்கெடுப்பதற்கு முயற்சிசெய்பவைகள். எப்பொழுதும் குரோதத்திலிருந்து தவத்தைக்காக்கவேண்டும். மாற்சரியத்திலிருந்தும் தனத்தைக் காக்கவேண்டும். மானாவமானங்களிலிருந்தும் வித்தையைக்

1 'கிடைக்க அரிதான' என்றும் கொள்ளலாம்.

காக்கவேண்டும். அஜாக்ரதையிலிருந்தும் ஆத்மாவை ரக்ஷிக்கவேண்டும். ஹிம்ஸைசெய்யாமலிருப்பது மேலான தர்மம். பொறுமை மேலான பலம். ஆத்மஜ்ஞானம் மேலானஜ்ஞானம். ஸத்தியத்திற்குமேலானது ஒன்றுமில்லை. உண்மையை உரைத்தலே சிறந்தது. ஸத்தியத்தைக் காட்டிலும் ஹிதத்தைச் சொல்லவேண்டும். பிராணிகளுக்கு மிகவும் ஹிதமாயுள்ளதே ஸத்யமாக நான் நினைக்கிறேன். எல்லாப் பொருள்களையும் அவற்றிற்காக எல்லாப்பிரவிருத்திகளையும் தள்ளினவனும் பிரார்த்தனையில்லாதவனும் ஒன்றையும் தனதாகக்கருதாதவனுமான அவன் வித்வான். அவனே பண்டிதன். இவ்வுலகில், இந்திரியங்களைத் தன்வசப்படுத்திக்கொண்டு இந்திரியவிஷயங்களில் ஸஞ்சரிப்பவனும் [1]பற்றுதலில்லாதவனும் சாந்தமான மனமுள்ளவனும் விகாரமற்றவனும் ஸமாதியுடையவனும் தான் இந்திரியங்களாகாதவனும் தானுன இந்திரியங்களோடுகூடியும்கூடாமலுமிருப்பவனுமான அவன் விடுபட்டு விரைவில் பரமானச்ரேயஸை அடைகிறான். எப்பொழுதும், பிராணிகளுடன் கலந்து பார்த்தலும் தொடுதலும் ஸம்பாஷித்தலும் செய்யாதவன் மேலானச்ரேயஸை அடைகிறான். எந்தப்பிராணிகளுக்கும் துன்பஞ்செய்யக்கூடாது. மித்திரத்தன்மையை அடைந்து ஸஞ்சரிக்கவேண்டும். இந்தஜன்மத்தை அடைந்து ஒருவனோடும் பகைகொள்ளக்கூடாது. மனத்தைஜயித்த ஆத்மஜ்ஞானிக்கு ஒன்றுமில்லாமலிருத்தல், மிகுந்தஸந்தோஷம், ஒன்றையும்பிரார்த்தியாமலிருத்தல், சபலகர்மமில்லாமலிருத்தல் இவைகளை மேலானச்ரேயஸாகச் சொல்லுகிறார்கள். ஐயா! எனதென்கிற எண்ணத்தைவிட்டு இந்திரியங்களை ஜயிக்கக்கடவாய். சோகமற்றதும் இகத்திலும் பரத்திலும்பயமற்றதுமானஸ்தானத்தை அடையக்கடவாய். பண்டமில்லாதவர்கள் சோகத்தையடைவதில்லை. தன்னுடையபண்டத்தைத் தள்ளவேண்டும். பார்க்கப்பிரியமாயுள்ளவனே! பண்டத்தைத்தள்ளிவிட்டால் துக்கம் தாபமிவைகளிலிருந்தும் விடுபடுவாய் முனியானவன் தவத்தைநித்தியமாகக்கொண்டவனும் பொறிகளைவென்றவனும் மனத்தைஅடக்கினவனும் ஜயிக்கப்படாததைஜயிக்கவிரும்பினவனும் (விஷய) ஸம்பந்தங்களில்ஸம்பந்திக்காதவனுமாயிருக்கவேண்டும். குணங்களுடையஸம்பந்தங்களில்பற்றில்லாதவனும் எபபொழுதும் ஒருவனுகஸஞ்சரிப்பதில்பற்றுள்ளவனுமானபிராம்மணன் விரைவில் மிகச்சிறந்த ஸுகத்தை அடைகிறான். பிராணிகள் சேர்ந்து களித்துக்கொண்டிருக்கையில் எந்தமுனிவன்

1 வேறுபாடம்.

ஒருவனாகவேயிருந்து ஸந்தோஷிக்கிறானோ அவனே உத்தமமானஞான த்தால்திருப்தியடைந்தவனாக அறியக்கடவாய். ஞானத்தால் திருப்தி யடைந்தவன் சோகத்தையடைகிறதில்லை. (ஜீவனானவன்) தன்வசமற றுச் சுபகர்மங்களால்தேவத்தன்மையையும் சுபாசுபகர்மங்களால் மனு ஷ்யஜன்மத்தையும்அசுபகர்மங்களால் கீழானஜன்மத்தையும் அடைகி றான். அவைகளில், ஜந்துவானது மிருத்யுவின்வசத்தை அடைந்ததும் துக்கங்களாலே எப்பொழுதும் தாக்கப்பட்டதுமாகி ஸம்ஸாரத்தில் தஹிக்கப்படுகிறது. அதை ஏன் நீ அறியவில்லை? நீ அஹிதத்தில் ஹிதபுத்தியுடையவனும் நிலையில்லாததில் நிலையுள்ளதென்கிறபுத்தி யுடையவனும் அனர்த்தத்தில் அர்த்தமென்கிறபுத்தியுடையவனுமாகி ஏன் அறியாமலிருக்கிறாய்? தன்னிடமிருந்துமுண்டானபலநூல்க ளால் சுற்றப்பட்ட தன்னை மோகத்தால் அறியாத பட்டுப்பூச்சிபோல ஆசாபாசங்களால்சுற்றிக்கொண்டு உன்னை அறியாமலிருக்கிறாய். இவ் வுலகத்தில் (எனதென்கிற) அபிமானம் வேண்டாம். அபிமானமானது தோஷமுள்ளதன்றோ? கோசகாரமென்கிறபூச்சி அபிமானத்தினால் கட்டப்படுகிறதன்றோ? மக்கள்பெண்டிரென்னும்குடும்பங்களிற்பற் றினஜந்துக்கள் குளத்தின் மிக்கசேற்றில் முழுகினவைகளும் முதிய வைகளுமானகாட்டுயானைகள்போலக் கஷ்டத்தை அடைகின்றன. பெரிதானவலையினாலிழுக்கப்பட்டவைகளும் கரையில்தூக்கியெறியப் பட்டவைகளுமானமீன்களைப்போல மோகவலையினால்இழுக்கப்பட் டவைகளும் மிகவும்துக்கத்தை அடைந்தவைகளுமான ஜந்துக்களைப் பார். குடும்பம், மக்கள், மனைவி, சரீரம், பண்டங்கள்ஆகியஎல்லாம் பிறரைச்சேர்ந்தவையும் நிலையில்லாதவையுமானவை இவற்றால் என்ன பயன்? புண்ணியமும் பாவமும் தன்னைசசேர்ந்தவை எல்லாவற் றையும்விட்டுத் தன்வசமில்லாமல் போகவேண்டியதாயிருத்தலால் நீ தீயசெய்கையில் ஏன்பற்றுகிறாய்? நல்லகார்யத்தை ஏன் அனுஷ்டிக்க வில்லை? சிரமபரிஹாரமில்லாததும் ஆதாரமற்றதும் தேசத்தைஅடை யாததும் கட்டுசோறற்றதும் இருளடைந்தகாடுகளுள்ளதுமான மார்க் கத்தில் எப்படி தனியே போகப்போகிறாய்? செல்லுகின்ற உன்னைப் பின்தொடர்ந்து ஒருவனும் வரப்போகிறதில்லை. புண்ணியமும் பாவ மும், செல்லுகின்றஉன்னைப் பின்தொடர்ந்துவரும். வித்தை, கர்மம், சுசியாயிருத்தல், மிகவிரிவானஞானம் ஆகிய இவைகள் பயனுக்காக அனுஸரிக்கப்படுகின்றன. அர்த்தஸித்தியுடையவன் விடுபடுகிறான். (கிராமத்தில்வஸிப்பவனுக்குப்) பற்றுதலானது கட்டுகிறகயிறாகும். புண்ணியம்செய்தவர் இதை அறுத்துவிட்டுச் செல்லுகின்றனர். துஷ்

கர்மத்தைச்செய்தவர்கள் இதை அறிவதில்லை. ரூபமாகிறகரையும் மனமாகிறபிரவாஹமும் ஸ்பர்சமாகிறதிட்டும் ரஸமாகிறபெருக்கும் கந்தமாகிறசேறும் சப்தமாகிறஜலமுமுள்ளதும் ஸ்வர்க்கமார்க்கத்தை அடைவியாததுமான ஸம்ஸாரமாகிறநதியைப் பொறுமையாகிற துடுப்புக்களுடையதும் ஸத்யஸ்வரூபமும் தர்மமும் ஸ்திரபுத்தியுமாகிற கயிறுகளுள்ளதும் ஸன்யாஸமாகிறகாற்றின்மார்க்கத்தால் செல்லுகிறதும் வேகமுடையதுமான தோணியால் தாண்டவேண்டும். தர்மம் அதர்மம் இரண்டையுந்தள்ளு. ஸத்தியம் அஸத்தியம் இரண்டையும் தள்ளு. ஸத்தியம் அஸத்தியம் இரண்டையும் எதனால் தள்ளினையோ அதையும் தள்ளு. ஸங்கற்பத்தைத்தள்ளினதனால் தர்மத்தைத் தள்ளு. பயனைவிரும்பாததால் அதர்மத்தைத் தள்ளு. மெய் பொய் இரண்டையும் புத்தியினால் தள்ளு. புத்தியைப் பரமமான (ஆத்ம) நிச்சயத்தால் தள்ளு. எலும்பாகிறதூணுள்ளதும் நரம்புகளுள்ளதும் மாம்ஸரக்தங்களால் பூசப்பட்டதும் தோலினால்கட்டப்பட்டதும் துர்க்கந்தமுள்ளதும் ஜலமலங்களால்நிரம்பியதும் ஜரையாலும் சோகத்தாலும் அடையப்பட்டதும் நோய்களுக்கு இருப்பிடமும் மனோவியாதியுள்ளதும் மலினமும் அநித்தியமும் பிராணியாகிறபிசாசத்திற்கு இருப்பிடமுமான இந்தச்சரீரமாகிறகிருகத்தை விட்டுவிடு. ஜங்கமமும் ஸ்தாவரமுமான எல்லாஉலகமும் மஹத்தும் ஆகிய எல்லாம் பஞ்சபூதஸ்வரூபம். ஆகாயம், வாயு, அக்னி, அப்பு, பிருதிவிஎன்பவை மஹாபூதங்கள். சித்தமென்பது ஆறாவது. அகங்காரமானது ஏழாவதாகச் சொல்லப்படுகிறது. எட்டாவது மனமென்று அறியவேண்டும். புத்தி ஒன்பதாவதாகக் கருதப்பட்டது. இந்திரியங்கள் ஐந்து, ஸத்வம், ரஜஸ், தமஸ், ஆகப்பதினேழுசேர்ந்த இந்தக்கூட்டமானது அவ்யக்தமென்று பெயருடையது. வ்யக்தங்களும் அவ்யக்தங்களும் இந்திரியவிஷயங்களனைத்தும் சேர்ந்து [1]இருபத்துநான்கு என்கிற இந்தக்கூட்டமானது வ்யக்தம் அவ்யக்தம் இவைகளின் ஸ்வரூபமாயிருக்கிறது. இவைகளெல்லாவற்றுடனும்கூடினவன் புருஷனென்று சொல்லப்படுகிறான். தர்மார்த்தகாமங்கள், ஸுகம், துக்கம், ஜீவனம், மரணம்இவைகளை உள்ளபடி அறிந்தவன் ஸ்ருஷ்டிப்பிரளயங்களை அறிந்தவனாவான். இவ்வுலகில் உள்ளவற்றையெல்லாம் ஞானங்களுடைய பரம்பரையால் அறியவேண்டும். எது எது இந்திரியங்களால் கிரகிக்கப்படுகிறதோ

1 மூலப்பிரகிருதி, மஹத்தத்வம், மனம், ஸூக்ஷ்மபூதம்ஐந்து, இந்திரியங்கள் பத்து, ஸ்தூலபூதங்கள்ஐந்து, பிராணன்.

அது அது வ்யக்தமென்பது உறுதி. இந்திரியங்களுக்கெட்டாமல் ஏது வினால் அறியத்தக்கதானது அவ்யக்தமென்று அறியத்தக்கது. தேக முடையவன் ஐம்பொறிகளை அடக்குவதனால் தண்ணீரினால் திருப்தி யடைவதுபோலத் திருப்தியடைகிறான். ஆத்மாவை உலகத்தில் வியா பித்ததாகவும் உலகங்களை ஆத்மாவினிடத்தில் வியாபித்தவையாகவும் பார்த்துப் [1]பராவரத்தை அறிந்தவனுடைய ஞானமூலமான சக்தியா னது நசிக்கிறதில்லை. எல்லா நிலைமைகளிலும் எப்பொழுதும் எல்லாப் பிராணிகளையும் பார்ப்பவனும் பிரம்மமுமானவனுக்கு அசுபத்துடன் ஸம்பந்தம் ஏற்படுகிறதில்லை. உலகத்தில், புத்தியின் தெளிவாலுண் டான ஞானத்தினால் மோகத்தாலுண்டான பலவிதமான கிலேசங்களை விலக்கிக்கொண்டு நடப்பவனுக்கு உலகங்களுடைய மார்க்கமானது நசிக்கிறதில்லை. [2]சாஸ்திரத்தை அறிந்த பகவானானவர் ஆதியந்தமற்ற தையறிந்தவனான அவனை ஆத்மாவிலிருக்கிறவனாகவும் நாசமில்லாத வனாகவும் கர்த்தாவாகாதவனாகவும் சரீரமில்லாதவனாகவும் சொன் னார். தான் செய்த வினையினால் எப்பொழுதும் துக்கத்தையடைந்த பிராணியானது தன் துக்கத்தை விலக்கிக்கொள்வதற்குப் பலஜந்துக் களைக்கொல்லுகிறது ; அதனால், வேறு பல புதியவினைகளை அடைகி றது ; பிறகு, நோயாளி அபத்தியத்தால் வருத்தமடைவதுபோல அந்த வினையினால் திரும்பவும் வருத்தமடைகிறது. எப்பொழுதும் மோகத்தால் அந்தனும் துக்கங்களை ஸுகமென்று நினைப்பவனு மானவன் (கயிற்றினால்) மத்துக் கட்டுப்படுவதுபோல வினைகளாலே கட்டப்படுகிறான் ; கடையவும்படுகிறான். பிறகு, கர்மங்களின் உதயத்தி னாலே இம்மையில் தனக்குண்டான பிறவியில் கட்டப்பட்டுப் பல துன்பங்களையடைந்து ஸம்ஸாரத்தில் சக்கரம்போலச் சுழலுகிறான். அப்படிப்பட்ட நீ பந்தநிவிருத்தியுடையவனும் வினையினின்றும் நீங் கியவனும் எல்லாவற்றையுமறிந்தவனும் எல்லாவற்றையும் ஜயித்தவ னும் (ஒன்றிலும்) விருப்பமில்லாதவனுமாகி ஸித்தியிலிருக்கக்கட வாய். அனேகர்கள் (இந்திரியங்களுடைய) அடக்கத்தால் புதிதான பந்தத்தை நிவிருத்தித்துவிட்டுத் தவத்தின்வன்மையினால் கெடுத லில்லாததும் ஸுகத்தை விளைவிப்பதுமான ஸித்தியை அடைந்திருக் கிறார்கள்.

---

1 ப்ரம்மம்.

2 'தீர்த்தவித்' என்பது மூலம் ; 'மோக்ஷோபாயத்தை அறிந்தவன்' என் பது பழையவுரை.

## முந்நூற்றுமுப்பத்தெட்டாவது அத்யாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)

——:o:——

(நாரதர் சுகருக்கு உலகஇயல்புகளைச்சொல்லி மோக்ஷோபாயத்தை உபதேசித்தது. (தொடர்ச்சி.)

**ம**னிதன், சோகமற்றதும் சோகநாசத்தைப் பயனாகவுடையதும் சாந்தியைச் செய்வதும் மங்களகரமுமான சாஸ்திரத்தைக்கேட்டுப் புத்தியை அடைகிறான்; புத்தியை அடைந்து ஸுகமாக விருத்தியை அடைகிறான். அநேகமாயிரம் சோககாரணங்களும் அநேகபய காரணங்களும் தினந்தோறும் மூடனை வந்தடைகின்றன; பண்டிதனை அடைவதில்லை. ஆகையால், அனிஷ்டநாசத்திற்காக என்னிடமிருந்து இதிஹாஸத்தை அறியக்கடவாய். புத்தியானது வசத்திலிருக்குமானால் (புருஷன்) சோகநாசத்தை அடைகிறான். புத்திக்குறைவுள்ளவர்கள் அனிஷ்டத்தின் சேர்க்கையாலும் இஷ்டவஸ்துவின் பிரிவாலும் மனத்தில் துக்கத்தை அடைகிறார்கள். திரவியங்கள் நஷ்டமான பொழுது அவற்றின்குணங்களைச் சிந்திக்கக்கூடாது. அவைகளை ஆதரிக்கிறவனுக்கு ஸ்நேகபந்தம் விடுகிறதில்லை. ஆசைபற்றியிருப்பதில் தோஷத்தைப் பார்க்கவேண்டும். ஹிதத்தை அனிஷ்டம்போலப் பார்க்கவேண்டும். அப்படியிருந்தால், விரைவில் வைராக்கியத்தை அடைவான். சென்றதைக்குறித்துத் துக்கிப்பவனுக்கு அர்த்தமுமில்லை; தர்மமுமில்லை; புகழுமில்லை. (அவன்) வறுமையையும் அடைகிறான். அவனுக்கு அது திரும்பி வருவதுமில்லை. எல்லாப்பிராணிகளும் விரும்பியவற்றை அடைவதும் உண்டு; பிரிவதும் உண்டு. இந்தச்சோக காரணம் ஒருவனுக்குமாத்திரம் உண்டாகுமென்பதில்லை. இறந்தவனைக்குறித்தோ நஷ்டவஸ்துவைக்குறித்தோ அல்லது சென்றதைக் குறித்தோ பச்சாத்தாபமடைகிறவன் துக்கத்தினால் துக்கத்தையடைகிறான். (ஆகையால்,) இரண்டுஅனர்த்தங்களை அடைகிறான். உலகங்களில் ஜனபரம்பரையைப் பார்த்துப் புத்தியை அடைந்தவர்கள் கண்ணீர்விடமாட்டார்கள். எல்லாவற்றையும் நன்றாகப் பார்க்கிறவனுக்குக் கண்ணீருக்குரிய செய்கை ஏற்படுகிறதில்லை. சரீரத்தைப் பற்றியவையும் மனத்தைப்பற்றியவையுமான துக்கங்கள் உண்டானால் பரிகரிக்கக்கூடாத விஷயத்தில் கவலையடையக்கூடாது. இந்தத்துக்கத்தை நினையாமலிருப்பது அதற்கு மருந்தாகும். நினைப்பதனால் துக்கம் விலகுகிறதில்லை; அதிகமாகவும் விருத்தியடைகிறது. புத்தியினால் மனத்

தின் துக்கத்தை விலக்கவேண்டும். மருந்துகளால் சரீரத்தைப்பற்றின துக்கத்தை நிவிருத்திக்கவேண்டும் இதுவே அறிவின்திறம். இளைஞர்களுக்குச் சமமாயிருப்பதை அடையக்கூடாது. யௌவனமும் அழகும் உயிரும் பொருட்குவியலும் ஆரோக்கியமும் விரும்பியதையடைதலும் நிலையற்றவை அறிவுள்ளவன் அவைகளில் ஆசைவைக்கக்கூடாது தேசத்திற்குண்டான துக்கத்தைக் குறித்து ஒருவன் துக்கிக்கக்கூடாது. (நிவிருத்திக்கும்) உபாயத்தை அறிவானானால் துக்கப்படாமல் அதை விலக்கவேண்டும் ஜீவித்திருப்பதில் ஸுகத்தைக் காட்டிலும் துக்கமே மிகுதியாயுள்ளது. இந்தவிஷயத்தில் ஸந்தேகமில்லை. மோகத்தால் இந்திரியவிஷயங்களில் விருப்பமும் மரணத்தில் வெறுப்பும் உண்டாகின்றன ஸுகம்துக்கம் இரண்டையும் தள்ளுகிறவன் திரும்புதலில்லாத பிரம்மபதத்தை அடைகிறான் அவனைக்குறித்துப் பண்டிதர்கள் துக்கிக்கிறதில்லை அர்த்தங்களைவிடுவதும் துக்கம். அவைகளைக்காப்பதும் துக்கம் அவைகளை அடைவதும் துக்கமே. (ஆகையால்,) அவைகளின் நாசத்தைக்குறித்துக் கவலைபடையக்கூடாது. மனிதர்கள் வேறு வேறாயிருக்கிற பெருஞ்செல்வத்தையடைந்தும் திருப்தியடையாமலே நாசத்தையடைகிறார்கள். பண்டிதர்கள் ஸந்தோஷத்தை அடைகிறார்கள். கூட்டங்களெல்லாம் அழிவை முடிவாகவுடையன. மிகமேலேஉயர்தல் விழுதலை முடிவாகவுடையது. சேர்க்கைகள் பிரிவை முடிவாகவுடையன உயிர் மரணத்தை முடிவாகவுடையது. ஆசைக்கோ முடிவென்பது இல்லை. ஸந்தோஷம் மேலான ஸுகம் ஆகையால், அறிஞர்கள் இம்மையில ஸந்தோஷத்தையே தனமாகக்கருதுகின்றார்கள் நடந்துகொண்டிருக்கிற பிராயமானது இமையளவும் நிற்பதில்லை. நிலையில்லாத சரீரங்களில் எதை நிலையுள்ளதாகநினைக்கலாம்? பிராணிகளின் தன்மையை ஆலோசித்து மனத்திற்கெட்டாத ஆத்மாவை அறிந்தவர்களும் (ஸம்ஸார) மார்க்கத்தைக் கடந்தவர்களுமானவர்கள் துக்கமடையார் காமங்களைத் தேடுகிறவனும் திருப்தியடையாதவனுமாயிருக்கையில் புலியானது பசுவை எடுத்துக்கொண்டு போவதுபோல அவனை மிருத்யுவானது எடுத்துக்கொண்டுபோகிறது. அப்படியிருந்தாலும், துக்கத்தைவிலக்குவதற்குரிய உபாயத்தைத் தேடவேண்டும் துக்கியாமலே ஆரம்பிக்கவேண்டும். முயற்சிசெய்வதனால் வியஸனமில்லாதவனாகவேண்டும். சப்தத்திலும் ஸ்பரிசத்திலும் ரூபத்திலும் கந்தத்திலும் ரஸத்திலும் தனவானுக்கும் தனமில்லாதவனுக்கும் அனுபவிப்பதைப் பார்க்கிலும் வேறுஒன்றும்இல்லை. பிராணிகளுக்குச் சேர்க்கையில்லாவிட்டால்

துக்கமென்பதில்லை. (ஆகையால்,) எல்லாவற்றினுடைய பிரிவிலும் இயற்கைமாறுதல் துக்கியாமலிருக்கவேண்டும். தைரியத்தால் குறியையும் வயிற்றையும் காக்கவேண்டும்: கண்ணால் கைகால்களைக் காக்கவேண்டும். கண்ணையும் காதையும் மனத்தால் காக்கவேண்டும். மனத்தையும் வாக்கையும் வித்தையால் காக்கவேண்டும் மித்திரர்களிடத்திலும் மற்றவர்களிடத்திலும் ஸ்நேகத்தை விலக்கிக்கொண்டு கர்வமில்லாமல் ஸஞ்சரிப்பவனே ஸுகமடைவான். அவனே பண்டிதன். ஆத்மாவில் பற்றுதலுடையவனும் விருப்பமற்றவனும் ஒருபொருளுமில்லாதவனுமாகி ஆத்மாவாகிற துணையோடு ஸஞ்சரிப்பவன் ஸுகம் அடைவான்.

---

## முந்நூற்றுமுப்பத்தோன்பதாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

—:o:—

### (சுகர் வைராக்கியமடைந்து கைலை சென்றது.)

ஒருவனுக்கு ஸுகதுக்கங்களில் வேறுபாடான புத்தியானது உண்டாகுமானால் அவனை ப்ரஜ்ஞையாவது அல்லது நல்லநீதியாவது ரக்ஷிக்கிறதில்லை; சக்தியும் ரக்ஷிக்கிறதில்லை (அவன்) இயற்கையால் முயற்சியைச் செய்யவேண்டும். முயற்சியுடையவன் கெடுதலையடையமாட்டான். பிரியமான ஆத்மாவை ஜரை மரணம் நோய்கள் இவற்றினின்றும் காப்பாற்றவேண்டும். சரீரத்தைச் சேர்ந்தவைகளும் மனத்தைச்சேர்ந்தவைகளுமான நோய்கள் கூரியமுனையுடையவைகளும் வலியவில்லாளிகளால் விடப்பட்டவைகளுமான பாணங்கள் போலச் சரீரங்களைப் பிளக்கின்றன. ஆசைகளாலே வருத்தமுற்றவனும் நோக்த்தை அடைந்தவனும் ஜீவித்திருப்பதில் ஆசையுள்ளவனும் தன் வசமில்லாதவனுமாயிருப்பவனுடைய சரீரமானது நாசத்திற்கு இழுக்கப்படுகிறது. இராப்பகல்கள் மனிதர்களுடைய ஆயுளையெடுத்துக்கொண்டு மேலேமேலே நதிகளுடைய பிரவாகங்கள்போலப் போகின்றன; திரும்புவதில்லை சுக்லகிருஷ்ணபக்ஷங்களுடைய இந்தமாறுதலானது பிறந்தவர்களானமனிதர்களை மிகவும் ஜீர்ணமாகச்செய்கிறது. ஒருநிமிஷமும் நிற்கிறதில்லை. ஸூர்யன் ஜரையில்லாதவனாகி உதித்தும் அஸ்தமித்தும் பிராணிகளுடைய ஸுகதுக்கங்களை ஜீர்ணமாகச்செய்கிறான். முன்பார்க்கப்படாதவைகளும் (போய்விடுமோவென்று) சங்கிக்கப்படாதவைகளுமான மனிதர்களுடைய இஷ்டங்

களும் அனிஷ்டங்களுமான பொருள்களை இரவுகள் எடுத்துக்கொண்டுபோய்விடுகின்றன. புருஷனுக்கு வினையின்பயனானது பராதீனமாக இல்லாமலிருந்தால் எவன் எதை விரும்புவானோ அதை முயற்சியில்லாமல் விரும்பியபடி அடைவான். மிக்கமுயற்சியுள்ளவர்களும் ஸாமர்த்தியமுள்ளவர்களும் புத்திமான்களுமான மனிதர்களும் எல்லாக்கர்மங்களாலும்குறைவடைந்து பயனடையாதவர்களாகக் காணப்படுகிறார்கள். மற்றவர்களானபுருஷாதமர்கள புத்திஹீனர்களும் குணமில்லாதவர்களும் மறறத்தீமைகளையுடையவர்களுமாயிருந்தும் விரும்பினவற்றையெல்லாம் அடைந்தவர்களாகக் காணப்படுகிறார்கள். மற்றொருவன் பிராணிகளுக்குத்துன்பஞ்செய்வதிலும் உலகத்தைவஞ்சிப்பதிலும் எப்பொழுதும் முயற்சியுள்ளவனாயிருக்கிறான். அவன்(விஷய) ஸுகங்களிலேயே ஜரித்துவிடுகிறான். ஒருவிதமானபிரவிருத்தியுமில்லாமல் உட்கார்ந்திருக்கிறவொருவனை ஸம்பத்தானது (தானே) வந்தடைகிறது. வேறொருவன் வேலைகளைச்செய்தும் அடையமுடியாததை அடைகிறதில்லை. மனிதனிடத்தில் இயற்கையாயுள்ளகுற்றத்தைச் சொல்லு. ஓரிடத்திலுண்டானவீர்யம் திரும்ப வேறிடம்போகிறது. கருப்பையில்விடப்பட்டவீர்யத்திற்குக் கர்ப்பம் உண்டாகிறதோ, இல்லையோ. வீர்யத்தினுடையபரிணாமமானது மாம்பூவுக்குநிகராகக் காணப்படுகிறது. புத்திரனைவிரும்புகிறவர்களும் பின்ஸந்ததியைவிரும்புகிறவர்களும் (கார்ய) ஸித்தியில்முயற்சிசெய்கிறவர்களுமான சிலருக்குக் [1]கர்ப்பம் உண்டாகிறதேஇல்லை. கோபமுள்ள ஸர்ப்பத்தினிடம் நடுங்குவதுபோலக் கர்ப்பத்தினிடம்நடுங்குகிறவர்களுக்கு மரித்தவனை அவர்களுடையதந்தை திரும்பிவந்ததுபோல ஆயுளோடுகூடிய புத்திரன் உண்டாகிறான். தேவர்களைப்பூஜித்துத் தவத்தைச்செய்து புத்திரனைவிரும்புகிறதீனர்களாலே பத்துமாஸங்கள் சுமக்கப்பட்டுக் குலத்தைக்கெடுக்கின்றபுத்திரர்கள் பிறக்கிறார்கள். தேவபூஜைமுதலானமங்களகார்யங்களாலே அடையப்பட்டசிலபுத்திரர்கள் பிதாவால்ஸம்பாதிக்கப்பட்ட மிகுந்ததன தான்யங்களோடும் போகங்களோடும் பிறக்கின்றனர். ஒன்றுக்கொன்றுஸம்மதித்துப் போகத்திற்காகச்சேர்ந்து கர்ப்பமானது கருவில் உபத்திரவம்பிரவேசிப்பதுபோலப் பிரவேசிக்கிறது. வேறுசரீரங்களில்சிதறினதும் (ஸ்வர்க்கநரகங்களுக்குக்) காரணமற்றதும் சரீரத்தோடுகூடியதும் பிராணனுக்குத் தடைஉண்டாகுங்காலத்தில் மாம்ஸசிலேஷ்மங்களோடு புராணுகின்றதுமானபிராணியை வேறுசரீரங்கள் அடைகின்றன. [2]சேர்க்

1 'அண்டம்' என்பது மூலம். 2 ஒருபச்லோகம் விடப்பட்டது.

கையினால் வயிற்றில்வைக்கப்பட்டதும் அசேதனமுமான இந்துவா னது எந்தஉபாயத்தால் ஜீவனுள்ளகர்ப்பமாயிருக்கிறதென்று நீ அறி கிறாய்? அன்னபானங்களும் பக்ஷிக்கப்பட்டபக்ஷணங்களும் ஜீர்ணமா கிறஅந்தஉதரத்திலேயே கர்ப்பமானது ஏன் (அன்னம்போல ஜீர்ண மாகிறதில்லை? உதரத்திலிருக்கிறமலமூத்திரங்களுக்கு (வெளியில்) போக்கானது ஸ்வபாவத்தாலே அமைந்திருக்கிறது. ஸ்வாதீனமற்ற ஜீவன் தரிப்பதற்கும் விடுவதற்கும் கர்த்தாவாகிறதில்லை. சிலகர்ப் பங்கள் உதரத்திலிருந்தும் கரைந்துவிடுகின்றன. சில வெளியில் வரும்போது மரிக்கின்றன. சில (பூர்ணமாகவே) ஜனிக்கின்றன. இந்தக்கருவின்ஸம்பந்தத்திலிருந்தும் விடுபடுகிறஜீவன் ஒருபிரஜை யையும் அடைகிறான். (அப்படியிருந்தும்) மறுபடியும் துவந்துவ ங்களில் பற்றுகிறான். அவன் ஒருவனுக்குப்பிறகு கூடப்பிறந்த மையால் அவனிடமிருந்து உண்டான [1]ஐந்தும், [2]ஏழாவதானஅவஸ் தையையும் ஒன்பதாவதான அவஸ்தையையும் அடைகின்றன ; நூறு பிராயம் இருப்பதில்லை மனிதர்களுடைய [3]சேர்க்கைகள் மேல்வருவ தற்கு நிமித்தமாகா. இதில் ஸந்தேகமில்லை வேடர்களாலே அற்ப மிருகங்கள் துக்கமடைவதுபோல மனிதர்கள் வியாதிகளாலே பீடிக் கப்படுகிறார்கள். வியாதிகளால துன்பப்படுகிறவர்களும் அதிகமான தனத்தைக்கொடுப்பவர்களுமாயிருப்பவர்களுடைய துன்பத்தை வைத் தியர்கள் முயற்சிசெய்தும் போக்குவதில்லை. மிக்கஸமர்த்தர்களும் பூர்ணமான மருந்துகளையுடையவர்களுமான அந்தவைத்தியர்களும் வேடர்களாலே மிருகங்கள் துன்பமடைவதுபோல வியாதிகளால் துன்பமடைகிறார்கள். அவர்கள் கஷாயங்களையும் பலவிதமான கிரு தங்களையும் பானம்செய்தும் பெரிய யானைகளால் மரங்கள் முறிக்கப் படுதல்போல ஜரையினால் முறிக்கப்படுகிறவர்களாகக் காணப்படுகின் றனர். பூமியில் ரோயினால் பீடையடைந்தமான்களுக்கும் பறவைக ளுக்கும் கொடியவிலங்குகளுக்கும் தரித்ரர்களுக்கும் எவர்கள் வைத்தியம்செய்கிறார்கள்? அனேகமாக அவர்கள் (வியாதியால்) துன் பமடைவதில்லை. பட்டணத்திலிருப்பவர்களும் (ஒருவராலும்) நெரு ங்கமுடியாதவர்களும் உக்கிரமானபராக்கிரமமுடையவர்களுமாயினும்

---

1 'பூதங்கள' என்பது பழையவுரை

2 ஜீவனுக்குள்ள பத்து அவஸ்தைகளாவன:—கர்ப்பவாஸம், ஜன்மம், பால் யம், கௌமாரம், பௌகண்டம், யௌவனம், ஸ்தாவிர்யம், ஜரை, பிராணரோ தம், நாசம் என்பவை.

3 'யோகா:' என்பது மூலம்; 'ஸாமர்த்தியங்கள்' என்பது பழையவுரை.

அரசர்களை நோய்கள் வியாபித்துப் புலையர் விலங்குகளைப் பக்ஷிப்பது போலப் பக்ஷிக்கின்றன. இவ்விதம், வேதனையால் அறிவற்றதும் சோக மோகங்களால் நிரம்பியதுமான உலகம் வலிய (ஸம்ஸாரப்) பிரவாஹத்தால் சிதறஅடித்து விரைவில் இழுக்கப்படுவதைப் பார். விதியிலகப்பட்டவர்கள் தனத்தாலும் ராஜ்யத்தாலும் உக்கிரமான தவத்தாலும் அமைப்பை மீறுகிறதில்லை முயற்சிக்கேற்றபயன் கிடைக்குமானால் எல்லாரும் மரிக்கமாட்டார்கள்; மூப்படையமாட்டார்கள்; விரும்பியவற்றையெல்லாம் அடைந்தவர்களுமாவார்கள்; அப்பிரியத்தைப் பார்க்கமாட்டார்கள் எல்லாரும் உலகில மேலே மேலே இருப்பதற்கே ஆசைப்படுகிறார்கள்; சக்திக்குத்தக்கபடி முயற்சியும் செய்கிறார்கள். அது அப்படியே ஆகிறதில்லை. தனமதத்தால் மயக்கமடைந்தவர்களையும் மதுபானத்தால் மயக்கமடைந்தவர்களையும் சூரர்களும் பராக்கிரமமுடையவர்களும் தவறுதலில்லாதவர்களும் உபாஸிக்கிறார்கள். சிலருக்கு நன்றாகப்பார்க்கப்படாமலே துன்பங்கள் விலகி விடுகின்றன மற்றவர்களுக்குத் தம்முடையபொருளும் அடையப்படுகிறதில்லை. கர்மஸித்திகளில் பயன்கள் வெவ்வேறாகக் காணப்படுகின்றன. எல்லாரும் செல்வத்தைவிரும்புகையில் சிலர் பல்லக்குச் சுமக்கின்றனர்; சிலர் பல்லக்கேறிச் செல்லுகின்றனர்; சிலர் தேருக்கு முன் போகின்றனர். சேர்ந்துமகிழும்மனிதர்களில் அநேகர்கள் ஸ்திரீயை இழந்தவர்களாயிருக்கின்றனர். அநேகமனிதர்கள் தனித்தனி பலவிதமானஸ்திரீகளை அடைகின்றனர். (இதற்கு) வேறானஇந்தப்பரவஸ்துவைப் பார். இவைகளில் மோகத்தை அடையாதே; தர்மம் அதர்மம் இரண்டையும் விடு. ஸத்தியம்அஸத்தியம் இரண்டையும் விடு. ஸத்தியம்அஸத்தியம் இரண்டையும்விட்டு எதனால்விட்டாயோ அதையும் விடு. ரிஷிகளில் சிறந்தவனே! தேவர்கள் பூலோகத்தை விட்டு ஸ்வர்க்கத்தையடையக்காரணமானதும் மிகச்சிறந்ததும் ரஹஸ்யமுமானஇதனை உனக்குச்சொன்னேன்' என்றுசொன்னார்.

சிறந்தபுத்திமானும் தீரருமான சுகர் நாரதருடையவார்த்தையைக்கேட்டு மனத்தில்ஆலோசித்து நிச்சயத்தையடையவில்லை. 'புத்திரர்களாலும் மனைவிகளாலும் பெரியகிலேசம் உண்டாகும். வித்தையைக்கற்பதில் பெரியசிரமமிருக்கிறது. அற்பமானவருத்தமுடையதும் பெரிய பயனுடையதும் சாஸ்வதமானஸ்தானத்திற்குஸாதனமுமாயிருப்பது எதுவாகும்?' என்று எண்ணினார். பிறகு, [1]மிகவும் மேலானதர்மத்தையுணர்ந்தஅவர், ஆத்மாவுக்குக்கதியாகநிச்சயிக்கப்

1 'தர்மத்தில் பெரிதையும் சிறிதையும் அறிந்த' என்றும்கொள்ளலாம்.

பட்டதும் மேலானதும் மோக்ஷத்தைச்சார்ந்ததுமானகதியை ஒரு முகூர்த்தகாலம்ஆலோசித்து, 'நான் எப்படி பந்தமற்றவனாகி உத்தமமானகதியை அடைவேன்? மறுபடியும் பிறவிக்கடலில் திரும்பாமலிருப்பேன்? மறுபடியும் திரும்புதல்இல்லாத மேலானதன்மையை விரும்புகிறேன். எல்லாஸங்கங்களையும்விட்டு மனத்தினால் கதியைநிச்சயித்து எவ்விடத்தில் என்னுடைய ஆத்மாவானது ஸுகத்தை அடையுமோ அவ்விடத்தில் செல்லுவேன். எதில் குறைவில்லாதவனும் நாசமில்லாதவனும் விகாரமில்லாதவனுமாயிருப்பேனோ அந்த மேலானகதியை என்னால் யோகமின்றிச சக்தியினால் அடையமுடியாதே. எந்தயோகததால் முக்தியடைந்தவனுக்குக் கர்மஸம்பந்தமுண்டாகிறதில்லையோ அப்படிப்பட்ட யோகத்தையடைந்து கிருகத்தையும் சரீரத்தையும் விட்டுவிட்டு வாயுரூபமாகித் தேஜஸுகளுடைய ஸமூகமாயிருக்கிறஸூர்யனிடம் பிரவேசிப்பேன். சந்திரன் தேவகணங்களால் க்ஷயத்தை அடைவதுபோல இந்த ஸூர்யன் க்ஷயத்தை அடைவதில்லை. சந்திரலோகத்தையடைந்தவன் நடுக்கத்துடன் பூமியில் விழுகிறான்; திரும்பவுமே ஏறுகிறான். சந்திரன் எப்பொழுதும் குறைவையடைகிறான்; திரும்பவும் நிரம்புதல் அடைகிறான். அடிக்கடி (உண்டான) இந்தவிருத்திக்ஷயங்களை அறிந்து (இந்தச்சந்திரனாகிறபிதிருலோகத்தை) நான் விரும்பமாட்டேன். ஸூர்யனோவென்றால், உக்கிரமானகிரணங்களால் உலகங்களைத் தபிக்கசசெய்கிறான். எந்நாளும் குறைவற்றமண்டலமுடையவனாகி மற்றவற்றின்ஒளியைக் கவர்கின்றான். ஆகையினால், எனக்கு மிகவிளங்குகின்றஒளியையுடைய ஸூர்யனை அடைவதில் விருப்பமிருக்கிறது. (ஒன்றினாலும்) ஆக்கிரமிக்கமுடியாமல் ஸம்பந்தமற்ற அந்தராத்மாவுடன் இந்த ஸூர்யனிடம் வஸிப்பேன். ஸூர்யனுடையஸ்தானத்தில் இந்தசசரீரத்தைவைத்துவிட்டு ரிஷிகளோடு நான் மிகவும்பொறுக்கமுடியாத ஸூர்யனுடைய (அந்தர்யாமியான) தேஜஸில் [1]வஸிப்பேன். விருக்ஷங்கள், மலைகள், பூமி, பத்துத்திக்குக்கள், தேவர்கள், அஸுரர்கள், கந்தர்வர்கள, பிசாசங்கள், உரகர்கள், ராக்ஷஸர்கள ஆகியஇவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். உலகங்களில் எல்லாப்பிராணிகளிடத்திலும் பிரவேசிக்கப்போகிறேன்; ஸந்தேகமில்லை. எல்லாத்தேவர்களும் ரிஷிகளோடுகூட என்னுடைய யோகத்தின்வீர்யத்தைப் பார்க்கட்டும்' என்றுசொல்லிவிட்டு, உடனே, உலகங்களில் பிரஸித்திபெற்ற அந்தநாரதமுனிவருக்கு அனுமதிகொடு

1 'பாஸ்யாமி' என்பது வேறுபாடம்; 'அடைவேன்' என்பது பொருள்.

த்து அவரிடமிருந்து அனுமதிபெற்றுக்கொண்டு பிதாவினிடம் சென்றார். அந்தச்சுகமுனிவர் மஹாத்மாவான கிருஷ்ணத்வைபாயனரென்கிற (வ்யாஸ) முனிவரை நமஸ்கரித்துப் பிரதக்ஷிணம்செய்து அவரிடம் விடைபெற்றுக்கொண்டார். (அப்பொழுது,) மஹாத்மாவான (அந்த) முனிவரும் சுகருடைய அந்தவார்த்தையைக் கேட்டுப் பிரீதியடைந்து திரும்பவும் அவரைநோக்கி, 'ஓ! புத்திர! இப்பொழுது, உன்விஷயத்தில் நேத்திரத்தைத் திருப்திசெய்விக்கும் அளவு நில்' என்று சொன்னார். சுகர் அபேக்ஷையில்லாதவரும் ஸ்நேஹமில்லாதவருமாகி ஸந்தேஹமில்லாமல் மோக்ஷத்தையே நினைத்துப் போவதற்கே மனத்தைச் செலுத்தினர் முனிவர்களில் சிறந்தவரான அந்தச்சுகர் பிதாவைவிட்டுவிட்டு ஸித்தர்களுடைய ஸங்கங்களால் அடையப்பட்ட விசாலமான கைலைமலையின் உச்சியை அடைந்தார்.

---

## முந்நூற்றுநாற்பதாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

---

**(சுகர் யோகஞ்செய்து ஸ்வர்க்கத்துக்குப்புறப்பட்டதும், தம்பிதா அழைத்தால் மறுமொழிசொல்லும்படி தேவர்களுக்குச் சொல்லியதும்.)**

ஓ! பாரத! அந்த வ்யாஸருடைய புத்திரரானவர் கைலைமலையின்கொடுமுடியிலேறி ஸமமும் ஏகாந்தமும் புற்களில்லாததுமான இடத்தில் உட்கார்ந்தார். முறைப்படி யோகத்தை அறிந்த அவர் சாஸ்திரப்படியும் அனுஷ்டானப்படியும் பாதமுதலான அங்கங்களில் கிரமமாக ஆத்மாவை நிறுத்தினர். பிறகு, வித்வானான அவர் ஸூர்யன் நன்றாக உதயமாயிருக்கையில் கிழக்கு முகமாகக் கைகால்களை மடக்கிக்கொண்டு வணக்கத்துடன் உட்கார்ந்திருந்தார். புத்திமானான அவர் யோகத்தைச்செய்ய முயற்சிசெய்தவிடத்தில், பக்ஷிஸஞ்சாரம் இல்லை; ஒலி இல்லை; கண்ணால்பார்க்கக்கூடியதுஒன்றும் இல்லை. அப்பொழுது, அவர் எல்லாஸம்பந்தமும்விட்டுவிலகின ஆத்மாவைப் பார்த்தார். அவர் பரமான அந்த ஆத்மஸ்வரூபத்தைப் பார்த்துவிட்டுப் பிறகு மிகவும் மகிழ்ச்சியடைந்தார். அவர் திரும்ப மோக்ஷமார்க்கத்தையடைவதின்பொருட்டு யோகத்தையடைந்து பெரியயோகியாகி ஆகாயத்தை அதிக்கிரமித்தார். அதன்பிறகு, தேவரிஷியான நாரதரைப்பிரதக்ஷிணம்செய்து பரமரிஷியான அவருக்குத் தம்முடையயோகத்தைத் தெரிவிக்கலானார். 'தவத்தையே தனமாகக்கொண்டவரே! மார்க்

கத்தைத் தெரிந்துகொண்டேன். பிரவிருத்தித்துவிட்டேன். உமக்கு க்ஷேமமுண்டாகட்டும். மிக்ககாந்தியுள்ளவரே! உம்முடைய அநுக்கிரகத்தால் இஷ்டமானகதியை 'அடையப்போகிறேன்' என்றார். வ்யாஸபுத்திரரானசுகர் நாரதரால் அநுமதிசெய்யப்பட்டு (அவரை) வணங்கி மறுபடியும் யோகத்தையடைந்து ஆகாயத்தில் சென்றார். கைலாஸத்தின் பின்பாகத்திலிருந்துகிளம்பி ஆகாயத்தில் ஸஞ்சரிக்கிறவரும் காந்தியுள்ளவரும் நல்ல நிச்சயமுடையவருமான அந்த வ்யாஸபுத்திரர் அப்பொழுது ஸ்வர்க்கத்தைக்குறித்துக் கிளம்பினார். மேலேகிளம்பினவரும் கருடனுக்குச் சமமான காந்தியுடையவரும் மனத்துக்கும் வாயுவுக்கும் சமமான வேகமுடையவரும் பிராம்மணஸ்ரேஷ்டருமான அவரை எல்லாப்பிராணிகளும் பார்த்தன. பிறகு, அக்நிக்கும் ஸூர்யனுக்கும் நிகரான காந்தியுடைய அவர் எல்லாம் தாமாயிருக்கிற நிச்சயத்தால் மூன்றுஉலகங்களிலுமுள்ள எல்லாவற்றையும் நினைத்துத் தேவலோகத்தைசசேர்ந்த மார்க்கத்தைத் அடைந்தார். ஒரேமனமாகப்போகிறவரும் பற்றில்லாதவரும் ஓரிடத்திலிருந்தும் பயமில்லாதவருமான அவரை ஜங்கமஸ்தாவரங்களான எல்லாப் பிராணிகளும் பார்த்தன; அப்பொழுது, சக்திக்குத்தக்கபடி ந்யாயமாகப் பூஜிக்கவும்செய்தன. தேவர்கள் அவரைத் தேவலோகத்திலுள்ள புஷ்பவர்ஷங்களாலே அலங்கரித்தார்கள். அவரைப்பார்த்துக் கந்தர்வர்கள் அப்ஸரஸுகள் இவர்களுடைய எல்லாக்கூட்டங்களும் ஆச்சரியத்தையடைந்தன. ஸித்தியை அடைந்தரிஷிகளும், 'தவத்தால் ஸித்தியைப்பெற்றவரும் ஆகாயத்தையடைந்தவருமான இவர் யார்? கீழேஉடலும் மேலே நிமிர்ந்தமுகமுமுடையவராய் நேத்திரங்களாலே நன்றாக [1]வகிக்கப்படுகிறார்' என்று மிகுந்தஆச்சரியத்தை அடைந்தார்கள். பிறகு, சிறந்ததர்மத்தில் மனமுடையவரும் மூவுலகங்களிலும்பிரஸித்திபெற்றவருமான அவர் ஆதித்தியனை நன்றாகப்பார்த்து மௌனமாக (வேகத்தாலுண்டான) சப்தத்தால் அகண்டமான ஆகாயமுழுமையும் பூர்ணம்செய்கிறவர்போலக் கிழக்குமுகமாகச் சென்றார். ஓ! அரசனே! அவர்வருகிறதைப் பஞ்சசூடைமுதலான எல்லா அப்ஸரஸுகளுடைய கூட்டங்களும் பார்த்து உடனேபரபரப்புள்ளமனமுடையவைகளும் மிகவும் மலர்ந்த கண்களுடையவைகளும், 'இது எந்தத்தெய்வதம் உத்தமகதியையடைந்ததும் பலமானநிச்சயமுடையதும் ஆசையற்றதும் முக்தியடைந்ததுபோன்றதுமாகி இங்கேவருகிறது?' என்று மிக்க ஆச்சரியமுடையவைகளுமாயின. பிறகு,

---

1 'எல்லாரும் பார்க்கின்றனர்' என்பது கருத்து.

அவர் ஊர்வசியும் பூர்வசித்தியும் எப்பொழுதும் வஸிப்பதாகிய மலய மென்கிற பர்வதத்தைத் தாண்டினர். அவர்களும் பிரம்மரிஷிபுத்திர ரான அவர்விஷயத்தில் மிக்க ஆச்சரியத்தை அடைந்தார்கள். 'புத்தியி னுடைய நிலைமையானது ஆச்சரியம். வேதியரானவ்யாஸர் வேதாப்பி யாஸத்தில் பற்றினவராயிருக்க, இவர் சிறுபிராயத்திலேயே சந்திரன் போல ஆகாயத்தில ஸஞ்சரிக்கிறார் இவர் பிதாவின் பணிவிடை யினால் மிகவும் சிறந்தபுத்தியை அடைந்தார் பிதாவினிடம் பக்தி யுடையவரும் பலமான தவமுடையவரும் பிதாவுக்கு இஷ்டமான புத் திரருமான இவர். (இவரைத்தவிர) மற்றவிடத்தில் மனமில்லாதவரான அந்தப்பிதாவினாலே எப்படிவிடப்பட்டார்?' என்கிறஊர்வசியினுடைய வார்த்தையை மேலான தர்மத்தையறிந்த சுகர் கேட்டு அந்த வார்த் தையில் மனம் பற்றினவராய் எல்லாத்திக்குகளையும் பார்த்தார். அவர், அப்பொழுது ஆகாயத்தையும் மலைகளும் தோப்புக்களும் காடுகளு முள்ள பூமியையும் தடாகங்களையும் ஆறுகளையும் பார்த்தார். அவ் விடத்தில் அவரைச்சுற்றி எல்லாதேவதைகளும் வெகுமானித்து அஞ் சலிசெய்துகொண்டு பார்த்தார்கள். அப்பொழுது, பரமதர்மத்தை யறிந்தசுகர் அந்தத்தேவதைகளை நோக்கி, 'பிதாவானவர், 'சுகா' என்று கூப்பிட்டுக்கொண்டு என்னைப் பின்தொடர்ந்து வருவாரானல் நீங்களெல்லாருமே ஜாக்கிரதையுடன் அவருக்கு விடைகூறவேண் டும். நீங்களெல்லாரும் ஸ்நேகத்தால் என்னுடைய சொற்படி செய்ய வேண்டும்' என்று சொன்னார் சுகருடைய வார்த்தையைக்கேட்டு ஜல மும் காடும் நிரம்பிய திக்குக்களும் ஸமுத்திரங்களும் நதிகளும் மலைகளும், 'ஓ! வேதியரே! அப்படியே நீர் கட்டளையிடுகிறப்படி ஆகட்டும். ('சுகா' என்று) அழைக்கிற வ்யாஸமுனிவருக்கு நாங்கள் மறுமொழி சொல் லுகிறோம்' என்று நாலுபக்கத்திலும் சுகரை நோக்கிச் சொல்லின.

---

## முந்நூற்றுநாற்பத்தோராவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

——:o:——

(சுகர் சென்றபின் வ்யாஸர் வருந்தியதும், பரமசிவன் வாயளித்ததும்).

பிரம்மரிஷியும் மிகப்பெரியதவமுடையவருமான சுகர் இவ் விதமான வார்த்தையைச்சொல்லி [1]நான்குவிதமான தோஷங்களையும்

---

1 ஸத்வகுணத்தாலுண்டானவைகளும் மோக்ஷத்திற்குத் தடையாயுள்ள வைகளுமான தர்மம், ஞானம், வைராக்யம், ஐச்வர்யம் என்பவைகள்.

தள்ளிவிட்டு யோகஸித்தியில் நிலையடைந்தார்; [1]எட்டுக்குணமுள்ள தமஸையும்விட்டு [2]ஐந்துவிதமான ரஜஸையும் விட்டார். பிறகு, புத்திமானான அவர் ஸத்வகுணத்தையும் விட்டார். அது ஆச்சரியமாயிருந்தது. பிறகு, அவர் நித்தியமும் நிர்க்குணமும் லிங்கசரீரமற்றதும் ப்ரம்மரூபமுமான அந்தப்பதத்தில் புகையில்லாத அக்னிபோல ஜ்வலித்துக்கொண்டிருந்தார். (அப்பொழுது,) அந்தக்ஷணத்தில் [3]கொள்ளிகள் விழுந்தன; திக்குக்கள் எரிந்தன; பூமி நடுங்கிற்று; அஃது ஆசசரியமாயிருந்தது; மரங்களின்கிளைகள் ஒடிந்துவிழுந்தன; மலைகளின் கொடுமுடிகள் சரிந்தன; பேரிடிகளுடைய சப்தங்களாலே பூமி பிளந்ததுபோலாயிற்று; ஸூர்யன் பிரகாசிக்கவில்லை; அக்னி ஜ்வலிக்கவில்லை; குளங்களும் ஆறுகளும் ஸமுத்திரங்களும் கலங்கின; இந்திரன் சுவையும் நல்லமணமுமுள்ள ஜலத்தை வருஷித்தான்; திவ்யமானகந்தத்தை வகிப்பதும் சுசியுள்ளதுமான காற்று வீசியது. ஓ! பாரத! அந்தச்சுகர் வடதிக்கையடைந்து நிகரற்றவைகளும் திவ்யங்களும் இமயமலைக்கும் மேருவுக்கும் ஒப்பானவைகளும் மிகநெருங்கினவைகளும் வெளுத்தவைகளும் பொன்னிறமானவைகளும் ரஜதமயமானவைகளும் ஸுவர்ணமயமானவைகளும் சுபமானவைகளும் உயரத்திலும் குறுக்கிலும் நூறுயோசனை விரிவுள்ளவைகளும் அழகுபொருந்தியவைகளுமான இரண்டுகொடுமுடிகளைக் கண்டார். அவர், சங்கையற்றமனத்துடன் அப்படியே பாய்ந்தார். ஓ! மஹாராஜனே! பிறகு, மலையினுடைய இரண்டு முடிகளும் சீக்கிரமாகவே இரண்டாகப் பிளக்கப்பட்டவைகளாகக் காணப்பட்டன. அஃது ஆச்சரியமாயிருந்தது. பிறகு, பர்வதத்தின் கொடுமுடிகளிலிருந்தும் விரைவில் வெளியில்வந்தார். அந்த உத்தமமான மலையானது இவருடையகதியைத் தடுக்கவில்லை. பிறகு, ஆகாயத்தில் தேவர்கள், கந்தர்வர்கள், முனிவர்கள், மலையில் வசிக்கிற மற்றவர்கள் ஆகிய இவர்களுடைய பேரொலியானது உண்டாயிற்று. ஓ! பாரத! (மலையைக்) கடந்து சென்றசுகரையும் இரண்டாகச் செய்யப்பட்ட மலையையும்பார்த்து அப்பொழுது எங்கும், 'நல்லது, நல்லது' என்ற சப்தமானது உண்டாயிற்று. அவர், தேவர்களாலும் கந்தர்வர்களாலும் முனிவர்களாலும் யக்ஷர்களாலும் ராக்ஷஸர்களாலும் வித்யாதரர்களுடைய கணங்களாலும் பூஜிக்கப்பட்டார். ஓ! மஹாராஜனே! சுகர்சென்ற

1 புர்யஷ்டகரூபம்; 669-ம் பக்கம் குறிப்பிற்காண்க.
2 ஐந்து விஷயங்களில் பிரவிருத்திக்கச் செய்வன.
3 மகாபுருஷர் பூமியை விட்டமையால் துர்நிமித்தங்கள் உண்டாயின.

போது, ஆகாயமானது நான்குபக்கத்திலும் திவ்யமானபுஷ்பங்களால் நிறைந்ததாயிற்று. அங்கிருந்தும் மேலேகிளம்பித் தர்மாத்மாவான சுகர் ரமணீயமும் புஷ்பித்தவிருக்ஷங்களோடுகூடிய வனங்களையுடையதுமான தேவகங்கையைக் கண்டார் அந்தக்கங்கையில் (ஜலக்கிரீடையில்) பற்றுதலுடையவர்களும் வஸ்திரமில்லாதவர்களுமான அப்ஸரஸுகளுடையகூட்டங்கள் மனத்தில்விகல்பமில்லாத சுகரைப்பார்த்தும் விகல்பமில்லாமல் விளையாடின; ஸ்நானமும்செய்தன. சுகர் போகிறதை அறிந்து ஸ்நேகத்தோடுகூடியபிதாவானவர் வேகமான நடையுடன் பின்னாலே தொடர்ந்தார் சுகரோ வாயுவைக்காட்டிலும் மேலான ஆகாயகமனத்தைச்செய்து தம்முடையபெருமையைக்காண்பித்துக்கொண்டு அப்பொழுது எல்லாமாகிவிட்டார் மிக்கதவமுடையவ்யாஸர் மகாயோகத்தாலுண்டாகிய சிறந்தகதியையடைந்து அடுத்தநிமிஷத்தில் சுகர்புறப்பட்ட இடத்தை அடைந்தார். சுகர் பர்வதத்தின் கொடுமுடியை இரண்டாகச்செய்துவிட்டுப்போனதை அவர் பார்த்தார். அப்பொழுது, அவ்விடத்திலுள்ள ரிஷிகள் (வ்யாஸ) புத்திரருடைய (அந்தர்) செய்கையைப்பற்றிப் புகழ்ந்தார்கள். பிறகு, பிதா பெரியகுரலோடு மூவுலகங்களும் எதிரொலியிடும்படி, 'சுகா!' என்கிறநீண்டஒலியால் அழைத்தார் தர்மாத்மாவான சுகர் அப்போது எங்கும் வியாபித்து எல்லாஸ்வரூபமுமாகி எங்கும் பிரவிருத்தித்தவராயிருந்து, [1]'போ:' என்கிறசப்தத்தினால் (எல்லாவற்றையும்) சப்திக்கச்செய்துகொண்டு விடைசொன்னார் பிறகு, 'போ:' என்ற ஒரேஅக்ஷரத்தையுடைய உயர்ந்ததான நாதத்தைச்சொல்லி ஸ்தாவரஜங்கமமானஎல்லாஜகத்தையும் ஒன்றுசேர்த்தார். [2]அதுமுதல் இப்பொழுதும் மலைகள்குகைகள் இவைகளுடைய பக்கங்களில் தனித்தனியாகஉச்சரிக்கப்பட்டசப்தங்களைச் சுகர்விஷயத்தில் (அவைகள்) சொல்லுகின்றன. அப்பொழுது, சுகர் மறைந்திருந்து தமதுபிராபவத்தைக்காண்பித்துச் சப்தமுதலான குணங்களைத் தள்ளிவிட்டுப் பரமபதத்தை அடைந்தார் அளவற்றதேஜஸுள்ள புத்திரருடைய அப்படிப்பட்டமஹிமையைப்பார்த்து (வ்யாஸமுனிவர்) பர்வதத்தின்தாழ்வரையில் புத்திரரையே சிந்தித்துக்கொண்டு உட்கார்ந்தார். பிறகு, தேவகங்கையின்கரையில்விளையாடிக்கொண்டிருந்த அப்ஸரஸுகளுடைய கூட்டங்கள் அந்தரிஷியையடைந்து எல்லாரும்

1 மரியாதையாகவிளிப்பது

2 'சுகருக்காகச்சப்தித்ததுமுதல் அவருடைய கீர்த்தியின்தொடர்ச்சிக்காக இப்பொழுதும் வார்த்தைக்கு விடைகூறுகின்றன' என்பது.

பரபரப்பையடைந்தவர்களும் பிரஜ்ஞை தவறினவர்களுமானார்கள். முனிஶ்ரேஷ்டரான அவரைப்பார்த்துவிட்டுச் சிலர் நீரில் அமுங்கினார்கள்; சிலர் புதர்களில் நுழைந்தார்கள்; சிலர் வஸ்திரங்களைத் தரித்தார்கள். அப்பொழுது, வ்யாஸமுனிவர் புத்திரருடையமுக்தியையும் தம்முடையபற்றுதலையுமறிந்து ஸந்தோஷத்தையும் லஜ்ஜையையும் அடைந்தார். தேவர்களாலும் கந்தர்வர்களாலும் சூழப்பட்டவரும் மகரிஷிகளுடையஸங்கங்களால்பூஜிக்கப்பட்டவரும் பிநாகமென்கிற வில்லைக்கையிலுடையவருமாகிய பகவான்சங்கரர் அவரை அடைந்தார். அப்பொழுது, மஹாதேவர், புத்திரசோகத்தால்தாபத்தையடைந்த அந்தவ்யாஸரைநோக்கி, 'முன் காலத்தில் நீர் வீரியத்தால் அக்னி, பூமி, அப்பு, வாயு, ஆகாயமிவைகளுக்குநிகரானபுத்திரனை என்னிடம் வரித்தீர். அப்படிப்பட்ட லக்ஷணத்துடன் உமக்குப்பிறந்தவனான அந்தப்புத்திரன் உம்முடையதவத்தினாலும் என்னுடைய அனுக்கிரகத்தினாலும் நன்றாக நிரம்பினவனும் பிரம்மதேஜோமயனும் சுசியுள்ளவனுமானான். அவன், தேவர்களாலும் இந்திரியங்களை ஜயிக்காமல் அடையமுடியாத பரமமானகதியை அடைந்தான். ஓ! பிரம்மரிஷியே! அவனைக்குறித்து நீர் ஏன் துக்கிக்கிறீர்? எவ்வளவுகாலம் பர்வதங்களிருக்குமோ, எவ்வளவுகாலம் ஸமுத்திரங்களிருக்குமோ அவ்வளவுகாலம் உமக்கும்புத்திரனுக்கும் அழிவற்றகீர்த்தியானது உண்டாகும். ஓ! மகாமுனிவரே! நீரும் என்னுடையஅனுக்கிரஹத்தால் இந்தஉலகத்தில் எங்கும் எப்பொழுதும் (உம்மைவிட்டு) விலகாத உம்முடையபுத்திரனுக்குச்சமமான நிழலைப் பார்ப்பீர்' என்று ஸமாதானபூர்வமாக இந்தவசனத்தைச் சொன்னார். ஓ! பாரத! அந்த முனிவர் பகவானான ருத்திரரால் நேரில்ஸமாதானம்செய்யப்பட்டுச் சாயையைப்பார்த்துக்கொண்டே பரமஸந்தோஷத்தோடு திரும்பினார். பரதஶ்ரேஷ்டனே! இவ்விதம், சுகருடைய பிறப்பையும் கதியையும், நீ என்னைக்கேட்டமையால், விரிவாகச் சொன்னேன். அரசனே! இதனை எனக்கு முன்காலத்தில் தேவரிஷியானநாரதர் சொன்னார். மகாயோகியானவ்யாஸரும் அடிக்கடி ஸல்லாபங்களில் சொல்லியிருக்கிறார். பரிசுத்தமும் மோக்ஷதர்மத்தைச்சேர்ந்த அர்த்தங்களோடு கூடினதுமான இந்தஇதிஹாஸத்தைச் சாந்தியில்பற்றுடன் சிந்திப்பவன் பரமகதியை அடைவான்" என்று சொன்னார்.

## முந்நூற்று நாற்பத்திரண்டாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

—:o:—

(நாராயணரிஷி தாம் பூஜிப்பவரை நாரதருக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! கிருகஸ்தனுலும் ப்ரம்மசாரியாலும் வானப்பிரஸ்தனுலும் அல்லது ஸந்யாஸியாலும் ஸித்தியை அடையவிரும்புகிறவன் எந்தத்தேவதையை ஆராதிக்க வேண்டும்? இவனுக்கு எதனால் நிலைத்ததான ஸ்வர்க்கம் ஏற்படும்? எதனால் பரமான மோக்ஷமுண்டாகும்? எந்தவிதியினால் தேவகர்மத்திலும் பிதிருகர்மத்திலும் ஹோமஞ்செய்யவேண்டும்? முக்தன் எந்தக்கதியை அடைவான்? மோக்ஷந்தான் என்ன தன்மையுடையது? ஸ்வர்க்கத்தையடைந்தவனும் தான் அதினின்றும் நழுவாமலிருப்பதற்கு எதைச் செய்யவேண்டும்? தேவர்களுக்குத்தேவரும் பித்ருக்களுக்குப்பிதாவுமாயுள்ளவர் எவர்? அவரைக்காட்டிலும் எது மிகவும் சிறந்ததோ அதையும் எனக்குச் சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"ஓ! குற்றமற்றவனே! கேள்வியை அறிந்த நீ என்னைநோக்கி இப்பொழுது ரகஸ்யமானகேள்வியைக் கேட்கிறாய். அரசனே! இது தேவருடைய அருளில்லாமலும் ஞானப்ராப்தியில்லாமலும் தர்க்கத்தினால் நூறுவர்ஷங்களானாலும் சொல்லுவதற்கு இயலாது. சத்ருக்களைஸம்ஹாரஞ்செய்பவனே! அறிதற்குஅருமையான இந்தச் சரித்திரமானது உனக்கு விவரணஞ்செய்யத்தக்கது. இந்தவிஷயத்திலும் நாரதருக்கும் ரிஷியான நாராயணருக்கும்நடந்த ஸம்வாதரூபமான இந்தப்பழையசரித்திரத்தைச் சொல்லுகின்றார்கள். மஹாராஜனே! எல்லாவற்றிற்கும் ஆத்மாவும் ஸநாதனருமானநாராயணர் முன்காலத்தில் ஸ்வாயம்புவமன்வந்தரத்தில் கிருதயுகத்தில் தர்மருக்குப்புத்திரராகி நரரென்றும் நாராயணரென்றும் ஹரியென்றும் கிருஷ்ணரென்றும் நான்குமூர்த்திகளுடையவரானார். இவ்விதம் பிதாவானவர் எனக்குச்சொன்னார். அவர்களுள்ளே அழிவற்றவர்களானநரநாராயணர்களிருவரும் பதரிகாஸ்ரமத்தையடைந்து ஸ்வர்ணமயமானவண்டியிலிருந்துகொண்டு தவத்தைச் செய்தார்கள். அந்தவாகனம் எட்டுச் சக்ரங்களுள்ளதும் பூதங்கள்கட்டியதும் மனத்திற்குஇனியதுமானது. அதில், ஆதியிலுண்டானவர்களும் உலகங்களுக்குநாதர்களுமான அவர்கள் (தவத்தால்) இளைத்தவர்களும் நரம்புகளால்வியாபித்தவர்

களும் தவத்தாலும் தேஜஸாலும் தேவர்களுக்கும்பார்க்கமுடியாதவர்களுமாயிருந்தார்கள். (அவர்கள்) எவனுக்கு அனுக்ரஹத்தைச் செய்கிறார்களோ அவனே அவர்களைப்பார்க்கத்தகுதியுள்ளவனாகிறான். ராஜனே! நிசயமாக அவர்களுடைய ஸங்கல்பத்தினால் நாரதரானவர் இருதயத்தில் அந்தர்யாமியால்ஏவப்பட்டு மஹாமேருபர்வதத்தினுடைய கொடுமுடியினின்றும் மிகப்பெரிதானகந்தமாதனபர்வதத்தைக்குறித்துக்கிளம்பி விரைவாக எல்லா உலகங்களிலும் ஸஞ்சரித்தார். அவர் அவர்களுடைய அனுஷ்டானகாலத்தில அந்தப்பதரிகாஸ்ரமதேசத்தை அடைந்தார். அபபொழுது, அவருக்குக் குதூஹலமுண்டாயிறறு. 'இது, எவரிடத்தில் தேவர்கள், அஸுரர்கள், கந்தர்வர்கள், கின்னரர்கள், பெரியஉரகர்கள் இவர்களுடன்கூடியஉலகங்களெல்லாம் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றனவோ அவருடைய இருப்பிடம். முன் ஒன்றாயிருந்த இந்தமூர்த்தியானது தர்மருடையகுலபரம்பரையைவிருத்திசெய்வதற்காகத் தர்மரிடமிருந்து நான்குவிதமாயுண்டாயிற்று. இவர்களால் தர்மர் விருத்திசெய்யபபட்டார். ஆச்சர்யம்! இவ்விடத்தில இபபொழுது தர்மரானவர், நரநாராயணர்கள் கிருஷ்ணர் ஹரியென்கிற இந்தத்தேவர்களால் அனுக்கிரஹிக்கப்பட்டார். இந்தவிடத்தில் தர்மரின்புத்திரர்களான ஹரியும் கிருஷ்ணரும் வேறு ஒருகாரணத்திற்காகத் தவத்தில் நிலைத்திருந்தார்கள அவர்கள் பரமமானஸ்தானம். அவர்களுக்கு ஆன்னிகங்களின் அனுஷ்டானம் ஏது? எல்லாப்பிராணிகளுக்கும் தந்தைகளும் தேவர்களும் புகழுள்ளவர்களும் மிக்கபுத்திமான்களுமானஇவர்கள் எந்தத்தேவதையை ஆராதிக்கிறார்கள்? எந்தபபித்ருக்களைத்தான் பூஜிக்கிறார்கள்?' என்று மனத்தினால் ஆலோசித்து நாராயணரிடத்தில் பக்தியோடு சீக்கிரமாக அப்பொழுது அந்தத்தேவர்களுடையஸமீபம்வந்தார். தேவகர்மாவையும் பித்ருகர்மாவையும்செய்தபிறகு அவர்கள் பார்த்துச் சாஸ்திரத்தில்சொல்லியவிதிப்படி பூஜித்தார்கள். பகவானானநாரதமுனிவர் பெரியஆச்சரியமும் அபூர்வமுமான அந்தஅனுஷ்டானத்தின் விஸ்தாரத்தைப்பார்த்து ஸமீபத்திலுட்கார்ந்து மிகப்பிரீதியடைந்து தெளிந்தமனத்துடன் மகாதேவரானநாராயணரைத்தரிசித்து நமஸ்கரித்துப் பின்வருமாறு சொல்லலானார்.

'புராணங்களோடும் அங்கங்களோடும் உபாங்கங்களோடும்கூடிய வேதங்களில் நீர் உற்பத்தியில்லாதவரும் சாஸ்வதரும் உலகங்களைச் சிருஷ்டிக்கிறவரும் உலகங்களுக்குமாதாவும் உத்தமமான மோக்ஷஸ்வரூபமுமாகச் சொல்லப்படுகிறீர். உண்டானதும் உண்டாவதுமான

இந்த எல்லா உலகமும் உம்மிடத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. ஓ! தேவரே! கிருகஸ்தாஸ்ரமத்தைமூலமாகவுடைய நான்குஆஸ்ரமத்தார்களும் பலமூர்த்திகளிலிருக்கிறஉம்மை ஒவ்வொருநாளும் பூஜிக்கின்றனர். நீர் எல்லா [1]உலகத்துக்கும் தந்தையும் தாயும் சாஸ்வதரானகுருவுமாயிருக்கிறீர் இப்பொழுது, நீர் எந்தத்தேவரை ஆராதிக்கிறீர்? எந்தப்பித்ருதேவதையை ஆராதிக்கிறீர்? எனக்குத் தெரியவில்லை. ஓ! மஹாபாக்கியமுடையவரே! யாரைப் பூஜிக்கிறீர்? கேட்கிறவனுனெனக்கு அதனைச் சொல்லும்' என்றுகேட்டார் பகவான், 'ஓ! பிராம்மணரே! தன்னிடத்திலேயே ரகஸ்யமாகஇருக்கவேண்டுவதும் ஸநாதனமுமான்இது சொல்லக்கூடாதது ஆனாலும், பக்தியுள்ள உமக்கு உண்மையாகச் சொல்லுகிறேன் அந்தவஸ்துவானது ஸூக்ஷ்மமும், அறியவரிதும், காரியமற்றதும், சலியாததும், நிலைத்ததும், இந்திரியங்களும் இந்திரியவிஷயங்களும் எல்லாபூதங்களும் இல்லாததுமாயிருக்கிறது. அது, (எல்லாப்)பிராணிகளுக்கும் அந்தராத்மாவும் ஜீவனுமாகச் சொல்லப்படுகிறது அது மூன்றுகுணங்களுக்கும் வேறான புருஷனென்றும் சொல்லப்பட்டது. ஓ! பிராம்மணர்களில் சிறந்தவரே! அதனிடமிருந்தும் மூன்றுகுணங்களுள்ள அவ்யக்தமானது உண்டாயிற்று. அவ்யக்தமும் வ்யக்தமானபதார்த்தங்களில் இருப்பதுமான அது அழிவற்றபிரகிருதியென்று சொல்லப்படுகிறது. அந்தப்பிரகிருதியை எங்களுக்குக் காரணமாகஅறியும். (பிரகிருதியுடன்கூடிக்) காரியகாரணரூபமானஅவர் எங்களால் பூஜிக்கப்படுகிறார். எவர் தெய்வகர்மத்திலும் பித்ருகர்மத்திலும் கல்பிக்கப்பட்டிருக்கிறாரோ அவரைக்காட்டிலும்வேறானவனும் மேலானவனுமான பித்ருதேவதையும் தெய்வமுமில்லை. அவர் எங்களுக்கு ஆத்மாவாக அறியத்தக்கவர். ஆகையால், அவரைப் பூஜிக்கின்றோம் ஓ! பிராம்மணரே! அவரால உலகங்களைக்காக்கிறஇந்தமரியாதையானது பிரவர்த்தி செய்யப்பட்டது தேவகர்மாவும் பித்ருகர்மாவும் செய்யவேண்டியவையென்பது அவருடையஆஜ்ஞை. பிரம்மா, ஸ்தாணு, மனு, தக்ஷன், ப்ருகு, தர்மர், யமன், மரீசி, அங்கிரஸ், அத்ரி, புலஸ்தியர், புலஹர், க்ரது, வஸிஷ்டர், பரமேஷ்டி, ஸூர்யன், சந்திரன், கர்த்தமர், க்ரோதர், விக்ரீதர் என்று [3]இருபத்தொருவர் உண்டானார்கள். அவர்கள், ஸ்ருஷ்டிகர்த்தர்களாகக் கருதப்பட்டார்கள். பிராம்மணர்களில் சிறந்த அவர்கள் அவருடையதெய்வகர்மத்தையும் பித்ருகர்மத்தையும் எப்

---

1 வேறு பாடம்.　　2 ஒருசொல் விடப்பட்டது.

3 மூலத்தில் இருபதுபெயர்களே காணப்படுகின்றன.

பொழுதும் உண்மையாகத்தெரிந்துகொண்டு அந்தத்தேவருடைய ஸநாதனமானமர்யாதையைப்பூஜித்துப் பிறகு தங்களாலடையப்பட்ட பயன்களையும் அறிகின்றார்கள். ஸ்வர்க்கத்திலிருப்பவர்களெல்லாம் வணங்குகின்றதேகிகள் அவர்களுடைய பிரஸாதத்தால் அவரால் கொடுக்கப்பட்டபயனையுடையகதியை அடைகின்றார்கள். எவர்கள் [1]பதினைந்துகலைகளையும்விட்டுப் [2]பதினேழுகுணங்களும் கர்மங்களு மற்றவர்களாகின்றார்களோ அவர்கள் முக்தர்களென்பது உறுதி. ஓ! பிராம்மணரே! முக்தியடைந்தவர்களுக்குக் கதியானது க்ஷேத்ரஜ்ஞனென்கிறசிதாத்மாவென்று கல்பிக்கப்பட்டது. அவன் எல்லாருக்கும் கதியாகவும் நிர்க்குணனாகவுமே சொல்லப்படுகிறான். நாங்கள் இருவரும் அவனிடமிருந்துவந்தவர்களென்று ஞானயோகத்தால தெரிகிறது. இவ்விதம்அறிந்துகொண்டு ஸநாதனனான அந்தஆத்மாவைப்பூஜிக்கிறோம். அநேகம்சரீரததைஆஸ்ரயித்தஅவரை வேதங்களும் ஆஸ்ரமங்களும் இப்பொழுது பக்தியுடன் நன்றாகப்பூஜிக்கின்றன. அவரும் இவைகளுக்குக் கதியைக் கொடுக்கின்றார் உலகத்தில் எவர்கள் அவரையே தியானம்செய்துகொண்டு (மற்றதை நினைப்பதில்லையென்கிற) ஏகாந்தியாயிருப்பதை நன்றாகப்பற்றினார்களோ அவர்கள் அவரையும் அடைவார்களென்பது அவர்களுக்குஅதிகமாயுள்ளது. ஓ! நாரதரே! இவ்விதம் ரகஸ்யமான விஷயமானது நம்முடைய பக்தியினாலும் அன்பினாலும் உமக்குச சொல்லப்பட்டது. ஓ! பிரம்மரிஷியே! நீரும் எங்களிடம் பக்தியுடன் கேட்டீர்' என்று சொன்னார்.

---

## முந்நூற்றுநாற்பத்துமூன்றாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி)

(நாரதர் ஶ்வேதத்வீபஞ்சென்றதும், பாஞ்சராத்ர சாஸ்திரத்தின் வரலாறும்.)

புருஷர்களில்சிறந்தவரான அந்தநாரதர், புருஷோத்தமரானநாரயணர் இவ்விதம் சொல்லக்கேட்டுப் புருஷஶ்ரேஷ்டரும் உலகங்களுடையநன்மைக்குஇருப்பிடமுமான நாராயணரைநோக்கி, 'உலகங்களுக்குநாதராயிருப்பவரே! தமக்குத்தாமே காரணமானவரே! நீர்

1 பிராணன், ஶ்ரத்தை, ஆகாயம், வாயு, தேயு, அப்பு, பிருதிவி, மனம், அன்னம், வீர்யம், தவம், மந்திரம், கர்மம், லோகங்கள், நாமம்.
2 பிராணனைந்து, இந்திரியம் பத்து, மனம், புத்தி.

இந்தஉலகத்தில் தர்மருடைய கிருகத்தில் நான்குவிதமாக உத்தம ஜன்மத்தைஎடுத்தது உலகங்களின்நன்மைக்கே ஆகும். இப்பொழுது, நான் உமக்கு ஆதியானகாமனைத்தேடப் பார்ப்பதற்குப் போகிறேன். என்னால் வேதங்கள நன்றாய்அத்தியயனம்செய்யப்பட்டன ; தவம்செய்யப்பட்டது ; இதற்குமுன் அஸத்தியம் சொல்லப்படவில்லை. எப்பொழுதும் குருக்களுடைய பூஜையைச் செய்கிறேன் ; பிறனுடைய ரஹஸ்யத்தை வெளிப்படுத்தினதில்லை என்னால் சாஸ்திரப்படி (கை கால் வயிறு குறி) நான்கும் காக்கப்பட்டன. எப்பொழுதும் சத்துருவினிடத்திலும் மித்திரனிடத்திலும் ஸமமாயிருக்கிறேன் ஆதிதேவரான அந்தப் பரமாத்மாவையும் எப்பொழுதும் ஒரேபாவனையோடு அடைந்து எப்பொழுதும வரிக்கிறேன் இந்த விசேஷங்களாலே மிகவும் சுத்தமானமனமுடையவனான நான் என் அளவற்றவரான ஈசரைப் பார்க்கமாட்டேன் ?' என்றுசொன்னார். பிரம்மபுத்திரரான நாரதருடைய அந்தவார்த்தையைச் சாஸ்வதமானதர்மங்களைக் காக்கிறவரான அந்தநாராயணர் கேட்டு விதிப்படி கர்மங்களால நாரதரை நன்றாகப் பூஜித்து அவரை, 'போம்' என்று சொன்னார் பிறகு, அனுப்பப்பட்ட பிரம்மபுத்திரரான அந்தநாரதர் ஸநாதனரான அந்தரிஷியைப் பூஜித்து உத்தமமான யோகத்திலிருந்துகொண்டு ஆகாயத்தில் கிளம்பினார் ; பிறகு, சீக்கிரமாக மகாமேருவின்மேல் இறங்கினார். அந்தமுனிவர் அந்தப்பர்வதத்தின் கொடுமுடியில் ஏகாந்தஸ்தலத்தை அடைந்து ஒரு முகூர்த்தகாலம் இருந்தார். (பின்) வடமேற்காகப்பார்த்துப் பாற்கடலின் வடதிக்கிலிருப்பதும் ஆச்சரியகரமும் (சாஸ்திரத்தில்) சொல்லப்பட்ட ரூபத்தையுடையதுமான ஒருதீவைக் கண்டார். விசாலமான அந்தத் தீவானது ஶ்வேதமென்கிற பெயரால் பிரஸித்திபெற்றது. மகாமேருவிலிருந்தும் முப்பத்திரண்டாயிரம் யோஜனைகளுக்கு உயரத்திலிருப்பதாகக் கவிகளால் சொல்லப்பட்டிருக்கிறது. அங்கேஇருக்கிற அந்தப்புருஷர்கள் இந்திரியங்களில்லாதவர்களும் ஆகாரமில்லாதவர்களும் சலனமற்றவர்களும் மிகவும் நல்லகந்தமுள்ளவர்களுமாயிருக்கிறார்கள். வெண்ணிறமுடையவர்களும், ஸகலபாவங்களுமற்றவர்களும், பாவங்களைச் செய்தவர்களான மனிதர்களுடைய கண்களைக் கவர்கின்றவர்களும், வஜ்ரம்போன்ற எலும்புகளுள்ள சரீரமுடையவர்களும், ஸமமான அளவுடையஉயரமுள்ளவர்களும், திவ்யமான அவயவஸௌந்தர்யமுடையவர்களும், சிறந்தவலிமையுடையவர்களும், குடைபோன்றவடிவமுள்ள தலைகளையுடையவர்களும், மேகங்களுடைய கூட்டங்களின் தொனி போன்றதொனியுடையவர்களும், நான்கு கைகளையுடையவர்களும்,

தாமரையிதழ்போன்றபாதங்களுடையவர்களும, வெண்மையான அறு பதுபற்களும், எட்டுத்தெற்றிப்பற்களுமுடையவர்களும், ஜகத்துக் களைமுகமாயுடையவரும் ஸூர்யனுக்கு நிகரான காந்தியுடையவரும் தம்மிடமிருந்தும் உண்டானஜனத்தையுடையவருமான தேவரை நாவி னால் தூவைபார்க்கின்றவர்களுமான அந்தப்புருஷர்களைப் பார்த்தார் எவரிடமிருந்து எல்லாஉலகங்களும் உண்டாயினவோ, எவருடைய சரீரங்களும் ஸூக்ஷ்மங்களோ (வியாகரணமுதலான) அங்கங்களோடு கூடியவேதங்களும் தர்மங்களும் சாந்தியுள்ள முனிவர்களும் எல்லாத் தேவர்களும் அவருடைய பிரயாஸையில்லாத ஸ்ருஷ்டியென்றுநினைத் தார்'' என்று சொன்னர்

யுதிஷ்டிரர், "ஓ! பரதவம்சத்தில் சிறந்தவரே! இந்திரியமில்லாத வர்களும் ஆகாரமில்லாதவர்களும் சலனமில்லாதவர்களும் மிகவும் நல்லகந்தமுடையவர்களுமான அந்தப் புருஷர்கள் எப்படி ஜனித்த னர்? அவர்களுடைய உத்தமமானகதியானது எப்படிப்பட்டது? இங்கு முக்தர்களுக்குள்ள லக்ஷணமன்றோ ச்வேதத்வீபவாஸி களுக்குஉள்ளது? ஆகையால், என்னுடைய ஸந்தேகத்தை நிவிரு த்திசெய்யும். எனக்கு அதிகமான ஊக்கம் உண்டாயிருக்கிறது. நீரோ எல்லாக் கதைகளுமிருக்கிறதோட்டம் நாங்களும் உம்மையே அடுத்தவர்கள்'' என்றுசொல்ல, பீஷ்மர் சொல்லலானர். "ஓ! அர சனே! இது விரிவானகதை; பிதாவின் முன்னிலையில் நான்கேட்டேன். உனக்குச் சொல்லத்தக்க இது கதைகளின் ஸாரமாகக்கருதப்பட்டது. முனிவர்களில் சிறந்தவரான நாரதர் சந்தனுவுக்குச் சொன்னர். அந்த நாரதர் முன்காலத்தில் அரசர் கேட்டமையால் சொல்லினர். அப்பொ ழுது நான் நேரில்கேட்டேன். (முன்காலத்தில்) இந்திரனுக்குநண் பனும் பிரஸித்திபெற்றவனும் ஹரியான நாராயணரிடம்பக்தியுள்ள வனும் தர்மசீலனும் பிதாவினிடம் நித்தியம்பக்தியுடையவனும் எப் பொழுதும் சோம்பலில்லாதவனுமான உபரிசரனென்கிறஅரசன் பூமி க்கு அதிபதியாக இருந்தான். முன்காலத்தில் அவன் நாராயண ருடையவரத்தினல் ஸாம்ராஜ்யத்தை அடைந்தான். அவன் முன்பு ஸூர்யனுடைய முகத்திலிருந்து வெளிவந்ததான பாஞ்சராத்ரவிதி யை அனுசரித்துத் தேவர்களுக்கெல்லாம் ஈசரான நாராயணரையும் அந்த மீதியால் பிதாமஹர்களையும் பித்ருக்களுடைய மிச்சத்தால் வே தியர்களையும் (மிச்சமுள்ளதை) விபாகம்செய்து அடுத்தவர்களையும் ஆராதித்தான். பூஜையின்மிச்சமான அன்னத்தைப் புஜிப்பவனும் ஸத் யத்தைப் பெரிதாகக்கொண்டவனும் எல்லாப்பிராணிகள் விஷயத்தி

லும் ஹிம்ஸைசெய்யாதவனுமான அவன் தேவர்களுக்கெல்லாம்தேவ ரும் ஆதிமத்தியாந்தரஹிதரும் உலகங்களைப்படைத்தவரும் விகார மற்றவருமான ஜனார்த்தனரைக்குறித்து மூன்றுகாரணங்களாலும் பக்தி செய்தான். நாராயணனிடம்பக்தியைச்செய்பவனும் சத்துருக்களைத் துன்பம்செய்பவனுமான அவனுக்கு தேவர்களுக்கெல்லாம் அரச னானதேவேந்திரன் தன்னோடு ஓரே ஆஸனத்தையும் படுக்கையையும் அளித்தான். அவனால் தன்னுடையராஜ்யம், தனம், மனைவி, வாக னம்ஆகியஎல்லாம் பகவானைச்சேர்ந்தனவென்று எப்பொழுதும் அர் ப்பணம்செய்யப்பட்டன. ஓ! அரசனே! அவன் காம்யங்களும் நை மித்திகங்களும் யஜ்ஞத்தைச்சேர்ந்தவைகளுமானஎல்லாக்கர்மங்களை யும் பாஞ்சராத்ரவிதியைஅனுசரித்துச் செய்தான். மஹாத்மாவான அவனுடையகிருகத்தில் பாஞ்சராத்ரத்தையறிந்தபெரியோர்கள் பக வானுக்குநிவேதிக்கப்பட்ட சிறந்ததான அன்னத்தை முந்தினபோஜ னமாயிருக்கும்படியே புஜித்தனர். தர்மத்துடன் அரசுசெலுத்துகிற வனும் சத்துருக்களைவதைக்கின்றவனுமான அவன் பொய்யானவார்த் தையைச் சொன்னதில்லை மனமும் தோஷமுள்ளதாகவில்லை. சரீ ரத்தாலும் அவன் ஓர் அணுவளவும் பாவத்தைச்செய்ததில்லை. [1] சித்ர சிகண்டிகளென்று பிரஸித்திபெற்ற ஏழுமுனிவர்களால் ஒரேவிதமான அபிப்பிராயத்துடன் சொல்லப்பட்டதும் உத்தமமும் நான்கு வேதங்களையும் ஒத்ததுமான சாஸ்திரமானது மேருவென்கிறமகாபர் வதத்தில் செய்யப்பெற்றது. உததமமானதும் உலகதர்மங்களையுடை யதுமான அந்தச்சாஸ்திரமானது ஏழுமுகங்களால் வெளியிடப்பட் டது. மரீசி, அத்ரி, அங்கிரஸ், புலஸ்தியர், புலஹர், க்ரது, மிக்க தேஜஸையுடையவஸிஷ்டர்என்கிற அவர்களே சித்ரசிகண்டிகள். அவ ர்களெழுவரும் உலகத்திற்குக் காரணபுருஷர்கள். பிரம்மபுத்திரரான மனு எட்டாவது பிரகிருதி. அவர்களால் உலகம் தரிக்கப்படுகிறது. அவர்களிடமிருந்து சாஸ்திரமானது வெளிவந்தது. ஒருவழிப்பட்ட மனமுடையவர்களும் அடக்கமுள்ளவர்களும் (தியானம்தாரணை ஸமா தியென்கிற) ஸம்யமத்தில் பற்றுள்ளவர்களும் சென்றதும் நிகழ்கிற தும் வருவதுமானபதார்த்தங்களையறிந்தவர்களும் ஸத்தியம் தர்மம் இவைகளேமுக்கியமார்க்கமாகவுடையவர்களுமான அந்தமுனிவர் கள் இந்தஸ்ரேயஸையும் இந்தப்பிரம்மத்தையும் உத்தமமானஇந்த நன்மையையும் உலகங்களையும் மனத்தால்சிந்தித்துப் பிறகு சாஸ்திர த்தைச் செய்தார்கள். அதில் தர்மார்த்தகாமங்களும் பிறகு மோக்ஷ

1 விசித்திரமானமயில்தோகையுள்ளவர்கள்.

மும் தேவலோகத்திலும் பூலோகத்திலும் நிலைத்திருக்கிற அனேக விதமானமரியாதைகளுமே சொல்லப்பட்டிருக்கின்றன. அவர்களெல் லோரும் பிரகாசிப்பவரும் பாவங்களைப்போக்குகிறவரும் ப்ரபுவுமான நாராயணனை மற்றரிஷிகளோடு ஆயிரம்தேவவருஷம் தவத்தால் ஆராதித்துக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது, ஸரஸ்வதீதேவியான வள் உலகங்களுடையநன்மையைவிரும்பி நாராயணரால் கட்டளையிடப் பட்டு அந்தஎல்லாரிஷிகளிடத்திலும் பிரவேசித்தாள். பிறகு, தவத் தையறிந்தவர்களானபிராம்மணர்களாலே முதல் ஸ்ருஷ்டியில்உண் டான இந்தஸரஸ்வதி சப்தத்திலும் அர்த்தத்திலும் ஹேதுவிலும் நன்றாகப்ரவிருத்திக்கச்செய்யப்பட்டாள். முதலிலேயே, அந்தச்சாஸ் திரமானது அந்தமுனிவர்களாலே ஓங்காரத்தின் ஸ்வரத்தால் கௌர விக்கப்பெற்றுக் கருணைபொருந்தினவரான இந்தநாராயணரிருக்கிற இடத்தில் ' சொல்லப்பட்டது. அதனால், பகவானானபுருஷோத்தமர் பிரஸாதத்தையடைந்து சுட்டிச்சொல்லப்படாத சரீரத்தையடைந்த வரும் பார்க்கத்தகாதவருமாகி அந்தமுனிவர்களையெல்லாம்நோக்கி, ' வேதியர்களே! தர்மம்நடத்தற்குக்காரணமானவையும் பிரவிருத்தி யிலும்நிவிருத்தியிலும்காரணமாகப்போகின்றவையும் ரிக், யஜுஸ், ஸாமம், அதர்வணம்என்னும் வேதங்களோடுகூடினவையும் உலகச் செய்கைகளைத்துக்கும்ஹிதமும் உத்தமமுமான நூறாயிரம் ஸ்லோ கங்கள் செய்யப்பட்டனவல்லவா? (என்னுடைய) அருளில் உண் டானபிரம்மாவும் கோபத்திலுண்டான ருத்ரரும் என்னால் [1]பிரமாண மாகச்செய்யப்பட்டதுபோலவே, பிரதான புருஷர்களான நீங்களும் பிரமாணம். ஓ! பிரம்மவாதிகளே! ஸூர்யனும் சந்திரனும் வாயுவும் பூமியும் அப்பும் அக்னியும் எல்லாநக்ஷத்திரக்கூட்டங்களும் பூதங் களும் தங்கள்தங்கள் அதிகாரத்திலிருக்கின்றன. எல்லாரும்பிரமாண மாயிருப்பதுபோல உத்தமமான அந்தச்சாஸ்திரமும் பிரமாணமாகும் இது 'என்னுடைய கட்டளை. பிரம்மாவின்புத்திரரானஸ்வாயம்புவ மநு தாமாகவே அதிலிருந்தும் தர்மங்களை எடுத்துச்சொல்லுவார். சுக்ரரும் பிருஹஸ்பதியும் உண்டாகும்பொழுது அவர்கள் உங்களு டையபுத்திகளாலெடுக்கப்பட்ட சாஸ்திரத்தைச சொல்லுவார்கள். பிராம்மணஸ்ரேஷ்டர்களே! ஸ்வாயம்புவமனுவினால்சொல்லப்பட்ட தர்மங்களும் சுக்கிரரால் செய்யப்பட்டசாஸ்திரமும் பிருகஸ்பதியின் மதமும் உலகங்களில்பரவும்பொழுது வஸுவென்கிற அரசன் உங் களால் செய்யப்பட்ட இந்தச்சாஸ்திரத்தைப் ' பிருஹஸ்பதியினிட

---

1 கார்யத்தைத்தீர்மானிக்கிறவர்கள்.

மிருந்து அடைவான். அவன் என்னுடைய தியானத்தில் பற்றிநின்று என்னுடைய பக்தனுமாவான்; அந்தச்சாஸ்திரத்தைக்கொண்டே உலகங்களில் எல்லாக்கிரியைகளையும் செய்வான். இது உங்களுடைய சாஸ்திரங்களுள்ளே உத்தமமென்று பெயருடைய சாஸ்திரமன்றோ? இது அர்த்தத்திற்கு நலமாயும் தர்மத்திற்கு நலமாயும் ரகஸ்யமாயுமுள்ளது. இது உத்தமமானது இதைப்பிரவிருத்திக்கச் செய்வதினாலேயே பிரஜைகளையுடையவர்களாவீர்கள். அந்த வஸுவானவன் ராஜ ஸ்ரீயும் பெருமையுமுள்ளவனுவான். அந்தஅரசன் மரித்தகாலத்தில் ஸனாதனமான இந்தச் சாஸ்திரமானது முழுதும் மறைந்துவிடும். இது என்னால் உங்களுக்குச் சொல்லப்பட்டது' என்று சொன்னார். இவ்வளவு வார்த்தையைச்சொல்லிவிட்டுக் காணமுடியாதவராயிருந்த புருஷோத்தமரானவர் அந்த முனிவர்களையெல்லாம் விட்டுவிட்டு ஏதோ ஒருதிக்கில் சென்றுவிட்டார். பிறகு, உலகங்களுக்குத் தந்தைகளும் உலகங்களுடைய எல்லாக்காரியங்களையும் விசாரிக்கிறவர்களுமான அவர்கள் தர்மத்திற்குக் காரணமும் ஸனாதனமுமான அந்தசசாஸ்திரத்தைப் பிரவிருத்திக்கச்செய்தனர். முந்தினதான (அந்த) க்ருதயுகத்தில் அங்கிரஸின் புத்திரரான பிருஹஸ்பதி உண்டானவுடன் எல்லா உலகங்களையும் தரிப்பவர்களும் எல்லாத்தர்மங்களையும் நடக்கும்படி செய்பவர்களுமான அவர்கள் அவரிடம் அங்கங்களோடும் உபநிஷத்துக்களோடும் கூடின சாஸ்திரத்தை ஸ்தாபனம்செய்துவிட்டுத் தவத்தில் உறுதியுடன் இஷ்டமான தேசத்திற்குச் சென்றார்கள்.

---

## [1] முந்நூற்றுநாற்பத்துநான்காவது அத்யாயம்.

## மோக்ஷ தர்மம். (தொடர்ச்சி.)

---

**(உபரிசரவஸு யாகஞ்செய்ததும் ஏகதர்முதலியோர் நாராயணருடைய மகிமையைப் ப்ருஹஸ்பதிக்குச் சொல்லியதும்.)**

பிறகு, சென்றதான் மஹாகல்பத்தில் அங்கிரஸுக்குப்புத்திரருண்டாகித் தேவர்களுக்குப் புரோகிதரானபொழுது தேவர்கள் ஸுகத்தையடைந்தார்கள். பிருஹத், பிரம்ம, மஹத்என்கிற சொற்கள் ஒரே அர்த்தத்தையுடையவைகள். ஓ! அரசனே! குணங்களாலே இந்தப் பெயர்களையுடையவரும் வித்வானுமாயிருப்பவர் பிருகஸ்பதி. அவருக்குச் சிறந்தவனான உபரிசரவஸுவென்கிற அரசன் சிஷ்யனாயிருந்தான்.

---

1 இதுமுதல் நாராயணீயம் என்பது.

அவன் அப்பொழுது சித்ரசிகண்டிகளிடமிருந்து உண்டான சாஸ்திரத்தை நன்றாக அத்தியயனம் செய்தான். அந்தவஸு முதலில் தெய்வ கர்மத்தால் பூஜித்துக்கொண்டு இந்திரன் ஸ்வர்க்கத்தைக்காப்பது போலப் பூமியைப் பரிபாலனம் செய்தான். மஹாத்மாவான அவன் அச்வமேதமென்கிற பெரிய யாகத்தைச் செய்யத்தொடங்கினான். அந்த யாகத்தில் உபாத்தியாயரான பிருஹஸ்பதியானவர் ஹோதாவானார். அந்தயாகத்தில் ஏகதர் த்விதர் த்ரிதரென்ற பிரம்மாவின்புத்திரர்களான மூன்றுமஹரிஷிகளும் ஸபையோர்களானார்கள். தனுஷர், ரைப்பர், அர்வாவஸு, பராவஸு, மேதாதிதி, தாண்டியர், மஹர்பாக்கியவானான சாந்திமுனிவர், வேதசிரஸ், சாலிஹோத்திரருக்குப் பிதாவாகக் கருதப்பட்டவரும் முனிச்ரேஷ்டருமான கபிலர், முதல்வரான கடர், வைசம்பாயனருக்கு மூத்தவரான தைத்திரி, கண்வர், தேவஹோத்ரர் ஆகிய இந்தப் [1]பதினறுவரும் ஸபையோர்களாகச் சொல்லப்பட்டார்கள். ஓ! அரசனே! பெரிதான அந்த யாகத்தில் எல்லாஸாமக்ரிகளும் நன்றாகச் சேர்ந்திருந்தன. அதில் பசுவதமானது ஏற்படவில்லை. இவ்விதமிருந்த அந்த அரசன், ஹிம்ஸையில்லாதவனும் சுசியும் பெருந்தன்மையுள்ளவனும் வேண்டுதலில்லாதவனும் (நல்ல) கர்மங்களால் துதிக்கப்பட்டவனுமானான். அதில வனப்பிரதேசத்திலுண்டான பதார்த்தங்கள் ஹவிர்ப்பாகஙகளாக அமைக்கப்பட்டன. அப்பொழுது, தேவதேவரும் புராதனருமான பகவான் அவனிடம் பிரீதியடைந்து பிரத்யக்ஷமாக அவனுக்குத் தரிசனம் அளித்தனர். அவர், மற்ற ஒருவராலும் பார்க்கமுடியாதவராய்த் தாமாகவே [2]புரோடாசமான பாகத்தை ஆக்ராணம்செய்து கிரகித்தார். தேவரான ஹரியானவர் ஒருவராலும் பார்க்கப்படாமல் பாகத்தைக் கிரகித்தார்." அதனல், பிருஹஸ்பதியானவர் கோபத்தையடைந்தவரும் வேகமுடையவருமாகி ஸ்ருக்கென்கிற யாகபாத்திரத்தைத் தூக்கி ஆகாயத்தில் எறிந்து ஸ்ருக்குக் கீழேவிழுந்தவுடன் ரோஷத்தால் கண்ணீரைச் சொரிந்தார். உபரிசரனை நோக்கி, 'அரசனே! என்னல் எடுக்கப்பட்ட இந்தப்பாகமானது தேவரால் எனக்குப்பிரத்தியக்ஷமாகி நேரில் கிரஹிக்கத்தக்கது. ஸந்தேஹமில்லை. இந்தயாகத்தில் என்னல் கையிலெடுக்கப்பட்ட யஜ்ஞபாகங்கள தேவர்களாலே பிரத்தியக்ஷமாகவே கிரகிக்கப்பட்டனவல்லவா? எதற்காக இந்த யாகத்தில ஹரியானவர் என் கண்ணுக்குத் தோன்றவில்லை' என்றும் சொன்னர். அப்பொழுது, மகானன

1 முன்னுள்ள மூவரும் சேர்ந்து பதினறுவர்.
2 மாவினல் செய்யபட்ட ஹவிஸ.

வஸுவென்கிறஅந்தஅரசனும் ஸபையோரனைவரும் மிகவும் கோபம் கொண்ட அந்தமுனிவரைச சமாதானம் செய்தார்கள். வஸுராஜன், 'இப்பொழுது இந்தயாகத்தில் உம்மால் புரோடாசத்தினுடைய எவ்வளவுபாகமானது ஹோமஞ்செய்யப்பட்டதோ 'அவ்வளவும் என்னெதிரில் தேவதேவரானபகவான்கிரஹித்துக்கொண்டார் ; ஸந்தேகமில்லை' என்று இவ்விதம்சொன்னபொழுது, குருவானவர் (திரும்பவும்) கோபத்துடன், 'அரசனே! இந்தயாகத்தில நான் இனி யஜிக்கமாட்டேன். உன்னால் அவமானம்செய்யப்பட்டேன். உன்னால் பசுவானது தடுக்கப்பட்டது. மாவினால்உண்டாகும்பசுவானது செய்யப்பட்டது. நீ எந்தாளும் தேவரைப் பார்க்கிறாயானால நான் ஏன் பாராமலிருப்பேன்?' என்றுசொன்னார். வஸுவானவன், 'பசுஹிம்ஸையானது யஜுர்வேதமுதலானமந்திரத்தால் தடுக்கப்பட்டது. ஹிம்ஸையை நான் தடுக்கவில்லை. [1]ஏகாந்திகனாகையால நான் ஹரியைப் பார்க்கவே போகிறேன். ஆகையால், குருவானநீர் என்னைக் கோபிக்கலாகாது' என்று சொன்னான். (உடனே) பிருஹஸ்பதியானவர் கோபத்துடன் இவ்விதம்சொல்லுகின்றவஸுவையும் ரித்விக்குக்களையும் தடுத்து, 'நமக்கு ஏன் கர்மா?' என்றுசொன்னார். அப்பொழுது, ஏகதர், த்விதர், த்ரிதர் என்கிறமஹாமுனிவர்கள் பரபரப்பிலலாமல் அவரைநோக்கிச் சொல்லலானார்கள். 'புத்திர! நீ கோபத்தை அடையலாகாது. நீ நாங்கள்சொல்லும்வார்த்தையைக் கேள். நீ இப்பொழுது ரோஷத்தைச் செய்வது கிருதயுகத்திறகுரியதாமமிலலை எவருக்கு இந்தப்பாகமானது எடுக்கப்பட்டதோ அந்தத்தேவர் ரோஷத்திற்குவிஷயமில்லாதவர். ஓ! பிருஹஸ்பதியே! அவர் உன்னாலும் எங்களாலும் பார்ப்பதற்குமுடியாதவர். எவனுக்கு அவர் அருள்செய்கிறாரோ அவன் அவரைப்பார்ப்பதற்குத் தக்கவன். நாங்களோ பிரம்மாவின்மானஸபுத்திரர்களாகச் சொல்லப்பட்டவர்கள். நாங்கள் ஒருஸமயம் மோக்ஷத்திற்காக உத்தரதிக்கையடைந்தோம் ; ஒருகாலால்நிற்கிறவர்களும் ஸமாதியுள்ளவர்களுமாகி நாலாயிரம்வருஷங்கள் உத்தமமானதவத்தைசசெய்து கட்டைபோலானோம் 'வரிக்கத்தக்கவரும் வரங்களையளிப்பவரும் தேவர்களுக்குத்தேவரும் ஸனாதனரும் தேவருமானநாராயணரை நாம் எப்படி பார்ப்போம்?' என்று மிகவும்கடுமையானதவத்தை நாங்கள்செய்த இடம் மஹாமேருவுக்குவடக்கே பாற்கடலின்கரையை அடுத்திருக்கிறது. ஓ! விபுவே! பிறகு, விரதத்தினுடைய அவபிருதத்தில் ஸ்நேஹத்துடன்கூடியதும் கம்பீரமுமான வாக்கினாலுண்டானதும் மிகவும்

1 பக்தியில்கியமமுள்ளவன்

ஸந்தோஷத்தைச்செய்கிறதுமான அசரீரிவாக்கானது, 'ஓ! வேதியர்களே! நீங்கள், தெளிந்தமனத்துடன் தவத்தை நன்றாகச்செய்தீர்கள். ஓ! பக்தர்களே! நீங்கள் பார்க்கவிருப்பமுள்ளவர்களாயிருக்கிறீர்கள். அந்தப்பிரபுவை எவ்விதம் பார்ப்பீர்கள்? பாற்கடலின்வடபாகத்தில் பெரியகாந்தியுள்ள ஶ்வேதத்வீபமானது இருக்கிறது. அங்குள்ளமனிதர்கள் சந்திரனுக்குநிகரானகாந்தியுள்ளவர்களும், நாராயணனைப்பரமாகக்கொண்டவர்களுமாயிருக்கின்றனர். அந்தப்பக்தர்கள் புருஷோத்தமரை ஏகாந்தபாவனையுடன் அடைந்தவர்கள். அவர்கள் ஆயிரம் கிரணங்களுள்ளவரும் ஸநாதனருமானதேவரிடம் பிரவேசிக்கிறார்கள். ஶ்வேதத்வீபத்தில் வஸிக்கின்ற அந்தப்புருஷர்கள் [1]இந்திரியமில்லாதவர்களும் ஆஹாரமில்லாதவர்களும் சலனமில்லாதவர்களும் நல்லகந்தமுடையவர்களும் ஏகாந்திகளுமாயிருக்கின்றார்கள். ஓ! முனிவர்களே!, அங்கே செல்லுங்கள் அங்கே என்னுடையஆத்மாவானது பிரகாசிக்கிறது' என்றுசொல்லிற்று. பிறகு, நாங்களெல்லோரும் அசரீரியான அந்தவார்த்தையைக்கேட்டுச சொல்லப்பட்ட மார்க்கத்தினாலே அந்தத்தேசத்தை அடைந்தோம். அவரிடம் சித்தமுடையவர்களும் அவரைப்பார்க்க விருப்பமுள்ளவர்களுமாகப் போன நாங்களெல்லோரும் ஶ்வேதமென்கிற பெரியத்வீபத்தை அடைந்து உடனே அதனுடையஒளியினால் மோகத்தையடையும்படி செய்யப்பட்டோம். அதனால், அப்பொழுது எங்களுடையநேத்திரங்களின்விஷயமானது கெடுக்கப்பட்டதாயிற்று. அந்தத்வீபத்தினொளியினால் கெடுக்கப்பட்டதிருஷ்டியையுடையநாங்கள் புருஷரான (பகவானைப்) பார்க்கவில்லை. பிறகு, தவம்செய்யாதவனால் சீக்கிரமாகப் பார்க்கமுடியாதென்கிற விசேஷஞானமானது தெய்வயோகத்தால் எங்களுக்கு உண்டாயிற்று. பிறகு, நாங்கள் நூறுவருஷம் அந்த ஸமயத்திற்குரிய பெரிய தவத்தைச்செய்து விரதத்தின்முடிவில் வெளுப்புவர்ணமுடையவர்களும் சந்திரனுக்குநிகரானவாயிருப்பவர்களும் எல்லாலக்ஷணங்களும்பொருந்தியவர்களும் எப்பொழுதும்அஞ்சலி செய்பவர்களும் ஜபத்தைஜபிப்பவர்களும் வடக்கையும்கிழக்கையும் நோக்குபவர்களும் சுபர்களுமானமனிதர்களைப் பார்த்தோம். 'அந்த மகாத்மாக்களாலே மானஸமென்கிற அந்தஜபமானது ஜபிக்கப்படுகிறது. அதனால், அவர்கள் ஒருமுகமானமனத்தையுடையவர்களாயிருப்பதால் ஹரியானவர் பிரீதியடைந்தவராகிறார். ஓ! முனிசிரேஷ்

---

1 'அநிந்த்ரியா:' என்பது மூலம்; "ஸ்தூலதேகஸம்பந்தமில்லாதவர்கள்" என்பது பழையவுரை.

டனே! யுகாந்தகாலத்து ஸூர்யனுடைய ஒளிபோல ஒவ்வொருமனிதனுக்கும் காந்தியானது உண்டாயிற்று. அந்தத்வீபமானது தேஜஸுகளுக்கிருப்பிடமென்று நாங்கள் நினைத்தோம். அவ்விடத்தில் ஒருவனும் அதிகனில்லை. எல்லோரும் ஸமமான தேஜஸுடையவர்கள். ஓ! பிருஹஸ்பதியே! மறுபடியும் ஒரேகாலத்திலுதித்த ஆயிரம்ஸூர்யர்களுடைய காந்தியைச் சீக்கிரமாகப் பார்த்தோம் உடனே, அந்தமனிதர்கள் சேர்ந்தவர்களும் அஞ்ஜலிபந்தமுடையவர்களும் ஸந்தோஷமுள்ளவர்களும் நமஸ்காரமென்றே சொல்லுகிறவர்களுமாகி விரைவாக ஓடினார்கள். பிறகு, அவர்கள் பேசுகிறதினால் உண்டான ஒலியைக் கேட்டோம் அந்தத்தேவருக்கு அந்தப்புருஷர்களாலே பூஜைக்குரியபொருள் கொண்டுபோகப்படுகிறது. நாங்களோ அவருடைய தேஜஸினாலே விரைவாகச் சித்தங்கவரப்பட்டவர்களும் நேத்திரமுதலான இந்திரியங்களின் பலங்குறைந்தவர்களுமாகி ஒன்றையும் பார்க்கவில்லை சிக்ஷையோடுகூடின அக்ஷரங்களையுடையதும் ஆகாயமுழுமையும் நிரப்பியதும் உன்னதமாகச் சொல்லப்பட்டதும் விஸ்தாரமுமான ஒருசப்தத்தை நாங்கள் கேட்டோம். 'ஓ! செந்தாமரைக்கண்ணா! உனக்கு ஜயம். உலகங்களைப் படைத்தவனே! உனக்கு நமஸ்காரம் இந்திரியங்களுக்கு ஈசனே! ஓ! மஹாபுருஷ! எல்லாருக்கும்முன்னுண்டானவனே! உனக்கு நமஸ்காரம்' என்று சிக்ஷையுடன்கூடின அக்ஷரங்களையுடைய சப்தமானது எங்களால் கேட்கப்பட்டது. இந்தஸமயத்தில் கந்தங்களையெல்லாம் வஹிப்பதும் சுசியுமான வாயுவானது திவ்யமானபுஷ்பங்களையும் அப்படியே கர்மாக்களுக்குரிய ஓஷதிகளையும் கொண்டுவந்தது. [1]ஐந்து காலங்களையுமறிந்தவர்களும் ஏகாந்திகளும் பரமபக்தியுள்ளவர்களுமான அந்தமனுஷ்யர்களால் அப்பொழுது ஹரியானவர் மனத்தினாலும் வாக்கினாலும் செய்கையினாலும் பூஜிக்கப்பட்டார். அவர்கள் வார்த்தைசொல்லியபடியே அவ்விடத்தில் பகவான் வந்தாரென்பது நிச்சயம். நாங்கள் அவருடையமாயையினால் மோகத்தையடைந்து அவரைப் பார்க்கவில்லை. ஓ! ஆங்கிரஸர்களில் சிறந்தவனே! வாயுவும் நின்று பூஜையும் செய்யப்பட்டபிறகு, நாங்கள் கவலையால் மனக்கலக்கமடைந்தோம். சுத்தமான ஜன்மத்தையுடைய அந்த அநேகமாயிரம் மனிதர்களில் ஒருவரும் எங்களைக் கண்ணாலாவது மனத்தினாலாவது மதிக்கவில்லை ஸ்வஸ்தர்களும் ஒரேபாவனையை அடைந்தவர்களும் பிரம்மபாவனையை அனுஷ்டிக்கிறவர்களுமான அந்தமுனிக்கூட்டத்

1 உஷக்காலம், காலைஸந்தி, உச்சிக்காலம், ஸாயங்காலம், அர்த்தயாமம்.

தார்களும் எங்களை நினைக்கவில்லை. பிறகு, தவத்தால் மிகவும் சிரமத்தை அடைந்தவர்களும் மிகவும் இளைத்தவர்களுமான எங்களைநோக்கி அவ்விடத்தில் ஆகாயத்திலிருக்கிறதும் சரீரமில்லாததுமான ஒருபூதமானது சொல்லத்தொடங்கிற்று. 'வெளுத்தவர்களும் எல்லா இந்திரியங்களுமில்லாதவர்களுமான புருஷர்களே நீங்கள் பார்த்தீர்கள். நீங்கள் பார்த்த இந்தப்பிராம்மணஸ்ரேஷ்டர்கள் தேவேசனை பகவானைப் பார்த்திருக்கிறார்கள். ஓ! முனிவர்களே! 'எல்லோரும் இவ்விடம் விட்டு விரைவில் வந்தபடி செல்லுங்கள். பக்தனாகாதவனாலே அந்தத் தேவர் எவ்விதத்தாலும் பார்க்கமுடியாதவர். பிரபைகளின்மண்டலத்தால் பார்க்கமுடியாதவரான' அந்தப்பகவான் நெடுங்காலம் ஏகாந்தியாயிருப்பவர்களால் இஷ்டப்படி பார்க்கக்கூடியவராவார். ஓ! பிராம்மணஸ்ரேஷ்டர்களே! உங்களால் பெரியகாரியமானது செய்யத்தக்கதாயிருக்கிறது. வேதியர்களே! இதற்குப்பிறகு, கிருதயுகம்சென்று மாறுதலையும் அடைந்து வைவஸ்வதமன்வந்தரத்தில் மீண்டும் திரேதாயுகம்வரும்பொழுது தேவர்களுடைய காரியஸித்திக்காக நீங்கள் ஸகாயர்களாவீர்கள்' என்றது பிறகு, ஆச்சரியமும் அமிருதத்திற்கு நிகரானதுமான அந்த வார்த்தையைக்கேட்டு அவருடையபிரஸாதத்தால் சீக்கிரத்தில் இஷ்டமானதேசத்தை அடைந்தோம். இவ்விதம் நல்லதவத்தைச் செய்தும் ஹவ்யகவ்யங்களைச் செய்தும் நாங்கள் அந்தத்தேவரைப் பார்க்கவில்லை. நீ எப்படி பார்ப்பதற்குத் தக்கவனாகிறாய்? நாராயணரானவர் ஹவ்யகவ்யங்களைப்புஜிப்பதும் எல்லாவற்றையும் ஸ்ருஷ்டிப்பதுமான மஹத்தான பூதம்; ஆதியந்தமற்றவரும் அவ்யக்தரும் தேவர்களாலும் அஸுரர்களாலும் ஆராதிக்கப்பட்டவருமாயிருக்கிறார்' என்றனர். இவ்விதம் ஏகதருடைய வார்த்தையாலும் த்விதத்ரிதர்களுடைய ஸம்மதத்தாலும் ஸபையோர்களாலும் ஸமாதானம்செய்யப்பட்டுக் கம்பீரமான புத்தியுள்ள பிருகஸ்பதியானவர் பிறகு யஜ்ஞத்தை நிறைவேற்றினார்; தெய்வத்தையும் நன்றாகப் பூஜித்தார். வஸுவென்கிற அரசனும் யாகத்தைநிறைவேற்றிப் பிரஜையைப் பரிபாலித்துவந்தான். பிறகு, பிராம்மணர்களுடைய சாபத்தால் ஆகாயத்திலிருந்து நழுவிப் பூமியில் விழுந்தான். ஓ! ராஜஸ்ரேஷ்டனே! ஸத்யத்தையும் தர்மத்தையும் பரகதியாகவுடையவனும் எப்பொழுதும் தர்மத்தில் அன்புள்ளவனுமான அந்த அரசன் பூமியினிடத்தையடைந்து நாராயணரைப் பரமாகக்கொண்டு நாராயணமந்திரத்தையே ஜபித்து அவருடைய அருளாலேயே திரும்பவும் கிளம்பிப் பூப்பிரதேசத்திலிருந்தும் பிரம்மாவுக்கு அடுத்தஸ்தானத்தை

அடைந்து மேலானகதியை அடைந்தானென்பது நிச்சயம்'' என்று சொன்னார்.

---

## முந்நூற்றுநாற்பத்தைந்தாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

---:o:---

(உபரிசரவஸு சாபமும் விமோசனமும் பெற்றது.)

யுதிஷ்டிரர், ''மகானுனவஸுவென்கிற அரசன் பகவானிடத்தில் பக்தியுள்ளவனுயிருந்தபொழுது எதற்காக ஈழுவிப் பூமியின்புதரில் பிரவேசித்தான்?'' என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்

''ஓ! பாரத! இந்தவிஷயத்திலும் ரிஷிகளுக்கும் தேவர்களுக்குமுண்டான ஸம்வாதரூபமான இந்தப்பழைய சரித்திரத்தைச சொல்லுகிறார்கள். இது கர்மாவுக்குரிய பூமியாகும் ஸ்வர்க்கமானது போகத்தின்பொருட்டு உண்டாக்கப்பட்டது. ஆகையால், இந்திரனானவன் பூமியைஅடைந்து யாகத்திற்குத் தீக்ஷைசெய்துகொண்டான். [1]ஸவநீயபசுவினுடையகாலமானது வந்தபொழுது, பிருஹஸ்பதியானவர், 'இப்பொழுது பசுவுக்காக மாவைக் கொண்டுவரலாம்' என்றுசொன்னார். அதைக்கேட்டுத்தேவர்எல்லாரும் மாம்ஸத்திலாசையுள்ளவர்களாகி ப்ராம்மணஸ்ரேஷ்டரான பிருஹஸ்பதியையும் மற்ற ப்ராம்மணஸ்ரேஷ்டர்களையும் நோக்கி, 'அஜத்தால் யாகம் செய்யவேண்டும் அந்த அஜமும் வெள்ளாடென்று அறியவேண்டும். மற்றவை பசுவல்லவென்பது முறை' என்று இந்தவார்த்தையைத் தனித்தனியே சொன்னார்கள். ரிஷிகள், 'யாகங்களில் தான்யங்களால் பூஜிக்கவேண்டுமென்று வேதவிதியிருக்கிறது. அஜமென்று பெயருடையவை தான்யங்களே. நீங்கள் வெள்ளாட்டைக்கொல்லுதல் தகுதியன்று; ஓ! தேவர்களே! எதில் பசுவானது வதைக்கப்படுகிறதோ அது ஸத்துக்களுடையதர்மமாகாது. இது சிறந்ததான க்ருதயுகம். பசுவானது எப்படி வதைக்கப்படலாம்?' என்றுசொன்னார்கள். தேவர்களோடு அந்தமுனிவர்கள்விவாதம்பண்ணிக்கொண்டிருக்கையில் அந்தவழியில்வந்தவனும் அரசர்களில்சிறந்தவனும் ஆகாயத்தில்சஞ்சரிப்பவனும் ஸ்ரீபொருந்தியவனும் பலமுடைய ஆயிரம்வாகனங்களுள்ளவனுமான வஸுவானவன் அந்தஇடத்திற்கு வந்தான். வேகமாகவருகிறவனும் ஆகாயத்தையடைந்தவனுமான அந்தவஸு

---

1 யாகத்துக்குஉரியது.

வைப்பார்த்து, அந்தப்பிராம்மணர்கள் தேவர்களைநோக்கி, 'யாக சீலனும் தானங்களுக்குப்பதியும் சிறந்தவனும் எல்லாப்பிராணி களுடையநன்மையிலும்பிரியமுள்ளவனுமான இவன் ஸந்தேஹத் தை நிவர்த்திசெய்வான் மற்றாரும் இந்தவஸுவானவன் ஒருவித த்திலும் தவறுதலானவார்த்தையைச்சொல்லமாட்டான்' என்று சொன்னார்கள். இவ்விதம் அந்தத்தேவர்களும் முனிவர்களும் ஸங் கேதத்தைசசெய்துகொண்டு, எல்லாரும்சேர்ந்து வஸுவென்கிற அரசனுடையஸமீபம்வந்து, 'ஓ! அரசனே! அஜத்தினாலா, அல்லது தான்யங்களாலா எதனால யாகம்செய்யவேண்டும்? எங்களுடைய இந்தஸந்தேகத்தை நிவிருத்திசெய் நாங்கள் உன்னைப் பிரமாணமாக ஒப்புக்கொண்டிருக்கிறோம்' என்றுகேட்டார்கள். அந்தவஸு அவர் களைநோக்கி அஞ்சலிசெய்துகொண்டு, 'ஓ! பிராம்மணஶ்ரேஷ்டர்களே! யாருக்கு எந்தபக்ஷம் ஸம்மதம்? ஸத்தியத்தைசசொல்லுங்கள்' என்றுகேட்டான். ரிஷிகள், 'ஓ! அரசனே! தான்யங்களால்யாகம் செய்யவேண்டுமென்பதே எங்களுடையபக்ஷம். தேவர்களுக்கோ பசுவினால்யாகம்செய்கிறபக்ஷமே ஸம்மதம் ஓ! அரசனே! எங் களுக்குச சொல' என்றுசொன்னார்கள் அப்பொழுது, வஸு, தேவர்களுடைய அபிப்பிராயத்தையறிந்து அவர்களுடையபக்ஷத்தை ப்பற்றி, 'சாகமென்கிற அஜத்தினாலே யாகம்செய்யவேண்டும்' என் கிறவார்த்தையைச சொன்னான். அதனால், ஸூர்யனுக்குநிகரான காந் தியுடைய அந்தமுனிவர்களெல்லாரும் கோபத்தையடைந்து விமான த்திலிருப்பவனும் தேவபக்ஷத்தின்விஷயத்தைச் சொல்லுகிறவனு மான வஸுவைநோக்கி, 'தேவர்களுடையபக்ஷத்தை நீ கொண்ட காரணத்தால் ஆகாயத்திலிருந்து விழக்கடவாய் அரசனே! இதுமுதல் உன்னுடைய ஆகாயகமனமானது கெட்டுப்போகட்டும். அரசனே! வேதங்களுக்கும் [1]ஸூத்திரங்களுக்கும் மாறாக நீசொல்லியிருந் தால் எங்களுடையசாபமாகிற அடியால் நீ பூமியைப்பிளந்துகொண்டு விழுவாய். நாங்கள் விரோதமானவார்த்தையைச் சொல்லியிருந்தால் அவ்விடத்தில் விழுகிறோம்' என்றுசொன்னார்கள் ஓ! அரசனே! அப்பொழுது, உடனே அந்தசசாபத்தினால் அந்தக்ஷணத்திலேயே உபரிசரனென்கிறஅரசன் விரைவில் பூமியின்துவாரத்தையடைந்து கீழேயிருப்பவனானான். அவ்விதமிருந்தும் அப்பொழுது நாராயண ருடைய ஆஜ்ஞையினால் நினைவு விலகாமலிருந்தது. தேவர்களெல் லோரும் சேர்ந்துகொண்டு வஸுவினுடையசாபமோசனத்தைக்

1 வேதத்திலுள்ள சுருக்கமான விதிவாக்கியங்கள்.

குறித்து ஜாக்ரதையோடு ஆலோசனைசெய்தார்கள். அது அரச னுடையபுண்ணியமன்றோ? 'மஹாத்மாவான அந்த அரசன் நம்முடைய நிமித்தத்தில் சாபத்தையடைந்தான் ஓ! தேவர்களே! நாம் சேர்ந்து இவனுக்குப் பிரதியுபகாரம் செய்யவேண்டும்' என்று ஈச்வரர்களான அந்தத்தேவர்கள் புத்தியினால் ஆலோசித்து விரைவில்நிச்சயத்தையடைந்து ஸந்தோஷமுள்ள மனத்துடன் அப்பொழுது அரசனை உபரிசரனைநோக்கி, 'ஓ! அரசர்களில் உத்தமனே! நீ பிராம்மணர்களுக்கு அனுகூலரான தேவருக்குப்பக்தன். அந்தஹரியானவர் தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் குருவாயிருப்பவர். அவர் உன்னுடைய விஷயத்தில மனத்தில மிக்கஸந்தோஷத்தையடைந்து சாபமோசனத்தைச செய்வார். மஹாத்மாக்களான பிராம்மணர்களுக்கும் மரியாதை செய்யவேண்டும் அவர்களுடைய தவமானது அவச்யம் பலிக்கவேசெய்யும் நீ சீக்கிரமாக ஆகாயத்திலிருந்தும் பூப்பிரதேசத்தில் விழுந்ததனால், நன்மையைவிரும்புகிறவன் 'வேதத்திற்கும் ஸூத்திரங்களுக்கும் விரோதமாகச சொல்லக்கூடாது எங்களுடையபக்ஷத்தின் நிமித்தத்தினால் இப்படிபட்ட துன்பத்தை அடைந்தாய். ஓ! ராஜச்ரேஷ்டனே! நாங்கள உனக்கு ஒருவரத்தைக் கொடுக்கிறோம். குற்றமில்லாதவனே! எவ்வளவு காலம் நீ சாபதோஷத்தினால் பூமியின் துவாரத்தை அடைந்திருப்பாயோ அவ்வளவு காலம் நீ யாகங்களில் மனம்பற்றியவர்களான வேதியர்களால நன்றாக ஆகுதிசெய்யப்பட்ட வஸோர்த்தாரை யென்கிற ஆஜ்யதாரையை எங்களுடைய அனுக்கிரகத்தால அடைவாய். எங்களுடைய அனுக்கிரகத்தால் உன்னை ச்ரமமானது அடையமாட்டாது ஓ! ராஜச்ரேஷ்டனே! பூமியின் துவாரத்தில் வஸோர்த்தாரையை அருந்துவதனாலும் விருத்தி செய்யப்பட்ட பலத்தினாலும் பசியும் தாகமும் உண்டாகா. எங்களுடையவரத்தினால் அந்தப் பகவான் பிரீதியடைந்து பிரம்மலோகத்தை அடையும்படி செய்வார்' என்றனர். இவ்விதம் அந்தத்தேவர்களெல்லாரும் அரசனுக்குவரத்தையளித்து அப்பொழுது முனிவர்களுடைய வசனத்தினால் பூமியிலேயே யாகத்தை நிறைவேற்றிவிட்டு இருப்பிடம் சேர்ந்தார்கள் தவத்தையே தனமாகவுடைய முனிவர்களனைவரும் தக்ஷிணையைப்பெற்றுக்கொண்டு தாங்கள் ஆச்ரமங்களை அடைந்தார்கள். இந்திரனும் வஸுவையே நினைத்துக்கொண்டு அமராவதியை அடைந்தான். வஸுவும் அப்பொழுது பெரியபொய்சொன்னதன்பயனாகப் புதரை அடைந்தான் ஓ! பாரத! பிறகு, வஸுவானவன் விஷ்வக்ஸேநருக்குப் பூஜையைச் செய்தான் எப்பொழுதும் நாராயணரு

டையவாக்கிலிருந்து வெளியான மந்திரத்தையும் ஜபித்தான். ஓ! பகை வரைச்சிக்ஷிப்பவனே! அப்பொழுதும், பூமியின் துவாரத்தை அடைந்திருந்தும் ஐந்துகாலங்களிலும் ஐந்துயஜ்ஞங்களால் தேவர்களுக்குப் பதியான ஹரியைப் பூஜித்தான். பிறகு, பகவானும் பாவங்களைப்போக்குபவருமான நாராயணர் அநந்யபக்தனும் தம்மையே பரகதியாகவுடையவனும் மனத்தை ஜயித்தவனுமான அவனுடைய பக்தியினால்ஸந்தோஷத்தை அடைந்தார். அப்பொழுது, வரத்தையளிப்பவரும் பகவானுமானவிஷ்ணுவானவர் தமதருகிலிருப்பவரும் மிக்கவேகமுள்ளவரும் பக்ஷிகளுட்சிறந்தவருமான வைநதேயரை நோக்கித் தம்விருப்பத்தைச் சொல்லலானார். 'ஓ! மிக்கபாக்யமுள்ளபக்ஷிராஜனே! என்வார்த்தையால் பார்க்கலாம். ஸம்ராட்டும் தர்மாத்மாவும் கடுமையானவிரதமுள்ளவனுமான வஸுவென்னும் அரசன் பிராம்மணர்களுடைய பெரியகோபத்தாலே பூமியினுள் பிரவேசித்துவிட்டான் அந்த ப்ராம்மணஶ்ரேஷ்டர்களும் கௌரவிக்கப்பட்டார்கள். பக்ஷிராஜனே! நீ போ. ஓ! கருடனே! இப்பொழுது, எனதாஜ்ஞையினாலே, பூமியின்புதரில் மறைந்திருப்பவனும் கீழேஸஞ்சரிப்பவனுமான ராஜஶ்ரேஷ்டனை ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவனாகச் செய். தாமஸியாதே' என்று சொன்னார். பிறகு, வைனதேயர் சிறகுகளைஉதறி வாயுவுக்கு நிகரான வேகத்துடன் வஸுவானவன் மௌனமாகவஸிக்கிற அந்தப் பூமியினுடைய துவாரத்தில் பிரவேசித்தார் அவர் விரைவில் அவனை அங்கிருந்து உயரத்தூக்கி வேகமாக ஆகாயத்தில் கிளம்பி அங்கே அவனை விட்டுவிட்டார். அந்தமுகூர்த்தத்தில் அரசன் மீண்டும் உபரிசரனானான். அரசரிற்சிறந்த அவன் சரீரத்தோடு ப்ரம்மலோகத்தையும் அடைந்தான். குந்திபுத்ரனே! இவ்விதம் மகாத்மாவான அவனும் தேவர்களின் கட்டளைப்படி பொய்சொன்னதற்காக ப்ராம்மணசாபத்தால் அதோகதியை அடைந்தான். அவன் எல்லாச்சரீரங்களிலும் வஸிப்பவரும் ஈஶ்வரருமான ஹரியைமாத்திரம் உபாஸித்துவந்தான்; அதனால், விரைவில் சாபத்தினின்றும் விடுபட்டான். பிரம்மலோகத்தையும் அடைந்தான். இதையெல்லாம் உனக்குச் சொன்னேன். அரசனே! மனிதர்களுண்டானதையும் நாரதமுனிவர் ஶ்வேதத்வீபத்தையடைந்ததையும் உனக்கு முழுதும் சொல்லுவேன். ஒரேமனத்துடன் கேட்கக்கடவாய்.

---

## முந்நூற்றுநாற்பத்தாறுவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)

—:o:—

### (நாரதர் நாராயணனைத் துதித்தது.)

பகவானை நாரதமுனிவர் சிறந்ததான ப்வேதத்வீபத்தைய டைந்து வெண்மையுமுள்ளவர்களும் சந்திரன்போன்றகாந்தியுள்ள வர்களுமான அந்தமனிதர்களேயே கண்டார்; அவர்களைத் தலையால் வணங்கிப் பூஜித்தார் அவர்களாலும் மனத்தால் பூஜிக்கப்பெற்றுப் பகவானைப்பார்க்கவிரும்பி மந்திரத்தை முக்கியமாக ஜபித்துக்கொண்டு எல்லாப்ரமங்களேயும் அடைந்திருந்தார் அந்தவேதியர் ஒருவழிப் பட்டமனமுடையவரும் மேலேதூக்கப்பட்ட கைகளேயுடையவரும் ஸமாதியுள்ளவருமாயிருந்து எல்லாமாயும் நிர்க்குணமாயும் குணஸ் வரூபமாயுமிருக்கிற பகவானைக்குறித்துத் துதிக்கலானார்.

'ஓம். [1]தேவதேவேசரே! [2]நிஷ்க்ரியரே! நிர்க்குணரே! [3]லோக ஸாக்ஷியே! [4]க்ஷேத்ரஜ்ஞரே! [5]புருஷோத்தமரே! அநந்தரே! புரு ஷரே! [6]மஹாபுருஷரே! [7]புருஷோத்தமரே! [8]த்ரிகுணரே! [9]ப்ரதா நரே! [10]அம்ருதரே! [11]அம்ருதாக்யரே! [12]அநந்தாக்யரே! [13]வ்யோ மரே! [14]அம்ருதாத்மாவே! [15]ஸநாதநரே! [16]ஸதஸத்வ்யக்தாவ்யக்

பின்வரும் நாமங்களில் விஷ்ணுஸஹஸ்ரநாமத்தில் வந்துள்ளவற்றின் அர்த்தவிசேஷங்களை அங்கே கண்டுகொள்க.

1 இந்திரியங்களால் விளையாடும் ஜீவனுக்கு அந்தர்யாமி.
2 வியாபகராயிருப்பதால் செய்கையில்லாதவர்.
3 உதாஸீனமான ஞானரூபமாதலால் உலகங்களுக்கு ஸாக்ஷி.
4 'ஸ்தூலஸூக்ஷ்மசரீரங்களை அறிகின்ற ஜீவஸ்வரூபர்' எனினுமாம்.
5 சரீரஜீவேப்ரவரர்களைக் காட்டிலும் சிறந்தவர்.
6 ஸ்தூலசரீரஸமஷ்டிகளில் சயனித்திருப்பவர்.
7 அன்னமயன் முதலான புருஷர்களுக்கெல்லாம் உத்தமர்.
8 ஸத்வரஜஸ்தமோகுணங்களுள்ளவர்.
9 மூன்று குணங்கள் சேர்ந்த வடிவமானவர்.
10 அம்ருதரூபமாயிருப்பவர்.
11 தேவர்களென்கிற பெயர்பெற்றவர்.
12 ஆதிசேஷனென அநந்தனென்னும் பெயருள்ளவர்.
13 அவ்யாக்ருத ஆகாசரூபர்.
14 அழிவற்றரூபமுள்ளவர்.
15 அநாதியாயிருப்பவர்.
16 கார்யகாரணரூபமாகி க்ரகிக்கத்கூடியவரும் கூடாதவருமாயிருப்பவர்.

தரே! [1]ருததாமரே! [2]ஆதிதேவரே! [3]வ்ஸுப்ரதரே! ப்ரஜாபதியே! [5]ஸுப்ரஜாபதியே! [6]வநஸ்பதியே! [7]மஹாப்ரஜாபதியே! [8]ஊர்ஜஸ்பதியே! [9]வாசஸ்பதியே! [10]ஜகத்பதியே! [11]மநஸ்பதியே! [12]திவஸ்பதியே! [13]மருத்பதியே! [14]ஸலிலபதியே! [15]ப்ருதிவீபதியே! [16]திக்பதியே! [17]பூர்வநிவாஸரே! [18]குஹ்யரே! [19]ப்ரம்மபுரோஹிதரே! [20]ப்ரம்மகாயிகரே! [21]ராஜிகரே! [22]மஹாராஜிகரே! [23]சாதுர்மஹாராஜிகரே! [24]ஆபாஸுரரே! [25]மஹாபாஸுரரே! [26]ஸப்தமஹாபாகரே! [27]ஸப்தமஹாஸ்வரரே! [28]யாம்யரே! [29]மஹாயாம்யரே!

---

1 விகாரமில்லாத பிரகாசமுள்ளவர்.
2 'நாராயணா' என்பது பிழைபவுரை.
3 காமபலனைக் கொடுப்பவர்.
4 தக்ஷன் முதலான ஸ்ருஷ்டிகர்த்தர்களின் வடிவமானவர்.
5 மோக்ஷகுருவான ஸனகாதிஸ்வரூபர்.
6 அரசுமுதலான வ்ருக்ஷரூபர்.
7 நான்முகராயிருப்பவர்.
8 ப்ரம்மாமுதலான ஜீவர்களுக்குப் பதியாயிருப்பவர்.
9 தேவகுருவாயிருப்பவர்.
10 உலகங்களுக்குப் பதியான இந்திரா.
11 ஸூத்ராத்மாவாயிருப்பவா.
12 ஸூர்யரூபர்
13 பிராணவாயுரூபர்.
14 வருணரூபர்.
15 ஆசராயிருப்பவர்.
16 திக்பாலராயிருப்பவர்.
17 மஹாப்ரளயத்தில் உலகங்களுக்கு ஆதாரமாயிருப்பவா.
18 வெளியிடக்கூடாதவர்.
19 ப்ரம்மாவுக்கு வேதங்களை உபதேசித்தவர். [னவைகளாயிருப்பவர்.
20 ப்ராம்மண சரீரத்தால் நிறைவேற்றக்கூடிய யாகம் அத்யயனமுதலா
21 ராஜகாரியமான பாலன முதலியவைகளாயிருப்பவர்.
22 மஹாராஜிகமென்னும் தேவக்கூட்டமாயிருப்பவர்.
23 சாதுர்மஹாராஜிகமென்கிற தேவக்கூட்டமாயிருப்பவர்.
24 ஆபாஸுரரென்கிற தேவக்கூட்டமாயிருப்பவா.
25 மஹாபாஸுரரென்கிற தேவக்கூட்டமாயிருப்பவர்.
26 காயத்ரீமுதலான ஏழு மந்திரங்களால் ஆப்யாயனம் செய்யக்கூடிய பெரிய ஏழுயஜ்ஞபாகங்களையுடையவர்.
27 பெரிய ஏழுஸாமஸ்வரங்களையுடையவர்.
28 யமகணஸ்வரூபர்.
29 சித்திரகுப்தன்முதலானவராயிருப்பவர்.

[1]ஸம்ஜ்ஞாஸம்ஜ்ஞரே! [2]துஷிதரே! [3]மஹாதுஷிதரே! [4]ப்ரமர்த்தநரே! [5]பரிநிர்மிதரே! [6]அபரிநிர்மிதரே! [7]வசவர்த்திந்! [8]அபரிநிந்திதரே! [9]அபரிமிதரே! [10]வசவர்த்திந்! [11]அவசவர்த்திந்! [12]யஜ்ஞரே! [13]மஹாயஜ்ஞரே! [14]அஸம்பஜ்ஞரே! [15]யஜ்ஞஸம்பவரே! [16]யஜ்ஞயோநியே! [17]யஜ்ஞகர்ப்பரே! [18]யஜ்ஞஹ்ருதயரே! [19]யஜ்ஞஸ்துதரே! [20]யஜ்ஞபாகஹரரே! [21]பஞ்சயஜ்ஞரே! [22]பஞ்சகாலகர்த்ருபதியே! [23]பாஞ்சராத்ரிகரே! [24]வைகுண்டரே! [25]அபராஜிதரே! [26]மான

---

1 ஸம்ஜ்ஞையென்னும் பெயருடையவர்
2 துஷிதரென்கிற தேவகணஸ்வரூபர்
3 மஹாதுஷிதரென்கிற தேவக்கூட்டமாயிருப்பவர்
4 மிருத்யுரூபராயுள்ளவர்.
5 மிருத்யுவுக்குஸஹாயமாக ஏற்படுத்தப்பட்ட காமக்ரோதாதிஸ்வரூபர்.
6 காமக்ரோதமுதலியவற்றிற்குஎதிரான சமம் ஆரோக்யமுதலியனவாயிருப்பவர்.
7 சமமுதலானவற்றின்வசத்திலிருப்பவர்.
8 சமமுதலியவையுள்ளவராயிருப்பதால் நிந்திக்கப்படாதவர்.
9 எல்லாஜாதிகளின்ரூபங்களிலும் அடங்காதவர்.
10 சிக்ஷைக்குஉள்பட்டவர்.
11 சிக்ஷிக்கின்றவர்.
12 அக்னிஹோத்ரமுதலியனவாயிருப்பவர்.
13 ப்ரம்மயஜ்ஞமுதலியனவாயிருப்பவர்.
14 யஜ்ஞத்திற்குஎதிரானகர்மமாயிருப்பவர்
15 யஜ்ஞத்திலேற்பட்ட ரித்விக்முதலானவராயிருப்பவர்.
16 யஜ்ஞத்திற்குக்காரணமான வேதஸ்வரூபர்.
17 யஜ்ஞத்தைகர்ப்பத்திலுடைய அக்னியாயிருப்பவர்
18 யஜ்ஞாங்கத்தின் உபாஸன ஸ்வரூபர்.
19 யஜ்ஞத்தில் துதிக்கப்பட்டவர்.
20 யஜ்ஞத்தில் பாகத்தைக் கிரகிப்பவர்
21 பஞ்சயஜ்ஞஸ்வரூபர்.
22 பகலிரவு, மாதம், ருது, அயனம், வருஷமென்கிற ஐந்து காலங்களுக்கும், அதிஷ்டானம், கர்த்தா, கரணம், கிரியை, அதிர்ஷ்டமென்கிற ஐந்து கர்த்தாக்களுக்கும் பதியாயுள்ளவர்.
23 பாஞ்சராத்ரமென்கிற ஆகமத்தால் அறியக்கூடியவர்
24 மடங்குதலில்லாதவர்; அல்லது, விகுண்டையின் புத்ரர்
25 பிறரால் ஜயிக்கப்படாதவர்.
26 மனத்தை உபாதியாகவுடையவர்.

ஷிகரே! [1]நாவமிகரே! [2]நாமநாமிகரே! [3]பரஸ்வாமியே! [4]ஸுஸ்நாதரே! ஹம்ஸரே! [6]பரமஹம்ஸரே! [7]மஹாஹம்ஸரே! [8]பரமஜ்ஞேயரே! [9]பரமயாஜ்ஞிகரே! [10]ஸாங்க்யயோகரே! [11]ஸாங்க்யமூர்த்தியே! [12]அம்ருதேசயரே! [13]ஹிரண்யேசயரே! [14]வேதேசயரே! [15]தேவேசயரே [16]குசேசயரே! [17]பிரம்மேசயரே! [18]பத்மேசயரே! [19]விஸ்வேஸ்வரரே! [20]விஷ்வக்ஸேனரே! உமக்கு நமஸ்காரம். நீர் [21]ஜகதந்வயர். நீர் [22]ஜகத்ப்ரக்ருதி. உமக்கு அக்நி வாய். வடவையின்முகத்திலிருந்தும்உண்டான அக்னியும் ஆஹுதியும் நீர். ஸாரதியென்கிற அக்னியும் நீர். வஷட்காரம் நீர் ஓங்காரம் நீர். தவம் நீர் மனமும் நீர். பூர்ணமான அங்கங்களையுடைய சந்திரன் நீர். நீர் [23]சக்ஷுராஜ்யம். நீர் ஸூர்யன். நீர் திக்கஜம். [24]திக்பாநுவே! [25]விதிக்பாநுவே! [26]ஹயசிரஸே! நீர்

---

1 புதிதாய் அறியக்கூடியவர்.
2 ஒவ்வொருநாமத்தினாலும் அறிவிக்கப்பட்டவர்
3 பரனென்னும் பிரம்மாவுக்கு ஸ்வாமியாயிருப்பவர்.
4 வேதவ்ரதத்தைமுடித்தவர்.
5 மூன்றுதண்டமுடைய யதியாயிருப்பவர்.
6 ஒருதண்டமுள்ள யதியாயிருப்பவர்
7 தண்டமுதலானவையில்லாதமஹாஹம்ஸனென்கிறயதியாயிருப்பவர்.
8 பரமமானஜ்ஞேயபரமஸ்வரூபர்.
9 மஹாயாகம்செய்கின்ற தீக்ஷிதராயிருப்பவர்.
10 ஸாங்கியயோகஸ்வரூபர்.
11 ஸாங்கியமான அதாவது கல்பிதப்பிரபஞ்சநீங்கினஸ்வரூபமுடையவர்.
12 அம்ருதர்களென்கிற ஜீவர்களிடம் சயனித்திருப்பவர்.
13 ஹிரண்யமென்கிற ஹ்ருதயத்தில் சயனித்திருப்பவர்.
14 வேதத்தில் சயனித்திருப்பவர்.
15 இந்திரியங்களில் சயனித்திருப்பவர்.
16 குசமென்கிறஸமுத்திரஜலத்தில் சயனித்திருப்பவர்.
17 வேதத்தில் சயனித்திருப்பவர்.
18 பிரம்மாண்டமாகிற பத்மத்தில் சயனித்திருப்பவர்.
19 எல்லாருக்கும் ஈஸ்வரராயிருப்பவர்.
20 பக்தனைப்பாதுகாக்க எங்கும் செல்லுந்தன்மையுள்ளஸேனையுள்ளவர்
21 ஜகத்தில் ஸத்தாரூபமாக ஸம்பந்தித்தவர்.
22 ஜகத்திற்கு உபாதானகாரணம்.
23 யாகத்தில் (பத்தினியின்) நேத்திரத்தால் பார்க்கப்பட்டு அதனால் சுத்தியடைந்த நெய்.
24 திசைகளைப் பிரகாசிக்கச்செய்கிறவர்.
25 விதிக்குக்களைப் பிரகாசிக்கச்செய்பவர்.
26 ஹயக்ரீவர்.

[1]ப்ரதமத்ரிஸுபர்ணர் ; [2]வர்ணதரர் [3]பஞ்சாக்நியே ; [4]த்ரிணாசிகேதரே ! [5]ஷடங்கநிதாநரே ! [6]ப்ராக்ஜ்ஜோதிஷரே ! [7]ஜ்யேஷ்டஸாமகரே! [8]ஸாமிக்வ்ரததரரே ! (நீர்) [9]அதர்வசிரஸ். [10]பஞ்சமஹாகல்பரே! [11]பேநபாசார்யரே ! [12]வாலகில்யரே ! [13]வைகாநஸரே ! [14]அபக்நயோகரே ! [15]அபக்நவ்ரதரே ! [16]அபக்நபரிஸங்க்யாநரே ! [17]யுகாதியே ! [18]யுகமத்யரே ! [19]யுகநிதநரே ! [20]ஆகண்டலரே ! [21]ப்ராசீநகர்ப்பரே! [22]கௌசிகரே ! [23]புருஷ்டுதரே ! [24]புருஹூதரே ! [25]விச்வக்ருத்தே ! [26]விச்வஜித்தே ! [27]விச்வரூபயே ! [28]அநந்தகதியே ! [29]அநந்த

1 மூன்றினதான த்ரிஸுபர்ணமந்திரத்தால் சொல்லப்பட்ட ஆதித்யரூபர்.
2 பிராம்மணர்முதலான ஜாதிகளைத் தரிப்பவர்.
3 கார்ஹபத்யம், ஆஹவனீயம், தக்ஷிணம், ஸப்யம், ஆவஸத்யம் என்கிற ஐந்து அக்னிகளாயிருப்பவர்.
4 நாசிகேதமென்கிற அக்னியை மூன்றுதரம சயனஞ்செய்ததால் த்ரிணாசிகேதரென்று பெயருள்ளவர்.
5 ஆறு அங்கங்களுள்ள வேதஸ்வரூபர்.
6 பிராக்ஜ்ஜோதிஷமென்கிற ஸாமரூபர்.
7 ஜ்யேஷ்டமென்கிற ஸாமத்தைக் கானஞ்செய்பவர்.
8 ஸாமகர்களுடைய விரதத்தைத் தரிப்பவர்.
9 அதர்வசிரஸென்கிற உபநிஷத்தின் ஸ்வரூபர்.
10 ஸௌரம, சாக்தம், காணபத்யம், சைவம், வைஷ்ணவம் என்கிற ஐந்துபெரிய ஆகமங்களால் தெரிவிக்கப்பட்டவர்.
11 நுரையை அருந்துகின்ற முனிவர்களுக்கு ஆசார்யராயிருப்பவர் .
12 வாலகில்யரென்கிற முனிவராயிருப்பவர்.
13 வைகானஸவ்ரதமுடையவர்
14 கெடுக்கப்படாத யோகமுடையவர்.
15 கெடுக்கப்படாத வ்ரதமுள்ளவர்.
16 கெடுக்கப்படாத விசாரமுடையவர்.
17 யுகத்தின் ஆதியாயிருப்பவர்.
18 யுகத்தின் மத்தியமாயிருப்பவர்.
19 யுகத்தின் முடிவாயிருப்பவர்.
20 இந்திரனாயிருப்பவர்.
21 பிராசீனகர்ப்பரென்கிற முனிஸ்வரூபர்.
22 கௌசிகமுனிரூபர்.
23 வெகுவாகத் துதிக்கப்பட்டவர்.
24 வெகுவாக (யாகத்தில்) கூப்பிடப்பட்டவர்.
25 எல்லாவற்றையும செய்தவர்.
26 எல்லாவற்றையும் ஜயித்தவர்.
27 எல்லாரூபமாயுமிருப்பவர்.
28 அளவற்ற கதியுடையவர்.
29 அளவற்ற சரீரமுடையவர்.

போகரே! [1]அநந்தரே! [2]அநாதியே! [3]அமத்யரே! [4]அவ்யக்த மத்யரே! [5]அவ்யக்தநிதநரே! [6]வ்ரதாவாஸரே! [7]ஸமுத்ராதி வாஸரே! [8]யசோவாஸரே! [9]தபோவாஸரே! [10]தமர்வாஸரே! [11]லக்ஷ்ம்யாவாஸரே! [12]வித்யாவாஸரே! [13]கீர்த்யாவாஸரே! [14]ஸ்ரீவாஸரே! [15]ஸர்வாவாஸரே! வாஸுதேவரே! [16]ஸர்வச்சந்தகரே! [17]ஹரிஹயரே! [18]ஹரிமேதரே! [19]மஹாயஜ்ஞபாகஹரரே! [20]வரப்ரதரே! [21]ஸுகப்ரதரே! [22]தனப்ரதரே! [23]ஹரிமேதரே! [24]யமரே! [25]நியமரே! [26]மஹாநியமரே! [27]க்ருச்ரரே! [28]அதிக்ருச்ரரே!

---

1 அளவற்றவர்.
2 ஆதியற்றவர்.
3 மத்தியமற்றவர்.
4 ஸ்பஷ்டமில்லாத மத்தியத்தையுடையவர்.
5 அவ்யக்தமான முடிவையுடையவர்.
6 வ்ரதங்களுக்கு இருப்பிடமாயுள்ளவர்.
7 ஸமுத்திரத்தை இருப்பிடமாகவுடையவர்.
8 யசஸுக்கு (தனக்குத் தெரியாத புகழுக்கு) இருப்பிடமானவர்.
9 தவத்திற்கிருப்பிடமானவர்.
10 அடக்கத்திற்கிருப்பிடமானவர்.
11 லக்ஷ்மிக்கு இருப்பிடமானவர்.
12 வித்தைக்கு இருப்பிடமானவர்.
13 கீர்த்திக்கு (தனக்குத் தெரிந்த புகழுக்கு) இருப்பிடமானவர்.
14 ஸ்ரீதேவிக்கு இருப்பிடமானவர்.
15 எல்லாவற்றிற்கும் ஆதாரமானவர்.
16 எல்லோருடைய இஷ்டத்தையுமளிப்பவர்.
17 ராமாவதாரத்தில் வானரரை அச்வமாகவுடையவர்.
18 அச்வமேதஸ்வரூபர்.
19 மஹாயஜ்ஞமென்கிற யோகத்தில் ஹவிர்ப்பாகமாயிருக்கிற ஜீவஸ்வரூபத்தைக் கிரஹிப்பவர்.
20 வரத்தையளிப்பவர்.
21 ஸுகத்தையளிப்பவர்.
22 தனத்தையளிப்பவர்.
23 ஹரியினிடத்தில் புத்தியையுடைய பக்தஸ்வரூபர்.
24 யமமென்கிற யோகாங்கஸ்வரூபர்.
25 நியமமென்கிற யோகாங்கஸ்வரூபர்.
26 பெரிதான நியமரூபர்.
27 க்ருச்ரமென்கிற வ்ரதஸ்வரூபர்.
28 அதிக்ருச்ரரூபர்.

[1]மஹாக்ருச்ரரே! [2]ஸர்வக்ருச்ரரே! [3]நியமதரரே! [4]நிவ்ருத்தப்ரமரே! [5]நிவ்ருத்திதர்மபராயகதரே! [6]ப்ரவசநகதரே! [7]ப்ருச்நிகர்ப்பப்ரவ்ருத்தரே! [8]ப்ரவ்ருத்த வேதக்ரியரே! [9]அஜரே! [10]ஸர்வகதியே! [11]ஸர்வதர்சியே! [12]நக்ராஹ்யரே! [13]அக்ஷயரே! [14]அசலரே! [15]மஹாவிபூதியே! [16]மஹாத்ம்யசரீரரே! [17]பவித்ரரே! [18]மஹாபவித்ரரே! [19]ஹிரண்யமயரே! [20]ப்ருஹத்தே! [21]அப்ரதர்க்யரே! [22]அவிஜ்ஞேயரே! [23]ப்ரம்மாக்ரியரே! [24]ப்ரஜாஸர்க்ககரரே! [25]ப்ரஜாநிதநகரரே! [26]மஹாமாயாதரரே! [27]வித்யாதரரே! [28]யோகதரரே! [29]சித்ரசிகண்

---

1 மஹாக்ருச்ரரூபர்.
2 எல்லாக்ருச்ரமாயுமிருப்பவர்
3 வ்ரதங்களைத் தரிப்பவர்.
4 பரம்மமில்லாதவர்.
5 சிறந்த நிவ்ருத்திதர்மங்களையடைந்தவர்.
6 வேதாத்யயனத்தையடைந்த ப்ரம்மசாரி.
7 (வேதத்தைக்கர்ப்பத்திலுடையவராகி) ப்ருச்நிகர்ப்பராகிப் பிரவிருத்தித்தவர்.
8 வேதகர்மத்தை நடத்திவருகிறவர்.
9 ஜனனமற்றவர்.
10 எல்லாக்கதியுமுள்ளவர்; அல்லது, எல்லாருக்கும் கதியாயிருப்பவர்.
11 எல்லாவற்றையும் பார்ப்பவர்.
12 கர்மேந்திரியங்களால் க்ரஹிக்கமுடியாதவர்.
13 க்ஷயமற்றவர்.
14 சலனமற்றவர். [வர்
15 ஆகாயமுதலியவைகளின் ஸ்ருஷ்டிரூபமான பெரிய ஐச்வர்யமுடை
16 மஹிமைபொருந்திய விராட்சரீரமுடையவர்.
17 சுக்ரியமென்கிற ஆரண்யகமந்த்ரஸ்வரூபர்.
18 பாவமானீஸூக்தமுதலான மந்திரஸ்வரூபர்.
19 மண்டலப்ராம்மணமுதலிய மந்திரஸ்வரூபர்.
20 வேதஸ்வரூபர்.
21 புத்தியால் ஊகிக்கமுடியாதவர்.
22 (ரூபமுதலானவை இல்லாததினால்) அறியமுடியாதவர்.
23 கார்யகாரணமஹாகாரணங்களுள் சிறந்தவர்.
24 பிரஜைகளின் ஸ்ருஷ்டியைச் செய்கின்றவர்.
25 பிரஜைகளின் நாசத்தைச்செய்கின்றவர்.
26 பெரிதானமாயையைத் தரிப்பவர்.
27 வித்தையைத் தரிப்பவர்.
28 யோகத்தைத் தரிப்பவர்.
29 விசித்ரமான கொண்டைகளையுடையவர்.

டியே! [1]வரப்ரதரே! [2]புரோடாசபாகஹரரே! [3]கதாத்வரரே! [4]சிந்ந த்ருஷ்ணரே! [5]சிந்நஸம்சயரே! [6]ஸர்வதோவ்ருத்தரே! [7]நிவ்ருத்தரூபரே! [8]ப்ராம்மணரூபரே! [9]ப்ராம்மணப்ரியரே! [10]விஸ்வமூர்த்தியே! [11]மஹாமூர்த்தியே! [12]பாந்தவரே! [13]பக்தவத்ஸலரே! [14]ப்ரம்மண்யதேவரே! பக்தனுநான் உம்மைத் தரிசிக்கவிரும்புகிறேன். [15]நிர்வகல்பகஜ்ஞானத்தின்பொருட்டு உமக்கு நமஸ்காரம்; நமஸ்காரம்' என்று துதித்தார்.

---

## முந்நூற்றுநாற்பத்தேழாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

—:o:—

(நாராயணர் நாரதருக்குக் காட்சியளித்துத் தாம்செய்தஸ்ருஷ்டி முதலியவற்றைச் சொல்லியது.)

இவ்விதம், ரகஸ்யமும் உண்மையுமானநாமங்களால் துதிக்கப் பட்டவரும் எல்லாமறிந்தவரும் எல்லாவற்றையும்படைப்பவருள்சிறந்தவரும் எல்லாமூர்த்திகளின்ஸ்வரூபரும் ப்ரபுவும் ஹரியுமான அந்தப் பகவான் சிறந்த அந்தரூபத்தை நாரதமுனிவருக்குக் காட்டினர். ஓரிடத்தில் சந்திரனைக்காட்டிலும் மிகவும் சுத்தமானரூபமுடையவரும் ஓரிடத்தில் சந்திரனைக்காட்டிலும் விசேஷத்தோடுகூடியவரும் ஓரிடத்தில் அக்நியினிறமுடையவரும் ஓரிடத்தில் ஆதித்யனுக்குநிகரானரூப

---

1 ஶ்ரேஷ்டமானஸ்தானத்தை அளிப்பவர்.
2 புரோடாசத்தின்பாகத்தைக் கிரகிப்பவர்.
3 யாகத்தையடைந்தவர்.
4 ஆசையை அறுத்தவர்.
5 ஸம்சயமறுத்தவர்.
6 எங்குமிருப்பவர்.
7 விலகினஸ்வரூபத்தையுடையவர்.
8 பிராம்மணரூபராயிருப்பவர்.
9 பிராம்மணர்களிடம் பிரியமுள்ளவர்.
10 ஜகத்தைச் சரீரமாகவுடையவர்.
11 பெரிதான சரீரமுடையவர்.
12 பந்துவாயிருப்பவர்.
13 பக்தர்களிடம் அன்புள்ளவர்.
14 பிராம்மணர்களுக்கு ஹிதமானதேவர்.
15 'ஏகாந்ததர்சநாய என்பது' மூலம்.

முடையவரும் ஓரிடத்தில் கிளியின்இறகுக்குநிகரானவரும் ஓரிடத்தில் படிகத்துக்குநிகரானவரும் ஓரிடத்தில் மைம்மலைக்குநிகரானகாந்தியுடையவரும் ஓரிடத்தில பொன்னிறமுடையவரும் ஓரிடத்தில் பவளக்கொடிக்கு நிகரானவர்ணமுடையவரும் ஓரிடத்தில வெண்ணிறமுடையவரும், ஓரிடத்தில் ஸ்வர்ணத்துக்குநிகரானவர்ணமுடையவரும் ஓரிடத்தில வைடூர்யத்துக்கொப்பானவரும் ஓரிடத்தில் நீலவைடூர்யத்துக்கொப்பானவரும் ஓரிடத்தில் இந்திரநீலத்துக்கொப்பானவரும் ஓரிடத்தில் மயிலின்கழுத்துக்குநிகரானவர்ணமுடையவரும் ஓரிடத்தில் முத்துமாலைக்கொப்பானவரும ரூபங்களாலே பலவிதமாக இந்தவர்ணங்களைத்தரித்திருக்கிறவரும் அநாதியும ஆயிரங்கண்களுடையவரும் ஸ்ரீபொருந்தியவரும [1]ஆயிரந்தலைகளுடையவரும் ஆயிரம்பாதங்களுடையவரும் ஆயிரம்உதரங்களும்கைகளுமுடையவரும் ஓரிடத்தில்இவ்விதமென்றுவிளக்கமில்லாதவரும் பர்புவும் வாயினாலே ப்ரணவத்தையும அதனுடன்சேர்ந்தகாயத்ரீமந்திரத்தையும் உச்சரிப்பவரும் மற்றமுகங்களாலே பலவிதமானநான்குவேதங்களையும் சொல்லுகிறவரும் பாவங்களை ஹரிப்பவரும் இந்திரியஜயமுள்ளவரும் தேவருமான நாராயணர் உபநிஷத்தைக் கானம்செய்தார். அப்பொழுது, யஜ்ஞங்களுக்குபதியானதேவேசர் வேதி, கமண்டலு, தர்ப்பங்கள், சிறந்த (ஜப) மணிகள், குசங்கள், மான்தோல, தண்டம் இவற்றையும் ஜ்வலிக்கின்ற அக்நியையும் கைகளால தரித்துக்கொண்டிருந்தார். தெளிவானமனமுள்ளவரும் வேதியரிற்சிறந்தவருமானநாரதர் ப்ரஸன்னரான அந்தபரமேஶ்வரரை மௌனத்துடன் வணங்கிநமஸ்கரித்தார். தலையால்வணங்கின அந்தநாரதரைநோக்கித் தேவர்களுக்கெல்லாம்ஆதியும் விகாரமற்றவருமானபகவான், 'ஏகதர், த்விதர், த்ரிதர்என்னும்மகாமுனிவர்களும் என்னுடைய தர்சனத்தில் விருப்பத்துடன் இந்தஇடத்தை அடைந்தார்கள். அவர்களும் என்னைப்பார்க்கவில்லை ஏகாந்திகளிற்சிறந்தவனைத்தவிர என்னை ஒருவனும் பார்க்கமாட்டான். நீயும் ஏகாந்திகளில்உத்தமன், ஓ! பிராம்மண! சிறந்தவைகளான என்னுடையஇந்தசரீரங்கள் தர்மருடையகிருகத்தில் உண்டாயின, நீ எப்பொழுதும் அவைகளைப பஜி. வந்தபடி போ. ஓ! அந்தண! இப்பொழுது நீ விரும்புகிறவரத்தை என்னிடமிருந்து கேட்டுக்கொள். விஶ்வரூபனும் விகாரமற்றவனுமானநான் இப்பொழுது இவ்விடத்தில் உனதுவிஷயத்தில் அருளுள்ளவனாயிருக்கிறேன்' என்று சொன்னார்.

---

1 'சத' என்பது மூலம்.

நாரதர், 'ஓ! தேவரீரே! பகவானுனைநீர் என்னால்பார்க்கப்பட்டமையால் இப்பொழுது என்னுடைய தவம், யமம், நியமம்இவற்றின் பயன் உடனே அடையப்பட்டது. ஓ! பகவானே! அநாதியும் எல்லாவற்றையும்பார்த்தவர்களில் சிறந்தவரும் எல்லாமூர்த்தியுமுள்ளவரும் மஹானும் பிரபுவுமானநீர் பார்க்கப்பட்டீரென்பதே எனக்கு மேலானவரம்' என்றசொன்னர் (பகவான்) இவ்விதம்தரிசனம் கொடுத்துவிட்டு ப்ரம்மபுத்ரரானநாரதரைநோக்கி, மறுபடியும் ஒரு வார்த்தை சொல்லலானர். 'நாரத! போ தாமஸியாதே. இந்திரியங்களும் ஆஹாரமுமில்லாதவர்களும் சந்திரனுக்குநிகரானகாந்தியுள்ளவர்களுமான என்னுடையஇந்தபக்தர்கள் ஒருமுகமாக என்னைத் தியானஞ்செய்வார்கள் இவர்களுக்கு விக்நம் உண்டாகவேண்டாம். மகாபாக்யவான்களான இந்தஸித்தர்கள் முன்காலத்தில் ஏகாந்திகளாயிருந்தார்கள்; தமஸுகளாலும் ரஜஸுகளாலும்விடுபட்டு என்னை அடையப்போகிறார்கள் ஸந்தேகமில்லை. நேத்திரத்தால்பார்க்கமுடியாதவரும் த்வக்கினுல்பரிசிக்கமுடியாதவரும் (மூக்கினுல) முகரமுடியாதவரும் கந்தமும்ரஸமுமில்லாதவரும் ஸத்வம்ரஜஸ்தமஸென்கிற குணங்களடையாதவரும் எங்கும்வியாபித்தவரும் ஸாக்ஷியும் உலகத்துக்கு ஆத்மாவென்று சொல்லப்படுகிறவரும் பிராணிவர்க்கங்களுடைய சரீரங்கள் நசிக்கையிலும் நசியாதவரும் ஜனனமில்லாதவரும் நாசமில்லாதவரும் என்னாளுமிருப்பவரும் நிர்க்குணரும் [1]நிஷ்களரும் இருபத்துநான்குதத்வங்களைக்காட்டிலும் பிரஸித்தமான இருபத்தைந்தாமவரும் புருஷரும் கிரியையில்லாதவரும் ஞானத்தால் பார்க்கக்கூடியவராகச சொல்லப்படுகிறவரும் இவ்வுலகில் பிராம்மணஸ்ரேஷ்டர்கள் தம்மைஅடைந்து முக்தர்களாகக்காரணரும் ஸநாதனரும் பரமாத்மாவுமான அந்தவாஸுதேவர் அறியத்தக்கவர். ஓ! நாரத! சுபகர்மங்களாலும் அசுபகர்மங்களாலும் ஒருபோதும் பற்றப்படாத இந்தத்தேவருடையவியாபகத்தன்மையையும் மகிமையையும் பார். ஸத்வம்ரஜஸ்தமஸென்னுமிவைகளைக் குணங்களாகச் சொல்லுகிறார்கள். இவைகள் எல்லாசரீரங்களிலுமிருக்கின்றன; ஸஞ்சரிக்கவுஞ் செய்கின்றன. இந்தக்குணங்களை க்ஷேத்ரஜ்ஞன் அனுபவிக்கிறான். இவைகளால் அவன் அனுபவிக்கப்படுகிறதில்லை அவன் நிர்க்குணனும் குணங்களைப்புஜிக்கிறவனும் குணங்களைப்படைக்கிறவனும் குணங்களை அதிக்ரமித்தவனுமாயிருப்பான். ஓ! தேவரிஷியே! ஜகத்துக்கு ஆதாரமானப்ருதிவியானது அப்பில் லயத்தை அடைகிறது. அப்புதேயு

1 பிராணன் முதலியகலைகள் இல்லாதவர்.

விலும் தேயு வாயுவிலும் வாயு ஆகாயத்திலும் ஆகாயம் மனத்திலும் லயிக்கின்றன. பரமபூதமான அந்தமனமும் அவ்யக்தத்தில் லயிக்கிறது. ஓ! பிராம்மண! அவ்யக்தமானது கிரியையற்றவனான புருஷனிடம் லயிக்கிறது. ஸனாதனனான அந்தப்புருஷனுக்கு மேலானவன் இல்லை. ஸனாதனரும் புருஷருமான அந்தவாஸுதேவர் ஒருவரைத் தவிர உலகத்தில் சராசரமும் நித்யருமான பூதமானது இல்லையன்றோ? மகாபலமுள்ள வாஸுதேவர் எல்லாப்ராணிகளுக்கும் ஆத்மாவன்றோ? ப்ருதிவியும் வாயுவும் ஆகாயமும் அப்பும் தேயுவுமாகிய பெரிய ஸ்வரூபமுள்ள இவைகள் சேர்ந்து சரீரமென்று பெயரிடப்பட்டன. ஓ! பிராம்மண! அதில் பிரவேசித்திருப்பவரும் சிறந்த பராக்ரமமுள்ளவருமான அவர் பார்க்கத்தக்கவரல்லர் பிரபுவானவர் சரீரத்தைச் சேஷ்டிக்கச்செய்து உண்டானவராகவே ஆகிறார். தாதுக்களுடைய சேர்க்கையின்றி ஓரிடத்திலும் சரீரமானது உண்டாகிறதில்லை ஓ! பிராம்மண! தவிரவும், ஜீவனில்லாவிட்டால் வாயுக்கள் சேஷ்டிக்கும்படி செய்கிறதில்லை. அந்தஜீவன் சேஷரும் பிரபுவுமான ஸங்கர்ஷணனாகச் சொல்லப்படுகிறான் அவர் தம்முடைய (தியானமுதலான) கர்மத்தினாலே (ஜீவன்முக்தரான) ஸநத்குமாரராயிருப்பதை அடைந்தார். அந்தஸங்கர்ஷணரிடமிருந்தும் பிரளயத்தில் எல்லாப்பிராணிகளுடையலயத்துக்கும் ஆதாரமும் எல்லாப்பிராணிகளுடைய மனமுமாயிருக்கிற ப்ரத்யும்னர் (உண்டானாரென்று) சொல்லப்படுகிறார். அவரிடமிருந்தும் கர்த்தாவும் காரணமும் காரியமுமாயிருப்பவர் உண்டானார். அவரிடமிருந்து சராசரமான ஜகமனைத்தும் உண்டாகிறது. அவர் அநிருத்தர் அவர் ஈசானர். அவர் எல்லாக்கர்மங்களிலும் அதிகாரி. [1]பகவானும் க்ஷேத்ரஜ்ஞரும் நிர்க்குணமான ஸ்வரூபமுடையவருமான வாஸுதேவரே பிரபுவான ஸங்கர்ஷணரென்கிற ஜீவனாக அறியத்தக்கவர். ஸங்கர்ஷணரிடமிருந்து உண்டான ப்ரத்யும்னர் மனமாகச்சொல்லப்படுகிறார் ப்ரத்யும்னரிடமிருந்துமுண்டான அநிருத்தர் அகங்காரம்; அவர் ஈச்வரர். ஓ! நாரத! அக்ஷரமான ஜீவனும் க்ஷரமென்கிற பிரகிருதியும் காரணமும் காரியமும் சராசரமான எல்லாஜகத்தும் என்னிடமிருந்து உண்டாகின்றன இவ்வுலகில் எவர்கள் என்னுடைய பக்தர்களோ அவர்கள் என்னிடம் பிரவேசித்து முக்தர்களாகின்றார்கள். நானே பூரணனும் கிரியையற்றவனும் இருபத்தைந்தாமவனும் நிர்க்குணனும் நிஷ்களனும் (ஸுகதுக்கமுதலிய) த்வந்த்வமற்றவனும் ஒன்றையும் என்னுடையதென்று கருதாதவனுமாக அறியத்தக்கவன்.

---

1 ஒருசொல் விடப்பட்டது.

நீ என்னை ரூபமுள்ளவனாக நினைக்கவேண்டாம். ஜகத்துக்குக்குருவும் ஈசனுமான நான் விரும்பினால் ஒருக்ஷணத்தில் மறைந்துவிடுவேன். நாரத!, எல்லாப் பூதகுணங்களுடனும்கூடினவனாக நீ இப்பொழுது பார்ப்பது என்னால் படைக்கப்பட்டமாயை. நான் இவ்விதமிருப்பதாக நீ நினைக்கவேண்டா. என்னால் உனக்கு இந்த நான்கு மூர்த்திகளும் நன்கு சொல்லப்பட்டன. நானன்றோ ஜீவனென்று பெயருள்ளவன்? என்னிடம் ஜீவன் [1]கற்பிக்கப்பட்டவன். ஆகையால், இப்பொழுது உனக்கு, 'ஜீவன் என்றுலை பார்க்கப்பட்டான்' என்னும்புத்தி வேண்டா. ஓ! பிராம்மண! நான் எங்கும் வியாபித்தவன்; பிராணிவர்க்கங்களுக்கு அந்தராத்மா. பிராணிவர்க்கங்களுடைய சரீரங்கள் நசித்தபொழுது நான் நசியாமலிருக்கிறேன். ஸித்தர்களும் மகாபாக்யமுள்ளவர்களுமான அந்த மனிதர்கள் ஏகாந்திகளாகிறார்கள். ஓ! முனிவ! தமஸாலும் ரஜஸாலும் விடுபட்டு என்னிடம் பிரவேசிக்கப்போகிறார்கள். நாரத! நான் கர்த்தாவும் காரணமும் காரியமுமாயிருப்பவன். தேவனான நான் கண்ணால் பார்க்கத்தக்கவனல்லேன்; த்வக்கால் பரிசிக்கத்தக்கவனல்லேன்; (மூக்கால்) முகரத்தக்கவனுமல்லேன்; கந்தமும் ரஸமுமில்லாதவன் ஸத்வம்ரஜஸ்தமஸ் என்னும் அந்தக்குணங்கள் என்னிடம் இல்லை எங்கும் நிறைந்தவனும் ஸாக்ஷியுமான நான் உலகத்துக்கு ஆத்மாவென்று சொல்லப்படுகிறேன் ஹிரண்யகர்ப்பரும் உலகங்களுக்கு ஆதியும் நான்கு முகங்களுடையவரும் சொல்ல முடியாதமூர்த்தியை அடைந்தவரும் ஸநாதனருமான ப்ரம்மதேவர் என்னுடைய பலகாரியங்களை விசாரிக்கிறவர் குரோதத்திலிருந்துண்டானவரும் தேவருமானருத்ரர் என்னுடைய நெற்றியின்வழியே வெளிவந்தார். என்னுடைய வலப்பக்கத்தை அடுத்திருக்கிற பதினொரு ருத்ரர்களையும் பார். இடப்பக்கத்தை அடுத்திருக்கிற பன்னிரண்டு ஆதித்யர்களையும் பார். என்னுடைய முன்னிலையில் தேவர்களிற் சிறந்த எட்டு வஸுக்களையும் பார். என்னுடைய பின்பாகத்தில் நாஸத்யனென்றும் தஸ்ரனென்றும் சொல்லப்படும் வைத்தியர்களையும் பார். ஸ்ருஷ்டிகர்த்தர்களெல்லோரையும் பார். ஸப்தரிஷிகளையும் பார். வேதங்களையும் அநேகமான யாகங்களையும் அமிருதத்தையும் ஒஷதிகளையும் பார். தவங்களையும் நியமங்களையும் வெவ்வேறு விதமான யமங்களையும் எட்டுவிதமான ஐஸ்வர்யமும் மூர்த்திகரித்து ஓரிடத்திலிருப்பதையும் பார். ஸம்பத்தையும் லக்ஷ்மீதேவியையும் கீர்த்தியையும் கோரூபமான பூமியையும் வேதங்களுக்கு மாதாவும் என்னிடமிருப்பவளுமான ஸரஸ்

1 'ஸமாஹித:' என்பது மூலம்; 'என் அதீனன்' என்றும் கொள்ளலாம்.

வதியென்கிற காயத்ரீதேவியையும்பார். நாரத! ஜோதிகளுள்மிகச்சிற
ந்ததும் (ஆகாயத்தில்ஸஞ்சரிப்பதுமான) த்ருவநக்ஷத்ரத்தையும் பார்.
சிறந்தவனே! மூர்த்திகரித்தமேகங்களையும் ஸமுத்திரங்களையும் தடா
கங்களையும் நதிகளையும் சரீரம்பெற்றநான்குபித்ருகணங்களையும் பார்.
சரீரமில்லாமல் என்னிடமிருக்கிற இந்தமூன்றுகணங்களையும்பார். ஓ!
முனியே! தேவகாரியத்தைக்காட்டிலும் பித்ருகாரியமானது சிறந்தது.
தேவர்களுக்கும்பித்ருக்களுக்கும்ஆதியானநான் ஒருபிதா. நான் [1]ஹய
க்ரீவனாகி வடமேற்குஸமுத்திரத்தில் (இருந்துகொண்டு) நன்குஹோ
மஞ்செய்யப்பட்டவையும் ஸிரத்தையுடன்கூடினவையுமான ஹவ்யத்
தையும் கவ்யத்தையும் புஜிக்கிறேன். ஆதியில் என்னால் ஸ்ருஷ்டிக்கப்
பட்டபிரம்மாவானவர் யஜ்ஞரூபனான என்னைத்தாம் பூஜித்தார். அத
னால், நான் பிரீதியடைந்து கல்பத்தின்ஆதியில் அவருக்குச்சிறந்த
வரங்களையும் எனக்குப் புத்ரராயிருக்கும்தன்மையையும் உலகங்களு
க்கு யஜமானராயிருக்குந்தன்மையையும் அகங்காரத்தால் செய்யப்
பட்டபெயரையும் கொடுத்தேன். 'உம்மால் செய்யப்பட்டவரைய
றையை ஒருவனும் மீறமாட்டான். நீர் வரத்தைவிரும்புகிறவர்
களுக்கு வரத்தை அளிப்பவராவீர். தபோதனரே! மிக்கபாக்யமுள்ள
வரே! கடுமையானவிரதமுடையவரே! தேவகணங்களுக்கும் அஸுர
கணங்களுக்கும் ரிஷிகளுக்கும் பித்ருக்களுக்கும் பலவகையான
பிராணிகளுக்கும் நீர் எப்பொழுதும் உபாஸிக்கத்தக்கவராவீர். ஓ!
பிரம்மாவே! தேவகாரியங்களினிமித்தம் அவதாரத்தைஅடைந்தநான்
எப்பொழுதும் உம்மாலே புத்திரன்போல உபதேசிக்கவும் (கார்
யங்களில்) ஏவவுந்தக்கவன்' என்றுஞ்சொன்னேன். நான் அளவற்ற
தேஜஸுள்ளபிரம்மாவுக்கு இந்தநல்லவரங்களையும் மற்றவரங்களையும்
கொடுத்து இப்படியே ருத்ரருக்கும் மனுவுக்கும் அளவற்றதேஜஸு
ள்ள இந்திரனுக்கும் வரங்களைக்கொடுத்துவிட்டு ப்ரீதியடைந்து நிவ்
ருத்தியைப் பற்றினவனானேன். [2] ஸுகரூபமானநிவ்ருத்தியானது
எல்லாத்தர்மங்களிலும் சிறந்ததாகக் கருதப்பட்டது. ஆகையால்,
நிவ்ருத்தியைஅடைந்தவனும் எல்லா அங்கங்களிலும்ஸுகத்தையடை
ந்தவனுமாக ஸஞ்சரிக்கவேண்டும். வித்தையை ஸகாயமாக
வுடையவனும் ஸூர்யமண்டலத்திலிருப்பவனும் ஸநாதனனுமான
என்னை ஸாங்கியசாஸ்திரத்தின் நிச்சயத்தையே உறுதியாகவு

1 குதிரைத்தலையுள்ளவன்.

2 'எல்லாத்தர்மங்களுடையபரமமானநிவ்ருத்தியும் மோக்ஷமாகக் கரு
தப்பட்டது' என்றும் கொள்ளலாம்.

டையஆசார்யர்கள் கபிலராகச் சொல்லுகிறார்கள். ஓ! பிராம்மண! பகவானான இந்த ஹிரண்யகர்ப்பர் வேதத்தில் துதிக்கப்பட்டிருக்கிறார். அப்படிப்பட்ட ஹிரண்யகர்ப்பனானநான் யோகசாஸ்திரங்களில் யோகநதியாகச் சொல்லப்பட்டேன். இந்தச் சாஸ்வதனான நான் சரீரத்தைப்பிடித்துக்கொண்டு ஸ்வர்க்கத்தில் இருக்கிறேன். பிறகு, ஆயிரம்யுகங்களுடையமுடிவில் திரும்பவும் உலகத்தை ஸம்ஹரிப்பேன். திரும்பவும் சராசரங்களானபிராணிகளையும் உலகத்தையும் என்னிடமிருக்கச்செய்துகொண்டு ஒருவனாய் வித்தையுடன்லீலை செய்வேன். பிறகு, எல்லாஉலகத்தையும் படைப்பேன். இவைகளில் நான்காவதுமூர்த்தியானது அழிவற்றசேஷனைப் படைத்தது. அவர் ஸங்கர்ஷணராகச்சொல்லப்பட்டார். அவரும் பிரத்யும்னரைப் படைத்தார். பிரத்யும்னரிடமிருந்தும் அநிருத்தனானநான் உண்டானேன்; என்னுடையஸ்ருஷ்டி அடிக்கடி உண்டாகிறது. அநிருத்தரிடமிருந்தும் அவருடையநாபிகமலவழியாக ப்ரம்மா உண்டானார். பிரம்மாவினிடமிருந்தும் ஸ்தாவரங்களும் ஜங்கமங்களுமான எல்லாப் பிராணிகளும் உண்டாயின. ஆகாயத்திலிருந்தும் ஆதித்யனுக்கு உதயமும் அஸ்தமனமும் ஏற்படுவதுபோலக் கற்பங்களின் ஆதிகளில் அடிக்கடி இவ்வுலகில இந்தஸ்ருஷ்டி உண்டாகிறதை அறி. அளவற்ற காந்தியுள்ளவனே! திரும்பவும் நாசத்தையடையும்பொழுது காலமானது பலாத்காரமாக (உலகத்தைத்) திருப்புகிறது' என்றுசொன்னார்.

---

## மூந்நூற்றுநாற்பத்தெட்டாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

(நாராயணர் தம் அவதாரங்களை நாரதருக்குச் சொல்லியது.)

நாரதர், ஜனார்த்தனானபகவானை நோக்கி, 'ஓ! மகாப்ரபுவே! மிகவும்கோரமானஏகார்ணவத்தில் சராசரங்கள் நாசத்தையடைந்த பொழுது எந்தஎந்தப்பொருள்களில காணப்படுகிறீர்?' என்றுவினவ, பகவான் சொல்லலானார்.

'ஓ! நாரதமாமுனியே! (என்னுடைய) அவதாரங்களை உள்ளபடி கேள். மத்ஸ்யம், கூர்மம், வராஹம், நரஸிம்மம், வாமனன், பரசுராமன், தாசரதிராமன், பலராமன், [1]புத்தன், கல்கியென்று பத்து

---

1 'க்ருஷ்ண: கல்கி' என்பது வேறுபாடம்.

அவதாரங்கள். நான் முதலில் மீனமாக அவதரித்துப் பெரியகடலில் முழுகுகின்ற உலகங்களை வெளிப்படுத்திப் பிரஜைகளை நிலைநிறுத்துவேன். பிராம்மணச்ரேஷ்டா! ஹேமகூடபர்வதத்துக்கொப்பாகக் கருதப்பட்ட இரண்டாவதான கூர்மாவதாரஞ்செய்து அமிருதத்துக்காக மந்தரகிரியைத் தரிப்பேன். ஓ! வித்வானே! பிறகு, நான் வராஹரூபத்தைத் தரித்துக்கொண்டு கோரமானஸமுத்திரத்தில முழுகினதும் பாரத்தால்நிறைந்ததும் பிராணிகளால் வியாபிக்கப்பட்ட எல்லா அங்கங்களையுமுடையதும் ஸமுத்திரத்தை மேகலையாகவுடையதும் மறைந்ததுமான பூமியை எல்லாப்பிராணிகளுடைய நன்மைக்காகவும் மீண்டும் பலத்தினாலே தன்னிலையிலே கொண்டுவந்து சேர்ப்பேன். பலத்தால்கர்வங்கொண்ட ஹிரண்யாக்ஷனென்கிற அஸுரனைக் கொல்லப்போகிறேன். திரும்பவும் நரஸிம்மாவதாரத்தையெடுத்து யாகத்தைக்கெடுக்கின்ற ஹிரண்யகசிபுவென்கிற அஸுரனையும் தேவகாரியத்துக்காகக் கொல்வேன். தேவர்கள், அஸுரர்கள், ராக்ஷஸர்கள்முதலிய எல்லாராலும் கொல்லமுடியாதவனும் பலவானும் விரோசனனுடைய புத்ரனுமான பலியென்கிற பெரியஅஸுரன் உண்டாவான். அவன் இந்திரனையும் அவன்ராஜ்யத்திலிருந்து நழுவச்செய்வான். அதனால் மூவுலகமும் அபகரிக்கப்பட்டு இந்திரனும் விலகியிருக்கும்பொழுது, காச்யபரிடமிருந்து அதிதியினிடத்தில பன்னிரண்டாவதுபுத்திரனாகப் பிறப்பேன் ப்ரம்மசாரியாகி யாகசாலையையடைந்து உத்தமர்களானவேதியர்கள்துதிக்க (அவனுடைய) யாகத்தைத் துதிப்பேன். (அதைக்) கேட்டுப் பலியானவன் ப்ரீதியடைவான் (பிறகு அவன்,) 'ப்ரம்மசாரியே! எதை விரும்புகிறீர்? சொல்லும்' என்றுகேட்க, ஒரு பெரியவரத்தை யாசிப்பேன் 'மூன்றடி அளவுள்ள ஸ்தலம் கொடுக்க வேண்டும்' என்று (அந்த) மகாஸுரனை யாசிப்பேன். அவன் மந்திரிகளால் தடுக்கப்பட்டும் என்னிடம் மிகவும்ப்ரீதியுடன் கொடுப்பான். பிறகு, தானஜலமானது என்கையில்விழுந்தவுடன் மூன்று அடிகளுக்குள்ளடங்கிய ராஜ்யத்தை அளவற்றபராக்ரமமுள்ள இந்திரனுக்கு அளிப்பேன். ஓ! நாரதா! தேவர்களை அவரவர் அதிகாரங்களில் நிலைக்கச்செய்வேன். எல்லாத்தேவர்களாலும் கொல்லமுடியாதவனும் பலவான்களுள்சிறந்தவனுமான பலியென்கிற அஸுரனையும் பாதாளத்தில் வஸிக்கச்செய்வேன். திரேதாயுகத்தில ப்ருகுமகரிஷியின் குலத்தைவகிக்கின்ற பரசுராமனாக அவதரிப்பேன். ஸேனைகளும் வாகனங்களும் நிறைந்த க்ஷத்ரிய ஜாதியையும் நாசஞ்செய்வேன். திரேதாயுகத்துக்கும் துவாபரயுகத்துக்கும் ஸந்திஏற்படும்பொழுது

தசரதபுத்ரனைராமனாகிப் பூமண்டலாதிபதியாவேன். ஸ்ருஷ்டிகர்த்தரின் புத்ரர்களும் ரிஷிகளுமான ஏகதரும் த்விதரும் த்ரிதருடைய சாபத்தால் தம்முருவமிழந்து வானரத்தன்மையை அடைவார் ஓ! பிராம்மண! அவர்களுடையவம்சத்தில மிக்கபலசாலிகளும் பெரிய வீரத்தன்மையுள்ளவர்களும் இந்திரனுக்கு நிகரானபராக்ரமமுள்ளவர்களுமாகப்பிறக்கும்வானரர்கள் எனக்குத் தேவகாரியநிமித்தம் துணையாவார்கள். அந்தஸஹாயத்தால் ராக்ஷஸராஜனும் பயங்கரனும் புலஸ்தியவம்சத்தைக் கெடுப்பவனும் கொடியவனும் உலகத்துக்குத துன்பஞ்செய்பவனுமானராவணனைப பரிவாரத்துடன் கொல்லுவேன. அவனுடையராஜ்யத்தைக் கிரமப்படி விபீஷணனுக்குக் கொடுப்பேன். நான் அயோத்தியில் வஸிக்கின்ற எல்லாரையும் அழிவற்றலோகத்தை அடையச் செய்வேன் த்வாபரயுகத்துக்கும் கலியுகத்துக்கும், ஸந்தியானது முடியும்பொழுது (என்னுடைய) அவதாரமானது மதுராபட்டணத்தில கம்ஸனுக்காக உண்டாகும். நான் அந்த அவதாரத்தில தேவகண்டகர்களான அநேகம் அஸுரர்களைக்கொன்று குசஸ்தலியென்கிறத்வாரகாநகரத்தை இருப்பிடமாகச் செய்வேன். அந்தநகரத்தில்வஸித்துக்கொண்டு அதிதிக்கு அநிஷ்டத்தைச்செய்கிற பூமிபுத்ரனை நரகன், முரன், பீடனென்கிற அஸுரர்களைக் கொல்வேன். மிக்கபொருளுள்ளதும் அழகுள்ளதுமான ப்ராக்ஜோதிஷநகரத்திலுள்ள அஸுரஸ்ரேஷ்டர்களைக் கொன்று அதன்செல்வங்களைக் குசஸ்தலிக்குக் கொண்டுவருவேன். தவிரவும், ஓணானாகப்பிறந்த ந்ருகனென்பவனைத திருப்பவும் (சாபத்தினின்று) விடுவிப்பேன். அந்தஅவதாரத்தில பேரனை அநிருத்தனுக்காகச் சோணிதபுரமென்கிற பாணாஸுரனுடையநகரத்தையடைந்து பெரும்போர்புரிவேன் (அப்பொழுதும்,) பாணாஸுரனுக்கு நன்மையைச்செய்வதில் பற்றுள்ளவர்களும் (என்னுடன்போருக்கு) முயன்றவர்களும் தேவர்களும் உலகங்களால் வணங்கப்பட்டவர்களுமான சங்கரரையும் ஸுப்ரமண்யரையும் ஜயிப்பேன் பிறகு, பலியின்புத்ரனும் ஆயிரங்கைகளுள்ளவனுமான பாணனைஜயித்து உடனே ஸௌபமென்கிறநகரத்திலவஸிப்பவர்களெல்லாரையும் கொல்வேன், ஓ! பிராம்மணஸ்ரேஷ்ட! கர்க்கமஹரிஷியின்தேஜஸால், சூழப்பட்டவனும் (உலகத்தில்) பிரஸித்திபெற்றவனுமான காலயவனனுடையவதமும் என்னாலேயே நடக்கும். கம்ஸனையும் கேசியையும் க்ரூரனை அரிஷ்டனென்கிற மகாஸுரனையும் மிக்கவீர்யமுள்ள சாணூரனையும் பெரிய பலமுள்ளமுஷ்டிகனையும் ப்ரலம்பனையும் தேனுகனையும் காளிங்கனையும் காளிவடிவ

மெடுத்த அரிஷ்டனையும் கொல்வேன். யமுனையின் பெரியமடுவில காளியனைவசஞ்செய்து அதன்பிறகு கோகுலங்களில் இந்திரன் வர்ஷிக்க (அப்பொழுது) பசுக்களின் க்ஷேமத்துக்காக ஏழுராத்திரி (கோவர்த்தனமென்கிற) பெரியமலையையும் தரிப்பேன் ஓ! பிராம்மணா! பிறகு, மழைநின்றபொழுது பர்வதத்தின் உச்சியிலிருந்துகொண்டு உடனே இந்திரனோடுகூட ஸம்வாதஞ் செய்வேன். பௌண்ட்ரகவாஸுதேவனையும் சீக்கிரம் எல்லாத்திரவியத்தையும் அபகரித்துக் கொல்வேன். கிரிவ்ரஜத்தில பலவானும் எல்லா அரசர்களுக்கும் விரோதத்தைசெய்கிறவனும் செழிப்புற்றவனுமான ஜராஸந்தனென்னும் அஸுரன் அரசனாவான். என்னுடைய புத்தியின் ஆலோசனையினால் அவனுடையவதம் உண்டாகும். தர்மபுத்திரருடைய யாகத்தில் சிசுபாலனைக் கொல்வேன். துர்யோதனனுடைய குற்றத்தினாலும் யுதிஷ்டிரருடைய குணத்தினாலும் பூமியில பலசாலிகளான எல்லா அரசர்களும் (யுத்தத்திற்காக) சேர்ந்திருக்கையில் எனக்கு இந்திரபுத்ரனான அர்ஜுனனொருவனே நல்ல ஸகாயனாவான் (அப்பொழுது,) யுதிஷ்டிரரைத் தம்பிகளோடு அவருடைய ராஜ்யத்தில ஸ்தாபிப்பேன். 'ஈச்வரஸ்வரூபர்களான நரநாராயணர்களென்கிற இரண்டுரிஷிகளும் லோககார்யத்துக்காக முயற்சிசெய்துகொண்டு க்ஷத்ரியக்கூட்டத்தை எரிக்கிறார்கள்' என்று உலகத்துஜனங்கள் சொல்லுவார்கள். எல்லா அரசர்களும் ஆயுதங்களால கொல்லப்பட்டு ஸ்வர்க்கத்தை அடைவார்கள். சிறந்தவனே! இப்படிப் பூமியின்பாரத்தை இறக்கிவிட்டு ஆத்மஞானத்தை ஆச்ரயித்து ஸாத்வதர்களில் முக்கியமானவர்களெல்லோருக்கும் துவாரகைக்கும் கோரமான பிரளயத்தைச் செய்வேன். ஆத்மாதீனமாகச்செய்து த்வாரகையை ஸமுத்ரத்தில் முழுகச் செய்வேன். பிராம்மணஸ்ரேஷ்ட! பிறகு, [1]கலியுகத்தின் ஆதியில் காஷாயவஸ்திரதாரியும் முண்டனஞ்செய்துகொண்டவனும் சுத்தமானதந்தங்களுடையவனும் சுத்தோதனனென்பவனுக்குப் புத்ரனுமான புத்தனாகி (தவத்திற்காக) வ்ருக்ஷத்தை அடுத்தும் எண்ணிடம்பத்தோடு கூடிய மகததேசத்தரசனுடன் தர்மராஜனை அவன் கிருகத்தில் வஸித்துக்கொண்டும் ஜனங்களை மோகிக்கச்செய்வேன். நான் புத்தனாயிருக்கையில் சூத்ரர்கள் சுத்தர்களிடத்தில் புஜிப்பார்கள். மனிதர்களெல்லோரும் காஷாயந்தரித்துப் புத்தர்களாவார்கள். பிராம்மணர்கள் அத்யயனஞ்செய்யாதவர்களும் யாகமில்லாதவர்களுமாவார்கள். அக்நிஹோத்ரங்கள் நாசமடையும். குருவின் ஆரா

---

1 இந்தவரலாறு முழுதும் அதிகபாடம்.

தனமும் நசித்துவிடும். பிதாவின் (வார்த்தையைப்) புத்ரர்களும் புத்ரர்களின் பத்நிகளும் கேட்கமாட்டார்கள். ஜ்யேஷ்டர்களின் (வார்த்தைகளைக்) கநிஷ்டர்களும் (பிதாமஹர்களின வார்த்தைகளைப) பௌத்ரர்களும் (பதியின்வார்த்தைகளைப்) பத்நிகளும் கேட்கமாட்டார்கள். கீழோர்கள் மேலோர்களும் (மேலோர்கள் கீழோர்களும்) ஆவார்கள் கலியானது பூர்ணமாகையில் உலகமெல்லாம் இவ்விதம் வேதமும் ஸ்மிருதியுமற்றதாகும் அசுத்தமாகத் தர்மத்தின் ஸங்கரமும் ஏற்படும் அவர்களுடைய ஸமீபத்திலிருந்து தர்மமுணர்ந்தவர்களும் தேவதைகளையும் பரபரம்மத்தையும் அறிந்தவர்களுமான மனிதர்கள் அசுத்தர்களும் பொய்வழக்குரைக்கின்றவர்களுமாவார்கள் [1]தர்மம், நஷ்டமானவர்களிடமிருந்து கேட்பவர்கள் பாவத்தை நிசசயமாகச் செய்யும்பொழுது (நஷ்டதர்மத்தைச சொல்லுகிறவர்களுக்குச) சமமானவர்களே. ஆகையால, நன்மையை விரும்புகிறவர்கள் அவர்களோடு பேசத்தகாது (அவர்களைத்) தொடவுங்கூடாது அவர்களுடன் ஸங்கதோஷநிவ்ருத்திக்காக மூன்று நாள் உபவாஸமிருக்கவேண்டும். பிறகு, கலியுகத்தின் முடிவில் பிராம்மணனும் பசசைநிறமும் பொன்னிறமுமுடையவனும் விஷ்ணுயசஸென்கிற பிராம்மணனுக்குபபுத்ரனும் [2]யாகரூபமான கடிவாளமுள்ளவனும் (எல்லாருக்கும்) புரோஹிதனுமான கல்கியாக அவதரிப்பேன். உயர்ந்த மூக்குள்ள அந்த அஶ்வம் ஆசேவனமென்கிற (விஷ்ணுயசஸ்வஸிக்கிற) அந்தக்ராமத்தில் இருக்கும். பிராம்மணர்களெல்லோரும் அஶ்வமுள்ளவர்களாயிருப்பார்கள் நானும் அந்தப்பிராம்மணர்களுடன் சேர்ந்து எங்குமுள்ளமிலேசசர்களையும் பாஷண்டர்களையுமே நாசஞ்செய்வேன். கலியில், அப்பொழுது (என்னுடைய) மாயையினாலேயே பாஷண்டமதம் நசிக்கும் அந்தப்பிரளயத்தில நான் முடிவுவரை பாஷண்டர்களைக்கொன்றுவிட்டு அதன் பிறகு எப்பொழுதும் யாகங்களில் பற்றுள்ளவனாவேன் தவிரவும், குந்தியின்புத்திரரான தர்மபுத்ரர் ராஜ்யத்தை ஆளும்பொழுது நான்கு சரீரங்களுடைய நான் அளவற்ற கர்மங்களைச்செய்து பிரம்மதேவரால பூஜிக்கப்பட்ட என்னுடைய லோகங்களை அடைவேன் ஓ! பிராம்மணஶ்ரேஷ்ட! [3]ஹம்ஸம்,

---

1 நஷ்டதர்மத்தைச் சொல்லுகிறவனுக்கும, கேட்கிறவனுக்கும் பாவம் ஸமமென்பது.

2 'யாஜ்ஞவல்க்ய:' என்பதுமூலம; 'யாஜ்ஞவல்கரின் வமசத்தில் உதித்தவனும்' என்றும் கொள்ளலாம்.

3 இது, முன்சொல்லப்படவில்லை. இங்கே பலராமாவதாரம் சொல்லப்படவில்லை,

மத்ஸ்யம், கூர்மம், வராஹம், நரஸிம்மம், வாமனன், பரசுராமன், தாசரதிராமன், க்ருஷ்ணன், கல்கியென்பவை என்னுடைய அவதாரங்கள். [1]வேதமும் [2]ச்ருதியும் நஷ்டத்தையடைந்தபொழுது திரும்பவும் என்னால் கொண்டுவரப்பட்டன. முதலில் க்ருதயுகத்தில் (எல்லோரும்) வேதமும் ச்ருதியும் ஸ்ரவணம் செய்யப்பட்டார்கள். சென்றவைகளான அவதாரங்கள் உன்னால் புராணங்களில் அடிக்கடியாவது கேட்கப்பட்டிருக்கின்றனவா? சென்றவைகளும் சிறந்தவைகளுமான என்னுடைய பல அவதாரங்களை உலகோபகாரஞ்செய்துவிட்டு மறுபடியும் எனது பிரகிருதியை அடைந்தன. ஓ! ப்ரஞ்ஞானமான புத்தியுள்ளவனே! இப்பொழுது இவ்விடத்தில் ரக்ஷிக்கப் இப்படிப்பட்ட இந்த என்னுடைய தர்சனமானது முன் பிரம்மாவினாலும் அடையப்படவில்லை. ஓ! பிராம்மணா! சிறந்தவனே! ரகஸ்யமானதும் முன்கூறப்பட்டதும் நடந்ததும் நடப்பதுமான இந்த விஷயமானது பக்தியுள்ள உனக்கு என்னால் முழுதும் சொல்லப்பட்டது' என்று சொன்னார். தேவரும் எல்லாமூர்த்திகளையும் தரிப்பவரும் விகாரமற்றவருமான அந்தப்பகவான் இவ்வளவு வார்த்தையையும் சொல்லிவிட்டுத் திரும்பவும் அவ்விடத்திலேயே அந்தர்த்தானமானார். மிக்க தேஜஸ்ஸுள்ள நாரதரும் இஷ்டமான அனுக்ரகத்தை அடைந்து நரநாராயணர்களைத் தரிசிப்பதற்காகப் பதரிகாச்ரமத்தை அடைந்தார். அப்பா! நான்கு வேதங்களுடன் கூடியதும் ஸாங்கியயோகங்களுடன் செய்யப்பட்டதுமா அதனால் [3](ஐந்துதினங்களால் சொல்லப்பட்டதால்) பஞ்சராத்ரமென்று சொல்லப்பட்டதும் நாராயணருடைய வாக்கினால் வெளியிடப்பட்டதுமான இந்த மஹோபநிஷத்தை நாரதர் திரும்பவும் பிரம்மாவின் கிருகத்தில் கேட்டுணர்ந்தபடி உபதேசித்தார்'' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், "புத்திமானான அந்தப்பகவானுடைய மகிமை ஆச்சரியமாயிருக்கிறது. பிரம்மாவானவர் இதை அறியாதவரா? நாரதரிடமிருந்து கேட்டனரே. அந்தத் தேவருக்கடுத்தவரும் பிதாமஹரும் எல்லாமறிந்தவருமாயிருந்தும் அந்தப்பிரம்மா அளவற்ற பராக்ரமமுள்ள விஷ்ணுவின் மகிமையை ஏன் அறியவில்லை?" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார். "ஓ! ராஜச்ரேஷ்டனே! ஆயிரம் மஹாகல்பங்களும் நூறு மஹாகல்பங்களும் ஸ்ருஷ்டிகளும் பிரளயங்களும் சென்று

---

1 கர்மகாண்டம்; அல்லது மூன்றுவேதங்கள்.

2 கர்மம், உபாஸநம், ஞானம் ஆகிய மூன்றுகாண்டங்கள்; அல்லது வேதார்த்தவிசாரம்.

3 நான்குவேதங்களுக்கும் நான்குநாள்; ஸாங்கியயோகங்களுக்கு ஒருநாள்.

விட்டனவல்லவா? ஓ! அரசனே! ஸ்ருஷ்டியின் ஆதியில் ஸங்கல்பத்தால் ஸ்ருஷ்டிக்கப்பட்டவரும் பிரஜைகளுடைய ஸ்ருஷ்டியைச்செய்கிறவரும் பிரபுவுமான ப்ரம்மதேவர் பரமாத்மாவும் நியந்தாவும் தமக்குக் காரணரும் தேவச்ரேஷ்டருமான நாராயணரை நாரதரைக்காட்டிலும் மிகவும் அதிகமாக அறிகிறார் ஆனால், ப்ரம்மலோகத்தில்வந்திருந்த மற்றஸித்தர்களின் கூட்டங்களுக்கு வேதத்திற்குநிகரான அந்தப்புராணத்தைக் கேட்கச்செய்தார். பிரம்மாவானவர் ஆத்மாவையறிந்தவர்களும் ஆத்மத்யானமுடையவர்களுமான இருபத்தெண்ணாயிரம் முனிவர்களை உள்ளபடி கேட்பித்தார். இவ்விதம் நாரதமுனிவரால் சொல்லப்பட்ட இது முன்காலத்தில் ஆதித்யனால் அடையப்பட்டது. உலகங்களுக்குத் தாபத்தைச்செய்கின்றஸூர்யனுக்கு [1]அறுபத்தாறாயிரம்வருஷம் முன்செல்லவேண்டியவர்களாகப் படைக்கப்பட்டவர்களும் ஆத்மபாவனையுடையவர்களுமான எல்லாருக்கும் ஆதித்யன் உபதேசித்தான். ஐயனே! ஸூர்யனைத்தொடர்ந்து செல்லுகிறவர்களும் மகாத்மாக்களுமான அந்த முனிவர்களாலே மேருவில்கூடின தேவர்களுக்குச் சிறந்ததானஇது சொல்லப்பட்டது ஓ! ராஜச்ரேஷ்டனே! பிறகு, முனிசிகாமணியாகிய அஸிதனென்கிற பிராம்மணர் தேவர்களிடமிருந்துகேட்டுப் [2]பிதாவுக்குச் சொன்னார் ஐயா! சந்தனுவென்கிற பிதாவும் எனக்குச்சொன்னார் ஓ! பாரத! அவரிடமிருந்து நான் கேட்டு உனக்கும் சொன்னேன். தேவர்களானாலும் முனிவர்களானாலும், இந்தப்புராணத்தைக் கேட்டவர்களெல்லாரும் எங்கும் பரமாத்மாவைப் பூஜித்தவர்களாவார்கள் ஓ! அரசனே! ரிஷியால் சொல்லப்பட்டதும் பரம்பரையாகவந்ததுமான இந்தக்கதையை வாஸுதேவரிடம்பக்தியில்லாதவனுக்கு நீ ஒருவிதத்தாலும் சொல்லக்கூடாது அரசனே! உத்தமமானஇந்தச்சரித்திரத்தை எவன் எப்பொழுதும் பக்தியுடன் சொல்லுவானோ அந்தமனிதன் அப்பொழுதே சுத்தனும் ஸமாதியுள்ளவனுமாகி விரைவில நிலைபெற்றவிஷ்ணுலோகத்தையும் அடைவான் அரசனே! என்னிடமிருந்து நீகேட்ட வெவ்வேறான அநேகசரித்திரங்களுள் இது ஸாரமாக எடுக்கப்பட்டது ஓ! அரசே! தேவாஸுரர்களாலே (கடலைக்) கடைந்து அமிருதமெடுக்கப்பட்டது போல முன்காலத்தில் வேதியர்களால் இந்தக்கதையாகிறஅமிருதம் எடுக்கப்பட்டது. ஒரேமுடிவானதியானத்துடன் ஏகாந்தத்தில் நன்

---

1 'ஸூர்யனுக்குமுன் செல்லும்படிபடைக்கப்பட்ட அறுபத்தாறாயிரம் ரிஷிகள்' என்பது வேறுபாடம்.

2 'பித்ருக்' என்பது மூலம்; 'பித்ருதேவதைகளுக்கு' என்பர் சிலர்.

முகஇருந்து இதை எப்பொழுதும் படிக்கிறவனும் கேட்கிறவனுமான மனிதன் பெரியஸ்வேதத்வீபத்தையடைந்து சந்திரன்போன்ற காந்தியுள்ளவனாகி, ஆயிரம்கிரணங்களுள்ள ஸ்வயம்பிரகாசரானநாராயணரை அடைவான். இதில் ஸந்தேகமில்லை ரோகியானவன் இந்தக்கதையை ஆதிமுதல்கேட்டால் ரோகத்திலிருந்தும் விடுபடுவான். அறியவேண்டுமென்றுவிரும்புகிறவன் விரும்பியவற்றைஅறிவான். பக்தன் பக்தனுக்குரியகதியை அடைவான். வேந்தனே! உன்னாலும் புருஷோத்தமரானபகவான் எப்பொழுதும் பூஜிக்கப்படத்தக்கவர். அவரோ, ஸகல ஜகத்துக்கும் தாயும் தந்தையும் குருவுமாயிருக்கிறவர் கைவன்மையுள்ள யுதிஷ்டிர! பிராம்மணர்களுக்கு ஹிதரானதேவரும் ஸநாதனரும் மகாபுத்திமானும் பகவானுமானஜனார்த்தனர் உன்னிடம் ப்ரீதியடையக்கடவர்'' என்று சொன்னார் ஜனமேஜயமகாராஜரே! தர்மராஜரும் அவருடைய ஸகோதரர்களனைவரும் சிறந்த இந்தக்கதையைக்கேட்டு நாராயணரையே கதியாகக்கொண்டார்கள் பாரதரே! 'பகவானை அந்தப்புருஷரே ஜயமுள்ளவர்' என்று எப்பொழுதும் இந்தஜபத்தைசசெய்துகொண்டு ஸரஸ்வதியினஸாரமான புராணத்தைப் படித்தார்கள். எங்களுக்குக்குருவும் சிறந்தவரும் சிறந்ததும்ஜபிப்பதற்கு உரியதுமான இதைசசொன்னவருமான கிருஷ்ணத்வைபாயனரென்கிறமுனிவர் நாராயணரைத்துதித்துக்கொண்டு எபபொழுதும் அமிருதத்துக்கிருப்பிடமான பாற்கடலை ஆகாயமார்க்கமாக அடைந்து தேவர்களுக்கெலலாம் ஈசரானபகவானைப் பூஜித்துவிட்டு மறுபடியும் தமதாஸ்ரமத்திற்கு வருவார். பீஷ்மர், "நாரதரால் சொல்லப்பட்ட இந்தச்சரித்திரமுழுதும் உனக்கு என்னால சொலலப்பட்டது. பரம்பரையாகவந்த இது முன்காலத்தில் என்னுடைய பிதாவினால் எனக்குச் சொல்லப்பட்டது'' என்று சொன்னார்'' என்றார் வைசம்பாயனரால் சொலலபபட்ட இந்த எலலாசசரித்திரமும் உங்களுக்குச சொல்லப்பட்டது. அந்தசசரித்திரத்தைக்கேட்டு ஜனமேஜயர் விதிப்படி நன்றாக அனுஷ்டித்தார். நீங்களெல்லோரும் தவஞ்செய்தவர்களும் விரதத்தை அனுஷ்டித்தவர்களுமாயிருப்பவர்கள். நைமிசாரண்யவாஸிகளான நீங்களெல்லோரும் வேதவித்துக்களும் முக்கியர்களுமாயிருக்கிறீர்கள். சௌனகருடைய மகாஸத்ரத்தையடைந்த பிராம்மணோத்தமர்களான நீங்களெலலாரும் நன்கு ஹோமஞ்செய்யபபட்டயாகங்களால் சாஸ்வதரானபரமேஸ்வரரைப பூஜியுங்கள். பரம்பரையாகவந்த இது என்னுடைய பிதாவால் முன்காலத்தில் எனக்குசசொல்லப்பட்டது'' என்று சொன்னார்

---

## முந்நூற்றுநாற்பத்தோன்பதாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி)

(ப்ரம்மாமுதலியோர் தவம்புரிந்ததும் நாராயணர் வரமளித்ததும்.)

சௌனகர், "ஸௌதபுத்ரரே! யஜ்ஞங்களில் முந்தினபாகத்தைக்கிரஹிப்பவரும் பிரபுவும் வேதவேதாங்கங்களை அறிந்தவரும் பகவானுமான அந்தத்தேவர் எப்படி எப்பொழுதும் யஜ்ஞங்களைச் செய்கிறவராகிறார்? க்ஷேமமுள்ளவரும் பகவானுடைய அம்சமும் பிரபுவுமான அவர் எப்படி நிவ்ருத்திதர்மத்தையும் அடைந்தார்? பகவானான அந்தப்ரபுவே எப்படி நிவ்ருத்திதர்மங்களைச் செய்தார். தேவர்கள் எப்படி பிரவ்ருத்திதர்மங்களில் பாகத்துக்கு உரியவர்களாகச் செய்யப்பட்டார்கள்? (விஷயத்திலிருந்தும்) திரும்பின புத்தியுள்ளவர்கள் எப்படி நிவ்ருத்திதர்மங்களையுடையவர்களாகச் செய்யப்பட்டார்கள். வெகுநாளாயிருப்பதும் ரஹஸ்யமுமான எங்களுடைய இந்தச்சந்தேகத்தை நிவிருத்திசெய்யும். தர்மத்தைத்தருகின்ற நாராயணருடைய கதைகளை நீர் கேட்டிருக்கிறீர்" என்றுகேட்க, ஸௌதபுத்ரர் சொல்லத்தொடங்கினார்.

"ஓ! உத்தமரானசௌனகரே? புத்திமானான வ்யாஸருடைய சிஷ்யரிடம் ஜனமேஜயர்கேட்டதும் புராணதனைச்சேர்ந்ததுமான அதை உமக்குச் சொல்லுவேன். தேகிகளுக்கு அந்தராத்மாவான பகவானுடைய மாஹாத்மியத்தைக்கேட்டு மிக்கஅறிவையுடைய ஜனமேஜயர் வைசம்பாயனரைநோக்கி, "பிராம்மணரே! பிரம்மாமுதல் தேவர்கள், அஸுரர்கள், மானவர்கள்வரையிலுள்ள இந்த உலகங்கள் எல்லாம் அபிவிருத்தியின்பொருட்டுச சொல்லப்பட்ட கர்மங்களிலே பற்றினவைகளாகக் காணப்படுகின்றன. மோக்ஷமோ உம்மால் சாந்தமும் பரமுமாயிருக்கிறஸுகமாகச் சொல்லப்பட்டது. எவர்கள் இம்மையில் புண்ணியபாவமற்றவர்களாகி முக்தர்களாகின்றார்களோ அவர்கள் ஆயிரங்கிரணங்களுள்ள ஸூர்யாந்தர்யாமியான தேவரை அடைகின்றார்களென்று கேட்டோம். எல்லாத்தேவர்களும் (அந்த மோக்ஷதர்மததைச்செய்ய அரிதென்று) விட்டுவிட்டு ஹவ்யகவ்யங்களை அருந்துகிறவர்களானார்கள். அப்படிப்பட்ட ஸனாதனமான மோக்ஷதர்மமானது அனுஷ்டிக்க அரியது. மேலும், தம்காலத்தின் அளவை நினைத்தும் (ஸ்ருஷ்டிமுதலான) பிரவிருத்தியை அடைந்தவர்களான பிரம்மா, ருத்ரர், வலாஸுரனைக்கொன்றவரும் பிரபுவுமான இந்தி

ரன், ஸூர்யன், சந்திரன், வாயு, அக்கினி, வருணன், ஆகா யம், பிருத்வி, மற்றுமுள்ளதேவர்கள் ஆகிய இவர்கள் தமக்கு ஏற்பட்ட நாசத்தை அறியவில்லையா? அதனால்தான் அவர்கள் நிலையுள்ளதும் நாசமில்லாததும் கெடுதலில்லாததுமான மோக்ஷமார்க்கத்தை அடை யவில்லையா? கிரியையுள்ளவர்களுக்குக் காலத்தின்பரிமாணமென்கிற இது பெரிதான தோஷம். வேதியரே! என்னுடைய இருதயத்தில் முளையடிக்கப்பட்டதுபோலிருக்கிற இந்தஸந்தேகத்தை இதிஹாஸத் தைச்சொல்லி நிவ்ருத்திசெய்யும். இதைக்கேட்பதில் எனக்குப் பெரியகுதூஹலம் உண்டாயிருக்கிறது. ஓ! பிராம்மணரே! தேவர் கள் யாகங்களில் ஏன் பாகத்தைக்கிரகிப்பவர்களாகச் சொல்லப்பட் டார்கள்? ஓ! பிராம்மணரே! எதற்காகத் தேவர்கள் யாகத்தில் பூஜிக் கப்படுகிறார்கள்? ஓ! பிராம்மணச்ரேஷ்டரே! எவர்கள் யாகங்களில் பாகத்தைக் கிரஹிக்கின்றார்களோ அவர்கள் பெரிய யாகங்களாலே (யாரைப்) பூஜித்து யாருக்குப் பாகத்தைக் கொடுக்கின்றார்கள்?" என்றுகேட்க, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினார்.

"ஓ! அரசரே! ஆச்சரியம். உம்மால் மிகவும் ரஹஸ்யமானகேள் வியானது கேட்கப்பட்டது. இந்தக்கேள்வியானது தவம் செய்யாத வனும் வேதத்தையறியாதவனும் புராணங்களை அறியாதவனுமாயிருப் பவனால் ருஜுவாகச்சொல்லமுடியாது. ஸந்தோஷம். முன்காலத் தில் கிருஷ்ணத்வைபாயனரும் வேதங்களைப்பிரித்தவரும் மகாமுனிவ ரும் எனக்குக்குருவுமான வ்யாஸரிடம் நான்கேட்டதை உமக்குச் சொல்லுகிறேன். எல்லோரும் சேர்ந்தவர்களும் அடக்கமுள்ளவர் களும் சுத்தர்களும் ஆசாரமுள்ளவர்களும் கோபத்தைவென்றவர் களும் இந்திரியங்களை ஜயித்தவர்களுமான ஸுமந்து, ஜைமினி, பலமானவிரதமுடைய பைலர், நான்காவதுசிஷ்யனானநான், ஐந்தாமவ ராகக் கருதப்பட்டசுகர் ஆகிய இந்த ஐந்து சிஷ்யர்களுக்கும் நான்கு வேதங்களையும் ஐந்தாம் வேதமான பாரதத்தையும் அழகுள்ளதும் ஸித்தர்களாலும் சாரணர்களாலும் ஸேவிக்கப்பட்டதும் பர்வதங்களில் சிறந்ததுமான மஹாமேருவில் அத்தியயனம் செய்வித்தார். வேதங் களை அப்பியாஸம் செய்துகொண்டிருக்கிற எங்களுக்கு ஒருஸமயம் நீர்கேட்டதான இந்த ஸந்தேகம் உண்டாயிற்று. அவர் எங்க ளுக்கு நன்றாகச் சொல்லினார். ஓ! பாரதரே! உமக்கு இப்பொ ழுது சொல்லவேண்டிய விஷயமானது அவரிடமிருந்து நான் கேட் டது. எல்லாருடைய அஜ்ஞானஇருளையும் நிவிருத்திக்கிறவரும் பராச ரருக்குப்புத்திரரும் காந்திபொருந்தியவருமான வ்யாஸர் சிஷ்யர்

களுடைய வார்த்தையைக்கேட்டு, பிறகு, ஒருவார்த்தை சொல்ல லானார். 'ஓ! மிகசிறந்தவர்களே! நிகழ்ந்ததையும் நிகழ்கின்றதையும் நிகழ்வதையும் அறியவேண்டுமென்று என்னால் மிகப்பெரிதும் கடுமையுள்ளதுமான தவமானது செய்யப்பட்டது. பாற்கடலின்கரையில் தவஞ்செய்தவனும் இந்திரியங்களை அடக்கினவனுமான எனக்கு நாராயணருடைய அனுக்ரஹத்தால் விரும்பியபடி மூன்றுகாலங்களிலுமுள்ள பதார்த்தங்களை அறிகிறதான இந்த ஞானமானது உண்டாயிற்று. ஆகையினால், உத்தமமான ஸங்க்ஷேபத்தை நியாயத்தை அனுஸரித்துச் சொல்வேன்; கேளுங்கள் கல்பத்தின் ஆதியில் நடந்தபடி நான் ஞானக்கண்ணால் பார்த்தேன். ஸாங்கியத்தையும் யோகத்தையும் அறிந்தஜனங்களால் பரமாத்மாவென்று சொல்லப்படுகிற அவர் தம்முடைய கர்மத்தினால் மஹாபுருஷரென்கிற பெயரை அடைகிறார். அவரிடமிருந்தும் அவ்யக்தமுண்டாயிற்று. பண்டிதர்கள் அந்த அவ்யக்தபுருஷனைப் பிரதானமாகச் சொல்லுகிறார்கள். அவ்யக்தனான ஈச்வரனிடமிருந்தும் உலகஸ்ருஷ்டிக்காக வ்யக்தமுண்டாயிற்று. வ்யக்தமாயிருப்பதையடைந்து பிதாமஹரை உண்டுபண்ணின அந்த அனிருத்தரோ உலகங்களில் மகானான ஆத்மாவென்று சொல்லப்படுகிறார் அகங்காரமென்று சொல்லப்படுகிற அவர் எல்லாத் தேஜஸின்ஸ்வரூபமுமாயுள்ளவர். பிருதிவி, வாயு, ஆகாயம், அப்பு, ஐந்தாவதான தேயுவென்கிற ஐந்துவிதமான மகாபூதங்கள் அஹங்காரத்தாலுண்டுபண்ணப்பட்டன மகாபூதங்களைப் படைத்துவிட்டுப் பிறகே அந்தக்குணங்களைப்படைத்தார். சரீரமுடையவர்கள் பூதங்களிலிருந்தும் உண்டானார்கள். அவர்களைத் தெரிந்துகொள். மரீசி, அங்கிரஸ், அத்ரி, புலஸ்தியர், புலஹர், க்ரது, மகாத்மாவான வஸிஷ்டர், ஸ்வாயம்புவமனு ஆகிய எண்மரும் உலகங்கள் நிலைத்திருப்பதற்குப் பிரதானமான காரணங்கள். உலகங்களுக்குப் பிதாமஹரான பிரம்மாவானவர் உலகங்களின்ஸித்திக்காக வேதாங்கங்களோடும் யஜ்ஞங்களோடும் யஜ்ஞாங்கங்களோடுங்கூடின வேதங்களைச் சிருஷ்டித்தார். எட்டுப்பிரகிருதிகளிடமிருந்தும் இந்த எல்லா ஜகத்துமுண்டாயிற்று. கோபஸ்வரூபரானருத்ரர் உண்டானார் அவர், வேறுபத்தின்மரைத் தாம் சிருஷ்டித்தார். இந்தப்பதினொரு ருத்திரர்களும் விகாரபுருஷர்களாகக் கருதப்பட்டார்கள். உலகங்களின் ஸித்திக்காக உண்டான அந்த ருத்ரர்களும் தேவரிஷிகளான எல்லாப்பிரகிருதிகளும் பிரம்மாவினிடம்சென்று, 'ஓ! பகவானே! ஸமர்த்தரான உம்மாலே நாங்கள் ஸ்ருஷ்டிக்கப்பட்டோம். ஓ! பிதாமஹரே! யார் எந்த

அதிகாரத்திலிருக்கவேண்டும்? உம்மால் நியமிக்கப்பட்டகார்யத்தைப் பார்க்கிறதென்கிற அதிகாரத்தை அஹங்காரத்தையுடைய ஒருவன் எப்படி பரிபாலிக்கலாம்? அதிகாரத்தில்விஷயநதைப்பார்க்கிறவனுக்குப் பலத்தைக்கொடும்' என்று சொன்னார்கள். இவ்விதம் சொல்லப்பட்ட மகாதேவரான பிரம்மாவானவர் அந்தத்தேவர்களை நோக்கி, 'ஓ! தேவர்களே! நான் உங்களால் நன்குதெரிவிக்கப்பட்டேன். உங்களுக்கு மங்களமுண்டாகட்டும். 'உலகங்களுடையஎல்லாவியவஹாரத்தினுடையஅதிகாரமும் எபபடி செய்யத்தக்கது? உங்களுக்கும் எனக்கும் எப்படி பலக்குறைவு உண்டாகாமலிருக்கும்?' என்கிற இந்தசிந்தையானது உங்களுக்குண்டானதுபோல எனக்குமுண்டாயிற்று. (ஆகையால்,) இப்பொழுது நாமெல்லாரும் உலகங்களுக்குஸாக்ஷியும் அவயக்தருமான மஹாபுருஷரைச சரணமடைவோம் எது நன்மையோ அதை நமக்கு அவர் சொல்லுவார்' என்று சொன்னார். பிறகு, அந்தரிஷிகளும் தேவர்களும் பிரம்மாவுடன் உலகங்களின்ஹிதததைவிரும்பிப பாறகடலின்வடகரையை அடைந்தார்கள். அவர்கள் வேதத்தில்விதிக்கப்பட்டதும் பிரம்மாவினால்சொல்லப்பட்டதுமான தவத்தைச செய்தார்கள் மஹாநியமமென்கிற அந்தத்தவததினனுஷ்டானமானது மிகவும் கடுமையுள்ளது. எலலோரும் மேல்நோக்கினபார்வையும் பாஹுவுமுடையவர்களும் ஒற்றைக்காலால்நிறகிறவர்களும் கட்டைபோலானவர்களும் ஸமாதியுடையவர்களுமாகி ஒருவழிபபட்டமனத்தையுடையவர்களானார்கள். அவர்கள் ஆயிரம் தேவவருஷங்கள் மிகவும்கடுமையான தவத்தைச் செய்து, 'ஓ! ஓ! பிரம்மாவுடன்கூடின தேவர்களே! தவத்தையேதனமாகவுடைய முனிவர்களே! உங்களெல்லாரையும், 'ஸ்வரவா' என்ற ப்ரப்னத்தினுல் பூஜித்துச் சிறந்தஒருவார்த்தை சொல்லுகிறேன். உங்களுடைய காரியத்தை நான் அறிந்தேன். அதுவும் உலகங்களுக்குப் பெரியநன்மையும் பிரவிருததிமார்க்கத்துக்குரியதுமானது. (ஆகையால்,) உங்களுக்குப பலத்தின்விருத்தியானது செய்யத்தக்கது. ஓ! தேவர்களே! என்னுடையஆராதனத்திலவிருப்பத்தால் நீங்கள் மிக்க தவத்தைசசெய்தீர்கள். ஓ! பெரியபலமுடையவர்களே! இந்ததவத்தின் உத்தமமானபயனை அனுபவிப்பீர்கள். உலகங்களுக்கெல்லாம் குருவும் பிதாமஹருமான இந்தபபிரம்மாவும் தேவர்களிற்சிறந்தவர்களான நீங்களும் ஸமாதியுடன் ஆராதியுங்கள். எல்லோரும் எந்நாளும் யஜ்ஞங்களில் எனக்குப பாகங்களை ஏற்படுத்துங்கள். ஓ! ஈஸ்வரர்களே! அப்பொழுது, அதிகாரததிறகுத்தககபடி க்ஷேமத்தைச

சொல்லுவேன்' என்னும் வேதவேதாங்கங்களால் அலங்கரிக்கப்பட்ட இன்பமானவசனத்தைச் செவியுற்றார்கள். தேவர்களுக்கும் தேவரான பகவானுடைய இந்தவார்த்தையைக்கேட்டு உடனே அந்தஎல்லாத் தேவர்களும் பிரம்மாவும் அந்தமகாமுனிவர்களும் உடல்புளகித்து வேதத்தில்காணப்பட்டவிதிப்படி விஷ்ணுவைத்தேவதையாகவுடைய யாகத்தைச்செய்தார்கள். அந்தஸத்திரமென்கிறயாகத்தில் எப்பொழுதும் பிரம்மாவானவர் தாமே பாகத்தைக் கல்பித்தார். தேவர்களும் தேவரிஷிகளும் பகவானைக்குறித்துத் [1]தங்கள்தங்கள் பாகங்களைக் கல்பித்தார்கள். கிருதயுகத்திலுள்ளதர்மங்களையுடைய அந்தப்பாகங்கள் மிகவும் கௌரவிக்கப்பெற்று ஆதித்யனுக்கு நிகரான நிறமுடையவரும் தமஸுக்கு அப்புறபட்டவருமான அந்தப்புருஷரைப் பெரியவரும் எங்கும் வியாபித்தவரும் பிரகாசிக்கின்றவரும் நியமனம் செய்கிறவரும் வரமளிப்பவரும் பிரபுவுமாகத் தெரிவிக்கின்றன. அதன்பிறகு வரத்தையளிப்பவரும் தேவருமான மஹேஸ்வரர் சரீரமில்லாதவரும் ஆகாயத்திலிருப்பவருமாகி (யாகத்தில்) இருக்கிறவர்களான அந்ததேவர்களைஎல்லாம் நோக்கிப் பின்வருமாறு சொல்லலானார். 'யாரால் எந்தப்பாகமானது கல்பிக்கப்பட்டதோ அது அப்படியே என்னை அடைந்தது. ப்ரீதியடைந்தவனான நான் இப்பொழுது ஆவிருத்திரூபமான பயனை அளிக்கிறேன். ஓ! தேவர்களே! இது உங்களுக்கு என்னுடைய அனுக்ரகத்தாலுண்டான அடையாளம். நீங்கள் பூர்ணமான சிறந்ததக்ஷிணைகளையுடைய யாகங்களாலே யுகந்தோறும் (என்னைப்) பூஜித்துப் பிரவிருத்திக்குரிய பயனை அடையுங்கள். ஓ! தேவர்களே! எல்லா உலகங்களிலும் எந்தமனிதர்கள் யஜ்ஞங்களால் ஆராதிப்பார்களோ அவர்கள் உங்களுக்கு வேதத்திலேற்படுத்தப்பட்ட பாகங்களைக் கல்பிப்பார்கள். இந்தப் பெரியயாகத்தில் எவன் எந்தப்படி எனக்குப் பாகத்தைக் கல்பிப்பானோ அவன் அந்தப்படியே யாகத்தில் பாகத்திற்கு யோக்யனாக வேதத்திலுள்ள விதிவாக்கியத்தில் என்னால் செய்யப்பட்டிருக்கிறான். நீங்கள் யஜ்ஞபாகத்தின் பயனுக்குயோக்யர்களும் என்னாலே அதிகாரத்தில் நியமிக்கப்பட்டவர்களும் உலகத்தில் எல்லாவிஷயங்களையும் பார்க்கிறவர்களுமாகி உலகங்களை விருத்திசெய்யுங்கள்; [2]பிரவிருத்தியின் பயனால் கௌரவிக்கப்பட்டு நடக்கப்போகின்ற கர்மாக்களாலே விருத்திசெய்யப்பட்ட பலத்தையுடையவர்களாகி உலகங்களைத் தரிப்

1 தாங்கள் கல்பிக்கவேண்டியதைக்கல்பித்தார்களென்று கருத்து. [யது.

2 செய்தபடிதான்பெறுதல், அல்லது ஒன்றுக்கநேகமடங்கதிமாகவுடை

பீர்கள். நீங்கள் மனிதர்களாலே எல்லாயாகங்களிலும் ஆராதிக்கப் பெற்று அதனால் என்னைச் சிந்திப்பீர்கள். இதுதான் எனக்கு நீங்கள் செய்கிற பூஜை. இதற்காகவே வேதங்களும் ஓஷதிகளோடு யஜ்ஞங்களும் ஸ்ருஷ்டிக்கப்பட்டன. பூமியில நின்றுகச்செய்யப்பட்ட இந்தயாகங்களாலே தேவர்கள் ப்ரீதியை அடைவார்கள். ஓ! தேவர்களில் சிறந்தவர்களே! உங்களுக்குப் பிரவிருத்தியின் குணத்தால் கல்பிக்கப்பட்ட இந்த தர்மமப்பானது இவ்வுலகத்தில் கல்பத்தின்முடிவு வரையில் என்னால் செய்யப்பட்டது. ஓ! ஈஸ்வரர்களே! அதிகாரத்திற்குத் தக்கபடி உலகங்களின் ஹிதத்தை ஆலோசியுங்கள் மரீசி, அங்கிரஸ், அத்ரி, புலஸ்தியர், புலஹர், க்ரது, வஸிஷ்டர் என்ற இந்த எழுவரும் மனத்தினால் ஸ்ருஷ்டிக்கப்பட்டார்கள் இவர்கள் வேதவித்துக்களும் முக்கியர்களான வேதாசாரியர்களுமாகக் கல்பிக்கப்பட்டார்கள். பிரவிருத்திதர்மமுடையவர்களாகி ஸ்ருஷ்டிகர்த்தர்ஸ்தானத்திலும் கல்பிக்கப்பட்டார்கள். அநிருத்தரென்றுசொல்லப்பட்ட இவர் கிரியையோடு கூடினவர்களுக்கு மார்க்கமும் வியக்தமானவரும் ஸநாதனரும் பிரஜைகளின் ஸ்ருஷ்டியைச்செய்கிறவரும் பிரபுவுமாயுள்ளவர். ஸநர், ஸநத்ஸுஜாதர், ஸநகர், ஸநந்தனர், ஸநத்குமாரர், கபிலர், ஏழாமவரான ஸநாதனர் ஆகிய இந்த எழுரிஷிகளும் பிரம்மாவினுடையமானஸபுத்திரர்களாகச் சொல்லப்பட்டார்கள். அவர்கள், தானாக உண்டான ஞானத்தையுடையவர்களாகி நிவிருத்திதர்மத்தை அடைந்தார்கள். அவர்கள் யோகத்தை அறிந்தவர்களும் முக்கியர்களும் ஸாங்கியசாஸ்திரத்தில் வல்லவர்களும் தர்மசாஸ்திரங்களில் ஆசாரியர்களும் மோக்ஷதர்மத்தைப் பிரவிருத்திக்கச் செய்கிறவர்களுமானவர்கள். அவ்யக்தத்திலிருந்தும் முதலில மூன்று குணங்களையுடையவனும் மகானுமான நான் வெளியில வந்தமையால் அவ்யக்தத்தைக்காட்டிலும் மிகவும் மேலான க்ஷேத்ரஜ்ஞனென்று எண்ணப்பட்டேன் அப்படிப்பட்ட நான் கிரியையுள்ளவர்களுக்கு மறுபடி திரும்புதலில்லாத மார்க்கமாயுள்ளவன் எந்த ஜந்துவானது பிரவிருத்தியிலோ நிவிருத்தியிலோ எந்தஎந்தக்கர்மத்தில் எப்படி படைக்கப்பட்டதோ அது ஸ்வாதீனமில்லாமல் அப்படியே அதன் அதன் பயனை அனுபவிக்கிறது. ஜகத்தினுற்பத்தியைச் செய்கிறவரும் பிரபுவுமான இந்தப்பிரம்மாவானவர் உலகங்களுக்குக் குருவாயிருக்கிறவர். இவர் உங்களுக்கு மாதாவும் பிதாவும் பிதாமஹருமானவர். இவர் என்னால் உபதேசிக்கப்பட்டு எல்லாப்பிராணிகளுக்கும் வரமளிப்பவராவார், இவருடைய நெற்றியிலிருந்துமுண்டானவரும் இவருக்குப்

புத்திரருமான ருத்ரரானவர் பிரம்மாவினால் உபதேசிக்கப்பட்டு எல்லாப் பிராணிகளையும் தரிக்கின்ற பிரபுவானார். செல்லுங்கள்! விதிப்படி உங்கள் அதிகாரங்களைப் பாருங்கள். எல்லா உலகங்களிலும் எல்லாக் கிரியைகளும் நடக்கட்டும். தாமஸிக்கவேண்டாம். ஓ! தேவஶ்ரேஷ்டர்களே! பிராணிகளுக்குக் கர்மங்களையும் கதிகளையும் இகத்தில் ஆயுள்வரையறையையும் கொடுங்கள். கிருதயுகமென்கிற சிறந்த இந்தக்காலமானது நடக்கிறது. இந்தயுகத்தில் யாகத்தில் பசுக்களை ஹிம்ஸிக்கக்கூடாது அது வேறுவிதமாக மாறுகிறதில்லை. ஓ! தேவர்களே! இந்தயுகத்தில் தர்மமானது நான்குபாதங்களோடு பூர்ணமாகவே இருக்கிறது. பிறகு, திரேதாயுகம் வரும். அதில் (வேதம்) மூன்றாகப் பிரியும். யாகத்தில் பசுக்கள் கொல்லப்பட்டு மரணத்தையடையும். தர்மத்திற்கு நான்காவது பாதம் குறைந்து போம். பிறகு, த்வாபரமென்கிற (புண்ணியபாபங்கள் ஸமமாகக்) கலந்தகாலமானது வரும். அந்தயுகத்தில் தர்மமும் இரண்டு பாதம் குறைந்ததாகும். பிறகு, கலிபுருஷனை முன்னிட்ட கலியுகம் வந்தவுடன், தர்மமானது எங்கேயாவது ஓரிடத்தில் ஒருபாகத்துடனிருப்பதாகும்' என்று சொன்னார். தேவர்களும் தேவரிஷிகளும், இவ்விதம் சொல்லுகிறவரும் குருவுமான பகவானைநோக்கி, 'ஓ! பகவானே! தர்மமானது ஒருபாதத்துடனிருந்து எங்கேயாவது ஓரிடத்தில் ஒதுங்கினகாலத்தில் நாங்கள் என்னசெய்யவேண்டும்? அதை எங்களுக்குச் சொல்லும்' என்று கேட்டார்கள். ஸ்ரீபகவான், 'எந்த இடத்தில் நல்ல ஆசாரத்தையுடையகுருக்கள் பூஜிக்கப்படுகிறார்களோ, எந்தவிடத்தில் தர்மமானது குறையாமலிருக்கிறதோ அவ்விடத்தில் நீங்கள் வசிக்கவேண்டும். தேவஶ்ரேஷ்டர்களே! எந்தவிடத்தில் வேதங்களும் யஜ்ஞங்களும் தவமும் ஸத்யமும் இந்திரியநிக்ரகமும் அஹிம்ஸையும் தர்மத்துடன் சேர்ந்துநடக்குமோ அந்த இடத்தை நீங்கள் அடையுங்கள். அதர்மமானது உங்களைப் பாதத்தால் ஸ்பரிசிக்காமலிருக்கட்டும்' என்று சொன்னார். அந்தப்படி பகவானாலே உபதேசிக்கப்பட்ட ரிஷிஸமூகங்களோடு கூடின அந்தத்தேவர்கள் பகவானுக்கு நமஸ்காரம் செய்துவிட்டு இஷ்டமான இடங்களை அடைந்தார்கள். தேவர்கள் சென்றபிறகு, பிரம்மா ஒருவர்மாத்திரம் அநிருத்த சரீரத்திலிருக்கிற அந்தப்பகவானைப் பார்க்கவிருப்பமுடையவராயிருந்தார். (அப்பொழுது,) தேவரானவர் பெரிய அஶ்வசிரஸைச் செய்துகொண்டு ஸாங்கமான வேதங்களை ஆவிருத்தி செய்கிறவரும் கமண்டலுவையும் த்ரிதண்டத்தையும் தரிக்கிறவருமாகி அவருக்குத்

தரிசனம்கொடுத்தார். பிறகு அஸ்வத்தின்சிரஸையுடையவரும் அளவற்றதேஜஸ்ஸுடையவருமான அவரைப் பார்த்து உலகங்களுக்குக் கர்த்தாவும் பிரபுவுமானபிரம்மாவானவர் உலகங்களுடையநன்மையை விரும்பி வரத்தையளிக்கின்றவரான அவரைத் தலையால் வணங்கி அஞ்சலிசெய்துகொண்டு முன்னே நின்றார். அப்பொழுது பகவான் அந்தப்பிரம்மாவை ஆலிங்கனம் செய்துகொண்டு ஒருவார்த்தைசொல்லினர். 'நீர் விதிப்படி உலகங்களின் காரியங்களுடையஎல்லாநிலைமைகளையும் விசாரியும். நீர் எல்லாப்பிராணிகளையும் தரிக்கிறவர். நீர் பிரபு. நீர் ஜகத்திற்குக் குரு. ஆகையால், நான் உம்மிடம் பாரத்தைவைத்துவிட்டு உடனே ஸந்தோஷத்தையடைவேன். தேவர்களுக்குவேண்டியகாரியமானது உமக்கு ஸாத்யமில்லாததாகிறபொழுது நான் [1] ஆத்மஜ்ஞானத்தைக்கொடுத்துக்கொண்டு அவதாரத்தை அடைவேன்' என்று சொன்னார். இவ்விதம்சொல்லிவிட்டுப் பகவான் அவ்விடத்திலேயே மறைந்தார். அவரால்உபதேசிக்கப்பட்டப்ரம்மாவும் சீக்கிரமாகத் தம் உலகத்தை அடைந்தார். இவ்விதம் மஹாபாக்கியவானும் ஸநாதனருமான அந்தப்பத்மநாபர் எப்பொழுதும் யாகங்களில் முதற் (பாகத்தை) கிரஹிக்கிறவரும் யாகங்களைத் தரிப்பவருமாகச்சொல்லப்பட்டார். அக்ஷயமானதர்மத்தையுடையவர்களுக்கு ஸாதனமான நிவிருத்திதர்மத்தையுமடைந்தார்; உலகத்தினுடையவிசித்திரத்தன்மையைச்செய்து பிரவிருத்திதர்மங்களையும் செய்தார். பிரஜைகளுக்கு அவர் ஆதி; அவர் மத்தியம்; அவர் முடிவு; அவர் தரிப்பவர்; அவரே தரிக்கத்தக்கவர்; அவரே கர்த்தா; அவரே கார்யம்; யுகத்தின்முடிவில் உலகங்களைத் தம்மிடமொடுக்கிக்கொண்டு நித்திரைசெய்து யுகத்தின் ஆதியில் விழித்து ஜகத்தைப் பலவிதமாய் ஸ்ருஷ்டித்தார். நிர்க்குணரும் மகாத்மாவும் உற்பத்தியில்லாதவரும் விஸ்வரூபரும் எல்லாத்தேவர்களுக்கும் ஸ்தானமும் மகாபூதங்களுக்குஅதிபதியும் ருத்ரர்களுக்குப் பதியும் அஸ்வினிதேவர்களுக்குப்பதியும் வஸுக்களுக்குப் பதியும் வாயுக்களுக்குப்பதியும் ஆதித்யர்களுக்குப்பதியும் வேதங்களுக்கும் யஜ்ஞங்களுக்கும்பதியும் வேதாங்கங்களுக்குப்பதியும் எப்பொழுதும் ஸமுத்திரத்தில் வஸிப்பவரும் (பாவங்களை) ஹரிப்பவரும் தர்ப்பைபோன்ற கேசங்களையுடையவரும் சாந்தியுடையவரும் எல்லாப்பிராணிகளுக்கும் மோக்ஷதர்மத்தை உபதேசிப்பவரும் தவங்களுக்கும் தேஜஸ்ஸுகளுக்கும் யசஸ்ஸுகளுக்கும்பதியும் எப்பொழு

[1] 'அமானுஷகர்மத்தால் என்னைத் தெரிந்துகொள்ளும்படிசெய்துகொண்டு' என்றுகருத்து.

தும் வாக்குக்களுக்குப்பதியும் நதிகளுக்குப்பதியும் ஜடைகளுள்ள வரும் ஒருகொம்புள்ள வராகமானவரும் புத்திமானும் ஸூர்யரூப ரும் அஸ்வத்தின்சிரம்போன்ற சிரத்தையுடையவரும் எப்பொழுதும் (வாஸுதேவர், ஸங்கர்ஷணர், பிரத்யும்நர், அநிருத்தர் என்கிற) நான்கு மூர்த்திகளைத்தரிப்பவரும் ஸூக்ஷ்மமாயிருப்பவரும் ஞானத் தால் பார்க்கக்கூடியவரும் ஜரையற்றவரும் நாசமற்றவருமான அந் தத்தேவருக்கு நமஸ்காரம் செய்யுங்கள். அழிவற்ற அந்தத்தேவர் எங்கும் கமனமுள்ளவராக ஸஞ்சரிக்கிறார். அவர் இந்தப் பரப்ரம்மம்; சாஸ்திரஞானமாகிறநேத்திரத்தால் பார்க்கத்தக்கவர். இவ்விதமான இது முன்காலத்தில் என்னால் ஞானநேத்திரத்தால் காணப்பட்டது. நீங்கள் கேட்டமையால் நான் அவற்றைஎல்லாம் உள்ளபடி சொன் னேன். ஓ! சிஷ்யர்களே! நான் சொல்வதைச் செய்யுங்கள். ஈஸ்வர ரான ஹரியை உபாஸியுங்கள். வேதங்களிலுள்ளசப்தங்களால் துதி யுங்கள். விதிப்படி பூஜியுங்கள்' என்று சொன்னார். இவ்விதம் புத்திமானான அந்தவேதவ்யாஸர், அவருடையசிஷ்யர்களான நாங் கள் சிறந்ததர்மத்தையுணர்ந்த புத்திரரான சுகர்ஆகிய எல்லோருக் கும் சொன்னார். அரசரே! எங்களுடைய உபாத்தியாயரான அவ ரும் எங்களோடு நான்குவேதங்களிலுமிருந்துண்டான ரிக்குகளாலே அந்தஹரியைத் துதித்தார். நீர்என்னிடம்கேட்ட இவற்றைஎல்லாம் உமக்குச் சொன்னேன். ஓ! அரசரே! இந்தப்படி முன்காலத்தில் த்வைபாயனரென்கிறகுருவானவர் எனக்குச் சொன்னார். எந்த மனிதன் ஒவ்வொருநாளும் பகவானைக்குறித்து நமஸ்காரம் செய்து விட்டுப் புத்தியை நன்றாகச்செலுத்தி இதைக்கேட்பானோ, எவன் படிப்பானோ அவர்கள் நோயில்லாதவர்களும் புத்திமான்களும் பல மும் ரூபமுமுடையவர்களுமாவார். நோயாளி நோயினின்றும் விடு படுவான். கட்டப்பட்டவன் கட்டினின்றும் விடுபடுவான். விஷய ஸுகத்தைவிரும்புகிறவன் விஷயஸுகத்தையும் நீண்டஆயுளையும் அடைவான். பிராம்மணன் எல்லாவேதங்களையுமறிந்தவனாவான். க்ஷத்ரியன் விஜயமுள்ளவனாவான். வைஸ்யன் அதிகமானலாபமு டையவனாவான். சூத்திரன் ஸுகத்தை அடைவான். புத்திரனில் லாதவன் புத்திரனை அடைவான். கன்னிகையும் இஷ்டமானகணவனை அடைவாள். கர்ப்பம்சிக்கினவள் (அதிலிருந்தும்) விடுபடுவாள். (அந்தக்) கர்ப்பிணி புத்திரனைப் பெறுவாள். மலடியானவள் புத்திர பௌத்திரர்களுடைய அபிவிருத்திக்குக்காரணமான குழந்தையை அடைவாள். எவன் இதை வழியில்செல்லும்போது சொல்லுகிறானோ

அவன் க்ஷேமத்தோடு மார்க்கத்தில் செல்லுவான். எவன் எந்தப் பொருளை விரும்புகிறானோ அவன் அதை நிச்சயமாக அடைவான். மகாத்மாவான புருஷோத்தமரிடம் ரிஷிகளும் தேவர்களும் வந்ததையும் அவருடைய உபதேசத்தையும் இந்தப்பக்தர்கள் கேட்டுப் பரம ஸுகத்தை அடைவார். இது வ்யாஸமகரிஷியின் உறுதியான வார்த்தை" என்றார்.

---

முந்நூற்றைம்பதாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

(கிருஷ்ணன் தமதுமகிமையையும் தமதுநாமங்களின் அர்த்தவிசேஷத்தையும் அர்ஜுனனுக்குச் சொல்லியது.)

ஜனமேஜயர், "பகவானே! வ்யாஸரானவர் சிஷ்யர்களோடு வேதத்திலுண்டான பலவிதமான எந்தநாமங்களாலே மதுஸூதனரைத் துதித்தாரோ பிரம்மாவுக்குப்பதியான ஹரியினுடைய அந்த நாமங்களுடையஅர்த்தத்தின்விவரணத்தைக் கேட்கவிரும்புகிறேன். எனக்குச் சொல்லவேண்டும். அதைக்கேட்டுக் களங்கமற்றசரத்கால சந்திரன்போலப் பரிசுத்தனாவேன்" என்றுகேட்க, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினார்.

"ஓ! அரசரே! பிரஸன்னமானமனத்துடன் பிரபுவான ஹரியானவர் குணங்களாலும் கர்மாவினாலுமுண்டான தம்முடைய நாமங்களுடையஅர்த்தவிஸ்தாரத்தை அர்ஜுனனுக்குச்சொன்னபடி (சொல்லுகிறேன்;) கேளும். ஓ! அரசரே! பகைவீரர்களைக்கொல்லுகிறவனான அர்ஜுனன், மஹாத்மாவான அந்தவாஸுதேவருடைய முன்சொல்லப்பட்டநாமங்களைக்கொண்டு அவரைநோக்கி, 'ஓ! பகவானே! சென்றவைகளுக்கும் (இப்பொழுது) இருப்பவைகளுக்கும் தலைவரே! ஸகலப்ராணிகளையும் படைக்கின்றவரும் அழிவில்லாதவரும் உலகங்களுக்குஸ்தானமும் ஜகத்திற்கு நாதரும் உலகங்களுக்கு அபயத்தையளிப்பவருமாயிருப்பவரே! ஓ! தேவரே! மகரிஷிகளால் புராணங்களிலும் வேதங்களிலும் உம்முடைய கர்மங்களால்உண்டானவைகளும் ரஹஸ்யங்களுமானநாமங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஓ! கேசவரே! அவைகளுடையஅர்த்த விவரணத்தை உம்மிடமிருந்து நான் கேட்கவிரும்புகிறேன். ஓ! பிரபுவே! உம்மைத்தவிர வேறொருவராலும் இந்தநாமங்களுடையஅர்த்த

விஸ்தாரத்தைச் சொல்லஇயலாது' என்றுகேட்க, ஸ்ரீபகவான் சொல்லலானார். 'ஓ! அர்ஜுன! ரிக்வேதத்திலும் யஜுர்வேதத்திலும் ஸாமவேதத்திலும் அதர்வவேதத்திலும் புராணத்திலும் உபநிஷத்திலும் சோதிடசாஸ்திரத்திலும் ஸாங்கியசாஸ்திரத்திலும் யோகசாஸ்திரத்திலும் ஆயுர்வேதத்திலும் மஹரிஷிகளால் என்னுடைய அநேகநாமங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளில் சில நாமங்கள் குணத்தாலுண்டானவைகள்; சில கர்மத்தினாலேற்பட்டவைகள். ஓ! பாபமற்றவனே! நீ பரிசுத்தனாக என்னால்சொல்லப்படும் கர்மத்தாலேற்பட்டநாமங்களுடைய அர்த்தவிஸ்தாரத்தைக் கேள். குழந்தாய்! முன் நீ என்னுடையபாதியாகக் கருதப்பட்டவன். எவருடைய அருளிலிருந்து பிரம்மாவும் கோபத்திலிருந்து ருத்ரரும் உண்டானார்களோ, எவர் ஸ்தாவரஜங்கமம் எல்லாவற்றிற்கும் காரணமோ தேவர்களுள்ளே மிகுந்தயசஸுடையவரும் பரமாத்மாவும் எல்லாமும் நிர்க்குணமும் குணஸ்வரூபமுமாயிருக்கிற அந்த நாராயணருக்கு நமஸ்காரம். ஓ! பலவான்களில் சிறந்தவனே! [1]பதினெட்டுக் குணங்களையுடைய ஸத்வகுணமான அது என்னுடைய பரமானஸ்வரூபம்; அது ஆகாயமும் பூமியுமாயிருந்து உலகங்களைத் தரிக்கின்றதும் கர்மங்களின் பயனான ஸ்வர்க்கமுதலானஸ்வரூபமும் பாதிக்கப்படாத சித்ரூபமும் அழிவற்றதும் ஜயிக்கமுடியாததும் உலகங்களுக்கு ஆத்மாவாகச் சொல்லப்பட்டதுமாயிருக்கிறது. அதிலிருந்தும் ஸ்ருஷ்டிப்ரளயமுதலான எல்லாவிகாரங்களும் உண்டாகின்றன. தவமும் யஜ்ஞமும் யாகஞ்செய்பவரும் புராணபுருஷரும் விராட்டும் உலகங்களுடையஉற்பத்திநாசங்களுக்குக்காரணருமாயிருப்பவர் அநிருத்தரென்று சொல்லப்பட்டார். பிரம்மாவின் ராத்ரியினுடைய முடிவானது உண்டானபொழுது அளவற்றபராக்ரமமுள்ள அந்தஅநிருத்தருடைய அருளால் க்ஷணமாத்திரத்தில் ஸூர்யனுக்குச்சமமான கமலமானது உண்டாயிற்று. அதில் பிரம்மாவானவர் உண்டானார். அவர் அவருடைய அருளிலிருந்துமுண்டானவரே.' பகலின்முடிவில் கோபத்தால் வியாபிக்கப்பட்ட தேவரான அநிருத்தருடையநெற்றியிலிருந்தும் ஸம்ஹாரத்தைச் செய்கின்றருத்ரர் புத்ரராக உண்டானார். இவர்களிருவரும் தேவர்

1 பிரீதி, மிகுதியானபிரகாசம், விருத்தி, ஸுலபனாயிருத்தல், ஸுகம், கிருபணத்தனமில்லாமை, பரபரப்பில்லாமை, ஸந்தோஷம், ஶ்ரத்தை, பொறுமை, தைரியம், கொல்லாமை, சுசியாயிருத்தல், குரோதமில்லாமை, ருசுவாயிருத்தல், ஸமமாயிருத்தல், உண்மையுரைத்தல், அஸூயையில்லாமை.

களில்சிறந்தவர்கள். இருவரும் அருளிலும் கோபத்திலுமிருந்து உண்டானவர்கள்; அவரால்கற்பிக்கப்பட்ட மார்க்கத்தையுடையவர்களாகி ஸ்ருஷ்டிஸம்ஹாரத்தொழில்களைச் செய்கிறவர்கள். எல்லாப் பிராணிகளுக்கும் வரத்தையளிக்கின்ற அவர்கள் இந்தவிஷயத்தில் நிமித்தமாத்திரமாயிருக்கிறவர்கள். ஓ! பாண்டுபுத்திரனே! யுகந்தோறும் கபர்த்தமென்னும்ஜடையையுடையவரும் முண்டனமுடையவரும் மயானமாகிற இருகத்திலிருப்பவரும் உக்ரமான விரதங்களை ஆசரிப்பவரும் யோகமுள்ளவரும் திரிபுரங்களை அழித்தவரும் தக்ஷன் யாகத்தை அழிப்பவரும் பகனென்கிறஸூர்யனுடைய நேத்திரத்தைக் கவர்ந்தவருமான ருத்ரரானவர் நாராயணஸ்வரூபராக அறியத்தக்கவர். ஓ! குந்திபுத்திரனே! தேவர்களுக்கெல்லாம்தேவரான அந்த மஹேஸ்வரர் பூஜிக்கப்பட்டால் தேவரும் பிரபுவுமானநாராயணர் நன்கு பூஜிக்கப்பட்டவராவர். ஓ! பாண்டுபுத்திரா! நான் எல்லா உலகங்களுக்கும் ஆத்மாவாயிருக்கிறேன். ஆகையால் நான் முதலிலே ருத்ரராயிருக்கும் என்னையே பூஜிக்கிறேன். நான் எல்லாருக்கும் சிக்ஷகனும் வரங்களையளிப்பவனும் சிவரூபனுமான என்னைப் பூஜியாமலிருந்தால் ஒருவரும் பூஜிக்கமாட்டாரென்று என்னால் ஆத்மபூஜையானது செய்யப்பட்டது. என்னால் செய்யப்பட்டபிரமாணத்தையன்றோ உலகமானது நன்குஅனுஸரித்துவருகிறது? பிரமாணங்கள் கௌரவிக்கத்தக்கவைகள். ஆகையால், அவரை நான் பூஜிக்கிறேன். எவன் அவரை அறிகிறானோ அவன் என்னை அறிகிறான். எவன் அவரை அனுஸரிக்கிறானோ அவன் என்னை அனுஸரிக்கிறான். ஓ! குந்திபுத்ரனே! ஒரேவஸ்துவானது ருத்ரராகவும் நாராயணராகவும் இரண்டாகச்செய்யப்பட்டு உலகத்தில் சரீரத்திலிருந்துகொண்டு எல்லாக்காரியங்களின்நிமித்தமாகவும்ஸஞ்சரிக்கிறது. ஓ!பாண்டுபுத்திரனே! எனக்கு ஒருவனாலும் வரமானது அளிக்கத்தக்கதில்லையென்று மனத்தில்ஆலோசித்து நான் அனாதியும் ஈஸ்வரரும் ருத்திரருமான என்னையே நானாகவே புத்திரனுக்காக ஆராதித்தேன். விஷ்ணுவானவர் தம்மைத்தவிர ஒரு தெய்வத்தையும் வணங்குகிறதில்லையென்று நினைத்தே நான் ருத்ரரை வணங்குகிறேன். பிரம்மா, ருத்ரர், இந்திரன் இவர்களுடன்கூடியதேவர்களும் முனிவர்களும், தேவர்களில்சிறந்தவரும் தேவரும் ஹரியுமானநாராயணரைப் பூஜிக்கின்றார்கள். ஓ! பாரத! முக்காலத்திலுமுள்ள எல்லாருக்குமே விஷ்ணுவானவர் தலைவரும் எந்நாளும்ஸேவிக்கத்தக்கவரும் பூஜிக்கத்தக்கவருமாயிருக்கிறார். ஓ! குந்திபுத்திரா! ஹவிஸையளிப்பவரான

விஷ்ணுவை நமஸ்கரிப்பாயாக. சரணத்தையளிப்பவரான விஷ்ணுவை வணங்கு. வரத்தையளிப்பவரை வணங்கு. ஹவ்யகவ்யங்களையருந்துகிறவரை வணங்கு. [1]நான்குவிதமான ஜனங்களும் என்னுடைய பக்தர்களே. அவர்களில் வேறு தேவதைகளை உபாஸியாதவர்களான ஏகாந்திகள் சிறந்தவர்கள். விருப்பத்தைவிட்டுக் கர்மங்களைச் செய்கிறவர்களான அவர்களுக்கு நானே கதி. மற்ற மூன்றுவகையான பக்தர்களும் பயனைவிரும்புகிறவர்களாகக் கருதப்பட்டார்கள். அவர்களெல்லோரும் நசிக்கின்ற தர்மத்தையுடையவர்கள். ஞானியோ சிறந்தமுக்தியை அடைவான். ஞானத்துடன்கூடின அனுஷ்டானமுடையவர்கள் பிரம்மாவையோ ஈஶ்வரரையோ மற்றத்தேவர்களையோ ஸேவித்தவர்களானாலும் என்னையே பயனாக அடைவார்கள். ஓ! பார்த்த! பக்தனைப்பற்றிய இந்தவிசேஷமானது உனக்குச் சொல்லப்பட்டது. ஓ! குந்திபுத்திர! நீயும் நானும் நரநாராயணர்களாகக் கருதப்பட்டவர்கள். பூபாரத்தைத்தொலைப்பதற்காக மனுஷ்யசரீரத்தில் பிரவேசித்தோம். ஓ! பாரத! ஆத்மாவைப்பற்றிய யோகங்களையறிகின்றவனும் நிவிருத்திரூபமான (தர்மத்திற்கும்) அபிவிருத்தியைச்செய்கிற (தர்மத்திற்கும்) காரணனும் ஸநாதனனுமான நானொருவனே நரர்களுக்குப் பிரஸித்தமான ஸ்தானம். அப்புக்கள் நானிடமிருந்துமுண்டாயின. (ஆகையால்) அப்புக்கள் நாரங்களென்று சொல்லப்பட்டன. முன் அவைகள் எனக்கு ஸ்தானமாயின. ஆகையால் நான் நாராயணனாகிறேன். நான் எல்லாமுமாகி ஸூர்யன்கிரணங்களால்மறைப்பதுபோல மறைக்கிறேன். அதனாலும் எல்லாப்பிராணிகளுக்கும் வாஸஸ்தானமாயிருப்பதனாலும் வாஸுதேவனாகிறேன். ஓ! பாரத! குந்திபுத்ர! எல்லாப்பிராணிகளுக்கும் லயஸ்தானமாயிருப்பதாலும் உற்பத்திஸ்தானமாயிருப்பதாலும் என்னால் பூமியும் ஆகாயமும் வியாபிக்கப்பட்டமையாலும் எனக்கு அதிகமான காந்தியிருப்பதாலும் பூதங்களில்பிரவேசித்து அந்தஜகத்தாயிருப்பதாலும் எங்கும் வியாபித்தலாலும் விஷ்ணுவென்று சொல்லப்படுகிறேன். இந்திரியங்களையடக்குவதால் ஸித்தியையும் தேவலோகத்தையும் பூலோகத்தையும் அந்தரிக்ஷத்தையும் அடையவிருப்பமுள்ளவர்கள் என்னை விரும்புகிறார்கள். ஆகையால், நான் [2]தாமோதரனு

1 பீடையடைந்தவன், ஞானத்தைவிரும்புகிறவன், பொருளை விரும்புகிறவன், ஞானி.

2 தாம = இந்திரியநிக்ரகம், உத் = உயர்வு, ரு = அடைவது; இந்திரியநிக்ரகத்தினால் அவரைஅடுத்து உயர்வையடைவதால் தாமோதரர் என்பது

கிறேன். அன்னமும் வேதங்களும் ஜலமும் அமிருதமும் ப்ருச்னி என்று சொல்லப்படுகின்றன. அவைகள் எப்பொழுதும் என்னுடையகர்ப்பத்திலிருப்பதால் நான் ப்ருச்னிகர்ப்பனென்கிறேன். ரிஷிகள் என்னை நோக்கி                    லும் த்விதரானும் கிணற்றில் தள்ளபபட்ட த்ரிதரைக் காப்பாற்றும்' என்று சொன்னார்கள். பிறகு பிரம்மாவின் முதன்மைபுத்திரரும் ரிஷிகளில் சிறந்தவருமானத்ரிதர், 'பிருச்னிகர்ப்பா' என்றுசபதித்ததால் கிணற்றிலிருந்தும் கரையேறினார். உலகங்களைத்தபிக்கச்செய்கிறஸூர்யன் அக்னி சந்திரன் இவர்களுடையகிரணங்கள் பிரகாசிக்கின்றன. இவைகள் என்னுடையகேசங்களாகச் சொல்லப்படுகின்றன. ஆகையால் எல்லா முணர்ந்தபிராம்மணஶ்ரேஷ்டர்கள் என்னைக் கேசவனாகச் சொல்லுகின்றார்கள். மகாத்மாவானஉசத்தியராலே தம்முடையபத்னியினிடம் கர்ப்போத்பத்தி செய்யப்பட்டது. பிறகு ஒருஸமயம் உசத்தியரில்லாதபொழுது பிருகஸ்பதியானவர் தேவர்களுடைய ஆஜ்ஞையினாலே புத்திமானான அந்தஉசத்தியருடைய அந்தப்பத்னியைஅடைந்தார். ஓ! குந்தீபுத்ரா! அப்பொழுது சேர்க்கையின்பொருட்டு வந்தவரும் ரிஷிகளில்சிறந்தவருமான அவரைநோக்கிப் பஞ்சபூதங்களின் குணஸ்வரூபமானகர்ப்பமானது, 'ஓ! வரமளிப்பவரே! நான் முன்னமே வந்திருக்கிறேன். ஆகையால் என்மாதாவை வருத்தப்படுத்தாதீர்' என்றுசொல்லிற்று. இதை ப்ருஹஸ்பதிகேட்டுக் கோபித்து, 'சேர்க்கையின்பொருட்டுவந்தஎன்னை நீதடுத்தமையால் என்சாபத்தால் குருடனாவாய். இதில் ஸந்தேகமில்லை' என்று சாபமும்கொடுத்தார். உடனே அந்தக்கர்ப்பம் ரிஷிஶ்ரேஷ்டரானப்ருகஸ்பதியின்சாபத்தால் நெடுநாளுள்ள நேத்திரதோஷத்தை அடைந்தது. அது முன்காலத்தில் தீர்க்கதமஸ்என்கிறபெயர்கொண்ட ரிஷியாயிற்று. அப்பொழுது அவர் அனாதியானநான்குவேதங்களையும் ஸாங்கோபாங்கமாக அத்யயனம்செய்து ரகஸ்யமானஎன்னுடைய இந்தநாமத்தை விதிப்படி கிரமமாக, 'கேசவா' என்று அடிக்கடி ஜபித்தார். அதனால் அவர் நேத்திரங்களை அடைந்தவரானார். மேலும் சிறந்த நேத்திரங்களையுடையவருமானார். ஓ! அர்ஜுனா! 'கேசவ' என்கிறஎன்னுடைய நாமமானது இவ்விதம் எல்லாத்தேவர்களுக்கும மகாதமாக்களான ரிஷிகளுக்கும் வரத்தையளிக்கின்றது. ஸோமனுடன் சேர்ந்த அக்னியானவன் ஒரேகாரணத்தையடைந்து (எல்லாத்தேவர்களுக்கும் மகாத்மாக்களானரிஷிகளுக்கும்) முகமாகச் செய்யப்பட்டான். ஆகையால், சராசரமான எல்லாஜகத்தும் அக்னிஸோமர்களுடையஸ்வரூபம்.

புராணத்திலும், 'அக்னியும் ஸோமனும் ஒரேகாரணத்தையுடையவர்கள். தேவர்களும் அக்னியைமுகமாகவுடையவர்கள்' என்றும், 'ஒரேகர்ப்பத்தில் பிறந்ததனால் ஒருவரையொருவர் ஸந்தோஷிக்கச் செய்கிறவர்களும் உலகங்களைத் தரிக்கிறவர்களுமாயிருக்கிறார்கள்' என்றும் சொல்லப்பட்டிருக்கிறார்கள்'' என்றுசொன்னார்.

---

முந்நூற்றைம்பத்தோராவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)



(கிருஷ்ணன் உலகத்தின்படைப்புமுறையையும் பிராம்மணர் மகிமையையும் அர்ஜுனனுக்குச் சொல்லியது.)

அர்ஜுனன், 'வீராணமதுஸூதனரே! முன் அக்னியும் ஸோமனும் எப்படி ஒரேஇடத்திலிருந்து பிறந்தவர்களாகச் சொல்லப்பட்டார்கள்? எனக்கு இந்தச்சந்தேகமுண்டாயிருக்கிறது. அதை நிவிருத்திசெய்யும்' என்றுவினவ, ஸ்ரீகிருஷ்ணபகவான் சொல்லத் தொடங்கினார்.

'ஓ! பாண்டுபுத்திரனே! மிகவும்ஸந்தோஷம். என்னுடைய தேஜஸின்உத்பத்தியாகிற பழமையான கதையை உனக்குச் சொல்லப் போகிறேன். ஓ! குந்தீபுத்ரனை அரசனே! ஒருமனத்துடன் கேட்பாயாக. பிரளயகாலத்தில் ஆயிரம்சதுர்யுகம்முடிந்தபின் எல்லாப் பிராணிகளுக்கும்பிரளயமுண்டாகியும் சராசரமான அவைவிளங்காமற் போயும் பிருதிவிதேயுவாயுஇவையில்லாமல் அந்தகாரஇருளில் உலகம் ஜலத்தால் ஒரேஸமுத்திரமாகியும், 'இது எனது' என்று பூதங்களின்பெயர் அறியப்படாததாக இரண்டற்றவஸ்துவானது நிலைபெற்றும் ராத்ரியில்லாமலும் பகலில்லாமலும் [1]ஸத்தில்லாமலும் [2]அஸத்தில்லாமலும் வெளிப்படையில்லாமலும் மறைவில்லாமலுமிருப்பதான இந்நிலைமையில் நாராயணரது (ஐஸ்வர்யமுதலிய) குணங்களுக்கிடமும் மூப்பும்இறப்புமில்லாததும் ஞானேந்திரியங்களுக்குப்புலப்படாததும் (கர்மேந்திரியங்களால்) பற்றமுடியாததும் உற்பத்தியில்லாததும் ஸத்யமும் கத்திமுதலியவற்றால் கொல்லமுடியாததும் இரண்டற்றதும் பிரவிருத்திகளின் விசேஷங்களில்லாததும் வைரமற்றதும் குறைவற்றும் சரீரமின்றி (ஞானமில்லாதவரையில்) ஜரைநாசமற்று

---

1 ப்ரதானம். 2 சூன்யம்.

எங்கும்வியாபித்து அந்தியாய் எல்லாவற்றையும் செய்கிறதமஸுக்கு மேலானதுமான பிரம்மத்தினிடமிருந்து புருஷர் உண்டானர். பிரம் மத்தைக்காரணமாகவுடையவரும் புருஷருமான இந்தப்பிரம்மாவினு டைய அவதாரகாலத்தில் அழிவற்றவரான ஹரியானவர் இருந்தார். இந்தவிஷயத்தில், 'பகலிருந்ததில்லை. ராத்ரியுமிருந்ததில்லை. [1]ஸத்து மிருந்ததில்லை. [2]அஸத்துமிருந்ததில்லை. எல்லாஸ்வரூபமுமாயிருக்கிற தமஸே ஸ்ருஷ்டிக்கு முன்னிருந்தது' என்று வேதவசனமுமிருக் கிறது. அது விஸ்வரூபனுடைய ராத்ரியன்றோ? இவ்விதம் இதனு டையஅர்த்தமானது விவரிக்கப்படுகிறது. தமஸிலிருந்துமுண்டான வரும் ப்ரம்மத்தைக்காரணமாகவுடையவரும் புருஷருமான பிரம்மாவி னுடைய அவதாரமுண்டானபொழுது அந்தப்புருஷர் பிரஜைகளைஸ்ரு ஷ்டிக்கவிரும்பி நேத்திரங்களிலிருந்தும் அக்னியையும் ஸோமனையும் ஸ்ருஷ்டித்தார். பிறகு பூதங்களுடையஸ்ருஷ்டிகள் செய்யப்பட்டுப் பிரஜைகள் கிரமவசத்தால் பிராம்மணஜாதியையும் க்ஷத்ரியஜாதியை யும் அடைந்தன. [3]ஸோமனென்பவன் பிராம்மணஜாதி. பிராம்மண ஜாதி பிராம்மணர்கள். அக்னியென்பவன் க்ஷத்ரியஜாதி. க்ஷத்ரிய ஜாதியைக்காட்டிலும் பிராம்மணஜாதி மிகவும் பலமுடையது. இந்தப் பிராம்மணஜாதியானது உலகங்களுக்குப் பிரத்யக்ஷமானகுணங்களை யுடையது. அது எப்படியென்றால், பிராம்மணர்களுக்குமேலான பிரா ணியானது இதற்குமுன் உண்டானதில்லை 'எவன் பிராம்மணன்முகத் தில் ஆஹுதிசெய்கிறானோ அவன் ஜ்வலிக்கிறஅக்னியில் ஹோமம் செய்கிறவன்' என்றெண்ணிச் சொல்லுகிறேன். பிராணிகளைநிலைக் கச்செய்து மூவுலகமும் பிராம்மணஜாதியால்தரிக்கப்படுமென்று ப்ரம் மாவினால் பிராணிகளுடைய ஸ்ருஷ்டியானது செய்யப்பட்டது. (இத ற்கு மந்திரவசனமும் இருக்கிறது. அதன்பொருளாவது, 'ஓ! அக் னியே! நீ எல்லாயஜ்ஞங்களிலும் [4]ஹோதாவாயுள்ளவன்; தேவர்க ளுக்கும் மனிதர்களுக்கும் உலகத்திற்கும் நன்மைசெய்கிறவன்' என் பது. இந்தவிஷயத்தில், 'ஓ! அக்னியே! நீ எல்லாயாகங்களுக்கும் ஹோதா' என்றும், 'நீ தேவர்களுக்கும் மனுஷ்யர்களுக்கும் உலகத் திற்கும் ஹிதமாயிருப்பவன்' என்றும் ஸ்பஷ்டமானவேதவசனமும் இருக்கிறது. அக்னியன்றோ யஜ்ஞங்களுக்கு ஹோதாவும் கர்த்தாவு

---

1 மூர்த்தம். 2 அமூர்த்தம்.

3 ஸோமனென்பவன் ப்ரம்மம். ப்ரம்மமே ப்ராம்மணர்கள்.

4 'அக்னியை ஹோதாவாகத்துதித்ததால் அக்னியைவிட ஹோதாவான பிராம்மணன் மேலானவனென்று அறிவிக்கப்பட்டது' என்பதுபழையவுரை.

மாயிருப்பவன்? அந்த அக்னி பிராம்மணஜாதி. மந்திரங்களின்றி ஹோமம் இல்லை. புருஷனில்லாமல் ஹவிஸுக்குரியமந்திரங்களுடைய ஆலோசனை இல்லை. தேவர்கள் மனிதர்கள் ரிஷிகள் இவர்களுக்குப் பூஜையானது ஏற்பட்டிருக்கிறது. புருஷன், 'இதனால் நீ ஹோமம் செய்யக்கடவாய்' என்றுஏவப்பெற்றவன். மனிதர்களுக்குஹோமம் செய்வித்தலில் அதிகாரம்பெற்றவர்கள் செய்விப்பார்கள். ஹோமம் செய்வித்தலானது பிராம்மணனுக்கே விதிக்கப்பட்டிருக்கிறது; இரு பிறப்பினர்களாயிருந்தும் க்ஷத்ரியனுக்கும் வைஸ்யனுக்கும் விதிக்கப்படவில்லை. ஆகையால் அக்னிஸ்வரூபர்களானபிராம்மணர்களே யஜ்ஞங்களை வகிக்கிறார்கள். அந்தயஜ்ஞங்கள் தேவர்களைத் திருப்தியடையச்செய்கின்றன. தேவர்கள் பூமியை [1]விருத்திசெய்விக்கிறார்கள். எந்தவித்வான் பிராம்மணன்முகத்தில் ஆஹுதியைச்செய்கின்றானோ அவன் ஜ்வலிக்கிறதான அக்னியில் ஹோமம்செய்கிறவனென்று சதபதமென்கிற சுக்லயஜுர்வேதபாகத்திலும் பிராம்மணன் முகத்தில் ஹோமம் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதமிருந்தாலும் அக்னிரூபர்களும் வித்வான்களுமானபிராம்மணர்கள் அக்னியை ஆராதிக்கின்றார்கள். அக்னியானவன் விஷ்ணுரூபனாகி எல்லாப்பிராணிகளிடத்திலும்பிரவேசித்துப் பிராணன்களைத் தரிக்கிறான். மேலும் இந்த விஷயத்தில் ஸநத்குமாரரால்சொல்லப்பட்ட சுலோகங்களிருக்கின்றன. (அவற்றின்பொருளாவது,)'முன்காலத்தில் எல்லாவற்றிற்கும்ஆதியும் சலனமற்றவருமான பிரம்மாவானவர் ஜகத்தைஸ்ருஷ்டித்தார். [2]பிரம்மாவைக்காரணமாகவுடையதேவர்கள் வேதகோஷங்களால் தேவலோகத்தில் வஸிக்கின்றார்கள். பிராம்மணர்களுடையஸத்யவசனமும் கர்மமும் ஸ்ரத்தையும் தவமும் [3]உறிகள் (வெண்ணெயைத்) தாங்குவதுபோலப் பூமியையும் ஸ்வர்க்கத்தையும் வாக்குக்குஅமிருதமான வேதத்தையும்தரிக்கின்றன. ஸத்யத்திற்குமேலான தர்மமில்லை. மாதாவுக்கு ஸமமான குருவுமில்லை. இகபரங்களிலுள்ள நன்மையையுண்டுபண்ணுவதில் பிராம்மணர்களுக்குமேல்பட்டது இல்லை. எந்த அரசர்களுடைய ராஜ்யத்தில் பிராம்மணர்கள் [4]விருத்தியால் இழிவானவர்களாயிருக்கின்றார்களோ அவர்களுடையதேசத்தில் எருது(மழையில்லாமையால் கலப்பையை) இழுக்கிறதில்லை; வாஹனங்கள் (தான்யமில்லாததால் வண்டிகளை) இழுக்கிறதில்லை; செக்கானது ஆடுகிறதில்லை. அவர்கள் தானத்தில் இல்லாமையடைந்தவர்களும் திருடர்களுமாகின்றார்கள்.

---

1 செழிப்படைய. 2 அல்லது வேதத்தை.
3 வேறு பாடம். 4 'ஜீவனோபாயமற்ற' என்றும்கொள்ளலாம்.

அந்தப்பிராம்மணர்களும் புராணம் இதிஹாஸம்இவைகள் பிரமாண மானதால் நாராயணருடையமுகத்திலிருந்துமுண்டானவர்களும் ஸர்வஸ்வரூபர்களும் எல்லாவற்றிற்கும் கர்த்தர்களும் எல்லாத்தன்மையுமுடையவர்களுமாயிருக்கின்றார்கள். வியவஹாரமுடிவிலோ வார்த்தையளிப்பவரும் தேவர்களுக்குத்தேவருமான அந்தநாராயணருடைய வாக்கின்மௌனஸமயத்தில் முதலில் பிராம்மணர்களுண்டானார்கள். பிராம்மணர்களிடமிருந்தும் மற்றவர்ணங்களுண்டாயின. இவ்விதமிருத்தலால் வேதமயமானபிராம்மணர்கள் தேவர்களையும் அஸுரர்களையும் காட்டிலும் சிறந்தவர்கள். தேவர்களும் அஸுரர்களும் மகரிஷிகளுமான பிராணிவிசேஷங்கள் பிரம்மாவான என்னாலேயே முன்காலத்திலுண்டுபண்ணப்பட்டன; ஸ்தாபிக்கவும்பட்டன; நிக்ரஹிக்கவும்பட்டன. அந்தப்ராம்மணர்களுடைய மஹிமையைக்கேள். இந்திரனானவன் அஹல்யையைச்சேர்ந்தகாரணத்தினால் கௌதமரிடமிருந்து பச்சையானமீசையுடையவனாயிருக்கும்தன்மையை அடைந்தானன்றோ? கௌதமர்நிமித்தமாக இந்திரன் அண்டமில்லாதவனாகிப் பிறகு அஜத்தின்விருஷணத்தையும் அடைந்தான். அஸ்வினீதேவர்களுக்குரியஸோமக்கிரகத்தைத்தடுப்பதற்கு வஜ்ராயுதத்தையோங்கின இந்திரனுடையகைகள் ச்யவனரால் ஸ்தம்பனஞ்செய்யப்பட்டன. யாகத்தையழித்ததால் கோபங்கொண்டவனான தக்ஷனால் திரும்பவும் சரீரத்தைத் தவத்தில்விநியோகித்து நெற்றியில் ருத்ரரைப்போல மூன்று நேத்திரங்களுடையஆகிருதியானது உண்டுபண்ணப்பட்டது. திரிபுரர்களைக்கொல்லுவதற்காகத் தீக்ஷைபெற்றவரானருத்ரருடையஜடைகள் சுக்கிராசாரியரால் தலையிலிருந்தும்அறுத்து அக்னியில்போடப்பட்டன. அதிலிருந்தும் ஸர்ப்பங்களுண்டாயின. அந்தஸர்ப்பங்களால்பீடிக்கப்பட்ட அவருடையகழுத்துக் கறுத்தவர்ணத்தையடைந்தது. முன் ஸ்வாயம்புவமன்வந்தரத்திலும் அவர் நாராயணருடைய கரத்தினால்கட்டுண்டதால் கறுத்தகழுத்தையுடையவரானார். அமிருதத்தினுற்பத்திகாலத்தில் வாயுவினால்சேர்க்கப்பட்டவிஷத்தைப் பக்ஷிக்கிறவரானார். 'விஷபானஞ்செய்தார்' என்கிறநிமித்தமாகவே பிரம்மாவினால் சந்திரகலையானது (சிரத்தில்) வைக்கப்பட்டது. அங்கிரஸின்புத்திரரானபிருகஸ்பதி ஸ்நானம்செய்கையில் ஜலம் தெளியவில்லை. உடனே பிருஹஸ்பதி ஜலவிஷயமாகக் கோபித்தார். 'நான் ஸ்நானம்பண்ணுகையில் கலங்கித் தெளியாமலிருந்தமையால் இதுமுதல் சிறுமீன், பெருமீன், மகரம், ஆமைமுதலானஜந்துக்களாலும் தவளைகளாலும் வியாபிக்கப்பட்டுக் கலங்கக்கடவீர்கள்' என்று சபித்

தார். அதுமுதல் ஜலங்கள் ஜலஜந்துக்களால் நிரம்பினவாயின. துவஷ்டாவின்புத்திரனானவிஸ்வரூபன் தேவர்களுக்குப் புரோஹிதனானான். அஸுரர்களுக்குமருகனான அவன் தேவர்களுக்குப் பிரத்யக்ஷமாகவும் அஸுரர்களுக்கு மறைவாகவும் ஹவிர்ப்பாகத்தையளித்தான். அப்பொழுது அஸுரர்கள் ஹிரண்யகசிபுவை முன்னிட்டுக்கொண்டு விஸ்வரூபனுக்குமாதாவானஸஹோதரியினிடம், 'ஓ! ஸஹோதரியே! துவஷ்டாவுக்குப்பிறந்தவனும் உன்னுடையபுத்திரனும் மூன்றுசிரமுடையவனும் தேவர்களுக்குப்புரோஹிதனுமான இந்தவிஸ்வரூபன் தேவர்களுக்குப் பிரத்யக்ஷமாகப் பாகத்தையளித்தான்; எங்களுக்கு மறைவாக அளித்தான். அதனால் தேவர்கள் விருத்தியடைகின்றார்கள். நாங்கள் க்ஷயத்தை அடைகின்றோம். ஆகையால் நீ இவனைத் தேவர்களினின்றும்விலக்கி, எங்கள் பக்ஷத்தைச்சாரும்படி செய்யவேண்டும்' என்னும் வரத்தைப் பிரார்த்தித்தார்கள். உடனே தாயானவள் நந்தனவனத்தையடைந்த விஸ்வரூபனைநோக்கி, 'புத்திரா! நீ ஏன் சத்ருவின்பக்ஷத்தைவிருத்திசெய்கிறாய்? மாதுலர்களுடைய பக்ஷத்தை நாசம்செய்கிறாய்; இவ்விதம் நீ செய்யக்கூடாது' என்று சொன்னாள். அந்தவிஸ்வரூபனும் தாயின்வார்த்தையைத் தடுக்கலாகாதென்றெண்ணிக் கௌரவித்து ஹிரண்யகசிபுவை அடுத்தான். ஹிரண்யகசிபு பிரம்மாவின்புத்திரரானவஸிஷ்டரிடமிருந்தும், 'நீ வேறொருவனை ஹோதாவாகவரித்ததனால் யாகத்தைமுடிக்காதவனாகவே அபூர்வமாகவுண்டானபிராணியிடமிருந்தும் மரணத்தை அடைவாய்' என்று சாபத்தை அடைந்தான். அவருடையசாபத்தால் ஹிரண்யகசிபு மரணத்தை அடைந்தான். பிறகு விஸ்வரூபன் மாதாவின்பக்ஷத்தை விருத்திசெய்துகொண்டு மிகவும்தவமுடையவனானான். அவனுடைய விரதங்களைப் பங்கம்செய்வதற்காக இந்திரன் அழகுபொருந்திய அநேக அப்ஸரஸுகளை ஏவினான். அவர்களைப்பார்த்து அவனுடைய மனமானது கலங்கியது. (அவன்) அந்தஅப்ஸரஸுகளிடம் விரைவில் பற்றுள்ளவனானான். அவன் பற்றுள்ளவனாயிருப்பதை அப்ஸரஸுகள் அறிந்து, 'நாங்கள் வந்தபடி போகிறோம்' என்று சொன்னார்கள். அப்பொழுது விஸ்வரூபன் அவர்களைநோக்கி, 'எங்கேபோகிறீர்கள்? என்னுடன் இருக்கலாம்; நன்மையுண்டாகும்' என்று சொன்னான். அவர்களும் அவனைநோக்கி, 'தேவஸ்திரீகளும் அப்ஸரஸுகளுமான நாங்கள் தேவனும் வரமளிப்பவனும் ஸமர்த்தனுமான இந்திரனை முன் வரித்திருக்கிறோம்' என்று சொன்னார்கள். பிறகு விஸ்வரூபன் அவர்களைநோக்கி, 'இப்பொழுதே இந்திரனும்

தேவர்களும் இல்லாமற்போவார்கள்' என்று சொன்னான்; உடனே மந்திரங்களை ஜபித்தான். அந்தமந்திரங்களாலே திரிசிரஸ் விருத்தியடைந்தான். ஒருமுகத்தினாலே எல்லாஉலகங்களிலும் விதிப்படி கிரியைசெய்கின்ற வேதியர்களாலே யாகங்களிலே நன்றாக ஹோமஞ் செய்யப்பட்ட ஸோமத்தையும் ஒருமுகத்தால் அன்னத்தையும் ஒரு முகத்தால் இந்திரனுடன்கூடின தேவர்களையும் பானம் செய்தான். பிறகு இந்திரன், விருத்தியடைகிறவனும் ஸோமபானத்தால் புஷ்டி செய்யப்பட்ட எல்லா அவயவங்களையுமுடையவனுமான அவனைப்பார்த்துத் தேவர்களுடன் கவலையடைந்தான். இந்திரனைச்சேர்ந்த அந்தத்தேவர்கள் பிரம்மாவை அடைந்தார்கள். அவர்கள் அவரைநோக்கி, 'விஸ்வரூபனாலே எல்லாயாகங்களிலும் நன்றாக ஹோமஞ்செய்யப்பட்ட ஸோமமானது பானஞ்செய்யப்படுகிறது. நாங்கள் பாகமில்லாதவர்களானோம். அஸுரர்களுடையபக்ஷம் விருத்தியடைகிறது. நாங்கள் குறைந்துபோகிறோம். ஆகையால் உடனே எங்களுக்கு க்ஷேமத்தைச் செய்யவேண்டும்' என்றுசொன்னார்கள். அவர்களை நோக்கிப் பிரம்மா, 'பிருகுவம்சத்திலுதித்ததசீசரிஷியானவர் தவஞ் செய்துகொண்டிருக்கிறார். அவர் சரீரத்தைவிடும்படி அவரிடம் வரத்தைக் கேளுங்கள். அவருடைய எலும்புகளால் வஜ்ராயுதம் செய்யுங்கள்' என்று சொன்னார். பிறகு தேவர்கள் பகவான்ததீசமகரிஷியானவர் தவஞ்செய்கிறவிடம் வந்தார்கள். இந்திரன்முதலான தேவர்கள் அவரைஅடைந்து, 'ஓ! பகவானே! க்ஷேமமா? தவம் இடையூறில்லாமல் நடக்கிறதா?' என்றுகேட்டார்கள். ததீசரும் அவர்களை நோக்கி, 'உங்களுக்குநல்வரவா? என்னசெய்யவேண்டும்? சொல்லலாம். எதைச் சொல்லுவீர்களோ அதைச்செய்வேன்' என்று சொன்னார். அவர்கள் அவரைப்பார்த்து, 'உலகத்தின் நன்மைக்காகப் பகவானான நீர் சரீரத்தை விடவேண்டும்' என்று சொன்னார்கள். இவ்விதம்சொல்லப்பட்டததீசர் 'ஆயிரம்வருஷம் என்னால் இந்திரனுடைய பதமடையப்படுமானால் சரீரத்தைவிடுவேன்' என்று அவர்களுக்குச் சொன்னார். அப்பொழுது இந்திரன், 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லித் தன்னுடைய ஸ்தானத்தைக்கொடுத்துவிட்டுத் தபஸியானான். ததீசர் இந்திரனானார். அவ்வளவுக்குமுன்னமே இந்திரனுடன்கூடினதேவர்கள், 'தேகத்தைவிடுவதற்கு இதுகாலம்' என்று வந்தார்கள். அப்படியே வருத்தமில்லாதமனமுடையவரும் ஸுகதுக்கங்களில் ஸமமானவரும் மகாயோகியுமானததீசரானவர் உடனே புத்தியில் பரமாத்மாவைத்தியானித்துக்கொண்டு சரீரத்தைவிட்டார். இந்த விஷயத்தில்

ததீசர் இந்திரனுர். (அவருடைய)எலும்புகளால் (வஜ்ராயுதம்)செய்யப்பட்டதென்று சுருதியுமிருக்கிறது. அவருடையபராக்ரமம் விளங்கின ஸமயத்தில் பிரம்மாவானவர் அந்தஎலும்புகளையெடுத்து வஜ்ராயுதத்தைச்செய்தார். பிளக்கமுடியாததும் அணுகமுடியாததும் பிராம்மணருடையஎலும்புகளாலுண்டானதும் விஷ்ணுவினுல்பிரவேசிக்கப்பட்டதுமான அந்தவஜ்ராயுதத்தால் இந்திரன் விஸ்வரூபனைக்கொன்றான். 'யஜ்ஞபசுவானஉன்னுடையசிரஸைக் கொய்கிறேன்'என்று சொல்லிக்கொண்டு தச்சனுல் அவனுடையதலையையும் வெட்டினன். அதற்குப் பிறகு விஸ்வரூபனுடையசரீரத்தைக்கடைந்து த்வஷ்டாவின்புத்திரனுலேஉண்டுபண்ணப்பட்டவனுன விருத்திரனென்கிற சத்ருருவை இந்திரன் கொன்றான். அந்தஇரண்டுவிதமானபிரம்மஹத்தியும் உண்டானபொழுது இந்திரன் பயத்தால் தேவராஜ்யத்தைவிட்டு மானஸஸரஸில் ஜலத்திலுண்டாகிக் குளிர்ச்சியாயிருக்கிற தாமரைக்கொடியையும், அடைந்தான். அதிலும தன்னுடைய ஐஸ்வரியத்தின் யோகத்தால் அணுமாத்திரமாகித் தாமரைத்தண்டில் புகுந்தான். பிறகு பிரம்மஹத்திநிமித்தமாக மூவுலகங்களுக்கும்நாதனும் இந்திராணீவல்லபனுமான இந்திரன் ஒளித்தபொழுது ஜகத்து ஈஸ்வரனில்லாததாயிற்று. தேவர்களை ரஜஸூம தமஸூம் வந்தடைந்தன. மஹரிஷிகளுடைய மந்திரங்கள் பிரவிருத்திக்கவில்லை. ராக்ஷஸர்கள் கிளம்பிவிட்டார்கள். வேதமும் குறைவுபட்டது. இந்திரனில்லாமல் பலமற்றவைகளான உலகங்கள் லேசாக ஆக்ரமிக்கக்கூடியவைகளாயின. பிறகு தேவர்களும் முனிவர்களும் ஆயுவென்கிற அரசனுடைய புத்திரனுன நஹூஷனென்பவனைத் தேவராஜ்யத்தில் அபிஷேகம் செய்தார்கள். நஹுஷன் நெற்றியில்ஜ்வலிக்கிறவைகளும் எல்லாத் தேஜஸூகளையும் அபகரிக்கின்றவைகளுமான ஐந்நூறுஜோதிஸூகளால் ஸ்வர்க்கத்தைப் பரிபாலித்துவந்தான். பிறகு உலகங்கள் ஸ்வபாவத்தைஅடைந்தன. கவலையற்றவைகளும் ஸந்தோஷமடைந்தவைகளுமாயின. பிறகு நஹூஷன், 'இந்திராணியைத்தவிர இந்திரனுடையபோக்யவஸ்துக்களெல்லாம் என்னை அடைந்தன' என்றுசொன்னான். அவன் இவ்விதம்சொல்லிவிட்டு இந்திராணியின் ஸமீபம்சென்றான். பிருஹஸ்பதியின் கிருகத்திலிருப்பவளான அவளை நோக்கி, 'அழகானவளே! நான் தேவர்களுக்கு இந்திரன். என்னை நீ அடைவாயாக' என்றுசொன்னான். அவனைநோக்கி இந்திராணியானவள், 'நீர் இயற்கையாகவேதர்மத்திலன்புள்ளவரும் சந்திரவம்சத்திலுண்டானவருமாயிருக்கிறீர். ஆகையால் பிறன்மனைவியை விரும்புதல்

தகாது' என்று விடைகூறினள். பிறகு நஹுஷன், 'நான் இந்திரனுடைய பதத்திலிருக்கிறேன். நான் இந்திரனுடையராஜ்யத்தில் சிறந்தவஸ்துக்களை ஆள்கிறவன். இதில் ஓர் அதர்மமுமில்லை. நீ இந்திரனால் அனுபவிக்கப்பட்டவள்' என்று அவளுக்குச்சொன்னன். அவள் அவனைநோக்கி, 'எனக்கு ஒருவிரதம் முடிவுபெறாமலிருக்கிறது; சிலதினங்களுக்குள்ளே அதனுடைய முடிவில் உம்மை அடைவேன்' என்று சொன்னள். இந்திராணி இவ்விதம்சொல்ல அவன் சென்றுவிட்டான். பிறகு இந்திராணியானவள் துக்கசோகங்களால்வருத்தமுற்றவளாகவும் பதியைப்பார்ப்பதிலாவலுள்ளவளாகவும் நஹுஷனிடமிருந்தும் பயத்தால் பற்றப்பட்டவளாகவும் பிருஹஸ்பதியிடம் சென்றாள். அந்தப்பிருஹஸ்பதியும் மிக்கவருத்தமுற்றவளானஅவளைப் பார்த்தவுடனே தியானம் செய்து பதியின்காரியத்தில் பற்றுள்ளவளாக அறிந்து, 'இந்தவிரதத்தோடு தவத்தைச்செய்து வரத்தைஅளிப்பவளான உபஶ்ருதியென்கிறதேவியை அழை. அப்பொழுது அவள் உனக்கு இந்திரனைக் காண்பிப்பாள்' என்று சொன்னார். உடனே அவள் பெரிதான நியமத்திலிருந்துகொண்டு வரமளிப்பவளான உபஶ்ருதிதேவியை மந்திரங்களால் அழைத்தாள். அந்தஉபஶ்ருதி சசியின்ஸமீபம் வந்தாள். அவளை நோக்கி, 'இதோ இருக்கிறேன்' என்று சொல்லி, 'நீ அழைத்தபடி வந்துவிட்டேன். உனக்கு என்னஇஷ்டத்தைச்செய்ய வேண்டும்?' என்றும்கேட்டாள். சசி, 'அவளைத் தலையால் வணங்கி, 'ஓ! பூகவதி! என்னுடையபர்த்தாவைக் காண்பிக்கக்கடவாய். நீ ஸத்யமாயும் ஸத்துக்களுக்குமாதாவாயும் இருப்பவள்' என்று சொன்னள். அவள் இவளை மானஸஸரஸுக்கு அழைத்துக்கொண்டுபோனள்; அவ்விடத்தில் தாமரைத்தண்டிலிருக்கின்றஇந்திரனைக் காண்பித்தாள். அப்பொழுது இந்திரன் இளைத்தவளும் சோர்வடைந்தவளும் தனதுமனைவியுமானஅந்தச்சசியைப்பார்த்து, 'ஆ! ஆ! காணமல்போனஎன்னைத்தேடி (என்னுடைய) பத்னியானவள் துக்கத்தால் வருந்திக்கொண்டு வந்தடைந்தாளென்கிற இந்தத்துக்கம் எனக்குவந்ததே' என்று கவலைகொண்டான். அவளைநோக்கி இந்திரன், 'எவ்விதம்இருக்கிறாய்?' என்று கேட்டான். அவள், 'நஹுஷன் என்னைப் பத்னியாகச்செய்துகொள்வதற்கு அழைக்கிறான். என்னால் அவனுக்குக் காலமும் குறிக்கப்பட்டிருக்கிறது' என்று சொன்னள். இந்திரன் அவளுக்கு, 'நீ போ. நஹுஷனைநோக்கி, 'நீர் ரிஷிகளால் வகிக்கப்பட்ட புதிதானவாஹனத்திலேறிவந்து என்னை விவாஹம்

செய்யும்' என்றும், இந்திரனுக்குப் பெரியவைகளும் மனத்திற்குப் பிரியமானவைகளும் அவனுலேறப்படவைகளுமான வாகனங்களிருக்கின்றன. நீர் வேறுவாகனத்தினால் என்னை அடைவதற்கு யோக்கியராகிறீர்' என்றும் சொல்' என்று சொன்னான். இவ்விதம்சொல்லப்பட்டு அவள் ஸந்தோஷமடைந்து சென்றாள். இந்திரனும் திரும்பவும் தாமரைத்தண்டினுள் சென்றான். பிறகு நகுஷன் அந்த இந்திராணிவந்ததைப் பார்த்து, 'நீ எனக்குக்குறிப்பிட்ட அந்தக்காலமானது பூர்ணமாகிவிட்டது' என்று சொன்னான். அவனைநோக்கி இந்திராணி இந்திரன்சொன்னபடி சொன்னாள். அவன் மஹரிஷிகளால்வகிக்கப்பட்ட வாகனத்திலேறிக்கொண்டு இந்திராணியின் ஸமீபம் சென்றான். அப்பொழுது மித்ரனுக்கும் வருணனுக்கும் கும்பத்தில்பிறந்தவரும் ரிஷிகளில்சிறந்தவருமான அகஸ்தியமுனிவர் நஹுஷனாலே அந்தமஹாமுனிவர்கள் அவமதிக்கப்பட்டதைப்பார்த்தார். அது தாங்குவதற்குவருத்தமுள்ளதென்றுநினைத்துத் தாமும்கிரகிக்க அவனால் பாதங்களால் பரிசிக்கவும்பட்டார். உடனே அவர் நகுஷனை நோக்கி, 'கெட்டகாரியத்தில்முயலுகின்றவனே! பாபி! பூமியில் விழக்கடவாய். எதுவரை பூமியும் மலைகளுமிருக்குமோ அதுவரை ஸர்ப்பமாயிருக்கக்கடவாய்' என்றுசொன்னார். மகாமுனிவர்சொல்லும்பொழுதே அவன் அந்தவாகனத்திலிருந்தும் விழுந்தான். பிறகு மூவுலகமும் இந்திரனற்றதாயிற்று. அப்பொழுது தேவர்களும் முனிவர்களும் இந்திரனுக்காகப் பகவானனவிஷ்ணுவைச் சரணமடைந்தார்கள். அவரைநோக்கி, 'ஓ! பகவானே! பிரம்மஹத்தியால்அவமதிக்கப்பட்டஇந்திரனை ரக்ஷிக்கவேண்டும்' என்று சொன்னார்கள். அப்பொழுது வரத்தையளிப்பவரானஅவர் அவர்களைநோக்கி, 'இந்திரன் விஷ்ணுவைத்தேவதையாகவுடைய அசுவமேதயாகத்தைச் செய்யட்டும். அதனால் ஸ்வர்க்கஸ்தானத்தை அடைவான்' என்று சொன்னார். பிறகு தேவர்களும் முனிவர்களும் இந்திரனைக்காணுமையால் இந்திராணியைநோக்கி, 'ஓ! ஸௌபாக்யவதி! செல். இந்திரனை அழைத்துவா' என்று சொன்னார்கள். அவள் அந்த ஸரஸிலிருக்கிறஇந்திரனை அழைத்தாள். இந்திரனும் அந்தஸரஸிலிருந்து வெளியில்வந்து ஸரஸ்வதீநதியை அடைந்தான். பிருகஸ்பதியும் இந்திரனுக்காக அஸ்வமேதமென்கிறமஹாயாகத்தை நடத்தினார். அந்தயாகத்தில் கறுப்பும் வெளுப்புமான யாகாஸ்வத்தைவிட்டு அதையே [1]வாகனமாகச்செய்து பிருஹஸ்பதியானவர் தேவர்களுக்

---

[1] வேறுபாடம்.

குப்பதியான இந்திரனை ஸ்வர்க்கஸ்தானத்தை அடையும்படி செய்தார். பிறகு அந்தத் தேவராஜன் பாவமற்றவனாகித் தேவர்களும் ரிஷிகளும் துதிக்க ஸ்வர்க்கத்திலிருப்பவனானான். பிரம்மஹத்தியை ஸ்திரீகள் விருக்ஷங்கள் மலைகள் பூமி ஆகிய இவைகள் நான்குஸ்தானங்களிலும் பிரித்துக்கொடுத்தான். அது ஸ்திரீகளிடம் ரஜஸாகவும் விருக்ஷங்களில் பிசினாகவும் மலைகளில் பாலாகவும் பூமியில் உவராகவுமிருக்கிறது. அவைகள் தொடத்தக்கவைகளல்ல. ஆகையினாலேதான் ஹவிஸானது லவணமின்றிப் பாகஞ்செய்யப்படுகின்றது. இவ்விதம் இந்திரன் பிராம்மணர்களுடைய தேஜஸின்பெருமையால் விருத்திசெய்யப்பட்டுச் சத்துருவதஞ்செய்து தன்ஸ்தானத்தை அடைவிக்கப்பட்டான். நஹுஷனுடையசாபநிவிருத்திக்காகத் தேவர்களும் ரிஷிகளும்பிரார்த்தித்ததால் அகஸ்தியர், 'ஸ்ரீமானான தர்மராஜன் பிராதாக்களோடு உன்வம்சத்தில் பிறப்பான். அவனுக்குத்தம்பியான பீமனை நீ கிரகிப்பாய். அப்பொழுது தர்மபுத்திரன் உன்னுடையவினாக்களுக்குவிடை சொல்லி உன்னையும் அவனையும் விடுதல் அடையச்செய்வான்' என்று சொன்னார். முன் காலத்தில் பரத்வாஜமஹரிஷியானவர் ஆகாயகங்கையை அடைந்து ஸ்நானஞ்செய்தார்; மூன்றுஅடிகளைவைக்கிறவரானவிஷ்ணுவினாலே அடிக்கப்பட்டார். (அப்பொழுது) அவர் பரத்வாஜரானலே அடையாளத்தோடுகூடியகையால் மார்பிலடிக்கப்பட்டு அடையாளத்தோடுகூடியமார்பையுடையவரானார். அக்னி பிருகுமஹரிஷியினால்சபிக்கப்பட்டு எல்லாவற்றையும்புஜிப்பவனானான். அதிதியானவள், 'இதைப்புஜித்துவிட்டுத் தேவர்கள் அஸுரர்களைக் கொல்லுவார்கள்' என்று தேவர்களுக்கு அன்னத்தைப் பாகஞ்செய்தாள். புதனானவன் விரதானுஷ்டானத்தின்முடிவில் அவ்விடம் வந்தான். அதிதியினிடம், 'பிக்ஷைகொடு' என்று யாசிக்கவும்செய்தான். அப்பொழுது அதிதியானவள், 'இது முதலில் தேவர்களால் அருந்தத்தக்கது. மற்றவனால் முந்தி அருந்தத்தக்கதில்லை' என்றுசொல்லிப் பிக்ஷைகொடுக்கவில்லை. உடனே பிக்ஷைகொடாததால் கோபங்கொண்டவனும் பிராம்மணனுமானபுதன், 'அதிதியின்உதரத்தில் பீடை உண்டாகப்போகிறது' என்று அவளைச்சபித்தான். அண்டமென்று பெயருள்ள ஸூரியனுடைய இரண்டாவதுஜன்மத்தில் மாதாவான அதிதியினுடைய [1]அண்டமானது பேதிக்கப்பட்டது. [2]மார்த்தாண்டனென்கிற அந்தஆதித்யன் சிராத்ததேவனானான். தக்ஷனுக்கு அறுபது கன்னிகைகள் இருந்தார்கள். அவர்களில் பதின்மூவரைத் தக்ஷன் கஸ்

1 கருப்பை. 2 ம்ருத + அண்ட = மார்த்தாண்ட.

யபருக்குக் கொடுத்தான்; பதின்மரைத் தர்மருக்குக் கொடுத்தான்; பதின்மரை மனுவுக்குக் கொடுத்தான்; இருபத்தேழுவரைச் சந்திரனுக்குக் கொடுத்தான். ஒரேதன்மையுள்ளவர்களும் நக்ஷத்திரமென்கிறபெயர்கொண்டவர்களுமான அவர்களில் ரோஹிணியிடம் சந்திரன் மிகவும் அதிகமானபிரீதியுடையவனாயிருந்தான். அதனால் மற்ற அந்தப் பத்னிகள் பொறாமைகொண்டு பிதாவின்ஸமீபம்சென்று, 'ஓ! பகவானே! நாங்கள் ஒரேதன்மையுள்ள பிரபாவமுடையவர்களாயிருக்க, சந்திரன் ரோஹிணியை மிகவும் அதிகமாக விரும்புகிறான்' என்று இந்தவிஷயத்தைச் சொன்னார்கள். அவன், 'க்ஷயமானது இவனை அடையட்டும்' என்றுசொன்னான். தக்ஷனுடையசாபத்தால் ஸோமராஜனுக்கு க்ஷயமும் உண்டாயிற்று. க்ஷயத்தினால்வியாபிக்கப்பட்ட அவன் தக்ஷனை அடைந்தான். தக்ஷனும் அவனைநோக்கி, 'நீ ஒரு தன்மையாயில்லை' என்றுசொன்னான். அப்பொழுது ரிஷிகள் சந்திரனைநோக்கி, 'க்ஷயரோகத்தால் குறைந்துபோகிறாய். மேற்குத்திக்கில் ஸமுத்திரத்தில் ஹிரண்யஸரஸென்னும்தீர்த்தம் இருக்கின்றது. அவ்விடம்சென்று சரீரத்தை ஸ்நானம்செய்வி' என்றுசொன்னார்கள். உடனே சந்திரன் சென்றான். அவ்விடத்திலுள்ள ஹிரண்யஸரஸின் தீர்த்தத்தையடைந்து சரீரத்தை முழுகச்செய்தான். ஸ்நானஞ்செய்து தன்னைப் பாவத்திலிருந்தும் விடுவித்துக்கொண்டான். அந்தத்தீர்த்தத்தால் சந்திரன் விசேஷகாந்தியடைந்ததுமுதல் அந்தத் தீர்த்தமானது பிரபாஸதீர்த்தமென்கிறபெயரால் கியாதிபெற்றதாயிற்று. அந்தச்சாபத்தால் இப்பொழுதும் சந்திரன் அமாவாஸ்யையினிடையில் க்ஷயத்தை அடைகிறான். பௌர்ணிமையில் மாத்திரம் பூர்த்தியடைந்து மேகரேகைபோல அடையாளமுடைய சரீரத்தைக் காண்பிக்கிறான்; மேகத்திறகுநிகரானவர்ணத்தை அடைந்தான். அவனுடைய முயல்போன்றஅடையாளமானது நிர்மலமாகிவிட்டது. ஸ்தூலசிரஸென்கிற மகாமுனிவர் மேருவினுடைய ஈசானதிக்கின்கோணத்தில் தவம்புரிந்தார். அப்பொழுது தவஞ்செய்கிற அவருடையசரீரத்தை எல்லாக்கந்தத்தையும் வகிக்கிறவனும் சுசியுமானவாயு வீசிக்கொண்டு பரிசித்தான். தவத்தால் தாபத்தையடைந்த சரீரமுடையவரும் இளைத்தவருமான அவர் வாயுவீசுவதால் மனத்தில் சந்தோஷத்தை அடைந்தார். அவ்விடத்தில் வாயுவின் வீசுதலால் செய்யப்பட்ட ஸந்தோஷத்தையுடைய அவருக்கு விருக்ஷங்கள் புஷ்பசோபையைக் காண்பித்தனவென்று அவர் அவைகளை 'நீங்கள் எல்லாக்காலமும் புஷ்பங்களும் பலங்களுமுடையவர்களாகமாட்டீர்கள்' என்று

சபித்தாராம். முன்காலத்தில் நாராயணர் உலகங்களின் நன்மைக்கா கப்படபாமுகரென்கிற மகரிஷியானார். மேருவில்தவம்செய்கிறவரான அவர் சமுத்திரத்தைஅழைக்க அது வரவில்லை. அதனால் கோபமுடைந்தஅவர் தம்முடையசரீரத்தின் உஷ்ணத்தால் ஸமுத்திரத்தை அசைவற்றஜலமுடையதாகச் செய்தார். வேர்வையின்பெருக்குக்குச்சமானமாக இந்தஸமுத்திரத்திற்கு லவணத்தன்மையையும் உண்டுபண்ணினார். 'அருந்தத்தகாததாவாய். உன்னுடையஇந்தஜலம் படபாமுகமென்றுபெயருடைய அக்னியினால் பானம்செய்யப்பட்டு அதற்கு மதுரமாகும்' என்றும்சொல்லினர். அப்படிப்பட்டஇந்தஜலம் ஸமுத்திரத்திலிருந்தும் இப்பொழுதும்கூடத் தொடர்ந்ததாயிருக்கிற படபாமுகமென்னும்பெயருடைய அக்னியினால் பானம்செய்யப்படுகிறது. உமையானவள் தக்ஷனிடம்கோபத்தால் திரும்பவும் ஹிமவானுக்குப் புத்ரியானாள். இமயமலையினுடையபுத்ரியான உமைஎன்கிறகன்னிகையை ருத்ரர் விரும்பினார். பிருகுமஹரிஷியும் ஹிமவானை அடைந்து, 'இந்தக்கன்னிகையை எனக்குக் கொடு' என்று கேட்டார். அவரைநோக்கி ஹிமவான், 'ருத்திரரானவர் என்புத்ரியினால் விரும்பப்பட்ட நாயகராயிருக்கிறார்' என்றுசொன்னான். (அப்பொழுது) பிருகுவானவர் அவனைநோக்கி, 'கன்னிகைவரிப்பதில் விருப்பமுள்ளநான் உன்னால் மறுக்கப்பட்டமையால் நீ ரத்தினங்களுக்கு இருப்பிடமாகமாட்டாய்' என்றுசொன்னார். இதுவரையில் இந்த முனிவசனம் நிலைத்திருக்கிறது. ஆகையால் பிராம்மணர்களுடையமஹிமை இவ்விதமாயிருக்கிறது. க்ஷத்ரியஜாதியும் பிராம்மணர்களுடைய அருளால் சாச்வதமும் அழிவற்றதுமாயிருக்கிறபூமியைப் பத்னியாக அடைந்து அனுபவித்தது. அப்படிப்பட்ட இந்தப்பிராம்மக்ஷத்திரஜாதிகள் அக்கினிஸோமஸ்வரூபம். அதனால் இந்தஜகத்துத் தரிக்கப்படுகிறது.

---

## முந்நூற்றைம்பத்திரண்டாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

**(கிருஷ்ணன் தம்நாமங்களின்அர்த்தவிசேஷங்களையும் ருத்ரருக்கும்நாராயணருக்கும்போர்நடந்ததையும் அர்ஜுனனுக்குச் சொல்லியது.)**

நாமங்களுடையஅர்த்தவிஸ்தாரத்தைச் சொல்லப்போகிறேன். ஒருமுகமானமனமுடையவனாகக் கேட்கக்கடவாய். [1]ஸூர்யனும்

---

[1] 'அக்கினி' என்பது பழையவுரை.

சந்திரனும் கிரணங்களென்றுபெயர்கொண்ட என்னுடைய கேசங்களாலே உலகத்தை அடிக்கடி விழிக்கச்செய்கிறவர்களும், தபிக்கச் செய்கிறவர்களுமாகித் தனித்தனி கிளம்புகிறார்கள். போதிப்பதனாலும் தபிக்கச்செய்வதனாலும் உலகத்திற்குச் சந்தோஷமேற்படும். ஓ! பாண்டுபுத்திரனே! அக்னியினாலும் ஸோமனாலும்செய்யப்பட்ட இந்தக்கர்மங்களால் ஈசானனும் வரமளிப்பவனும் உலகங்களை உண்டு பண்ணுகிறவனுமானநான் ஹ்ருஷீகேசனாகிறேன். நான் கிருதுக்களில்நடக்கின்றயாகங்களில், 'இலோபஹூத' என்கிறமந்திரத்தினால் அழைக்கப்பட்டுப் பாகத்தை ஹரிக்கிறேன்; அதனாலும் என்னுடையநிறம் சிரேஷ்டமானஹரிதவர்ணமானதனாலும் நான் 'ஹரி' என்று கருதப்பட்டேன். 'தாம' என்றால் உலகங்களின்ஸாரம். [1] விசாரிக்கப்பட்டது ரிதம். ஆதலால் (விசாரித்த)உடனே நான் பிராம்மணர்களாலே, 'ரிததாமா' என்றுசொல்லப்பட்டேன். முன்காலத்தில் ஜலத்தில்முழுகினதும் ஜலத்தின்குகையைஅடைந்ததுமான (கோவென்ற) பூமியை (அவிந்தம்)அடைந்தேன். அதனால் நான் தேவர்களால், 'கோவிந்தன்' என்னும்சொல்லால் துதிக்கப்பட்டேன். 'சிபிவிஷ்டன்' என்கிறநாமாவில், 'சிபி' என்றால் ரோமங்களில்லாதவன். (அதனால் அவயவமற்றவன். ஆதலால்) அவனால் எல்லாம் (ஆவிஷ்டம்) பிரவேசிக்கப்பட்டதுபற்றி, 'சிபிவிஷ்டன்' என்று கருதப்பட்டேன். யாஸ்கரென்கிறமுனிவர் அநேகயாகங்களில் ஜாகரூகராகி, 'சிபிவிஷ்ட' என்றுகானஞ்செய்தார். இந்தக்காரணத்தால் நான் ரகஸ்யமானஇந்தநாமத்தைத் தரிக்கிறேன். கம்பீரமான புத்தியையுடையயாஸ்கமுனிவர் என்னை, 'சிபிவிஷ்ட' என்று துதிசெய்து என்னுடையஅனுக்ரகத்தால் பாதாளத்தில்மறைந்ததான நிருக்தமென்கிறகிரந்தத்தை அடைந்தார். எல்லாப்பிராணிகளுக்கும் க்ஷேத்திரஜ்ஞனானநான் ஒருபொழுதும் ஜனித்தவனுமில்லை; ஜனிக்கிறவனுமில்லை; ஜனிப்பவனுமில்லை. அதனால் நான் அஜனென்றுகருதப்பட்டேன். குந்தியின்புத்திரா! என்னால் அற்பமாகவும் அமங்களமாகவும் ஒருபோதும் முன் சொல்லப்படவில்லை. பிரம்மாவின்புத்ரியானஎன்னுடையஸரஸ்வதிதேவியானவள் தவறுதவள்; உண்மையுள்ளவள். (அப்படிஸத்யத்தைஉரைத்தவனாதலாலும் பிரத்யக்ஷமானபிருதிவி அப்பு தேயு ஆகிய) [2] ஸத்தும் (அப்ரத்தியக்ஷமானவாயு ஆகாயம்ஆகிய) அஸத்தும் என்னால் என்னிடத்

---

[1] ஸத்தியம்.

[2] 'ஸத் + த்யத் = 'ஸத்யம்' என்று, பிரித்துப் பொருள்கூறுவது பழையவுரை.

தில் பிரம்மாவுக்கிருப்பிடமானநாபீகமலதேசத்தில் பிரவேசிக்கச் செய்யப்பட்டதனாலும் என்னை முனிவர்கள் ஸத்யனாக அறிகின்றார்கள். நான் ஸத்வகுணத்திலிருந்தும் முன் நழுவாதவன். ஸத்வத்தை என்னால்செய்யப்பட்டதாக அறிவாய்! தனஞ்சய! முன் ஜன்மத்திலுள்ள ஸத்வமானது இந்தஜன்மத்திலும் என்னிடமிருக்கும். அதனாலும் ஸத்வகுணத்தால் நிஷ்காமகர்மமுள்ளவனும் களங்கமற்றவனுமாயிருப்பதனாலும் ஸாத்வதமென்கிற பாஞ்சராத்ரசாஸ்திரத்தாலுண்டானஞானத்தினால் பிரம்மவித்துக்களால் பார்க்கப்பட்டவனென்பதனாலும் நான் ஸாத்வதன். ஓ! பார்த்த! அர்ஜுன! நான் இரும்பினால்செய்யப்பட்ட பெரியகலப்பைக்கொழுவாகிப் பூமியைக் கீறுகிறேன். (அப்படி கர்ஷணம்செய்வதாலும்) என்னுடையவர்ணம் கிருஷ்ணமாயுள்ளதனாலும் நான் கிருஷ்ணன். என்னால் அப்புக்களுடன்பூமியும் வாயுவுடன்ஆகாயமும் தேஜஸுடன்வாயுவும் சேர்க்கப்பட்டன. (அந்தவிஷயத்தில் எனக்குக் குண்டமென்கிற மடங்குதல் வி=இல்லாததால்) நான் [1]வைகுண்டனானேன். சாந்தமான ப்ரம்மமும் மேலானது. இந்தத்தர்மமும் பரமாகச் சொல்லப்படுகிறது. நான் அவைகளிலிருந்து முன்நழுவாதவன். அந்தக்கர்மத்தினால் நான் அச்சுதன். எங்கும்வியாபித்த பிருதிவிஆகாயமிரண்டும் பிரசித்தமானவை. அவைகளைச்சேர்த்துத் தரித்ததினிமித்தம் ருஜுவாய் [2]அதோக்ஷஜனாகச் சொல்லுகிறார்கள். அப்படிச்சொல்லப்பட்டஎன்னை வேதங்களைஅறிந்தவர்களும் வேதங்களின்அர்த்தங்களை விசாரிக்கிறவர்களுமாயிருப்பவர்கள் பிராக்வம்ச(மென்கிறயாகசாலையின்ஸ்தலவிசேஷ)த்தில் கானம்செய்கிறார்கள். அதனாலும் நான்அதோக்ஷஜனாகக் கருதப்பட்டேன். ஓரே அபிப்பிராயமாக, 'பிரபுவானநாராயணனைத்தவிர உலகத்தில் வேறு [3]அதோக்ஷஜனில்லை'

---

[1] 'வி' என்பதற்கு வாயுவும் தேஜஸும் ஜலமும் பொருள்; 'கு' என்பதற்குப் பூமியென்பது பொருள்; 'ட' என்பதற்கு ஆகாயமென்பது பொருள். அவற்றைச்சேர்த்தவர் வைகுண்டர். 'குண்ட' என்பதற்குத்திறமையின்மை என்பதும், 'வி' என்பதற்கு இல்லைஎன்பதும் பொருள். அவற்றைச்சேர்ப்பதில்திறமையின்மைஇல்லாததால் வைகுண்டர்என்றுமாம்.

[2] 'அத:=கீழிருப்பதான பிருதிவீ. அக்ஷ=வியாபித்திருப்பதான ஆகாயம். ஸஞ்ஜ்=சேர்த்துத்தரிப்பவன். இதில் ஸந்தியால் ககரம் மறைகிறது. ஸகாரம் ஷகாரமாகிறது.

[3] 'அ=உலகங்களுக்கு லயஸ்தானம்; தோக்ஷ=இருப்பிடம்; ஜ=உற்பத்திகாரணம். உலகங்களின் லயத்திற்கும் ஸ்திதிக்கும் உத்பத்திக்கும்ஸ்தானமானதால், அதோக்ஷஜன்' என்பது பழையவுரை.

என்கிறசப்தமானது பரமரிஷிகளாலே சொல்லப்பட்டது. உலகத்தில் அக்னிஜ்வாலாரூபனான என்னைச்சேர்ந்ததிருதமானது ப்ராணிகளுடையப்ராணன்களைத் தரிக்கின்றது. அதனால் ஜாக்ரதையுள்ளவேத வித்துக்களால் நான், 'கிருதார்ச்சிஸ்' என்று சொல்லப்பட்டேன். பித்தமென்றும் சிலேஷ்மமென்றும் வாதமென்றும் பிரஸித்தமான மூன்றுதாதுக்களும் கர்மத்தாலுண்டானவைகளென்று கருதப்பட்டன. இவை ஸங்காதமென்று சொல்லப்படுகின்றன. இவைகளால் ஜந்துவானது தரிக்கப்படுகிறது. இவைகள் குறைந்தால் குறைவடைகிறது. அதனால் ஆயுர்வேதத்தையறிந்தவர்கள் என்னை (மூன்று தாதுக்களையுமுடைமையால்) திரிதாதுவாகச் சொல்லுகின்றார்கள். ஓ! பாரத! 'வ்ருஷம்' என்பது உலகங்களில் நிகண்டுபதங்களுடைய விவரணத்தில், 'பூஜ்யமானதர்மம்' என்று பிரசித்தமாயிருக்கிறது. என்னை உத்தமமானவிருஷமாக அறிவாய். கபிஎன்றால் வராஹம்என்றும் விருஷஎன்றால் ஶ்ரேஷ்டமென்றும் தர்மம்என்றும் சொல்லப்படுகின்றன. அதனால் கஶ்யபரென்னும் ஸ்ருஷ்டிகர்த்தர் என்னை, 'விருஷாகபி' என்று சொன்னார். வேதியர்களும் தேவர்களும் என்னுடைய ஆதியையும் மத்யத்தையும் முடிவையும் ஒருபோதும் அறிகிறதில்லை. (ஆகையால்) ஆதியும் மத்தியமும் முடிவுமற்றவனும் ஈஶ்வரனும் உலகங்களுக்கு ஸாக்ஷியுமானநான் [1]விபுவாகச்சொல்லப்பட்டேன். ஓ! தனஞ்சய! சுசியானவைகளும் கேட்பதற்கினிமையுள்ளவைகளுமான வார்த்தைகளை நான் இவ்வுலகில் கேட்கின்றேன். பாவங்களைக் (காதாலும்) கேட்கிறதில்லை. அதனால் நான் சுசிஶ்ரவஸ் (என்றுசொல்லப்படுகிறேன்.) தேவர்களை விருத்தியடையச்செய்கின்றவனானநான் முன்காலத்தில் ஒருகொம்புடைய வராஹமாகி இந்தப் பூமியை எடுத்தேன். அதனால் நான், 'ஏகஶ்ருங்கன்' என்று சொல்லப்படுகிறேன். வராஹரூபத்தைத்தரித்தவனான நான் அப்படியே இருந்தேன். உயர்ந்தவைகளானதோள், நாஸிகை, தெற்றுப்பல் இம்மூன்றையுமுடைய சரீரத்தினுடையபரிமாணத்தால் நான், 'த்ரிககுத்' என்று பிரஸித்திபெற்றேன். ஞானத்தை விசாரிக்கின்றவர்களால் கபிலவர்ணமானஎன்னுடையஸ்வரூபமானது, 'விரிஞ்சன்' (விசேஷமாகத் தத்துவங்களை லயஞ்செய்கிறவன்) என்றுசொல்லப்பட்டது. சேதனன்மூலமாய் எல்லாஉலகங்களையுஞ்செய்கின்ற அந்த, 'விரிஞ்சி' என்கிற ப்ரம்மாவும் நானே. உறுதியானநிச்சயத்தையுடைய ஸாங்கியர்களான ஆசாரியர்கள் வித்தையினுடையஸஹாயமுள்ளவனும்

[1] எங்கும் வியாபித்தவன்.

ஆதித்யமண்டலத்திலிருப்பவனும் ஸநாதனனுமான என்னைக் 'கபில னாகச் சொல்லுகின்றார்கள். வேதத்தில் துதிக்கப்பெற்றவரும் எப் பொழுதும்யோகிகளால்பூஜிக்கப்படுகிறவரும் விபுவும் காந்தியுள்ள வருமான ஹிரண்யகர்ப்பரும் நானே. வேதத்தையறிந்தஜனங்கள் இரு பத்தோராயிரம் கணக்குள்ள ரிக்குவேதமாக என்னைச் சொல்லுகிறார் கள்; ஆயிரம்சாகைகளுடன்கூடிய ஸாமமாகவும் சொல்லுகிறார்கள். என்னை ஆரண்யகமென்கிற உபநிஷத்தில்கானம்செய்கின்றவர்களும் வேதியர்களுமான என்னுடையபக்தர்கள் மிகவும்அரியவர்கள். (தவி ரவும்) நூற்றொருசாகைகளுள்ளதும் அத்வரியுகாண்டமென்னப்படு வதுமான யஜுர்வேதத்தில் நான் அந்தயஜுர்வேதமாக ஸ்மரிக்கப் பட்டேன். அப்படியே அதர்வவேதத்தை அறிந்தவர்களானவேதியர் கள் ஐந்துகல்பங்களுள்ளதும் கிருத்தியைகளென்கிற கிரந்தங்களால் விவரணம் செய்யப்பட்டதுமான அதர்வவேதமாக என்னைச்சொல்லு கின்றார்கள். சாகைகளுடையபேதங்களும் சாகைகளிலுள்ளகானங்க ளும் ஸ்வரமும் வர்ணமும் உச்சாரணமும் ஆகியஎல்லாம் என்னால் செய்யப்பட்டவைகளென்று அறியக்கடவாய். ஓ! பார்த்தனே! வர த்தையளிக்கின்றவரும் அஸ்வசிரமுள்ளவரும் [1]கிரமத்தின்பிரிவையும் அக்ஷரங்களின்பிரிவையும் அறிந்தவரும் வடகோணத்திலிருப்பவரு மான அவர் நானே. [2]வாமதேவரா லுபதேசிக்கப்பட்ட மார்க்கத்தை யுடையவரும் மஹாத்மாவுமான பாஞ்சாலமுனிவரால் என்னுடைய அனுக்ரகத்தால் அனாதியான அந்தப்பூதத்தினிடமிருந்தும் கிரமமா னது அடையப்பட்டது. பாப்ரவ்யகோத்திரத்தில்பிறந்த அவர் முத லில் கிரமத்தின்கரையை அடைந்தவராகவிளங்கினார். பிறகு [3]காலவ ரென்பவர் நாராயணரிடமிருந்து வரத்தையடைந்து சிறந்ததானயோ கத்தையும்பெற்றுக் கிரமத்தைஉண்டுபண்ணி வேதசிக்ஷையையும் உண்டுபண்ணிக் கிரமத்தின்கரையை அடைந்தவரானார். பிறகு [4]புண் டரீகனென்பவனும் பிரதாபமுடையபிரம்மதத்தனென்கிற அரசனும் ஜனனமரணங்களாலுண்டான துக்கத்தை அடிக்கடிநினைத்துநினைத்து [5] ஏழுஜன்மங்களில் முக்கியஜன்மத்தையடைந்து யோகஸம்பத்தை

---

1 இரண்டுபதத்தைச்சொல்லித் திரும்பவும் முந்தியபதத்தைவிட்டுப் பிந் தியபதத்துடன் அடுத்தபதத்தைச்சேர்த்துச் சொல்வது.

2 வேறுபாடம். [ப்பில் தெரிகிறது.

3 'காலவருக்குப் பாப்ரவ்யகோத்திரம்' என்று இங்கிலிஷ்மொழிபெயர்

4 'கண்டரீகன்' என்பது வேறுபாடம்.

5 'ஏழுஜன்மத்திலுள்ள ஜனனமரணதுக்கங்களை அடிக்கடி நினைத்துநி னைத்து' என்பது பழையவுரை.

யடைந்தார்கள். ஓ! பார்த்தனே! முன்காலத்தில் நான் ஸ்ருகாரணத்திற்காகத் தர்மருக்குப் பிரஸித்தனானபுத்திரனானேன். ஓ! கௌரவஸ்ரேஷ்ட! அதனால் நான் தர்மஜனுக்க கருதப்பட்டேன். முன்காலத்தில் நாராயணர்கள் அழிவற்றதர்மமயமான வாகனத்திலேறிக்கொண்டு கந்தமாதனமென்கிற பர்வதத்தில் தவம்புரிந்தார்கள். அந்த ஸமயத்தில் தக்ஷனுடையயாகமானது நடந்தது. ஓ! பாரத! தக்ஷன் ருத்ரருக்குப் பாகத்தை அமைக்கவில்லை. அப்பொழுது தநீசியின் வசனத்தால்(ருத்ரர்)தக்ஷயஜ்ஞத்தை அழித்தார்; கோபத்தால் அடிக்கடி ஜ்வலிக்கிறசூலத்தை ஏவினார். அந்தச்சூலமானது விஸ்தாரமான தக்ஷனுடையயாகத்தைச் சாம்பலாகச்செய்துவிட்டுப் பதரிகாஸ்ரமத்திலிருக்கிறஎங்களுடையஸமீபத்தில் வேகமாகவந்தது. ஓ! பார்த்த! (அது) மிக்கவேகத்துடன் நாராயணருடையமார்பில்விழுந்தது. அப்பொழுது நாராயணருடையகேசங்கள் அந்தச்சூலத்தின்தேஜஸால் வியாபிக்கப்பட்டு [1]முஞ்சத்தின்நிறமுடையவைகளாயின. அதனால் நான் முஞ்சகேசமுள்ளவன். அந்தச்சூலமும் மஹாத்மாவானநாராயணரால் ஹூங்காரத்தால் விலக்கப்பட்டது. நாராயணரால் திருப்பப்பட்டஅது சங்கரருடைய கரத்தை அடைந்தது. பிறகு ருத்ரர் தவமுள்ளவர்களான அந்தரிஷிகளிடம் ஓடினார். அப்பொழுது எல்லாஸ்வரூபமுமான அந்த நாராயணர் மிகவும்படபடப்புடைய இவரைக் கையால் கழுத்தில் பிடித்தார். அதனால் அவருக்கு (கரியகண்டமுடையவரென்கிற) சிதிகண்டத்தன்மை உண்டாயிற்று. பிறகு ருத்திரரை அடிப்பதற்காக நரர் தர்ப்பத்தின் உட்குச்சியை எடுத்து மந்திரங்களோடு விரைவாகச் சேர்த்தார். அது பெரியகோடாலி ஆயிற்று. அப்பொழுது அந்தநரரால் வேகமாய்எறியப்பட அது முறிந்துவிட்டது. பரசுமுறிந்தஅந்தக்காரணத்தால் நான், 'கண்டபரசு' என்று கருதப்பட்டேன். ருத்திரருக்கு உச்சேஷணமென்கிற பாகத்தைத் திரும்பவும் அளித்தார்கள். இந்தவிஷயத்தில் சுருதியுமிருக்கிறது. வேதங்களால் திரும்பவும், 'அப்படியே ருத்ரரானவர் [2]உச்சேஷணபாகத்தையுடையவர். எல்லாராலும்அடையமுடியாத ஸ்வரூபத்தையுடைய உச்சேஷணபாகத்தால் உச்சேஷணகாலத்தில் அவருக்கு ஹோமம் செய்யவேண்டும்' என்றுசொல்லப்பட்டார்' என்றுசொன்னார்.

அர்ஜுனன், 'ஓ! விருஷ்ணிகுலத்திலுதித்தவரே! அப்பொழுது மூவுலகங்களையும்நாசஞ்செய்கின்றஅந்தயுத்தத்தில் யார் ஜயத்

[1] தர்ப்பை. [2] மிகுந்தபாகம்.

தை அடைந்தார்? ஓ! ஜனார்த்தனரே! இந்த எனக்குச் சொல்லும்' என்று வினவ, ஸ்ரீகிருஷ்ணபகவான் சொல்லத்தொடங்கினர். 'மிகுந்த முயற்சியுள்ளவர்களும் ருத்திரநாராயணரூபர்களுமான அவர்களுடையயுத்தத்தில் எல்லாஉலகங்களும் முழுமையும் அப்பொழுது விரைவில் வருத்தத்தையடைந்தன. அக்னியானவன் [1]யாகங்களில் சுத்தமும் நன்றாகஆஹுதிசெய்யப்பட்டதுமான ஹவிஸைக் கிரகிக்கவில்லை. ஆத்மபாவனையுள்ளரிஷிகளுக்கு வேதங்கள் தோன்றவில்லை. அப்பொழுது ரஜஸும் தமஸுமே தேவர்களையடைந்தன. பூமியானது மிகவுஞ்சலித்தது. ஆகாயம் பிளந்தது. (ஸூர்யன்முதலான) தேஜஸுகள் விளங்கவில்லை. பிரம்மாவும் ஆஸனத்திலிருந்து நழுவினார். கடலும் வற்றிற்று. இமயமலையும் சிதறிற்று. ஓ! பாண்டுபுத்திர! இவ்விதம் நிமித்தங்களுண்டானபொழுது பிரம்மாவானவர் தேவகணங்களாலும் மஹாத்மாக்களானரிஷிகளாலும் சூழப்பெற்று யுத்தம் நடக்கின்ற இடத்தை விரைவில் அடைந்தார். [2]வியவஹாரவிஷயத்தைஅடைந்தவரான அந்தநான்முகர் அஞ்சலியைச்செய்துகொண்டு ருத்ரரைநோக்கி, 'ஓ! விஸ்வேசரே! உலகங்களுக்கு மங்களமுண்டாகட்டும். உலகத்தினுடையநன்மையில் விருப்பத்தால் ஆயுதங்களை விட்டுவிடும். அக்ஷரமும் அவ்யக்தமும் நியந்தாவும் உலகத்தைப்படைப்பதும் சலனமற்றதும் கர்த்தாவும் த்வந்த்வமற்றதும் கர்த்தாவன்றென்று சொல்லப்படுவதும் வ்யக்தமாயிருக்குந்தன்மையைஅடைந்ததுமான ப்ரம்மத்தினுடைய சுபமானஓர்அம்சமானது தர்மருடையகுலத்தை வகிக்கிறவர்களும் தேவஸ்ரேஷ்டர்களும் பெரியதவத்தோடுகூடினவர்களும் பெரிய வ்ரதமுள்ளவர்களுமான நரநாராயணர்களாக அவதரித்திருக்கிறது. ஒருகாரணத்தினிமித்தம் நான் அவருடையஅருளால் உண்டானேன். ஐயா! ஸநாதனரான நீரும் முன்ஸ்ருஷ்டியில் அவருடையக்ரோதத்தில் உண்டானவர். ஓ! வரத்தையளிப்பவரே! என்னோடும் தேவர்களோடும் மஹரிஷிகளோடும் சீக்கிரமாக அவருக்கு அருள்வாச்செய்யும். உலகங்களுக்குச் சாந்தியானது உண்டாகட்டும். தாமஸிக்கவேண்டாம்' என்று சொன்னார். இவ்விதம் பிரம்மாவினால்சொல்லப்பட்ட ருத்ரர் கோபாக்னியைவிலக்கிவிட்டு உடனே தேவரும் பிரபுவுமான நாராயணரை அருளுள்ளவராகச்செய்தார்; ஆதியாயிருப்பவரும் வரிக்கத்தக்கவரும்

---

1 வேறுபாடம்.

2 'நிருக்தங்களால்மாத்திரம் அறியத்தக்கவரான' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

வரத்தையளிப்பவருமான ஹரியைச்சரணமாகவுமடைந்தார். அப்பொழுது உடனே வரத்தையளிப்பவரும் தேவரும் குரோதத்தைஜயித்தவரும் இந்திரியங்களைஜயித்தவருமான ஹரியானவர் அவ்விடத்தில் ருத்திரருடன் சேர்ந்து ப்ரீதியடைந்தவரானார். ரிஷிகளாலும் பிரம்மாவினாலும் தேவர்களாலும் மிகவும் பூஜிக்கப்பட்டு உலகத்திற்குப்பிரபுவான அந்தஹரியானவர் தேவரான ஈசானரைநோக்கி, 'எவன் உம்மை அறிகிறானோ அவன் என்னை அறிகிறான். எவன் உம்மை அனுஸரிக்கிறானோ அவன் என்னை அனுஸரிக்கிறான். நம்மிருவருக்கும் சிறிதும் பேதமில்லை. உமக்கு வேறுவிதமானபுத்தி உண்டாக வேண்டாம். இதுமுதல் எனக்குச் சூலத்தாலுண்டான இந்த அடையாளமானது ஸ்ரீவத்ஸமாகக்கடவது. என்னுடையகரத்தால் அடையாளம்செய்யப்பட்டநீரும் ஸ்ரீகண்டராவீர்' என்றுசொன்னார். அப்பொழுது இவ்விதம் ருத்ரரும் நாராயணரும் ஒருவருக்கொருவர் அடையாளத்தை உண்டுபண்ணிக்கொண்டார்கள். நரநாராயணரிஷிகள்சேர்ந்து ருத்ரருடன் நிகரற்றஸ்நேகத்தையும்செய்து தேவர்களை அனுப்பிவிட்டு ஜாகரூகர்களாகித் தவத்தைச் செய்தார்கள். ஓ! பார்த்தனே! இவ்விதம் யுத்தத்தில் நாராயணருடையஜயமானது உனக்குச் சொல்லப்பட்டது. ஓ! பாரத! ரகஸ்யமானநாமங்களும் விளக்கமாகச் சொல்லப்பட்டன. சொல்லப்பட்ட அவைகள் இவ்வுலகில் ரிஷிகளால் சொல்லப்பட்டவைகள். ஓ! குந்தீபுத்திரனே! இவ்விதம் நான் அநேக விதமானரூபங்களுடன் பூமியிலும் பிரம்மலோகத்திலும் அனாதியானகோலோகத்திலும் ஸஞ்சரிக்கின்றேன். என்னால் நீ யுத்தத்தில் ரக்ஷிக்கப்பெற்றுப் பெரியஜயத்தை அடைந்தாய். இப்பொழுது யுத்தம்நடக்கையில் உனக்குமுன்னேபோகின்றவரைத் தேவதேவரும் ஜடாதாரியுமானருத்திரராக அறி. குரோதத்திலுண்டானவையால் அவரே என்னால் உனக்குமுன்னே காலனாகச் செய்யப்பட்டார். முன் அவரால் கொல்லப்பட்டவர்களானசத்துருக்களை நீ கொன்றாய். அறிவரிதானபிரபாவமுடையவரும் தேவர்களுக்கெல்லாம்தேவரும் உமாபதியும் உலகங்களுக்கீசரும் பாவங்களை ஹரிப்பவரும் நாசமற்றவருமான அந்தத்தேவரை நீ பரிசுத்தனாகி வணங்கக்கடவாய். ஓ! தனஞ்சய! அவர் கோபத்தாலுண்டானவரென்று முன் பலமுறை உனக்குச் சொல்லியிருக்கிறேன். அவருடையபெருமையையும் நீ முன்னமே கேட்டிருக்கிறாய்' என்றுசொன்னார்" என்றார்.

---

## முந்நூற்றைம்பத்துமூன்றாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)

(நாரதர் ச்வேதத்வீபத்திலிருந்து திரும்பிப் பதரிகாச்ரமம்வந்ததும் அங்கு நரநாராயணருடன் ஸம்பாஷித்ததும்.)

சௌனகர், "ஓ! ஸௌதபுத்திரரே! எல்லாமுனிவர்களும் கேட்டு மிக்க ஆச்சரியத்தையடைந்த மிகப்பெரியகதையை நீர் விரிவாகச்சொன்னீர். ஓ! ஸௌதபுத்ரரே! எல்லா ஆச்ரமங்களின் அநுஷ்டானமும் எல்லாத்தீர்த்தங்களிலும் ஸ்நானமும் நாராயணருடைய கதையானது பயனளிப்பதுபோலப் பயனளிக்கிறதில்லை. நாராயணரைப்பற்றியதும் பரிசுத்தமும் எல்லாபாபங்களிலிருந்தும் விடுவிப்பதுமான இந்தக்கதையை ஆதிமுதல் கேட்டுப் பரிசுத்தமான அங்கங்களுடையவர்களானேனும். தேவரும் எல்லாஉலகங்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவருமானபகவான் பிரம்மாமுதலான எல்லாத்தேவர்களாலும் மற்றமஹரிஷிகளாலும் பார்க்கமுடியாதவர். ஓ! ஸௌதபுத்திரரே! (அப்படியிருக்க) நாரதரானவர் தேவரும் ஹரியுமானநாராயணரைப் பார்த்தாரென்பது அந்தத்தேவருடையஸம்மதத்தாலென்பது நிச்சயம். நாரதரானவர் அநிருத்தசரீரத்திலிருக்கிறஜகந்நாதரைப் பார்த்தாரென்பதற்கும் தேவர்களிற்சிறந்தவர்களான நரநாராயணர்களைப்பார்ப்பதற்குத் திரும்பச்சென்றாரென்பதற்கும் என்னகாரணம்? அதை எனக்குச்சொல்லும்" என்றுகேட்க, ஸௌதபுத்திரர் சொல்லத்தொடங்கினர்.

"ஓ! சௌனகரே! பரிக்ஷித்தின்குமாரரான ஜனமேஜயருடைய அந்தயாகம் நடந்துவரும்பொழுது விதிப்படிசெய்யப்பட்டகர்மாக்களுடையமத்யங்களில் அரசர்களில் சிறந்தவரானஜனமேஜயர் வேதங்களுக்குநிதியும் ஸமர்த்தரும் தமது பிதாமஹருக்குப்பிதாமஹரும் கிருஷ்ணத்வைபாயனரென்றுபெயருள்ளவருமான வ்யாஸமுனிவரை நோக்கி, 'சுவேதத்வீபத்திலிருந்தும் திரும்பினவரும் பகவானுடைய வாக்கியத்தைத்தியானம்செய்பவரும் தேவரிஷியுமானநாரதரால் இதற்குமேல் என்னசெய்யப்பட்டது? அவர் பதரிகாச்ரமம்வந்து அந்த முனிவர்களையும் அடைந்து எவ்வளவுகாலம் வசித்தார்? எந்தக் கதையைக்கேட்டார்? ஓ! தவங்களுக்குநிதியான பிராம்மணரே! லக்ஷக்கணக்குள்ள விரிவானபாரதமென்னும் இதிஹாஸத்திலிருந்தும் மிகவும்உத்தமமான ஞானமாகிறஸமுத்திரத்தைப் புத்தியாகிற

மத்தால் கடைந்து தயிரிலிருந்து வெண்ணெய்போலவும் மலயாசலத்திலிருந்து சந்தனம்போலவும் வேதங்களிலிருந்து உபநிஷத்துப்போலவும் ஒஷதிகளிலிருந்து அமிருதம்போலவும்எடுக்கப்பட்டதும் நாராயணருடைய சரித்திரத்தைப்பற்றியதுமான இந்தக்கதாமிருதமானது உம்மால் சொல்லப்பட்டது. பகவானும்தேவருமான அந்தஈசர் எல்லாப்பிராணிகளுக்கும் ஆத்மாவானவர். ஓ! பிராம்மணசிரேஷ்டரே! எதில் கல்பத்தின்முடிவில் பிரம்மாமுதலான எல்லாத்தேவர்களும் ரிஷிகளும் கந்தர்வர்களும் சராசரமான எல்லாஉலகமும் பிரவேசிக்கின்றனவோ அந்தநாராயணரூபமான தேஜஸானது பார்க்கமுடியாததாயுள்ளது. அதைக்காட்டிலும் இவ்விடத்திலும் ஸ்வர்க்கத்திலும் பரிசுத்தமும் மேலானதுமான வஸ்துஇல்லையென்று நினைக்கிறேன். எல்லா ஆஸ்ரமங்களின் அனுஷ்டானமும் எல்லாத்தீர்த்தங்களிலும் ஸ்நானமும் நாராயணருடைய கதைபோலப் பயனை அளிக்கிறதில்லை. எல்லாவற்றிற்கும் ஈஸ்வரரான ஹரியினுடையதும் இம்மையில் எல்லாப்பாவங்களையும் நாசம்செய்கின்றதுமான இந்தச்சரித்திரத்தை ஆதிமுதல்கேட்டு இப்பொழுது எல்லாவிதத்தாலும் பரிசுத்தர்களானோம். வாஸுதேவரை ஸஹாயமாகக்கொண்டு உத்தமமானஜயத்தை அடைந்தவரும் எனக்குப்பிரபிதாமஹருமானதனஞ்சயர் அந்தயுத்தத்தில் செய்தது ஆச்சரியமன்று. ஏனென்றால், மூவுலகங்களுக்கும் நாயகரானஅந்தவிஷ்ணுவானவர் ஸஹாயத்தைச்செய்கின்ற ஸகாவானமையால் இவருக்கு மூன்றுஉலகங்களிலும் அடையமுடியாதது ஒன்றுமில்லையென்று நினைக்கிறேன். ஓ! பிராம்மணரே! என்னுடைய முன்னோர்களுடைய நன்மைக்கும் ஸ்ரேயஸுக்கும் ஜனார்த்தனரே துணையாயிருந்தமையால் அவர்களே சிறந்தவர்கள். அவர்கள் உலகங்களால்பூஜிக்கப்பட்டவரும் தவத்தாலும் பார்க்கமுடியாதவரும் ஸ்ரீவத்ஸம்என்கிற மறுவை அடையாளமாகவுடையவருமான பகவானை நேரில்பார்த்தார்கள். ஜலத்தில்சயனித்தவரும் ஜனனமற்றவரும் வியாபகரும் தேவருமான ஹரியைப்பார்த்த பிரம்மபுத்திரரான அந்தநாரதர்அவர்களைக் காட்டிலும் மிகவும் சிறந்தவர். ஸ்வேதத்வீபம்சென்று ஹரியை நேரில் தரிசித்தவரும் நாசமற்றவருமான அந்தநாரதமுனிவரை அல்ப தேஜஸுடையவராக நான் நினைக்கவில்லை. அப்பொழுது அநிருத்த சரீரத்திலிருக்கிறதேவரை நாரதர் தரிசித்தது தேவருடையஅருளைப் பற்றியதென்பது வெளிப்படை. திரும்பவும் நாரதர் நரநாராயணர்களைப் பார்ப்பதற்குப் பதரிகாவனத்திலுள்ள ஆஸ்ரமத்தையடைந்தா

ரென்பது என்னகாரணம்? ஶ்வேதத்வீபத்திலிருந்து திரும்பினவரும் பிரம்மபுத்ரருமான நாரதர் பதரிகாஶ்ரமம்வந்து அந்தரிஷிகளையும டைந்து எவ்வளவுகாலம் வஸித்தார்? என்னகேள்விகளைக் கேட் டார்? பெரியமஹாத்மாவான அந்தமுனிவர் ஶ்வேதத்வீபத்திலிருந்து திரும்பிவந்தபோது மஹாத்மாக்களான நாநாராயணமுனிவர்கள் என்ன சொன்னார்கள்? அவற்றையெல்லாம் உள்ளபடி எனக்குச் சொல் லக்கடவீர்' என்றுகேட்டார். அப்பொழுது வ்யாஸர் அவருடைய அந் தவார்த்தையைக்கேட்டு ஸமீபத்திலிருக்கிற வைசம்பாயனரென் கிறசிஷ்யருக்கு, 'என்னிடமிருந்து நீ கேட்டஎல்லாவற்றையும் இவ னுக்குச்சொல்" என்று ஆஜ்ஞைசெய்தார். வேதியர்களில்சிறந்தவரான அவரும் குருவினுடைய வசனத்தைஅங்கீகரித்து அப்பொழுதே புராதனமானசரித்திரத்தையெல்லாம் (அவருக்குச்)சொல்லத்தொடங் கினர்.

"எவருடைய அனுக்ரஹத்தால் நாராயணருடையஇந்தக்கதை யைச் சொல்லப்போகிறேனோ பகவானும் அளவற்றதேஜஸுடைய வருமான அந்தவ்யாஸருக்கு நமஸ்காரம். ஓ! அரசரே! பெரிதான ஶ்வேதத்வீபத்தையடைந்து விகாரமற்றவரான ஹரியையும் பார்த்து விட்டுத் திரும்பினவரானநாரதர் பரமாத்மாவினல் சொல்லப்பட்ட அரியவிஷயத்தை மனத்தால்வஹித்துக்கொண்டு விரைவாக மேருவை யடைந்தார். ஓ! அரசரே! தூரமானவழிசென்று திரும்பவும் க்ஷேமத் துடன்கூடினவராக இவ்விடம்வந்தமையால் பிறகு இவருக்கு மனத தில் பெரிதானபயமுண்டாயிற்று. பிறகு மேருவிலிருந்தும் கந்தமா தனபர்வதத்தைக்குறித்துப் புறப்பட்டார். ஆகாயத்திலிருந்தும் வேக மாகப்பதரிகாவனத்தில் குதித்தார். பிறகு அவர் தேவர்களும் ஸநா தனர்களும் ரிஷிகளில்சிறந்தவர்களும் பெரிதானதவத்தை அனுஷ் டிக்கின்றவர்களும் ஆத்மநிஷ்டையுடையவர்களும் பெரியவிரதங்களை யுடையவர்களும் உலகங்களையெல்லாம்பிரகாசிக்கச்செய்கிற ஸூர்ய னைக்காட்டிலும் அதிகமானதேஜஸுள்ளவர்களும் ஸ்ரீவத்ஸமென் கிறமறுவையுடையவர்களும் பூஜிக்கத்தக்கவர்களும் ஜடாமண்டல தாரிகளும் ஹம்ஸம்போன்றரேகைகளுள்ள புஜங்களுடையவர்களும் பாதங்களில் சக்ரரேகை அடையாளமுடையவர்களும் விசாலமான மார்பையுடையவர்களும் நீண்டபுஜங்களுடையவர்களும் நான்குகைக ளுடையவர்களும் அறுபதுபற்களுடையவர்களும் எட்டுத்தெற்றுப் பற்களுடையவர்களும் மேகக்கூட்டத்திற்கு நிகரானஒலியுடையவர் களும் அழகானமுகமுடையவர்களும் விசாலமானநெற்றியுடையவர்

களும் அழகானபுருவமும் கபோலமும் நாஸிகையுமுடையவர்களு மான நரநாராயணர்களைக் கண்டார். அந்தத்தே
கள் குடைக்குறிகளாயிருந்தன. இவ்விதலக்ஷணமுள்ளவர்களும் மகா புருஷர்களென்றுபெயர்பெற்றவர்களுமான அவர்களை நாரதர்பார்த்துச் சந்தோஷமுடையவரானார். பிறகு அவர் 'அவர்களால் நன்றாகப் பூஜிக்கப்பட்டவரும், 'நல்வரவா' என்றுசொல்லி க்ஷேமம்விசாரிக் கப்பட்டவருமாகி அந்தப்புருஷஶ்ரேஷ்டர்களைப்பார்த்து, ' இந்தரிஷி ஶ்ரேஷ்டர்கள் ஶ்வேதத்வீபத்தில் என்னால் பார்க்கப்பட்டவர்களும் எல்லாப்பிராணிகளாலும்நமஸ்கரிக்கப்பட்டவர்களுமான ஸபையோர் களைப்போலவே இருக்கிறார்கள்' என்று உள்ளத்தில் நினைத்தார். இவ்விதம் அந்தநாரதர் மனத்தினால்சிந்தித்துப் பிரதக்ஷிணமும்செய்து அங்கு தர்ப்பத்தாலானதும் சுத்தமுமான பீடத்தில் உட்கார்ந்தார். பிறகு தவங்களுக்கும் தேஜஸ்ஸுகளுக்கும் யசஸ்ஸுகளுக்குமிருப்பிட மும் சாந்திதாந்திகளையுடையவர்களுமான அந்தரிஷிகள் முன் பகற் கடனைமுடித்துவிட்டுப் பிறகு ஸாவதானத்துடன் பாத்யத்தாலும் அர்க்கியத்தாலும் நாரதரைப் பூஜித்தார்கள். அரசரே! அதிதிபூஜை யையும் ஆன்னிகங்களையும்செய்து அவ்விருவர்களும் பீடங்களிலிருந் தார்கள். அவ்விடத்தில் (நாரதரும்நரநாராயணர்களுமாகிய) அவர்கள் உட்கார்ந்திருக்கையில் அந்தத்தேசமானது ஆஜ்யத்தின்ஆஹுதி யால் பெரியஜ்வாலையுடைய அக்கினிகளாலே யாகசாலைவிளங்குவது போல விளங்கிற்று. பிறகு அவ்விடத்தில் நாராயணரானவர் ஸுக மாகஉட்கார்ந்திருப்பவரும் ஶ்ரமம்நீங்கினவரும் அதிதிபூஜைசெய்யப் பெற்றவரும் ஸுகத்துடனிருப்பவருமான நாரதரைநோக்கி, 'இப் பொழுது உம்மாலே ஶ்வேதத்வீபத்தில் பகவானும் ஸநாதனரும் எங்களிருவருக்கும்பரமகாரணருமான அந்தப்பரமாத்மா காணப் பட்டாரா?' என்றுகேட்டார். நாரதர், 'என்னால் விஶ்வரூபத்தைத் தரிக்கிறவரும் விகாரமற்றவரும் ஸ்ரீமானுமானபுருஷர் பார்க்கப்பட் டார். எல்லாஉலகங்களும் ரிஷிகளும் தேவர்களும் அவரிடமிருக்கி றார்கள். ஸநாதனர்களானஉங்களைப்பார்த்து இப்பொழுதும் அவரைப் பார்க்கிறேன்.' அவ்யக்தமானரூபத்தைத்தரிக்கிற அந்தஹரியானவர் எந்தலக்ஷணங்களுடனிருக்கிறாரோ வ்யக்தரூபத்தைத்தரிக்கின்ற நீங் களும் அந்தலக்ஷணங்களுடனிருக்கிறீர்கள். நீங்கள் அவ்விடத்தில் என்னாலே அந்தத்தேவருக்குப் பக்கத்தில் பார்க்கப்பட்டீர்கள். இப் பொழுதுதான் பரமாத்மாவினால்அனுப்பப்பட்டு இங்கே வந்தேன். மூவுலகங்களிலும் தேஜஸினாலும் யசஸினாலும் ஸ்ரீயினாலும் தர்ம

ருடைய புத்ரர்களான உங்களைத்தவிர வேறுயார் அவருக்கொப்பா வார்? அவரால் எனக்குத் தர்மமுழுதும் சொல்லப்பட்டது. க்ஷேத்ர ஜ்ஞரென்றுபெயருடையவரும் சொல்லப்பட்டார். 'இவ்வுலகில் இனி உண்டாகப்போகின்றஅவதாரங்களும் சொல்லப்பட்டன. அவ்விடத் தில் வெளுப்புவர்ணமுடையவர்களும் ஐந்துஇந்திரியங்களுடைய செய்கையுமில்லாதவர்களும் ஞானிகளுமான புருஷர்களிருக்கின்றார் கள். அவர்களெல்லாரும் புருஷோத்தமரிடம் பக்தியுள்ளவர்கள். அவர்கள் எப்பொழுதும் தேவரைப் பூஜிக்கின்றனர். அவரும் அவர் களுடன்கூடி விளையாடுகிறார். பரமாத்மாவும் பிராம்மணர்களிடம் பிரியமுள்ளவருமானபகவான் பக்தர்களிடம் அன்புள்ளவரன்றோ? பாகவதர்களிடம்பிரியமுள்ளவரும் எல்லாவற்றையும் புஜிக்கிறவரும் எங்கும்நிறைந்தவரும் தேவரும் லக்ஷ்மிக்குப்பதியும் பக்தர்களிடமன் புள்ளவருமான அவர் எப்பொழுதும் பூஜிக்கப்பட்டு ஸந்தோஷிக்கின் றார். ஶ்வேதத்வீபத்திற்குமேற்பட்டவரும் தேஜஸென்றுமிகவும் கியாதிபெற்றவரும் ஸ்வப்பிரகாசததால்விளங்கும்படிசெய்யப்பட்டவ ரும் பெரிதானபுகழ்பெற்றவரும் மிகுந்தபலமும் காந்தியுமுடையவரு மான அந்தப்பரமாத்மாவே தவத்துடன் கர்த்தாவும் உபாதானகாரண மும் கார்யமும் நிமித்தமும் ஆஜ்ஞையைவிதிப்பவரும் தத்வமுமாக இருக்கிறார். ஆத்மத்தியானத்தையுடைய அவரால் மூன்றுஉலகங்க ளுக்கும் க்ஷேமமுண்டாயிற்று. சுபமான இந்தச்சாந்தபுத்தியினாலே அவர் ஆத்மநிஷ்டையுடன்கூடினவிரதத்தை அடைந்தார். தேவர்க ளுக்கீசரான பகவான் அனுஷ்டிக்கஅரிதானதவம் செய்கையில் அவ் விடத்தில் ஸூர்யன் வெப்பத்தைச் செய்கிறதில்லை. சந்திரன் விளங் குகிறதில்லை. வாயு வீசுகிறதில்லை. உலகங்களுக்குக் கர்த்தாவான அந் தத்தேவர் பூமியில் எட்டுஅங்குலஉயரமுள்ளவேதியிலிருந்து ஒருபா தத்தால்நிற்கிறவரும் மேலேதூக்கப்பட்டகைகளையுடையவரும் வடக் குமுகமானவரும் அங்கங்களோடுகூடியவேதங்களை ஆவிருத்திசெய்ப வருமாக அனுஷ்டிக்கமிகவும் அரிதானதவத்தைச் செய்தார். பிரம் மாவும் ரிஷிகளும் ஸாக்ஷாத்பசுபதியும் மற்றத்தேவஶ்ரேஷ்டர்களும் தைத்யர்களும் தானவர்களும் ராக்ஷஸர்களும் நாகர்களும் கருடர்க ளும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் ராஜரிஷிகளும் எப்பொழுதும் விதியுடன்கொடுக்கின்ற ஹவ்யகவ்யமனைத்தும் அந்தத்தேவருடைய சரணங்களை அடைகின்றன. ஏகாந்தத்தையடைந்த புத்தியுடையவர் களால் செய்யப்பட்ட கிரியைகளையெல்லாம் தேவரானவர் தாமே சிரஸால் ஏற்கிறார். அவருக்கு ஆத்மஞானமுடையவர்களான மகாத்

மாக்களைக்காட்டிலும் மிகவும்பிரியமாயிருப்பவன் மூன்று உலகங்களி லும் வேறில்லை. அதனால் அவருடையஏகாந்தமானஸம்பத்தையடை ந்து அந்தப்பரமாத்மாவால்விடப்பட்டு இப்பொழுது இங்கேவந்தேன். இவ்விதம் பகவானும் தேவருமானஹரியானவர் தாமே எனக்குச் சொன்னார். ஆகையால் அவரையே மேலாகக்கொண்டவனாகி உங்களு டன் எப்பொழுதும் இங்கேயிருப்பேன்' என்றுசொன்னார்.

---

## முந்நூற்றைம்பத்துநான்காவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)

(நரநாராயணர்கள் பகவானுடையமகிமையைச் சொல்லியதும் நாரதர் தவஞ்செய்ததும்.)

நரரும் நாராயணரும், 'பிரபுவானவர் உம்மால் நேரில்பார்க்கப் பட்டமையால் நீர் சிறந்தவர். அனுக்கிரகிக்கப்பட்டவருமாகிறீர். அவரை, பிரம்மாவாயிருந்தாலும் ஒருவரும் பார்த்தவரில்லை. அவ்யக் தத்திற்குக்காரணரும் புருஷோத்தமருமான பகவான் பார்ப்பதற் கரியவர். ஓ! நாரதரே! எங்களுடையஇந்தவார்த்தை ஸத்தியமா னது. இவருக்கு உலகத்தில் பக்தனைக்காட்டிலும் மிகவும்பிரியமா யுள்ளவன் ஒருவனுமில்லை. ஓ! பிராம்மணஸ்ரேஷ்டரே! ஆகையால் அவர் தாமாகவே தம்முடையஆத்மாவைக் காண்பித்தார். ஓ! பிராம் மணஸ்ரேஷ்டரே! தவத்தைச்செய்கிறவரான அந்தப்பரமாத்மாவி னுடையஸ்தானத்தை எங்களிருவரைத்தவிர ஒருவனும் அடைகிற தில்லை. அந்தஸ்தானத்துக்கு ஒன்றுசேர்ந்தஆயிரம்ஸூர்யர்களுக் குள்ள காந்தியானது விளங்குகின்றஅவரால் உண்டாகின்றது. ஓ! பொறுமையுடையவர்களிற்சிறந்தவரானவேதியரே! பிரம்மாவுக்கும் பதியாயிருக்கிறஅந்தத்தேவரிடமிருந்தும் பூமியினிடமுள்ளபொறு மையானது உண்டாகிறது. எல்லாப்பிராணிகளுக்கும்ஹிதரானஅந் தத்தேவரிடமிருந்தும் ரஸமானது உண்டாகிறது. அப்புக்கள் அந்த ரஸத்துடன் கூடுகின்றன; ஓடுந்தன்மையையுமடைகின்றன. அவரிட மிருந்துதானே ரூபமென்கிறகுணத்தைஸ்வரூபமாகவுடையதேயுவா னது உண்டாயிற்று. அந்தத்தேயுவுடன் ஸூர்யன் சேர்ந்து உலகத் தில் விளங்குகிறான். புருஷோத்தமரான அந்தத்தேவரிடமிருந்தும் ஸ்பரிசம் உண்டாயிற்று. அந்தஸ்பரிசத்துடன் வாயுவானதுசேர்ந்து

உலகங்களில் நன்றாக வீசுகிறது. எல்லாவுலகங்களுக்கும் ஈசுவரரும் பிரபுவுமான அவரிடமிருந்தும் சப்தமுமுண்டாயிற்று. அந்தச்சப்தத்துடன் ஆகாயம் சேர்ந்து மறைக்கப்படாததாயிருக்கிறது. அந்தத் தேவரிடமிருந்தும் எல்லாப்பிராணிகளிடமுமுள்ள மனமானது உண்டாயிற்று. சந்திரன் அதனுடன் பிரகாசிக்கிறான். வித்தையை ஸஹாயமாகவுடையவரும் ஹவ்யகவ்யங்களைப்புஜிப்பவருமான பகவானுடைய ஸ்தானமானது ஸத்தும் பிராணிகளின்உற்பத்திக்குக்காரணமும் வேதமென்றுபெயருள்ளதுமாயிருக்கிறது. ஓ! பிராம்மணசிரேஷ்டரே! உலகத்தில் களங்கமற்றவர்களும் புண்ணியபாபமற்றவர்களும் க்ஷேமகரமான மார்க்கத்தையடைகின்றவர்களுமானவர்களுக்கு இந்தஉலகத்தைத்தரிப்பவனும் ஜ்வாலைகளின்பரம்பரையோடுகூடினவனும் மிக்கதேஜஸையுடையவனும் எல்லாஉலகத்திலுமுள்ள இருளைப்போக்குகின்றவனுமான ஆதித்யன் துவாரமாகச் சொல்லப்படுகிறான். அவர்கள் ஆதித்யனால்தகிக்கப்பட்ட எல்லாஉறுப்புக்களையுமுடையவர்களும் ஒருவராலும் ஓரிடத்திலும்காணமுடியாதவர்களும் பரமாணுவாயிருப்பவர்களுமாகிப் பிறகு [1] அந்தத்தேவரை அடைகின்றார்கள். அவரிடமிருந்தும்விடுபட்டு அநிருத்தருடையசரீரத்திலிருக்கிறார்கள். பிறகு அதைவிட்டு மனமாகிப் பிரத்யும்னரை அடைகின்றார்கள். பிறகு வேதியர்களிற்சிறந்தவர்களான ஸாங்கியர்கள் பாகவதர்களுடன் பிரத்யும்னரிடமிருந்துவிடுபட்டு ஸங்கர்ஷணரென்கிற ஜீவனை அடைகின்றார்கள். அவரைவிட்டு அந்தப்பிராம்மணஸ்ரேஷ்டர்கள் (ஸத்வம்ரஜஸ்தமஸென்னும்) முக்குணங்கள்விட்டவர்களாகி க்ஷேத்ரஜ்ஞனும் நிர்க்குணமானஸ்வரூபமுடையவனுமான பரமாத்மாவைச் சீக்கிரம் அடைகின்றார்கள். எல்லாவற்றிற்குமிருப்பிடமான வாஸுதேவரை உள்ளபடி க்ஷேத்ரஜ்ஞராக அறியும். நிலைத்தமனமுள்ளவர்களும் நியமமுள்ளவர்களும் இந்திரியங்களை அடக்கினவர்களும் ஒரேவிதமானபாவனையை அடைந்தவர்களுமானஅவர்கள் வாஸுதேவரை அடைகின்றார்கள். ஓ! பிராம்மணஸ்ரேஷ்டரே! நாங்களும் தர்மருடையகிருகத்தில் பிறந்து ரமணீயமாயும் விசாலமாயுமிருக்கிறபதரிகையை அடைந்து உக்கிரமான தவத்தை மேற்கொண்டோம். ஓ! பிராம்மணரே! தேவர்களுக்குப் பிரியமும் மூன்றுஉலகங்களிலுமிருப்பவைகளுமாக உண்டாகும் அந்தத்தேவருடைய அவதாரங்களுக்கு க்ஷேமமுண்டாகவேண்டும். ஓ! பிராம்மணஸ்ரேஷ்டரே! தபோதனரே! திரும்பவும் முன்போலத் தங்கள் விதியோடுகூடினவர்களும்

[1] ஆதித்தியமண்டலவாஸியான நாராயணரை.

ஸ்ரேஷ்டமானஸர்வகிருச்சிரமென்கிற விரதத்தைநன்ருய்ச்செய்கிறவர்களுமானஎங்களாலும் உமக்குஉள்ளவிதியுடன்கூடினவரும், ஸர்வகிருச்சிரமென்கிறவிரதத்திலிருப்பவரும் பகவானுடன்சேர்ந்து ஸங்கற்பத்தைச்செய்தவருமானநீர் ஸ்வேதத்வீபத்தில் காணப்பட்டீர். ஸ்தாவரஜங்கமங்களுடன்கூடின மூன்றுலோகங்களிலும் நடந்ததும் நடக்கின்றதும் நடப்பதுமான சுபாசுபங்களெல்லாம் எங்களுக்கு நன்ருகத்தெரியும். ஓ! மகாமுனிவரே! தேவர்களுக்குத்தேவரான அவர் உமக்கு எல்லாவற்றையும் சொன்னார்" என்றுசொன்னார்கள். உக்கிரமானதவத்திலிருப்பவர்களான அவர்களுடையஇந்தவார்த்தையைக் கேட்டு நாராயணரைப்பரகதியாகவுடையவரானநாரதர் அஞ்சலிசெய்துகொண்டு நாராயணரைப்பற்றியபலமந்திரங்களை விதிப்படி ஜபித்தார். மிக்கதேஜஸுள்ளவரும் பகவானுமான அந்தநாரதரிஷி நரநாராயணர்களுடையஆஸ்ரமத்தில் தேவவருஷத்தில் ஆயிரம்வருஷம் தேவர்களான அந்தநரநாராயணர்களையே பூஜித்துக்கொண்டு வஸித்தார்.

---

## முந்நூற்றைம்பத்தைந்தாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

(நரநாராயணர் பித்ருகாரியம்மிகச்சிறந்ததென்று நாரதருக்குச் சொல்லியது.)

பிறகு ஒருஸமயத்தில் பிரம்மாவின்புத்திரரானநாரதர் நியர்யப்படி தெய்வகர்மத்தைச்செய்துவிட்டுப் பிறகு பித்ருகர்மாவைச்செய்தார். அப்பொழுது அவரைநோக்கித் தர்மரின்முதற்புத்திரரும் பிரபுவுமான நாராயணர், 'ஓ! பிராம்மணசிரேஷ்டரே! புத்திமான்களிற் சிறந்தவரே! உம்மால்செய்யப்பட்டதெய்வகர்மத்திலும் பித்ருகர்மத்திலும் எவர் ஆராதிக்கப்படுகிருர்? அதை எனக்கு உண்மையாகச் சொல்லும். இது என்னகர்மம் செய்யப்படுகிறது? இதற்கு என்ன பயன் விரும்பப்படுகிறது?' என்று வினவ, நாரதர் சொல்லலானார். 'முன் உம்மாலே தெய்வகர்மாவானது செய்யத்தக்கதென்றும் பரமாயும் ஆதியந்தமற்றவராயுமிருக்கிற பரமாத்மா தெய்வதமாக அறியத்தக்கவரென்றும் சொல்லப்பட்டது. ஆகையால் [1] அவரையே பாவனை செய்துகொண்டு விகாரமற்றவரானநாராயணரை எந்நாளும் பூஜிக்கி

[1] 'அந்தவார்த்தையையே பாவித்துகொண்டு' என்றுமாம்.

கிறேன். அவரிடமிருந்து முந்தி உலகங்களுக்குப்பிதாமஹரானபிரம்மா உண்டானார். பிரம்மாவும் பிரீதியடைந்து என்னுடையபிதாவை உண்டுபண்ணினார். நான் அவருடையஸங்கற்பத்தினாலுண்டானவனும் முன்னதாகஉண்டுபண்ணப்பட்டவனுமான புத்திரன். ஓ! ஸாதுவே! நாராயணருடைய பூஜையைச்செய்தபிறகு நான் பித்ருக்களை ஆராதிக்கிறேன். இவ்விதம் பிதாவும் மாதாவும் பிதாமஹரும் உலகங்களுக்குப்பதியுமாயிருக்கிற அந்தப்பகவானே நித்யம் பித்ருயஜ்ஞங்களில் என்னால் பூஜிக்கப்படுகிறார். 'தேவர்களானபித்ருக்கள் புத்திரர்களைப் பூஜித்தார்கள்' என்றுமேவறுவிதமான சுருதியுமிருக்கிறது. (அக்னிஷ்வாத்தர்கள் என்கிறபுத்திரர்களுக்கு வேதாத்தியயனம்செய்வித்துவிட்டு அஸுரர்களுடன் யுத்தத்திற்குப்போனதேவர்களுக்கு) வேதசுருதியானது நஷ்டமாகிவிட்டது. திரும்பவும் அவர்கள் புத்திரர்களாலே அத்தியயனம்செய்விக்கப்பட்டார்கள். ஆகையால் மந்திரங்களைக்கொடுத்தஅந்தப்புத்திரர்கள் [1]பிதாவாயிருக்கும் தன்மையை அடைந்தார்கள். புத்திரர்களும் பிதிருக்களும் ஒருவரையொருவர் பூஜித்தார்களென்பது ஆத்மபாவனையுள்ள உங்களுக்குத் தேவர்களால் தெரிந்திருக்கும்; நிச்சயம். தர்ப்பங்களைப்போட்டுப் பிதிருக்களுக்குரியமூன்றுபிண்டங்களைவைத்துப் பூஜிக்கிறார்களே. முன்காலத்தில் அந்தப்பிதிருக்கள் எப்படி பிண்டமென்கிறபெயரை அடைந்தார்கள்?' என்றுகேட்டார். நரநாராயணர்கள் சொல்லத்தொடங்கினார்கள். 'முன்காலத்தில் ஸமுத்திரத்தைஆடையாகவுடையதும் நஷ்டமானதுமான இந்தப்பூமியைக் கோவிந்தரானவர் வராகரூபத்தைஅடைந்து சீக்கிரமாக உத்தாரணம்செய்தார். ஓ! நாரதரே! பிரபுவானபுருஷோத்தமர் பூமியைத் தன்நிலையில் ஸ்தாபனம்செய்துவிட்டுப் பிறகு ஜலத்தினுள்ளு சேற்றினால்பூசப்பட்ட அங்கங்களையுடையவரும் உலககாரியத்தின்பொருட்டு முயற்சித்தவருமாகி ஸூர்யன்உச்சியையடைந்துஆந்நிககாலம்வந்தவுடன் தெற்றுப்பற்களில்பற்றிக்கொண்ட மூன்றுமண்கட்டிகளைச் சீக்கிரமாகஉதறிப் பூமியில் தர்ப்பங்களை விரித்து ஸ்தாபனம்செய்தார். அவர் அந்தப்பிண்டங்களில் தம்மைஉத்தேசித்து விதிப்படி பிதிருகர்மாவைச் செய்தார். தேவர்களுக்கீசரான பிரபுவானவர் தம்முடையவிதியினாலேயே மூன்றுபிண்டங்களை ஸங்கல்பித்துத் தம்முடைய அங்கங்களின்உஷ்ணத்தாலுண்டானவைகளும் உள்ளே எண்ணெயுள்ளவைகளுமான திலங்களை அபஸவ்யமாக இறைத்துத் தாமே கிழக்குமுகமாயிருந்து பிண்டத்தியாகத்தைச்செ

1 வேறுபாடம்.

ய்தார்; பிறகு மரியாதைஸ்தாபனம்செய்வதற்காக ஒருவார்த்தை யையும் சொன்னார். விருஷாகபியென்கிறபகவான், 'உலகங்களைச்செய்த நானே பிதிருக்களைச்சிருஷ்டிக்க யத்தனித்தேன். உடனே பிதிருக்க ளுடைய சிறந்தகார்யங்களின் ஏற்பாடுகளைச்சிந்திக்கிறவனான என்னு டைய கோரப்பற்களிலிருந்தும் நன்றாகஉதிர்ப்பட்ட இந்தப்பிண்டங் கள் (எனக்குத்)தென்திக்கில் பூமியைப்பிடித்துக்கொண்டு அடைந் தன. ஆகையால் அவைகள் பித்ருக்களே. இந்த மூன்றும் சரீர மில்லாதவர்களும் பிண்டமூர்த்திகளைத் தரிக்கிறவர்களும் உலகத் தில்என்னால்ஸ்ருஷ்டிக்கப்பட்டவர்களும் ஸநாதநர்களுமான பிதா, பிதாமஹர், பிரபிதாமஹரென்கிற பிதிருக்களாகட்டும். நானே இந்த மூன்றுபிண்டங்களிலுமிருக்கிறவனாக அறியத்தக்கவன். என்னைக் காட்டிலும்அதிகனாயிருப்பவன் ஒருவனுமில்லை. வேறுஎவன் என் னால் பூஜிக்கத்தக்கவனாவான்? உலகத்தில் நானே பிதா; நானே பிதா மஹன். காரணமானநானே இவ்வுலகத்தில் பிதாமஹருக்குப்பிதாவு மாயுள்ளவன்' என்றார். இவ்விதம் இந்தவார்த்தையைத் தேவர் களுக்குத்தேவரானவிருஷாகபியானவர் சொல்லிவிட்டு வாராஹபர் வதத்தில் விஸ்தாரமானபிண்டங்களைவைத்து ஆத்மாவைப்பூஜித்து விட்டு அவ்விடத்திலே மறைந்தார். வேதியரே! சோபனமான புத்தியுடையவரே! இந்தநிமித்தமாகப் பிதிருக்கள் பிண்டமென்கிற பெயரைஅடைந்து விருஷாகபியின்வசனப்படி எப்பொழுதும் பூஜை யைப் பெறுகின்றார்கள். எவர்கள் பித்ருக்களையும் தேவர்களையும் குருக்களையும் அதிதிகளையும் கோக்களையும் பிராம்மணசிரேஷ்டர் களையும் மாதாவையும் பிதாவையும் மனத்தினாலும் செய்கையினாலும் வாக்கினாலும் பூஜிக்கின்றார்களோ அவர்கள் விஷ்ணுவையே பூஜிக் கிறார்கள். அந்தப் பகவானானநாராயணர் எல்லாப்பிராணிகளுடைய சரீரங்களையுமடைந்தவரும் உள்ளத்திற்சென்றவரும் எல்லாப்பிராணி களிடத்திலும் ஸமமானவரும் ஸுகதுக்கங்களுக்கீஸ்வரரும் பூஜிக் கப்படுகிறவரும் மஹாத்மாவும் எல்லாஸ்வரூபருமாயிருப்பவரென்று வேதம் சொல்லுகிறது' என்றுசொன்னார்கள்.

---

## முந்நூற்றைம்பத்தாறுவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)



(நாரதர் தமதாச்ரமம் சென்றதும் வைசம்பாயனர் பகவானுடைய மகிமையைச் சொல்லியதும்.)

நாரதரானவர் நரநாராயணர்களால்சொல்லப்பட்ட இந்தவார்த்தையைக்கேட்டுத் தேவரிடத்தில்மிகவும்பக்தியடைந்து ஏகாந்தியாயிருக்குந்தன்மையையடைந்தார்; நரநாராயணர்களுடைய ஆச்ரமத்தில் ஆயிரம்வருஷம்வஸித்துப் பகவானுடையசரித்திரத்தைக்கேட்டு விகாரமற்றவரான ஹரியையுந்தரிசித்து இமயமலையின் நடுவில் தேவர்களால்பூஜிக்கப்பட்ட தமதாச்ரமத்தை அடைந்தார். பிரஸித்தமான கீர்த்தியுடைய நரநாராயணர்களென்கிற அந்தரிஷிகளும் அழகான அந்த ஆச்ரமத்திலேயே உத்தமமான தவத்தைச் செய்துகொண்டிருந்தார்கள். அளவற்றபராக்ரமமுடையவரும் பாண்டவர்களுடையகுலத்தைத்தாங்குகிறவருமானநீரும் இப்பொழுது ஆதிமுதல் இந்தக்கதையைக்கேட்டுப் பரிசுத்தமான ஆத்மாவையுடையவரானீர். ஓ! ராஜச்ரேஷ்டரே! எவன் கர்மத்தினாலோ மனத்தினாலோ வாக்கினாலோ அழிவற்றவரானவிஷ்ணுவைப் பகைப்பானோ அவனுக்கு இவ்வுலகமும் பரலோகமும் இல்லையேயில்லை. எவன் தேவர்களிற்சிறந்தவரும் தேவரும் (பாபங்களை) ஹரிப்பவருமானநாராயணரைத் த்வேஷிப்பானோ அவனுடையபிதிருக்கள் அளவற்றவருஷங்கள் நரகத்தில் முழுகுகின்றார்கள். ஆத்மாவானது எந்தஜனத்திற்குத்தான் எப்படி த்வேஷிக்கத்தக்கதாகும். ஓ! புருஷச்ரேஷ்டரே! 'விஷ்ணுவானவர் ஆத்மாவாக அறியத்தக்கவர்' என்று சுருதி மொழிகின்றதன்றோ? ஐயா! கந்தவதியின்புத்திரரும் எங்கள்குருவுமான ரிஷியானவர் பரமாத்மாவினுடைய இந்தமகிமையைச்சொல்லினர். ஓ! களங்கமற்றவரே!, இதை அவரிடமிருந்து நான்கேட்டேன். உமக்கும் சொன்னேன். ஓ! அரசரே! நாரதரோ ரகஸ்யமானதும் சுருக்கமுள்ளதுமான இந்தத்தர்மத்தை ஜகத்துக்குநாதரான நாராயணரிடமிருந்தும் நேரில் அடைந்தார். ஓ! ராஜச்ரேஷ்டரே! இப்படிப்பட்ட மகத்தான இந்தத்தர்மமானது முன் உமக்கு ஹரிகீதைகளில் சுருக்கமானவிதியினால் இவ்விதம் அமைத்துச் சொல்லப்பட்டது. கிருஷ்ணத்வைபாயனரான வ்யாஸரைப் பிரபுவானநாராயணராக அறியக்கடவீர். புண்டரீகாக்ஷரைத் தவிர வேறுஎவன் மகாபாரதத்தைச் செய்கிறவனாவான். பிரபுவான

அந்தநாராயணரைத்தவிரப் பலவிதமான தர்மங்களையும் எவன் சொல்லுவான். உம்மால் எப்படிசெய்யவேண்டுமென்று நினைக்கப்பட்டதோ அப்படி உம்முடைய மஹாயாகமானது நடக்கட்டும். அச்வமேதத்தைத்தொடங்கியநீர் உண்மையாகத் தர்மத்தைக்கேட்டுவிட்டீர்" என்று சொன்னார். பெரிதான இந்தச்சரித்திரத்தைக்கேட்டுப் பரிக்ஷித்தின் புத்திரரான ஜனமேஜயமகாராஜர் உடனே யாகத்தை முடிப்பதற்கு எல்லாக்கர்மங்களையும் ஆரம்பித்தார். ஓ! சௌனகரே! இவ்விடத்தில் நைமிசாரண்யவாஸிகளின் இடையில் கேட்கப்பட்ட நான் இப்பொழுது நாராயணீயமென்கிற இந்தச்சரித்திரத்தை உமக்குச் சொன்னேன். முன்காலத்தில் நாரதரால் ரிஷிகளும் பாண்டவர்களும் கிருஷ்ணனும் பீஷ்மரும் கேட்டுக்கொண்டிருக்கையில் பிருஹஸ்பதிக்குச் சொல்லப்பட்டவரும் பரமரிஷியும் ஜனங்களுக்கும் உலகங்களுக்கும்பதியும் பெரியபூமியைவகிப்பவரும் வேதத்தையும் விநயத்தையும் முக்கியமாகக்கொண்டவரும் சமம்விரதமிவைகளுக்குநிதியும் யமநியமங்களைப்பரமாகக்கொண்டவரும் பிராம்மண சிரேஷ்டர்களுடன்கூடினவரும் தேவர்களுக்குஹிதருமான அந்த ஹரியே உமக்குக் கதியாவார். அஸுரர்களுடையவதத்தைச்செய்கிறவரும் தவங்களுக்கிருப்பிடமும் மிகப்பெரியகீர்த்திகளுக்குப் பாத்திரமும் ஏகாந்திகளுக்கு மோக்ஷத்தைக்கொடுப்பவரும் சரணத்தைக்கொடுப்பவரும் அபயத்தைக்கொடுப்பவரும் ஸுகங்களுடைய பாகத்தைக்கொடுப்பவருமான ஹரியானவர் உங்களுக்குக் கதியைக் கொடுக்கிறவராகட்டும். மதுகைடபர்களைக்கொன்றவரும் கிருதயுக தர்மத்தைஅறிந்து (அனுஷ்டிப்ப)வர்களுக்குக் கதியைக்கொடுப்பவரும் அபயத்தைக்கொடுப்பவரும் யாகத்தில்பாகத்தைக்கிரகிப்பவருமானஅவர் உமக்குச் சரணமாகட்டும். (ஸத்வமுதலான) முக்குணங்களையுடையவரும் (உண்மையில்) நிர்க்குணரும் (வாஸுதேவர்முதலான) நான்குஸ்வரூபங்களைத் தரிப்பவரும் (குளம்வெட்டுதல்முதலான) பூர்த்தம்யாகமிவைகளுடையபயன்களின் பாகத்தை [1]அளிப்பவரும் எப்பொழுதும்ஜயிக்கப்படாதவரும் சலிக்கின்றவைகளை அதிக்கிரமித்தவருமானபகவான் மனஸ்விகளும் புண்ணியசாலிகளுமான ரிஷிகளுக்குக் கதியைச் செய்யட்டும். [2]ஜலத்திலுள்ளவரான நாராயணரும் அந்தரிக்ஷியான வாஸுதேவரிவர்களின்னமையால் உலகங்

1 'ஹரர்' என்பது மூலம்; 'கொள்பவர்' என்றும் கொள்ளலாம்.

2 'ஸலிலோத்பவ' என்பது மூலம்; அநிருத்தமூர்த்தி; சதுர்முகப்ரம்மா என்பர் சிலர்.

களுக்குஸாக்ஷியும் ஜனனமற்றவரும் [1]அனாதியானபுருஷரும் ஸூர்யன்போன்றநிறமுடையவரும் ஈஶ்வரரும் அநேகவிதமானகதியுமான அந்தவாஸுதேவரை ஒரேபுத்தியுடன் நமஸ்கரியுங்கள். அவரோ, உலகங்களுக்குக்காரணம்; மோக்ஷத்திற்குஸ்தானம் ஓ! உதாரரே! ஸூக்ஷ்மமும் பரமானஸ்தானமும் சலியாதஸ்தானமும் ஸநாதனமுமான அப்படிப்பட்ட இந்தவாஸுதேவரென்கிறப்ரம்மமானது புத்தியால் மனத்தை அடக்கி ஸாங்கியர்களாலும் யோகிகளாலும் வரிக்கப்பட்டது" என்றுசொன்னார்.



## முந்நூற்றைம்பத்தேழாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)

(நாராயணர் ப்ரம்மாவைப் படைத்ததும் மதுகைடபர்களைக் கொன்று வேதத்தை மீட்டதும்.)

சௌனகர், "பகவானான அந்தப்பரமாத்மாவினுடையமாகாத்மியத்தையும் தர்மருடையகிருகத்தில் நரநாராயணஸ்வரூபமானஜன்மத்தையும் மகாவராஹத்தால்ஸ்ருஷ்டிக்கப்பட்ட பிண்டங்களின் பழமையானஉற்பத்தியையும் கேட்டோம். ஓ! களங்கமற்றபிராம்மணரே! பிரவிருத்தியிலும் நிவிருத்தியிலும் யார் எப்படி கல்பிக்கப்பட்டாரென்பதையும் நாங்கள் கேட்டோம். ஈசானதிக்கில் பெரிய கடலில் ஹவ்யகவ்யங்களைப்புஜிக்கிறவரான விஷ்ணுவையும் கேட்டோம். முன் நீர் பெரிய [2]அசுவத்தின்சிரமுடையரூபத்தையும் அது பரமமானஸ்தானத்திலிருப்பவரும் பகவானுமானபிம்மாவினால் பார்க்கப்பட்டதையும் சொன்னீர். ஓ! புத்திமான்களில்சிறந்தவரே! உலகங்களைத் தரிக்கிறவரான ஹரியினாலே மகான்களாலும்முன்பார்க்கப்படாததும் பிரபாவமுடையதுமான அந்தரூபமானது ஏன் உண்டு பண்ணப்பட்டது? ஓ! முனிவரே! தேவர்களில்ஶ்ரேஷ்டரும் ஆச்சரியகரரும் அளவற்றபராக்கிரமமுடையவரும் பரிசுத்தருமான அந்த ஹயக்ரீவரைப் பிரம்மாவானவர் பார்த்து என்னசெய்தார்? ஓ! உத்தமமானபுத்தியுடையவரே! எங்களுடையஇந்தஸம்சயத்தை (நிவிருத்திசெய்யும்.) ப்ரம்மத்தினிடமிருந்துண்டானதும் மஹாபுருஷனைப்பற்றியதுமானபுராணத்தைச் சொல்லும். ஓ! பிராம்மணரே! உம்மால் நாங்கள் பரிசுத்தம்செய்யப்பட்டோம். பரிசுத்தமானஅந்

---

1 வேறுபாடம். 2 ஹயக்ரீவரானவர்.

தக்கதைகளைச் சொல்லும்'' என்று கேட்க, ஸூதபுத்திரர் சொல்லத்தொடங்கினர். "ஓ! (சௌனகரே!) பரிக்ஷித்தின் புத்திரரான ஜனமேஜயமகாராஜருக்குப் பகவானான வ்யாஸர் (வைசம்பாயனர் மூலமாய்ச்) சொல்லியதும் வேதத்திற்கு நிகரானதுமான அந்த எல்லாப் புராணத்தையும் உமக்குச் சொல்லுவேன். ஜனமேஜயராஜர் அசுவத்தின் சிரத்தையுடையவரும் தேவருமான ஹரிமேதஸினுடைய மூர்த்தியைக் கேட்டுச் சந்தேகமுற்று வைசம்பாயனரை நோக்கி, "பிரம்மாவால் பார்க்கப்பட்ட அசுவத்தின் சிரத்தைத்தரிக்கின்ற தேவருடைய அந்தச்சரீரமானது எதற்காகத் தேவரால் கல்பிக்கப்பட்டதாயிற்று?" என்கிற இதைக் கேட்டார். வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர். "ஓ! அரசரே! இந்தஉலகத்தில் தேஹபந்தத்துடன் கூடியன எல்லாம் ஈச்வரருடைய இச்சையாலுண்டான ஐந்து பூதங்களாலும் வியாபிக்கப்பட்டிருக்கின்றன. ஈச்வரரோ உலகங்களைப்படைப்பவரும் பிரபுவும் விராட்டும் பிராணிகளுக்கு அந்தராத்மாவும் வரங்களையளிப்பவரும் ஸகுணரும் நிர்க்குணருமான நாராயணர். ஓ! ராஜச்ரேஷ்டரே! வ்யக்தமானபூதங்களின் ப்ரளயத்தைக் கேளும். முன்காலத்தில் ஒன்றாயிருக்கிறஸமுத்திரஜலத்தில் பிருதிவியானது லயத்தையடைந்தபிறகு ஜலமும் தேயுவாகித் தேயுவும் வாயுவில் லயித்து வாயுவும் ஆகாயத்திலொடுங்கி ஆகாயமும்மனத்தையடைந்து மனமும்மஹத்தத்வத்திலொடுங்கி மஹத்தத்வமும் பிரகிருதியில்அடங்கிப் பிரகிருதியும் புருஷனை அடைந்து புருஷனும் எங்கும் வியாபித்தவனாயிருக்க எல்லாம்தமஸாகவே ஆயிற்று. ஒன்றும் [1] இயுங்கவில்லை. தமஸிலிருந்தும் (காரணமான) ப்ரம்மமுண்டாயிற்று. தமஸை மூலமாகவுடையதும் ஸத்யமானஸ்வரூபத்தையுடையதும் (ஸகலப்ரபஞ்சமுமாயிருக்கிற) எல்லாநாமரூபங்களையும் முடிவாகக்கொண்டதுமான அந்த அதிஷ்டானமானது புருஷரூபமானசரீரத்தை அடைந்தது. (புருஷரூபமான்சரீரத்தையடைந்த) அவர் அநிருத்தரென்று சொல்லப்பட்டார். அவரைப் பிரதானமாகச் சொல்லுகிறார்கள். ஓ! ராஜச்ரேஷ்டரே! அந்தப்பிரதானத்தை (ஸத்வமுதலான) முக்குணங்களையுடைய அவ்யக்தமென்று அறியவேண்டும். பிரபுவான ஹரியானவர் வித்தையைஸஹாயமாகக்கொண்டு தேவஸேனாவிஷ்வக்ஸேனராயிருக்கிறார். பிராணிகளுக்குஆதிகர்த்தாவும் பிரபுவும் அறியமுடியாதவருமான அந்த ஹரியானவர் நித்திரையின்ஸ்வரூபமான யோகத்தை அடைந்து பலகுணங்களினின்றுமுண்டாகும் பலவிதமான உலகத்

[1] 'பகுத்தறிவு இல்லையாயிற்று' என்பது பழையவுரை.

தின்ஸ்ருஷ்டியை நினைத்து ஜலத்திலே சயனம்செய்துகொண்டார். ஸ்ருஷ்டியைச்சிந்திக்கிறஅவர் மஹத்தான ஆத்மகுணத்தை நினைத் தார். அதிலிருந்தும் அஹங்காரமுண்டாயிற்று. அப்பொழுது அழ கான நான்குமுகங்களையுடையவரும் [1]ஹிரண்யகர்ப்பரும் எல்லா உல கங்களுக்கும் பிதாமஹரும் தாமரைப்பூக்கள்போன்ற கண்களுள்ள வரும் பகவானுமான பிரம்மாவானவர் (அகங்காரரூபமான) அநி ருத்தரிடமிருந்தும் (நாபி) கமலத்திலுண்டானார். பிறகு காந்தி மானும் ஸநாதநரும் ஆச்சரியமானவரும் ஸத்குணமுள்ளவரும் மேலானஸ்தானத்திலிருப்பவரும் பிரபுவுமான அவர் உலகங்களைப் பூர்ணம்செய்யப் பிராணிகளின் கூட்டங்களைப் படைத்துக்கொண்டு ஆயிரம்தழ்களையுடைய தாமரைப்புஷ்பத்திலிருப்பவராகக் காணப் பட்டார். முன்னமே ஸூர்யகிரணத்திற்குநிகரானபத்மத்தின்தளத் தில் நாராயணரால்செய்யப்பட்டவைகளும் சிறந்தகுணமுடையவை களுமான இரண்டுஜலத்திவலைகளிருந்தன. பகவானும் ஆதியந்த மற்றவருமான் அச்சுதரானவர் அவைகளைப்பார்த்தார். அவைகளில் ஒரு பிந்துவானது தேன்நிறமுடையதும் அழகானகாந்தியுடையது மாயிற்று. அப்பொழுது அது நாராயணருடைய ஆஜ்ஞையினால் தமோகுணம்நிறைந்த மதுவென்கிறஅஸுரனாயிற்று. கடினமான மற்றப்பிந்துவானது கைடபனாயிற்று. அவன் ரஜோகுணம் நிறைந் தவன். ஶ்ரேஷ்டர்களும் தமோகுணரஜோகுணங்களையுடையவர் களும் பலவான்களுமான அவர்கள் கதாயுதபாணிகளாகிப் பத்மத்தின் தண்டையநுஸரித்து ஓடினார்கள். அவர்கள் தாமரைமலரிலிருக்கிற வரும் அளவற்றகாந்தியுடையவரும் முதலில்அழகானஉருவமுள்ள நான்குவேதங்களையும் [2]ஸ்ருஷ்டிக்கிறவருமான பிரம்மாவைக் கண்டா ர்கள். பிறகு அஸுரஶ்ரேஷ்டர்கள் சரீரத்தோடுகூடிய அந்தவேதங் களைப்பார்த்து உடனே ப்ரம்மாபார்த்துக்கொண்டிருக்கையில் சீக்கிர மாக வேதங்களைக் கவர்ந்துகொண்டார்கள். பிறகு அஸுரஶ்ரேஷ் டர்களான அவர்கள் ஸநாதனமானவேதங்களைக் கவர்ந்துகொண்டு விரைவாக ஈசானதிக்கில் சமுத்திரத்தின்வழியாகப் பாதாளத்தை அடைந்தார்கள். பிறகு வேதங்கள் அபகரிக்கப்பட்டபொழுது பிரம்மா வானவர் துக்கத்தையடைந்தார். பிறகு வேதமிழந்தவரானபிரம்மா ஈசானரான நாராயணரைநோக்கி, 'வேதங்கள் எனக்குச் சிறந்தநேத் திரம். வேதங்கள் எனக்குச்சிறந்தபலம். வேதங்கள் எனக்கு மேலான ஸ்தானம். வேதங்கள் எனக்கு ஶ்ரேஷ்டமானப்ரம்மம். என்னுடைய

1 ஸுவர்ணத்தை உதரத்திலுடையவர். 2 வெளியிடுபவர்.

வேதங்களெல்லாம் அஸுரர்களால் இங்கிருந்தும் பலாத்காரமாக அபகரிக்கப்பட்டன. என்னுடையஉலகங்கள் வேதமில்லாமல் செய்யப்பட்டு இருளடைந்தவைகளாயிருக்கின்றன. வேதங்களில்லாமல் நான் எப்படி உலகங்களுடைய உத்தமமானஸ்ருஷ்டியைச் செய்வேன். ஆ! கஷ்டம். என்னுடைய வேதங்களின்நாசத்தாலுண்டானதும் பெரிதும் கடுமையானதும் சோகத்திற்குச் சிறந்தகாரணமுமான துக்கமானது உண்டாகி மனத்தை வருத்துகிறது. சோகஸாகரத்தில்முழுகினவனான என்னை இதினின்றும் இப்போது யார் கரை யேற்றுவார்? யார் நஷ்டமான அந்தவேதங்களைக் கொண்டுவருவார்? யாருக்கு என்னிடம் பிரியமுண்டாகும்?' என்றவார்த்தையைச் சொன்னார். ஓ! புத்திமான்களிற்சிறந்தவரான ராஜஸ்ரேஷ்டரே! இவ்விதம் சொல்லுகிறவரானபிரம்மா ஹரியினுடைய ஸ்தோத்திரத்தைச் செய்யநினைத்தார். பிறகு பிரபுவானப்ரம்மதேவர் அஞ்சலி பந்தத்தோடு பரமானஸ்தோத்திரத்தைச் சொல்லினர். 'ப்ரணவரூபமாயிருப்பவரே! வேதங்களின் அபிப்பிராயத்திற்கு விஷயமாயிருப்பவரே! உமக்கு நமஸ்காரம். எனக்குமுன்னிருப்பவரே! உமக்கு நமஸ்காரம். உலகங்களுக்குஆதியிலிருப்பவரே! உலகங்களிற்சிறந்தவரே! ஸாங்கியயோகங்களுக்கு நிதியாயிருப்பவரே! ஓ! பிரபுவே! ஸ்தூலஸூக்ஷ்மங்கள்யாவற்றையும்செய்தவரே! சிந்திக்கமுடியாதவரே! க்ஷேமமான மார்க்கத்தையடைந்தவரே! எல்லாவற்றையும்புஜிக்கிறவரே! எல்லாப்பிராணிகளுக்கும் அந்தராத்மாவே! கருவில் ஜனியாதவரே! நான் உலகங்களுக்கு [1]ஸ்தானமும் தாமேஉண்டானவருமானஉம்முடைய அருளினுண்டானவன். எனக்கு உம்மிடமிருந்து பிராம்மணர்களால்பூஜிக்கப்பட்ட மானஸமென்கிற முதல்ஜன்மம் உண்டாயிற்று. (பிறகு) எனக்குச் சாக்ஷுஷமென்கிற புராதனமான இரண்டாவதுஜன்மம்உண்டாயிற்று. உம்முடைய அருளாலே எனக்கு வாசிகமென்கிற பெரிதான மூன்றாவதுஜன்மமுண்டாயிற்று. ஓ! பிரபுவே! உம்மிடமிருந்து எனக்கு ஸ்ரோத்ரஜமென்கிற நான்காவதுஜன்மமுண்டாயிற்று உம்மிடமிருந்து எனக்கு [2]நாஸத்யமென்கிற ஐந்தாவதுஜன்மம் சொல்லப்படுகிறது. உம்மிடமிருந்தும் எனக்கு அண்டஜமென்கிற ஆறாவதுஜன்மமும் ஏற்பட்டது. ஓ! பிரபுவே! இதுவோ பத்மஜன்மமென்கிற ஏழாவதுஜன்மம். ஓ! மூன்றுகுணங்களுமில்லாதவரே! ஸ்ருஷ்டிதோறும் முதன்மையானவனும் தாமரைப்

---

[1] 'உலகங்களுக்குப் பிரகாசத்தைச்செய்கிறவர்' என்பது பழையவுரை.
[2] நாஸிகையிலுண்டானது.

புஷ்பங்கள்போன்ற கண்களுடையவனும் பிரதானத்தின்குணத்தால் கல்பிக்கப்பட்டவனுமானநான் உம்முடையபுத்திரன். நன்குபடைப் பவரே! நீர் ஈஸ்வரரும் பிராணிகளுடைய பிரகிருதியுமாயிருப்பவர். வயதைஅதிக்ரமித்திருப்பவரே! உம்மால் நான் 'வேதங்களாகிய நேத்திர மாகவுடையவனாகஸ்ருஷ்டிக்கப்பட்டேன். என்னுடையநேத்திரமான அந்தவேதங்கள் அபகரிக்கப்பட்டன. குருடனாகிவிட்டேன். விழித் துப் பாரும். என்னுடையநேத்திரங்களைக் கொடும். நான் உமக்குப் பிரியன். நீர் எனக்குப் பிரியர்' என்றுசொன்னார். இவ்விதம்துதிக்கப் பட்டவரும் பகவானும் எங்கும்முகமுடையவருமான அவர் நித்திரை யைவிட்டார். பிறகு உடனே பிரபுவானவர் வேதங்களின்காரியத்திற் காக முயற்சியுள்ளவராய் ஈஸ்வரத்தன்மையாலுண்டான பிரவிருத்தி யினாலே அழகானநாஸிகைகளையுடையசரீரத்தோடு சந்திரனுக்குநிக ரானகாந்தியுடையவராகி வேதங்களுக்கிருப்பிடமும் சுத்தமுமாயிருக் கிற ஹயக்ரீவரூபத்தைத்தரித்து இரண்டாவதுசரீரத்தை அடைந் தார். (அஸ்வினிமுதலான) நக்ஷத்திரங்களுடனும் மற்றத்தாரகைகளுட னும்கூடினஸ்வர்க்கமானது அவருக்குச் சிரமாயிற்று. அவருடையகே சங்கள் நீண்டவைகளும் ஸூர்யனுடைய கிரணங்களுக்குச்சமமான காந்தியுடையவைகளுமாயின. ஆகாயமும் பாதாளமும் காதுகளும் பிராணிகளைத்தரிக்கின்றபூமியானது நெற்றியும் பரிசுத்தமானகங்கை யும் ஸரஸ்வதியும் பெரியகாந்தியுள்ளபுருவங்களுமாயின. சந்திரனும் ஸூர்யனும் அவருக்கு நேத்திரங்களாயின. ஸந்தியாகாலம் நாஸிகை யாகக் கருதப்பட்டது. தவிரவும் ஓங்காரமானது ஸம்ஸ்காரமாகவும் மின்னல் நாவாகவும் நிர்மாணஞ்செய்யப்பட்டன. ஓ! அரசரே! ஸோமபர்களென்று பிரஸித்திபெற்றபிதிருக்கள் தந்தங்களாயினர். கோலோகமும் பிரம்மலோகமும் மகாத்மாவானஈஸ்வரருக்கு உதடுக ளாயின ஓ! அரசரே! சிறந்தகுணங்களையுடையகாளராத்ரியானது அவருக்குக் கழுத்தாயிற்று. இவ்விதம் அநேகமூர்த்திகளால்சூழப் பட்ட ஹயக்ரீவரூபத்தைச்செய்துகொண்டு மறைந்தார். ஜகத்திற் கெல்லாம் ஈசரான அந்தப்பிரபு பாதாளத்தில் பிரவேசித்தார். பாதா ளத்தில் பிரவேசித்தவரான அவர் சிறந்ததான யோகத்தையடைந்து வேதசிக்ஷையிலேற்பட்ட ஸ்வரத்தை நன்றாகக்கிரகித்துக்கொண்டு (ஸாமாவயவமான) உத்கீதஸ்வரத்தை உண்டுபண்ணினார். அந்த ஸ்வர மானது எங்கும் எதிரொலியுள்ளதும் குளிர்ந்ததும் எல்லாப்பூதங்க ளுடனும் உண்டானதுமாகி ஜலத்தினுட்சென்றது. அப்பொழுது அந்த அஸுரர்கள் வேதங்களை ஸங்கேதத்தால்கட்டிப் பாதாளத்தில்

வைத்துவிட்டுச் சப்தமுண்டானவிடத்தைக்குறித்து வேகமாகப் புறப்பட்டார்கள். அரசரே! அந்த ஸமயத்தில் தேவரும் ஹயக்ரீவ ரூபத்தைத்தரிப்பவருமான ஹரியானவர் பாதாளத்தையடைந்த எல்லாவேதங்களையும் கிரகித்துத் திரும்பவும் பிரம்மாவினிடம் கொடுத்தார். ஹயக்ரீவரானவர் வேதங்களை ஸ்தாபனஞ்செய்துவிட்டுப் பிறகு ஈசான்யஸமுத்திரத்தில் தமது ஸ்வபாவநிலையை அடைந்தார். அதனால் ஹயக்ரீவர் வேதங்களுக்கிருப்பிடமுமானார். பிறகு மதுகைடபர்களென்கிற அந்த அஸுரர்கள் ஒன்றையுங்காணாமல் எந்தஇடத்தில் வேதங்கள் வைக்கப்பட்டனவோ அவ்விடம் மீண்டும் வேகத்துடன் வந்தார்கள்; அந்தஸ்தானம் சூன்யமாயிருப்பதையும் பார்த்தார்கள். பலசாலிகளில்சிறந்தவர்களான அவர்கள் உடனே மிக்க வேகத்துடன் அப்பொழுதே திரும்பவும் பாதாளத்திலிருந்து சீக்கிரமாக மேலேவந்தார்கள். உற்பத்தியைச் செய்தவரும், பிரபுவும், வெண்ணிறமுடையவரும், சந்திரன்போலச் சுத்தமானகாந்தியுடையவரும், அநிருத்தசரீரத்திலிருப்பவரும், அளவற்றபராக்ரமமுடையவரும், மீண்டும் தமமுடையஅளவுக்குத் தக்கபடி செய்யப்பட்டதும் ஜலத்தின்மேலமைக்கப்பட்டதும் ஸர்ப்பத்தின் உடலால்நிறைந்ததும் ஜ்வாலைகளின்பரம்பரையால் சூழப்பட்டதுமான சயனத்தில் யோக நித்திரையை அடைந்தவருமான அந்தப்புருஷரையே பார்த்தார்கள். அந்த அஸுரத்தலைவர்கள் களங்கமற்றஸத்வகுணமுள்ளவரும் அழகான காந்தியுடையவருமானஅவரைப் பார்த்துவிட்டு அட்டஹாஸஞ்செய்தார்கள். ரஜோகுணமும்தமோகுணமும் நிரம்பின அவர்கள், 'வெண்ணிறமுள்ள இந்தப்புருஷனே அவன்; நித்திரையை அடைந்து படுத்திருக்கிறான். இவனாலேதான் பாதாளத்திலிருந்து வேதங்கள் கொண்டுவரப்பட்டிருக்கும். நிச்சயம். இவன் யாரைச் சேர்ந்தவன்? இவன் யார்? ஏன் [1]போகத்துடன் தூங்குகிறான்?' என்றுசொல்லினர். அவர்கள் இவ்விதவார்த்தையைச் சொல்லிக்கொண்டு ஹரியை எழுப்பினார்கள். அப்பொழுது புருஷோத்தமரானவர் விழித்துக்கொண்டு அவர்களைப்பார்த்து அந்தஅஸுரஸ்ரேஷ்டர்கள் யுத்தத்தில்விருப்பமுள்ளவர்களாயிருத்தலை அறிந்து யுத்தத்தில் மனத்தைச் செலுத்தினார். பிறகு அவர்களுக்கும் நாராயணருக்கும் யுத்தமானது நடந்தது. அப்பொழுது மதுஸூதனர் ரஜஸாலும்தமஸாலும் வியாபிக்கப்பட்டசரீரத்தையுடைய அந்தமதுகைடபர்களிருவரையும் பிரம்மாவுக்குமரியாதைசெய்வதற்காகக் கொன்றார். அப்பொழுது

[1] ஸர்ப்பத்தினுடல்; ஸுகம்.

புருஷோத்தமரானவர் அவர்களுடைய வதத்தினாலும் வேதங்களைக் கொண்டுவந்ததினாலும் பிரம்மாவினுடையசோகத்தைச் சீக்கிரம் விலக்கினர், பிறகு ஹரியினால்வரிக்கப்பட்டவரும் வேதங்களாலுபசரிக்கப் பட்டவருமான அந்தப்பிரம்மாவானவர் உடனே ஸ்தாவரஜங்கமங்களான எல்லாஉலகங்களையும் படைத்தார். தேவரானஹரியானவர் பிரம்மாவுக்குச் சிறந்ததும் உலகங்களுடையஸ்ருஷ்டிக்குஉசிதமுமான மதியை அளித்துவிட்டுத் தாம் எங்கிருந்துவந்தாரோ அங்கேயே மறைந்தார். ஹரியானவர் ஹயக்ரீவவடிவங்கொண்டு அந்தஅஸுரர்களைக்கொன்றுவிட்டுத் திரும்பவும் பிரவிருத்திதர்மத்தின்பொருட்டு அந்தஅநிருத்தசரீரத்தையே தரித்தார். இவ்விதம் மஹாபாக்கியவானன இந்தஹரியானவர் ஹயக்ரீவரானர். வரத்தையளிப்பதும் ஈஸ்வரனைச்சேர்ந்ததுமான இந்தரூபமானது புராணத்தில்சொல்லப்பட்டுப் பிரஸித்தமாயிருக்கிறது. எந்தப்பிராம்மணன் இந்தச்சரித்திரத்தை எந்நாளும் கேட்டு (மனத்தில்) தரிப்பானே அவனுடைய அத்தியயனமானது ஒருநாளும நாசத்தையடையாது. பாஞ்சாலதேசத்தரசன் கடுமையானதவத்தினால் தேவரானஹயக்ரீவரை ஆராதித்து [1]அந்தத்தேவரால் மார்க்கமுபதேசிக்கப்பட்டுக் கிரமத்தை அடைந்தான். ஓ! அரசரே! நீர்என்னைக்கேட்டமையால் ஹயக்ரீவரைப் பற்றியசரித்திரமாகிற வேதத்திற்குநிகரான இந்தப்புராணம் உமக்குச் சொல்லப்பட்டது. தேவரானவர் ஒருகாரியத்தைச்செய்வதினிமித்தம் எந்தஎந்தச்சரீரத்தை எடுப்பதற்கு விரும்புவாரோ, அந்தஅந்தச் சரீரத்தைத் [2]தாம் தம்மையே தம்மாலேயே வேறுபடுத்திக்கொண்டு எடுத்துக்கொள்ளுகிறார். ஸ்ரீமானயிருக்கிறஅவர் வேதங்களுக்கிருப்பிடம். அவரே தவத்திற்கும் இருப்பிடம். யோகமும் ஸாங்கியமும் மேலானபிரம்மமும் [3]ஹவிஸும் பயனையளிக்கிறபிரபுவும் அவரே. வேதங்கள் நாராயணரையே தாத்பரியவிஷயமாயுடையவைகள். யஜ்ஞங்கள் நாராயணஸ்வரூபம். தவமும் நாராயணரைப் பயனாயுடையது. மோக்ஷமும் நாராயணரை விஷயமாயுடையது. ஸத்யமும் நாராயணரைப் பயனாயுடையது. கர்மாவின்பயனும் நாராயணஸ்வரூபமாயுள்ளது. மறுபடி திரும்புதலில்லாத மோக்ஷதர்மமும் நாராயணரையே பயனாகவுடையது. பிரவிருத்தியைக்காரணமாகவுடைய தர்மமும் நாராயணஸ்வரூபமாயுள்ளது. பூமியிலிருக்கிற மிகவும்

---

1 வேறுபாடம்.

2 தாம்என்பதால்கர்த்தாவுமவரே. தம்மையேஎன்பதால் உபாதானமுமவரே. தம்மாலேயேஎன்பதால் துணைக்காரணமும் அவரே. 3 கர்மம்.

ஸிரேஷ்டமானகந்தமும் நாராயணஸ்வரூபமாகக் கருதப்பட்டது. அரசரே! அப்பினுடையகுணமானரஸங்களும் நாராயணஸ்வரூபம். ஜோதிகளுடையஸிரேஷ்டமானரூபமும் நாராயணஸ்வரூபமாகக் கருதப்பட்டது. வாயுவின்குணமானஸ்பரிசமும் நாராயணஸ்வரூபமாகக் கருதப்பட்டது. ஆகாயத்திலுண்டானசப்தமும் நாராயணஸ்வரூபமாகவேயிருக்கிறது. பிரகாசமில்லாதகுணங்களை லக்ஷணமாகவுடையமனமும் அவரிடமிருந்தும் உண்டாயிற்று. (ஆதித்யன்முதலிய) ஜோதிஸுகளுக்கெல்லாம் ஆதாரமானகாலமும் நாராயணரைக் காரணமாகவுடையது. கீர்த்தியும் காந்தியும் லக்ஷ்மியும் தேவதைகளும் நாராயணரை ஆதாரமாகவுடையவர்கள். ஸாங்க்யமானது நாராயணரை விஷயமாகவுடையது. யோகமானது நாராயணஸ்வரூபமாயுள்ளது. பூர்வவாஸனையும கர்மங்களும் அதிருஷ்டமும எவைகளுக்குக் காரணமோ அவைகளுக்குப் புருஷன் காரணனன்றோ? பிரதானமும் காரணம். இந்தஉலகத்தில் உபாதானமும் கர்த்தாவும் தனித்தனியான [1]காரணமும் பலவிதமானசேஷ்டையும் ஐந்தாவதான தெய்வமும்என்று ஐந்துகாரணங்களாகக் கணக்கிடப்பட்டவரான ஹரியே எல்லாவற்றிலும் ஆதாரமாயுள்ளவர். எங்கும்பிரவிருத்திக்கின்ற ஹேதுக்களாலே தத்வத்தை அறியவிரும்புகிறவர்களுக்கு மகாயோகியும் பாபங்களை அபகரிப்பவரும் பிரபுவுமான நாராயணர் ஒருவரேதத்வம். உலகங்களோடுகூடியபிரம்மாமுதலியவர்கள், மஹாத்மாக்களானரிஷிகள், ஸாங்கியர்கள், யோகிகள், ஆத்மாவையறிந்தயதிகள் ஆகியஇவர்களுடையஅபிப்பிராயத்தைக் கேசவர் அறிகிறார். அவர்கள் அவருடையஅபிப்பிராயத்தை அறிகிறதில்லை. எல்லா உலகங்களிலும் எவர்கள் தெய்வகர்மத்தையும் பிதிருகர்மத்தையும் செய்கிறார்களோ, தானங்களைக் கொடுக்கின்றார்களோ, பெரியதவத்தைச் செய்கின்றார்களோ அவர்களெல்லோருக்கும் ஈஸ்வரத்தன்மையை அடைந்தஹரியே ஆதாரமாயிருப்பவர். எல்லாப்பிராணிகளிடத்திலும் வஸிப்பதால் அவர் வாஸுதேவரென்று சொல்லப்படுகிறார். நித்யரும் பரமரும் மஹரிஷியுமாயிருக்கிறஅவர் பெரியஐஸ்வரியமுடையவரும் [2]குணவானும் குணமென்றுபெயருடையவருமாகக் காலமானது எப்படி ருதுவில் ருதுவுடன்கூடிக் குணங்களுடைய சேர்க்கையை அடைகிறதோ அப்படி சீக்கிரமாகக் குணங்களோடு

1 அஸாதாரணமானகாரணம்.

2 'குணவர்ஜிதாக்ய:' என்பது வேறுபாடம்; 'குணவர்ஜிதர் என்று பெயருள்ளவர்' என்பது பொருள்.

சேர்க்கையை அடைகிறார். இவ்வுலகத்தில் மகாத்மாவான அவருடைய கதியை அறிகிறவர்கள் இலர். ஒருவரும் அவருடையவரவையும் பார்க்கிறதில்லை. ஞானத்தையே வடிவமாகவுடையவர்களும் சித்தத்தை அடக்கினவர்களுமான மகரிஷிகள் நித்யரும் [1]குணங்களால்சிறந்தவருமான புருஷனைப் பார்க்கின்றார்கள்" என்றுசொன்னார்.

---

மூன்னூற்றைம்பத்தெட்டாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)

(ஏகாந்திதர்மத்தின்வரலாறு.)

ஜனமேஜயர், "ஆ! ஆ! பகவானான ஹரியானவர் ஏகாந்திகளான எல்லோரையும் சந்தோஷிக்கச்செய்கிறார்; விதிப்படி செய்யப்பட்டபூஜையையும் தாமே சிரஸால் ஏற்றுக்கொள்ளுகிறார். உலகத்தில் வாஸனை நசித்தவர்களும் புண்ணியபாபமற்றவர்களுமாயிருக்கிறவர்களுக்குக் குருபரம்பரையாகவந்தஞானமானது உம்மால் சொல்லப்பட்டது. அவர்கள் நான்காவதான வாஸுதேவரூபமான மோக்ஷத்தில் புருஷோத்தமரான வாஸுதேவரையே அடைகிறார்கள். [2]ஏகாந்திகளான புருஷர்கள் பரமபதத்தை அடைகிறார்கள். ஏகாந்திகள் [3]மூன்றுவிதமானகதிகளை அடையாமல் விகாரமற்றவரான ஹரியை அடைகின்றமையால் இந்தஏகாந்ததர்மமானது சிறந்ததும் நாராயணருக்குப்பிரியமுமாயுள்ளதென்பது நிச்சயம். எந்தவேதியர்கள் உபநிஷத்துக்களோடு வேதங்களையும் நன்றாகஅறிந்து விதிப்படி படிக்கிறார்களோ, எவர்கள் யதிதர்மத்துடனிருக்கிறார்களோ அவர்களைக்காட்டிலும் ஏகாந்திகளானமனிதர்களுக்கு உயர்ந்ததான கதியுண்டென்று நினைக்கிறேன். ஓ! ஸமர்த்தரே! இந்ததர்மத்தைச்சொன்னவர் யார்? தேவனா? ரிஷியா? ஏகாந்திகளுடைய அனுஷ்டானம் எப்படிப்பட்டது? எப்பொழுது உண்டுபண்ணப்பட்டது? என்னுடைய இந்தஸந்தேகத்தை நிவிருத்தி செய்யும். எனக்கு மிக்ககுதூஹலமுண்டாயிருக்கிறது" என்றுவினவ, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினார். "கௌரவர்களுக்கும்பாண்டவர்களுக்கும்நேரிட்டயுத்தத்தில் சேனைகள் ஆயத்தமாயிருக்கையில்

---

1 'குணங்களுக்குமேற்பட்டவரும்' எனினுமாம்.

2 'நிஷ்காமர்களானபக்தர்கள்' என்பது பழையவுரை.

3 'ஸங்கர்ஷணப்ரத்யும்னஅநிருத்தர்களை உபாஸியாமல்' என்பது பழையவுரை.

அர்ஜுனன் மனத்தில் வருத்தமடைந்தபொழுது பகவானுகிருஷ்ணனாலே நேரில்சொல்லப்பட்ட [1]கதியில்லாதஞானதர்மமும் கதியுடன்கூடினஉபாஸனாதர்மமும் என்னால் உமக்கு முன்னமே சொல்லப்பட்டன. அறியவரிதாயிருக்கிற இந்தத்தர்மமோ மனத்தைவசம் செய்யாதவர்களால் அறியமுடியாததாயிருக்கிறது. ஸாமவேதத்தோடொப்பானஇது முன்னமே கிருதயுகத்தில் செய்யப்பட்டது. ஓ! அரசரே! ஈசானநாராயணரால் தம்மாலேயே தரிக்கப்படுகிறது. ஓ! மகாராஜரே! [2]இதற்காகவே தர்மபுத்திரர் மஹாபாக்கியவானான நாரதரை ரிஷிகளுக்குநடுவில் கிருஷ்ணனும் பீஷ்மரும் கேட்டுக்கொண்டிருக்கும்பொழுது ப்ரச்னம்செய்தார். ஓ! ராஜச்ரேஷ்டரே! குருவானவ்யாஸர் நான்கேட்டுக்கொண்டிருக்கையில் சொல்லினர். அவ்விடத்தில் நாரதர் சொன்னபடி சொல்லுகிறேன். அதைக் கேளும். ஓ! பூபாலரே! பிரம்மாவுக்கு நாராயணர்முகமாக மானஸஜன்மமுண்டானபோது நாராயணரே அந்தத்தர்மத்தினாலே தெய்வகர்மாவையும் பித்ருகர்மாவையும் செய்தார். பேனபர்களென்னும்ரிஷிகளும் அந்தத்தர்மத்தை அடைந்தார்கள். பேனபர்களிடமிருந்தும் வைகானஸர்கள் அந்தத்தர்மத்தை அடைந்தார்கள்; வைகானஸர்களிடமிருந்து சந்திரன் அடைந்தான். பிறகு அது திரும்பவும் மறைந்துவிட்டது. ஓ! அரசரே! பிரம்மாவுக்குச் சாக்ஷுஷமென்கிற இரண்டாவதுஜன்மம் ஏற்பட்டபொழுது ஸோமனிடமிருந்து அந்தப்பிதாமஹர் இந்தத்தர்மத்தைக் கேட்டார். ஓ! அரசரே! அப்பொழுது நாராயணஸ்வரூபரானபிதாமஹர் அதை ருத்திரருக்குக் கொடுத்தார். அரசரே! பிறகு முன்கிருதயுகத்தில் யோகத்திலிருந்தருத்திரர் வாலகில்யர்களென்கிற எல்லாரிஷிகளுக்கும் இந்தத்தர்மத்தைக் கற்பித்தார். திரும்பவும் அந்ததேவனுடைய மாயையினாலே மறைந்துவிட்டது. அரசரே! வாக்கிலிருந்தும் பிரம்மாவினுடைய மூன்றாவது பெரியஜன்மமானது உண்டானபொழுது இந்தத்தர்மமானது நாராயணரிடமிருந்தே உண்டாயிற்று. அதை ஸுபர்ணரென்கிறரிஷியானவர் நாராயணரிடமிருந்தும் அடைந்தார். ஸுபர்ணரானவர் இந்தஉத்தமமானதர்மத்தை நன்றாகச்செய்யப்பட்ட தவத்தோடும் பொறிகளினடக்கத்தோடும் விரதத்தோடும்மூன்றுதரமனுஷ்டித்ததனால் இந்தவிரதம் இவ்வுலகில் திரிஸௌபர்ணமெ

1 வேறுபாடம்.

2 அறியமுடியாததாய் நாராயணராலேயே தரிக்கப்படுவதால் அந்தநாராயணரானகிருஷ்ணன்கேட்கப் பிரச்னம் செய்தாரென்று கருத்து.

ன்றுசொல்லப்படுகிறது. ரிக்குவேதத்தின்பாடத்தில் படிக்கப்பட்ட இந்த விரதம் அனுஷ்டிக்க அரிதானது. ஓ! அரசரே! ஸுபர்ணரிடமிருந்தும் ஸநாதநமும் பிரஸித்தமுமான இந்தத்தர்மமானது உலகங்களுக்கு ஆயுளாயிருக்கிறவாயுவினால் அடையப்பட்டது; வாயுவின்ஸமீபத்திலிருந்தும் [1]விகஸங்களையுண்ணுகின்ற ரிஷிகளால் அடையப்பட்டது. அவர்களிடமிருந்தும் உத்தமமான அந்தத்தர்மத்தை ஸமுத்திரராஜன் அடைந்தான். பிறகு அந்தத்தர்மமானது திரும்பவும் நாராயணரால்கிரகிக்கப்பட்டு மறைந்துவிட்டது. புருஷஶ்ரேஷ்டரே! திரும்பவும் காதிலிருந்து மஹாத்மாவானபிரம்மாவின் ஸ்ருஷ்டியானது உண்டாயிற்று. அந்தவிஷயத்தைப்பற்றிச் சொல்லுகிறேன். என்னிடமிருந்து கேளும். ஹரியும் தேவருமானநாராயணர் தாமே ஜகத்தைப் படைக்கஎண்ணி ஜகத்தின்ஸ்ருஷ்டியைச்செய்கிறவரும் ஸமர்த்தருமானபுருஷரைச் சிந்தித்தார். உடனே சிந்திக்கிறவரானஅவருடைய காதுகளிலிருந்தும் புருஷரும் பிரஜைகளுடையஸ்ருஷ்டியைச் செய்கிறவருமான பிரம்மாவானவர் வந்தார். அவரைநோக்கி ஜகத்பதியான நாராயணர், 'புத்திரா! முகத்திலிருந்தும் பாதத்திலிருந்தும் எல்லாப் பிரஜைகளையும் ஸ்ருஷ்டிசெய். நல்லவிரதமுடையவனே! உனக்கு ஶ்ரேயஸையும் பலத்தையும் [2]பராக்கிரமத்தையும் செய்வேன். ஸாத்வதமென்றுபெயருடையதர்மத்தையும் என்னிடமிருந்து பெற்றுக்கொள். அந்தத்தர்மத்தைக்கொண்டு ஸ்ருஷ்டிக்கப்பட்டகிருதயுகத்தை விதிப்படி நிலைக்கச்செய்' என்றுசொன்னார். அப்பொழுது பிரம்மாவானவர் ஹரிமேதஸானதேவருக்கு நமஸ்காரம்செய்தார். அவர் உபநிஷத்துடனும் சுருக்கத்துடனும் ஆரண்யகத்துடனும்சேர்ந்ததும் நாராயணர் முகத்தால் வெளிவந்ததும் சிறந்ததுமானதர்மத்தையும் கிரகித்தார். அப்பொழுது வரத்தையளிக்கின்றதேவரானவர் அளவற்றதேஜஸையுடையபிரம்மாவுக்குக் கிருதயுகத்திற்குரியதர்மமுள்ளதும் பலனில் விருப்பமில்லாதகர்மமென்று பெயர்கொண்டதுமான அந்தத்தர்மத்தை உபதேசம்செய்துவிட்டுப் பிறகு அந்தக்ஷணமே எதில் அவ்யக்தமான சுத்தப்ரம்மமானது நிலையுள்ளதாயிருக்கிறதோ அஜ்ஞானத்தின் அக்கரையான அந்தப்பதத்தை அடைந்தார். பிறகு உலகங்களுக்குப்பிதாமஹரான அந்தப்பிரம்மாவானவர் ஸ்தாவரஜங்கமங்களானஎல்லாஉலகங்களையும் படைத்தார். உடனே அப்பொழுது முதலில் சுபமானகிருதயுகமானது நடந்துவந்தது. அதில் ஸாத்வத

[1] 897 - ம்பக்கம் 33 - வதுவரியிற்காண்க.

[2] பலத்தைச்செலுத்துகின்ற திறமை.

மென்கிறதர்மமானது உலகங்களில் பரவி நிலைத்திருந்தது. உலகங்களைப்படைத்த ப்ரம்மாவானவர் முதன்மையான அந்தத்தர்மத்தினாலேயே தேவர்களுக்குஈசரும் ஹரியும் பிரபுவுமான நாராயணரைப் பூஜித்தார். பிறகு அப்பொழுதே உலகங்களுடைய நன்மையின் விருப்பத்தால் தர்மம் நிலைத்திருப்பதற்காக ஸ்வாரோசிஷமனுவுக்கு அத்யயனஞ் செய்வித்தார். ஓ! அரசரே! பிறகு ஜாக்கிரதையுடையவரும் எல்லாஉலகங்களுக்கும் பதியும் விபுவுமானஸ்வாரோசிஷர் தமதுபுத்திரரான சங்கபதருக்குக் கற்பித்தார். பாரதரே! பிறகு சங்கபதரும் தம்முடையஔரஸபுத்திரனும் திக்குகளைக்காப்பவனுமான ஸுதர்மாவுக்குப் போதித்தார். பிறகு திரேதாயுகம்வந்தபோது திரும்பவும் அந்தத்தர்மமானது மறைந்துவிட்டது. ஓ! ராஜஸ்ரேஷ்டரே! முன்காலத்தில் நாஸிகையிலிருந்தும் பிரம்மாவினுடையஜன்மம் ஏற்பட்டபொழுது உடனே தேவரும் ஹரியும் பிரபுவும் தாமரைமலர்கள்போன்றகண்களையுடையவருமான நாராயணர் தாமாகவே பிரம்மாபார்த்துக்கொண்டிருக்கையில் இந்தத் தர்மத்தைச் சொன்னார். அரசரே! அவரிடமிருந்தும் பகவானான ஸநத்குமாரர் அத்தியயனம்செய்தார். ஓ! கௌரவஸ்ரேஷ்டரே! கிருதயுகத்தின் ஆதியில் ஸநத்குமாரரிடமிருந்தும் வீரணரென்கிறஸ்ருஷ்டிகர்த்தர் இந்தத்தர்மத்தை அத்யயனம்செய்தார். வீரணரும் இதை அத்தியயனம்செய்து ரைப்யரென்கிறமுனிவருக்குக் கொடுத்தார். ரைப்யர் புத்திரரும் சுத்தரும் நல்லவிரதமுடையவரும் நல்லமேதையுடையவருமான [1]குக்ஷிபாலருக்கும் தர்மவானனவிசூலருக்கும் கொடுத்தார். பிறகும் நாராயணருடையமுகத்தால் வெளிவந்த தர்மமானது மறைந்துவிட்டது. திரும்பவும் அண்டஜமென்னும் ஜன்மமுண்டானபொழுது ஹரியைஉத்பத்திகாரணமாகவுடைய பிரம்மாவுக்கு மீண்டும் இந்தததர்மமானது நாராயணருடைய முகத்தால் வெளிவந்தது. ஓ! அரசரே! பிரம்மாவினால் கிரகிக்கப்பட்டு விதிப்படி அனுஷ்டிக்கவும்பட்டது. அரசரே! பர்ஹிஷத்துக்களென்றுபெயர்கொண்டமுனிவர்களும் ஓதுவிக்கப்பட்டார்கள். அது பர்ஹிஷத்துக்களிடமிருந்தும் ஸாமவேதத்தின் முடிவை அடைந்தவரும் ஜ்யேஷ்டரென்று எங்கும்புகழ்பெற்றவருமான ஒருவேதியரை அடைந்தது. ஹரியானவர் ஜ்யேஷ்டரின்ஸாமத்தால் வரிக்கப்பட்டார். ஜ்யேஷ்டரிடமிருந்து அவிகம்பனனென்கிறஅரசனிடம் வந்தது. ஓ! ஸமர்த்தரானஅரசரே! பிறகு இந்தத்தர்மமானது மறைந்து

---

[1] 'திக்பாலகரானகுக்ஷியென்பவருக்கு' என்பது வேறுபாடம்.

விட்டது. ஓ! அரசரே! ஹரியினிடமிருந்தும் பிரம்மாவினுடைய பத்மஜமென்கிற இந்த ஏழாவது ஜன்மமுண்டானபொழுது இந்தத் தர்மமானது நாராயணராலே தாமாகவே யுகத்தினுதியில் சுத்தரும் உலகங்களைத் தரிப்பவருமான பிதாமஹருக்குச் சொல்லப்பட்டது. பிதாமஹரும் இந்தத்தர்மத்தை முன்காலத்தில் தக்ஷனுக்குச் சொன்னார். ஓ! ராஜஶ்ரேஷ்டரே! பிறகு தக்ஷன் புத்திரியின் புத்திரர்களில் மூத்தவனான ஆதித்யனிடம் கொடுத்தான். ஜ்யேஷ்டனான அந்த ஆதித்யனிடமிருந்து பிறகு விவஸ்வான் கிரகித்தான். பிறகு திரேதாயுகத்தின் ஆதியில் விவஸ்வான் மனுவுக்குக் கொடுத்தான். மனுவும் உலகங்களுடைய ஐஶ்வரியத்திற்காகப் புத்திரனை இக்ஷ்வாகுவுக்குக்கொடுத்தான். இக்ஷ்வாகுவினுல் சொல்லப்பட்டு உலகங்களில்பரவி நிலைத்திருக்கின்றது. அரசரே! பிரளயத்தில திரும்பவும் நாராயணரை அடையப்போகிறது. ஓ! ராஜஶ்ரேஷ்டரே! பகவத்கீதையில் சுருக்கமானவிதியுடன் கற்பிக்கப்பட்ட யதிதர்மத்தையும் முன் உமக்குச் சொல்லியிருக்கிறேன். ஓ! அரசரே! இந்ததர்மமானது ஜகந்நாதரான நாராயணரிடமிருந்தும் நாரதராலே நேரிலேயே ரகஸ்யத்துடனும் சுருக்கத்துடனும் நன்றாக அடையப்பட்டது. ஓ! அரசரே! இவ்விதம் பெரிதும் ஆதியிலுண்டானதும் எப்பொழுதும் இருப்பதும் அறியவரியதும் செய்யவரியதுமான இந்தத்தர்மமானது ஸாத்வதர்களால் எப்பொழுதும் தரிக்கப்படுகின்றது. தர்மத்தின் ஞானத்துடன் நன்றாக அனுஷ்டிக்கப்பட்டதும் அஹிம்ஸையென்கிறதர்மத்துடன் கூடினதுமான இந்தக்கர்மத்தினுல் ஈஶ்வரரான ஹரியானவர் பிரீதியடைகிறார். க்ஷேத்ரஜ்ஞரும் மமதையற்றவரும் நிஷ்களருமான ஹரியே ஒருபிரிவானபாகத்தையுடையவராகவும் சிலவிடத்தில் இரண்டுபிரிவையுடையவராகவும் மூன்றுபிரிவையுடையவராகவும் நான்குபிரிவையுடையவராகவும் கணக்கிடப்பட்டுக் காணப்படுகிறார். அரசரே! பஞ்சபூதங்களுடைய குணங்களையும் அதிக்கிரமித்தஜீவனும் ஐந்து இந்திரியங்களையும் ஏவுகின்றபிரஸித்தமானமனமும் ஹரியே. ஸ்ரீமானன அவர் உலகங்களுக்கிருப்பிடம். அவர் உலகங்களின் ஸ்ருஷ்டியைச்செய்பவர்; அகர்த்தாவும் கர்த்தாவும் காரியமும் காரணமுமாயிருப்பவர். வேந்தரே! விகாரமற்றவரான அந்தப்புருஷர் எப்படி விரும்புகிறாரோ அப்படி விளையாடுகிறார். ஓ! ராஜஶ்ரேஷ்டரே! மனுவசமில்லாதவர்களால் அறியமுடியாத இந்த ஏகாந்திதர்மமானது என்னுல் குருவின் அருளால் உமக்குச் சொல்லப்பட்டது. அரசரே! ஏகாந்திகளான புருஷர்கள் அநே

கர்கள்கிடைப்பது அரிது." "ஓ! குருநந்தனரே! ஹிம்ஸைசெய்யாத வர்களும் ஆத்மஜ்ஞானமுடையவர்களும் எல்லாப்பிராணிகளுடைய நன்மையிலும் பற்றுள்ளவர்களுமான ஏகாந்திகளால் உலகமானது வியாபிக்கப்படுமானால் (அப்பொழுது) பயனில்விருப்பத்தோடு செய்யப்பட்ட கர்மங்கள் இல்லாத கிருதயுகப்ரவ்ருத்தியானது உண்டாகும். ஓ! அரசரே! இவ்விதம் பகவானும் எனக்குக்குருவும் தர்மங்களை யுணர்ந்தவரும் வேதியர்களில் சிறந்தவருமான அந்தவ்யாஸமுனிவர் முனிவர்களுடையஸன்னிதியில் கிருஷ்ணனும்பீஷ்மரும் கேட்டுக் கொண்டிருக்கும்போது தர்மராஜருக்குச் சொன்னார். மன்னரே! அவருக்கும் முன்காலத்தில் மிகவும்பெரியதவமுடையவரானநாரதர், தேவரும் பரப்ரம்மமும் வெண்ணிறமுள்ளவரும் சந்திரனுக்கு நிகரானகாந்தியுடையவருமான அச்சுதரைப்பற்றிச் சொன்னார். நாராயணரைப் பரகதியாயுடையவர்களான ஏகாந்திகள் எந்தவிடத்தில் சேருகின்றார்களோ அதுவே முக்தர்களுக்குரியதும் பரமும் [1]கேவலமுமாயிருக்கிறஸ்தானமாகும்" என்றுசொன்னார். ஜனமேஜயர், "இவ்விதம் பலவிதமாயும அறிஞர்களால் அனுஷ்டிக்கப்பட்டதாயுமிருக்கிறதர்மத்தை மற்றவேதியர்கள் பலவிதமானவிரதங்களிலிருந்து ஏன் செய்வதில்லை?" என்றுகேட்க, வைசம்பாயனர், "ஓ! பரதகுலத்தரசரே! தேகத்தில்கட்டுண்டஜீவர்களில் ஸாத்விகி, ராஜஸி, தாமஸிஎன்று மூன்றுபிரகிருதிகள் ஸ்ருஷ்டிக்கப்பட்டன. குருகுலத்தைவகிக்கின்றஅரசரே! ஜீவர்களில்ஸ்ரேஷ்டனான ஸத்வகுணமுடையபுருஷன் மோக்ஷத்திற்கு நிச்சயிக்கப்பட்டவனாவான். [2]அவன் இவ்வுலகத்திலும் மோக்ஷத்திலும் புருஷரும் பிரம்மவித்துக்களில் சிறந்தவருமான நாராயணரைப் பரமாக அறிகிறான். அதனால் அவன் ஸாத்விகனாகக் கருதப்பட்டான். நாராயணரைப் பரகதியாகவுடைய ஏகாந்தபக்தனானவன் எப்பொழுதும் புருஷோத்தமரைச் சிந்தித்துக் கொண்டு இஷ்டத்தையுமடைகிறான். புத்திமான்களும் மோக்ஷதர்மத்தோடுகூடினவர்களும் ஆசையற்றவர்களுமான ஸன்யாஸிகளுடைய யோகக்ஷேமங்களை ஹரியானவர் வகிக்கின்றார். பிறக்கின்றவனான எந்தப்புருஷனை மதுஸூதனர் பார்க்கின்றாரோ அவன் ஸாத்விகனாக அறியத்தக்கவன். அவன் மோக்ஷத்திற்கு நிச்சயிக்கப்பட்டவனாவான். ஏகாந்திகளால்அனுஷ்டிக்கப்பட்ட தர்மமானது ஸாங்கியயோ

[1] இரண்டற்றது.

[2] 'அவன் இவ்வுலகத்திலும் நாராயணரைப் பிரம்மவித்துக்களில்சிறந்த புருஷராகவும் மோக்ஷத்தில்பரமாகவும் அறிகிறான்' என்றும் கொள்ளலாம்.

கங்களுக்கோபபானது. ஆகையால் இவர்கள் நாராயணரூபமான மோக்ஷத்தில் பாகதியை அடைகின்றார்கள். நாராயணரால்பார்க்கப் பட்டபுருஷன் ஆத்மஞானியாவான். அரசரே! இவ்விதம் தன்னிஷ்டத்தால் ஆத்மஞானியாகான். ராஜஸி, தாமஸி, என்கிறபிரகிருதிகள் ஒன்றோடொன்று கலந்தவைகளாகக் கருதப்பட்டன. அரசரே! அவ்வுருவமாகப்பிறந்து ப்ரவிருத்திதர்மங்களுடன் கூடினவனாயிருக்கிற புருஷனையோ ஹரியானவர் பார்க்கிறதில்லை பிறப்பவனான இவனை உலகங்களுக்குப்பிதாமஹரானபிரம்மாவானவர் பார்க்கிறார். அவனுக்கு ரஜஸினாலும் தமஸினாலும் மனமானது வியாபிக்கபபட்டிருக்கிறது. ஓ! அரசர்களில்சிறந்தவரே! தேவர்களும் முனிவர்களும ஸத்வத்திலிருப்பவர்களாயினும ஸூக்ஷ்மமானஸத்வமில்லாதவர்களாயிருக்கிறார்கள். அதனால் [1]வைகாரிகர்களாகக்கருதப்பட்டார்கள்" என்று சொன்னார்.

ஜனமேஜயர், "வைகாரிகனானபுருஷன் எப்படி புருஷோத்தமனை அடைவான்? எல்லாவற்றையும் பார்த்தபடி சொல்லும். பிரவிருத்தியையும் கிரமமாகச்சொல்லும்" என்று வினவ வைசம்பாயனர், "மிகவும் ஸூக்ஷ்மனும் தத்வங்களோடுகூடினவனும் (அகாரஉகாரமகாரமென்கிற) மூன்று அக்ஷரங்களோடுகூடினவனும் கிரியையற்றவனும் இருபத்தைந்தாமவனுமானபுருஷனை [2]புருஷன் அடைவான். இவ்விதம் ஸாங்கியமும் யோகமும் வேதத்தின்உபநிஷத்தும் பாஞ்சராத்ரமும் ஒன்றாகவும் இவைகள் ஒன்றுக்கொன்றுஸாதனமாகவும் சொல்லப்படுகின்றன. ஏகாந்திகளுடையஇந்தத்தர்மமானது பரமானநாராயணரை விஷயமாகவுடையஸ்வரூபமுள்ளது. அரசரே! ஸமுத்திரத்திலிருந்தும் பெருகியஜலப்பிரவாகங்கள் திரும்பவும் அதையே அடைகின்றதுபோலவே இந்தஞானங்களாகிய பெரியஜலப்பிரவாகங்கள் திரும்பவும் நாராயணரையே அடைகின்றன. ஓ! யதுக்களுக்குப் பந்துவாயுள்ளவரே! உமக்கு ஸாத்வதமென்கிற இந்தத்தர்மமானது சொல்லப்பட்டது. ஓ! பாரதரே! சக்தியிருந்தால் நீர் முறைப்படி இதைச் செய்யும். இவ்விதம் மஹாபாக்கியவானானஅந்தநாரதர் என்னுடைய குருவுக்கு [3]ஸ்வேதர்களுக்கும் யதிகளுக்குமுரிய அழிவற்ற ஏகாந்தகதியைச் சொன்னார். வ்யாஸரும் பிரீதியுடன புத்திமா

1 ஆகங்காரிகஸ்ருஷ்டியிலுள்ளவர்கள்.

2 பிரகிருதியிலிருந்து விடுபட்டஜீவாத்மா.

3 'கிருகஸ்தர்களுக்கும்' என்பது பழையவுரை; 'வெள்ளைவஸ்திரமுடையவர்' என்பது.

ஞனதர்மபுத்திரருக்குச் சொன்னார். குருவினிடமிருந்துபடிவினதான அப்படிப்பட்ட இந்தத்தர்மமே என்னால் உமக்குச் சொல்லப்பட்டது. ஓ! அரசர்களில் சிறந்தவரே! இவ்விதம் இந்தத்தர்மமானது அனுஷ்டிக்கமுடியாததாயிருக்கிறது. உம்மைப்போலவே மற்றவர்களும் மோகத்தையடைந்து அனுஷ்டிக்கவில்லை. ஓ! அரசரே! கிருஷ்ணரே உலகங்களைச்சிருஷ்டிக்கிறவரும் மோக்ஷிக்கச்செய்கிறவரும் ஸம்ஹாரத்தைச்செய்கிறவரும் காரணருமாயிருக்கிறார்" என்று சொன்னார்.

---

## முந்நூற்றைம்பத்தொன்பதாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)

(வ்யாஸர் விஷ்ணுவுக்குப்புத்ரரானவரலாறு.)

ஜனமேஜயர், "ஓ! பிரம்மரிஷியே! உலகங்களில் ஸாங்கியம், யோகம், பாஞ்சராத்ரம், வேதத்தின் ஆரண்யகம்என்கிற இந்தச்சாஸ்திரங்கள் வழங்குகின்றன. ஓ! முனிவரே! இவைகள் ஒன்றைப்பற்றியவையா? பலவற்றைப்பற்றியவையா? என்னால்கேட்கப்பட்ட நீர் சொல்லும். கிரமமாக இவைகளின்வரலாற்றையும் சொல்லும். விகாரத்தை அடைந்தவனான புருஷன் புருஷோத்தமமானபரமாத்மாவை எப்படி அடைவான்?" [1]என்றுகேட்டார். வைசம்பாயனர், "அதிகமாகஅறிந்தவரும் சிறந்தவரும் மிகவும்உதாரரும் நல்லமனமுள்ளவரும் ஸத்யவதியானவள் பராசரரிடமிருந்தும் த்வீபத்தின்மத்தியில் பெற்றபுத்திரரும் அஜ்ஞானமாகிறஇருளை நாசஞ்செய்கிறவருமான அந்தவ்யாஸமுனிவருக்கு நமஸ்காரம். பிதாமஹருக்குமுந்தினநாராயணர் முதற்கொண்டு ஆறாமவரும் மஹரிஷிக்குரியஸம்பத்தோடுகூடினவரும் நாராயணருடைய அம்சத்தாலுண்டானவரும் ஒரேபுத்திரரும் த்வைபாயனரும் வேதங்களுக்குப்பெரியநிதியமாகச்சொல்லப்படுகிறவரும் [2]மஹாத்மாவும் ஜனனமற்றவரும் அநாதியுமான அந்த வ்யாஸரை ஆதிகாலங்களில பெரியஐஸ்வரியமுடையவரும் உதாரமானதேஜஸுள்ளவருமானநாராயணர் புத்திரராக ஸ்ருஷ்டித்தார்" என்றுசொன்னார்.

---

1 அதிகபாடமான அரைஸ்லோகம் விடப்பட்டது.

2 ஒருசொல் விடப்பட்டது

ஜனமேஜயர், "ஓ! பிராம்மணசிரேஷ்டரே! முன்பு நீரே, வஸிஷ்டருடையபுத்திரர் சக்தி. சக்தியின்புத்திரர் பராசரர். பராசரரின்புத்திரர் கிருஷ்ணத்வைபாயனமுனிவர்' என்று உற்பத்தி சொன்னீர். நீர்தாமே திரும்பவும் இவரை நாராயணருடையபுத்திரராகச் சொல்லுகிறீர். அளவற்றதேஜஸையுடைய வ்யாஸருடைய முந்தினஜன்மமானது எப்படிப்பட்டது? ஓ! உத்தமமானபுத்தியையுடையவரே! நாராயணரிடமிருந்துண்டான ஜன்மத்தைச் சொல்லும்" என்றுகேட்க, வைசம்பாயனர் சொல்லலானார். "ஓ! அரசரே! வேதத்தின் அர்த்தத்தையுணர்ந்தவரும் தர்மத்திற்சிறந்தவரும் தவத்திற்கிருப்பிடமும் எனக்குக்குருவும் ஞானநிஷ்டரும் இமயமலையின்தாழ்வரையிலிருப்பவரும் பாரதமென்கிறசரித்திரத்தைச்செய்துவிட்டுத் தவத்தால் ச்ரமத்தையடைந்தவரும் புத்திசாலியுமானவ்யாஸருக்கு அப்பொழுது ஸுமந்து, ஜைமினி, மிகவும்பலமானவிரதமுடையபைலர், நாலாவதுசிஷ்யனானநான், வ்யாஸபுத்திரரான்சுகர்ஆகியநாங்கள் ஜாக்ரதையுடன் சுச்ரூஷைசெய்துகொண்டிருந்தோம். ஸாங்கமானவேதங்களையும் பாரதத்தின்அர்த்தங்களையும் முழுதும் ஆவிருத்திசெய்கின்றவரானவ்யாஸமுனிவர் இமயமலையின்தாழ்வரையில் உத்தமர்களான இந்தஐந்துசிஷ்யர்களாலே சூழப்பட்டுப் பூதங்களால் சூழப்பட்டஈச்வரர்போல விளங்கினார். ஒருமனமுடையவரும் அடக்கமுடையவருமான அவரை நாங்கள் அடுத்து உபாஸித்தோம். பிறகு ஒருகதையின்மத்தியில் வேதியர்களிற்சிறந்தவரான அவரை நாங்கள் வேதார்த்தங்களையும் பாரதத்தின் அர்த்தங்களையும் அப்படிப்போலவே நாராயணரிடமிருந்துண்டான ஜன்மத்தையும் கேட்டோம். தத்வத்தையுணர்ந்தஅவர் முந்தி வேதங்களின் அர்த்தங்களையும் பாரதத்தின் அர்த்தங்களையும் சொல்லிவிட்டு நாராயணரிடமிருந்தும் உண்டானஇந்தஜன்மத்தையும் சொல்லுவதற்கு ஆரம்பித்தார். வ்யாஸர், 'ஓ! வேதியர்களே! ஆதிகாலத்திலுண்டானதும் உத்தமமும் ரிஷியைப்பற்றியதும் என்னால்தவத்தாலறியப்பட்டதுமான இந்தச்சிறந்தசரித்திரத்தைக் கேளுங்கள். ஏழாவதுப்ரம்மாவின்காலத்தில் பிரஜைகளுடையஸ்ருஷ்டியானது உண்டானபொழுது மகாயோகியும் சுபாசுபங்களற்றவரும் அளவற்ற காந்தியுடையவருமான நாராயணரானவர் முதலில் நாபியிலிருந்தும் பிரம்மாவைப் படைத்தார். பிறகு பிரம்மா ஆவிர்ப்பவித்தார். அப்பொழுது அந்தப் பிரம்மாவைநோக்கி நாராயணர், 'ஓ! பிரம்மாவே! பிரஜைகளின்ஸ்ருஷ்டியைச்செய்கிறவரும் பிரபுவுமான

நீர் என்னுடையநாபியிலிருந்து உண்டானீர். பண்டிதபூமமார்களு டன்கூடின பலவிதமானபிரஜைகளை நீர் ஸ்ருஷ்டியும்' என்று சொன்னார்.' இவ்விதம் சொல்லப்பட்டவரான அந்தப்பிரம்மா பிர விருத்தியில்லாதவரும் கவலையால் மனத்தில்வியாகுலத்தைஅடைந்த வருமாகி வரங்களையளிப்பவரும் தேவரும் ஈஸ்வரருமான ஹரியை வணங்கி, 'ஓ! தேவர்களுக்கெல்லாம்தலைவரே! பிரஜைகளைஸ்ருஷ்டிப் பதற்கு எனக்குச் சக்தியேது? உமக்கு நமஸ்காரம். ஓ! தேவரே! நான் பிரஜ்ஞையில்லாதவன். மேலே எது செய்யவேண்டியதோ அதைச் செய்யும்' என்று சொன்னார். இவ்விதம்சொல்லப்பட்டவரும் தேவர் களுக்கீசரும் புத்திமான்களில் சிறந்தவருமான அந்தப்பிரபுவான் உடனே மறைந்தவராகிப் பிறகு புத்தியை நினைத்தார். உடனே புத்தி யானவள் ஸ்வரூபத்தோடு பிரபுவான ஹரியின்பக்கத்தில் நின்றாள். அப்பொழுது தாம் யோகமற்றவராயிருக்கிற ஹரியானவர் இந்தப் புத்தியை யோகத்தோடு சேர்ப்பித்தார். அந்தப்புத்தியானவள் ஐஸ் வரியயோகத்தோடிருப்பவளும் நடையுள்ளவளுமாயிருக்கையில் பிர புவும் விகாரமற்றவருமான அந்தத்தேவர் அவளைநோக்கி, 'உலகத் தின்படைப்பாகிறகாரியஸித்தியின்பொருட்டுப் பிரம்மாவினிடம் பிர வேசிக்கக்கடவாய்' என்னும்வசனத்தைச்சொன்னார். உடனே ஈஸ்வர ரால் கட்டளையிடப்பட்ட அந்தப்புத்தியானவள் சீக்கிரமாக அவரிடம் சென்றாள். பிறகு அந்தஹரியானவர் புத்தியோடுகூடினஅந்தப்பிரம் மாவை மீண்டும் பார்த்தார். திரும்பவும், 'பலவிதமானஇந்தப்பிர ஜைகளை ஸ்ருஷ்டியும்' என்று ஒருவார்த்தை சொன்னார். அந்தப்பிர ம்மா, 'அப்படியே ஆகட்டும்' என்றுசொல்லிவிட்டு ஹரியினுடைய ஆஜ்ஞையைச் சிரத்தால்வகித்தார். பகவானான அந்தநாராயணர்இவ்வி தம் சொல்லிவிட்டு அந்தவிடத்திலேயே மறைந்தார். பிறகு ஒரு முகூர்த்தகாலத்தில் தேவனென்றுபெயருடைய [1]ஆகிருதியானது இவரையடைந்தது. அந்தஆகிருதியை அடைந்து அதனுடன் [2]ஒன் றாயிருக்குந்தன்மையை அடைந்தவரானார். அப்பொழுது உடனே இவருக்குத்திரும்பவும் வேறுபுத்தியானது உண்டாயிற்று. 'மேலான ஸ்தானத்திலிருக்கிறபிரம்மாவினாலே தைத்யர்கள், தானவர்கள். கந் தருவர்கள், ராக்ஷதர்கள்இவர்களுடையஸங்கங்களால் நிரம்பியிருக் கிற இந்த எல்லாப்பிரஜைகளும் ஸ்ருஷ்டிக்கப்பட்டன. இந்தப்பூமி

---

1 வேறுபாடம்.

2 'தேவசரீரத்தில் ஆத்மபாவத்தையடைந்தார்; அஹங்காரியானார்' என்றுகருத்து.

யானவள் பாரத்தால்வியாபிக்கப்பட்டு இரக்கப்படத்தக்கவளானாள். பாரில் பலசாலிகளான அநேகம்தைத்யர்களும் தானவர்களும் ராக்ஷஸர்களுமுண்டாவார்கள்; தவத்தைச்செய்து உத்தமமானவரங்களையுமடைவார்கள். வரதானத்தால் கொழுத்தவர்களான அவர்கள் எல்லாரும் அவசியம் தேவஸங்கங்களையும் தவத்தையேதனமாகவுடைய முனிவர்களையும் பீடிப்பார்கள். அப்பொழுது நான் இந்தப்பாரத்தை இறக்குதலானது நியாயமாகும். பிறகு பூமியில் கிரமமாக அநேக அவதாரங்களாலே துஷ்டர்களுடைய நிக்கிரகத்தினாலும் ஸாதுக்களுடைய அநுக்கிரகத்தினாலும் இரங்கத்தக்கவளும் ஸத்யமானவளுமான இந்தப்பூமியானவள் நிலைத்திருப்பாள். பாதாளத்திலிருக்கிற ஸர்ப்பரூபனானஎன்னாலே இவள் தரிக்கப்படுகிறாளன்றோ? என்றால் தரிக்கப்பட்டுச் சராசரமானஎல்லாஜகத்தையும் தரிக்கிறாள். ஆகையால் அவதாரத்தை அடைந்து பூமியினுடைய ரக்ஷணத்தைச் செய்வேன்' என்று இவ்விதம்ஆலோசித்துப் பகவானானஅந்தமதுஸூதனர் அவதாரத்தின் உற்பத்தியின்பொருட்டு வராஹரூபம், நரஸிம்மரூபம், வாமனரூபம், அப்படிப்போலவே மனுஷ்யரூபம் ஆகிய அநேகரூபங்களை, 'இவைகளாலே நான் தேவசத்துருக்களானதுஷ்டர்களைக்கொல்லவேண்டும்' என்று ஸ்ருஷ்டித்தார். பிறகு ஜகத்தைஸ்ருஷ்டித்த பகவான் திரும்ப, 'போ:' என்கிறசொல்லால் எதிரொலியுண்டாகச் செய்துகொண்டு [1]ஸாரஸ்வதியை உச்சரித்தார். அப்பொழுது ஸாரஸ்வதியின் ஸாரமானவரும் பிரபுவினுடைய வாக்கிலுண்டானவரும் சென்றதும்நிகழ்கின்றதுமவருவதுமானவற்றை அறிகிறவரும் உண்மையுரைக்கிறவரும் பலமானவிரதமுடையவருமான அபாந்தரதம ஸென்றபுத்திரர் உண்டானார். தேவர்களுக்கு ஆதியும் விகாரமற்றவருமானபகவான் தலையால்வணங்கினஅவரைநோக்கி, 'புத்திசாலிகளில்சிறந்தவனே! நீ வேதத்தின் சரித்திரத்தில் [2]சுருதியைச்செய்ய வேண்டும். முனிவ! ஆகையால் கட்டளைப்படி என்னுடைய இந்த வார்த்தையைச்செய்' என்றுசொன்னார். அப்பொழுது அவராலே ஸ்வாயம்புவமன்வந்தரத்தில் வேதங்கள் பிரிக்கப்பட்டன. அப்பொழுது பகவானான் ஹரி இவருடைய அந்தச்செய்கையினால் ஸந்தோஷித்தார். (பிறகு அவரைநோக்கி,) 'ஓ! புத்திரா! பிராம்மண! வேறுமன்வந்தரங்களிலும் நீநன்றாகச்செய்ததலத்தினாலும் யமத்தினாலும் நியமத்தினாலும் இவ்விதமே உலகங்களுக்குப்ரவர்த்தகனும் சலிக்காதவனும் எப்பொழுதும் (மற்றவர்களால்) அவமதிக்கமுடியாதவனுமாவாய். மீள

1 வாக்கை. 2 வேதச்சுருக்கம்.

வும் கலியுகமானதுவரும்போது பாதகுலத்திலுண்டானவர்களும் மஹாத்மாக்களும் பாருலகில்பிரசித்திபெற்றவர்களுமான கௌரவர்க ளென்கிறஅரசர்கள் உண்டாவார்கள். ஓ! பிராம்மணர்களில்சிறந்த வனே! உன்னிடமிருந்துண்டான அவர்களுடையகுலத்தில் உன்னைத் தவிர (மற்றவர்களுக்கு) ஒருவரையொருவர்கொல்லுதற்காகக் கலகமா னதுநேரிடும். அப்பொழுதும் தவத்துடன்கூடினநீ வேதங்களை அநே கவிதமாகப் பிரிக்கப்போகிறாய். கறுப்பானகலியுகம் வந்தபொழுது கறுத்தநிறமுடையவனாவாய். தவத்துடன் நானாவிதமானதர்மங்களைச் செய்கிறவனும் ஞானத்தைஉண்டுபண்ணுகிறவனுமாவாய். (ஆனாலும்) ராகத்திலிருந்தும் விடுபடமாட்டாய். உன்னுடையபுத்திரனே மஹே ஶ்வாருடையஅநுக்ரகத்தால் ஆசைநீங்கிப் பரமாத்மாவாவான். இந்த வார்த்தை மாறாது. பிதாமஹருடையமானஸபுத்திரரென்று பிராம் மணர்களால் சொல்லப்படுகிறவரும் உத்தமமான புத்தியுள்ளவரும் சிறந்தவரும் தவத்திற்குஇருப்பிடமானவரும் ஸூர்யனுக்குமேலான காந்தியுள்ளவருமான வஸிஷ்டருடையகுலத்தில் அவரைக்காட்டி லும்மேலானமகிமையுள்ள பராசரரென்கிறமஹரிஷி உண்டாவார். வேதங்களுக்குநிதியும் மிகவும்சிறந்தவரும் பெரியதவமுடையவரும் தவத்திற்கிருப்பிடமுமான அவர் உனக்குப் பிதாவாவார். அந்தமுனி வரிடமிருந்தும் நீ பிதிருகன்னிகையிடம் கானீனபுத்திரனாகக் கர்ப் பத்தில் பிறப்பாய். சென்றதும் நிகழ்கின்றதும் வருவதுமான ஞானங் களுடையகதியை அறிவாய். முன்னேசென்றவையும் என்னால் செய் யப்பட்டவையுமான ஆயிரம்யுகங்களின் மாறுதல்களைத் தவத்தினால் நீ பார்ப்பாய். திரும்பவும் வரப்போகிற அநேகமாயிரம்யுகங்களுடைய மாறுதல்களையும் பார்ப்பாய். ஓ! முனிவனே! என்னுடையஸ்மா ணத்தினாலே ஆதியந்தமற்றவனும் சக்கரத்தைக் கையில்தரிப்பவனு மானஎன்னையும் உலகத்தில் பார்ப்பாய். இந்தவார்த்தை மாறாது. விசாலமானபுத்தியையுடையவனே! உனக்கு நிகரற்றகீர்த்தியுமுண் டாகும். சனியின்சகோதரனும் மகானுமான ஸூர்யபுத்திரன் மனு வாகப் பிறப்பான். புத்திரனே! என்னுடையஅருளால் அந்தமன்வந் தரத்திலும் நீயே மனுமுதலானவர்களுடையசங்கத்திற்கு முந்தின வனாவாய். ஸந்தேகமில்லை, உலகத்திலிருப்பதெல்லாம் என்னுடைய காரியம். (என்னைத்தவிர) மற்றவன் (ஒன்றைச்செய்வதற்கு) மற்றொரு வனை அபேக்ஷிக்கிறான். நான் இஷ்டப்படிசெய்கிறேன்' என்றார். ஈஶ் வரரானநாராயணர் ஸாரஸ்வதியினிடமுண்டான அபாந்தரதமரென் னும்ரிஷியைநோக்கி இவ்விதமானவார்த்தையைச் சொல்லிவிட்டுப்

பிறகு, 'கார்யத்தை ஸாதி' என்றும் சொன்னார். அப்படிப்பட்ட நான் தேவாநாராயணவிஷ்ணுவின் அனுக்ரகத்தால் அவரிடமிருந்து அபாந்தரதமனென்கிற பெயருடையவனாகப் பிறந்தேன். மீண்டும் ஹரியினுடைய ஆஜ்ஞையினாலே பிரஸித்தனும் வஸிஷ்டவம்சத்தின் புத்திரனுமாகப் பிறந்தேன். நான் நாராயணருடைய அருளால் நாராயணருடைய அம்சத்தாலுண்டானேன் என்னுடைய இந்தமுன்ஜன்மத்தைச் சொன்னேன். ஓ! புத்திமான்களில்சிறந்தவர்களே! என்னால் முன்காலத்தில் சிறந்தஸமாதியினாலே மிகவும்பெரிதும் மிகவும்கடுமையுமானதவமானது செய்யப்பட்டது. ஓ! புத்திரர்களே! நீங்கள் கேட்டவைகளான இந்தமுன்ஜன்மம் வரும்ஜன்மம்எல்லாவற்றையும் பக்தர்களானஉங்களுக்கு ஸ்நேகத்தால் சொன்னேன்' என்றுசொன்னார். ஓ! அரசரே! நீர்கேட்டபடி எங்கள்குருவும் க்லேசமில்லாத மனத்தையுடையவருமான வ்யாஸமுனிவருடைய இந்தமுன்ஜன்மமானது சொல்லப்பட்டது. பின்னும் கேளும். ராஜரிஷியே! ஸாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம், வேதம், பாசுபதமென்கிறஇந்தச் சாஸ்திரங்களை வெவ்வேறுமதங்களாகவே அறியக்கடவீர். பரமரிஷியானஅந்தக்கபிலர் ஸாங்கியத்தைச்சொன்னவராகச் சொல்லப்படுகிறார். யோகத்தைஅறிந்தவர் ஹிரண்யகர்ப்பர். அதற்குமுன்னறிந்தவன் ஒருவனுமில்லை. அந்தஅபாந்தரதமரே வேதத்திற்கு ஆசாரியராகச் சொல்லப்படுகிறார். இவ்வுலகில் அந்தமுனிவரைச் சிலர் ப்ராசீனகர்ப்பராகச் சொல்லுகிறார்கள். உமைக்குப்பதியும் பூதங்களுக்குப்பதியும் ஸ்ரீகண்டரும் பிரம்மாவுக்குப்புத்திரரும் நிலையுள்ளமனமுடையவருமானசங்கரர் இந்தப்பாசுபதமென்கிற சாஸ்திரத்தைச் சொன்னார். பாஞ்சராத்ரமுழுமையும் பகவானானநாராயணர் தாமே சொன்னார். ஓ! அரசர்களில்சிறந்தவரே! இந்தஎல்லாச்சாஸ்திரங்களிலும் வேதத்தையனுஸரித்ததும அனுபவத்தையனுஸரித்ததும் பிரபுவானநாராயணரே, தாத்பரியமானஅர்த்தமாகக் காணப்படுகிறார். ஓ! அரசரே! தமோகுணம்மேலிட்டவர்கள் இவரை இவ்விதமாக அறிகிறதில்லை. அவரைத்தவிர மற்றொருவனும் இல்லை' என்று சொல்லுகிற புத்திமான்களானவர்கள் ஸர்வஜ்ஞரான அந்தநாராயணரையே சாஸ்திரங்களைச்செய்தவராகவும் சாஸ்திரங்களுடையதாத்பரியத்திற்குவிஷயமாகவும் சொல்லுகிறார்கள். ஸந்தேகமில்லாதஎல்லாரிடத்திலும் ஹரியானவர் எப்பொழுதும் வஸிக்கிறார். தர்க்கத்தின் பலத்தினாலே ஸந்தேகமுடையவர்களிடம் மாதவர் வஸிக்கிறதில்லை. ஓ! அரசரே! பாஞ்சராத்திரத்தை அறிந்தவர்களும் க்ரமப்படியற்

றுள்ளவர்களும் ஏகாந்தபரிவினையை அடைந்தவர்களுமானவர்கள் ஹரியை அடைகிறார்கள். ஓ! அரசரே! ஸாங்கியமும்யோகமுமாகிய இரண்டும் ஸநாதநமானவை. எல்லாவேதங்களும் ஸநாதனமானவை. அவைகளெல்லாவற்றாலும் எல்லாமுனிவர்களாலும், நாராயணரே ஆதியான இந்தஎல்லாஜகத்தாகவும் சொல்லப்பட்டார். வேதத்தால்சொல்லப்பட்டு எல்லாஉலகங்களிலும்நடக்கிற சுபாசுபமானஎல்லாக்கர்மாக்களும் ஸ்வர்க்கத்திலும் அந்தரிக்ஷத்திலும். பூமியிலும் ஜலங்களிலுமுள்ளனவும் ரிஷியான அவரிடமிருந்து உண்டாயினவென்று அறியவேண்டும்" என்றுசொன்னார்.

---

## முந்நூற்றறுபதாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)

(பரமாத்மாவின்மகிமையைப்பற்றி ப்ரம்மாவுக்கும் சிவனுக்கும்நடந்த ஸம்பாஷணை.)

ஜனமேஜயர், "ஓ! பிராம்மணரே! புருஷர்கள் அநேகர்களா? அல்லது ஒருவனேதானா? இவ்வுலகில் எவன் ஸ்ரேஷ்டனானபுருஷன்? இதத்தில் யார் காரணமாகச் சொல்லப்படுகிறார்?" என்று கேட்க, வைசம்பாயனர் சொல்லலானார். "ஓ! குருவம்சத்தைவகிக்கின்றவரே! உலகத்தில் ஸாங்கியர்கள் யோகிகள்இவர்களுடைய விசாரத்தில் புருஷர்கள் அநேகர்கள். புருஷனை ஒருவனாக இவர்கள் அபிப்பிராயப்படுகிறதில்லை. எல்லாப்புருஷர்களுக்கும் காரணமானது ஒன்றாகச் சொல்லப்படுகிறது. குணங்களால் சிறந்தவனும், எல்லாமாயிருப்பவனுமான அந்தப்புருஷனை ஆத்மாவையறிந்தவரும் தவத்துடன்கூடினவரும் அடங்கினவரும் (எல்லாராலும்) நமஸ்கரிக்கத் தக்கவரும் பரமரிஷியும் குருவுமான வ்யாஸரைவணங்கி விரிவாகச் சொல்லுகிறேன். ஓ! அரசரே! அவசியம்புரியனுள்ளதும், ஸத்யமுமாக எல்லாவேதங்களிலும் பிரஸித்தமானஇந்த [1]புருஷஸூக்தமானது முனிசிகாமணியான வ்யாஸராலே சிந்திக்கப்பட்டது. ஓ! பாரதரே! கபிலர்முதலானமுனிவர்களாலே ஆத்மவிசாரத்தை ஆசிரயித்துப் பொதுவாகவும் விசேஷமாகவும் சாஸ்திரங்கள் சொல்லப்பட்டன. வ்யாஸரானவர் சுருக்கமாக ஒரேபுருஷனென்பதைச் சொன்னார். அளவற்றதேஜஸுள்ள அவருடைய அனுக்ரகத்தால் அதை

---

[1] புருஷனுடையபரமனைச் சொல்லுகிறவசனம்.

நான் உமக்குச் செவ்வையாகச் சொல்லுகிறேன். ஓ! அரசரே! இந்தவிஷயத்திலும் பிரம்மாவுடன் ருத்ரருக்குண்டான ஸம்வாத ரூபமான பழையஇந்தச் சரித்திரத்தைச் சொல்லுகிறார்கள். அரச ரே! பாற்கடலின் நடுவில் ஸ்வர்ணத்திற்கு நிகரான காந்தியுடைய வைஜயந்தமென்று பெயர்பெற்ற சிறந்ததான ஒருமலை இருக்கிறது. அரசரே! வைஜயந்தமென்னும் அவ்விடத்தில் பிரம்மதேவர் ஒருவராக ஆத்மாவின் கதியை விசாரித்துக்கொண்டு ப்ரம்மலோகத்திலுள்ள கிருகத்தைவிட்டு நித்தியம் வஸிக்கிறார். புத்திமானான அந்த நான் முகர் அவ்விடத்திலிருக்கும்பொழுது ஒரு காலத்தில் (அவருடைய) நெற்றியிலுண்டான புத்திரரும் மஹாயோகியும் மூன்று கண்களு டையவரும் பிரபுவுமான சங்கரர் தற்செயலாக ஆகாயமார்க்கத்தில் வந்தார்; பிறகுஆகாயத்திலிருந்தும் மலையின்கொடுமுடியில் சீக்கிரமாக இறங்கி எதிரில்வந்து சந்தோஷத்துடன் பாதங்களில்நமஸ்கரித்தார். அப்பொழுது பாதங்களில் பணிந்தஅவரைப்பார்த்துப் பிரபுவும் தனித்திருப்பவருமான பிரம்மாவானவர் இடக்கையினால் தூக்கி னார். நீண்டகாலத்தின்பின்வந்த அந்தபுத்திரரைநோக்கிப் பகவா னவர், 'ஓ! நீண்டபுஜங்களையுடையவரே! உமக்குநல்வரவா? பாக்கியத்தால் என்னுடைய ஸமீபம் வந்தீர். ஓ! புத்திரரே! உம்முடைய அத்தியயனத்திற்கும் தவத்திற்கும் எப்பொழுதும் க்ஷேமமா? நீர் எப்பொழுதும் கடுமையானதவமுடையவராதலால் உம்மைத் திரும்பவும் கேட்கிறேன்' என்றுசொன்னார். ருத்ரர், 'ஓ! பகவானே! உம்முடைய அனுக்ரகத்தால் என்னுடைய வேதா த்தியயனத்திற்கும் தவத்திற்கும் எல்லாஜகத்திற்கும் க்ஷேம மே. குறைவேயில்லை. ஓ! பகவானே! என்னால் நீர் ப்ரம்மலோகத் திலுள்ளகிருகத்தில் வெகுகாலத்திற்குமுன் பார்க்கப்பட்டீர். ஆகை யால் நான் உம்முடையபாதத்தால் அடையப்பட்ட இந்தமலையை அடைந்தேன். தவிரவும் நீர் ஏகாந்தமாய்வசிப்பதால் எனக்கு (கேட்க) குதூஹலமுண்டாகிறது. ஓ! பிதாமஹரே! இது அற்ப மானகாரணமாயிராதன்றோ? சிறந்ததும் பசிதாகமற்றதும் தேவர்க ளாலும் அஸுரர்களாலும் வஸிக்கப்பட்டதும் அளவற்றஒளியுடைய முனிவர்களாலும் கந்தருவர்களாலும் அப்ஸரஸுகளாலும்எப்பொழு தும் நன்குவஸிக்கப்பட்டதுமான அந்தக்கிருகத்தைவிட்டுவிட்டு இந் தச்சிறந்ததானபருவதத்தைத் தனியே ஏன் அடைந்தீர்?' என்றுகேட் டார். பிரம்மா, "வைஜயந்தம்என்கிற இந்தச்சிறந்தமலையில நான் எப்பொழுதும் வஸிக்கிறேன். இதில் ஒருமுகமானமனத்தால் விராட்

புருஷரைத் தியானிக்கிறேன்' என்று சொன்னார். ருத்ரர், 'ஓ! பிரம்மாவே! ஸ்வயம்புவான உம்மாலே அநேகம்புருஷர்கள் ஸ்ருஷ்டிக்கப்பட்டார்கள். ஓ! பிரம்மாவே! மற்றவர்களும் ஸ்ருஷ்டிக்கப்படுகிறார்கள். அந்தவிராட்புருஷரோ (அநேகர்களில்) ஒருவர். ஓ! பிரம்மாவே! உம்மால் தியானிக்கப்படுகிற ஒருவரான அந்தப்புருஷோத்தமர் யார்? என்னுடைய இந்தஸந்தேகத்தை விலக்கும். எனக்குப் பெரியகுதூஹலம் உண்டாயிருக்கிறது' என்று கேட்டார். பிரம்மா, 'புத்ரரே! நீர்சொல்லிய அந்தப்புருஷர்கள் அநேகர்கள். இவ்விதமான இது பிரத்யக்ஷத்தினாலே அறியப்பட்டவிஷயம். இவ்விதம் பார்க்கவேகூடாது. ஒருவரான விராட்புருஷருடைய ஆதாரத்தைச் சொல்லுவேன். அவர் அநேகம்புருஷர்களுக்கு ஒரேகாரணராகச் சொல்லப்படுகிறார். (அவரை அறிந்தவர்கள்) [1]விராட்டும [2]ஸுத்ராத்மாவும் [3]காரணரும் [4]நிர்க்குணரும் எப்பொழுதுமிருக்கிறவருமான அந்தப்புருஷரை நிர்க்குணராகி அடைகின்றார்கள்.

---

முந்நூற்றறுபத்தோராவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)

(பரமாத்மாவின்மகிமையைப்பற்றி ப்ரம்மாவுக்கும் சிவனுக்கும்நடந்த ஸம்பாஷணைத்தொடர்ச்சி.)

ஓ! புத்திரரே! கேளும். இந்தப்புருஷர் சாஸ்வதரும் அழிவற்றவரும் குறைவற்றவரும் அறியமுடியாதவரும் எல்லாவற்றையும அடைந்தவருமாகச் சொல்லப்படுகிறார். ஓ! சிரேஷ்டரே! அவர் குணங்களோடுகூடினஉம்மாலும் என்னாலும் மற்றவர்களாலும் பார்க்கமுடியாதவர். எல்லாமாயிருக்கிறஅவர் நிர்க்குணர்களால் ஞானத்தினாலே பார்க்கத்தக்கவராக நினைக்கப்படுகிறார். அவர் சரீரமில்லாதவராகி எல்லாச்சரீரங்களிலும் வசிக்கிறார். அவர் சரீரங்களில்வசிக்கிறவராயிருந்தாலும் கர்மங்களால் ஸம்பந்திக்கப்படுகிறதில்லை. அவர் எனக்கும் உமக்கும் தேஹாபிமானிகளானமற்றவர்களுக்கும் அந்தர்யாமி. எல்லாருக்கும் அவர் ஸாக்ஷியானவர்; ஒருவனாலும் ஓரிடத்திலும் அறியமுடியாதவர். எல்லாச்சிரங்களையுமுடையவரும் எல்லாப்புஜங்களையுமுடையவரும் எல்லாப்பாதங்களையும் கண்களையும் நாஸி

---

1 அநிருத்தன். 2 பிரத்யும்னன். 3 ஸங்கர்ஷணன். 4 வாஸுதேவன்.

கைகளையுமுடையவருமாயிருக்கிறார். அவர் ஒருவராகிச் சரீரங்களில் ஸுகத்துடன் யதேச்சையாக ஸஞ்சரிக்கிறார். சரீரங்களும் சுபாசுபமான அவற்றின்வாஸனையும் க்ஷேத்திரங்கள். அவைகளை யோகத்தையே உருவமாகக்கொண்ட அவர் அறிகின்றார். அதனால் அவர் க்ஷேத்திரஜ்ஞரென்று சொல்லப்படுகிறார். பிராணிகளுள் ஒன்றாலும் அவருடையவரவும் போக்கும் அறியமுடியா. ஸாங்கியமார்க்கத்தினாலும் யோகத்தினாலும் க்ரமப்படி அவருடையகதியை நானும் ஆலோசிக்கின்றேன். (ஒருவருக்கும்) எட்டாத மிகவும்மேலான அவருடையகதியைநான் அறியவில்லை. அநாதியானபுருஷரையும் அவர் ஒருவராயிருக்குமதன்மையையும் அவருடையபெருந்தன்மையையும் அறிந்தபடி சொல்லுகிறேன். அவர் ஒரேபுருஷராக நினைக்கப்பட்டிருக்கிறார். ஸநாதனரான அவர் ஒருவர்தாம் மஹாபுருஷரென்கிற பெயரை வஹிக்கிறார். உலகத்தில் ஒரே அக்னியானது அநேகவிதமாகப் பிரகாசிக்கிறது. ஒரேஸூர்யன் பிரகாசத்திற்கு ஒரேகாரணமாயிருக்கிறான். ஒரேவாயு அநேகவிதமாக வீசுகிறது. ஒரேஸமுத்திரம் ஜலங்களுக்கெல்லாம் காரணமாயிருக்கிறது. அதுபோல் நிர்க்குணரான ஒரேபுருஷர் எல்லாரூபமுமாயிருக்கிறார். நிர்க்குணரான அந்தப் புருஷரை முக்தர்கள் அடைகின்றார்கள். குணமயமானஎல்லாவற்றையும்தள்ளிவிட்டுச் சுபாசுபமானகர்மத்தையும்தள்ளிவிட்டு ஸத்யத்தையும் மித்யையையும் தள்ளிவிட்டவன் இவ்விதம் நிர்க்குணனாகிறான். சிந்திக்கமுடியாதவரும் [1]சேதனர்களில் ஸூக்ஷ்மமான அநிருத்தர் முதலியநான்காயிருப்பவருமான அவரை அறிந்து எவன் மிகவும் சாந்தனாகி ஸஞ்சரிக்கிறானோ அவன் மங்களரூபமானபுருஷனை அடைவான். சில [2]பண்டிதர்கள் பரமாத்மாவை ஒருவனாகச் சொல்லுகிறார்கள். ஆத்மாவைவிசாரிக்கின்ற [3]மற்றவர்களும் அப்படியே பிரத்யகாத்மாவை ஒரேஆத்மாவானபரமாத்மாவாகச் சொல்லுகின்றார்கள். அவைகளில் பரமாத்மாவானவன் நித்யனும் நிர்க்குணனுமாகக் கருதப்படுகிறான். அவனே நாராயணனாகஅறியத்தக்கவன். அவன் ஸர்வாத்மாவானபுருஷன். அவன் ஜலத்தினால் தாமரையிலை பற்றப்படாததுபோல வினைப்பயன்களால் பற்றப்படுகிறதில்லை. [4]கர்மத்தையே உருவமாகக்கொண்டமற்றவன் பந்தமோக்ஷங்களோடு கூடுகிறான். அவன் [5]பதினேழுடன்கூடியஸங்காதத்தோடும் கூடுகிறான்.

---

1 'பாவஸூக்ஷ்மம்' என்பது மூலம். 2 யோகிகள்.

3 ஸாங்கியர்கள். 4 கர்மங்களில்பற்றுள்ள.

5 பதினேழுதத்வங்களின்கூட்டமானலிங்கசரீரம்.

இவ்விதம் பலவிதமாயிருக்கிறபுருஷன் உமக்குக் கிரமமாகச் சொல்லப்பட்டான். ஐயா! எல்லாமானதும் (ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாரமான) உலகவியாபாரத்திற்குஸ்தானமும் அறியவேண்டியதும் மேலானதும் சாஸ்திரங்களால்அறிவிக்கக்கூடியதும் நினைக்கிறதும் நினைக்கப்படுவதும் புஜிப்பதும் புஜிக்கக்கூடியதும் முகருகிறதும் முகரத்தக்கதும் ஸ்பரிசிக்கிறதும் ஸ்பரிசிக்கத்தக்கதும் பார்க்கிறதும் பார்க்கத்தக்கதும் கேட்கிறதும் கேட்கத்தக்கதும் அறிகிறதும் அறியத்தக்கதும் ஸகுணமும் நிர்க்குணமும் பிரதானமும் அழிவற்றதும் அநாதியும் விகாரமற்றதுமானது பிரம்மமென்று நன்குசொல்லப்பட்டிருக்கிறது. பிரம்மாவான எனக்கு முந்தியஸ்ருஷ்டியைச்செய்தஅதைப் பிராம்மணர்கள் [1] அநிருத்தனுகச் சொல்லுகிறார்கள். உலகத்தில் வேதத்தில் சொல்லப்பட்டதும் நல்லதும் இஷ்டமானபயனுடையதுமாயிருக்கிற கர்மமும் அவருக்கு த்ருப்தியுண்டுபண்ணத்தக்கது. எல்லாத்தேவர்களும் மிகவும்அடக்கமுடையமுனிவர்களும் பிராக்வம்சம்என்கிறஸ்தானத்தில் யஜ்ஞபாகத்திற்குரியஅவரை உபாஸிக்கின்றார்கள். ஓ! புத்திரரே! முந்தியுண்டானவனும் பிரஜைகளுக்குஈச்வரனும் பிரம்மாவுமான நான் அவரிடமிருந்து உண்டானவன். நீரும் என்னிடமிருந்து உண்டானீர் என்னிடமிருந்து சராசரமானஉலகமும் உபநிஷத்துக்களுடன்கூடியஎல்லாவேதங்களும் உண்டாயின. நான்காகப்பிரிந்த அந்தப்புருஷர் எப்படி விரும்புகிறாரோ அப்படி [2]விளையாடுகிறார். இவ்விதம் தேவரான அந்தப்பகவான் தம்உருவமானஅறிவினால் அறிவித்தார். ஓ! புத்திரரே! கேட்டவரானஉமக்கு ஸாங்கியசாஸ்திரத்திலும் யோகசாஸ்திரத்திலும் உள்ளபடி சொன்னேன் இது உண்மையாகச் சொல்லப்பட்டது' என்றார்" என்று சொன்னார்.

---

முந்நூற்றுபத்திரண்டாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)

(நாரதர், இந்திரனிடம் வந்ததும் அவன் அவரைக் கதை சொல்லச்சொல்லியதும்.)

தர்மபுத்திரர் பீஷ்மரைநோக்கி, "பிதாமஹரே! உம்மால் மோக்ஷதர்மத்தைச்சேர்ந்த சுபமானதர்மங்கள் சொல்லப்பட்டன. பிரம்மசாரிமுதலானஆச்ரமிகளுக்குரிய சிறந்ததர்மத்தை நீர் எனக்குச் சொல்லவேண்டும்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

---

1 அஹங்காரம். 2 லீலைசெய்கிறார்.

"எல்லா ஆஸ்ரமங்களிலும் விதிக்கப்பட்ட தர்மம் [1]ஸத்தியமும் [2]ஸத்தியமானபயனையளிப்பதுமானதே. இவ்வுலகில் அநேகவழிகளையுடைய தர்மத்தின் அனுஷ்டானம் வீண்போகாது. ஓ! பாரதஸ்ரேஷ்டனே! எவன் எவன் எந்த எந்தவிஷயத்தில் உறுதியை அடைகிறானோ அவனவன் அதைஅதையே வெகுமதிக்கிறான். மற்றதை வெகுமதிப்பதில்லை. ஓ! அரசனே! முன்காலத்தில் நாரதமகரிஷியால் இந்திரனுக்குச்சொல்லப்பட்ட இந்தக்கதையை நீ என்னிடமிருந்து கேள். அரசனே! ஸித்திபெற்றவரும் மூவுலகங்களுக்கும் ஸம்மதருமான நாரதமஹாமுனிவர் வாயுவானது தடையில்லாமல் ஸஞ்சரிப்பதுபோலக் கிரமமாக உலகங்களில் ஸஞ்சரித்தார். பெரிய வில்லுடையவனே! அவர் ஒரு ஸமயம் தேவராஜனுடைய அரண்மனையை அடைந்தார்; இந்திரனால்பூஜிக்கப்பட்டு ஸமீபத்தைஅடைந்து உட்கார்ந்தார். அவகாசம்செய்துகொண்டு உட்கார்ந்திருக்கிற அவரைநோக்கிச் சசீபதியான அவன், 'ஓ! குற்றமற்றமகாமுனிவரே! ஏதாவது ஆச்சரியம் உம்மால் பார்க்கப்பட்டிருக்கிறதா? பிரம்மரிஷியே! சராசரங்களோடுகூடிய மூன்றுஉலகத்தையும் நீர் பார்த்திருக்கிறீர். ஸித்திபெற்றவரானநீர் குதூஹலத்துடன் எந்நாளும் ஸாக்ஷிபோல ஸஞ்சரிக்கிறீர். ஓ! தேவரிஷியே! உலகில் உமக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. (ஆகையால்) கேட்கப்பட்டதையோ அனுபவிக்கப்பட்டதையோ பார்க்கப்பட்டதையோ எனக்குச் சொல்லும்' என்றுகேட்டான். மன்னவ! பேசுகிறவர்களில்சிறந்தவரானநாரதர் அடுத்துஉட்கார்ந்திருக்கிற அந்த இந்திரனுக்குவிரிவானகதையைச் சொன்னார். பிராம்மணோத்தமராகிய அவர் கேட்கப்பட்டபொழுது எந்தமுறையாகச் சொன்னாரோ அப்படி நீ என்னிடமிருந்துகேள்.

---

## முந்நூற்றறுபத்துமூன்றாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)

(ஒருபிராம்மணர்வீட்டுக்கு ஓர் அதிதி வந்ததும் அவர் அவரை உபசரித்ததும்.)

அரசனே! கங்காநதியின்தென்கரையில் மஹாபத்மமென்கிற சிறந்தபட்டணத்தில் நிலையாயிருப்பவரும் அழகுடையவரும் [3]அத்ரி

---

1 அவசியம் பயனளிக்குந்தன்மை. 2 நெடுநாளிருக்கிறபயன்.

3 'ஸோமாந்வயே' என்பது மூலம்.

வம்சத்தில்பிறந்தவரும் மனத்தைஜயித்தவரும் பார்க்கவகோத்ரமுடையவரும் தர்மத்தைநித்யமாகக்கொண்டவரும் கோபத்தைவென்றவரும் எப்பொழுதும் திருப்தியுடையவரும் இந்திரியங்களை ஜயித்தவரும் தவத்திலும்தம்வேதத்திலும்பற்றுதலுள்ளவரும் மெய்சொல்லுகிறவரும் ஸஜ்ஜனர்களுக்குஸம்மதமானவரும் நியாயமாகக்கிடைத்ததனத்தோடும் தம்சீலத்தோடும்கூடினவருமான ஒருபிராம்மணர் இருந்தார். ஓ! அரசனே! ஞாதிகளாலும் ஸம்பந்திகளாலும் விரிவாயும் புத்திரபௌத்ரர்களால் நிலைபெற்றதாயும் புகழ்பெற்றதாயுமிருக்கிற பெரியகுலத்தில் உயர்வானஜீவனத்தை அடைந்தஅவர் அநேகம் புதல்வர்களைப்பெற்று விரிவானகர்மத்திலிருக்கிறவரும் குலதர்மத்தையடுத்தவருமாகித் தர்மத்தைச்செய்வதில் நிலையுள்ளவராயிருந்தார். ஒருகால் அவர் வேதத்தில்சொல்லப்பட்டதும் சாஸ்திரத்தில் சொல்லப்பட்டதும் சிஷ்டர்களாலனுஷ்டிக்கப்பட்டதுமான மூன்று விதமானதர்மத்தையும் மனத்தால்ஆராய்ந்து, 'எந்தக்கர்மத்தைச் செய்தால் "எனக்குச் சுபம் கிடைக்கும்? எது கர்மஸாத்தியம்? எது மேலானஸ்தானம்?' என்று இவ்விதம் நித்தியமாக ஆராய்கிறவராயிருந்தும் நிச்சயத்தை அடையவில்லை. இவ்விதம் அவர் ஆராய்ந்து கொண்டிருக்கும்போது, ஒருநாள் சிறந்ததர்மத்தையடைந்தவரும் மிகவும்ஸமாதியுற்றவருமான ஒருபிராம்மண அதிதி வந்தார். அவர் அவருக்கு (விசிறிவீசுதல்முதலான) கிரியையுடன்கூடினஸாதனத்தால்பூஜையைச்செய்தார். ஸ்ரமம்நீங்கினவரும் செவ்வையாகஉட்கார்ந்திருக்கிறவருமான அவரைநோக்கிப் பின்வரும்வசனத்தைச் சொல்லலானார்.

---

மூந்நூற்றறுபத்துநான்காவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

(ப்ராம்மணர் மோக்ஷோபாயத்தைக்கேட்க, அதிதி தமக்கும் அது ஸம்சயமாயிருப்பதாகச் சொல்லியது.)

'ஓ! குற்றமற்றவரே! இந்தப்பூஜையைச்செய்து உம்முடைய வாக்கின்மாதுரியத்தால் மித்திரத்தன்மையை அடைந்தநான் ஒன்று சொல்லுகிறேன். அதைக் கேளும். பிராம்மணஸ்ரேஷ்டரே! நானோ குடும்பகாரியத்தைப் [1]புத்திரனிடம்ஒப்பித்துவிட்டு மேலானமோக்ஷ

[1] வேறுபாடம்.

தர்மத்தைச் செய்யவேண்டும். வேதியரே! அதற்கு மார்க்கம் ஏதாகும்.? நான் 'ஆத்மாவையடைந்து ஒருவனாக ஆத்மாவிலிருப்பைப் பார்க்கவிரும்புகிறவனாயிருந்தும் சாதாரணமானகுணங்களாலே கட்டப்பட்டு அதைப் பார்க்கவில்லை. புத்திரப்பயனை ஆஸ்ரயித்து இந்தஎன்னுடையபிராயமான து செல்லுவதற்குமுன்னே பரலோகத்திற்கு ஹிதமானபாதேயத்தைத் தேடிக்கொள்ளவிரும்புகிறேன். 'இந்தஉலகத்திலுள்ளபண்டங்களில் [1]ஏதில் அக்கரையையடையவிரும்புகிறஎனக்குத் தர்மமயமானஓடம் (ஏற்படும்?' என்கிற) இந்தப்புத்தி உண்டாயிற்று. உலகத்தில் சேர்த்துவைக்கப்பட்டவைகளும் பிறகு பிரிந்துபோகும்படிசெய்யப்பட்டவைகளுமான பிராணிஸமூகங்களைப்பார்த்தும் பிரஜைகளுக்குமேலே சலிக்கும்படிசெய்யப்பட்ட (ரோகங்களாகிற) தர்மராஜனுடையகொடிச்சீலையின்வரிசையைப்பார்த்தும் (அன்னமுதலிய) போகங்களிலாசைகளால் பிறரைப்பிரார்த்திக்கின்ற [2]யதிகளையும் பார்த்தும் என்னுடையமனம் (ஒன்றிலும்) பற்றவில்லை. ஓ! அதிதியே! ஆகையால் புத்தியின்பலத்தைப்பற்றிய தர்மத்தினாலே நீர் என்னைத் தர்மத்தில் ஆஜ்ஞாபிக்கவேண்டும்' என்றுசொன்னார். மிகவும்அறிவுடையவரான அந்தஅதிதியானவர் தர்மமாகச்சொல்லுகிற அவருடையவார்த்தையைக் கேட்டு அவரைநோக்கி இனியசொற்களால் அழகாக மறுமொழிசொல்லலானார். 'நானும் இந்தவிஷயத்தில் மயக்கமுடையவனாயிருக்கிறேன். எனக்கும் (இதைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்கிற) இந்தஎண்ணம் இருக்கிறது. அநேகமார்க்கங்களுள்ள [3]ஸ்வர்க்கத்தின் விஷயத்தில் நல்லநிச்சயத்தை அடையவில்லை. சிலர் மோக்ஷத்தை ஸ்லாகிக்கின்றார்கள். சிலவேதியர்கள் யாகத்தின்பயனைப் புகழ்கின்றார்கள். சிலர் வானப்பிரஸ்தாஸ்ரமத்தை அடுத்திருக்கின்றார்கள். சிலர்கிருகஸ்தாஸ்ரமத்தை அடுத்திருக்கின்றார்கள். சிலர் ராஜதர்மத்தை அடுத்திருக்கின்றார்கள். சிலர் தமது [4]பயனை ஆஸ்ரயித்திருக்கின்றார்கள். சிலர் குருவின் (பணிவிடைமுதலான) தர்மங்களை ஆஸ்ரயித்திருக்கின்றார்கள். சிலர் மௌனத்தை ஆஸ்ரயித்திருக்கிறார்கள். சிலர் மாதாபிதாக்களுடையசுஸ்ருஷையைச்செய்து ஸ்வர்க்கத்தை அடைந்தார்கள். சிலர் அஹிம்ஸையினாலும் சிலர் ஸத்தியத்தினாலும் ஸ்வர்க்கத்தை அடைந்தார்கள். சிலர் யுத்தத்தில்எதிர்த்துநின்று கொல்லப்பட்டு ஸ்வர்க்கத்தை

---

1 எந்த ஆஸ்ரமத்தில்? 2 வேறுபாடம்.

3 மோக்ஷம் ஸ்வர்க்கம் இரண்டுக்கும் பொது.

4 இகத்திலுள்ளபயனை.

அடைந்தார்கள். சிலர் உஞ்ச்விருத்திகளாலே ஸித்திபெற்று ஸ்வர்க்கமார்க்கத்தையடைந்தார்கள். சுபகர்மமுடையவர்களும் புத்திமான்களும் ஸந்தோஷமுள்ள மனமுடையவர்களும் இந்திரியங்களை ஜயித்தவர்களுமான சிலர் வேதாத்தியயனத்திற்குரிய விரதங்களில் பற்றுள்ளவர்களும் வேதாத்தியயனத்தில் முயன்றவர்களுமாகி ஸ்வர்க்கத்தை அடைந்தார்கள் நேர்வழியுடையவர்களும் சுத்தமனமுடையவர்களுமான சிலர் ருஜுத்தன்மையில்லாதஜனங்களால் உபத்திரவிக்கப்பட்டும் ருஜுத்தன்மையை விடாதவர்களாகி ஸ்வர்க்கத்தின்மேல் ஸ்தாபிக்கப்பட்டார்கள். இவ்விதம் ஸ்பஷ்டமாயிருக்கிறதர்மமார்க்கங்களாலே பலவிதமானஜனங்களாலே காற்றினால் மேகத்தின்வரிசை கலக்கப்படுவதுபோல என்னுடையபுத்தியும் கலக்கப்பட்டதாயிருக்கிறது.

---

## முந்நூற்றறுபத்தைந்தாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)

(அதிதி, ப்ராம்மணனைப் பத்மனிடம் போகச்சொல்லியது.)

ஓ! வேதியரே! ஆனாலும் நான் உமக்கு என்னுடையகுருவினால் எப்படிச் சொல்லப்பட்டதோ அப்படிக் கிரமமாக உபதேசத்தைச்செய்கிறேன். அர்த்தத்தின்தத்வத்தை என்னிடமிருந்து கேளும். கோமதீநதீதீரத்தில் நைமிசமென்கிறவனத்தில் முன்ஸ்ருஷ்டியில் தர்மமயமானசக்கரமானது பிரவிருத்திக்கும்படி செய்யப்பட்டது. அவ்விடத்தில் பெரிதான [1]நாகச்சுனை ஒன்றிருக்கிறது. ஓ! பிராம்மணசிரேஷ்டரே! அவ்விடத்தில் எல்லாத்தேவர்களாலும் யாகம் செய்யப்பட்டது. அந்தவிடத்தில் அரசர்களில்சிறந்தவனான மாந்தாதா இந்திரனை ஜயித்தான். அவ்விடத்தில் தர்மபுத்தியுடைய பெரியஒருநாகன் வாஸஞ்செய்துகொண்டிருக்கிறான். ஓ! பிராம்மணஸ்ரேஷ்டரே! பத்மநாபனென்கிறபெயருடையவனும் பத்மனென்றே பிரஸித்திபெற்றவனும் கர்மம் உபாஸனம் ஞானமென்கிற மூன்றுவிதமானமார்க்கத்திலும் நிலைபெற்றவனுமான அந்தமஹாநாகன் வாக்கினாலும் செய்கையினாலும் மனத்தினாலும் பிராணிகளுக்குச் சந்தோஷத்தைச் செய்கின்றான். அவன் விஷமத்திலிருப்பவையும் ஸமநிலையிலிருப்பவையுமான நேத்திரமுதலானவற்றை ஸாமதானபேததண்டங்

---

1 'நாகபுரம்' என்பது வேறுபாடம்.

களால் நான்குவிதமாயிருக்கும்படி தியானத்தால் ரக்ஷிக்கிறான். நீர் விதியினால் அவனிடம் சென்று உமது இஷ்டத்தைக் கேட்கக் கடவீர். அவன் உமக்குச் சிறந்த தர்மத்தைத் தெரிவிப்பான்; பொய்யைச் சொல்லமாட்டான். அந்த நாகன் 'எல்லா அதிதிகளையு முடையவனும் புத்தியிலும் சாஸ்திரத்திலும் வல்லவனும் உவமையற்ற வைகளும் விரும்பப்பட்டவைகளுமான எல்லா குணங்களும் பொருந் தியவனும் இயற்கையால் எப்பொழுதும் ஜலம்போலத் தெளிவுள்ள வனும் எப்பொழுதும் அத்தியயனத்தில் பற்றுள்ளவனும் தவம் அடக் கம் மேலான சீலம் இவைகளுள்ளவனும் யாகசீலமுடையவனும் தானத் தைச் செய்கிறவனும் பொறுமையுள்ளவனும் மேலான நடையிலநிலைத் திருப்பவனும் உண்மையான வாக்குடையவனும் அஸூயையற்ற வனும் நல்லசீலமுடையவனும் இந்திரியங்களையடக்கினவனும் (தேவர் களுக்கும் பிராம்மணர்களுக்கும் கொடுத்து) மிச்சமான அன்னத்தைப் புசிப்பவனும் வார்த்தையால் எல்லாருக்கும் அனுகூலமாயிருப்பவனும் ஹிதத்தாலும் ருஜுத்தன்மையினாலும் உயர்ந்தவனும் நன்மைதீமைக ளையறிந்தவனும் ஒருவரோடும் வைரத்தைச் செய்யாதவனும் பிராணிக ளின் ஹிதத்தில் முயன்றவனும் கங்கையின் மடுவிலுள்ள ஜலத்தில் குல க்கிரமமான வாஸத்தையுடையவனுமாயிருக்கிறான்' என்று சொன்னார்.

---

## முந்நூற்றறுபத்தாறுவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம். (தொடர்ச்சி.)

(பிராம்மணர் நாகனிடம் சென்றது.)

அந்தப்பிராம்மணர் அதிதியைநோக்கி, 'என்னால் கேட்கப் பட்ட இந்த உம்முடையவார்த்தையானது பெரியசுமையைச்சுமப்ப வனுக்குப் பெரியசுமைதாங்கிபோல மிகவும் களைப்பைநீக்குகிறது. வழிநடந்து ச்ரமப்பட்டவனுக்குச் சயனம்போலவும் நின்றுசிர மத்தையடைந்தவனுக்கு ஆஸனம்போலவும் தாகமுள்ளவனுக்குத் தீர்த்தம்போலவும் பசியால்வருந்துகிறவனுக்குப் போஜனம்போல வும் விரும்பியபொருள் வேண்டியகாலத்தில் கிடைத்ததுபோலவும் புத்திரனைவிரும்புகிறவனும் விருத்தனுமாயிருப்பவனுக்குப் புத்திரன் போலவும் மனத்தால்நினைக்கப்பட்டவனை பிரீதியுள்ளஸ்நேகித னுடையதர்சனம்போலவும் உம்மால் இந்தவார்த்தையானது சொல்-

லப்பட்டது. அது என்னை மிகவும்ஸந்தோஷிக்கச்செய்கிறது. மிகவும் அறிவையுண்டுபண்ணுகிற வார்த்தையினாலே எனக்கு இந்த உபதேசமானது செய்யப்பட்டது. அதை ஆகாயத்தில் செலுத்தப்பட்ட கண்ணையுடையவன்போல (தடையின்றி) பார்க்கவுஞ்செய்கிறேன்; யோசிக்கவுஞ்செய்கிறேன். நீர் எனக்கு எவ்விதம் சொல்லுகிறீரோ அவ்விதமே செய்வேன். 'ஓ! ஸாதுவே! இந்தராத்திரி நீர் என்னுடன்கூட வஸிக்கக்கடவீர். இதோ ஸூர்யபகவான் கிரணமடங்கினவனும் கீழ்நோக்கினவனுமாயிருக்கிறான். ஆகையால் நீர் ஸுகமாகவஸித்துச் சிரமபரிகாரம்செய்துகொண்டு நாளைக்காலையில் போகலாம்' என்றுசொன்னார். ஓ! பகைவர்களைக்கொல்பவனே! பிறகு அந்தஅதிதியானவர் அந்தவேதியரால ஆதித்யம்செய்யப்பட்டு அந்த ராத்ரி அவரோடு வஸித்தார். அப்பொழுது தர்மத்தோடு கூடியதத்வத்தைப்பற்றிப் பேசிக்கொண்டிருப்பவர்களான அவர்களுக்கு ஸுகமாக அந்தராத்ரிமுழுவதும் பகலுக்கொப்பாகச் சென்றுவிட்டது. பிறகு விடியற்காலத்தில் அந்தஅதிதியானவர் தம்காரியத்தைவிரும்புகிறவரான அந்தவேதியரால் சக்திக்குத்தக்கபடி பூஜிக்கப்பட்டார். பிறகு தர்மத்தைச்செய்கிறவரும் ஸுகிருதத்தில் ஒரேவிதமானஉறுதியுடையவரும் (செய்யவேண்டிய கர்மத்தில்)நிச்சயத்தைச்செய்தவருமான அந்தவேதியர் பந்துக்களால் அனுமதிசெய்யப்பட்டு உபதேசிக்கப்பட்டபடி ஸமயத்தில் ஸர்ப்பங்களிற்சிறந்தவனான பத்மனுடையகிருகத்தை அடைந்தார்.

---

## முந்நூற்றறுபத்தேழாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)

(ப்ராம்மணர் நாகனுக்குத் தம்வரவைத்தெரிவிக்கும்படிசொல்லி மணல்திட்டில் வஸித்தது.)

அந்தவேதியர் விசித்திரமானவனங்களையும் புண்ணியதீர்த்தங்களையும் தடாகங்களையும் கிரமமாகஅடைந்து ஒருமுனிவரை அடைந்தார். பிறகு அந்தவேதியர் அந்தப்பிராம்மணரால்சொல்லப்பட்டபடி அந்தமுனிவரிடம் நாகத்தைக்குறித்து நியாயமாக வினவினார். அவர் முறைப்படிகேட்டுச் சென்றார். அர்த்தத்தையுணர்ந்தஅவர் நியாயப்

---

படி நாகத்தின் கிருகத்தையடைந்து, 'நான் வந்திருக்கிறேன்' என்று, 'போ' என்கிற சப்தத்தால் அழகானவார்த்தையைச் சொன்னார். அவருடைய அந்தவார்த்தையைக்கேட்டு ரூபமுடையவளும் தர்மத்தி லன்புடையவளும் பதிவிரதையுமான நாகபத்நியானவள் வந்து அந்த வேதியரைக் கண்டாள். தர்மத்தில்பற்றுள்ள அவள் அவருக்கு விதிப் படி பூஜையைச் செய்தாள். 'நல்வரவா?' என்றுகேட்டுவிட்டு, 'நான் என்னசெய்யவேண்டும்?' என்றும்சொன்னாள். வேதியர் அவளை நோக்கி, 'உன்னுடைய இனியவார்த்தையாலே சிரமபரிகாரத்தை யடைந்தவனும பூஜிக்கப்பட்டவனுமானேன். பெண்ணே! உத்தம னும் தேவனுமான நாகனைப் பார்க்கவிரும்புகிறேன். இதுதான் எனக் குப் பெரியகாரியம். இதுதான் எனக்குப் பெரியவிருப்பம். இந்தப் பயனுக்காகத்தான் இப்பொழுது நான் நாகனுடைய ஆசிரமத்தை அடைந்தேன்' என்றுசொன்னார். நாகபாரியை, 'அந்தணரே! பூஜ்ய ரான என்னுடையநாயகர் ஸூர்யனுடையரதத்தைவகிப்பதற்காக ஒருமாஸம் ஸஞ்சரிக்கப்போயிருக்கிறார்; ஏழெட்டுநாட்களில் சந் தேகமின்றி வந்துவிடுவார். பூஜ்யரானஎன்நாயகர் பாதேசஞ்சென் றிருப்பதை நீர் தெரிந்துகொள்ளும். வேறு என்னசெய்யவேண்டும்? அதை எனக்குச் சொல்லும' என்றுசொன்னாள். பிராமமணர், 'ஓ! பதிவிரதையே! நான் இந்தநிச்சயத்தால் இவ்விடம் வந்தேன். தேவியே! அவன்வரவைஎதிர்பார்த்துக்கொண்டு பெரிதான இந்த வனத்தில் வசிப்பேன். அவன்வந்தவுடனே ஞாபகமாக நான் இவ்வி டம்வந்ததாகத் தெரிவிக்கவேண்டும். அவன்வந்தவுடன் நான்வந்த செய்தியை நீ அவனிடம்சொல்லவேண்டும். நானும் கோமதீநதியி னுடைய அழகான இந்தமணல்திட்டில் அல்பமான ஆகாரத்தைச் செய்துகொண்டும் நீ சொன்னகாலம்வரையில் எதிர்பார்த்துக்கொண் டும் வஸிப்பேன்' என்று சொன்னார். பிறகு வேதவித்தும் வேதியர்க ளில்சிறந்தவருமான அந்தவேதியர் அந்தநாககன்னிகையைப் பல முறைஸமாதானஞ்செய்துவிட்டு. நதியின்மணல்திட்டையடைந்தார்.

---

1 'பதினைந்து' என்றும்கொள்ளலாம்.

முந்நூற்றறுபத்தெட்டாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)



(நாகனைச்சேர்ந்தவர்கள் போஜனம்செய்யும்படி ப்ராம்மணருக்குச் சொல்லியதும் அவர் மறுத்ததும்.)

ஓ! நரசிரேஷ்டனே! பிறகு தவத்தையுடையவரும் ஆகாரமில்லாமல்வஸிப்பவருமான அந்தவேதியருக்காக அந்தநாகர்கள் துக்கத்தை அடைந்தார்கள். இந்தப்பத்மனென்கிற நாகனுடையபந்துக்களும் ஸகோதரர்களும் புத்திரர்களும் பத்னியும் எல்லோரும் கூட்டமாகச் சேர்ந்துகொண்டு அந்தவேதியரிடம் சென்றார்கள். அவர்கள் மணல்திட்டில் ஏகாந்தத்தில் உறுதியான விரதமுடையவரும் நன்றாக உட்கார்ந்திருப்பவரும் ஆகாரமற்றவரும் மந்திரஜபத்தில்பற்றுள்ளவருமான அந்தப்பிராம்மணரைக் கண்டார்கள். அந்தப்பந்துக்களெல்லோரும் அந்தவேதியரையடைந்து அடிக்கடி பூஜித்து ஐயமற அதிதிஸத்காரத்திற்குரியவார்த்தையைச் சொல்லலானார்கள். 'ஓ! தபோதனரே! இங்குவந்தஉமக்கு இப்பொழுது ஆறுவதுதினமாய்விட்டது. தர்மத்திலன்புள்ளவரே! ஆகாரத்தைக்குறித்து ஒன்றும் சொல்லவில்லை. எங்களைக்குறித்து வந்தவராயிருக்கிறீர். நாங்களும் உம்முடையஸமீபம் வந்திருக்கிறோம். உமக்குஇஷ்டமும் நிரம்பியதுமான அதிதிபூஜையை நாங்கள் செய்யவேண்டும். ஓ! பிராம்மணர்களில்சிறந்தவரான பிராம்மணரே! ஆகாரநிமித்தமாகக் கிழங்கையோ கனியையோ சருகையோ ஜலத்தையோ அன்னத்தையோ நீர் புஜிக்கவேண்டும். ஆகாரமில்லாமல் நீர் வனத்தில்வஸிப்பதால் குழந்தைகள்முதல் முதியவர்கள்வரையுமுள்ள இவர்களெல்லோரும் தர்மத்தின்ஸங்கரத்தாலே பீடிக்கப்படுகிறார்கள். நாகர்களானஎங்களுள் ப்ருணஹத்திபண்ணினவனும் இந்தக்குலத்தில் தேவதைகளுக்கும் அதிதிகளுக்கும் பந்துக்களுக்கும்முந்தி ஆகாரம்செய்தவனும் ஒருவனுமில்லை' என்றுசொன்னார்கள். வேதியர் 'உங்களுடைய உபதேசத்தாலேயே நான் ஆகாரம்செய்தவன்போலானேன். நாகனுடைய வரவைக்குறித்து இரண்டுகுறையப் பத்துநாளுண்டு. எட்டுராத்திரி சென்றதன்பிறகும் நாகன்வராமலிருந்தால் அப்பொழுது ஆகாரத்தைச்செய்வேன். இந்தவிரதமானது அவனுடையவரவுக்காக ஏற்பட்டது. நீங்கள் வருத்தத்தையடையவேண்டாம். வந்தபடி போகலாம். அவனுடையவரவுக்காக இது எல்லாம் ஏற்பட்டது. இதை

இப்பொழுது நீங்கள் கெடுக்கவேண்டாம்' என்று சொன்னான். ஓ! அரசனே! அந்த நாகர்கள் அந்தப் பிராம்மணரால் அநுமதிசெய்யப் பட்டும் பயனையடையாதவர்களாகத் தங்கள் வீடுகளுக்குச் சென்றார்கள்.

---

முந்நூற்றுமுப்பத்தொன்பதாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)

(நாகன்வந்ததும் அவன்மனைவி அவனை ப்ராம்மணரிடம்போகச் சொல்லியதும்.)

பிறகு பலதிதிகளையுடையகாலமானது பூர்ணமானபொழுது பத்மனென்கிறநாகன் தன்காரியத்தைச்செய்து ஸூர்யனால் அனுமதி கொடுக்கப்பெற்றுத் தன்வீட்டுக்கு வந்தான். அவன் மனைவி அவனைப் பாதப்ரக்ஷாலனமுதலான பணிவிடைகளாலே உபசரித்தாள். (அப்பொழுது) நாகன் தன்ஸமீபத்தைஅடைந்த அந்தப்பதிவிரதையை நோக்கி, 'கல்யாணி! தேவதைகளையும் அதிதிகளையும் பூஜித்துக் கொண்டிருக்கிறாயா? முன்சொல்லப்பட்டவிதியுடன் கர்மங்களில் முயற்சியுடையவளாயிருக்கிறாயா? * * * பயனில்லாததானஎன்பிரிவினிமித்தம் பெண்புத்தியால் (மனம்) மெலிந்தவளாகித் தர்மஸேதுவைவிடாமலிருக்கிறாயா?' என்று கேட்டான். நாகபத்னியானவள், 'சிஷ்யர்களுக்குக் குருசுச்ரூஷையும் வேதியர்களுக்கு வேதங்களை ஓதுவதும் தொண்டர்களுக்கு எஜமானனுடைய கட்டளையைச்செய்வதும் அரசனுக்கு உலகங்களைக்காப்பதும் க்ஷத்ரியஜாதிக்கு எல்லாப்பிராணிகளையும் ரக்ஷிப்பதும் இவ்வுலகத்தில் தர்மமாகச் சொல்லப்படுகின்றன. வைசியர்களுக்கு அதிதிபூஜையுடையயாகவிருத்தியானது சொல்லப்படுகிறது. வேதியன்க்ஷத்ரியன் வைசியன் இவர்களுடைய பணிவிடையானது சூத்திரர்களின் கர்மா. ஓ! நாகர்களிற்சிறந்தவரே! எல்லாப்பிராணிகளுடைய ஹிதத்தையும் விரும்புவது கிருகஸ்தனுக்குரியதர்மம். நியமமுள்ள ஆகாரமும் எப்பொழுதும் கிரமப்படிவிரதானுஷ்டானமும் இந்திரியங்களுடையதர்ம ஸம்பந்தத்தினாலுண்டான விசேஷதர்மம். 'நான் யாருடையவன்? எங்கிருந்துவந்தவன்? யார்? இம்மையில் என்னைச்சேர்ந்தவன் யாரவன்?' என்கிற இவ்விதமானபயனுள்ளபுத்தியுடன் எப்பொழுதும் மோக்ஷாப்ராமமானஸந்யாஸத்தில் வஸிக்கவேண்டும். பத்தினிக்குப்

பதிவிரதாதர்மமானது பரமதர்மமாகச் சொல்லப்படுகிறது. ஓ! நாகர்களிற்சிறந்தவரே! உம்முடைய உபதேசத்தால் அதை நான் உண்மையாக அறிகிறேன். தர்மத்தையுணர்ந்தவளானநான், நீர்தர்மத்தை நித்தியமாகக்கொண்டிருத்தலால் ஸன்மார்க்கத்தை விட்டுவிட்டுக் கெட்டமார்க்கத்தை எப்படி அடைவேன்? ஓ! மஹாபாக்கியமுள்ளவரே! தேவதைகள்விஷயத்தில் தர்மானுஷ்டானமானது குறைவுற தில்லை. அதிதிகளுடையபூஜையிலும் சோம்பலில்லாமல் எந்நாளும் முயற்சித்துவருகிறேன். ஆனால் இவ்விடம் ஒருபிராம்மணர்வந்து ஏழுஎட்டுநாள்கள்சென்றுவிட்டன. அந்தக்காரியத்தையும் என்னிடம் சொல்லவில்லை. உம்முடையதரிசனத்தை விரும்புகின்றார். அந்தப்பிராம்மணர் கோமதீநதியின்மணல்திட்டில் உம்மைப்பார்ப்பதில் விருப்பமுடையவராகி வேதத்தைஆவிருத்திசெய்துகொண்டு கடுமையானவிரதத்துடன் உட்கார்ந்திருக்கிறார். நாகர்களிற்சிறந்தவரே! அவர், 'நாகச்ரேஷ்டர்வந்தவுடன் என்னிடம் அவரை அனுப்ப வேண்டும்' என்று உறுதியாக என்னிடம் ஸமாதானம்சொன்னார். ஓ! மகாபுத்திமானே! நீர் இதைக்கேட்டு அவ்விடம் போகவேண்டும். ஓ! கண்ணைச்செவியாயுடையவரே! அவருக்குத்தரிசனம் கொடுப்பதற்கும் தக்கவராகிறீர்' என்றுசொன்னாள்.

---

முந்நூற்றேழுபதாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)

(நாகன்கோபித்ததும் அவன்மனைவி அவனை ஸமாதானஞ்செய்து ப்ராம்மணரிடம்போகச்சொல்லியதும்.)

— பீஷ்மர் கூறு, நாகன் மனைவியைநோக்கி, 'சுத்தமானபுன்சிரிப்புள்ளவளே! பிராம்மணரூபத்துடனகூடினஅவரைக் கேவலம் மனுஷ்யரானவேதியராகவா அல்லது தேவராகவா யாராக நினைக்கிறாய்? கீர்த்திபெற்றவளே! எந்தமனிதன் என்னைப் பார்க்கவேண்டுமென்று விரும்பினால் (பார்க்கச்) சக்தனாவன்? காந்தியுடையவளே! தேவாஸுரகணங்களிலும தேவரிஷிகளிலும் பார்க்கருசியுள்ளஎவன் ஆஜ்ஞையைமுன்னிட்டு வார்த்தையைச் சொல்லுவான்? நாகர்களும் (அவர்களை) அடுத்தநாங்களும் மிக்கவீரியமுடையவர்களும் திவ்யகந்தத்தையுடையவர்களும் வேகமுடையவர்களும் வணங்கத்தக்கவர்களும் வரத்தையளிக்கின்றவர்களுமாயுள்ளவர்கள். விசேஷமாக மனிதர்

களுக்குப் பார்க்கத்தகாதவர்களென்று என்னுடையகருதது' என்று சொன்னான். நாகபத்தினியானவள், 'ஓ! வாயுவை அருந்துகிறவரே! உண்மையால் இவர் தேவரல்லவென்று நினைக்கிறேன். மிகவும்கோப முடையவரே! அவரிடம் ஒன்றை அறிகிறேன். என்னவென்றால் பக்திமானுயிருக்கிறார். வேறுஏதோகாரியத்தைவிரும்புகிற அவர் ஜலத்தையடைய விருப்பமுடையதும் மழையில்பிரியமுடைய துமா யிருக்கிற சாதகபக்ஷியானது மழையை எதிர்பார்ப்பதுபோல உம் முடையதரிசனத்தை எதிர்பார்க்கிறார்; உம்முடையதரிசனத்தைத் தவிர [1]ஒருவிக்கினத்தையும் எதிர்பார்க்கமாட்டார். நல்லவம்சத்தில் பிறந்தஉம்மைப்போன்ற ஒருவனும உபேக்ஷிக்கமாட்டான் ஆகை யால் கூடப்பிறந்தகோபத்தைத்தள்ளிவிட்டு நீர் அவரைப்பார்க்க வேண்டும். அவருடைய ஆசையைக்கெடுப்பதால் இப்பொழுது ஆத மாவைத்தகித்துக்கொள்ளாதீர். ராஜனும் ராஜகுமாரனும் ஆசையுடன்வந்தவர்களுடைய கண்ணீரைத துடையாவிட்டால பரு ணஹத்திசெய்தவர்களாகிறார்கள். ஒருவன் மௌனத்தால் ஞானபல லாபத்தையும் தானத்தால் பெரியபுகழையும் ஸத்யவார்த்தையால் பேசுந்திறமையையும் அடைகிறான்; பரலோகத்திலும் பூஜிக்கப்படு கிறான் பூமிதானத்தால் [2]ஆஸ்ரமத்திற்குநிகரானகதியை அடைகிறான். நியாயமாகத்தனலாபத்தைபபெற்றவன் பயனை அடைகிறான். இஷ்ட மும் பரவத்துடன்கூடாததும் ஆத்மாவுக்குஹிதமுமான கிரியையைச் செய்து ஒருவனும் நரகத்தையடைகிறதில்லையென்று தர்மத்தை யுணர்ந்தவர்கள் சொல்லுகிறார்கள்' என்றுசொன்னாள். நாகன், 'அபி மானங்களால் எனக்கு அஹங்காரமில்லை பதிவிரதையே! ஆனல் ஜாதியின்தோஷத்தால் ஸங்கற்பத்தாலுண்டான மிக்ககோபமானது உன் சொல்லாகிறதீயினாலே எரிக்கப்பட்டது. பதிவிரதையே! நான் கோபத்தைக்காட்டிலும் அதிகமான இருளைப் பார்க்கவில்லை. கோபத் தின்மிகுதியினால் நாகர்கள் நிந்தையை அடைகின்றனர். பிரதாப முடையவனும் அப்படியே இந்திரனுடன் சண்டைசெய்தவனுமான இராவணன் கோபத்தின்வசத்தையடைந்து யுத்தத்தில் ராமரால் கொல்லப்பட்டான். அந்தப்புரத்திலிருந்த கன்றை அபகரிக்கப்பட்ட தாகக்கேட்டு அவமானத்தாலுண்டானகோபத்தால் மனவருததம டைந்த கார்த்தவீரியனுடைய புத்திரர்கள் பரசுராமரால் கொல்லப் பட்டார்கள். ஜமதக்கினியின்புத்திரரான பரசுராமரால் இந்திரனுக்கு

[1] 'மற்றது லக்ஷ்யமில்லை' என்பது கருதது.

[2] ஆஸ்ரமங்களையெல்லாம் அனுஷ்டித்ததனாலுண்டாகும் பயன்.

நிஷ்டூரானவனும் மகாபலசாலியுமான காந்தவர்ப்பன் கோபத்தால யுத்தத்தில் கொல்லப்பட்டான். ஆகையால், உன்னுடையஇவ்விதமான வார்த்தையைக்கேட்டுத் தவங்களுக்குச்சத்துருவும் ச்ரேயஸ்ஸைக்கெடுப்பதுமானஇந்தக்கோபமானது என்றால் அடிக்கப் பட்டு நீண்டகண்களையுடையவளே! தர்மத்தின்கெடுதலில்லாதவளே! ...களையுடைய நீ எனக்கு மனைவியானதால் என்னை விசேஷமாக ச்லாகித்துக்கொள்ளுகிறேன். நான் எந்தவிடத்தில் அந்தப்ராம்மணர் இருக்கிறாரோ அவ்விடம் இப்பொழுதே போகிறேன். எல்லாவிதத்தாலும் என்னிடம் வார்த்தையைச் சொல்லி அவர் காரியத்தை நிறைவேற்றிக்கொண்டு போகட்டும்' என்று சொன்னான்.

---

## முந்நூற்றெழுபத்தோராவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)

(நாகன் ப்ராம்மணரைக்கண்டு பேசியது.)

நாகர்களுக்கதிபதியான அந்தப்பத்மன் இவ்விதம்சொல்லிவிட்டு மனத்தால் அந்தப்ராம்மணரையே தியானம்செய்துகொண்டும் அவர்காரியத்தைஆலோசித்துக்கொண்டும் அவரைக்குறித்து அவ்விடம் சென்றான். அரசனே! புத்திமானும் இயற்கையாகவே, தர்மத்தில் ஆவலுடையவனுமான அந்தநாகராஜன் அவரை அடைந்து, 'ஐயா! க்ஷமிக்கவேண்டும். சொல்லுகிறேன்: கோபத்தையடையாதீர். இவ்விடத்தில் யார்நிமித்தம் எதற்காக வந்தீர்? ஓ! பிராம்மணரே! உம்முடையஸ்நேகத்தால் நேரில் உம்மையடைந்து பிரஸ்னஞ்செய்கிறேன். நீர் ஏகாந்தமான கோமதிநதிதீரத்தில் யாரை உபாஸிக்கிறீர்?' என்று மதுரமானவார்த்தையைச் சொன்னான். பிராம்மணர், 'ஓ! நாகஸ்ரேஷ்டனே! நான் தர்மாரண்யனென்று பெயருள்ளவன். பத்மநாபனென்கிறநாகனைப்பார்ப்பதற்கு இவ்விடம்வந்திருக்கிறேன். இதை அறியக்கடவாய். அவனிடத்தில் எனக்குக்காரியமிருக்கிறது. நான் அவனில்லாதிருக்கையில் அவனுடையபந்துவினால், 'அவர் வெளியேபோயிருக்கிறார்' என்று கேட்டேன். அவனை, உழவன் மேகத்தை எதிர்பார்ப்பதுபோல எதிர்பார்க்கிறேன். யோகத்துடன்கூடியவனும் பீடைஇல்லாதவனுமானநான் அவனுக்குக் கிலேசத்தைப் போக்குவதும க்ஷேமத்தைச்செய்வதுமான அந்தவேதத்தை ஆவிருத்திசெய்கிறேன' என்றுசொன்னார். நாகன், "ஓ! மஹாபாக்கிய

முள்ளவரே! ஆச்சரியம். நீர் நல்லசீலமுடையவரும் ஸாதுவும் ஸஜ்ஜனர்களிடத்தில் அன்புள்ளவருமாயிருக்கிறீர். குற்றம்சொல்லத்தகாதவரானநீர் பிறரை ஸ்நேகத்துடன் பார்க்கிறீர். ஓ! பிராம்மணசிரேஷ்டரே! நீர் அடையவிரும்பிய அந்தநாகன் நானே. இஷ்டப்படி கட்டளைசெய்யும். நான் உமக்கு என்னபிரியத்தைச் செய்யவேண்டும்? நான் நீர் வந்திருப்பதை என்னுடையமனைவியால் கேட்டேன். ஓ! பிராம்மணரே! அதனால் உம்மைப்பார்க்க நானே வந்தேன். என்னை அடைந்தவரானநீரும் இப்பொழுது கிருதார்த்தராகத் திரும்பிப்போவீர். ஓ! பிராம்மணசிரேஷ்டரே! நீர் நம்பிக்கைவைத்து என்னை உம்முடையகாரியத்தில் பிரவிருத்திக்கச்செய்யலாம். நீர் உம்முடைய ஸௌக்யத்தைவிட்டுவிட்டு இவ்விடத்தில் என்னையே அனுஸரித்திருப்பதால் எங்களைஎல்லாம் விசேஷமாகக் குணங்களால் விலைக்குவாங்கிவிட்டீர்' என்றுசொன்னான். பிராம்மணர், 'ஓ! மஹாபாக்கியமுள்ளநாகனே! அர்த்தங்களை அறியாதவனானநான் உன்னுடையதரிசனத்தில்விருப்பமுடையவனும் ஒருவிஷயத்தைக்கேட்க விருப்பமுடையவனுமாக வந்தேன். நான் விஷயங்களினின்றும்திரும்பித் தன்னிடமிருப்பவனும் ஜீவாத்மாவுக்கு அடையவேண்டியஸ்தானமாயிருக்கிற பரமாத்மாவைத்தேடுகிறவனுமாகிச் சலிப்பதும் இருப்பிடத்தைவிரும்புகிறதும் பெரியஅறிவையுடையதுமானசித்தத்தை அடைந்தவனாயிருக்கிறேன். அப்படிப்பட்டநீ யசஸ்ஸுகளாகிறமத்திய கிரணங்களையுடையவைகளும் சந்திரகிரணங்களுடையஸ்பரிசத்திற்கு நிகரானவைகளும் உன்னால்பிரகாசிக்கச்செய்யப்பட்டவைகளும் மனத்திற்கினியவைகளுமான குணங்களாலே பிரகாசிக்கிறாய். ஓ! காற்றை அருந்துகிறவனே! உன்னைப்பார்த்தநான் ஒருப்ரச்னம்செய்கிறேன். நீ நிவ்ருத்திசெய்யவேண்டும். பிறகு காரியத்தைச் சொல்லுவேன். அந்தக்கேள்வியை நீ கேட்கக்கடவாய்.

---

## மூன்னூற்றெழுபத்திரண்டாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)

(நாகன் ஸூர்யனிடத்துள்ளஅதிசயங்களை ப்ராம்மணனுக்குச் சொல்லியது.)

முறைப்படி ஒரேஉருளையையுடைய சூரியனுடைய அந்தரதத்தைவஹிப்பதற்குப் போகிறாய். அவ்விடத்தில் நீ ஆச்சரியமான ஏதாவதொன்றைப்பார்த்திருந்தால் அதைச்சொல்லவேண்டும்' என்று

சொல்ல நாகன் அவனைநோக்கி, 'ஸூர்யபகவானென்பவர் அநேகஆச்சரியங்களுக்கு இருப்பிடம். அவரால் மூன்று உலகங்களிலும் ஒப்புக்கொள்ளப்பட்ட எல்லாப்பிராணிகளும் பிரவிருத்திக்கின்றன. அவருடையஆயிரங்கிரணங்களிலும் நன்றாகவசித்திபெற்றமுனிவர்கள் தேவர்களுடன்கூடக் கிளைகளில் பக்ஷிகள்போல ஆச்ரயித்துக்கொண்டு வஸிக்கிறார்கள். அவரிடமிருந்து பெரியவாயுவானது கிளம்பி அவருடையகிரணங்களை ஆச்ரயித்துக்கொண்டு ஆகாயத்தில் விருத்தியடைகின்றது. அவரிடமிருக்கும் இதைக்காட்டிலும் மேலானஆச்சரியம் என்னஇருக்கிறது? ஓ! பிராம்மணரிஷியே! பிரஜைகளுடையஹிதத்தைவிரும்பி அந்தவாயுவைப்பிரித்து வர்ஷாகாலங்களில் ஜலத்தை வருஷிக்கிறார். இதைக்காட்டிலும் வேறு என்ன ஆச்சரியம் வேண்டும்? அவருடையமண்டலத்தின்மத்தியிலிருந்துகொண்டு அந்தர்யாமியானவர் பரமமானகாந்தியினாலே ஜ்வலித்துக்கொண்டு, உலகங்களைப் பார்க்கிறார். இதைக்காட்டிலும் வேறு என்ன ஆச்சரியம்வேண்டும்? அவருக்குப்பாதம்போன்ற சுக்ரமென்றுபெயருடைய வெண்மையான கிரகமானது ஆகாயத்தில் மேகமாகி வருஷாகாலங்களில் ஜலத்தை விடுகிறது. இதைக்காட்டிலும் மேலானஆச்சரியம் என்னஇருக்கிறது? அவர் வர்ஷாகாலத்தில் பொழிந்தஜலத்தைத் திரும்பவும் வெண்மையானகிரணத்தால் எட்டு மாதங்கள் இழுக்கிறார். இதற்குமேல் என்னஆச்சரியம் இருக்கிறது? அவருடையவிசேஷமானதேஜஸுகளில் ஆத்மாவானவர் நிலைத்திருக்கிறார். இந்தப்பூமியும் அவரிடமிருந்து சராசரங்களோடுகூட ஓஷதிகளைத்தரிக்கிறது. அவரிடத்தில் மிக்கபுஜபலத்தையுடையவரும் சாச்வதரும் புருஷோத்தமரும் ஆதியந்தமற்றவருமானதேவர் இருக்கிறார். ஓ! வேதியரே! இதைக்காட்டிலும் மேலான ஆச்சரியம் என்ன இருக்கிறது? ஸூர்யனைஆச்ரயித்ததனால் நிர்மலமானஆகாயத்தில் நான் பார்த்தஆச்சரியங்களுக்கெல்லாம் ஆச்சரியமாயிருக்கிற இந்த ஒன்றையும் என்னிடமிருந்து கேளும். முற்காலத்தில், மத்தியாந்ந ஸமயத்தில் ஆதித்தியர் உலகங்களைத்தபிக்கச்செய்கையில் எங்கும் வேறொருஸூர்யன்போலப் பிரகாசிக்கிறவரானஒருவர் காணப்பட்டார். அவர் தம்முடையகாந்தியாகிற தேஜஸினால் எல்லாவுலகங்களையும் ஒளிமழுங்கச்செய்து ஆகாயத்தைப்பிளக்கிறவர்போல ஆதித்யனுக்குநேரே வந்தார். ஹோமம்செய்யப்பட்ட அக்கினிபோலத் தேஜஸுகளாகிறகிரணங்களால்வியாபித்து நிச்சயிக்கமுடியாதரூபத்தாலே இரண்டாவது ஆதித்யர்போலவும் (வந்தார்.) அவர்வந்ததும்

ஆதித்தியர் கைகளைக் கொடுத்தார். எதிர்கொண்டு பூஜிக்கப்பட்டவரும் பிரார்த்திக்கிறவருமான அவர் வலக்கையைக்கொடுத்தார். பிறகு அவர் ஆகாயத்தைப்பேதித்துக்கொண்டே ஸூர்யமண்டலத்தில் பிரவேசித்தார். அவருடையதேஜஸானது ஒன்றாகச்சேர்ந்துகொண்டு க்ஷணகாலத்தில் ஸூர்யனாயிற்று. அப்பொழுது அவர்களுடைய தேஜஸுகள்சேருகையில் எங்களுக்கு, 'இவர்களுள் தேரிலிருந்த ஸூர்யன் யார்? வந்தவர் யார்?' என்று ஸந்தேகம் உண்டாயிற்று. ஸந்தேகத்தை அடைந்த நாங்கள் ஆதித்யரைநோக்கி, 'வேறொரு ஸூர்யன்போல ஆகாயத்தை ஆக்கிரமித்து அடைந்த இவர் யார்?' என்று கேட்டோம்.

---

## முந்நூற்றெழுபத்துமூன்றாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)

---

(ஸூர்யன் தன்னிடம் பிரவேசித்ததேஜஸின்வரலாற்றைச்சொல்லியது.)

ஆதித்யர், 'இவர் வாயுவுக்குமித்ரரான அக்னிதேவரல்லர்; அஸுரனும் அல்லர்; நாகனுமல்லர். உஞ்சவிருத்திவிரதத்தில் ஸித்திபெற்ற இந்தமுனிவர் ஸ்வர்க்கத்தை அடைந்தார். இந்தவேதியர் கிழங்குகனிகளை ஆகாரமாகவுடையவரும் உதிர்ந்தசருகுகளை ஆகாரமாகவுடையவரும் ஜலத்தையருந்துகிறவரும் வாயுவைப் பக்ஷிப்பவருமாகி ஸமாதியுடையவராயிருந்தார். ஸ்வர்க்கமார்க்கத்தில் முயற்சியுள்ள இவர் ஸ்வர்க்கத்தை அடைவதற்குக்காரணமான (அந்த)ஈசுவரரை வேதத்தின்ஸம்ஹிதைகளால் துதித்தார். ஓ! நாகர்களே! இந்த வேதியர் ஸங்கமற்றவரும் ஆசையற்றவரும் எந்நாளும் உஞ்சசிலத்தை ஆகாரமாகவுடையவரும் ஸகலமானபிராணிகளுடைய ஹிதத்திலும்முயற்சியுள்ளவருமானவர். தேவர்களும் கந்தர்வர்களும் அஸுரர்களும் நாகர்களும் இப்படிப்பட்டவர்கள் அடைந்தஉத்தமகதியை படைக்க ஸமர்த்தராகார்' என்றுசொன்னார். ஓ! பிராம்மணரே! அந்த ஸூர்யமண்டலத்தில் இவ்விதமான இந்த ஆச்சரியமானது என்னால் பார்க்கப்பட்டது. பிராம்மணரே! அந்த மனுஷ்யர் மிகவும்நன்றாக ஸித்தியையடைந்து ஸித்தர்களுடையகதியை அடைந்தார். அவர் ஸூர்யனோடுசேர்ந்துகொண்டு பூமியைச் சுற்றி வருகிறார்' என்றுசொன்னான்.

---

## முந்நூற்றெழுபத்துநான்காவது அத்யாயம்

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)

—— ❋ ——

(பிராம்மணர் நாகனிடம் விடைபெற்றுச் சென்றது

*பிராம்மணர், 'ஓ! நாகனே! இது ஆச்சரியம். இதில் ஸந்தேகமில்லை. மிகவும் பிரீதியடைந்தவனாகிறேன். மேலுமுவிஷயத்தை அடுத்து நேரிட்டவாக்கியங்களால் மார்க்கத்தைக் காண்பிக்கப்பட்டவனானேன். நாகர்களிற்சிறந்தஸாதுவே! உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். போகிறேன். காரியங்களில்எவ்வதிலும் செய்வித்தலிலும் என்னை நினைக்கவேண்டும்' என்றுசொன்னார். நாகன், 'மனத்திலுள்ள விஷயத்தைச்சொல்லாமல் நீர் இப்பொழுது எங்கேபுறப்பட்டீர்? ஓ! பிராம்மணரே! என்னகாரியத்திற்காக நீர் இவ்விடம் வந்தீர்? அதைச்சொல்லும். நல்லவிரதமுடையபிராம்மணஸ்ரேஷ்டரே! (சிறிது) சொல்லப்பட்டதும் (முழுதும்) சொல்லப்படாததுமானகாரியமானது செய்யப்பட்டபிறகு என்னிடம்தெரிவித்து என்னாலனுமதிகொடுக்கப்பெற்றுப பின்பு நீர் போகவேண்டும். ஓ! பிரம்மரிஷியே! சிநேகமுள்ளவரானநீர் இப்பொழுது பிரயோஜனமில்லாமல் என்னைப்பார்த்துத்தள்ளிவிட்டு மரத்தினடியை அடைந்தவர்போலப் போகத்தக்கவரல்லீர். ஓ! பிராம்மணஸ்ரேஷ்டரே![1] உம்மிடத்தில் நானும் என்னிடத்தில் நீரும் இருக்கிறோம். சந்தேகமில்லை. இந்த உலகமெல்லாம் உம்மைச்சேர்ந்தது. ஓ! குற்றமற்றவரே! என்னிடத்தில் உமக்கு என்ன ஆலோசனை?' என்றுசொன்னான். பிராம்மணர், 'பேரறிவுடையவனும் ஆத்மாவையறிந்தவனுமான நாகனே! இது இப்படியே. உள்ளபடி எல்லாவிதத்தாலும் உன்னைவிடமேலானதேவர்கள் இல்லை. நானும் நீயும் எல்லாப்பிராணிகளும் எவரிடத்தில் எப்பொழுதும் அடங்கினவர்களாயிருக்கிறோமோ அவரே நீ; அவரே நான். நான் யாரோ அவரே நீயும். ஓ! நாகஸ்ரேஷ்டனே! எனக்குப் புண்யஸமூகத்தில் சந்தேகமுண்டாயிருந்தது. ஓ! ஸாதுவே! நான் புருஷார்த்தஸாதனமான உஞ்சவிரதத்தை அனுஷ்டிப்பேன். ஆ! ஸாதுவே! இதே எனனுடையஉறுதி. உத்தமமானகாரணமான துசொல்லப்பட்டது. ஓ! நாகனே! விடைபெற்றுக்கொள்ளுகிறேன். உனக்கு மங்களமுண்டாகட்டும். கிருதார்த்தனானேன்' என்று சொன்னார்.*

———

ந

---

1 'உம்மிடத்தில் நான் அன்புடையவன்; என்னிடத்தில் நீர் அன்புடையவர்' என்பது பழையவுரை.

## மூன்னூற்றெழுபத்தைந்தாவது அத்யாயம்.

## மோக்ஷதர்மம் (தொடர்ச்சி.)



(ப்ராம்மணருக்கும் நாகனுக்கும் நடந்த ஸம்வாதமான கதை உலகில் வந்தமுறை.)

அரசனே! உஞ்சவிருத்தியை அடைந்தவரான அந்தப் பிராம்மணர் நாகச்ரேஷ்டனிடம் விடைபெற்றுக்கொண்டு தீக்ஷையை விரும்புகிறவராகி உடனே பிருகுவம்சத்தில் உண்டான ச்யவனமகரிஷியை அடைந்தார். அவர் அந்தச் ச்யவனரால் பூஜைசெய்யப்பட்டுத் தர்மத்திலேயே நிலைத்திருந்தார். அரசனே! அப்பொழுது இந்தக்கதையையும் சொன்னார். ராஜச்ரேஷ்டனே! ச்யவனராலும் ஜனகருடைய கிருகத்தில் மஹாத்மாவான நாரதருக்குப் பரிசுத்தமான இந்தக் கதையானது சொல்லப்பட்டது. ராஜச்ரேஷ்டனே! கேட்கப்பட்ட வருத்தமில்லாத காரியங்களை எளிதில் செய்பவருமான நாரதராலும் இந்திரனுடைய கிருகத்தில் சொல்லப்பட்டது. பரதச்ரேஷ்டனான அரசனே! அந்தத் தேவராஜனாலும் முன்காலத்தில் சுபமான இந்தக்கதையானது பிரசித்தர்களான எல்லா வேதியர்களுக்கும் சொல்லப்பட்டது. அரசனே! எனக்குப் பரசுராமருடன் மிகவும் பயங்கரமான யுத்தமானது நேரிட்டபொழுது வஸுக்களாலே இந்தக்கதையானது எனக்கும் சொல்லப்பட்டது. தர்மத்தை வகிப்பவர்களில் சிறந்தவனே! [illegible] கேட்கிறவனான உனக்கு உத்தமமும் பரிசுத்தமும் தர்மத்திலிருந்து விலகாததுமான இந்தக்கதையானது உள்ளபடி சொல்லப்பட்டது. ஓ! பாரத! நீ என்னிடம் எதைக் கேட்டாயோ அதுவே மேலான தர்மம். அரசனே! அவர் ஆசையில்லாமல் தர்மமாகிற புருஷார்த்தத்தைச் செய்வதில் தீரராக இருந்தார். உஞ்சவிருத்தியை அடைந்த அப்பிராம்மணர் நாகச்ரேஷ்டனாலே உபதேசிக்கப்பட்ட தமது கிருத்தியத்தை உடையவரும் நியமங்களை ரக்ஷிக்கிறவரும் அற்பமான உஞ்சசிலத்தை ஆஹாரமாக உடையவருமாகி வனத்தின் மத்தியத்தை அடைந்தார்" என்று சொன்னார்.

மோக்ஷதர்மம் முற்றிற்று.

---

## சாந்திபர்வம் முற்றிற்று.